உ

சிவமயம்.

சிங்காரவேலன்றிருவடிகடுணை.

# கந்தர்புராணவாசகம்.

முன்னங்

கச்சியப்பகுருக்கள்பாடலிற்

செய்திருக்குங்

கந்தர்புராணச்சரித்திரஞ்

சகலருக்குமுதவியாதற்பொருட்டு

வாசகப்படுத்த

நல்வேளாளராகியதிருமயிலைகொத்தவால்சபாபதிமுதலியார்

முதலிய

பலபிரபுக்கள்கேட்டுக்கொண்டதால்

தொண்டைமண்டலம்வேளாளர்மரபினுதித்த

வாடாதூர்

கோவிந்தப்பமுதலியார்

குமாரர்

பரசிராமமுதலியாரால்

கூடியமட்டும் உரைசெய்து

தேசாபிமானி அச்சுக்கூடத்திற்

பதிக்கப்பட்டது.

கலியுகாத்தசக௵ ௪,௲௯௱௪௮க்கு

சாலிவாகனசக௵ - ௲௭௱௬௮ல் நிகழ்கின்ற

பராபவ௵ ஆடி௴

இங்கிலீசுக்காரர் ஆண்டு ௲௮௱௪௬.

மூன்றுவதுபொஸ்தகம்.

1846

உ

சிவமயம்.

# கச்சியப்பகுருக்கள்பாடிய

## கந்தர்புராணத்திற்குவசனகாவியம்.

## உயித்தியகாண்டம்.

### ஏமகூடப்படலம்.

பிரமன்- விஷ்ணு- ருத்திரனென்னும்- நாமங்களைப்பெற்ற திரிமூர்த்திச்சொரூபமாக விளங்கிச்சராசரப்பிறபஞ்சங்களைப்படைத்தும் அவற்றிற்கு யாதொருகுறைபாடுகளுமின்றிப் பாதுகாத்து ரட்சித்தும் பிரளயமுடிவிற் சகலபிராணிகளும் அல்லலற்றச் சுகத்தி லிருப்பதாகச்சங்கரித்தும்இவ்வித முத்தொழில்களை நடாத்தியும்வேதாகமங்கள்தேடிக்காண்பரிய அருதிவஸ்துவாக நின்று சகலபிராணிகளினிடத்துங்காரணபூதமாகப் பொருந்தி நடிப்பித்து களித்திருக்கும் மேலவகைகிய மூலகாரணக்கடவுளினது திருவடிகளை அடியேன் யிறுதயகமலத்திற் சிந்தித்துப்போற்றி உயித்தியகாண்டத்தினது கதாப்பிறசங்கங்களைச்சொல்லத்துடங்கினேனென்று சூதபுராணிசர் முந்திக்கடவுளை வழிபட்டு நைமிசாரணியவாசிகளைப்பாத்து, ரிஷிகளே முன்னம் வீரவாகுதேவர் மயேந்திரபுரியினிடத்துக்குத் தூதுபோய் சூரபதுமனைக்கண்டு வாற்தையாடித்திரும்பிவந்து சுயஞ்சோதிச்சொரூபியாகிய பாலசுப்பிறமணியக்கடவுளைச்சேவித்து அவுணராசன் சருத்தைதத்தெரிவித்தவுடன்நல்லகாரியம்நாளையத்தினமேபிறையாணப்பட்டுப்போய்சூரபதுமன் வம்சநாசஞ்செய்வோமெனச்சிவகுமாரன் திருவாய் மலர்ந்தருளினரெனச் சொல்லியிருந்தோம்அத்தினயிராக்காலங்கழிந்து ஆயிரங்கிரணங்களைப்படைத்திருக்கி

ன்றசூரியப்ரகவான்கிழக்குத் திசையில்நிற்கின்ற உதயகிரியினிடத்திற்றோ
ற்றியகாட்சியானதுஎப்படிக்கிருந்ததெனில்உலகங்களையலைத்துத்தினா
வாட்டிப் பற்பலகொடுமைகளைச்செய்து வீற்றிருக்கின்ற செயசாலிக
ளாகியஅவுணர்பூண்டை வேரறக்களைவதாக வெற்றிவேலாயுதத்தைத் திரு
க்கரத்திற் கொண்டிருக்கும் ஒப்பற்ற பாலசுப்பிரமணியதேவர் யித்தி
னம்பிறைபாணப்பட விருக்கின்றனர், பிரமனாதிய தேவர்க்க ளனைவரு
ங்களித்துப்போற்றிச்சூழ்ந்துபோவார்கள்- நாமும்விரைவிற் சென்று
அவர்களுடன் தெரிசிக்காம லிருப்பது அழகன்றெனநினைத்தெழு
ந்தவனைப்போலஒற்றைவண்டிலையும் ஏழுபச்சைக்குதிரைகளையு முடைய
ரதத்தில்அருணன் சாரத்தியஞ்செய்வதாகச் சூரியன் ஆரோகணித்து கீழ்த்
திசையி லுதித்ததருவாயில் ராட்சதப்பாதகரைப்போல உலகங்களிற்பரந்
துவருத்தியிருந்த யிருளனைத்தும் அதப்பட்டுச்சகலபிராணிகளும் வீற்றி
க்களிப்புடன் திருச்செந்திற்பதியில் வாசமாயிருந்த- இந்திரனாதியர்
அதிகசந்தோஷித்துடனெழுந்து தங்கள்நித்திய கருமங்களை முடித்துக்
கொண்டுவந்துசொற்னமயமாகப்பரந்திருக்கும்சபாமண்டபத்தைச்சேர்
ந்ததருவாயில் நவரத்தினமயமாகப்பிரகாசித்திருக்கின்ற சிங்காதனத்திற்
கோடிசூரியர்தோற்றம்போலவிளங்கிவீற்றிருந்த குமாரசுவாமியாரான
வர்புசபெலபராக்கிரமசாலியாகியவீரவாகுதேவர்மீதிற்றிருவிழிகளைப்ப
ரப்பி-இந்திரன்- பிரமன்-விஷ்ணு ரிஷிகளாதியர்கேழ்க்கும்படிக்குஇ
தனைச்சொல்லுவார், கொடியபாதகங்களையே முக்கியமாகவிரும்பிச்செ
ய்துவருகின்ற சூரபதுமனாதிய அவுணர்களனைவரும் நாசப்படவும்பல
நாட்களாக வருந்தியிருக்கின்றதேவர்க்கள் துக்கவருத்தங்களை யொழிந்
துகளிக்கவும் அஷ்டலட்சுமிகளுங் குதிகொண்டு செல்வப்பெருக்குகள்
னைத்தையுங்கொண்டு வீற்றிருக்கின்ற வீரமாமயேந்திரபுரிக்கி யித்தின
ம்போகவேண்டுமாதலாற்றுரிதமாய் நமதுதேரைத்தருவிப்பையெனக்க
ட்டளையிட்டமாத்திரத்தில் யிந்த சுபவார்த்தைகளைப்- பிரமன்-விஷ்ணு-
இந்திரனாதிய-தேவர்க்களனைவருங்கேட்டுக் களிசிறந்து சந்தோஷசாகர
த்தில்மூழ்கித் திரோகபரவசத்தராய்ச் சிவபோதில்நமது துக்கங்களனைத்
துந்தீர்ந்துவாழ்ந்தோம்வாழ்ந்தோமென்று துள்ளித்துள்ளி ஆனந்தக்
கூத்தாடி சிவசுப்பிரமணியதேவர் குறுநிசெய்ங்களைப் போற்றித்- தண்
டை-சதங்கை-கொஞ்சுந்திருவடிகளிற் பணிந்தெழுந்து செயசெயவெ
னத்துதித்தனர்,இப்படிக்குச்சகலருங் களித்திருக்கின்ற தருவாயிற் றிரு
க்கயிலையைக் காவல்கொண்டிருக்கும் நந்திதேவர்கணத்தலைவராகிய வீர
வாகுதேவர்சிவகுமாரனை வணங்கிச்சென்று வாயுதேவனைக்கண்டு பலவி
தசிறப்புகளைக்கொண்டிருக்கின்ற ரதத்தையலங்கரித்துத்தீவரமாகக்கொ

ண்டுவரக்கடவையெனப் பணித்தவுடன் ஆனந்தபரவசத்தனாய்த் துரிதப்
பட்டுசகலசுபலட்சணங்களையும்பெற்றிருக்கின்ற யோகப் புரவிகளைச்சீர்
படுத்திக்கொண்டுவந்து நவரத்தினமயமாகச் சொலித்திருக்கின்ற ரதத்
திற்பூட்டி அலங்கரித்துத்தன் துணைவர்களுடனேறி அடித்தட்டில் வீற்
றிருந்துபுரவிகளிடவார்களைக்கரத்திற்கொண்டு செற்சரத்தொனிகளுட
ன் நிமைப்போதிற்றுரத்திவந்து ஆசாரவாசல்முகப்பில் நிறுத்தினன், இ
ந்தசேதியைச்சண்முகப்பெருமாள் தெரிந்தவுடன்உயர்ந்தசிரோரத்தின
ங்களினாற் சோடித்திருக்கின்ற சிங்காதனத்தை விட்டிறங்கி தேவர்க்கள
னைவருஞ் செயசெயவெனப் போற்றெடுப்பப்பொற்பாதுகைகளின்மீ
திற் திருவடிகளைச்சேர்த்துநடந்து பன்னிருசூரியர்களும்பொன்மயமா
கியமேருகிரியின்மீது விளங்குவதைப்போல வாகுவலயங்கள் சொலிக்
கும்பன்னிருபுயாசலங்களையும் வயிரமுடிகள்கவித்திருக்கும் சண்முகா
ரவிந்தங்களையும் படைத்திருக்கின்ற குமாரதேவர் சொர்ணமயமாகிய-
அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை- டெக்கயமுதலிய உறுப்புகளைக்
கொண்டு பாரித்திராநின்ற ரதத்தி னருகில்வந்து வீரசிங்கத்தைப்போ
லத்தாவியேறி பீடத்தில்வீற்றிருந்தவராய்த் தம்மைத்துடர்ந்து வந்தச
கலரையுங் கிருபையாகப்பார்த்தருளி இதனைச்சொல்லுகின்றனர், பூமிதே
விக்காடையாகவளைந்து தெளிந்தாழ்ந்த செலப்பெருக்கையுடைய சமு
த்திரத்தையே அகழியாகப்பெற்று மத்தியில்விளங்கும் ஒப்புவமையற்ற
செல்வப்பெருக்கைக் கிடைத்திருக்கும்வீரமாமயேந்திர மென்னுஞ்சிற
ந்தபட்டணத்துக்குப்போய்சூரபன்மன்முதலாகிய அவுணவீரர்களை நாச
ஞ்செய்ய நினைந்தமையால் நீங்களனைவருந் துரிதமாக உங்களுக்குரியவா
கனங்களில் ஏறிக்கொண்டு அப்பட்டணத்தைநோக்கி நடப்பீர்களென்
று சிவகுமாரன்கட்டளையிட்டமாத்திரத்தில் மகாபாக்கியமென்று-மகா
விஷ்ணுவானவர் பட்சிகளுக்கரசாகிய கருடன்மீதினும்-பிரமன் அழகிய
சிறகையுடைய அன்னவாகனத்தினிடத்தினும்-இந்திரன் சொர்ணவிமா
னத்தின்கண்ணும் மற்றதேவர்க்கள் தத்தமது வாகனங்களின்மீதும்
போகவும்மந்தரகிரியையொத்தபுசங்களையும்மதயானையை நிகர்த்தகெ
ம்பீர நடையையும்வாய்ந்த-வீரவாகுதேவரும்-எண்மரும்-இலக்கரும்
வேகமுள்ளபுரவிகளைப் பூண்டுசொர்ணமயமாய் விளங்கும்பாரித்ததேர்
களின்மீதிலேறி மனோவாக்குக்கெட்டாத சோதிமயமாகிய குமாரதே
வரைச்சூழ்ந் திருமருங்கினும்போற்றி நடக்கவும் யிவர்களன்றியிற் சே
னைத்தலைவர்களாகிய சுப்பிரன்-மேகமாலி- சுவேதசீரிடன்-சபாலி- அப்
பிரசித்து-சித்திராங்கன்- சுவாலதாலு-வச்சிரன்- வீமன்-உக்கிரன்- உக்
கிரேசன்-பிப்பிலன்-நந்திசேனன்- பிரமசன்- பிரமசேனன்- பதுமன்

-காளன்-தண்டன்-பத்திரன்-பரிகநேமி-உதவகன்-புட்பதந்தன்-உ
ருத்திராகாரன்-வீரன்-மதிசெயன்-கேதுமாலி-வக்கிரன்-பிரமசேசன்-
அதிபதி-கலிங்கன்-சோரன்-அச்சுதன்-அசலன்-சாத்தன்-சித்திரசேன
ன்-பூரிசிசிலன்-மாசேயன்-சிங்கன்-சுப்பிரதீயன்-உபதிட்டன்-சய
ன்-சாரசன்-மத்தகன்-மதங்கன்-சண்டி-மகாபெலன்-சுவேதன்-நீலன்
-பத்திரன்.சுவாகு அண்டர்பாணன்-சாகயாதன்-பிங்கலன் சமானன்-
-மாயன்-நிகும்பன்-ஞயிபன்-சங்கபாலன்-விசாகன்-சதநாவன்-அய
க்கிரீயன்-ஆயிரவாகு-செங்கண்ணன்-அயுத்தன்-தத்தன்-வாமன்-ம
ங்கலசேசன்-சோமன்-வச்சிரமாலி-சண்டன்-அசமுகன்-சரபன்-கு
ம்பன்-ஆடகன்-சயந்தன்-மேகன்-விசையன்-வித்துருமன்-தண்டி-
-வியாக்கிரன்-காலபாசன்-தசமுகன்-குமுதன்-பானு-தனஞ்செயன்
-இடபரூபன்-சசிமுகன்-அலலசேசன்-சுவக்கிரன்-சேது-மோகன்-
-மத்தன்-உன்மதகன்-நந்தி-மனோபவன்-வாயுவேகன்-ஆயிரயாதன்-
-பானுகம்பன்-பதங்கன்-சுத்தன்-அனிதன்-சிந்தன்-சனுதான்-சுமா
லிமாலி-அத்திரி-அவுணர்கூற்றன்-அரிசேசன்-சுவாலசேசன்-என்னு
ம்,நாமங்களைப்பெற்ற நூற்றெண்மர்கள் புயவலிக்கொப்பற்றவர்களா
கவும் எக்காலத்திலுங் கோபமேமேலிட்டு விழிகள்சிவந்து அனற்பொ
றிகளைச்சிதறத்தக்கதாகவும் சகலபுவனங்களையும்அதட்டடுத்தும்படிக்கு
க்கட்டளையிடின் ஞொடிப்போதில் நாசஞ்செய்யவல்ல சூரர்களாகவும்-
சண்டைகளிற் கைகண்டதீரராகவும் புசபெலபராக்கிறமத்தில் ஒப்பற்ற
வர்களாகவும் பலசிரங்கள்கரங்களைப்பெற்று பாரித்த திரேகத்தையும்பில
த்தையொத்தவாயையும் அண்டத்தைப்போன்ற வயற்றினையும் படைத்த
வர்களாய் யிடியையொத்தசொல்லையுடையவர்கள் யித்தகைய வீரசூரத்த
ன்மைகளைக் கிடைத்திருக்கின்றவர்கள் செயவுச்சாகங்களுடன் சற்வாயு
தபாணிகளாய் சண்முகப்பெருமானைச்சூழ்ந்துகொண்டு நடக்கின்றதறு
வாயிற் சண்டைக்கெழுகவெனச்சொன்னவார்த்தை முடியுமுன்னந்தங்க
ள்தங்கள்ஆயுதங்களைக் கரங்களிற்கொண்டு செயவுச்சாகங்களுடன் சற்வ
சங்காரகாலத்திற் பெரும்புறக்கடல் ஏறியெழுந்ததைப்போல ஆர்ப்ப
ரித்தவர்களாய் யிரண்டாயிரம்வெள்ளம் பூதப்படைகளும் ஓவென்னும்
சத்தத்துடன் வெளிப்பட்டகாலத்தில் அவர்கள்செல்லும் அதிற்சியினல்
சத்தசாகரங்களுங் கொதிப்பெடுத்தொன்றுபடவும் அஷ்டகுலாசலங்க
ளுங்கிடுகிடெனக்குலுங்கவும் திக்குகளைத்தாங்கிநிற்கின்ற அயிராபதமு
தலியசெகங்கள் திகிற்பட்டுஏறிட்டுப்பதுங்கவும் பூமியானது தத்தளித்
திக்குலேகுலேந்து நடுங்கவும்யிவ்வித வுற்பாதங்கள்பெருத்தது.சவுனகா
திரிஷிகளே,அந்தபூதப்படைகளின் செருக்கையுந் திரேகஉன்னதங்களை

யும் வீரபராக்கிரமங்களையும் கோபமிகுதியையும்செயங்களையும் யின்
னவிதமென்று என்னுற்சணித்துச்சொல்லிமுடிவதன்று இவ்விதங்களா
கத்துணைவர் தேவர்க்கள் சேனாசமுத்திர முதலாகச்சூழ்ந்துபோற்ற நடு
நாயகமாய்க்குமாரதேவர் அவர்களுக்குமத்தியிற் போவதை வானத்தில்
நெருங்கியிருந்த தேவர்க்கள்கண்டமாத்திரத்திற் களிமிகுதியினால் ஆடி
ப்பாடிப்பஞ்சதருக்களினது பரிமளமிகுத்தபுஷ்பங்களைஏராளமாக வாரி
வாரிச்செயசெயவென்னுமோசை யெழச் சோணமாரியைப்போல யி
டைவிடாமற் சொரிந்தனர், இவ்விதஆடம்பரங்களுடன் பூதப்படைக
ள்செயவுச்சாகத்துடன் சிங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்துக்கொ
ண்டு நடக்கின்றதருவாயி லுண்டாகிய ஓசையானது தெய்வலோகங்களி
னும்அஷ்டதிசைகளினும் பூமண்டலமுற்றினும் பாவியகாலத்தில் அத்த
லங்களில் வாசஞ்செய்கின்ற சகலரும் யிதுவென்ன உற்பாதமாக விருக்
கின்றதென நடுநடுங்கிவாடிவருந்தவும் சத்தசாகரங்களுங்கொதிப் பெடு
த்தலைகளைமோதவும்மேகங்கள்கலங்கிச் சருவழிந்துஏககாலத்திற்செலங்
களைக்கொட்டவும் அண்டமுகடானதுநெக்குவிட்டகிரவும் இவ்விதமா
றுபாடுகள் நடக்கின்றதருவாயில் பூதவீரர்கள்பேரொலியெழ முழக்குகி
ன்ற-ரணபேரிகை-செயபேரிகைகளும்- வெற்றிச்சங்கம்-சின்னம்-மத்
தளம்-உடுக்கை- சல்லரி-மல்லரி-எக்காளை-குடமுழ்வு·முதலிய பதினெ
ண்மேளவாத்தியங்களுந் தேவமுரசங்களுந் திசைகள்செவிடுபட வதிர
வும்தேன்களைப் பெருக்கிப் பரிமளித்திருக்கும் வெற்றிமாலை புரளும்
புசங்களையுடைய பூதவெள்ளங்கள் பூமியதிரத்தக்கதாகப் பாதங்களைப்
பெயர்த்துவைக்கும்போ தெழுந்த தூளிபடலமானது மேலிட்டெங்கு
ம்பரவிச்சூரியகாந்தியை மறைத்துச் சமுத்திரங்களிற்படிந்து சேறாக்கி
த்திசைகள்தோற்றமலடைத்துப் பொன்னுலகையும் மண்ணுலகமாக்கி
யது,இவ்விதங்களாகச் சலீல்சலீலென்றொலிக்கும் வீரவெண்டயங்களை
யணிந்தபாதங்களையுடைய பூதவெள்ளங்களானது வெற்றிவேலாயுதத்
தைத்தாங்கி யிருக்கின்ற குமாரதேவர் பாதங்களைத்துதித்து வாழ்த்திக்
கொண்டு பற்வதங்கள்கால்முளைத்து நடப்பதைப்போலத் தத்தமது த
லைவர்களுடன் சென்று அலைகளைமோதிச்சுருட்டும் பெருமைபொருந்தி
யசமுத்திரக்கரையைச்சேர்ந்து வீரவெண்டையங்கள்கலிக்கும் பாதங்க
ளைப்பெயர்த்து மேலிட்டோங்கிவருந் திரைகள்மறிபட்டடங்க நடக்கு
ம்போது அச்சுமையைத்தாங்கப்படாமல் ஆதிசேஷனானவன் ஒருதலைப்
பாரமாகத்தாங்கியிருந்தபூமியை ஆயிரம்பணாமகுடங்களினுஞ்சுமந்துவ
ருந்தவும்போகுமுன்னிலையிற் செயசாலிகளாகிய பூதவீரர் சணக்காலவ
ரையிற்சமுத்திரசெலமானது சுவறித்தாழ்ந்துகாட்டியது, அக்காலத்தில்

அதிற்றங்கியிருந்த சிவந்தகண்களையுடைய - சுறா - சின்னை - திமி - திமிங்
கலகிலங்கள் முதலியபருத்தமச்சங்களனைத்தும் புழுக்களைப்போலப்பு
ரளவும்மேலுமஅக்கடலினிடத்தடங்கியிருந்த மலைகளனைத்தும்பரல்க
ளைப்போலச் செயசாலிகளாகிய பூதர்கால்களிற்பட்டிடறவும் இவ்வித
மாக சிவகணங்கள் சமுத்திரமாற்கமாய் நடக்கின்றதறுவாயிற் - பிரமன் -
- விஷ்ணு - இந்திரன் வீரபராக்கிரம சாலிகளாகிய தம்பியர் நவவீரர்
களும் இலக்கரும் மற்றதேவரனைவர்களும் போற்றிச்சூழ்ந்துவரத்தக்க
தாகப் பாலசுப்பிரமணியக்கடவுளானவர் வானவழிக்கொண்டு போகின்
றதறுவாயிற் சத்துருக்களைவாட்டித் தீனர்களைப்பாதுகாத்து ரட்சிக்குங்
குணசம்பன்னர்களாகிய பூதவெள்ளங்களானவை நெருங்கிப்போவதினா
லும்அதிற்சியினாலும்ஆழ்ந்து தெளிவுபெற்றிருந்த சமுத்திரசெலமான
து அலைபட்டுக்கலங்கிச் சேறாய்ச் சற்றுநேரத்திற் பசையற்றுப் பூமிதோ
ற்றப்பட்டுப் பாதங்களைப்பெயர்த்து வைக்குந்தோறுந் துகள்பட்டெ
ழுந்த பூழியானதெங்கும் பரந்தலைக்கவும் இவ்விதஆடம்பரங்களுடனு
ம்வெற்றிவேலாயுதக்கடவுள்பின்வந்தஇரண்டுவெள்ளம் பூதசயின்னியங்
களும்பேரொலியைக்காட்டிக்கொண்டுசெயவுச்சாகங்களுடன் முன்னம்
வீரவாகுதேவர்பராக்கிரமத்தினாற்சீரழிந்துவிளங்கும்இலங்கையைக்கட
ந்துகடினசித்தத்தைப் பெற்றிருக்கின்ற சூரபதுமன் வாசஞ்செய்யும்ம
யேந்திரபுரத்துக்கருகில் வருகின்றதறுவாயிற் - சங்கு - சக்கரங் - கோதண்
டம் - கட்சம் - கதை - யென்னும் பஞ்சாயுதபாணியாகிய - மகாவிஷ்ணுவும்
- அன்னவாகனனாகியபிரமனும் - பொன்னுலகத்துக்கதிபனாகிய தேவேந்
திரனும் - சுப்பிரமணியக்கடவுளைப்போற்றிக் கரங்களைக்கூப்பிக்கொண்
டவர்களாய் இதனைவிண்ணப்பஞ்செய்கின்றனர், கந்தனே இதோஎதிரிற்
சொற்னமயமாய் நவரத்தினகாந்தியை வீசிவிளங்குகின்றது செயசாலி
யாகியசூரபதுமன் வீற்றிருந்தரசுசெலுத்தும் ராசதானியாகிய மயேந்தி
ரபுரியாகும் அப்பட்டணத்திற்கடின சித்தமுடைய பாதசர்வாசஞ்செய்
திருப்பதாலும் நாம்விரோதித்துப்போவதாலும்அதற்கருகிற்சேர்வதுத
குதியாகக்காணப்படவில்லை - ஆதலால்யித்தலம்விசாலமாய் நமதசேனை
களும் நாமுமிருப்பதற்கு யோக்கியமாகவுமிருப்பதால் இவடத்திற்பா
சறையிட முண்டாக்கிக்கொண்டு அதிற்சேர்ந்தபின்பு மேல்நடக்கவே
ண்டியகாரியங்களுக்குத் தகுந்த யோசனைகளைச்செய்து நடப்பிக்கிறது
நன்காகுமென்று விண்ணப்பஞ்செய்தகாலத்திற் கிரவுஞ்சபற்வதத்தை
வெற்றிவேலினாற் பிளந்தெறிந்தகுமாரதேவர் நீங்கள்சொல்லியகாரண
ங்கள்மிகவும்உத்தமமாகக்காணுகின்றபடியால்அவ்வாறேநடப்பிப்போ
மெனத்திருவாய்மலர்ந்தருளி பக்கத்தில்வருகின்ற சிற்பியைப்பார்த்து

நாமும்யிர்நதேவர்க்கள் சேனைத்தலைவர்கள் துணைவர்கள் பூதவெள்ளங்
கள்முதலாகத்தாராளமாக விருக்கத்தக்கவிசாலமாகிய பாசறையைவினை
விற்சிருஷ்டிக்கக்கடவையெனக்கட்டளையிட்டமாத்திரத்திற்றேவதச்சனு
னவன்கரங்களைக்கூப்பித்தொழுது அடியேனையொருபொருளாகநினைந்
துயிந்தபணிவிடையைக்கடாட்சித்தபடியால் தேவரீர்பரிபூரணகடாட்ச
த்தின்முயற்சிகொண்டு சகலருங்கண்டுகளிக்கயிதோபடைக்கின்றனனெ
னச்செலவுபெற்றுநடந்து விசாலமாகியமதிலையெழுப்பி அதைச்சூழ்வர
ப்பூதச்சேனைகளிருக்கத்தக்கதாக நீண்டஅறைகள் மண்டபங்களை அணி
படப்படைத்து அதற்கருகில்படைத்தலைவர்கள் வாசஞ்செய்யத்தக்கஉப்
பரிகைகளை நிருமித்து அதற்குட்புறத்தில்இலக்கருக்குத்தக்க மாளிகைகளை
வரிசைப்படச்செய்து அதைச்சூழவர -மகாவிஷ்ணு-பிர்மதேவன்-இந்
திரனாதிய தேவர்க்கள் ரிஷிகள்முதலானவர்களுக்கு வாசயோக்கியமாகி
யமேடைகள் அரமனைகளையுண்டுபண்ணி அதற்குட்பிறதேசத்திற் செய
சாலியாகியவீரவாகுதேவர் முதலிய நவவீரர்களுங் களித்திருக்கத்தக்கபா
ரித்தமெத்தைகள்விதங்களைப்படைத்துமுற்றியவுடன் தேவதேவோத்த
மனாகியபாலசுப்பிரமணியதேவர் வீற்றிருக்கயோக்கியமுள்ள சொர்ணம
யமாகியதிருக்கோவில்சபாமண்டபம்முகவாயல்மற்றும்வேண்டுமிடங்க
ளைச்சீர்பெறப்படைத்துப்பலவித கனிவகைகளைக்கொண்டிருக்கும்-சோ
லைகள்-தோப்புகள்விதங்களையுநிருமித்து கற்பகம்பாரிசாதம் மந்தாரை
கொங்குயிருவாட்சிசெண்பகம்மல்லிகைமுதலியதிவ்வியபரிமளங்களைவீ
சத்தக்கநந்தவனங்கள்காவுகளைப்படைத்து மதுரமிகுத்த செலப்பெருக்
கையுடையவாரிகள்குளங்கள் மடுக்கள்தடாகங்களைவேண்டும்யிடங்களில்
நியமித்து அங்காடிவீதிகளைவிசாலமாகத்திருத்தி தங்கள் குதிரைகள்விமா
னங்களாதியவாகனங்களை நிறுத்தத்தக்கசாலைகள் கூடங்கள் மண்டபங்களை
ப்படைத்துஇவ்விதங்களில் வேண்டுவனவனைத்தையும்சிருஷ்டித்துமுடி
ந்தவுடன் தேவதச்சனானவன் அதற்குஏமகூடமென்னும் பெயருமிட்டுகு
மாரதேவனைக்கண்டுவணங்கிக்கர்த்தனே-தேவரீர் சட்டளையின்படிக்குப்
பாசறைசெய்துமுடிந்ததெனவிண்ணப்பஞ்செய்தவுடன்-பிரமன்-விஷ்
ணுமுதலானவர்கள்சூழ்ந்துவரப்பாடிவீட்டைச்சேர்ந்துவாயுதேவன்செ
லுத்தும் ரதத்தைவிட்டிறங்கி யுள்ளேபிறவேசித்து அதன் வளப்பங்கள்
முற்றும்பார்த்துச்சந்தோஷித்தவராய் சிற்பியின்வல்லபத்துக்குமெச்சி
அவன்மீது கிருபாநோக்கத்தைப் பரப்பி பூதவெள்ளங்களை அவர்களுக்
குநியமித்திருக்கின்ற சாலைகளிற்போம்படிக்குச் செலவுகொடுத்துத் த
மக்கேற்படுத்தியிருக்கின்ற சொர்ணத்திருமாளிகையிற்போய் விசாலமா
யிருக்கின்றசபாமண்டபதில் நவரத்தினமயமாய் விளங்கிக்கொண்டி

ருர்ரூஞ் சிங்காதனத்தில்வீற்றிருந்தகாலத்தில்-பிரமன்-விஷ்ணு-இந்தி ரனுகியர் இருபாரிசங்களிலும் பரப்பியிருக்கின்ற பீடங்களி லிருக்க வும்-வீரவாகுதேவர்-எண்மர்-இலக்சர் சேனைத்தலைவர்கள்-நெருங்கி ப்போற்றிப் பணிவிடைகளைச் செய்திருந்தனர்- சவுனகாதிரிஷிகளே, தேவர்க்கள் சோதிக்கையை முடிக்கத்திருவுளத்தெண்ணி யிருக்கின்றகு மாரதேவர் ஏமகூடத்திலிருந்தபின்பு நடந்தசேதிகளையுங்கேட்பீரென் றுசூதபுராணிகர் சொல்வதாயினர்,

## வரவுகேட்விப்படலம்.

தேவதேவோத்தமனுகிய சிவபிரான்திருக்குமாரன்-பாலசுப்பிர மணியதேவர், இவ்விதமாகப்பாடி வீட்டிற்சேர்ந்திருப்பதைத் தேவர் க்கள்மீது பூரணகடாட்சம் வைத்திருக்கின்ற நாரதரிஷிக்குத் தெரிந்த மாத்திரத்தில் வானத்தையளாவவோங்கிய பொன்மதில்கோபுர வாயல்க ள் நவரத்தினமயமாகிய மாடமாளிகை அரமனைமுதலிய சிறப்புகளைக் கொண்டிருக்கின்ற வீரமாமயேந்திரபுரியைச் சேர்ந்து தெசேந்திரசம் பத்தினும் மேலானசெல்வப்பெருக்கையுடைய சூரபதுமன் வீற்றிருக் கும் அரமனையைக்கண்டு முகவாயலைப்போற்றியிருக்கின்ற அவுணவீர ருக்கிதங்களைச்சொல்லிச் செலவுபெற்றுக் கொண்டு நவரத்தினமயமாய் விளங்கியிருக்கின்ற சபாமண்டபத்திற்போய் அகண்டமண்டலாதிப ரனுகிய சூரபதுமனனவன் மந்திரிபிறதானிகள் சேனைத்தலைவர்கள் சூழ் ந்திருக்கவும் பட்டுவர்புகழவும் கட்டியக்காறர் எச்சரிக்கைகளைச்சொல்லி நிற்கவும்-ரம்பை-யூர்வசி-திலோத்தமை-மேனகை யாதியாகியதேவகன் னியர்கள்-பரதநாட்டியங்களைச் செய்யவும் கருடகாந்தறுவர்கள் தேவ யாழ்களைமீட்டிப்பாடவும் இவ்விதஆடம்பரங்களுடன் சிங்காதனத்தி ல்வீற்றிருந்து அரசுசெலுத்துவதைப் பார்த்துயிந்தகொடியபாதகன் து ரிதமாய்வம்சநாசப்பட்டு மாளக்கடவனென்று யூத்தியாக மனதில்நினை ந்தவெளியிற்சகலருங்கேழ்க்கத்தக்கதாகஓராசாதிராசனே-ராசபரமேஸ் பரனே ஆயிரத்தெட்டண்ங்களைவென்று ஒப்பற்றஆக்கியாசக்கிறத்தைச் செலுத்திஅரசைநடாத்திவரும் சூரனேஎனப்புகழ்ந்து தீர்க்காயுசுடன்ச ந்ததுருக்களைச்செயித்துவாழ்ந்திருக்கக்கடவீரென்று கரங்களை நீட்டிஅள வற்ற ஆசிகளைச்சொல்லிக்கொண்டு தவச்சிரேஷ்டராகிய நாரதரிஷிவருவ தைச்சூரபதுமன்கண்டு விருத்தனுகவிருக்கின்றனை நீயாவன் யிருக்குமி

டமேது யிவடம்வருவதற்குங்காரணமென்னை சீக்கிரமத்திற் சொல்லக்க டவையெனக்கேட்டகாலத்தில் ஓராசமாற்தாண்டனேகேட்டருள்க,பா ர்பதியாகனுகியசிவபிரான் வீற்றிருக்கின்றவடகயிலைச்சாரலிவிருந்துதே வரீர் வம்சபரன்பரையாக நீடித்துவாழவும் அகண்டசாம்பிருச்சியச்செ ல்வங்களை அனுபவித்து செயசாலிகளாய் வீறிவிளங்கத்தக்கதாகப் பரம சிவத்தைக்குறித்துஅரியதவங்களைச்செய்து வருபவன் யிதைஉண்மையா கநம்பக்கடவீர்,மேலும் - கொலை-களவு-கட்-காமம் - வஞ்சகமென்னும் பஞ்சமாபாதகங்களைக்கடிந்து- மெய்-வாய்-கண்- மூக்குச்-செவி யெ ன்னும் பஞ்சேந்திரிய விடையங்களையடக்கி மனவிருத்தியை லயப்படு த்திப்பரவஸ்துவைச்சிந்தித்து பலதவங்களை முடித்திருப்பவன்,இதுவும ல்லாமல்தினைப்போலக்காட்டி நம்மவர்களுக்குத்துன்பங்களைச்செய் துவரும் தேவர்கூட்டங்களுக்கு எக்காலத்தும்அயிதங்களைச் செய்துவ ருபவன் பரிசுத்தவானுகியஉங்கள் குலஆசிரியன் சுக்கிறபகவானுக்குஅ ந்தரங்கபத்தனாகவிருப்பேன் என்பெயர்நாரதனெனச் சொல்லுவார்கள் இப்போது ஒருகாரணத்தைக் கண்டபடியால் அவசியமாய்அதைதேவரீ ருக்குத்தெரிவிக்கத் துரிதப்பட்டுவந்தனன், அஃதென்னையெனில்,தே வர்க்கள் கோறிக்கையின்படிக்கு கங்காசடாதரமூர்த்தியாகிய பரமசிவன் உம்மைக்கொல்வதற்காக நெற்றிவிழிகளின்மூலமாய் கந்தனெனஒருரு பிள்ளையைத்தந்தனர், இந்தசமாச்சாரந்தெரிந்தஉடன் தமதேவல்களைச் செய்து கொண்டிருந்த இந்திரனுனவன் மற்றதேவர்க்களுடன் திருக்க யிலைக்குப்போய்ச் சிவபிரானைக்கண்டு சேவித்துபாலசுப்பிரமணியனையு ம்வணங்கித்தங்களுக்கு உம்மால்நேர்ந்திருக்கின்ற துக்கவருத்தங்களனை த்தையும் முறையிட்டுவேண்டிக்கொள்வதற்கிரங்கிப் பரமன்கடாட்சித் தபடிக்குப்பாலசுப்பிரமணியனுனவன் அத்தேவர்க்களை யஞ்சவேண்டா மென்று ஆதரித்துவீராதிவீரர்களாகிய துணைவர்கள் செயசாலிகளாகிய பூதவெள்ளங்கள் சூழ்ந்துபோற்றிவரத் திருக்கயிலாயத்தைக்கடந்து பூ மண்டலத்திலிறங்கிவருமார்கத்தில்நேர்ந்த ரணரங்கசூரனுகிய உன்னு சைத்தம்பி தாருகாசூரனையும் அவனுக்குதவியாக விருந்த கிறவுஞ்சபர்வ தத்தையும்வெற்றிவேலினல் மாய்த்தபின்பு திருச்செந்திலைச்சேர்ந்துஉம் மிடத்துக்கொரு தூதனைத்தூண்டி அவன்திரும்பிவந்து சேதியைத்தெ ரிவித்தவுடன் துரிதப்பட்டுதுணைவர்கள் சேனைத்தலைவர்கள் பூதவெள்ள ங்கள் - விஷ்ணு-பிரமன்- இந்திரனுகியருடன் சமுத்திரத்தைக் கடந்து ராசாதிராசனே தேவரீர்பட்டணத்துக்கு வடபாரிசத்தில் வந்துசேர்ந்து அவடத்திற் பாசறைவிடுதிஒன்றைச்செய்வித்து அதிற்றம்முடன் வந்தவ ர்களுடனிருக்கின்றனன்,-இப்போது நான்சொன்ன காரணங்களனைத்

தையும்ஷன்விழிகளாரக்கண்டு வந்ததாகும் மேல்நடக்கவேண்டியகாரிய ங்களைச்சித்தத்துக்குத் தோற்றியபடிக்குத் தீர்மானித்துக்கொண்டு அவ ர்களை நமது பட்டணத்துக்கருகிலிருக்கவொட்டாமற் றுரத்தும்படிக்கு க்கேட்டுக்கொள்ளுகிறேனென்று நாரதரிஷியானவர் சொல்லியதைக்கே ட்டவுடன் சூரபதுமனனவன் வடவாமுகாக்கினியைப்போலவும் ஆலகா லவிஷத்துக்கொப்பாகவும் சீறிக்கோபித்துக் கறகறெனப் பற்களைக்கடி த்து அனலெழநகைத்து இதனைப்பேசுவதாயினன், நல்லகாரியம் அந்தபா லன் இந்தநகரத்தைஎன்னென நினைந்தனன், மேகவாகனனுகிய- இந்திர ன் வாழப்பட்ட பொன்னுலகத்தைப்போலவும் உந்திகமலவாசியாகிய பி ரமன்வீற்றிருக்கின்ற மனோவதியையொப்பாகவும் காளமேகவண்ணனு கிய விஷ்ணுகளித்திரா நின்ற வைகுந்தநகரைப் போலவும் சுலபமாகம தித்தனன்போற் காணுகின்றது, பரமசிவ கடாட்சத்தினுல் ஆயிரத்தெ ட்டண்டங்களையும்வென்று சகலரும்போற்றவாழுகின்றரணரங்கசூரனு கிய நாம்வாசஞ்செய்திருக்கின்ற பலகாவல்களையுடைய யிந்தபட்டண த்தைநோக்கி ஒருபாலனே போருக்குவருபவன்- இந்தபாலசுப்பிரமணி யன் தீரனுப் பசிப்பிணியினுல் வருந்தி பலிக்குழன்றுதிரியும் பசாசங் களைத் தனக்குதவியாகக் கூட்டிக்கொண் டெதுத்து யிவடம்வந்திருக்கி ன்ற தயிரியத்தை யோசிக்குமிடத்தில் மிருகங்களுக்கரசாக விருக்கின்ற சிங்கக்கூட்டங்கள் சேர்ந்திருக்கின்ற ஒருவனத்தில் மதயானையானது ப லமான்சமோகங்களைச் சேர்த்துக்கொண்டுபோய் வெற்றிபெற நினைந் ததைப்போலக் காணுகின்றது, இந்நகரத்துக்கரணுகவும் அகழியாகவுமி ருக்கின்ற ஆழ்ந்த கடலைக்கடந்து கொடியகாவலைப் பெற்றிக்கின்றஇல ங்கைத்தீபத்தையும் தாண்டி -விஷ்ணு- பிரமன் -முதலிய சகலரையும் வென்று செயங்கொண்டிருக்கின்ற சூரனுகிய என்னுணை ஆக்கினைகளைச் சட்டைபண்ணுமல் அபரிமிதமாகிய பூதப்படைகளுடன் சத்திராதிகளா கவிருப்பவர்கள் கனவிலும் நினைக்கப்படாத கட்டுக்காவலைப் பெற்றிரு க்கின்ற யித்தவீரமாமயேந்திர புரத்தின்மீதில் வந்தபடியால் அப்படி க்குத்தயிரியசாலியாகவிருக்கின்ற பாலன்வீரத்தையும் வலியையும் அத ப்படுத்துவதற் கிதுநல்லதருணம் மேலும்சிவகுமாரனென்றும் காரியா காரியங்களைப் பகுத்தறியவல்ல வியானமில்லாத பருவமென்றும் நினைந் துவிட்டுவிடமாட்டேன் பாலனைக்கொல்வது பழிப்புரையென் றெருரு காலத்திலும் அஞ்சமாட்டேன் முன்னமொரு தறுவாயில் என் தங்கை யாகிய அசமுகிகரங்களிரெண்டையை வெட்டியகாலத்தில் நமக்குச் சென்ம வயிரிகளாகவிருக்கப்பட்ட தேவர்க்களில்யாவ ரொன்தெண்டனைகளிற் ப டாதவர்கள் அதைப்போலவே இக்காலத்தில் என்தம்பிதாருகனையுங் கிற

வுஞ்சனையும் வென்றேமென்னுங் கெலிப்பினாற் றன்னுயிர் போவதை த்தெரியாமற் சிவகுமாரன் இந்தபட்டணத்துக்கு வந்தவனை மடக்கிக் கொண்டு சின்னபின்னப்படச்சாடி அவனுக்குதவியாக வந்திருக்கின்ற துணைவர்- இலக்கர்-சேனைத்தலைவர்கள் -பூதவெள்ளங்கள்-பிரமன் -விஷ்ணு-இந்திரனாதிய தேவர்க்களையும் அவர்களுக்குத்தக்க தெண்டனைகளை ச்செய்து கொடிய காவலிலும் வைப்பேன் நல்லகாரியம் சிறுபிள்ளைகளு ம்யிந்தராசதானியாகிய வீரமாமயேந்திரத்தின் மீதிற் பகைத்துவருவதற் கெளிதாயிற்றே திருப்பாற் கடலிலுதித்த அமிர்தத்தை அவுணரா வஞ் சித்து தேவர்க்களுக்குப் பகிர்ந்த மாயனானவிஷ்ணுவும் நூறுஅசுவமேத யாகத்தைச்செய்த முயற்சினால் தெய்வலோக வாழ்வைப்பெற்ற இந்திர னும்சிருஷ்டிகர்த்தனாகிய பிரமனும் ஆயிரத்தெட் டண்டங்களை வென்ற செயசாலியாகிய நமதுபெயரைச்சொல்லினும் நடுங்கியொளிப்பர் அப் படிக்கிருக்க சாம்பலை விரும்பி யணியும் சிவகுமாரனோ என்னுடனெ துத்துச் சண்டைகொடுப்பவன் பாலப்பருவத்தில் வானத்திற் சஞ்சரித் துஉலகைவிளக்குஞ் சூரியனைப்பற்றிவந்து தொட்டிற்காலிற் சேர்த் துக்கட்டிச் சிறைசெய்த வீராதிவீரனாகிய புத்திரன் பானுகோபனைச்சது ரங்கபெலத்துடன் அனுப்பிக்கொடியபோரைச்செய்வித்துக்கந்தனைவெ ன்று அவனுக்குத் துணையாகவந்திருக்கின்ற நவவீரர்- இலக்கர் - படைத்த லைவர்-பூதவெள்ளங்களையுஞ் சின்னபின்னப்படக் கொல்லுவிப்பேன் அதையுஞ்சிலபோதில் நீயே பார்க்கப்போறாயென்று அவுணருக்கரசன் கோபித்துச் சொல்லிய வாசகங்களை நாரதர்கேட்டு நீர் நினைந்தகாரியம் தகும்தகும் இனிஅசாரிசஞ் செய்யாமற் செயசாலிகளாகிய அவுணப்ப டைகளை விரைவிற்றூண்டி உமதுபட்டணத்தைச் சூழ்ந்திருக்கின்ற கந் தனைவாட்டி சவுக்கியத்தி லிருக்கும் பிறைபெத்தனங்களைத் தேடக்கட வீர் உங்களுக்குச் செயமுண்டாகும்படிக்கு நான் தவஞ்செய்யப் போ கின்றனனெனச் செலவுபெற்றுக்கொண்டு இனிசந்தேகமில்லாமல் இவ ன்வம்சநாசமாய் அழிந்துபோவனென்னும் சந்தோஷித்துடன் வான வழிக்கொண்டு போய்விட்டபின்பு செயசாலியாகிய சூரபதுமன் பக்க த்தில்நிற்கின்ற-கோரன்- உற்கோரனென்னும் தூதனைப்பார்த்து சமு த்திர ராசனை யிந்தநிமிஷத்திற் பிடித்துவாருங்கோளெனக் கட்டளையிட் டமாத்திரத்திற் சேவித்தோடிக் கடற் கரசனே கடற்கரசனேயெனக் கூ வக்கேட்டு வெளிவந்தவனைக் கைப்பிடியாகப்பற்றி யிழுத்துவந்து சூர ன்முன்னம் விட்டதறுவாயிற் சமுத்திர ராசனானவன் மனநடுக்குற்று வாய்புலர்த்து உடலையொடுக்கிக் காங்களைக் கூப்பிக்கொண்டு நிற்கின்ற வனைச்சூரபதுமன்கண்டு கண்களில் அனற்பொறிசிதறஉக்கிரமாகப்பார்.

த்துஇதனைச்சொல்லுவான், கடற்கிறைவனே நமதுகட்டளைக் கடங்கிநட
ந்துவருவது வெகுநேத்திரியாகவிருக்கின்றது - பிரமன் - விஷ்ணு - தேடிக்
காண்பரிய சிவகுமாரன் நம்மிடமேரி லெடுத்துவந்தால் பூதப்படைக
ளுடன்அவனை யிப்பட்டணத்துக்கு வரும்படிக்கு வழிவிட்டுறங்கிக் கிட
ந்தனையோ தேவர்க்கள்பேரி லிருக்கின்ற பட்சத்தினாற் பராமுகமா யிரு
ந்தையோ மங்கையனாக்கலந் தின்புற்று மயங்கினை யோவெனச்
சீறிக்கேட்டகாலத்திற்சமுத்திராசன் திகிற்பட்டுவாயைப்புதைத்துமறு
மொழிசொல்லுவதாயினன், ராசாதிராசனே அடியேன் விண்ணப்பத்தை
க்கோபியாமற் கேட்டருள்க - தேவரீர் குறித்த பாலசுப்பிரமணியனவ
ன் - மகாவிஷ்ணு - பிற்மதேவன் - இந்திரன் - நவவீரர் - இலக்சர் சூழ்ந்து
போர்ப்பிரவாக் ககணமாற்கமாய் வந்தனர், பூதவெள்ளங்களுஞ் சேனைத்த
லைவரும் என்மூலமாகத்தான் சென்றபோதினும் கடற்செலப்பெருககா
லது அவர்கள் கணைக்காலளவையிலிருந்தது, அப்படிக்கிருக்க நானெவ்
விதத்தில் அவர்களைத் தடைசெய்யவல்லேன் ஒவ்வொருபூதன்சிரம் வான
த்தையளாவவும் புசங்கள் அஷ்டதிக்குகளைத் தாவவும் பாரித்த தேகங்க
ளைப்பெற்றிருக்கின்றனர், அவர்கள் பெருமைகளையும் வீரத்தையும்என்
னொருநாவினாற் சொல்லிமுடிவதோ சர்வசங்காரகாலத்தினுஞ் சலனப்
படாத செயசாலிகளாகிய பூதவீரர் நடக்கும்போது முழந்தாளளவையி
லிருந்த செலமானது சற்றுநேரத்திற் சேறாய்ச்சுவறிப் பசையற்றுப் பூ
மியாகவிளங்கியபின்பு துகள்பறந்துபோயது, உலகங்களிற்சமுத்திரரா
சனென்றுவழங்கிக்கொள்ளும்பெருமையையுமிழந்தேன் பூதர்கள்பா
தங்களின் வலிக்காற்றாமற்போனேனென்னும்வசையுரையையும்பெற்றே
ன். அப்படிக்கொத்த அபலனாகிய வென்னால் அவர்களை என்னசெய்யப்ப
டும் - வல்லவனாடிய பம்பரமெனச் சொல்வதைப்போல வலியருக் கெதி
ருண்டோ, இயலிசைநாடகமென்னும் முத்தமிழைப்படைத்தருளிய த
வச்சிரேஷ்டராகிய நாரதரிஷியானவர் ஒருகாலம் உள்ளங்கையிலேற்று
ஆபோசனஞ்செய்ததைப்போலச் சமுத்திர நீரனைத்தினையும் ஒரு பூதனு
ண்டுவிடுவன் - ஆனால்அவர்கள் கரத்திற்கொள்ளத்தக்க புனல் காட்டாத
படியால் அவர்கள் உதரவங்கியிற்பட்டு மாளாமற் தப்பிப்பிழைத்துவ
ந்தேன் அரசனே கோடையிடியைச்சற்பமானது மாற்றுமாயின் வீரத்த
ன்மைபெற்றிருக்கின்ற சிங்கராசனை மதயானை வெல்லுமாயின் பிராற்
தகற்மவினையின்முயற்சியை. மதியினாற் கடக்கில் பலயீனனாகிய நான்வீ
ரபராக்கிறமசாலிகளாகிய பூதப்படைகளைத் தடைசெய்ய வல்லேனென்
றுகடற்கிறைவன் பலபல திஷ்டாந்திரங்களைக்காட்டி என்னவிளையுமோ
வென்று திகிற்பட்டிருக்கின்ற தருவாயிற் சிலவேசமுள்ள தூதர்களோடி

வந்து சூரபதுமன் பாதாரவிந்தங்களில் வணங்கியெழுந்து கரங்களைக் கூப்பிநின்று இதனைவிண்ணப்பஞ் செய்வார்கள், ராசாதிராசனே இந்த அதிசெயத்தைக்கேட்டருள்க- ஆயிரம்பணா மகுடங்களையுடைய சேஷசயனத்திற்பள்ளிகொண்டிருக்கும்-விஷ்ணுவும்-பிரமதேவன்-இந்திரன்-முதலான தேவர்க்கள் செயசாலிகளாகிய நவவீரர்கள் இலக்கர் சேனைத்தலைவர்கள் இரண்டாயிரவெள்ளம் பூதப்படைகள்சூழ்ந்து போற்றிவரத்தக்கதாக கங்காசடாதரக் கடவுளாகிய சிவகுமாரன் பாலசுப்பிரமணியனென்பவன் வானமூலமாகவும் சமுத்திரமார்க்கமாகவும் வந்து நமதுபட்டணத்துக்கு வடபாரிசத்திற்சேர்ந்து தெய்வசிற்பியினாற்பாசறையுண்டுபண்ணிக்கொண்டு அதிலிருக்கின்றனர், இதுகளனைத்தையும் நாங்கள் திஷ்டாந்திரமாகக் கண்டுவந்தனமென்று நம்பிக்கையுள்ள தூதர்கள்சொல்லக்கேட்டவுடன் சூரபதுமனானவன் வடவையைப்போலக் கோபித்து கொவ்வைக்கனியினும் விழிகள்சிவக்கச்சிறிச்சபையிலிருக்கின்றசகலருங் கேழ்க்க இதனைச்சொல்லுவதாயினன்.

---

## பானுகோபன்முதனாள்சண்டை.

வெற்றிமாலையைச் சூடியிருக்கின்ற வேலாயுதத்தைத் தரித்த சரவணபவன் செயவுச்சாகத்தையும் சேனைத்தலைவர்கள் புயவன்மையையும் விறியிருக்கின்ற பூதவெள்ளங்களின்பராக்கிரமங்களையும் இந்தபட்டணத்தில்வந்து கொடிய போரைச்செய்துபோன தூதன்வீறுப்பையும்இந்ததிமிஷத்திலடக்கிச் செயசாலியாய்க் களித்திருப்பேன் நீங்கள் துரிதமாகப்போய் பானுகோபனை யழைத்துவருவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்திற் றூதர்கள் காற்றினுங் கடுகியோடி பலவீதிகளைக் கடந்துபோய் நவரத்தினமயமாய் வானத்தையளாவ விருக்கின்ற அரமனையைச் சேர்ந்து விசாலமான சபாமண்டபத்தில் விளங்கும் அரியணையில் வீற்றிருந்து ராசகாரியங்களைப் பார்த்திருக்கின்ற பானுகோபனைக்கண்டு வணங்கிப்போற்றி ஐயனே தேவரீர் அரமனைக்கு வரும்படிக்கு ராசாதிராசன் கியாபகங்கொண்டனனென்று விண்ணப்பஞ் செய்தமாத்திரத்தில்சிரோ ரத்தினங்களினாற் சோடித்திருக்கின்ற சிங்காதனத்தை விட்டிறங்கி மந்திரிபிறதானிகள் சேனைத்தலைவர்கள்சூழ்ந்து போற்றிவரவும்வெண்சாமரைகள்-ஆலவட்டங்கள்-அருகுகளைப்பலர் அசைத்துப்போகவு

ம்திருச்சின்னம்-பிள்ளாங்குழலை முழக்கவும் அருகுதீவட்டிகளைப்பலர்
காட்டிநடக்கவும்பட்டுவர்புகழவும்வித்துவச்சனங்கள்கொண்டாடவும்
கட்டியப்பேர்கள் - எச்சரிக்கை சொல்லவும்- தேவமங்கையர் நடிக்கவு
ம்-சுமங்கலிகள் ஆலங்களைச்சுழற்றவும் இவ்விதராசசின்னங்களுடன் ஆ
சாரவாயிலினிடத்தில்வந்து நவரத்தினமயமாகிய தேரிலாரோகணித்துப்
பற்பலபடைவீரர்கள் போற்றிச்செல்லவும்- செயபேரி -வெற்றிச் சங்க
ம்-குடமுழா முதலியபதினெண் மேளவாத்தியங்களும் மேகமுழக்கத்
தைப்போல அதிர்ந்துவரவும் விசாலமாய்,நீண்டிருக்கும் ஆயிரகோடி
வீதிகளைக்கடந்து எதிரில்தேர்ந்த ராட்சதவீரர்கள் சேவித்துப்போகப்
பிதாவாசஞ்செய்திருக்கின்ற நகரத்தைச்சேர்ந்து மங்கலவாழ்த்தெடுப்
பத்தேரைவிட்டிறங்கித் தன்னைத்தொடர்ந்துவந்த பிறமுகாளுடன் அர
மனைக்குள்ளேபோய் அவுணராசர்சேனைத்தலைவர்மந்திரிபிறதானிகள்பெ
ரியோர்கள் அணியணியாகப் பரப்பியிருக்கின்ற பீடங்களிலிருந்து ரா
சராசன் கட்டளைகளுக்கெதிர்பார்த்திருக்கவும் மற்ற ராசசின்னங்களைத்
தையும்வரிசைப்பட நடத்திவரவும் விசாலமாய்சொலித்திருக்கும் சபாம
ண்டபத்திற் சிரோரத்தினங்களினாற் சோதித்திருக்கின்ற சிங்காதனத்தி
ன்பேரில் வயிரமலையைப்போல வீற்றிருக்கின்ற பிதாவைக்கண்டு தீர்க்க
தெண்டன்சமர்ப்பித்து ஐயனே, அடியேனைத் தருவித்தகாரண மென்னே
திருவுளம்பற்ற வேண்டுமெனக் கேட்டமாத்திரத்தில் வீரகெண்டாமணி
கலிக்கும்பாதாரவிந்தங்களைப் பெற்றிருக்கின்ற சக்கிறவற்தியானவன்பி
ள்ளையருகி லழைத்துத் தழுவிக்கொண்டு ஆசீர்வதித்து அப்பனேசில
தினங்களுக்குமுன்னம் உன்னிளைய பிதாவாகிய தாருகனையும் கிறவுஞ்ச
பற்வதத்தையும் வேலினாற்பிளந்து கொன்றகந்தன்சேதியைக் குறித்து
ம்அவன்செலுத்திய தூதன் கொடுமைக்காகவும் மந்திராலோசனைகளைச்
செய்திருந்தகாரணங்கள்உனக்குத் தெரித்திருக்கின்றது அந்தசிவகுமா
ரன்சற்றும்பயமற்றவனாய்த் தானிருந்த திருச்செந்திற் பதியைக்கடந்
து துணைவர்பூதவெள்ளங்களுடன் அலைகள்பெருத்தாழ்ந்திருக்கின்றசமு
த்திரத்தைத்தாண்டி இந்தசிறந்தபட்டணத்துக்கு வடபாரிசத்தில்விளங்
குகின்றகோபுரவாயலுக்கருகிற் சேர்ந்துபாசறையொன்றைச்செய்வித்
துக்கொண்டு அதிலிருக்கிறதாகவும் வாமனப்படிவங்கொண்டு உலகை
யளந்த கள்வனாகிய - விஷ்ணுவும்-பிற்மதேவனும் நமக்குப்பயந்தோ
டி ஒளித்துத்திரியும்- இந்திரனும் மற்றதேவர்களனைவரும் சண்முக
னுக்குதவியாகச் சேர்ந்திருப்பதாகவும் நமது தூதர்கள் வந்துவிண்ண
ப்பஞ்செய்தனர், நல்லகாரியம் அபலராகியதெய்வப்பயல்களும் பாலசு
ப்பிறமணியனும் பிறகாசம்பொருந்திய வாளாயுதத்தைப் படைத்திருக்

கின்ற- நவவீரர் - இலக்கர் - சேனைத்தலைவர்கள் களித்திருக்கின்ற பூதங்க
ளும்சற்றும் எண்ணிக்கையில்லாமற் பலகாவல்களைக் கொண்டிருக்கின்
றஇந்தவீரமாமயேந்திரத்தின்மீது போரைக்குறித்து வருவதோ வெகு
நேத்திரநேத்தி குமாரனே இந்தசேதிதெரிந்தமாத்திரத்திற் பிறையாணைப்
பட்டுப்போய் தம்பியையும் கிரவுஞ்சனையும்என்னுடைக் குமாரன் வச்சி
ரவாகுவையும் அளவற்றசெயசாலிகளாகிய அவுணவீரர்களையும்வதைத்தச
த்துருக்களை வளைத்துக்கொண்டு ஒருவனாவது தப்பிப்போகாமற்சின்ன
பின்னப்பட்டழியச் சாடநினைந்தேன் - ஆனால்பகைவர்சிறியரென்றும்ப
சாசங்களென்றும் அத்தகையர்மீதில்-ராசாதிராசனாக விருக்கப்பட்டநா
னே நேரிற்போவது அழகல்லவென்றும் மனதிற்றோற்றப்பட்டதால்இ
துபரியந்தம் தாழ்த்தேன் இதுவுமல்லாமல் நமக்கழிந்தோடிப் பதுங்
கியிருந்த மேகவாகனனாகிய இந்திரனாதியதேவர்க்கள் தங்களுக்குநேர்ந்
திருக்கின்றகுறைபாடுகளைப்பரமசிவனுக்கு முறையிட்டுக்கொண்டதின்
பேரில்அவர்களிடத்திற் பரிவாய்த்தமது நுதலவிழியிற்படைத்த பால
சுப்பிரமணியனைப் பூதப்படைகளைக்கூட்டி நம்முடன்சண்டை பொரு
க்கச் செலுத்தினராதலால்-அவ்வாறே குமாரனேசெயசாலியாகிய உன்
னை அனுப்பி அவர்களைவெற்றிகொள்ள நினைந்திருக்கின்றனன், இதுதரு
தியாகையால் நீ வுன்சேனைகளைக்கூட்டிக்கொண்டு துரிதமாகப்போய்ச்
சிவகுமாரனையும் நந்திகணத்தலைவர்களையும் பூதவெள்ளங்களையும் மட
க்கிக்கொண்டு பெருங்காற்றிற்பட்ட பூளைப்புஷ்பத்தைப்போலச்சின்ன
பின்னப்படச்சாடிவெற்றிகொண்டு செயவுச்சாகத்துடன் திரும்பிதுரித
மாய் சந்தோஷச்சேதியைச்சொல்லக்கடவையென்று தன்மனதுக்கினி
யகுமாரன்பானுகோபனுக்குச் சூரபதுமன் கட்டளை யிட்டமாத்திரத்தி
ல்நவரத்தினமயமாகச் சொலித்திருக்கின்ற வாகுவலையங்களை யணிந்தபு
சங்கள் மகம்மேருவைப்போலோங்கவுந் திரோசம்பூரித்து மயிர்ச்செறி
வெழவும் அதிகவுச்சாகத்துடன் கட்டழகனான பானுகோபன் பிதாவை
ப்பார்த்துஇதனைச்சொல்லுவான், ஆயிரத்தெட்டண்டங்களையும் வென்
றுதேவர்க்கள் முதலாகிய சகலருந் தொண்டுசெய்ய ராசராசேஸ்பரனாக
ச்சிறந்திருக்கும் வீராதிவீரனே இதனைக்கேட்டருள்க, காளகண்டமூர்த்
தியாகிய சிவபிரான்செலுத்திய பாலசுப்பிரமணியனையும் வெறிகொண்
டுப்பலிக்குழன்று திரியும் பூதப்படைகளையும் நவவீரர்கள்முதலிய படை
த்தலைவர்களையும் ரணக்களத்திற்செயித்து வெற்றியுடன் திரும்புவதைப்
பெரிதாகியகாரியமென்றெண்ணியோ-பிதாவே, இப்படிக்குக்கெஞ்சிச்
சொல்லுகின்றீர் அந்தசிவகுமாரன் இந்தப்பட்டணத்தைநோக்கி வரு
வதற்குமுன்னமே யெதிர்க்கொண்டுபோய்க் கொடிய போரைச்செய்.

தூசின்னபின்னப்படச்சாடித் தூரத்திவருவேனென்று தேவரீருக்குநே
த்தியந்தினமே விண்ணப்பஞ்செய்துகொண்டேன் அதனைச்சற்றும்யோ
சித்திச் செலவுகொடாமல் அசட்டையாகவிருந்துவிட்டீர்- இப்போது
சத்திராதிகள்நமது பட்டணத்துக்கருகில்வந்து சேர்ந்தபின்பு இந்தக
ட்டளையயிட்டீர் ஆகிலுமென்ன முழுகிப்போச்சுது இந்தநிமிஷத்திற்
சதுரங்கசேனைகளையுங் கூட்டிக்கொண்டுபோய் பரமசிவன்பெற்றபிள்
ளையாகிய கந்தனைவளைத்துத் திகைத்தோடும்படிக்குச்சாடி மேலும்அவ
னுக்குபடைத்துணையாக வந்திருக்கின்ற நந்திகணத்தலைவர்பூதவெள்ளங்
கள்முதலானவர்களையுங் கண்டதுண்டப்பட்டுருளும்படிக்குக் கொன்று
பகைவர் பூண்டில்லாமற்படிக்குச் செய்து செயவுச்சாகத்துடன்திரும்ப
க்கடவேன்யிந்தவெற்றியைத்தேவரீர்கண்டுகளிக்கப்போறீர்- இதுவுமல்
லாமற்பாலசுப்பிறமணியனுக்குச்சகாயராட்சகராகவும்மந்திராலோசனைக்
குரியாராகவும் வந்திருக்கின்றலட்சுமிகாந்தனெனமகாவிஷ்ணுவையும் சது
ர்முகப்பிர்மதேவனையும் தேவரீருக்குப் பயந்தொளித்துத் திரிகின்ற
இந்திரக்கள்வனையும்பற்றிப் பாசத்தினாற் பிணித்துக்கொண்டுவந்து உ
மதுசன்னிதானத்தில் விடக்கடவேன், அப்பால்அவர்களை உமக்கிஷ்டமா
னதெண்டனைகளைச்செய்யுமெனப் பிறிதிக்கினைகளைப்பேசித் துரிதமாக
விடைதரவேண்டுமெனச் சேவித்த புத்திரனை எடுத்து மாருடனணைத்து
க்கொண்டு அப்படியே தீவிரமாகப்போய்ச் சத்துராதிகளனைவரையும் வெ
ன்றுசெயவுச்சாகத்துடன் திரும்பக்கடவையென்று வாழ்த்திச் செலவு
கொடுத்தவுடன் பானுகோபனானவன் மகாசபையைக்கடந்து வெளிவந்
து நவரத்தினமயமாகிய தேரிலேறிக்கொண்டு பலகோடி அவுணவீரர்சூ
ழ்ந்துபோற்றிவரவும் பலர் பலவிதவாத்தியங்களை முழக்கிநடக்கவும் ம
ற்றுமிராநின்ற ராசசின்னங்களைத் தாங்கிச் சணக்கிறந்த அவுணர்சூழ்ந்
து தங்கள்பணிவிடைகளைச்செய்து தொடரவும் இவ்விதவோலக்கத்துடன்
பிதாவாகியசூரபதுமன் வாசமாயிருக்கின்ற நகரைக்கடந்து மாடமாளி
கைகள்நெருங்கியிருக்கின்ற விசாலமாகிய பலகோடி வீதிகளைத்தாண்டி
தன்னரமனைக்கருகில் வந்தவுடன்பாரித்ததேரை விட்டிறங்கி பக்கத்திற்
காத்திருக்கின்ற வேகமுடையதூதர்களைப்பார்த்து நீங்கள் அதிகதுரிதமா
யோடிதீவுதிபாந்திரங்கள்முதலிய இடங்களிலிருக்கின்ற கணக்கிறந்த
ரதகெசதுரகபதாதிகளாகிய நமது சதுரங்கச்சேனை வெள்ளங்களையும்இ
ந்தநிமிஷத்திற்கொண்டுவந்து சேர்க்கக்கடவீர்களெனச்சட்டளையிட்ட
வுடன் அவர்கள் ராசகுமாரனே இதோபணிவிடையின்படிக்குத் தருவி
க்கின்றனமென்று சென்றபின்பு தன்னைச்சூழ்ந்திருக்கின்ற-மந்திரி-பிர
தானிகள் சேனைத்தலைவர்கள் முதலாகியவீரர்கள்மீதில்விழிகளைச்செலுத்

திப் பிதாவின்கட்டளைப்படிக்குப் போகவிருக்கின்றதால் நீங்களனைவ
ரும் சர்வாயுதபாணிகளாய் உங்கள்வசத்திலிருக்கின்ற சேனாசமுத்திரங்
களையுங் கூட்டிக்கொண்டு அதிசீக்கிரமத்தில் வந்துசேருங்கோளென்று
அவர்களுக்குச் செலவுகொடுத் தனுப்பிவிட்டுத் தன்பரிசனர்போற்றிவ
ரத்தக்கதாக அரமனையில்நுழைந் து- சந்தனம்-சாம்பிராணி- கற்பூராதிய
மாகியபரிமளங்கள் கமழ்ந்திருக்கின்ற விசாலமாகிய ஆயுதச் சாலையில்நு
ழைந்து பரிசுத்தனாய்வணங்கிப்பூசித்துப்பொன்னாடையையுடுத்து ஆம்
பற்புட்பநிறமுடையபட்டுக்கச்சையை இடையிலிறுக்கிக் கூர்மையாய்
சொலித்துக்கொண்டிருக்கும் வயிரவாளாயுதத்தைமடியிற்சொருகிமே
கத்திநிடத்திலுண்டா யதிரும் யிடிக்கூட்டத்தைப்போலக் கலிக்கும்வீ
ரவெண்டயங்களை பாதத்திற்கட்டி விசாலமாகிய மார்பினிடத்தில்வயிர
ங்களினாற் சோதித்திருக்கும் அபேதகவசத்தைப்பிகிந்து -கரசாடு-விர
ல்சாடு-இவற்றினை வரிசைப்படத்தரித்து மின்னலையொப்பப் பிறகாசித்
திருக்கும் அலகையுடைய கொடியபாணவிதங்கள்நிறைந்திருக்கின்றதூ
ணியை முதுகிலிறுக்கித் தங்கத்தினாற்செய்து பிறகாசிக்கின்ற வீரபட்ட
த்தைநெற்றியிற்கட்டி மற்றும் போர்க்கோலத்துக்குரிய சின்னங்களையு
ந்தரித்து தும்பைமாலையை நவரத்தினமயமாக விளங்குங்கிரீடத்திற் சு
ற்றிமந்தரகிரியைப்போல பாரித்துபொற்கட்டுகள்பிகிந்து இருகுதைக
ளினும் மணிகள்சத்திக்கும் வில்லைவணங்கியெடுத்து செயமுண்டாகக்க
டவதென்று தோளில்மாட்டி எத்தகையனையும்மயக்கித் தன்வயப்படுத்
திவிடச்செய்யவல்ல மோகனாஸ்திரமுதலிய சிறந்தபடைகளையுஞ் சேகரி
த்துக்கொண்டு வீரலட்சுமியைத்தொழுது போற்றிச்செலவு பெற்றுக்
கொண்டு ஆயுதச்சாலையைக்கடந்து மனவுச்சாகத்துடன் வெளிவந்தனன்
-சவுனகாதிரிஷிகளே, அவன்விவேகத்தையென்சொல்வேன் தங்கள்மீதி
ற்பகைத்துவந்திருக்கின்றசத்துருக்களினது புசபெலபராக்கிரம வன்
மைகளையும் பெருமைகளையும் எவ்வளவும்மதித்துப்பாராதவனாய் பானு
கோபன்மிகுத்தகளிப்புடன் ஆசாரவாயலுக்கருகில் வரும்போதுமுன்ன
ம் ராசகுமாரன்சட்டளையின்படிக்கோடிய தூதர்கள் பலதிசைகளினும்
நெருங்கியிருக்கின்ற சேனைகளுக்குத் தலைவர்களைக்கண்டு போருக்குப்
பிறையாணப்பட்டுத் துரிதமாய்வரும்படிக்கு உத்திரவாயிற்றென்றுதெ
ரிவித்தமாத்திரத்தில் மனமகிழ்ந்தவர்களாய் யானைகளின்பேரில் பேரிக
ளையேற்றிப்படையெழுச்சி யென்றறைவித்தஉடன் சர்வசங்காரகாலத்தி
ற்சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் பெருக்கெடுத் தெழுவதைப்
போல ராட்சதச்சேனைவெள்ளங்கள் அதிஉச்சாகங்களுடன் பேரொலி
யைக்காட்டி வீரங்களைப்பேசி சிங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்து

## ௰அ பானுகோபன்முதனாள்சண்டை.

அண்டங்களுங் குலுங்கத்தக்கதாக ஆர்ப்பரித்துவந்து தங்கள்தங்கள்த லைவனைச்சேர்ந்தகாலத்தில் அந்தசேனைவெள்ளங்களைப் போற்றிப்புறப் பட்டபடைவீரர்கள் பெயரைக்கேட்பீராக, விசையன்- நேமியன்- மா யன்- முயலி-சண்டகன்-மூரன்-கரன்- மூற்கன்-தசமுகன்- அலி-ச ண்டன்- விகண்டன்- அசமுகன்-மயிடன்- அக்கிரவாகு- விசயசே னன்-விட்சேனன்- விமோகன்-சோமுகன்-மதுச்சகித்தன்-சுசிமுகன்- -சனி-சூனிபகேது- அசுரசேனன்- முதலியவீராதிவீரர்கள் இவர்கள்பெ ருமிதங்களைச்சொல்லி முடிவதன்று நிமைப்போதில்அண்டங்க ளனைத் தையும் பிசைந்தூதும் வலியையுடையவர்கள் பகைவரில்லாமையாற் புய ங்கள் தினவுண்டு வாடியிருந்தவர்கள் சண்டைகிடைத்துதென்னும் உச் சாகங்களுடன் வயிரக்கவசங்களையணிந்து பாரித்தவிற்களைத்தாங்கி யா வராலுந்தடைசெய்வதற்கரிய தேவாஸ்திரங்களைச்சேகரித்துக்கொண்டுவி ஷத்தொலைவையவிட்டுக்கூரிய அலகையுடைய பாணங்கள் நிறைந்திருக்கு ம்தூணீரங்களைமுதுகிலிறுக்கிமற்றப்படைகளையு மெடுத்துக்கொண்டு பற்வதாகிருதியாகிய தேர்களிலேறி வெளிவந்தவுடன் பதினாயிரவெள்ள ம்ராட்சதச்சேனைகளுந்தங்கக்கட்டுகள்பூண்டிருக்கின்றவிற்களைத் தாங் கிமந்தரகிரியையொத்த - கதை- முத்தலைச்சூலம் - சக்கரம்-வேல்-தோ மரம்- பிண்டிபாலம்- எறிமீட்டி- எழுவாயுதம்-மழுவாயுதம்- காலபா சமுதலிய ஆயுதங்களையும் தேவப்படைகளையு மேந்திக்கொண்டு மகர மச்சங்களுலவி யிருக்கின்றசமுத்திரத்தைப்போல ஆற்பரித்துப் பூமிய திரும்படிக்குப் பாதங்களைப் பெயர்த்துவைத்து தங்களிறைவனைக் கூ டினர், இவர்களன்றியிற்சுழிசுத்தங்களுள்ளதாய்த்திசைகளினுங்கடல்மீ தினும் வானத்தினிடத்திலுந்தாவும் வேகமுள்ளதாய் யிடியையொப்பக்க னைக்குங் குரலோசையைப்பெற்ற புரவிக்கூட்டங்களும் கன்னமதம்க போலமதம்பீசமதமெனச்சொல்லநின்ற மும்மதங்களையும் பெருக்கிப ற்வதாகிருதியாக வீறிட்டு யிருப்புலக்கைகளைத் துதிக்கைகளிற்பற்றி அ ண்டங்களதிரச்சுழற்றிவரும் யானையணிகளும் பொன்வண்டில்- அச்சு- மச்சு-குத்துக்கால்-கொடுங்கை- டெச்சையம்- கொடைமுதலிய சிங்கா ரங்களைக்கொண்டு நவரத்தினமயமாகப்பிரகாசித்திருப்பதாய் புரவிகள் -புலி-யாளி-சிங்கம்-யிவைகள் அளவற்றதைப்பூண்டு செற்கரத்தொனி களைச்செய்தோடும் தேரணிகளும்கூடியதொகை பதினாயிரவெள்ளங்க ளும் தமதுதலைவனைக் கலந்தனர் - ஆக இருபதினாயிர வெள்ளம் ரதகெ சதுரகபதாதிகளும் நெருங்கிச்சூழ்ந்து போகத்தக்கதாக அவுணவீரர்க ள்தங்கள் மனதைப்போல அதிகவேகமாகவந்து பானுகோபன் அரம னைக்கருகிற்சேர்ந்தனர் -சவுனகாதிரிஷிகளே, அந்தநால்வகைச்சேனை

பெருக்கை யோசிக்குமிடத்திற் பிற்மகற்பமுடிவிற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஒன்றுபட்டுப்பெருகி மகாமேருவைச்சூழ்ந்தொலிப்பதைப்போலக் காட்டியது- அக்காலத்திற் சேனைத்தலைவர்கள் ராசகுமாரனைக்கண்டமாத்திரத்திற் கரங்களைக் கூப்பித்தொழுது நிற்கவும் சதுரங்கச்சேனைகளும்புகழ்ந்துபோற்றவும்பிரா நின்றதன்சேனைப்பெருக்கைப்பானுகோபன்பார்த்துக் களித்தவனுய்கையமத்தி பக்கத்திற்காத்திருக்கின்ற பரிசனங்களைப்பார்த்து இந்தநிமிஷத்தில் நமதுரதத்தையலங்கரித்துக்கொண்டு வரக்கடவீர்களெனக் கட்டளையிட்ட மாத்திரத்தில் வணங்கியோடி ரதசாலையைச்சேர்ந்துதேர்ப்பாகனுக்குராசகுமாரன்கருத்தைத்தெரிவித்தவுடன் பொன்மலையைப்போலப் பாரித்திருக்கின்றதேரைடேக்கையங்கள்கலகலெனச்சத்திக்கும்மணிகள்பிதாம்பரத் தொங்கல்கள் முத்துமாலைகள்முதலிய விதங்களினாற் சிங்காரித்துப் பஞ்சகல்லியாணிகளாகிய முப்பதினாயிரம் உத்தமஅசுவங்களைப்பூட்டி பூமியினக்கும்படிக்குக் சறகறென்றோடச்செலுத்திக்கொண்டுவந்துஎதிரில் நிறுத்தியகாலத்தில் உதையகிரியின்பேரிற் சூரியபகவான் வெளிப்பட்டதைப்போலவும் மலையினிடத்தில் வீரசிங்கந்தாவிப் பாய்வதைநிகர்த்தும்பானுகோபன் தாவியேறிமத்தியில்நவரத்தினமயமாகச் சொலித்திருக்கின்ற அரியணையில்வீற்றிருந்த காலத்திற்செயமுண்டாகக்கடவதென்றுசேனைவீரர்களனைவரும் வாழ்த்தெடுக்கு மோசையானது அஷ்டதிசைகளினும் பரவிச்சகலனாயும் பிறிமிக்கச்செய்தது- அக்காலத்திற்கமுகமரங்கள்பாளைகளைவிரித்திருப்பதுபோல வெண்சாய்மரைகளை ஆயிரகோடி அவுணவீரர்கள் வீசிப்போகவும் பானுகோபன்மேனியானது கருமையாதலால்அதிற்பொருந்தாமல் அவன்தேடியிருக்கின்ற கீர்த்திப்பிறதாபங்களனைத்துஞ் சேர்ந்து கவிந்திருப்பதைப்போல முத்துத் தாவடங்களசையும் வெண்பட்டுக்கொடைகளனந்தம் அவுணராசர்கள் தாங்கிவரவும் பிரகாசம்பொருத்திய வாளாயுதம் தாம்பூலவிதங்களடங்கியிருக்கின்ற பொற்பெட்டிகள் படிக்கம்இவற்றினைப் பலசேனைத்தலைவர்கள்தாங்கிச்செல்லவும்-அருகுகள்-ஆலவட்டங்கள்- மயிற்பிஞ்சங்கள்- இதுகளைக்கணக்கிறந்தவீரர்களசைத்துத்துடரவும் இவ்விதஆடம்பரங்களுடன் தேரில்விளங்குகின்ற பானுகோபனனவன் பக்கத்திலிருக்கின்ற ஏவலரிற் சிலனைப்பார்த்து வலியவிற்கள் கொடியபாணங்கள் நெடியகதை முதலியஅஸ்திரசஸ்திர விதங்களைக்கொண்டிருக்கும் ஆயிரகோடி சேமத்தேர்களைத்துரிதமாகச் சாக்கிறதைசெய்து நம்முடன்வரும்படிக்குத் திட்டஞ்செய்வீரெனக் கட்டளையிட்டமாத்திரத்திற் சேவித்தோடிச் சொர்னமயமாய்நவரத்திலகாந்திகளைவீசி பாரித்து பற்பலபடைகளைக் கொண்டிருக்கு

ம்தேர்நிரைகளைக் கொண்டுவந்து சேர்த்தனர் - அக்காலத்தில், பானுகோ
பன்மதிபூரணாகிய தன்தேர்ப்பாகனைப் பார்த்து இந்தநிமிஷத்தில் நம
து ரதத்தைத் துரிதமாகச்செலுத்திக்கொண்டுபோய் சிவகுமாரனிருக்கின்
றவிடத்திற் சேர்க்கக்கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்திற் சவுக்
கினாற்புரவிகளையதட்டி வாயுவேகத்தினும் மனோவேகத்தினு மேலிட்டுச்
செல்லும்படிக்குத் தூண்டிக்கொண்டு போவதைக்கண்டமாத்திரத்திற் க
ரியநிறமுடைய அவுணச்சேனைகள் பாதங்களிற்கட்டியிருக்கின்ற வெண்
டயங்கள் கலீல்கலீலெனச் சத்திக்கவென்னும் ஆரவாரங்களுடன்காற்
றினுங்கடுகிப் போகவும்பாரித்த ரதங்களும்மதயானைகளும் தத்தித்தா
வுங் குதிரைக்கூட்டங்களும் அணியணியாக அதிவேகங்கொண்டு செல்ல
வும்-ரணபேரி- செயபேரி- வெற்றிச்சங்கம்- சல்லரி-மல்லரி- குடமு
ழா-திமிலைதக்கை- காகளம்-சின்னம்- முதலாகியதோற்கருவி- துளைக்க
ருவி-மிடற்றுக்கருவி- கஞ்சக்கருவி நரம்புக்கருவி- யெனச்சொல்லும்
ஐவகைத்தாகிய பதினெண்வாத்தியங்களையும் அண்டங்களதிர முழக்கிக்
கொண்டுபற்பலகோடி அவுணர்கள்போகவும் விருதுக்கொடிகள் மகர
தோரணங்கள் துசபடங்களைப் பலர்தாங்கி நடக்கவும் இவ்விதமாகச்
சதுரங்கச் சேனைகளும் போம்போது பெருத்ததூளிபடலமானதுமே
லிட்டெழுந்து வானநாடுகளிற்பரவி யிமையாநாட்டத்தினையுடைய தே
வர்க்கள்கண்களிற்படிந்துவருத்தி மூடச்செய்யவும் அஷ்டதிக்குகளினு
ம்பெருத்து அத்தலங்களிலிருப்பவர்கள் திகைத்துமதிமயங்கி வாடியி
தென்ன வுற்பாதமாகவிருக்கின்றதென்று தியங்கவும் சமுத்திரங்களிற்
படிந்து அலைகளையடக்கிச்சேறுக்கவும் திசையானைகள் மதத்துவாரங்க
ளைத்துத்தடக்கவும் வானத்தையளாவ நிற்கின்றதேர்களோடும்போதுண்
டாகும் செற்சரத்தொனிகளும் மதயானைகள் வீறிட்டுச்செல்லு மொலி
யும்புரவிகளின் கனைப்பின்சத்தங்களும் ராட்சதச்சேனைகள் வீராவேசங்
களினாற் சிங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்யும்முழக்கமும் மணிக
ள்கலகலென்றசையும் சத்தமும் கொடிகள் காற்றிற்பட்டு படபடென்
றசையுந்தொனியும் வீரமாமயேந்திர பட்டணமுழுமையுஞ் செவிடுபட
ப்பெருத்தொலிக்கவும் இவ்விதஆரவாரங்களுடன் சதுரங்கச்சேனைகளு
ம்வேகமாய்நடக்கும் பாரத்தினாற்பூமியானது தத்தளித்துகிடுகிடென்று
நடுங்கவும் அச்சுமையைத்தாங்கப்படாமையால் ஆதிசேஷனானவன் ஒரு
தலைப்பாரமாகச்சுமந்திருந்த பூமண்டலத்தைஆயிரம் பணாமகுடங்க
ளைக்கொண்டு தாங்கியுந்தாபரிக்கப் படாமையால் பெருமூச்செறிந்து
விஷங்களைக்கக்கிச்சோரவும் அக்காலத்திலுண்டாகிய அதிர்ச்சியினால்,வான
த்திலிருந்த நட்சத்திரங்கள் நிலைகுலைந்து பலபலென்றெங்குமுதிரவும்

இந்தகொடுமைகளைக் கண்டதேவர்க்கள் பயப்பிராந்தியினால் திரோகம்
நடுக்கமெடுத்துத் தியங்கித்தங்கள் பதங்களைவிட்டு மேல்நாடுகளிலோ
டியொளிக்கவும் மேகங்கள்திகைத்து யிடிகளைக்கக்கிமின்னல்களை வீசிப்
பறந்து திசாதிசைகளில்மறையவும் பூமிக் கச்சாணியாகவிருக்கின்ற மக
ம்மேருகிரியும் நெக்குவிட்டு அஷ்ட குலாசலங்களும் பொடிபட்டுதிர
வும் இத்தகையஉற்பாதங்கள் தோற்றத்தக்கதாக நூற்றெட்டுகங்களாக
ஆயிரத்தெட்டண்டங்களைப் பரிபாலனஞ்செய்து சகலரையும் வென்று
வீராதிவீரனாகவிருக்கின்ற சூரபதுமன் பிள்ளையாகிய பானுகோபனேறி
யிருக்கின்ற ரதமோடும் அதிர்ச்சியைக் கேட்டமாத்திரத்திற் சூரியபகவா
ன்திடுக்கிட்டு இத்தினம்நமக்கென்ன கேடுவிளையுமோவென்னும் ஏக்க
த்தினால் மயங்கியிருக்கின்றதருவாயிற் சேனைப்பெருக்குகள் போகும்
வேகத்திலெழுந்துமூடிய தூளிபடலத்தைக்கண்டு பிழைத்தோமென்னு
ம்சந்தோஷத்தைக்கொண்டு அதுகளில்மறைந்துபோவதாயினான், இதுவ
ல்லாமற்கணக்கிறந்த ராட்சதர்முதலியபடைகள்கெக்கலிகொட்டிக்கொ
ண்டுவீறிவருகின்றவேகத்தினால் வீரமாமயேந்திரபுரிக் கசழாகவிருக்கி
ன்றசமுத்திரமானது அலைகளைச்சுருக்கிப் பின்னிடைந்ததுமல்லாமல்து
ன்பரந்துசேறாய் பின்புவறண்டுபொடிபட்டெழுந்து முன்னம்பூதப்
படைகள்வந்தகாலத்திற் பட்டகெட்டினும் பதின்மணங்குவருந்தியது
இவைநிற்க வானத்தையளாவவோங்கி யசையுந்துசபடங்களைப் பார்க்கு
மிடத்தில்வட்டமாக விளங்கும்ஆகாயப்பறையை பூமிதேவியானவள்ப
லகரங்களைக்கொண்டு முழக்குவதைப்போலக் காட்டவும் கொடியமன
தையுடைய அவுணவீரர்கள்கரங்களிற்பற்றியிருகின்றஆயுதவிதங்களொ
ன்றுடனொன்று தாக்கியகாலத்தெழுந்த பொறிகளானவை சொடிகளசை
விற்பட்டுவிழுவதெப்படிக்கிருக்கின்றதெனில், துசபடங்களசையுந்தோ
றம்வானகெங்கையிற் றோய்ந்து வீசுந்திவலைகளைப்போலக் காட்டவும்
சூரியகிரணங்களைப்போலச் சொலித்திருக்கின்ற· வாள்-வேல் முதலியப
டைகளைத்தாங்கிச்செல்லும் அவுணவெள்ளங்கள்போக யிடம்பெறாதப
டியால் வானவழிக்கொண்டு அளவற்றவெள்ளம் ராட்சதர்நடக்கவும் இ
வ்விதஆடம்பரங்களுடன் ஆயிரகிரணங்களை வீசி யுலகைவிளக்குஞ் சூரி
யபகவானை பாலபருவத்திற்சிறைபடுத்திய தீரனாகிய பானுகோபனானவன்
அளவற்றவெள்ளம் ரதகெசதுரகபதாதிகள் சூழ்ந்துவரத்தக்கதாக நடுநா
யகமாய்வீராவேசத்துடன் வருகின்றசிறப்புகளனைத்தையும் வானவெளி
லையிலிருந்து பார்த்த-நாரதரிஷியானவர் அதிசீக்கிரமத்தில்அத்தலத்தை
க்கடந்து பூதவெள்ளங்கள்உச்சாகத்துடன் வாசமாயிருக்கின்ற பாசறை
யைச்சேர்ந்து· மகாவிஷ்ணு-பிர்மதேவன்- இந்திரன்முதலிய தேவர்க்

கள்சூழ்ந்துபோற்றவும் வீரவாகுதேவர் முதலாகிய துணைவர்கள்பக்க
ங்களில்நெருங்கியிருக்கவும் நவரத்தினமயமாய்ச்சொலித்திருக்கும் சபா
மண்டபத்திற் சிரோரத்தினங்களினாற் சோடித்திருக்கின்றசிங்காதனத்தி
ல்வீற்றிருக்கின்ற ஞானநாயகனாகிய குமாரதேவரை விழிகள்களிக்கத் தெ
ரிசித்துச்சமீபத்திற்போய் பத்திவிநயங்களுடன் திருவடிகளிற்பணித்
தெழுந்து வேதவாக்கியங்களினாற் புகழ்ந்துபோற்றிக் கரங்களைக்குவி
த்துக்கொண்டு யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர், கர்த்தனேதேவரீர்
சவுரியவான்களாகிய பூதச்சேனைகளுடன்யிவடஞ் சேர்ந்துபாசறைசோடி
த்துக்கொண்டிருக்குங் காரணங்களனைத்தையுந் தூதர்கள்தெரிந்தோடி
தேவசாதகனாகிய சூரபதுமனுக் கறுக்கையிட்டமாத்திரத்தில் வடவாமு
காக்கினியைப் போலச்சீறிக் கொதித்துத் தன்மூத்தபிள்ளையாகியபானு
கோபனைக் கூவித்து தேவரீரையும்நவவீரர்முதலிய படைத்தலைவர்களை
யும் பூதவெள்ளங்களையுஞ் சின்னபின்னப்படச்சாடித் துரத்திவரும்படி
க்குக்கட்டளையிட்டு அளவற்றவெள்ளங் கொடிய பாதகராகிய அவுணச்
சேனைகளைக் கூட்டிச்செலுத்தினன், அவன்பிதாவின்வாக்கியத்தைப் பரி
பாலனஞ்செய்யும்பொருட்டு யுத்தசன்னத்தனாய்ச்சதுரங்கச் சேனைப்
பெருக்குடன் தேவரீருடன்போர்செய்யும்படிக்கு அதிவேகமாயவீறி
வருகின்றனன், இந்திராசகுமாரன் புசபெலபராக்கிரமங்களையும் வெற்
றியையும் இன்னவிதமென்று சொல்லிமுடிவதன்று இந்ததுர்மார்க்கனு
டன்போர்செய்வதற்குத் தேவரீரும் லோகநாயகனான சிவபிரானுமல்ல
துமற்றெத்தகைய தேவர்களுக்குமரிது மேலும் இவனைச்சுலபமாகவெ
ல்லக்கூடாது முன்னொருகாலம் இந்த மகாவிஷ்ணுவை வளைந்துகொ
ண்டுமுதுகுகாட்டி யோடும்படிக்குப்பொருதழித்துஉலகங்களிற்புகழ
விருக்கின்ற யிவர்சக்கரப்படையையும் பிறையோசனப்படாமல் வென்
றதீரன்-இவையன்றியில், அளவற்றசண்டைகளிற் கைகண்டசெயத்தைக்
கிடைத்திருப்பவன் சுக்கிருசிரியினிடத்தில் மந்திர பூர்வகமாக அளவ
ற்றமாயவித்தைகளைக்கற்றவன் மேலும் தன்பிதாமகளாகியமாயையினிட
த்தில் ஆசரிபனிடத்திற்பெற்றிருக்கின்ற வித்தைகளினும்மேலாகியமாய
வஞ்சகங்களை வரையறக்கற்றசூரன் ஆதிசேஷனிலும்வலியுடையவன்சூரி
யனைத்தளைசெய்தகாலத்தில்விடுவிக்கவந்தபிரமன்தானாய்வேண்டிபிற்மா
ஸ்திரத்தைக்கொடுக்கப்பெற்றவன் அதிகவோசையைப் பெருக்கியிருக்
குஞ்சமுத்திரராசன் படைத்திருந்தபாசத்தையும் எமதருமராசன்கரத்
திற்பற்றியிருக்கின்ற சூலத்தையும் வலிதிற்பறித்துக்கொண்டு அவர்களை
ப்புறத்தத்தோடத் துரத்தியவன் யின்னமும் யிவன்செய்த சாகசங்களள
வற்றதுண்டு ஆதலால்யாவராவதனுப்பி இவனைவெல்லநினைப்பது அரி

தரிதுதேவரீரோ சற்றுவருத்தமெடுத்துக்கொண்டு- நவவீரர்கள்-இலக்கர்
படைத்தலைவர் பூதவெள்ளங்களுடனெதிர்த்துவெற்றிகொண்டுதிரும்பு
வதுநன்காகுமெனப் பலபலவிதங்களில் நாரதரிஷியானவர் பானுகோப
ன்பெருமிதங்களைச் சொல்லியதனைத்தையும் பாலசுப்பிரமணிய தேவர்
கேட்டருளி சிறுநகைகொண்டவராய் பக்கத்தில்மின்னலையொப்ப சொ
லித்திருக்கும் வாளாயுதத்தைக்கரத்திற்கொண்டு காத்திருக்கும் செயசா
லியாகிய வீரவாகுதேவரைக்கிருபையுற்றுப் பார்த்தருளி நாம் பூதச்சே
னைகளுடன் யிவடம்வந்திருக்கின்றசேதியைச்சூரனறிந்து அளவற்றராட்
சதச்சேனைகளைக் கூட்டி நம்முடன் சண்டைகொடுக்கும்படிக்குத் தன்
குமாரன்பானுகோபனைச் செலுத்தியதாக நாரதர்சொல்லத் தெரிந்தனம்
ஆதலாற்புசபெலபராக்கிறம சாலிகளாகிய உன்சகோதரர் எண்மர் இலக்
கருடன் ஆயிரவெள்ளம்பூதப்படைகளைக்கூட்டிக்கொண்டுபோய் மயே
ந்திரபுரியை முத்திக்கைபோட்டுக்கொண்டு கோட்டை மதில் உறுப்புக
ள்கோபுரங்கள் மாடமாளிகை முதலிய வனைத்தையுந் துகள்படவிடித்
துநாசஞ்செய்யக்கடவை அக்காலத்திற் சூரன் புத்திரன் பானுகோபனெ
திர்த்து போர்செய்யவருவனாயினுந் தீரனாய்வளைத்துக்கொண்டு வீறியிரு
க்கின்ற அவுணச்சேனைகளைச் சின்னபின்னப்படவாட்டி அவனையும்வெற்
றிகொண்டு திரும்பக்கடவையென்று வெற்றிவேலாயுத மூர்த்தியானவர்
வீரவாகுதேவருக்குச் செலவுகொடுத்து மற்றதம்பியரையும் பூதவெள்ள
த்தையும் போகக்கட்டளையிட்டபின்பு சிவகுமாரனானவர் நாரதரிஷியை
ப்பார்த்து இதனைத்திருவுளம் பற்றுவதாயினர், சரபப்பட்சிகள் கூட்ட
மாகச்சேர்ந்திருக்கின்றயிடத்திற் சிலசிங்கங்களெதுச்துவருமாயிற் சா
வதல்லது உயிருடன்செயித்து மீளவல்லதோ இதனைச்சற்றுநேரத்தில்தி
ஷ்டாந்திரமாகப் பார்ப்பையென்று வார்த்தையாடிக்கொண் டிருக்கும்
போது குமாரதேவரால் அனுப்பப்பட்டவீரவாகுதேவர் சபையைக்க
டந்துவெளிவந்து தன்விடுதியைச்சேர்ந்து வயிரக்கவசத்தையணிந்துமி
ன்னலை நிகர்த்துவிளங்கும் குரூரமாகியபாணங்கள் நிறைந்திருக்கின்
றஅம்புக்கூண்டை முதுகிலிறுக்கி அங்குலிப்புட்டில்களைமாட்டித் தே
வேந்திரன்முதலானவர்கள் வாழ்த்தெடுக்கத்தக்கதாக மகம்மேருவுக்கு
ச்சமதையாகிய வில்லையெடுத்து புசத்தில்மாட்டிக்கொண்டவராய் பலப
டைகளை நிறைத்திருக்கின்ற சேமத்தேர்களின்மத்தியில் மேருவையொ
ப்பநவரத்தினமயமாக விளங்கும் ரதத்தின்பேரிலேறி வீற்றிருந்தகால
த்தில்தம்பியரெண்மரும் இலக்கரும்படைவீரர்களும் சர்வாயுதபாணிக
ளாய்த் தங்கள்தங்களுக்குரிய வாகனங்களிற் பாய்ந்திருந்து வீரவாகு
தேவரைச் சூழ்ந்தமாத்திரத்தில் ஆயிரம் பூதகணங்கள் ஆயிரவெள்ளம்

பூதப்படைகளைச்சூரபதுமன் அரசுசெலுத்தியிருக்கின்ற மயேந்திரபுரி
யைநோக்கிப் போருக்குநடக்கும்படியாகப்பறையறைந்தவுடன்-எழு
குலக்கைகள்- வளைதடிகள்- கதைகள் - மாமரங்கள் முதலிய ஆயுதங்க
ளைக்கரங்களிற் பற்றிக்கொண்டு மேகங்களும்நடுங்கக் கெர்ச்சித்துவீரா
வேசங்களுடன் ஆழ்ந்திருக்கின்ற சமுத்திரம் புரண்டதைப்போல வி
ரைந்து பிறசண்டமாருதத்தைப்போல வேகமாய்நடந்தனர், மற்றஆயிர
வெள்ளம் பூதப்படைகளும் சேனைத்தலைவரும் சுப்பிரமணியதேவரை
ப்போற்றியிருந்தனர்- சவுனகாதிரிஷிகளே, வீரவாகுதேவருடன் போகி
ன்றபூதப்படைகளின் வல்லபமெப்படிக்கொத்ததெனில், ஆதிசேஷன்ஆ
யிரம்பணாமகுடங்களினாலுந்தாங்கும் பூமண்டலத்தில்விளங்கும் சகல
புவனங்களையும் ஒருகரத்திலேந்தி அம்மானையாடும் வலியைப்பெற்றவ
ர்கள்சகலபிராணிகளையுங் காலாதிகளிற்கொண்டுபோகும் எமனையுங்கொ
ல்லத்தக்க கோபத்தைப்பெற்றவர்கள் வீரர்களாக விருக்கப்பட்டவர்க ள
னைவரினும் முந்திப்பேசும் சூரத்தைக்கிடைத்தவர்கள் அந்திவானத்தை
ப்போலச்சிவந்த சிங்கையைப்பெற்றவர்கள்- சூலம்-வேல்முதலியபடைக
ளைப்பரித்திருப்பவர்கள் வீரகெண்டைசலித்திருக்கும் பாதங்களைப்பெ
ற்றவர்கள் பரமசிவகடாட்சத்தைப் பூர்த்தியாகக்கிடைத்திருப்பவர்கள்மா
ய்கைகளைக்கடந்த பரிசுத்தமனதைப் பெற்றவர்கள் வலியினால்அண்டங்
களையும்அசைத்துத்தள்ளவல்லவர்கள் பாரித்ததிரேகத்தைக் கொண்டவர்
கள்யிவர்கள்சவுரியபராக்கிறமங்களையும்செயத்தையும்யெத்தகையர்களா
லும்புகழப்படுவதோ இவ்விதப்பெருமைகளைவாய்ந்த பூதவெள்ளமான
துபோமுன்னிலையில் யிடம்பெருமவெவ்விடங்களினும்நெருங்கிப்பே
ரொலியைக்காட்டி நடக்கும்போது சேனைத்தலைவர்கள் நாற்புறங்களினு
ம் பாதகாத்த முன்னணியிற் செல்லவும் துணைவராகிய எண்மர் இல
க்கர் சூழ்ந்துபோற்றிவரத்தக்கதாக வீரவாகுதேவர் புறவணியிற் போவ
தாயினர், இவ்விதஆடம்பரங்களுடன் நடக்கின்றதருவாயில்- ரணபேரி
-செயபேரி- வெற்றிச்சங்கம்-திமிலை-கரடி- காகளம்·சல்லரி- மல்லரி-
-தமுக்கு-டடாரி- உடுக்கை·பம்பை முதலியவாத்தியங்களையும் பலகோ
டிபூதவீரர்கள் அஷ்டதிசைகளும் செவிடுபடத்தக்கதாக முழக்கிப்போ
கவும் அவர்கள்நடக்கும்அதிர்ச்சியினால் பூமியானதுதத்தளித்துவாடவும்
சுமைமிகுதியினால் ஆதிசேஷன்நெளிந்துநெளிந்து விஷங்களைக்கக்கிவா
டவும்சமுத்திரசெலமானது அலைந்துமேலிட்டுப்பெருகவும் பூதவெள்
ளங்கள்பாதங்களைப் பெயர்த்துவைக்குந்தோறுமெழுந்ததூளிபடலமா
னதுமேலிட்டுப்பொன்னுடுகளைமண்ணுலகமாக்கவும்பூமிமுற்றும்படர்
ந்து சகலபிராணிகளையும் மயங்கித்திகைக்கச்செய்ததுமன்றியில் மேலி

ட்டுப்பானுகோபனுடன் வருகின்ற அவுணச்சேனைகளைமூடித் தியங்கச்
செய்ததைப்படிக்கிருந்ததெனிற், சிவகணங்கள் கலந்துசண்டை கொடு
ப்பதற்கு முன்னம்தாம் வளைத்துக்கொண்டு பொருதழிக்க விருப்புற்
றுச்சென்றதையொப்பக்காட்டவும் இவ்விதஆடம்பரங்களுடன் சென்ற
பூதப்படைகளானது அஞ்ஞானவானாய்த் தேவர்களுக் கெக்காலத்தினும்
தீங்குகளைச்செய்து கொடுங்கோல்செலுத்திவருகின்ற சூரபதுமன்வீற்
றிருந்தரசு செலுத்துங்கெடிஸ்தலமாகிய மயேந்திரபுரியைவளைந்துசக்கி
றவாளகிரியைப்போல வானத்தையளாவிப்பருத்து விளங்குகின்றகோட்
டைமதிலுக்குச்சமீபத்தில் நெருங்கியதைச் சிலதூதர்கள் கண்டோடிச்ச
த்தசாகரங்களும் பெருக்கெடுத்தோடுவதைப்போல இரைந்துவேகமா
ய்வருகின்ற ராட்சதச்சேனைகளை நிமைப்போதிற்கடந்து ராசகுமாரனா
கிய பானுகோபனைக்கண்டு சேவித்துவாயைமூடிக்கொண்டு ஓ சக்கிரவற்
த்தித்திருமகனே, தேவரீர் அளவற்றசேனைப்பெருக்குடன் சண்டைகொடு
க்கப்பிறையாணப்பட்டு வருவதைப் பாலசுப்பிரமணியன்தெரிந்து மு
ன்னமிவடந் தூதாகவந் தலைத்துப்போன வீரவாகுவை தேவரீருடன்
போர்செய்யத்தூண்டினன், அப்பாதகன் ஆயிரவெள்ளம் பூதப்படை
களுடனும் தன்துணைவர்சூழ்ந்துபோற்ற இந்தபட்டணத்தைநெருங்கி
வந்துவிட்டான் இதுவரையின்என்ன அனர்த்தங்களைச்செய்தனனோ தெ
ரியாது இதனைப்பார்த்து வந்தனமென்று விண்ணப்பம்பண்ணிக் கொ
ண்டதைக்கேட்டமாத்திரத்திற் பொற்கடகங்களணிந்த நீண்டகரங்களை
த்தட்டிக்கோபநகைகொண்டு உதட்டைக்கடித்துப் பெருமூச்செறிந்து
கண்களிற்றீயெழ விழித்துயிந்தசிறந்தபட்டணத்தின்மீது எண்ணிக்கை
யில்லாமற் சண்டைகொடுக்கவந்த பாலசுப்பிரமணியனையும் தயிரியசா
லியாகிய தூதனையும்படைவீரரையும் பூதப்படைகளையும்வளைத்துக்கொ
ண்டுஅதோஅதப்படும்படிக்குச் சாடிக்கொன்றுவானநாடுகளினும் திசை
களினும்சத்தசாகரத்தீவுகளினும் மேருமுதலிய குலகிரிகளி னிடத்தினு
மோடியொளித்துவாடச்செய்வேன் அப்படிக்குபாலனையுந் தூதனையும்
மற்றவீரர்களையும் வலிகுன்றிக்குறைந்து மாண்டோடச் செய்தபோதி
னும் இக்காலத்திலெனக்குண்டாகிய கோபக்கனல் தணிவதோ ஒருகால
ம்மென்னுடைய கொடியபாணச்சுடுகைக்கஞ்சிச் சத்திராதிகளானவர்கள்
அண்டங்களினும் திசைகளினும் தீவுதீபாந்திரங்களினும் புவனங்கள்வ
னங்கள்முதலியதலங்களினும்ஓடியொளித்தபோதினும்அரைநாழிகைப்
போதில் அவடங்களெங்கணும் புகுந்தாராய்ந்து பிடித்துவந்து தேவர்
க்கள்கண்டு கிலேசித்து வாடிச்சோரும்படிக்கு என்வீரவாளினும் கண்
டதுண்டமாகவெட்டியெறிவேன் இவையன்றியும் உ பாலசுப்பிரமணி

யன்-பிரமன்-மற்றதேவப்பயல்களைப்பிடித்துவந்துஅகண்டமண்டலா
திபனாகிய பிதாமுன்னம்விட்டு யிப்பட்டணத்தி லடையட் டிருக்
கின்றதேவர்களுடன்கொடியகாவலிற்படுத்தி டடாதபாடுக ளனைத்தை
யும் அனுபவிக்கச்செய்வேன் யிவர்களுக்குச்சகாயமாகத் திரிமூர்த்திகள்
வந்து தடுப்பினும் அவர்களையும்பறந்தோடச்சாடி நினைந்தகாரியத்தை
முடிப்பேனென்று இவ்விதசபதங்களைப் பேசிக்கொண்டு மனமானது
வடவாமுகாக்கினியைப்போலக் கொதித்துக் காந்தியலைக்கப் பானுகோ
பன்போகும்போது கொலைக்கஞ்சாத கடின சித்தமுடைய அவுணச்சே
னைகள்வீரமா மயேந்திரபுரிக்கு வடபாரிசத்தில் நவரத்தினமயமாய் வா
னத்தையளாவநிற்கின்ற கோபுரவாயலைக்கடந்து வெளிவந்தகாலத்தில்க
ண்பார்வைசெல்லும் யிடமெங்கனும் அடர்ந்துபர்வதங்களுக்குக்கால்
முளைத்தசைவலைதப்போலக் கோரரூபங்களுடன் அளவற்றபூதப்படைக
ள் ஆவ்ஆவென்று வாய்களை திறந்துகொண்டு கரங்களைத்தட்டிச் சிங்க
நாதங்களைச்செய்து வீதியிருப்பதைக்கண்ட ராட்சதவீரர்கள் அவர்கள்
பராக்கிரமங்களை நிதானித்து இதனைப்பேசிக் கொள்ளுகின்றனர், முன்
னம்பலதிசைகளினும் நம்முடனெதுத்துப் போர்செய்ததறுவாயில் புற
ங்கால்புட்டத்திற்ருக்கப் பறந்தோடிய தேவர்களைப்போல இந்தபூதனை
நினைக்கலாகாது இவர்கள் திரத்தையும் வன்மைகளையும் யோசிக்குமிடத்
திற்சற்றுவலியராகக் காணப்படுகின்றதெனத்தம்மில் வசனித்துக்கொண்
டவர்களாய் ஆகிலுமென்ன யிவர்கள் நம்முடனெதுத்துச்சண்டைகொடு
த்துமுற்றினும் நிற்கவல்லதிரத்தைப்பெற்றவர்களோ சற்றுநேரம்வாதா
டிநமது போருக்குத்தாபரித்து நிற்கமாட்டாமற் பலதிசையினும்பறக்
கப்போகின்றனர், உலகங்களெங்கனும் பரந்திருக்கின்ற பலமலைகளான
வைபூமண்டலத்துக் கச்சணியாகவிருக்கின்ற சிறப்புள்ளபொன்வரைக்
குநிகராவதோ ஒதிபெருக்கினும்வலியசெம்மரத்தூணமாகுமோமின்மி
னிகளெங்கனும்பரந்து சொலிப்பதாயினும்ஆயிரங் கிரணங்களைப்பரப்
பிடவகங்களை விளக்கிவரும் சூரியனுக்கிணையாவதோ அதைப்போலவே
போர்முன்னிலையில் இந்தபூதர்பராக்கிறங்களைப் பார்க்கப் போகின்றன
மென்றுபலபல விதங்களாகப்பேசிக்கொண்டவர்களாய் அவுணச்சேனை
கள்கோபமிகுதியினால்விழிகளில்அனற்பொறிகள்சிதறச்சீறிமனங்கொதி
க்கத்தக்கதாகமான்கூட்டங்களில் வரவையெதிர்பார்த்திருக்கின்ற வலிய
வேங்கைத்திரளையொப்பத் தாவிக்கொண்டிருக்கின்ற பூதவெள்ளத்தின
ருகில் வருங்காலத்தில் ரணபேரி வெற்றிமுரசங்களாதிய பொற்பறைக
ளைத்திசைகளதிர முழக்கியதட்டி உறுத்துப்பார்த்துச் சீறிக்கொக்கரித்
துவரும் ராட்சதச்சேனைகளைப் பூதப்படைகண்டமாத்திரத்தில் உலகங்

களில்வாசஞ்செய்திருக்கின்ற பிராணிகள்கண்டவுடன் பிராணனைக்கிறிகி
த்துப்போகும் எமனெமனென் றச்சங்கொண்டு தியங்கிவாடச்செய்து
அவர்களைக்கொன்றுதின்னும் பாதகர்களிவர்களோ வென்று ஆலகாலவி
ஷத்தைப்போலக் கோபித்துச்சற்சனராய் பாதுகாத்துப் போற்றியும்
துற்சனரைத்தெண்டித்தடக்கும் சுகுணமுடைய பூதவீரர்கள் பூமியிள
க்கப்பாதங்களைப்பெயர்த்துவைத்து மேலேறிவருமுன்னிலையிற்கொலை
க்கஞ்சாததுற்குணங்கள்குடிகொண்டிருக்குங்கொடியமனதைப்பெற்ற
அவுணவெள்ளங்களும் பகைத்து நேர்ந்தகாலத்தில் யிருதிறத்துப்படை
களுக்கும் வீராவேசங்கள்பிறவேசித்துஒருவரையொருவர் அதட்டிச்சீறிக்
கைகலந்து சண்டைசெய்வதற்காரம்பித்தபோது ராட்சதவீரர்கள்மிஞ்சி
காலதண்டங்களைப் போலொத்தவலிய இருப்புலக்கைகளைத் துதிக்கைக
ளிற்கொண்டு விறியிருக்கின்ற மதயானைக்கூட்டங்களை டிக்கொலுப்பி
பூதர்கள்பிற்மிக்கும்படிக்கு வளைந்து வளைந்துசாடவும் பலகோடிராட்
சதர்கள் யிடியையொப்பக்கனைக்கும்வேகமுள்ளகுதிரைப்பந்திகளைவ
யாளிவிட்டு பூதவெள்ளமானது யிதென்னஉற்பாதமாக விருக்கின்றதெ
னத்தியங்கத்தக்கதாக மிதிப்பித்துப் பூமியில்விழுந் துருளச்செய்தும்
மேகங்கள்வழுவி நிலத்தில்விழுந்து நடப்பதைப்போலக் கரியதிரேகத்
தைப்பெற்ற மதயானைகளின் மீதிருந்து சண்டைகளைச்செய்யும் அவுண
ருக்கும் அலைகளைப்போலத்தாவும் வேகமுள்ளபுரவிகளின் மீதிருந்துச
க்கிருகாரமாய் வட்டணைவந்து பகைவரைக்கலக்கித்திரியும்அவுணருக்கு
ம்உதவியாகப் பர்வதாகிறுதியாய் தெற்சரத் தொனிகளைச்செய்தோடும்
பொன்னுருளைகளைவாய்ந்த தேரணிகளிற்புசபெலபராக்கிறம சாலிகளா
கியராட்சதவீரர்கள் மண்டிபோட்டுளுக்காந்து மேருவையொத்த விற்க
ளைவளைத்துக்கொடிய பாணங்களைச் சோனைமாரியைப்போலப் பிறை
யோகித்துப் பூதரைவாட்டவும் -சவுனகாதிரிஷிகளே, இவ்விதமாக நேர்
ந்தவர்களைக்கொல்லும் கோபமும்வேகமுமுடைய யானையணிகளையும்
திமைப்போதிற் றிசைகளனைத்திலும் வட்டாகாரமாகவுலவிவரும் புரவி
ப்பந்திகளையும் பொன்மயமாகிய -அச்சு-மச்சு- குத்துக்கால்- கொடுங்
கை-முதலிய சிங்காரங்களைக்கொண்டு மேருவையொப்ப விளங்குந்
தேர்ப்பந்திகளையும் அவுணவீரர்கள் தாண்டிக்கடலைவளைந் திருக்கின்ற
கரையைப்போலபூதவெள்ளத்தைச்சூழ்ந்து கணக்கிறந்த ராட்சதவெள்ள
ங்கள்பிரளயவெள்ளத்தைப்போலமுத்திக்கைபோட்டுக்கொண்டவர்களா
ய்-சூலம்-கப்பணம்,தோமரம்-பிண்டிபாலம்-முசுண்டி-சத்தி-எழு-ம
ழு-தண்டம்-குலிசம்-சக்கரம்-பாசம்-வளைதடி-வெறிபிட்டிமுதலிய ஆ
யுதவிதங்களையும் தேவாஸ்திரங்களாகிய திவ்வியபாணங்களையும்,சோனை

ப்பெய்யலைப்போலப் பலதிசையினும் நின்றுசொரிந்து அகோரமாகிய
போரைச்செய்து அதிக விருப்புடன் சிங்கநாதங்களைச்செய்து திரிந்த
னர், இப்பிரகாரம் பானுகோபனுடன் வந்தசதுரங்கச்சேனைகளும் நா
ற்புறங்களிலும் சூழ்ந்துகொண்டு சர்வாயுதங்களையும் சரவேகமாகத்
தூண்டி செக்கலிகொட்டி யிருக்கின்றகாலத்திற் பூதவீரர்கள் ஆலகாலவி
ஷத்தைப்போலப்பொங்கிப் பாதகராகியராட்சத வெள்ளங்கள் திடுக்கிட்
டுவாடிச்சோரும்படிக்குச் சிலரோங்கினவர்களாய் மராமரங்களைவேருட
ன்பிடுங்கிக்கொண்டு கிறுகிறெனச்சுழற்றி மோதியும் எழுவாயுதங்களைக்
கடாவியும் வானத்தையளாவியிருக்கின்ற பர்வதங்களைப்பறித்துப் பந்
துகளைப்போல வீசியும் மந்தரத்தையொத்த கரங்களினால் மோதியும்
வலியபாதங்களைக் கொண்டுதைத்தும் இப்படிக்குப்பூதர் விறிச்சாடும்
போது ராட்சதச்சேனைகள் சின்னபின்னப்பட்டுக் கரங்களற்றும் சிரங்கள
ற்றும் மார்புகள்பிளந்தும் விரவெண்டயங்களணிந்தகால்களற்றுந்தோ
ள்கள்சரிந்தும் மாண்டராட்சதரை இவ்வளவெனச் சொல்லப்படுவதோ,
அக்காலத்திற் பானுகோபன்சேனைகளும்பின்னிடையாமற் கொடியபோ
ரைச்செய்யும்போது பூதவீரர்களும் அல்லோலகல்லோலப்பட்டுத் தலை
வெட்டுண்டும் மண்டைகள் துறந்தும் மார்புகிழிந்தும் தோள்கள் துடி
த்தும் வயறுபீறுண்டு குடல்கள்சரிந்தும் இடுப்புமுறிந்துங் களத்திற்
பட்ட பூதர்களையும் இவ்வளவென்று கணிக்கப்படாது இவ்விதமாகயி
ருதிறத்துச்சேனைகளும் ஒருவரையொருவர் வெல்லவேண்டுமென்கிற தீ
ரத்தினால் அகோரமாகிய போரைச்செய்யுமுன்னிலையில் மாண்டராட்ச
தச்சேனைகளும் பூதர்களேபரங்களும் சமர்வெல்லையெங்கனும் மலைகளை
ப்போல அணிபடக்கிடப்பதால் அக்காலத்திற் பெருகிய உதிரவெள்ள
மானது போவதற்கிடம்பெறாமல் நிறைந்து சமுத்திரத்தைப் போலத்
ததும்பி அலைகளைமோதியிருந்தது அத்தருவாயிற் பூதகணங்கள் மனம்
பொறாமல் வடவாமுகாக்கினியைப்போல மண்டியெரிந்து பாய்ந்து
சக்கிராதிகளேறிவந்த கோடானகோடி ரதங்களை யிருகரங்களினாலுமெ
டுத்து ஒன்றுடனொன்றைத்தாக்கிப் பொடிப்பொடியாக்கி யெறிந்தும்
மதயானைகளின் துதிக்கைகளைப்பற்றி கிறுகிறெனச்சுழற்றி யானையணிக
ளின்பேரில்மோதி அரிக்கிடையாகச்சாய்த்தும் குதிரைப்பந்திகளைவாரி
க்குதிரைப்பந்திகளின்பேரிலெறிந்து தும்சப்படக்கொன்றும் சிலபூத
வீரர்கள் பிரசண்டமாருதத்தைப்போலச் சுழன்று ராட்சதரை அமோக
மாகவாரிச்சேனைகளின்பேரில்மோதிச்சின்னபின்னப்படச்சாடியும்மலை
களையொத்த புசங்களைக்கொண்டு தாக்கிப் பலராட்சதரை உருட்டியும்வ
லியகரங்களினாற் கோடைமிடிகளையொப்பக் குத்திக்கொன்றும் பாதங்

ளைச்சுலவி ஒவ்வொரு உறையிற் சணக்கிறந்த ராட்சதரைத் தறையிற்கிட
த்தியும் ஒவ்வொரு அறையினும் கோடா கோடிக்கணக்கில் மடித்தும் ப
லராட்சதர்கள் தலைகள்பெருங்காற்றிற்பட் டுதிருந் தெங்கின்குலைகளைப்
போல ரணக்களமெங்கும் புரளும்படிக்குமோதியும் இவ்விதமாக அ
மோகமாயிருக்கின்ற மான்கூட்டங்களிற்சிங்கராசன்பாய்ந் தலைப்படுத
ப்போல எதுத்துவந்த ராட்சதவெள்ளங்களை அதப்படுத்தி வீறிவருகி
ன்றதறுவாயில் ராட்சதர்கள் மனவூக்கமற்று நிலைகலங்கித்ததளித்து இ
றந்தவர்கள்போக மற்றையர் பயபீதியினால் தளர்ந்து பின்னிடைவதை
வாடையடங்கித் தென்றற் காற்றானதோங்கி வீசி யெழுவதைப் போல
வலியும்வீரமும் பெற்றிருக்கின்ற செயசாலியான் அனலியென்னும் ரா
ட்சதச்சேனைத்தலைவன் சண்டமாத்திரத்தில் மண்டியெரிந்து கோபமா
னது மனதைப்பாதிக்கத்தன்தேரை யதிவேகமாகத் துரத்திக்கொண்டுவ
ந்து ராட்சதச்சேனைகளைப் பயப்படாதீர்களென்று ஆதரித்துநிறுத்திகெ
க்கலிகொட்டிக்கொண்டு தீரராகவிருக்கின்ற பூதச்சேனைகளுடனெதுத்
து மந்தரகிரிக்கொப்பாகவிளங்கும் பாரித்தவில்லையெடுத்து நாட்டிநா
ணேற்றி மணிகள் சத்திக்கத்தக்கதாக வளைத்து டங்காரத்தொனியைக்கா
ட்டியபோதுண்டாகிய ஓசையைத் தேவர்கள்கேட்டமாத்திரத்தில்ஐஐ
யோ, யென்செய்வோம் எவ்விடத்தோடி யொளிப்போம், இப்பாதக
னென்செய்வனோவென்று தியங்கிவாடுகின்றதறுவாயில் முன்னம்பூதவீ
ரருக்கஞ்சிப்பின்னிட்டராட்சதச்சேனைகளனைத்தும் ஒன்றுபடக்கூடித்த
ங்கள் படைத்தலைவன்செயவுச்சாகத்தைக்கண்டு சமுத்திரத்தைப்போல
யிரைந்துக்கொண்டு வந்துகூடினர், அக்காலத்தில் ராட்சதர் சணகணெ
னமுழக்குகின்ற- ரணபேரி-செயபேரிமுதலிய வாத்தியங்களினோசையு
ம்ராட்சதர்ஆரவாரங்களி னொலியும் மேலிட்டுகடலி னொலியை யடக்கவு
ம் இவ்விதஆடம்பரங்களுடன் வந்தரதகெச துரகபதாதிகளும் வீரங்க
ளைப்பேசிப் பலதிசையினும் நின்றுபோராடவும் அவர்களுக்குத்தலைவ
னாகவந்திருக்கின்ற- அனலியென்னும் வீரனானவன் வட்டாகாரமாக வ
ளைத்திருக்கின்ற வில்லில்அக்கினியாஸ்திரத்தை யெடுத்துப் பூசித்துவண
ங்கிக்கரவேகமாகப் பிறையோகித்தனன், அத்தேவப்படையானது வெ
ளிப்பட்டவுடன் வானத்தெழுந்து பலபல அனற்படைகளை உண்டுபண்
ணிக்கொண்டு தீ யை யிறைத்துச்சீறி அதிவேகமாகப்போய் புத்தினிட
த்திற்சற்பங்கள் நுழைவதைப்போலப் புசபெல பராக்கிறம சாலிகளா
கிய பூதவீரர்கள் மார்பினிடத்திற்றாக்கித் தடாரித் துருவிப்போனகால
த்திற் சிவகணங்கள் அக்கொடுமைக்காற்ற மாட்டாதவர்களாய்க் கலங்கி
வாடிப்பின்னிடுவதை இலக்கர்களிலொருவனாகிய சிங்கனென்னும் வீர

திவீரன் கண்டுதன்தேரை முடுக்கிக்கொண்டுவந்து எதிரில்நிறுத்தி அடா ராட்சதப்பயலேவண்டாதலைகீழாய்விழுகிறாய் மிஞ்சாதேமிஞ்சாதே இனி உன்சிலம்பமொன்றும்நடவாது உன்பிராணனைக்கொண்டுபோகும்எமன்வந்தேன் நீபிழைத்து ஊராப்போவோமென்பதை மறந்துவிடக்கடவை. இதோசற்றுநேரத்தில் உன்னுயிரைஎமலோகத்திற் குடியேற்றுவன் பயந்தோடினும்விடமாட்டேனென்று அதிககோபங்கொண்டவனாய்வெற்றிமாலையணிந்திருக்கும் தண்டாயுதமொன்றையெடுத்துக் கிறுகிறெனச்சுழற்றிக்கோடையிடியைப்போலமோதியகாலத்தில்தேரிற்பூண்டோடுங்குதிரைகள்சிதைந்துசாரதி தலையொடைந்து மாண்டமுன்னிலையில்அசைவற்ற சித்திரத்தைப்போலத் தன்ரதமானது நின்றுவிட்டதை அனலியென்னும் ராட்சதவீரன் தெரிந்தமாத்திரத்தில்ரவுத்திராகாரமாகக்கோபித்து வீரலட்சுமி வாசஞ்செய்திருக்கின்ற தன்வில்லிற் கணக்கிறந்ததிவ்வியபாணங்களைத் தொடுத்து அடா பசாசமே இந்தசிறந்த பாணங்களினால்உன்சிரத்தைவெட்டி பூமியிற்றள்ளிச் செயம்பெறுமற் போவேனாயில் யினிஎன்பிராணபரியந்தம் யிந்தவில்லைக் கரத்திற் றொடுவதில்லையெனப்பிரதிக்கினைசெய்து பிறையோகித்தகாலத்தில் அப்படைகள்அதிகமகிமைகளைக்காட்டி எரிந்துபுகைந்துகொண்டு வந்துதாக்கித்திரேகமுற்றிலுஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்துருவி யோடியகாலத்தில் பூதகணத்தலைவனாகிய சிங்கனென்பவன்சற்றும் அதறாமல்பெதறாமல் அக்காயங்களை யெவ்வளவுஞ் சட்டைபண்ணாதவனாய்த் தீரத்துடன் ராட்சதச்சேனைத்தலைவன் தேரிற்பாய்ந்து காளமேகத்தைப்போலக் கரியதிரேகத்தைப்படைத்திருக்கின்றபாதகன்கரத்திற்பற்றியிருந்தபாரித்தவில்லுடன் கரத்தைத்திருகிப்பதித்து சர்ப்பம்புரளுவதைப்போல நிலத்திற்றுடிதுடித்துருளுவதாகவீசினன் அக்காலத்தில் ராட்சதவீரன்சற்றும்வருந்தாமல் வலக்கரத்தினாலொரு பாரித்தகதையையெடுத்து தன்கையை முறித்தெறிந்த சிங்கனென்பவன் தலையின்பேரிற் கோடையிடியைப் போலமோதியகாலத்தில் அதைக்கண்டராட்சதச் சேனைகளனைத்தும் செயவுச்சாகங்களுடன் ஆர்ப்பரித்துச் சந்தோஷங் கொண்டாடினர், இந்த அபாயத்தைக்கண்ட தேவர்க்கள்கலங்கி மோசம்வந்ததென்று வாடிச்சோபிக்கின்ற தருவாயிற் சிங்கனென்னும் வீரன்சற்றும் யிளையாமல் அனலிகரத்தைதண்டாயுதத்துடனொருகரத்தினாற் பிடித்துக்கொண்டு மற்றக்கரத்தினால் விசாலமாய் வயிரத்தைப்போல உறுதிபெற்றிருக்கின்றமார்புநெக்குவிட்டு உதிரம்பெருகும்படிக்குமூன்றுதரங்கோடையிடியைப்போலக்குத்தினன், அத்தாக்கலினால்மனங்கலங்கி வருந்தியபோதினும் ராட்சதனுதலால் தயிரியத்தைவிடாமல் பர்வதத்துக் கொப்பாகிய தன்புசத்தி

னாற்சிங்கன்மார்பிற் றாக்கியபோது பூதசேனாபதிக் கதிக கோபம்பிற
வேசித்துத் தண்டத்தினைப்பற்றியிருக்கின்ற கரத்தைத்தூக்கிக்கிறுகிறெ
னச்சுழற்றி அண்டங்களதிரத்தக்கதாக ஆர்ப்பரித்துக்கொண்டு சுழற்கா
ற்றைப்போல வட்டாகாரமாகத்திருப்புகின்ற காலத்தில் அப்பாதகன்வி
றாப்பனைத்தும் அடங்கிபித்தனைப்போல மதிமயங்கிச்சோர்ந்துகாட்டி
யபோது சிவகணத்தலைவன் ராட்சதச்சேனைத்தலைவனை ஓங்கிபூமியி லறை
ந்ததறுவாயிற்பெருங்கூச்சலிட்டுபதைபதைத்துத்துடிதுடித்து மாண்ட
னன், இவ்விதமாகச்சிங்கனானவன் அனலியென்னும் செயசாலியாகிய அ
வுணனைக்கொன்றகாலத்தில் இந்தஅபசெயத்தைச் சண்டனென்னும் ரா
ட்சதவீரன்கண்டுகிலேசித்து கோபாக்கினியானது மேலிட்டுமனதைவ
ருத்தத்தக்கதாகச்சீறிக்கண்களில் அலற்பொறிகள் சிதறத்தக்கதாகத் தன்
தேரைத்துரத்திவந்து சிங்கனெதிரில் நிறுத்திபாரித்தவில்லைவளைத்துத் தி
சைகளதிரக்குணத்தொனிகொண்டு யாவராலுந்தடைசெய்வதற்கரியகொ
டியபாணங்களைத் தேடியெடுத்துப்பூட்டி யிவைகளினால் உன்னரியபிரா
ணனை வாங்குறேனென்று பேசியவார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் வி
ழிகளிற்றீசிதறப்பாத்து நகைத்து யிறந்து கிடக்கின்ற அனலிகரத்திற்
பற்றியிருந்தபருத்ததண்டாயுதத்தைப்பிடுங்கிக்கொண்டு கிறுகிறெனச்சு
ழற்றி ராட்சதவீரன்தேரிற்பாய்ந்து வயிரக்குன்றினைப்போலப்பாரித்தி
ராநின்ற தோளின்பேரில் எமனும் அஞ்சும்படிக்கு மோதியகாலத்தில்
அத்தாக்கலைச்சகிக்கமாட்டாமற் பெருமூச்செறிந்து நடுநடுங்கித்தேரிற்
சாய்பவன் பக்கத்திலிருந்த தண்டாயுதத்தையெடுத்துத் தன்தேரிற்பாய்
ந்தசிங்கன் மார்பில்மோதினன், அத்தாக்கலினாற்சிங்கனும் மதிமயங்கியி
ருவீரர்களும் மூர்ச்சித்துத் தேரில்விழுந்தனர், இச்சம்பவத்தை ஒருபுறத்
திலிருந்த ராட்சதச்சேனைத்தலைவனாகிய மாயனென்பவன் பார்த்தவுட
ன் வாயுவேகத்தினுமேலிட்டுத் தன்தேரைமுடுக்கிவருவதைச் செயசாலி
களாகிய பூதச்சேனைகளுக்குத் தலைவனாகவிருக்கின்ற நீலன் கண்டவுடன்
தன்தேரைத் துரத்திக்கொண்டுபோய்த்தடுத்துச் சிவபிரான் திரிபுராதிக
ளைத்தகித்தபாணத்துக்கொப்பாக விருக்கின்ற கதையையெடுத்துச் சுழ
ற்றிவீசியகாலத்தில் அப்படையானது அதிவேகமாய்ப்பிளந்துக்கொண்
டுவந்து ராட்சதவீரன் மார்பிற்பட்டமாத்திரத்தில் மனங்கலங்கி மரண
மூர்ச்சையாகத் தேரில்விழுந்துகிடந்தவன் சற்றுநேரத்திற் றெளிந்தெ
ழுந்து அதிககோபங்கொண்டவனாய்த் தானரியதவங்களைச்செய்து பெற்
றுவைதிருக்கின்ற முத்தலைச்சூலத்தை எடுத்து பூதச்சேனைத்தலைவன் மா
ர்புக்குக்குறிபார்த்துவீசியகாலத்தில் அச்சிறந்தபடையானதுசீறித்தீயைவீ
சிக்கொண்டுவந்து நீலன் மார்பிற்பட்டுருவிப்போனபோது உதிரப்

னதுபெருக்கெடுத்தோட மதிமருண்டுவிழுந்து அசைவற்றிருந்தவன்
சற்றுநேரத்திற் களைதெளிந்தெழுந்து ஆசானுபாகுவாய் நீண்டிரத்தின
க்கடகத்தையணிந்திருக்குந் தமது கரத்தைப் பிடித்தமாக்கிக்கொண்டு
பாய்ந்து ராட்சதவீரன் வலியமார்பிற் கோடை யிடியைப்போலக் குத்
தியகாலத்தில்வீரகண்டைகலிக்கும்பாதத்தையுடைய மாயனென்பவன்அ
றிவழிந்து பிறிமித்திருக்கின்றதறுவாயில் நீலன் விஷபற்களையுடைய சற்
பத்தைப்போலச் சிறிமந்தரகிரியையொத்த மாயன்புசங்களை வாசுகியை
ப்போன்றதன்கரத்தினாற் சேர்த்துப்பிடித்துக்கொண்டு கூர்மையாகவி
ருக்கின்ற தமதுபற்களினால் அவன் கண்டத்தினைக் கடித்துப்பெருகு
ம்உதிரத்தையருந்திக் கோபந்தணிந்தனன், உடனேமாயனென்னும் ரா
ட்சதவீரன் பேரொலியைக்காட்டி மாண்டகாலத்தில் அவனுயிரை எம
படாள்கட்டிக்கொண்டுதென்னாட்டைச்சேர்ந்தனர், இவ்விதமாய்மாயன்
முடிந்ததறுவாயில் இதற்குமுன்னம் சண்டைகொடுத்துமூற்சித்திருந்த
சண்டனென்னும் ராட்சதவீரனும் சிங்கனென்னும்பூதத்தலைவனும்களை
தெளிந்தெழுந்தவுடன்இருவீரர்களும்வயிரங்களைப்பேசி நிலத்திற்குதித்
து அதிகோபாவேசங்களுடன் தண்டாயுதங்களைச்சுழற்றிக்கொண்டுவல
சாரியிடசாரியாகத்திரிந்துஒருவரையொருவர் செயிக்கவேண்டுமென்னு
மாசையினாற்குதிகொண்டுமோதியும்அதைத்தடுத்தும்பின்னிடைந்துமீ
ளத்தாக்கியும் வயிரங்களைப்பேசியும் இவ்விதங்களாகத் தண்டாயுதப்
போர்வரிசைக்கிறமட்படிக்குச்சிங்கனும்சண்டனும்சுழற்காற்றைப்போ
லவட்டணைவந்து- அகோரவுயித்தியங்களைச்செய்து வருந்தறுவாயிற்பூத
த்தலைவன் கைமிஞ்சிராட்சதவீரன்கரத்திற்பற்றியிருந்தமந்தரத்தையொ
த்த தண்டத்தை ஓரடியினாற் றுகள்பறந் தோடத்தாக்கியகாலத்திற் புய
வலமைக்கொப்பற்ற ராட்சதச்சேனைகளனைத்தும் மனம்வருந்தி வாடி
பெருமூச்செறிந்துநமதுசேனைத்தலைவன்கெதியென்னமாய்முடியுமோ
வென்று தியங்கிப் பார்த்திருக்கும்போது சண்டன் அதிகோபங்கொ
ண்டு சீறிச்சிங்கனைப்பார்த்து பாரித்தபுசங்களைப் பெற்றிருக்கின்றபூதத்
தலைவனே அற்பமாகியதண்டாயுதமொடிந்ததெனக் கெற்வமடையாதே
முற்காலத்தில் எமனைவென்று தேவர்க்களைச்சின்னபின்னப்பட வாட்டி
ச்செயம்பெற்றிருக்கின்ற நானிப்போது உனக்கஞ்சுவேனென்றெண்
ணவேண்டாம இனிமல்லயுத்தஞ்செய்வோம் வாவென்றுபுசங்களைத் த
ட்டிக்கரங்களை முறுக்கிமேவிட்டுவருவதைச் சிங்கனென்னும் பூதத்தலை
வன் விழிகளிற்றீயெழ வுருத்துப்பார்த்து அடாராட்சதப்பயலே நீமி
கவும் வலியுடையவன் றான்அதையுஞ்சற்றுநேரத்திலறிகின்றனன், இதை
த்தடுத்துக்கொள்ளென்று தண்டாயுதத்தைச் சுழற்றிமோதிய காலத்திற்

சண்டனென்பவன் தன்பேரில் வரவொட்டாமற்கரத்தினாற் றட்டிப்போ
ட்டுத்தன்வலியகரத்தையோங்கிப் பகைவனதுவயிரமலைபோன்றபுசத்திற்
குத்திகூற்றுவனும்நடுங்கும்படிக்கு ஆர்ப்பரித்தகாலத்தில் அவன்உச்சாக
த்துக்கு மனம்பொறாமற் சிங்கனானவன் வடவையைப்போலச்சீறி மே
ருவையொப்பப் பாரித்திருக்கும் தண்டத்தைச்சக்கரகோணத் திருப்பி ரா
ட்சதவீரன் புசத்தின்பேரில்மோதிய காலத்திற் சதையானது துகள்பட்
டுபறந்தபோதினும் கற்கம்பத்தையொப்பப் பூரித்து வலிபெற்றிருக்கி
ன்றபுசத்தைச்சரித்துத் தள்ளியது இப்படிக்குத் தோள்தறிபட்ட தறுவா
யில்வருத்தமிகுதியாகவிருந்த போதினும்வீரனாதலாற்சவுரியத்தைவிடா
மல்தீரனாய்ச்சண்டனென்னும்ராட்சதவீரனானவன்முறிந்திருக்கின்றதன்
கரத்தைமற்றகரத்தினாற் பறித்துதண்டாயுதத்தைப்போலப் பற்றிக்கொ
ண்டுவட்டணையாகச்சுழற்றியிடசாரிவலசாரியாகத்திரிந்துவருவதைத்தே
வர்க்கள்கண்டுகொண்டாடினவர்களாய்வீராதிவீரனென்பதுஇந்தசூரனுக்
கே தகுமெனப்புகழ்ந்தனர், இப்பிரகாரம் கரியதிரோகத்தைப்பெற்றச
ண்டன் கரமாகியதண்டத்தையோங்கி வயிரத்தையொத்த சிங்கன்மார்பி
ற் றாங்கியதறுவாயில் அதற்குச்சற்றும் சளையாமற் சற்பத்தைப் போலச்
சீறிவலிய தமதுபாதத்தைக்கொண்டு சண்டன்மார்பிலுதைத்து பூமியிலு
ருளும்படிக்குத் தள்ளியதைக்கண்ட தேவர்க்கள் சந்தோஷமிகுதியினா
ற்கரங்களைத்தூக்கித்தட்டி செயம்செயமென் றார்ப்பரித்து சிவந்தவிழி
களையுடைய பூதர்களுக்குத் தலைவனென்பது உனக்கேதகும் மேலும்உ
மதுபராக்கிரமத்துக்குத் தகுதியாகியசிங்கனென்னுந் திருநாமத்தைக்
கொண்டிருக்குந்தீரனே கொடியபாதகனானசண்டனை யுதைத்துத்தள்
ளும் வலியையுடையவர்களைத்தலத்திலுங்கிடையாது ஓ வீராதிவீரனே
காலதாமசஞ்செய்யாமல் அவன்பிராணனைவாங்கி விடக்கடவையென்று
வேண்டுவதைத் தெரிந்தமாத்திரத்திற் சண்டனென்பவன் ஆக்கிரகித்து
எமனைவென்ற செயசாலியாகியஎன்னை இந்த அபலனோகொல்லவல்லன்
புத்திஈனராகிய தேவர்க்களே இந்தநிமிஷத்தில் இவனைக்கொன்று இவ
னுக்குச்செயத்தைக்கோறி இருக்கின்ற உங்களையும் என்பசியுங்கோபமு
ந்தணியும்படிக்கு வாரிவாரி வாயிற்போட்டுமென்றுதின்று உதிரத்தை
க்குடித்து வாட்டவிருக்கின்றனன், அதையுஞ் சற்றுநேரத்திற் றெரிவீர்
யிதற்குள்ளேயென் பொரியைப்போலத் துள்ளுகிறீர்களென்று அதட்
டியகாலத்தில் எதிரில்நிற்கின்ற சிங்கன் மண்டியெரிந்து அனலையொப்
பச்சொலித்திருக்கும் முண்டைக்கண்களையுடைய ராட்சதனே சற்றும்ப
யமில்லாமல் இவ்வார்த்தைகளை என்முன்னம்பேசியபடியால் உனக்குமு
டிவுகாலஞ் சமீபித்ததுபதலமாகத் தப்பித்துக் கொள்ளக்கடவையெனத்

சொல்லி தமதுதிருக்கரத்தைக் குவித்துக்கொண்டு வணையுமாயாடியவா
ய்சிதைந்துபற்களுதிர்ந்து போம்படிக்குக் கொடுமையிற்குத்திய கால
த்தில் ராட்சதப்பாதகன் கோடைகால மேகத்தைப்போலக் கதறிக்கொ
ண்டுபூமியில் விழுந்தனன் - சவுனகாதிரிஷிகளே, ராட்சதவீரன் வாய்பி
ளந்து உதிரம்பெருக்கெடுத்தோடப் பற்களுதிர்ந்து கோரதந்தங்கள்
விளங்கக்கிடப்பதைப் பார்க்குமிடத்தில் நட்சத்திரங்கள்மத்தியிற் சந்
திரப்பிறையானது பிரகாசிக்கவிருந்த செவ்வானம்நழுவி விழுந்திருப்ப
தைப்போலக்காட்டியது.இப்பிரகாரம் சண்டன்பட்டமாத்திரத்தில் எ
மபடாள் அவனுயிரைக்கொண்டு போவதற்குநெருங்கினுலென்ன விளை
யுமோவென்று திகைத்திருப்பவர்களைச் சிங்கன்பார்த்து ஏன்பயப்படுகி
ன்றீர் இந்தபாதகன் பிராணனைக்கொண்டு போவீர்களெனக் கட்டளையி
ட்டமாத்திரத்தில் தயிரியசாலிகளாய்ப் பாசத்தினுற்கட்டி யிழுத்துப்
போயினர், இந்தசம்பவங்களைக்கண்ட அசமுகனென்னும் ராட்சதவீரன்
அதிகோபத்துடன் தன்சேனாத்துரத்தி விழிகளிற் றீயெழவுருத்துப்
பார்த்து அடாபூதப்பயலே சற்றும்எண்ணிக்கையில்லாமல் நம்மவனை
யிப்படிக்குக் கொல்லத்துணிவையோ பதருதே நில்லு நில்லுஉன்பிரா
ணனைக்கொண்டுபோகும் எமனைப்போலவந்து விட்டேன் சற்றுநேரத்
திலுன்னையும் தென்னுட்டிற்குடியேற்றுவேன் இதுவரையில் நீயெதுத்
துப்போராடியவர்களைப்போல என்னைநினைக்க வேண்டாமென்று வீரங்
களைப்பேசி வாயுவேகத்தினுமேலிட்டுச் சிங்கன்மீதிலுருத்துவருவதைப்
புசபெலபராக்கிரமசாலியாகிய மதுவென்னும்பூதத்தலைவன் கண்டுதன்
சேனாத்துரத்திவந்து எதிரில்மறித்துக்கொண்டு எங்கேபோகின்றனை நி
ல்லுநில்லு இதுதான் உனக்குமரணபூமியெனக் கோபித்துப்பேசுவதை
க்கேட்டவுடன் அசமுகனென்னும் ராட்சதவீரன் றவுத்திராகாரமாகப்
பொங்கிவிழிகளிற் றீப்பொறிகள்சிதற மதுவென்னும் பூதத்தலைவன்மீ
திற் றிரும்பி அடாபயலேஉன்னை முதற்பெலியிட்டபின்பு உன் துணைவ
ன்பிராணனையும் வாங்குவேனெனச்சீறியெதுத்தனன்,இவ்விருவீரருஞ்ச
ண்டைகொடுக்க நேர்ந்ததெப்படிக் கிருக்கின்றதெனில், முற்காலத்தி
லொருகாரணத்தைக்குறித்து எமதருமராசனுடன் அவன்மந்திரியாகி
யகாலனென்பவன் பகைத்துப் போர்செய்ய நேர்ந்ததைப்போலவிருந்
தது,இப்பிரகாரம்யிருதிறவரும் நெருங்கியதருவாயில் ராட்சதத்தலை
வனுகிய அசமுகன் அதிக்கிரமித்து மேருவைப்போலப் பாரித்ததாய்த்
தன்கரத்திற் பிடிபட்டிருக்கின்ற வில்லையிருகுதைசளு மொன்றுபட வ
ளைத்து குணத்தொனிகொண்ட அதிர்ச்சியினுல் பூமி கிடுகிடென் றதிர்ந்
துசமுத்திரமுங் கொதிப்பெடுத்துக்கலங்கியது உடனே வேலைப்போல

ப்பிரகாசித்திருக்கின்ற பரத்தையர் விழிகளானவை காமுகரிடத்திற்சுழ
ன்றுகாட்டுமாறுப்போலப் பளபளத்து விளங்கும் கூரிய அலகையுடை
ய கொடியபாணங்களை யபரிமிதமாகப்பூட்டிக் கரவேகமாய்ச் செலுத்தி
யகாலத்தில் அப்படைகள்வில்லிலிருந்துவெளிப்பட்டவுடன் குறுகுறெ
ன்னுஞ் சத்தத்துடன் அனலையிறைத்துக்கொண்டு அதிசமகிமைகளைக்கா
ட்டிவருவதைசெயசாலியாகிய மதுவென்னும் பூதத்தலைவன்கண்டு நகை
த்து அவற்றின்கொடிய செய்கைகளைச்சற்றும் சட்டைபண்ணாமல் நெரு
ங்கியகாலத்திலும் சஞ்சலப்படாமல் விழிகளையும் யிமையாமற் பக்கத்
திலிருக்கின்ற மராமரத்தைப்பறித்து அந்தபாணங்களைத் துகள்பட்டு
ப்போகச்சாடவும் நினையாமல் வேடிக்கைபார்த்துக்கொண் டிருந்தன
ன், அக்காலத்தில் மீறிவந்தபாணங்கள் சுறுக்குசுறுக்குமெனச் சரீரமுற்
றுந்தைத்து தடாரித்துருவிப்போகச் சத்தியில்லாமல்உதிரத்தைப்பெரு
க்கிக் கவசர்தைப்போல விளங்கியகாலத்தில்எவ்வளவுஞ்சஞ்சலப்படாம
ல்தீரனாய்உருத்து வாயுவைப்போலப்பாய்ந்து ராட்சதவீரனேறி யிருக்
கின்றதேரில்நின்று காளமேகத்தைநிகர்த்து கெற்சித்தமாத்திரத்தில் அ
வ்வோசையானது அசமுகனென்னும் ராட்சதவீரன் செவிகளிற் பட்ட
போது திடுக்கிட்டுப்பஞ்சேந்திரியங்களும் நிலைதப்பிக்கலங்கி வாய்புல
ரமனம்நடுங்கச் சோபித்துக் கரத்திற்பற்றிய வில்லையும் பாணங்களையுந்
தேரில்நழுகவிட்டுத் தேகமெங்கும் வியர்க்கக்கிலேசித்து யாதோரு
செய்கையுமற்றிருப்பதை மதுவென்னும் பூதத்தலைவன்கண்டு அடாரா
ட்சதப்பதரே ஏதோசில சவுரியங்களைப்பேசிக்கொண்டு வந்து சண்டை
க்குநேர்ந்தநீ நமதுகெற்சிப்புக்குத் தாளமாட்டாமல் உதைத்துக்கொள்
ளுவதென்னை வீரமென்பதைச் சற்றுந்தெரியாதவனாகக் காணுகின்றனை
பின்னிடையாமற் சத்துருக்களைவெல்லவல்ல சூரனுமல்லை சமர்க்களத்
திலெதுத்துக் கொடியபோரைச் செய்வதைக்கண்டு நிறுவகித் துச்சாகத்
துடனிருக்கத்தக்க தீரனுமல்லை, ஆதலால் நீயென்ன சண்டைசெய்ய வ
ல்லை உன்பிராணனைத்தப்பித்துக் கொண்டுபோய்விடக்கடவை, உன்னை
நானொன்றுஞ்செய்யவில்லை யெனச்சொல்லித் தேரைவிட்டுநிலத்திற்பா
ய்ந்தமாத்திரத்திற் அசமுகனென்னும் ராட்சதச்சேனைத்தலைவனுக்குப் ப
ஞ்சேந்திரியங்களுந் தத்தமது நிலைகளிற்சேர்ந்து மனத்தெளிவுண்டான
னாய்வெஃக்கி இதனைநினைப்பதாயினன், ஐ ஐயோ சத்துருவானவன்
னெருங்கிய மாத்திரத்திற் சவுரியத்தையொழிந்து பயப்பிருந்தியினால்
நடுநடுங்கிச் சோர்ந்தனனென்னும் வசையுரையைப்பெறலானேன் இ
தையெவ்விதத்திற் றீர்த்துக்கொள்ளவல்லேன் சமர்க்களத்திற் பகைவனு
க்கஞ்சினவனென்று நம்மையொத்த சூரர்கள்யிகழ்ந்து பேசும்படியா

னைஅபவாதத்தை பிராணனுள்ளமட்டுந்தாங்கிப் பலருமேச உயிரைவளர்
த்திருப்பதிலும் இவனுடன்சண்டைகொடுத்து வென்றுவருதுஅல்லதுமா
ண்டாவது இந்தஅபவாதத்தைத்தீர்த்துக் கொள்ளக்கடவனெனத் தீர்மா
னித்துக்கொண்டு மானமென்னுங் கனலானது மனதையுந் தேகத்தை
யுங்கொளுத்தி வாட்டத்தீரனாய் ஆலகாலவிஷத்தைப்போலக் கோபித்து
சண்டைசெய்யத்துணிவுகொண்டுதன்தேரைத்துரிதமாகத்துரத்திப்போ
ய்அடாபூதப்பயலே யெங்கேபோகிறாய் நில்லுநில்லு ஏதோ திரோகஅசதி
யினாற்சற்றுவாட்டங்கொண்டிருந்தனன் இனிநீயெவடத்திலோடியொளி
ப்பினும்விடாமற்றுடர்ந்துகொன்று பழியைத்தீர்த்துக் கொள்வனென
ப்பேழ்வாயைத்திறந்து திசைகளதிர ஆர்ப்பாட்டங்களைச்செய்துக்கொ
ண்டுஅசமுகன்வருவதைவீரசிங்கத்தையொத்த புசபெலபராக்கிரமசாலி
யாகிய மதுவென்னும் பூதத்தலைவன்கண்டு நகைத்து ஓ சுத்தவீரனே
செத்தவனைப்போல விருந்தநீயானவன் ஒருநிமைப்போதில் இத்தகைய
சவுரியங்களைப்பேசும்படிக்கு யாவரிடத்திற்கற்றனை அடாபோடிகிஞ்ச
ற்றுஞ்சவுரியத்தைப் படையாதடதிதனென்றெண்ணி பிராணபிச்சைத
த்துபோகப்பட்ட வீராதிவீரனாகிய எல்கிற்கிக்கொரு பழிப்புணாதரவ
ந்தனையோ, அபலனே யென்றிகழ்ந்துபேசும்மதுவென்னும் பூதசேனா
பதியை அசமுகனென்னும் ராட்சதன்தடுத்துத் தங்கக்கட்டுகள் பூண்டு
பாரித்திருக்கின்ற வில்லையெடுத்து வளைத்துநாணேவிகொண்டு தீயையி
றைக்கத்தக்ககடோமாகிய அர்த்தசந்திரபாணங்கள் அளவற்றதை யெடுத்
துக் காவேகமாகப் பிறையோகித்துச் சிங்கநாதஞ்செய்தனன், இதனைம
துவென்னும் வீரன்கண்டு அதிககோபங்கொண்டு மிருத்தமகிமைகளைக்
காட்டி மேலிட்டுவரும் பாணங்களை வயிரத்தண்டத்தையொத்த தமது
காத்திறற் கோட்டுப்புள்ளைப்போலத் திசாதிசைகளினும் இறைந்துபோ
ரும்படிக்குத் தட்டிப்போட்டுஇன்வமுமியிவன்சேவகத்தைப் பார்ப்
போமென்று தீரனாகநிற்கும்போது ராட்சதவீரன் மனம்பொறுமல்ம
றபடியும் கூரியகடியபாணங்களைத் தாண்டி ஆர்ப்பரித்தகாலத்தில் மது
வென்னும் பூதவீரன்சற்றுமஞ்சாமல் வீறிவருகின்ற சரங்களைத் தச்சை
யைப்போலத்தட்டியகாலத்தில் அசமுகன் திடுக்கிட்டு நாம் அரிநாகத்தே
டிவைத்திருந்தபாணங்களைச் செலுத்தினோம் அவைகளைச்சட்டைபண்ணு
மல் விலக்கிச் சலனமற்று நிற்கின்றனன், இனி யென்செய்வோமென்று
எண்ணுதெல்லாமெண்ணி உடனேஒருநினைவுகொண்டு- சூலம்- வேல்-
இருப்புலக்கை- கழுமுள்- தண்டம்- வளைதடி- சக்கரம்- கவண்முதலிய
படைகளையெடுத்துஒன்றின்பின்னொன்றாக நிவ்வுநிவ்வென்றுபிறையோ
கித்ததறுவாயில் அவைகள் அதிவேகமாக வந்துமதுவென்னும் வீரன்திரே

கத்திற்குக்கி வருத்தியகாலத்திற் காலாந்தகனைப் போலச் சீறிப்பாய்ந்
து ராட்சதவீரனேறியிருந்த தேரைச்செண்டைப்போலவெடுத்துச் சுழ
ற்றிவேகமாய்ச் சமுத்திரத்தினிடத்தில் வீசியபோது அப்பாதகன் மத்தி
யிற் பூமியிற்குதித்தோடி வந்து கரங்களைப்பிசைந்து சுழற்றிமல்லயுத்
தத்துக்குப் பூதநாயகன்மீதில் வருவதைக்கண்டு கோபித்துபாதத்தைநீட்
டிஅண்டத்துக்கப்புறத்திற் போகும்படிக்கு எத்தியகாலத்தில்வானவெ
ல்லைமுற்றும்போய்த்திரும்பிவந்து பூதத்தலைவன்முன்னம்விழுந்து கிள
ம்பிமதுவின் மார்பிற் சோடையிடியைப்போல வறைந்து அடாபூதப்ப
யலே நீயா என்னை வெல்லவல்லவன் இதோ உன்பிராணனைவாங்கி எம
லோகங்குடியேத்துகிறேன் பாரென்று வசைமொழிகளைப் பேசிக்கொ
ண்டுமாயமந்திரத்தினை யுச்சரித்துஅதன்முயற்சியினால் வானத்திற்போ
ய்மறைந்திருந்து தான்முன்ன மரியதவங்களைச்செய்து-மகாவிஷ்ணுவி
னிடத்திற் பெற்றுவைத்திருந்த நாராயணாஸ்திரத்தை யெடுத்து மனப்பூ
ர்வகமாக தூபதீபநைவேத்தியமுதலியபூசைகளைநிரப்பிவணங்கிப்போ
ற்றி ஓ! படைகளுக்கரசே அதோநிற்கின்றபூதத்தலைவன் சிரத்தைச்கண்
டித்து அவன்பிராணனையுண்டு வாக்கடவையென்றுவேண்டி அதிகவே
கமாய்ப்பிறையோகித்துக் களித்துப்பார்த்திருந்தனன், சவுனகாதிரிஷி
களே, பகைவனைக்கண்டிக்கச்செலுத்திய பாணத்தினால்தான்மாளப்போ
றயேதுவவையைத்தெரியாமல் அசமுகனென்னும் ராட்சதப்பாதகன் பவு
த்திரமனதைப்பெற்றிருக்கின்ற மதுவென்னும் பூதத்தலைவன்மீதிற் செ
லுத்திய நாராயணாஸ்திரமானதுவெளிப்பட்டவுடன் தகத்தகாயமாய்ப்பிற
காசித்து அலையிறைத்துபலசோடி பிர்மாஸ்திரம்-அக்கினி- வருணன்
-வாயு- குபேரன்முதலிய தேவாஸ்திரங்களைப் படைத்து குமிறிஎரிந்து
புகைந்துகொண்டு எங்குந்தன்மயமாய் அதிகமகிமைகளைக்காட்டிச்சிறி
இளைந்துபகைவனைத் தேடிச்சமீபத்தில்வந்தமாத்திரத்தில் மதுவென்னு
ம்பூதத்தலைவன் வெறுங்கையுடன் நிற்பதைப் பார்த்தவுடன் நம்மைஇ
ப்படிக்குத்தினவாகிய சிவபத்தன்பேரிற் செலுத்துவனோவெனக் கொ
தித்துத்திரும்பி காடாந்தகாரமாக வீறியிருந்தவிருட்பெருக்கைப் பிற
காசம்பொருந்தியகிரணங்களையுடைய சூரியன்மாய்த்ததைப்போல மா
யப்பெருக்கைக் காட்டி அதன்மத்தியிலிருந்து தன்னைவிடுத்த அசமுக
னென்னும் ராட்சதப்பாதகன் மாயவஞ்சகத்தையும் அவன்சிரத்தையுங்
கண்டித்துத்தள்ளிப்போட்டு வானகெங்கையில் முழுகிப்பரிசுத்தமாய்
சொலித்துக்கொண்டு சக்கரப்படையானதுபோய்- மாவிஷ்ணுவினிடத்
திற்சேர்ந்தது, அப்போதுஅந்த அசமுகனென்னும் ராட்சதச்சேனைத்த
லைவன் யிடிமின்னலுடன் மேகமானது குமுறிக்கொண்டு நழுகியதைப்

போல கோறதந்தங்கள்விளங்க அலறி ஆவ்ஆவென வாயைத்திறந்துவந்
து ரணக்களத்தில்விழுந்துருண்டு மாண்டனன், இந்தசம்பவத்தைக்கண்
டராட்சதச்சேனைகள் திடுக்கிட்டு நடுநடுங்கிச் செருக்கற்றுப் புலம்பி வா
டினர், தேவர்க்கள்மனமகிழ்ந்து இனியிப்படிக்கொத்த சண்டைசெய்ய
வல்லராட்சதவீரர்கள் யாவரிருக்கின்றனர், இவனுடன்போர் முற்றியதெ
ன்று ஆனந்தக்கூத்தாடி கர்பகமலரை மதுவின்பேரிலிறைத்து வாழ்த்
திகளித்தனர், இப்பிறகாரம் அசமுகன் மாண்டதையும் பூதப்படைக
ளின்கெலிப்பையும் தேவர்க்கள்செருக்கையும் ராட்சதப்படைகள்சஞ்ச
லங்களையும் பாநுகோபன் சேனைத்தலைவர்கள் கண்டமாத்திரத்தில்நல்ல
காரியம் நம்மையொத்த வீரர்களிருந்தும் இத்தகையகாரணங்கள்நேரு
வதோவென்று ஆலகாலவிஷத்தைப்போலக் கோபித்தவர்களாய் தங்கள்
சேனைகளுக்குத் தயிரியங்களைச்சொல்லிக் கூட்டிக்கொண்டு ரதங்களைத்
தூத்திப்போய் பூதசேனைகளை நாற்புறங்களினும்வளைந்து தங்கக்கட்டு
கள்பூண்டு இருகுதைகளினும் மணிகள்சத்திக்கும் பாரித்ததநுசுகளைவட்
டாகாரமாக வளைத்துத்திசைகளதிரக் குணத்தொனிகொண்டு விஷத்தொ
வையலிட்டிருக்கின்ற திவ்வியபாணங்களை அமோகமாகப் பூட்டிச்சோ
னைமாரியைப்போலப் பிறையோகித்தும்-சக்கரம்-பிண்டிபாலம்- தோ
மரம்-சப்பணம்-முசலம்- சூலம்- தண்டமுதலாகிய ஆயுதங்களையுங்
கணக்கிறந்ததாகச்செலுத்திச் சக்கிருகாரமாய் ரணக்களமெங்கும் உல
வும்போது அவர்கள்தூண்டிய படைகள் அனலையிறைத்துப் புகைகளை
ப்பெருக்கி அதிசஉற்பாதங்களை விளைத்துக்கொண்டு தடைக்கஞ்சாமல்
மீறிவேகமாய்ப்பாய்ந்து பூதப்படைகள்சரீரங்களிற் சுறுக்குச்சுருக்கெ
னத்தைத்து சல்லடைக்கண்களாகத் துளைத்துவாட்டும்போது அந்தஉப
த்திரவங்களுக்குச் சகிக்கப்படாமையால் தயிரியத்தைவிட்டு தலைவிரிகோ
லமாய்த் திசைகளெங்கனும் பறந்தொளிக்கத்துடங்கினர், இவ்விதமாகச்
சிவகணங்கள் வலியிழந்துபின்னிடுவதையும் ராட்சதவீரர்கள் அகோரவு
யித்தியங்களைச்செய்து செயசாலிகளாய் வீறித்திரிவதையும் இலக்கர்களி
லொருவனாகிய தண்டகனென்னும் வீரன்கண்டு மனம்புழுங்கிநம்மவர்
களிப்பாடுபடுவதோவெனச்சீறிதன்தேரை முடுக்கிக் கொண்டுவந்து இ
மனுக்கோப்பாகச்சொல்லும் பாரித்தவில்லைவளைத்துப் பகைவர்திகைத்
துவாடும்படிக்கு டங்காரசத்தத்தைக் காட்டிகணக்கிறந்த கடூரமாகியபா
ணவிதங்களைக் கரவேகமாகப்பிறையோகித்தனன் - அதெப்படிக்கிருந்த
தெனில், தண்டகனென்னும் மேகமானது இந்திரதநுசையொத்த வில்
லைக்கொண்டு பிடியைநிசர்த்த குணத்தொனிகாட்டி மின்னலைப் போன்ற
அலகையுடைய சரங்களைச் சோனைப்பெயலுக்குச் சமதையாகச்சொரி

த்ததுக்கோப்பாகக்காட்டியது. இவ்விதமாக புசபெல பராக்கிரமசாலி
யாகிய தண்டகனென்னும்வீராதிவீரன் விட்டபாணகோடிகளானதுவெ
ங்கனும்பரந்து புகைந்தெரிந்துகொண்டு பகைவனை வளைந்துவளைந்
து சாடும்போது கொடியசெய்கைகளையுடைய ராட்சதச்சேனைகள்சின்ன
பின்னப்படச்சிதறிச் சரீரமுற்றும் துளைத்தும் பிளந்தும் கண்டதுண்ட
மாகவெட்டியும்கால்களைத்தறித்தும் புசங்களைச்சரித்தும்மார்பைப்பிள
ந்தும் சிரங்களைக் கண்டித்தும்வயற்றைப்பீறிக்குடல்களை யிறைத்தும்
இப்படிக் கதம்படவும் மேருவைப்போலபாரித்திருந்த தேர்களானவை
அச்சொடிந்து வண்டில்களுநுருண்டு மச்சுகள் நுறுங்கி கொடுங்கைகள் து
ள்பட்டு கொடை கொடிகள்பறந்து நாசப்படவும் நீலகிரியைப்போல
க்கறுத்ததிரோகத்தைப் பெற்றிருக்கின்ற மதயானைப்பந்திகள் வீறிட்டு
க்கலைந்து ரத்தின முகபடாமணிந்த மத்தகங்கள் பிளந்து பனையையொ
த்ததுதிக்கைகள்வெட்டுண்டு பிறையையொப்ப விளங்குந்தந்தங்களிறை
ந்தும் பாரித்தகால்களற்று தும்சப்படவும் பஞ்சகல்யாணிகளாகியபுர
வியணிகள் அல்லோல கல்லோலப்பட்டு பின்னிவிட்டிருக்கும் பிடரிம
யிரையுடைய சிரங்கள் நுறுங்கிச் சொற்னவெண்டயங்கள் கலிக்கும்கால்
கள்தறிந்து சாமரங்களையொத்த வால்கள் பறந்துமாளவும் இவ்விதமா
க ரதகெசதுரகபதாதிகளாகிய சதுரங்கச்சேனைகளும் அதாஅதப்பட்ட
காலத்திற்பெருகிய உதிரமானது கடலைப்போலயிரைந்து அலைகளைவீசிச்
சமுத்திரத்திற்பாய்ந்து தெக்கிக்கரைகளையுடைத்துப் பூமண்டல முற்றி
னும்பெருகிக் கடையுகவெள்ளத்தைப்போல மலைகளைப்புரட்டிக்கொ
ண்டோடவும் பிணமலைகளெங்கும் பெருத்து வானத்தையளாவக்குவிய
வும்பலகோடி கவந்தங்கள் கூத்தாடவும்இப்பாடுபடுமுன்னிலையில் தப்
பிநின்ற ராட்சதச்சேனைகள் அதிகாயங்களினால் மனம்வருந்திநிலைபெற்
றுநிற்கப் படாமையால் திகைத்து தங்கள் பிராணனைக் காப்பாற்றிக்
கொள்ளும்பொருட்டு மானத்தையும் வீரத்தையும் பறிகொடுத்தோடி
த்திசாதிசைகளினும் பூவட்டங்களினும் பர்வதச்சாரல்களினும் வனாந்தி
ரங்களினும் தீவுகளினும்பதுங்கினர்-சவுனகாதிரிஷிகளே, எத்தகையரா
லும் செயிக்கவொண்ணாத ராட்சதவெள்ளங்க ளனைத்தும் இவ்விதமாக
யிறைந்துபறந்துபோகவும்அவர்களைப்போற்றியிருந்தவீரபராக்கிரமசா
லிகளாகிய கணக்கிறந்த படைத்தலைவர்கள் சின்னபின்னப்பட்டு மாண்ட
தையும் பூதர்களும் இலக்கரும்சேனைத்தலைவர்களும் செயவுச்சாகங்களு
டன்களித்து ரணக்களமெங்கும் எதிரின்றித்திரிவதையும் ஆயிரங்கிரண
ங்களையுடைய சூரியனைத் தளைசெய்த வீராதிவீரனாகிய பானுகோபன் க
ண்டமாத்திரத்தில் வடவா முகாக்கினியைப்போலக் கொதித்துத் தீயும்

புரையுமெழ நகைக்குச்சிறி திதனைச்சொல்லுவதாயினன், கற்பகமலர்க
ளையணிந்த புயாசலங்களையுடைய இந்திரன்முதலிய தேவர்க்கள் தங்கள்
பதங்களையிழந்து சின்னபின்னப்பட்டு வாடியோடக் கொடியபோரா
ச்செய்த செயசாலிகளாகிய நம்மிட சேனைவீரர்கள் இத்தினம் சிவகுமார
னேவிய அடலாரகியபூதங்களினாலும் படைவீரர்களாலும் இப்பாடுபடு
வதோ சூரியனைச் சிறைபடுத்திச் சகலதேவரையும்வென்று கீர்த்திபெற்ற
நாம்பார்த்திருக்கச் சத்திராதிகள் வலியுள்ளவர்களாய் புசபெலபராக்கிர
மசாலிகளாகிய ராட்சத வீரர்களை வாட்டிச் செயம்பெறுவது வெகுநேத்
தியாகவிருக்கின்றது வீரசிங்கமானது கோபித்துத் தன்சவுரியத்தைக்கா
ட்டாமல் அடங்கியிருக்குமாயில் மதயானைகள்வீறி வெற்றிபெறுவதரி
தன்று நான்பட்டணத்தைவிட்டுப் புறப்படும்போது ரதகெசதுரகபதா
திகள் இருபதினாயிர வெள்ளங்களுடன் வந்தேன் இப்போது நம்மைச்
சூழ்ந்திருக்கின்றவர்களைப் பார்க்குமிடத்தில் ஆயிரவெள்ளம் சேனைகளி
ருக்கும்போற்காணுகின்றது கொடியபோரைச்செய்து மாண்டவர்கள்
இரண்டாயிரவெள்ளத்துக்குமேற்படுமாயினும்மற்றவெள்ளங்கள்பறந்
துபோனவிடந்தெரியவில்லை இந்தப்பூதப்படைகளை ஒருபொருளாகம
தியாமல் அசட்டையாய்ப் புறவணியில்நின்று நம்மிடசேனைகளையும் ப
டைத்தலைவர்களையும் சண்டை கொடுக்கும்படிக்கனுப்பி வீணில்மாளக்
கொடுத்தேன் இதைமுன்னமே தீர்க்காலோசனைசெய்துஒப்பற்ற பாரித்
தவில்லைக் கரத்திற்கொண்டுபோயெதுத்துச்சத்திராதிகளை மிஞ்சவொட்
டாமற்படிக்கிச்செயம்பெற நினையாமற்போனேன். நடந்துபோனகா
ரியங்களை நினைந்துநினைந்து மனம்வருந்துவதினாற் பிரயோசனமொ
ன்றுமில்லை. இனிகாலதாமசஞ்செய்யாமல் நானேபோர்முனையில் நடந்
துசத்திராதிகளை வளைந்துகொண்டு கொடியபோரைச்செய்து ஒருநாழி
கைப்போதிற் சின்னபின்னப்படவாட்டிக் கொல்வேன் இந்தவெற்றியி
னைப்பெறுமற் போவேனாயில்ஆயிரத்தெட்டண்டங்களுக்கதிபனாயிருக்
கின்ற சூரபதுமன்குமாரனாக மாட்டேனெனச் சபதம்பேசிச் சாரதியை
ப்பார்த்து நமது ரதத்தினைப்பகைவர் முனையில் நிமைப்போதிற் கொண்
டுபோய் சேர்க்கக்கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் வாயுவேக
மும் மனோவேகமும் பிற்படத் தக்கதாகச் செலுத்தியகாலத்தில் ரதகெ
சதுரகபதாதிகளும் செயவுச்சாகங்களுடன் ஆர்ப்பரித்துக்கொண்டு பல
வாத்தியங்களும் முழங்கத்தக்கதாகப் பிரளயவெள்ளத்தைப்போலத் து
டர்ந்துபோகவும்போர்முனையைச்சேர்ந்துபானுகோபனுக்குக்கோபமி
குதியினாற் புருவம்நெற்றியிலேற மண்டியெரிந்து மகம்மேருவுக்குச்ச
மதையாய் பாரித்துத்தங்கக்கட்டுகள் பூண்டிருக்கும் வெற்றிவில்லையெ

டுத்துநாணியைப்பிகிந்து குணத்தொனிகாட்டிய வோசையினால் அண்ட
வடுக்குகள் கலகலத்தும் குலகிரிகள் நெக்குவிட்டும் மேருகிரி தத்தளித்
தும் சத்தசாகரங்களுங் கொதிப்பெடுத்தார்ப்பரிக்கவும் பூமியானது நடுந
டுங்கிவாடுமுன்னிலையில் அச்சுமையைத் தாங்கப்படாமல் ஆதிசேஷன்
கொண்டவருத்தத்தை இன்னவிதமெனச்சொல்லப்படுவதோ சூரியன்தி
சைமாறிக்கலங்கி என்னவினையுமோவென் றேங்கவும் நட்சத்திரங்கள்நி
லைதப்பிப் பலபலவென்றுபூவட்டமெங்கு முதிரவும் இவ்வித உற்பாதங்
கள்நேர்ந்ததறுவாயிற்சற்வசங்காரகாலத்தில்தேவாதிதேவனாகியசிவபிரா
ன் அண்டரண்டபுவன சராசரங்களை யொடுக்க நினைந்தபோது ஆழிமே
கங்களொன்றுபட்டு வருஷிப்பதைப்போலப் பரந்துகெலிப்புடன்வீறி
யிருக்கின்ற பூதப்படைகளின்பேரிற் சரவருஷங்களைப்பொழிகின்றதறு
வாயிற் சோடையிடிகளைப் பெருக்கி விழிகள்கூச மின்னி தீயைவீசிப்பு
கைந்து பற்பல கொடுமைகளை க்காட்டி அதிகமகிமையுட ன் பிரச ண்
டமாருதத்தைப்போல வேகங்கொண்டு குறுகுறெனச் சீறிவருவதைச்செ
யசாலிகளாகிய சிவகணங்கள்கண்டமாத்திரத்தில் வடவையைப்போலச் சீ
றிக்குழிபட்டிருக்கின்ற விழிகளில் தீப்பொறிகள் சிதறத்தாவி அஷ்ட
குலாசலங்களுக்குச்சமதையாக வோங்கிநிற்கின்ற பற்வதங்களையும்மரா
மரங்களையும் பறித்துக்கிறுகிறெனச் சுழற்றி றிவ்வுறிவ்வெனவீசிஆழிகா
லத்திற் பெருகும்யிடிகளைப்போல ஆர்ப்பரித்தனர், அவைகள்அதிவே
கமாகப்போய் திக்குதிசைகள் தோற்றாமல் நிறைந்துகுமிறிக்கொண்டு
மேலிட்டுவருகின்ற பாணப்பெருக்கைத்தடுத்துப் பிறையோசனப்படா
மலழித்தது மன்றியில் மேலிட்டு வருவதைப் பானுகோபன் பார்த்து
ஒவ்வொருபற்வதத்துக்குக் கோடிபாணங்களாகக் கரவேகங் கொண்டு
செலுத்தி பொடிப் பொடியாக்கித் துகள்பறக்கச்சாடியபோது மலைகளை
னைத்தும் நுறுங்கித்தூளியா யெழுந்து வானநாடுகளிற்பரவி தேவர்க்க
ள்கெருடகாந்தறுவர்சித்தவித்தியாதரர் முதலியசகலர்திரேகங்களினும் ப
டிந்து அவர்களாற் கூடியவனாயிற் றுடைத்தும்போகாமல் வானகெங்
யிற்படிந்துசுத்திசெய்து கொண்டவர்களாய்த் திகைத்திருந்தனர், இவ்வி
தமாகப் பற்வதங்க ளனைத்தும் பறந்துபோனகாலத்திற் பானுகோபன்
கோபதீபிதனாய்ச் சிலரோங்கித் தன்தேராச் சுழற்காற்றைப்போல ரணக்
களமெங்கணுஞ் சக்கிராகாரமாகத் திருப்பித்திருப்பி பாரித்தவில்லாண
து இருகுதைகளு மொன்றுபட ஒவ்வொருதொடையிற் கோடாகோடிக்
கணக்கிற் குறூரமாகிய சரங்களைப்பிறையோகிக்குந் தறுவாயில் மந்திர
முயற்சியினாலொன் றனந்த உருக்கொண்டு மின்னலைப்போல அலகுகள்
பிறகாசிக்கவும் விஷங்களையுந் தீயையுமிறைத்து சோமசூரியாக்கினி யெ

ன்றும்மூர்க்கடனாவிழிகளாகப் படைத்திருக்கின்ற ருத்திரமூர்த்தியும் ம
ன்னுயிர்களைக்கொண்டுபோகுங்கடினசித்தமுடைய எமனும்அஞ்சும்ப
டிக்கு அநேகஉற்பாதங்களைக்காட்டிவந்து செயசாலிகளாய்வீறி இருந்த
பூதச்சேனையின் பேரிற்றாக்கி அல்லோலகல்லோலப்படுத்தும்போதுசிர
ங்களற்றும் மண்டைகள்துறந்தும் மூளைகள் சிதறியும் விழிகள்பெயர்ந்
தும் பற்களுதிர்ந்தும் தோள்கள்சரிந்தும் மார்புபிளந்தும்கரங்கள்வெ
ட்டுண்டும் வீரவெண்டையங்கள்கலிக்கும் கால்கள்முறிந்தும் தேகங்
கள்சதைந்தும் சவுரியங்கள்பேசிய வாயைப்பிளந்தும் கரங்களிற்பற்றி
யிருந்தஆயுதங்களைத் துகள்கண்டும் இவ்விதமாகஅதப்படுத்தும்போ
து பூதர்கள்களேபரங்கள் பூமியிற்சாயுமுன்னம் உதிரம்பெருகிப்பரந்த
தெப்படிக் கிருக்கின்றதெனிற், கொடியபாதகராகிய ராட்சதர்கள்மிகித்
தமண்ணை முற்றிச்சுத்திசெய்வதைப் போலக்காட்டவும் பிறகாசம்பொ
ருந்திய அலகையுடையபகைவன் பாணங்கள் கண்டித்தகாலத்திற் பூதர்சி
ரங்களாலவை மின்னலைவிரித்து மேகங்கள்சஞ்சரிக்கும் வானத்திலெழு
ந்தபோது அந்த முண்டங்களி னின்றும் உதிரமானதுபீரிட்டோங்கு
வதைப் பார்க்குமிடத்தில் ஓ சிரமே நாம் குமரகுருபரன் சேனையாதலா
ற்பகைவனுக்கஞ்சியோடலாகாது நில்லுநில்லெனப்பின்றுடர்ந்து தயி
ரியங்களைச்சொல்லிஇட்டுவரச்சென்றதுக்கொக்கும்சவுனகாதிரிஷிகளே,
அக்காலத்திற்பானுகோபன் செய்தபோரின் சாகசங்களை இன்னவிதமெ
ன்றுசொல்லப்படுவதோ வில்வித்தைக்கும் கரவேகத்துக்கும் சரவேகத்
துக்கும்மனவுறுதிக்கும்புசபெலபராக்கிறமத்துக்கும்சக்கிறவர்த்திதிரும
கனிஃமுர்திவிரலைமடக்கவல்லனூரனுமிந்ததிறிலோகங்களினுமுண்டோ
அவன்கற்றதனுர்வித்தையின் பிறபலத்தைநினைக்கநினைக்க மனதிலுங்க
ளிக்கபபடவில்லை அவன்செலுத்திய ஒவ்வொருபாணமானது எங்களை
யனுகிய சிவசுப்பிறமணியதேவர் சேனைகளிற்பாய்ந்து வலியசிரத்தையுந்
தோளையும்மார்பையும் வீரவெண்டயமணிந்திருக்கின்ற கால்களையும்எ
காலத்திற் கண்டித்தோடும் ஓ ரிஷிகளே, இத்தகைய சண்டையை எந்
தருணும் செய்திருக்கமாட்டான் இப்படிக்குத்தேவர்களை யலைத்துச்சி
றைவைத்திருக்கின்றபாதகனுகியபானுகோபன் ஒப்பற்றவில்வன்மையினு
ம்புசபெலத்தினுலும் சின்னபின்னப்படவாட்டி யழிக்கின்றகாலத்தி
ற் செயசாலிகளாகியபூதப்படைகள்மாண்டவர்கள்போகநின்றவர்திகைத்
துப்பஞ்சேந்திரியங்களுங் கலங்கிக்கால்கள்நடுநடுங்கிநிற்க மனம்தாய .
ரியாமற் சற்றுநேரந்தாமசப்பட்டுஇவடத்தி லிருப்போமாகிற்படாதபா
டுகளைப்பட்டுப் பிராணனையும்போக்கவரும் பகைவனைப் பார்க்குமிடத்
திற் காலாந்தகனைப்போலத் திரிகின்றனன்,இந்தவேளை தப்பித்துக்கொ

ண்டால்பிற்படிக்குப் பாத்துக்கொள்ளுவோம் மேலும்கோடிசூரியப்பி
றகாசமாய் விளங்கியிருக்கின்ற வெற்றிவேலாயுதபாணியாகியபாலசுப்பி
றமணியதேவரானவர் - பிரமன்-விஷ்ணுமுதலியதேவர்கள்போற்றத்தக்க
தாகபாடிவீட்டிற் சலனமற்றிருக்கின்றனர், நம்மைப்பாதுகாத்து ரட்சிக்
கும்படிக்குக்கட்டளையிட்டனுப்பிய வீரவாகுதேவரும்முதற்பெலிக்கு
நம்மைசெலுத்திவிட்டு புறவணியிற்சவுக்கியமாயிருக்கின்றனர், இவட
த்தில்நாம்படும் வருத்தங்களொன்றும் அவருக்குத்தெரியாது நம்மைத்
தொடர்ந்துவந்த சேனைத்தலைவர்களுந்தீனராகிய நம்மைமுன்தள்ளிஇந்த
பாதகனிடத்திற் காட்டிக்கொடுத்துவிட்டு அங்குமிங்கும் களித்துலவுகி
ன்றனர், எதிரிலகப்பட்ட ஏழைகளாகியநம்மையித்தபாதகன் முன்பின்
பாராமல் மடக்கிக்கொண்டுகொல்லுகொல்லெனச்சாடி அளவற்றவர்களை
ச்சங்கரித்தனன், நமக்கோயிவனுடனெதுத்துப் போர்செய்யும்வலியுமி
ல்லைதிரேகமும்வூசலாடுகின்றது அப்படிக்கொத்தநாமிவடத்திலிருப்பதி
னாலாகவேண்டுவதென்னையென்று இவ்விதமாகப்பற்பல யெண்ணியெ
ண்ணித்துணிவுகொண்டவர்களாய்றணக்களத்தில்நின்றபூதப்படைகளனை
த்தும்பயபீதியினாற்றிசைதப்பியோடி பின்னணியில்வெற்றிமாலைபுரளு
ம்புசபெலபராக்கிரம சாலியாகிய வீரவாகுதேவரிருக்கின்றதலத்தைநோ
க்கியதைபதைத்தமனதுடனும் வாடியமுகங்களுடனும் பலகாயங்கள்
பட்டுஉதிரப்பிறவாகமோடுந் திரேகத்துடனும் ஓடோடியும்வருகின்றவ
ர்கள் நிலைகளை ரணரங்கசூரனாகிய உக்கிரசேனனென்னும் படைத்தலைவ
ன்கண்டவுடன் மனம்வருந்தி நம்மவர்களுக்கிந்த கேடுநேருவதோவெ
னப்பொங்கி விழிகளில்அனற்பொறிகள் சிதறவும்புருவம் நெற்றியிலே
றவும் முகமண்டலம்வியர்க்கவும் வாய்துடிக்கவும் அதிககோபங்கொ
ண்டுபூதகணங்களைப்பாத்துபயப்படாதிர்கள்உங்களுக்கிந்ததொந்தறை
யைக்கொடுத்தபகைவனை நிமைப்போதிற் சின்னபின்னப்படக்கண்டிப்
பேன் நில்லுங்கோள் நில்லுங்கோளென்று தேறுதலை சொல்லிக்கொண்டு
அதிவேகமாய்த்தங்கக்கட்டுகளிறுக்கியிரா நின்ற பாரித்ததண்டாயுதமொ
ன்றைகரத்திற்கொண்டு தேவர்க்கள் சபாசென்று கொண்டாடும்படிக்கு
ஆற்பாட்டங்களைசசெய்து பகைவனைத்தேடிப் போற்களத்தை நோக்
க்கிவருகின்றஉக்கிரசேனன் வீரத்தன்மையைச் சூரியகாதகனாகியபானு
கோபன்கண்டு நல்லகாரியம் இவனாணவத்தையும் சற்றுநேரத்தி லடக்கு
வேனென்று வெற்றிமாலைதரித்து மந்தாரத்தையொப்ப விளங்கும்வில்
லைவட்டாகாரமாகவளைத்து நாராசங்களைப்போன்ற ஆயிரகோடி திவ்வி
யபாணங்களைச் சந்தித்துத்தூண்டி பகைத்துவருகின்றவன் திரேகத்தெ
ரியாமல் மறைத்துச் சிங்கநாதஞ்செய்தனன், இவ்விதமாகக்கொடியபா

நானாகிய சூரபதுமன்பிறதமகுமாரன் தூண்டியவாளிகள் அதிகமகிமை
களைக்காட்டியினார்துவந்து கரியதிரோகத்தைப்பெற்ற உக்கிரசேனன்சரீ
ரத்தில்வேகமாய்த்தாக்கித் துளைத்துப்போகச் சத்தியில்லாமலும் சிலகா
யங்களையுஞ் செய்யாமலும் வலியற்று முனைமழுங்கி யொடிந்து பலப
லென்றுபூமியிலிறைந்து போயது, அதெப்படியிருந்ததெனில், ஒருவ
ன்நீதிக்கிடையூறாய்த் தேடிய பொருளை மெய்ப்பத்தியினாலுந் தற்மசி
ந்தையைக்கொண்டும்அப்பொருளைத்தேவாலயம்சோலைகள்தடாகங்கள்
அதிதிகளுக்குவேண்டும்உதவிகள்பெரியோர்களுக்கும்தானதருமங்களு
க்கும்சுற்றத்தினருக்குப்போசனமுதலிய உபசாரங்களைச்செய்யாமல்தா
னுமுண்ணாமல்ஆழப்புதைத்துவைத்திருக்கின்ற பதிதன்பொருளானதுக
டையில்நற்பிறயோசனங்களுக்குமுதவியாகாமற்-பூதம்-திருடர்-பகை
வர்,மற்றும்வியர்த்தமாகியகாரணங்களுக்குபயோகமாயழிந்துபோகு
மாறுபோலவும்யானையுண்டவிளாங்கனியையொப்பவுங்குன்றிக்குறைந்
துபோயது இவ்விதமாகத்தான்வருந்திச்செலுத்தியபாணகோடிகள்பயன்
படாமல்மங்கியதைப்பானுகோபன்கண்டுமெச்சிஇந்தவீரனைச்சுலபமா
கநினைக்கப்போகாதுமிகவும்வலியனாகக்காணுகின்றனன்,இவனைக்கொல்
லுவதெவ்விதமென்றுசத்துநேரம்யோசித்துத்தானரிதிற்றேடிவைத்திரு
க்கின்றபாரித்தஎழூவாயுதத்தையெடுத்துக் கிறுகிறெனச்சுழற்றிக்குறிகொ
ண்டுபகைவன்மார்புக்கிலக்காகவீசியபோது அந்தமுசலமானதுவெளிப்
பட்டவுடன் கோடையிடியைப்போல முழங்கியனலையிறைத் ததிவேகங்
கொண்டுமீறிவருவதைஉக்கிறசேனன்கண்டுநகைத்துதன்கரத்திற்பற்வதா
காரமாகவிளங்கியிருக்கின்ற வலியகதையைக்கறகறெனச்சுழற்றி ஓடியி
னுற்றுகள்பட்டுப் பறக்கத்தாக்கியதுடன் கோபந்தணியாமல் லகுக்கொ
ண்டுவேகமாய்ப் பானுகோபனேறியிருக்கின்ற தேரின்மீதிற் பாய்ந்துத
ண்டத்தைச்சுழற்றிமோதியணிபடக்கட்டியிருக்கின்றகுதிரைப்பந்திகளை
க்கண்டதுண்டப்படக்கொன்றுநிலத்திற்றள்ளித்திரும்பினன்,இந்தசெ
யத்தைக்கண்டதேவர்க்கள்கரங்களைக்கொட்டிச்சந்தோஷமிகுதியினால்உ
க்கிறசேனனைக்கொண்டாடி எ, எ, யெனப்பானுகோபனை இகழ்ந்தார்ப்
பரித்தனர், அக்காலத்திற் பரிகள்பட்டதையும் விண்ணவர் வுச்சாகங்களை
யும் பார்த்தமாத்திரத்திற் பானுகோபனுக்கு அதிககோபம் பிறவேசித்
துவடவைப்போற்சீறி உன்னுலவத்தையடக்கிறேனெனச்சபதம்பே
சிச்சீக்கிரத்திற் பக்கத்தில்நிற்கின்ற சேமத்தேரிற் பாய்ந்திருந்து மணி
கள்கலித்துப்பொற்கட்டுகள் பிகித்திருக்கின்ற வெற்றிவில்லைவளைத்து உ
க்கிறன் தாங்கியிருக்கின்ற வலியதண்டத்தைக் கண்டிக்கும்படிக்குக்கூர்
மையாகவிருக்கின்ற அர்த்தச்சந்திரபாணங்கள் நூற்றையெடுத்துச்சந்தி

த்துக்கரவேகமாகத் தாண்டியகாலத்தில் யிணைந்து புகைந்து சீறிக்கொ
ண்டுவீறிவந்துதாக்கி உக்கிறன் கரத்தில்விளங்கும் தண்டாயுதத்தைப்
பொடிப்பொடியாகக்கண்டித்துத்தள்ளியது, அப்போது உக்கிறன்சிங்
கராசனைப்போலச்சீறிப் பாய்ந்துபானுகோபனேறியிருக்கின்றரதத்தை
வாரியெடுத்துப் பந்தைப்போலவானத்தில் வீசியபோதுகிறுகிறெனச் சு
ழன்றுகொண்டு சூரியமண்டலவரையிற் சென்றதறுவாயில் இதனைக்கண்
டசூரியன் திடுக்கிட்டு பாவபருவத்திற் பந்தித்ததைப்போலயாதினை நினை
ந்துவருகின்றனனோவெனத் தியங்கிப்பறக்கவும் ரதமானதுசொடிடெக்
கையங்கள் முதலிய சிங்காரங்களுடன் திரும்பி பூமிக்கடுத்து வருவதை
ப்பார்க்குமிடத்தில் மேகத்துடன் வானமானது தவறித்தழைத்திருக்கின்
ற ஆலவிருட்சதில் விழுந்தகாலத்தில்வேர்பறிந்துசாய்ந்ததைப்போலக்
காட்டவும் நெருங்கிய காலத்திற் பானுகோபன் தேரைவிட்டு நிலத்தி
ற்பாய்ந்து புசபெலபராக்கிறம சாலியாகிய உக்கிறசேனனை நெருங்கிக்க
டகங்கணங்களணிந்து நீண்டிருக்குந்தனதுகரத்தினால் அவனைவாரிமே
லேழுலகங்களுக்கு மப்புறத்திற் போகும்படிக்குவீசி மேலும் மனஞ்
சகியாமல்தனக்குமுன்னம்பிரமதேவன்கொடுத்திருக்கின்றவேலையெடுத்
துப் பூசித்துவணங்கி அண்டகோளகை வரையிற்போய்த் திரும்பிவரு
கின்றஉக்கிறனுக்குநேராகச் செலுத்திய மாத்திரத்தில் அனலைச் சொரிந்
துகொண்டுபோய் உக்கிறசேனன்மார்பிற்றாக்கித் தடாரித்துருவித்துளை
த்துமுதுகின் வழியாகஓடியது,அக்காயத்தினாற் செயசாலியாகிய உக்கிற
ன்வருந்திவந்து நிலத்தில்விழுந்து சற்றுநேரங் களைத்திருந்தனன்,இச்ச
ம்பவத்தைக்கண்ட தண்டியென்னும் பூதசேனைபதியானவன் ரவுத்தி
ராகாரமாகமண்டியெரிந்து விழிகளில் தீப்பொறிகள்சிதறப் பாய்ந்தய
க்கத்தில்பாரித்து வானத்தையளாவ நிற்கின்ற பர்வதமொன்றைப்பேர்த்
தெடுத்துச்சீறி யெதுத்தவேகமாய்ப் பானுகோபன்மீதிற் கடாவியகால
த்தில்வரும்வேகத்தைக் கண்டராசபுத்திரன் துரிதமாய்த்தன்வில்லிற்கொ
டியபாணங்களாயிரவற்றைப்பூட்டி அதற்குநேராகப்பிரையோகித்ததறு
வாயில் அதிசமகிமைகளுடன் புகைந்தெரிந்துவந்து.மேருவைப்போல
வருகின்றபர்வதத்திற்றாக்கிக் கணப்போதிற் கண்டதுண்டப் பட்டுப்
போகச்சாடிப்போயது, இதைக்கண்ட தண்டியென்பவன் சீறிப்பாய்ந்
து வானத்தையளாவத் தழைத்திருக்கின்ற மாமரமொன்றை வேருடன்
பறித்துச் சக்கிறுகாரமாகச்சுழற்றிவந்து பானுகோபனேறியிருந்தரதத்
தின்பேரில்மோதியகாலத்தில் அதிற்பூண்டிருந்த குதிரைப்பந்திகளனை
த்தும் சின்னபின்னப்பட்டு மாண்டும்சாரதிதலைபிளந்துருண்டும் ரதமா
னதுநறுங்கி நிலத்திற்சேர்ந்தும் இத்தகையதுன்பம் நேர்ந்தகாலத்தில்

ராசகுமாரன் சிரக்கம்பஞ்செய்து இவனைச்சுலபமாக நினைக்கப்போகா
துதகுந்தபிறையெத்தனத்தினாற் கொல்லவேண்டுமென நிதானித்துமற்
றொருதேரிற்பாய்ந்து மண்டிபோட்டிருந்து பளபளத்து விளங்கும்
அலகைப்பெற்றகூரியமுத்தலைப்பாணங்கள்பதினாயிரவற்றையெடுத்துவி
ல்லிற்பூட்டி தண்டிநெற்றிக்குக்குறிகொண்டு செலுத்தினான், அவைகள்
பிடிகளைக்கக்கிக்கொண்டு சீறிவந்து விசாலமாகவிருக்கின்றநுதலிற்பாய்
ந்து துளைத்தருவிப்போனகாலத்தில் உதிரம்பிரபலமாகப் பெருகும்ப
டிக்குத் தளர்ச்சிகொண்டு திகைத்தசைவற்றுநின்றுவிட்டனன், யிச்சம்
பவத்தைக்கண்ட பினாகியென்னும் பூதநாயகன் வடவையைப்போலப்
பொங்கிவிழிகளிற் றீப்பொறிசிதற வருத்துப்பக்கத்திற்பாரித்துவானத்
தையளாவிநிற்கின்ற பற்வதமொன்றைப்பறித்து கரத்திற்கொண்டுவிசுவ
தற்காயுத்தப்படி முன்னிலையிற்பானுகோபன் துரிதப்பட்டு ஆயிரங்குரூ
ரமாகியபாணங்களை வில்லிற்பூட்டிக் கரவேகமாகச்செலுத்திட்டவையவன்
மார்பைச்சல்லடைக் கண்களைப்போலத் துளைத்தபோது ரத்தமான துகு
மிளியிட்டோடக்களைத்துச் சோர்ந்தனன், இதைக்கண்டபூதச்சேனைத்த
லைவர்கள் மானமும்வீரமும் மனதைவருத்தக் கோபாவேசங்களுடன்ப
கைவனைச்செயங்கொள்ள வேண்டுமென்கின்ற வயிரத்தினால் ஒவ்வொருவ
ருமொழிமாறி யெதுத்துத்தழைத்தோங்கி யிருக்கின்றமரங்கள் பாரித்த
மலைகள் யிருப்புலக்கைகள் தண்டாயுதங்கள் கொடியபாணவிதங்க ளாதி
யாகியபடைகளைஒன்றனந்தமாகப் பிறையோகித்துக்கூடியவனாயிற்போ
ராடுகின்றசமையங்களிற் பானுகோபன்சிலரோங்கித் தன்வில்லானது எ
க்காலத்தினும் இருகுதைகளும் ஒன்றுபட்டிருக்கும்படிக்குக் கரவேக
மாய் அற்தச்சந்திரபாணங்கள் அனலைக்கொட்டும் கொடியகணைகள் வி
ஷித்தொலையைவிட்டுச் சென்றயிடங்களில் வெற்றியுடன்திரும்பவல்ல தி
வ்வியசரங்கள்முதலிய படைகளைச்சோனைமாரியைப்போலச் சொரிந்து
திக்குமுக்கிடச்சாடும்போது நிறுவகிக்கமாட்டாமல் மனங்கலங்கித் தி
சைகெட்டுப் பின்னிட்டுப்பதுங்கினர்; இப்பிறகாரம் செயசாலிகளாகிய
கணத்தலைவர்கள் பானுகோபன் சேவகத்திறத்துக் காற்றுமலழிந்துபோ
னதைக்கண்டமாத்திரத்தில் புசபெலபராக்கிரம சாலிகளாகிய இலக்சர்
களிற்-கபாலி-அண்டலோசனன்- நிரஞ்சனன்- உருத்திரன்- கண்டன்
-தண்டன் முதலிய வீராதிவீரர்கள் றவுத்திராகாரமாகக்கோபித்துஒருவ
ர்முன்னொருவராக வந்தெதுத்துப் பலதிசைகளினுஞ் சூழ்ந்து கொண்
டவர்களாய்த் தங்கள்கரத்திற்பாரித்துவிளங்கும் விற்களைவட்டாகாரமா
கவளைத்து நாணேறிட்டுக்குணத்தொனி கொண்டகாலத்தில் அவ்வதிற்சி
யினாற் சத்தகுலாசலங்களும் திசைகளும்பட்ட பாட்டை இன்னவிதமெ

னச்சொல்லிமுடியாது பூமிக்கச்சாணியாகவும் விநாயகமூர்த்தியினாற்பா
ரதத்தைத் தன்மீதெழுதப்பட்டதாகவு மிராநின்றமகம்மேருகிரியானது
கிடுகிடென நடுநடுங்கித்தத்தளிக்கவும் திரிலோகங்களிலிருக்கின்றபிராணி
களனைத்தும் செவிடுபட்டுப் பஞ்சேந்திரிய நிலைகள்பேதித்துத் தியங்க
வும் இப்படிக்குச்சகலமும் வருந்துவதைப்பானு கோபன்பார்த்து நகை
த்தவனாய்விற்களில் முதன்மையாகப்புகழவல்ல வலிய தன் தனுசைவளைத்
து ஆயிரகோடி அண்டங்களும் நிலைகுலைந்துபிரமித்துயிதென்ன உற்பா
தமாகவிருக்கின்றதெனச் சோரும்படிக்குக் குணத்தொனிகாட்டிய தனு
வாயிற் சற்கம்பங்களையொத்த வலியபுசங்களைப் படைத்திருக்கின்றஇல
க்கர்கள் றவுத்திராகாரமாகக்கோபித்துச் சத்தமேகங்களுமொன்றுபட்டு
மழைத்தாவலைப்பொழிவதைப்போலத்தங்கள்விற்களிற்கொடியபாணச
மோகங்களைஏராளமாகப்பூட்டிச்சொரிகின்றதறுவாயிற் சலசசியப்பிர
சாபாலகன்பேரனாகிய பானுகோபன்பேரில் நாற்புறங்களினும் யிரைந்
துபுகைந்து சீறிப்போவ தெப்படிக்கிருந்ததெனிற், செலப்பெருக்கை
யுடையபலநதிகளும் பற்பலதிசைகளினின்றும் பெருகிப் பூமிக்காலடை
யாகவளைந்திருக்கின்ற சமுத்திரத்திற் பாய்வதுக்கொப்பாகக் காட்டிய
து, இவ்விதமாக இலக்கர்விடுத்தசரங்கள் ராட்சதச்சேனைகள் திடுக்கிட்டு
வருந்தும்படிக்கு மேலிட்டுப்புகைந்தெரிந்துகொண்டு வருவதைப்பா
னுகோபன்கண்டமாத்திரத்தில் எமனைப்போலத்தன்கரத்தில் விளங்கு
ம்தனுசிற் குறூரமாகிய ஆயிரகோடி திவ்வியபாணங்களைக் கரவேகமா
கச்செலுத்தித் துகளைப்போலநெருங்கிப் பரந்துவருகின்ற படைகளை ந
டுவதுபாதியிற் கண்டித்துத்தள்ளிமேலும் ஆயிரகோடி குறூரமாகிய நா
ராசங்களைவேகமாகச் செலுத்தினான், அவைகள்வெளிப்பட்டவுடனெண்
றனந்தமாகப்பெருகி யிடிமின்னல் மற்றகொடுமைகளை விளைத்துமீறி
வரும்போது சண்முகப்பெருமாள் படைத்தலைவர்கள் கோபதீபிதர்க
ளாய்ப்பகைவன்செலுத்திய தொகைக்குப் பதின்மடங்கதிகமாய் அனலை
யொத்தகடூரமாகிய பாணங்களைக் கரவேகமாகப்பிறையோகித்துராட்சத
ராசகுமாரன் தாண்டியசரங்களனைத்தையுஞ்சண்டதுண்டமாகக்கண்டித்
தெறிந்தவேகத்தினால்மறிந்துதற்பசித்தையென்ப தெவ்வளவுமில்லாமற்
கொடுங்கோல்செலுத்திவரும் சூரபதுமன்பிள்ளையின்பேரிற் சத்தித்துக்
கொண்டுபோய்விழுந்தது அதைப்பார்க்குமிடத்திற் பெருங்காற்றிற்பட்
டமழைத்தாவலானது தாம்போகும்நிலைதப்பிப் பறப்பதுக்குச்சமதை
யாகக்காட்டியது, இச்சம்பவத்தையும்பகைவர்பாணங்கள்மீறிவருவதையு
ங்கண்டபானுகோபன் வடவையைப்போலச்சீறி வயிரவூசிகளைப்போன்
றமுனைகளைப்பெற்றகழுகிறகுகள்பூண்டு பளபளத்திருக்கும் அலகைவா

ய்ந்தகடோமாகியகணைகளை மென்மேலுஞ் செலுத்திச் சிவந்தவிழிகளையு
டையவீராதிவீரர்கள் தாண்டியகணைகளைக் கண்டித்ததுமன்றியில் அவர்
கள்காங்களிற் பற்றியிருக்கின்ற வலியசிலைகளையும் இருதுண்டமாக வெ
ட்டியெறிந் தார்ப்பரித்தகாலத்தில் இலக்கர்கள் கோபித்தவர்களாய்த்தம
துரதங்களில் நாட்டியிருக்கின்ற சேமவிற்களைத் துரிதமாகவெடுத்துநா
ணேற்றிக்கொடிய பாணவிதங்களைச் சோனைமாரியைப்போலச் செலுத்
திப்பானுகோபன் தங்கள்பேரில் மேலும்மேலும்விடுகின்ற சரங்களனை
த்தையும் கண்டதுண்டமாகக்கண்டித்தெறிந்துமீட்டும் ராட்சதவீரனே
றியிருக்கின்ற நவரத்தினமயமாகிய தேரின்மீதில் நூறாயிரங்கூரியபாண
ங்களையும் புரவிகளின்மீதில் ஆயிரம்அர்த்தசந்திரபாணங்களையும்மேக
மண்டலத்தையளாவநிற்கின்ற துசபடத்தின்பேரில்ஆயிரங்கடியசரங்க
ளையும் தேரைச்செலுத்தும்சாரதியின்பேரில்ஆயிரம்திவ்வியபாணங்களை
யும்காவேகமாகவிட்டார்ப்பரித்தகாலத்தில்அவைகள்தடைபடாமல்உரப்
பிக்கொண்டுவந்துதாக்கியமாத்திரத்தில்தயைதாட்சணியமெவ்வளவுங்கி
டையாதகடினசித்தமுடையபானுகோபனேறியிருந்தநவரத்தினமயமாகி
யதேரானதுசின்னபின்னப்பட்டு நுறுங்கியும் பாகன்சிரங்கண்டித்தத்தி
ரோகமுற்றுங் கண்டதுண்டப்பட்டிறைந்தும் புரவிப்பந்திகள்சின்னபி
ன்னப்பட்டுமாண்டும்உன்னதமாய் படபடென்றசைந்திருந்தவெற்றிக்
கொடிதறிபட்டுக்காற்றிற்பறக்கவும் இப்பாடுகள்நேர்ந்தகாலத்திற்பானு
கோபன்மற்றொருதேரிற்பாய்ந்துமனமானதுமண்டிபெரியக்கொதித்
துத்துரிதமாய்த்தன்வில்லைவணக்கிப் பளபளத்த அலகையுடைய நூறுநூ
றாயிரம்பாணப்பெருக்குகளைஒவ்வொருதொடியிற் செலுத்திச்சுப்பிரம
ணியதேவர் சேனைத்தலைவர்கள் விடுகின்றபாணகோடிகளைத் தும்சப்ப
டக்கண்டித்து சரீரங்களுருத்தோற்றமல் மூடியதறுவாயில் அந்தகொ
டியசரங்கள்சுறுக்குச் சுறுக்கெனத்தைத்துச் சல்லடைக்கண்களைப்போ
லத்துளைத்தோடுமுன்னிலையில் உதிரம்பீறிட்டோட வலிகுறைந்து நடுங்
கிப்பகைவனுடனெதுத்தச் சண்டைகொடுக்க நிறவகிக்கமாட்டாமற் பி
ன்னிடைந்தனர் - சவுனகாதிரிஷிகளே; மேற்குறித்தபடிக்கு லட்சம்பூத
த்தலைவர்கள் ஏககாலத்திற்பலதிசைகளும்நின்று அஸ்திரசஸ்திர விதங்களை
ஏராளமாகத்தாண்டி அகோரயுத்தியங்களைச்செய்யவும் ஒப்பற்றவில்
வாளியாகிய பானுகோபனென்னுஞ் சூரனொருவனுமெதிர்த்து அவர்கள்
வன்மையையடக்கிச்செயங்கொண்டதால்இச்சாமர்த்தியம்முன்னம்செ
ய்திருக்கின்றதவமுயற்சியினாற் கிடைத்ததென்றும் அல்லதுசற்றதனுர்வி
த்தையின் வல்லபமென்றும்பிரித்துக்குறிக்கப்படவில்லை,இப்பிறகாரம்
இலக்கர்அபசெயப்பட்டுத்திரும்பியதைதவவீரர்களிலொருவனாகியவீர

கோளரியென்னுஞ்சூரன்கண்டுவடவாமுகாக்கினியைப்போலமண்டியெ
ரிந்து தன்தேரைத்துரத்திவந்து பானுகோபனுக்கெதிரில் நிறுத்திக்கொ
ண்டுபினாகத்துக்கொப்பாகிய தன்வில்லைவளைத்துச் சகலருந்திடுக்கிடு
வாடும்படிக்குக் குணத்தொனிசெய்து சோனைப்பெய்யலும் நாணும்ப
டிக்குக் கணக்கிறந்தபாணகோடிகளைக் கரவேகமாகச்சொரிந்துவிழிநிற்
பதைச் சூரன்குமாரன்கண்டு மணிமுடியையசைத்து இவன் வலியும்வீர
மும் விற்சாதுரியமும் கரவேகமும் விஞ்சையின்பெருக்கும் நன்றாந
ன்றெனப்பேசிமந்தரகிரிக்குச்சமதையாகவிளங்கும்தன்வில்லினாரியை
யிறுக்கித்தேவர்க்கள்முதலானவர்கள் நடுங்கும்படிக்குக் குணத்தொனி
காட்டி நூறுநூறாயிரகோடி திவ்வியபாணங்களைத் தொடுத்துச் செலுத்
திதனித்துத் திரளாகவந்தவன் விட்டபாணங்க ளனைத்தையுங் கண்டது
ண்டமாகக்கண்டித்தெறிந்து மேலுங்குரூரமாகிய ஆயிரங்கணைகளைத்
தோளுக்கிலக்காகத் தாண்டிக்கொக்கரித்தனன், அவற்றினைத் தன்மீதில்
வரவொட்டாமற் பலகணைகளைக்கொண்டு தடுத்துமேலுங் கரவேகமாய்
ஆயிரங்கூர்மையுள்ள சரங்களையெடுத்து பானுகோபன்மார்புக்கிலக்காக
ப்பிறையோகித்தகாலத்தில் அப்படைகள் குமிறியினாந்து சற்பங்களைப்
போலச்சீறிக்கொண்டுவந்து விசாலமாக விருக்கின்ற மார்பிற்றைத்துத்
தடாரித்துருவிப்போயது, இதனாற்பானுகோபன் சற்றுவருந்தித்தேறி
ஆலகாலவிஷத்தைப்போலக் கோபித்து இவனை வில்வன்மையினாலும் ம
ற்றபாணங்களின்முயற்சியினாலும் வெல்வதரிதெனநிதானித்து தானரிதி
ற்செய்ததவத்துக்கிரங்கி மகாவிஷ்ணுகடாட்சித்திருந்த படைகளிற்சிரே
ஷ்டமாகிய நாராயணாஸ்திரத்தை யெடுத்துத் தூபதீபநைவேத்திய முத
லியஉபசாரங்களை மனப்பூர்வகமாகநிரப்பினவனாய்வில்லிற்பூட்டிபகை
வன்மார்புக் கிலக்காகச்செலுத்தினன், அப்படையானது விடுபட்டவுட
ன்பிரமன்முதலாகிய தேவர்படைகளைப்படைத்து யெங்கும்பரந்துயி
டிமின்னல்அக்கினி இத்தகையகொடுமைகளைப் பெருக்கிக்கொண்டு வே
கமாய்வந்து வீரகோளரிசெலுத்திய பாணங்களனைத்தையும் விழுங்கிவி
ண்மண்ணெங்கும் நடுங்கும்படிக்கு ஆற்பாட்டங்களைச்செய்துகொண்
டுமேலிட்டுவருவதை வீரன்பார்த்துத் தன்னிடத்திலிருக்கின்ற நாராய
ணாஸ்திரத்தையெடுத்து மாறுசெலுத்தித்தடுப்பதற்கு முன்னம்பகைவ
ன்விடுத்தசரம்மீறிவந்து வண்டுகளொலித்து மொய்த்திருக்கும் புஷ்ப
மாலையணிந்த மார்பிற்றூக்கிப் பிராணசேதமில்லாமல் மூர்ச்சையாகத்தள்
ளிப்போயது - சவுனகாதி ரிஷிகளே, தன்னைக்குறித்துப் போக்கியவர்க
ளைவதைத்துத் திரும்பவல்ல திவ்வியபாணமானது குமாரதேவர்கரத்தில்
விளங்கும்வேலாயுதத்தின் மகிமைக்கஞ்சி உதிரத்தைப்பானம்பண்ணி

# ௫௰ பாநுகோபன்முதனாள்சண்டை.

தன்மகிமையையுஞ் சிறிதுகாட்டிமீண்டு பாநுகோபனிடத்திற் சேர்ந்த
து அக்காலத்தில் வீரகோளரியென்பவன் பஞ்சேந்திரியநிலைகள் பேதிக்
கமதிமயங்கி மாண்டவனைப்போலத் தேரில்மறிந்தனன், இவ்விதமாகத்
தன் துணைவனுக்கு நேர்ந்தஅபாயத்தை வீரமார்த்தாண்ட னென்பவன்க
ண்டவுடன் காட்டழலையொப்பச் சீறித்தேரைத் தூரத்திற்கொண்டுவந்து
பகைவன் முன்னிறுத்தி ஒப்பற்றதன் வில்லை வணக்கிப் பாணங்களைச்செ
லுத்துமுன்னம் பாநுகோபன்மிஞ்சி பற்பலசகஸ்ரமாகியசரங்களைத்தூ
ண்டி பகைவன்கரத்திற்பற்றியிருந்த பாரித்தவில்லை நடுவதுபாதியில்வெ
ட்டித்தள்ளி மேலுந்தேவர்களும் நடுங்கும்படிக்கு அனந்தம் பாணங்க
ளைப்பிறையோகித்து வீரபட்டமணிந்துவிளங்கும நெற்றியி லழுத்தின
ன், அதைச்சட்டைபண்ணாமல்வேறொருபாரித்தவில்லையெடுத்துநாணே
ற்றுவதற்குமுன்னம் பாநுகோபன்கரவேகமாய் நூறுதிவ்விய கணைக
ளைத்தூண்டிக் கரத்தில்நின்றதனுசைக்கண்டித்து மேலும்ஆயிரம்பாண
ங்களைக்கொண்டு ரதத்தையும்புரவிகளையும் சாரதியையும் சின்னபின்ன
ப்படக்கண்டித்தெறிந்து எழுநூறுகுரூரமாகிய பாணங்களை மார்புக்கி
லக்காகவிடுத்தனன், அவைகளும்புகைந் திரைந்துக்கொண்டுவந்து கோ
டையிடிகளைப்போலத்தாக்கி யாதொருபிறையோசனப்படாமல்முனைம
ழுங்கித்தெறித்துப்போயது- சவுனகாதிரிஷிகளே, இவ்விதமாகத்தேரை
யும்புரவிகளையும் சாரதியையுந்தனுசையும்போக்கிஒருவிதச்சண்டையை
யுஞ்செய்வதற் கேதுவையில்லாமற் றனித்துநிற்கின்ற தெட்படிக்கிருந்
ததெனில், மேகபடலங்கள்மூடியகாலத்திற் பிறகாசமானதுமழுங்கிக்கா
ட்டுஞ் சூரியனைப்போலத்தோற்றவும் உடனேமேகங் கலையச் சொலித்தி
ருப்பதுக்கொப்பாக வீறி அதிககோபங்கொண்டு சத்துராதிகள்திகைத்து
நடுங்கத்தக்கதாகச் சொக்கரித்தெழுந்து பூர்வத்திற்சிவபிரான் அனற்றோ
ற்றமாகநின்றகாலத்தில் இரட்டைக்கோடுகளைப்பெற்றுப் பூமியைக்கெ
ல்லித்தேடிச்சென்றவராகத்தினுமாயிரம்பங்குயர்ந்தவலிபெற்றிருக்கின்
றபாநுகோபன்பேரில் ஆயிரங்கிரணங்களையுடையசூரியன் இராகுவின்
மீதுதாவுமாறுபோலப் பாய்ந்துபகைவன்கரத்திற் பற்றியிருந்தவலியவி
ல்லைப்பறித்து இரண்டுதுண்டமாக ஒடித்தெறிந்தனன், அக்காலத்திற்
பாநுகோபன்கோபதீபிதனாய்த் தன்னரையிற்சொருகியிருந்தவாளையுரு
வி வீரமார்த்தாண்டன் மார்பிற்குத்தித்திருகிப்பிடுங்குவதற்கு முன்னுதா
ஷடிரமானது பிரிட்டெழுந்து பாநுகோபன்மார்பிற் றைக்கியதைப்பா
ர்க்குமிடத்தில் வீரமார்த்தாண்டன் அரையிலிருந்த சூரியவாளானது மா
றுகவெதிர்ந்து குத்தியதைப்போலக்காட்டியது, அத்தருவாயில்வீரமார்த்
தாண்டனுக் கதிககோபம்பிறவேசித்து பிறகாசத்தையுடைய சூரிகையைச்

சரோலென்றருவிராட்சதர்கள் தியங்கும்படிக்குப் பானுகோபனணிந்தி
ருக்கின்றவயிரக்கவசம் பொடிப்பொடியாகப்போகும்படிக்குத் தாக்கி
யதைத் தட்டிப்போட்டு பானுகோபன் மீளவுந் தன்வாளினால் வீரமாற்
தாண்டன் கண்டத்திற்றடாரித்துருவும்படிக்குச்சொருகிவாங்குமுன்னி
லையில்உதிரப்பெருக்கெடுத்தோடவலிகுறைந்து செயலற்றுப் பெருங்
காற்றிலகப்படச்சாயுங் கற்பகத்தருவைப்போல விழுந்தவனைஇறந்தா
னென்றெண்ணிச் சட்டைபண்ணாமல் விட்டுவிட்டு இச்சம்பவத்தைக்க
ண்டுதன்பேரில் அதிககோபத்துடன் நாற்புறங்களிலும் ஆற்பரித்துவீறி
வருகின்ற பூதப்படைகளைப்பார்த்துக் கோபித்துவில்லைவளைத்துச் சின்ன
பின்னப்படப் போர்செய்வதைச்சத்துராதிகள் புகழும்சவுரியபரனாகியவீ
ராக்கதன் கண்டு வாயுவேகத்தினாமுந்தித்தன் தேரைத்துரத்திவந்து து
ணைவர்களுக்குநேர்ந்த அபாயங்களைத்தெரிந்தவுடன்கோபக்கனலானது
மேலிட்டுமனலதீவாட்டச்சீறித்துரிதமாகநெடியவில்லைவட்டாகாரமாய்
வளைத்துக்கரவேகமாய் ஆயிரங்கூரமாகியகணைகளைத்தொடுத்துவீரவெ
ண்டையமணிந்த பாதங்களையுடைய பானுகோபன்பேரில் பிறையோகி
த்தபோது அவனும்அத்தொகைபாணங்களைத் தாண்டிமேல்வருகின்ற
சரங்களைவிலக்கி மீட்டும் நூறுதிவ்விய பாணங்களைச்செலுத்தி வீரராக்
கதன் தேரைநடாத்துஞ் சாரதிசிரத்தைக்கண்டித் தெறிந்தான் உடனே
வேறொரு சாரதியையமர்த்திக்கொண்டு காலாந்தகனை யொப்பப்பொங்
கிசண்முகதேவர் பாததாமரைகளைச்சிந்தித்து அதிசீக்கிரமத்தில் ஆயிரங்
குரூரமாகிய கணைகளைச்செலுத்தி பானுகோப னணிந்திருந்த நவரத்தி
னமயமாய்ச் சொலித்திருந்த திவ்வியமகுடத்தைப்பொடிப் பொடியா
ய்த்திசைகளிற் பறக்கும்படிக்கடித்துச் சிங்கநாதஞ்செய்தனன், சவுனகா
திரிஷிகளே, மகுடபங்கப்பட்டு முண்டமாய்த்திருவழிந்து மிகவும்வெ
ழ்க்கிநின்றவனைப் பார்க்குமிடத்திற் சிகரத்தைஇழந்த மேருவைப்போ
ன்றும் சிரோரத்தினத்தைப்பறிகொடுத்தசற்பத்தைநிகர்த்தும்சூரியனில்
லாதவானத்தையொத்தும்கிளைகளைப்போக்கியகற்பகத்தருவுக்கொப்பாக
வும் துணைக்கோடுகளை இழந்தமதயானையைப்போலவும் அமங்கலியை
நிகர்த்தும் லட்சுமிகரமில்லாமற்பின்னப்பட்டவன் அதிககோபங்கொண்
டுவேறொரு திவ்வியகிரீடத்தைச் சிரத்தில்வைத்துச் சீறித்தன்வில்லில் அ
ளவற்றகுரூரமாகிய பாணங்களைப்பூட்டிப்பிறையோகித்துச்செயசாலியா
கியவீரராக்கதன்செலுத்தும் பாணகோடிகளை விலக்கிமேலும் ஆயிரம்
வேகமுள்ளகணைகளைத்தூண்டிப் பகைவன்கரத்திற்பற்றியிருக்கின்ற பா
ரித்தவில்லையுங் கண்டித்தெறிந்து மறுபடியும்வேறொரு வில்லையெடுப்ப
தற்குமுன்னம் ஆயிரம்பாணங்களைக்கொண்டு தேரிற்பூட்டியிருந்தகு

நிலைகளைக்கொன்று அவன்மற்றொருதேரிற் பாய்வதன்முன்னம் ஆயி
ரங்கணைகளைச்செலுத்தி கரத்திற்பிடிபட்டிருந்த புதியவில்லை வெட்டித்
தள்ளிவீழ்வரும்போது வீராக்கதனுக்கு அதிககோபமுண்டாய்ப் பிர
ளயகாலருத்திரனைப்போலக் கொதித்து விழிகள்சிவந்து தீப்பொறிகள்
சிதறஉருத்துத் தெய்வத்தன்மைபொருந்திய வேலொன்றினை யெடுத்து
ச்சுழற்றிக் கரவேகமாய்வீசியபோது பகைவன் நூறுபாணங்களினால் அத
னைக்கண்டித்ததறவாயிற் செயசாலியாகியவீராக்கதன் காட்டமலையொ
ப்பமண்டியெரிந்து தேரைவிட்டுநிலத்திற்குதித்து மல்லயுத்தத்துக்குக்
கூவிப்பாய்ந்துபானுகோபனேறியிருக்கின்றரதத்தைச்செண்டைப்போ
லச்சுலபமாயெடுத்து வானத்தில்வீசியபோது தேருடன் சுழன்றுகொண்
டுபோகின்றராட்சதவீரன் யோசித்துமுன்னம் பிரமதேவன் தனக்குக்
கொடுத்திருந்தகூரியவேலையெடுத்துப் பகைவன்பிராணனையுண்டு மீளக்
கடவையெனவேண்டிக்கரவேகமாய்க்கடாவியபோது அப்படையானது
அதிசமகிமைகளைக்காட்டி அனலையிறைத்துக்கொண்டுபோய் கோடையி
டியைப்போல மார்பிற்றாக்கியமாத்திரத்தில் உதிரங்களைக்கக்கி வீராக்கத
ன்நிலத்தில்விழுந்தனன், பானுகோபனும் பூமியிற் சேர்ந்தமாத்திரத்தி
ல் வேறொருதேரிலேறி மண்டிபோட்டுளுக்சார்ந்து மேருவையொத்தபு
தியவில்லொன்றையெடுத்து நாணேற்றிக்குணத்தொனிகாட்டிச்சோனை
மாரியைப்போல அபரிமிதமாகிய திவ்விய பாணங்களைச் சொரிந்துமற்
றவீரர்களையுஞ் செயங்கொள்ளநினைந்தவனாய்ச் சுழற்காற்றைப்போலச்
சக்கிராகாரமாகத் திரிந்துதிரிந்து பூதப்படைகளைவாட்டும்போது நவவீ
ரர்களிற்சேர்ந்த- வீராந்தகன்-வீரமாமகேச்சுரன்- வீரதீரன்-வீரமா
மகேந்திரன்-வீரபுரந்தரனெனச்சொல்லும்ஐந்துவீரர்களும்தங்கள்தே
ரைத்தூண்டிவந்து சூரியனைச்சிறைசெய்த தீரனாகியபானுகோபனை வளை
ந்துகொண்டு ஒப்பற்றவிற்களைவளைத்து அதிகதீட்சணியங்களை யுடைய
பாணங்களைச்சங்கோபசங்கமாய் மழைத்துவலைப்போலச்சொரிந்தும்
-வேல் சூலம்-சக்கரம்- பிண்டிபாலம்-முசலம்- சட்டணம்-தோமரம்
-கதை-முதலியஆயுதங்களைச்செலுத்தியும் பற்பலவிதங்களாகியஉயித்தி
யங்களைச்செய்து போராடும்போதுபானுகோபனும் சிலரோங்கி இருகு
தைகளிலும் மணிகள்கலகலவெனச் சத்திக்கும்படியாய்வில்லிற்கோடான
கோடிகூரமாகிய பாணவிதங்களைச்செலுத்திப் பகைவர்தூண்டிய அ
ஸ்திரசஸ்திரங்களனைத்தையும் சின்னபின்னப் பட்டுப் போகக்கண்டித்த
துமன்றியில் கோடைவருஷித்தைப்போலக் கணக்கிறந்தகொடிய பாண
ங்களைச்செலுத்தி எங்குந்தானாயுலவும்போது அவைகள் அதிக வுற்பாத
யங்களைக்காட்டி பிரசண்டமாருதத்தைப்போல ஆர்ப்பரித்து மின்னலி

டிபுகை நீ இத்தகையகொடுமைகளை விளைத்துக்கொண்டுபாய்ந்து சரீர முற்றுஞ்சல்லடைக்கண்களாகத் துளைத்துவாட்டும்போது மிகவும்நொந்துமனங்கலங்கித் தாபரிக்கப்படாமையால் இருவர்கள்யாதொருசெயலுமற்றவர்களாய்த்திப்பிரமைகொண்டுநின்றுவிட்டனர், ஒருவன்மூர்ச்சித்துவிழுந்தனன், மற்றயிருவரும் தோளிழந்து வில்லிழந்து பயப்பிருத்தியினால் ஓடிப்போயினர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே, இவ்விதமாகப்படைவீரர் இலக்கர் எண்மர்பூதப்படைகள் நிலைகுலைந்து சின்னபின்னப்பட்டுப் பறக்கும்படிக்கு வெற்றிகொண்டு வீரகாளியாணியாடிப்புகழ்ந்து கொண்டாடத்தக்கதாகப் பானுகோபனெதிரில்நி வீரபராக்கிரமசாலியாய் உலவுந்திரத்தைக்கண்டமாத்திரத்தில்முன்னம் சிவகணங்களுக்கழிந்தோடி மறைந்திருந்தராட்சதர்களனைவரும் செயவுச்சாகங்களுடன் சிங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்துக்கொண்டு நாற்புறங்களினுமிருந்து வெளிப்பட்டுப் பெருங்கூச்சலிட்டுகொக்கரித்து வந்துதங்களரசனைச்சூழ்ந்து செயமுண்டாகக்கடவதென வாழ்த்திக்குலவியிருக்கவும்இவர்கள் மத்தியிற்பானுகோபன் காலாந்தகனைப்போலரணக்களமெங்கு மெதிரின்றித்திரிவதைப்புறவணியிலிருந்ததந்திகணத்தலைவராகிய வீரவாகுதேவர்தெரிந்தவெகுநேத்தியாகவிருக்கின்றதெனக்கோபநகைகொண்டு- பிரமன் - விஷ்ணு தேடிக்காணரிய சுயஞ்சோதிப்படிவத்தைப்பெற்ற சிவகுமாரன்திவ்வியசரணாரவிந்தங்களைப் பத்திவினையத்துடன் சிந்தித்துவாழ்த்திப் போர்த்தொழிலுக் கெழுவதாக மனங்கொண்டவராய்க் கொடியமனதையுடைய பானுகோபனிருக்கின்ற இடத்திற் றனது தேனாத்தூரத்திவந்து - இந்திரனாதிய தேவர்க்கள் களிக்கவும் தருமதேவதை வேதாகமங்கள்வாழ்த்தவும் வீரலட்சுமியுங் காளியுங் கொண்டாடவும் சுபகரமாகியசகுனங்கள் தோற்றவும் இத்தியாதியவைபவங்களின்மத்தியில்தங்கக்கட்டுகள்பூண்டுமணிகள்கலிக்கசெயலட்சுமி தாண்டவஞ்செய்திருக்கும் மேருவையொத்ததனுசை இருகுதைகளுஞ் சேரவளைத்து பிரசண்டமாருதமும் வடவாமுகாக்கினியுந்தியங்கி யொடுங்கவும்சமுத்திரமானது அலைகளைச்சுருக்கி மங்கவும் பரந்திருக்கின்ற அண்டங்களும் அதிலடங்கியபுவனங்களும் தத்தளிக்கவும் திசையானைகள் துதிக்கையைத்தூக்கி வீறிட்டோடவும் டங்காரசத்தத்தைக்காட்டிப் -பூதபசாசங்கள் -காக்கை - கழுகு-பருந்துகள் - குலவியிருக்கின்றபோர்க்களத்தைநோக்கிச் சண்டைகொடுக்க வருகின்ற வீரவாகுதேவர் தீரத்தை சூரியனைப்பகைத்த ரணரங்கசூரனாகிய பானுகோபன் பார்த்து இவனை மற்றவர்களைப்போலச் சுலபமாகநினைக்கப்படாதென நிதானித்தவனாய் எப்போதுமெடாமற் சேமத்தில்வைத்திருக்கின்ற ஒப்பற்றவில்லைத் தா

ங்கிநாணேற்றி மக்கள்விண்ணவர்முதலாக நடுங்கிஎங்கும்படிக்குக் குண
த்தொனிசெய்து எதிர்த்துநின்ற தருவாயில் முன்னம்வீரவாகுதேவர் கா
ட்டியடங்காரசத்தத்தைச் செவிகளுக்கினிமையாககேட்டுச் சந்தோஷித்
திருந்ததேவர்க்கள் கொடியதுர்மார்க்கனாகிய பானுகோபன் குணத்தொ
லியின் சத்தத்தைத்தெரிந்தமாத்திரத்தில் வாடித்திகைத்தவர்களாய் இன்
பதுன்பங்களை ஏககாலத்திற் கண்டனமென்று பேசியிருந்தனர் —சவுன
காதிரிஷிகளே, நன்னெறிகளிற்சிறந்த வீரவாகுதேவர் நாணொலிக்குச் ச
ந்தோஷித்தவிண்ணவர்கள் துற்குணங்களைக் கொண்டிருக்கும் பானு
கோபனெடுத்த குணத்தொனிக்குக் கிலேசித்ததைப் பார்க்குமிடத்திற்
சிறந்தஅமுதத்தை யுண்ணப்பெற்றவர்கள் விஷத்தைக்கிடைத்த தருவா
யில்வருந்துமாறுபோலவும் இன்பஞ்சிறிது அதைச்சேர்ந்து வருந்துன்
பம்பெரிதெனச் சற்வசாதாரணமாகவழங்கிக்கொள்வதைஇங்ஙனம்திஷ்
டாந்திரமாகக்கண்டீர்கள்ரிஷிகளே மேற்குறித்தபடிக்கு இருசூரர்களும்
நெருங்கியகாலத்திற்- பிரமன்-விஷ்ணு- இந்திரன்- தேவர்கள்- ரிஷிக
ளாதியர் இந்தபிறபலச்சண்டையைப் பார்க்கவேண்டுமென்கின்ற விருப்
பத்தினால் வானமெல்லாமுற்றும் நெருங்கியிருந்தனர், அத்தருவாயிற்சூ
ரபதுமன் பிறதமகுமாரனாகியபானுகோபன் நற்குணநற்செய்கைகளையு
டைய வீரவாகுதேவரைப்பாத்து இதனைச்சொல்லுவான் உன்னைப்பார்க்
குமிடத்தில் வெற்றிமாலைதரித்திருக்கின்றவேலாயுதத்தினால் என்சிறியத
கப்பன் தாருகனையும் கிறவுஞ்சபற்வதத்தையுங்கொன்ற சரவணபவனாக
க்காணவில்லை வராகவுருக்கொண்டு ஆதிதேவனடியைத்தேடப்போனவி
ஷ்ணுவுமல்லை சராசரப்பிறபஞ்சங்களைப் படைத்துவரும்பிரமனுமன்று
எங்களுக்குப்பயந்து பூனையைப்போலப் பதுங்கித்திரிகின்ற இந்திரக்க
ள்வனுமல்லை ஆதலால்நம்மிடநகரத்துக்குத்தூதாகவந்தவனைப்போலக்
காணுகின்றது அப்படிக்கொத்தயீனத்தொழிலைச் செய்யுஞ்சிறியனாகிய
நீயானவன் ஆயிரத்தெட்டண்டங்களையும்அரசாட்சிசெய்துவருகின்றசெ
யசாலிபாகியசூரபதுமன் சிரேஷ்டபுத்திரனாய்த் திசைகளனைத்தையும்வெ
ன்றுசெயக்கொடிநாட்டிச் சிறந்ததேவர்க்களையும் வாட்டிக்கட்டிவந்து
சிறைபடுத்தியிருக்கின்ற வீராதிவீரனாகிய என்னுடனெதுத்துப் பயமில்
லாமற் சண்டைகொடுக்கவந்தனை எத்தகையனெனினுங் கண்டவுடன் சிங்
காசனைநேர்ந்த யானைக்கூட்டங்களைப்போலப் புறந்தந்தோடும்வெற்
றிபானாகிய என்னுடனெதுத்து நின்றபோர்செய்யும்திறுவாகமுமுனக்
குண்டோ முன்னம்என்னையறியாமற் சிலமாயவித்தையின்முயற்சியினா
லிந்தபட்டணத்திற் பிறவேசித்துராசப்பிறவடிவனாகிய சூரமகாராசன்
வீற்றிருக்கின்ற மகாசபையிற்போய் அகண்டமண்டலாதிபனென்னும்

எண்ணமில்லாமல் யிகழ்ந்துபேசியும் என் தம்பியைமதியாமற் கொன்
றும்சகலபுவனங்களினுங் கொண்டாடுஞ் சிறப்பையுடைய ராசதானியா
கவிருக்கின்ற இந்தவீரமாமகேந்திரபுரியையும் பலவளங்களுங் குன்றி
ச்சீரழிந்துபோம்படிக்கிடித்து நசத்தியும் பலஅவுணவீரர்களையுங் கொ
ன்றுபோயினை இச்சம்பவங்களிலேதாவதுஎன்காதிற்படுமாயின் அன்றை
க்கேவுன்னைச்சின்னபின்னப்படக் கண்டித்துப் போடவல்லேன் இக்கா
லத்தில்நீயிவ்விடம்வரவும்பெறுவையோ யிப்போதுமென்ன முழுகிப்போ
ச்சுது இந்தநிமிஷத்தில்உன்னைவளைத்துக்கொண்டுதிகைக்கும்படிக்குச்சா
டிஉன்பிராணனை எமலோகங்குடியேற்றுவேன் இதனைச்சத்தியமாகியவ
சனமாக நினைக்கக்கடவை, மேலும் என்சவுரியங்கள் உனக்கெவ்வளவுந்
தெரியாது அதுகளிற் சிலதைச்சொல்லக்கேட்பை நான்பாலபருவத்திற்
றொட்டிலிற் பள்ளிகொண்டிருக்கும்போது பயமற்றுக்கிரணங்களை வீ
சிய காரணத்தினாற் சூரியனைத்தளைபடுத்தி அவனைவிடுவிக்கவந்தபிரமனி
டத்திலும் அவன்படையைப்பெற்றேன் விஷ்ணுவும் என்பேரைச்சொ
ன்னால் திடுக்கிட்டுவாடுவன் மற்றதேவர்க்கள் நமக்கடிமையாகவிருப்பர்
இத்தகையசெயசாலியாக விருக்கப்பட்டசூரனாகிய நான்யிக்காலத்தில்உ
ன்னைச்செயிப்பதினால் அபலனாகிய தூதனைக் கொன்றேனென்னும் பழி
ப்புரையைப்பெறுவதல்லது என்கீர்த்திப் பிறதாபத்துக்குத் தக்கதோ யி
வையன்றியும்சேனைத்தலைவனாச்சித்திரவதைசெய்துகொன்றும் வீராதிவீ
ரனாகிய உன்துணைவனையும் இலக்கனையும் புறந்தந்தோட வெற்றிகொ
ண்டு வலியிற்சிறந்திருந்த பூதவெள்ளத்தை அதாஅதப்படுத்தி மாய்த்தே
ன்சபையிற்றனிமையிலகப்பட்ட பழம் பழிகாறனாகிய உன்னையுங்கண்
டதுண்டப்பட வெட்டிக்கொன்று உன்னையொருகாரியக்காறனாக நினை
ந்தனுப்பிய பாலசுப்பிறமணியனையும் மடக்கிக்கொண்டு பிறமிக்கும்
படிக்குச் சாடிச்சிறியதத்தையைக்கொன்ற பழியைப்போக்கிக் கோபந்
தணிவேன் இதுவுமல்லாமல் உங்களை முக்கியமாகநம்பி யிருக்கின்றதே
வேந்திரனைப் பிடித்துவந்து பாரவிலங்குபூட்டிக் கொடியசிறையில்வை
தது- பிரமன்-விஷ்ணுவையும் தக்கதெண்டனைகளைச் செய்து துரத்து
வேன் இப்போதுநான் சொன்னகாரணங்களனைத்தையும் சற்றுநேரத்தி
ற்பார்ப்பை உங்களாற்றங்கள் வளங்களைப்பெற்று வாழவிருக்கின்றதே
வப்பயல்கள் இந்தகொடுமைகளைக்கண்டு வயற்றிலும்வாயிலும் அறைந்
துகொண்டு துக்கசாகரத்திலழுந்தி வாடவிருக்கின்றனவொன்று பயமுறு
த்தித் தன்பெருமிதங்களையும் வீரபராக்கிரமங்களையும் பேசியதைக்கே
ட்டுவீரவாகுதேவர் நகைத்துபானுகோபனுக்கு மாறுத்தரஞ்சொல்லுகி
ன்றனர், வாய்புலர வீண்விருதாவளிகளைப் பேசியாவதென்ன சூரனுகவி

ருப்பவன் எவர்கள்வந்தெதிர்த்தாலும் அவர்களுடன்போராடி வென்று
பலருமறியச் செயத்தைநாட்டவேண்டும்புறந்தந்தவர்களைமடக்கிக்கொ
ண்டு தானுமொருவீரனைப்போல அலைத்துக்கொல்வது தீராத பழியாத
கமல்லது வேறுமுண்டோ செயசாலிகளாகவிருக்கப்பட்டவர்கள் நான்
சூரன்வீரன் அவர்களைக்கொன்றேன் இவர்களைவாட்டினேனென்றுபேசா
ர்கள் அதனால்தங்களுக்குரிய வீரபராக்கிரமந்தேய்ந்துபோம் போர்மு
னையிற்றன்சவுரியத்தைக்காட்டிப்பகைவனைவென்றுபலராலும்யிவன்சுத்
தவீரனென்றுபுகழவிரும்புவர் இப்போதுநீபேசியபடிக்கு வீரபராக்கி
ரமமுள்ளவனாகிற் றுரிதமாய் போர்செய்யவருவை அப்போது உன்சூர
த்தையும்சகலரும் மதித்துக் கொண்டாடுவரென்று ராசநீதிகளைச்சொன்
னமாத்திரத்திற் கொடியபாதகனாகிய பானுகோபன் ரவுத்திராகாரமாகக்
கோபித்து நல்லகாரியம் சற்றும் எண்ணிக்கை யில்லாமல் நம்மைபொ
த்தவன் முன்னம்நின்று வழக்குப்பேசுகின்ற வுன்பிராணனை வாட்டுவே
னெனச்சீறி அதிகவேகமாகப் பத்துதிவ்விய பாணங்களையெடுத்துபாரி
த்திருக்கின்ற வில்லிற்பூட்டிவிட்டகாலத்தில் மின்னலைப்போலப் பிரகா
சித்துத் தீயையிறைத்துக்கொண்டு வீறிவரும்போது வீரவாகுதேவருந்
தமதுவில்லில் அத்தொகைக்கணைகளைப்பூட்டி விடுத்துக்கண்டித்தெறிந்து
மேலும் நூறுபாணங்களைப் பகைவன்மீதிற் றூண்டியகாலத்திற் பானு
கோபனும் நூறுகணைகளைக்கொண்டு அதுகளைவிலக்கிப்பிறப்பிறப்பிலி
யாகிய சிவகுமாரன்மீதிற் கொடிய சரங்களாயிரவற்றைப் போக்கியதரு
வாயில் வீரவாகுதேவரும் அவ்வளவுபாணங்களினால் அதுகளைநடுவதுயா
தியிற்கண்டித்தெறிந்து சற்பங்களைப்போன்ற குரூரமாகிய பதினாயிர
ம்பாணங்களைப் பகைவன்மீதுதொடுத்தகாலத்திற் பாதகனாகியராட்சத
வீரன் அதற்குச்சரியான பாணங்களைக்கொண் டதுகளைக் கண்டித்து வ
டவைக்கொப்பாகிய தீட்சண்ணியமுள்ளநூறாயிரம் பாணங்களை வீரவா
குபேரிற்பொழிந்தான் அத்தொகைகணைகளைக்கொண்டு வாட்டி பத்து
நூறாயிர திவ்வியபாணங்களைப் பகைவன்பேரிற் பிறையோகித்தமாத்திர
த்திற் பானுகோபனும் அவ்வளவுநாராசங்களைச் செலுத்திவாட்டிக் சுர
வேகமாய் நூறுநூறாயிரங்கொடிய கணைகளைத் தூண்டியபோது வீரவா
குதேவர்சிறி நொடிப்போதில் அத்தொகைசரங்களைப் பிறையோகித்து
சின்னபின்னப்படக் கண்டித்தவராய் மேலும் கோடையிடிகளைப்போ
ன்றநூறாயிரக்கோடி அஸ்திரங்களைத்தூண்டிய காலத்திற் காசிபன்பேர
னானவன் அதுகளின் வலியைக்கண்டு துரிதமாய்ச்சங்கோபசங்கம் கொடி
யசரங்களைச் சற்வசங்காரகாலத்திற் சத்தமேகங்களும் வருஷிப்பதைப்
போலச்சொரிந்துதடுக்கவும் திவ்வியமாக யிருவீரர்களும் தனுர்வித்தை

களின் மகிமைகளைக்காட்டிச்செலுத்துகின்றபாணகோடிகளானவை பூ
மிபந்தரமெங்கும்பரந்து திசைகள் தோற்றாமல் மூடிச்செலப்பெருக்
கையுடைய சத்தசாகரங்களும் அடைபட்டுச்சுவறிப்போகவும அஷ்டகு
லாசலங்களும்பங்கப்பட்டு மேகமண்டலம் வருணமண்டலம் சூரியம
ண்டலமுதலாக விழிகளுக்குத்தோற்றாமல் நிறைந்து சகலபிராணிகளையு
ம்வருத்தியது, இப்படிக்குப்போராடுகின்ற இருதிறவர்களேறியதேர்கள்
இடசாரிவலசாரியாகச் சக்கரங்களைப்போலச் சுழன்றுசுழன்று பூவட்ட
மெங்கனும் அஷ்டதிசைகள் முற்றும் சமுத்திரங்கள் மீதினும் தீவுதீபா
ந்திரங்களினும் சக்கிரவாளகிரியின்மீதினும் விண்ணுடுகளினும் அண்ட
வெல்லைப்பரப்பினும் சுழற்காற்றையொப்ப வுலவியும் ஒப்பற்ற விற்க
ளைக்கோலி குணத்தொனிகாட்டிச் சோனைப்பெய்யலுக்கொப்பாக திவ்
வியபாணங்களை ஒருவர்மீதொருவர்சொரிந்தும் அவைகளைவிலக்கியும் வி
ழிகளுக்குத்தோற்றாமல் மறைந்தும்மீளத்தோற்றியும்நிமைப்போதிற்
பற்பலவித வித்தைகளைக்காட்டியும் வீரங்களைப்பேசியும் உருத்துப்பா
த்தும் புசங்களைத்தட்டியும் இப்படிக்குச்சகல புவனங்களினுந்தாமாய்
ச்சூறாவளிக்காற்றைப்போல வளைந்துவளைந்து கொடியபோராச்செய்
துவருந் தறுவாயிற் சீறிப்பாயும்பாணங்களானவை மேலிட்டு ஆயிரங்கி
ரணங்களைவிரித் துலகங்களைவிளக்கிவரும் சூரியபகவானேறப்பட்ட ஒற்
றைவண்டிலையுடைய ரதத்திற்பூட்டப்பட்டு நிமைப்போதில் அளவற்ற
யோசனைப்பிரமாணம் பாய்வதாயிராநின்ற ஏழுபச்சைக்குதிரைகள்பே
ரிலும் சோடசகலைகளைவிரித்து யிரவைவிளக்கும் சந்திரனைத்தாங்கிப்பி
றசண்டமாருதத்தினு முந்திச்செல்லும் வேசமுள்ளவிமானத்தினும் தி
சைக்களிற்றின் மீதினும் நினைந்தயிடங்களிற் போகவல்ல கருடகாந்தரு
வர்சித்தவித்தியாதரர்கின்னரர் முதலாயினர்மீதினும் பாய்ந்துலவும் இவ்
விதச் சித்திரப்போராச்செய் துவரும் வீராதிவீரர்கள்விழிகள்கொவ்வை
க்கனியைப்போலச் சிவக்கவும் ஆலகாலவிஷமும் வடவாமுகாக்கினியும்
தாபாக்கினியும் காட்டழலும்ஒடுங்கியடங்கத்தக்க கோபாக்கினிசொலிக்
கும் மனதையுடையவர்களாய் வாயுவேகத்தினும் மனோவேகத்தினுமேலி
ட்டசெகியைப்பெற்றவர்களாய்த் தேராளிகளில் முந்திப்பேசவல்ல வீர
பராக்கிரமசாலிகளாயிருக்கின்ற இந்தயிரண்டுசூரர்களும் போராடுகின்
றதிசையின்னதென்று எத்தகையராலுங்குறிக்கப்படாது அவர்கள்சொ
ரிகின்ற பாணவிதங்களைக்கணிப்பதற்கு ஆதிசேஷனாலுமுடிவதன்று இ
ப்படிக்குச்செலுத்துகின்ற அஸ்திரசஸ்திரங்கள் பெருத்துமேகசஞ்சார
மாறாமலிருக்கின்ற வானத்திலும்நிறைந்து மேலிடுகின்றதறுவாயில் அத்
தலத்திலிருந்து சமர்க்களவேடிக்கைகளைப் பார்த்திருந்ததேவர் கூட்ட

ங்கள் தியங்கிமதிமயங்கி இனியிவ்விடத்திலிருப்போமாகில் என்னபாடுப
டவருமோவெனப்பயந்து மேலுலகங்களிலோடி யொளிக்கவும் இதுவு
மல்லாமல் அவர்கள்செலுத்தும்பாணங்கள் பாய்வதினாற் கோடைகாலத்
திற்களிப்புள்ள நிலம்வெடித்துக் காட்டுவதைப்போலப் பூமண்டலமு
ழுதும்பிளந்து பாதலத்தைக்காட்டவும் அண்டகோளகையைத் துளைத்
துமேல்வெளியிலோடவும் சத்தசாகரங்களினும் பெரும்புறக் கடலினு
ம்நிறைந்துசெலப்பரிசமறஉறுஞ்சிநிலத்தைவெள்ளிடையாகக்காட்டவு
ம்சர்வசங்காரகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்களைத் தகித்தொடுக்கவல்ல
வடவாமுகாக்கினியின் நாவையரித்தும் இவ்விதமாகவெங்கும்நிறைந்து
அதிசயவுற்பாதங்களைச்செய்தது- சவுனகாதிரிஷிகளே, பகைவர்வயிரியாகி
யவீரவாகுதேவரும் தேவகாதகனாகியபானுகோபனும் அக்காலத்திற்செ
ய்தகொடியபோரின் பெருக்கத்தை எத்தகையராலும் விரித்துச்சொல்
லப்படுவதன்று அளவிறந்தகணைகளை ஓயாமற்பிரயோகித்து வருகின்
றகாரணத்தினால் அவர்கள்கரங்களிற்பற்றிய விற்களானவைசக்கரத்தைப்
போல வட்டாகாரமாய்விளங்கியது, இப்பிரகாரம்சண்டைசெய்து வரு
கின்றதருவாயிற் சூரியனைத் தளைபடுத்திய வீராதிவீரனாகிய பானுகோப
ன்பவுத்திரமனதையுடைய வீரவாகுதேவர்பொழிந்த பாணசமோகங்க
ளைக் கொடியகணைகளைக்கொண்டுமாற்றி மேலுங்கரவேகமாய் யிருநூறு
திவ்வியபாணங்களைக்கடாவிக் கரத்திற்பற்றியிருந்த பாரித்தவில்லையும்
யிருதுண்டமாக வெட்டித்தள்ளிச்சிங்கத்தைப்போலக் கெற்சித்ததருவா
யில்வீரவாகுதேவருக்கு அதிககோபம்பிறவேசித்துத் துரிதமாய்வேறொ
ருவில்லையெடுத்து வளைத்துநாணேற்றிச் சகலபுவனங்களுங் கிடுகிடென்
று நடுங்கும்படிக்குக் குணத்தொனிகாட்டி ஆயிரங்கொடிய பாணங்க
ளைப்பூட்டிக் கரவேகமாகச்செலுத்திக் கொடியபாதகன் கரத்தில்மேரு
வைப்போலவிளங்கியிருந்த தனுசைக்கண்டித்து சிக்குபடுத்தியபோது
பானுகோபன் வடவாமுகாக்கினியைப்போல மண்டியெரிந்து வேறொ
ருவில்லையெடுத்து வளைத்துஅர்த்தசந்திர பாணங்க ளாயிரவற்றைத் தா
ண்டிசிவகுமாரன்வலிய மார்பைப்புண்படத்தாக்கியபோது சற்றுவருந்
தினவராய் ரவுத்திராகாரமாகக் கோபித்து அதிசீக்கிரமத்திற் கூர்மையு
ள்ளஎழுபாணங்களைப்பூட்டிப் பிரயோகித்துப் பானுகோபன் சிரத்தி
ற்சூரியனைப்போலப் பிரகாசித்திருந்த வயிரமுடியைப் பொடிப்பொ
டியாக்கியபோது ராட்சதவீரன் மனம்வருந்தி விடசர்ப்பத்தைப்போல
ச்சீறிப்பொங்கினவனாய் நவரத்தினமயமாகியகிரீடமொன்றை டாவபரு
வத்திற்சூரியனைப்பற்றியதுபோலவெடுத்துச்சிரத்திற்றரித்துக்கொள்ளு
வதற்குமுன்னம் கூரியஅலகைவாய்ந்த ஆயிரந் திவ்வியபாணங்களைவே

கமாகச்செலுத்தி வயிரம்போன்ற மார்புக்குக்காவலாக மிகுந்திருந்தஅ
பேதாரத்தினக் கவசத்தைப்பிளந்து துகள்படவீசினன், இந்தசெயத்தை
க்கண்டதருமதேவதை மனமகிழ்ந்து ஆனந்தக்கூத்தாடி வீரன்சவுரியத்
தையும் புயவன்மையையும் புகழ்ந்துவாழ்த்தவும் சூரியனும் தன்பலகவ
னுக்கடுத்த பங்கத்தைக்குறித்து நகைமுகனாய்க்களித்தனன், இவ்விதமா
கயிவர்கள்கொண்டிருக்கின்ற மகிட்சியைப் பானுகோபன்பாத்து வெழ்
க்கிநல்லகாரியம் இமைப்போதில்யிவர்கள்விருப்பையடக்கிச்செயம்பெ
றுவனெனத் துணிவுகொண்டு காலாந்தகனைப்போலக் கோபித்துத்துரித
மாய்க் கொடியபாணங்க ளாயிரத்தைத் தன்வில்லிற்சந்தித்து வீரவாகு
தேவர் நெற்றிக்குக்குறிகொண்டு செலுத்தியகாலத்திற் புகையுமனலையு
ம்வீசிக்கொண்டு வேகமாய்வந்து நுதலிற்றாக்கியமாத்திரத்தில் உதிரம்
பெருக்கெடுத்தோடிய தெப்படிக்கிருந்ததென்றாற் பிருதகாலத்திலு
தையகிரியின்மீது பாலசூரியன்தோற்றியதைப் போலக்காட்டியது சவு
னகாதிரிஷிகளே, அந்தவீரவாகுதேவர் சூரத்தையும்மனஉறுதியையும்எ
ன்சொல்வேன் நெற்றியிற்பட்டகாயத்தினாற் சற்றும்வருந்திமனந்தளர்
ச்சிகொள்ளாமற்றைத்திருக்கின்றபாணங்களை முட்களைப்போலப்பிடுங்
கியெறிந்துபோட்டு வீராவேசங்கொண்டவராய் தட்சிணத்திற்றன் வில்
லிற்கணக்கிறந்த தீட்சணியமாகிய சரங்களைப்பூட்டிக்கொடிய பாதகனா
கியபானுகோபன் முகத்திலாயிரம்மார்பிலாயிரம் பர்வதாகிருதியாய்வா
குவலயங்கள் தரித்தோங்கியிருக்கின்ற புசங்களொன்றுக் காயிரமாகக்
குறிகொண்டு பிறையோகித்ததனுவாயிற் சர்ப்பங்களைப்போலச்சீறி யினை
ந்துதீயைப்பெருக்கித் தடைபடாமலோடிவந்து தங்களைச்செலுத்திய
தானங்களிற்பட்டு தடாரித்துருவிப்போயது- அக்காயங்களில் உதிரமா
னது ஆற்றெடுத்தோடும்போது மதிமயங்கிகரத்திற்பற்றியிருந்த வில்
லை நழுகவிட்டுக் களைத்துச்சோர்ந்துதேரில்விழுந்தனன்- சவுனகாதிரிஷி
களே, இப்படிக்குச்சோபித்து கோபக்கனலானது மனதில்மூண்டுபாதி
க்கரத்தமானது திரேகமெங்கும்விளங்கக்கிடப்பதெப்படிக்கிருந்ததெ
ன்றால் கோடைகாலத்தில் மூங்கில்களொன்றுடனொன்றுராய்ந்துண்டா
கியதீயினாற் புதறுகள்புற்கள்பற்றியெரிந்திருக்கின்றபர்வதத்தைப்போ
லவும் அந்திகாலத்தில்மேற்குத்திசையிற்றோற்றும்செக்கரவானம்நழுகி
யதையொத்துக் காட்டப்பட்டது இவ்விதமாகராசாதிராசனாகிய சூரபது
மன்குமாரனுக்குச்சம்பவித்தகேட்டைராட்சதவீரர்கள்கண்டவுடன்திகி
ற்பட்டு மோசம்வந்ததுபோற் காணுகின்றதென்று வருந்தினவர்களாய்
மானம்பாதிக்கச்சீறி கோபமானதுமனதைவாட்டத் தங்கள்ரதங்களைத்து
ரத்திக்கொண்டுவந்து வெற்றிமாலைபுரளும் வேலைத்தாங்கி யிருக்கின்ற

வீரவாகுதேவரைச் சமுத்திரத்தைப்போல வளைத்துக்கொண்டு தேரிலிரு
ந்தும் மதயானையின்பிடரியில்நின்றும் புரவிகளின்மீதினுமிருக்கப்பட்
டசெயசாலிகளும் கைமிஞ்சி - வாள்-வேல் - சூலம்-சக்கரம் - தண்டம்-
-தோமரம் - பிண்டிபாலம்-கப்பணம் - கழுமுள் - முதலிய ஆயுங்களையும்
சோடையிடிகளையொத்த கொடியபாணவிதங்களையும் சூரியனைவளைத்த
யிருளைப்போல அமோகமாய்ச்சொரிந்து ஆற்பாடங்களைச் செய்தனர்,
அக்காலத்திற் றிருக்கயிலையைப்போற்றிவரும் நந்திகணத்தலைவராகிய வீ
ரவாகுதேவர் காலாந்தகனைப்போலச்சிலரேங்கிச் சங்கோபசங்கமாகிய
தீட்சண்ணியமுள்ள சரங்களைத்தமது வில்லிற்பூட்டிச் சோனைப் பெய்ய
லைப்போலப்பொழிந்து பகைவர்செலுத்திய படைகளனைத்தையும் சின்
னபின்னப்படக் கண்டித்தெறிந்து மேலும் அனந்தகோடி குரூரமாகி
யபாணங்களைக் கரவேகமாகச்செலுத்தித்தம்மைச்சூழ்ந்து கொடியபோ
ரைச்செய்திருந்த நால்வகைச்சேனைகளைத் துத்தமூருகச்சங்கரித்துப் ப
டைத்தலைவரையுங் கைகாலாடவொட்டாமற் கலக்கிச்சராசரப் பிரபஞ்ச
ங்களைத்தகிக்கவல்ல வடவாமுகாக்கினியைப்போலச்சாடத்துடங்கியதெ
ட்படிச்செனிற், சிரங்களைக்கண்டித்தும் மண்டைகளைத்துறந்தும் மூ
ளைகளைச்சிதறியும் கவசத்தைப்பொடித்தும் மார்பைக்கீறியும் தோளைச்ச
ரித்தும் வீரவெண்டயமணிந்த கால்களைக்கண்டித்தும் கரத்திற்பற்றிய
விற்களைத்துணித்தும் வீரங்கள்பேசிய வாய்களைப்பிளந்தும் உருத்தே
விய அஸ்திரசஸ்திரங்களைத் துகள்கண்டும் இவ்விதமாகராட்சதப்படை
களைமாய்த்தும் சொர்ணமயமாகிய அச்சைமுறித்தும் வண்டில்களையுரு
ட்டியும் மோட்டைச்சிதைத்தும் நவரத்தினமயமாகியகொடுங்கைகளைப்
பொடிசெய்தும் தோரணிகளை அதப்படுத்தியும் ரத்தினமயமாகியமுகப
டாமணிந்த மத்தகம் பனையையொத்த துதிக்கைகள் உரலையொத்த கால்
கள்சின்னபின்னப்பட்டிறைய மதயானைகளைமாய்த்தும் சொர்ணச்சிலம்
புகள்பூண்டு தத்தித்தாவிப்பாயும் கால்கள் தலைகள் வால்கள் தறிபட்டி
றையப்புரவிப்பந்திகளை நாசஞ்செய்தும் இவ்விதமாக ரதகெக துரகப
தாதிகளையும் சங்கரித்தபோதிலும் வீரவாகுதேவர் செலுத்தும் பாண
கோடிகளின் வேகமடங்காததாய் வானத்திற்பாயும் திசைகளினோடும் வ
னாந்திரங்கள் மலைகள் தீவு தீபாந்திரங்களிற் றுவியும் அணைகளைச்சிதை
த்துச்சமுத்திரத்தைப்பெருக்கியுங்கப்பலைப்போலநீர்ப்பெருக்கிலோடி
யும் மேகத்திற்றுவிச் செலத்தைப் பருகியும் விண்ணுடுகளிற் பறந்தும்
பூமண்டலமுற்றும் நிறைந்தும்சூரியசந்திரர் காந்தியையடக்கியும்சமு
த்திரங்களைமூடி பூமியைப்போலக் காட்டியும் இவ்வித உற்பாதங்களைச்
செய்துபோகின்றவீரவாகுதேவர்செலுத்திய பாணங்களிலொவ்வொன்

றுஆயிரகோடி அவுணர் சிரங்களைக்கண்டித்தோடியபோதினும் அதின்
வேகமடங்காமல் அக்கினியைப்போலவும் பிரசண்ட மாருதத்தையொ
த்தும்வழியோடும், இவையுன்றியும் அளவற்ற தவங்களைச்செய்து சிறந்
தவரப்பிரசாதங்களைப்பெற்றிருக்கின்ற வீராதிவீரர்களாகிய ராட்சதரா
சர்கள் சிரங்களைக் கருலுமென்றறிந்து வேகமாயோடி சூரபதுமன் வா
சமாயிருக்கின்ற மயேந்திர புரியிற்சேர்ந்து அவர்களுக்குரிய தேவியர்
கரங்களிற் போட்டுப்போகுமென்றால் கந்தசுவாமி சகோதரனாகியவீர
வாகுதேவர் மகிமைகளை நம்போலிகளால் அளவிட்டுச் சொல்லப்படுவ
தோ இத்தன்மையாக உயித்திய பூமியெங்கும் சுழற் காற்றைப்போலத்
திரிந்துதிரிந்து சங்கையற்ற பாணவருஷங்களைப் பொழியுமுன்னிலயி
ல்தோரணிகளனைத்தும் துகள்பட்டும் யானைவரிசைகள்முற்றும் அதப்ப
ட்டும் வேகமுள்ள குதிரைப்பந்திகள் சின்னபின்னப்பட்டும் ராட்சதவீ
ரர்கள் காலாள்களுடன் கண்டதுண்டமாக வெட்டுண்டும் ரணக்களத்தி
லொருவனாயுங் காணக்கிடையாமற் போனபடியால் சர்வசங்காரமூர்
த்தியைப்போல வீரவாகுதேவ ரொருவருந் திரிந்தனர், எவ்விடங்களிலு
ம்பிணமலைகள்தோற்றவும் உதிரப்பிரவாகமானது அலைகளைமோதியினா
ந்துபூமியெங்குமூடவும் ரணக்களத்தில் விழுந்துகிடந்த தேர்வண்டில்
கள் யானைப்பிணங்கள் முதலாக அவ்வெள்ளத்தில் மகாமச்சங்களைப்போ
லஅழுந்தியும் மிதந்தும்போகின்றது- மேலும் கருங்கடலைச் செங்க
டலாக்கித் திமிதிமிங்கலங்கள் முதலிய மச்சங்களுக்கு விருந்திட்டது,
இதுவுமல்லாமல் அவ்வெல்லையெங்கும் பற்பலகோடி கவந்தங்கள் கூத்
தாடவும் பூதபசாசங்கள் காளிக்கூட்டங்கள் நிணமாம்சங்களைத்தெவுட்
டவுண்டு வீரன்புகழைப்பாடித் திரியவும் கழுகு பரந்து காக்கைகள் தி
றுத்தியாகப்பொசித்து வானவெல்லையில் பறந்தலைவிட்டுலவவும்நாய்நரிகள்
பிணங்களைப்பிடுங்கித்தின்று ஊளமிட்டுலவவும் இப்பிறகாரம்ரதகெசது
ரகபதாதிகள்மாண்டுசண்டையுமொழிந்ததையும் காலஎமனைப்போன்ற
பானுகோபன் வீரவாகுதேவர் பாணங்களின் காயத்தினால் தேரில்மூர்ச்சி
த்துக்கிடப்பதையும் முன்னம் ராட்சதவீரர்கள் போருக்காற்றுமலோ
டிஒளித்திருந்த பூதப்படைகள் கண்டவுடன்சத்திராதிகள்பூண்டற்றதெ
ன்று மனநடுக்கமொழிந்து களித்து தயிரியங்களுடன் யினிநமதிறைவ
னைச்சேரக்கடவோமென்று ஒருவரையொருவர் கூவி ஒன்றுபடச்சேர்
ந்துசமுத்திரத்தைப்போல யினந்துகொண்டுவரவும் பானுகோபனுற்க
லைத்திருந்த படைத்தலைவரும் -எண்மரும்- இலக்கரும்- உணர்ச்சிபெ
ற்றுமிகுத்த வீராவேசங்களுடன் வீரவாகுதேவனைச்சேர்ந்து களித்திரு
ந்தனர்- அத்தருவாயில் வீராதிவீரன் பாணங்களின் காயத்தினால் மதிம

யங்கிப் பிரேதத்தைப்போல விழுந்துகிடந்த பானுகோபனுக்கு பஞ்சேந்திரியங்களுந் தத்தமது நிலைகளிற்சேர்ந்து உணர்ச்சி யுண்டாய் விழிகளைத்திறந்து சுற்றிலும் பார்த்துத் தன்னைச்சூழ்ந்திருந்த சதுரங்கச்சேனைகளின் பெருக்கைக் காணாதவனாய் நாய்நரிகளோடிப் பிடுங்கித்தின்றுலவும் பிணமலைகளைநோக்கி மேலும் எதிரில் வீரசிங்கத்தைப்போலச்சொலித்துக்கொண்டு திரிகின்ற ரணரங்கசூரனாகிய வீரவாகுதேவனைப்பார்த்து கடலைப்போல யிரைந்துகொண்டு நம்மைச்சூழ்ந்திருந்தநால்வகைச்சேனைகளையும் உருத்தெரியாமற் கொன்றவ னிவனென நிதானித்துவலியும்வீரமும் ஒருவன்பங்கல்ல நானேவீரனென்று சொல்லப்படாதெனத் தீர்மானித்துக் கொண்டவனாய்ச் சூரனென்பது யிந்தவீரனுக்கடுக்கும் மற்றொருவனைச் சொல்லப்போகாதெனக் கொண்டாடி இதனை நினைக்கின்றனன் - யித்தினவரையில் என்னுடனெதுத்துப் போர்செய்தவர்கள் எத்தகைய வீரர்களெனினும் மாண்டும் முதுகுகாட்டி யோடினவரல்லது வெற்றிகொண்டு திரும்பினவர்கள் கிடையாது இக்காலத்திலென்விருப்பை யடக்கித் தனுர்பாணியாக வீறியிருக்க யிவனைக் கண்டனன் - சூரியனைச்சிறைபடுத்திய வீரனென்று சகலருங்கொண்டாட விருந்த என்வலியும்வீரமும் வெகுநேத்தியாகவிருக்கின்றதென்று தன்னைவெறுத்துக்கொண்டு மானம்பாதித்து மனதையலைக்கக் கோபமேலிட்டு வடவையைப்போலப்பொங்கி ஒருநாழிகைப்போதிற் சிவகுமாரன் தூதனைச்சின்னபின்னப்படக்கண்டித்துக்கொல்லாமற்போவேனாகில்யிந்தவுயிரைத்தாங்கிவாழவிரும்பேன் வீரபராக்கிரமசாலிகளாகிய அவுணர்குலத்திற்பிறந்தவனுமல்ல, ஒப்பற்றயிந்தவில்லுடன் அக்கினிப் பிறவேசமாவேனென்று கொடியபிறிதிக்கினையைச்செய்து ஆயிரத்தெட் டண்டங்களுக்கதிபனாகிய சூரபதுமன் குமாரனானவன் பூர்வத்திற் றிருப்பாற்கடலிலுதித்த ஆலகாலவிஷமானது பரமேஸ்பரர் முன்னம் நேர்ந்ததைப்போலத் தன்றேரைத் துரத்திக்கொண்டு மதயானைக்கு வயிரியாகிய வீரசிங்கம்போன்ற புசபெல பராக்கிரமசாலியாய் நிற்கின்ற வீரவாகுதேவரிருக்கின்ற ரணக்கள வெல்லையைச்சேர்ந்து ரவுத்திராகாரமாகமண்டியெரிந்து மேருவைப்போலத் தன்கரத்தில் விளங்குகின்ற தனுசைவளைத்து நாணேற்றி குணத்தொனிசெய்து ஆயிரம்முத்தலைப் பாணங்களைப்பூட்டிவீரவாகுதேவர் சிரத்துக்குந் தோளுக்கும் மார்புக்குங் குறிகொண்டுசெலுத்தியதருவாயிற் சிடசிடத்த தொனிகளுடன் எரிந்து புகைந்து மேலிட்டுவருவதை வீரன்கண்டு துரிதமாய் அத்தொகை பாணங்களைக் கொண்டு மீறிவரவொட்டாமற் கண்ட துண்டப்படக் கண்டித்தெறிந்து போட்டு மேலும் ஆயிரந்திவ்விய பாணங்களைச் சூரன்குமாரனுக் கிலக்

காதத்தூண்டியபோது கொடியபாதகனானவன் துரிதமாய் அத்தொகை
பாணங்களைப்போக்கிச் சின்னபின்னப்படப் பறக்கடித்தது மன்றியில்
மேலும் ஆயிரம் சடுரமாகிய சரங்களைக் கடிதிறபூட்டிச் செலுத்தி வீர
வாகுதேவ ரேறியிருந்த ரதத்தைப்பொடிபடுத்திக் குதிரைகளைவெட்டித்
தள்ளிச்சாரதி தலையையுங்கண்டித்துச் சிங்கநாதஞ்செய்தனன்- இதைக்
கண்டதேவர்க்கள் மனம்வாடித் திகைத்துப்பார்த்திருக்கும்போது வீர
வாகுதேவர்சற்றும் அதறாமல் பெதறாமல் சிங்கராசனைப்போல மற்
றொரு ரதத்திற்பாய்ந்து மண்டிபோட் டுளுக்கார்ந்தவராய் தமது ஒப்
பற்ற காண்டீபத்திற் பதினாயிரம் தீட்சணியமுள்ள பாணகளைச்சந்தித்து
ப்போக்கி பானுகோப னாரோகணித்திருந்த மேருவையொத்த தேரைப்
பொடிப்படுத்தி அளவற்றபுரவிகளைக் சால்மாடு தலைமாடாக விழுந்துபு
ரளச்செய்து சாரதியையும் பின்னப்படுத்தி அவன்கரத்திற்பற்றியிருந்த
பாரித்தவில்லையும் படாலுமென்று வெட்டித்தள்ளினர் - இதைவானத்தி
ல்வேடிக்கைபார்த்திருந்த தேவர்க்கள் கண்டமாத்திரத்தில் முகமலர்ச்சி
யுடன் மனமகிழ்ந்து தேவதுந்துமியைமுழக்கி பரிமளமிகுத்த கற்பக
மலரைத்தூவி வாழ்த்தினர்- இப்படிக்குக் களியாடலைக் கொண்டாடும்
தேவர்க்களைச்சீறித் துரிதமாய் பக்கத்திலிருக்கின்ற சேமத்தேர்களி னொ
ன்றிற்பாய்ந்து வீற்றிருந்தவனாய் வில்லை மண்டலாகாரமாய் வளைத்துஅ
திசீக்கிரமத்தில் விடநாகங்களை நிகர்த்துச்சீறித் தீயை யிறைத்தோடும் எ
ழுநூறுபாணங்களைத்தொடுத்துக் காதளவுமிழுத்துப் பற்வதாகிருதியாக
ப்பூரித்திருக்கும்புசங்களையுடையவீரவாகுதேவர்மார்பிற் றைக்கும்படி
க்குப்பிறையோகித்து அட்டகாசஞ்செய்ததறுவாயில் அந்தசரங்கள்வெ
ளிப்பட்டவுடன் சற்பங்களைப்போலச்சீறித் தீயைப்பெருக்கிச்சிடசிடுத்
ததொனிகளைக்காட்டி அதிவேகமாய்வந்து வயிரத்தையொத்த மார்பிற்
சுறுக்குச்சுறுக்கென்று பாய்ந்தமுன்னிலையில்அதுபரியந்தஞ்சோபமெ
ன்பதைத்தெரியாத வீரவாகுதேவர்சற்றுவருந்தித் துயரத்தின்சுவையை
க்கண்டு அதிககோபங்கொண்டவராய்ச் சூரியனைச்சிறைசெய்த இந்தபா
தகன்சிரத்தைக்கண்டித்து- நாய்-நரி-கழுகு-பருந்து-காக்கைக்கு விரு
ந்திடுகின்றனனென்று எமனைப்போலவும் சாலருத்திரனைநிகர்த்தும் உ
ருத்துச்சீறித்தமது வீரவில்லிற்குறாரமாகிய பதினான்குவயிரவாளிகளைச்
சந்தித்து அபிமந்திரித்துத் தூண்டிப்பானுகோபன் கரத்தில்மந்தரகிரி
க்கொப்பாகப்பாரித்துவிளங்கியிருந்தவில்லைக்கண்டித்துமேலுங்கரவே
கமாய்ஆயிரம் திவ்வியபாணங்களைப்போக்கிப் பகைவன் ஆரோகணித்
திருந்த நவரத்தினமயமாக அலங்கரித்திருக்கின்ற- தேரை-வண்டில்- அ
ச்சு-மச்சு- குத்துக்கால்- கொடுங்கை-முதலிய உறுப்புகளனைத்தும் தி

வீரவாகுதேவரைச் சமுத்திரத்தைப்போல வளைத்துக்கொண்டு தேரிலிரு
ந்தும் மதயானையின்பிடரியில் நின்றும் புரவிகளின்மீதினுமிருக்கப்பட்
டசெயசாலிகளும் கையிஞ்சி- வாள்-வேல்- சூலம்-சக்கரம்- தண்டம்-
-தோமரம்-பிண்டிபாலம்-கப்பணப்- கழுமுள்-முதலிய ஆயுங்களையும்
சோனைபிடிகளையொத்த கொடியபாணவிதங்களையும் சூரியனைவளைத்த
யிருளைப்போல அமோகமாய்ச்சொரிந்து ஆற்பாடங்களைச் செய்தனர்,
அக்காலத்தில் திருக்கயிலையைப்போற்றிவரும் நந்திகணத்தலைவராகிய வீ
ரவாகுதேவர் காலாந்தகனைப்போலச்சிவநேங்கிச் சங்கோபசங்கமாகிய
தீட்சண்ணியமுள்ள சரங்களைத்தமதுவில்லிற்பூட்டிச் சோனைப் பெய்ய
லைப்போலப்பொழிந்து பகைவர்செலுத்திய படைகளனைத்தையும் சின்
னபின்னப்படக் கண்டித்தெறிந்து மேலும் அனந்தகோடி குரூரமாகி
யபாணங்களைக் கரவேகமாகச்செலுத்தித்தம்மைச்சூழ்ந்து கொடியபோ
ரைச்செய்திருந்த நால்வகைச்சேனைகளைத் துத்தமூருகச்சங்கரித்துப் ப
டைத்தலைவனையுங் கைகாலாடவொட்டாமற் கலக்கிச்சராசரப் பிரபஞ்ச
ங்களைத்தகிக்கவல்ல வடவாமுகாக்கினியைப்போலச்சாடத்துடங்கியதெ
ட்படிச்செனிற், சிரங்களைக்கண்டித்தும் மண்டைகளைத்துறந்தும் மூ
ளைகளைச்சிதறியும் கவசத்தைப்பொடித்தும் மார்பைக்கீறியும் தோளைச்ச
ரித்தும் வீரவெண்டயமணிந்த கால்களைக்கண்டித்தும் கரத்திற்பற்றிய
விற்களைத்துணித்தும் வீரங்கள்பேசிய வாய்களைப்பிளந்தும் உருத்தே
விய அஸ்திரசஸ்திரங்களைத் துகள்கண்டும் இவ்விதமாகராட்சதப்படை
களைமாய்த்தும் சொற்ணமயமாகிய அச்சைமுறித்தும் வண்டில்களையுரு
ட்டியும் மோட்டைச்சிதைத்தும் நவரத்தினமயமாகியகொடுங்கைகளைப்
பொடிசெய்தும் தோணிகளை அதப்படுத்தியும் ரத்தினமயமாகியமுசய
டாமணிந்தமத்தகம் பனையையொத்த துதிக்கைகள் உரலையொத்த கால்
கள்சின்னபின்னப்பட்டிறைய மதயானைகளைமாய்த்தும் சொற்ணச்சிலம்
புகள்பூண்டு தத்தித்தாவிப்பாயும் கால்கள் தலைகள் வால்கள் தறிபட்டி
றையப் புரவிப்பந்திகளை நாசஞ்செய்தும் இவ்விதமாக ரதகெக துரகப
தாதிகளையும் சங்கரித்தபோதிலும் வீரவாகுதேவர் செலுத்தும் பாண
கோடிகளின் வேகமடங்காததாய் வானத்திற்பாயும் திசைகளினோடும் வ
னாந்திரங்கள் மலைகள் தீவு தீபாந்திரங்களிற் றுவியும் அணைகளைச்சிதை
த்துச்சமுத்திரத்தைப்பெருக்கியுங்கப்பலைப்போலநீர்ப்பெருக்கிலோடி
யும் மேகத்திற்றுவிச்செலத்தைப் பருகியும் விண்ணுடுகளிற் பறந்தும்
பூமண்டலமுற்றும் நிறைந்தும்சூரியசந்திரர் காந்தியையடக்கியும்சமு
த்திரங்களைமூடி பூமியைப்போலக் காட்டியும் இவ்வித உற்பாதங்களைச்
செய்துபோகின்றவீரவாகுதேவர்செலுத்திய பாணங்களிலொவ்வொன்

று ஆயிரகோடி அவுணர் சிரங்களைக்கண்டித் தோடியபோதினும் அதின்
வேகமடங்காமல் அக்கினியைப்போலவும் பிரசண்ட மாருதத்தையொ
த்தும்ஷரியோடும், இவையன்றியும் அளவற்ற தவங்களைச்செய்துசிறந்
தவரப்பிரசாதங்களைப்பெற்றிருக்கின்ற வீராதிவீரர்களாகிய ராட்சதரா
சர்கள் சிரங்களைக் கருலுமென்றறிந்து வேகமாயோடி சூரபதுமன் வா
சமாயிருக்கின்ற மயேந்திர புரியிற்சேர்ந்து அவர்களுக்குரிய தேவியர்
கரங்களிற் போட்டுப்போகுமென்றால் கந்தசுவாமி சகோதரனாகியவீர
வாகுதேவர் மகிமைகளை நம்போலிகளால் அளவிட்டுச் சொல்லப்படுவ
தோ இத்தன்மையாக உயித்திய பூமியெங்கும் சுழற் காற்றைப்போலத்
திரிந்துதிரிந்து சங்கையற்ற பாணவருஷங்களைப் பொழியுமுன்னிலையி
ல்தோணிகளனைத்தும் துகள்பட்டும் யானைவரிசைகள்முற்றும் அதப்ப
ட்டும் வேகமுள்ள குதிரைப்பந்திகள் சின்னபின்னப்பட்டும் ராட்சதவீ
ரர்கள் காலாள்களுடன் கண்டதுண்டமாக வெட்டுண்டும் ரணக்களத்தி
லொருவனையுங் காணக்கிடையாமற் போனபடியால் சர்வசங்காரமூர்
தியைப்போல வீரவாகுதேவரொருவருந் திரிந்தனர், எவ்விடங்களினு
ம்பிணமலைகள்தோற்றவும் உதிரப்பிரவாகமானது அலைகளைமோதியினா
ந்துபூமியெங்குமூடவும் ரணக்களத்தில் விழுந்துகிடந்த தேர்வண்டில்
கள் யானைப்பிணங்கள் முதலாக அவ்வெள்ளத்தில் மகாமச்சங்களைப்போ
லஅழுந்தியும் மிதந்தும்போகின்றது- மேலும் கருங்கடலைச் செங்க
டலாக்கித் திமிதிமிங்கலங்கள் முதலிய மச்சங்களுக்கு விருந்திட்டது,
இதுவுமல்லாமல் அவ்வெல்லையெங்கும் பற்பலகோடி கவந்தங்கள் கூத்
தாடவும் பூதபசாசங்கள் காளிக்கூட்டங்கள் நிணமாம்சங்களைத்தெவுட்
டஉண்டு வீரன்புகழைப்பாடித் திரியவும் கழுகு பரந்து காக்கைகள் தி
ரத்தியாகப்பொசித்து வானவெல்லையில் பந்தலிட் டுலவவும்நாய்நரிகள்
பிணங்களைப்பிடுங்கித்தின் றுஊளமிட்டுலவவும் இப்பிறகாரம்ரதகெசது
ரகபதாதிகள்மாண்டுசண்டையுமொழிந்ததையும் காலசமனைப்போன்ற
பானுகோபன் வீரவாகுதேவர் பாணங்களின் காயத்தினால் தேரில்மூர்ச்சி
த்துக்கிடப்பதையும் முன்னம் ராட்சதவீரர்கள் போருக்காற்றாம லோ
டிஒளித்திருந்த பூதப்படைகள் கண்டவுடன்சத்திராதிகள்மாண்டற்றதெ
ன்று மனநடுக்கமொழிந்து களித்து தயிரியங்களுடன் மினிநமதிறைவ
னைச்சேரக்கடவோமென்று ஒருவரையொருவர் கூவி ஒன்றுபடச் சேர்
ந்துசமுத்திரத்தைப்போல யினைந்துகொண்டுவரவும் பானுகோபனுற்க
ாத்திருந்த படைத்தலைவரும் -எண்மரும்- இலக்கரும்- உணர்ச்சிபெ
ற்றுமிகுத்த வீராவேசங்களுடன் வீரவாகுதேவனைச்சேர்ந்து களித்திரு
ந்தனர்- அத்தருவாயில் வீராதிவீரன் பாணங்களின் காயத்தினால் மகிமை

யங்கிப் பிரேதத்தைப்போல விழுந்துகிடந்த பானுகோபனுக்கு பஞ்சேந்திரியங்களுந் தத்தமது நிலைகளிற்சேர்ந்து உணர்ச்சி யுண்டாய் விழிகளைத்திறந்து சுற்றிலும் பார்த்துத் தன்னைச்சூழ்ந்திருந்த சதுரங்கச்சேனைகளின் பெருக்கைக் காணாதவனாய் நாய்நரிகளோடிப் பிடுங்கித்தின்றுலவும் பிணமலைகளைநோக்கி மேலும் எதிரில் வீரசிங்கத்தைப்போலச்சொலித்துக்கொண்டு திரிகின்ற ரணரங்கசூரனாகிய வீரவாகுதேவனைப்பார்த்து கடலைப்போல யிரைத்துக்கொண்டு நம்மைச்சூழ்ந்திருந்தநால்வகைச்சேனைகளையும் உருத்தெரியாமற் கொன்றவ னிவனென நிதானித்துவலியும்வீரமும் ஒருவன்பங்கல்ல நானேவீரனென்று சொல்லப்படாதெனத் தீர்மானித்துக் கொண்டவனைச் சூரனென்பது யிந்தவீரனுக்கடுக்கும் மற்றொருவனைச் சொல்லப்போகாதெனக் கொண்டாடி இதனை நினைக்கின்றனன் - யித்தினவரையில் என்னுடனெதுத்துப் போர்செய்தவர்கள் எத்தகைய வீரர்களெனினும் மாண்டும் முதுகுகாட்டி யோடினவரல்லது வெற்றிகொண்டு திரும்பினவர்கள் கிடையாது இக்காலத்திலென்விருப்பை யடக்கித் தனுர்பாணியாக வீற்றிருக்க யிவனைக் கண்டனன் - சூரியனைச்சிறைபடுத்திய வீரனென்று சகலருங்கொண்டாட விருந்த என்வலியும்வீரமும் வெகுநேத்தியாகவிருக்கின்றதென்று தன்னைவெறுத்துக்கொண்டு மானம்பாதித்து மனதையலைக்கக் கோபமேலிட்டு வடவையைப்போலப்பொங்கி ஒருநாழிகைப்போதிற் சிவகுமாரன் தூதனைச்சின்னபின்னப்படக்கண்டித்துக்கொல்லாமற்போவேனாகில் யிந்தவுயிரைத்தாங்கிவாழவிரும்பேன் வீரபராக்கிரமசாலிகளாகிய அவுணர் குலத்திற்பிறந்தவனுமல்ல, ஒப்பற்றயிந்தவில்லுடன் அக்கினிப் பிறவேசமாவேனென்று கொடியபிறிதிக்கினையைச்செய்து ஆயிரத்தெட் டண்டங்களுக்கதிபனாகிய சூரபதுமன் குமாரனானவன் பூர்வத்திற் றிருப்பாற்கடலிலுதித்த ஆலகாலவிஷமானது பரமேஸ்பரர் முன்னம் நேர்ந்ததைப் போலத் தன்தேரைத் தூரத்திக்கொண்டு மதயானைக்கு வயிரியாகிய வீரசிங்கம்போன்ற புசபெல பராக்கிரமசாலியாய் நிற்கின்ற வீரவாகுதேவரிருக்கின்ற ரணக்கள வெல்லையைச்சேர்ந்து ரவுத்திராகாரமாகமண்டியெரிந்து மேருவைப்போலத் தன்கரத்தில் விளங்குகின்ற தனுசைவளைத்து நாணேற்றி குணத்தொனிசெய்து ஆயிரம்முத்தலைப் பாணங்களைப்பூட்டிவீரவாகுதேவர் சிரத்துக்குந் தோளுக்கும் மார்புக்குங் குறிகொண்டுசெலுத்தியதறுவாயிற் சிடசிடத்த தொனிகளுடன் எரிந்து புகைந்து மேலிட்டுவருவதை வீரன்கண்டு துரிதமாய் அத்தொகை பாணங்களைக் கொண்டு பீறிவரவொட்டாமற் கண்ட துண்டப்படக் கண்டித்தெறிந்து போட்டு மேலும் ஆயிரந்திவ்விய பாணங்களைச் சூரன்குமாரனுக் கிலக்

காதத்தாண்டியபோது கொடியபாதகனானவன் துரிதமாய் அத்தொகை
பாணங்களைப்போக்கிச் சின்னபின்னப்படப் பறக்கடித்தது மன்றியில்
மேலும் ஆயிரம் சடுரமாகிய சரங்களைக் கடிதிறபூட்டிச் செலுத்தி வீர
வாகுதேவ ரேறியிருந்த ரதத்தைப்பொடிபடுத்திக் குதிரைகளைவெட்டித்
தள்ளிச்சாரதி தலையையுங்கண்டித்துச் சிங்கநாதஞ்செய்தனன்- இதைக்
கண்டதேவர்க்கள் மனம்வாடித் திகைத்துப்பார்த்திருக்கும்போது வீர
வாகுதேவர்சற்றும் அதறாமல் பெதறாமல் சிங்காசனைப்போல மற்
றொருரதத்திற்பாய்ந்து மண்டிபோட் டுளுக்கார்ந்தவராய் தமது ஒப்
பற்ற காண்டபத்திற் பதினாயிரம் தீட்சணியமுள்ள கணைகளைச்சந்தித்து
ப்போக்கி பானுகோபனாரோகணித்திருந்த மேருவையொத்த தேரைப்
பொடிப்படுத்தி அளவற்றபுரவிகளைக் கால்மாடு தலைமாடாக விழுந்தபு
ரளச்செய்து சாரதியையும் பின்னப்படுத்தி அவன்கரத்திற்பற்றியிருந்த
பாரித்தவில்லையும் படாலுமென்று வெட்டித்தள்ளினர் - இதைவானத்தி
ல்வேடிக்கைபார்த்திருந்த தேவர்க்கள் கண்டமாத்திரத்தில் முகமலர்ச்சி
யுடன் மனமகிழ்ந்து தேவதுந்தமியைமுழக்கி பரிமளமிகுத்த கற்பக
மலரைத்தூவி வாழ்த்தினர்- இப்படிக்குக் களியாடலைக் கொண்டாடும்
தேவர்க்களைச்சீறித் துரிதமாய் பக்கத்திலிருக்கின்ற சேமத்தேர்களி னொ
ன்றிற்பாய்ந்து வீற்றிருந்தவனாய் வில்லை மண்டலாகாரமாய் வளைத்துஅ
திசீக்கிரமத்தில் விடநாகங்களைநிகர்த்துச்சீறித் தீயை யிறைத்தோடும் எ
ழுநூறுபாணங்களைத்தொடுத்துக் காதளவுமிழுத்துப் பர்வதாகிருதியாக
ப்பூரித்திருக்கும்புசங்களையுடையவீரவாகுதேவர்மார்பிற் றைக்கும்படி
க்குப்பிறையோகித்து அட்டகாசஞ்செய்ததறுவாயில் அந்தசரங்கள்வெ
ளிப்பட்டவுடன் சற்பங்களைப்போலச்சீறித் தீயைப்பெருக்கிச்சிடசிடுத்
ததொனிகளைக்காட்டி அதிவேகமாய்வந்து வயிரத்தையொத்த மார்பிற்
சுறுக்குச்சுறுக்கென்று பாய்ந்தமுன்னிலையில்அதுபரியந்தஞ்சோபமெ
ன்பதைத்தெரியாத வீரவாகுதேவர்சற்றுவருந்தித் துயரத்தின்சுவையை
க்கண்டு அதிகோபங்கொண்டவராய்ச் சூரியனைச்சிறைசெய்த இந்தபா
தகன்சிரத்தைக்கண்டித்து- நாய்-நரி-கழுகு-பருந்து-காக்கைக்கு விரு
ந்திடுகின்றனனென்று எமனைப்போலவும் காலருத்திரனைநிகர்த்தும் உ
ருத்துச்சீறித்தமது வீரவில்விற்குறாரமாகிய பதினான்குவயிரவாளிகளைச்
சந்தித்து அபிமந்திரித்துத் தூண்டிப்பானுகோபன் கரத்தில்மந்தரகிரி
க்கொப்பாகப்பாரித்துவிளங்கியிருந்தவில்லைக்கண்டித்துமேலுங்கரவே
கமாய்ஆயிரம் திவ்வியபாணங்களைப்போக்கிப் பகைவன் ஆரோகணித்
திருந்த நவரத்தினமயமாக அலங்கரித்திருக்கின்ற- தேரை-வண்டில்-அ
ச்சு-மச்சு- குத்துக்கால்- கொடுங்கை-முதலிய உறுப்புகளனைத்தும் இ

னாபின்னப்பட் டிறையும்படிக்குக்கண்டித்து அதிற்பூண்டிருந்தபுரவி
ப்பத்திகளைத் -தலை-கால்-வால் பின்னப்படத்தறித்து தேர்ப்பாகனையு
ம் நிலத்திலுருள வெட்டித்தள்ளியுங் கோபந்தணியாதவராய் விஷத்தொ
லையவிட்டுக் கூர்மையாய்சொலித்திருக்கின்ற நாலுகணைகளைக்கொண்டு
அவுணராசபுத்திரன் தரித்திருந்த வயிரக்கவசத்தைப் பொடிப்படுத்திமா
ர்பையும்பிளந்து வாயலைப்போலத்தோற்றச்செய்தனர், சவுனகாதிரிஷிக
ளே. அந்தவீரன்மனவுறுதியையென்சொல்வேன் உதிரப்பிரவாகமாய்
ப்புண்பட்டிருக்கின்றசாயத்தைஎவ்வளவுஞ்சட்டைபண்ணாதவனாய்வருத்
தியிளையாமல் திடசித்தத்துடன் வீரசிங்கத்தைப்போலப் பக்கத்திலிருக்
கின்றசேமத்தேரிற் பாய்ந்ததறுவாயில் வீரவாகுதேவர் கரவேகமாய் ஆ
யிரம் அர்த்தச்சந்திரபாணங்களைப்பிறையோகித்து பிளந்திருக்கின்றமார்
பின்மூலமாக உருவிமுதுகிற்கட்டியிருக்கின்ற அட்செயத்தூணிரத்தை
யறுத்தெறிந்தபோது பானுகோபன் மனந்தளர்ந்து யிந்தசூரனைவில்வி
த்தையின்முயற்சியினால் வெல்வதுமிகவுமரிது இனியென்செய்வோமெ
ன்று சற்றுயோசித்துஒருதுணிவைக்கொண்டவனாய் தனக்குப்பூர்வத்தி
ற்றேவதேவோத்தமனாகிய சிவபிரான்கடாட்சித்திருக்கின்ற மோகனாஸ்
திரத்தைக்கரத்திற்கொண்டனன் - சவுனகாதிரிஷிகளே, அதன்மகிமைக
ளைச்சொல்லக்கேழ்ப்பீராக, எத்தகையவீரபராக்கிரமசாலிகளின் மீதிற்
செலுத்தப்படுமாயினும் நெருங்கியஉடன் அவர்கள் பஞ்சேந்திரியநிலை
களைப்பேதித்து அறிவையழித்துப் பிரேதத்தைப்போலச் சோபித்துக்
கிடக்கச்செய்யவல்லது இத்தகையசிறப்புள்ள படைக்குத் தூபதீபநை
வேத்தியவிதிகளைமானசபூசையில்நிரப்பிமந்திரத்தைஉச்சரித்து ஓதேவா
ஸ்திரமே துரிதமாகப்போய்ச்சென்ம வயிரியாகத்தோன்றி வருத்துகின்
றதூதனையும் அவனைச்சூழ்ந்திருக்கின்ற படைத்தலைவர் பூதவெள்ளங்கள
ளைப்போக்கிவாட்டித்திரும்பக் கடவையெனப்போற்றிச் செலுத்தி
யகாலத்தில் அந்தவெற்றிப்படையானது உக்கிரகாரமாகக் கோபித்து
ஒற்றைவண்டிலையுடைய தேரில்விளங்கிக் கிரணங்களைப்பரப்பி உலகங்க
ளைமகிழச்செய்துலவும் சூரியனொளியையடக்கி காடாந்தகாரமாய் யிரு
ளைப்பெருக்கி பூமியிலிருக்கின்ற பல்லுயிர்களும் நடுநடுங்கித் தெளிவில்
லாமல் அந்தகனைப்போலமயங்கிவாடித்தத்தளிக்கத்தக்கதாகச்சீறி நகை
த்துக்கொண்டுவரும் மோகனாஸ்திரத்தின் மகிமைகளையும்வலிமையையும் பூ
தப்படைகள் கண்டவுடன் துக்கசாகரத்திலழுந்தி பயப்பிராந்திகொண்
டுமனத்திடுக்கிட்டு வாடிமூர்ச்சித்தனர், அவர்களுக்குத்தலைவராகவிருந்த
வீரர்களும்பித்தனைப்போல மதிமயங்கித்தேரைவிட்டு நிலத்தில்விழுந்
துசோர்ந்த தறுவாயில் வீரவாகுதேவருக் கிளையராகிய எண்மரும் தங்

ன்பேரில்ஏறிவருகின்ற பகைவன்பாணத்தைத் தடுக்கவகையற்றவர்களா
ய்க்காத்திற்பற்றியிருந்த விற்களையும் பாணங்களையும்சோரவிட்டுச் சளை
த்துவிழுந்தனர், இவ்விதமாய்க்கைகளைப்பெருக்கி மோகனப் படையான
துசீறிவருகின்றதருவாயில் வீரவாகுதேவர் இந்தப்படையை எந்தபாண
த்தினால் வெல்லலாகுமென்று யோசித்து யாதுந்தோற்றமலிருக்கின்ற
தருவாயில் பூர்வத்தில் ஆலகாலவிஷம்பார்த்து வந்ததைப்போலச் சகலரு
ம்புகழத்தக்க மோகனப்படையானது வேகமாய்ப்பாய்ந்து வீரவாகு
தேவர் உணர்வையழித்துத்தள்ளியது, சவுனகாதிரிஷிகளே, இவ்விதமாக
எண்மரும்இலக்கரும் சேனைத்தலைவர்களும் வாடிக்கிடப்பதையும் அவு
ணவீரர்வாசமாயிருக்கின்ற வீரமாமயேந்திரபுரியைக்கலக்கிச் செயசா
லியாகத்திரும்பிய வீரவாகுதேவர் நிலைக்கண்பட்டு சர்றானைப்போலச்
சோர்ந்திருப்பதையும் சூரியகாதசனாகியவீரன்கண்டுமனக்கவலையொழி
ந்து மகிழ்ந்தவனாய என்னுடனெதுப்பவர்களொருவருமில்லாமற்சகல
ரையும்வென்றேனென்னும் வீருப்பினால்மேருவைப்போலப் புசங்கள்
வளர்ந்தோங்க மதயானையைப்போலக் கெம்பீரமாய் நின்றுநகைத்து
செயவுச்சாகத்துடன் ரணக்களத்திற்றிரிபவன் சண்டைமுனையில் வெல்
லுதற்கரிய புசபெலபராக்கிரமசாலியாகியவீரவாகுதேவரும் மற்றபடை
த்தலைவர்கள் பூதசேனைகள்சோபித்திருக்கின்றனர், காலதாமசஞ்செய்யாம
லினியென்வில்வன்மையினால் இவர்களைக் கண்டதுண்டப்பட வெட்டி
க்கொல்லக்கடவெனெனத் தீர்மானித்துக்கொண்டு தங்கக்கட்டுகள்பூண்
டுமணிகள்சத்தித்திருக்கின்ற பாரித்தவில்லைவளைத்து சங்கோபசங்கமா
கிய திவ்வியபாணங்களைச் சோனைப்பெய்யலைப் போலச்சொரிந்து ரண
க்களமெங்கும் நெருங்கிவிழுந்துகிடக்கின்ற பூதசேனைகள் முதலான
வர்களைச் சல்லடைக்கண்களாசத்துளைத்தும் சின்னபின்னமாகக்கண்டித்
தும் இத்தகையகொடுமைகளைச் செய்துவருகின்றதருவாயில் நடந்தசே
திகளைச்சொல்லக்கேழ்ப்பிராகப், பாடிவீட்டிற் - பிரமன் - விஷ்ணு - இந்
திரன் - முதலாகிய தேவர்க்கள் போற்றிச்சூழ்ந்திருக்க நவரத்தினமயமாகி
யசிங்காதனத்தில்வீற்றிருந்த சரவணபவன்தன்னை நீங்காமற்காத்திருக்கு
ம்வீரவாகுவும் மற்றதுணைவரும் பூதப்படைகளும் கேடுபடாதமயக்
கத்தைப்பெற்று சத்திராதியினாற்படும் பாதைகளைத்திருவுளத்திற் றெரி
ந்தவராய்ச் சராசரப்பிரபஞ்சங்களனைத்தினும் பரிபூரணமாய் நிறைந்து
நடிப்பிக்கும் பெருமையையுடைய சிவசுப்பிரமணியதேவர் அதிசீக்கிரம
த்திற் சகலவன்மைகளையும் பெற்றிருக்கின்ற மோகனாஸ்திர மொன்றை
ச்சிருஷ்டித்து அந்தப்படையைப்பாத்து இவ்வனுக்கிரகத்தைச் செய்வ
தாயினர், உயித்தியகளத்திற்பகைவன்செய்தவஞ்சகத்திற்பட்டுமயங்கிக்

கிடக்கின்றநமது துணைவர் படைத்தலைவர் பூதச்சேனைகள்மையலைப்போ
க்கிப்பழையபடிக்குத் தெளிவுபெறச்செய்து கொடியபாதகனாகியபானு
கோபன் செலுத்திய பாணத்தின்வலியையழித்து மீளக்கடவையெனக் க
ட்டளையிட்டுப் போக்கியதருவாயில் அப்படையானதுவானத்தெழுந்து
கோடிசூரியப்பிரகாசமாகவிளங்கி அதிகமகிமையைக்காட்டி நடந்து
மதிமயங்கி ஒருவர்மீதொருவராகவிழுந்து அசைவற்றுக்கிடக்கின்ற வி
சாலமாகிய ரணகளத்தைநெருங்கியமாத்திரத்திற்கொடியமனத்தையுடை
யபானுகோபன் தூண்டியமாயப்படையானது திடுக்கிட்டுநடுநடுங்கித
ன்வல்லபத்தினாற் சிவசுப்பிரமணியதேவர் சேனைகளிட அறிவைச்சலத்தி
மயக்கியிருந்த மாய்கைப்பெருக்கத்தினையும் கிழித்துக்கொண்டுயி
னிச்சற்றுநேரம் இவ்விடத்திருப்போமாகில் மோசம்நேருமென்று துரித
மாய்ச் சிவகணங்களிருக்கின்ற வெல்லையைத்தாண்டி பானுகோபனிடத்
திற்போய்ச்சேர்ந்தது-சவுனகாதிரிஷிகளே, இவ்விதமாய்மாயப்படை
யானதுதன்வலிகுன்றிக் குறைந்துமீண்டதருவாயில் புசபெலபராக்கிர
மசாலிகளாகிய வீரவாகுதேவருந் துணைவர் இலக்கர் படை வீரர்பூதசே
னைகளுடன் மயக்கத்தைநீங்கித் தெளிவுண்டாய்முன்னிலும் பதின்மண
ங்கு வலிபெற்றெழுந்து கோடி சூரியப்பிரகாசமாய் ரணகளத்திலுல
வியிருக்கின்ற சண்முகதேவர்செலுத்திய மோகனாஸ்திரத்தைத் தெரிசித்
துமாத்திரத்திற்சந்தோஷசாகரத்தில் முழுகிக்கரங்களைக்கூப்பிக்கொண்டு
செயசெயபோற்றிபோற்றி யெனத்துதித்து விழிகளில்ஆனந்தவாரிபெ
ருகப்பலவிதங்களில் வாழ்த்தி துற்மாற்சனாகியபானுகோபன் செலுத்திய
மாயப்படையினாற் சோர்ந்துகிடந்த யாமெல்லவரும் இந்தபடைக்கர
சின்பெருமையினால்தெளிவுபெற்றெழுந்தனமெனத்தெரிந்தவுடன்சகல
விருப்புகளுமடங்கி யொடுங்கி மெய்ப்பத்திவிளங்க இதனை யோசிக்கி
ன்றனர், டசைவனால்நாமெல்லவரும் புத்திமயங்கிச் சோர்ந்தகாரணத்
தைப்போதநாயகனாகிய குமாரதேவர் திருவுளத்திற்றெரிந்து கிருபைகூ
ர்ந்தவராய் நமதுமையலையொழித்து ரட்சிக்கும்பொருட்டு இந்ததெய்
வீகப்படையைச் செலுத்தினரென் நிதானித்துப் பன்னிருபுயாசலங்களை
ப் பெற்றிருக்கின்ற பாலசுப்பிரமணியதேவர் பாதநாமங்களைச்சிந்தித்
துப்போற்றிபயபத்தியுடன் திக்குநோக்கித் தீர்க்கதெண்டன் சமர்ப்பித்
து கற்தன் குறுதிசெயங்களைவாழ்த்தி அஷ்டதிசைகளும் செவிடுபடத்
தக்கதாகத் துதித்து ஆனந்தக்கூத்தாடுகின்ற தருவாயில் மோகனாஸ்திரமா
னது ரணகளத்தைவிட்டு மின்னலைப்போலச் சடுதியிற்றிரும்பி குமார
சுவாமியாரிடத்திற் சேர்ந்தது-சவுனகாதிரிஷிகளே,பாலசுப்பிரமணியர்
திருபாகடாட்சத்தினால் மையலையொழிந்து வுணர்ச்சிபெற்றெழுந்தபூத

ப்படைகளானது சிங்கநாதம் அட்டகாசங்களைச் செய்துக்கொண்டு வீர
ங்களைப்பேசிக் கரங்களைப்பிசைந்து மோசக்காறன்வஞ்சகன் இவனைவி
டலாகாது அடியுங்கோள்கட்டுங்கோள் சொல்லுங்கோளென்றுசீறிகோ
பாவேசங்களுடன் சண்டைகொடுக்கமேலிட்டு நடக்கின்றதறுவாயில்வீர
சிங்கத்தையொத்த செயசாலியாகிய வீரவாகுதேவர்பகைவன் வஞ்சகத்தி
லகப்பட்டு மயங்கியிருந்தமானமுங் கோபமும் மனதைவருத்தவுத்தி
ராகாரமாகக்கொதித்து இதையென்னுவதாயினர், இந்தசத்துராதியானவ
ன் ஒருவஞ்சகப்படையின்பெருமையினால் நம்மெல்லவரையும்மயக்கிவீ
றியிருக்கின்ற செற்வச்செதஇந்தநிமிஷத்தில் வாட்டிக்கொன்று சோய
ந்தணிவேனென நிதானித்து தமக்குப்பாலசுப்பிறமணியதேவர் கொடுத்
திருக்கின்றபாசுபதாஸ்திரத்தைத் தொடுக்கநினைந்துகரத்திலெடுத்தபோ
து பானுகோபன் அட்டடையின் பெருமிதங்களைமதித்து இதனைநினைப்
பநாயினன், தேவதேவோத்தமனாகிய சிவகுமாரன்செலுத்தியமோகனாஸ்
திரம் செகச்சோதிமயமாய்வானவழிக்கொண்டுவந்ததையும் அதற்குமு
ன்வீறியிருந்ததன்படையின் வல்லபமடங்கியொடுங்கித்திரும்பி விட்ட
தையும் கோபாவேசத்துடன் வீரவாகுதேவர் எத்தனித்திருப்பதையும் இ
ஷ்டாந்திரமாகக் கண்டனம்இனிதம்மாலாகவேண்டுவதென்னவிருக்கின்
றதென்று மனத்தளர்ச்சிகொண்டு வீரபராக்கிறமசாலியாகிய கந்தசுவாமி
துணைவன்மீதிற் கோபித்துச்சண்டை கொடுக்கப்போக மனமில்லாமற்
செயவுச்சாகத்தையும் வீரத்தையும் புயவன்மையையும் மறந்துதுக்கசா
கரத்திலழுந்தி மனவாட்டத்துடன் நினையாதஎண்ணங்களையோசிப்பதா
யினன், சிலநேரத்திக்குமுன்னம் என்பாணவன்மையினாற்சத்துருக்கள
னைவரையும் மதியைமயக்கிப் பிரேதங்களைப்போல ரணக்களத்திற்கிடத்
தினேன் உடனேமுன்னினும் அதிகவீறுப்புடனெழுந்து வளைந்துகொ
ண்டு கொடியபோரைச்செய்ய உத்தேசிக்கின்றனர், பரமசிவகடாட்சம்இ
ப்படிக்கிருக்குமாகிற் றனிமையில்நிற்கின்ற என்னால் இனிமுடிக்கத்தக்
ககாரியமென்னவிருக்கின்றது அப்படிக்கல்லவென்று இன்னமும்சில
தந்திரங்களைக்கொண்டு போராடுவோமென் நினைந்தபோதினும் நமது
பகைவன்கடைப்பிடியாகவிருக்கின்றபாசுபதாஸ்திரத்தைப் பிறையோ
கிக்கநினைந்து கரத்திற்கொண்டனன், இனிமந்திரபூர்வகமாகச் செலு
த்துவனாயிற் றடையில்லாமலென்னைக்கொன்று பிராணனையுண்டுபோ
ம்இதைத்தடுத்துப்போராடி ஒருவிதசெயத்துடன் திரும்பலாமென நி
னைப்பெனாகில் சிவபிரான்முன்னங் கடாட்சித்திருக்கின்ற பாசுபதத்தை
க்கொண்டுவாராமல் இந்தபோரைச்சுலபமாகவெண்ணி வந்துவிட்டேன்
மற்றெத்ததந்திரத்தினாலும் இந்ததானைவெல்வதரிது இவன்மிகவும்ப

வாட்டமுறுகவிருப்பதாற் றுரிதமாய்நகரத்துக்குப்போய்ப் பாசுபதாஸ்
திரமுதலிய தெய்வபாணங்களனைத்தையுஞ் சேகரித்துக்கொண்டு வந்து
இவனைச்செயிப்பது உத்தமமாகவிருக்கின்றது சற்றுநேரந்தாழ்ப்போ
மாகில் மோசம்வரும்மிவையன்றியில் வேறொருஉறுதியைக்காணேனெ
னத்தீர்மானித்துப் பானுகோபன் தட்சிணத்திலொரு மாயமந்திரத்தையு
ச்சரித்து அதன்முயற்சியினால் அருபியாய் நவரத்தினமயமாகவிளங்கிக்
கொண்டிருக்கின்ற தன்தேரைவிட்டு வானத்திற்பாய்ந்து மேகவடிவா
ய் அதிசீக்கிரமத்தில் மயேந்திரபுரியைச்சேர்ந்தனன், இதைக்கண்டமா
த்திரத்திற் றப்பியிருந்தராட்சதர்களனைவருந் திகைத்துமனவாட்டத்துட
னோடிப்போனார்கள் இச்சம்பவங்களை வானத்திலிருந்த தேவர்க்கள்பா
ர்த்து உத்தரியங்களைமேலெறிந்துமுதனாள் செயம்நம்முது நம்முதென்
று கூவிக்கூவித்துள்ளிச் சந்தோஷசாகரத்தில்மூழ்கி இனிமேலும்வீரவா
குதேவருக்குவெற்றியுண்டாகக்கடவதென்றுவாழ்த்தி ஒவிராதிவீரனேசூ
ரன்குமாரன்உமதுசவுரியபராக்கிரமத்துக்குத் தாபரித்து நிற்கமாட்டா
மல் வானவழிக்கொண்டோடி நகரத்தில்மறைந்தனன். அந்தப்போது
ம்நேர்ந்தது நாளையத்தினம்வருவனாகில் விட்டுவிடாமல்மடக்கிச் சாடிக்
கொன்று எங்கள்மனவருத்தத்தைப் போக்கவேண்டுமென பஞ்சகற்ப
கமலர்களைவாரிவாரியிறைத்தார்கள் யிதுநிற்கப்பானுகோபன் செயசாலி
யைப்போல வில்லைக்கரத்திற்கொண்டு நின்றதையும்பின்பு மாயமாய்வா
னத்தில் மறைந்துபோனதையும் வீரவாகுதேவர்பார்த்து பாதகன் தப்பி
த்துக்கொண்டுபோய் விட்டனனென்கின்ற கோபாவேசத்துடன் கட்டுப்
பட்டமதயானையைப்போலவும் காலாந்தகனுக்கொப்பாகவும் சீறிநிற்கி
ன்றதறுவாயில் இக்காரணங்களைத் தெரிந்த துணைவரும் இலக்கரும் பூத
வீரர்களும் பாதகன்வஞ்சகன் வலியற்றோடினன். நாமெல்லவரும்போ
ய்ச்சண்டாளனைத்தேடிப் பிடித்துக்கட்டிக்கொண்டு வருவோமென்றெ
த்தனப்படுவதை வீரன்கண்டு தம்பியர்முதலானவர்களை அருகிலழைத்து
இதனைச்சொல்லுவார் பேடியைப்போலமானபிமான மில்லாமல்மரண
பீதிகொண்டோடிப்போன சத்திராதியைத்துடர்ந்து கொல்வதுவீரரு
க்கடுக்குமோ மேலுஞ் செயப்பிரதாபமாகவுமிருக்கப்படாது ஆதலா
ற்போனவிரும்பியின்னமொருதரம்வருவனாயில் முன்பின்பாராமற் சத்
தியமாய்ச்சொல்வேன் இனிகோபத்தைத்தணிவீர்களெனவீரன்பேசியநீதி
மாற்சங்களிற்கட்டுப்பட்டுநல்லது எங்கேதப்பிப்போகிறான்நாளைக்கே
முடித்துப்போடுவோமெனச் சம்மதித்திருந்தனர், இந்தசெயத்தைக் க
ண்டபூதப்படைகள் சந்தோஷமிகுதியினாற் பற்வதங்களைப்போலப் பூ
ரித்திருக்கின்ற கரங்களைக்கொட்டிக் கூத்தாடி அண்டங்களதிர ஆர்ப்பரி

த்துக்களித்திருந்தனர், அக்காலத்திற் சூரியபகவான் அஸ்தமானகிரியை
ச்சேர்ந்ததெப்படிக்கிருந்ததென்றால் இத்தினம்போர்முற்றியது இனி
சண்டைநடக்கப்போறதில்லை சென்மப்பகைவனாகிய பானுகோபன் வ
லியையிழந்தோடினன், வீரவாகுதேவர்சேனைகளுடன்பாசறையைச் சே
ர்வர் நாமும் இரவுமுற்றுஞ் சவுக்கியமாகவிருந்து நாளைக்குவந்து சண்
டையைப் பார்ப்போமென்றெண்ணி மறைந்ததைப்போலவும் செக்கர்
வானமும் அதனிடையில் நட்சத்திரங்களும் விளங்குவதைப்பார்க்குமி
டத்தில் லட்சுமிவாசஞ்செய்யுஞ் செந்தாமரைப் புஷ்பித்ததைப்போன்று
ம் அதனிடத்திருந்திலையும் முத்துகளை நிகர்த்துக்காட்டவும் சந்திரனு
தையஞ்செய்ததைப் பார்க்குமிடத்தில் தாருகாவனரிஷிகள் சிவபிரானி
டத்திற் கோபித்துச்செலுத்திய நகுவெண்டலையைப் போலத்தோற்றிய
து, இவ்விதச்சிறப்புகளைக்காட்டும் அந்திப்போது நேர்ந்தமாத்திரத்தி
ல்துணைவர் இலக்கர் படைத்தலைவர்கள் பூதச்சேனைகள்சூழ்ந்து போற்றி
வரத்தக்கதாகபுசபெலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் ரணபத்திர
காளி நடித்திருக்கின்ற போர்க்களத்தைக்கடந்து- ரணபேரி- செயபேரி
வெற்றிச்சங்க முதலிய வாத்தியங்கள் செயம் செயமென்று முழங்கி
வரப் பாசறையைச்சேர்ந்து தேரைவிட் டிறங்கித் துணைவர்முதலியர் பி
ன்தொடர்ந்துவரச் சபாமண்டபத்தைக்கண்டு- பிரமன்-விஷ்ணு-தேவே
ந்திரனாகியர் போற்றிச்சூழ்ந்திருக்கச் சிங்காதனத்தி லெழுந்தருளியிரா
நின்ற சிவசுப்பிறமணியதேவரை நெருங்கிச்சேவித்துகரங்களைக் கூப்பி
நின்றுதான் ரணக்களத்தைச்சேர்ந்ததும் பானுகோபன்கணக்கிறந்தசயி
ன்னியங்களுடன்வந்துகொடியபோரைச்செய்துகடையிற்புறந்தந்தோ
டியதையும்சவிஸ்தாரமாகவிண்ணப்பஞ் செய்துகொண்டதனைத்தையும்
பாலசுப்பிறமணியதேவர் விரும்பிக்கேட்டு பரிவாய் சகோதரனே யித்தி
னம்பானுகோபனுடனெதுத்து அரியசண்டைகளைச் செய்தபடியால் மி
கவும்வருந்தினை உன்துணைவர் முதலானவர்களுடன் யிருப்பிடங்களைச்
சேர்ந்து சவுக்கியமாகயிருக்கக்கடவையெனத் திருவாய்மலர்ந்தபோது
செலவுபெற்றுக்கொண்டு வெளிவந்து பூதசேனைகளை அவர்களுக்குரிய
இடங்களிற்செலுத்தித் தாமும்மற்றவீரர்களுடன் விடுதிகளிற்சேர்ந்தன
ர், சவுனகாதிரிஷிகளே இனிமகதயில்ஸ்பரியச்செல்வத்தைக்கொண்டிருக்கி
ன்றவீரமாமயேந்திரபுரியில் நடந்தசேதிகளைப் பேசுவோமென்று சூத
புராணிகர்சொல்லத் தொடங்கினர், வீரகாளிபரணிபாடிக் களித்துலவுகின்
றபோர்க்களத்தில் வீரவாகுதேவருக் கழிந்தோடிய பானுகோபன் மன
தில்அளவற்ற துக்கமும் பழியும்மானமும் நிறைந்துபாதித்துவருத்தத
னக்குரிய ராசசின்னங்களனைத்தையும் யிழந்தவனாய்ராசாதிராசன்வீற்றி

ருக்கின்ற நகரத்திற்போகாமற் றான்வாசஞ்செய்யும் அரமனையைச்சேர்
ந்து ஆணமடைந்தவனைப்போல வருந்தித்தலையைக்கவிழ்ந்து மந்திரிபிர
தானிகளுடன் கலந்துவார்த்தையாட மனமில்லாமலும் சேனைத்தலைவர்க
ளைக்கூவிமேல்நடக்கவேண்டியகாரியங்களுக்குக் கட்டளையிட நினையா
மலும்சபாமண்டபத்திற்போய் நவரத்தினமயமாகிய சிங்காதனத்திலிரு
ந்து அரசுசெலுத்தவேண்டாமலும்-ரம்பை-யூர்வசி-திலோத்தமை-மே
னகை-முதலாகியதேவகன்னியர் மயிலைப்போல நடித்துங் குயிலையொ
ப்பத் தேவகானங்களைப்பாடுவதையுங் கண்டுகளிக்க விரும்பாமலும் இ
ரதிக்குச் சமதையாகிய சுந்தரமுள்ளதேவியர் முகாரவிந்தங்களைப்பார்
த்து யின்சொற்களைப்பேசி ஆலிங்கனஞ்செய்யுங் கியாபகத்தைக்கொள்
ளாமலும்ஊடியிருந்த மங்கையரைத் திருத்தியடைவிக்கக்கருதாமலும்
சப்பிரகூடமஞ்சத்தினிடத்திற் பள்ளிகொள்ள யிஷ்டமில்லாமலும் நித்
திரையைவெறுத்து யிரவுகழிந்து சூரியனுதையமானவுடன்சதுரங்கச்சே
னைகளையுங் கூட்டிக்கொண்டுபோய் பிறகாசம்பொருந்திய வேலைத்தா
ங்கியிருக்கும் பாலசுப்பிறமணியக்கடவுளையும் வீரவாகுதேவர் முதலிய
படைவீரர்பூதகணங்களையும்மடக்கிக்கொண்டுகொடியபோரைச்செய்து
சின்னபின்னப்படக்கண்டித்துவெல்லுகின்றதற்குவேண்டியதந்திரவுபா
யங்களை வேறொரு கியாபகங்களுமில்லாமல் ஆராய்ந்துகொண்டு தாம
ரையிலையிற்பட் டலையும் நீர்த்துளியைப்போல மனம்நிலைபெறுமல்கவ
லைகொண்டு வருந்தியிருந்தனன், இவ்விதசவுக்கியத்திற் பானுகோப னி
ருக்கின்றதறுவாயிற்சமர்க்களத்தில் நடந்தவிசித்திரங்களையெல்லாம்பா
ர்த்திருந்த தூதர்கள்வேகமாயோடிவந்து பட்டணத்தைச்சேர்ந்து ராசா
திராசனாகியசூரபதுமன் வீற்றிருக்கின்ற நகரத்திற்போய்ச் சக்கிறவர்த்தி
யைக்கண்டு சேவித்துகரங்களைக்கூப்பி முகப்பொலிவழிந்து மனவ ட்
டத்துடன் இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர், அகண்டமண்டலாதிப்
பரனே கேட்டருள்க தேவரீர்திருக்குமாரன் பலவெள்ளஞ்சேனைகளுட
ன் ரணக்களத்தைச்சேர்ந்து வெற்றிமாலைபூணும் புசபெல பராக்கிரம
சாலியாகிய வீரவாகுடனெதுத்து அகோரவுயித்தியங்களைச் செய்து செ
யசாலியாகிய துணைவர் இலக்கர் படைவீரர் பூதச்சேனைகளுடன் சின்ன
பின்னப்பட வாட்டிக்கடையிற் றனியனாய் இவடம்வந்து சேர்ந்தன
ன், அப்படிக்குத்திரும்புவதற்குச் சிலயேதுவையுண்டோயென்னமோ
அடியோங்களுக்குப் பூர்த்தியாகத்தோற்றவில்லை இதன்காரணங்களைவிசா
ரணைசெய்யுமிடத்திற் றேவரீர்சித்தத்துக்கு விசிதமாகும் பானுகோபன்
திரும்பியபின்பு மின்னலையொப்ப விளங்குகின்றவேலாயுதக்கடவுள் தா
னும்சேனைப்பெருக்குடன் துணைவர்முதலானவர்கள் போற்றிவரச் செ

யவுச்சாகத்துடன் செயபேரி மங்கல வாத்தியங்கள் முழங்கத்தக்கதாக
ப்பாடிவீட்டைப்போய்ச்சேர்ந்தான், இதுகளை நாங்கள் பார்த்துவந்தோ
மென்று வேவுக்காறர்குறிப்பாகச்சொன்னதைச் சூரன் நிதானித்துப் பா
ர்த்து சத்திராதிகளுடன் போர்செய்து வெல்லத்திராணியில்லாமல் தன்
குமாரன்திரும்பிவிட்டதைத் தெரிந்தமாத்திரத்தில் வடவாமுகாக்கினியு
ம்ஆலகாலவிஷமும் வெப்பமடங்கிப்பதுங்குவதாகக் கோபங்கொண்டு
விழிகளிற்றீயெழப்பார்த்து புகையும்அனலும் பெருகப் பெருமூச்செ
றிந்துநகைத்து இதனைச்சொல்லுவான், துணைவரையும்பிள்ளைகளையும் ப
டைத்தலைவரையும்மிகவும் பிராணபதமாயிருக்கின்ற சுற்றத்தாரையும் ந
ம்பிஇப்படிக்கொத்த கடினசண்டையை வெற்றிபெறக் குறித்தனுப்ப
லாகாது இதைமுன்னமே தீர்க்காலோசனைசெய்து தகுந்தபிறையெத்தன
ங்களைச் செய்யாமற்போனேன் ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெ
ட்டுகங்களாக எதிரின்றிஅரசுசெலுத்திவந்தேன் அப்படிக்கொத்த கீர்த்தி
யுள்ள இந்தஅவுணமரபுக்கு இக்காலத்திலொருகுற்றம்வந்துநேர்ந்தது
இனிஒருவரையும்நம்பிப் போருக்கனுப்பமாட்டேன் பாற்பெருக்கத்தி
ற்புரைகுத்தியதைப்போல இந்தபழிப்புரையைச் செவிகளிற்சுடும்படிக்
குக்கேழ்க்கலாச்சுது ஆதலால்அளவற்ற ரதகெசதுரகபதாதிகளைக் கூட்டி
க்கொண்டுநாளையத்தினம்நானேபோய் சிவகுமாரனாகிய கந்தனையும்அவ
னைச்சூழ்ந்திருக்கின்ற வீரர்களையும் மடக்கிக்கொண்டு சின்னபின்னப்ப
டச்சாடிதுரத்திவிட்டு செயவுச்சாகத்துடன் திரும்பக்கடவேன் அதர்க
ளேபதலமாய்காத்திருக்கக்கடவீர்களெனக் கட்டளையிட்ட மாத்திரத்தி
ற்சேவித்துவெளிவந்திருந்தனர், அதன்பின்புசத்திராதிகளைவென்று கீர்த்தி
யைநாட்டவேண்டுமென்கின்ற கியாபகத்துடன்அதற்குவேண்டும் முய
ற்சிகளை நினைந்துநினைந்து மற்றகாரியங்களை மறந்துயெப்போ பொ
ழுது வெடியப்போகுதென்று எதிர்பாத்து நித்திரையை யிழந்து மன
ந்தாபரியாமல் அலைச்சற்பட்டு எண்ணுதெல்லா மெண்ணியெண்ணிச் சூ
ரபதுமன்வருந்தியிருந்தனன், அவ்விரவானதொழிந்து சந்திரன்மறைந்
து நட்சத்திரங்கள் மழுங்கிப்போன தெப்படிக்கிருந்ததெனில், எதிர்ந்
தசத்திராதிகளைச் சின்னபின்னப்படவாட்டிச் செயம்பெற நினைந்திருக்
கின்ற சுத்தவீரர்களுக்கு நீடித்தும் வீரமற்ற யிருதயத்தை யுடையவர்க
ளுக்குக் குறுகியும் அவ்விரவுதோற்றவும் தம்பதிசமேதராகவிருப்பவர்
களாகினும் நிற்கமனமில்லாமற்றங்கள்மனதுக்கினியமங்கையரைத்தே
டித்திரிகின்ற காமுகரைப்போலக் கழிந்தும் தென்திசையைப் பரிபால
னஞ்செய்திருந்த யிரவென்னும் அரசனானவன் பகற்கிறைவனாகிய சூரிய
ன்கிரணகாந்திகளைவிரித்துவர வெத்தனித்திருப்பதைக் கண்டமாத்திரத்

திற் சந்திரனென்னும் குடையானது முன்போக நட்சத்திரக் கூட்டங்களாகிய சேனைகளுடன் ஓடிப்போனதைப்போல மறைந்தும் யிருளென்னும்பிடவையைக் கணவனாகிய சந்திரனானவன் கரத்தினால் நீக்கிப்புணர்ந்தின்பமுற்று நீங்கியகாலத்திற் சூரியன் வருவானெனத் தெரிந்து நாணத்தினால்முன்னவிழ்த்தியிருந்தஇருட்படாததையுடுத்திக்கொண்டுஇரவென்னுங் கன்னிகையோடிப்போனதைப்போலவும் ராத்திரிகாலங்கழிந்தது,

---

## இரண்டாநாள்சூரபதுமனுயித்தியப்படலம்.

சூதபுராணிகர்சவுனகாதிரிஷிகளுக்கு மறுநாள்நடந்த சவிஸ்தாரங்களையுஞ்சொல்லத்துடங்கினர், இப்பிறகாரம்இராக்காலம்நீங்கிச் சூரியனுதையமானதெப்படிக்குக் காட்டியதென்றால், ராகுகேதுவென்னும்பாம்புகள் விழுங்கி யலைப்பதையொழிந்து களித்திருக்கும் படிக்கு நினைந்து அரியதவங்களைச்செய்து மகாவிஷ்ணுவின் கடாட்சத்தினாற்சந்திரன்சங்கமாய்முன்செல்லவும் சூரியன்சத்திருயுதவடிவுகொண்டு செயஉச்சாகத்துடன் வெளிப்பட்டதைப்போல உதையஞ்செய்தனர், இவ்விதமாகச்சூரியன்கீழ்த்திசையிற் றோற்றுவதற்குமுன்னம்சூரபதுமன் நவரத்தினமயமாகிய அம்சதூலிகாசயனத்தைவிட்டெழுந்து ஸ்தானபானமுதலிய நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு பரிசனங்கள்குடைகள் வெண்சாய்மரைகள் ஆலவட்டங்கள்முதலாகிய ராசஉபசாரங்களைச்செய்து வரத்தக்கதாக அரமனையைக்கடந்து நவரத்தினமயமாகவிளங்கிக்கொண்டிருக்கும் சபாமண்டபத்திலெழுந்தருளி மந்திரிபிறதானிகள்சேனைத்தலைவர்கள் முதலியசகலரும் பணிந்துபோற்றச் சிங்காதனத்தில் வீற்றிருந்தவனாய்த் தன்குமாரன் நேத்தியத்தினம் பெற்றுவந்த அபசெயத்தையும் அதனாலுண்டாகும்பழிப்புரையையும்நினைந்துமனதிற்கோபாக்கினிபெருகப் பெருமூச்செறிந்து இனிசண்டை கொடுப்பதற்குயாரையும் செலுத்தமாட்டேன் சேனைகளைக்கூட்டிக்கொண்டுநானே போய்ச்சத்திராதிகள் வலியையும் வீரத்தையும்வாட்டி வெற்றிகொண்டு திரும்பக்கடவேனென நிச்சயித்துஎக்காலத்தினு மழியாதகீர்த்தியைப் படைத்திருக்கின்ற சூரபதுமனானவன் தனக்கெதிரில் கரங்களைக்கூப்பிக்கொண்டுநிற்கின்ற தூதர்களிற்கோடானகோடி பேரைக்கூவி சத்தசாகரங்களின் மத்தியிற்றோற்றும் தீவுதீபாந்திரங்களில் வாசமாயிருக்கின்ற

நமதுசேனைகளனைத்தையும் இந்தநிமிஷத்திற் கூட்டிக்கொண்டுவாக்கட
வீர்களெனக் கட்டளையிட்டவுடன் மகாபாக்கியமென்றுவணங்கிப்போ
யிராட்சதவீரர்களிருக்கின்ற யிடங்களைச்சேர்ந்து ராசயரமேல்பரன் ப
ணிவிடையைச் சொன்னமாத்திரத்திற் போர்கிடைத்ததென்னும் மனஉ
ச்சாகங்களுடன் ரதகெசதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளுஞ்சே
ர்ந்து நூறாயிரவெள்ளத்தொகைகொண்ட சயின்னியங்கள் வெளிப்பட்டு
சூலம்-கணிச்சி-தண்டம்- தோமரம்-குலிசம்-சப்பணம்- பிண்டிபால
ம்- சக்கரம்-கேடயம்-குந்த-முதலான படைகளையும் பாரித்தவிற்களை
யும் கொடியபாணவிதங்களையும் அபரிமிதமாகத்தாங்கிக்கொண்டு நட
க்கும்போது அவர்களுக்குத்தலைவர்களாகிய அவுணவீரர்கள் சர்வாயுத
பாணிகளாய் பாரித்ததேர்களில்வீற்றிருந்து போர்விவருகின்றதறுவாயி
ல்அச்சுமையைத்தாங்கப் படாமல் பூமியானது நெளிந்துநெளிந்து தத்
தளிக்கவும் ஆதிசேஷன் ஆயிரஞ்சிரங்களும் வருந்தித்தாங்கி விஷங்களை
கக்கிக்கொண்டு பாதவிக்கவும் இவர்கள் ஆரவாரஓசையினாற்றிசைகள்செ
விடுபட்டுத்தியங்கவும், அக்காலத்திலெழுந்த தூளிபடலமானது படிந்
துசத்தசாகரங்களும் சேறாய்க்கலங்கவும்- ரணபேரி-செயபேரி- வெற்
றிச்சங்கம்- சின்ன-முதலிய போர்ப்பறைகள் அண்டங்களதிர முழங்கவு
ம்வெண்பட்டுக்கொடைகொடி துசங்களெங்கும்நிறைந்து நிழலைச்செ
ய்துவரவும் தேர்களோடுங்கெற்காத் தொனிகளினாலும் மதயானைகள்வீ
றிடுமுழக்கத்தினாலும்குதிரைகள்கனைப்பின்சத்தத்தினாலும்தேவர்க்கள்தி
கிற்பட்டு என்னவிளையுமோவென்று நடுநடுங்கிவாடவும் இவ்விதஆடம்
பரங்களுடன் பெரும்புறக்கடலைப்போல எங்கும்பரந்து வீரமாமயே
ந்திரபுரியைச்சேர்ந்து சமுத்திரகோஷமும் நாணும்படிக்கு வாத்திய
ங்களை முழக்கி ஆர்ப்பரித்தனர், அக்காலத்திற் றூதர்களோடிச் சபாம
ண்டபத்திலிருக்கின்ற சூரபதுமனைப்பணிந்து ராசாதிராசனே சேனைக
ளனைத்தும் வந்துசேர்ந்ததென விண்ணப்பஞ்செய்த்மாத்திரத்தில்மகா
சபையைக்கடந்து வெளிவந்து மகம்மேருவுக்குச் சமதையாகப் பல
நிலைகளைப்பெற்றோங்கி யிருக்கின்ற நவரத்தினமயமாகிய கோபுரத்தின்
மீதிலேறிச் சக்கிறவர்த்தியானவன் நாலுபக்கங்களினும் விழிகளைப்பரப்
பிச் சூரியக்கிரணங்களும் பாயயிடமில்லாமல் நெருங்கிச் சிங்கனாதங்க
ள்அட்டகாசங்களைச்செய்துக்கொண்டு பட்டணத்தைச்சூழ்ந்திருக்குஞ்
சேனாசமுத்திரத்தின் பெருக்கைப்பாத்து மனதைவாட்டியிருந்தவருத்
தங்களையொழிந்துவாகுவலையங்கள் தெறித்து நவரத்தினங்களும் பலதி
சையிற் சிதறும்படிக்குப் புசங்கள்பூரித்தோங்கவும் சத்துராதிகளனைவ
ரையும் வெற்றிகொண்டவனைப்போலச் சரீரம்விம்மிக்களித்து விழிகளு

க்களவுபடாமற் சர்வசங்காரகாலத்திற் பெருகும் வெள்ளத்தைப்போல
நிற்கின்றவீரர்கள் பெருக்கத்தை மனத்திழுத்தியாசப்பாத்து பலகவர்மீ
திற்றரிதமாய்ப்போகும் எண்ணங்கொண்டவனாய்ச் சூரியனை யொப்ப
சொலித்துக்கொண்டிருக்கும் கோபுரநிலைகளைக் கடந்திறங்கிப் போய்க்
கோட்டம்பிரவேசித்தகாலத்தில் தாய்தந்தையரெனப் பார்க்காமற்கொன்
றுநின்றுங் கடைசித்தமுடைய விராதிவீரர்கள் கோடாகோடிச்சனக்கிற்
கண்ணிமைப்போலக் காவல்கொண்டு சொர்ணமயமாகச் சொலித்தி
ருக்கின்ற விசாலமாகிய ஆயுதச்சாலையைச்சேர்ந்து வணங்கிஆதியிற்சிவ
பிரான் கடாட்சித்திருக்கின்ற தனுவையும் பாசுபதமுதலாகிய திவ்வியபா
ணங்களையும் மற்றதேவர்கள்வேண்டிக்கொடுத்த அஸ்திரங்களையும்சேக
ரித்துக்கொண்டு கூரியகணைவிதங்களடங்கியிருக்கின்ற அட்செயத்தூணி
ரத்தை முதுகிலிருக்கிக் கரங்களில் திவ்வியமாகிய சோதைகளைமாட்டிவி
ரல்கடோறும் பொன்மயமாகிய புட்டில்களைத்தரித்துச் சுகந்ததயிலத்தி
னுல் வாரிச்சேர்த்துக் கட்டியிருக்கின்ற சிகைவிளங்கும் சிரத்தினிடத்தி
ற்கோடிசூரியப்பிரகாசமாக சொலித்துக்கொண்டிருக்கின்ற வயிரமுடி
யிற்பரிமளித்திராநின்ற தும்பைமாலையைச்சூடிமற்றபோற்கோலத்தை
யும் பூர்த்தியாகச்செய்துக்கொண்டு வெளிவந்து மகம்மேருவோமந்தர
கிரியோவெனச் சங்கிக்கும் உன்னதமுள்ளதாய் நவரத்தினகார்திகளைவீ
சிப்பாத்திருக்கும் இந்திரஞாலத்தேரில் சூரியனைப்போலத் தாவியே
றிவீற்றிருந்து வாயுவேகத்தின மேவிட்டுப்பாயும்வேகமும் டஞ்சலட்
சணங்களும் அண்டங்களதிருங்கனைப்புமுள்ள குதிரைப்பந்திகளும்பர்
வதங்கள் கால்கள்முளைத்தெழுந்ததைப்போன்ற பாரித்த திரேகத்தைப்
பெற்ற மதயானைபனிகளும் சொர்ணமயமாகிய- வண்டில்கள்- அச்சு-
மச்சு-குத்துக்கால்-கொடுங்கை-கொடை-முதலியசிங்காரங்களைக்கொ
ண்டு அலைகளைப் போலத்தாவும் வேகமுள்ள புரவிக்கூட்டங்களையும்-சி
ங்கம்-யாளி-புலி-முதலியமிருகங்களையும் அணியணியாகப்பூட்டிச் செ
லுத்தும் நவரத்தினமயமாகிய தேர்நிரைகளானவை சூழ்ந்துபோகவும்
மின்னலையொப்ப விளங்குகின்ற வாளாயுதங்களைக் கரத்திற்றாங்கிக்கொ
ண்டுசேனைத்தலைவர்களும்மதிநூதிமந்திரிபிறதானிகளும் நெருங்கியிருபா
ரிசங்களிலும் நடக்கவும் வானத்தையளாவி நவரத்தினங்களி னொளியை
வீசியிருக்கின்ற மாடமாளிகைகள் கோபுரங்கள் சித்திரக்கூடங்கள் யி
ருபாரிசங்களிலும் நெருங்கிச் சூரியக்காந்தியையும் மறைத்திராநின்ற
கோடானகோடி ராசவீதிகளைக்கடந்து -செயபேரி- வெற்றிச்சங்கம்-சி
ன்னம்-பின்னாங்குழல்- முதலாகிய வாத்தியங்கள்முழங்கிவரச் சக்கிற
வாளகிரியைப்போலப் பாரித்துவளர்ந்திருக்கும் பொன்மதிற் புறத்தில்

அண்டநிரைகளை நிகர்த்துப் பலநிலைகளையுடையதாய்ச் சித்திரப் பிறதிமை
கள்பெருத்து ரத்தினகாந்தியை வீசிக்கொண்டிருக்கின்ற கோபுரவாயிலை
த்தாண்டி வெளியில்வந்தகாலத்தில் அவ்விடத்தில்நெருங்கியிருக்கின்றசே
னைகள் ராசாதிராசன் வரவைப்பார்த்தவுடன் ஆயிரங்கிரணங்களைவீசியெ
ழுஞ் சூரியனுதையத்தைக்கண்ட உலகங்களைப்போன்றும் சோடசகலைக
ளைப்பெற்றிருக்கின்ற சந்திரனெழுச்சியைத் தெரிந்தசமுத்திரத்தைநிகரி
த் தும்மேருவைவளைந் தலைத்திருக்கின்ற புசப்பிரளயத்துக் கொப்பாகவு
ம் ரதகெசதுரகபதாதிகளாகிய ஆயிரநூறுவெள்ளம் சயின்னியங்களும்
பேரொலியைக்காட்டி செயம்செயமென்று ஆர்ப்பரித்துக் கொண்டுவ
ந்துசக்கிறவற்றியைச் சூழ்ந்துபோற்றினர், இப்படிச்சுச்சந்தித்ததறுவா
யில்முழக்கிய ரணபேரி-காகளம்-சல்லரி-மல்லரி - திமிலை-தக்கை- குட
முழா-முதலிய வாத்தியங்களினோசையை யின்னவிதமென்றுயாவராலு
ஞ்சொல்லிமுடியாது அத்தறுவாயிற் சிங்கமுகாசூரன்பிள்ளை அதிசூரனு
ம்தாருகாசூரன்பிள்ளை அசுரேந்திரனும் போர்க்கோலங்களைத் தரித்துக்
கொண்டுஅதிகவுக்கிறத்துடன் வந்து பெரியதந்தையைக்கண்டுவணங்கி
க்கட்டளைக் கெதிர்பார்த்திருக்கின்ற குமாரர்களிடத்திற் பரிவாகப்பார்த்
து இந்தவுத்திரவைச்சொல்லுவதாயினன், குமாரர்களேஇதனைக் கேட்பீ
ராக, அலைகளைவீசிக்கொண்டிருக்கும் சமுத்திரத்தைப்போலச்செலசம
ற்தியாயிருக்கின்ற தடாகமானது தகுதியாகியகரையில்லாதகாலத்தில்மீறி
யுடைத்துக்கொண்டோடிப் பலதிசையிலும் பாய்ந்துபோம் அதைப்
போலவே சத்திராதிகளைச் சின்னபின்னப்படச் சண்டைகொடுக்க வல்ல
சேனைப்பெருக்கானது மிகுதியாகவிருந்தபோதினும் அவைகளுக்குத்த
க்ககாவலைப்போற்றும்வீரபராக்கிறமசாலிகளாகிய தலைவர்களில்லாதபோ
து உயித்தியமுனையில் தலைவிரிகோலமாய்ச் சிதறியழிந்தோடிப்போம் ஆ
தலால் நீங்களிருவரும் போர்க்களத்தில் இந்த பெருத்த சேனைகளுக்கு
த்தலைவர்களாகவிருந்து காலங்களுக்கடுத்த அணிவகுப்புகளைச்செய்து ச
த்திராதிகளை வெல்லும்படிக்குமுன்னுதாய் நடக்கக் கடவீர்களென்றுகட்
டளையிட்டமாத்திரத்தில் மிகுத்தசந்தோஷித்துடன் பிதாவேதேவரீர்நி
னைந்தகாரியம் தகுதியாகவிருக்கின்றது அவ்வாறேபோய்ச்செயப்பிறதாப
த்துடன் திரும்பிவந்துசொல்லக்கேட்டு மகிழ்வீராகதேவரீர் வருத்தமி
ன்றிமெத்தனப்புறவணியில் வரலாமென வீரங்களைப்பேசிச் செலவுபெ
ற்றுக்கொண்டு தங்களிரதங்களைச் செலுத்தித்துரிதமாகப்போய் பற்பல
சண்டைகளிற் சத்திராதிகளைப் புறங்கண்டவீராதிவீரர்களாதலாற்சேனை
த்தலைவர்களைக் கூவிச்சக்கிறகாரமாகச்சுழன்று அதிக ஆரவாரங்களைச்செ
ய்துபோகின்ற நால்வகைச்சேனைகளையும் சீர்படுத்திப்பலபல யூகவணிக

ளாக்கி அதன்மத்திகளிற் செயசாலிகளாக விருக்கப்பட்ட அவுணவீரர்க
ளையிருக்கிறாற்புறங்களிலும் வெற்றியாராகவிருக்கின்ற படைத்தலைவர்
களைக் காத்துவாச்செய்து தாங்களும்வில்லைவளைத்துக் காத்திற்கொண்டு
யுத்தசன்னத்தராய்க்கண்டவர்கள்செர்ப்பநீற்யேதப்படும்படிக்குக்காளாந்
நகனைப்போல முன்னணியிற்போகின்றனர், இப்பிறகாரம்போற்றுதல்
நாட்டி ராசகுமாரர்களிருவருந்தங்களுக்குத்தலைவராகப்போவதைத்தெ
ரிந்த நூறாயிரவெள்ளம்மாட்சதச்சேனைகளும் அதிகசந்தோஷித்தையடை
ந்துவிராவேசங்களுடன் ரணக்களமெங்கே பகைவரெங்கேயெனத் தே
டிக்கொண்டு நடக்கின்றபோது அப்பாரத்தினைத்தாங்கமாட்டாமல் ஆ
திசேஷனும் அஷ்டமாநாகங்களும் திக்குயானைகளும் முழிகள்பிதுங்கி
வாடவும்பூவட்டமானது தத்தளித்துக்கீழ்மேலாகவும் சமுத்திரம்சொ
றிப்பெடுத்துப் பெருகவும் இவ்விதஉற்பாதங்களுடன் மும்மதங்களை
ப்பெருக்கி வானத்திலோடும் மேகங்களைத்துதிக்கையைநீட்டிப் பற்றிய
தலிடத்திருக்கின்ற செலத்தைத்தாகசாந்திசெய்யும் வுன்னதமுள்ள யா
னைப்பெருக்கும் பர்வதங்களைப்போலப் பாரித்திருக்கின்ற சொற்னம
யமாகிய தேர்ப்பந்திகளும் தத்தித்தாவிப்பாயும் வேகமுள்ள புரவியணி
களும் மிகாச்சலிட்டுப்போகின்றசதுரங்கச்சேனைவெள்ளங்களின் மத்தி
யிற் பருத்தவயிரங்களினுஞ் சோடித்துச் சொல்லுதற்கரிய சிங்காரங்களை
ப்பெற்றிருக்கின்ற இந்திரஞாலத்தேரின் மீதிற் சூரபதுமன் ஆரோகணி
த்துப்போகின்றதெப்படியிருந்ததெனிற், கடலின்டத் தடங்கியிருந்
தவடவாமுகாக்கினியானது மீறிபிரளயவெள்ளத்தைப்போலப்பாய்ந்தெ
ழுந்தகாலத்தில் ஆலகாலவிஷமானது தனியுருவினைத்தாங்கி அதன்மத்தி
யிற்பிறிதிபிம்பித்துக் காட்டுவதைப்போலத்தோற்றியது, இவ்விதமாகி
யசேனைப்பெருக்குடன் ராசாதிராசன் புறவணியில்வருகின்ற காலத்திற்
கோடானகோடிமாட்சதர்கள்-ரணபேரி- செயபேரி-உடுக்கை-பம்பை-
தூரியம் பிலி-கோடு-படகம். மொந்தை-திமிலை-தடாரி-தக்கை-கண்
டை-இலளி- தாளம்-காகளம்- பதலை-வெற்றிச்சங்கம்-குடமுழா- மு
ரசாதிய-தோற்கருவி- துளைக்கருவி-மிடற்றுக்கருவி-கஞ்சக்கருவி-நர
ம்புக்கருவி- யெனச்சொல்லாநின்ற ஐவகைத்தாகிய பதினெண்வாத்திய
ங்களிடும்சிசைகளிமுழங்கிச் செல்லுகின்ற காலத்திற்சொற்னமயமா
ய்வானத்தையளாவும் உன்னதமுள்ள தேர்ப்பந்திகள் செற்கரத் தொனிக
ளைக்காட்டி யோடுந்தொனியும் நீலகிரிகளுக் கொப்பாகப்பாரித்து மும்
மதங்களையும் ஒழுக்கிக்கொண்டுநடக்கும் யானைக்கூட்டங்கள் வீறிட்டு
ப்போகுஞ்சத்தமும் அலைகளைப்போலத்தாவி இடிகளதிரக்கனைக்கும் பு
ரவிகளின் ஆரவாரங்களும் மிதம்பாங்களினுஞ் சோடித்து படபடத்த

தொனிகளைக்காட்டி வாலத்தையளாவநிற்கின்ற துசங்களின் முழக்கமு
ம் அவுணவீரர்கள் பாதங்களிற்கட்டியிருக்கின்ற வீரவெண்டயங்களின்
கலிப்புமொன்றுபடக்கலந்தெழுவதினால் திசைகளிலும்புவனங்களிலும்
தீவுதீபாந்திரங்களிலுமிருக்கின்றசகலபிராணிகளும்[illegible]மைகொண்
டுமெய்மயங்கிச் செவிடுபட்டுக்களைக்கவும் வயிரக்கிரோதத்தினைப் பெற்றி
ருக்கின்ற சூரபதுமன் சதுரங்கசேனைகளும் நடக்கும்போதுண்டாகிய
தூளிபடலமானதோங்கி ஆயிரங்கிரணங்களைப்பரப்பி உலகங்களை விள
க்கிவருஞ் சூரியனைமூடிமழுக்கிச் சந்திரனைப் போலக்காட்டவும் மேலு
ம்தெய்வலோகத்தில் நெருங்கிய தெப்படிக்கிருந்ததெனில், மானிடர்
தேவர்பாதலவாசிகளாதியாக என்னிடத்தில் வாசமாயிருந்து தவவிரதங்
களைச்செய்து அம்முயற்சியினால் இம்மைப்பிறைபோசலங்களை அனுப
வித்தும்மறுமையில் இந்திரபோகச் செல்வத்தையும் மோட்சசாம்பிராச்
சியமுதலியவளங்களையும்பெறச்செய்யவல்லபெருமையினையுடையஎன்
னைக்கீழுலகமென விண்ணவர்வசனிப்பதால் என் பெருமிதங்களைக்காட்
டுவேனென்று பூமிசோபித்துச்சண்டைகொடுக்கப்போவதாக நினைந்து
முந்திதாசிப்படையைச்செலுத்தியதுக் கொப்பாகபொன்னுலகை நிறை
த்துமண்ணுலகமாக்கிடம் இமையாநாட்டத்தினையுடையதேவர்கள்விழி
களிற் படிந்துவருத்திடும் தெளிந்தசெலப்பெருக்கைவாய்ந்த தேவகங்
கையில் விழுந்துகலக்கிச் சேறாக்கியும்திசைகளிற்பரந்து மயக்கியும்பெ
ருகிய தூளியின் பெருமிதங்களையென் சொல்வேன் இதுவுமல்லாமற் பற
வதாகிய தியாயோங்கியிருக்கின்ற ரதங்களின் மீதினும் சிவந்தவிழிகளை
யுடையமதயானைகளின்மீதினும் விளங்குகின்ற துசபடங்களானவை அ
சையுந்தோறுமவானகங்கையிற்படிந்து படிந்துவிசுத்திகள்பூமியி
ற்சிதறுவதைப்பார்க்குமிடத்தில் நம்மிடத்திருந்து அசுசிசெய்துவந்தசூ
ரபதுமன் இத்தினம்வருந்தி அபசெயத்துடன்திரும்புவன் இதற்கென்
செய்வோமென்று வீரமாமயேந்திரபுரியாகிய நாயகி துக்கித்து விழிகளி
ல்நீரையிறைப்பதைப்போன்றும் சந்திரவட்டக்குடைகள் ஆலவட்டங்க
ளெவ்விடத்தும் பெருத்துக்காட்டுவதை நிதானிக்குமிடத்தில் வெண்டா
மரைசெந்தாமரைமலர்கள் அலர்ந்துதோற்றுவதையொத்தும் பாரித்த
மணிகளினாற் சோதித்திருக்கின்ற காம்புகளினிடத்தில்வெண்பட்டாடை
களினால்வட்டமாக்கி ஆணிமுத்துத்தாழ்வடங்களைச் சுற்றிலுந்தொங்கவி
ட்டு ரத்தினமயமாகவிளங்கும் பூச்சக்கிறக்கொடைகளும் மயிற்பிஞ்சங்
களும் வெண்சாமரைகளும் நெருங்கிவானத்தைமறைப்பதால சூரியகி
ரணங்களைத்தடுத்து இருள்செய்யவும் சிரோரத்தினக்காந்திகள் பரந்து
அவ்விருளைப்போக்கி மிகுத்த ஒளியைக்காட்டவும் இவ்விதஆடம்பரங்

களுடன் ராட்சதச்சேனாசமுத்திரஞ் சூழ்ந்துவர இந்திரஞாலத் தேரினிட
த்தில் வீற்றிருந்து சூரபதுமன் வருகின்ற பெருமிதங்களைத் தேவராசனு
மிந்திரன் கண்டவுடன் நடுநடுங்கிப் பயப்பிராந்திகொண்டோடி-பிர
மன்-விஷ்ணு-முதலியதேவர்க்கள்போற்றத் திருச்சபையில் விளங்குஞ்சி
ங்காதனத்தில்வீற்றிருக்கின்ற குமாரதேவனைச்சேவித்துச்சரங்களைக்கூப்
பிக்கொண்டு வாய்குழற இதனைவிண்ணப்பஞ் செய்கின்றனன், தேவாதி
தேவனேவேதங்களின் முடிவேசோதிமயமே லோகநாயகனே அடியவர்
களைப்பாதுகாத்தாளவெழுந்ததெய்வமேகேட்டருள்க சச்சிதானந்தமூர்
த்தியாய் எள்ளுக்குளெண்ணெயைப்போலச்சராசரப்பிரபஞ்சங்களினிடத்
திலும்பரிபூரணமாக நிறைவெய்தியிருக்கின்றபரமசிவம் பூர்வத்திற்சூர
ன் துணைவருடன்செய்த அரியதவங்களுக்கிரங்கி வேண்டியவரப்பேறு
களைத்தரப்பெற்று கொடுங்கோல் செலுத்திவரும் பாதகனான சூரன்ம
தயானைகளைப்போன்ற வலிமையையும் வடவையைநிகர்த்த கோபத்தையு
ம்பெற்ற செயசாலிகளாகிய ராட்சதவெள்ளங்கள் யானை குதிரைதேரணி
களுடன் சூழ்ந்துவரத்தக்கதாகத் தேவரீருடன்டைத்துச் சண்டைகொ
டுக்கச் சீறிவருகின்றனன் இவனைச்சுலபமாயெண்ணலாகாது அடியோங்
களுக்கனுக்கிரகஞ்செய்திருக்கின்றபடிக்குத் தேவரீர்எழுந்தருளி தேவ
ர்க்கள்குலகாதகனைவென்று புராதனமாகவிருக்கின்றஎங்கள் அரசுரிமை
களையும் பொன்னுலக வாழ்வையும் கடாட்சிக்கவேண்டுமெனப் பலவித
ங்களிற்போற்றி யிரக்குமுன்னிலையில் பாலசுப்பிரமணியதேவர் இந்திர
ன்படும்வருத்தத்தைத் திருவுளத்திற்கொண்டு கிருபையாகப்பார்த்தருளி
தேவராசனே பயப்படவேண்டாம் உன்னிஷ்டப்படிக்குச் செய்யக்கட
வோமெனக்கையமர்த்தினவராய் நவரத்தினமயமாகவிளங்குகின்ற சி
ங்காதனத்தைவிட்டிறங்கி ஆதிசேஷனைவென்ற செயசாலியாகிய வாயுதே
வன்மீது விழிகளைப்பரப்பி துரிதமாய் நம்முடதேரைக் கொண்டுவரக்க
டவையெனக்கட்டளையிட்டமாத்திரத்தில் அதிசந்தோஷித்துடன் சுத்த
னேயிதோதந்தனனென்றோடி வேகமுள்ளபுரவிகளைப்பூட்டிச் சொர்ண
மயமாகவிளங்கிக்கொண்டிருக்கும் தெய்வீகத்தேரைத்திருத்தித்துரத்தி
க்கொண்டுவந்து எதிரில்நிறுத்திச் சேவித்தகாலத்திற்-பிரமன்-விஷ்ணு
முதலாகிய தேவர்க்கள்பாரிசாதபுஷ்பங்களை யிறைத்து வாழ்த்தெம்ப
தாக வெற்றிவேலாயுதக்கடவுளானவர் ஒப்புவமையற்ற சிங்காரத்தைக்
கொண்டிருக்கும் ரதத்தில்ஆரோகணித்தமாத்திரத்தில் அக்கினிக்கொழு
ந்தைப்போன்ற சிவந்தசிகையையுடைய பூதப்படைகள் சமுத்திரமும்
அஞ்சும்படிக்கு ஆர்ப்பரித்துக்கூத்தாடவும்-ரணபேரி-செயபேரி-வெ
ற்றிச்சங்கம்-உடுக்கை-கல்லரி-மத்தளம்- குடமுழா-படகம்-வீணை-பி

ள்ளாங்குழல்- எக்காளை சின்ன- முதலாகியவாத்தியங்களைக் கோடான
கோடி கணநாதர்கள் முழக்கிச்செல்லவும் தவச்சிரேஷ்டர்களாகிய தும்பு
ருநாரதர்- கின்னரர்-கிம்புருடர்-கெருடகாந்தருவர்கள் யாழினங்களைமீ
ட்டிச் சிவசுப்பிரமணியதேவர் பெருமைகளைப்பாடித்துடரவும் முப்ப
த்துமுக்கோடிதேவர்க்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் குமாரதே
வர்பாததாமரைகளைச் சிந்தித்துப்போற்றிக்கூத்தாடவும் இவ்விதஆடம்
பரங்களுடன் நடக்கின்றதருவாயிற் பாலசுப்பிரமணியதேவர் கட்டளையி
ன்படிக்குப் புசபெலபராக்கிரமசாலியாகியவீரவாகுதேவருந்தம்பியரு
ம் இலக்கரும்சணுகிபதிகளும் தங்களுக்குரிய வாகனங்களிலேறிக்கொ
ண்டு யுத்தசன்னத்தராய்ச் சேனைகளின்மத்தியிற் காத்துப்போகவும்பெ
ரும்புறக் கடலைப்போல யிரைந்துகொண்டுவரும் பூதவெள்ளங்களுட
ன் முந்திச்செல்லுகின்றதருவாயிற்சிவகுமாரன் தேவேந்திரன்முதலான
வர்கள்சூழ்ந்து போற்றிவரப்புறவணியில் வருவதாயினர், முதலணியிற்
போகின்றபூதப்படைகளானவை பிரளயவெள்ளத்தினு மேலிட்டு யிரை
ந்துகொண்டு அணிவகுத்துச்சண்டைக் காயுத்தப்பட்டிருக்கின்ற ரணக்
களத்தைச்சேர்ந்ததருவாயில் பூமிஆகாயமெங்குமிடமில்லாமல்நெரு
ங்கி ரவுத்திராகாரமாகக் கோபித்திருந்தசூரபதுமன் சேனைகள்சீறிப்பூ
தப்படைகளைவளைந்த தெப்படியிருந்ததெனில், சராசரப்பிரபஞ்சங்க
ளைத்தகிக்கவல்ல வடவாமுகாக்கினியைப் பகைத்துக்கருங்கடல் அலைக
ளைவீசியெழுந்து சூழ்ந்ததைப்போலக்காட்டியது,இவ்விதமாகப் பாதக
ர்மேலிட்டுவருங்காலத்திற் செயசாலிகளாகிய பூதவீரர்கள் வீராவேசங்க
ளுடன் அதட்டிச்சண்டைக்கு நேர்ந்தமாத்திரத்தில் ராட்சதர் அதிகசோ
பங்கொண்டு பூதரைச்சட்டைபண்ணாமல் நெருங்கியிருதிறத்துச் சேனை
களுங் கைகலந்து கொடியபோரைச் செய்யத்தொடங்கியபோ துண்டா
கிய அதிர்ச்சியினால்பூமிகிடுகிடெனநடுங்கிஅண்டகோளகை நெக்குவிட்
டுதிரத்தலப்பட்டது,இவ்விதஉற்பாதங்கள்காட்டும்படிக்குச்செயசாலிக
ளாகியபூதவீரர்கள் சிலரோங்கி விழிகளில் தீப்பொறிசிதற வடவையைப்
போற்சீறிப்பாய்ந்து வானத்தையளாவித் திசைகளிற்கிளைகளைப்பரப்பித்
தழைத்திருக்கின்ற மராமரமுதலிய பருத்தவிருட்சங்களை வேருடன்பிடு
ங்கிச்சுழற்றிமோதியும் மேருகிரிக்குச்சமதையாகப் பாரித்திருக்கின்றப
ர்வதங்களைப்பெயர்த்தெடுத்துக் கடாவியும் - தீயையிறைக்கும்- கழுமு
ள்-சக்கரம்- பிண்டிபாலம்-வேல்-தண்ட-முதலிய-ஆயுதங்களைப் பகை
வர்மீதுசெலுத்தியும்போராடுகின்றதை ராட்சதப்பாதகர்கண்டமாத்திரத்
தில்விஷப்பற்களையுடைய சற்பங்களைப்போலச்சீறி நல்லகாரியம் உங்க
ள் ஆணவத்தையடக்குமேமென்று வீரங்களைப்பேசி பாரித்தவிற்களைமு

ண்டவாகாரமாகவளைத்துச் சகலருத்திடுக்கிடத்தக்கதாகக் குணத்தொனி
கொண்டு விஷத்தொவையபிட்டிருக்கின்ற கொடியபாணவருஷங்களைப்
பொழிந்தும்- கணிசி- சக்கரம்- வேல்- சூலம்- முசலம்- கப்பணம்-
பிண்டிபாலம்- இத்தகையவலிய ஆயுதங்களைக்கடாவியும் பின்னிடையா
மற்போராடுகின்றதறவாயில் பூதவெள்ளமானது ஆக்கிரகித்துக் காலாந்
தகனைப்போல மண்டுமெரிந்து யானையணிகளினிடத்திற் பாய்ந்துபற்ப
லதுதிக்கைகளைச் சேர்த்துப்பிடித்துக் கிறகிறென்றச்சுழற்றிக் குதிரைப்ப
ந்திகளின்மீதிற் சாடிக்கொன்றும் சம்பாத்தாளைப்போல நிலத்திலறைந்
தெறிந்தும் வால்களைப்பற்றி திசாதிசைகளிற்போய் விழுந்துருளவீசியு
ம்மேகங்கள் திசைத்தோடவானத்தெறிந்தும் பதைபதைத்து வீழிட்டுப்
புளக்கமுத்தைமுறித்துச் சாய்த்தும் இப்படிக்குவீறி உலவுகின்றவர்க
ளிற் சிலசிவகணங்கள் கொக்கரித்துக்கொண்டு சொற்னமயமாய் ரத்தின
காந்திகளைவீசி பாரித்திருக்கின்ற ரதபந்திகளிற் பாய்ந்து ஆயிரமாயிர
மாக விசாலமாகிய கரங்களினுல்வாரி அளவற்றமதயானைகள் சின்னபின்
னப்பட்டுருளச்சாடியும் ஆயிரம்யானைகளைத் தாக்கிப்பதினுயிரம் புரவி
கள்துகள்பட மொத்தியும் பற்வதம்போன்றகாத்திர திரோகத்தைப்படை
த்திருக்கின்றசிலபூதவீரர்கள்கோபாவேசங்களுடன்தாவிவேகமுள்ளபதி
னுயிரம் குதிரைகளைச்சேர்த்தெடுத்து ஆயிரகோடிசுத்தவீரராகியராட்சத
ர்கள் பூமியிலறைபட்டிறக்கச்சாடியும் கோடானகோடி அவுணவீரரைக்கு
த்திக்கொன்றும் மண்டைகளையுடைத்தும் கால்களைமுறித்தும் கரங்களை
யொடித்தும் மார்புகள்பிளந்துருளத் தாக்கியும் வாய்ப்பிளக்க அறைந்து
ம்இவ்விதமாகப்பூதப்படைகள்வீறிக்கொன்றசதுரங்கச்சேனைகளையும்
நாசப்படுத்துவதை வாயுவேகத்தினும் மேலிட்டுப்பாயும் புரவிகளின்மீ
தேறி வையாளிவிடப்பட்ட ராட்சதசூரர்களும் நீலகிரிகளையொத்தகாத்
திரமுள்ளமதயானைகளின்மீதுவருகின்றசெயசாலிகளும் சக்கிருகாரமாக்
ச்சுழன்றசெற்காத்தொனிகளைக்காட்டி ஓடுகின்றதேர்ப்பந்திகளில்மண்
டிபோட்டிருக்கின்ற வீராதிவீரர்களும் பாதசாரிகளாகவருகின்ற செய
சாலிகளும்பார்த்து அதிககோபங்கொண்டு அபலராகியஇந்த பூதங்கள்சூ
ரமுள்ளநம்மவரை இப்படிச்சூம்வாட்டுவோ இவர்கள்வீறுப்பையடக்
கிக்கொல்லுவோமென்றுந் திரங்களுடன் வலையை வீசியதைப்போலப்
பலதிசையினுஞ் சுற்றிக்கொண்டு ஒருபுறத்தில் ஊசிகளையொத்த கூரியஅ
லகையுடைய கணைகளைப்பிறைபோகித்தும் அர்த்தசந்திர பாணங்களைப்
போகியும் கொடிய விஷத்தொவைவபலிட்டிருக்கின்ற சரங்களைச்செலு
த்தியும்சோனைப்பெய்யலுக்கு மேலாகபலகணைகளைத் தூண்டிக்கொல்ல
வும் சிலஅவுணவீரர்கள் காலாந்தகனைப்போலப் பொங்கி வாளாயுதங்க

ளைக்கொண்டு வெட்டியும் சூலங்களினாற்குத்தியும் பிண்டிபாலங்களினா
ல்மோதியும் தண்டங்களினாற்றாக்கியும் சக்கரங்களைச்செலுத்திச்சங்கரித்
தும்பகைவர்வீசுகின்ற பர்வதங்களைத் துகள்கண்டும் விருட்சங்களைப்
பொடிபடுத்தியும் பாரித்தகால்களைக்கண்டித்தும் பருத்திருக்கின்றதோ
ள்களைச்சரித்தும் ஆசானுபாகுவாக நீண்டிருக்குங்கரங்களைத் தறித்தும்
சிவந்தமயிரையுடைய சிரங்களை வெட்டியெறிந்தும் விசாலமாகிய மார்
பைப்பிளந்தும் கண்டதுண்டப்படக்கண்டித்தும் இவ்விதமாகராட்ச
தர்மேலிட்டுச்சாடும்போது பூதர்கள் தாபரிக்கப் படாமையால் யிளைப்பய
தைஅவர்களுக்குத்தலைவராகவிருக்கின்ற வீராதி வீரர்கள்கண்டுறவுத்திரா
காரமாகக்கோபித்து நீண்டிருகுந்தைகளினும் மணிகள்கட்டியிருக்கின்ற
விற்களைவளைத்து நாணேற்றி காலசற்பங்களையொத்த திவ்வியபாணவித
ங்களைப்பிறையோகித்தும்- தண்டாயுதம் -பிண்டிபாலம் - முசலம்-கப்
பண-முதலாகியபடைகளைச்சங்கோபசங்கமாகச்சொரிந்தும் திக்குமுக்
காடவொட்டாமற் கண்டங்கண்டமாய்த்துண்டர்துண்டமாய்க் கால்மா
டுதலைமாடாகச் சின்னபின்னப்பட்டுருளக் கண்டிக்கும்போது பூமியிட
ம்பெருமல் வானவெல்லையினும் நெருங்கியிருந்தபாதகராகிய ராட்ச
தர்கள் தேரணிகள் மதயானைக்கூட்டங்கள் புரவிப்பந்திகள் அளவிறந்த
வெள்ளக்கணக்கில் நின்றவைமாண்டு ரணக்களமெங்கும் பிணமலைகளா
ய்க்குவிந்துகிடக்கவும் அப்போதுபெருக்கெடுத்தோடிய உதிரவெள்ள
மானது அலைகளைவீசி யிறைந்துகளேபரங்கள் முதலாகியவற்றைப் புரட்
டிக்கொண்டுபோய் கருங்கடலிற்பாய்ந்து செங்கடலாக்கி மகரமச்சங்
களுக்கு விருந்திட்டுமகிழச்செய்யவும் உயித்தியகளமெங்கனும்பலகோ
டிகவந்தங்கள்கூத்தாடுவதெப்படிக் கிருந்ததெனில், வெற்றிவேலைத் தா
ங்கியிருக்கின்ற சரவணபவன்திருநோக்கம்பாய்ந்து அவன்படைகளினா
ல்மாண்டபடியால் இருவினைப் பெந்தங்களுக்கிடமாகிய சொடியபிறவி
யிற்படவறியோம் கிறுதார்த்தராய்நற்செதியைச் சேருவோமென்று களி
த்துஆனந்தக் கூத்தாடுவதைப்போல விருந்தது – கழுகு-பருந்து– காக்
கைமுதலிய பறவைகள்பிணமாம்சங்களைத் தெவுட்டவுண்டுசூரியக்கிரண
ங்கள் படவொட்டாமல் பந்தலைப்போலவானத்தில் வட்டமிட்டுலவவும்
இவ்விதமாக மானத்தைபூஷணமாகக்கொண்டிருந்த ராட்சதப்படைக
ளும் யானைக்கூட்டங்களும் புரவிப்பந்திகளும் மாண்டுவெள்ளிடையா
கக்காட்ட அகோரயுயித்தியங்களைச்செய்து செயசாலிகளாய் விதியிருக்
கின்றகுதியபூதகணங்களின் செயத்தையும் விருப்பையும்ஆணவத்தையு
ம்அவுணச்சேனைகளுக்குத் தலைமைபெற்றிருக்கின்ற ராசகுமாரர்களிலொ
ருவனாகிய அதிசூரனென்னுங் காளையானவன் கண்டமாத்திரத்தில் தன்

தேரைமுடுக்கிக்கொண்டு விழிகள்சிவந்து தீயையிறைக்க மீசைதுடிக்க
மானம்பாரித்து மனதைவாட்டிக்கொழுத்த றவுத்திராகாரமாகிய கோப
ங்கொண்டு அதிவேகமாய்ப் போம்போது நவரத்தினமயமாய்வானத்தை
யளாவஓங்கி பற்பல புரவிகளைப்பூண்டுமனோவேகத்தினு மேலிட்டோடு
ம்வேகமுள்ள கோடானகோடி தேர்க்காறர் நாற்புறங்களினும் போற்றி
வரவும் துதிக்கைகளில்வயிரத்தண்டத்தையொத்த யிருப்புலக்கைகளைப்ப
ற்றி அண்டமுகடுடையும்படிக்குச் சுழற்றியாகன்குறிப்பின் வண்ணம்ச
த்துருக்களை யதஞ்செய்யவல்ல வலிமையுடைய மதயானைக் கூட்டங்கள்
பற்வதங்கள் கால்முளைத்தசைவதைப்போல விரிட்டுக்கொண்டு போகவு
ம்கடலினும் வானத்திலும்திசைகளினும் அரைக்கணத்திற்பாய்ந்துமீளு
ம்பாய்ச்சலுடைய புரவியணிகள் யிடிகளைப்போலக் கனைத்துவரவும் சற்
வாயுதபாணிகளாய்ப் பகைத்தெதுத்தவர்கள் ஊட்டியைக்கடித் துதிரபா
னஞ்செய்யும் கோபாவேசங்களைவாய்ந்த ராட்சதவெள்ளங்கள் பிறசண்
டவாயுவினுமேலிட்டுஎவ்விடங்களினும் நெருங்கிப்பகைவரைத் தேடிந
டக்கவும் இத்தகைய சதுரங்கச்சேனைகளின் மத்தியில் சுழிசுத்தமுள்ள
இரண்டாயிரம்புரவிகள் பூண்டோடும்நவரத்தினமயமாகிய தேரினிடத்
தில்ஆயிரஞ்சூரியர்கள் ஒருருக்கொண்டு நிற்பதுக்கொப்பாகச் சிரோர
த்தினபாணங்கள் கிரோகமெங்குஞ் சொலிக்கத்தோன்றிய அதிசூரனெ
ன்னும்ராசகுமாரன் வீராவேசத்துடன் சேனைகளுக்குமுந்தி ரதத்தை
க்கொண்டுபோய் மகம்மேருவுக்கொப்பாகப் பாரித்திராநின்ற தனுவை
யெடுத்துநாட்டி வட்டாகாரமாய்வளைத்து நாணேற்றித்திசைக ளதிரக்கு
ணத்தொனிகொண்டுவிஷத்தொவையவிட்ட கொடியசிலீமுகங்களையும்
அர்த்தச்சந்திரபாணங்களையும் வயிரஊசிகளைப்போலக்கூர்மையுள்ளகணை
களையும் மற்றுமிராநின்ற திவ்வியசரங்களையும் அபிரிமிதமாகச் சந்தித்
துக் கரவேகமாய்ச் சோனைமாரியைப்போலச் சொரிந்து எதிரில்வீறியி
ருந்த பூதவெள்ளங்களைச் சின்னபின்னப்படவாட்டிச் சிரங்களைக்கொய்
தும்தோள்களைச் சரித்தும்கரங்களைக்கண்டித்தும் மார்பைப் பிளர்தும்
கால்களைத்தறித்தும் இவ்விதமாக அல்லோலகல்லோலப்படுத்திச்சக்கிர
காரமாகத் தேரைச்சுழற்றிக்கொண்டு ரணக்களமெங்குமுலவிச் சாடுவ
தைக்கண்ட சிவபூதர்கள்பிரமித்து அம்மம்மஇதுவென்ன அதிசெயமாக
விருக்கின்றது ஒருதேர்க்காறன்சிலரோங்கிப் பகைவரைச்சட்டைபண்ணு
மல் காலாந்தகனைப்போல வளைந்துகொண்டு சாடுகின்றனன், இவனை
யொத்தவீரர்களை யிதுபரியந்தங்கண்டதில்லை யாருமிருக்கவு மாட்டார்
கள்சூரனென்பது இவனுக்கேதகுமென்று கொண்டாடித்திகைப்பதையு
ம்சத்திராதியாகியராசகுமாரன் சேவகத்திறத்தையும்ஊழிகாலத்திற் சத்த

சாகரங்களும் மேருகிரியைச்சூழ்ந்தலைப்பதைப்போலப் பகைவனைவளை
ந்துகொண்டு சக்கிருகாரமாய்ச் சுழன்றுசுழன்று வாட்டிச்செயங்கொள்
ளத்தக்க வீரபராக்கிரமசாலியாகிய உக்கிரனென்னும் பூதகணத்தலைவன்
தெரிந்தவுடன் கொவ்வைக்கனியைப்போல்விழிகள்சிவந்து தீப்பொறிக
ள்பறக்கஉக்கிருசாரனைக் கோபித்துமன்னுயிரைக் கொண்டுபோகும்எ
மதருமராசன் ஒருகாலம்நேர்ந்தபோதினும் அவன்பிராணனையும் நிமை
ப்போதில்வாங்கவல்லகொடியதண்டாயுதமொன்றைகரத்திற்கொண்டுசி
றுகிறெனச்சுழற்றி லகுப்பாய்ந்துசத்திராதியாகியஅதிசூரன் வயிரம்போ
ன்றமார்பிற் கோடையிடியைப்போல மோதியதருவாயில் அவ்வதிர்ச்சி
யைக்கேட்ட ராட்சதவீரர்கள் ஐஐயோ ராசகுமாரனிறந்தான் யிறந்தா
ன் யிதற்கென்செய்வோமென்று பரதவித்துக் கைகால்சளுதற வாடிக்கி
லேசித்துப் பார்த்திருக்குந் தருவாயில் அதிசூரன் மார்பிலணிந்திருந்
த அபேதவயிரக்கவசமானது பொடிப்பொடியாயுதிர்ந்திறைந்து சற்று
வருத்தியபோது ராசகுமாரனுக்கு அதிககோபம்பிறவேசித்து வடவை
யைப்போற் சீறி இவனையிந்தரணகளத்திற் பெலிகொடுப்பேனென வீ
ரங்களைப்பேசித் துரிதமாய்நூறாயிரந் திவ்வியபாணங்களையெடுத்து வி
ல்லிற்பூட்டிப் பிறையோகித்தமாத்திரத்தில் அவைகள்வெளிப்பட்டவுட
ன்யிடிமின்னல்அக்கினி முதலியகொடுமைகளைவீசிக்கொண்டு குறுகுறெ
னச்சீறி வேகமாய்வந்து உக்கிரன்திரேகமுற்றினுந்தாக்கிச்சுறுக்குச்சுறு
க்கெனத்தைத்தபோது புண்பட்டுஉதிரம் பீரிட்டுப்பாயவும்அந்தவீரன்
அதறாமல்பதறாமல் சஞ்சலப்படாமல்ருத்திரமூர்த்தியைப்போலக்கொ
தித்துப்பாய்ந்து பக்கத்தில் வானையளாவநிற்கின்ற பற்வதமொன்றைப்
பறித்துப் பந்தையொப்பக்கடாவி ஆர்ப்பரித்தனன் அந்தமலை சக்கிரு
காரமாய்ச்சுழன்று யிறைந்துவேகமாய் வந்து தாக்கியகாலத்தில் அதிவீர
னேறியிருந்த பாரித்ததேரானது தூள்பட்டுக்குதிரைகள் அதப்பட்டுத்
தேர்ப்பாகனும் பொடிபட்டுப் போகுமுன்னிலையில் ராசகுமாரன் நி
லத்தி லிறங்குவது வீரமல்லவெனநினைந்து பக்கத்தில்நிற்கின்றசேமத்
தேர்களிலொன்றிற்பாய்ந்து பிராணிகளுயிரைக்கொண்டுபோகும் எம
னைப்போலச்சீறி மண்டிபோட்டுளுக்காந்து வில்லையெடுப்பதற்குமுன்
னம்பூதகணத்தலைவனாகிய உக்கிரன் சிங்ராசனுக்கு சமதையாகப்பாய்ந்
துமந்தரத்தையொத்த வலியபாதத்தினால் உதைத்தமாத்திரத்தில் பலரத்
தினவகைகளினாற் சோடித்திருந்ததேரானது நுறுங்கிபுரவிகள் மாண்டு
சாரதியுஞ் செத்தான் இச்சம்பவம் நேர்ந்தகாலத்தில் அதிசூரன் மண்டி
யெரிந்து இந்தசிறுவனை வைக்கலாகாது சீக்கிரமாய் அதப்படுத்தக் கட
வனெனப்பேசி நூறுகடூரமாகிய பாணங்களைத்தேடியெடுத்துத் தான்

டியதருணவாயில் அப்படைகளானது சற்பங்களைப்போலச்சீறி எரிந்துபு
கைந்து வெகுவிநோதங்களைக்காட்டி மேலிட்டுவருவதைஉக்கிரன்தெரி
ந்தவுடன்தன்கரத்திலிருந்த பாரித்ததண்டாயுதத்தைக் காகமெனச்சுழற்
றிக்கோட்டிப்புள்ளுகளைப்போலவந்தவழியே திரும்பியோடத் தட்டிச்
சிங்கநாதஞ்செய்தனன், இப்படிக்குத்தன்படைகள் பங்கியதையும்பகை
வன்வீரத்தையும் ராசகுமாரன்கண்டு மானமானது மனதைவாட்ட உட
னேமற்றொருரதத்திற்பாய்ந்திருந்து உக்கிரனைச்சோதித்துப்பார்த்து அ
டாபூதப்பயலே தேவாஸ்திரங்களினால்உன்பிராணனை எமலோகத்திற்சே
ர்ப்பேனெனச் சபதம்பேசி சீக்கிரமாய் அக்கினியாஸ்திரத்தையெடுத்துதீ
பதூபமுதலிய உபசாரங்களை மானசபூசையினால் நிரப்பிப்போற்றிச்
செலுத்தியதருணவாயில் அப்படையானது அஷ்டதிசைகளிலும்பரவிகொ
டியகனலையிறைத்துக் கோடையிடிகளைப்போல யிரைந்து வடவைக்குச்
சமதையாகச்சீறி மேலிட்டுவருகின்ற உக்கிரத்தையும் மகிமைகளையும் உ
க்கிரன்பார்த்து சிவகுமாரனாகிய பாலசுப்பிரமணியக் கடவுளினதுஉபை
யாரவிந்தங்களையும் மனப்பூர்வகமாகச் சிந்தித்துப் போற்றும்பத்
தன்கோரிக்கையைத் திருச்செவிகளினேற்று தேவாதிதேவனாகிய சரவ
ணபவன் செயம்பெறக்கடவதெனக்கடாட்சித்தபடிக்குப் பூதத்தலைவன்
கோனுகப்பாய்ந்து மண்டியெரிந்துவருகின்ற அனற்படையைப்பற்றிவி
ழிகளிற் சுவாலைவீசும்படிக்கு வாயிற்போட்டு முழுங்கினன் - அவன்ம
னஉறுதியைச் சிங்கமுகாசூரன்பிள்ளைபார்த்து ஆச்சரியப்பட்டுநல்லகாரி
யம்உன் பிராணனையிதோ நிமைப்போதில் வாட்டக்கடவேன்பதலமாயி
ருக்கக் கடவையென்று எச்சரித்துத்துரிதமாய் வருணாஸ்திரத்தையெடுத்
துவில்லிற்பூட்டி அபிமந்திரித்து ஆகாணுந்தபரியந்தமிழுத்து விட்டா
ன் அதுவானத்தெழுந்து இடிகள் மின்னலைக்காட்டி அமோகமாகிய நீ
ரைப்பெருக்கி எங்கும்செலப்பிறவாகமாக்கிக்கொண்டு ஆவ்ஆவெனச்
சீறிவருவதை உக்கிரன்கரத்தைநீட்டிப்பிடித்து கவளீகரமாகவிழுங்கின
ன், பின்புபகைவன்வாயுவாஸ்திரத்தைப் பிறையோகித்தபோது பிரசண்ட
மாருதத்தைப்பெருக்கி பற்வதங்கள்முதலானதைப் புரட்டிக்கொண்டு
வரக்கண்டு வீராதிவீரன் கரத்திலேந்தி வாயிற்போட்டுக்கொண்டனன்,
உடனேஅவுணவீரன் அதிககோபங்கொண்டு பிரமாஸ்திரத்தை யெடுத்
துப்பூசித்து மந்திரபூர்வகமாகச் செலுத்தியபோது அந்தமகிமையுள்
ளபாணமானது அளவற்றகொடியபாணவிதங்களைப் பெருக்கிக்கலகலெ
ன்றுநகைத்துவிஷங்களைக்கக்கி முழங்கிச்சமீபித்தகாலத்தில் ஆவெனவா
யைத்துறந்து விழுங்கினன், பின்புராட்சதப்பாதகன் மனம்பொருமி
நாராயணாஸ்திரத்தை யெடுத்துப்பூசித்துப் போற்றிப் பகைவனை

செயங்கொண்டுவரக் கடவையெனச் செலுத்தினன், அந்ததேவப்படை யினுடைய மகிமைமகளையின்னவிதமெனச் சொல்லிமுடியாது அதையும் சிவசுப்பிறமணியதேவர் கடாட்சத்தினுல்மிழுங்கினன் அதைக்கண்டசிங் கமுகாசுரன் பின்ளைபிறுமித்து இனிநான்செய்யவேண்டியமுயற்சியென் னவிருக்கின்றது ஒப்பற்றதேவாஸ்திரங்களைச் செலுத்தினேன் அவை களனைத்தினையுங் கனிந்தவாழைக்கனியைப்போல உட்கொண்டனன், இவ ன்செய்கைகளைப் பார்க்குமிடத்தில் தேவாதிதேவனுகியபரமசிவஉருவா கக்காணுகின்றது அல்லது உலகரட்சகனுகிய விஷ்ணுவோ பிரமனோ இ ந்ததிரிமூர்த்திகளிலொருவ னல்லாவிடில் இத்தகையகருமங்களை யாவரா ற்செய்யப்படும் சந்தேகமில்லாமல் யிவன்மேற்குறித்தவர்களிலொருவ னுகவேண்டுமென நிதானித்து இதற்கென்செய்வதென யோசிக்கின்றத றுவாயிற் பூதகணத்தலைவனுகிய உக்கிரனென்னும்வீராதிவீரன் சிலரோங் கிஆழிக்காச்சலைப்போல ராட்சதச்சேனையிற் பிறவேசித்து வலியதண்டா யுதத்தைச் சக்கிருகாரமாகச்சுழற்றிக் காலாந்தகனைப்போலச் சின்னபின் னப்படச்சாடுகின்ற தறுவாயில்மண்டை துறந்தும்மூளைசிதறியும் விழிக ள்பிதுங்கியும் பற்களுதிர்ந்தும் உடல்சிதைந்தும் இப்படிக்கு அல்லோ லகல்லோலப் படுவதையும்உக்கிரன் செயவுச்சாகங்களையும் பார்த்தராட் சதர்கள் திகிலடைந்து என்செய்வோம்எங்கேயொளிப்போமென்று எ மனைக்கண்டபிராணிகளைப்போலப் பதைத்துதியங்கிச்செயசாலிகளாகிய நம்மவர்கள் பலிக்குமன்றுதிரியும் அபலாகிய பூதகணங்களுக்கெளிய ராய்ப்போவதோவென்றுஎண்ணுதுகளை எண்ணிஎண்ணி வருந்துகின்றத றுவாயில் வானத்தில்நின்று வேடிக்கைபார்த்திருந்த இந்திரனுதியதேவ ர்க்கள் உக்கிரன்சேவகத்திறத்தைக்கண்டு அச்சரியப்பட்டவர்களாய்ப் பிர மதேவனைவணங்கிசற்தனேயிதுவென்ன அதிசெயமாகவிருக்கின்றது அவி சூரனேவிய நாராயணுஸ்திரமுதலிய தேவப்படைகள் படவையைப்போ லச்சீறிவருவதைச் சட்டைபண்ணமல் யிந்தவீரன் பிடித்துப்பிடித்து க வளீகரம்பண்ணிவிட்டான் அந்தசிறந்த பாணங்களென்ன யெளிதாய்ப் போச்சுதோ யிதன்காரணங்களை எங்களுக்குத்தெரிவதாக விரித்துச்சொ ல்லவேண்டுமெனக் கேட்டகாலத்திற் பிரமன்அவர்களைப்பார்த்து இந்தி ராதிதேவர்க்களே யிவன்ஆதியிற் செக்சர்வானத்தையொத்தசடாமண்ட லதாரியாகிய பரமசிவத்தைநோக்கி அரியதவவிரதங்களைச்செய்து அநேக வரப்பேறுகளையும் கர்த்தன்பரிபூரண கடாட்சத்தையும் பெற்றவன்மே லும் இக்காலத்திலும் எமதுகர்த்தனுகிய குமாரசுவாமியார் திருவடிகளு க்குப் பாத்திரனுய்த் தொழுதுபோற்றி அவர்அனுக்கிறகத்தையும் பூர்த்தி யாகக்கிடைத்திருப்பவன் எத்தகைய செயசாலிகளாலும் வெல்லப்பட்ட

வளன்று சிறந்த தேவாஸ்திரங்களினாலும் வாட்டமில்லாமல் அவற்றினை
நாசஞ்செய்யுந் திராணியைப்படைத்தவன் மேலும் சிவபிரான் நுதல்வி
ழியிலவதரித்திருக்கின்ற பாலசுப்பிரமணியதேவரைத் தன்னிஷ்ட தேவ
தையாசரம்பித் திரிகாலங்களிலும் பத்திபூர்வகமாகப் பூசித்து வழிப
டுங் குறைசெயத்தைப்பெற்றவனாதலால், எம்மினுஞ்சிறந்தவனாயும் எ
க்காலத்திலும் அழிவுபடாமலும் நித்தியத்தைப்பெற்றிருப்பவன் கருங்
கடல்வண்ணனாகிய மகாவிஷ்ணுமுன்னொருகாலம் கோபித்தேவிய சக்
கரத்தைவிழுங்கிய தவச்சிரேஷ்டராகிய ததிசிமகாரிஷியினும் அதிகவல்
லபமுடையவன் இத்தகையவீரபராக்கிரமங்களையும்மகிமைகளையும்பெ
ற்றிருக்கின்ற உக்கிரன்நமதுபடையையும் மற்றதேவாஸ் திரங்களையும்
விழுங்கினானென்பதொரு அதிசயமோ அல்லது அவனுக்கொருபுகழோ
இந்தவீரன்சற்றுநினைப்பில் அண்டங்களனைத்தினையும் அழித்துமீட்டும்
பழையபடிக்கு நிலைபெறச்செய்யும்வல்லபத்தைப்பெற்றவன் இவன்பி
றப்பியந்தம் பெற்றிருக்கின்ற கீர்த்திப்பிரதாபங்களையும் வெற்றியையு
ம்யின்னவிதமெனச் சொல்லப்படுவதோவென்று பிரமதேவன் திருவுள
ம்பற்றியதைக்கேட்ட தேவர்க்கள்விம்மிதராய்ச்சிரக்கம்பஞ்செய்து யி
ன்னமும்யிந்தவீராதிவீரனுக்குச்சென்றசென்றயிடங்களிற்செயப்பிர
தாபமுண்டாகக்கடவதென்றுவாழ்த்தினர், இவைநிற்கரணக்களத்தில் வா
டித்திசையிலிருக்கின்ற ராட்சதச்சேனைக்குத்தலைமைபெற்றிருக்கின்ற அதி
சூரன் தன்படைகள் பட்டபாட்டையுஞ் சேட்டையும் பார்த்துவருந்தி
ரவுத்திராகாரமாகக் கோபித்துஉக்கிரனைப்பார்த்து பற்களைக்கடித்து யித
னைச்சொல்லுவான் முன்னம்நாம்செலுத்திய தெய்வீகமாகிய பாணங்க
ளைவிழுங்கினமென்று வீறியிருக்கின்றனை, யிதோ ஞானநாயகனாகிய பர
மசிவம் கடாட்சித்திருக்கின்ற பாசுபதாஸ்திரத்தை விடுவேன்மற்றப் ப
டைகளைப்போலச் சுலபமாயெண்ணவேண்டாம் நிமைப்போதில் உன்
னுயிரையுண்டுகளத்திற்றள்ளும் பதலமாய்த்தப்பித்துக்கொள்ளென்றுஎச்
சரித்து பாசுபதத்தைக்கரத்திலேந்தி மந்திரபூர்வகமாக தூபதீபமுதலி
யசோடசஉபசாரங்களையும் விதிப்படிக்குநிரப்பி வில்லிற்பூட்டி மனதி
லடங்காத கோபத்துடன்பிரயோகித்தகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்
களைநுதல்விழித்தீயாற்சாம்பலாக்கவல்ல மகிமையையுடையருத்திரமூ
ர்த்தியின் உருவைப்பெற்று அனந்தகோடி விஷ்ணுபிரமனாகிய தேவர்க்க
ள்படைகளைப் படைத்து ஆலகாலவிஷத்தையும் வடவைக்கனலையும் பெ
ருக்கிக்கோரரூபங்களைபெற்றிருக்கின்ற பூதகணங்களைச்சிருஷ்டித்து அ
க்கினியும்பிரசண்டமாருதமும் போற்றிச்சூழ அண்டரண்ட புவனங்க
ளனைத்தும் தங்கிப் பயப்பிருத்தியினால் வாடித்திகைக்க யின்னமுஞ்

சொல்லநின்ற பலகொடுமைகளைக்காட்டிக்கொண்டு பாசுபதாஸ்திரம் வ
ருவதை ரணாங்கசூரனெனியஉக்கிரன்கண்டுகரத்திற்பற்றியிருந்தபாரித்த
தண்டாயுதத்தையெறிந்துபோட்டு பஞ்சேந்திரியங்களினாலுண்டாகும்
விடையவாசனைகளை யொழித்துசாயுச்சியப் பதவியைத்தரவல்ல பஞ்சாட்
சரமந்திரத்தைச்செபித்துபத்திவிசுவாசத்துடன்பரமேஸ்பரன்உபையச
ரணாரவிந்தங்களையிதையகமலத்திருத்திப்போற்றிநின்ற தருவாயில்வேக
மாய்வந்த பாசுபதமானது நெருங்கிப் பார்த்துயிவன்நிராயுதனாய்க் சர
ங்களைக்கூப்பிச் சிவபிரானைச் சித்தத்திருத்தி வழிபடும் பவுத்திரமனதை
ப்பெற்றவனாகவிருக்கின்றனன், இப்படிக்கொத்தபத்தனை நாமொன்றுஞ்
செய்யமாட்டோமென்று சரேலெனத்திரும்பி விட்டவன்பர்கலிற்போ
னாமற்சிவபிரா னிடத்திற்சேர்ந்தது- சவுனகாதிரிஷிகளே, இந்தஅதிசூர
ன் ஆதியிற்பிரமனைநோக்கி அளவற்றகாலத்தவங்களைச்செய்து வருவதற்
கிரங்கிகாட்சிகொடுத்து இந்ததிவ்விய பாணத்தைக் சடாட்சிக்கும்போ
து கரத்திற்படைகளொன்று மில்லாதவர்கள்பேரிற் செலுத்துவையாகில்
அவர்களை ஒன்றுஞ்செய்யாமல் நம்மிடத்துக்குத் திரும்பி விடுமென்று
காளகண்டமூர்த்தி திருவுளம்பற்றி யிருந்ததால்அவ்வாறே சிவனாதனைக்க
லந்தது, இந்தமகத்துவத்தைக்கண்ட அதிசூரன் நடுநடுங்கி யிவன்பரம
சிவவடிவமாமெனத் திகைத்து யாதுந் தோற்றாமல் நின்றகாலத்திற் பூத
ப்படைகள் தங்கள்தலைவன் செயத்தைத்தெரிந்து சோட்சகலைகளை வாய்
ந்தபூரணச் சந்திரோதயத்தைக்கண்ட சமுத்திரத்தைப்போலச் செயம்
செயமென்று அதிகவுச்சாகங்களுடன் துள்ளித்துள்ளிக் களிக்கவும் மற்
றபடைத்தலைவர்கள் சரீரம்பூரித்து விழிகளில்ஆனந்தவாரிபெருகச் சந்
தோஷசாகரத்திலழுந்தி உக்கிரனைக் கொண்டாடி யெதிர்க்கொள்ளவும்
வானத்தில்நிற்கின்ற தேவர்கள்முன்னினும் அதிகமகிட்சிகொண்டு வீரா
திவீரனென்பது இந்த சூரனுக்கே தகுமெனப் புகழ்ந்து பஞ்சகற்பக
மலர்களை வாரிவாரி யோராளமாகச்சொரிந்துவாழ்த்தவும் இந்தஅபசெய
ங்களைக்கண்ட ராட்சதச்சேனைகளனைத்து மனம்பதைபதைத்துவாடி இன்
னமும் என்செய்வனோவெனப் பயந்துநிற்கமனந்தாபரியாமல் நாலுமூ
லைகளினும் ஓடத்துடங்கினர், இப்படிக்குத்தன்படைகள் படும்வருத்த
த்தை அதிசூரன்பார்த்துவருந்தி மானம்பாதிக்கத் தன்தேரைத்துரத்திக்
கொண்டுபோய் மடக்கிக்கொண்டு பயப்படாதீர்கள் இதோசற்றுநேரத்
திற்பகைவனைவாட்டுகிறேன் நில்லும்நில்லுமெனக்கையமர்த்தி றவுத்திரா
காரமாகக்கோபித்துத் தன்தேரை விட்டு நிலத்திற்பாய்ந்துபொற்கட்டு
கள்பதித்து மணிகள்சத்திக்க மந்தரகிரியைப்போலப் பாரித்திருக்கின்ற
தண்டாயுதத்தைக் கரத்திற்பற்றிக்கொண்டு யிடசாரி வலசாரியாய் இறு

## இரண்டாநாள்சூரபதுமனுயித்தியப்படலம்.

றெனச்சுழற்றிப்பாய்ந்து பற்வதாகிருதியாக விளங்குகின்றஉக்கிறன்புசங்களின்மீது கோடையிடியைப்போல மோதியதருவாயில் நீண்டசரத்திருலசட்டி அப்படையைப் பறித்துக்கொண்டு வடவையைப்போற்சீறி அதிசூரன்வயிரத்தையொத்த மார்புபதைபதைக்கஓங்கிமோதியநிமிஷத்தில்மார்புபிளந்துஉதிரங்களைக் கக்கிக்கொண்டு பேரொலியைக்காட்டி பூமியில்விழுந்துமாண்டனன், எமதருமராசன் தூதர்கள் பயமற்றுஅவன் பிராணனைக்கட்டிக்கொண்டு போய்விட்டார்கள் இப்படிக்கு அதிசூரன் களத்திற்பட்டகாரணத்தைக் காளமேகத்தைப்போன்ற கரியதிரேகத்தைப்படைத்திருக்கின்ற அசுரேந்திரன்பார்த்தவுடன் ஆலகால விஷத்தைப்போலச்சீறிக்கொதித்து செயவுச்சாகத்துடன்வீதிமேல்வருகின்றபூதவெள்ளத்தின்பேரில் தன்தேரைவேகமாய்முடுக்கிக்கொண்டு எதிரேறிதேவேந்திரன் கரத்திற்பற்றியிருக்கின்ற இந்திரதனுசினும் இரண்டாயிரம்பங்குசிறந்ததாய் பாரித்திராநின்ற கொடியவில்லைவளைத்து நாணேற்றிக் குணத்தொலிசெய்த அதிர்ச்சியினால்பூமிகிடுகிடெனநடுங்கவும் அண்டகோளங்கணெக்குவிடவும் கெருடனைக்கண்ட சற்பங்களைப்போல மன்னுயிர்களனைத்தும் திப்பிறமைகொண்டு படாதபாடுகளையனுபவித்து வாடியது இச்செய்கைகளைக்கண்ட பூதப்படைகள்கோபித்து பக்கங்களில்வானத்தையளாவநிற்கின்ற பற்வதங்களைப்பிடுங்கி யெதிர்த்தும் திசைகளிற்கிளைகளைப்பரப்பித் தழைத்திருக்கும் ஆல்முதலிய விருட்சங்களைக் கரரெனச்சுழற்றி மோதியும் மந்தரத்தையொத்த பாரித்ததண்டாயுதங்களையிடம்வலமாகத் திருப்பிச்சாடியும் மற்றபடைகளை அமோகமாக வீசியும் இவ்விதமாகக் கொடியபோரைச்செய்கின்ற தருவாயில் தாருகாசூரன்குமாரனாகிய அசுரேந்திரனென்னும் பாதகன் வடவையைப்போலச்சீறியிறுதிகாலத்திற்பொழியும் மேகங்களையொப்பாகத் தன்வில்லிற்கணக்கிறந்த கொடியபாணங்களைக் கரவேகமாகச்செலுத்திப் பகைவர்கடாவிய படைகள்முதலானவற்றை நடுவதுபாதியிற்றுகளாகிப் போகப்பறக்கடித்துமேலும் அமோகமாகியபாணங்களைச் செலுத்திப்பூதர்கள்சிரங்களைக்கண்டித்தும் தோள்களைவெட்டியும் மார்பைபிளந்தும் கால்களைத்தறித்தும்திரேகமுற்றுஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்தும் குடல்களிறைத்து சற்பங்களைப்போலத் துள்ளும்படிக்குச்சரித்தும் கால்களைத்தட்டியும்குப்புறவிழமோதியும் இவ்விதமாகச் சித்திரவதைகளைச்செய்து பீச்சாங்குழலைப்போல திரேகத்திலுதிரமானது பீறிட்டுப்பாய்ந்து ரணக்களமெங்கும் பெருகும்படிக்குச்சாடும்போது பூதப்படைகள்மிகவும்வருந்திமாண்டவர்கள்போக மற்றவர்நிலைகெட்டுநிற்பதையும் பகைவன்வீரத்தையும் கனகனென்னுஞ்சேனைத்தலைவன்கண்டுமனம்பொறாமல் றவுத்தி

ராகாரமாகக்கோபித்து விழிகளிற் றீப்பொறிகள்சிதற உருத்துதன்றேரை யதிவேகமாகத் தூரத்திக்கொண்டுவந்து அசுரேந்திரனை வளைத்துக்கொண்டு பாரித்தவில்லைவட்டாகாரமாகவளைத்து நாணேற்றிவிண்மண்பாதல முதலியசகலமும் மயங்கித்தியங்கிச்சோரும்படிக்கு டங்காரசத்தத்தைக்காட்டி அதிவேகமும் கொடுமையுமுள்ள குரூரமாகியசரங்களைச் சங்கோபசங்கமாகப்பூட்டி பகைவன்திரேகத்தோற்றாமல் மூடியகாலத்தில் அசுரேந்திரன் நகைத்து தன்வில்லிற் காலசற்பங்களையொத்த கணைகளை அமோகமாகப்பிறையோகித்துத் தன்மீதிற்புகைந்திரைந்துவருகின்றபாணகோடிகளைச் சின்னபின்னப்பட்டுப்போகச்சாடி சூரியன்பேரிற்கோபித்துவந்த கேதுவைப்போல ஒருதிவ்வியகணையைத்தூண்டி தேரைச்செலுத்தும்சாரதிமார்பைப் பத்தலாகப்பிளந்தபோது உதிரமானது மிகுதியும்பெருக மரணமூர்ச்சையடைந்துவிழுந்தான், அப்போது கனகனுக்குமிகுதியாகிய கோபாவேசம்பிறந்து மிருகராசனாகிய சிங்கத்துக்கொப்பாகப்பகைவன் தேரிற்பாய்ந்து சாரதிதேகம் நுறுங்கிச்சாகும்படிக்கு உதைத்துத்தள்ளி பிறையைப்போல வளைந்திருக்கும் கோறதந்தங்களையுடையராசகுமாரன் கரத்திற்பற்றியிருந்த வில்லிற்பூட்டிய நாரியைப்பறித்துக்கொண்டுகாளமேகமானது இந்திரதனுசுடன் பூமியிலிறங்குவதைப்போலப்பாய்ந்து பக்கத்தில் பாரித்தோங்கியிருந்த பற்வதமொன்றைப்பெயர்த்தெடுத்துச் செயசாலியாகிய அசுரேந்திரன் மீதில்வீசிசிங்கத்தைப்போலக்கெற்சித்தான் அந்தமலை பம்பரத்தையொப்பாகச் சுழன்றுக்கொண்டுயிரைந்து வேகமாய்த் தன்மீதில்வரும்போது ராசகுமாரன்பின்னப்பட்ட வில்லையெறிந்துபோட்டு மந்தாரத்தையொப்பப் பாரித்திருக்கின்ற வேறொருவில்லையெடுத்துவளைத்து பூதப்படைகள்மதிமருண்டோடக்குணத்தொனிகாட்டி காலசற்பங்களைப்போன்ற எட்டுகொடியபாணங்களைத்தொடுத்தேவிமீறிவருகின்றபற்வதத்தைத் தூள்பட்டுப்போகச்சாடி மேலும்வட்டமாய் பிறகாசித்துக்கொண்டிருக்கும் ஆயிரம்அர்தச்சந்திரபாணங்களைக் கரவேகமாகப்போக்கி மூன்றாம்பிறையானது மேகத்தில் நுழைவதைப்போலக் கனகன்யிருபுசங்களினும்தைத்துத்துளைக்கஉதிரமிகுதியாயோடிப் பலயீனப்பட்டுத் திகைத்துவருந்தி நின்றுவிட்டனன், கொடியசெய்கைகளைவிரும்பிச் செய்யுங்கடினசித்தமுடையஅதிசூரனும் வேறொருசாரதியை யமைத்துக்கொண்டு காலாந்தகனைப்போலச்சீறிப் பூதப்படைகளின்மீதிற் கவிந்துவருவதை உன்மத்தனென்னுஞ் சேனைத்தலைவன் கண்டுமண்டியெரிந்து அதிவேகமாகப்பாய்ந்துபக்கத்தில் வானையளாவநிற்கின்ற பாரித்த பற்வதமொன்றைப் பறித்துப்பகைவன்பேரில்வீசி அண்டங்களதிரக்கெற்சித்தனன், அந்தபற்வதம்பி

றசண்டமாருதத்தைப்போல யிரைந்துக்கொண்டு வேகமாய்வந்து தாக்
கியமாத்திரத்தில் நவரத்தினமயமாகவிருந்த தேர்பொடிபட்டுகுதிரைக
ள்சின்னபின்னப்பட்டுப் பாகனுங்களத்திற்பட்டுப் போனகாலத்தில்தா
ருகன்பிள்ளையானவன் பிரளயகாலருத்திரனைப்போலக் கோபதீபிதனாய்
அதிசீக்கிரமத்திற் பக்கத்திலிருக்கின்ற சேமத்தேர்களிலொன்றிற் பாய்
ந்து மண்டிபோட்டுளுர்காந்து தன்வில்லில்தீட்சணியமாகிய பாணகோ
டிகளை ஒன்றனந்தமாகச்செலுத்திச் சமுத்திரத்திற்பவழக்கொடிகள் பட
ர்ந்துசாட்டுமாறுபோல உன்மத்தன் திரேகமெங்கும்உதிரம் பெருகப்
பிளக்கும்போதுவலிகுன்றிக்களைத்து அசைவற்றுநின்றுவிட்டான்பினை த
மத்தனென்னும் பூதகணத்தலைவன்கண்டமாத்திரத்தில் அதிகஉக்கிரம்பி
ரவேசித்துவிழிகளில் அனற்பொறிகள்சிதற ஆலகாலத்தைப்போலச்சீறித்
தேரைத்தூர்த்திவந்து அசுரேந்திரன்முன்னம் நிறுத்துஇதோஉன்னாண
வத்தையடக்கி எமலோகங்குடியேற்றுவேனென்று சபதம்பேசி வில்லை
யெடுத்து வளைப்பதற்குமுன்னம் ராசகுமாரன் தன்வில்லிற் பத்துபாண
ங்களைப்பூட்டிப் பிறையோகித்து திரேகத்தைப்பிளந்து செக்கர்வான
த்தைப்போல உதிரம்பெருக்கெடுத்தோடச் சாடியகாலத்தில் மந்தனகா
ட்டழலைப்போலக்கொதித்து உதையகிரியையொப்ப பாரித்திருக்கின்ற
மலையொன்றைபிடுங்கி அதிவேகமாய்வீசியபோது அசுரேந்திரன் நகை
த்துக்கொண்டுபார்த்திருக்க அவ்வரையானது வயிரம்போன்றமார்பிற்
றுக்கிசெண்டுமெறிவலைப்போலத் திரும்பிபொடிபட்டது உடனேராசகு
மாரன் தன்வில்லிற்கொடிய பாணங்களாயிரவற்றைத் தூண்டிக்கொக்க
ரித்தமுன்னிலையில் அந்தப்படைகள் தீயைவீசிபுகைந்து கொண்டோடி
வந்தசரீரமெங்குந் தைத்துத்துளைத்து உதிரத்தைப் பெருக்கியபோது
மதிமயங்கி மத்தனென்னுஞ்சூரன் திகைத்துநின்றதைமற்றொருபுறத்தி
ற் சண்டைகொடுத்திருந்த பூதத்தலைவனாகியசிங்கன்விழிகளிற் தீயெழப்
பார்த்துவந்தெதுத்து பாரித்தமலையொன்றை அடியுடன்பறித்து வீ
சிசிங்கநாதஞ்செய்தகாலத்தில் ராசகுமாரன் சிலபாணங்களைக்கொண்டு
மேவிட்டுவரும் மலையைப்பொடி படுத்தியதறுவாயிற் சிங்கனுக்கு அதிக
கோபம்பிறவேசித்து ரணக்களத்திலிறந்துகிடக்கின்ற ராட்சதர்கரங்களி
ற்பற்றியிருக்கின்ற தண்டாயுதமொன்றை வலிதிற்பிடுங்கிச் சக்கிருகார
மாகச்சுழற்றிமோதியபோது அதையும்பொடிபடுத்திச் சரவேகமாய் நா
றதிவ்விய பாணங்களைச்செலுத்தி மார்பைபிளந்தகாலத்தில் ரத்தங்களைக்
கக்கிக்கொண்டு சிங்கனென்னும்வீரன்களைத்துக்களத்தில் விழுந்தான் இ
தைக்கண்டமற்றசேனைத் தலைவர்களனைவரும் ஒருவன்பின் னொருவனாக
வந்துவந்தெதுத்துத் தீட்சண்ணியமாகிய பாணவிதங்களைச் செலுத்தி அ

கோரமாகிய உயித்தியங்களைச்செய்து போராடும்போது அசுரேந்திரன்
காலாந்தகனைப்போல மண்டியெரிந்து சரவேகமாகக்கணக்கிறந்த திவ்
வியபாணங்களைச் சோனைப்பெய்யலைப்போலச் சொரிந்து அவர்களேவி
யபாணங்களையுங் கண்டித்தெறிந்து சிரோசத்தைப்பிளந்தும் துளைத்து
ம்புண்படுத்தியும் இவ்விதங்களாகச் சின்னபின்னப்படச்சாடும்போது
உதிரம்பெருக்கெடுத்தோட மதிமருண்டும் வாடியும்சோர்ந்தும்மரண
மூற்சையடைந்தும்பங்கப்பட்டும் மானமிழந்தோடியும் இவ்விதமா
கத்தாபரித்து எதிரில்நின்று போராடவகையில்லாமற்பின்னிட்டதருவா
யில் அசுரேந்திரன் வடவாமுகாக்கினியைப்போலச் சிலறேங்கி தன்தே
ரைச்சக்கிருதாரமாக ரணக்களமெங்குஞ் சுழற்றிக் கார்கால வருஷத்தை
ப்போலபாணங்களைப்பொழிந்து பூதனாஅசையவொட்டாமல் மடக்கி
க்கொண்டு சின்னபின்னப்படச்சாடும்போது மனந்தளர்ந்து வலியற்று
நடுநடுங்கி அதிககாயங்கள்பட்டு உதிரம்பெருகரணக்களத்தில்நிற்கவும்
அஞ்சிச் சிலவீரர்கள் பலதிசையிலும் பறந்தொளித்தனர், மற்றவர்கள்
தலையையிழந்து தோளைப்போக்கி மார்புபிளக்க வயறுபீறுண்டு குடல்
களிறைய ரணக்களத்துக்கிரையாகவிழுந்து எங்கும்பிணமலைகளாகக் கு
வித்தது, இவ்விதமாகச்சிவகணங்கள் அல்லோலகல்லோலப் படுவதையு
ம்பகைவன்செயத்தையும் இலக்கர்களிலொருவனாகிய தண்டகனென்பவ
ன்பார்த்து மனம்வருந்திக் கோபாவேசத்துடன் தன்தேரைத்துரத்திவ
ந்து வில்லைவளைத்துவிஷங்களைக் கக்கத்தக்க ஆயிரங் கொடியபாணங்க
ளைப்பூட்டிப் பிறையோகித்துத்தாருகன் பிள்ளைநெற்றியைப் பிளந்தகா
லத்தில் உதிரமானதுபிறவாகமாயோட மிகவும்வருந்தியபோதிலும் வி
ராதிவீரனாதலால் உக்கிருகாரனாய் அதிசீக்கிரமத்தில் எட்டுபாணங்களை
க்கழுத்துக்குக்குறிபார்த்து போக்கியதருவாயில் விடவடென்றுஞ் சந்த
த்துடன் அனலைவீசிக்கொண்டுவந்து பாய்ந்துருவியோடியபோது ரத்
தப்பிறவாகமேலிடப் பிறக்கினைதப்பிச் சோபித்துத்தேரில் அசைவற்று
நின்றனன், அவனுக்கிளவலாகிய சோமுகனென்பவன் தன்தமையனு
க்கடுத்த அபாயத்தைத்தெரிந்தவுடன் கோபமும்விசனமும் மனதையா
திக்கத்தன்தேரைத் துரத்திக்கொண்டுவந்து தாருகன் பிள்ளையை வளைத்
துக்கொண்டு வில்லைவளைத்து குரூரமாகிய நூறுபாணங்களைப் பூட்டிப்
பகைவன்மார்புக் கிலக்காகச்செலுத்தியதருவாயில் அவைகள்தீயையிறை
த்துக்கொண்டு வேகமாய்வந்து வயிரமலையைப்போல விசாலமாயிருக்கி
ன்ற மார்பிற்றாக்கி வலியற்று முனைகள்மடங்கிச் சிதறியதருவாயில் அசு
ரேந்திரனுக்கு அதிககோபம்பிறவேசித்து சிங்கத்தையொப்ப கெர்ச்சித்
துத்தன்வில்லிற் பிறகாசிக்கும் அலகையுடையஅன்பதுகுரூரமாகிய பா

ணங்களைப்பூட்டிப் பிறையோகித்துச் சிரமுற்றினுந் துளைத்தகாலத்தி
ல் அசிகவருத்தம்நேர்ந்தபோதினும் !தயிரியத்தைவிடாமற் சீக்கிரத்திற்
றன்வில்லில் ஆயிரம்கடூரமாகிய பாணங்களைப் பூட்டிப் பிறையோகித்த
காலத்தில் அந்தசரங்கள்வடவாமுகாக்கினியைப்போலப் புகைந்தெரிந்
துசீறிவந்து அசுரேந்திரனேறியிருந்த பாரித்ததேரைப் பொடிப்பொ
டியாக்கிக் குதிரைகளைக்கண்டித்துத்தள்ளி சாரதியையும்நிலத்திற்கிடத்தி
யது,உடனேமற்றொருதேரிற்பாய்ந்து தான் அருமையாகத் தேடிவைத்
திருக்கின்ற ஒப்பற்ற வேலாயுதத்தையெடுத்துப் பகைவன்பிராணனை உ
ண்டுவரும்படிக்குச் சடாவியபோது அனலையிறைத்துக்கொண்டு வேக
மாய்வந்து வலியமார்பிற்றைத்துத் தடாரித்துருவியோடியகாலத்தில் உ
திரம்பீறிட்டோடக்களைத்து யாதுந்தோற்றாமற் றேரில்நின்றுவிட்டான்
அதைக்கண்டமாத்திரத்தில் அவனுக்கிளையவனாய் மகாவிஷ்ணுவினும் வ
லியிற்சிறந்த வீரபராக்கிரமசாலியாகிய விசையனென்டவன் மனவாட்ட
த்துடன் ரவுத்திராகாரமாகக்கோபித்து தன்தேரைவேகமாகத் துரத்திவ
ந்து வெதிரில்நிறுத்தி பினாகத்துக்குச்சமதையாகிய தன்வில்லையெடுத்து
நாணேற்றித் திசைகளதிரக்குணத்தொனிசெய்து ஆயிரம்அர்த்தச் சந்திர
பாணங்களைப்பூட்டிக் கரவேகமாகச்செலுத்தி அசுரேந்திரனேறியிருந்
ததேரைச் சக்கைசக்கையாகப் பேத்தெறிந்து பாகனையும்புரவிகளையுங்க
ண்டதுண்டமாகவெட்டியெறிந்து மேருவைப்போலஅவன் கரத்தில்வி
ளங்கியிருந்த வில்லைநாரியுடன்கண்டித்துச் சிங்கநாதஞ்செய்தனன், ஈ
சகுமாரன்உடனே மற்றொருதேரிலேறி விடநாகத்தைப்போலச் சீறி ம
ந்தரகிரியையொத்த தண்டாயுதமொன்றை யெடுத்துகிறுகிறெனச்சுழற்
றிவிசயன்பேரில்வீசியகாலத்திற் சக்கரத்தைப்போலச்சுழன்றுகொண்
டு மேலிட்டுவருவதைப்பார்த்து குரூரமாகியபாணங்கள் அளவற்றவை
களைச்செலுத்திச் செலுத்தித்தடுக்கவும் அதன்வேகமடங்காமல் குமுறிக்
கொண்டுவந்து விசாலமாகியமார்பிற் கோடையிடியைப்போலத் தாக்
கியமாத்திரத்தில் திரேகம்நெக்குவிட்டு உதிரம் பெருக்கெடுத்தோடம
னநிலைதளர்ந்து கரங்களிற்பற்றியிருந்த வில்லையும்அம்பையும் நழுகவி
ட்டுக்களைத்து ரதத்தில்விழுந்தான், இதனைக்கண்டதுணைவர்களாகிய இல
க்கர்அனைவரும்மானமுங்கோபமும் மனதைவாட்டியலைக்கவிழிகளிற்றீ
ப்பொறிசிதற வடவையைப்போல மண்டியெரிந்து இந்தபாதகன்பிரா
ணனைநொடிப்போதில்வாங்கி வீரசொற்கத்திற் சேர்ப்போமெனச் சப
தங்களைப்பேசிக்கொண்டு ரதங்களைத்துரத்திவந்து அசுரேந்திரனை நாற்
புறங்களிலுஞ்சுற்றிதங்கள் கரத்தில்விளங்கும் பாரித்த விற்களை வட்டா
காரமாகவளைத்து கூர்மையாய்வடித்து விஷத்தொடைவையவிட் டிருக்கின்

றகொடியபாணவிதங்களனைத்தையும் பூட்டிக் கோடைகால வருஷித்தை
ப்போலச் சொரிந்து கடியபோரைச் செய்கின்ற தருவாயில் அதிசூரன்
அவர்கள்சேவகங்களைக்கண்டு நகைத்துத்துரிதமாய்த் தன்வில்லில் புற்றி
னிடத்திருந்திசல் பெருக்கெடுத்தோடுவதைப்போல அனந்தகோடி திவ்
வியபாணங்களைத் தொடுத்துக் காவேகமாகச்செலுத்தியவைகவர்விட்டவி
ட்டகணைகளை ஒன்றொழியாமற் கண்டித்துப்போட்டு ரதங்களையும்கொ
டிபடச்சாடிகுதிரைகள் பாகர்களைச் சின்னபின்னப் படவாட்டி இலக்கர்
திரோகந்தோற்றாமற் சல்லடைக் கண்களாகத்துளைத்து சக்கைச்சக்கையா
கப் பேத்தெறித்தும் காயப்படுத்தியும் அல்லோலகல்லோலப் படுத்துகி
ன்றதருவாயில் ரத்தவெள்ளம்பெருத்தோடமிகவும்வருந்திபலரொடுங்கி
வில்லையெடுக்கநிருவாகமில்லாமல்திகைத்தோடினர் - சவுனகாதிரிஷிகளே
அசுரேந்திரன்செய்த சண்டையின் பெருக்கத்தையென்சொல்லுவேன்,
ஒருதேர்க்காறன் கோடிவீரர்களுடனெதுத்து சித்திரப்போரைச்செய்து
பாதசாரிகளாகப்பறக்கடித்தான், இவ்விதமாகஇலக்கரும் துணைவரும் ப
டைவீரரும்பூதப்படைகளும்சின்னபின்னப்பட்டுமங்கியதையும்பகைவ
ன்வெற்றியையும் புசபெலபராக்கிறம சாலியாகியவீரவாகுதேவர்கண்ட
மாத்திரத்தில் மனம்வருந்தி சற்வசங்காரமூற்தியைப் போலக் கோபித்
துகொவ்வைக்கனியினும் விழிகள்சிவத்து புருவம் நெற்றியிலேறப் பற்
களைக்கடித்து நல்லகாரியம்நல்லகாரியம் ஒருராட்சதவீரனால் செயசாலி
களாகிய நமதுசேனைகள் இப்பாடுபடுவதோ சற்றுநேரத்தில் இவன்வலி
யையொடுக்கிறேனெனச் சீறிச் சிவசுப்பிறமணியக்கடவுளினது பாதார
விந்தங்களைத் தியானித்துப்போற்றிப் பற்வதாகிறுதியாகப் பாரித்திரா
நின்ற தேரைத்தூரத்திவந்து அசுரேந்திரனெதிரில் நிறுத்தித் தங்கக்கட்
டுகள்பூண்டு மணிகள்சதிக்கும் நீண்டவில்லைநாட்டிவளைத்து நாணேற்
றிக்குணத்தொனிசெய்த தருவாயில் அண்டபுவனகோடிகள் பட்டவருத்
தங்களை இன்னவிதமெனச்சொல்லிமுடியாது உடனேதேவர்க்கள் களிக்
கவும் ராட்சதப்பாதகர்வாடியிளைக்கவும்சற்பங்களையொத்தகொடியபா
ணகோடிகளை அபரிமிதமாகச்செலுத்தி அசுரேந்திரன் திரோகந்தோற்றா
மல்மூடியதருவாயில் அவைகள் அதிககொடுமைகளைக்காட்டிவந்து சுருக்
குசுருக்கெனத்தைத்து மிகுத்த காயங்களைச்செய்து உதிரத்தைப்பெருக்
கிவருத்தியபோதினும் அதறாமல் பெதறாமல் சஞ்சலப்படாமல் அவற்றி
னைப்பிடுங்கியெறிந்துவிட்டு சீக்கிரமாய்த்தன்வில்லிற்சணக்கிறந்தபாண
ங்களைப்பூட்டிப் பிரையோகித்து வீரவாகுதேவர் திரோகத்தைத் துளைத்
ததருவாயிச் உதிரம்பீரிட்டோட இவ்விருவீரர்களும் பாலசூரியர்களைப்
போலவிளங்கினர், அக்காலத்திற்றுருகன்பிள்ளை மீறித்துரிதமா யொரு

இவ்வியபாணத்தைச்செலுத்தி வீரவாகுதேவர்காத்திற்பற்றியிருந்தவலிய
வில்லைக்கண்டித்ததறுவாயில் அதிகசோபங்கொண்டு மற்றொரு வில்லை
யெடுத்துவளைத்து விஷங்களைக்கக்கும் தீட்சணியமுள்ளகொடியபாண
ங்களைச்செலுத்தியகாலத்தில் அசைவுற்பாதங்களைக் காட்டிவந்து ராசகு
மாரன்காத்திலிருந்த பருத்தவில்லைத் துண்டித்துதேரையும் சக்கைச்சக்
கையாகப்பிளந்தெறிந்து பாகனையும்புரவிகளையுந் துண்டித்து அவனையு
ந்தெண்டித்துவாட்டியது அப்போதுஅசுரேந்திரனென்செய்வன் பெரு
நேரமாய்க் கணக்கிறந்தவீரர்களுடன் கொடியபோரைச்செய்து வருவ
தினாலும்வீரவாகுதேவர் பாணங்களின் சுறுக்கினாலும் செயவுச்சாகமற்
றவனுப்பக்கத்தில்நிற்கின்றசேமத்தேரிற் பாய்ந்தான் யிதைப்பார்த்தி
ருந்ததேவர்க்கள்அவன் வீரத்தன்மைக்கும்போரின்திறத்துக்கும்மெச்
சிஇந்தவீரனைத் துரிதமாய் வீரவாகுதேவர்வெற்றிகொள்ளக்கடவரென்று
ஆசிகளைச்சொல்லினர்-சவுனகாதிரிஷிகளே, இந்தராட்சத குமாரனைவீர
ன்வெல்வது அரிதோ அவன்யானைமுகன்பிள்ளை இவன்சரபப்பட்சியாகி
யசிவகுமாரன் யானையைவாட்டுவது சரபப்பட்சிக்கொருபொருளோ உ
டனேஅசுரேந்திரன் மனம்பொறுமல் தன்வில்லை வளைத்து நூறுஅர்த்த
ச்சந்திரபாணங்களைத்தாண்டிவீரவாகுதேவர் ஆரோகணித்திருந்ததேரை
க்குதிரைகள்சாரதியுடன் சின்னபின்னப்பட்டுருளக்கண்டித்தகாலத்தில்
வீரவாகுவுக்குத் தேருதவியில்லாமையால்கெருடனைப்போலவானத்தெ
ழுந்து சண்முகதேவரைத்துதித்துஅண்டங்களதிரஆர்ப்பரித்துக்கொண்
டுதமது யிடையிலிருக்கின்ற வீரவாளாயுதத்தையுருவிக் காத்திற்பற்றின
வராய் சந்திரனைக்கவ்வும் இராகுவைப்போல ராசகுமாரனேறி யிருக்கி
ன்றதேரிற்பாய்ந்து பர்வதம்போல உரண்டுதிரண்டுவிளங்கி யிருக்குந்
தோள்களினொன்றைவெட்டித்தள்ளியகாலத்தில்உதிரம்யிலாச்சவிட்டோ
டியதெப்படிக்கிருந்ததெனில், நீலகிரியின்மருங்கில் வாசஞ்செய்திருந்
தகாளமாநாகமானது கிரணகாந்திகளைவீசும் சிரோரத்தினத்தை கக்கிய
தைப்போல்த்தோற்றியது இவ்விதமாய்வலக்கரமற்றவுடன் அசுரேந்திர
ன்கோபித்து பர்வதாகாரமாக பாரித்திருந்ததண்டாயுதத்தையெடுத்துச்
சுழற்றிவீரவாகுதேவர்பேரில் மோதியதறுவாயில்அதைத்தட்டி விட்டுப்
பின்னிடைந்து அவன்சிரத்தில்உதைத்தனர், அத்தறுவாயில்அசுரேந்திர
னுக்குஅதிகசோபாவேசமுண்டாய் வடவாமுகாக்கினியைப்போற்சீறிஉ
டைவாளையுருவிக்கொண்டு பின்னடியிட்டுமுன்னடியாய்ந்துவரும்போ
துஇனியிவனைவெல்வகலாகா தென்றெண்ணி துரிதமாய்தமது காத்தில்மி
ன்னலைப்போலச் சொலித்திருந்தவீரவாளைச்சுழற்றியோங்கி அசுரேந்திர
ன்சிரமானது நிலத்தில்விழுந்துருள வெட்டித்தள்ளிய காலத்தில்மைநா.

வபர்வதம் சாய்ந்ததைப்போல ராசகுமாரன் சரீரநிரோகம் உதிரத்தைப்
பெருக்கிபூமிபிளக்கும்படியாய் விழுந்துபேரொலியைக்காட்டிபிராண
ன் நீங்கியது இந்தசெயத்தை வானத்திலிருந்த தேவர்க்கள்கண்டவுடன் ந
கைமுகராய்கரங்களைத்தட்டிக்கொண்டு வீரவாகுதேவர் சவுரியத்தையும்
பெருமைகளையும் புகழ்ந்துவாழ்த்தினர், இந்தகொடியசம்பவம் நேர்ந்
ததைக்கண்ட ராட்சதப்படைகள் மனந்தாபரியாமற் கோடுகோடெனப்
புலம்பி இனிசற்றுநேரம் நிற்போமாகிற் பிராணச்சேதம் வருமென்றுநா
லுதிக்குகளினும் பிறைந்தோடினர், அத்தருவாயில்புறவணியிலிருந்தசூ
ரபதுமனானவன் குமாரர்களிருவருமிறந்ததையும் சமுத்திரத்தைப்போ
லரணக்களமெங்கும்நிறைந்து குமிறிக்கொண்டிருந்தராட்சதச்சேனைக
ள்மாண்டும் பயப்பிருந்தியினாற் பறந்தோடியதையும் தெரிந்தவுடன்வ
டவைக்கனலும் ஆலகாலமும் ஒன்றுபட்டுச்சீறியெழுந்ததைப்போல ற
வுத்திராகாரமாய்ச் சோபித்து பிரளயகால ருத்திரனையொப்பாகச்சீறிந
மதுசதுரங்கச்சேனைகளையுஞ் சின்னபின்னப்படுத்திய சத்துருக்களைஇந்
தநிமிஷத்திற் கண்டதுண்டப்படக் கொல்லுவேனென்றுஉக்கிரகாரனு
ய்மனோவேசத்தினு மேலிட்டுநடக்கும் இந்திர ஞாலத்தேரை முடுக்கிக்
கொண்டுவந்து எமனுடைய பசியை தணிக்கவல்லதாய் தங்கக்கட்டுகள்
பதிந்து மணிகள்சத்திக்கும் மகிமையுள்ள தனுசைவளைத்து வீரலட்சுமி
வாசஞ்செய்யும் நாணேற்றி அழகிய விரலினாற்குணத்தொனியையெழு
ப்பியகாலத்தில்அவ்வதிற்சியைக்கேட்டபூதப்படைகள் கைகால்களுதற
லெடுத்து பற்றியிருந்த மராமரங்கள் பற்வதங்கள் சோர்ந்து போகச்
சண்டைகொடுக்கவிருந்த தயிரியமும் வலியுமிழந்து திரேகம் நடுநடுங்
கப்பஞ்சேந்திரிய நிலைகள்பேதித்துத் தலைகிறுகிறெனச்சுழலப்பிராணபீ
திபினால்தலைவிரிகோலமாய்திசைகெட்டோடியும் மூர்ச்சையாய்பூமியில்
விழுந்தும் காலாடாமல் திப்பிரமைகொண்டு நின்றும் உதைத்துக்கொ
ண்டிறந்தும் அறிவழிந்து சோபித்தும் இவ்விதமாகப் படாதபாடுகளை
ப்பட்டனர், சவுனகாதி ரிஷிகளே - சூரன் குணத்தொனிக்கஞ்சி பூதப்ப
டைகள் பட்டகோறத்தை யின்னவிதமென்று சொல்லிமுடியாது பிரம
தேவனும் நமக்கென்ன கேடுநேருமோவென்று திகிலடையவும் மகா
விஷ்ணுவானவர் யித்தபாதகனை நம்பவொண்ணாது எங்கொளிப்போ
மென்று யோசிக்கவும் சர்வசங்கார மூர்த்தியாகிய சிவபிரான் சடாசெஞ்
சமெச்சி மணிமுடியை யசைக்கவும் பொன்னுலகத்துக் கதிபனான இந்
திரன்திடுக்கிட்டு நமக்கென்ன கேடுண்டாகுமோ இனியென்செய்கேன் ஒ
ன்றைநினைக்க மற்றொன்று நேர்ந்த கதையாக முடியும்போற் காணுகி
ன்றது, ஆயிரத்தெட் டண்டங்களையும்வென்ற செயசாலியாகிய யிந்தசூ

ரபதுனுடனெதுத்து வீரவாகுதேவர் போர்செய்யவல்லரோ ஆகிலுமெ
ன்ன நம்மனைவரையும் யாதுகாத்து ரட்சிக்கவல்ல கிருபாநிதியாகியபா
லசுப்பிரமணியதேவர் பின்னணியிலிருக்கின்றனர், இந்தபாதகனைமிஞ்ச
விடமாட்டாரென்று பலபல நினைந்து பார்த்திருக்கவும் மன்னுயிர்களை
க்காலாதிகளிற் கொண்டுபோகும் எமதருமராசன் திகிற்பட்டு இதுபரி
யந்தம் ராட்சதரிருக்கின்ற பிறதேசங்களில் அடிவைத்த நாமல்ல இப்
போது தாருகாசுர னுயிரையும் சிங்கமுகாசுரன் பிள்ளையின் பிராண
னையும் யின்னமும்பலகோடி ராட்சதர் ஆவியையும் கொண்டுவந்தனம்-
இதைவஞ்சகன் மனதிற் கருர்க்கம்வைத்து என்னபாடு படுத்துவனோ யி
தற்கென்செய்வேன் தெய்வமே துணையென்று சிவபிரானைத் துதித்திரு
க்கவும் சுத்தபவுத்திரமாகிய தருமதேவதை சத்திராதிகள் யாதகத்துக்கிர
ங்கியஞ்சவும் உலகவியாபாரங்களை நடாத்தும் பஞ்சபூதங்களுந்திகை
த்துவாடயும் எறும்புமுதல் யானையீறுகச் சொல்லநின்ற எண்பத்துநா
ன்குலட்சம்சீவபேதங்களும்பொருமித்திகைத்து ஒன்றின்மேலொன்று
சோர்ந்துகிடந்தது, சவுனகாதிரிஷிகளே- கொடியபாதகனாகிய சூரனெ
டுத்தநாணோசையைச் செவியிற்கேட்டவுடன் வலியும் வீரமும்செயப்பி
ரதாபங்களும் மகிமைகளையும் பெற்று வீறியிருந்த இரண்டாயிர வெள்
ளம்பூதப்படைகளும் திகைத்து நடுநடுங்கிப் பறந்ததென்றால் வுருவக
மற்றபஞ்சபூதங்களும் மற்றபிராணிகளும் வாடியதெனப் பேசுவதொ
ருஅதிசெயமோ இதைக்குறித்து வளைத்துவளைத்துப் பேசவேண்டுவதில்
லை, சூரன்காட்டிய நாணோசையாலது அண்டபுவனகோடிகளனைத்திலு
ம்பன்னிரண்டுதேவவருஷகாலம் முழங்கிக்கொண்டிருந்தது, இப்படி
க்கொத்தநாணோசைக்கு நடுங்கி கருங்கடலைப்போலப் பரந்திருந்த பூத
ச்சேனைப்பெருக்கானது யிருந்தயிடந் தெரியாமற் பறந்துபோனவே
டிக்கையைப்பார்த்து படைத்தலைவர்களாகிய நூற்றெண்மரும் மனம்
பொறுமல் தயிரியசாலிகளாய் மேலிட்டுவந்து வானையளாவநிற்கின்றப
ர்வதங்கள் திசைகளைமூடத் தழைத்திருக்கின்ற மரங்கள் தண்டாயுதங்
ள்-பிண்டிபாலம்- கப்பணம்- முசலம்-தாஞ்சில்- எழு-மழு - முதலிய
படைகளைச் சோனைமாரியைப்போல அமோகமாய்ச் சூரபதுமன் பேரி
ற்சொரிந்து அட்டகாசங்களைச்செய்தபோது ராசாதிராசன் அவர்கள்செ
ய்கைக்கு நகைத்து பத்துநூறுயிரகோடிகுறூரமாகிய பாணங்களைவில்
லிற்பூட்டிப்பிறையோகித்துத்தன்பேரில் வீறிவருகின்றபற்வதங்கள் மு
தலானவைகளைத் துகள்பறந்துபோகச்சாடி கெக்கலிகொட்டி யிருக்கின்
றபூதச்சேனைத் தலைவர்கள்-தலை-முகம்-கண்டம்-தோள்-கரங்கள்- மார்
பு-துடை- கால்-முதலிய சரீரஉறுப்புகளைப் பல்கணிவாயலைப்போலத்

துளைத்தும் சக்கைச் சக்கையாகப் பேத்தெறிந்தும் ஆசிராட்டயிடமில்லாமற் பாணங்களைச் சொருகியும் இப்படிக்கு வாட்டும்போது உசிரம் பிறவாகமாயோடிப் பலமினப்பட்டு அதிபெலன் திகைத்து நின்றனன்- வக்கிரன்களைத்துவிழுந்தவன்- வச்சிரன் காயங்களின் உபத்திரவத்தினுல்வருந்தி துக்கித்திருந்தனன்- கபாலி மனஊக்கமற்று பிரமித்து நின்றுவிட்டனன்- உன்மத்தன் மிகவும்வருந்தி ஏங்கினன்- அச்சுதன் காத்திலேந்தியபற்வதத்துடன் மதிமயங்கிநின்றனன், மாபெலன் அசிகவருத்தப்பட்டபடியால் ஓடினவனுமன்று சண்டைக்கெதிர்ந்தவனுமல்ல சித்திரப்பிறதமையைப்போல முழிகளைத்துறந்துகொண்டு நின்றனன்- அதிசெயன்வாடினன், மேகன் மருண்டான் அண்டவர்டாணன் துயரமெய்பவதைத் தெரிந்திரங்கினன், மேகமாலிமனம் நடுங்கினன்- சுப்பிரன் மெலிந்தனன்- காசபாதன்- சரீரம்பதைபதைத்து நின்றனன்- உதவகன் மருண்டிருந்தனன்- அசலன்சரீரத்திற்பெருகும்உதிரத்திலழுந்தி அசைவற்றிருந்தனன் மாகபந்தன் மிகவும் நொந்திரங்கினன்- அத்திரிசோமித்து அடியற்றபனையைப்போல விழுந்தனன்-பத்திரன் சத்தேயின்னிட்டனன், பதுமன்யிளைத்துக்களைத்தான் வியாக்கிரனுந் தனஞ்செயனும் ஓடிப்போயினர்- மத்தன்- பலவிதமாகவைதுபொறாமைச் செறிந்தனன், பினுகிமெய்மறந்திருந்தனன்- சித்திராங்கதனும்கனகனுந் துக்கசாகரத்திலழுந்தினர்- நீலனும்மாலியும் மனவலிகுன்றிக்குறைந்தனர்- கும்பனும் நிகும்பனும் சண்பஞ்சடைந்து தோற்றமற்றுத் துழவியிருந்தனர்- சண்டியும்- தண்டியும் பதைபதைத்தஞ்சியேங்கினர், வாமனும்- சோமனும்மாண்டனர், உக்கிரன்எழுந்திருக்கச் சத்தியற்றுக் கிடந்தனன்-சிங்கன் ஓய்ந்துபோனன்- சுவேதகிரீடன் மனத்தெளிவற்றிருந்தான்- சங்கபாலன்விழுந்துருண்டனன் நந்திசலித்தனன்- பிங்கலன்- சுவாசமற்றுக்கிடந்தனன்-உரோமசன்பறந்தனன்- இப்படிக்குயிவர்கள்முதலிய சேனைத்தலைவர்கள் நூற்றெண்மரும்சின்னபின்னப்பட்டுவாடிவருந்திக்களைத்து மருண்டுதிகைத்தசோமித்தும் செத்தும் புறந்தந்தோடியும்ஒளித்தும்பதுங்கியும்சோர்ந்தும்கிலேசித்தும்சண்டைசொடுக்கவலியுந்தயிரியமுமில்லாமல்மானமற்று நடுநடுங்கிப்போனதை நூறாயிரஞ்சுத்தவீரர்களாகிய அணித்தலைவர்கள்கண்டுமனம்பொறுமற் கோபதீபிதர்களாய்ச் சூரியனை மூடியபனிப்படலத்தைப்போல வயிரதிரோகத்தைப் படைத்திருக்கின்ற சூரபதுமனைச்சூழ்ந்துகொண்டுதங்கள்கரங்களிற்பற்றியிருந்தவிற்களைவளைத்துபலவிதபாணகோடிகளைப் பிறையோகித்தும்-பிண்டிபாலந்-தோமரம்-முசலம்-கப்பணம்-முசுண்டி-எறிவேல்- சக்கரம்- இருப்புலக்கை முதலியபடைகளையும் பற்வதத்தின்மேரில் மேகங்கள்கவிந்துவருஷித்த

தைப்போலவொன்றனந்தகோடிகளாகச்சொரிந்துசிங்கநாதங்கள்அட்டகா
சங்களைச்செய்துபோராடுவதை சூரன்பார்த்துசற்றுசோயங்கொண்டவ
னாய்பினாகத்தையொத்ததன்வில்லில் அதிகதீட்சணியமுள்ள பாணங்களை
அடாரியாகப்பூட்டிப் பிறையோகித்து எதிரிகள்செலுத்திய அஸ்திரசஸ்
திரங்களை துகள்பறந்தோடக் கண்டித்தும் துண்டித்தும் தெண்டித்து
ம்சின்னபின்னப்படவெட்டியும் தட்டியும்பிடித்தும் பொடித்தும் இ
வ்விதமாகநிமைப்போதிற்சூரியன்முன்பனியைப்போலவிலக்கிஆர்ப்ப
ரித்துஆயிரகோடி நாராசங்களைச்செலுத்தி எககாலத்தில்அவர்கள்கரங்க
ளிற் பாரித்திருந்தவிற்களை பற்பலதுண்டங்களாக வெட்டியெறிந்து ம
றுபடியும் அவர்கள் மாறுவிற்களை யெடுப்பதற்கு முன்னம் கூரியஅல
கைப்பெற்றிருக்கின்றபதினாயிரகோடிகொடியபாணங்களைப்பிறையோ
கித்துஅவர்களேறியிருந்தநவரத்தினமயமாய் பாரித்ததேர்களை-வண்டில்
அச்சு-மச்சு- குத்துக்கால்-கொடுங்கை-கொடி-கொடை- வெவ்வேறாக
ச்சிதைந்துருளும்படிக்குச்சாடி வேகமுள்ளகுதிரைகளைக் கண்டதுண்ட
ப்படுத்திசாரதிகளைக் கொன்று மேலும் ஒவ்வொருவனுக்கு ஆயிரங்கடூர
மாகியபாணங்களைச்செலுத்தினன் அவ்வாளிகள்வெளிப்பட்டவுடன்புகை
ந்ததீயையிறைத்து குறுகுறென்றும் ஆவ்ஆவென்றும் உராறிக்கொண்டு
அதிவேகமாய்வந்துபாய்ந்து மார்பையும் கண்டத்தையும் முகத்தையும்
புசங்களையும் சல்லடைக்கண்களாகத் துளைத்துங் கண்டித்துங் கொன்று
ம்பிளந்தமோடியதறுவாயில் உதிரப்பிறவாகம்பெருக்கெடுத்தோடஅ
ணித்தலைவர்கள் சின்னபின்னப்பட்டுச் சிதறிமங்கிப்போனதை நவவீரர்
களிலொருவனாகிய வீரமார்த்தாண்டன்கண்டு மனம்நொந்து மானம்பா
திக்கவடவா முகாக்கினியைப் போலக் கொதித்து அதிவேகமாகத் தன்
தேவாமுடுக்கிக்கொண்டுவந்து சூரபதுமனுக்கெதிரில்நிறுத்திறவுத்திரா
காரமாகக்கோபித்து பாரித்திராநின்ற தன்வில்லைவளைத்து அண்டங்கள
திருகுணத்தொனிசெய்து சத்தசாகரங்களும் ஏங்கிவாடும்படிக்கு ஆர்ப்
பரித்துகுரூரமாகிய பாணவருஷிங்களைப் பொழிந்ததறுவாயிற் சூரப
துமன்கோபித்து பற்பலசணைகளினால் மீறிவருகின்றபாணங்களைப் பொ
டிபடுத்தி மேலுந்தீயைப்பொத்தகொடியபாணங்கள் ஆயிரவற்றைப்பகை
வன்நெற்றிக்குக்குறிக்கொண்டு செலுத்தினன்- அந்தசரங்கள்சீறிக்கொ
ண்டுவந்து நாராசங்களைப்போலச் சுறுக்குச்சுறுக்கெனத்தைத்தமாத்திர
த்திற் சிந்தூரப்பொட்டுகளை யப்பியதைப்போல உதிரமானது பீறி
ட்டுக்காட்ட அதைத் துடைத்துக்கொண்டு காளகூடத்தைப்போலச் சீ
றிநாராசங்களுக்குச் சமதையாகிய கணக்கிறந்த பாணங்களைச் சூரபதும
ன்பேரிற்செலுத்தியதறுவாயில்அவற்றினை ஆயிரம்பாணங்களைக்கொண்டு

றடுவதுபாதியிற்கண்டித்துப்போட்டு காத்திற்பற்றியிருக்கின்றவில்லையு
ம்வெட்டியெறிந்து மார்பைப்பிளந்து முதுகிற்கட்டியிருந்த அம்பு
றாத்தூணிரத்தையும் அறுத்துத்தள்ளினன் அந்தகாயத்தினால்வீரமார்த்தா
ண்டன்புழுவைப்போலப்பதைபதைத்து விழுந்துசோர்ந்தனன், இந்த
சம்பவத்தை வீரராக்கதன்பார்த்து மனம்பதைபதைக்கப்பொங்கி சத்தி
ராதியை இந்தநிமிஷத்தில் அடக்கிவாட்டுவேனெனச் சபதம்பேசிதேரை
க்கொண்டுவந்து எதிரில்நிறுத்தி தங்கக்கட்டுகள்பிகிந்து வெற்றிமாலைய
ணிந்துமணிகள்சத்திக்கும் பாரித்தவில்லைவளைத்து ஆயிரம் அர்த்தசந்
திரபாணங்களைப்பிரயோகித்தனன், அவைகள்பிளந்துபுகைந்துகொ
ண்டுவருகிறவேகத்தைச்சூரபதுமன்பார்த்துக்கோபித்தவனாய்அத்தொகை
கொடியபாணங்களை மாறுசெலுத்திக்கண்டித்துமேலுஞ்சிலகணைகளைப்
போக்கிவீரராக்கதன் கொண்டவில்லை யிருதுண்ட மாக்கியபோது அவ
ன்சர்ப்பத்தைப்போலச்சீறி சீக்கிரமாய்உடைவாளாயுதத்தையுருவி கரத்தி
ற்பற்றிக்கொண்டு வானத்தெழும்பி திசையானைகள்பயந்தோடச்செற்சி
த்து ராசாதிராசனேறியிருக்கின்றஇந்திரஞாலத்தேரிற்பாய்ந்துமகம்மே
ருபர்வதத்தைப்போல ராசன்கரத்திலிருக்கின்ற வில்லை வெட்டியபோ
துஅதற்குச்சற்றும்சாயம்படாமல் வாள் பொடிப்பொடியா யிறைந்த
து அப்போதுவீரராக்கதனுக்கு அதிககோபம்பிறவேசித்து இந்தப்பாதக
னைவிடமாட்டேனென்று கையைப்பிசைந்துகொண்டோங்கிமார்பிலறை
யயெத்தனப்படுவதைச் சூரன்கண்டுநிராயுசனாக யிருப்பவனைக்கொல்வ
துபழியாதகமாமென்றெண்ணி கால்விரலினால்வானத்திற்போக வெற்றி
யபோது சக்கரத்தைப்போலச் சுழன்றுகொண்டு அண்டப்பித்திகை வ
ளாயிலெசி முட்டிமறிந்து யிளாச்சலிட்டு பூமியில் வந்துவிழுந்து ப
தைபதைத்துச் சோர்ந்தனன், இந்தஅபாயத்தைவீரமாமகேந்திரன் கண்
டு கோபதீபிதனாய்ச் சூரனைவளைந்துகொண்டுவில்லைவளைத்துக்குரூரமா
கியபாணங்களை அபரிமிதமாகச்செலுத்தி இந்திரஞாலத்தேரொருவருக்கு
த்தோற்றாமல் மறைத்தகாலத்திற் சிலதிவ்வியபாணங்களைக்கொண்டு அ
வற்றினைக்கண்டித்துப்போட்டு மேலும்கணக்கிறந்த கணைகளைச்செலுத்
தவீரன்அவற்றினைத்தடுத்து தன்தேரைக் குயவன்சக்கரத்தைப்போலத்தி
ருப்பிக்கோடானகோடி பாணங்களைப்பிரயோகித்துவாதாடும்போது
சூரனும்உக்கிரகாரனாய் தன்தேரையும் வட்டாகாரமாகச் சுழற்றி மறுக
ணைகளைப்போக்கிப்பகைவன் தாண்டியவற்றினைப்பொடிபடுத்தினான், இ
வ்விதமாய்அவ்விருவீரர்களும்சுருவளிக்காற்றைப்போலத்திரிந்துஒருவ
ர்மீதொருவர் சரமழைகளைப்பொழிந்தும் அவைகளைமாற்றியும் உலவுகி
ன்றவேகத்தினால் அவர்களுருவுயாவருக்குத்தோற்றாமற் போயிற்று அக்

காலத்திற் சூரன்சீறிவீரமாமகேந்திரன் விட்டபாணங்களனைத்தினையும்
கண்டதுண்டப்படவெட்டி மேலும்பாதங்களுக்கிலக்காய் முப்பதபா
ணங்களையும் மார்புக்கிலக்காய் யிருபதுகணைகளையும் பாரித்த தோள்க
ளைக்குறித்து முப்பதுசரங்களையும்போக்கி சக்கைசக்கையாகப் பேத்தெ
றிந்தகாலத்தில் ரத்தம்பீரிட்டோடப் பிறக்கிணைதப்பி விழுந்தான் அத்த
ருவாயிற்சூரபதுமன் சிலரேங்கிஆட்டுமந்தையிற்கோணாய் புகுந்ததைப்
போலப்பக்கங்களிலிருக்கின்ற பூதர்களைவாட்டிக்கொண்டு மேலிட்டுவ
ருவதை வீரதீரன்பார்த்து மிகுகியாசச்சோபித்து வில்லைவளைத்து அமோ
கமாகபாணங்களைச்செலுத்திக் கொண்டெதுத்துவரும்போது சூரபது
மன்கோபித்து ஆயிரம்பாணங்களினால் அதுகளைப்பொடிசெய்து மே
லுஞ்சிலசரங்களைத்தூண்டிபகைவனேறியிருந்த டாரித்ததேரை-வண்டி
ல்-அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை- முதலியவற்றைச்சின்னபின்ன
ப்படவெட்டியெறிந்து செயத்தைக்கொண்டாடியபோது அதற்குச்சகி
க்கமாட்டாதவனாய் நல்லகாரியம் உன்செலிப்பை யடக்குறேனெனச்சீறி
மந்தரகிரிக் கொப்பாகப் டாரித்திராநின்ற தண்டாயுதத்தைக் கரத்திற்
கொண்டு கிறுகிறெனச்சுழற்றிப்பாய்ந்து மேலிட்டுவருவதைச் சூரன்க
ண்டு நான்குதிவ்வியபாணங்களினால்வீரதீரன்பற்றியிருக்கின்றகதையை
ப்பொடியாக்கி விசாலமாகியமார்பிலும் பர்வதத்தையொத்ததோள்களி
லும்பதினான்குகொடியபாணங்களைச்செலுத்தி அவனைப்பூமியிற்கிடத்தி
னான். இதைச்சிங்கத்துக்குச் சமதையாகியவீராதிவீரனாகியவீரமாமகேச
ன்கண்டு கண்களில்அக்கினிப்பொறிகள் பறக்கக்கோபித்து வேகமாய்வந்
து இவனைதனுர்வித்தையில் வெல்வதரிதெனநிதானித்துசவுரியபராக்கிரம
ங்களையும் ரத்தமாம்சங்களையுங் கிறிகிக்கவல்லகூரியவேலாயுதத்தை யெடு
த்துக்குறிக்கொண்டு தீவரமாயெறிந்தான் அதுயிரைந்துவரும் மகிமை
யைப்பார்த்து சூரபதுமன் துரிதமாய் தன்வில்லில்ஆயிரம்பாணங்களைப்
பூட்டிச்செலுத்தித்தடுக்கவும் அவற்றினை விழுங்கிக்கொண்டு சீறியிரைந்
து அனலைக்கொட்டி வடவையைப்போலச் சீறிவந்து மேகத்தினிடத்தில்
மின்னல் விளங்கியதைப்போல ராட்சதராசன் மார்பிற்றாக்கி யாதொரு
காயங்களையும் படுத்தாமல்வலிகுறைந்து பொடிப்பொடியாய்ப் பறந்
துபோயது, அப்போதுமானம்பாதிக்கச் சற்பத்தைப்போலச்சீறி மீளவு
மொருதண்டாயுதத்தையெடுத்துச் சுழற்றிவீசுவதற்குமுன்னம் சூரனை
வன்மகத்துக்களிட்ட சாபத்தினும்வேகமுங் கொடுமையையும் பெற்ற
குரூரமாகியபாணங்களேழைப் பிறையோகித்து வீரமாமகேசன் வயிர
ம்போன்றமார்பைப்பிளந்தான் அவ்வழியேஉதிரம்பீரிட்டோட அறிவு
மங்கிவிழுந்தனன்; இச்சம்பவத்தைச் சிவசுப்பிரமணியதேவருக் கடிய

னாகிய வீரகேசரிதெரிந்து உக்கிரகாரனாய் சந்திரன்பேரில் தாவும்ராகு
வைப்போலத் தன்தேரைத்துரத்திவந்து சூரனுடனெதுத்துவலிய வில்
லைவளைத்து அமோகமாகியபாணங்களைப் பிறையோகித்ததறுவாயில் ரா
சர்கிராசன் சிலபாணங்களைக்கொண்டு கண்டித்துப்போட்டு மேலுமே
ழுதிவ்வியபாணங்களைப் பிறையோகித்து வீரகேசரிகரத்திற்பற்றியிருந்
த வில்லைக்கண்டித்து செற்கரத்தொனிகளைக் காட்டியோடும் தேரையும்
குதிரைகளையும்சாரதியையும் உருத்தெரியாமற் சிதைத்துமறுபடியும்ஆ
யிரம்வெப்பமுள்ள பாணங்களினால் அவன்நெற்றியைத் துளைத்தசாலத்
தில் உதிரம்பெருகவருந்தியும் அரைச்சட்டைபண்ணாமற் றுவியக்கத்தி
லிருந்த பர்வதத்தைப்பறித்து சூரன்பேரிலெறிந்துசெற்சித்த சாலத்தி
ல்அவ்வரையானது சூரியன்முதலானவர்கள் திடுக்கிட்டஞ்சுப்படிக்குச்ச
க்கிரத்தைப்போலச் சுழன்றுகொண்டுவருவதை பரிமளமிகுந்த பாரிசா
தமாலைபுரளும் மார்பையுடைய சூரன்கண்டுதன்வில்லில் அர்த்தச்சந்திர
பாணமொன்றைப் பூட்டிப்பிறையோகித்துத் துகள்கண்டு மேலும் ஆ
யிரம்திவ்விய பாணங்களைப்போக்கி வீரகேசரிமார்பைத் துளைத்தமுன்
னிலையில் மிகவும்வருந்தி வடவையைப்போலச்சீறி ராட்சதராசனேறியி
ருக்கின்ற தெய்வீகமாகியதேரிற்பாய்ந்து முத்துமாலைமோகன மாலைக
ளையணிந்து விசாலமாய்வயிரத்தையொப்ப விளங்குகின்றமார்பிற் கோ
டையிடியைப்போலக் கரத்தையோங்கி அறைந்தசாலத்திற் களர்நில
ம்வெடித்துக் காட்டுவதைப்போலக்கரமானது பத்தல்பத்தலாய்ப்பிளந்
து ரத்தப்பிரவாகமோடப் பதைபதைத்துநொந்து தேரில்விழுந்தனன்,
அவனைக்கொல்லுவது பாதகமென்றெண்ணி சூரன் தன்கையினால் வாரி
யெடுத்துதேவர்க்கள்மருண்டு துக்கிக்க மகாவிஷ்ணுபள்ளிகொள்ளுந்தி
ருப்பாற்கடலில் விழும்படிக்கெறிந்தான்அவன்கருடனைப்போல்வே
கமாய்ப்போய்விழுந்து முழுகித்தாவியெழுந்து ககனத்திற் பாய்ந்துவ
ந்து ரணக்களத்தைச்சேர்ந்து வாடியொளித்திருக்கின்ற தம்மவருடன்க
லந்திருந்தனன், இச்சம்பவங்களைத்தெரிந்த வீரமாபுரந்தரனென்னும்
செயசாலியானவன் காலாந்தகனைப்போலக்கோபித்து தன்தேரைத்துரத்
திவந்து சூரபதுமனுக் கெதிரில்நிறுத்தி இந்தபாதகன்பேரில் எத்தகை
யபாணங்களைச் செலுத்தியபோதிலும் பிறையோசனப்படாமற் போகி
ன்றபடியால் தேவாஸ்திரங்களைக்கொண்டு வெல்லக்கடவனென நிதானி
த்துத் துரிதமாய்ஒப்பற்ற தன்வில்லைவளைத்து குணத்தொனி கொண்டு
எமதருமராசன்படையையெடுத்துமானசபூசையினால்சகலவுபசாரங்களை
யுஞ்செய்துபூட்டிச்சூரன்மார்புக்கிலக்காகக்காதளவுமிழுத்துப்பிறையோ
கித்தபோது அதிகமக்கினிகளைக்காட்டிப் புகைத்தெரிந்துகொண்டு ஆவி

ஆவென வாயைத்துறந்துகொண்டு வேகமாய்மேலிட்டு வருவதைச்சூர
ன்கண்டும் சட்டைபண்ணாமல் நகைத்துக்கொண்டிருந்தபோது சிவந்
துபடையானது வச்சிராயுதத்தைப்போலத்தாக்கித் தன்வலிகுன்றிக்குறை
ந்துவெழ்க்கித்திரும்பிவிட்டது - சவுனகாதிரிஷிகளே, இதனாற்சூரன்பெ
ற்றிருக்கின்ற வரப்பிரசாதமுயற்சியைத்தெரிந்துகொள்ளக்கடவீராக, இ
ப்படிக்குத் தான்செலுத்தியபடையானது திரும்பிவிட்டதைக்கண்டவு
டன் அதிககோபங்கொண்டு பிரமாஸ்திரத்தைத்தொடுக்கஎத்தனிக்குமு
ன்னிலையிற் சூரன்தன்வில்லில் நூறாயிரங்கடினமாகிய பாணங்களைப்பூ
ட்டிவீரமாபுரத்திரன்மார்புக்குச்சரியாய்பிறையோகித்ததனுவாயில் வட
வையைப்போலஎரிந்து சிடசிடத்த தொனிகளுடன் அதிவேகமாய் வந்
துதடாரித்துருவி வாயலைப்போலவெளியாக்கி யோடியதனுவாயில்உதிர
ங்களைக்கக்கிக்கொண்டு கரத்திற்கொண்ட பிரமன் படையுடன் நிலத்தில்
விழுந்துமாண்டனன், இதைக்கண்ட வீராந்தகன் நல்லகாரியம் பாதக
ராகியராட்சதர்வீறி பூதப்படைகள்மங்கவும் சூரனுக்கஞ்சிநம்மவர்கள்பி
ன்னடைப்படுவதோ யிதுவெருநேத்தியெனப்பொங்கி துரிதமாய்த்தேரை
த்தூரத்திவந்துஎதிரில்நிறுத்திச்சூரனைப்பார்த்துச்சொல்லுவான் ஏதோசில
வெற்றியைப்பெற்றனமென்றுவீறியிருக்கின்றனை அதைவிட்டுவிடக்கட
வை, உனக்கெமனைப்போலவந்தேன் நிமைப்போதில் உன்பிராணனை வீர
சொற்கத்திற்சேர்ப்பேன் பதலமாயிருக்கக்கடவையென்றுஎச்சரித்துசா
ரங்கத்தினும்மன்மதன்வில்லினும்மேலிட்டவலியுடையதாய்வரிவரியாய்
த்தங்கக்கட்டுகள்பூண்டு வெற்றிமாலைசூடியிருக்கும்பாரித்தவில்லையெடு
த்துவளைத்துமன்னுயிரனைத்தும்செவிடுபட்டுத்தியங்கவும்சூரியன்யிதெ
ன்னஉற்பாதமாயிருக்குதென்றோடவும் தேவர்க்கள்திரோசமுற்றும்விய
ர்த்துகிடுகிடெனநடுங்கவும்-விஞ்சையர் - சித்தவித்தியாதரர் பயப்பிருந்
திகொண்டுபறக்கவும் யிணைபிரியாமலிருக்கும்பேடைகள்வருந்தியெங்க
அன்றில்பட்சிகள்பறந்தோடவும் சக்கிரவாகப்புட்கள்மதிமருண்டுகுஞ்
சுகளைவாயிற்கவ்விக்கொண்டு தமது நிலைகளைவிட்டுப் பறந்துபோகவும்
இப்படிக்குச் சகலமும் தத்தளிக்கக் குணத்தொனிசெய்து உடனே சங்
கோபசங்கக்கணக்கில் அதிகமகிமைகளைப் பெற்றிருக்கின்ற திவ்வியபா
ணங்களைப் பூட்டிச் சூரபதுமன் ஆரோகணித் திருக்கின்ற இந்திரஞாலத்
தேர் ஒருவருக்குந் தோற்றாமல்மூடிக் கெற்சித்தகாலத்தில் மாறுகணைக
ளைக்கொண்டுஅதுகளைச்சூரியன்முன்பட்டபனியைப்போலவாட்டிஉதிர
மாம்சங்களைப்பிராணனுடனுண்டு களிக்கும்படியான கொடியபாணங்
களைமிகுதியாகப்போக்கி வீராந்தகனை மறைத்தான் அதுகளை அத்தொ
கைசரங்களைச்செலுத்திச் சின்னபின்னப்படக்கண்டித்தெறிந்து சிங்கநா

தஞ்செய்ததறுவாயிற் சூரபதுமன் அதிககோபங்கொண்டு கூர்மையா
ய்முத்தலைகளைப் பெற்றிருக்கின்ற ஆயிரம் வயிரப்பகழிகளை வேகமாய்
வில்லிற்பூட்டி வீராந்தகனைக்கொல்லும்படிக்குக்கடாவியபோது அவை
கள்சர்ப்பங்களைப்போலச்சீறிக்கொண்டுதீயையிறைத்துவாயுவினுங்கடுகி
வரக்கண்டு வீராந்தகன் சீக்கிரமாய்த் தன்வில்லிற்கணக்கிறந்தபாணங்க
ளைப்பூட்டிப்பிரயோகித்துத் தடுத்தபோதினும் அவற்றினைக் கவளீகர
மாய்விழுங்கிக்கொண்டுபினைந்துவந்துவிழுந்துசேனையழித்துக்குதிரை
களைக்கொன்றுபாகனைச்சிதைத்துகரத்திற்கொண்டவில்லைக்கண்டித்துத
யிரியத்தைக்கலக்கி மார்பிற்பாய்ந்து உயிரையுண்டு ரத்தத்தைப் பிரவாக
மாகப்பெருக்கி இந்திரனாதியதேவர்க்கள் திடுக்கிட்டு வாடிச்சோர முது
கின்வழியா யோடிப்போயது, இப்படிக்குவீராந்தகன்முதலாகியவீர
ர்கள்மாண்டும்புறந்தந்தும்மறைந்தும் போனதறுவாயில்எதிர்ப்பவரை
க்காணாமையால் சூரபதுமன் அதிகவுச்சாகத்துடன் ரணக்களமெங்குமு
லவிவருவதைசிங்கத்தையொத்தசெயசாலிகள்கண்டவுடன்பயந்தோடும்
புயவன்மையைப்படைத்திருக்கின்றவீரவாகுதேவர் பார்த்தவுடன்நல்லகா
ரியமெனக்கோபநகைகொண்டவராய்மானமும்வீரமும்மனதைவாட்ட
வடவையுங்குளிர்ந்துபோகும்படிக்குச்சீறி அதிவேகமாய்த்தேரைமுடுக்
கிக்கொண்டுவந்து சூரபதுமனுட னெதுத்த தறுவாயில் அவர்சுந்திரவடி
வைக்கண்டவுடன் இவன் ஆதியில்தம்மிடத்துக்குத்தூதாகவந்தவனென்ற
றிந்துறவுத்திராகாரமாகக்கோபித்து இதனைச்சொல்லுவான், அடாபயலே
சிறந்தபற்பல அண்டங்களினும் புகழ்ந்துகொண்டாடத்தக்க பெருமை
யினையுடையவீரமாமயேந்திரபுரத்தைநாசம்பண்ணிகணக்கிறந்தராட்ச
சரைக்கொன்றுசற்றும்பயமில்லாமல்என்னரியகுமாரனையும்கண்டதுண்
டமாகவெட்டிமாய்த்துதப்பிப்பிழைத்துப்போயின நீயானவன் இக்கால
த்தில்உனக்குநாள்குறுகியபடியால்என்முன்னம்வந்தனை இதோஉன்பிரா
ணனை எமலோகத்துக்கனுப்புவேன்சண்டையையும்யிந்தநிமிஷத்தில்மு
டித்துசெயத்துடன் நகரத்துக்குமீள்க்கடவேன்—என்னைக்கண்டஉடன் தீ
ர்க்காலோசனையைச்செய்து சூரத்தைவிட்டுதூதனைப்போல வந்திருப்பை
யாகிற்பிழைத்துப்போகும்யதுவையுண்டு அதைமறந்து நீயுமொருசூ
ரனைப்போல நீண்டதனுசைக் கரத்திற்பற்றி உன்னதமாகிய தேரிலேறிக்
கொண்டுவந்தபடியாற் சந்தேகமில்லாமல் மாள்வதற்குதடையில்லை, ஐஐ
யோ இன்றைக்குயிந்தரணக்களத்தில்மாளக்கடவையென்று உன்தலையிற்
பிரமனெழுதினனோயிதுதானுனக்குக் கடைநாளோசீக்கிரமாய்உன்னிஷ்
டதேவதையைநினைந்துகொண்டு சண்டைக்காயுத்தப்படக் கடவையென
ச்சொல்லிமுடித்தவுடன்வீரவாகுதேவர் சிறுநகைகொண்டுஅவுணருக்கர

சனேஇரணைக்கெம்ப்பையாக, தூதனாகவுமிருப்பேன் மந்திரியைப்போல
வும்விளங்குவேன் சத்துராதிகளுக்குச்சென்மவயிரியாகவிருந்து அவர்கள்
வம்சநாசஞ்செய்வேன் எமதிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவர்கட்ட
ளையிடும்பணிவிடைகளனைத்தையும் சிரசாகவகித்து நடப்பிக்கவல்லேன்.
அத்தேவதேவோத்தமன் பரிபூரணகடாட்சவீட்சணிய முயற்சியினால் இந்
தவுலகங்களில் எனக்கரிதாகிய காரியமொன்றுமிருக்கமாட்டாது ஆதலால்
நின்வார்த்தையாடுவதிற் பிறையோசனமென்னை நீசூரனெனப்பேர்படை
த்ததுநிச்சயமாகவிருக்குமாகில் துரிதமாய்ச்சண்டைக்குவரக்கடவையென
ப்பேசியதுகள்செவியிற்பட்டவுடன் அதிககோபம் பிறவேசித்துகாளகூ
டத்தைப்போலமண்டியெரிந்துசொலிவைக்கினியையொப்பவிழிகள்சிவ
ந்து தீப்பொறிகள் குபீல்குபீலெனக்கொட்டவுருத்துப்பார்த்துபற்களை
நறநறவெனக்கடித்து உதட்டையதுக்கி மயிர்க்கால்தோறும் அனல்வீ
சசர்ப்பத்தையொப்பாகச்சீறி நல்லசாரிடம்சுற்றும்யெண்ணிக்கையில்லா
மற்பெரிய உன்னுணவத்தைச் சற்றுநேரத்திலடக்குறேனெனக்கொதித்
துமேருகிரிக்குச்சமதையாக விளங்கும் தனுசைவளைத்து நாணேற்றிக்கு
ணத்தொனிசெய்தான் அவ்வதிற்சியினால்உலகங்களுக்கச்சாணியாக விரு
க்கின்ற மகம்மேருகிரிகிடுகிடென்றசைந்து அஷ்டதிசைகளும் நடுக்குற்
றகுலகிரிகள் நெக்குவிட்டு திசையானைகள்வீறிட்டுமங்கி அண்டகோள
கைநெக்குவிட்டு பூமிபாதலவளையில் பத்தல் பத்தலாகப் பிளந்து அதை
ஒருதலைப்பாரமாகச் சுமந்திருக்கின்ற ஆதிசேஷனும் தத்தளித்து ஆயிர
ம்பணுமகுடங்களைக் கொண்டு தாங்கவருந்தி விஷங்களைக் கக்கி மற்ற
பிராணிகள் நிலைகலங்கிவாடியது, இவ்விதமாகச்சகலமும் பயப்பிருந்தி
கொண்டகாலத்தில் வீரவாகுதேவரும் தமதுகரத்திற் பினாகத்தைப்போ
லவிளங்கும் தனுசைவட்டாகாரமாய் வளைத்துநாரியைப்பிகிந்து ஒருதிர
ம்டங்காரசத்தத்தைக்காட்டியபோது பெருத்தஓசையை யின்னவிதமெ
னச்சொல்லிமுடியாது - சவுனகாதிரிஷிகளே, இவ்விருவீரருங்காட்டியநா
ணொலியினோசையானது கலந்து திரிலோகங்களும் ஒருமுகுர்த்தகாலம்
அல்லோலகல்லோலப்பட்டு மன்னுயிரனைத்தும் செவிகளடைபட்டுக்க
ளைத்துச்சோர்ந்தது, அச்சமையத்திற்சூரபதுமன்காட்டழலுக்கொப்பாக
ப்பொங்கி ஆயிரக்கோடி கொடியபாணங்களைச் சந்தித்துவீரவாகுதேவ
ர்பேரிற்செலுத்தி சிங்கத்தைப்போலக்கெற்சித்தான் அவைகள்யிரைந்து
புகைந்து அனலைவீசி பலகொடுமைகளைக் காட்டிவரும்போது வீரன் அ
திவேகமாகக் கோடைகாலமேகத்தைப்போலத் தமதுவில்லிற்கணக்கிறந்
தகுரூரமாகிய சரங்களைப்பூட்டிச்செலுத்திமீறிவருகின்றபகைவன்கணை
களைக்கண்டித்துவேடிக்கைப்பார்த்திருந்தனர், அப்போதுசூரபதுமனுக்

குவிசாவெசம்பிறவேசித்து யிவன்மனஉறுதியைச்சற்றுநேரத்திற்கலக்கி
வாட்டுவேனென்று சற்பங்களைப்போலவிஷச்சுவாலையை வீசவல்லகடூர
மாகியபாணங்களை அமோகமடாகப்போக்கினன், அவைகளின் கொடுமை
யை வீரவாகுதேவர்பார்த்து ஆயிரகோடி தீட்சண்ணியமாகிய சரங்களைக்
கொண்டுமேல்வருகின்ற பாணங்களைத் துண்டித்துத்தள்ளியபோது சூர
பதுமன் றவுத்திராகாரனாய்த்துரிதமாக வெற்றிகொள்ளவேண்டுமென்கி
ன்றகருத்தைக்கொண்டு அதிகமகிமைகளைப் பெற்றிருக்கின்ற கொடிய
பாணங்களைப்பூட்டி வீரவாகுதேவர் மீதிற்செலுத்தினன், அவைகள்சடசி
டத்தொனிகளுடன் சீறியிரைந்துவருவதைப் பார்த்தவுடன் மாறுசரங்
களைச்செலுத்திக்கண்டித்துப்போட்டு மேலும் நூறுகடியகணைகளைச் சூர
ன்நெற்றிக்குக்குறிபார்த்துவிட்டகாலத்தில் அளவையிறைத்துக்கொண்டு
வேகமாய்வந்து அர்த்தசந்திரனைப்போல விளங்கிக்கொண் டிருக்கும் நு
தலிற்றாக்கி வயிரமலையின் உச்சியிற்பட்ட பொன்னூசிகளுக் கிணையாக
முனைகளொடிந்து துகள்பட்டுப்பறந்துபோயது, இதனைவீரவாகுதேவ
ர்தெரிந்தவராய் நமதுபாணங்கள்யிதுபரியந்தம் ஒருவன்மீதிற்றாக்கினா
ல்சாயப்படுத்தாமற்போனதில்லை நூறுகூரியபாணங்களுங் குறிப்படிக்
குப்பாய்ந்தும் பிறையோசனப்படவில்லை ஆதலாற்சண்முகப்பெருமா
ன்திருக்கரங்களில்விளங்கும் வெற்றிவேலன்றியில் மற்றெவ்வித பா
ணங்களினாலும் இவன்வயிரத்திரோகத்தை பின்னப்படுத்தலாகாதென நிச்
சயித்து அப்படியிருந்தபோதினும் என்னாற் கூடியவளாயிற் போராடி
ப்பார்ப்பதல்லது சும்மாய்த்திரும்பமாட்டேனெனத் தீரனாய்த்தன்வில்
லில்அதிகதீட்சணியமுள்ள பலகோடிகணைகளைச்சந்தித்துப் போக்கிச்சூ
ரபதுமன் கிரோகத்தைத்தோற்றாமல் மறைத்தகாலத்தில் அமோகமாகிய
பாணங்களினால் அவைகளைவிலக்கிமேலும் எழுதிவ்வியபாணங்களைவீர
வாகுதேவர்புசங்களுக்குக் குறிபார்த்துத்தூண்டினன், அவைகள்வெளி
ப்பட்டவுடன் பக்குபக்கெனவெரிந்து சீறிவேகமாய்வந்து பர்வதாகிரு
தியாகப் பாரித்திருந்தபுசங்களிற்றைத்து உதிரங்களைப்பெருக்கித்தேவ
ர்க்கள் கிலேசித்துவாடும்படிக்கு உருவிப்போயது அதனால்மிகவும்நொ
ந்துவருந்தியபோதினும் சூரனாதலால்மிகுந்தகோபங்கொண்டு தீட்சண்
ணியமுள்ள பலகோடிபாணங்களைச்சோனைமாரியைப்போலச்சொரிந்து
சூரபதுமன்தேரைச்செலுத்தும் சாரதிகள் கிரோகத்தைச் சல்லடைக்கண்
களாகத்துளைத்தமாத்திரத்தில்உதிரம்பெருக்கெடுத்தோடத்திகைத்துவலி
குன்றிகைகால்களோய்ந்துமிளமிராமுழித்துக்கொண்டு தங்கள்தொழி
லைமறந்து நின்றுவிட்டனர், இதைக்கண்டசூரனுக்குக் கோபமிகுதியினா
ல்விழிகள் சிவந்து அக்கினியைக் கொட்டப் பெருமூச்செறிந்து தூர்த

மாய்தன்வில்லில் நீயினும்கொடுமைபெற்றிருக்கின்ற அன்பதுபாணங்
களைப்பூட்டிச்செலுத்தி வீரவாகுதேவரேறியிருக்கின்ற தேரைப்பொடி
ப்படுத்தி குதிரைகளைக்கண்டித்து பாகனைக்கொன்று கெற்சித்தனன், உ
டனேமற்றொருயாரித்த ரதத்திலேறி வாயுவாஸ்திரத்தையெடுத்து மான
சபூசையினாற் சகலஉபசாரங்களையும் முடித்துவில்லிற்பூட்டிச் செலுத்தி
யபோது சூரன்கண்டுகுஞ்சிரிப்புடன் மற்றொன்றையுந் தாண்டாமல்
வில்லையூன்றிக்கொண்டு வேடிக்கைபார்த்திருந்தபோது அந்தபாணமா
னது சகிருகாரமாகச்சுழன்று பிறசண்டமாருதத்தைப்பெருக்கித் தீயை
யிறைத்துச்சீறிவந்து வயிரமலைக்குச் சமதையாக விசாலமா யிருக்கின்ற
மார்பிற்றாக்கி வலியற்றுபொடிபட்டுத் திசைகளிற்பறந்துபோயது, அப்
போதுவீரவாகு மனம்பொறாமல் உடனே அக்கினியாஸ்திரத்தை யெடு
த்துப்பூசித்து செலுத்தினர், அதுவெளிப்பட்டவுடன் அனற்பெருக்கை
யிறைத்து திகுதிகென்றெரிந்து புகைப்படலத்தைவீசிக் காந்திக்கொண்
டுவந்து வயிரமேனியிற்றாக்கிப்பொரிந்து மங்கியது, அதன்பின்பு ரவு
த்திராகாரனாய் எமாஸ்திரத்தையெடுத்து வழிபட்டுப்போக்கியதறுவாயி
ல்வானத்தெழுந்து பலகோடிபடைகளைப்படைத்து விஷங்களைக் கக்கிச்
சர்ப்பத்தைப்போலச்சீறிவந்து மார்பிற் றைத்துவெழ்க்கி முனைமழுங்கிம
றிந்துபோயது,உடனேசூரியாஸ்திரத்தைப்போற்றிக் கரவேகமாகச்செ
லுத்தியபோது பலகோடிசூரியர் தோற்றங்களைக்காட்டி தகத்தகாயமா
யெரிந்து சகலரும் பிறிமிக்கும்படிக்குச் சீறிக்கொண்டுபோய் சூரன்தி
ரேகத்திற்றாக்கிப் பயன்பெறாமற் சின்னபின்னப்பட்டுப் போயது, அ
தைக்கண்டவுடன் பார்பதியார்திருவடிகளிற் பிறகாசித்திருந்த பாதச்சில
ம்புகளினுதித்த நவகன்னியரில் மூத்தவள்செய்தவிரதமகிமையினாற்றோ
ற்றியிருக்கின்றது, வீரவாகுதேவருக்கு அதிசெயமுண்டாய் நல்லகாரிய
ம்இன்னமும் யிவன்வலியை யறிவோமெனத்துணிந்து -வருணாஸ்திரம்
இந்திராஸ்திரம்-நிருதாஸ்திரம்- இந்தமூன்றுதேவபாணங்களையும் ஒரு
முகத்திலெடுத்து மந்திரமூலமாய்ச் சோடச உபசாரங்களைமுடித்து ஏக
காலத்திற்பூட்டிக் காதளவுமிழுத்துப் பிறையோகித்த மாத்திரத்திற் பல
மேகங்களைப்பெருக்கி- இடி-மின்னல்- குமுறல்களைக்காட்டி கல்மழை
களைச்சிதறி வச்சிராயுதமுதலாகியபடைகளை யுண்டுபண்ணிகொடியபூதங்
களைநிர்மித்து அதிகமகிமைகளுடன்வேகமாய்வந்து மிகுத்தபாதகனாகி
யசூரபதுமன் புசங்களினும்மார்பிலும்பட்டு படாதபாடுகளைப்பட்டு உ
ருத்தெரியாமல் துகள்பட்டுப்பறந்தது, இதைப்பார்த்த வீரவாகுதேவர்
கோபாவேசத்துடன் -குபேராஸ்திரம்- மாயாஸ்திரம்- இவ்விருவாளிக
ளையும் சந்தித்துத்துரிதமாய்ச் செலுத்தியபோது மலைகளைப்பெருக்கித்

டாந்தகாரமாகிய யிருளைக்காட்டியும் பலகொடுமைகளை யுண்டுபண்
ணிக்கொண்டு நாகங்களைப்போலச்சீறி அதிகவேகமாய்வந்து சூரன்மா
ர்பில்மோதிதங்கள்பெருமைகளழிந்துதிரும்பியது, இப்படிச்குத்தாமே
வியதேவாஸ்திரங்களனைத்தும்பிறையோசனப்படாமற்குன்றிக்குறைந்
துநாசப்பட்டதைக்கண்டு பகைவன்றவமுயற்சியையும்வலியையும்நிதா
னித்து பிற்மித்தவனாய்இன்னமும் யிவன்பெருமிதங்களைப் பார்ப்போ
மென்று சிருஷ்டிகர்த்தனாகிய பிரமன்படையையும் கைகால்முகமுதலிய
உறுப்புகள் செந்தாமரையைப்போலவிளங்கும் உலகையுண்டமாயவனா
கியமகாவிஷ்ணுவின்படையையும் எடுத்துப்பூசித்து ஒருதொடையிற்பூ
ட்டிப்போக்கினன், அந்ததிவ்வியபாணங்கள் வெளிப்பட்டவுடன்சிடசி
டத்ததொனிகளுடன் ஆர்ப்பரித்துக்கொண்டுபலதேவாஸ்திரங்களை உண்
டுபண்ணி சுழற்காற்றைப்பெருக்கி அக்கினிக்கொழுந்தைவீசி அதிககொ
டுமைகளைக்காட்டிவந்து பரிமளமிகுத்தபுஷ்பமாலைபூணும் விசாலமாகி
யமார்பிற் கோடையிடிகளைப்போல விழுந்து வாலத்தையளாவநின்றவ
யிரமலையைச் சுந்தரமுள்ள சிறகைபெற்றிருக்கின்ற வண்டினங்கள் துளை
த்துப்பயன்பெறாது வாடித்திரும்பியதைப்போலவலிகுறைந்து வானத்
திலிருந்துவேடிக்கைபார்த்திருந்ததேவர்க்கள் ஏ-ஏயெனக்கூவியிசழ்த்த
க்ததாசத்தலைகுத்தலிட்டுத்திரும்பிவிட்டது, இச்சம்பவங்களை மனம்நோ
கவிழிகள்சிவக்க வீரவாகுதேவர்பாத்து லோகநாயகனாகிய சிவபிரான்க
டாட்சித்திருக்கின்ற வரத்தின் முயற்சியை நினைந்து அதிசெயித்தவனாய்
சூரனென்பது யிவனுக்கேதகும் புசபெலபராக்கிரமத்துக்குயிவனுக்கு
நேராகஒருவனையும் பேசலாகாதென்று மனதில் நினைந்து யினியென்ன
செய்வோமென்று யோசித்திருக்கின்ற தருவாயில் ஆயிரத்தெட்டண்ட
ங்களுக்கும் அதிபனாய்ச் சகலரையும்வென்று சொடுங்கோல்செலுத்திவ
ரும் சூரபதுமன்நகைத்து அடாதூதனே திரிமூற்திகளிற் காரணக்கடவு
ளாய் வேதப்பொருளாய் சுயஞ்சோதிமயமாய்மணியினொளியைப்போ
லஎங்கும்பரிபூரணமாய் தேவதேவோத்தமனாகவுமிருக்கின்றபரமேஸ்ப
ரன் அனுக்கிறகித்திருக்கின்ற வரப்பிறசாத மகிமையினால் எத்தனையதே
வர்க்கள் படைகளைச்செலுத்தியபோதினும்என்னைவெல்லமாட்டாதுமே
லும்சரீரத்திற் சிறிதுகாயத்தையும்படுத்தவல்லதோ அப்படிக்கொத்தசல
னமற்ற வயிரத்தேகத்தைப் பெற்றிருக்கின்றேன் மேலும்அந்ததேவன
பெயரால்விளங்கும்பாசுபதாஸ்திரத்தைச்செலுத்தியபோதினும் மாறெ
ருபாணங்களையும் பிறையோகியாமல் யிப்போ திருந்தபடிக் கிருப்பே
ன்மேற்குறித்த தேவப்படைகளாதிய அஸ்திர சஸ்திரங்களை என்பேரில்
விடுவதையோசிக்குமிடத்திற் சமுத்திர செலமுற்றினுங் கிறிகிக்கவல்லவு

டவாமுகாக்கினியை ஈக்கூட்டங்களானவை மாம்சமென நினைந்து ஒடி
வந்துவிழுந்து மாய்ந்தகதையாகும் அதற்குத்திருஷ்டாந்திரமாக நீஇக்கா
லத்திற்செலுத்திய தெய்வீகப்படைகளானவை என்னையொன்றுஞ்செய்
ததன்று யாதொருசெயத்தையும் பெறுமற் சின்னப்பட்டுவாடி முனைம
ழுங்கிமுறிந்து துகள்பட்டுப்போயது யிதுகேழ்வியல்லஉன்கண்மு
ன்னங்கண்டனை இப்படிக்கிருக்க யிதுவனாயில் நீதலைகீழாய்விழுவதை
ப்பார்த்திருந்ததென்னகாரணத்தினுலென்றால் உன் வில் வல்லபத்தையு
ம்தேவாஸ்திரமுதலியசரங்களின் பிறபாவங்களையும்உன்சேவகத்தையும்
வேடிக்கையாகப்பார்த்திருந்தேன் இனிபிராணனைக்கொண்டுபோகும்எ
மனையொத்தஒருபாணத்தினுல்உன்னுயிரைத்தென்தேசத்திற்சேர்ப்பே
ன் அதையுஞ்சற்றுநேரத்தில் நீயேகாண்பையெனச் சூரபதுமன் சொன்
னவிசேஷங்களை வீரவாகுதேவர்கேட்டு நல்லகாரியம் யிவன்வலியைஒரு
கணையினுல்வாட்டுவேனென்று துரிதமாய் திரிபுரதகனராகிய சிவபிரான்
பெயரால்விளங்கும் பாசுபதாஸ்திரத்தையெடுத்து தூபதீபமுதலியவழி
பாடுகளைவிதிப்படிக்கு நிரப்பிவில்லிற்பூட்டி ஆகாணுந்தபரியந்தமிழுத்
துப்பிறையோகித்தவுடன் அந்தபடையானதுவடவாமுகாக்கினியையும்
ஆலவிஷத்தையும்இடிமின்னல் காடாந்தகாரமாகியயிருள் சுழுவளிக்காற்
றுசூரியசந்திரர்எமன்கோரரூபத்தைப்படைத்திருக்கின்ற பூதகணங்கள்
மேகசாலங்களை உண்டுபண்ணிசிரேஷ்டமாகிய -பிறமாஸ்திரம்- நாராய
ணுஸ்திரம் முத்தலைச்சூலமுதலிய படைகளைப்படைத்துத்தன்னைச்சூழ்ந்
துபோற்றிவரவும் சர்வசங்காரகால மிதுதானேவென்று சகலபிராணிக
ளும்மருண்டு தியங்கவும் அண்டங்களதிர்ந்து தத்தளிக்கவும் கலகலெ
னநகைத்து திசைளதிரஆர்ப்பரித்து அதிவேகமாய்வருவதை வச்சிரசரீரி
யாகியசூரபதுமன் பாத்து யிந்தமகிமையுள்ள படையானது மற்றவைக
ளைப்போலமார்பிற்றுக்கியவுடன் துகள்பட்டும்பொடிந்தும் எரிந்தும்
பறந்துபோகப்பட்டதன்று தேவாதிதேவன் படையாதலால் வேறொரு
காரணங்களினுல் வெல்வதரிது அந்தசிறந்தகணையைக்கொண்டே தடை
செய்யவேண்டுமென நிதானித்துபாசுபதாஸ்திரத்தையெடுத்துசாத்திரப்
படிக்குப் பூசாவிதிகளை நடத்தி வில்லிற்பூட்டிப்பிறையோகித்ததறுவாயி
ல்அதுவும்பற்பல படைகளையுண்டுபண்ணி அளவற்றமகிமைகளைக் காட்
டியெழுந்து மேலிட்டுவருகின்ற பரமன்படையுடனெதுத்து சராசரப்
பிறபஞ்சங்களனைத்தும் அதலகுதலப்பட்டுவாடி யொடுங்கும்படிக்கு
அகோரஉயித்தியங்களைச் செய்துவருமுன்னிலையிற் பிரமன்முதலியதே
வர்கள் மானிடர்பாதலவாசிகள் கரங்களைக்கூப்பி பத்திவிசுவாசங்களு
டன்துதித்து ஒபடைகளுக்கரசாகவிருக்கின்ற பாசுபதங்களே எதும்பு

முதல்யானையிருகச்சொல்லநின்ற சகலபிராணிகளும் வாடிபின்னப்பட
வொட்டாமல் ரட்சிக்கவேண்டும் உங்களால்நேர்ந்திருக்கின்ற வருத்த
ங்களுக்குத் தாபரிக்கப்படாமற் சோருகின்ற துயிதைதிருவுளத்திற்கொ
ண்டு இறவையுற்றபாதுகாற்க வேண்டுமென்று பலவிதங்களிற் போற்
றுவதைத்தெரிந்து மன்னுயிருக்கிரங்கி உடனேதங்கள் செய்கைகளை உ
ள்ளடக்கிக்கொண்டு கோபந்தணிந்து விடுத்தவர்களிடத்திற்போய்ச் சே
ர்ந்தது அப்போதுசூரபதுமன் வீரவாகுதேவனைப்பாத்து நகைத்துஇவ்
வளவோஉனக்கிருக்கின்ற வல்லபங்கள்யின்னமுமேதேனுமுண்டோயி
னிகணப்போதில் உன்பிராணனை யொழிப்பதற்கையமில்லை பாமொன்று
தன்கரத்தில்மேருவைப்போல விளங்கியிருக்கின்ற வில்லைவளைத்து உக்கி
ரமாகிய பாணகோடிகளை விண்மண்ணெங்கும் நிறையும்படிக்குக் கர
வேகமாய்ப்பொழிந்தனன், அவைகள் அதிகஉற்பாதங்களைக்காட்டி வட
வையைப்போற் சீறிக்கொண்டுமேலிட்டுவருவதை வெற்றிமாலைபுரளும்
பாரித்த புசங்களையுடைய வீரவாகுதேவர்பாத்து சீக்கிரமத்திற்றமதுஒ
ப்பற்றவில்லை வட்டாகாரமாய்வளைத்து திவ்வியமாகியகணைகளைக் கார்கா
லவருஷத்தைப்போலச்சொரிந்து மேல்வருவதைக் கண்டதுண்ட மாக
வெட்டியெறிந்தபோது சூரன்வடவையைப்போலக் கொதித்துபதை
ந்து முத்தலைப்பாணங்களைப் பிறையோகித்து வீரவாகுதேவர் கரத்திற்
பற்றியிருக்கின்ற பாரித்தவில்லைக்கண்டித்தான் அப்போதுவீரனுக்குஅ
திககோபம்பிறவேசித்து துரிதமாய்அடிபரந்து நுனிகுவிந்திருக் கின்ற
வேலொன்றையெடுத்துவீசினர், அதுவும்அதிகவுக்கிரத்தைக்காட்டி அன
லையிறைத்து சிடுசிடுத்ததொனிகளுடன்வந்து அபரிமிதமாகியவரங்களை
ப்பெற்று அகண்டமண்டலாதீஸ்பரனாகவிருக்கின்ற சூரபதுமன்மார்பி
ற்ருக்கிப்பொடிபட்டுதிர்ந்துபோயது-உடனேசூரன்சீறி-பிரமன்-வி
ஷ்ணுமுதலானவர்கள் வலியைக்கணப்போதிலழிக்கவல்லபாரித்ததண்டா
யுதமொன்றையெடுத்து வெற்றிமாலைபுரளும். புயாசலங்களையுடைய வீ
ரவாகுதேவர்மீதிற் சுழற்றி யெறிந்தபோது ஆயிரம் பணமகுடங்களைப்
பெற்றிருக்கின்ற சேஷனும்அஷ்டமாநாகங்களும் ஏகஉருக்கொண்டு வி
ஷங்களைக்கக்கிச்சீறி வந்ததைப்போலபொன்மணிகள் சத்திக்கயினைந்து
வருவதை வீரவாகுகண்டு சீக்கிரமத்திற் றன்னிடத்திலிருக்கின்ற மந்தா
ம்போன்ற தண்டாயுதத்தை யெடுத்து சக்கிருகாரமாகச் சுழற்றியெறிந்
தார் அதுவும்வெகுமகிமைகளைக்காட்டி வேகமாய்ப்போய் ராட்சதாச
னேவிய வயிரத்தண்டுடன்போராடி நிறுவகிக்கப்படமாற்பொடிபட்டு
விழுந்தது-பகைவன்தண்டமானதுமேவீட்டுவீரவாகுவின்விசாலமாகிய
மார்பிற் கோடை யிடியைப்போலப்பட்டு சரீரமுற்றும் கலக்கிப்பிளந்

ருஉதிரமானதூற்றெடுத்தோடவருந்தியபோது கோபாக்கினிமனதை வாட்டவிழிகளிற் றீயைப்பெருக்கி மானம்பாதிக்கப் பெருமூச்செறிந்துமயங்கிச்சரீரமெங்கும்ரத்தந்தோயபெருங்காற்றிற்பட்டுமறிந்தகற்பகத்தருவைப்போலத்தேவர்புலம்பியோடத்தேரில் மெல்லச்சாய்ந்தனர், இவ்விதமாகப்போராடி வீரவாகுவலிகுறைந்து செயலற்றிருந்தகாலத்தில்விவேகசாலியாகிய விசாலனென்னும் சாரதி சயித்திய உபசாரங்களைச்செய்யும்பொருட்டு தேரை ஒருபாரிசத்திற் றுரத்திக்கொண்டுபோயினன், சூரபதுமனும்மனக்களிப்புடன் சனியைப்போலமடக்கிக் கொண்டுபோராடியிருந்த தாதன்சந்தேகமில்லாமல்மாண்டானென் றெண்ணிகளித்திருக்கின்ற பூதப்படைகளைவாட்டநினைந்து சுருவளிக் காற்றைப்போலத்தன் ரதத்தைச்சுழற்றி கூர்மையுள்ளகொடியபாணங்களை அமோகமாகத் தன்வில்லிற் சந்தித்துப் பொழிந்து சாடுமுன்னிலையிற் சூரியனைச்சூழ்ந்த பனிக்கூட்டத்தைப்போலப் பூதப்படைகள்கலங்கி சிரமற்றும்-மூளையிறைந்தும்- தோள்கள் சரிந்தும்- மார்புபிளந்தும்- கால்களொடிந்தும்-மதிமயங்கிவிழுந்தும்-மூர்ச்சித்தும்- குப்புறவிழுந்தும் சின்னபின்னப்பட்டும் செத்தும் இவ்விதங்களாகரணபூமியிற்பட்டவர்கள்போகமற்றவரனைவரும்பிராணபீதியினாலிறைந்துபலதிசையினுமோடியொளித்தனர்- சவுனகாதிரிஷிகளே, மேற்குறித்தபடிக்குச் செயசாலிகளாகிய சேனைத்தலைவரும் புசபெலபராக்கிரமத்துக்கொப்பற்றவீரவாகுதேவரும் சத்தசாகரங்களைப்போலப்பரந்துவிழியிருந்தஇரண்டாயிரவெள்ளம்பூதப்படைகளும்சின்னபின்னப்பட்டுக்குன்றிப்பறந்ததைச்சண்முகப்பெருமான்பாத்துசாரதியாகியவாயுதேவனைநோக்கிநமதுதேரைத்துரிதமாய்ச் சூரன்முனையிற்கொண்டுபோகக் கடவையென்னும்வாக்கியம்அமுதத்தைப்போலச்செவிகளில்நுழைந்தமாத்திரத்தில் இந்திரன்முதலாகியதேவர்க்கள்களித்துதிரோகபரவசத்தராய் ஆனந்தக்கூத்தாடிசெயமுண்டாகக்கடவதென்று வாழ்த்தினார்கள் அத்தருவாயில் வாயுதேவன்தன்றுணைவருடன் புரவிகளையதட்டி நவரத்தினமயமாகியதேரை மணிகள்சத்திக்கவாயுவேகத்தினுங்கடுகித் துரத்திக்கொண்டுபோய் ரணக்களத்திற்செயசாலியா யுலவியிருக்கின்ற சூரபதுமனுக்கு நேராக நிறுத்தினன், சவுனகாதிரிஷிகளே, எமதிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவரைச் சூரன்தெரிசித்த காட்சியைச் சொல்லக்கேழ்ப்பீராக, ஆயிரகோடிஞானசூரியர்கள்சேர்ந்தொருவடிவைப்பெற்று உலகங்களிற்பரந்திருக்கின்றயிருட்பெருக்கத்தினையும் ஆத்துமகோடிகளிடத்திற் செனிக்கின்ற அஞ்ஞானமயக்கவாசனைகளையும் துரத்திவிசாலமாகிய பரவெளியில்நின்றும்உயித்தியகளத்திலெழுந்தருளியதைப் போன்றுவிளங்குங்குமாரதேவர்சோ

திமயமாகியவடிவைச் சூரன்தெரிசித்தும் செந்தாமரைப் புஷ்பங்கள் பூ
த்திருப்பதுக்கொப்பாகச் சொலித்துக்கொண் டிருக்கும்சண்முகங்களி
ன் பொலிவையும் செவ்வரிகளோடி விசாலமாகப் பார்த்திருக்கும்பன்னி
ருவிழிகளின் சிறப்பையும் துவாதச ஆதித்தருக்கொப்பாகத் திருச்செவி
களிற் பிரகாசித்திருக்கும் வயிரங்களினாற் சோடித்தலையும் மகரகுண்
டலங்களின் விளக்கத்தையும் சிரோரத்தினங்களினாற்படைத்துத்தசத்தகா
யமாக சொலித்திருக்கின்ற ஆறுவயிரமுடிகளின் சுந்தரத்தையும் அர்த்தச்
சந்திரனைப்போலத் துலங்கிக்கொண்டிருக்கின்ற ஆறுதிருநெற்றியின் கு
ளிர்ந்ததோற்றத்தையும் வயிரமலையையொப்பாகப்பரந்துமுப்புரிநூல்
புரளமுத்துமாலை மோகனமாலைகளளையத் தோற்றநின்றமார்பினதும
ங்களகரத்தையும் பருத்தமணிகளினாற் செய்யப்பட்டுசூரியர்களுக் கொ
ப்பாகத் துலங்கிக்கொண்டிருக்கும் வாகு வலயங்களைத்தரித்து பற்வதா
கிருதியாகத்தோற்றவிளங்கும் பன்னிருபுயாசலங்களின் பொலிவையும்
வயிரமோதிரங்களை தரித்திருக்கின்ற விரல்களின் சிங்காரத்தையும் கடக
கங்கணங்கள்பொருந்தி ஆசானுபாகுவாகக்காட்டும்பன்னிருதிருக்கரங்
களின் தாஷ்டிகத்தையும் அவைகளிற்பற்றியிருக்கும் வெற்றிவேலாதிய
படைகளின் வீரங்களையும் தண்டைசிலம்புகொஞ்சும் செந்தாமரைக்கம
லத்தைப்போலத் தோற்றநின்ற திருவடிகளின் மகத்துவங்களையும் எதிரி
ல்நிசதெரிசனையாகக் காணப்பெற்றபடியால் அவுணருக்கரசனாகவிரு
க்கின்றசூரபதுமன் பூர்வத்தில்அரியதவங்களைச்செய்துசிவனாதன் கடா
ட்சத்தினாற் சிறந்தபேறுகளைக்கிடைத்து மன்னுயிரைப்போலநாசமடை
யாமல்நீடித்திருக்கும் ஆயுளையும்வயிரத்திரேகத்தையும்பெற்று செயசா
லியாய்ஆயிரத்தெட்டண்டங்களினுந் தன்னரசைச்செலுத்தி நூற்றெட்
டுகங்களாய் நீடித்திருந்ததைப்பார்க்குமிடத்தில் இக்காலத்தில்நேருக்கு
நேராய் சண்முகப்பெருமானைத் தெரிசித்து அம்முயற்சியினால் எளிதிற்
சாயுச்சியப்பதவியைப்பெற்று வாழ்வதற்கெனத்தோற்றுகின்றது,இதுவு
மல்லாமற்பரிசுத்தமனதையுடைய ஞானவான்கள் கருத்துக்குமெட்டாத
நின்மலக்கடவுளாகிய சிவசுப்பிரமணியதேவரிட சூரியனொளியினு மே
விட்டுக்காட்டும் சுயஞ்சோதிப்படிவத்தை நேரிற்கண்டு அதுபரியந்தஞ்
செய்திருக்கின்றகொடிய வினைகளனைத்தினையும் போக்கப்பெற்ற சிறப்
பினால் இனிசூரபதுமன் சமர்க்களத்திற் கொடியபோரைச்செய்து செத்
தாலென்ன அல்லதுகிரமமாகக்காலம் நேர்ந்திறந்தாலென்ன இவற்றி
னாலவனுக்கொரு குறைபாடுகளுமில்லை அவனைசீவன் முத்தர்களிற்சேர்த்
துப்பேசவேண்டும் யிதுவுமல்லாமற் சூரன் கொடியசெய்கையையுடை
யவனென்று வசனிப்பதுந்நியாயமன்று அதேனெனிற் சோடசகலைகளைப்

பெற்றிருக்கின்ற பூரணச் சந்திரோதயத்தினும் பதின்மடங்கு விளக்க
த்தைக்கிடைத்திருக்கும் சண்முகங்களைப்படைத்த குமாரதேவர்கிருபை
கூர்ந்துதாமேயெழுந்தருளி சாட்சிதந்தமையாலிந்தசூரனைத்தவச்சிரே
ஷ்டர்களினுமேலாகக்கொண்டாடவேண்டியதன்றியில் தர்மமார்க்கங்களி
ல்மேம்பட்டவனாகவும் நீதிமானாகவும் மனத்தூய்மையைக் கிடைத்தவ
னாகவும் புகழப்படுவன், இவையன்றியும் தவங்களிற்சிறந்த ரிஷிபுங்கவர்
கள்ஞானவான்கள் சிறந்ததேவர்க்கள்முதலிய பெரியோர்கள் தேடித்தே
டியின்னமுங்கண்டறிய வொண்ணாமலிருக்கின்ற மங்களகுண சம்பன்
னராகிய சரவணபவனை சூரபதுமன் தன்னிருவிழிகளுங் கண்டுகளித்து
வாழத்தெரிசிக்கப்பெற்றனனெனச்சொல்லுவோமாகில்அவன்செய்திரு
க்கின்ற தவங்களின்முயற்சியை எத்தகையராலுங் கணித்துப்பேசுவதன்
றியிவனிடத்தில் நமக்கிருக்கின்ற பரிபூரணகடாட்சத்தினால் ரணக்களத்
தில்யிவனையொருபொருளாக மதித்துசண்டைகொடுக்கவந்தவனைப்போ
லச்சடுதியிலெழுந்தருளிச் சூரபதுமனிடயிரண்டுவிழிகளினாலுந் தெரிசி
க்கத்தக்கதாக தன்னரியதிருமேனியை எளிதிற்காட்டிக் கிருபாநோக்கத்
தையும் பாவித்தனனென்றால் தேவதேவோத்தமனாகியசரவணபவன்திரு
விளையாடல்களை யாவராலறிந்து போற்றப்படும் - சவுனகாதிரிஷிகளே,
மனோவாக்குக்கெட்டாத இத்தகைய திருக்கோலத்தைக்காட்டி தனக்கெ
திரில்நவரத்தினமயமாகிய டாரித்ததேரினிடத்தில் ஆரோகணித்திருக்கின்
ற பாலசுப்பிரமணியதேவனைத் தெரிசித்தவுடன் சூரபதுமன் நிதானித்து
சர்வசங்காரமூர்த்தியாகிய பரமேசுரர்குமாரனாகு மிவனென்றெண்ணிக்
கோபாக்கினிமனதைவருத்தக் கந்தசுவாமியைப்பார்த்து இதனைச்சொல்லு
வான், ஓ குமாரனேஉனக்குதவியாகக்கூட்டிக்கொண்டுவந்தபூதவெள்ள
ங்களானவை அக்கினிமுன்பட்டபஞ்சுமலையைப்போலச்சமர்க்களத்துக்
கிளாயாய்ப்பறந்துபோனபுவனங்க ளின்னதென்த்தொற்றவில்லைபடைட்
த்தலைவர்களுங் கொடியபோரைச்செய்துவாடினர், வில்லாண்மையிற்சிற
ந்திருந்த மற்றதுணைவரும் என்னுடன் உயித்தியங்களைச்செய்துசின்ன
பின்னப்பட்டு நீங்கினர் - மேலும் உன்சேனைகள் முழுமைக்குந் தலைவ
னாய் என்னிடத்துக்குத் தூதுவந்த தயிரியசாலியாகிய வீராதிவீரனும்த
ன்னுற்கூடியவனாயிற் பலவிதபோரைச் செய்து கடையில் மனம்வருந்
திமாண்டான், இவையனைத்தையும் உண்மையாகப் பார்த்திருக்கின்றனே
இப்படிக்கிருக்க புறவணியிற்றப்பி மீந்திருக்கின்ற பாலனாகிய நீயொ
ருவனோ ஆயிரத்தெட் டண்டங்களைவென்று சூரனென்னும் பெயரைப்
படைத்திருக்கின்ற என்னையொத்தவனுடன்சண்டைகொடுத்துசெயப்பி
ரதாபத்தைப்பெறவிருக்கின்றனேஉன்கருத்தினிடத்திற் கொண்டிருக்கு

த்தீர்மானத்தைப் பார்க்குமிடத்தில் வெகுநேத்தியாக விருக்கின்றது-இ
வையன்றியும்தேவாதிதேவனாய்சர்வசங்காரமூர்த்தியாய்,சிருஷ்டி-திதி-ச
ங்காரம்-திரோபவம்-அனுக்கிரகமெனச் சொல்லநின்ற பஞ்சகிர்த்தியங்
களையும்நடாத்திச்சராசரப் பிரபஞ்சங்களை நடிப்பிக்கும்உன்பிதாவாகிய
பரமசிவனும் மகாவிஷ்ணுவும்,மண்விண்பாதலமுதலியதலங்களிற்றோ
ற்றநின்றபிராணிகளைச் சிருஷ்டிக்குந்தொழிலையுடைய பிரமனும்என்னு
டன்போர்செய்ய நினையாமலிருக்கும்போது நேத்தியதினம்பிறந்த
பாலனாகிய நீயோ சகலரையும்வென்ற செயசாலியாகிய என்னுடன் சண்
டைசொடுக்குந் திறமுடையவன் சிலதினத்துக்குமுன்னம் வலியற்றகி
ரவுஞ்சபர்வதத்தையும் நான்கொடுத்த செல்வங்களை யனுபவித்துமயங்
கிகாரியங்களை தீர்க்கமாயோசித்துநடந்துக்கொள்ளத்தெரியாமல்விணி
ல்மாண்டதாருகனும் உதிரமாம்சங்களைப் பொசித்தமதாங்காரத்தைப்
பெற்று புத்தியீனராகவிருந்த அவன்படைத்தலைவர்களைப் போலவும் நி
னைந்துசிறுபிள்ளைகள் விளையாட்டைக்காட்டி என்னைவென்று செயப்பி
றதாபத்துடன் போகலாமென்று துணிந்து வந்தனைபோற் காணுகின்ற
து, ஆயிரத்தெட்டண்டங்களிலும் கொண்டாடிப்போற்றும் கீர்த்திப்பி
றதாபத்தைப் படைத்திருக்கின்ற நமதுபெருமிதங்களை யோசித்துப்பா
த்தவனல்லை சலனமற்ற வயிரத்திரேகத்தைப் படைத்திருப்பதையும் தீர்
காயசைப் பெற்றிருப்பதையும் புசபெலபராக்கிரம சம்பத்தையும் வீர
த்தையும் அஷ்டதிசைகள் முதலான அண்டங்களையும் வெற்றிகொண்டி
ருக்கின்ற செயப்பிறதாபத்தையும் சிங்கமுகாசூரனையொத்தசகோதரன்
உதவியையும் பாலபருவத்திற் சூரியனைச் சிறைசெய்த வீராதி வீரனாகிய
பானுகோபனையொத்த புத்திரர்கள்சம்பத்தையும் படைத்தலைவர்கள் சவு
ரியங்களையும் கணக்கிறந்தவெள்ளம் ராட்சதச்சேனைகளினது வலியையு
ம்வரப்பிரசாதத்தினாற் பெற்றிருக்கின்றஆயுதங்களின்வீரத்தையும்விசா
ரணைசெய்து தெரிந்துகொண்டு எதிரியையும் தன்னையும் மதித்துப்பாத்
துசண்டையின்திறங்களை நிதானித்து அதற்குவேண்டும் முயற்சிகளையுங்
கிரமமாகத்தேடிப்புறப்பட்டவனல்லைகுழந்தைப்பருவமாதவால்முன்
னம்சிலரைவென்றதைப்போலச்சுலபமாய்நினைந்துபால்லியசேஷ்டையி
னால்இவ்வரியசண்டையைச்செய்துமுடிக்கலாமெனக்கருதிவந்தனைபோ
ற்காணுகின்றது, மேலும்தன்வலியையும் எதிரியின்செயங்களையும்சீர்தூ
க்கிப்பாத்து-செல்காலம்,நிகழ்காலம்-வருகாலமென்னும்முத்திறங்களை
யும்பரிசோதித்துத்தகுந்தபுத்திமான்களுடன் கலந்துமந்திராலோசனை
களைச்செய்துதகுதியாகியகாரியத்திற் றுணிவுகொண்டுவந்தவனாகக்காண
வில்லைபோவோம்செயித்துவருவோமென்றொன்றைமாத்திரம்உறுதியா

கக்கொண்டுவெளிப்பட்டனை நான் நினைந்துபோகின்றபகைவனைமதித்து
ப்பார்க்கத்தேவையில்லையோ ஐஐயோ உன்னைப்பார்த்தால்வெகுசுந்தர
மாயிருக்கின்றது அதைக்குறித்தெனக்கும் பச்சியாத்தாபமாய் மனந்து
ணிவுபெறவில்லை உன்தாய்தந்தையர் அனுமதியில்வந்தனையோ அல்லது
திருட்டுப்பய்யலாகிய இந்திரனாகிய தேவர்க்கள் புகழ்ந்து பேசியதினு
ல்மகிழ்ந்துவந்துவிட்டையோ தெரியவில்லை எப்படியாவ திருச்சட்டும்
எதுத்து வந்தவனைப் பாலனென் றெண்ணப்போகா தாகையால் உன்
னைப்பெரிதாக நம்பியிருக்கின்ற உந்திகமலவாசியாகிய பிற்மதேவனும்
சேஷசயனனாகிய மகாவிஷ்ணுவும் பொன்னுலகத்துக்கதிபனாகிய இந்தி
ரன்முதலிய திக்குப்பாலகரும் பரதவித் தலறவும் உனக்குத்தாயாகவிரு
க்கின்ற பற்வதராசகன்னிகை பார்பதிவயற்றைப் பிசைந்துகொண்டுகோ
டுகோடென்றழுதுவாடவும் கண்ணிமைகொட்டித் திறப்பதற்குமுன்ன
ம்ஒப்பற்ற நமதுசிலையில்நின்று வெளிப்படுகின்றபாணகோடிகளினால்
உன் கெற்வத்தையும் பாலசேஷ்டைகளையும் வலியையும்அடக்கி வாட்டு
வேனென்று சூரபதுமன்தன்பிறதாபங்களையும் வீரத்தன்மையையும்செ
யப்பெருக்குகளையும் விரித்து விரித்துச்சொன்னதை அருவுருவா
கவிளங்கும் குமாரதேவர்கேட்டு குஞ்சிரிப்புடன் இதனைப் பேசுவதாயி
னர், அண்டரண்ட புவனங்களனைத்தினையும் வென்றோம் மிகுத்தவலியு
டையோம் சகலருங்கொண்டாடுங் கீற்தியைப்பெற்றனம் சிறந்ததேவா
ஸ்திரங்களைச் சம்பாதித்திருக்கின்றனம் அழிவற்றவயிரத்திரேகத்தைப்ப
டைத்திருக்கின்றனம் கணக்கிறந்தவெள்ளஞ் சேனைகளையுடையோம் யா
வரும்நிகரில்லாமல் வென்று சகலரையும்யிதுவரையில் ஏவல்கொண்டிரு
க்கின்றன மென்கிற மமதையைக் கொள்ளவேண்டாம், யிவையனைத்
தையும் சிலபோதிலழித்துவிடவல்லோம் தேவதேவோத்தமனாகிய சிவ
பிரான்கடாட்சித்திருக்கின்ற வரத்தின்சிறப்புகளைப்பாலன்சண்டைகொ
டுத்து வெல்லவல்லனேவென்று அகங்கொள்ளவேண்டுவதில்லை இப்படிக்
குநினைப்பது விவேகசாலிகளுக் கடுப்பதோ அஞ்ஞானகெற்வத்தைநீமு
க்கியமாகக் கொண்டிருக்கின்றதாற் சிலதிஷ்டாந்திரங்களைக் காட்டுவோ
ம்அதினால்தெரிந்துகொள்ளக்கடவை சராசரப்பிறபஞ்சங்களனைத்தையு
ம் எமதிறைவனாகிய சிவபிரான் நுதல்விழியி லுதிக்கின்ற ஒருபொறியினா
ல்தகிக்கப்பட் டழிவதைக்கேட்டதில்லையோ சுத்தவீரர்களாக விருப்பவ
ர்கள் காரணமாவது விவேகசம்பன்னரொன்றும் பெரியோர்களென்றும்
பிள்ளையென்றும் பருத்ததும்சிறுத்துமிருக்கின்ற திரேகத்தையுடையவர்க
ளென்றும்குலத்திலுயர்ந்தவரொன்றும்தாழ்ந்தவரொன்றும்செயப்பெரு
க்கைப் பெற்றவரொன்றும் தரித்திரரொன்றும்யோசியாமல்எத்தனைகயனு

யினும்சண்டையைவிரும்பி வருவனாயிற் சகலசேனைகளுடனும்போயெ
திர்த்துப்போர்செய்வர் ஆதலால்நூற்றெட் டுகங்களாகச்சகலரையும்அலை
த்துக்கொடுங்கோல்செலுத்தி தயைதாட்சணியமில்லாமல் தகாதபணிவி
டைகளைச்செய்யும்படிக்குவருத்திவந்த உன்சவுரியத்தையும் புயவன்மை
யையும் உன்விழிகளுக்குப் பாலனாகத்தோற்றுகின்றநாமேவில்வன்மை
யினாலடக்கி நாசஞ்செய்வோமென்று திருவுளம் பற்றியகாலத்திற் சூரப
துமனுக்கு அதிககோபம்பிறவேசித்து சொவ்வைக்கனியைப்போலவிழி
கள்சிவந்து அக்கினிப்பொறிகள்சிதறத் திரேகம் வெதும்பி வியர்க்கச்சு
வாலையெழப் பெருமூச்செறிந்து பூர்வத்தில்வாமனக்கோலங் கொண்டு
வந்தமகாவிஷ்ணு விசுவரூபங்கொண்டு மண்விண்ணையளந்ததைப்போ
லபரித்து நீண்டிருக்கும்வில்லையெடுத்துவளைத்தான் அதனைதேவாதிதே
வனாகிய குமாரசுவாமியார்பார்த்து பிரமன்விஷ்ணு முதலியதேவர்கள்
ரிஷிகள்மகத்துக்கள் பற்பலவாத்தியங்களை முழக்கித் துதித்துத்தொழும்
படிக்குத் திருவாலவாயில் எமதுகர்த்தனாகிய சிவனாதன்ஆனந்த நடனஞ்
செய்ததருவாயில் மூதண்டகோளகையை முட்டத்தாக்கிய சிலம்பணிந்
த அழகியதிருவடியையொத்த ஒப்பற்றதனுசைத் தமதுதிருக் கரத்திற்
கொண்டு அதிகவுக்கிறத்தைக்காட்டி யெழுந்தகாளியம்மனானவள் தனக்
கொருவரும் நிகரில்லையென வீறிவந்தகாலத்தில் அவள்கெற்வ பரிகார
மாகும்பொருட்டு நிர்த்தஞ்செய்த பரமேசுரர் தூக்கிய பாதாரவிந்தத்து
க்கு அண்டமுகடுயிடம்பெறாத காரணத்தினால் திருக்கரத்தைநீட்டித்தடு
த்ததைப்போல வளைத்து வாசுகியைப்போல நீண்டிருக்கும்நாரியைமா
ட்டிசற்வசங்காரகாலத்திற் பிறசண்டவாயுவினால் மோதப்பட்ட ஆயிர
கோடிஅண்டங்களும்ஏககாலத்தில்உடைந்தெழும் பேரொலியைப்போ
லக்குமுறி முழங்கும்படிக்குக் குணத்தொனிசெய்தனர், அதனைச்சூரன்
கேட்டு வடவையைப்போலச்சீறி சத்தசாகரங்களும் அலைகளைமோதிக்க
ரையையுடைத்து யிரைச்சலிட்டுப்பெருகியதற்குச் சமதையாகத்தானும்
நாணோசையைக்காட்டிக் கரவேகமாய் கொடிய பாணங்களைச் சந்தித்து
சோலைமாரியைப்போலச் சொரிந்து சிவசுப்பிறமணியதேவனையும் வா
யுதேவன்செலுத்தும் ரதத்தையும் உதையகிரியை பனிப் படலமூடி
யதைப்போல மறைத்து சிங்கத்தையொப்ப கெற்சித்ததருவாயிற் குமா
ரதேவர் யிவன் தனுற்வித்தை வெகுநேத்தியென்று நகைத்துகணக்கிறந்
தபாணங்களைச்செலுத்தித் தீயையிறைத்து குமுறிக்கொண்டு மேவிட்டு
வருவதனைத்தையும் சின்ன பின்னப்பட வாட்டி அதப்படுத்தினர், உட
னேசூரனுக்கு மிகுதியாகியகோபாவேசமுண்டாய் விஷங்களைக் கக்கவ
ல்ல தீட்சண்ணியமுள்ள பாணகோடிகளை அபரிமிதமாகப் போக்

இக்கொக்கரித்தகாலத்திற் குமாரசுவாமியார் சிலமகிமையுள்ள சரங்களைக் கொண்டு பகைவன் பாணங்களின் விருப்பையடக்கிமேலும்சங்கையற் றதிவ்வியபாணங்களைத் தாண்டிசூரியசந்திரர்போவதற்கிடம்பெறுமல்ம யங்கும்படிக்கு எங்கும்பாணமயமாய்ச் சூனை மூடியதறுவாயிற் றுரி தமாய் விடநாகங்களையொத்த கொடிய சரங்களைச்செலுத்தி மேல்வருகி ன்றபடைகளை பங்கப்படுத்திப ஞ்சேந்திரியச்செட்டைகளின் கொடுமை யையொழித்து மேம்பட்டதவச்சிரேஷ்டர்கள் ஞானநாயகனாகிய கர்த்த னைத் தெரிசித்ததைப்போலத் தேவசேனாபதியாகிய பாலசுப்பிரமணிய தேவரைப்பார்த்து பற்களைக் கறகறெனக்கடித்து கொடிய பாதகனாகிய சூரன்துரிதமாய் கோடிகொடிய பாணங்களைப்பூட்டி தேவாதிதேவனாகி யசிவகுமாரன்பேரிற் சொரிந்தான் அதுகளை எண்ணிக்கைப்பட்ட பாண வருஷங்களினால் விலக்கிமுன்னந் தாருகனைப்பிளந்த சத்தியையொத்த திவ்வியபாணங்களேழை வில்லிற் சந்தித்துவீரலட்சுமி வாசமாயிரு க்கின்றசூரன்பாரித்தபுயாசலங்களுக்குக்குறிகொண்டுதாண்டியபோது அதிகவோசையைப்பெருக்கி அனலைவீசிவந்துதாக்கிச் சலனமற்றகாந்தம லையின்பேரிற்படும் சூரியகிரணங்கள் பிறையோசனப்படாமற் போவ தைப்போலத் துளைத்துருவச் சத்தியற்றுமறிந்துவிட்டது-யிதைலோக நாயகனாகிய சிவகுமாரன்கண்டுநல்லகாரியமென நகைத்திருக்கும்போது சூரன்கோபித்துகணக்கற்ற சரங்களைச்செலுத்திக்கொண்டு;மேலிட்டுவரு வதைச்சிவசுப்பிரமணியக்கடவுள்பார்த்து பலகணைகளைச்செலுத்திஅதுக ளனைத்தினையுங் கண்டித்துப்போட்டு ஆயிரம் அற்தச்சந்திர பாணங்களை க்காவேகமாகப் போக்கிச் சூரன்கரத்திற்பிடிபட்டிருந்த வலியவில்லைப் பளபளென்று முறிந்துவிழும்படிக்குக்கண்டித்தனர், அப்போதுராசா திராசன் மிகவுங்கோபித்து பூர்வத்திற் பிர்மதேவன் கொடுத்திருக்கின் றஅயிற்படையை யெடுத்துக் கரகரெனச்சுழற்றி வலிகொண்டுவீசினன், அதுவெளிப்பட்டவுடன் மிகுந்த நிட்சணியத்தைக்காட்டி யெங்கும்அ னலையிறைத்து ஆர்ப்பரித்து வரும்போது சரவணபவன்பதினாலுகொடி யபாணங்களைக்கொண்டு அதனைக்கண்டித்துப்போட்டு மேலும்அமோ கமாகிய சரங்களைக் கோடைகால வருஷித்தைப்போலச் சொரிந்துமூ டியதறுவாயிற் சூரபதுமன் துரிதமாய் மற்றொரு தனுசை யெடுத்துவ ளைத்து நாணேற்றி அதிககொடுமைபெற்றிருக்கின்றகணக்கிறந்தகணைக ளைச்செலுத்தி மேலிட்டுவரும்பாணகோடிகளைப்பறக்கடித்துப்போட்டு மேலும் எழுதிவ்வியமாகிய சரங்களைச் சந்தித்து சரவணபவன் வலியபு சங்களுக்கிலக்காகப் பிறையோகித்து சிங்கத்தைப்போலக்கெர்சித்தன ன், அப்படைகள் வெளிப்பட்டவுடன் பல வுற்பாதங்களைக் காட்டிக்

கொண்டுவந்து சுயஞ்சோதி வடிவமாகியபாலசுப்பிரமணியதேவர் தோ
ள்களிற்றாக்கி தாபாக்கினியிற்பட்டபூளைப்புஷ்பத்தைப்போலவெரிந்தும்
கரிந்தும்துகள்பட்டுப்போயது, அத்தறுவாயிற் சூரன் வில்வன்மைவெ
குநேத்தியென்று முருகப்பெருமாள்சீறி பத்துபாணங்களினால் அவன்
கரத்தில்விளங்குகின்ற மந்தாரத்தையொத்த தனுசை கண்டித்து மேலும்
ஆயிரங்கொடிய பாணங்களைப்போக்கி அவனேறியிருக்கின்ற தெய்வீக
த்தேரைச்சிக்குப்படுத்தி அசையவொட்டாமற்றடுத்து அரசனுக்குதவியா
ச்சூழ்ந்திருந்த பதினான்கு நூறாயிரஞ் சேமத்தேர்களனைத்தினையும்ப
லகோடி கணைகளினாற்சிதைத்தெறிந்ததுமன்றியிற்பலபாணங்களைச்செ
லுத்துகின்றகரவேகத்தைச்சூரன்கண்டு அனலைப்போலவிழிகள்சிவந்தும்மு
ழிகள்சுழலச் சற்பத்தைப்போலச்சீறித் தான் அருமையாகத்தேடிவைத்
திருந்த முத்தலைச் சூலப்படையை யெடுத்து ஓங்கி வீசியபோது வீறிவ
ருகின்றபாணங்களைப் பறக்கடித்து புகைந்து தீயைவீசி யிரைந்துவரக்
கண்டபாலசுப்பிரமணியதேவர் நான்கு தீட்சணியபாணங்களைப்போக்
கியிரண்டுதுண்டமாக வெட்டித்தள்ளி மேலுமெழுகணைகளைச்செலுத்தி
ச்சூரபதுமன் வீற்றிருக்கின்ற இந்திரஞாலத்தேரின்மீதில் விளங்கியிரு
ந்தமுத்துக்கொடையைக்கண்டித்து காற்றிற்பறக்கவிட்டும்மற்றொருதி
வ்வியபாணத்தினால் அரசன் வீற்றிருக்கின்ற பீடத்துக்குப் பின்புறத்தில்
நாட்டிச் சிரத்துக்கு நேராகக் கவிந்திருக்கின்ற நவரத்தினமயமாகியபூ
ச்சக்கிறக்கொடையையும் அறுத்தெறிந்தும்மீளவும் கணக்கிறந்தகூரா
மாகிய சரங்களைக் காவேகமாகச்செலுத்திச் சிரோரத்தினங்களினாற் சோ
டித்து அலங்கரித்திருந்த வாகுவலையங்களைப் பொடிபடுத்தி சூரியனைப்
போலவிளங்கிக்கொண்டிருந்த மகரகுண்டலத்தைப் பறக்கடித்து மார்
பிற்புரண்டிருந்த முத்துமாலை மோகனமாலை மதாணிப் பதக்கங்களைத்
துகள்படமோதிச் சந்திரனைப்போல விளங்குகின்ற நெற்றியிற் கட்டியி
ருந்த வீரபட்டத்தையும் பொடிபடுத்தினர் - சவுனகாதிரிஷிகளே,வேதா
கமம் உபநிஷித்துபிரமன்முதலிய மகத்துக்கள் யின்னமுந்தேடிக்காண்
பரிய பெருமையையுடைய பாலசுப்பிரமணியக்கடவுள் இவ்விதமாகிய
வினோதப்போரைச்செய்து சூரன் அணிந்திருந்தஆபரணாதிகள்முழுமை
யும் பொடிப்பொடியாய் பின்னப்பட்டுப்போம்படிக்குச்சாடியதறுவா
யில் ஆயிரத்தெட்டண்டங்களினும் வணங்கிப்போற்றிப் புகழத்தக்ககீ
ர்த்திப்பிறதாபத்தைப் பெற்றிருக்கின்ற சூரபதுமன் மதிமயங்கித் தனக்
குச்சம்பவித்த மானபங்கத்தை நினைந்துநினைந்து தலையையிறங்கி வரு
ந்துகின்றதைச் சேனைத்தலைவர்கண்டு மனம்பொறாமல் ஆயிரத்தெட்ட
ண்டங்களுக்கும் அதிபனாகியராசபரமேஸ்பரனைச்சற்றும் எண்ணிக்கை

யில்லாமல் அவமானப்படுத்திய பாலனைக் கண்டதுண்டப்படக் கொல்
று பழியைத்தீர்த்துக் கொள்ளுவோமென்று கோபித்தவர்களாய் அக்கா
லத்தில்நேர்ந்த ரதகெசதுரகபதாதிகளைச் சேர்த்துக்கொண்டு வசமுசமா
ய்ச்சமுத்திரத்தைப்போலயினாச்சவிட்டு யெதிரோதிப்போய் தங்கள்கர
த்தில்விளங்கும் பாரித்த விற்களைவளைத்து நாணேற்றி டங்கார சத்தங்
களைக்காட்டி விஷத்தோலையைவிட்டுக் கூர்மையாயிருக்கின்ற சுடுரமாகி
யபாணவிதங்களை அமோசமாய்ப்பூட்டிச்சோனைமாரியைப்போலச்சொ
ரிந்தும்-தண்டாயுதம்-பிண்டிபாலம்-முசலம்-கப்பணம்-சூலம்-சக்
கரம்-கழுமுள்-இத்தகையபடைகளைச்செலுத்திப்போராடவும்ராட்சத
ச்சேனைகள் அஸ்திரசஸ்திரவிதங்களை ஒன்றனந்தமாகச் செலுத்தவும், இ
வ்விதமாய்ச் சின்மயமூர்த்தியாகிய குமாரதேவனாய்ப்பிரளயவெள்ளம்மே
ருகிரியைச்சூழ்ந்தலைப்பதைப்போல வளைந்துகொண்டு கொடியபோரா
ச்செய்துவரும் சதுரங்கச்சேனைகளின்பெருக்கையும் அவர்கள்கல்வித்தி
றங்களையும் திரிபுராதகனாகிய சிவகுமாரன்கண்டு சத்திராதிகளனைவரை
யும் ஒருமுனையிற் சங்கரித்தொழிக்கத் திருவுளத்தில் நினைந்தவராய்த்தம
துதிருக்கரங்களி னொன்றிற் பிறகாசித்திருக்கின்ற சக்கரத்தைச்சுழற்றி
உதயகிரியிலிருந்து சூரியனெழுந்ததைப்போலக் கடாவியபோதுபே
ரொளியைக்காட்டி தகத்தகாயமாய்ச்சொலித்துக்கொண்டு சூரியன் அற்த
ராத்திரியி லுதித்து யிருட்பெருக்கத்தைவிழுங்கி விடியதைப்போலக்க
ரௌத்திரோசத்தையுடைய ராட்சதச் சேனாசமுத்திரத்திற் பாய்ந்து எங்கு
ந்தாறுயுலவி செம்பட்டமயிர்விளங்குஞ் சிரங்களைக் கண்டித்தும் மண்
டையைப்பிளந்தும் கற்கம்பத்தையொப்பத்திரண்டுவலிபெற்றிருக்கின்
றபுசங்களையரிந்தும் விசாலமாய் ரத்தினாபரணங்களை யணிந்திருந்தமா
ர்பைச்சேதித்தும் வீரவெண்டையங்களணிந்த கால்களைவெட்டித்தள்ளி
யும் ஓத்துப்பேசும் வாயைப்பிளந்தும் உருத்துப்பார்க்கும் விழிகளை
க்கல்லியும் கோபித்துப்பெருமூச்செறியும் மூக்குகளைக்கிள்ளியெறிந்து
ம் வீரங்கள்பேசும்நாவையரிந்தும் பலகறையைப்போலப்பற்களுதிரு
ம்படிக்குத் தாக்கியும் வீராவேசங்களினாற் றுடித்துக்கொண் டிருக்கும்
மீசைகளைக்கொளுத்தியும் மோவாயைச்சிதைத்தும் வயிரகுண்டலங்கள்
தரித்தசெவிகளை யறுத்தும் வீரபட்டங்களைத் தூசள்படுத்தியும்
ரத்தினகசிதமாகச் சொலித்திருக்கின்ற கிரீடங்களை நுறுக்கியும் படைக
ளைச்செலுத்த நீட்டுங்கரங்களைவெட்டியும்ராட்சதவீரர்பற்றியிருக்கின்ற
தனுக்களைவெட்டியும் பாணங்களைமுறித்தும்மற்றஆயுதங்களைப்பொடி
ப்பொடியாகநாசப்படுத்தியும்-யானை-புலி-கரடி-பன்றி-மானிடர்-தே
வர்க்கள்-ரிஷிகள்-முதலாக வாரிவாரி பருத்தவாயிற்போட்டு விழுங்கிநி

றைத்துவைத்திருக்கின்ற தொந்திவயிற்றைப்பீறி குடல்களைச் சற்பங்க
ளைப்போலப் புரளத்தள்ளியும் இவ்விதங்களில் ராட்சதப் படைகளைச்சி
ன்னபின்னப்படவாட்டித் தோரணிகளிற்பாய்ந்து சொர்ணமயமாகவிரு
க்கின்ற-வண்டில்-அச்சு-மச்சு-குத்துக்கால்-நவரத்தினமயமாகியகொ
டுங்கை-கொடி-சொடை-கொத்துமணிகள்-முதலியதுகளைப் பலதிசை
யிலும் பறக்கச்சாடியும் அதுகளிற் கட்டியிருந்த புரவிக்கூட்டங்களைக்
கண்டதுண்டப்படத்தறித்தும் சாரதிகள்கழுத்தையரிந்துதள்ளியும் யா
னையணிகளிற்புகுந்து யிருப்புலக்கைகளைப்பற்றிச் சுலவித்திரியும் துதிக்
கைகளைப் பனைமறிவதைப்போலக்கண்டித்துத்தள்ளியும் நவரத்தினமுக
படாத்தைச் சிதைத்தும் மத்தகத்தைப்பிளந்து மூளைகளையிறைத்தும் நீ
ண்டுதொங்கும் உதட்டைச்சரித்தும் ரத்தினமயமாகிய பூண்களைத்தரித்
திருக்கின்ற பருத்தகோடுகளைப் பிறைக்கொப்பாகக் கண்டித்தெறிந்து
ம்பாகனைத்தள்ளியும் தலைவனைக்கொன்றும் உரலையொப்பவிருக்கும்கால்
களைத்தறித்தும் கணீல்கணீலென மாறியொலிக்கும் மணிகளைப்பொடி
யாக்கியும் நீலகிரியைப்போலக் கதறிவிழும்படிக்கு நடுவதுயாகியில்வெ
ட்டித்தள்ளியும் குதிரைப்பந்திகளிற்றாவி பொற்குச்சுகளினால் அலங்க
ரித்திருக்கின்ற பிடரிமயிரையுடைய கண்டத்தை வெட்டியும் செவிகளை
யரிந்தும் பொன்மயமாகவிளங்கும் சீனியைப்பொடிபடுத்தியும் வெ
ண்டையங்கள் பூண்டு அலைகளையொப்பத்தாவும் கால்களைக் கண்டித்தும்
அதுகளின்மேல் நின்றுபோர்செய்யும் வீரனைத்தெண்டித்தும் யிவையன்
றியில் இந்தசதுரங்கச் சேனைகளுக்குக் காவலாய்வந்திருக்கின்றபடைத்த
லைவர்களைச் சூழ்ந்துகரங்களிற்கொண்ட பாரித்தவிற்களைமுறித்து அம்
புக்கூடுகளை அதப்படுத்திப்போர்செய்ய வேண்டுமெனநினைந்த நெஞ்சை
ப்பிளந்து பாணங்களைத்தொட்ட கரங்களைக்கண்டித்து கிரீடங்களைக்
காற்றிற்பறக்கடித்துவிருதுக்கொடிகளையறுத்தெறிந்து நுரையைப்போ
லவெளுத்து அலைகளுக்கொப்பாக அசைந்திருந்த வெண்சாமரைகளை
சிதைத்து பளபளத்துவிளங்கும் வீரபட்டமணிந்த நெற்றியைத்துளைத்
தும் சித்திரமயமாயிருக்கின்றஅருகுளைகளும் ஆலவட்டங்களையும்சிதறடி
த்தும் அவர்களேறியிருக்கின்ற வாகனங்களை தும்சப்படுத்தியும்படபட
த்ததொனிகளுடன் வானத்தையளாவநிற்கின்றதுசங்களைக்கண்டித்து மு
த்துகளினாலும் வெண்பட்டினாலும் நவரத்தினங்களினாலும் அலங்கரித்
து நிழலைப்பரப்பி யிருக்கின்ற சந்திர வட்டக்கொடைகளைக் கண்டித்து
காற்றுடியைப்போல பறக்கச்சாடியும் மகரதோரணங்களை வானத்திற்
செல்லவோதியும் -ரணபேரி-செயபேரி-வெற்றிச்சங்கம்-எக்காளை-சி
ன்னம்-குடமுழா-முதலிய போர்ப்பறைகளைப் பீறிப்பிளந்து அதலனு

தலம்பண்ணியும் இவ்விதவிசித்திரப் போராச்செய்து குயவன்சக்கரத்
தைப்போலக்கரகரெனச் சுழன்றுகொண்டு குமாரதேவர்செலுத்தியதிகி
ரிப்படையானது ரணக்களமெங்குஞ் சுருவளிக்காற்றினுங் கடுகித்திரிந்
து கொடியபாதகனாகிய சூரபதுமன் ரதகெசதுரகபதாதிச் சேனைப்
பெருக்கைச் சின்னபின்னப்படுத்தி வெள்ளிடையாக்கியது - சவுனகாதி
ரிஷிகளே, அக்காலத்தில் ரணக்களம்விளங்கிய சிறப்புகளிற் சிலவற்றைச்
சொல்லக்கேழ்ப்பீராக, யானைக்கூட்டங்களிறந்து அணிபடவிழுந்து கி
டப்பது சாலையாகவும் அதன்மத்தியில்விளங்கும்பூமியானது ஓமகுண்ட
மாகவும் சிவந்தோடும் உதிரம் அக்கினிக்கொப்பாகவும் அதில்மிதக்கின்
றராட்சதர்களின கலேபரங்கள்புகையைப் போலக்காட்டவும் ரதங்கள்கு
திரைகள் ஆயுதங்கள்முறிந்து கிடப்பது சமித்துக்களாகவும் பிணங்கள்
பெருத்திருப்பது நெய்யாகவும் மூளைமாம்சங்கள் அவிற்பாகமாகவும்
கொண்டுஎமதுகர்த்தனாகிய குமாரசுவாமியார்செலுத்தியசக்கரப்படையா
கர்த்தனாகநின்று வீரமாமகத்தை முடித்ததுக்கொப்பாக ரணக்களம்வி
ளங்கியது, இவையன்றியிற் கொடியபோரைச்செய்த ராட்சதரைவாட்டி
அவர்கள்மனதிற் கூறுகொண்டிருந்த மாயவஞ்சகங்களாகிய பேரிருளை
ப்போக்கி வீரசொற்கத்திற் குடியேற்றி அவர்களுதிரத்தில் முழுகிச்சிவந்
துகாட்டுகின்ற பாலசுப்பிரமணியர் சக்கரமானது எப்படிக்கு விளங்கி
யதெனில், பிருதகாலத்தில் உதையகிரியினிடத்தில் எழுபச்சைக் குதிரை
களைபூண்டு அருணன்செலுத்தும் ஒற்றைவண்டிலையுடைய தேரில்தோ
ற்றியதறுவாயில் பகைத்தெதிர்ந்த அவுணரைவாட்டித்திலதப்பொட்டை
ப்போல வட்டாகாரமாய்விளங்கி உலகங்களிற்பரந்திருந்தயிருளைவாட்
டிப்புறப்படும் ஞானசூரியனைப்போல விளங்கியது - இவையன்றியிற்பா
ர்பதியார்கோரியபடிக் கிடப்புறத்தைத்தந்த சிவகுமாரன் விடுத்தசக்கர
மானது சிறிராட்சதசேனாசமுத்திரத்திற் புகுந்துகலக்கியவீரபராக்கிரம
த்தையும் செயத்தையும் மகாவிஷ்ணுகரத்திலிருந்தசக்கரம்கண்டுபிரமி
த்துப்புகழ்ந்துபோற்றியது, இவ்விதவீரபராக்கிரமத்தைப் பெற்றிருக்கி
ன்றசக்கரப்படையானது சமர்க்களத்திற்சத்தசாகரங்களும்பெருகிவந்த
தைப்போலஆர்ப்பரித்திருந்தநூறாயிரவெள்ளஞ்சதுரங்கசேனைகளையும்
ஒருமுகூர்த்தகாலத்தில் வாட்டிவாட்டிக் கிடத்திமுடித்தது, அதையோசிக்
குமிடத்திற்சண்முகப்பெருமாள் நாசமடையக்கடவீர்களென்றுஒருவா
ர்த்தையினால் அழித்ததைப்போலக்காட்டியது - சவுனகாதிரிஷிகளே, இவ்
விதமாகருணாநிதியாகிய வெற்றிவேலாயுதக்கடவுள்செலுத்தியசக்கரப் ப
டையானதுவினாசகாலம்நேர்ந்தசூரபதுமன்சேனைகளனைத்தினையும்ரண
க்களத்துக்குப்பெலிகொடுத்துசெயப்பிறதாபத்துடன் உலர்ந்தகாட்டினி

டத்திற்பிறவேசிந்துச் சாம்பலாக்கி யடங்குத்தியைப்போலத்தன்கொடு
மையைத்தணிந்துதிரும்பி வானகெங்கையிற்படிந்துபவுத்திரமாய்க்குமா
ரதேவர்திருக்கரத்திற்பழையபடிக்குச்சேர்ந்திருந்தது, இனிஉயித்தியங்
களச்சிங்காரங்களையுஞ்சொல்லுவோம்ராட்சதவீரர்கள்கரங்களிற்பற்றியி
ருந்த சத்திரவட்டக்குடைகள் காம்புகள் துணிந்து நிணச்சேற்றினிடத்
தில்விழுந்து தோற்றுவது எப்படிக்குக் காட்டுவதெனில், பலவிதபுஷ்ப
சாதிகள் அலர்ந்து பரந்திருக்கின்ற தடாகத்திற் றோற்றும் வெண்டா
மரைமலர்களைப்போலக்காட்டவும் பாலசுப்பிறமணியதேவர் செலுத்தி
யசக்கரத்தினால் மாண்டரதசெசதுரசபதாதிகள் அசைவற்றுத் திரட்சியா
கக்குவிந்துகிடப்பதைப் பார்க்குமிடத்திற் சமுத்திரஞ்சூழ்ந்தபூமண்ட
லத்திலிருக்கின்ற பற்வதங்கள்குன்றுகள் திட்டைகள்முதலானவைதிரண்
டுவந்து ரணக்களமுற்றினும் பெருத்திருப்பதுக் கொத்தும் வானத்தை
யளாவக்குவிந்து விளங்கும்பிணமலைகளின்பேரிற்கொள்ளிவாய்ப்பேய்
க்கூட்டங்கள்நிணமாம்சங்களைத்திறுத்தியாகப்பொசித்துஉதிரத்தைக்கு
டித்துவெறிகொண்டு நகைத்துக் கூச்சலிட்டுஆடிப்பாடித்திரிவதைப்பா
ர்க்குமிடத்தில் மின்னிக்குமிறியிடித்து கெற்சிக்குமேகங்களானவைவா
னத்தையளாவநிற்கின்றமலைகளினிடத்திற்றங்கள்செய்கைகளைக்காட்டியி
ருப்பதுக்குச் சமதையாகவும் நீலகிரிகளைப்போல மதநீரைப்பெருக்கி
யிருந்தயானைகள்தத்தித்தாவும் புரவிகள் களேபரங்களைப்புரட்டிக்கொ
ண்டு அலைகளைமோதி யிரைந்து உதிரவெள்ளமோடுவதைப் பார்க்குமிட
த்திற்சென்னாகமொன்று தன்பகைவனாகியசந்திரனுக் கிடங்கொடுத்திரு
ப்பதெனச் சீறிவிசாலமாகியபடத்தை விரித்துக் கடலினிடத்திற் றாவிய
லைக்கவேண்டுமென்றெண்ணிக்கொடிய விஷங்களைச் சக்கிஉரறிகொண்
டுபூமியின்கண்ணோடுவதைப்போலக்காட்டவும் வானத்தையளாவுஞ்சரீய
திரேகத்தைப் பெற்றிருக்கின்ற சிலபசாசங்கள் புதியவிருந்துண்ணப்
போமுன்னிலையில் திரேகங்களைச்சுத்திசெய்துக் கொள்ளும்பொருட்டு
ப்பிணமலைகளின் மீதேறிஅதுகளின் உச்சிவரையிற் றேக்கிட்டோடும்உ
திரப்பிறவாகத்தில் விழுந்து அலைந்து முழுகுகின்ற தறுவாயிற் பெருத்
தெழுந்தவலைகள் தேவலோகத்தில் வாசஞ்செய்கின்ற அரம்பாஸ்திரீகள்
உடுத்திருக்கின்றவஸ்திரங்களின் மீதிற் றெறித்தமாத்திரத்தில்மாதவிடா
யிவர்களுக்கேதென்று கண்டவர்கள் நகைப்பனெனநாணித்துரிதமாய்மே
ற்போர்வையினால் மறைத்துப்போகவும் சிவகுமாரன்விடுத்த சக்கராயுத
மானதுசிலராட்சதசிரங்களைக் கண்டித்த தறுவாயிற் கோறதந்தங்கள்வி
ளங்க வாயைஆவு ஆவெனத்துறந்துகொண்டு பந்தைப்போலப் பறந்து
ஆர்ப்பரித்து வருகின்றதைச் சூரியன்கண்டு நம்மிடத்திற் பகைகொண்

டிருப்பது இராகுகேதுவென்று யிதுவரையிற் றெரிந்தவர்களாய் அவற்
றின்கொடுமைக்கஞ்சிவாடுகின்றனம் அப்படியிருக்க இக்காலத்தில்அள
வற்றதாகத்தோன்றுகின்றதுயிவற்றின்வாயிற்பட்டுக்கிலேசிக்கநேர்ந்தது
இதற்கென்செய்வோமெனக்கலங்கித்தேரைமுடுக்கிக்கொண்டோடவும்
விண்ணிடத்திற்பார்த்துபறந்திருந்த துசயடாங்கள் வானத்தையளாவக்கு
விந்திருக்கின்றமதயானைப்பிணப்போரின்மத்தியிலகப்பட்டுதலையை அ
சைத்திருப்பதைக்கண்ட தேவர்கள்நடுநடுங்கி ராட்சதச்சேனைகள் முற்
றும்மாண்ட காரணத்தினுற் சூரபதுமன் கட்டளையின்படிக்கு மேலைஅ
ண்டங்களிலிருக்கின்ற கணக்கிறந்தராக்காசூரர்கள் வெளிப்பட்டனர், சி
லகாலத்துக்குமுன்னம்செயசாலியாய்வீற்றிருந்த ஒருராக்காசூரனுல்மி
குவும் அலைச்சற்பட்டுவாடினேம் யிவர்களுக்கென்செய்வோமென்றுதி
கைத்துயோசிக்கவும் அக்காலத்தில் ரணக்களமுற்றிலும் கணக்கிறந்தபூ
தபசாசங்கள் உதிரத்தைத்திருத்தியாகக் குடித்தவெறியினுற் கரங்களைக்
கொட்டிக்கொண்டு பவனிவரவும் சங்கோபசங்கம் கவந்தங்கள் ரணக்க
ளமெல்லைஎங்கும்கூத்தாடுவதையோசிக்குமிடத்தில்ஆயிரத்தெட்டண்ட
ங்களுக்கும் அதிபனுகியசூரபதுமன் கட்டளையின்படிக்குச் சமர்க்களத்
தில் மாண்டராட்சதவெள்ளங்களனைத்தும் உயிர்பெற்றெழுந்துசெவி
ப்புடன் சண்டைக்குக்கையறைவதைப்போல விளங்கியது- சவுனகாதிரி
ஷிகளே, இவ்விதச்சிங்காரங்களைக்காட்டுகின்ற ரணக்களத்திற்பாலசுப்பி
ரமணியதேவர் விடுத்தபாணங்களினுற் பங்கப்பட்டுத் திகைத்திருந்தசூர
பதுமன் அத்தருவாயில் தன்படைத்தலைவர்கள்வீராவேசங்களுடன் சது
ரங்கச்சேனைகளைக் கூட்டிக்கொண்டுமேல்நடந்துகொடியபோரைச்செ
ய்திருந்தவர்கள்பேரில்எமதுகற்றன்செலுத்தியசக்கரமானதுசொலித்து
க்கொண்டுவந்துசுருவளிக்காற்றைப்போலச் சுழன்றுசுழன்றுஎதிர்ந்தரா
ட்சதப்படைகளனைத்தினையும்கண்டித்தவிதத்தையறியாதவனுய்ச்சமுத்தி
ரத்தைப்போலஆர்வாரித்திருந்தசயின்னியங்கள்மாண்டுகளேபரக்குப்ப
ல்கள்எங்கும்ஓங்கியிருப்பதைக் கண்ணுரக்கண்டு பிரமித்துத்திகைத்து
வாடிமதிமருண்டுகண்பஞ்சடையச்சோர்ந்துதனியனுய்நின்றவன்சற்று
நேரத்திற்புத்திக்குத்தெளிவுண்டாய் இதனைநினைப்பதாயினன், யிதுவே
ன்னஅதிசெயம்பெரும்புறக்கடலுக்கொப்பாகயிப்போதுநமக்கெதிரி
லிருந்தசேனைகளைப் பாலன்கரத்தில்விளங்கும் வேலாயுதத்தைச்செலுத்தி
வாட்டினனேசர்வசங்காரமூர்த்தியாகிய சிவபிரான்பெயரால் விளங்கும்
திவ்வியபாணத்தினுல் மறைத்தனனே மாளக்கடவீர்களென்று ஒருவகை
மொழியைச்சொல்லிஅழித்தனனேயிந்தரணக்களமுற்றிலும்நிறைந்திரு
ந்தசேனைகளை யிந்தபாலன்எவ்விதத்திற் சங்கரித்தனன்எதிரில்நின்றுபார்

த்திருந்தனெனக்கொன்றுந்தோற்றவில்லை இதையோசிக்குமிடத்திற்புது
மையாகத்தோற்றுகின்றது,நாங்கள்கற்றகனாற்வித்தையும்புசபெலபரா
க்கிரமங்களும்வரப்பிரசாதமுயற்சிகளும் இந்தசிறுகுழந்தையின்முன்
னம்அவலமாகப்போயது-இதென்ன-சூதோ- வஞ்சகமோ-இந்திரசால
மயேந்திரசாலப்பெருக்கோயின்னதென்று என்மனதில்நிதானிக்கப்பட
வில்லையேயென்று ஐம்பொறிகளுங்கலங்கிமதிமருண்டுவாடிவருந்தினன்
-சவுனகாதிரிஷிகளே,அகண்டமண்டலாதீஸ்பரனாகியசூரபதுமன்அக்கா
லத்திற்பட்ட துன்பத்தைச்சொல்லிமுடிவதோ தேரைப்பறிகொடுத்துசி
லையையிழந்துசெயசாலியென்றெவ்விடங்களினும்கொண்டாடவிருந்தகீ
ர்த்திப்பிரதாபங்களைப்போக்கியதுமன்றியிற்சேனைப்பெருக்கையும்மாள
க்கொடுத்துநவரத்தினமயமாகவிளங்குங்கிரீடம்-குண்டலம்,வாகுவலய
ம்மதாணிப்பதக்கம்,கடகமுதலியஆபரணங்கள்பின்னப்பட்டுபூச்சக்கிற
க்கொடையையுந்துணிபட்டோட அகண்டசாம்பிராச்சியச்செல்வப்பெ
ருக்கைக்கொண்டிருந்தபூமண்டலத்தைப்பலகாலம் அனுபவித்துசடுதி
யிற்பறிகொடுத்துத்தியங்கும்மன்னனைப்போலவும்சிரோரத்தினத்தையி
ழந்தநாகத்தைநிகர்த்தும்|மங்கிலியத்தைப்போக்கியகன்னிகையையொப்
பாகவும்துதிக்கையையிழந்தமதயானையைநிகர்த்தும் ஒளியிழந்துவருந்
தும்குருடனைப்போன்றும்தெப்பத்தில்நின்றுதவறி செலத்திலாழ்ந்தவ
னைப்போலவும்உண்ணாமல்உடுக்காமல்பந்துக்கள்சினேகிதர்பரதேசிகள்
சிவாலயகயிங்கரியம் நந்தவனம்தடாகமுதலிய சத்கருமங்களிற்செலவி
டாமல்ஆழவெட்டித்தாழப்புதைத்துபணங்காத்திருந்தபூதத்தைப்போ
லப்பதலப்படுத்திவைத்திருந்த பதிதனானவன் தான்போற்றிவந்தசெல்வ
த்தைதிருடர்பாமன்னராலிழந்துவாடுவதைப்போலவும்கடன்பட்டவன்
நெஞ்சமலைவதையொப்பவும்பெண்களைப்பெற்றவனைநிகர்த்தும்மனது
க்கினிய துணைவனையிழந்தவனைப்போன்றும் சூரபதுமனுக்கொன்றுந்
தோற்றாமல்வாடிபூமியாகியரதத்தின்மீதிருந்தனன்-சவுனகாதிரிஷிகளே
இதனாற்செல்வமுதலியவளங்கள்நிலையாமையென்பதைத்தெரிந்துக்கொ
ள்ளக்கடவீர்கள் அதன்பின்பு அகண்டமண்டலாதீஸ்பரனாக வாழ்ந்தவனா
தலால் ராசாதிராசனுக்கு அதிககோபம்பிறவேசித்து அரக்கைப்போலக
ண்கள்சிவந்து தீப்பொறிகள்சிதற மீசைதுடிக்கமார்பில்வியர்க்கக்கரங்க
ளைப்பிசைந்துகொண்டுநல்லகாரியம்பற்கள்முழுதும்விழுந்தின்னமுமு
ளையாதபாலன்வெற்றியும்என்சூரமும் வெகுநேத்தியாகவிருக்கின்றதெ
னநகைத்து வடவைக்கனலைப்போலச்சீறிஇந்தநிமிஷத்தில் யிவனுணவத்
தையடக்குகின்றனனெனத்துரிதமாய்ப்பாரித்தவில்லொன்றையெடுத்து
வளைத்துபிர்மாஸ்திரத்தையெடுத்துஉபசரித்துமந்திரபூர்வகமாகச்செலு

த்தினன் அப்படையானது வானத்தெழுந்து பலகோடிதிவ்வியசரங்களைப்
படைத்து அனலையிறைத்துத்திசைகளதிர ஆர்ப்பரித்துச்சமீபித்ததருவாயி
ற் சயஞ்சோதிவடிவத்தைப் பெற்றிருக்கின்ற சிவகுமாரன்கரத்திற்சொ
லித்துக்கொண்டிருந்த வெற்றிவேலாயுதமானது சரேலென் றெழுந்து
மீறிவருகின்ற தேவப்படையை கவளீகரமாகவிழுங்கிமீண்டு பழையப
டிக்குத் தன்னிலையில்நின்றது அதைச்சூரன்கண்டு மனம்வாடிமானம்பா
திக்கக்கொதித்து மறுபடியும் நாராயணாஸ்திரத்தையெடுத்துப்பூசனை வழி
பாடுகளைமுடித்துக் கரவேகமாய்ப் பிறையோகித்த காலத்தில் அளவற்ற
விஷ்ணுக்களி னுருவத்தைக் கொண்டு பலதேவாஸ்திர விதங்களைப்படை
த்து வடவா முகாக்கினியைப்போலக் கொதித்து அதிவேகங்கொண்டுவ
ரும்போது வெற்றிவேலானதுபாய்ந்து அதையும் விழுங்கிமீட்டுகுமார
தேவர்கரத்தில்நின்றது- இந்தஉற்பாதங்களைக்கண்டசூரன் அதிசெயித்து
பிரமாஸ்திரம்- நாராயணாஸ்திரம்- யிப்படிக்கொத்தசிறந்த பாணங்க
ளைச்செலுத்தினேனும் அவற்றினைவெற்படையுண்டு விளங்குகின்றதுயிதை
ப்பார்க்குமிடத்திற் மாயமாயிருக்கின்றது நல்லகாரியம் இனி காளகண்
டமூர்த்தியாகிய சிவபிரான் கடாட்சித்திருக்கின்ற பாசுபதாஸ்திரத்தைப்
பிரயோகிப்பேனாயில் அதனையாவர்தடுக்கவல்லர் இந்த பாலன்முதலா
னவர்களைவாட்டிப் பகைவரில்லாமற் செயப்பிறதாபத்தைத் தருமென்
றுமனஉறுதிகொண்டு அப்படையையெடுத்து விதிப்படிக்கு மானசபூ
சையினால் தூபதீபமுதலிய வழிபாடுகளைமுடித்து வில்விற் சந்தித்து ஆ
காணாந்தபரியந்த மிழுத்துப்பிறையோகித்தனன், அந்தசிறந்தபடையா
னது வெளிப்பட்டவுடன் அளவற்றபிரமன் நாரணன் படைகளை யுண்டு
பண்ணி சூலம்சக்கர முதலிய சிறந்தஆயுதங்களைப் பெருக்கி ஆலகால
விஷமும் வடவாமுகாக்கினியும் கலந்துவீசுவதைப் போலச் சுவாலையை
க்காட்டி அண்டங்களதிரச்சீறி அதிசமகிமைகளை உண்டுபண்ணிக்கொண்
டுவரும்போது அதனாலுண்டாகியஉற்பாதங்களுக்கஞ்சிதிசையானைகள்வீ
றிட்டு உதைத்துக்கொண்டு மரணமூர்ச்சையாகவிழவும் சத்தசாகரங்களு
ம்பெரும்புறக்கடலும் கொதிப்பெடுத்துச்சுவறி அதிலடங்கியிருந்த வ
டவைக்கனலும் மேலிட்டுவரும்வெப்பத்துக்குச் சகிக்கப்படாமையால்
எங்கேபோவெளிப்போமென்று வருந்தவும் பூமண்டலம்தத்தளித்துச்
சேஷனும்நடுங்கி விஷங்களைக்கக்கவும் சத்தமேகங்களும் கெற்பங்கள்
கலங்கி யிடிமின்னல்களைப்பெருக்கி ஓடவும்சூரியன் துடிதுடித்துக்களை
க்கவும் மகம்மேருமுதலியகுலகிரிகள்நெக்குவிட்டசையவும் அண்டகோ
ளகைவெடித்துக்காட்டவும் இலக்கர்பயப்பிருந்திகொண்டோடவும்சே
னைத்தலைவர்கள் இதென்ன உற்பாதமென்று களைக்கவும் பூதப்படைகள்

அம்மம்மமோசம்வந்தது வாருங்கோள் வாருங்கோளென்றுபொருவ
ரொருவர்கூவிக்கொண்டோடவும்-வானத்தில் வேடிக்கைபார்த்திருந்த
தேவர்க்கள்இந்தயாணத்தைத் தடுப்பதுமிகவும் அரிதரிது நமக்கென்ன
கேடுநேருமோவென்னும் பயத்தினால்மேலுலகங்களிற்போய்மறையவு
ம்மண்விண்பாதலங்களில் வாசஞ்செய்கின்ற பிராணிகள்மிகவும் வருந்தி
ஏங்கிக்களைக்கவும் இவ்விதஉற்பாதங்களைக்காட்டி பாசுபதம்வருகின்றம
கிமையைச்சிவகுமாரன்கண்டு இது நமதுபிதாவின்படையாகுமெனநிதா
னித்தவராய்த் தமதுதிருக்கரத்தை நீட்டிக்கொடுத்தவன் எளிதில்வாங்கு
மாறுபோலவந்திமற்றப்படைகளுடன்பரித்திருந்தனர், இந்தஅதிசெய
த்தைதமாயைதந்தசூரபதுமன்கண்டுஅதிகவிம்மிதனாய்நான்அருமையாகத்
தேடிவைத்திருந்ததெய்வீகப்படையைச்செலுத்தினால்அதற்குமாறுதொ
டாமற்சுலபமாய்த் தன்வசப்படுத்திக்கொண்டு அஷ்டமுகுற்தமாகவிள
ங்கப்பட்டவன்தானுமென்பதைக் காட்டினான் ஆதலால், இந்தபாலனுட
ன்சண்டைகொடுப்பதற்கு என்னைத்தவிர மற்றயாவராலு முடிவதன்று
மேலும்என்னுடன்போராடுவதற்குயிவனல்லதுவேறில்லையிதற்குப் பிச
குமில்லை யிதனால் யிவனை எனக்குச் சமமாகச்சொல்லவேண்டும் வேறொ
ருவனை எவ்விதங்களினுங்குறிக்கப்படாது நல்லகாரியம் இந்தபாலன்கர
த்தில்விளங்கும் வெற்றிவேலாயுதத்தின்வலியையும் விற்றிறத்தையும்மற்
றசெயங்களையும்பார்த்தேன் இனிசிவந்தஅதரத்தையுடைய பாலன்செய்
கையை யறிவோமெனநினைந்து சூரபதுமனானவன் ஒருகாரியத்தையும்
தொடங்காமல் மவுனியாய்அசைவற்றுநின்றனன்-சவுனகாதிரிஷிகளே, எ
ன்சொல்வேன் அகண்டமண்டலாதீஸ்பரனாகிய சூரன்நிலையைச் சண்மு
கப்பெருமாள்கண்டவுடன் மனதிலிரக்கமுற்றுக் கிருபாநிதி யாதலால்
இதனைச்சொல்வதாயினர், ஓசக்கிறவர்த்திஇந்திரகுமாரன்சயந்தன்முதலா
கியதேவர்க்களையலைத்துப் பிடித்துவந்து அளவற்றகாலமாய் கொடியசி
றையில்வைத்து வருத்துகின்றனையெனத்தெரிந்து அதைநிவாரணஞ்செ
ய்யும்பொருட்டு நாமொருதூதனையனுப்பினோம்அவன்வந்துபேசியவா
ர்த்தைகளை உறுதியாகக்கொண்டு நடந்தவனுமல்ல அல்லதுதேவர்க்கள்சி
றையையும் விடுதலைசெய்யாமற்போயினை இந்தகாரணத்தைக்குறித்தே தி
ருக்கயிலையைக் கடந்துவந்தனமாதலால் ஆதியில்உன்தம்பி தாருகனைப்
பிளந்துகொன்றபடிக்கு இத்தினமே உன்னையும்வெற்றிவேலினால்வாட்
டநினைந்து யிவடம்வந்தோமாயினும் உனக்குதவியாகச் சூழ்ந்து வந்த
நூறுயிரவெள்ளம் ரதகெசதுரகபதாதிகளையும் பறிகொடுத்துசெயப்பிற
தாபம்பெற்றிருந்த தனுசையுமிழந்த நீஅருமையாகத்தேடி வைத்திருந்
ததெய்வப்படைகளும் அதப்பட்டுதிரோசமும்வருந்தி வறியனாய்நிற்கின்,

மூனை புசபெலபராக்கிரமசாலியாகிய தாருகனைவென்றவேல்யிதோயிரு
க்கின்றது உன்னைக்கொல்வது நமக்கொரு பொருளன்று தற்மமாற்சப்
படிக்கு நிராயுதனாயிருக்கின்ற உன்னைவாட்டுவது நீதியல்லவென்றுயி
துபரியந்தம் தாழ்த்தோம்இனியபலபல பேசவேண்டுவதில்லை வெகுகால
ங்களாக வைத்திருக்கின்றதேவர்க்கள் சிறையைவிடுதலைசெய்வையாகில் உ
ன்பிராணனைவாங்காமல் யிந்தசெல்வத்தைஅனுபவித்திருக்கவிட்டுப்போ
வோம் அப்படிக்குச்செய்யச்சம்மதப்படாமற்போவையாகில்இப்போ
தேஉன்னைக்கண்டித்துப்போட்டு தேவர்க்களைவிடுவித்துக்கொண்டுபோ
வோம் இனிஉன்னெண்ணத்தைத் துரிதமாகச்சொல்லக்கடவையென்று
வெவ்வேறுருவமாகவிளங்கிச்சராசரப்பிறபஞ்சங்களனைத்தினையும்நடிப்
பித்துப் பாதுகாக்கத்திருவுளங்கொண்ட காரணத்தினாற்சண்முகங்களு
ம்பன்னிருதிருக்கரங்களும் பெற்றுத்தோற்றியிருக்கின்ற குமாரதேவ
ரானவர் மேற்குறித்தபடிக்கு மனத்தூய்மையில்லாத சூரபதுமனைப்பா
ர்த்துச்சொல்லிய காலத்தில் மாறுத்தரமொன்றுங் கொடாமல்யிதனையெ
ண்ணுவதாயினன், இந்தசிறுபிள்ளையிப்போதுகுறித்துக்காட்டியகாரண
ங்களையோசிக்குமிடத்திற் சமுத்திரத்தைப்போல நம்மைச்சூழ்ந்து வந்
தசேனைகளையும் படைவீரனையும்பாரித்த வில்லையும்சிறந்ததேவப்படை
களையுமிழந்து தெய்வீகமாகிய தேரும் உதவியற்றிருக்கின்றனன் யிது
தருணமென்றெண்ணி தேவர்க்கள் சிறையைவிடுவித்துப் போட்டு சுகசீ
வியாய் அரசுரிமைகளைச்செய்து பிழைப்பையெனப் பேசத்துணிந்தன
ன,அழிவற்றவயிரத்திரேகம்நமக்குண்டாயிருப்பதையும்தீர்க்காயசைக்
கிடைத்திருப்பதையும் புசபெலசவுரியச் சம்பத்துகளையும் மாளாத சே
னைகளின் பெருக்கைப்படைத்திருப்பதையும் பாலபருவத்தினாற் சற்
றும்யோசியாமற்போயினன்பரிமளமிகுத்தகடப்பமாலையையணிந்திரு
க்கின்ற பாலசுப்பிறமணியன் கோபித்துநின்று அளவற்றகாலம் கொடி
யபோராஞ்செய்யவும் தான் வெறுங்கரத்துட னிருப்பினும் யிவன் றந்
தைசிவபிரான் எக்காலத்துமுனக் கழிவில்லையென் றருளியிருக்கின்றவா
ழுயற்சிபெற்ற என்னைக்கொல்ல மாட்டுவனோ மேலும்-பிரமன் -விஷ்
ணு-ராசராசாக்கள் பெரியோர்கள் முதலிய சகலரும் நிறைந்து புகழ்ந்
துவாழ்த்தப்பட்டாபிஷேககாலத்திற்சூடியிருக்கின்ற வயிரமுடியும்பூச்
சக்கிறக்கொடையும் துணிபட்டுப்போனதை நினையாமல் பழிக்குட்ப
ட்டுஇப்போதேயெதிர்த்து சண்டை கொடுப்பேனாயினும் எனக்கழிவி
ல்லை,ஆனபோதிலும் யிந்தபாலனைவாட்டி செயப்பிறதாபத்தைப் பெ
றுவது மிகவுமரிது யிதனால் உலகவாசிகள் ராசபரமேஸ்பரனாகவிருக்கப்
பட்ட நாம் பங்கப்பட்டுப் போர்செய்யத் துணிந்தானெனப் பேசும்

பழிப்புனாமாத்திரம் பூலோக முள்ளளவும் நீடித்திருக்கும் இந்தஅபவா
தத்தை முதன்மையாகக்கருதி நீக்கிக்கொள்ளவேண்டும் மேலும் கிணத்
திலிருக்கின்ற செலம்பெருகி யூற்றையுடைய கடல்நீராமூடிக்கிக்கொண்
டுபோகவல்லதோ அதைப்போலவே யிந்தபாலன் நாம் செலுத்தும்ப
டைகளையும் சேனைப்பெருக்குகளையும் தொலைக்கமாட்டுவ னல்லது அ
ழிவற்ற நமது திரோகத்தை அசைக்கப்படுமோ என்னைப்பாலன் வெல்வ
தும்அரிது நானும்ஒருபோதும்அவனைவெல்லவுமாட்டேன் இவ்விதசங்
கட்டங்களி லிருக்கின்றபடியால் உலகஅபவாதத்துக்கஞ்சி துரிதமாய்ந
மதுபட்டணத்துக்குப்போய் நவரத்தினமயமாகிய கிரீடமுதலாகிய ரா
சச்சிறப்புகளைப்பெற்று வலியபடைகளையுந்தாங்கி ரதகெச துரகபதாதி
களைத்திரட்சியாகக் கூட்டிக்கொண்டுவந்து நாளைக்கே இந்த பாலனைம
டக்கிக்கொண்டு சண்டைகொடுத்துவென்று செயசன்னாகங்களுடன் தி
ரும்பக்கடவேன் இப்படிக்குச்செய்வதினால் ஒருபோதும் யிகழ்ச்சியன்
றுசூரனாகவிருப்பவன் நெருங்கிச் சண்டை கொடுக்கின்ற தருவாயில்ஒ
ருதினம் யிளைத்தபோதினும் மறுநாள் சகலசவ ரட்சணைகளுட னும் வ
ந்தெதுத்து பகைவனைச் சின்னபின்னப்பட்டழியவாட்டி வெற்றிபெறி
ன்யிவன் ராசதந்திரங்கள் நன்றாகத்தெரிந்தவனென்று பலரும் புகழ்ந்
துகொண்டாடவிருப்பன், மேலும்அரசர்களுக்குரிய நீதியாவது ஒருவ
ன்யெதுத்துவந்தகாலத்திற் சாமபேத தானதண்டமென்னும் சதுர்வித
உபாயத்தினால் வெல்லவேண்டும் அவ்வாறே காலமறிந்து திரும்பி மறு
படியும் போரில்நேர்ந்து பகைவனைவெல்ல வேண்டும்அவனை அஷ்டதி
சையினும்புகழ்ந்துபேசவிருப்பன் அந்தப்படிக்குநானும்சம்மதித்து
ச்செய்யக்கடவேன் யிதுவிவேகசம்பன்னர்க்குத் தகுதியாகிய காரியம
ல்லது வேறல்லவென்றுசூரபதுமன் பலதந்திரங்க[illegible]த்துத் துணிவு
கொண்டவனாய் சுக்கிராசிரியன் தனக்கனுக்கிரகித்திருக்கின்ற மாயமந்தி
ரங்களிலொன்றை உச்சரித்துச் சடுதியில்மறைந்து வானவழிக் கொண்டு
போய்சொர்ணமயமாய் விளங்கிக்கொண்டிருக்கும் வீரமாமயேந்திரபு
ரமத்தியில் நவரத்தினகாந்திகளைவீசி வானத்தையளாவ விருக்கின்ற தன்
நகரத்தைச்சேர்ந்தான் கேட்டீர்களோ [illegible]களே, சராசரப்
பிரபஞ்சங்களனைத்தினும் எள்ளிலெண்ணெ[illegible]லப் பரிபூரணமா
கநிறைவெய்தி நடிப்பித்தவரும் சரவணப்பெருமாள் சூரபதுமன்வஞ்
சகநினைவைத் தெரிந்தகாலத்திற்றமது திருக்கரத்தில்விளங்கும் வெற்றி
வேலாயுதத்தை விடுத்துப்பிளந்து கொல்லாமல்இன்னமுந்தன் குற்றங்
களைத்தெரிந்து அதற்கடுத்த பரிகாரங்களைத் தேடிப்பிழைப்ப னென்
றுங் கிருபையினால் க்ஷமித்திருந்ததருவாயிற் சூரனுக்கடுத்த சம்பவங்

களைத்தெரிந்த-பிரமன்-விஷ்ணு-இந்திரன்-முதலியதேவர்க்கள் மனவா
ட்டங்களையொழிந்துகளித்துக் கோஷம்பூரிக்கத் துரிதமாய்ச்சிவகுமார
ன்முன்னம்வந்து கரங்களைக்கூப்பித்தொழுது இதனைவிண்ணப்பஞ் செ
ய்வதாயினர், காசியன்புத்திரனாகிய சூரபதுமன் பிறமுகனாய் வெளிப்ப
ட்டதுமுதல்யித்தினவரையிற் சென்றவிடங்கடோறும் வெற்றிபெற்று
செயசாலியாய்க் களித்திருந்தனன், கர்த்தனேஅவ்வாறே நினைந்துயிக்கா
லத்தில்தேவரீருடன்கொடியபோரைச்செய்து பலவெள்ளஞ் சேனைகளை
யும்யிழந்து மானபங்கப்பட்டு மதிகெட்டுப்புறந்தந்தோடினன், சூரனு
டனெதுத்துயிவ்விதப்போரைநடாத்துவதுதமக்கிதுவுமொருதிருவிளை
யாடலாகும் அல்லதுசற்றுகோபங்கொண்டு அவனுவியையவாங்கத்திருவு
ளத்தில்நினைப்பீராகின் வுயிர்பெற்று யிந்தரணக்சனத்தைநீங்கிப்போவ
னோவெற்றிவேலினால் ராசாதிராசனை நிமைப்போதிற்கண்டித்துப்போ
டவல்லதேவரீர்அவனுடனெதுத்து வில்லைவளைத்துபாணங்களைச்செலுத்
திப் போராடுவதைப்பார்க்குமிடத்தில் அவனிடத்திலிருக்கின்றபட்சத்
தினாற் பிழைத்துப்போகட்டுமென்றெண்ணி அசாரிசமாயிருப்பதாகக்
காணுகின்றது,ஓகர்த்தனேயிந்தபாதகனால் மிகவும்வருந்தியிருக்கின்றன
ம்அடியவரிடத்திற் கிருபாநோக்கம்பாலித்து நாசப்படுத்தவேண்டுமெ
ன்றுபோற்றுகின்ற தேவர்க்கள் சோதிக்கைகளைக் கந்தசுவாமியார் திருச்
செவிகளினேற்று நல்லகாரியம்சூரன் யின்னமொருதிரம் நம்முடனெ
துத்துப்போர்செய்யவிரும்பிவருவனாகில் உங்களிஷ்டப்படிக்குபுத்திர
மித்திரகளத்திராதிகளுடன் நாசஞ்செய்வோம் யிதைக்கடைப்பிடியாகந
ம்பியிருப்பீரென்றுதிருவுளம்பற்றியதருவாயிற்செயசாலியாகிய சூரப
துமன்பாணங்களினாற்சின்னபின்னப்பட்டுவருந்தி மரணமூர்ச்சையடை
ந்துங்களைத்தும்இளைத்தும் ஓய்ந்தும்மறைந்தும் இப்பாடுகளைப்பட்டி
ருந்த-எண்மர்-இலக்கர்-படைத்தலைவர்களும் திசாதிசைகளில்ஓடியொ
ளித்திருந்தபூதப்படைகளும்தெளியுண்டாய் சூரபதுமன்பாலசுப்பிரம
ணியதேவருக்கஞ்சிப்புறந்தந்துமறைந்ததைத்தெரிந்தவுடன் மனமகிழ்
ந்துசந்தோஷசாகரத்திலழுந்தி யேகமாய்ச்சேர்ந்து சேனைத்தலைவராகிய
வீரவாகுதேவருடன் வேகமாய்வந்து பாலசுப்பிரமணியதேவரைச்சூழ்
ந்துகொண்டுவணங்கி செயசெயபோற்றியென வாழ்த்தினவர்களாய் சூர
ன்மேகத்தில் மறைந்தோடியதற்கு சொர்க்கமத்தியபாதலங்கள் திடுக்கிட்
டுநடுங்கும்படிக்குச் செயப்பிறதாபங்களைக் கொண்டாடி நல்லகாரியம்
போர்முகத்தில் நம்மைவாட்டியலைத்தபாதகனான சூரன்நகரத்தைமுத்தி
க்கைபோட்டுக்கொண்டு சக்கிரவாளகிரியைப்போல வளைந்திருக்கும்
பொன்மதிலையிடித்துப் பூமியில்திரவிநவரத்தினமயமாகிய பலநிலைகளை

க்கொண்டுவானத்தை யளாவநிற்கின்றகோபுரவாயல்களை அடியுடன்பறித்துசமுத்திரத்திற்றள்ளி மனவாட்டமொழிந்து களித்துத்திரும்புவோம் வாருங்கோள்வாருங்கோளெனக்கூவிச் செயசாலிசளாகிய பூதப்படைகளீ அதிவேகமாய்நடந்து மயேந்திரபுரியிலிருப்பவர்கள்நடுநடுங்கிமிகவும்படிக்குஆற்பரித்துக்கொண்டுவந்து கோட்டைமதிலைச் சுற்றிவளைந்ததைபலவெள்ளம்வீராதிவீரர்களாகிய ராட்சதச்சேனைகள்சூழ்ந்துபோற்றக்கொத்தளங்களினிடத்திலிருந்து காத்துவரும் ரணரங்கசூரனாகிய அதிகோரனென்னும் படைத்தலைவன்கண்டவுடன்விழிகளிற் றீப்பொறிசிதறவுருத்துஅக்கினியைப்போலமனம்வெகுண்டுதட்டைக்கடித்துபலிச்சூழன்றுதிரியும்பூதர்களும் ஒப்பற்றயிந்தபட்டணத்தைக் கண்கொண்டு பார்க்கவும்எளிதாயிற்றோ நல்லகாரியம்யிவர்கள்கெற்வத்தையடக்கிவாட்டுவேனெனக்கோபித்து மதயானைகளையொத்தவலிபெற்றவர்களாய்ஒன்றனந்தஞ்சிரங்களையும்கரங்களையும் பெற்றவர்களாய்-சிங்கம்- கரடி-புலி-யாளி-யானை-இத்தகையமிருகமுகங்களைப் படைத்தவர்களாய்வீரபராக்கிரமசாலிகளாய்-வில்-வாள்-தோமரம்-பிண்டிபாலம்கப்பணம்-முசுண்டிகொடியபாணங்கள்முதலிய ஆயுதசவரட்சணைகளைப்பெற்றவர்களாயிராநின்றநால்வகைச்சேனாசமுத்திரங்களையுங்கூட்டிக்கொண்டு-ரணபேரிசெயபேரி-வெற்றிச்சங்கம்-தவுண்டி-மல்லரி-சல்லரி-தக்கை- முதலியபொற்பறைகள்அண்டங்களதிரமுழங்கிவரதுசபடாங்கள்வானத்தையளாவிபடபடென்றதிரவும்வெண்சாமரை ஆலவட்ட முதலியராசசின்னங்களைப்பலகோடிஅவுணவீரர்கள் தாங்கிவரவும் ரதாரூடனாய்சிங்கத்தைப்போலகெற்சித்துஅதட்டிக்கொண்டுஎதிர்ந்தகாலத்திற்பூதப்படைகளும்வீராவேசங்களுடன்கெக்கலிகொட்டிமேலிட்டுவந்ததெப்படிஇருந்ததெனில், காடாந்தகாரமாகிய யிருட்கூட்டமும் அதைநாசப்படுத்தவல்லசூரியபகவான்கிரணசமோகங்களும் ஒன்றுக்கொன்று பகைகொண்டுபோருக்கெதிர்ந்ததைப் போலக்காட்டியது,அத்தருவாயிற் யாதகராகியராட்சதச்சேனைகள்கைமிஞ்சிவிற்களைவளைத்துக்கொடியதீட்சணியமுள்ளபாணவருஷிங்களைபொழிந்தும்- தோமரம்-பரசு- சூலம்-எஃகம்-குறுந்தடி-கவணமுதலிய- ஆயுதங்களை ஒன்றனந்தகோடிகளாகவீசிஆற்பரித்தகாலத்திற் செயசாலிகளாகிய சிவகணங்கள்பாரித்து வானையளாவநிற்கின்றபற்வதங்களைப்பிடுங்கிகிறுகிறெனச்சுழற்றிப் பந்தைப்போலக்கடாவியும் திசைகளைமூடக் கிளைகளைவிரித் திருக்கின்ற பாரித்த மரங்களைவேருடன்பிடுங்கிச்சுழற்றி மோதியும்தண்டம் யிருப்புலக்கை வாள்யிவற்றைக்கொண்டுமோதியும் சிலபூதர் வீராவேசங்களுடன் மதயானையைப்போல அதிகோரன்சேனைவெள்ளங்களிற் பாய்ந்து ஒவ்வொரு காத்தி

ல்ஆயிரம்பதினாயிரம் மதயானைகளைவாரி தோரணிகள் நுறுங்கி விழமோ
தியும் பாதங்களைத்தூக்கி பற்பலகுதிரைப்பந்திகள் நிலத்திலறையிட்டு
ப்போகச்சாடியும்கணக்கிறந்த குதிரைகளைத்தூக்கிஅளவற்றசேனைகள்சி
ன்னபின்னப்பட்டுமாளத்தாக்கியும்கழுத்துகளைமுறித்தும்கரங்களையொ
டித்தும்விலாக்களொடியக்குத்தியும்மார்புபிளக்கவறைந்தும்கால்களைத
ட்டியும் விழுந்துருளஉதைத்தும் நிலத்தைக்கவ்விக்கொண்டு றசிகமோ
தியும் வானத்திற்பறக்கஎத்தியும்திசைகளில்வீசியும்சமுத்திரத்திற்குமிள
மிடவெறிந்தும் சுள்ளிகளைப்போல ஒடித்தும் கோபத்தினால் மேல்விழ்
ந்துஆட்டிலையக்கடித்துஉதிரத்தைக்குடித்தும்பிடித்தும்குத்தியும்மோ
தியும்தட்டியும் முட்டியும்-மொத்தியும்-பிசைந்தும் -கசக்கியும்கிட்டி
யும்-மந்தரம்போன்ற -புயங்களைஒடித்தும்-தலைகளைநெரித்தும்-மூளை
களைவாய்வழியாகக் கக்கநருக்கியும்கண்மணிகளைபிடுங்கிநட்சத்திரவீதிக
ளிலெறிந்தும் வயற்றைப்பீறி குடல்களைப்பிடுங்கி மாலையாகப் போட்
டும் வாரிநிலத்திலறைந்தும் வலியகால்களினாற் துவைத்தும் சதைத்தும்
இவ்விதங்களாகப் பூதப்படைகள்சிலறேங்கிச் சாடுமுன்னிலையில்ராட்சத
ர்களும் பின்னிடையாமல் றவுத்திராகாரமாக மண்டியெரிந்து மீசைது
டிக்கவிழிகள்சிவந்து தீயையிறைக்கபுருவம்நெற்றியிலேறபற்களைக்கடி
த்து சற்பங்களைப்போலச்சீறி பாரித்தவிற்களை வளைத்துச் சாணையிட்டுக்
கூர்மையாய்மின்னலைப்போலதகத்தகாயமாய்ப் பிறகாசிக்கும்அலகையு
டையதாய் சமூகிறகுகள்செருகி நீண்டிருக்கும்காம்புகளையுடைய பாண
கோடிகளையும் அற்தச்சந்திரக்கணைகளையும் சற்பங்களைப்போலச்சீறிவி
ஷங்களைக்கக்கும் சரங்களையும்அக்கினிகளைவூசித்தகிக்கவல்ல கொடியபா
ணங்களையும் அமோகமாகத்தொடுத்துச் செலுத்தியும் ஈட்டிகளினாற்கு
த்தியும்பல்லயங்களினாலெத்தியும் வாளினாற்சின்னபின்னப்படத்தறித்து
ம் சக்கரம்-சூலம்-பிண்டிபாலம்- சப்பணம்-முசலம்-வேல்- நாஞ்சி
ல்முதலாகிய ஆயுதவிதங்களைவீசிச் சிரங்களைக்கண்டித்தும் கரங்களைத்து
ண்டித்தும் மார்பைத்துறந்தும் வயற்றைப்பீறியும் இவ்விதங்களிற்சித்
திரவதைகளைச்செய்துசாடும்போது சிவகணங்கள்பின்னிடைவதைக்கண்டு
அவர்களுக்குத்தலைவராகவிருக்கின்ற வீராதிவீரர்கள் சற்வசங்காரமூற்தி
யைப்போலவுங் காலாந்தகனைப்போலவும் ஊழிக்காற்றைநிகர்த்தும்சுழ
ன்றுசுழன்றுராட்சதனைமடக்கிகொண்டுதங்கள் கரங்களிற்பற்றியநீண்
டதனுசுகளை வட்டாகாரமாகவளைத்து திவ்வியபாணசமோகங்களைச்சொ
ரிந்து கண்டங்கண்டமாய் துண்டந்துண்டமாய்-கால்-தலை-புயம்-வெ
வ்வேறுகச் சின்னபின்னப்படவாட்டும்போது அக்கொடுமைக்குச் சகிக்
கப்படாமல் ரணக்களத்தில்மாண்டவர்கள்போக மற்றராட்சதர் பிறிவி

தீஜு அம்மம்மயிவர்களைப்பார்க்குமிடத்திற் பசாசங்களைப்போலத்தோ
ற்றுகின்றனர், சந்துபொந்துகளினும் நுழைந்துநுழைந்துபிடுங்கிச்சவ
ளீகாமாக்ஷத்தின்கிறதாய்ச்சாலுகின்றது, இனிசற்றுநேரம்யிவடத்திலிரு
ப்போமாகில் நம்மையுங்கொன்று வாயிற்போட்டுக்கொள்ளுவார்கள்எ
மனேஇந்தரூபங்களாகவந்ததையொப்பவிருக்கின்றதுஉயிரிருந்தால்உ
ப்புமாறியாவது சீவனஞ்செய்யலாமென்று ஒருவருக்குமுன்னம் ஒருவ
ரோடிஇக்குதீயாந்திரங்களிற் சேர்ந்துமறைந்திருந்தனர், அக்காலத்தில்
ரணக்களமெங்கும் பலகவந்தங்கள் கூத்தாடவும் உதிர வெள்ளமானது
அலைகளைச்சுருட்டிமோதிக்கொண்டோடவும்மூளைகள்சந்திரகாந்தப்பா
றைகளைப்போல யிறைந்துகாட்டவும் பிணமலைகள் பெருத்தோங்கவும்
பூதபசாசங்கள் காளிக்கூட்டங்கள் உதிரமாம்சங்களைத் தெவிட்ட வுண்
டவெறியினாற் சிவகுமாரனைப்புகழ்ந்து தித்தோமென்று நடிக்கவும்நா
ய்நரிகள்யிங்குமங்கும் ஊளமிட்டோடவும் -கழுகு-பருந்து-காக்கைக
ள்பசியற்று வானவெல்லையிற் கூச்சலிட் டுலவவும் இவ்வித சிறப்புகளைக்
கொண்டுதோற்றியது-சவுனகாதிரிஷிகளே, அக்காலத்தில்ரணக்களமிரு
ந்த வேடிக்கையை யிப்படித்தெனப் பேசப்படுவதோ இவ்விதமாகரா
ட்சதச்சேனைகளும் நவரத்தினமயமாய் கெற்கரத்தொலிகளைச் செய்தோ
டிவந்த தேரணிகளும் நீலகிரிகளைப்போல மும்மதங்களையும் பெருக்கி
யிருந்த யானைப்பெருக்கும் மல்லகதிமயூரகதிமுதலிய நடைகளைக்கற்று
கடலினுந்திசைகளினும் தாவவல்லகுதிரையணிகளும்சின்னபின்னப்பட்
டுநாசமடைந்ததைக்கொலைகளவாதியவஞ்சகங்கள்குடிகொண்டிருக்கும்
மனத்தையுடைய அதிகோரனென்னும் வீராதிவீரன்கண்டவுடன் றவுத்தி
ராகாரமாகக் கோபித்து வடவாமுகாக்கினிசீறியெழுந்ததைப்போலஎழு
வாயுதத்தைக்கரத்திற்கொண்டு சுருவளிக்காற்றினுங்கடுகிச்சுழன்றுபூதப்
படைகளிற்புகுந்து கரகொனச்சுல்வி ஒவ்வொரு தாக்கலினால் அளவற்ற
பூதர்கள்தலைகள் நறுங்கவும்கண்தெறிக்கவும் மார்புநெக்கு விடவும் கர
ங்கள்தறிபடவும் கால்கள்முறிபடவும் கைகளிற்பற்றிய ஆயுதங்கள்பொ
டிபடவும் சாடும்போது வீராவேசங்களுடன் சண்டைகொடுத்துவீறியி
ருந்த சிவகணங்கள் அல்லோலகல்லோலப்பட்டு பிறிமித்து மதிமயங்கி
யிர்தகொடியபாதகன் ஒருஎழுவாயுதத்தினாற் காலாந்தகனுக்குச் சமதை
யாகதம்மவனாநாசப்படுத்தி யுலவுகின் றனனென்றுபேசிக்கொண்டுபயப்
பிருந்தியினால்எதிர்த்து நிற்கவுமஞ்சித் தூசிப்படைமுறிந்துபின்னிடுவ
தைக்குமாரதேவர்பணிவிடைகளுக்குப்பாத்திரராகவிருக்கின்றசேனாதிப
திகளில் அமோகனென்பவன்கண்டு சர்வசங்கார மூர்த்தியைப்போலப்
பொங்கிவிழிகளிற்றீப்பொறிகள் குபீல்குபீலெனக்கொட்டவுருத்துப்

பிறசண்டமாருதத்துக்குச்சமதையாகாரணக்களமெங்கும்உலவிக்கொண்
டிருக்கின்றராட்சதவீரன்முன்னம்வந்துதன்கரத்திற்றாங்கியிருந்தமே
ருவுக்குச்சமதையாகிய பாரித்தமலையைவேகமாய்வீசிக்கொக்கரித்தகால
த்தில்அதுவேயோசையைக்காட்டிகிறுகிறெனச்சுழன்றுவருவதை அதிகோ
ரன்கண்டு துரிதமாய்த்தன்கரத்திற் பற்றியிருந்தமந்தாரத்தை யொத்தள
மூவாயுதத்தைக்கொண்டோங்கி அடித்துப் பொடிப் பொடியா யுதிர்ந்
துபோகச்சாடிச் சிங்கத்தைப்போலக் கெற்சித்த தறுவாயிற் சத்திராதி
களாகியகடலை மந்தாகிரியைப்போலக் கலக்கவல்ல செயசாலியாகிய பூ
தகணத்தலைவன்சிங்கத்துக்கொப்பாகச்சீறித்தாவிக்கரத்தையோங்கிகோ
டையிடியினும்வலிதாய் அதிகோரன்மார்பிலறைந்தான் அத்தாக்கலினால்
மனங்கலங்கிஉளைப்பெடுத்து மிகவும்வருந்தியபோதினும் தயிரியத்தை
விடாமற் காட்டமுலைப்போலச்சீறி யிந்தநிமிஷத்தில் யிவன்பிராணனை
எமலோகங்குடியேற்றுவேனென்று கோபித்தவனாய்த்தன்கரத்திற்கொ
ண்டிருந்த முசலத்தைவிடம்வலமாகச்சுழற்றி மலைவிழுந்ததைப்போல
ப்பகைவன்புசத்தின்பேரில் மோதினான் - சவுனகாதிரிஷிகளே, அந்தபூத
வீரன்வலியையென்சொல்லுவேன் மேல்விழுந்தஎமூவாயுதமானதுகுன்
றிக்குறைந்துதுகள்பட்டுப்பறந்துபோயது, அப்போதுஅமோகனுக்கு
அதிகசோபம்பிறவேசித்து கையைப்பிடித்தமாக்கிக்கொண்டு ஓங்கிராட்
சதப்பாதகன்சிரத்தில் ஒருகுத்துவைத்தான் அதினால்மண்டைதுறந்துஉ
திரமும்மூளையும்சிதற மேகத்தைப்போல யிரைந்துகொண்டு பூமியில்
விழுந்துதட்சிணத்தில்மாண்டனன், இவ்விதமாய்க்கோபுரவாயலைக்காவல்
கொண்டிருந்த படைத்தலைவன் செற்றதைக்கண்டவுடன் பின்னிட்டபூ
தப்படைகள் அச்சமொழிந்து மனவுச்சாகங்களுடன் பெரும் புறக்கட
லுடைத்து பெருகியதுக்குச்சமதையாய் ஆர்ப்பரித்துஒருவர்முன் னொ
ருவராகவேகங்கொண்டுபோய் கோபுரவாயலைக்கிட்டி ஆயிரம்யோசனை
வானத்துயர்ந்து விசாலமாய்ப்பரந்து மேலேழுலகங்களைப்போல நவர
த்தினமயமாகிய நிலைகளைக்கொண்டு பாதலவரையி லாழ்ந்திருந்த கோபு
ரத்தைவேருடன்பறித்துப் பந்தையொப்பக்கடலில்விட்டெறிந்தகாலத்
தில் முன்னம்வாயுதேவன் விசைகொண்டுமகம்மேருவின்சிகரத்தைத்து
ண்டித்துத்தள்ளியதைப்போன்றும்தேவேந்திரன்மலைகளின் சிறகைவச்சி
ராயுதத்தினால் அரிந்தமுன்னிலையில்மைநாககிரியானதுபயந்தோடியொ
ளித்ததையொத்தும்கடல்நீரலைந்துசேருடி வானத் தோங்கவிழு
ந்தஅதிர்ச்சியினாற் பூமிகிடுகிடெனநடுங்கவும் ஆதிசேஷன் தத்தளித்துவா
டவும் விரமாமயேத்திரபுரியிலிருந்த சிசுபாலாதிகளும் திடுக்கிட்டுமரு
ண்டோடி வருந்தினார், மேலும் அந்தகோபுரம் கடலில்விழுந்த தெப்ப

டிக்கிருந்ததெனில், திருப்பாற்கடலைக் கடையும்போது மத்தாகநாட்டி
யமத்தரகிரிசுழ்ந்ததைப்போலக் காட்டியது, அக்காலத்திற்கடலினிடத்
திருந்ததிமிதிமிங்கலகிலங்களாதிய மச்சாசிகள்திகைத்து அத்தலத்தைநீ
ங்கிச்சரவணபவன் வில்லினின்றேடும் கணைகளைப்போலவிசைகொண்டு
தாவிப்போயது அந்தகோபுரம்பாதலவளையில் அழுந்தியதைப்பார்க்கு
மிடத்திற் பூர்வத்திற் பிரமனைவஞ்சித்து சதுர்வேதங்களையுந் திருடிக்
கொண்டுபோய்க் கடலில்மறைந்திருந்த சோமுகாசுரனை விஷ்ணுவான
வர் மச்சாவதாரங்கொண்டு அக்கள்ளனைப்பிடிக்கப் பாதலத்திற்சென்றதை
ப்போலவிளங்கியது, அழற்கொழுந்தைப்போலஅடிபருத்துநுனிசிறுத்
தோங்கியிருந்த கோபுரவாயலிற்பதிந்திருக்கும் நவரத்தினங்களினிடகா
ந்தியானதுவீசுவதைநிதானிக்குமிடத்திற்கருங்கடலினிடத்தடங்கியிரு
க்கின்ற வடவாமுகாக்கினியினது அழல்பரந்து நீரில்உலவுவதைப்போல
க்காட்டவும் கடல்நீர்கொதிப்பெடுத்து மேலோங்கிவிழுந்திவலைகளான
வை சமுத்திரம்அனலாயிற்றென்றெண்ணி தேவர்க்கள்பரிவாய் வானக
ங்கையையிறைத்து ஆற்றுமாறுபோலக்காட்டவும் செம்மணிகள்நாகரத்
தினங்களின் கிரணங்கள்கடலெங்கும் பரந்திருப்பதைதாமரைக்காடெ
ன்றெண்ணி தேனையுண்ணவிருப்புற்று வண்டினங்கள்பறந்துவந்துபா
ர்த்து வெட்கித்திரும்பவும் அம்மணிகள்சொலித்திருப்பதை மாம்சங்க
ளெனநினைந்து காக்கைபருந்துகூளிகளாதிய பறவைகள்களித்துண்ண வி
றங்கிப்பார்த்து இதுஅக்கினி அக்கினியென்றஞ்சி வருந்தி யிரைச்சலிட்
டுச்சிறகுகளைவிரைவாகவீசியோடவும் கோபுரம்விழுந்தஅதிர்ச்சியைக்கே
ட்ட பாதலவாசிகளாகிய நாகங்கள்திடுக்கிட்டு எக்காலத்திலுமில்லாதபே
ரிடிவிழ வேண்டுங்காரணமென்னேவென் றேங்கித்தம்மினத்தவரைக்கூ
ட்டிக்கொண்டு அப்புறப்பட்டுப்போகவும் கோபுரத்திற்பதிந்திருந்தந
வமணிகளின் காந்தியானது மேலிட்டுவீசுவதைக்கண்ட பேதமைப் பா
லகராகியதேவகன்னியர்கள் ஐஐயோயிதுவரையிற்சமுத்திரமானதுநீரொ
ன்றிருந்தனம் பூதர்களெறிந்த யிந்தகோபுரந்தாக்கிய மாத்திரத்தில் மா
ர்புகிழிந்து உதிரம்பெருகுகின்றதாகக்காணுகின்றது இதற்கும் பிராணி
களைப்போல உடலுண்டோவென்று தம்மில் வசனித்து வேடிக்கை பா
ர்க்கவும்யிதுவுமல்லாமல் மதாங்காரசெற்வத்தினால் வேத வொழுக்கங்க
ளையும்உலகநடைகளையும்நினைந்துநடந்துகொள்ளாமல்தினவாட்டிய
லைத்துத்திரிகின்றவர்களுக்குத்தெய்வீகமாய்க்கேடுகாலம்சம்பவித்துமங்
கிநாசப்படுவதைப்போல அந்தகோபுரநிலைகளிலிருந்து போராடிவந்த
ராட்சதவீரர்கள்அத்துடன் கடலிற்படிந்து வெளிவரக்கூடாமையால்மூ
ச்சுதிணறி வெகுகாலங்களாகக்கொன்று பண்டிநிறையத்தின்றுவந்தமச்

சராசிகளுக்கு ஆகாரமாய் மாண்டனர், இவ்விதமாக மகம்மேருவைப்
போலவானத்தையளாவ ஓங்கியிருந்தகோபுரமானது அளவற்றராட்சதர்
களுடன் வேகமாய்விழுந்தபடியால் மகாமச்சங்கள் திமிங்கிலமுதலிய ச
லசரங்கள்மலிந்திருக்கும் சமுத்திரசெலமானதுபெருக்கெடுத்தோடி நக
ரத்துக்கரணுகவிருந்த மதிலைவளைந்துதெருக்களிற்பிறவேசித்துமாடமா
ளிகைகளையழித்து மதிலையிடித்துயினாததுமேகங்கள் அந்நீரைவிரும்பி
க்கவியும்படிக்குப் பெருகிய வெள்ளத்தைப் பார்க்குமிடத்தில் வெற்றி
வேலாயுதக்கடவுளினது பூதப்படைகளைப் போலக்காட்டியது, இதுவும
ல்லாமற் கருங்கடலெனப்பெயர்கொண்ட நாம்வளைந்திருக்கின்ற பூம
ண்டலத்திற் பெரியோர்கள்மகத்துக்கள் தெய்வபத்திபூததயவுமுதலிய ந
ல்லொழுக்கங்களைப்பெற்ற புண்ணியசீலர்கள்வாசஞ்செய்யும் நகரங்கள்
பட்டணங்கள் கிருமங்கள் சிற்றூர்கள் யிப்படிக்குச் சொல்லும்படியா
கிய பதிகள்பலவுண்டுஅதுகளின்வளங்களினும் சிறப்புகளினும் செல்வ
ங்களினும் பதின்மணங்குசிறந்ததாய் கொடியபாதகர்வாசஞ்செய்யும்
யிந்தமயேந்திரபுரியானது அகண்டசாம்பிருச்சியவைபவங்களையும்சொ
ற்ணமயமாய்நவரத்தினகாந்திகளை வீசியிருக்கும் மாடமாளிகைமண்டப
மாகியவளங்களையுங்கொண்டிருப்பதாகச்சகலரும்புகழ்கின்றனர், அந்த
விநோதங்களை நாமும்பாத்துநிச்சயிக்கவேண்டுமென்கின்றகளிப்பினுற்
கடலானதுபெருகிபட்டணவீதிகள்முதலானயிடங்களிற்புகுந்துபுகுந்து
சோதித்துத்திரிவதைப்போலவும்மேலும்நம்மிடத்திற்புத்திரபாவகமாக
வாசஞ்செய்கின்றமச்சராசிகளை அநீதமாசநாள்தோறும் பிடித்துத்தின்
றுகொழுத்திருக்கின்றபாதகராகியராட்சதர்கள்யிதுபரியந்தம்எதிரின்றி
வீறியிருந்தனர், இக்காலத்திற் பாலசுப்பிறமணியக் கடவுளினுல் விநாச
காலம்நேர்ந்தபடியால் நாமும்ஒருகைபார்ப்போமென்றெண்ணி மே
விட்டலைப்பதைப்போல வீதிகளிற்பாய்ந்து எதிர்த்தராட்சதர் புத்திரமி
த்திரகளத்திராதிகளுடன் அலைத்துச்சின்னபின்னப் படச்சாடி வருத்தவு
ம் இவ்விதமாகச்சமுத்திரம்கொதிப்பெடுத்துப் பொங்கியெழுந்தோட
த்தக்கதாக நவரத்தினமயமாகிய கோபுரமானதுகடலினிடத்தில் முழுகி
ப்போனகாலத்தில் அதைப்பற்றி வளைந்திருந்தயொன்மதில் எப்படிக்
குக்காட்டுவதெனிற், புசபெலபாரக்கிறமசாலியாய் சத்துருக்களுக்கு வ
யிரியாய்செங்கோன்மைமுறையேநடாத்தி வாசஞ்செய்திருந்த அரசனி
றந்தகாலத்திற் சகலவளங்களுமொடுங்கி அழகுகுலைந்துபார்க்கப்பயங்
கரமாயிருக்கும் பட்டணத்தைப்போலவும் மங்கிலியமற்ற பெண்களை
யொத்தும்மூக்கில்லாத சுந்தரமுள்ளவனைப்போலவும் விளங்கியது, இப்
படிக்கழகழிந்துமங்கியிருக்கின்றதறுவாயிற்பூதப்படைகள்வீராவேசங்

களுடன்சிலரோங்கி வானத்தையளாவஓங்கியிருந்தவடபாரிசமதிலைத் தங்கள்வலியகால்களைக்கொண்டு உதைத்தகாலத்தில் ஊழிகாலத்தெழும்பிரசண்டமாருதமோதலிற்பட்டு அதப்படும்சக்கிறவாள பற்வதத்தைப்போலக் கடைகாலுடன்சாய்ந்து முன்னம்விழுந்த கோபுரத்துடன் சமுத்திரத்திற்சேர்ந்தது அக்காலத்திற்கருங்கடல்பட்டவருத்தத்தையின்னவிதமெனச்சொல்லிமுடியாது இப்படிச்சுமதி லதைப்படக்கண்ட பூதவீரர்கள்கெக்கலி கொட்டிக்கொண்டு செந்தாமரை வெண்டாமரை அல்லிமுதலிய புஷ்பசாதிகள்பெருத்து மதுரமாகியசெல சமற்திகொண்டிருக்கும்தடாகத்திற்பலமதயானைகள் விழுந்துகலக்கி யழிப்பதைப்போலபட்டணத்துக்குள்ளேபிறவேசித்து புகமுடிவிற்கடல்களனைத்தும்பெருகி புவனசராசரங்களிற் பரவுந்தன்மையாய் விசாலமாய்நீண்டிருக்குந்தெருக்களிற்சென்று எதிர்ந்தராட்சதர் முதலானவர்களைக்- குத்தியும்-- யிடித்தும்-உதைத்தும்- தட்டியும்- முட்டியும்- இவ்விதத்தில் அல்லோலகல்லோலப்படச்சாடிப் பலநிலைகளைப்பெற்றதாய் சொற்னத்தினாலும்நவரத்தினங்களினாலும் சந்திரகாந்தப்பாறைகளினாலும்பளிங்கினாலும்சித்திரவிசித்திரங்களாகச் சோடித்திருக்கின்ற மேடைகள்உப்பரிகைகள் மாளிகைகள் முதலியதுகளை ஒவ்வொருகரத்தில் ஆயிரம் பதினாயிரக் கணக்கில்வாரிபெறிந்தும் உதைத்து நிரவியும் கற்பகம் பாரிசாதம் மல்லிகை முல்லை யிருவாட்சி சண்பகமாதிய பரிமளமிகுத்த புஷ்பசாதிகள் நிறைந்தநந்தவனங்கள் காவுகள்சோலைகள்யிவற்றைப்பிடுங்கிப்பிசைந்தாகியும் தடாகங்கள்குளங்களைத்தூறந்து நீரைப்பெருக்கியும் சந்தனம்-அகில்மந்தாரைபுன்னைமுதலிய தருக்கள் நிறைந்த தோப்புகளைமுறித்துப் பட்டணமெங்கனும் அதலகுதலப்படவீசியும் யிப்படிக்குச் சாடுமுன்னிலையிற் பெருத்தெழுந்ததுகளானது வானத்தெழுந்து சூரியமண்டலத்தை மறைத்துயிருளைக்காட்டவும் புரசெனங்கள்ஒருவர்மேலொருவர் விழுந்து பெண்டுபிள்ளைகளைக் கரங்களிற்பற்றி யிழுத்துக்கொண்டு அப்புறப்பட்டோடியொளிக்கவும் பட்டணம்யிப்பாடுபட்டதைப் பூதநாயகர்கள் கண்டுமனங்குளிர்ந்து கோபமாறி நாம்தகாதகாரியங்களைச் செய்திருக்கின்றனம் எமதுகற்தனாகிய பாலசுப்பிறமணிய தேவரைச்சூழ்ந்து வணங்கிப்போற்றியிருப்பதை மறந்து யிந்தகொடும்பாதகர் வாசஞ்செய்யும் நகரத்தில்வந்திருப்பது நம்போலிகளுக்கடாதெனத் தீர்மானித்துத்தங்களைப்போலவே கோபாவேசங்களைத்தணிந்து திரும்பியபூதப்படைகளைக்கூட்டிக்கொண்டு அந்தவெல்லையைத்தாண்டி செயவுச்சாகங்களுடன்கெக்கலிகொட்டிக்கொண்டுவந்து சிவகுமாரனைச்சூழ்ந்தனர், அவர்கள்செய்கைகளைத்தெரிந்து குமாரதேவர்கிருபாநோக்கம் பாலித்தவராய்

பிரமன்- விஷ்ணு- இந்திரனாதிய தேவர்க்கள்நெருங்கிவரவும் வீரவாகு
தேவர்மற்றத்துணைவர் போற்றிப்போகவும் படைவீரர்கள் களித்துநட
க்கவும் செயசாலிகளாகிய இரண்டாயிர வெள்ளம் பூதசயின்னியங்களு
ம்கடல்பெருகியதைப்போல யிரைந்துவரவும் செயபேரிவெற்றிச்சங்க
ம் சின்னம்யித்தகைய மங்கலவாத்தியங்கள் தாம்தாமென்றதிரவும் ரண
க்களத்தைக்கடந்துபோய்விசாலமாகச்சோதித்திருக்கின்றபாடிவீட்டை
ச்சேர்ந்துசேனாத்தலைவர்பூதப்படைகளுக்குத்தத்தமதிடத்தைச்சேர்ந்துக
ளித்திருக்கும்படிக்குச் செலவுகொடுத்தனுப்பிவிட்டு இந்திரனாதியதேவ
ர்க்களுந்துணைவருஞ்சூழ்ந்துபோற்றிவரத்தமதாலயத்தில்விளங்கும்நவ
ரத்தினமயமாகிய சபாமண்டபத்தைச்சேர்ந்துபிதாவானவர்திருக்கயிலா
யச்சபையில்விளங்கும்சிங்காதனத்திலெழுந்தருளியதைப்போலக்குமா
ரதேவர்நவரத்தினமயமாகியபீடத்தில்வீற்றிருந்ததறுவாயிற் பகற்போ
துகழிந்துஆயிரங்கிரணங்களையுஞ் சுருக்கிச்சூரியபகவான் மேற்றிசையி
ற்றோற்றும் அஸ்தமானகிரியிற்சேர்ந்து மறைந்தனர், அதெப்படிக்கிரு
ந்ததெனிற் கொடியசெய்கைகளைப்பெற்றிருந்த மகாபாதகராகிய ஆயிர
வெள்ளம்ராட்சதரும் கடினசித்தத்தைவாய்ந்தபடைத்தலைவரும் மாண்
டகாலத்தில்அவர்கள்தேகத்தில்நமதுகிரணங்கள்பாய்ந்தகாரணத்தினால்
ஆசூசப்பட்டது ஆதலால்ஸ்நானம்பண்ணிஇதனைப்போக்கிக்கொள்ளவே
ண்டுமெனநினைந்து எழுபுரவிகளைப்பூண்டு ஒற்றைவண்டிலையுடைய தே
ரைத்துரத்திக்கொண்டுபோய்மேற்றிசைக்கடலில்முழுகியவனைப்போலக்
காட்டியது- சவுனகாதிரிஷிகளே, இந்திரனாதிய தேவர்க்கள் குறைபாடு
களைத்தவிர்த்து எதாப்பிரகாரம் பொன்னுலகவாழ்விலிருத்த உத்தேசித்
திருக்கின்ற குமாரசுவாமியார் சூரனைவென்று பாசறையிற்சேர்ந்தவரா
யிற்சொன்னோம் இனிவீரமாமயேந்திரத்தில் ராசாதிராசன்போனபின்பு
நடந்த சரித்திரங்களையும்சேழ்ப்பிராகவென்றுசூதபுராணிகர் பேசுவதா
யினர்மேற்குறித்தபடிக்குச்சூரபதுமன்யாவர்விழிகளுக்குந்தோற்றாம
ல்மறைந்துபோய் மயேந்திரபுரிமத்தியில்விளங்கும் தன்நகரத்தைச்சே
ர்ந்தவுடன் கோடிசூரியப்பிரகாசமாய் விளங்கிக்கொண்டிருக்கும் சபா
மண்டபத்துக்குபபோய்மந்திரிகளுடன்கலந்து மந்திராலோசனையைச்
செய்யாமல்மன்வாட்டத்துடன்பட்டபுதேவியாகியபதுமகோமளைவாச
ஞ்செய்யும்நவரத்தினமயமாகிய அந்தப்புரத்திற்சென்று பொன்மயமா
ய்ஆணிமுத்துகளினாற்சோதித்திருக்கின்றபடுக்கைஅறையிற்சிரோரத்தின
தீபங்கள்நாற்புறங்களிலும்விளங்கிக்கொண்டிருக்கவும் அளவற்றபொ
ற்பிறதனமகள் வெண்சாய்மனாசள்ஆலவட்டங்களைவீசவும் வெள்ளிலைப்
பாக்குயிவற்றை வேண்டும்போது கரங்களிற் கொடுத்துவரவும் பணிப்

ளாச்சிதறவும் பரிமளமிகுத்தபுஷ்பமாலைகளைப்பொற்றட்டுகளில்நிறைத்துத்தாங்கிநிற்கவும் சந்தனத்தைலவகைகள் கஸ்தூரியிவற்றைச்சொற்ணவட்டைகளில் நிரப்பிஏந்தியிருக்கவும் வெண்பட்டினாலும்முத்துகளினாலும் அலங்கரித்திருக்கின்ற கொடையைத்தாங்கிநிற்கவும் வஸ்திரத்தொங்கல்களைக்கொண்டு சிறுகாற்றெழவீசவும் பணிதிகள்பொன்னுடைகளைத்தாங்கியிருக்கவும் யிவ்வித வைபவங்களின் மத்தியில் ரத்தினகசிதமாயிருக்கின்ற பவழக்கால்கள்மரகதச்சட்டம்யிவற்றினாற்செய்யப்பட்டுபட்டுக்கச்சைசையைப்பிகிந்து -இலவம்பஞ்சு -செம்பஞ்சு- வெண்பஞ்சு- மெல்லியமயிர்- அன்னத்தின்யிறகு- யிவற்றைச்சீர்படுத்தி வெவ்வேறாகச்சேர்த்தபஞ்சணைமெத்தையைப்பரப்பி அனிச்சமலர்முதலிய மிறுதுவாகிய புஷ்பசாதிகளைக்காம்புமுதலியகுற்றங்களைப்போக்கிய யிதழ்களைத்தூவி பனியினும்வெளுத்தறவசல்லாவைவிரித்து அலங்கரித்துவிளங்கும்அம்சதூலிகாசயனத்தின்பேரில்பொத்தெனவிழுந்து தன்மனதுக்கினியபதுமகோமளையைக்கலந்து குலவிவார்த்தையாடமனமில்லாமலும்மற்றதேவியரைப்பார்க்கச் சகியாமலும்யாவருடனும் களித்துப்பேசவிரும்பாமலும் ஸ்தானஞ்செய்துநித்தியப்படி அந்திக்கடனைக்கழிக்கநினையாமலும் அறுசுவைகளினாற்சமைத்திருக்கின்றபோசனத்தைக்கொள்ளயிச்சையற்றவனாய் உறக்கமற்றுயாம்யைப்போலப்புரண்டுசமர்க்களத்திற்சிவசுப்பிரமணியதேவரால் தான்மானபங்கப்பட்டதை நினைந்துநினைந்துமனம்வெந்துவாடி மேல்நடக்கவேண்டிய போருக்குத்தக்க தந்திரங்களை ஆராய்ந்து தாமரையிலையிற்பட்ட நீர்த்துளியைப்போல மனம்நிலை பெறாமல் அலைந்துகவலைகொண்டிருக்கின்றதறுவாயில் யிச்சம்பவங்களைத்தெரிந்த தூதர்கள்வேகமாயோடி வானத்தையளாவி நவரத்தினகாந்திகளைவீசிச்சொலித்துக்கொண்டிருக்கும் பானுகோபன் அரமனையைச் சேர்ந்து ராசகுமாரனைக்கண்டுபணிந்து வாய்புதைத்துக்கொண்டு அசண்டமண்டலாதீஸ்பரானாகியசூரன் பலவெள்ளஞ்சேனைகளுடன் சிவகுமாரன்மீதிற் சண்டைக்குப்போனதும் கொடியபோரைச்செய்து சதுரங்கப்படைகளையும் மாளக்கொடுத்து கிரீடமுதலியராசசின்னங்களையிழந்துவலிகுன்றி யாதொருதுணையுமில்லாமல் மறைந்துரணக்களத்தைவிட்டு பட்டணத்தில்வந்துபள்ளியறையிற்சேர்ந்திருப்பதையும் சவிஸ்தாரமாகவிண்ணப்பஞ்செய்புமுன்னிலையில் தான்முதனாள்பட்டபங்கத்தையும் பகைவனைச்செயிக்கத்தக்க தீர்மானங்களையும் ஆசிரியன்உபதேசித்த மந்திரத்தைப்போல எண்ணமிட்டிருந்த பானுகோபன் தூதர்கள் பேசியவாசகம்விஷத்தைப்போலச்செவிகளிற் புகுந்தவுடன் ஆறியிருக்கின்றதீயில் நெய்யைச்சொரிந்ததைப்போலச் சற்றுதாபரித்திருக்குமனமானது துக்கசாகரத்திலழுந்

திமானமென்னும்தீயானது வளர்ந்துகொளுந்திவாட்டச் சரீரம்புழுங்கி
வெயர்க்கப்பெருமூச்செறிந்து யெண்ணாதெல்லாமெண்ணிவருந்திபிதா
வைக்கண்டு தேறுதலைப்பேசிவரநினைந்துநவரத்தினகசிதமாக விராலின்
றபீடத்தைவிட்டெழுந்து துரிதமாகப்போய்ச் சூரன்வாசஞ் செய்கின்ற
நகரைச்சேர்ந்து ரத்தினக்காந்திகளையடக்கி விளங்குந் தங்கத்தகடுகளினா
லும்பளிங்குப்பாறைகளினாலும் சுவர்ப்புறங்களைத்திருத்திதளவரிசைகளை
ப்பரப்பிவிசாலமாயிருக்கின்ற பள்ளியறையைச்சேர்ந்து பற்பலயோச
னைகளை நினைந்துநினைந்து படுக்கைப்பொருந்தாமற் புரண்டுபுரண்டுபள்
ளியிலிருக்கின்றபிதாவைக்கண்டுபணிந்தெழுந்து கரங்களைக்கூப்பிக்கொ
ண்டுஇதனைச்சொல்லுவதாயினன்-ஐயனேகேட்டருள்க, தேவரீர்நேத்தி
யத்தினம்அடியேனைத்தருவித்து நமதுபகைவரைவுயித்தியக்களத்தில்வெ
ன்றுவரும்படிக்குக் கட்டளையிட்டனுப்பிநீர் அவ்வாறேபலவெள்ளம்ரத
கஜதுரகபதாதிகளுடன்போய்எதிரிகளை வளைத்துக்கொண்டுஅகோரமா
கியபோரைச்செய்துபூதப்படைகளையும் சேனைத்தலைவரையும்சின்னபின்
னப்படச்சாடும்போது பாலசுப்பிரமணியனைத்தவிர மற்றவீரவாகுஅவ
ன்துணைவர்வந்தெதிர்த்துப்போராடுமுன்னிலையில்அதிககோபம்பிறந்து
மோகனாஸ்திரத்தைச்செலுத்திஒருவரன்றியிற்சகலரையும்ரணக்களத்திற்கி
டத்திசெயசாலியாய் யிவடத்திற்குவரவிருந்தபோது பாசறையிலிருந்த
குமாரன் ஒருதிவ்வியபாணத்தைத் தூண்டினன் அதன்வலிக்கென்பாணந்
தாபரிக்கமாட்டாமல் நடுநடுங்கித்தன்வீரமழிந்து அப்பிறையோசசமா
கத்திரும்பிவிட்டது உடனேபிரேதங்களைப்போலவிழுந்துகிடந்தசகல
ரும்சீவித்தராய்வீராவேசங்களுடன்கெக்கலிகொட்டிக்கொண்டெழுந்த
காலத்திற்றான் பாசுபதத்தைச்செலுத்த யெத்தனப்படுவதைத் தெரிந்
துஅந்தப்படையைநானெடுத்துப்போகாத குறையினால்மறுதினம்சர்வ
சாக்கிரதையுடனும்போய் செயப்பிரதாபத்தை யடைந்து வரலாமென
க்கருதி யிவடம்வந்துவிட்டேன் ஆனால்யிச்சம்பவங்களைத்தேவரீருடன்
சொல்லுவதற்கு மனங்கூசிமறுதினம் சிவகுமாரனையும்நவவீரர் இலக்க
ர்படைத்தலைவர்கள் பூதவெள்ளங்களனைவரையும் என்னிடத்திலிருக்கின்ற
திவ்வியபாணங்களினாலும் மாய்கைப்பெருக்கினாலும் அதாஅதப் படுத்
தி பகைவர்பூண்டில்லாமற் களைந்தபின்பு அந்தசெய வார்த்தையை தேவரீ
ருக்குத்தெரிவிக்கும்படிக்கு நினைந்து அதற்குவேண்டும்யெத்தனங்களை
ஆராய்ந்துகொண்டு யிராக்காலமொழிந்து எப்போதுபொழுது விடிய
ப்போகுதென்றுயெதிர்பார்த்திருந்துசூரியனுதையகாலத் தெழுந்துபொ
ற்கோலத்தைத்தாங்கி சகலாயுதபாணியாய் பகைவரைவெற்றிபெற்று வரு
வதற்குப்பிறையாணப்பட்டு அரமனையைக்கடந்து வெளிவந்தகாலத்தில்

அதற்குமுன்னமே தேவரீர்சாக்கிறதைப்பட்டு சதுரங்கச்சேனைப்பெரு
க்குகள் புடைபரந்துவர சமர்க்களத்தைநோக்கிப் போனதாகக் கேழ்வி
ப்பட்டு சிவபிரான்கடாட்சவிட்சண்ணியத்தினாற் சலனமற்றவச்சிர திரே
கத்தைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களுக்குஞ் சக்கிறவர்த்தியாகவிரு
க்கப்பட்டதேவரீர்தம்மிடபேரிலெதுத்துவந்தவர்களைச்செயம்பெற்று
த்திரும்புவதற்கு யாதொருஉதவிகளையும் வேண்டாதசூரனென்பதுஎல
க்குநன்றாகத் தெரிந்திருக்கின்றபடியால் திரும்பிஅரமனையைச்சேர்ந்து
ஆசோதைகொள்ளவிருந்தேன் தேவரீரிடத்தில் நேத்தியத்தினம் செலவு
பெற்றுப்போனபின்பு யிதுபரியந்தம்நடந்தசேதிகளிதுவாகும் ராசாதி
ராசனே அடியேன்சண்டையைக் குறித்துப்போய் மீண்டகாரணங்களை
விசாரியாமல் மந்திரிபிறதானிகளுடன் கலந்துயோசியாமலும் என்னை
யாவதுகூட்டிக்கொண்டுபோகாமல்எதையும்பாராட்டிப்பாராமல்கணக்
கிறந்தசேனைப்பெருக்குடன் ரணக்களத்தைச்சேர்ந்துயித்தகையமனவரு
த்தத்துடன்மீண்டீர் யிக்காரணம்தம்மையொத்தசக்கிறவர்த்தியின்பெரு
மிதத்துக்கடுப்பதோகணக்கிறந்தவீராதிவீரர்களிருக்க அவர்களில்யாரை
யாவதனுப்பி பகைவரைவென்று செயசாலியாயிராமல்தாமே உயித்திய
த்தைக்குறித்துச்சென்றபடியால்நமக்குப்பயந்திருந்த தேவர்க்களுக்கு
க்களிப்பும் அவுணருக்குமனவருத்தமும்இந்திரனுக்குச்சந்தோஷத்தை
யும் பெறச்செய்தீர் சிவகுமாரனாகிய பாலனையும் பூதகணங்களையும் ஒரு
பொருளாகமதித்து ராசாதிராசனே தேவரீர் சண்டைக்குப்போவது தம்
மையொத்தவீரனுக்கடுப்பதோ ஆயிரத்தெட் டண்டங்களை வென்றபுச
பெலபராக்கிறமங்களையும் சகலரும்பணிந்துபோற்றுங் கீர்த்திப்பிறதாப
ங்களைப்படைத்துச்சூரனெனப்பேர்பெற்றிருக்கின்ற நீர் அபலனான சிறு
வனுடனெதுத்து உயித்தியங்களைச்செய்து வென்றபோதினும் தமதுபு
கழுக்கடாதுயாவரும் சூரனாகவிருப்பவன் சுலபகாரியத்திற் பிறவேசிக்க
லாகுமோவென்றுயிகழ்ந்துபேசுவர்முடிந்துபோனகாரியங்களைக்குறித்
துப்பேசுவதிற்பயனில்லைஇனிநடந்துகொள்ள வேண்டுவதைக்குறித்துப
ரிசோதித்து ஒருகாரியத்தைநிதானிக்க வேண்டியிருப்பதால் அடியேன்
தேவரீருக்குப் பிள்ளையாகவிருந்த போதினும் எனக்குத்தோற்றிய தொ
ன்றைச்சொல்லுகிறேன் அதைத்தடுத்துவிடாமல் அங்கீகரிக்க வேண்டு
ம்அதாவது இவ்விரவுநீங்கியவுடன் நானேபோய் பாலசுப்பிற மணியன்
முதலாகிய நமதுபகைவரை மடக்கிக்கொண்டு சின்னபின்னப்பட வாட்
டிசெயங்கொண்டுவந்து தமதுகோபதாபங்களை ஆற்றுவேன் அதற்குச்
செலவுகொடுக்கவேண்டும் மேலும் உயித்தியகளத்திற் பார்பதிதனையனை
யலைத்துத்துரத்துவதையும் அவனுக்குத்துணையாகவந்திருக்கின்ற நவவீர

ர்கள் இலக்கர் படைத்தலைவர்கள் பூதவெள்ளங்கள் இயங்கிஅதாஅதப் ப
டுவதையும் தூதர்கள்கண்டு வந்து தேவரீருக்கு விண்ணப்பஞ் செய்யக்
கேட்டுமகிழ்ந்து யிவடத்திலிருக்கும்படிக்கு வேண்டுகிறேன் யிப்போ
து நான்குறித்தபடிக்குக் கூரியவேலைத்தாங்கிய பாலசுப்பிரமணியன்மு
தலாகியசகலரையும் வெற்றிபெறுமற் போவேனாகில் யிந்த பட்டணத்தி
ற்றிரும்பிவரவிரும்பேன் மகதயிஸ்பரியச்செல்வங்களையும்வேண்டேன்
அரசுரிமைகளையும்வெறுத்துமணிகள்சத்திக்கப் பாரித்திருக்கின்றவில்லை
யெறிந்துபோட்டு மரவுரியைத்தரித்து தண்டகமண்டலத்தைக்கரங்களி
ற்கொண்டு கானகத்தை நோக்கிப்போய் தவஞ்செய்யக்கடவனென்று
பற்பலவுறுதிகளைப் பானுகோபன்சொல்லுவதைச் சகல புவனங்களுக்கு
ம்எமனைப்போலவிருந்து கொடுமைசெய்துவரும் சூரபதுமன் செவிக
ளுக்கமுதமாகக் கேட்டவுடன் மனமகிழ்ந்து திரோகம்பூரித்து புசங்கள்
விம்மி வாகுவலயங்கள் தெறித்துப்போக முகமலர்ச்சி கொண்டவனாய்
பள்ளியைவிட்டெழுந்தெதிரில்கரங்களைக்கூப்பிநிற்கின்றகுமாரனிடத்தி
ற்பரிவாகப்பார்த்து யிதனைச்சொல்லுவான், அப்பாயிதனைகவனித்துக்கே
ழ்ப்பையாக-பிரமன் - விஷ்ணு - பரமசிவனெனப் புகழநின்ற மும்மூர்த்
திகளும்மண்விண்பாதலமுதலிய தலங்களில்வாசஞ்செய்கின்ற வீராதிவீ
ரர்களும் அஷ்டதிக்குப்பாலகர்களும் மற்றுமிருக்கின்ற அவுணர் இராக்
கதர்பகைத்து வந்தெதுத்துப் போர்செய்யினும் அவர்களை வெல்வதை
ப்பெரிதாக நான் நினைக்கவில்லை புசபெலபராக்கிறம சாலியாகிய என்த
ம்பிதாருகனையும் கிறவுஞ்ச பற்வதத்தையும் பிளந்துகொன்ற பகைவன்
வலியையழித்து செயங்கொள்வது மிகவுமரிதரிது பன்னிருபுயாசலங்க
ளைப்படைத்திருக்கின்ற பாலசுப்பிரமணியனுடனெதுத்துப் போராடவு
ல்லவர்கள் என்னைத்தவிர ஒருவரையுங் காணேன் அவனைச்சிறுவனென்
றெண்ணவேண்டாம் - மகாவிஷ்ணு - பிற்மதேவன் - இந்திரனாதியதேவர்
க்கள்செயப்பிறதாப சாலிகளாகவிருக்கப்பட்ட வீராதிவீரர்களை அந்தசி
றுவன் தீரத்துக்கும் விற்சாதுரியத்துக்கும் கரவேகத்துக்கும் புயவன்
மைக்கும்எவ்விதத்திலும்ஒப்புச்சொல்லப்படாது, ஆதலாற்கூரியவேலா
யுதம்விளங்கும் கரதலத்தைப்பெற்றிருக்கின்ற திண்ணியனை நானேயின்
னமொருதடவைபோய்க் கடினமாகியசண்டைமுன்னிலையிலாவது மாய
வித்தையினாலாவது கூடியவரையிற்போராடிசெயங்கொள்ளக்கடவேன்,
இவையன்றியில் யின்னமொரு அரிதானகாரியமிருக்கின்றது - அஃதென்
னையெனின், முன்னம்யிவடம் தூதாகவந்துநமதுபட்டணத்தைச்சின்ன
பின்னப்படச்சாடி பலவீரனாநாசஞ்செய்து போனபகைவன் இரண்டா
யிரவெள்ளம் பூதசேனைகளுக்கும் மற்றவீரர்களுக்கும் தலைவனாகவிருக்

கின்றனன், யிவனைச்சுலபமாக நினைக்கப்போகாது வீராதிவீரன் ரணரங்
கசூரனாகும் புயவன்மைகளுக் கொப்பற்றவன் சிங்கத்தையொத்த வலியு
ள்ளவன் ஆதலாற்குமாரனை சூரியோதயமானவுடன் சதுரங்கச் சேனைக
ளையுங் கூட்டிக்கொண்டுபோய் அவனைத்தனிமையிற் சண்டைக்காறைகூ
வியழைத்து மடக்கிக்கொண்டு உன்னாற்கூடியவனாயிற் படைவன்மையி
னாலும்வஞ்சகப்போரினாலும் திகைக்கும்படிக்குச் சாடிக்கொல்வையா
கில் அவனுடன்சண்டைமுற்றியதென் றெண்ணுவேனென்று அவன்தன்
முன்காட்டிய சவுரியபராக்கிரமங்களையும் போர்செய்யும் வல்லபங்களை
யும்விரித்துப்பேசி யிவன் உன்பங்கு பாலசுப்பிறமணியனை வாட்டித்து
ரத்துவது என்பங்காகும் ஆதலால்நீ தன்பேரில் உன்முழுப்பார்வையை
வைக்கக்கடவையெனச்சொல்லி குமாரனேசாக்கிறதையாய்ப்போய் வெ
ற்றிபெற்று மீளக்கடவையென்று விடைகொடுத்தவுடன்பானுகோபன்
பிதாபோதித்தகாரணங்களை நிதானித்துக்கொண்டு தேவரீர்திருவுளப் ப
டிக்கு நிமைப்போதிற் றூதனையும்மற்றவீரரையும் பூதப்படைகளையும்
முடித்துவருகின்றனனென வணங்கிச் சொல்லியகுமாரனிடத்திற் பரிவா
ய்ஆசீர்வதித் தனுப்பிவிட்டுப் போருக்குப்போகவேண்டுமென்று
அதற்கடுத்ததந்திர உபாயங்களை ஆராய்ந்துயாதித்திருந்தமனவருத்தங்க
ளைப்போக்கிப்பன்முபபடிக்குச்சந்தோஷித்தனாய் ராசபோகங்களையனு
பவித்திருந்தனன், பிதாவின்வாக்கியங்களைச் சிரசாகவகித்துத் திரும்பிய
பானுகோபன் தன்னாமனைக்கருகில் வருகின்ற தறுவாயிற் சரீரமெங்கு
ம்வியர்க்கப்பெருமூச்சுகளைவிட்டுக்கொண்டு பலதூதர்கள் ஓடோடியும்
வந்து ராசகுமாரன்பாதாரவிந்தங்களில்விழுந்து சேவித்தெழுந்து வா
ய்புதைத்து நாக்குழற யிச்சேதியைக் கேட்டருள்கவெனச் சொல்லுவதா
யினர், அகண்டமண்டலாதில்பரனாகிய நமதிறைவன் யிப்பகல் உயித்தி
யத்துக்குப்போய் மீண்டபின்பு சத்திராதியாகிய பாலசுப்பிறமணிய
யனைச்சூழ்ந்திருந்த பூதப்படைகள் வீராவேசங்களுடன் கொக்கரித்துக்
கொண்டுவந்து நம்மிடபட்டணத்தின் வடபாரிசத்தில் வானத்தை யளா
வ ஓங்கியிருந்த கோபுரவாயலை முத்திக்கைப்போட்டு ஆற்பாடங்களைச்
செய்தகாலத்தில்அத்தலத்திற் காவல்கொண்டிருந்தஅதிகோரனென்னுஞ்
சேனைத்தலைவன் றவுத்திராகாரமாகக்கோபித்து சதுரங்கப்படைகளைக்கூ
ட்டிப்போய் பகைவனைச்சின்னபின்னப்படச்சாடுமுன்னிலையில்பூதவீரர்
சிலரோங்கி ரதகெசதுரகபதாதிகளையும் அதாஅதம்பண்ணிக்கொன்றுசே
னைத்தலைவனையும் சொடியபோனைச்செய்துவாட்டியுங்கோபந்தணியாம
ற்பலநிலைகளைக்கொண்டுநவரத்தினமயமாய்நிற்கின்றகோபுரத்தைக்கடை
காலுடன் பறித்துபந்தைப்போலச் சமுத்திரத்தில் வீசியதறுவாயிற்குரு

வளிக்காற்றிலகப்பட்ட துரும்பையொப்பக் கரகொளச்சுழன்றுபோய்
தலைகீழாய் கருநீரில்விழுந்து உருத்தெரியாமல் பாதலத்திற்பட்டது அ
தைக்கண்டவுடன் சிவகணங்கள்கரங்களைக்கொட்டிக்கொண்டு சிங்கநாத
ங்கள் அட்டகாசங்களைச்செய்து வீரசிங்கங்களைப்போலச்சீறிச் சக்கிரவா
ளகிரிக்குச்சமதையாய் மேலோங்கி யிந்நகராவளைந்திருந்த பொன்மதி
லைக் கொம்மைகளுடன் கால்களைக்கொண்டுதைத்துப் பொடிப்பொடி
யாகத்தள்ளி நிலத்தில்நிரவினர், மேலும்பட்டணத்திற் பிறவேசித்து வ
டபாரிசத்திற் சொர்ணமயமாகியமாடமாளிகை மண்டபமுதலிய சிங்கா
ரங்களைப்பெற்றிருந்த பலவீதிகளையிடித்து தும்சப்படுத்தி அக்காலத்
திலெதிர்ந்தராட்சதவீரர்களனைவரையும் எமனைப்போலவளைந்துகொண்
டுசின்னபின்னப்படச் சாடி ஒருவருமெதிர்ப்பவரின்மையால் செயவுச்
சாசங்களைப்பாடி கெலிப்புடன்றிரும்பிதங்கள் பாடிவீட்டைப்போய்ச்
சேர்ந்தனர், ராசகுமாரனே ஒருபரியாயமாய்யிந்தநகரத்திற் பாதியிடிய
ட்டுக்குட்டிச்சுவர்களாகநிற்கின்றதுமிதுவுமல்லாமற்கோபுரத்தைப்பெ
யர்த்தெறிந்த அதிர்ச்சியினாற் கடல்நீர் கொதிப்பெடுத்தெழுந்து யிடிய
ட்டவாயலின்மூலமாய் உள்ளேபிறவேசித்து புரசெனங் களையும் நீண்ட
வீதிகளையும் அலைத்தகொடுமைகளைச்சொல்லிமுடியாது யிச்சம்பவங்கள
னைத்தையும் நிசதெரிசினையாகக்கண்டு வந்தனம் யிதுஉண்மையாகுமெ
ன்றநம்பிக்கையுள்ள தூதர்கள் விண்ணப்பஞ்செய்த காரணங்களைச் செ
விகளில் நாராசங்களைக்காச்சிச்சொருகியதைப்போலச்சுறுக்கிடக்கேட்ட
மாத்திரத்தில் மனம்வருந்திவிழிகள்சிவந்து தீப்பொறிகள்சிதறக் காலா
ந்தகனைப்போலக்கோபித்துபூதர்செய்கைவெகுநேத்திநேத்தியென நகை
த்துக்கரங்களைக்கட்டி நிற்கின்ற பலதூதர்கள்மீதில் விழிகளைப்பரப்பி நீ
ங்கள்விரைவிற்போய் நமதுமரபுக்குரிய தச்சனையித்தநிமிஷத்திற் கொ
ண்டுவரக்கடவீர்களெனக்கட்டளையிட்டமாத்திரத்தில் வாயுவேகத்தினும்
மனோவேகத்தினும் முடுகியோடி அவுணர்தச்சனைக்கண்டு ராசபரமேஸ்
பரனாகிய சூரபதுமன்குமாரன் பானுகோபமகாராசன் உன்னைவரநினை
ந்தனர், சீக்கிரமத்திற் போகக் கடவையென்னுஞ் சொல்முடிவதன்மு
ன்னம் வீரமாமயேந்திர புரியைச்சேர்ந்து ராசபுத்திரனைக்கண்டு வணங்
கிப்போற்றி அடியேனைத்தருவித்தகாரியத்தைப்பணித்தருள் வேண்டுமெ
ன்றுவிண்ணப்பஞ்செய்தகாலத்தில் நமதுபட்டணத்தைச் சூழ்ந்திருந்த
வடபாரிசமதிலையும் கோபுரத்தையும்நகரத்திற் சிற்சிலவீதிகளையும் பாத
காரியபூதர்கள்அழித்தனரெனக்கேழ்விப்பட்டனம் அவற்றினைப்பழை
யபடிக்கு விரைவிற்செய்தமைக்கக்கடவையெனக் கட்டளையிட்டமாத்
திரத்திற் சிற்பியானவன் மகாபாக்கியம் யிதோமுடித்தேனெனச்செலவு

பெற்றுநடந்தபின்பு வேகமுள்ள சிலதூதர்களைப்போக்கி வீரசிங்கத்து
க்குச் சமதையாய்ஒருவரும் நிகரற்ற புசபெலபராக்கிரமசாலியாகவி
ருக்கின்ற மாகாயனென்னும் சேனைத்தலைவனைத் தருவித்து நீபதினாயிர
வெள்ளம் ரதகெசதுரகபதாதிகளுடன் வடபாரிசத்தில்விளங்கும்கோபு
ரத்தைப்பதலமாகக்காவல்கொண்டிருக்கக் கடவையென ஆக்கியாபித்து
அவனுக்குவேண்டிய சிறப்புகளையுஞ் செய்தனுப்பினான், அதற்குமுன்
சென்றசிற்பியும் தான்கற்றிருக்கின்றசாஸ்திரவிதிப்படிக்குமனதில்நிச்ச
யித்தவனாய்உத்தரபாரிசத்திற்கிலப்பட்டிருந்தகோபுரம்மதில்வீதிகள்மு
தலியவற்றைமுன்னிலும்பதின்மடங்குசிங்காரங்களைக் கொண்டிருப்ப
தாகச்சோடித்துமுற்றியபின்புகட்டளைப்படிக்குச் சகலமுமாயிற்றென்
றுராசகுமாரனுக்குத்தெரிவித்து விடைபெற்று தன்பதியைச்சேர்ந்தனா
ன், ராசகுமாரன்பணிவிடையைப் பெற்றுப்போன மாகாயனென்னும்
சேனைத்தலைவன் தன்வசத்திலிருக்கின்றபதினாயிரவெள்ளம்ரதகெசதுரகப
தாதிகள் கடல்பெருகியதைப்போல யிரைச்சலிட்டுக் கொண்டு வரும்ப
டியாக நடந்து புதிதாகச்சோடித்துமுற்றியவடக்குக்கோபுரவாயல் முத
ல்நிலையில்வீற்றிருந்து சேனைகளை மதிற்பரப்புகளெங்கனும் காவல்கொ
ண்டிருக்கச்செய்து கண்ணிமையைப்போலத்தானும் யிடைவிடாமற் சு
ற்றிப்பார்த்துப் போற்றியிருந்தனன் - சவுனகாதிரிஷிகளே, மேற்குறித்த
காரியங்களனைத்தும் முடிந்ததறுவாயில் யிரவுநீங்கி ஏழுபச்சைக்குதிரை
களைப்பூண்டுஒற்றைவண்டிலையுடையதேரை அருணன் செலுத்திவர அதன்
மீது சூரியபகவான்வீற்றிருந்து உதையகிரியில் முளைத்தகாலத்தில் அவ
ரதுகிரணகாந்திகள்பட்டமாத்திரத்திற்கரியைப்பூசியிருப்பதைப்போ
லப்புவனங்களெங்கும் பரந்திருந்த யிருட்கூட்டமானதுகுன்றிக்குறை
ந்து அதப்பட்டுப்போயது அதுயெப்படிக்கிருந்ததெனில், ஒருவனுக்
குத்தான் முற்செனனத்திற் செய்திருந்தநல்வினை முயற்சியினாற்பேரறி
வுதோற்றியவுடன் அஞ்ஞானவிருள் பறந்தோடுவதைப்போலக் காட்டி
யது சூரியபகவானுதையமான காட்சியைப் பார்க்குமிடத்திற் சிறந்தகற்
பையுஞ் சுந்தரத்தையும் பெற்றிருக்கின்றயிரவென்னும் கன்னிகையிட
த்திற்காமுற்று ஆலிங்கனஞ்செய்து களிக்கவேண்டுமென்கின்ற மனோ
பிஷ்டத்தைக்கொண்டு அவளைத்தொடர்ந்து சேரவெண்ணிப் புறப்பட்ட
வனைப்போலஆயிரங்கிரணங்களைப்பரப்பி உலகங்களைவிளக்கி வெளிப்
பட்டனன்,

இவ்விதமாக யிராக்காலமானதுகழிந்து அருணோதயமானவுட
ன் பானுகோபனெழுந்து விதிப்படிக்குக் காலைக்கடன்களை முடித்துக்
கொண்டவனாய் முதல்நாள்பகைவரால் தான்பட்ட அவமானத்தை நினை
ந்துமனம்வருந்தி யித்தினம்சிலசகுந்த உதவிகளைத்தேடிப்போகவேண்
டுமென நிச்சயித்துப்பிதாமகளாகிய மாயையை வரும்படிக்குச் சிந்தித்
துப்போற்றமுன்னிலையிற் பாட்டியானவள் தட்சிணத்தில் யெதிரிற்றோ
ற்றி பேரனுக்கு ஆசிகளைச்சொல்லி என்னைக்கோறித்தருவித்தகாரணமெ
ன்ன துரிதமாய்ச் சொல்லக்கடவை யெனக்கேட்டவுடன் அவள்திருவடி
களிற் சேவித்தெழுந்துயிதனைப்பேசுவான், அடி ஆயா— பாலசுப்பிரம
ணியனுக்கும் நமக்கும்சண்டை நேர்ந்தகாரணத்தினால் முந்தாநாள்கா
லையிற்சதுரங்கச்சேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய் அகோரஉயித்திய
ங்களைச்செய்தேன் கடையிற்சண்முகன் தூதனுடன்சண்டை கொடுத்து
அவன்வல்லபத்துக்குச் சகிக்கப்படாமல் வலிகுன்றியபங்கப்பட்டு
த்திரும்பியகாரணத்தினால் மானம்பாதிக்கமிகவும்வருந்துகின்றனன்,சத்
திராதிகளுடன் கலந்துகொடியபோராச்செய்துவருங் காலத்திற்புறந்த
ந்தோடியவர்கள்பெறும் அபகிற்தியைப்படைத்துபழிக்குள்ளாய்வாடுகி
ன்றனன்,யிதைவிட இனிநான்பெறவேண்டியநிந்தைவேறொன்றுமில்லை
யிந்தயிகட்சியைச்சுமந்திருப்பதைப்பார்க்கினும்உயிரைவிட்டாலும்நன்
றாகவிருக்கின்றதென மனவாட்டத்துடன் முறையிட்டுக்கொள்ளுகின்ற
பேரனைப்பார்த்துஅப்பாகெடுமதி கண்ணுக்குத்தோற்றதென வழங்கிக்
கொள்ளுகின்றனர் அக்காரணத்தினால்யிப்படிக்கொத்ததுயரங்கள்வந்து
சம்பவித்தது அதென்னையெனில்,தேவதேவோத்தமனாகியபரமசிவனளித்
த அகண்டசாம்பிருச்சியச்செல்வங்களையனுபவித்துக்கொண்டுஉங்கள்கு
டைநிழலிற்பட்ட பூமியைப்பரிபாலனஞ்செய்துசுகத்தில்வாழ்ந்திராமல்
வேதவொழுக்கங்களைமறந்துதீனராகவிருக்கின்றதேவர்களையலைத்துதகா
தயேவல்களைக்கொண்டுபொன்னுலகத்தையுஞ்சாம்பலாக்கிக் கடையில்க
டனமாகியசிறையிலும்வைத்தீர்கள் யிதுவுமல்லாமல் இந்திரனைக்காடே
கெதியாகத் துரத்தியும் சிவபிரானைக் கருதித்தவஞ் செய்யவல்ல ரிஷிகள்
யோகிகள்செய்துவரும்விரதங்களைப்பங்கப்படுத்திவாட்டிதீராதபழிபா
தகங்களைத்தேடிக்கொண்டீர்கள்சிருஷ்டிதிதிசங்காரமென்னும்முத்தொ
ழில்களை நடாத்திவரும் திரிமூர்த்திகளையும் பகைத்துவிரோதங்களைச்சம்
பாதித்து மகத்துக்களாயிருப்பவர்கள் மனம்நொந்துவசைமொழிகளை
யாடவும்பெற்றீர்கள் யிப்படிக்குச்சகலரும் உங்களிடத்தில் விரோதித்தி
ருப்பராகில்எவ்விதத்தில் நீங்கள்செயமுண்டாய் வாழ்வீர்கள்தற்மமாக
ங்களுக்கிழிவாகிய கொடியசெய்கைகளையே முக்கியமாகவிரும்பிஎக்கா

லத்திலும் மீறிநடத்திவந்தபடியால் பழிபாதகங்களுக் காளாய் சகலசெ
ல்வங்களையும் பறிகொடுத்துமங்கும்நாள் நேர்ந்துவிட்டது அதற்குத்தி
ஷ்டாந்திரமாய் யிதுபரியந்தம் யெத்தகையரொனினும் கண்ணெடுத்து
ப்பார்க்கபயங்கரப்பட்டிருந்த யிந்தசிறந்தபட்டணத்தைப் பகைவர்மு
த்திக்கைபோட்டுக்கொண்டுவாட்டிக்கடினமாகியஉயித்தியங்களைச் செய்
ய அவர்களுக்குப்பின்னிடைந்துதோற்மையும்பெறலானீர்கள் அப்பாஉ
ங்களை நிந்திக்கவேண்டுவதில்லைவிதியின் முயற்சியை மதியினால்வென்றவ
ர்களொருவருமில்லைபுத்திகற்மத்தை யனுசரித்திருக்குமென்று பெரியோ
ர்கள்சொல்லுகின்றபடியால்வினாசகாலத்துக்கடுத்தவிபரீதபுத்திகளைஉங்
களுக்குக்கொடுத்து வருகின்றதுவிறுதாவிற்பலபலசொல்லியாகவேண்டு
வதில்லைகற்தன்செயலின்படிக்குநடக்கவேண்டிய காரணங்கள்முற்றுப்
பெறுவதற்குத்தடையிராது ஆகையால் என்னகாரியத்தை விரும்பி யென்
னைவரவழைத்தனை கேட்டதைத்தருவேன் விரைவிற் சொல்லக்கடவையெ
ன்று மாயைபேசி முடித்தவுடன் பானுகோபன் அவள்குறித்த நீதிகளை
யொன்றையும் யோசித்துப்பாராமல்மனக்களிப்புடன்யிதனைக்கேழ்ப்ப
தாயினன், முதல்நாளையஉயித்திய முனையில்என்னுடன் கொடிய போ
ராச்செய்து வெற்றிபெற்றுப்போயிருக்கின்ற வீரவாகுவையும் படைத்
தலைவரையும் பூதவெள்ளங்களையும் இத்தினம்சின்னபின்னப்படச் சாடி
யழிக்கவிரும்பி யிருப்பதால் அந்தசெயத்தைப்பெற்றுத் திரும்புகின்
றதற்குத்தக்க திவ்வியபாணமொன்றை தயைசெய்ய வேண்டும் பாட்டீ
யெனக்கேட்டதறுவாயில் அதற்கிசைந்து தன்சத்தியினால்ஒரு மகிமையு
ள்ள அஸ்திரத்தையுண்டு பண்ணிக்கொடுத்து யிதனைச்சொல்லுவாள் பேர
ப்பிள்ளாய் யிந்தபாணத்தை மந்திரபூர்வகமாகச்செலுத்துவையாகில்வீ
ரவாகுதேவர்முதலாகிய பகைவர்புத்தியைமயக்கி அறிவையழித்து பிரே
தங்களைப்போல நிலத்திற்சாய்த்துச்சேர்த்துக்கட்டிக்கொண்டு நீகுறித்
தயிடத்திற் பிரசண்டமாருதத்தினுங் கடுகிப்போய்ப்பதலப்படுத்திக்கா
த்திருக்கும் யிதன்வல்லப மிதுவாகுமெனத் தெரிவித்து அதற்குரியம
ந்திரத்தைவிதிப்படிக்கு உபதேசித்து மறைந்தனள், இப்படிக் கொத்த
மகிமையையுடைய மோகனாஸ்திரத்தைப் பெற்றவுடன் பானுகோபனுக்
குமனமகிழ்ச்சியுண்டாய் பின்னிட்டானென்னும்பழிப்புரைதனக்குநே
ர்ந்ததற்காக பாதித்துக்கொண்டிருந்த மனவாட்டத்தையொழித்து சரீ
ரம்பூரித்து புயங்களோங்கி வாகுவலயங்கள் தெறித்துப்போகத்தக்க
தாக சந்தோஷசாகரப்பெருக்கில் முழுகினவனாய் அந்தயிடத்தைக்கடந்
து பொன்னினாலும் மணிகளினாலும் சோடித்துமிகுத்தபிரகாசங்களைவி
சிவிசாலமாய் கோடானகோடி ராட்சதவீரர் காவல்கொண்டிருக்கும் ஆ

யுதச்சாலையிற்போய் வீரலட்சுமியைச் சேவித்துப்போற்றிக் கூரியஅல
கையுடைய பாணங்கள் நிறைந்திருக்கின்ற அம்புறாத் தூணிரத்தை மு
துகிலிறுக்கி முத்துத்தாழ்வடம் வயிரப்பதக்கம் சறப்பளி மோகனமா
லைகள்புரளும் அழகியமார்பில் அபேதவயிரக் கவசத்தைத்தரித்து கரசா
டுஅங்குலிப் புட்டில்களைமாட்டி தங்கக்கட்டுகள்பூண்டு யிருகுதைகளி
னும்மணிகள் சத்திக்கும் பாரித்தவில்லைத் தொழுதெடுத்துத் தோளில்
மாட்டி-பாசுபதாஸ்திரம்- நாராயணாஸ்திரம் -பிர்மாஸ்திரம் - வாயுவா
ஸ்திரம்-குபேராஸ்திரம்- வருணாஸ்திரம்- அக்கினியாஸ்திரம்-சூரியாஸ்
திரமுதலிய தேவர்கள் கொடுத்திருக்கின்ற திவ்வியப்படைகளையும்- வே
ல்-வாள்--சக்கரம்- தண்டம் பிண்டிபாலம் - தோமரம்- கப்பணம்- இ
வ்விதஆயுதங்களையும் சேகரித்துக்கொண்டு வெளிவந்து பட்டுவர் புகழ
கட்டியக்காறர் எச்சரிக்கைகளைச் சொல்லிப்போக வெண்சாய்மரைகளை
வீச தவளக் கொடைகளைப்பிடிக்க ஆலவட்டங்களை யசைக்க விருதுக்
கொடிகளைத்தாங்க பிள்ளாங்குழல் சின்னங்களூத அருகு தீவட்டிகள்
காட்டிச்செல்ல தேவகன்னியர்கள் மயிலையொப்ப நடித்துங் குயிலைநி
கர்த்துப்பாடியும்வர இவ்வித ராசஓலக்கங்களுடன் முகவாயலி னிடத்தி
ல்வரும்போது -மந்திரி-பிறதாணிகள் - சேனைத்தலைவர்கள் யெதிர்கொ
ண்டுவணங்கிப் பக்கங்களில் நிற்கின்றதறுவாயில் கரங்களைக்கட்டிக்கொ
ண்டுகாத்திருக்கும் தூதர்கள்மீதில் விழிகளைப்பரப்பி நீங்கள் துரிதமாக
ப்போய் நமதுசேனைகளைச் சேகரித்து வரக்கடவீர்களெனக் கட்டளையி
ட்டனுப்ப அளவற்ற தூதர்க ளோடினர், பின்பு காரியப்போனையனைத்
துநமதுதேரை அலங்கரித்துக்கொண்டு வாருங்கோளெனச்சொல்லிசபா
மண்டபத்தில் வார்த்தையாடியிருந்தான், முன்னம்பறந்த தூதர் அறிக்
கையிட்டவுடன் அளவற்றவெள்ளம் ரதகெசதுரகபதாதிகள் திரண்டுதத்
தமது தலைவர்களைச் சூழ்ந்துக்கொண்டு கடல்பெருக்கெடுத்தோடுவதை
ப்போல யிரைச்சலிட்டு அதிகவுச்சாகங்களுடன் வந்துசேர்ந்தகாலத்தில்
சாரதியானவன் பஞ்ச லட்சணங்களைப் பெற்றிருக்கின்ற புரவிக்கூட்ட
ங்களைப்பூட்டி நவரத்தினமயமாய் விளங்குகின்ற பாரித்ததேரை பட்
டாடைகளினாலும்- கொடை-கொடி- சரமணி முதலிய துகளைக்கொண்
டுஅலங்கரித்து கெற்கரத்தொனிகளுடன் துரத்திவந்து நிறுத்தியதறு
வாயிற் பானுகோபன் வெளிப்பட்டுவந்து செயாவிசையவாவெனப்பெ
ரியோர்கள் வாழ்த்தெடுப்ப பட்டுவர்புகழ சிங்கமானது பற்வதத்திற்று
வியதைப்போல உன்னதமுள்ள ரதத்திற்பாய்ந்து மண்டிபோட் டுளுக்
காந்து பாகனைக்குறித்து நமது ரதத்தை அதிவேகமாய் ரணக்களத்தை
நோக்கிச் செலுத்தக்கடவையெனக் கட்டளையிட்ட மாத்திரத்தில் வார்க

ளையசைத்துச் சவுக்கைக்காட்டி மணிகள்சத்தித்து வண்டில்கள் ககரொ
ன்றோட ராசவீதிகளிற் செலுத்துகின்ற தருவாயிற் புரசெனங்கள் ஆல
ங்களைச்சுழற்றிச் சுபங்களைப்பாடவும் பெரியோர்கள் அறுகு அட்சதை
களையிறைத்து செயமுண்டாகக் கடவதென்று வாழ்த்தவும் இந்தவேடி
க்கைகளைப்பார்த்துக்கொண்டு ராசகுமாரன் வருவதைக் கண்டமாத்திர
த்திற் பர்வதாகிருதியாய் உன்னதமுள்ள பதினாயிரவெள்ளம் தோரணித
ளும்- யிருப்புலக்கைகள் - எழுகுச் சங்கிலிகளை துதிக்கைகளிற் பற்றிக்
கொண்டு மும்மதங்களையும்பெருக்கி வீறிட்டு நீலகிரிகளைப்போலவிள
ங்கும் பதினாயிர வெள்ளம் யானைக்கூட்டங்களும் சுழிசுத்தங்களைப்பெ
ற்றதாய் நான்குபாதங்களினும் வெண்டயங்கள்கலிக்க அலைகளைப்போ
லத்தாவும் வேகமுள்ள பதினாயிரவெள்ளம் புரவிப்பந்திகளும் விழிகள்
சிவந்துகாட்டவும் யிடிகளைப்போலஉரத்துப்பேசியும்பாரித்துக்கறுத்த
திரேகத்தைப்பெற்று -பாசு- பல்லயம் - எறிவேல் - வாள்- கேடயம்-த
னுசு-இத்தியாதிய படைகளைத்தாங்கி பூமியதிரப் பாதங்களைப் பெயர்த்
துவைக்கும் செயசாலிகளாகிய யிருபதினாயிரவெள்ளம் ராட்சத வீரர்க
ளும்பிரளயகால வெள்ளம்போல யிரைச்சலிட்டுப்பரந்து பானுகோப
னைச்சூழ்ந்துக்கொண்டு நடக்கும்போ தண்டாகிய தூளிபடலமானது
மேகங்கள் செலத்தைக் கிறகிக்கவந்ததையொத்து சமுத்திரமெங்கும்ப
ரவிச்சேறுக்கியும் சர்வசங்காரகாலத்திற் பிறசண்டவாயுவின் மோதலிற்
பட்டுசேத்தசாகரங்களும் பெருகி எங்கும் பரந்ததைப்போல அஷ்டதி
சைகளினும் மற்றபுவனங்க ளெங்கனும்மூடிமாறுபடச்செய்யவும்போ
கின்றதருவாயில்-ரணபேரி- செயபேரி- தப்பட்டை- எக்காளை -வெற்றி
முரசம் -சங்கம்- சின்னம் -துத்தாரி முதலியதோற்கருவி துளைக்கருவி
கஞ்சக்கருவி நரம்புக்கருவி மிடற்றுக்கருவிகளெனச்சொல்லநின்றபதி
னெண்வாத்தியங்களும் கணகணென்ன முழங்குமோசையானது உலகங்க
ளனைத்தும் செவிடுபட்டு மருளும்படிக் கெழுந்தது, அதுவெப்படிக்
கிருந்ததென்றால், ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் ராசதானியாகவிருக்
கின்றயிந்தவீரமா மயேந்திரபுரியானது பெருகாலமாக அஷ்டலட்சுமி
களுங்குடிகொண்டு சகலசெல்வங்களையும்பெற்று நன்றாகவாழ்ந்தது, அ
ப்படிக்கொத்தபதிக்கு இக்காலத்தில் அழிந்துபோகுங்காலம் சமீபித்த
துசமீபித்ததென்னும் மனவருத்தத்தினாற் புலம்புகின்றதைப்போலக்கா
ட்டியது, இவையன்றியும் -பாலாக்கள்- ஈட்டிகள்- தண்டாயுதம்-கத்தி
-கேடயமுதலிய ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு யிருபாரிசங்களினும்
நெருங்கிப்போற்றிவருங் காவலாளமீறி அங்குசத்தினாற் குற்றிவருத்து
ம்பாகன்குறிப்பின்வழியிற்போகாமல்தானிச்சைகொண்டிருக்கின்றபெ

ஸ்யானைகள் தாகசாந்திக்குச் செலம்வேண்டி வாடுவதைக்கண்ட மதயா
னைகள்வீறிட்டுச்சென்று துதிக்கைகளைநீட்டி வானத்திற்பரவியிருக்கின்ற
மேகங்களைவாரிப்பிழிந்து மதுரமாகிய நீர்ப்பெருக்கைக் கொடுத்துக்க
ளிக்கவும் தத்தித்தாவிநடக்கும் வேகமுள்ளபுரவிகள் வானத்திற்றாவியு
ம்வேகங்கொண்டுபோகும் சூரியன் ரதத்திற்பாய்ந்தும் மலைகளினுச்சி
யில்மிதித்தும் பூவட்டமுற்றினும் வையாளிவந்தும் சமுத்திரத்தினிட
ங்களில் வட்டணைதிரிந்தும் பகைவராகிய பூதப்பெருக்கிற்றாவித்திரும்
பிவரவும் தயைதாட்சணியமற்ற ராட்சதவீரர்கள் அதப்பட்டதறுவாயிற்
அவர்களுக்குரிய தேவியர் மருண்டு திகைத்து இவ்விதமாகப் புலம்புவ
ரெனக்காட்டுமாறுபோலத் தோணிகள் கரகரென் றிரைச்சலிட்டோடவு
ம்ஆலகாலவிஷம் பல்உருக்கொண்டு அழலைவீசித்திரிவதைப்போல மை
யினுங்கறுத்திருக்கின்ற தேகத்தையும் அந்திவானத்தைப்போல விளங்
கும்செம்பட்டமயிரையும் பெற்றவர்களாய்ச் சூரியனை யொப்பச்சொ
லிக்கும்ரத்தினாபரணங்களைத்தரித்துப்பிறையைப்போல கோறதந்தங்கள்
விளங்க அக்கினிக்குச் சமதையாகிய விழிகளைப்படைத்து தீக்கொழுந்
தையொத்தசிகையைப்பெற்று பற்வதங்கள்கால்முளைத்தசைவதைப்போ
லபாரித்த தேகத்தைப் படைத்தவர்களாய் பளபளத்த அலகையுடைய-
வேல்-வாளாயுதங்களைத்தாங்கும் கரங்களைப் பிசைந்துகொண்டு யிடிக
ளைப்போலத்தட்டி முகங்களிற் கோபக்கனல்விளங்கவும் மேகசெற்சித
த்துக்குச்சமதையாக வசனித்தும் நேத்தியதினம் ராசாதிராசனுடன்வந்
தகாலத்திற் புறந்தந்தோடியவர்களைப்போலச் சண்டைகொடுக்கின்றத
றுவாயில் கலங்கிப்பின்னிடுவராயின் இந்தவாளுக் கிரையாக வெட்டியெ
றிவோமென்று சபதங்களைப்பேசிக்கொண்டு ராட்சதவீரர்கள் நடக்கவும்
இவையன்றியும் வானத்தையளாவிய தேரணிகளினுச்சியினும் யானைகளி
ன்மீதினும் ராட்சதர்கரங்களினும் விளங்குகின்ற துசபடங்கள்விண்ணு
லகத்தைத்தாவநிற்பதை யோசிக்குமிடத்தில் அதுகளைக் கொடியென்று
வசனிப்பதினாற் கற்பகத் தருக்களிற்படரத் தாவுவதைப்போலக் காட்ட
வும், இஃதன்றியும் விருதுக்கொடிகளும் சந்திரவட்டக்கொடைகளும்
ஆலவட்டங்களும் மகரதோரணங்களும் எங்கும் மூடியிருப்பதினாற் சூ
ரியப்பிறகாசத்தையடக்கி காடாந்தகாரமாகியயிருளைச்செய்யமயங்கியும்
படைவீரர் கரங்களிற்பற்றிய வாள் வேல்களி னொளியினாலும் கிரீடங்க
ளிற்பதிந்திருக்கின்ற சிரோரத்தினப் பிறகாசத்தினாலும் அவ்விருளை நீக்
கிவரக் களித்துச்சென்றும் இவ்விதச் சிறப்புகளைப்பெற்ற சதுரங்கச்
சேனைகள் வீராவேசங்களுடன் சூழ்ந்துவரப் பானுகோபன் பொன் ம
யமாயிருக்கின்ற பட்டணத்து வீதிகளைக்கடந்துசக்கிறவாளகிரியையொ

ப்பாக மேலோங்கி வளர்ந்திருக்கின்ற கோட்டைமதிலுக் குறுப்பாய்ந
வரத்தினக்காந்தியை வீசிக்கொண் டிருக்குங்கோபுரவாயலைத் தாண்டிய
வுடன் ஆயிரம் குதிரைமுகங்களைப்பெற்று தூதர்களுக்குத் தலைவனாக
ரங்களைக்கட்டிக்கொண்டு ராசகுமாரன் கட்டளைக்கெதிர்பார்த்து நடக்
கின்றவிவேகசாலியாகியவொருவனைப்பார்த்து நீ துரிதமாயோடி சிவகுமா
ரனிருக்கின்றபாடிவிடுதியைச்சேர்ந்து நமதுநகரத்துக்குத் தூதாகவந்
தசெயசாலியாகிய வீரவாகுவைத்தேடிக்கண்டு ராசபரமேஸ்பரனாகவிருக்
கின்ற பிதாவின்கட்டளைப்படிக்கு இத்தினம்கொடிய போரைச்செய்து
உன்னைரணக்களத்திற்கிடத்தி செயப்பிரதாபத்துடன் திரும்பும்படிக்கு
கங்கணம்கட்டி வந்திருக்கின்றேன் முன்சண்டைகளைப்போலச்சலபமா
கநினைந்து அசாரிசமாயிராமல் சீக்கிரமத்திற் போருக்கு வரக்கடவை
இதுராசகுமாரன் சொல்லியனுப்பியதென்று தெரிவித்துவரக் கடவை
யெனக்கட்டளையிட்டவுடன் சேவித்து தேவரீர் பணித்தபடிக்குமுடித்
துவரக்கடவேனெனச் செலவுபெற்றுக் கடலைப்போல யிரைந்துநடக்கி
ன்றசேனைகளைக்கடந்துபோய் ஏமகூடமென்னும் பெயரைப்பெற்றிரு
க்கின்ற பாசறையைச்சேர்ந்து வெற்றிவேலாயுத மூர்த்திக் கிளவலாகிய
வீரனைக்கண்டு இதனைச்சொல்லுகின்றனன், பாலயருவத்திற் சூரியனைப்
பற்றிவந்து தளைசெய்த வீராதிவீரனாகிய பானுகோப மகாராசன் இத்தி
னம்உன்னுயிரை எமலோகங் குடியேற்றும்படிக்குப் பிரதிக்கினை பண்
ணினவனாய் சகலசேனைகளுடனும் யிதோவந்துவிட்டனர் இதனை உனக்
குத்தெரிவித்து துரிதமாய் போருக்குவரக் கடவையெனச் சொல்லிவரு
ம்படிக்கு அடியேனுக்குப்பணித்துத் தூண்டினர், ஆதலால் புறவணியி
ல்நில்லாமற் றுரிதமாய்ப்போருக்குவருவாயென்று சொல்லியதைக்கேட்
டவீரவாகுதேவர் நகைத்து நல்லகாரியம் முந்தாநாளே சூரன் பிள்ளை
பேர்விளங்காமற் செய்துப்போடுவேன் பேடிகளைப்போலப்பயந்தோ
டிப்போனதால் இதுவரையில் உயிரைத்தரித்திருக்கின்றனன், இதோ அவ
னுயிரைவீரசொற்கத்திற்சேர்க்கவருகின்றனன் இந்தசேதியை அவனுக்
குச்சொல்லக்கடவையெனப்பேசி தூதனைஅனுப்பி விட்டு செயசாலிக
ளாகிய துணைவர் இலக்கர் சூழ்ந்துவரத்தக்கதாக நவரத்தினமய மாகிய
சபாமண்டபத்தில் அரியணையில் வீற்றிருக்கின்ற பாலசுப்பிரமணியக்
கடவுளைத்தெரிசித்து சற்வசீவபரிபூரணராகிய கற்தன்சன்னிதானத்தை
ச்சேர்ந்து மும்முறைவலம்வந்து திருவடிகளிற்சேவித்துப்போற்றி கா
ங்களைக்கூப்பிநிற்கின்ற புசபெலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் க
ருத்தையும்நடந்த சேதிகளையுந் திருவுளத்தறிந்துகொண்டு முதற்றினம்
பயப்பிருத்தியினாற் புறந்தந்தோடிப்போன பானுகோபன் விருப்புட

ன்உன்னைக்குறித்து யேதோசிலசபதங்களைப்பேசி வருகின்றனன், ஆத
லால்அத்தினத்தைப்போலவே-எண்மர், இலக்கர், படைத்தலைவர்களுடன்
ஆயிரவெள்ளம்பூதச்சேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய் பகைவனாசெ
யித்துமீளக்கடவை பானுகோபன்செலுத்தும் படைகளனைத்துக்கும்மா
றேவித்தடுத்து மேவிடுகின்றதறுவாயில் ஒருகாலம் அந்தபாதகன் ஏதெ
னும் மாயவஞ்சகங்களைச் செய்வனாகில்நமதுகரத்தில் விளங்கும் வெற்றி
வேல்வந்து அதுகளை அதப்படுத்தி உங்களுக்கு யாதொரு துன்பங்களு
மில்லாமற்பாதுகாத்துத் திரும்புமென்று திருவுளம்பற்றியபோதுமகா
பாக்கியமென்று வீரன்மீட்டும்வணங்கி பரிபூரணகடாட்சமும் விடையு
ம்பெற்றுத்திரும்பி ஆயுதச்சாலைக்குப்போய் அம்பூருத்தூணியைமுது
கிலிறுக்கிவீரவில்லைத் தோளில்மாட்டி தேவாஸ்திரமுதலிய படைகளைச்
சேகரித்துக்கொண்டுவந்து முகவாயலினிடத்தில் நிற்கின்ற உன்னத மு
ள்ளதேரில் ஆரோகணித்ததறுவாயில் துணைவர் இலக்கர் படைத்தலைவர்க
ள்சர்வாயுதபாணிகளாய் தமக்குரிய வாகனங்களில்வீற்றிருந்து தமதிறை
வனைச்சூழ்ந்தனர், அக்காலத்தில்நூறாயிரவெள்ளம் பூதப்படைகளும்செ
யவுச்சாகங்களுடன் குலகிரிகளைப்போலபாரித்திருக்கின்ற பர்வதங்கள்
தலைமுத்தோங்கிய -விருட்சங்கள்-தண்டாயுதம்-தோமரம்-எழுகுலக்கை
முதலிய ஆயுதங்களைக்கரங்களிலேந்தி பிறசண்டவாயுவைப்போலஆர்வா
ரித்துக்கொண்டு கோடையிடிகளுக்குச்சமதையாக வசனித்துபெரும்பு
றக்கடலுக்கொப்பாகவந்து தங்கள்தங்கள்தலைவனைச் சேர்ந்தனர், அத்த
றுவாயில் வானத்தில்வேடிக்கைப்பார்க்கவந்த தேவர்க்கள்யின்றையத்தின
ம் செயம்நம்மவர்களுக்காகக்கடவதென்று ஆசீர்வதித்துபஞ்சதாருக்கள்
புஷ்பங்களைவாரிவாரியேராளமாகச்சொரிந்துகளிக்கவும்-ரணபேரி-செ
யபேரி-வெற்றிச்சங்கமுதலிய பொற்பறைகள் அண்டகோளகை வெடித்
ததைப்போலக் கணகணென்றுமுழங்கவும் இவ்விதஆடம்பரங்களுடன்
தம்பியர்முதலானவர்கள் சூழ்ந்துவா வீரவாகுதேவர் துரிதமாக நடந்து
பானுகோபன்திரண்டராட்சதச்சேனைகளுடன்வந்திருக்கின்றரணக்களத்
தைநெருங்கியமாத்திரத்திற் பவுத்திரவான்களாகியசிவகணங்களும்வஞ்
சகமே குடிகொண்டிருக்கும் ராட்சதப்பாதகரும் வீராவேசங்களுடன்
கொக்கரித்துநெருங்கி உங்கள்பிராணனைவாங்குறோம் உங்களைஎமலோ
கங்குடியேற்றவோமென்று சபதங்களைப்பேசி சண்டைகொடுக்கவெத்
தனித்ததறுவாயில் யிருதிறத்துச்சேனைகளினும் கோடுகள் பறைகள் கண
கணெனமுழங்கவும் வெற்றிமுரசங்கள் தாம் தாமென் றதிரவும் பொம்
பொம்மென்று சங்கங்கள்பூரிக்கவும் இவ்விதவாத்தியங்கள்பெருத்தும்
பேய்பூதம் டாகினிக்கூட்டங்கள் புதியவிருந்துகிடைக்கின்றதென்னுஞ்

சந்தோஷித்தினுற் கூத்தாடித்திரியவும்- கழுகு-பாந்து-காக்கை- வான
மெங்கும்பறந்துமூடவும் எமதூதர்கள்சமர்க்களமுற்றிலுங் காத்திருக்
கவும்யித்தகைய உயித்தியசனனுககாலத்தில் ராட்சதப்பாதகர் கைமிஞ்சி
சிலர்பாரித்தவிற்களை வட்டாகாரமாகவளைத்துகொடுமையாகவும்கூர்மை
யுள்ளதாயும் தீட்சணியத்தைக் கொண்டதாயு மிராநின்ற பாணவருஷ
ங்களைப்பொழிந்தும் சிலர்- வாள்-வேல்- பிண்டிபாலம்- கப்பணம்-த
ண்டம்- எழு-மழு- நாஞ்சில்- வச்சிராயுதம்-சக்கரம்-சூலம்- இவற்றினை
க்கரவேகமாகச்செலுத்தி சிங்கங்களைப் போலக்கெர்ச்சித்த தருவாயிற்பூ
தப்படைகள்கொதித்து வடவையினும்முடுகிக் கழுமுட்களைச் செலுத்தி
யும் முசலங்களை எறிந்தும் இருப்புலக்கைகளைக் கொண்டு மோதியுஞ்சக்
கரங்களைச்சுழற்றிவீசியும் பற்வதங்களைக்கடாவியும்மராமரங்களைக்கொ
ண்டுசாடியும் யிவ்விதமாகக்கொடிய போராச்செய்கின்றதருவாயில்ராட்
சதவீரர்கள் றவுத்திராகாரமாக மண்டியெரிந்து மின்னலைப்போலப்பிற
காசித்திருக்கின்ற பட்டாகத்திகளையுதறிவீசி ஒவ்வொருதாக்கலில் அளவ
ற்றசிரங்களைக்கண்டித்தும் தோள்களைச்சரித்து மார்பைப்பிளந்துகால்க
ளைத்தறித்தும்சுரிகைஈட்டிகளினுற்குடல்கள் வெளிப்பட்டிறையக்குத்தி
யும் வாள்களைக்கொண்டுகணக்கிறந்தபூதரைச்சின்னபின்னமாக வெட்டி
யும் இப்படிக்குச்சாடுமுன்னிலையில் பூதத்தலைவர்கள் காட்டழலைப்போ
லச்சீறிப்பாய்ந்து ஒவ்வொருதடவையில் ஆயிரம்பதினுயிரம் ராட்சதர்க
ளைச்சேர்த்தெடுத்துக் கசக்கி உதிரமோடப்பிழிந்தும் திசாதிசைகளிலெ
றிந்தும்கடல்களில்வீசியும் வானத்தெற்றியும் கன்னங்கலங்க மோதியும்
ஒருகாலைமிதித்துமற்றக்காலைக்கரங்களிற்பற்றியனைநாரைப்போலக்கிழி
த்தெறிந்தும் கழுத்தைமுறித்தும் கால்களினுற்சேர்த்துக் குயவன்மண்
ணைமிதிப்பதைப்போலத்துவைத்தும் கற்கம்பங்களைப்போல உதைத்து
ருட்டியும் மராமரங்களைக்கொண்டுசின்னபின்னப்படச்சாடியுந்தேர்க
ளைவாரி யானையணிகளின்மீதுவீசியும் குதிரைகளைவாரிராட்சதர் பேரிலெ
றிந்தும் யிவ்விதங்களாகசத்தசாகரங்களும்ஊழித்தீயும்பகைத்துப் போ
ராடுவதைப்போலப் பூதப்படைகளும் ராட்சதர்சேனைகளும் ஒருவரை
யொருவர் வெல்லவேண்டுமென்கின்ற வீராவேசங்களுடன் கொடியச
ண்டையைச்செய்துவருகின்றதருவாயில் ரத்தவெள்ளமானது பெருக்கெ
டுத்து அலைகளைமோதிபூமியெங்கும் பரந்தகாலத்திற் -காக்கை- கழுகு
பாந்து முதலியபட்சிக்கூட்டங்கள் நிணமாம்சங்களையுண்டு அப்பிறவா
கத்தில்முழுகிச் செவ்வானமிட்டதைப்போலச் சிறகுகளைப்புலர்த்திப் ப
றந்துவட்டமிட்டுலவவும்ராட்சதவீரர்கள் செலுத்திய அஸ்திரசஸ்திரங்கள்
அமோகமாகப்பெருத்து சாடுவதினுற்பூதப்படைகள் சிரங்களற்றும்தோ

ள்களற்றும் மார்புகளிற்றும்கரங்களற்றும்சரீரமுற்றும்சல்லடைக்கண்க
ளாகத்துளையுண்டும்களைத்தும்யிளைத்தும்பதைத்தும்உளைப்புண்டும்சோ
ர்ந்தும்செத்தும் இவ்விதமாகப்பூதப்படைகளிற்சிலர்மங்கினர், சிவகண
ங்கள்சிலரோங்கி மலைகள்விருட்சங்கள் படைகளைக்கொண்டு வாட்டியகா
லத்தில் ராட்சதர்கள அல்லோலகல்லோலப்பட்டு மண்டைதுறந்தும் மூ
ளைகள்சிதறியும் விழிகள்தெறித்தும் கொடுமைபேசும் வாய்கள்பிளந்து
ம்பற்களுதிர்ந்தும் அந்திவானத்தையொத்த தலைகள்பறந்தும் வலியகழு
த்துகளொடிந்தும் புயமலைகள்சரிந்தும் கரங்கள்முறிந்தும் மார்புநெக்
குவிட்டும் வயறுகிழிந்துகுடல்களிறைந்தும் துடைகள்தகர்ந்தும் கால்க
ள்தறிந்தும் சரீரமெங்கும் பத்தல்பத்தலாய்வெடித்தும்சக்கைசக்கையா
கவெட்டுண்டும் சதைத்தும்சிதைந்தும் நிலத்திற்புதைத்தும் அலர்ந்தும்
உலைந்தும் களைத்தும் யிளைத்தும் துடித்தும்பதைத்தும்சோர்ந்தும்மூ
ர்ச்சித்தும் துகள்பட்டுமாண்டுமங்கியும்இவ்விதமாய்படாதபாடுகளைப்ப
ட்டுகணக்கிறந்தராட்சதப் பாதகர்மாண்டனர், இப்படிக்குயிருதிரத்துச்
சேனைகளும்வருந்தியிளைத்துத்தவிக்கின்றதருவாயிற்பாபமேஉருக்கொ
ண்டிருப்பதைப்போலக்கரியதிரோகத்தைப்பெற்ற வஞ்சகராகியராட்சத
ச்சேனைத்தலைவர்கள்ரவுத்திராகாரமாகக்கோபித்துதங்கள்சேனைக்குமுந்
திவரும்போது சிவகாருண்ணியம் பத்திமான்மியமுதலிய நல்லொழுக்க
ங்களைவாய்ந்தபூதச்சேனைத்தலைவர்களும்சிவகணங்களைப்பின்தள்ளிமுன்
னணியில்வந்து நின்று கீழ்பாரிசத்துடன் மேல்பாரிசம் பகைத்ததைப்
போலஅரியஉயித்தியங்களைத் தொடங்குமுன்னிலையிற் கணநாதர்கள் மே
விட்டுகொலைவஞ்சகங்கள் குடிகொண்டிருக்கும் மனதைப்பெற்ற ராட்
சதத்தலைவனாமடக்கிக்கொண்டு கரங்களைத்தேய்த்து ஒவ்வொருதாக்கலி
லும் கோடானகோடிதலைகள் பெருங்காற்றிற்பட்ட தேங்கின்கனிகளை
ப்போல உருளும்படிக்குத் தள்ளியும் அந்தகளேபரங்கள் விழுந்தஅதி
ர்ச்சியினுற்பிளந்தபூமியிற்காட்டும்வெடிப்புகளிற்கணக்கிறந்தராட்சதவீ
ரர்களைவுதைத்துத்தள்ளிப் பாதலத்திற்போகும்படிக்குப் பாதங்களினு
ற்றேய்த்தும்சூலபாணியைப்போல அவர்கள் தோலையுரித்து வீசியும்சிங்
கத்தைப்போன்ற வலியமனதுகலங்கும்படிக்கிடித்தும் அரிதாய்த்தேடி
யவாமுயற்சிகளை அப்பிரயோசனப்படுத்தியும் உருத்தோற்றமற்றெய்
த்தும்வீரபத்திரதேவனைப்போல ரணபத்திரகாளிகண்டு களிக்க யிருளை
யொத்தகரியதிரேகத்தைப் படைத்திருக்கின்ற பூதநாயகர்செயசாலிகளா
கியராட்சதத்தலைவனைச்சின்னபின்னப்படவாட்டி சிங்கநாதங்கள்அட்ட
காசங்களைச்செய்து வெற்றிச்சங்கங்களை பொம் பொம்மென்று முழக்
கிக்கொண்டுதண்டாயுதங்களையூன்றிநின்ற சிலபூதவீரர்கள் மகாவிஷ்ணு

லைப்போலவிளங்கினர், இதுவுமல்லாமல் ஒருகற்பகாலத்தில் வீறிரு
ந்தஅவுணராசனைவாட்டி மமதையிற்பட்டு உலகங்களையலைத்துத் திரிந்த
வராகத்தின் கோடுகளைப்பிடுங்கி அதன்கெற்வத்தையடக்கிய வயிரவக்க
டவுளைப்போலச்சிலபூதத்தலைவர்கள்மதயானைகள்துதிக்கைகளைப்பற்றிபி
றிமித்து வாடும்படிக்குச்சுழற்றி அவற்றின்கோடுகளை யொடித்து ஆயுத
மாகக்கரங்களிற்றுங்கிசத்திராதிகளை மடக்கிக்கொண்டுவாட்டியுங்குமா
ரசுவாமியாருடன் உயித்தியத்துக்குநேர்ந்ததருவாயில்யிளைத்துப்பின்னி
ட்டுகிறவுஞ்சபற்வதத்தில் மறைந்தும்வெளிப்பட்டும் அரியமாய்கைகளை
க்காட்டிப்போர்செய்ததாருகனைப்போலயானைமுகங்களைப்படைத்திருந்
தராட்சதவீரர்கள் பகைவருக்கஞ்சித் திரும்பிபூதவீரர் கரங்களிற் பற்றி
யிருந்தபருத்தமலைகளில்மறைந்துதருணம்பாத்தெதுத்துஅகோரவுயித்
தியங்களைச்செய்யவும் இவையன்றியில்முன்னம்மகாவிஷ்ணுவுடன்போ
ராடிவெற்றிகொண்டும் பிரமனைவளைத்துக்கொண்டு திகைக்கும்படிக்கு
ச்சாடிய வீராதிவீரராகிய சிலராட்சதத்தலைவர்கள் ஆதிகாலத்திற்சிவபிரா
ன்படைத்த திகிரியினாற் சலந்தரனென்பவன் யிருகூறாய் மாண்டதைப்
போலச் செயசாலிகளாகிய படைத்தலைவர்கள் பிறையோகித்த சக்கரப்ப
டையினால் தங்கள்சிரேசம்யிருபிளவாகக்கண்டிக்கப்பட்டிறந்தும்முன்
னம் உலகையலைத்திருந்த அந்தகாசுரனைச் சிவபிரான் சூலத்திற்குற்றித்
தூக்கியதைப்போல ஒப்பற்றசெயசாலிகளாகிய சிலபூதவீரர்கள்பிறகாச
ம்பொருந்திய முத்தலைச்சூலங்களைக்கொண்டு ராட்சதவீரர்கள்வலிய மா
ர்பிலுருகப்பாச்சிக்கரங்களிற்பற்றிபுலவவும் இவ்விதங்களிற்சண்டைநட
ந்துவருகின்றதருவாயில் எண்மர்இலக்கர்களிற் சிலர்றவுத்திராகாரமாகக்
கோபித்து பானுகோபன்சேனைத்தலைவர்களிற் பலர் வீராவேசங்களுட
ன்செலுத்துகின்ற குறூரமாகிய பாணவருஷங்களானவை எரிந்துபுகை
ந்துமேலிட்டுவருவதைத் திவ்வியபாணங்களைப்போக்கிக் கண்டதுண்ட
மாகவெட்டியெறிந்துமேலும் சுறுவளிக்காற்றைப்போலவும் திருப்பா
ற்கடலைக்கடைந்தமந்தரகிரிக்கொப்பாகவும் சுழன்றுசுழன்று அமோக
மாகியகூரிய கடுங்கணைகளைக்கரவேகமாகப் பிறையோகித்துக்கணக்கிறந்
தராட்சதச்சேனைகளைக்கலக்கி மாய்த்தும்மற்றொருபுறத்திற் பூதப்படை
த்தலைவர்கள் வடவனலத்துக் கொப்பாகச்சீறிப் பட்சிக்கூட்டங்களில் ரா
சாளிபுகுந்ததைப்போலச் சத்திராதிகளை மடக்கிகொண்டு அஸ்திரசஸ்
திரங்களை அபரிமிதமாகப்போக்கிச் சின்னபின்னப்பட்டுமாளும்படிக்கு
ப்போர்செய்யவும் இவ்விதமாகவீரவாகுதேவர் படைத்தலைவர்கள் நாலு
மூலைகளினும்புகுந்து அகோர உயித்தியங்களைச் செய்புமுன்னிலையில்
மாண்டவர்கள்போக மற்றராட்சதவெள்ளமானது திகைத்துவாடிபலகா

யங்களுடன்வருந்திதாபரித்து நிற்கப்படாமையால் நிறைந்தகுடத்தினை
டியிற் றுவாரம்பட்டதறுவாயில் துளிசெலமாவது நில்லாமற்போய் விடு
வதற்குச்சமதையாய்ஒருவராவதுரணக்களத்தில்நில்லாமல்ஒருவருக்கொ
ருவர்முந்திதிரும்பித் திரும்பிப்பார்த்துக்கொண்டுபுறங்கால்புட்டத்திற்
றுக்கஅதிவேகமாயோடி மலைச்சாரல்களினுங்குகைகளினும் வனாந்திரங்
களினும் திக்குதிபாந்திரங்களினும் ஒளித்தும்மாறுருக்கொண்டு தேசா
ந்திரங்களிற்பறந்தும்போய்விட்டதறுவாயில் எண்மர்இலக்கர்முதலியப
டைத்தலைவர்களும் பூதவீரரும்பிரசண்டமாருதத்தைப்போலச் சண்டயி
டமெங்கணுந்தாமாய்செயவுச்சாகங்களுடன் வீறியிருக்கின்றதறுவாயில்
ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் ராசாதிராசனாகவிருக்கின்றசூரன்பிள்ளை
வீராதிவீரனாகியபானுகோபன் தன்சதுரங்கச்சேனைகளும் அல்லோலக
ல்லோலப்பட்டு மங்கியதையும் படைத்தலைவர்கள் அபசெயத்தையும் ப
கைவர்கெலிப்பையுந்தெரிந்துவிழிகளிற்றீப்பொறிகள்சிதறவும்புகையும்
அனலும்பெருகப் பெருமூச்செறிந்துதிசைகளதிரநகைத்துபுருவம்நெ
ற்றியிலேறக்கோபித்துவடவைக்கனலைப்போலப்பொங்கிச்சண்டைகொ
டுத்துப்பகைவனாவாட்டநினைந்தவனாய் தேரைவேகமாய்க்கொண்டுபோ
கும்படிக்குச் சாரதியையெச்சரித்து தங்கக்கட்டுகள்பூண்டு யிருகுதைக
ளினும் மணிகள்சத்திக்கவெற்றிமாலைதரித்திருக்கும் ஒப்பற்றபாரித்தவி
ல்லையெடுத்து நாட்டிவட்டாகாரமாய் வளைத்துநாணேற்றி முடிவதன்மு
ன்னம் பாகன்குதிரைகளைச் சவுக்கைக்காட்டி அதட்டிகெற்கரத்தொனிக
ளொடு மனோவேகத்தினுமேலிட்டுச் செலுத்திக் கொண்டுபோய் பூதவெ
ள்ளமுதலாகிய வீரர்களிருக்கின்ற உயித்தியப்பூமியில்நிறுத்தினன், இப்
பிரகாரம் செயசாலியாகியபானுகோபன் தன்படைகளின்மீதிற்சீறிவந்த
தைப் பின்னணியிலிருந்த வீரவாகுதேவர் பார்த்தமாத்திரத்தில் இனி
சும்மாயிருக்கலாகாது,பாதகன் நமதுசேனாசமுத்திரத்தைகலக்கி வாட்டுவ
தன்முன்னம் ராசகுமாரன்செற்றத்தையடக்கி யழிக்கவேண்டுமெனத்
தீர்மானித்தவராய்த்தமது தேரைத்தூரத்திவந்துதுணைவர் இலக்கருக்கு
முந்தினைத்துக்கொப்பாகிய பாரித்தவில்லைக்கரத்திற்கொண்டதைக்க
ண்டபானுகோபன் விடநாகத்தைப் போலச்சீறி நேரோவந் தகப்பட்டுக்
கொண்டான்இனியிவனைக்கதலமிதலவொட்டாமற்சாடிக் கொல்லவேண்
டுமென்கின்றநினைவைக்கொண்டு கரத்திலிருந்தவில்லை குணத்தொனிகா
ட்டியகாலத்தில் அவ்விற்சியினால்அண்டப்பித்திகை நெக்குவிட்டுதிசை
கள்நடுநடுங்கி தேவர்க்கள் திகைத்து சிரக்கம்பஞ் செய்தனர், உடனேவீ
ரவாகுதேவர்காத்திலேந்திய தனுசையிருகுதைகளுமொன்றுபடவளைத்
து டங்காரசத்தத்தைக்காட்டினர், அவ்வோசைஅளவற்ற யிடிக்கூட்டங்

கள் ஏககாலத்தில்முழங்கியதைப்போலச் சத்திக்கச்சத்துருக்கள் நடுநடுங்
கிவாடியிருந்தவிடங்களிற் சோர்ந்துவிட்டனர் பானுகோபன் செவிகளி
னும்விஷத்தைநிகர்த்துப் பாய்ந்தமாத்திரத்தில் வடவையைப் போற்சீறி
அலையிறைக்கவல்லசரங்கள் அர்த்தசந்திரபாணங்கள் முதலான அஸ்திர
ங்களைக்கோடானகோடியாகத்தொடுத்துச்செலுத்தியதருவாயில்அவை ம
ண்விண்திக்குதீபாந்திரங்களெங்கும் நெருங்கிமின்னலைப்பெருக்கியிடி
களைமுழக்கித் தீயையிறைத்து அதிககொடுமைகளைக்காட்டிமேலிடுவதை
வீரவாகுதேவர்கண்டவுடன் துரிதமாய்த் தமதுவில்லில் தீட்சணியமாகி
யகணைகளைச்சந்தித்துமேகங்களும்நாணும்படிக்குச்சொரிந்ததருவாயி
ல்யிருவீரர்கள்படைகளுமொன்றுடனொன்று முட்டிச்சற்பங்கள் சீறிச்
சண்டைகொடுப்பதைப்போலக் குறுகுறென்றும் சடசடென்றும் ஆர்
பாட்டங்களைச்செய்துகொண்டு கறுத்தமேகமண்டலத்தைத்தாவியும் ஆ
காயவீதிகளைமறைத்தும் தேவர்க்கள் நகரங்களைமூடியும் பிரமன்வாசஞ்
செய்யும்மனோவதிப்பட்டணத்திலும் மகாவிஷ்ணுவீற்றிருக்கின்ற வை
குந்தப்பதியினும்நிறைந்து அவற்றுட்பட்டபிராணிகளைவாட்டி அனர்த
ப்படுத்தவும் இப்படிக்கு விற்பயிற்சியின்முயற்சியினால் பாணங்களையி
றைத்துவரும்யிருவீரர்கள்தேர்களும்குலாலன்விசைகொண்டுதிருப்பியச
க்கரத்தைப்போன்றும் சுருவளிக்காற்றையொத்தும்யிடசாரிவலசாரியா
ய்கிறுகிறெனச்சுழன்றுகணப்போதிற்சத்தசாகரவெல்லையிநிடங்களிலோ
டியும்பொன்னுலகமுதலாகியநாடுகளிலுலவியும் சக்கிறவாளகிரியின்மீது
வட்டணைவந்தும்அண்டமுகட்டைத்தாவியும்யிப்படிக்குத்திரிந்துபொ
ருகின்ற தருவாயில் வானவெல்லையிலிருந்து வேடிக்கைபார்த்திருந்த
தேவர்க்கள்அதிசெயித்துயிவ்வீரர்தேர்கள்மேகமண்டலத்தில்நுழைந்து
திரிகின்றதோவாயுமண்டலம்வருண மண்டலம்சூரியமண்டலம்சந்திரம
ண்டலம்நட்சத்திரமண்டலம்யித்தலங்களிற்சென்று திரிகின்றதோ வைகு
ந்தத்திற்பாய்ந்ததோ பெரும்புறக்கடலிற்சென்றதோ யாதுந்தோற்றவி
ல்லைமேலும்எவ்விடங்களினும் தோற்றப்படுகின்றது யிதற் கென்செய்
வோம்ஒருகாலம்நாமிருக்கின்ற தலத்தில்வருமாயில் என்னபாடுபடவரு
மோபதலமாகமுன்சாக்கிறதைப்பட்டு தப்பித்துக்கொள்ளவேண்டு மெ
ன்றுஒருவரைஒருவர்பாத்துத் தியங்கிவசனிக்கவும் அக்காலத்தில் அவ்வி
ருவீரர்களும் மேகங்களைப்போலவிளங்கவும் அவர்களேறி யிருக்கின்ற
ரதங்கள்மின்னலைப்போலப் பளிச்சுப்பளிச்சென்று அங்குமிங்குமாய்க்
காட்டிமறையவும் அவர்கள்கரங்களில்நின்றும் வெளிப்படுகின்றதிவ்வி
யபாணங்களானவை சோனைத்துளிகளுக்கொப்பாக எங்குமூடவும் இவ்
விருவீரர்கள் ரதங்களைச்செலுத்தி வருகின்றசாரதிகள் ஒருவரைஒருவர் அ

தட்டிச்சவுக்கைவிசியிடம்வலமாகச்சக்கிராகாரமாய்ச்சுழற்றவும் தேர்க
ளிற்பூட்டியிருக்கின்ற புரவிப்பந்திகள்ஒன்றையொன்றயாத்துச்சிறி யி
டிகளுஞ்சக்கரைத்துவாயும்வகத்தினும்மேலிட்டுப்பாயவும்இப்படிக்குத்
தேரோடிவருவதினாலும் பாணங்கள்தீயைவீசிஉரறிக்கொண்டுநெருங்கு
வதினாலும் வானவெல்லையெங்கும்இடமில்லாமல்நெருங்கிவேடிக்கையார்
த்திருந்தமுப்பத்துமுக்கோடிதேவர்களும்நாற்பத்தெண்ணாயிரம்ரிஷி
களுமகின்னரர்கிம்புருடர்கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் - பன்னகர்
நாகர் - ஏகாசருத்திரர் துவாதசாதித்தர் - முதலாகியசகலரும்மருண்டுஇனி
யிவடத்திற் சற்றுநிற்போமாகில்நாம்படப்போறதுன்பத்தை யின்னவி
தமெனச்சொல்விமுடியாது, ஆகையால் சீக்கிரமாய் தப்பித்துக்கொண்
டுபோகவேண்டுமென்று ஒருவருடனொருவர் கலந்துபேசி மேலுலகங்
களிலோடியொளித்தனர், யிப்படிக்கு அரியஉயித்தியங்கள் நடந்துவ
ரும்போது சயந்தன் முதலிய தேவரைச் சிறைசாய்த்துவந்து காவல்படு
த்திய சமனசித்தமுடைய பானுகோபன் சிலகொடிய பாணங்களைச்செ
லுத்திவீரவாகுதேவர் சரீரம்தோற்றமல் மறைத்ததறுவாயில் அந்தசரங்
கள்யிளைந்து புகைந்து அனலைவீசிக் கடுகிவந்து சுறுக்குச் சுறுக்கெனத்
தைத்தமுன்னிலையில்வீரவாகுவடவானலத்தைப்போலக் கொதித்து ஆயி
ரத்திவ்விய பாணங்களைச்செலுத்தி பானுகோப னேறியிருக்கின்ற ரதத்
தையும் புரவிகளையும் பாகனையுஞ் சண்டதுண்டமாக்கியதறுவாயில் உட
னேசேமத்தேர்களி னொன்றிற்சிங்காசனைப்போலப்பாய்ந்து அதிவே
கமாய்வில்லைவளைத்து நாரியைமாட்டு முன்னம் வீரவாகுதேவர் ஆயிர
ங்கூரிய பாணங்களைக் கரவேகமாகப் பிறையோகித்து வில்லைப் படாலு
மெனக்கண்டித்து மேலும் சிலகுரூரமாகிய சரங்களைக்கொண்டு வலிய
மார்பையும் சல்லடைக்கண்களைப்போலத் துளைத்த தறுவாயில் உதிரமா
னதுபிறவாகமாயோட வருந்தித் திகைப்பதை பூதப்படைகள் பார்த்து
- எ - எ - யென்றிகழ்ந்து கரங்களைக்கொட்டி நகைத்து ஏளனமாகப்
பேசிஆர்ப்பரிக்கின்ற ஓசையானது சுடச்சுடச்செவிகளிற் புகுந்தமாத்
திரத்தில் மானம்பாரிக்க றவுத்திராகாரமாகக் கோபித்துத் தான்வருவத
ற்குமுன்னம் பிதாவானவன் தானைக்குறித்துச்சொல்லியிருந்த வசனங்
களைநினைந்து இவன் எந்தபாணங்களினாலும் களையப்பட்டவனன்று ஆ
தலால் தேவாஸ்திரங்களைச் செலுத்தி வாட்டி செயப்பிறதாபத்தைப்பெ
றக்கடவேனெனத் துணிவுகொண்டவனாய் அம்புறாத்தூணிரத்திலிராநி
ன்றவருணாஸ்திரத்தை யெடுத்து தூபதீப நைவேத்தியமுதலிய உபசாரங்
களைமானசபூசையினால் நிறைவேற்றி வில்லிற்பூட்டி நீபோய் சத்தசாகர
ங்களைப்போல ஆரவாரித்திருக்கின்ற பூதப்படைகளையும் - இலக்கனாயு

ம் எண்மனையும்- தா தனையும்- நாசப்படுத்திச் சமுத்திரத்திற் சேர்த்து
மீளக்கடவையென்று மந்திரபூர்வகமாசப் பிறையோகித்தனன், அந்த
பாணமானது வெளிப்பட்டவுடன் சர்வசங்காரகாலத்திற் பரமசிவகடா
ட்சப்படிக்குஉலகங்களையழிக்கச்சத்தசாகரங்களையும்உடைத்துக்கொண்
டெழும் பெரும்புறக்கடலைப்போலச் செலப்பெருக்கை வுண்டுபண்ணி
அலைகளைப்பெருக்கி இடிகளையொத் ததிர்ந்து புரண்டு வேகமாய் வருவ
தைத்தேவர்கள்கண்டு நடுநடுங்கி யிதென்ன உற்பாதமாக விருக்கின்றது
பாதகன்சற்றமாயையின் பெருக்கோ சிறந்தவிஞ்சையின்முயற்சியோயா
தோவென்றேங்கித் திகைத்துப் பார்த்திருக்கவும் பூதப்படைகள் சலங்
கிவாடவும் இலக்கருந் துணைவருஞ் சரங்களைப் பிசைந்துக்கொண்டு எ
ன்னமாய் விளையுமோவென்று ஒருவர்முகங்களை யொருவர்பார்த்து பிற
மித்தவராய் ஊமைகளைப்போலத் திகைத்துநிற்கவும் இப்படிக்குச் சகல
ரும்வாடுவதைத் தேவாதிதேவனாகிய சிவகுமாரன் படைத்தலைவன் கண்டு
பயப்படாதீர்களெனக் கையமைத்துப் பிறளயவெள்ளத்தைச்சுவற்றுந்
தீட்சணியமுள்ள அக்கினியாஸ்திரத்தையெடுத்துப் பூசித்து வில்லிற்பூட்
டிமந்திரபூர்வகமாகக்காதளவுமிழுத்துவிட்டமாத்திரத்தில் அந்ததிவ்வி
யபாணமானது வானத்திலெழுந்து பக்கு பக்கென நகைத்து கொண்
டல்கொண்டலாய் புகையைப்பெருக்கிச் சுவாலையைவீசி அனற்பொறி
களைக்கக்கி கொள்ளிகளைப் பெருக்கிச் சடசடென்னும் பேரொலியுடன்
உலகங்களெங்கனும் மூடிக்காட்டிய வெப்பத்தினால்மூதண்டகோளக
வெடித்து ஆகாயகெங்கைவறண்டு மச்சராசிகள் துடிதுடித்து பதை ப
தைத்துவாடவும் அஷ்ட குலாசலங்கள் முதலிய பற்வதங்க ளனைத்தும்
வெடித்துமங்கும்படிக்கு வீறியெழுந்துஉலகங்களைமூடியிருந்தசெல
த்தை நிமைப்போதில்வறளஉண்டுபூமிபசையற்றுகோடை காலத்தில்வெ
டிப்பதைப்போலப் பத்தல்பத்தலாய்பாதலத்தோன்றப்பிளந்து அவட
த்திலிருக்கின்ற சற்பக்கூட்டங்களனைத்தும் சுவாலைக்காற்றமல் வாடிச்சு
ருண்டுபதைபதைத்து அங்குமிங்குமோடியது இவ்விதமாய் வீரவாகுதே
வர்செலுத்திய கனற்படையானது பகைவன்விடுத்த கணையின்வல்லபங்க
ளைகவளீகரஞ்செய்துகொண்டு மேவிட்டு ராசகுமாரனைவளைந்து கொள்
ளக்கண்டுறவுத்திராகாரமாகக்கோபித்துத் துரிதமாய் வாயுவாஸ்திரத்தை
யெடுத்துப்பூசித்துப் பிறையோகித்தான், அதுவில்லிலிருந்து வெளிப்ப
ட்டவுடன் ஊழிகாலத்தில்மோதும் பிறசண்ட வாயுவைப்பெருக்கிச் சுழ
ற்காற்றைப்போல வெங்கும்வீசிவரும்வேகத்தினாற் சலபிராணிகளுந்
திடுக்கிட்டுவாடவும் அண்டப்பித்திகைகம்பிதப்படவும் இவ்விதமகிமை
களுடன்சீறிப்போய் அக்கினிப்படையின் வலியையடக்கி பூதப்படைக

ளின்மீது ஆங்காரித்துவருவதை வீரவாகுதேவர்கண்டு சீக்கிரமாய்நாகா
ஸ்திரத்தைப் பூசித்துவிடுப்பதற்குப் பிறையோகித்தவுடன் தேவர்க்க
ள்மயங்க உலகத்தைவிளக்குஞ்சூரியனுந்தியங்கி வாடத்தக்கதாகமேலிட்
டுவிசாலமாகிய படங்களைவிரித்துச் சூரியனைமறைத்து விஷங்களைக்கக்க
வல்லபலகோடிசற்பங்களை உண்டுபண்ணி ஆலகாலவிஷமு மஞ்சச்சீறிவி
ண்மண்ணெங்கும் நிறைத்துச்சீறும் சுவாலையானது வடவைபெருகிஉல
கங்களையழிப்பதைப்போலச் சிவராசிகளுக்குவருத்தங்களைக்காட்டிபிலத்
துவாரங்களை நிகர்த்து வாய்களைத்துறந்துகருமானலக்கணத்தைவிளக்கு
ந்தூரித்திக்கொப்பாய் விஷச்சுவாலைபெருகப்புஸ்புஸ்சென்றுபெருமூச்
சுகளைவிட்டுவாயுவின்நெருக்கணத்தையுங் கிறிகித்துப்பகைவன்படையி
ன்வலியையொடுக்கி மேலிட்டுவருவதைப்பானுகோபன்கண்டு துரிதமா
ய்கருடாஸ்திரத்தையெடுத்து அபிமந்திரித்து சுரவேகமாய்ப் பிறையோ
கித்தான் அந்தத்திவ்வியபாணமானது வானத்திலெழும்பி சங்கோபசங்க
ம்கருடவுருக்கொண்டு விசாலமாகிய சிவந்தசிறகைவிரித்து ஆர்ப்பாட்ட
ங்களைச்செய்துகொண்டுபோய்ச் சற்பக்கூட்டங்களை மடக்கிக்கால்களிலி
ருக்கின்றகூரிய நகங்களினாற்பிளந்துகொன்றும்மூக்கினாற்கொத்திவாட்
டியும்சிறகடியினால்மாய்த்தும் திசையெங்கணு மிறைத்தும் இவ்விதமா
கச்சாடலினாலும் விஷ்ணுவென்னுங் கூந்தலினோசையைக்கேட்டும் நிழ
ற்பரிசம் பட்டமாத்திரத்திற் களைத்தும் உளைத்தும் யிளைத்தும் மனமு
ளைத்துவிஷங்களைக்கக்கிப் புரண்டுபுரண்டு மருண்டும் சுருண்டும்கருட
னைக்கண்டபாம்பென்று உலகினர்பேசிக்கொள்ளுவதற்குத் திஷ்டாந்தி
ரமாய்நாகாஸ்திரம்வலிகுறைந்துபெட்டியிற்பட்டபாம்பெனவழங்குவ
துமெய்ப்படும் படிக்குச் சற்பங்களனைத்தையும் தன்னிடத்தொடுக்கிச்
சுருங்கிவருந்திச்சூரியன்முன்பனிபோலக்குன்றிக்குறைந்து அதப்பட்டு
ப்போயது, இவ்விதமாய்நாகாஸ்திரமானது ஒடுங்கியதறுவாயிற்கெருடா
ஸ்திரம்மேலிட்டுவருவதைவீரவாகுதேவர்கண்டமாத்திரத்தில்அதிக கோ
பங்கொண்டவராய் ரிஷபாஸ்திரத்தைப்பூசித்துச்செலுத்தியவுடன்வலிய
கால்களையும்வச்சிரத்தையொத்துக்காட்டும் நீண்டகொம்புகளையும் பெற்
றிருக்கின்றபல்லாயிரகோடிரிஷபங்களினுருக்கொண்டுஉலகங்களெங்கு
ம்நிறைந்துபெருமூச்சுகளைவிட்டு அண்டகோளகையும்அதிர்ந்துவிடுகிடா
ய்க்கும்படிக்குக்கெற்சித்து வெண்டயங்கள் கலீல்கலீலெனச் சத்திக்கப்
பாதங்களைப்பெயர்த்துவைத்து கிண்கிணிமாலைகள்கழுத்திற்சலசலென்ற
திரமுசுப்பானது பருத்தோங்கிஅசையபாரித்துத்திரண்டு கூர்மையாய்
நீண்டிருக்கும்கொம்புகள் திசைகளைக்குத்திப் பிளத்தும் மலையினிடத்
திருந்தஅருவிபெருகுமாறுபோல சத்தமேகங்களின் வயற்றைப்பீறித்

ளாப்பெருக்கியும் கணப்போதில் ஆயிரக்காதவழிசெல்லும் சூரியன்தே
ளவாட்டியும் விசாலமானபூமியை பாதங்களினுலெற்றிப்பிளந்து அஷ்
டதிசைகளைத்தாங்கிநிற்கும் அயிராபதமுதலிய யானைகளையிடித்துத்தள்
ளியும் பூமிக்கச்சாணியாகப் பாதலவரையிற்போய் வானவரையிலுயர்ந்
திராநின்ற மகம்மேருபர்வதத்தைக்குலுங்கத்தாக்கியும் அஷ்டகுலாசல
ங்களை நூறுக்கியும் மன்னுயிர்கலங்கி வாடும்படிக்கு எக்காளம்போட்டுக்
கொண்டுகால்களினுல்பூமியைப்பெயர்த்துசமுத்திரத்தைத்தூர்த்தும்வான
த்தைமறைத்துயிமையாநாட்டமுடையதேவர்க்கள் விழிகளைமூடி யோ
டத்துரத்தியும் பெரும்புறக்கடலைக்கலக்கி அலைகளைமோதி ஓசையெழா
மல்அடக்கியும் இவையன்றியும்பாதலத்திலிருக்கின்ற சேஷனுதியசர்ப
ங்கள்யிடிகளின் பெருகசிற்பட்டு வாடுவதைப்போலத் திசைத்தேங்கும்
படிக்குபூமியைக்கால்களினுற்றுக்கியும் அண்டகோளகை நெக்குவிட்ட
திரமுட்டியும் சொர்க்கமத்திய பாதலமெங்கும் கிடுகிடெனநடுங்கக் கூந்
தலிட்டும்ஷறியெழுந்த அப்படையின்சவுரியபராக்கிறமங்களைச்சவுனகா
திரிஷிகளே, விரித்துச்சொல்வதற்குஆயிரநாப்படைத்தசேட
னுலும் முடிவதன்றெனப்பேசுவோமாகில் ஒருவாயைப்பெற்றிருக்கும்
என்னுற்கூடுவதோ அதன்பெருமைகளைத் திருக்கயிலாய பர்வதத்தைக்
காவல்கொண்டிருக்கின்ற நந்திதேவரோதெரிவர் யித்தகைய மகிமைகளை
ப்பெற்ற ரிஷபாஸ்திரமானது வீறி காருடாஸ்த்திரத்தின்வலியையும்செ
ய்கைகளையும் நிமைப்போதிலடக்கிக் கவளீகரமாயுட்கொண்டு காலனைப்
போலச்சீறிச்சத்துருவைச்சின்னபின்னப்படக் கண்டிப்பேனென்று உரு
த்துவருவதைப்பானுகோபன்கண்டுசீக்கிரமாய்எமாஸ்திரத்தையெடுத்து
மந்திரபூர்வகமாய்வில்லிற்பூட்டிக்கரவேகமாய்ப்பிறையோகித்தனன் அ
ந்தப்படை அதிகமகிமைகளைக்காட்டி ஆர்ப்பாட்டங்களைச்செய்துகொண்
டுவந்துநந்திப்படையுடனெதுத்து வலியற்று மங்கிக்குறைந்து நாசப்
பட்டுப்போயது ரிஷபாஸ்திரம்முன்னினும் அதிகஉற்பாதங்களைக்காட்
டிச்சமீபித்துவரும்போது பானுகோபன் அதன்வலியையும் வேகத்தையும்
நிதானித்துசறகறெனப்பற்களைக்கடித்து உதட்டையதுக்கிவிழிகளிற்றீ
ப்பொறிசிதறக்கோபித்துத் துரிதமாய் பிற்மாஸ்திரத்தை யெடுத்துப்பூ
சித்துவில்லிற்பூட்டி ஆகாணுந்தபரியந்த மிழுத்துச்செலுத்திய காலத்தி
ல்வானத்திற்சென்று வடவையைப்போற் சீறிக் கொக்கரித்து கலகலென
நகைத்துகணக்கிறந்த திவ்வியபாண கோடிகளைப்படைத்து அனலைவீசி
பிறசண்டமாருதத்தைப்பெருக்கி உலகங்களனைத்துந்திடுக்கிட்டுநடுங்கு
ம்படிக்குஆர்ப்பாட்டங்களைச்செய்துகொண்டு வேகமாய்வந்துபரமசிவ
வாகனமாகிய நந்திப்படையைக்கண்டவுடன் நடுநடுங்கிக் கரங்களைக்கூ

ப்பிரதாசனுமிராட்சதருமான்வசப்பட்டிருந்தபடியால் அவன்சோதி
ச்சையின்படிக்குவந்தேன் தேவரீர்சீறிப் போந்தகாரணந் தெரியமாட்
டா தாகலால்அடியேன்பேரிற்கோபிக்கவேண்டாம்கோபிக்க வேண்டா
மென்று பலவிதங்களிற்போற்றித் துதிப்பதற் கிரங்கிக் கடாட்சித்தமா
த்திரத்திற் பிழைத்தோமென்று பிரமன்படைவிட்டவனிடத்திற்சேர்ந்த
து, வானத்தில்வேடிக்கை பார்த்திருந்த தேவர்க்கள் யிதனைக்கண்டமாத்
திரத்திற் கரங்களைக்கொட்டி அண்டங்களதிரநகைத்து செயங்களைக்கொ
ண்டாடினர், அக்காலத்திற்சூரன்பிள்ளை காலாந்தகனைப்போலக்கொதித்
துத் தேவர்க்களைப்பார்த்து நல்லகாரியம்நல்லகாரியமெனக்கறுவிதட்சிண
த்தில்நாராயணாஸ்திரத்தையெடுத்து சோடசவுபசாரங்களுடன் வழிபட்
டுக்கரவேகமாய்ப்பிறையோகித்துச்சிங்கநாதஞ் செய்தனன், அந்ததேவா
ஸ்திரம் வெளிப்பட்டவுடன் பஞ்சாயுதபாணிகளாக அளவற்றவிண்டுக்க
ளினுருக்களைக்காட்டி மாய்கைகளை விரித்து எங்கும் யிருளின் பெருக்
கத்தைமூடி அதிகஉக்கறத்துடன் சற்பத்தைப்போலச்சீறிவந்து நந்திமா
ப்படையுடனெதிர்த்துப் பின்னிடையாமல் அகோரமாகிய உயித்தியங்க
ளைச்செய்வதையும் அவற்றின்கொடுமையினாற் சீவராசிகள்படுந் துன்பங்
களையும் வீரவாகுதேவர்கண்டிரங்கி அதிதீவரமாய்முற்காலத்தில்விஷ்ணு
வானவர் நாரசிங்க வடிவைக்கொண்டு உலகங்கள் தத்தளிக்கச் சீறியகொ
டுமையையடக்கப் பரமசிவகடாட்சத்தினாற் சரபப்பட்சியாக அவதரித்
தவீரபத்திராஸ்திரத்தைக்கரத்திற்கொண்டுபூசித்துவணங்கிச் செலுத்தின
ர், அந்ததிவ்வியாஸ்திரம் வானத்தெழுந்துசீறி சணக்கிறந்த சரபசாற்தூ
லஉருக்களைக்காட்டிவடவைக்கனலும்ஆலகாலமும்நடுங்கியஞ்சக்கொதித்
துவேகமாய்வந்துநந்திப்படையுடன்போராடுகின்றநாராயணாஸ்திரத்தை
மடக்கிக்கொண்டு ஆயிரங்கிரணங்களைவீசியெழுந்த சூரியனைக்கண்டசந்
திரன்பிரகாசமடங்கி மங்கிப்போவதைப்போல அதன் வீருப்பையடக்
கித்துரத்திவிட்டது இவ்விதங்களாகத்தான்செலுத்திய தேவப்படைகளை
னைத்தும்பிறையோசனப்படாமற் பின்னிடுவதையும்பகைவன்படைவிறி
யிருப்பதையும் பானுகோபன்கண்டு திடுக்கிட்டுயிந்ததிவ்வியபாணமான
துமற்றெந்தப்படையாலழிபட்டுப்போமென்றுயோசித்துநிமைப்போ
திற்சராசரப்பிரபஞ்சங்களைவாட்டிச் சாம்பலாக்கவல்ல பாசுபதாஸ்திர
த்தையெடுத்துத் திருமஞ்சனதூபதீபமுதலிய சோடச வுபசாரங்களையு
ம்மானசபூசையினால்முடித்து பத்திபூர்வகமாகத் துதித்துவாழ்த்தி வில்
விற்பூட்டி வட்டாகாரமாகவளைய வலித்துப் பிறையோகித்தான் யிப்படி
க்குத்தமது பிதாவானவர்கடாட்சித்திருந்தசிறந்தபாணத்தைப்பகைவன்
செலுத்தியதை வீரவாகுதேவர் தெரிந்தமாத்திரத்தில் யிதற்குவீரபத்திர

ப்படை நிறுவகிக்கமாட்டாதென நிதானித்தவராய்த் துரிதமாய்த் தம்மி
டத்திலிருக்கின்ற பாசுபதத்தையெடுத்து மானசபூசையினால் வேண்டும்
உபசாரங்களைக்குறைவற நிரப்பி வணங்கிப்போற்றிசத்திராதிவிடுத்தபா
ணத்தினால் உலகங்களுக்கு யாதொருதுன்பங்களும்சம்பவித்துவாடாத
படிக்குப்பாதுகாத்து ரட்சிப்பதுமல்லாமல் பகைவன்படையையும் மா
ற்றித் திரும்பும்படியாகக் கிருபைசெய்யவேண்டுமென்றிரந்து தனுசிற்
பூட்டி மந்திரபூர்வகமாகச் செலுத்திய தறுவாயிற் பலமகிமைகளுடன்
வேகமாய்ப்போயெதுத்து அவ்விருதெய்விகப்படைகளும்சீறிலோசநா
யகனாகிய உருத்திரவடிவங்களைக் காட்டி பிறசண்டமாருதத்தை ஒருபுற
த்திலெழுப்பியும் உலகங்களையழிக்கவல்ல வடவாமுகாக்கினியை ஒருபுற
த்திற்காட்டியும் ஆலகாலவிஷத்தைஒருபுறத்திற்பெருக்கியும்தாபாக்கினி
யையும் புகைப்படலங்களையும்ஒருபுறத்திலுண்டுபண்ணியும் ஞாளிவாக
னங்களில்பவனிவரும்வயிரவர்களைச்சிருஷ்டித்தும் அளவிறந்தபத்திரகா
ளிகளைச்சிங்கவாகனங்களில்வர உண்டுபண்ணியும்சூலங்களைகரத்திற்றாங்
கியிருக்கின்றவீரபத்திரர்களைவெளியிட்டும்உக்கிரமானவிழிகளையுடைய
சிங்கவாகனங்களின்மீது துற்காதேவிகளை வரவழைத்தும்யாளிவாகனங்க
ளின்மீதிற் சண்டிகளைத்தோற்றக்காட்டியும் பூதபசாச டாகினி வருக்கங்
களைக்கக்கியும் கடாந்தகாரமாகிய யிருளைப்பெருக்கியும் சடசடத்த தொ
னிகளுடன் வீறும்அனலைக்காட்டியும் கொடியவிஷப்பற்களையுடையச
ற்பங்களைப்படைத்தும்–எமன்–காலன்–கிங்கிலியரைச்சிருஷ்டித்தும்ச
த்தசாகரப்பெருக்குகளைக்காட்டியும்–இடி–மின்னல்–குமுறல்களைப்பெ
ருக்கியும் அக்கினிமழையைப்பொழிந்தும் மேகசாலங்களைப் பெருக்கி
யும் மேருவாகிய குலகிரிகளையொத்த பற்வதங்களை உண்டுபண்ணி பூமி
யைமறைத்தும் ஆயிரங்கிறணங்களைப்பரப்பிப் பிரளயவெள்ளத்தை வற
ளச்செய்யும் சூரியர்களைப்படைத்தும்–யானை–புலி–சிங்கம்–சறடி–குதி
ரை–முகங்களை ஒன்றனந்தமாகப் பெற்றிருக்கின்ற அவுணர் இராக்கத
ரைப்படைத்தும் கோடானகோடிகரங்களும் ஒருமுகமும் அனந்தமுக
ங்களும் யிருகரங்களும் பருத்தவயறும் பிலத்தையொத்தவாயும் அக்கி
னிக்குச்சமானமாகிய சிவந்தவிழிகளையும் செக்கர்வானத்தையொத்த ச
டைகளையும்பெற்று முத்தலைச்சூலங்களைக்கொண்ட சடாமுனிக் கூட்ட
ங்களைப்படைத்தும் சிங்கமாகியமிருகங்களினும் தேர்விமானங்களினு
ம்ஆரோகணித்து வானவெல்லையெங்கும் பாய்ந்துசீறிஒப்பற்றதேவாஸ்
திரங்கள் அர்த்தச்சந்திரமுதலிய பாணங்கள்–தோமரம்–பிண்டிபாலம்–
கப்பணம்–முசலம்–சக்கரம்– எழு– மழு–தண்டம் – ஈட்டி– எறிவேல்–
முசுண்டி–கவண்–நாஞ்சில்–யிருப்புலக்கை–முத்தலைச்சூலம்–வச்சிராயுத

ம்-வேல்-வாள்- இவ்விதப்படைகளை ஒன்றனந்தகோடிகளாகச்செலுத்தி
யிருதிறச்சேனைகளையும் வாட்டும்படிக்கு வெவ்வேறுருக்களைத் தாங்கியி
ருக்கின்ற உருத்திரகணங்களைப்படைத்தும்பலபிரமாஸ்திரம் நாராயண
ஸ்திரமுதலிய தேவப்படைகளைப்படைத்தும் சுந்தரமுள்ள இந்திரதனு
சுக்கள் அளவற்றதையுண்டுபண்ணியும்- எமதண்டம்-கால பாசங்களைப்
பெருக்கியும் யிவ்விதங்களாகிய பற்பலகாட்சிகளைக்காட்டி அவ்விருபாசு
பதங்களும் மண்விண்ணெனவிடங்களினுமுலவி சறுத்தசெல சமற்றி
பெற்றகடலினிடத்தும் பெரும்புறவெள்ளத்தினும் சக்கிறவாளகிரி மீதி
னும்அண்டப்பித்திகைச் சார்பினும்பாதலத்தினும் திசைகளினும் பரந்
து அதிகவினோதங்களைச்செய்தும்அண்டத்துக்கப்புறங்களினோடிக் கொ
டியபோர்களைவிளைத்தும் இவ்வுற்பாதங்களினாற் சத்தசாகரங்கள் பெரு
ம்புறக்கடல்சுவறி வெள்ளிடையாகக் காட்டவும் அதுகளிற்பட்ட திமி
திமிங்கலகிலங்கள் மகரமச்சங்கள் புழுக்களைப்போலப் பதை பதைத்து
ம்துடிதுடித்தும் நொடித்தும்சுளித்தும் யிளைத்தும்களைத்தும்உளைத்து
ம்படாதபாடுகளைப்பெற்றுவாடவும் ஆகாயகெங்கையைப்பருகிசெலப்
பரிசமற்று வெளியாகக்காட்டியும் அண்டத்துக்கப்புறத்திற்பரவியிருந்
தபெருவெள்ளஞ்சுவறிக்காட்டக்கிறிகித்தும் அப்படைகளின் வெப்பத்
தினால் மகம்மேருவும் பிளந்தும் நட்சத்திர ராசிகள் நெற்பொரியைப்
போலிறையவும் சூரியன் ரதமும் சந்திரன்விமானமும் பங்கப்பட்டுஅ
வர்களும் வருந்திவாடவும் திசையானைகள் தாபரிக்கப்படாமையால்வீறி
ட்டுசகலமும் வடவைவெப்பமடங்கிப்பதுங்கவும் கீழுலகவடுக்குகளு
ம்மேலுலகவடுக்குகளும்குலைந்து மாறுபடவும்சராசரங்கள் திடுக்கிட்டு
மங்கவும் வானத்தில்வேடிக்கைபார்த்திருந்த தேவர்கள்ரிஷிகள்முதலா
னவர்கள் திகைத்துப்பதைத்துத் திசைகெட்டோடவும் பூமண்டலத்தை
த்தாங்கியிருந்த கூர்மமும் சேடனும்வாடவும் சத்தமேகங்களும் பசை
யற்றுப்பஞ்சையொப்பக் காற்றிற்பறக்கவும் யிவ்விதவுற்பாதங்கள்நே
ர்ந்ததறுவாயில் வைகுந்தநகரத்திற் சிரோரத்தினங்கள் சொலித்திருக்கு
ம்ஆயிரம்பணமகுடங்களைக் கவித்துஅணையாகவிருக்கின்ற சேஷசயன
த்திற் பள்ளிகொண்டிருக்கும் ஆதிமூலமாகிய விஷ்ணுவினது உபையச
ரணாரவிந்தங்களை வருடிக்கொண்டிருந்த செந்தாமரைப் புஷ்பவாசியா
கியமகாலட்சுமியும் பூமிதேவியும் யிதென்ன உற்பாதமாக விருக்கின்ற
தெனப்பயந்து நாயகனைக்கட்டியணையவும் மனோவதிப்பட்டணத்தில்
நவரத்தினமயமாகிய மண்டபத்தில் வீற்றிருந்து கல்வித்திறங்களை ஆரா
ய்ந்திருந்த வெண்டாமரை வாசியாகிய சரஸ்பதியம்மனானவள் கலங்கி
மருண்டோட ரிஷிகளாதியாகிய பெரியோர்கள்சூழச் சிங்காதனத்தில்வீ

ற்றிருந்து வசனித்துக்கொண்டிருந்ததனதுகணவன்பிறமதேவனைக்கட்
டியணைத்திருக்கவும் இரதிதேவியானவள்திகைத்தலைந்து கருப்புவில்லை
யுடையமன்மதனைத்தழுவிக்கொள்ளவும்ரிஷியத்தினிகள்கலங்கித்தமது
கணவர்மேல்விழுந்து தழுவியிருக்கவும் யிளவயனைத்தும்யிப்பாடுகள்ய
டுமுன்னிலையில் பூதப்படைகள் ஐம்புலன்களும்நிலைபிறழ்ந்து கைகால்
கள்நடுங்கயிளைத்துச்சோரவும் இலக்கர்மதிமருண்டுவாடவும் எண்மர்பய
ப்பிருந்நியினுற் றிகைத்துமன்னவனைச்சூழ்ந்திருக்கவுமாயினர், அந்த
துவாயில் ராட்சதப்பாதுகாவனைவருங் குலைகுலைத்து நடுநடுங்கிச் சின்னபி
ன்னப்பட்டுச் சோர்ந்திறந்தனர், பற்வதாகிறுதியாகவானத்தையளாவுநி
ன்றதோரணிகள் பொடிப்பொடியாய்ச் சிதறவும் மதயானைக்கூட்டங்க
ள்வெறியடங்கிவீழ்ந்திட்டோளவும் தத்தித்தாவும்புரவிப்பத்திகள் வாயுவை
ப்போலத் திசைகெட்டோடிமாளவும் யிப்படிக்குச்சதுரங்கச்சேனைகளை
யும்பறிகொடுத்து பானுகோபன் அத்தநுவாயில்எசாங்கியாதநின்றனன்,
இதுவுமல்லாமல் மயேந்திரபுரியிலிருந்த ராட்சதர்பெண்டு பிள்ளைகளு
டன்இக்கொடுமைகளுக்கஞ்சித்திகைத்துமூலைகளினும் முடுக்குகளினும்
பதுங்கிவாடவும் பதினுலுலகங்களில் வாசஞ்செய்கின்றபிராணிகளனைத்
தும்பயப்பிருந்திகொண்டு யிதுதானேபிரளயகாலமெனத் துக்கசாகரத்
திற்பட்டுச்சோரவும் அக்காலத்திலுண்டாகிய பேரொலியினாலும்அதிர்ச்சி
யினாலும்தீப்படலத்தினாலும்அண்டவடுக்குகள்குலைந்துதடுமாறவும்சூரி
யன்கதிதப்பியோடியலையவும் மயேந்திரபுரியென்னும் கன்னிக்குமங்கி
லியத்தைப்போலவிளங்கும் சூான்சபாமண்டபமெங்குமதிர்ந்தும்பிதி
ர்ந்தும்பொடிந்தும்உதிர்ந்தும்விழுந்தும்இப்படிக்குப்பட்டபாட்டி
னால் அவடத்தில்நெருங்கியிருந்த மந்திரிபிறதானிகள் மன்னமண்டலீக
ர்படைத்தலைவர் பெரியோர்கள் முதலாகக்கலைந்துங்குலைந்தும்உலைந்து
ம்அலைந்தும்ஒடுங்கி அல்லோல கல்லோலப்படுவதை ராசாதிராசன்தெ
ரிந்து யிதுவென்னபுதுமையாகவிருக்கின்றது சீக்கிரமா யோடிப்பாத்
துவாருங்கோளென்று அளவற்றதூதர்களைத்துரத்தியதநுவாயில் அவர்க
ள்வாயுவினுங் கடுகியோடிப்பார்க்குமிடத்தில் முழிகள்தெறித்து கால்க
ளொடிந்து கலங்கிவிழுந்தவர்கள்போகத் தப்பினசிலர்பதுங்கித் தப்பி
த்துக்கொண்டு வாய்புலரப்பெருமூச்செறிந்துகொண்டு வேகமாகவந்து
ராசபரமேஸ்பரனை வணங்கி நாமெழாமற்குளறி யிதனை விண்ணப்பஞ்
செய்வதாயினர், சுவாமிகேட்டருள்க தேவரீர்திருக் குமாரன் தூதனைம
டக்கிக்கொண்டு கொடியபாணங்களைச்செலுத்திப் போராடிமுடியாமல்
தேவாஸ்திரங்களைப் பலவாகச்செலுத்தியும்பிறையோசனப்படாதகாரண
த்தினுல் அதிககோபங்கொண்டு புடைகளுக் காசாகவிருக்கின்ற யாசுபு

தாஸ்திரத்தை வீரவாகுமுதலிய சத்துராதிகளை வாட்டும்படிக்குப் பிறை
யோகித்தனன், அதைக்கண்ட தூதனும் தன்னிடத்திலிருந்தபாசுபதத்தை
ச்செலுத்தியதால் அவ்விருபாணங்களுஞ்சீறி தேவப்படைகள் உருக்களை
யும் மற்றகொடுமைகளுள்ளதுகளனைத்தையும்பெருக்கி உலகங்களைக்க
லக்கிவாட்டுகின்றது யிவ்விடத்தில்நேர்ந்தசம்பவங்கள் அதனால்விளைந்தது
இதுகளையெல்லாம்திஷ்டாந்திரமாகக்கண்டுபோனவர்களிற்பிராணன்த
ப்பிச் சிலர்வர்த்தனமென்று சொல்லியதைச்சூரன் நிதானித்துபானுகோப
ன் லோகநாயகன்படையைச் செலுத்தியும் யின்னமும் பகைவனாவென்
றவனல்ல ஐஐயோ, தூதன்தூதனென்று யிகழ்ந்து பேசினேனும் உருவத்
திறனும் செய்கையினாலும்பிறையோசனமொன்றையுங்காணவில்லை அவ
னவன் வலிமையையும் சூரத்தையும் நிதானித்தறிந்து அதற்கடுத்தமுயற்சிகளை
த்தேடிப் போர்செய்துவெல்வது வீரனாயிருப்பவனுக் கழகும் ஆண்
மையுமாம் நமதுகுமாரன்செய்கை யென்னமாய்முடியுமோவென்றசூ
ரபதுமன் எண்ணமிட்டுக்கொண்டிருந்தனன், இவ்விதமாய் சராசரப்பி
ரபஞ்சங்களனைத்தும் திகைத்துவாடும்படிக்குச் சற்வசங்காரக் கடவுளா
னவர்யிரண்டுருவைக்கொண்டுதிருவிளையாடல்களைச்செய்கின்றதைப்போ
லப் பாசுபதங்கள்சீறி ஒன்றுக்கொன்று பின்னிடையாமற் சிலநேரம்வி
னைதப்போராக்காட்டியவுடன் தங்களிடத் துண்டாகிய பாணசோதிக
ள்முதலியவற்றைத் திருப்பிக்கொண்டுதங்கள்கொடுமையினால்மாறுபட்
ட அண்டங்கள்புவனங்கள் விண்மண் பாதலமாதியாகிய வஸ்துக்களை எ
தாப்பிறகாரம் நிலைபெறச்செய்து சத்துராதிகளாகியராட்சதப் பாதகர் த
விரமற்றசீவராசிகளனைத்தையும் வாட்டமொழித்து உயிர்பெற்று வீறி
விளங்கச்செய்துதிரும்பிதங்களைச்செலுத்தியவீரர்களிடத்திற்சேர்ந்தது
ரிஷபாஸ்திரமும் வீரவாகுதேவனாக்கலந்திருந்தது இதனைக்கண்டதேவ
ர்க்கள் சந்தோஷப்பெருக்கினாற் கரங்களைத்தட்டிநகைத்து பாசுபதத்தி
னாற்பாதகன்செயம் பெறுதகாரணத்தினால் நாசகாலம்சமீபித்து விட்ட
தென்பதற்கையமில்லை இனிநமதுதுயரங்களைப்போக்கிச் சவுக்கியப் ப
டும்பேறுமுண்டெனக்களித் திருக்கின்றதறுவாயில் பானுகோபன்செலு
த்தியபாணம் வியர்த்தமாகத் திரும்பிவிட்டவுடன் திகைத்து சமுத்திரத்
தைப்போலச்சூழ்ந்திரா ந்திருந்த ரதகெச துரகபதாதிகளைக் காணாதவ
னுய்எங்கித்தனியனாக நிற்பவன்யிதனைச்சிந்திப்பதாயினன், கணப்போ
திற்சராசரப்பிறபஞ்சங்களைத்தகித்துச் சாம்பலாக்கவல்ல பாசுபதாஸ்திர
த்தைப்பிறையோகித்தனம் பகைவனாச்செயங் கொள்ளாமல் அபலமாக
த்திரும்பிவிட்டது, இனிசெலுத்துவதற்கு அதனிலும்சிறந்த பாணமெ
ன்னயிருக்கின்றது மேலும்பெருத்துவர்த்த சேனைவெள்ளங்களனைத்தை

யும் மாளக்கொடுத்துஏகாங்கியாய்க்கூப்பிட்டகுரலுக்கேனென்பவரொ
ருவரின்றி நின்றேன் பகைவரோவீறியிருக்கின்றனர், இதற்கென் செய்
வதென்று வாடிவருந்தி இனிமாய்கைப் பெருக்கினாலல்லது இந்ததாத
னைச்செயிக்கவொண்ணாதென நிதானித்துதுரிதமாய் சுக்கிராசிரியன் தன
க்குபதேசித்திருந்த மோகனமந்திரமொன்றைச்செபித்து அதன்முயற்
சியினால் தன்றேகத்தைமறைத்து புகையுருக்கொண்டு வானத்திலெழு
ம்பினன், அதைக்கண்டபூதப்படைகள் முதற்றினத்தைப்போலவே இக்
காலத்திலும்பயந்து பாதகன்மாயமாயோடிப்போயினன் போயினனெ
ன்றுகரங்களைக்கொட்டிக்கொக்கரித்து சிங்கநாதங்கள் அட்டகாசங்களை
ச்செய்து செயவுச்சாகங்களுட னிருக்கின்ற தறுவாயிற் பகற்போதுகழி
ந்துசூரியன்மேற்புறக்கடலில் மறைந்தகாட்சியெப்படிக்கிருந்ததெனி
ல், பாதகன்சற்றுநேரத்தில் மோகனாஸ்திரத்தைச்செலுத்தவிருக்கின்றன
ன், அதன்மகிமையினால் நம்மவர்களனைவரும் மாண்டுபோகவரும் அந்
தகோரத்தை என்விழிகளைக்கொண்டு பார்க்கமாட்டேன் மேலும் நாமி
ருப்போமாகில்என்செய்வனோவென்கின்ற ஏக்கறவினால்பிராணனைத்தப்
பிப்பிழைக்கநினைந்து ஓடியொளித்தவனைப் போலத்தோற்றியது, அத்த
றுவாயில் வீரவாகுதேவர்தன் துணைவர் முதலாகியபிற்முகாளைப்பார்த்து
யித்தினமும்பாதகனிறந்தவனல்லமாய்கையின்மூலமாய்தப்பித்துக்கொ
ண்டோடினன், இனிநாம்செய்யவேண்டியதென்னென்று வினாவிய மு
ன்னிலையிற் சேவித்துச்சமுத்திரத்தைப் போலயிரைந்துவந்தநால்வகைச்
சேனாசமுத்திரத்தையும்மாளக்கொடுத்து நிருவகிக்கப்படாமற்பேடியை
ப்போல முதுகாட்டிமறைந்தான்எதிர்ப்பவரொருவரையுங்காண்கிலோ
ம்மேலும் சூரியபகவானும் அஸ்தமித்தனர், ஆதலாற்சேனைகளுடன்பா
சறையைச்சேர்ந்துதேவாதிதேவனாகிய கந்தசுவாமியைத்தெரிசித்துவண
ங்கியிருந்துயிரவு கழிந்தவுடன் நாளையத்தினம்காலமே உயித்தியகளத்
தைச்சேர்ந்து மேல்நடக்கவேண்டியதை யோசிப்பதுதகுதியாகக்காணு
கின்றது அப்பால்தேவரீர் சித்தப்படிக்கு நடக்கக்காத்திருக்கின்றனமெ
ன்று சொன்னதைககேட்டு நல்லகாரியம் அவ்வாறேநமதுசற்கதனைச்சே
வித்திருந்துவருவது காரியமெனச்சம்மதித்து மீட்சி பேரிகையை யறை
விக்கும்படிக்குச்சட்டளையிட்டனர் யிந்தகாரணங்களனைத்தையும்வான
த்தில்மறைந்திருக்கின்ற பானுகோபன்தெரிந்து யிதனை நினைப்பதாயின
ன், பரமசிவத்தின்பரிபூரணகடாட்சத்தைப்பெற்று வீராதிவீரனாய் ஆயி
ரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகத்தன் னாணையைச்செலுத்தி அகண்
டமண்டலாதீஸ்பரனாக வாழுகின்றசூரபதுமன்பிள்ளையானவன் முதல்நா
ளைய உயித்தியமுனையிற் புறந்தந்தோடினனென்ற அபக்கியாதியாகிய

சொல்லெங்கும்பாவி யிழிபாய்வசனித் திருக்கின்றனர், அத்துடன் யித்
தினமும் பகைவருக்கஞ்சி மறைந்து போனானென்னும் பழிப்புரையை
ப்பெறுவேனாகில் இனி யென்னை யாவர்மதிக்கப்போகிறார்கள் ஸ்ரீசாதிரனு
ம்வளமாகப் பேசிக்கொள்ளவரும் அகண்டசெல்வச் சம்பத்தைப்பெ
ற்றுசெயசாலியாக விருந்தவனொருகாலம் எதுத்துவந்த பகைவருடன்
போராடிவெல்லத் திராணியில்லாமல் திரும்புவனாகில் அவன்சவுக்கியத்
தைக்கோரியிருக்கப்பட்ட தாய்தந்தையர் பெண்சாதிபுத்திரமித்திரர்கள்
மதிப்பற்று அசட்டையாகப் பார்ப்பர் சுயசெனங்களே மாறுபடுவரெ
னச்சொல்லுவோமாகில் அன்னியர்கள் அவமதித் திகழ்வதைப் பேசவும்
வேண்டுமோ மேலும்யித்தினமும் போரிலிளைத்துவந்தன னென்னும்
செதிலையாராசாதிராசன்கேழ்விப்படுவனாயின் றவுத்திராகாரமாகக் கோபித்
துயிப்படிக்கொத்தபேதையிந்த பட்டணத்திலிருப்பினும் நமக்குவசை
நேருவதன்றியில் வீரராயிருக்கப்பட்டவர்களுக்குயிதொருமுன்னிலையா
ய்நேர்ந்து அதிசூரனாகவிருந்த ராசகுமாரன் அபசெயப்பட்டு வந்தகா
லத்தில் அரசன் அவனையென்னசெய்தானென்று மேல்நடக்க விருக்கின்
றபோரில் பிராணனுக்குத் துணிந்து சண்டைசொடுக்கமதியாமல்உயிரை
த்தப்பித்துக்கொண்டு திரியவரும் ஆதலால்ராசகுமாரனை யிந்தபட்டண
த்தைவிட்டு துரத்திவிடக் கடவீர்களெனக் கட்டளையிடவரும் யிதுவும
ல்லாமற் சூரியனைத்தளைசெய்த வீராதிவீரனென்று யிதுவரையிற் சகலரு
ம்நம்மைமதித்துவந்த கெம்பீரத்துக்கும் அழிவுநேருவதல்லாமல் ஆயிர
த்தெட்டண்டங்களிலும் ஆக்கியாசக்கிறத்தைச்செலுத்தி பலயுகங்களாக
எதிரின்றிப் பரிபாலனஞ்செய்துவந்த பிதாவின்வெற்றிக்கும் யிழிவுநே
ரும்யிவைநிற்க வீரனாகவிருப்பவன் எத்தகைய செயசாலிகளாகிய பகை
வர்வந்தெதுத்தபோதிலும் தீரனாய்சேனைகளுக்குமுந்திநின்று தன்னாற்
கூடியவளவில் அகோரமாகியசண்டையைச் செய்து பகைவரைவெற்றி
கொண்டுசெயசாலியாய்ப் பலரும்போற்றத்தக்ககீர்த்தியைநாட்டவேண்
டும் அல்லதுசத்திராதிகள்முனையிற்பின்னடிவையாமற்பொருதுவீரசொ
ர்க்கத்தையாவது சேரவேண்டும் யிவ்விரண்டிலொன்றைப்பெறுவது அ
ரசர்களுக்கடுத்த நீதியாகவும் சாத்திர யுக்த்தமாகவுமிருக்கின்றது - ஆத
லால் முதல்நாளையைப்போலவே யின்றைக்கும்போர்செய்து வருந்தியி
டைந்தானென்னும்பழிப்புரையைப்பெறுவதுஎன்னொத்தவனுக்கடாது
மேலும்வீரத்துக்கும்தகுந்ததன்று சாமபேததானதண்டமென்னும்சது
ர்விததந்திரங்களினாற் பகைவரைவென்று வெற்றிபெறுவதே அரசர்களு
க்கடுத்த நீதியாகக்காணப்படுவதால் வஞ்சகப்போரைச் செய்தாவது தாத
ன்முதலியவர்களைச் செயங்கொண்டு பட்டணத்துக்குப்போவது அழ

கும்ஆண்மையுமாம் அச்செய்கையை யாவருமிகழாமல் அரசர்களுக்கடு
த்தநால்வகைஉபாயங்களினென்றினுற்செயப்பிறதாயத்தைக்கொண்டா
ன்யிவனேசூரனென்று பலரும் புகழ்ந்து பேசிக்கொள்வர் அஃதன்றிமு
ன்னாம்பெற்றிருக்கின்ற அபவாதச்சொல்லும் நிவற்தியாகிவிடும் நல்லது
யிக்கருமத்தை வுறுதியாகநினைந்து எதிரில்நின்றமோகனப் படைகளைச்
செலுத்திவெல்லத்துணிவேனாகில்தூதன்அவ்வவைகளுக்கடுத்த மறுகணை
களைப்போக்கி தடுத்துவாட்டுவன் ஆதலாற்சமற்களத்திற் சின்னபின்னப்
பட்டிறத்தான் முதுகுகாட்டியோடினனென்று வீரர்களாக விருப்பவர்
பழிப்புரையாடுவதினும் மறைவிடத்திருந்து திவ்வியபாணத்தைச்செலு
த்தியாவது பகைவரை அதப்படுத்தி செயப்பிறதாபத்துடன் திரும்பக்க
டவன் ஒருகாலம்மீட்டும் தேவாஸ்திரங்களைப் பிறையோகிப்பேனாகிலும்
பலபலவேடிக்கைப் போரைவிளைத்து திரும்புவதல்லது அவற்றினாற்பி
றையோசனத்தைக்கண்டிலன் அல்லதுயின்னமும் நம்மிடத்திலிருக்கின்ற
திவ்வியபாணங்களைச்செலுத்திப் பார்ப்போமென்றால் தூதன்அவற்றிற்
குத் தகுந்தபடைகளை மாறுதாண்டித்தடுப்பன்யிதற்குச் சந்தேகமில்லை
வுடனே நாம் யிவடத்திலிருப்பது வெளிப்படையாகத் தெரிந்துபோ
ம்அக்காலத்திற்சத்திராதிகள் விண்ணிடத்திலும்வந்துவளைத்துக்கொண்டு
கொடியபோரைச்செய்யுமுன்னிலையில் முன்னமேஎதிரிபாணத்தினால்வ
ருந்திவலியற்று கைகால்களோய்ந்திருக்கின்றஎன்னால் அவர்களுடனெதி
த்துவாதாடமுடியாது மறைந்தோடிப்போகவும்விடார்கள் ஆதலாற்பல
பலயெண்ணியாவதென்னை அவர்கள்பாடிவீட்டுக்குத்திரும்புவதன்முன்
னாம் பகைவரைநொடிப்போதில் வளைந்துகொண்டு மதியைமயக்கி எம
கிங்கியரைப்போலப் புயங்களை யிறுகக்கட்டி வருத்திக் கொல்லவல்ல
மகிமையையுடைய மோகனப்படையை விரைவிற்செலுத்திச்செயப்பிற
தாபத்தைப்பெற்றுமீள்வது யித்தருணத்துக்கடுத்தஉபாயமாகக் காணுகி
ன்றதெனத் துணிவுகொண்டவனாய்த்தான் வருமுன்னிலையிற் பிரமகளா
கியமாயையநுக்கிறகஞ் செய்திருக்கின்றமோகனப்படையைத் தீவரமா
கவெடுத்து அதற்குரிய வழிபாடுகளைச்செய்து போற்றிச் சொல்லுவான்
ஓ,மோகனாஸ்திரமே நீபோய்தூதன்முதலாகிய வீரர்களையும்பூதவெள்ள
த்தையும்மடக்கிக்கொண்டுமதியைமயக்கிப் பிராணனையுண்டுசேர்த்துக்க
ட்டிக்கொண்டுபோய் கடல்களினந்தியத்திலிருக்கின்ற சுத்தோதகச்சமு
த்திரத்திற்சேர்த்து என்மனக்குறையை முடிப்பாயெனவேண்டி வில்லிற்
பூட்டிமந்திரபூர்வகமாகப் பிறையோகித்தான் அதுவெளிப்பட்டவுடன்
ஆழ்வினையான துயையநுழையு மென்பதுபோலத்தன்செய்கைகள் யாவ
ருக்குந்தோற்றாமற்படிக்கு வானத்தைக்கடந்துபூமியைச்சேர்த்துசே

டசாலைகளையுடையபூரணச்சந்திரோதயத்தைக்கண்டகடலைப்போலச்செ
யவுச்சாகங்களுடன் பாசறையைநோக்கித்திரும்புகின்றபூதப்படைகள்
செயசாலிகளாகியஎண்மர்இலக்கர்படைத்தலைவர்வெற்றிமாலைதரித்திருக்கி
ன்றபுசபெலபராக்கிரமசாலியாகியவீரவாகுதேவர்முதலானவர்களிருக்கி
ன்றவிடங்களிற் புகையைப்போலப்பரவி விஷப்பரிசம் பட்டுச்சோர்ப
வரைப்போல விழிகள்சொருகவிட்டு மதிமருண்டு குறூரமாகிய ஆலகா
லம்வெளிப்பட்டகாலத்திற் சகலபிராணிகளும் மெய்மறந்து வாடினது
க்கொப்பாக அவர்களுணர்ச்சியைமாற்றியதறுவாயிற்பிரேதங்களை யொ
த்துசகலரும்அரிக்கிடையாக விழுந்தார்கள் அத்தறுவாயில்மாயப்படை
தன்செயலைக்காட்டிச் சற்றுமிரக்கமில்லாமல் வீரவாகுதேவர் முதலான
வர்கள்உயிரையுண்டுதன்னைச்செலுத்தியராசகுமாரன்யிஷ்டப்படிக்குக்க
டலிற்கொண்டுபோய் சேர்க்கநினைந்து சற்வசங்காரகாலத்திற் பெருகிஉ
லகங்களைச் சிதைத்தழிக்கும் பிரசண்டவாயுவினுருப்பெற்று அண்டா
ண்டபுவனசராசரங்களைத்தகித்தழிக்கவல்லவடவாமுகாக்கினிக்கொப்பா
கப்பரவிஅலையோய்ந்த சுத்தசாகரங்களுக்குச்சமதையாகப்பரந்துவிழு
ந்துகிடக்கின்றவீராதிவீரர்களாகிய ஆயிரவெள்ளம்பூதப்படைகளையும் இ
லக்கர்படைத்தலைவர்களையும் ஒப்பற்றபராக்கிரமசாலியாகியவீரவாகுதே
வரையுஞ்சேர்த்துபட்சிக்கூட்டங்களைப்பற்றிவேடன் வலைப்பையிலடை
ப்பதுக்கொப்பாகப்பலவிதமாயிறுக்கிக்கட்டியெழுந்துவானவழிக்கொ
ண்டு பானுகோபன்மனதினுங்கடுகி அதிவேகமாகநடந்து-லவணம்-பா
ல்-தயிர்-நெய்-கருப்பஞ்சாறு-மது-வெனச்சொல்லநின்ற ஆறுசமுத்தி
ரங்களையும் நிமைப்போதிற்கடந்து சுத்தோதகச்சமுத்திரத்தைச் சேர்ந்
துவீரவாகுதேவர்முதலாகியபடை வீரரையும்பூதவெள்ளத்தையும்அந்நீ
ர்ப்பெருக்கிற்கொண்டுபோய் பாதலத்திற்சேர்த்து அம்மாயப்படையா
னது நாலுமூலைகளினும் பதலமாய்காவல் கொண்டிருந்தது இச்செய்கை
களனைத்தையும் வானத்திலிருந்த பாதகனாகிய பானுகோபன் கண்ட வுட
ன்மனவாட்டமொழிந்து களித்தவனாய்நாம்செலுத்திய திவ்வியப் படை
யானது வீரவாகுமுதலாகிய சகலரையும் தன்வயப்படுத்திக்கொண்டுகட்
டிக்கொண்டுபோய் சுத்தோதகக்கடலிற்சேர்த்தது நாம்நினைந்து செய்தஉ
பாயம்வெகுநேத்திநேத்தியென்று பதினாறுபற்களுந் தோற்றத்தக்கதா
சநகைத்து சந்தோஷசாகரத்திலழுந்தி புயங்கள்பூரித்தோங்கத் துரிதமா
ய்அத்தலத்தைக்கடந்து வானவழிக்கொண்டுபோய் நவரத்தின மயமாகி
யமாடமாளிகைகள் கூடகோபுரங்கள் அணியணியாக விளங்கிக் கொண்
டிருக்கும்நீண்டவீதிகளைப்படைத்து ராசதானியாகவிருக்கின்ற வீரமாம
கேந்திரபுரியிற் பிறவேசித்து ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனு

ய்கொடுங்கோல்செலுத்திவரும் சூரபதுமன்சிங்காதனத்தமர்ந்துமந்தி
ரிபிரதானிகளாதியாகப்போற்றிச்சூழக்குமாரன் வரவுக்கெதிர்பார்த்துகவ
லையுற்றிருக்கின்ற சபாமண்டபத்திற்சேர்ந்துபிதாவைக்கண்டு சேவித்து
அதிகஉச்சாகத்துடன் யிதனைச்சொல்லுவதாயினன், ஐயனே, யித்தினம்
அடியேன் உயித்தியகளத்திற் போனபின்புதேவரீர்கட்டளையின் படிக்கு
த்துதனைமடக்கிக்கொண்டு தேவாஸ்திரமுதலிய படைகளைக்கொண்டு ப
லவிதங்களினும் போராடிமுடியாமற் கடையில்பிதாமகள் கடாட்சித்தி
ருந்தமோகனப்படையைச்செலுத்தியகாலத்திற்பிதாவேஅதன்பெருமை
யையென்சொல்லுவேன் தட்சிணத்தில்வீரவாகுஅவன் துணைவர் இலக்கர்
படைவீரர்கள் ஆயிரம்வெள்ளம் பூதப்படைகளையும்மடக்கிஅறிவையழி
த்துக்கொன்று பலபாசங்களினால் அவர்கள் திரேகங்க ளனைத்தினையுங் க
ட்டிக்கொண்டுபோய் சுத்தோதகக் கடலிற்சேர்த்துவிட்டது அப்பனே
துதன்மாண்டபோதே போர்முற்றியதாக நினைக்கவேண்டும் இனிதேவ
ரீர்மனக் கோட்டமற்று சவுக்கியமாய் அரசுசெலுத்தி ராசபோகங்களை
அனுபவித்திருக்கக்கடவீர் யிவ்விரவுகழிந்து நாளையப்போதுவிடிந்தவு
டன்சதுரங்கச்சேனைகளையுங் கூட்டிக்கொண்டுநானேபோய்ச் சுருவளிக்
காற்றைப்போலப் பாசறையை வளைத்துக்கொண்டு பாலசுப்பிரமணிய
னையும் மற்றபூதவீரனையும் சின்னபின்னப்படவாட்டி செயசாலியாய்பா
சறையையிடித்து நிலத்தில்நிரவிப்போட்டவுடன் அவனைநம்பி வந்திரு
க்கின்ற- இந்திரன்-பிரமன்- விஷ்ணு-முதலியதேவர்க்களைப் பிடித்துவ
ந்து உமதுசன்னிதானத்தில் விடக்கடவேன் யிதிற்பிசகிராதென்று சிரோ
ஷ்டபுத்திரனாகியபானுகோபன்சொன்னசெயவார்த்தைஅமுதத்தைப்போ
லச்செவிகளில் விழுந்தமாத்திரத்தில் வாடித்திகைத்திருந்த மனங்குளிர்
ந்துசந்திரனையொப்ப முகாரவிந்தம்விளங்கவும் பர்வதங்களுக் கொப்
பாகப்புயங்கள்பூரித்து வாகுவலயங்கள்தெறித்து நவரத்தினமயமாகிய
கடகங்கள்வெடித்துதிர்ந்து சரீரம்புளகித்து மயிர்ச்செறிவெழமூன்றும்
பிறையைப்போலக் கோறதந்தங்கள் விளங்க நகைமுகனாய் சடேலெ
ன்றெழுந்து யெதிரில்நிற்கின்ற பானுகோபனை யிருகரங்களை நீட்டிச்சே
ர்ந்து முத்தாரங்கள் மோகனமாலைகள் சிரோரத்தினமயமாகியமதாணிப்
பதக்கங்கள்பொடிப்பொடியாயுதிர்ந்துபோகத்தக்கதாகவிசாலமாகவிள
ங்கும்வயிரமார்பிலிறுக வணைத்துத்தழுவிக்கொண்டவனாய் வெண்பட்டி
னாலும் முத்தின்சரங்களினாலும் வயிரங்களினாலும் அலங்கரித்திராநின்
றபூச்சக்கிறக்கொடைகள் கவிந்திருக்கத்தக்கதாக பஞ்சணை மெத்தையை
ப்பரப்பியிருக்கும் சிரோரத்தினமயமாகிய சிங்காதனத்திற்சேர்ந்து பா
லபருவத்தில் அன்பாய்விளையாடியிருந்ததைப்போலப் பக்கத்தி லிருத்

நித்தமுவி லைமயினைக்கோதி முதுகைத்தடவி முகத்தைப் பீதாம்பரத்
தொங்கலினுற்றுடைத்து முத்தமிட்டுஉச்சியைமோந்து அப்பனேஐய
னேபின்னைக்கலிதீர்க்கவந்தவதரித்தபெருமானே உன்னாத்தைநானென்
னென்றுகொண்டாடுவேன் பாலபருவத்தில் -ரம்பை-ஊர்வசி திலோத்
தமை-மேனகை- யாதியகன்னியர்கள் நாற்புறங்களினும் நின்று சொற்
ளசிம்பிகளைப்பற்றிஅசண்டமண்டலாதீஸ்பரன் திருக்குமாரனேவீரா
திவீரர்களைவெல்லவல்லதீரனே மன்மதவடிவைப்பெற்றகாளையே தாய்
தந்தையர்செயத தவப்பேற்றினுல் அவதரித்தகண்மணியேகுலோத்தாரக
ஞ்செய்யத்தோற்றிய வீரசிங்கமே உறங் குறங்கெனத் தாலாட்டியும்
சோ-சோ-வெனலாலிகளைப்பாடியும் யிவ்விதஉபசாரங்களுடன் உறக்கி
வித்துவருகின்ற தருவாயில் ஒருதினம்சூரியன் கிரணசாந்தியின்பெருக்
காணது உன்னரியதிருமுகமண்டலத்திற் ருக்கிய மாத்திரத்திற் கோபித்
துப்பாய்ந்து ஒற்றைவண்டிலும்சத்தாவென்னும்பெயரையுடையஏழுப
ச்சைக்குதிரைகளும்பூண்டு அருணன்செலுத்தும்படியாகியரதத்தின்பே
ரிலாரோகணித்து அரைக்கணத்துக்குள்ளாக ஆயிரக்காதவழிசெல்லும் சூ
ரியனைப்பற்றிவந்து தொட்டிற் காலிற்கட்டி உறங்கும்போது பிரமன்
வேண்டஅவன்பாணத்தைப்பெற்று விடுதலைசெய்தவீரனல்லவோஅச்செ
யத்துக்குரிய நாமத்தைக்கிடைத்திருக்கின்ற வீராதிவீரனே அன்றுமுதல்
யித்தினவரையிற் சென்றசென்றயிடங்களிற் சத்துராதிகளைப் புறங்கண்
டுவெற்றிகொண்டல்லது திரும்பினவனல்லவேயென்று அடிக்கடி கட்டி
க்கொண்டு முத்தமிட்டுபுத்திரசிகாமணியே சேம்பையாசப்பிதாவான
வன்மனக் கோட்டமற்றுக்களித்துச் சவுக்கியத்தைப் பெற்றிருப்பதும்
பலராலும்பூசிக்கப் பெறுவதும்தான்செய்ததவமுயற்சியினாலுதித்தபுத்
திரன் திறனும்மரபைவிளக்கிவருவதினாலல்லதுவேறுமுண்டோயன்றிபல
குட்டிகளைப்பெற்றதினாற் பயனென்னை குஞ்சரமானது ஒருகன்றையீ
னுமாயினும் அதிகபலப்பிராப்பத்தியுண்டு அவ்வாறேநீயெமதுகுடியிற்
பிறந்து அவுணமரபைவிளக்கியபடியால்நானும்மனச்சஞ்சலங்களையொ
ழிந்து சனமற்றுப்பலராலும் பூசிக்கும்படியாகிய மேம்பாட்டைக்கி
டைத்து பற்பலவளங்களையும்புதிதாகஉன்புசபெலபராக்கிரமத்தினாற்ச
ம்பாதித்துக்கொண்டேன் யிதுவுமல்லாமற் பலகாலம் அரியதவங்களைச்
செய்ததற்கிரங்கிக் கொன்றைஅறுகுகங்கைபிறைவிளங்கும்சடாமண்ட
லதாரியாகிய சிவபிரான்யித்திருவைக்கடாட்சித்திருந்தனர், அது அபத்த
மயித்தருவாயில் யிவ்வரசுரிமையையும் அகண்ட சாம்பிராச்சிய விபவங்
களையும் அப்பனேயித்தினம் நீகொடுக்கப்பெற்றேனெனப் பலபல நய
மொழிகளைப்பேசி அப்போதணிந்திருந்த போரணிகளைமாற்றி சிரோர

த்தினமயமாகியகிரீடம்வாகுவலயம்மதாணிப்பதக்கம்முத்துமாலைமோ
சனமாலைவயிரக்கடகம் பீதாம்பரமுதலிய ஆடை ஆபரண விதங்களைப்
புதிதாகத்தரித்துத் நன்கையிலுலணிந்து அப்பனேயிப்போதுநீசொல்
லியபடிக்குநாளைபத்தினம் சதுரங்கச்சேனைகளைக்கூட்டிக் கொண்டுபோ
ய்சண்முகனைவென்று கொடியபூதரைக்கொன்று அவனைத்துணைப்பற்றி
வந்திருக்கின்ற-இந்திரன்-பிரமன்-விஷ்ணு--வாதியதேவர்களைக் கட்டி
க்கொண்டுவந்து அரியசிறையிலிட்டு என்பகையைமுடிப்பை யிப்போ
துமிகவும்வருந்திவாடியிருப்பதால் துரிதமாய் உன்னரமனையைச்சேர்ந்
துயர்சுத்தனாய்சகலசவுக்கியங்களையும் அனுபவித்துயிளைப்பாறக் கடவை
யெனவிடைகொடுத்ததனுவாயில் பிதாவேஉமதிஷ்டப்படிக்குச்செய்யக்
கடவனெனப்பணிந்து வெளிவந்துசெயபேரிமங்கலமுரசமுதலிய வாத்
தியங்கள் தாம்தாமெனமுழங்கப் பட்டுவர்புகழ கட்டியக்காறர்எச்சரிக்
கைசொல்லிப்போக தவளக்குடைகள்பிடித்துவர வெண்சாமரைகள் ஆ
லவட்டங்களை அசைத்துவர அளவற்றஅருகுதீவட்டிகள்காட்டிவர இவ்வி
தராசவைபவங்களுடன் அரமனையைச்சேர்ந்து கோடானகோடி சுந்தர
வதிகளாகியகன்னியர்கள் முத்தாலம்மஞ்சள்நீர் ஐவகைச் சோற்று விளக்
குகளாதியாகப்பொற்றட்டுகளிலேந்தி திஷ்டிபரிகாரமாகச்சுழற்றிநிற்க
வும்பெரியோர்கள் அறுகுஅட்சதைகளையிறைத்து செயாவிசையவாவெ
னவாழ்த்தவும் அரம்பையர்நடிக்கவும் யிவ்விதசம்பிரமங்கள் மத்தியில்
தன்மாளிகையிற்பிறவேசித்துடனிநீரில் ஸ்நானஞ்செய்துபவுத்திரனாய்நி
த்தியகடன்களைமுடித்துக்கொண்டுதன்தேவிஉபசரித்துப் படைக்கஅறுவ
கைச்சுவைகளைவாய்ந்தபோசனவிதங்களையும்கச்சாயவகைகளையுந்திருத்தி
யாகஉண்டுஸ்ரீகெந்தக்கலவையைப்பூசிபுனுகுசவ்வாதுசாத்திபரிமளமிகு
த்தகற்பகமலர்மாலைகளைச்சூடி கற்பூரதாம்பூலஞ்செய்துமுற்றியவுடன்ச
ர்வாபரணபூஷிதைகளாகிய சுந்தரமுள்ள பலகன்னியர்கள் சயித்தியஉப
சாரங்களைச்செய்யப்புஷ்பயிதட்களினாற்பாயல்பரப்பியிருக்கின்றஅம்ச
தூலிகாமஞ்சத்தின்மீது பள்ளிகொண்டு நித்திரை செய்தனன்- சவுனகா
திரிஷிகளே, இவைநிற்கவீரவாகுதேவர் முதலானவர்களை மோகனாஸ்திர
ம்வளைத்துக் கொண்டுபோய் சுத்தோதகச்சமுத்திரத்திற் சேர்த்ததெனச்
சொல்லியிருக்கின்றனம், அவர்கள்பழையபடிக்கு பாலசுப்பிரமணியதே
வர்கடாட்சவீட்சண்ணியத்தினால் உயிர்பெற்றெழுந்தவிதத்தையும் அத
ன்பின்புநடந்த அனற்தங்களையும் சவிஸ்தாரமாகப்பேசுவோம் கேட்பீ
ரென்று சூதபுராணிகர் துடங்கினர், உயித்தியமுனையில் தாபரிக்கப்படா
மையால் மனவருத்தத்துடன் வானத்திற்பாய்ந்து மறைந்திருந்த பானு
கோபன்வஞ்சகமாகச்செலுத்திய மாயைப்படைசெய்த கொடுமைகளை

த்தையும் வானத்தில் வேடிக்கைபார்த்திருந்த தேவர்க்கள் கண்டு மனம்
பதைபதைத்து திரேகம்நடுநடுங்கிப் பெருமூச்சுகளையெறிந்து துக்கசா
கரத்தில்முழுகி விழிகளிற் றாரைதாரையாகச் செலம்பெருக்கெடுத்தோ
டவாய்விட்டு கோடுகோடெனப் புலம்பினவர்களாய் கரங்களைப் பிசைந்
துகொண்டு நாவறள முகப்பொலிவுகளற்றுப்பிளக்க மோதிக்கொண்டு
சரீரமெங்கும்வியர்க்க வாடிக்களைத்து எக்காலத்தும்படாத துன்பங்களை
அனுபவித்துகுமாரதேவருக்குயிச்சம்பவங்களைவிண்ணப்டஞ்செய்வதா
கத்திசைசேட்டோடினர், அவர்களுக்குமுன்னுதாய் நாரதர் மனோவேக
த்திறு மேலிட்டுப்பறந்து யாகசாலைவிடுதியைச் சேர்ந்து நவரத்தின மய
மாகச்சொலித்துக்கொண்டிருக்கும் சபாமண்டபத்தின் முகப்பிற்றோ
ற்றநின்ற வயிரசிங்காதனத்திற்-பிரமன்-விஷ்ணுவாதியானவர்கள்போற்
றவீற்றிருந்து அவர்களுடன்வார்த்தையாடி யிருக்கின்றபாலசுப்பிறமணி
யதேவனைத்தெரிசித்து வணங்கிப்போற்றிக் கரங்களைக்கூப்பிக்கொண்டு
தேவேந்திரன்டலம்புகுங்கொடி யெங்கத்தக்கதாக யிதனைவிண்ணப்ப
ஞ்செய்வதாயினர், கர்த்தனே யித்தினச்சண்டையிற் பலவெள்ளம்ராட்சதச்
சயின்னியங்களைமடியக்கொடுத்துபானுகோபனெனவன் கொடியபோரை
க்செய்து வீரவாகுதேவருக்குத் தோற்றவனாய் ஓடிப் போகின்றவனைப்
போலமேகத்தில்மறைந்து சடுதியிலொரு மோகனப் படையைப்பிறை
யோகித்து வீரவாகுமுதலிய நவவீரர்கள்-இலக்கர்-படைவீரர்- பூதவெள்
ளமாதியாகக்களைத்துஅறிவழிந்துவிழும்படிக்கிவாட்டிக்கொண்டுகட்டி
க்கொண்டுபோய் சுத்தோதகச்சமுத்திரத்திற் சேர்க்கச்செய்தனனென்று
சொல்லிவருகின்றதருவாயில் தேவர்க்கள் ஒருவர்பின்னொருவராகஓடோ
டியும்வந்து சிவகுமாரன்திவ்வியசரணாரவிந்தங்களிற்சேவித்துத்தாங்கள்
கண்டசவிஸ்தாரங்களை அறிக்கையிட்டு மோசம்வந்தது யிதற்கென்செய்
வோமென்றுமிகவும் பரிபவப்பட்டு துக்கிக்கின்ற தருவாயிற் சிவசுப்பி
றமணியக்கடவுளுக்குத்திருவுளமிரங்கிப் பயப்படாதீர்கள்யிந்தநிமிஷத்
தில்நம்மவர்களனைவரையும் சுகசிவிகளாகத் தரிசிக்கின்றனமெனக்கைய
மத்தித்துரிதமாய்த் தமதுதிருக்கரத்தில் விளங்குகின்ற வெற்றிவேலாயு
தத்தைப்பார்த்து நீவேகமாய்ப்போய் வானசெங்கையைப்போலத்தெளி
ந்தநீர்ப்பெருக்கினையுடைய சுத்தோதகசமுத்திரத்தைச் சேர்ந்து அவட
த்திற்காவல்கொண்டிருக்கின்ற மோகனஸ்திரத்தைஅதம்பண்ணி கடலிற்
படிந்திருக்கின்ற நமதுவீரவாகு முதலாகிய படைத்தலைவர் பூதவெள்ள
ம்பெற்றிருக்கின்ற மயக்கத்தையொழித்து வேகமாய்யிவடத்திற்கொண்
டுவந்து சேர்க்கக்கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில்மகாபாக்கி
யமென்றெழுந்து குரூரமாகியகிரணங்களைவீசும் ஆயிரகோடி சூரியர்க

ள்ளககாலத்திலுதித்ததைப்போலப் பிறகாசித்து உலகங்ளிற்பரந்து மூடி
யிருந்தவிருட்பெருக்கையோட்டிச் சொலித்துக்கொண்டு விஷப்பற்களை
யுடையசற்பங்களையுண்டுபண்ணி சுவாலைமிகுத்திராநின்ற ஆலகாலவிஷத்
தைப்பெருக்கி கணக்கிறந்த காலாந்தகனைப்படைத்து -இடி- மின்னல்-
குமுறல்களைக்காட்டும் மேகசாலங்களைவிதித்து நிமைப்போதிற் சராச
ரப்பிறபஞ்சங்களை யழிக்கவல்லபாசுபதமுதலிய திவ்வியபாண கோடிக
ளைவெளியிட்டு அனற்சமோகங்களைப் பெருக்கிக்கொண்டுவரும்போது
அந்தவெப்பத்தினால் மேகங்கள்வெந்து மின்னல்களையும் இடிக்கூட்ட
ங்களையுஞ்சக்கிதகிக்கப்பட்டு மங்கவும்தீவுதீபாந்திரங்கள்கெவிகள்குகை
கள்மூலைமுடுக்குகளிலிருந்த யிருளனைத்தும்அதப்பட்டும்சத்திராதிகளா
கிய அவுணர்கரியதிரோகங்களினொளிமாறி தேவர்க்களைப்போல விளங்கவு
ம்டெரும்புறக்கடலைச் சூழ்ந்திருக்குந்தலத்தைஎக்காலத்தினும்மூடியிரு
க்கின்ற யிருட்பிழம் பனைத்தும் நாசப்பட்டு மற்ற உலகங்களைப்போ
லவெள்ளிடையாகத்தோற்றக்காட்டவும் அக்கினிதேவன் வெம்மையொ
ழிந்துபரதவிக்கவும் வடவைக்கனல் கொதிப்படங்கியொளிக்கவும் அண்
டச்சுவனாத்தாங்கிநின்ற யானைகள் மதப்பெருக்கை யடக்கி வீறிட்டுவா
டவும் சத்தசாகரங்களுங் கொதிப்பெடுத்து அலைகளோய்ந்து சுவறிக்கா
ட்டவும் பூமிக்கச்சாணியாகநிற்கின்ற மகம்மேருபற்வதம் கிடுகிடாய்த்
தகிரவும்ஆதிசேஷன்முதலிய அஷ்டமாநாகங்களும்திடுக்கிட்டுப்பதைத்
துவிஷங்களைக்கக்கிச்சோரவும் ஒற்றைவண்டிலையுடைய்தேரில்வருகின்ற
சூரியன்பதைபதைத்து மறையவும்விமானத்திலாரோகணித்துப்போகின்
றசந்திரன்தனது சோடசகலைகளின் குளிர்ச்சியடங்கித் தீக்கொழுந்தைப்
போலவீசவும் இவ்விதஉற்பாதங்கள் தோன்றவெற்றிவேலாயுதமானது
வேகமாய்ப்போகின்றதறுவாயில்-பாசுபதாஸ்திரம்- நாராயணாஸ்திரம்-
பிற்மாஸ்திரம்-அக்கினியாஸ்திரம்- வாயுவாஸ்திரம்- குபேராஸ்திரம்-வ
ருணாஸ்திரம்- இந்திராஸ்திரம்-எமாஸ்திரம் - கருடாஸ்திரம்- நாகாஸ்தி
ரமுதலாகிய தேவப்படைகள் தம்மில்விரோதமின்றி ஏகமாய்ச்சேவித்து
ச்சூழ்ந்துபோற்றிவரவும் நடக்கின்றவெற்படையின்பிறகாசத்தைத் தெ
ரிசித்தமாத்திரத்தில் தேவர்க்கள் மனவெழுச்சி பெற்றுச் சூரிய உதையத்
தைக்கண்டதாமரைமலர்களைப்போல முகாரவிந்தங்கள்பொலிவாகக்கா
ட்டவும் ராட்சதர்முகங்கள் அல்லி தாமரைமலர்களுக்குச் சமதையாய்வா
டிக்களிப்பற்றுவிளங்கவும் அத்தினம் சிவகணங்களுடன் சண்டைகொ
டுத்துப் புறங்காட்டியோடித் தமதுமனைகளிற்சேர்ந்த அவுண வீரர்கள்
நாளையத்தினம் அவசியம்பகைவர்கரத்தில்மாள்வது நிச்சயமெனத் துணி
வுகொண்டபடியால் தம்மினத்தவருடன்கூடியிஷ்டான்னபோசனங்க

ளைச்செய்து பஞ்சணைமெத்தையிற் றேவியரைக்கலந்து சரசசல்லாபங்க
ளுடனின்புற்றிருந்தபின்பு நித்திரைசெய்பவர்கள் வெற்றிவேலின்பிற
காசத்தைக்கண்டவுடன் சூரியஉதயமாயிற்று உயித்திய களத்துக்குப்
போகவேண்டுமென்கின்றஆத்திரத்தினாற்றமதுதேவியரைத்தழுவியிருந்
தகரங்களை நீக்கிக்கொண்டோடி சேனைகளின் ஆரவாரங்களைக்காணாததால்
யிதென்ன அதிசெயமாகவிருக்கின்றதென்று ஒன்றுந்தோற்றாமல்திகை
த்துப்பார்க்கவும் தேவர்க்கள்மனச்சஞ்சலமற்று தமதுதேவியருடன் க
ளித்துறங்கவும் இவ்விதவினோதங்களைக் காட்டிப்போகின்றவெற்றிவே
லானது முற்காலத்திற் றிரிபுராதிகளையழிக்கச் செலுத்தியநகைக்கனலைப்
போல விரைந்தோடி அறுகடலையுங்கடந்து தேவர்கருடகாந்தருவர்சித்
தவித்தியாதரர் முதலாகக்களிமிகுதியினால் கற்பகமலர்களை வாரிவாரியி
றைத்துப்போற்றிவாழ்த்த சுத்தோதகக்கடலினருகில் வருவதைமோகன
ப்படை கண்டமாத்திரத்திற் றிடுக்கிட்டு பதைபதைத்து வாடிவருந்தி இ
னிசற்றுநிற்போமாகில் மோசம்வருமென்றெண்ணி சுப்பிரமணியர்சே
னைகளைக் காவல்கொண்டிருப்பதைவிட்டுப் பறந்தோடுமுன்னிலையில் த
ன்செய்கையுமற்று சின்னபின்னப் பட்டுமங்கியது,அத்தருவாயிற் கடற்
கரசன்வெளிவந்து திரேகமும்மனமும்நடுநடுங்க வாய்புலர்ந்துஒடுங்கி
க்கரங்களைக் கூப்பிக்கொண்டு குமாரதேவர் செலுத்திய வேலாயுதத்துக்
கெதிர்நோக்கிவந்து மும்முறைவலம்வந்து சேவித்துநின்று யிதனைவி
ண்ணப்பஞ்செய்வதாயினன், படைகளுக்கரசேகேட்டருள்க பரமசிவக
டாட்சத்தினால் ஆயிரத்தெட் டண்டங்களையும் அகண்ட சாம்பிராச்சியச்
செல்வப்பெருக்கையும்பெற்று கொடுங்கோல்செலுத்திவாழுகின்ற சூர
பதுமன்குமாரன் பானுகோபன்தன்பாட்டியாகியமாயைகொடுத்தமோ.
கனாஸ்திரத்தைப் பிரையோகித்து வீரவாகுதேவர் -எண்மர்- இலக்கர் - ப
டைத்தலைவர்-பூதச்சேனைகளைமயக்கியறிவையழித்துப் பிரேதங்களாக்கிக்
கட்டிக்கொண்டுவந்து என்னிடத்திற்சேர்க்கச்செய்தான் அந்தகொடிய
பாணமும்நீங்காமல்யிவடத்திற் காத்திருந்தது நம்மவர்களுக்குத்தேவா
முதத்தைப்போலத்தேவரீர்வரவைக்கண்டவுடன்வெதும்பிக்கிடாய்த்து
பயப்பிராந்திகொண்டோடி மாண்டது,வெற்றிமாலைபுரளும் புசங்களை
ப்படைத்திருக்கின்றபானுகோபன் தூண்டிய பாணத்தை வாட்டத்தக்க
வலிஅடியேனுக்கில்லாதபடியாலும் மேலும்அவுணப்பாதகர் கட்டளைக்
குட்பட்டு வாடுகின்றதாலும் ஒருகாரியங்களையும் நினைக்கப்படாமல் ம
னவாட்டத்துடன் மிகவும் வருந்தினவனாய் கொடியபாதகனைவாட்டி எ
ங்கள்மனக்குறைகளைத் தீர்க்கவந்தயிந்தவீரர்கள் கர்த்தனனுக்கிரகத்தினா
ல்எப்போது சோபத்தையொழிந்து உயிர்பெற்றெழப்போறார்களென்

றும் சிவகுமாரன் நிமைப்போதிற் சூரன்வம்சநாசமாய்க் கொல்லவல்லவ
ராயிருந்தும் உயித்தியஞ்செய்ய நினைந்து சேனைகளைக் கூட்டிக்கொண்டு
வந்தது இதுவுமொரு திருவிளையாடலென்றும் அத்தகைய பெருமையையு
டைய தேவாதிதேவன் பாடிவிட்டிலிருந்து - நவவீரர்கள் - இலக்கர் · முதலா
ன வர்களைச் சண்டைக்கனுப்பி சத்திராதியினால் மாளக்கொடுப்பதும் அவர்
திருவுளத்துக் கேற்பதோவென்றும் எண்ண மிட்டுக்கொண்டு சிவசுப்
பிரமணியதேவர் கிருபையுற்று அசுரப்பெருக்கை அதப்படுத்தினால் மன
வாட்டமொழிந்து சவுக்கியமா யிருக்கலாமென நினைந்திருக்கின்ற பே
தையேன் யித்தருணத்திற் செய்தபிழைகளொன்றுமிராது ஆதலால் அடி
யேன் மீதிற்கோபங்கொள்ளாமற் ஷெமிக்கவேண்டுமெனப் பலவாகப்
போற்றுகின்ற கடற்கிறைவனை வெற்படையானது கிருபையாகப் பாத்
து உன்னிடத்தில் யாதொரு குறைபாடுகளுமில்லை யாதலாற் பயப்பட
வேண்டாமென்று தரித்ததாய் சொலித்துக்கொண்டு கடலினிடத்தில் உ
லவிவந்தபோது மாயப்படையின் முயற்சியினால்வாடி பிரேதங்களைப்
போலப்பாதலத்திற் பட்டிருந்த வீரவாகுதேவர் முதலான சிவகணங்க
ளுக்கு அறிவுதோன்றிச் சரீரம் அசைவுற்று சுவாசமுண்டாய்க் கண்களைவி
ழித்துப்பாத்து நித்திரை தெளிந்தவர்களைப்போலவும் பலகோடிசூரிய
ர்தோற்றம்போலவும் பாம்புகடித்து விஷந்தலைக்கேறி மரணக்களைபட்
டிருந்தவர்கள் மகத்துக்கள் கிருபா நோக்கம்பட்ட மாத்திரத்தில் அக்
கொடுமைநீங்கி களித்தெழுபவரையொத்தும் செய வுச்சாகங்களுடன்
செயசெயபோற்றியென ஆரவாரித்துக்கொண்டு வீரபராக்கிறம முள்ள
ஆண்சிங்கம்போன்ற வீரவாகுதேவரும் புயவலிக்கொப்பற்ற தம்பியரு
ம் செயசாலிகளாகிய - இலக்கரும்மதயானைகளையொத்தபடைவீரர்களும்
வலியிலுயர்ந்த பூதச்சேனைகளும் மிகுத்தபத்திவிசுவாசங்களுடன் பால
சுப்பிறமணியக்கடவுளினது பாதாரவிந்தங்களைச் சிந்தித்துப்போற்றி வீ
ராவேசங்களுடன் ஓங்காரித்துக்கொண்டு வெளிவந்தனர், சவுனகாதிரி
ஷிகளே, அக்காலத்தில்நேர்ந்த சந்தோஷப் பெருக்கைச் சொல்லத்தேழ்
ப்பிராக பானுகோபன்செய்த வஞ்சகங்களனைத்தும் அதப்பட்டுப்போ
கவும் பாதகனாக்கண்ட பாவங்கள்முற்றும் அலைவிற்பட்டபஞ்சைப்போ
லதகிக்கப்பட்டொடுங்கி மெஞ்ஞானம்விளங்கவும் வேதாகமங்கள் களி
த்துச்சிவகுமாரன் புகழைப்பாடித்துதிக்கவும் பூமிதேவியானவள் கிரோ
கம்பூரித்து ஆனந்தமடையவும் தருமதேவதைமனவெழுச்சிபெற்றுக் கூ
த்தாடவும் புவனங்களனைத்திலுமிராநின்ற சீவராசிகள் சந்தோஷப்பெ
ருக்கிலாழ்ந்து அண்டங்களதிர ஆர்ப்பரித்துசெயங்கொண்டாடவும் இக்
காட்சிகளைக்கண்டதேவர்க்கள் கிரோகபரவசத்தராய் பஞ்சதாருக்களின

புஷ்பங்களை வாரிவாரிச்சொரிந்து வாழிவாழியென்று கொண்டாடவு
ம்ரிஷிக்கூட்டங்கள் மனமகிழ்ந்து அட்சதைகளையிறைத்து செயாவிசை
யவாவென்று ஆசிகளைச்சொல்லவும் தேவதுந்துமி முழங்கவும் தும்புரு
நாரதாதிகள் கந்தன்பெருமைகளை யாழியினிடத்திற் பாடிப் போற்றவு
ம்கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் யிசைகளைச்செவிகளுக்கமுதமாக
ச்சொரியவும் சூரியர்சந்திரர் முதலானவர்களுக்கு ஆனந்தமுண்டாய்வா
ழ்த்தவும் இப்படிக்குச்சகலமும்சந்தோஷசாகரத்தில் முழுகிக்களிக்கின்
றதருவாயில் தயாநிதியாய் அன்பருக்கெளியனாய் எள்ளிலெண்ணெயைப்
போலச் சற்வந்திரியாமியாகநின்று எங்கும் விழிகளும் செவிகளையும்ப
டைத்துசராசரப்பிரபஞ்சங்களைப் பாதுகாத்து நடிப்பிக்குங்குணக்கட
லாகியசிவசுப்பிரமணியதேவர் திருக்கரத்தில்விளங்குகின்ற வெற்றிவே
லானதுகோடிசூரியப்பிரகாசமாகவானத்திலுலவியிருப்பதைவீரவாகுதே
வர்முதலானவர்கள் தங்கள்முகமும் மனமும்சூரியனைக்கண்டதாமரைம
லரைப்போலவிளங்கவும்விழிகளில் ஆனந்தவாரிசொரியவும் சரீரம்புளகி
த்துமயிர்ச்செறிவெழவும் இவ்விதச்சந்தோஷப்பெருக்கினாழ்ந்து தெரி
சித்தமாத்திரத்தில் திரோசபரவசத்தராய்ப் பலதிரம்பணிந்துபோற்றி கர
ங்களைசிரங்களிற்கூப்பி யெதிர்கொண்டுசூழ்ந்து பானுகோபன் மாய்கை
யிற்பட்டு புத்திமயங்கிஅத்தலத்திற்சேர்ந்தகாரணத்தையும் நமதையனா
கிய முருகப்பெருமாள் தெரிந்து யிரக்கமுற்றுச் செலுத்தியவேலாயுதத்
தின்பெருமையினால் பகைவர்வஞ்சகங்களைக் கடந்துஉயிர்பெற்றெழுந்
தனமென்றும் ஆழ்ந்தகருத்தினால் யூகித்தறிந்துகொண்டு ஞானவான்க
ளிற்சிறந்த பேரறிவவாய்ந்த வீரவாகுதேவர் யிதனைவிண்ணப்பஞ்செ
ய்வதாயினர், விழிகளுக்கெட்டாதசுயஞ்சோதிவடிவைக்காட்டியிருக்கின்
றபெருமையினாலும் சண்முகாரவிந்தங்களைப்படைத்திருக்கின்ற சிறப்
பினாலும் எமதுசுற்றனாகிய சிவகுமாரனிடத்திருந் தெழுந்தருளிய கார
ணத்தினாலும்சத்தியெனப்பலரும்பாவினங்களினாற்புகழப்பெற்றமுயற்
சியினாலும் பாலசுப்பிரமணியருக்கொப்பாகத்தேவரீரைத்தெரிசித்துயிக்
காலத்தில்நேர்ந்த மாயைமுதலிய சகலதுன்பங்களையும்போக்கிமனவெ
ழுச்சிபெற்று கிருதார்த்தராய்வாழ்ந்தனம் சத்திராதியாகிய பானுகோப
ன்செலுத்திய மாயைப்படையின் வலியினால்யாமெல்லவருமுணர்வழிந்
தயிந்தசாகரத்தின் அகட்டிற்போடப்பட்டியாதொருகதியுங்காணாதிரு
ந்தஅடியோங்களை தேவாஸ்திரங்கள்முதலிய திவ்வியபாணங்களுக்குச்ச
க்கிரவர்த்தியாக விருக்கப்பட்டதேவரீரொழுந்தருளிப் பாதுகாத்தமுயற்
சியினால் உயிருண்டாய்மெஞ்ஞான உணர்வைப்பெற்றுக்கிருதார்த்தராயி
னோம் இதுவுமல்லாமல்முன்னம் தாருகன் வஞ்சத்தினாற் கிரவுஞ்சகிரி

யின்மாய்கையிற்பட்டு மயங்கிச்சோர்ந்துகிடந்தஅன்றும் தேவரீரொழு
த்தருளிஉணர்ச்சியைத்தந்தாண்டீர் அவ்வாறேயித்தறுவாயிலும்வந்துயி
றந்துகிடந்தவர்களைப் பிராணனைக்கிடைக்கச்செய்து ரட்சித்தீர் யிக்கார
ணத்தினுல்அடியோங்களநாதனமாய்தமதுகடாட்சத்தினுல்உற்பவித்தன
ம்யித்தன்மையாகச்செய்யாமற்செய்த உதவிக்குஅடிகளுக்கு எங்களாற்
கூடும்கைமாறுவையகத்தினும் வானகத்தினும்நினைக்கத்தக்கபொருளொ
ன்றுண்டோவென்றுபேரறிவாளனாகியவீரவாகுதேவர்பலபலஉபசாரங்க
ளைவிண்ணப்பஞ்செய்வதைவெற்றிவேல்கேட்டுநீங்களனைவரும்ராட்சதப்
பாதகன்வஞ்சகத்திற்பட்டு மாண்டசேதியைதேவாதிதேவனாகியசரவணப
வன்தெரிந்துஅடியேனிடத்திற்கிருபைகூர்ந்துசெலுத்தியதால்அக்கட்ட
ளையைமுடிக்கவந்தனம், நமதுவரவைக்கண்டவுடன் பானுகோபன்மோ
கனப்படை அதப்பட்டுநீங்களு முயிர்பெற்றெழுந்தீர்கள் என்னுலாகு
முயற்சிகளொன்றுமில்லை சகலமும் தேவதேவோத்தமனாகிய சண்முகப்
பெருமாள் கடாட்சமாகும்ஆதலாற் காலதாமசஞ் செய்யாமற் பூதப்ப
டைகள்முதலானவர்களுடன் துரிதமாய்முருகப் பெருமாள் சன்னிதான
த்தைச்சேர்ந்து அவன்திருவடிகளில் வணங்கிப்போற்றக்கடவை யெனக்
கட்டளையிட்டவாறே தட்சிணத்திற்சேவித்து விடைபெற்றுக் கொண்டு
பூரணச்சந்திரோதையத்தையொப்ப விளங்குகின்ற முகமண்டலத்தைப்
பெற்றவீரவாகுதேவர். துணைவர் - இலக்கர் - படைத்தலைவர் - பூதசேனைக
ள்சூழ்ந்துவரப் பிறையாணப்பட்டனர், அத்தறுவாயில் வெற்றிவேலாயு
தமும் முந்திப்போய் குமாரதேவருக்குநடந்த சவிஸ்தாரங்களை யறிக்
கையிட்டுபழையபடிக்குத் திருக்கரத்தில்விளங்கநின்றது,

---

## நகர்புகுபடலம்.

---

சூதபுராணிகர் சவுனகாதிரிஷிகளுக்கு மற்றைச்சரித்திரங்களையு
ஞ்சொல்லுவார், இவ்விதமாக வெற்றிவேலாயுதம் முந்திச்சென்றவுடன்
வீரவாகுதேவர் முருகப்பெருமாள் சரணாரவிந்தங்களை மனதிற்றியானி
த்துப் போற்றினவராய்-துணைவர்-இலக்கர் முதலியபூதப்படைகளும்பி
ரளயகாலத்திற் சத்தசாகரங்களும் ஒன்றுபட்டுப் பெருகுவதைப்போல
ஆர்வாரித்துக்கொண்டு சூழ்ந்துவர வானவழிக்கொண்டுவாயுவேகத்தினு

ங்கடுங்கிச் சத்தசாகரங்களையுங்கடந்து ரணக்களத்திலக்கு நேராகவந்திறங்
கி அகண்டசாம்பிராச்சியச் செல்வப்பெருக்கை யனுபவித்துவரும் சூர
பதுமன் வாசமாயிருக்கின்ற மயேந்திரபுரியைக்கண்ட மாத்திரத்தில்அ
திககோபம்பிறவேசித்து சரகமெனைப் பற்களைக்கடித்து கண்கள் கொவி
வைக்கனியினுஞ் சிவந்து தீயையிறைக்க சுவாலையும்புகையும் கொண்டல்
கொண்டவாகப் பெருகப்பெருமூச்செறிந்து மார்பில்வியர்க்க மண்டி
யெரிந்து மனம்பொருமல் துணைவர் முதலானவர்களைப்பார்த்து இதனை
ச்சொல்லுவதாயினர், வீராதிவீரர்களேசேழ்ப்பிராகயாணங்களோடியா
னைங்கள் ஆயுதங்களுடனாயுதங்களுடுதாக்கலுருவனாயொருவர்வெல்லவே
ண்டுமென்கின்றவிராவேசங்களுடன்போராடுகின்ற சமர்க்களத்திற்கொ
டியபோனைச்செய்ய வலியற்றவனாயோடி வானத்தில்மறைந்து வஞ்சகத்
தினால்நம்மனைவரையும் வென்றயபோட்டோமென்னும் களிப்புடன் தி
ரும்பி பட்டணத்தைச்சேர்ந்து சகலசவுக்கியங்களையும் அனுபவித்துறங்
குகின்ற பானுகோபனென்னுங் கள்ளனைமடக்கிக் கொண்டு சாடிக்கொ
ன்று என்கோபந்தணிந்தபின்பல்லது எமதுகர்த்தனாகிய சிவசுப்பிரமணி
யதேவர் பாதகமலங்களைத் தெரிசிக்கப்போக மனம்விரும்பவில்லை யி
ந்தநிமிஷத்திற் சூரன்பட்டணத்தை அதாஅதப்படுத்தி வாட்டுமுன்னிலை
யில் பகைவனெதுத்துவருவனாகில் அவனைச்சின்னபின்னப்படக் கண்டித்
துவெற்றிபெறக்கடவன் இப்போதுபேசிய சபதப்படிக்கு முடியாமற்
போவேனாகில் யிந்தவுயிரைச்சுமந்து வாழவறியேன் என் தாய் வயற்றிற்பி
றந்தவனுமல்ல ஒப்பற்றசிலையுடன் அக்கினிப் பிறவேசமாவேனென்று
சேனாபதியாகவிருக்கின்ற வீரவாகுதேவர் பேசிய பிறதிக்கினைகளைத்து
ணைவர்முதலானவர்கள் கேட்டவுடன்மனவெழுச்சிபெற்றவர்களாய் யித
னைவிண்ணப்பஞ்செய்வதாயினர், ஐயனேபானுகோபன்செலுத்தியமோ
கனப்படைக்குட்பட்டு மாய்ந்தெழுந்தனமென்னும் பழிப்புரையைச்சு
மந்து அதற்கொரு நிவாரணங்களையுந்தேடாமற் பாசறையைநோக்கித்
திரும்புவது எக்காலத்தும்பலரும் யிகழ்ச்சியாகப்பேசிக்கொள்ளவரும்
ஆதலால் அந்தபாதகனைக்கொன்று வெற்றிகொண்ட பின்பல்லது எமது
கர்த்தன்திருவடிகளை தெரிசிக்கத்தகுமோ தேவரீர்குறித்தகாரியம்தகும்த
குமென்று சகலரும்மனமொருமித்து ஒப்புக்கொண்ட தருவாயில் வீர
வாகுதேவருக்கு அவர்களிடத்தில்மிகவும் கிருபையுண்டாய் உங்கள்மனை
வுருகிக்குமெச்சினேம் ஆதலால்யிந்தட்சிணம் புசபெலபராக்கிறமசாலி
களாகிய பூதப்படைகளுடன்போய் அஷ்ட லட்சுமிகளும் குடிகொண்டு
வீற்றிருக்கின்றமயேந்திரபுரியைச்சேர்ந்து பொடிப்பொடியாக விடி
த்துத்தள்ளி அக்கினிதேவனுக் கிரையாக்கி அக்காலத்தி லெதுத்துவந்த

அவுணப்பாதக ரனைவரையும் அதம்பண்ணி கடையிற் பானுகோபனை
மடக்கிக்கொண்டு சித்திரவதைபண்ணித் திரும்புவோம் வாருங்கோளெ
ன்று வீ ரன்சொல்லியபோது நல்லகாரியம் நல்லகாரியமென்று சகலரு
ம்உடன்பட்டுபூதச்சேனைகளுடன் ஆர்பரித்துச்சிங்கநாதங்கள் அட்டகா
சங்களைச்செய்துக்கொண்டு நடந்து நிமைப்போதில் சமுத்திர மத்தியில்
விளங்கும் பட்டணத்துக்கோட்டை மேற்குக்கோபுரவாயலைச் சூழ்ந்து
பிறசண்டவாயுவைப்போலக்கொக்கரித்து நித்திரைசெய்திருக்கின்றராட்
சதர் திடுக்கிட்டுக்கலங்கி கட்டிச்சுருட்டியெழுந்துயிதென்ன அனர்த்தமா
யிருக்குது ராசகுமாரன்பேரில் பூதவெள்ளமுதாலாகமாண்டுநாசமாய்
ப்போனார்களெனக் கேழ்விப்பட்டனம் யிதோபட்டணத்தை வளைந்து
கொண்டு பிரளயகாலயிடிகளைப்போலக் கொக்கரிக்கின்றனர், பார்த்துவ
ருவோமென்று வானத்தெழுந்து பெரும்புறக்கடலைப்போலக் குமிறிக்
கொண்டிருக்கும் பூதசேனைகளைக்கண்டவுடன் திகிற்பட்டுச்சிலர் மனம்
வருந்தியேங்கவும் சிலர் ஸ்தானஞ்செய்ததைப்போலத் திரேகமெங்கும்
வியர்வை பெருத்தோடக்களைத்தும் சிலர்யித்தொனி சத்திராதிகளினாலு
ண்டாயதோவெனக்கோபிக்கவும் சிலர் சண்டை கிடைத்ததென்கின்றக
ளிப்பினாற் புயங்கள்பூரிக்க நிலத்தில்வந்தும் யிப்பாடுகள் படுமுன்னிலை
யில் பொன்னுருளைகள்முதலிய வளங்களினாற்சோடித்து பற்வதாகிருதி
யாகவிருக்கின்றதோணிகளும் மும்மதங்களையும்பெருக்கித் துதிக்கைக
ளிற்பற்றியிருக்கின்ற யிருப்புலக்கைகளை மேகங்கள்பறந்தோடச் சுலவி
விறிட்டிருக்கும் நீலகிரியையொத்த யானையணிகளும் அலைகளுக்கொப்
பாகத் தத்தித்தாவிப்பாயும்வேகமுள்ளபுரவிப்பந்திகளும்பாதகங்களே
உருக்கொண்டிருப்பதையொத்த கரியதிரேகத்தையுங் கொடியமனதை
யும்பெற்ற செயசாலிகளாகிய ராட்சதச்சேனைகளும்பலவெள்ளக்கணக்கி
ல் மதிற்புறங்களினும் கொம்மைகளினிடத்தும்பக்கங்களினும்நெருங்
கிக்கண்ணிமையைப்போலக்காவல்கொண்டிருக்க அவர்களுக்கதிபனாய்சூ
ரனுக்குப்பின்பு மாயைக்கும் காசிபருக்கு முதித்தவனாய் பலபுலிமுகங்
களைப்பெற்று ஆலகாலத்தினுங் கடின சித்தமுடையவனாய் புச பெல
பராக்கிரமத்திலொப்பற்றவனா யிருக்கப்பட்ட வியாக்கிறமுகனென்னும்
சிராதிவீரனானவன் பலநிலைகளைப்பெற்று நவரத்தினமயமாய் விளங்கின
வீவிடங்களினும் காடைவிளக்குகள் பிறகாசிக்க மயேந்திர புரத்துக்கு
மேற்புறத்தில் ஓங்கியிருக்கும் கோபுரவாயலின் முதற்பரப்பில் நவரத்
தினமயமாகிய சிங்காதனத்தில்வீற்றிருந்து உதிரத்தைப்பூசி விளங்கும்
வேலாயுதத்தைக்கரத்திற்கொண்டு யிடைவிடாமற்போற்றிவருவன் அவ
ன்வலியெப்படிக்கொத்ததெனில் முன்னொருகாலம்தன்னுணையைக்கட

ந்த எமனைவாட்டி அவன்கரத்திலிருந்த சூலப்படையைப்பறித்துக்கொ
ண்டும் வருணனைச்சாடி அவனிடத்திருந்தபாசத்தைப்பிடுங்கினவனாய்அ
வ்விருவரையும் பலகாலம்அரிய சிறையில்வைத்தகொடியபாதகன் யிப்ப
டிக்கொத்த வீராதிவீரன்மேகங்கள் யிடிகளைக்கக்கிக்கொண் டோடத்த
க்கதாக பூதவீரர்கள்கெற்சித்துக்கொண்டு வீரவாகு தேவர்முதலாகிய ப
டைத்தலைவர்களுடன் தானிருக்கின்றவாயலை நெருங்கிவருவதைக்கண்ட
மாத்திரத்தில் விழிகளிற்றீயெழ வுருத்து சற்பத்தைப்போலச்சீறிச் சிங்
காதனத்தைவிட்டெழுந்து தன்சேனைகளைக்கூவித் துரிதமாகப்போய்ப
கைவரைவாட்டும்படிக்குக் கட்டளையிட்டுமுந்நியனுப்பினவனாய் பாரித்
தவில்லையும்அம்புறாத்தூணீரத்தையும் - வயிரத்தண்டம்-வேல்,வாள்-மு
தலானபடைகளைத்தாங்கிச் சொர்ணமயமாய் நவரத்தினகாந்திகளைவீசிக்
கொண்டிருக்கும் தேரைக்கொண்டுவரச்சொல்லி அதின்பேரிற்சிங்கத்தை
நிகர்த்துத்தாவியேறி மண்டிபோட்டுவீற்றிருந்து அதிவேகமாய்ப் புற
வணியிற் போகின்ற தருவாயில் முன்செல்ற ரதகெச துரக பதாதிகள்
கொக்கரித்துக்கொண்டுவருவதை பூதவீரர்கண்ட மாத்திரத்தில் றவுத்தி
ராகாரமாகக்கோபித்துச்சண்டைக்காயுத்தப்பட்டனர்அத்தருவாயில்ராட்
சதப்பாதகர்மிஞ்சியாரித்தவிற்களைவளைத்து தீட்சணியமாகியபாணங்களை
ச்செலுத்தியுங் - கதை-தோமரம் - பிண்டிபாலம்-முசலம் - கப்பணமுதலி
யபடைகளைவீசியும்யிவ்விதமாகப்போராடுகின்றதருவாயில் பூதப்படை
களும்சிலரோங்கி விருட்சங்களைக்கொண்டு மோதியும் மலைகளைவிட்டெ
றிந்தும்-எழுவாயுதம்-மழுவாயுதம்- சூலம் - வளைதடி - யிருப்புலக்கைக
ளை அமோகமாகப்பிரயோகித்தும் இவ்விதமாகயிருதிறத்துச்சேனைக
ளும் பின்னிடையாமல் வடவையும் ஆலகாலமு மெதுத்துப் போராடுவ
துக்கொப்பாகவீராவேசங்களுடன்கொடியபோரைச்செய்துவரும்போ
து ராட்சதச்சேனைகளில் தலைபிளந்தும் மூளைசிதறியும் கழுத்தொடிந்து
ம் பற்களுதிர்ந்தும் மார்புநெக்குவிட்டும் தொடைகள் முறிந்தும் ரணக்
களமெங்கும் விழுந்துமாளவும் தேர்களுருப்புகளனைத்தும் சின்னபின்
னப்பட்டு நறுங்கவும் மதயானைகள் கண்டதுண்டப்பட்டுக் குவியவும்
புரவிக்கூட்டங்களஅதப்பட்டுருண்டகாலத்தில் பூதவெள்ளத்தினும்கழு
த்தற்றும் மண்டைதுறந்தும் மார்புபிளந்தும் புயங்கள் சரிந்தும் கால்
களொடிந்தும் பலகாயங்கள்பட்டும் யிறந்தும் களைத்தும் வருந்தினர்,
அப்போதுஉதிரமானதுபெருத்துப்பூரணப்பிறவாகமாயோடும்நதியை
ப்போல யிரைச்சலிட்டுக்கொண்டுபெருகியது,இப்பிறகாரம்சிவகணங்க
ள்வாடுவதை - எண்மர் - இலக்கர்-கண்டமாத்திரத்தில்மனம்பொருமல் ற
வுத்திராகாரமாய் மண்டியெரிந்துமுன்னணியில்வந்துதங்கள் கரங்களில்

விளங்கும்வீரவிற்களை வளைத்து நாரிகளைபிகிர்ந்துவிஷத்தையொத்ததிட்ச
ணியமுள்ளபாணகோடிகளைச்சோனைப்பெய்யலுக்குமேலாகப்பொழிவ
தினால் ராட்சதர்கள்சின்னபின்னப்பட்டுமாண்டவர்கள்போக மற்றையர்
மாணபீதியினாற் கலைந்து பலதிக்கினும் மிறைந்தோடி யொளித்தனர்-
இவ்வாறுதங்கள் தலைவர்கள் வெற்றிகொண்டதறுவாயில் வாடியிருந்தபூ
தர்கள் மனவுச்சாகங்களுடன் மேலிட்டுத்துரத்தித்துரத்திச் சதுரங்கச்சே
னைகளையும் அதப்படுத்தி அவ்வெல்லையில் நிற்தஞ்செய்கிருக்கின்றபண
பத்திரகாளியுடன் மூளைச்சேற்றினிடத்தில் நடித்தார்கள் மேற்குறித்தப
டிக்கு நால்வகைச்சயின்னியங்களும் தும்சப்பட்டுமாண்டதைப் பார்த்
தகாலத்தில் வியாக்கிறமுகன் வடவாமுகாக்கினியைப்போலப் பொங்கி
நல்லகாரியம்நாம்பார்த்திருக்க இப்படிக்கொத்த கொடுமைகளைச்செய்
தபூதனையும் மற்றபடைத்தலைவனையும் அதா அதப்படுத்திக் கோபமாறு
வேனெனச் சபதங்களைப்பேசிக்கொண்டு எமனையொத்தகொடுமைபெற்
றிருக்கின்ற சூலாயுதமொன்றைக்கரத்திற்பற்றினவனாய் மேலிட்டுவரும்
போதுபலகோடிபூதர்கள்மடக்கிக்கொண்டுஎங்கேபோகின்றனை நில்லுநி
ல்லென்றதட்டி தங்கள்கரங்களிலிருந்த பாரித்தமலைகளை றிவ்வு றிவ்வென
க்கடாவியும் திசைகளைமூடத் தழைத்திருக்கின்ற விருட்சங்களைப் பிடி
ங்கிச்சாடியும் வாதாடுகின்றதறுவாயில் அவுணவீரன்சீறி தன்கரத்திற்பற்
றியிருந்த சூலத்தினாற்றட்டியும் நறுக்கியும்வெட்டியும்பொடித்தும் இ
வ்விதமாக மேலிட்டுவந்தவைகளை பறக்கடித்துசகலரும் நடுங்கும்படிக்
கு சமுத்திரத்தைப்போல ஆர்ப்பரித்துமீறிவருகின்றவியாக்கிறமுகன்வ
லியையும்சூரத்தையும் பூதத்தலைவனாகியசிங்கனென்பவன் கண்டுயினிசும்
மாயிருக்கலாகாதென நினைந்து கூரிய சூலமொன்றைக் கரத்திற்பற்றிமி
ன்னலுக் கொப்பாகப் பாய்ந்துமேகங்கள் திடுக்கிட்டோடக்கெற்சித்து
வடவையைப்போற்சீறி அவுணப்பாதகனெதிரில்வருந்தறுவாயில் வியாக்
கிறமுகன்கொதித்து தன்கரத்தில்விளங்கும் சூலத்தினால் அவன் மார்பிற்
றடாரித்துருவக்குத்தினான் அதினால்வருத்தியும்தீரனாய் மண்டியெரிந்து
தன்கரத்திலிருந்த முத்தலைப்படையினால் பகைவன் மார்பு பிளக்கும்படி
க்குப் பாச்சியகாலத்தில் அவ்விருவீரர் தேகங்களினின்றும் உதையகி
ரியினிடத்திற் சூரியகிரணம்பரவியதையொப்ப உதிரப்பிறவாகமானது
பீரிட்டோடத்தக்கதாக ஒருவர்மீதொருவர்சீறிவயிரங்களைப்பேசிச்சூலா
யுதங்களைச்சுலவிக்கொண்டு சுருவளிக்காற்றைப்போல யிடம் வலமாகத்
திரிந்துதிரிந்து உறுப்புகளைக்குறிகொண்டுபாச்சியும் அதனைத்தட்டியும்
அதட்டியும் மீளக்குத்தியும் இவ்விதமாகப்பின்னிடையாமல் அகோரவு
யித்தியத்தைச்செய்துவருந்தறுவாயில் யிருவீரர் கரங்களினும் பிடித்தி

ருந்தகுலப்படைகள் முனைகள் மடங்கி பின்னப்பட்டபடியால் அதுக
ளையெறிந்துபோட்டுவிழிகளில்அனற்பொறிகள் சிதறக்கோபித்துகரங்க
ளைப்பிசைந்துகொண்டுமேல்லுபித்தியத்துக்காறம்பித்தவர்களாய்ப்பூமிபி
ளக்கும்படிக்குப் பாதங்களைப்பெயர்த்து முன்னடிவைத்துப் பின்ன
டிவாங்கிப்பாய்ந்தும் புசங்களைத்தட்டியும் விழிகளிற்றீயெழ ஒருவரை
யொருவர் வுருத்துப்பார்த்தும் வீரங்களைப்பேசியும்கரங்களைப்பிடித்த
மாக்கிக்கொண்டு முகத்தினும்புசத்தினும் மார்பினும் மற்றவுறுப்புகளி
னுங்குறிக்கொண்டுகுத்துவார்கள் அதைத்தடுத்து மீளத்தாக்குவர்கற்சம்
பத்தையொப்ப வலியபுசங்களினுலிடிப்பார்கள் கால்களைப்பின்னித்தட்
டுவார்கள் வுதிரம்பீறிட்டோட நெற்றியினும் தலையினும் குட்டுவார்கள்க
ன்னம்பிளக்க அறைவார்கள் யிடசாரிவலசாரியாய்த் திரிவார்கள் இவ்வித
ங்களில் மற்போனாச்செய் துவருந் தறுவாயிற் சிங்கன் தீரனுய்க்கோடை
யிடிகளைப் போலக்கரங்களினுலும் புசங்களினுலும் தாக்குகின்றதால்ம
யேந்திரபுரியின்மேற்புறக் கோபுரவாயலைக் காவல்கொண்டிருந்த வியா
க்கிரமுகன் வலிகுன்றிக் கைகால்சோர்ந்து யிரத்தம் பெருக்கெடுத்தோ
டச்சோர்ந்துநிலத்தில்விழுந்தான், அத்தறுவாயில்பூதவீரனுகியசிங்கனெ
ன்பவனுக்கு அதிகோபம்பிறவேசித்தபடியால் வீரவெண்டய மணிந்த
பாதத்தினுல் உதைத்துருட்டினன் உடனே மேகத்தைப்போலக் கதறிக்
கொண்டு பிராணனைவிட்டிறந்தனன் இந்த செயத்தைவானத்தில் வேடிக்
கைப்பார்த்திருந்த தேவர்க்கள்கண்டு பூதப்படைத்தலைவன் சவுரியத்துக்
குக்கொண்டாடி கற்பகமலர்களையிறைத்துச் சென்றயிடங்களில் யிவ்வி
தமாகவேவெற்றிபெறக் கடவையென வாழ்த்தினுர்கள்– சவுனகாதிரிஷிக
ளே, சிங்கம்புலியைச்சுலபமாக வெல்வதுதகுதியாதலால் வியாக்கிரமுக
னைவாட்டியது மேலானதன்று சிங்கன்செயவுச்சாகத்துடன் திரும்பிய
தைக்கண்ட பூதவெள்ளமானது மனப்பூரிப்புடன் சிங்கநாதங்கள் அட்
டகாசங்களைச்செய்து களியாடலைக்கொண்டாடி வானமதிர ஆர்ப்பரித்த
வர்களாய்ப் பெரும்புறக்கடலைப்போல யிரைச்சலிட்டுவந்த ராட்சதப்பாத
கரும் அவர்களுக்குத் தலைவனுனவனும் களத்திற்பட்டனர், இனிதடையி
ல்லாமற்கோபுரவாயலையிடித்துத்தள்ளிப்பட்டணத்திற் பிறவேசிப்போ
மென்றுசகலரும்பேசிக்கொண்டு ஒருவருக்குமுன்னொருவராய் மேவி
ட்டுப்போய்ச் சக்கிறவாளகிரியைப்போலப் பாரித்துவளைந்திருக்கும்கோ
ட்டைபொன்மதிலை வலியபாதங்களைக்கொண் டுதைத்துத்தள்ளி நிலத்தி
ல்திரவி அத்தலத்தில்வானத்தையளாவநின்ற சித்திரக்கோபுரத்தை அடியு
டன்பறித்தெடுத்து பர்தைப்போலக் கரத்திற்கொண்டு மயேந்திரபுரியி
ன்மத்தியில்விழுந்து அல்லோலகல்லோலப்படும்படிக்குவீசி ஆர்ப்பரித்த

தருவாயில்நடுக்கடலிற்கப்பல்கவிழ்ந்தமுன்னிலையில்அகிற்பட்டசெனங்
கள்முழுகிப்போவதைப்போலஅளவற்ற ராட்சதவீரர்கள்சின்னபின்னப்
பட்டுமாண்டனர், அத்தருவாயில்மகாவிஷ்ணுவையும் வெல்லவல்ல பரா
க்கிரமசாலிகளாகிய பூதவீரர்கள் வீராவேசங்களுடன்மயேந்திரபுரியின்
வீதிகளிற்புகுந்து எதிர்ந்தசத்துருக்களனைவரையும் கால்களினால்உதைத்
தும் தேய்த்தும அதாஅதப்படுத்துவதைக் கண்ட.தேவர்க்கள் யிச்செய்
கையிவர்களுக்குத் தகும்தகுமெனக்கரங்களைக்கொட்டிக்கொண்டாடிக்
களிக்கின்றதருவாயில் பூதர்கள்சிலரோங்கி சாபானுக்கிரகசாமார்த்தியமுள்
ளதவச்சிரேஷ்டர்கள் கோபமுண்டாகியகாலத்தில் ஒருசொல்லினால்எப்ப
டிக்கொத்தலையும் அழித்துப்போடுவதைப்போலவானத்தையளாவி பல
அடுக்குகளைப்பெற்றுசொர்ணமயமாய்நவரத்தினகாந்திகளைவீசிக்கொண்
டிருக்கும் மாடமாளிகைகள்கூடகோபுரங்கள் சித்திரமண்டபங்கள்முத
லானதுகளை உதைத்துத்துகள் துகளாயுதிரும்படிக்கு நிலத்திற்றள்ளிவாட்
டித்திரிகின்றதருவாயில்-எண்மர்-இலக்கர்-கோபமிகுதியினால் வடவாமு
காக்கினியைப்போலச்சீறிபாரித்தவிற்களைவளைத்து அமோகமாகியதிவ்வி
யபாணங்களைச்செலுத்தி அணிபடநிறுத்தி யிருக்கின்ற ரதபந்திகளையும்
மும்மதங்களையும் பெருக்கிவீறிட்டிருக்கின்ற யானை யணிகளையும் மே
கங்கள்நடுங்கியோடும்படிக்குக் கனைக்கவல்ல புரவிப் பந்திகளையும் சே
னைப்பெருக்கையும்உப்பரிகைஅரமனைமுதலியவற்றையும் தும்சப்படுத்
தித் தாமரைமலர்நிறைந்த தடாகத்தில்மதயானைகள்விழுந்து கலக்கியதுக்
கொப்பாக அலைத்துலவவும்புசபெலபராக்கிரமசாலியாகியவீரவாகுதே
வர் நாரசிங்கமூர்த்திக்குச்சமதையாய்க் கொதித்துபினாகத்துக்கீடாகிய வி
ல்லைவளைத்துநாணேற்றி அண்டங்களதிரக்குணத்தொனிகொண்டு அக்கி
னியாஸ்திரத்தைப்பூட்டி வழிபட்டுச்செலுத்தி உடனேவாயுவாஸ்திரத்தை
த்தொடுத்துப்பூசித்து யிந்தபட்டணத்தைக்கொளுத்தி நாசஞ்செய்துவ
ரக்கடவீர்களென வேண்டித்தூண்டிய காலத்தில் அந்தயிரண்டு தெய்வ
ப்படைகளும் வெளிப்பட்டவுடன்சற்வசங்காரகாலத்தில்உலகங்களை
த்தையும் சாம்பலாக்கவல்ல பேருருவைக்கொண்டு பட்டண முழுமையு
ம்உலவி ராட்சதர்பெண்டுபிள்ளைகளுடன் அலைச்சற்பட்டுதிகைத்துவாடி
நாசப்படத்தக்கதாகச்சுட்டு சத்துராதிகளால் நம்மையென்ன செய்யப்ப
டும்செயசாலியாகிய வீரன்பாதுகாத்துரட்சிக்கும்படிக்கு யிதோயிருக்கி
ன்றனனெனத் துணிவுகொண்டு எவ்வளவும் அச்சமற்றதாய் நட்சத்தி
ரங்கள்பொரியைப்போல உதிரும்படிக்குக்கனலைவீசிப் பிரசண்டவாயு
வைப்பெருக்கி ராசதானியாகவிருக்கின்ற நகரமெங்கும்தகிக்கின்ற தரு
வாயிற்சிலவிடங்கள் உலர்ந்தகாட்டினிடத்தில் அக்கினிபற்றிதகிக்கின்ற

தூக்குச் சமனையாகச் சடசடத்த தொனிகளுடன் எரியவும் சிலயிடங்கள் சாம்பலாகப்பறக்கவும் சிலயிடங்கள் துகள்பட்டுப்பயந்தோடுகின்ற ராட்சதர்மீது அனற்பொறிகளைப்போலவிழுந்து சுடவும் சிலயிடங்கள் அண்டங்களதிர படபடவெனவெடிக்கவும் சிலயிடங்கள் கருகி உருக்குலைந்து டங்கப்படவும் சிலயிடங்கள் தகிக்கப்பட்டுப் பொரியவும் சிலயிடங்கள்புகைசூழ்ந்து சத்துருக்களை வளைந்து மூச்சாடவொட்டாமற் கொல்லவும் இவ்விதமாகப் பூர்வத்திற் சிவபிரான் நகையழலினால் முப்புரந்தீப்பட்டெரிந்ததற்கொப்பாக ஆயிரத்தெட்டண்டங்களினுமிருக்கப்பட்டவர்களனைவரும் நடுங்கிப்பணிந்து போற்றத்தக்கதாகக் கொடுங்கோல்செலுத்திவரும் சூரபதுமன்வாழுகின்ற வீரமாமயேந்திர புரியானது எவ்விடங்களிலும் அக்கினிப்பிறவேசப்பட்டு சரிந்தும் பொரிந்தும் எரிந்தும் இடிந்தும் பொடித்தும் இவ்விதங்களிற் றும்சப்படத்தக்கதாக அக்கினிதேவனும்வாயுவும் சேர்ந்துவாட்டுகின்ற கொடுமையைக்கண்ட தூதர்கள்நடுநடுங்கிக் கைகால்களுதறலெடுக்க மனோவேகத்தினுமேலிட்டோடி நவரத்தினமயமாகச் சொலித்துக்கொண்டிருக்கும் ராசாதிராசன் அரமனையைச்சேர்ந்து விழிகளில்நீரைப்பெருக்கிப் புலம்பிக்கொண்டுபோய் சூரபதுமனைக்கண்டு வணங்கிப்போற்றி கர்த்தனே என்சொல்லுவோம் சூரியனைச் சிறைபடுத்திய வீராதிவீரனாகிய தேவரீர் குமாரன் மோகனப்படையைக்கொண்டு வாட்டி வீரவாகுதேவர் முதலிய படைத்தலைவரையும்பூதவெள்ளத்தையும் சுத்தோதகக்கடலிற் சேர்த்தவனாயிற் றேவரீர் சித்தத்துக்குவிசிதமாயிருக்கின்றது அதன்பின்பு நடந்தசேதிகளையுஞ்சேட்டருள்க முற்குறித்தபடிக்குத் தூதன்முதலானவர்கள் அதப்பட்டுப்போனதைக் கண்டநாரதன் வேகமாயோடி பாசறையிலிருக்கின்ற பாலசுப்பிரமணியனுக்குத் தெரிவித்தவுடன் தன்கரத்திலிருந்தவெற்றிவேலைத்தூண்டினன் அப்படையானது அதிகமகிமைகளைக் காட்டிக்கொண்டுபோய் சுத்தோதகக்கடலினருகில் வருவதன்முன்னம் மாயப்படையானதுநடுநடுங்கி வலிகுன்றிநாசப்பட்டது பின்புவேற்படை ஒருதிரம்சமுத்திரத்தின்மீதில் உலவிவந்தமாத்திரத்திற்றூதன்முதலானபூதச்சேனைகளைத்தம் மயக்கங்களொழிந்துபிராணனுண்டாய்தேவர்க்கள்களித்துக்கொண்டாடத்தக்கதாய்சகலரும்வெளிவந்துவேற்படையைத்தெரிசித்துவணங்கிப் பலவிதங்களிற்போற்றிய தருவாயில் அவர்களைத் துரிதமாகவரச்சடவிர்களெனக் கட்டளையிட்டு கோடிசூரியப்பிறகாசமாய்சொலித்துக்கொண்டுதிரும்பி பழையபடிக்குப் பாலன்கரத்தில் நின்றது உடனே வீரவாகுமுதலாகியபடைவீரர்பூதவெள்ளங்களுடன் வானவழிக்கொண்டுவாயுவேகத்தினுங் கடுகிவந்துநமதுபட்டணத்தின் மேற்புறத்தில்விளங்

கும்கோபுரவாயலுக்கருகில்வீராவேசங்களுடன் சொக்கரித்துக்கொண்
டுவருவதை அவ்வாயலைக்காவல்கொண்டிருந்த வியாக்கிறமுகன்கண்டுற
வுத்திராகாரமாகக்கோபித்து ரதகெசதுரகபதாதிகளையுங் கூட்டிக்கொண்
டுபோயெதுத்து அகோரவுயித்தியங்களைச்செய்த தறுவாயில்பகைவர்வீ
றி சதுரங்கச்சேனைகளையுங் கண்டதுண்டப்படக்கொன்று சேனைக்காவ
லனையும் நிமைப்போதில் ரணக்களத்துக்குப்பெலிகொடுத்தார்கள் அந்
தபூதவீரர் செய்தகொடுமைகளைச் சொல்லிமுடியாது பின்புசெயசாலிக
ளாய்மைமிஞ்சி பொன்மயமாகநின்ற மதிலைஉதைத்திடித்து பூமியில்நிர
விபலநிலைகளைக்கொண்டு வானத்தையளாவநின்றகோபுரத்தைவேருடன்
பறித்துயிந்தநகரமத்தியில் வீசினார்கள் அக்காலத்தில் விளைந்த அனர்த்த
ங்களைச்சொல்லப்படுவதோ அப்போதுங்கோபந்தணியாமற் பூதர்சில
ரோங்கிப் பட்டணத்திற்பிறவேசித்துக்கலக்கவும் ஒருபுறத்தில்படைத்த
லைவர்கள் சின்னபின்னப்படச்சாடவும் யிப்படிக்குநடந்துவருகின்றத
றுவாயிற் பாதகனாகியதாதன் மனம்பொருமற் றன்வில்லில் அக்கினியா
ஸ்திரத்தையும் வாயுவின் படையையும் பூட்டிச் செலுத்தினன், அவ்விர
ண்டும்சற்றும்பயமில்லாததாய் பட்டண மெங்கும்பரந்து பொன் மய
மாகியமாடமாளிகை கூடகோபுரமுதலானசிங்காரங்களனைத்தையும்கொ
ளுத்திவாட்டுகின்றது நாங்களிருந்தவளாயிற் பட்டணத்துமேற்பாரிச
த்தில் ஆயிரயோசனைவனாயில்தகிக்சப்பட்டதுயிப்போது என்னமாயிரு
க்குதோதெரியாது யிதுகளனைத்தையும் கண்களாரக்கண்டு வர்தனம் சந்
தேகம்வேண்டுவதில்லைராசாதிராசனேசற்றுதாழ்ப்பீராகில்நகரமுழுதும்
தீப்பட்டுப்போம் போலக்காணுகின்றதென்று விண்ணப்பஞ்செய்தன
ர், அவ்வார்த்தைகள்சூரபதுமன் செவிகளில் நாராசத்தைக்காச்சிச்செருகிய
தைப்போலக் கேட்டமாத்திரத்திற் கோபக்கனல்மூண்டு மனதைவருத்த
விழிகள்சிவந்து அக்கினியைக்கொட்ட புருவம்நெற்றியிலேறத் திரேகம்
புழுங்கி வியர்க்கப்புகையும்அனலும் வீசுவதாகப்பெருமூச்செறிந்து நல்
லகாரியம்நல்லகாரியமெனச்சீறி பக்கத்திற் சரங்களைக்கட்டிக்கொண்டு
காத்திருக்கின்றதாதர்களைப்பாத்து நீங்கள் துரிதமாய்வானத்திற்சென்று
ஊழிகாலத்திற் பிரளய வெள்ளத்தைப்பெருக்கி உலகங்களை யழிக்கவல்ல
மேகங்கள்உறங்குகின்ற தலத்தைச்சேர்ந்து யித்தநிமிஷத்தில்யிழுத்துவ
ரக்கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் தகும்தகுமெனச் சேவி
த்து வானவழிக்கொண்டு மனோவேகத்தினுமேலிட்டோடி ஊழிமேகங்
கள்படுத்திருக்கும் அண்டப்பித்திகைச் [illegible]ச்சேர்ந்து கோடையிடி
களைப்போலத்தமது கரங்களினாற்றட்டி எழுப்பி ராசாதிராசன்உங்களை
ச்சீக்கிரமாகஅழைத்துவரப்பணித்தனர், நடக்கக்கடவீர்களெனத்துரிதப்

படும்போது என்னதெண்டனைகிடைக்குமோ வென்கின்றபயத்தினால்ச
ரீரங்கள் வியர்க்கப்பெருமூச்செறிந்துகொண்டு பறந்துவந்துமயேந்தி
ரபுரியைச்சேர்ந்து ராசப்பிரவுடீகனாகிய சூரபதுமனைக்கண்டுசேவித்து
ப்போற்றிநிற்கின்ற மேகங்களைப்பார்த்து நீங்கள்தீவிரமாய் சமுத்திரஜ
லத்தை அபாரியாய்வாரிக்கொண்டுவந்து யிந்தபட்டணத்தைக் கொளுத்
திவாட்டும் அக்கினிப்பெருக்கைபவித்துவரக்கடவீர்களெனத்திருவாய்ம
லர்ந்தமாத்திரத்தில் மகாபாக்கியம் யிதோ அந்தப்படிக்குச் செய்வோ
மென்று வானத்திற்சென்று மாபெலியி னிடத்திற் றனமேற்ற வாமன
னைப்போல புகைக்குநிகராய் வெளுத்து ஆகாயமுற்றினும்பரந்துசமுத்
திரத்திலிறங்கி கருநீலா ஏராளமாகவுண்டு காளகூடத்தையொப்பக் கறு
த்தெழுந்து பிராணிகளனைத்தும் திகைத்துவிழிகள்கூசிமயங்கத்தக்கதா
கமின்னி அஷ்டகுலாசலங்களும்மேருவும் கலகலத்ததிரவும் பூமியைத்
தாங்கும்ஆதிசேஷன் விஷங்களைக் கக்கிவாடவும் கெற்சித்திடித்து வான
மெங்கினும்விரிந்து ஊழிமேகங்களானவைவிண்ணையளாவஓங்கிவளைந்தி
ருக்கும்மதில்சூழ்ந்த மயேந்திரபுரியைஅக்கினிதேவன்கொளுத்திவாட்
டுகின்றகொடுமையையும் அவுணர்கள்படுந்துன்பத்தையும் பாலசுப்பிர
மணியதேவர்சேனைகளின் கோபாவேசங்களையும் பார்த்து நிதானித்து ந
ல்லகாரியம் சூரன்கட்டளையின்படிக்கு மண்டியெரியும் வெப்பத்தைத்
தணிப்போமாகிற் குமாரதேவர் படைவீரர்கள்கோபித்துக் கொல்வதற்
குச்சந்தேகமில்லை அதற்கஞ்சியித்தீயை யவிக்காமற்போவோமாயிற்சூர
ன்சீறித்தண்டித்து பாரவிலங்கைப்பூட்டிக் கொடியசிறையிலடைத்து வ
ருத்துவன் யிதற்கென்செய்வதெனக்கலங்கி யோசித்து அவுணராசன்கா
வலிற்பட்டு அளவற்றகாலம்வாடுவதினும் வெற்றிமாலைதரித் திருக்கின்ற
வீரவாகுதேவர்கரத்தில்மாளவரினும்யிம்மைமறுமைக்குவேண்டுங்-கீர்
த்தியும்-முத்தியும்-பெற்று வாழ்வோமெனத் துணிவுகொண்டு யானைப்
பிரமாணமாகிய துளிகளைச்சொரிந்து அமோகமாக வருஷிக்கின்றதரு
வாயிற் பட்டணத்தின்மேற்பாரிசவீதிகளைத் தகித்து வீறியிருந்த அக்கி
னியின்வெப்பந்தணிந்து குளிர்ந்துகாட்டியது இதைக்கண்டவீரவாகு
தேவர்சீறித் தீயெழநகைத்து நாமேவிய அக்கினி யாஸ்திரத்தின் கொடு
மையைமாற்றியதுமேகங்களோ அல்லதுபாதகராகிய அவுணர்மாயையோ
வென்று யோசிக்கின்ற தருவாயில் நாரதர்வந்து வீராதிவீரனே யிவைஊ
ழிமேகங்களாகும் சூரன் ஆக்கினைக்கஞ்சி வருஷிக்கின்றது துரிதமாய்ஊ
ழிக்கனற்படையைச்செலுத்தி வரட்டக்கடவையெனப் போதித்தமாத்தி
ரத்தில்வீரன்மகிழ்ந்து தனக்கிருக்கின்றஜயங்களையுங்கேட்டறிந்துகொ
ண்டுஅப்படையையெடுத்துப் பூசித்துமந்திரபூர்வகமாகவில்லிற்பூட்டி

ப்பிறையோகித்தனர், அந்தத்திவ்வியபாணம்விடுபட்டவுடன்வடவையைப்
போல மண்டியெரிந்தசுவாலையைவீசி வானத்திற்பரவி யிடிமின்னலைப்
பெருக்கிச்சொரிகின்ற மேகங்களைவளைந்துகொண்டு அவற்றினிடத்திருக்
கின்ற நீர்ப்பசுமைமுற்றும்வரளத்தக்கதாகக் காய்ந்துவலியையொடுக்கித்
திரும்பி வீரன் அம்புறாத் தூணிரத்திற்சேர்ந்தது, அத்தருவாயிற்பிரளய
காலத்திலெழுந் தார்ப்பரிக்கும் சத்தசாகரங்களைப்போலக் கதறிக்கொண்
டுநிலத்தில்விழுந்து சிவகடாட்சத்தினால் அறிவுவிளங்கிச் சண்முகப்பெ
ருமாள் திவ்வியநாமங்களைச்செபித்து பழையவலியைப் பெற்று பக்கத்
திலிருக்கின்ற சமுத்திரத்திற்படிந் தொளித்தது இக்காட்சியைப்பார்த்தபூ
தர்கள் சந்தோஷசாகரத்தில் முழுகினவர்களாய்த் துள்ளித் துள்ளி செயங்
கொண்டாடினர், தேவர்க்கள்வீரவாகுபேரில் கற்பகமலர்களை யிறைத்து
வாழ்த்தினர், தேவதுந் துமிமுழங்கியது யிந்தசம்பவங்க ளனைத்தையுங்
கண்டிருந்த தூதர்கள் மனம்பொறாமல் வேகமாயோடி அஷ்டலட்சு
மிகளுங்குடிகொண்டிருக்கின்ற அரமனையைச் சேர்ந்து சூரபதுமனைக்
கண்டுவணங்கி ராசாதிராசனே தேவரீர்கட்டளையின்படிக்கு ஊழிமேகங்
கள் அமோசமாய்மழையைப்பெய்து அக்கினிப்பெருக்கைச்சுத்தமாயவி
த்துக்குளிரச்செய்த தருவாயில் யிவடம்வந்து போனதூதன் கண்டவுட
ன் ஆலகாலத்தைப்போலச்சீறித் துரிதமாய்ஊழிக்கனற்படையைச்செலுத்
திநீரைவரளச்செய்ததுமன்றியிற்கொளுத்தியதருவாயில் மேகங்கள்குன்
றிக்குறைந்து விழுந்துபுரண்டு பயபீதியினாற்கடலில்மறைந்துபோயது,
இறைவனே கனல்தணிந்ததெனக்களிக்கவேண்டுவதில்லை அதற்கெண்மண
ங்காசப்படைத்தலைவர் பூதவீரர்கள் சிலரேங்கிப்பட்டணத்தைநாசப்படு
த்துகின்றனர், இதைமுக்கியமாகநினைத்துசிலயெத்தனத்தைத் தேடாமற்
போனால் மோசம்நேரும்போற்காணுகின்றதெனவிண்ணப்பஞ்செய்த
தருவாயிற் சூரபதுமனுக்கு அதிககோபம்பிறவேசித்துவிழிகள் சிவந்து
அனற்பொறிசிதறவும் தேகமெங்கும்வியர்க்கவும் காலாந்தகனைப்போ
லச்சீறி நல்லகாரியம்பலிக்குழன்றுதிரியும் அவலமாகிய பூதங்களும் நம
துபட்டணத்தில்வருவதோ சற்றும்பயமற்று வருத்துகின்றபகைவ்வாயு
ம்பாலனையும் அதா அதப்படுத்தி வெற்றிகொண்டு திரும்பக் கடவேன்
துரிதமாக நமது இந்திரஞாலத்தேரைக் கொண்டுவரக்கடவீர்களெனக்
காரியப்பேரைப்பார்த்துக்கட்டளையிட்டனன்,

சவுனகாதி ரிஷிகளே - சூரபதுமன் இவ்விதமாகப் பணித்த
தையிரணியனென்னும் பிள்ளையறிந்தவுடன் மனம் நடுநடுங்கி வருந்தி
மாரிகாலத்திற் பாம்புகள் பயந்து புற்றினிடத் தடங்குமாறுபோலக் க
ளிப்பற்றுக்குன்றினன், அவன் குணாதிசெயங்களைச் சொல்லக் கேழ்ப்பீ
ராக- சகலபுவனங்களுக்கும் ஆதிநூலாக விருக்கின்ற பெருமையைப்ப
டைத்த சதுர்வேதங்கள் ஆகமங்கள் புராணங்கள் சாத்திரங்கள் முதலி
ய நூல்களைப் பூரணமாகவாசித்து அவற்றின் நிச்சயங்களைத் தெரிந்தும்
பெரியோர்கள் -ஆசிரியர்- மூலமாய் நீதிசாத்திரப்பிரகரணங்களைப் பா
ர்த்தமாகக் கேள்விப்பட்டு நிச்சயவுணர்வைப் பெற்றவனுஞ் சிறந்த தற்
மமார்க்கத்தை நித்தியமாக வெண்ணி அதனை அநுசரித்து அதற்கடுத்த ந
டைநொடி பாவனைகளிற் பிசகின்றி நடந்துவருங் குணசம்பன்னன்-
இவையன்றியும் தங்கள்முன்னோர்கள் நடவடிக்கைப்பிறகாரம் மாயவஞ்
சகமுதலியவற்றைக்கிறமமாகப்போதிக்கப்பெற்றுகொடியபாதகராகிய
அவுணருக்கடுத்தவிற்பயிற்சிகளாதியான வல்லபங்களையுங்கிடைத்தவனா
யிருந்தபோதினுந்தீயகருமங்களைச்செய்யசம்மதப்படாதசுகுணன் யித்
தகையநன்னெறிகளைப்படைத்தவனாயினும்எதுத்தசத்திராதிகளொத்தகை
யொனினுந்தீதியாகியசண்டையைச்செய்துவெல்லவல்ல புசபெலபராக்
கிறமசம்பன்னன் இப்படிக்கொத்தசகலமங்களகுணங்களையும்படைத்தி
ருக்கின்ற ராசகுமாரன் தமக்கடங்காமல் பாதலத்தில் வீறியிருந்த அவு
ணவீரர்களின் பேரிற் கோபித்தெதுத்து அதாஅதப்படுத்தி தன்வெற்றி
க்கொடியைநாட்டி அவர்களை தன்வயப்படுத்திக்கொண்டு செயப்பிறதா
பத்துடன்திரும்பியசூரன் யிவனுக்கு மூன்றுசிரங்களும் ஆறுகரங்களு
ம் சொற்னப் படிவமாகிய திரேகமுமுண்டு அக்காரணத்தினால் இரணிய
னென்னும் பெயரைப்பெற்றவன் இத்தகைய பெருமைகளைப் படைத்தி
ருக்கின்றவன் ஒருபாரிசத்திலிருந்து ராசாதிராசன் மனக்கருத்தைத்தெ
ரிந்தவுடனெழுந்து சமீபத்திற்போய்பிதாவின்பாதாரவிந்தங்களிற்சே
வித்துக்கரங்களைக்கூப்பிநின்றவனாய் ஐயனேஎதோ அடியேனுக்குத்தோ
ற்றியமேம்பாட்டைத்தரவல்ல கிறமங்களை விண்ணப்பஞ்செய்வேனாயி
னும்கோபியாமல் அதுகளைக்கேட்டு நிதானித்து நடத்தக்கடவை அதனா
ல்நம்மிடமாயும் அகண்டசாம்பிறுச்சியச்செல்வவளங்களும் நீடித்தச
வுக்கியத்திலிருக்கலாகும்- அஃதென்னையெனில், அளவற்ற தவங்களைச்
செய்த பொன்னுலகவாழ்வைப்பெற்றுப் பரமசிவத்தைவழிபட்டுபெரி
யோர்கள் ஆசீர்வாதங்களைக்கிடைத்து நன்னெறிகளை யநுசரித்து சிவகா
ருண்ணியம் தயைதாட்சணியங்களையும்பேதமைத்தினத்தையுமுண்டாய்
மேலும்நமக்குதாயாதிகளாகவுமிருக்கின்ற தேவர்க்களை யலைத்துப்பிடி

த்துவந்து கொடியசிறையில் வைத்திருப்பதினாற் பழிபாதகமும் தீராத
வசையும் நேருவதன்றியில் நாம்பெறும் பலப்பிருப்பத்தியை ஒன்றுங்
காணேன்சகலகாரணகாரியங்களையும்உள்ளங்கைநெல்லிக்கனியைப்போ
லத்தெரியவல்ல ராசாதிராசனேயின்னமுஞ்சொல்லக்கேளும் நமதுயிரு
ம்செல்வப்பெருக்கும் சத்தியமாய் ஒருகாலம்நாசப்படுமல்லதுநீடித்தி
ருப்பதன்றுமேலும் சரபசார்த்தூலம்சிங்கம்புலிமுதலிய சஞ்சரிக்கும்
வனாந்திரத்தில் உழன்றலையும் துன்பங்களைப் போக்கிச் சிறந்த பட்டண
ங்கள் நகரங்கள்நாடுகளாதியாகியதுகள் நிறைந்திருக்கும் ஆயிரத்தெட்
டண்டங்களுக்குச் சக்கிரவர்த்தியாய் சகலமுயற்சிகளையும் கிடைத்து அ
கண்டசாம்பிருச்சியங்களையனுபவித்துச் செயசாலியாகவிருக்கின்ற யித்
தசெல்வச் சம்பத்தையாவராற் கிடைத்துவாழுகின்றனை, அக்காரணங்களை
யோசித்துப்பார்க்கக்கடவை—இஃதன்றியும். மகாவிஷ்ணுவை யொத்தவ
னைவெற்றிகொண்டதும்பிரமனாதியரிஷிகள்நடுநடுங்கிக்கட்டளைப்படிக்
கு யேவல்களைச்செய்யப்பெற்றதும் சிறந்தவானவனையலைத்துதசாததொ
ண்டுகளைக்கொண்டு வருவதும்காளகண்டமூர்த்தியாகியசிவபிரான்கடாட்
சித்திருக்கின்ற வரங்களின்முயற்சியினாலல்லது வேறுமுண்டோ யிதுவ
ல்லாமல்—மகாவிஷ்ணு-பிர்மதேவன்-இந்திரன்—தேவர்க்கள். அவுணர்
இராக்கதர்—முதலாகியவீரர்கள் பகைத்துமேவிட்டு வருவாராகில் அவர்
கள்மீதுகோபித்துப் போராடிவென்று புறந்தற்தோடத்துரத்திச் செய
ப்பிறதாபத்துடன் மீள்வதுஎளிதாகும் ஒருவிதத்திலதனைத் தகுதியாக
வேநினைக்கப்படும் தேவரீர்அரியதவங்களைச் செய்ததற்கிரங்கி அளவற்ற
பேறுகளைக்கடாட்சித்து ரட்சித்த தயாநிதியாகிய பரமேஸ்பரன் நம்மி
டத்தொரு குறைபாடுகளைக்கண்டு யிச்செல்வத்தை மாற்றிப்போடத்திரு
வுளங்கொள்வராயில் வயிரத்தைநினையாமல் வணங்கிப்போற்றி அக்கு
ற்றங்களைநிவாரணஞ்செய்துகொண்டு யிந்தமகதயிஸ்வரியத்தைநிலைபெ
றச்செய்துகொள்ளாமல் எதுத்துப்போரைச்செய்யவும் எத்தனிக்கப்படு
மோயாதொருகொஞ்சஉதவிகளைச்செய்தவர்கள்மிகவும்வருந்தஎதனையா
வதுமனப்பூர்வமாக முடிப்பாராயின் அத்தகைய கொடியபாதகருக்கு
எதிரிகள்முன்செய்திருக்கின்ற நன்றியேமனதைவருத்திவருத்திக்கொன்
றுவிடும் அத்தீடருக்குவேறொரு கூற்றுவனும்வேண்டுமோ கந்தசுவாமி
யைப்பெற்ற சிவபிரான்கட்டளைகளை மனதில்வேற்றுமையாக நினைக்கத்
தக்கசிற்றுணர்ச்சியைப்பெற்றவர்களனைவரும் நாசப்பட்டுப்போனதல்
லதுதங்கள்வல்லபத்தினாற் செயப்பிறதாபத்தையடைந்து பிழைத்திருக்
கின்றனரென ஒருவனைக காட்டவல்லமோ கங்காசடாமண்டல தாரியா
கியபரமன்கோபித்து மன்மதனைநுதல்விழிக்கனலினாலெரித்ததும்திரிபு

ராமிகளைநகைத்துச் சாம்பலாக்கியதும் அந்த காசூரனைச் சூலத்திற்குற்றி
த்தூக்கிச் சுழற்றியதும் மற்றும்பித்தனைய தெண்டனைகளனைவற்றையுங்கண்
டுமிருந்தவே அதுகளைத் தேவரீர்கேழ்விப்பட்டதில்லையோ - யிஃதன்றியும்
சிவவிரதங்களைசெய்திருந்த மார்க்கண்டேயனை மறியாமற்சிறிமேலிட்டு
வந்தஎமனையிறந்துருளத் திருவடிகளினுலுதைத்த காரணங்களையும் கங்
கையகந்தைகொண்டுபெருகி யுலகங்களையழிக்கின்ற தருவாயில் அவளா
ணவத்தை யழிக்கத்திருவுளத்தெண்ணிதமது திருச்சடை நுனியிற்சுவற்றி
யடங்கச்செய்ததையும் - பிரமன் - விஷ்ணு - முதலியதேவர்க்கள் திகைத்து
வருந்தியோடச்சீறியெழுந்த ஆலகாலவிஷத்தையுண்டு உலகங்களைக்கா
த்தரக்ஷித்திரத்தையும் அறியமாட்டீரோ - விஷ்ணுவானவர் நரசிங்கவுருக்
கொண்டு இரணியனைவாட்டிதேவர்க்கள் முதலாகத்திடுக்கிட்டுவாடக்கோ
பித்துச்சீறியதருவாயில் அடியவர்கள்முறைகளைத் திருச்செவிகளினேற்
றுத் தமதுருவமாகிய வீரபத்திரக்கடவுளைச் சரபப்பட்சியாகவரச்செய்
து அந்தநாரசிங்கத்தின்கெற்வத்தையடக்கியதையும் சகலசாம்பிருச்சிய
விபவங்களைத்தந்ததம்மைமறியாமற் செல்வச்செருக்கிற்பட்டு யிகழ்ந்து
செய்ததக்கன் மதத்தைவீரபத்திரக்கடவுளைக்கொண்டுவாட்டி அவனுக்கு
ஆட்டுத்தலையைத்தந்தகாரணங்களையும் யாவருஞ்சொன்னதில்லையோ உ
ந்திகமலவாசியாகியபிரமன்மதிப்பற்றிருந்த ஏதுவையினுற்சிவபிரான்வ
யிரவனாயேவி கூரியநிகத்தினுல் அவனைந்துசிரங்களி னென்றைக்கிள்ளி
வித்துமீட்டும் அவனுக்குணர்வைத்தந்து பாதுகாத்ததையும் அந்தகபா
லத்தில் விஷ்ணுமுதலிய தேவர்க்களுதிரங்களைக்கொண்டு அவர்கள்மை
யலையொழித்த சரித்திரங்களைமறந்தீரோமுன்னொருகாலத்தி லிருந்ததே
வேந்திரன் அகந்தையைக்கொண்டதருவாயில்வயிரவமூர்த்தியினுல்அவன்
புயவன்மையைவாட்டியடக்கியதையும் ஐவகைஇராக்கதர்கள் வெறிகொடு
மைசெய்ததருவாயில் அவர்களைக்கொன்று உலகஉபாதிகளைத் தவிர்த்தா
ண்டதையும் காகாசூரன்மன்னுயிரை வருத்துவதற்கிரங்கிடதைத்துத்தன்
ளிதோலையுரித்துப் போர்த்ததையும் புலியதளை உடையாகத்தரித்திருக்கி
ன்றகாரணத்தையும் ஐயனேஒருவரும் உமக்குப்போதித்ததில்லையோ வி
ஷ்ணுவின் அவதாரங்களாகிய ஏனத்தின் கோறதந்தங்களையும் ஆமையி
னோட்டையும்பறித்து கெற்வபரிகாரமாகத் தரித்தவிதத்தையும் பிரமன்
முதலாகியதேவர்க்கள் சிரமாலையையும் எலும்புத் தாழ்வடங்களையும் பூ
ண்டிருக்கின்றதிறத்தையும் மதித்துப்பார்த்ததில்லையோ தாருகாவனத்தி
ல்வாசமாயிருந்த தபோநிதிகளாகியரிஷிகள் கர்த்தன் மாய்கையிற் பட்டு
சிவத்தைப்பரமெனநினையாமல்யாகங்கள்தவங்களைச்செய்வதேபேரின்ப
மெனச்சில மோகனசாஸ்திரங்களை உண்டுபண்ணி அதை அனுசரித்து

வரும் கெற்வபரிசாரமாக அவர்கள்தவமுயற்சிகளையும் ரிஷிபத்தினிகள்
கற்பையும் அழித்தகாலத்தில் அத்தவத்தர்சிறி மாரகயாகமொன்றைத்து
டங்கி அதன்மூலமாய் முயலகனையுண்டுபண்ணி கர்த்தனைக்கொல்லும்ப
டிக்கேவியதறுவாயில்ஒல்லெனவரற்றிவாடத்தள்ளி மிதித்துநடித்தசதை
யையும்மற்றும்அந்தரிஷிகள்செய்த வஞ்சகங்களையடக்கியாண்டமகிமை
களையும் கியாபகங்கொள்ளவேண்டாமோயிதுகளன்றியும் தம்மைவழிப
ட்டுக்கிடைத்த செல்வத்தையனுபவித்துவருங்கெற்வத்தினால் விழிகள்மூ
டிஅதைத்தந்தகடவுளை மதியாமற் சத்துராத்துவங் கொண்ட பாபிகளை ஒ
ப்புவமையற்ற சிவபிரான்தண்டஞ்செய்தகாரணங்கள் பின்னமும் அன
ந்தகோடிகளுண்டு அதுகளனைத்தையுந் தெரிவிக்கவேண்டுமாகில் அளவு
ற்றயுகங்கள்செல்லும் மேலும் என்னுயசும்போதாது ஆதலால் தேவதே
வோத்தமனாய் சர்வசீவதயாபரமூர்த்தியாயிருக்கின்றசிவபிரானை எக்காலத்
தும்சிந்தித்துப்போற்றிஅவன்பாதாரவிந்தங்களைத்தஞ்சமாகச்சிக்கென
ப்பற்றிய புண்ணியவான்கள் யிம்மைமறுமைச்செல்வங்களையனுபவித்து
க்களித்துவாழ்வர் யிதற்குப்புறம்பாகிய அறிவீனர்க ளொருபோதும் பி
ழைக்கவகையற்றவராய்ச் சகலதுன்பங்களையும் அனுபவித்துவருந்தி க
டையில் நரகவாதனையிற்பட்டு வாடிமீளவும்-பிறந்தும்-யிறந்தும் அலை
வார்கள் ஐயனேயிப்போது பேசிய உண்மைகளைவேதாகம முதலிய நூ
ல்களிற்சொல்லிவருகின்றது இவ்வாக்கியங்களைத்தத்துவப் பொருளாகம
திக்கவேண்டும் ஆதலால்தேவரீரும்யிதுகளை யாராய்ந்துபாதகத்துக்கே
துவாகிய மார்க்கங்களைவிட்டு மேற்குறித்தநிச்சயப்பொருள்களைக் கவனி
த்துஅவற்றைக்கடைப்பிடியாக நம்பியனுசரிக்கவேண்டும் பிதாவேயின்
னமொரு ரகசியத்தைச்சொல்லுவேன் கோபியாமற்கேட்டருக, ஆதியில்
தேவரீர்முடித்ததவஉறுதிக்கி மெச்சி இந்தஅரிகருமையையும்சம்பத்தை
யுங்கடாட்சித்தகர்த்தன்திருவுளத்தில் நினைப்பாராயின் நிமைப்போதில்
மாற்றவல்லன் அவனருளுருப்பெற்றெழுந்த குமாரசுவாமியுடன்பகை
த்துச்சண்டைக்குப்போக நினைப்பதுதகுதியோ ஐயனேதன்னினு முய
ர்ந்தவர்களுடன் போர்செய்யவெத்தனித்தால் செயமுண்டாகுமென நி
னைக்கப்படுமோயிவையன்றியும் சிலகாலத்துக்குமுன்னம் பூதலமும்வா
னகமும் திசைகளும்சத்தசாகரங்களும் அதன்மத்தியிலடங்கிய தீவுகளு
ம்மகம்மேருமுதலியபர்வதங்களும் மற்றுமிராநின்றசமஸ்தமும்மாறு
பட்டு பலபலவேடிக்கையாற்தமாகக்காட்டியசெய்கைகளை யாமெல்லவ
ருங்கண்டு யிதென்னஉற்பாத மாயவித்தைகளா யிருக்கின்றதென் றெண்
ணியாதுந்தோற்றாது மயங்கினோம் அவையனைத்தும் ஆதிகர்த்தனுமையசி
வகுமாரன் திருவிளையாடலெனத்தெரிந்த மேலவர்கள்சொல்லக் கேழ்வி

ப்பட்டனம், அக்காலத்தில்இந்திரன்முதலாகிய தேவர்க்கள்மருண்டுயி
ச்செய்கைகளையாவர் நடாத்தினரெனத் திகைக்கின்றதருவாயில்அவர்கள்வி
ழிகளுக்குத்தோற்ற வேற்றுருக்கொண்டு மேருகிரியின்மீதில்நின்றபோ
துமுர்காட்டில்மாறுபாடுகளனைத்தும்இந்தபாலன் நடித்தலெனக்கோபி
த்துச்சூழ்ந்துகொண்டு சண்டைகொடுக்கின்றதருவாயில்தேவராசன்முத
லாகியசகலரையும்மாய்த்துபின்புபிறகஸ்பதிவேண்டுதலுக்கிரங்கிஉயிர்பெ
ற்றெழக்கடாட்சித்தனரெனச்சொல்லுகின்றனர்பின்புஅவர்கள்சந்தேகங்
களொழிந்து மனஉறுதிகொள்வதாகவெண்ணிஆயிரகோடிஅண்டங்களு
ம்அவற்றுளடங்கியிருக்கின்ற புவனங்கள் தேவர்க்கள்ரிஷிகள் சராசரப்
பிறபஞ்சங்கள் பற்பலவள்ங்கள் அவற்றிற்குக்காரணபூதமாக விளங்கியி
ருக்கின்ற திரிமூர்த்திச் சொரூபங்களாதியசகலமுந் தன்வடிவிற் றோற்ற
க்கந்தன் விசுவரூபங்கொண்டிருளினனெனப் பெரியோர்கள் வழங்கிக்
கொள்ளுகின்றனர், யிஃதன்றியும் குடிலமந்திரத்தின்பொருளை வினு
விவிடைதரமயங்கிய பிரமனைக்குட்டிச் சிறையிலிட்டு தாமே சராசரங்க
ளனைத்தையும் அளவற்றகாலஞ்சிருஷ்டித்து வருகையிற்சிவபிரான்வேண்
டியபடிக்கு விடுதலைசெய்தனரெனச்சொல்லும் பெருமையையுடைய சு
ண்முகன்செய்கைகளைக்கேழ்க்குந்தோறும் மனதில்அற்புதம்விளைகின்ற
து இவையன்றியும் முன்னமொரு கற்பத்தில் விஷ்ணு வராக உருக்கொ
ண்டபோது கெற்வித்துஉலகங்களனைத்தையுந் தன்கோட்டினாற் சல்வி
ப்பிராணிகளையலைத்து வருத்துந்தருவாயிற் பரமனருளின் படிக்கு அப்
பன்றியின்கோறதந்தங்களைக் கரங்களினாற் பற்றிப் பூமிவான மெங்கணு
மிழுத்துக்கொண்டு திரிந்ததருவாயில் வலிகுன்றி அகந்தையொழிந்து
போற்றியிரக்கவிரங்கி அதன்கோடுகளிலொன்றைப்பறித்து தமதுபிதா
வாகிய சிவனுத னணியக்கொடுத்தானென்றுங் கேழ்விப்பட்டனன், இத
னாற்திரிபுரதகனர் குமாரன்யாவரினும் வலியனென்பதைச் சொல்லவும்
வேண்டுமோவாமனவதாரங்கொண்டகாலத்தில் மண்விண்ணையளந்தம
காவிஷ்ணுதாண்டிய சக்கரத்தைக்கழுத்தணியாகத் தரித்திருந்த தாருகா
சூரனையும்மாய்கையிற்சிறந்தகிறவுஞ்சபற்வதத்தையும்வெற்றிவேலினாற்
பிளந்துகொன்றது அதற்குச்சாட்சியல்லவோ சண்முகங்களைக் கொண்
டிருக்கின்ற நிர்மலக்கடவுளைச் சிவத்தின்விழிகளிலுதித்த பாலனென்றி
கழவேண்டாம் செய்கையினாற் சகலதேவருக்கும் மேலாக நினைக்கப்படு
ம் யிதற்குச்சிலதிஷ்டாந்திரத்தைக் காட்டுவேன் சற்வசங்கார காலத்திற்
பிறப்பிறப்பிலியாகிய உருத்திரமூர்த்தியினது நகையினின்றெழுந்த சிறு
பொறியன்றோசராசரப்பிறபஞ்சங்களனைத்தையும் தகித்துச் சாம்பலாக்க
வல்லது இதுவுமல்லாமல்இந்திரன் பலவளங்களையும்போக்கி வாடுகின்ற

துன்பத்தையும்சயர்தன்முதலான தேவர்க்கள்கொடியகாவலிற்பட்டுவா டுகின்றவருத்தங்களையும்சிருஷ்டிகர்த்தனாகிய பிரமன்பெற்றுக் கிலேசிக்கின்றயிழிவையும் சக்கரப்படையைப்பறிகொடுத்துமங்கியிருக்கின்றமகாவிஷ்ணுவினதுவாட்டத்தையும்போக்கிப்பழையபடிக்குச்சலனமற்றஅவ்வவர்களரசுரிமைகளையும் செல்வங்களையும் கடாட்சிக்கத்திருவுளங்கொண்டுதிவ்வியமங்களசுருபத்தைப்படைத்தபாலனைப்போலவுருக்கொண்டுசிவபிரானே சண்முகங்களை வகித்தவதரித்தலரொனப்புகழ்வதல்லதுவேருென்றைக்குறிக்கவும்போதுமோ கங்கை புத்திரனென்றும் கார்த்திகைத்தெரிவையர் மைந்தனென்றும்-செங்கண்மால்மருகனென்றும்-தேவசேனுபதியென்றும் பிரமனுதியரானவர்களாலறியப்படாதசுயஞ்சோதிவடிவினனைப்பேசநினைப்பது பேதமையாகும்-அவன்குணுதிசெயங்களை அவனேயறியப்படுவதன்றியில் ஒருவர்கருத்தினும் விழிகளினும் அடங்கப்பட்டவனே இவைகளனைத்தும்நிற்க இப்பகல்பாநுகோபன்வஞ்சித்தேவிய மோசனப்படையின் வல்லபத்தினுல் வீரவாகுதேவர் முதலியபடைவீரனாமாய்த்து கடலினிட்டதைப் பன்னிருபுயாசலங்களைப்பெற்றிருக்கின்ற கர்த்தன்தெரிந்துஅவர்களை எழுப்பிக்கொண்டுவரும்படிக்குச் சுத்தோதகக்கடலின்மீதேவியவேலாயுதத்தைஇந்தபட்டணத்தினிடத்திற்செலுத்துவராகில் யிதுபரியந்தம் யிப்பிருந்தியத்தி லிருக்கின்ற நாமெல்லவரும்நாசமடையாமல் உயிர்பெற்றிருக்கப்படுமோ ஆதலாற்செயசாலியாகிய உமதுதுணைவனையும் வஞ்சகத்தினுல்தேவர் முனிவரைவாட்டியிருந்த கிறவுஞ்சவரையையும் பிளந்ததுமன்றியில் யித்தினம்பானுகோபன்படை முயற்சியினுல் சுத்தோதகக்கடலிற் பட்டுச்சோர்ந்தவீரவாகுதேவர்முதலிய சகலரையும் உயிர்பெறச்செய் திட்டுவந்த மகிமைகளைக்கண்டபோதே அந்தஒப்பற்றவேலாயுதத்தைப்போற்றிக் குமாரதேவர்திருவடிகளிற் சேவித்து வாழ்த்திகுறையிரந்து பிழைப்பதைமறந்து சத்துருவாகவெண்ணி சண்டைசெய்யப்போகத் துரிதப்படுவது மூடருக்கன்றியில் விவேகசாலிகளுக்கடுப்பதோ இதற்குத்திஷ்டாந்திரமாகச்சிவகுமாரன் சட்டளையின்பிறகாரம்முன்னம்வந்த தூதன்பலவீரரைவென்று என்சகோதரனையுங் கொன்று அஷ்டலட்சுமிகளும் குடிகொண்டிருக்கும்செல்வவளங்களைப்பெற்றிருக்கின்றஇப்பட்டணத்தைத்தாறுமாறுகவழித்துயாவரையும் சட்டைபண்ணுமற் செயப்பிறதாபத்தைப் பெற்றுப்போயினன், இந்தகாலத்திலும் முதல்நாள்பானுகோபன் சதுரங்கச்சேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய் சண்டைகொடுக்கு முன்னிலையிற்படைகளனைத்தையும் சின்னபின்னப்படக்கண்டித்து அவனையும் பறக்கடித்தான் இப்பகல் என்தமையன் கணக்கிறந்த சயின்னியங்களுடன்

போராடும்போது ரதகெசதுரகபதாதிகளையும் நாசப்படுத்தி பானுகோ
பன்மகிமருண்டலைய திவ்வியபாணங்களைக் கொண்டு வாட்டியதருவா
யில்எதிரில்நின்று சண்டைகொடுக்கவஞ்சி விண்ணிடத்தில்மறைந்திருந்
துமாயப்படையைச்செலுத்தி வீரவாகுதேவர்முதலானவர்களுணர்வைய
ழித்துக்கொன்று சுத்தோதகக்கடலிற் சேர்த்தகாலத்திற் சண்முகப்பெ
ருமான்செலுத்தியவேற்படையின் வல்லபத்தினால்உயிர்பெற்றுவந்துஇந்
தசிறந்தநகரையழிப்பனாயின் அவனைத் தூதனென் றிகழ்வது தகுதியோ
மேலும்அந்தகுமாரனைவெல்லவல்லவர்கள்யாவரிருக்கின்றனர் இவையன்றியு
ம்அரியதவங்களைச்செய்துபெற்றதேவாஸ்திரங்களைத்தாண்டியகாலத்தில்
அவைகளுக்குமாறுசெலுத்தித்தடுத்தும்சத்தசாகரங்களின்கடையிற்கொ
ண்டுபோய்வைத்திருந்தமோகனப்படையின் செயலற்றுநாசப்படுமாயி
ன்பேறிவாளராகவிருப்பவர் அந்தவீரனுடன் சண்டையிலெதிர்ப்பார்க
ளோநினைக்கவும்போதுமோஇவ்விதமாகத்தூதுவந்த ஒருவன்புசபெல
பராக்கிரமத்தினால்இந்தபட்டணமும்இதிலிருந்த அவுணவீரர்களும்அத
ப்பட்டதைதிஷ்டாந்திரமாகக்கண்டனம், இதையோசிக்குமிடத்தில்ஆதி
யந்தமில்லாதபாலசுப்பிரமணியர் சற்று கோபங்கொண்டு போர்செய்
யவருவராகில் நிமைப்போதிற் சகலபுவனங்களு மழிந்து போவதற்
கையமுமுண்டோ பன்னிருபுயாசலங்களைப் படைத்தகர்த்தன் சண்டை
கொடுக்குமுன்னிலையில் நாம்பெற்றிருக்கின்ற வரமுயற்சிகளும்தேவா
ஸ்திரச்செருக்கும் மாய்கையின் பெருக்கும் புசபெலபராக்கிரமங்களு
ம்சதுரங்கசேனைகளின் உதவிகளும் சூரமும் மற்றுமுண்டாகிய வன்
மைகளும்இந்தசிறந்தபட்டணத்தின்வளங்களும் புத்திரமித்திரர்வலியும்
சிவபிரான் நுதல்விழிக்கனலிற்பட் டழிந்த திரிபுரங்கள் அதில் வாசஞ்
செய்திருந்த அவுணவீரர்கள் நாசமடைந்ததைப்போல யாதொருபிர
யோசனங்களையுந் தராமல் மங்கியழியாதோ இவையன்றியும் முன்னம்
தூதனைச்செலுத்தி பற்பல காரணங்களைத் தெரிவித்து நமது கருத்தைய
றிந்து தேவர்க்கள்சிறையை நீக்கிவிடாதகாரணத்தினால் யிவட மெழுந்த
ருளியும் நாமே சண்டைக்குவராமற் றூதனையும் படைகளையுஞ்செலுத்
திகாரணங்களை யோசிக்குமிடத்திற் சரவணபவன் நமதிடத் தின்னமு
ங்கிருபையை வைத்திருப்பதாகக் காணுகின்றது, இத்தகைய தயாநிதியா
கிய கர்த்தன் மனதிலதிக் கோபங் கொள்ளுவதன்முன்னம் தேவர்க்கள்சி
றையை நீக்கித் துரிதமாய் நமதுசுற்றத்தினருடன்போய் அவன் திருவ
டிகளிற்சேவித்துக் கொடியவன் இதுபரியந்தம் செய்துவந்த குற்றங்க
ளைமன்னித்தாளவேண்டுமெனப் போற்றுவையாகில் நாம் முடித்திருக்
கின்றபலஅக்கிரத்தியங்களையும் பொறுத்து தேவரீருக்குவேண்டும்பல

வரங்களையும் தந்து தமது சேனைகளுடன் திரும்பி திருக்கயிலைக் கெழுந்
தருளுவர் நாமெல்லவருஞ்சிலகாலம் உயிர்பெற்றுச் செல்வங்களையனுப
வித்திருக்கலாம் இவையனைத்தையும்யோசித்து மேல்நடக்கவிருக்கின்ற
காரணங்களைத் துணிந்து சொன்னேன் அதுகளைக் கடைப்பிடியாகவெண்
ணியனுசரித்துநடந்துகடத்தேறுவையெனக்குமாரனாகிய இரணியன் பரி
வாய்ப்பரமசிவத்தின் குணாதிசெய நிச்சயங்களையும்பாலசுப்பிரமணியக்
கடவுளினது மகிமைகளையும் சூரத்தையும் விரித்து விரித்துச்செவிகளிற்
சுறுக்கிடச்சொன்ன பிறகாரணங்களைச் சூரபதுமன் கேட்டவுடன் வா
யினிடத்திற்றீயும் புகையுமெழ நகைத்துத் திசைகள் முதலாகக் கனல்ப
ட்டுவேகக் கோபித்து திரோசமுற்றினும் வியர்த்துப் புழுங்கப்பெருமூ
ச்செறிந்து யிதழ்துடிக்க பற்களைக்கடித்து சொவ்வைக் கனியைப்போ
லவிழிகள்சிவந்து கனலையிறைக்க மனங்கொதித்து சரீரம் பதைபதைக்
கப்பேரிடிக்கொப்பாகக் கரங்களைத்தட்டி இரணியனை உருத்துப்பார்த்
து இதனைச்சொல்லுவான் கூரியவேலாயுதத்தைப்படைத்தபாலசுப்பிரம
ணியன் சவுரியவன்மைகளையும் தூதாகவந்த சததிராதியின் புசபெலபரா
க்கிரமங்களையும் யானடந்துகொள்ளவேண்டிய காரணங்களையும்யோ
சிக்கத்துணிந்தனை இந்தநீதிகளை உனக்கார் அனுக்கிரகித்தனர் அவர்களைத்
தெரிவேனாயில் யிந்தநிமிஷத்திற் சிரச்சேதம்பண்ணி அவர்கள் குலநாச
ப்படவாட்டிவிடுவேன் யாரோபயமுறுத்திச் சொன்ன துற்போதனைக
ளை உறுதியாகநினைந்து என் வீரபராக்கிரமங்களையும் மற்றகாரணங்களை
யும் நீ சற்றும்யோசித்துப் பார்த்தவனல்லை அதுகளிற் சிலவற்றைத்தெ
ரிவிப்பேன் கேட்பையாக- சராசரப்பிரபஞ்சங்களை சிருஷ்டிக்கும்மு
தற்றொழிலைப் பெற்றிருக்கின்ற பிரமன் தினந்தோறும்பிருதகாலத்தில்
நமதரமனைக்குவந்து-திதி-வாரம்-கரணம், யோகம்-நட்சத்திரம்-இவற்
றின்காரியங்களைவிளக்குகின்ற பஞ்சாங்கத்தைச்சமையங்கிடைக்கிறபரி
யந்தம்காத்திருந்து சொல்லிப்போவன் ஷிராப்த்தியினிடத்தில்வடவாவி
லையிற்பள்ளிகொண்டிருக்கும்விஷ்ணுவானவன்என்தம்பியிரத்துக்காற்
றுமல்வலிகுறைந்து வாடி சகலரும்புகழநின்றசக்கரத்தையும்பறிகொடு
த்தோடிப்போயினன், இந்திரன் சகலதேவர்களுடனும் சமுத்திரத்தி
லிராநின்ற மச்சவகைகளைப்பிடித்துவந்து நம்மவர்களனைவருக்கும்கொ
டுத்துக்கொண்டு என்பணிவிடைகளைச் சிரசாகவகித்துச் செய்துசெய்து
வாடிப்பயந்தோடி யொளித்தான் இப்படிக்குச்சகலரும்நம்மாணைக்கு
ள்ளடங்கியிருக்கும்போதுவெள்ளியங்கிரியிலெழுந்தருளியகாளகண்ட
மூர்த்தியானவர் நேத்தியதிலம்பெற்ற சிறுபிள்ளையோ சலனமற்ற நமது
வீரத்தன்மையை யழிக்கவல்லன்-கேசவன்- பிரமன்- வாசவனாதியாகிய

தேவர்க்களும் யிவர்களன்றியிற் சகலபுவனங்களினும் வாசஞ்செய்திருக்
கின்ற யெத்தனைய வீரர்களும் இவர்க ளனைவருக்கும் ஆதியாகச் சொல்
லுகின்ற திரிநேத்திர தாரியாகிய பரமசிவனும் ஒன்றுபடத்திரண்டு ஏக
காலத்திற் சண்டைகொடுக்கவந்து நேருவராயினும் சற்றும் நமதுமுன்
னிற்கஞ்சிப் புறந்தந்தழிந்து போவதல்லது வெற்றிகொண்டொருகா
லமும்மீளவறியார்கள் சற்றும்விவேகமில்லாத பிள்ளாய் நான்பெற்றிரு
க்கின்ற வரங்களின்முயற்சிக ளுனக்குத்தெரியாததோ குமாரனே சூரத்
தையும் புசபெலபராக்கிரமத்தையும் வயிரத்தையும் மேம்பாட்டையும்
மறந்து கீர்த்திபெற்ற குலமுறையைக்கொன்றாய் ராசாங்கத்துக் கடுத்த
முயற்சிகளைச்செய்து பெறவல்ல புகழைமறந்து சத்துருக்கள் புயவன்
மையைநினைந்து பயந்தவனாய் தகாதகாரணங்களை என்முன் பினத்தினை
இனியொரு வார்த்தையையாவது மேற்குறித்த விஷயத்தைக் குறித்துச்
சொல்லுவையாகிற் புத்திரனென்னும் யிதக்கமில்லாமல் உன்னுயிரை எ
மலோகங் குடியேற்றுவேனென்று வடவாமுகாக்கினியைப்போற்சீறி
னான், அதைஇரணியன்கண்டு நாம்போதித்த நன்மார்க்கங்களைக் கொடி
யமனதையுடைய பாதகன் முக்கியமாக நினைந்தவனல்ல ஆதலால் இனி
யிவனிறப்பது உண்மை மேலும் சமுத்திரஞ் சூழ்ந்திருக்கின்ற யிந்தவு
லகத்தில் பிரார்த்தகர்மவினை முயற்சியை யாவர்வென்றனர், ராசாதிராச
னுக்குவினாசகாலம் நேர்ந்தபடியால் விபரீதபுத்திவிளங்குகின்றது, இனி
யற்பலதன்மார்க்கங்களையும் நீதிகளையும் உறுதிகளையும்தெரிவிப்பதினாற்
பிறையோசனமொன்றுமில்லை ஆதலால் தேவரீர் சற்விக்கியன் திரிகால
ங்களு முமக்குப் பார்தமாகத்தெரியும் ஏதோ சிலகாரியங்களைத் தெரிந்
தவனைப்போலத் தமக்கிவ்விதங்களைச் சொன்னேன் சிறியனாதலால் அ
டியேன் பிழைகளைப் பொறுத்தருள வேண்டுமெனத் தேற்றிக்கோபத்
தையாற்றி நல்லுணர்ச்சியற்ற பிதாவானவர் யிறப்பதற்கு முன்னம் புச
பெல பராக்கிரம சாலியாகிய வீரவாகுதேவருடன்சண்டைகொடுத்திறப்
பனாயில் மோட்ச சாம்பிராச்சியத்தைப் பெற்றுவாழலாகுமெ
னத்தணிவுகொண்டவனாய்ச் சக்கிறவற்தியாகிய சூரபதுமன்பாதாரவிந்
தங்களிற்சேவித்துப்போற்றிபிதாவே உமதுமனதைச்சோதிக்கவேண்டி
இக்காரியங்களை விரித்துப்பேசினேன் தேவரீர் திருவுளம் யப்படிக்கு
த்திடப்பட் டிருக்குமாகில் இதோயிந்தநிமிஷத்திற்போய் உமதெண்
ணப்படிக்கு பாலசுப்பிறமணியனையும் தூதன் முதலானவர்களையும்தி
மைப்போதிற்சாடி செயப்பிறதாபத்துடன் வாக்கடவன் செலவுகொடு
க்கவேண்டுமென்று வேண்டுகின்ற குமாரனைத் தயையாகப்பாத்து அப்
பனே முன்னஞ் சத்திராதிகளுக்கஞ்சி சமாதானப்படுவதற்கு வேண்டும்

யலயேதுவைகளைத் தெரிவித்த உனக்கு இத்தனை சீச்கிரத்தில் அவர்கள்
மீதுகோபம் பிறவேசிப்பதற்குக் காரணமென்னையெனக்கேட்டதறுவா
யிற் பிதாவே சூரனெனப் பெயர்படைத்திருக்கின்ற உமதுபிள்ளையாகிய
நான் சத்துருக்களுக் கஞ்சுவேனென் றெண்ண வேண்டுவதில்லை முன்
சொல்லிய தனைத்தும் வேடிக்கையாற்தமெனக் குறித்த இரணியனைக்
கொண்டாடி புலிவயற்றிற்பிறந்து பூனையாகுவையோவெனக்களித்தழை
த்தணைத்துக்கொண்டு நீ சொன்னதனைத்தும் முண்மையே சீக்கிரமாய்
உன்சேனைகளுடன்போய்ச்சத்துருக்களை அதம்பண்ணிவரக் கடவையெ
னக்கட்டளையிட்டவுடன் விடைபெற்று வெளிவந்து -வெண்சாமரை
-ஆலவட்டமுதலிய ராசசின்னங்களைப் பலர் தாங்கிவரத் துரிதமாய்த் த
ன்னரமனையைச்சேர்ந்து ஆயுதச்சாலையில் நுழைந்து பொன் மலையாகிய
மகம்மேருவின்மீது சந்திரனது சோடசகலைகள் பரவிக் காட்டுவதைப்
போல வயிரக்கவசத்தைச் சொற்னவடிவைப்பெற்ற மார்பினிடத்திறுக்கி
திவ்வியபாணங்கள் நிறைந்திருக்கின்றஅம்புறாத்தூணீரத்தைமுதுகிற்க
ட்டிரத்தினமயமாகியபுட்டில்களைவிரல்கடோறமணிந்து பகைவருயிரை
யுண்ணும்எமனையொத்த பாரித்தவில்லைத்தொழுதெடுத்துஇடக்கரத்திற்
பற்றிதேவாஸ்திரங்களைவலக்கரத்திற்றாங்கிசிரோரத்தினமயமாகச்சோடி
த்திருக்கின்ற கிரீடத்தின்பேரில் தும்பைமாலையைச்சூடி மந்தாரத்துக்கு
ச்சமதையாகிய-தண்டாயுதம்- வேல்- சக்கர முதலிய ஆயுதங்களை யெடு
த்துக்கொண்டு வெளிவந்து ஆயிரஞ் சிங்கங்கள் பூண்டு நவரத்தினமய
மாயோங்கிநிற்கும் ரதத்தின்பேரில் சிங்கராசனைப்போலத் தாவியேறி
விற்றிருந்த தறுவாயில் தனக்குத் தோழராய் பிராணபதமாகவிருக்கின்
றபுசபெலபராக்கிறம சாலிகளாகிய ஆயிரம் ராசகுமாரர்கள் சர்வாயுத
பாணிகளாய்த் தங்கள் தங்கள் வாகனங்களிலேறிவந்து சூழவும் வீராதி
வீரராகவிருக்கின்ற ஆயிரஞ் சேனைத்தலைவர்கள் பலபுரவிகளைப்பூண்டிரு
க்கும் தேர்களிலேறி -வில்-வாள்-வேல்- சக்கரம்- பிண்டிபாலம்-முச
லம்- சப்பணமாதியாகிய ஆயுதங்களையுங் கொடிய பாணவிதங்களையுந்
தாங்கினவர்களாய்ச் சத்தசாகரங்களும் பெருக்கெடுத்ததைப்போல ஆர
வாரித்துக்கொண்டு போர்க்கோலத்தைத்தரித்து அஸ்திர சஸ்திரங்களை
ஏராளமாகத்தாங்கிவீராவேசங்களுடன் சண்டைகிடைத்ததென்கின்றஉச்
சாகங்களைக்கிடைத்துவெளிப்பட்ட ரதகெசதுரகபதாதிகளைக்காவல்கொ
ண்டுவந்து ராசகுமாரனைச் சுற்றிக்கொண்டனர், அதுகளின்தொகையை
ச்சொல்லக் சேழ்ப்பிராக - எண்ணூறு வெள்ளம் தேர்கள்- எண்ணூறு
வெள்ளம் மதயானைகள்- ஆயிரத்திருநூறுவெள்ளம் பஞ்சகல்யாணிக
ளாகிய புரவிக்கூட்டங்கள்- ஆயிரத்திருநூறுவெள்ளம்செயசாலிகளாகிய

ராட்சதப் படைகள்- ஆக நாலாயிரவெள்ளம் சதுரங்கச் சேனைகளுஞ்சூ
றாவளிக்காற்றைப்போல அதிவேகமாக நடக்கவும்- ரணபேரி-செயபே
ரி-துந்துமி முழவு- வலம்புரிச் சங்கம்-எக்காளை- துடுமு- தப்பட்டை
முதலிய பதினெண் வாத்தியங்களும் அண்டங்களதிர முழங்கிவரவும்
துசபடங்கள் வானத்தையளாவி யசையவும் வெண்பட்டுக் குடைகள்கவி
த்துயிருளைச்செய்யவும்-கழுகு- பருந்து - காக்கை - பந்தலைப்போலவ
ட்டமிட்டுலவிவரவும் இத்தியாதிய வைபவங்களின் மத்தியில் சொற்னச்
சாயலையுடைய ராசகுமாரன் அரசவீதிகளில் வரும்போது அவனுடைய
மங்களகரமாகிய வடிவின் பெருக்கத்துக் கிச்சித்து மிருதுவாகிய வல்
லிசாதக் கொடியைப்போலத் துவளும் மெல்லிய யிடையையும் செம்
பஞ்சூட்டிமாந்தளிருக்குச் சமதையாகவிளங்கும் பாதங்களையும்முருக்
கலரைப்பழித்துச்சிவந்த அதரத்தையும் டொல்லையொத்ததேமல் படர்
ந்துபருத்து விம்மி ததும்பி பொற்கலசங்களைப்போலச் சுந்தரம்பெ
ற்றுஆடவர் மனதைமயக்கி வாடச்செய்யும் கொங்கைகளைப்பெற்ற இ
ரதிதேவியினும் வடிவுள்ள மங்கையர் செவ்வரிபரந்து வேலையொப்பக்
காதளவுமோடியிராநின்ற விழிகளாகிய கணைகள் பாரித்த புசங்களிற்பா
யிமையாமல் பார்த்துக்களிக்கவும் பலகன்னியர்கள் முத்தாலங்களைச்சு
ழற்றிப்போகவும் அக்காலத்திலுண்டாகிய சுமையினால் பூமிதேவிநெளி
ந்துநெளிந்துவாடவும் சேடன்களைத்தேங்கவும் இத்தகையசகலாடம்ப
ரங்களுடனும் தற்மமாற்கங்களையனுசரித்துவரும் இரணியன் மனவா
ட்டத்துடன் நகரைக்கடந்து சதுரங்கச்சேனைகள்ஆற்பரித்துவர தேவர்
க்கள்திகைத்துநடுங்கச்சென்று கோபமேலிட்டு பூதவீரர்கள் கொக்கரித்
திருக்கும் ரணக்களத்தைச்சேர்ந்து விண்ணவர்கள்முதலாகத் திடுக்கிட்டு
மனம்வருந்தும்படிக்குச் சகலபுவனங்களினு மிராநின்றபூதர்களனைவரு
ம்சேர்ந்து நாசஞ்செய்வதைப்போலச்சிவகணங்கள்மீறி அதாஅதப்படுத்
துவதை ராசகுமாரன்பார்த்து தீயெழநகைத்து தன்பட்டணம்பட்டபா
ட்டைக்குறித்து றவுத்திராகாரமாகக்கோபித்துப் பெருமூச்செறிந்துசரீ
ரம்வெதும்பி வியர்க்க விழிகளிற் றீப்பொறிசிதறத் தன்னைச்சூழ்ந் திரு
க்கின்ற தோழரையும் சேனைத்தலைவரையும் பார்த்து ஒவ்வொருதிசைச்சா
யிரவெள்ளமாகச்சதுரங்கச்சேனைகளையும் பிரித்து நீங்களும் நாற்கூறுக
க்காவல்கொண்டு வலியிற்சிறந்தபூதப்படைகளையும் சேனைத்தலைவர்களை
யும் பிசகவொட்டாமல் மடக்கிக்கொண்டு கொடியபோரைச்செய்து வா
ட்டக்கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் யிதுதகுந் தகுமென
ப்புகழ்ந்தவர்களாய் ராசபுத்திரன் குறித்தபடிக்குநால்வகைச் சேனைகளை
யும்பிரித்து-பத்மயூகம்- சகடயூகம்-கருடயூகம்-சரபயூகங்களாக-வகு

த்து அதுகளின் மத்தியிலும் புறம்பிலும் முன்பின்னும் தலைற்பாணிக
ளாகக்காத்து போற்பறைகள்முழங்கப் பிரளயவெள்ளத்தையொப்ப ஆ
ற்பரித்துப்போகின்றதறுவாயில் ராசபுத்திரனாகிய இரணியன் யிச்சேனை
களுக்கு முன்னணியிற் காலாந்தகனுக்கொப்பாக நடந்து வருகின்றசெ
ய்கைகளனைத்தையும் வெற்றிவேலாயுதக்கடவுள் தூதனாகியவீரவாகுதேவ
ர்கண்டு இவ்விதக் கட்டுக்காவலுடன் சவுரியவானாகப் போந்தவன் சூரப
துமன்பிள்ளைகளிலொருவனோ அல்லதுசேனைத்தலைவனோ இன்னானெனத்
தோற்றவில்லையென்றையப்படுகின்றதறுவாயில் நாரதரிஷி எழுந்தருளி
ஓ,வீராதிவீரனே இதோமுன்னணியைத்தழுவிக்காத்துவருகின்றவன்சூ
ரன்பிள்ளையாகும்,இவன்பெயர்இரணியனெனச்சொல்லப்படும் ராசாதி
ராசன்கட்டளையின்படிக்குத்தன்தோழராகிய ராசகுமாரர்கள்சேனைத்தலை
வர்கள்சூழ்ந்துவரப் பிரளயவெள்ளத்தைப்போல நால்வகைச்சயின்னிய
ங்களுடன் நமதுபடைகளைச் சின்னபின்னப்பட வாட்டநினைந்து வீரா
வேசத்துடன் வருகின்றனன், ஆதலால் -வருணாஸ்திரம்- இந்திராஸ்திர
ம்-குபேராஸ்திரம்- ஏமாஸ்திரம்- இர்தநிவ்வியபாணங்களை நாற்புறங்
களினும்பாவிவருகின்றசேனைப்பெருக்கின்மீதிற்செலுத்திவிட்டு இரணி
யனைச்சுலபமாக நினைக்கப்போகாது புசபெலபராக்கிறமசம்பத்தையும்
மாயைவல்லபங்களையும் தேவாஸ்திரமுயற்சிகளையும் பலவிதசெயங்களை
யும் பெற்றிருப்பவனாதலால் இவனை உம்மையல்லது மற்றொருவரால்
வெல்லப்படாது இதையோசித்துதகுந்தசாக்கிறதையுடன் நீரேயெதிரிட்
டுப்போராடிவெற்றிபெற வேண்டுமென்று தெரிவித்து நாரதரிஷிவான
நாட்டைநோக்கிப் போயினர், பின்புவீரவாகுதேவர் யிதுகளை நிதானித்
துத்- துணைவரையும்-இலக்கர்-படைத்தலைவரையும்- பார்த்துசூரன் நம்
மைச்செயிக்கத்தக்கதாகப்போக்கியராசகுமாரன்ராட்சதச்சேனைகளை நா
ற்கூறுக்கிப் போற்றிவருவதால் நீங்களும்பூதவெள்ளத்தைப்பிரித்து கா
வல்கொண்டுபோய்தனித்தனியேபகைவரைவளைந்துசாடக்கடவீரெனப்
பணித்தபடிக்குச் சேனைகளைப்பகிர்ந்தணிவகுத்துச் சென்றனர், உடனே
வீரவாகுதேவரும் உத்தசன்னுத்தனாய் இரணியனுக்கெதிரிற்போவதாயி
னர், அத்தறுவாயில் நாற்புறங்களினும் கடல்பெருகியதுக் கொப்பாக
ராட்சதர்மேலிட்டுவருபபோதுபூதர்களும்றவுத்திராகாரமாகக்கோபித்து
எதிர்ந்தமாத்திரத்திற் பகைவர்வீராவேசங்களுடன் சபதங்களைப்பேசிபு
சங்களைத்தட்டிக்கொண்டு-மழுவாயுதம்-எழுவாயுதம்-சக்கிராயுதம்-நா
ஞ்சில்-தண்டம்- வச்சிராயுதம்- எழுகுலக்கை-சூலம்.வேல்- முதலியப
டைகளை ஒன்றனந்தமாகச்செலுத்தவும் சிலர்பாரித்தவிற்களைவளைத்து அ
ர்தச்சந்திரபாணம் விஷத்தொலைவயலிட்டிருக்கின்ற கொடியசரங்களை

ச்சோனைப்பெய்யலைப்போலச்சொரிந்து சிங்கநாதங்கள் அட்டகாசங்க
ளைச்செய்துலவும்போது சிவகணங்களும் சற்பத்தைப் போலச்சீறிவான
த்தையளாவி திசைகளைமூடியிருக்கின்ற பாரித்தமரங்களை வேருடன்பறி
த்துகிறுகிறெனச் சுழற்றிச்சாடியும்-வளைதடிகணிச்சி யிருப்புலக்கைகளை
றிவ்வுறிவ்வென வீசியும் பருத்தமலைகளைப்பறித்துச்செலுத்தியும் கொக்க
ரித்து அட்டகாசங்களைச்செய்தனர், அக்காலத்தில் ராட்சதப்பாதகர் தா
ண்டியபடைகளினால்-தலையற்றும்-கழுத்தொடிந்து-கால்களோய்ந்தும்
கணக்கிறந்தபூதர்மாண்டனர், சிவகணங்கள் பின்னிடையாமற் கடாவிய
ஆயுதங்களினால் தலைபிளந்தும் மார்புகிழிந்தும் புசங்கள் தறிந்தும் கா
ல்களொடிந்தும் சிதைந்தும் அலைந்தும் கண்டதுண்டப் பட்டும் இவ்
விதமாகப்பலவெள்ளம் ரதகெசதுரகபதாதிகள்மாண்டு உதிரவாரியில் அ
கப்பட்டோடியது, இவ்விதமாகயிருதிறத்துப்படைகளும் அகோரஉயி
த்தியங்களைச்செய்யவும்-எண்மர்-இலக்கர்-படைத்தலைவரும் ராட்சத
வீரர்களுமெதுத்து ஒருவரையொருவர் வெல்லவேண்டுமென்கின்றபவு
ருஷித்துடன் அஸ்திரசஸ்திரங்களையும்பற்வதங்கள்விருட்சங்களை அமோ
கமாகச்செலுத்தி கொடியபோரைச்செய்யவும் வீரவாகுதேவர்காலாந்தக
னைப்போலச்சீறிராசகுமாரன்அணியை வளைந்துகொண்டுதமதொப்பற்ற
வில்லைத்தருமதேவதைகளித்து நடிக்கவளைத்துநாணேற்றிச்சமுத்திரந்த
த்தளிக்கவும்ஆதிசேஷன் பணாமகுடங்கள்மடங்கிநெளிந்து வருந்தவும்
திசையானைகள்மதச்சுவடொழிந்து வீறிட்டுவாடவும் குணத்தொனிகொ
ண்டுபதினாயிரந்திவ்வியபாணங்களை ஒருமுனையிற்பூட்டிக்காட்டினிடத்
திற் கல்மழைபொழிவதுக்கொப்பாக ரதகெசதுரகபதாதிகளின் பெருக்
கின்மீது பிறையோகித்ததறுவாயில் அவைகளொன்றுடனொன்று உராய்
ந்து தீயையிறைத்து சற்பங்களைப்போலச்சீறி வேகமாய்வந்து சாடியத
றுவாயில் தேரணிகள்சிதைந்து-அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடிங்கை-
பின்னப்பட்டிறையவும் யானைப்பந்திகள்கலங்கி மத்தகம்பிளந்தும் து
திக்கைதறிபட்டும் கோடுகள்முறிந்தும் பாகன்மாண்டுபங்கப்படவும்அ
லைகளைப்போலத்தாவிப்பாயும் புரவிக்கூட்டங்கள் கழுத்தற்றும் வெண்
டையங்கள் கலிக்கும்கால்களொடிந்தும்முகவணிகள்பறந்துசின்னாபின்
னப்பட்டுப் போகவும்ராட்சதப் படைகள்-சிரம் கரம் உரம்கால் கண்
டதுண்டப்பட்டுமாளவும் துசங்களற்று வானத்திற்பறக்கவும் இவ்வித
மாகத்தழைத்திராநின்ற தோப்பினிடத்திற் சூறைக்காற்று நுழைந்துசா
டும்போது முறிந்துதிசைகளிலிறைந்து சாய்வதைப்போல வீரவாகுதே
வர்செலுத்திய பாணகோடிகளினாற் பெரும்புறக்கடலுக்கொப்பாகயி
னாந்துபரந்திருந்த சதுரங்கவெள்ளங்களும் கலந்து சிதைந்துநாசம்,

பட்டதறுவாயில் வீரன் தாண்டியகணைகள் திரேகமெங்கும்சல்லடைக்க ண்களாகத்துளைக்க உதிரம்பீரிட்டுப்பாயும்படிக்கு யானைகள்மாண்டுகிட ப்பதைப்பார்க்குமிடத்திற் பிரளயகாலத்தில்உலகங்களையழிக்கவெழும் வ டவாமுகாக்கினியானது பிரசண்டவாயுவின்மோதலிற்பட்டுபலசிகைகளை ப்பெருக்கி வருவதைப்போலக்காட்டவும் வீரன்செலுத்திய அர்த்தசந்தி ரபாணங்கள் மதயானைகளினது துதிக்கைகளைக் கண்டித்துத் தள்ளியதை ப்பார்க்குமிடத்திற் பழையவயிரத்தை நினைந்து இராகுகேதுகளாதிய சர் பங்களைக் கண்டித்துக் கிடத்தியதுக்கிணையாகத் தோற்றவும் கொடியசரா ங்கள்வீறியோடி முத்துகளிறைபத்தக்கதாகக் குஞ்சரங்கள் மத்தகங்க ளைப்பிளப்பது எப்படிக்கிருந்ததெனில், முல்லைநிலத்தில்வாசஞ் செய்கி ன்றஇடைப்பெண்கள் தயிரைக்கடையும்போது பதலைகளைச்சூழுமிறையும் வெண்ணெய்ப்பொருக்கை யொப்பக்காட்டவும் கடியபாணங்களோடிவி ருதுக்கொடிகளையும் துசபடாங்களையும்தேர்களினிடத்தில்நாட்டியபெ ரிகையங்களையும் வெண்பட்டுக்குடைகள் முதலியவற்றை வெட்டிக் களமெங்கணுமிறைத்திருப்பதையோசிக்குமிடத்தில் வானத்தினிடத்துலவு ஞ்சந்திரன்னமுகிசோடசகலைகளைவீசிவிழுந்துகிடப்பதைப்போலத்தோ ற்றவும் கூரியகணைகள் சீறித்தத்தித்தாவிப்பாயும் வேகமுள்ளகுதிரைப்ப ந்திகளைக் கண்டதுண்டப்படவாட்டிக் கிடத்தியதை நிதானிக்குமிடத்தி ற்றன்வேகத்துக்கிடைந்து சமுத்திரம் அலைகளைமோதாம லடங்கியதுக் குநிகர்த்துக்காட்டவும் பிறையையொப்பவிளங்கும் அர்த்தசந்திரபாண ங்கள் சிலசேங்கிசத்துருக்கள் வயிரசாங்களைக் கண்டித்துத்தள்ளிய கார ணமெப்படிக்கிருந்ததெனில், பெருகாலமாகவருந்தி மனம் நொந்திரு க்கின்ற சந்திரன்யிதுநல்லதருணமென்றெண்ணித்தன்னினமாகியபிறை களைத்தாண்டி சேதுவாதிய சர்பங்களை வெட்டிக் கிடத்தியதையொப்ப க்காட்டவும் இவ்விதங்களாகச் சதுரங்கச்சேனைகளும் சின்னபின்னப் ப ட்டழிந்ததறுவாயிற் பெருத்தெழுந்த உதிரவாரியானது திரைகளைமோ தியிரைந்தோடிக் கடலிற்பாய்வதைப்பார்க்குமிடத்திற்புசபெலபராக்கி றமசாலிகளாகவிருக்கின்ற வீராதிவீரர்கள்சத்துருக்கள்மீதிற் கோபித்து ப்போவதுக்கொப்பாகக்காட்டவும் இவ்விதசிறப்பை வாய்ந்த போர்க்க ளத்திற் பலகோடிகவந்தங்கள் நாடகனைப்போலநடிக்கவும் பூதபசாசங் கள் காளிக்கூட்டங்கள்உதிரபானங்களைச்செய்துவெறிகொண்டுவீரன்புக ழைப்பாடிக்கூத்தாடவும்நாய்நரிகள் திணமாம்சங்களைப் பிடுங்கித்தின் று களித்துலவவும்- கழுகு-பருந்து-காக்கைகள்- மூளைகளை வாரிவாரிவி ழுங்கி உதிரத்திலமுழுகி வானத்திற்பறந்து சிறகுகளைப்புலர்த்தி வட்ட மிட்டுப்பறக்கவும் பிணமலைகளெவ்விடங்களினுங்குவிந்துவிளங்கியது

சவுனகாதிரிஷிகளே, எத்தலங்களிலும் பாந்துவந்த கரியதிரோசத்தைவா
ய்ந்த ராட்சதர்கள்நிலைமப்போரிற் றின்னபின்னப்பட்டு மாண்டகாட்சி
யெப்படிக்கிருந்ததெனிற், கருமா னுலக்கணத்திற்பட்ட மெழுகு சனா
ந்தோடுமாறுபோலத்தோற்றியது இவ்விதங்களாசத்தன்னுடன் றுடர்ந்
துவந்த வீரர்களனைவரும் நாசப்பட்டுப்போனதை இரணியன் கண்டமா
த்திரத்தில்மனம்பொருமல் மானம்பாதிக்கச் சர்வசங்கார மூர்த்தியைப்
போலப்பொங்கித் தனதுகரத்தில்விளங்கும் பாரித்தவில்லை யெடுத்து
நாட்டி நாணேற்றித் திசைகளதிரக்குணத்தொனிகொண்டு ஆயிரங்குமார
மாகியபாணங்களைப்பூட்டிக் கரவேகமாகச் செலுத்தி நிமைப் போதில்
ஆயிரகோடிபூ ளாககண்ட துண்டப்படவெட்டித்தள்ளியதமுவாயில் இ
க்கொடுமைக்காற்ருமல் மற்றவர்திடுக்கிட்டு மிகுத்த வருத்தங்களுடன்
பூர்வத்திற்றிருப்பாற் கடலினிடத்துதித்து வீறியெழுந்த ஆலகாலவிஷ
த்தின்கொடுமைக்குப் பயந்தோடியதேவர்க்களைப்போல நாலுமூலைகளி
னும் மிறைந்துபோய்ப்பதுங்கினர், இந்தஅபசெயத்தைச்சேனைத்தலைவ
ர்களிலொருவனுகிய நீலனெனென்பவன்கண்டவுடன் வடவாமுகாக்கி னிக்கு
ச்சமதையாகக்கோபித்துத்தாவி இரணியனெதிரில்வந்து அண்டகோடிக
ளதிரக்கொக்கரித்த ஓசையைக்கேட்டவுடன் முன்னம்வாடியிருந்ததேவ
ர்க்கள்மனவெழுச்சிபெற்றவர்களாய் வீராதிவீரன்வந்தெதுத்தனன்,இனி
நமதுபட்சத்திற் செயப்பிறதாபமூண்டாகுமெனக் களித்தவர்களாய்ச்செ
யம்செயமெனவாழ்த்தினர், இப்பிறகாரம் விண்ணவர்உச்சாகப்படுவதை
யும் பகைவன்செருக்கையும் சூரன்பிள்ளைதெரிந்தவுடன் விட நாகத்தை
ப்போலச்சீறித் தானருமையாகத்தேடிவைத்திருக்கின்ற கூரியவேலாயுத
மொன்றையெடுத்துக் குறிகொண்டு செலுத்தியகாலத்தில் அனலைபிறை
த்துக்கொண்டுவேகமாய்வந்து நீலன்மார்பிற் பாய்ந்து பிளந்து உதிரத்
தைப்பெருக்கியபோதினும் அவ்வருத்தத்துக்குச்சற்றும்வாடாமல்மன
தயிரியத்துடன் பக்கத்திற் றழைத்துநிற்கின்ற மாமரமொன்றைவே
ருடன்பறித்து கிறுகிறெனச்சுழற்றி ஓ ரடியில் இரணியனேறியிருந்தரத
த்தைக்குதிரைகள் சாரதியுடன்பொடிப்பொடியாய்மங்கும்படிக்குச்சா
டியபோது ராசகுமாரன்சிங்கராசனைப்போலப் பக்கத்தில் நிற்கின்றசே
மத்தேர்களினென்றிற்பாய்ந்து மண்டிபோட்டுளுக்காந்து தன்வில்லில்
அமோகமாகியபாணகோடிகளைச் சந்தித்துஊழிகால மேகத்தைப் போ
லச்சொரியும்போது அவைகள் அனலையிறைத்துச்சீறிக் காற்றினுங் கடுகி
வந்துபாய்ந்துசரீரத்தைச்சல்லடைக்கண்களாகத்துளைக்கச்சிங்கன் அக்கா
யத்தினுற் சிறிதும்பெதருமல் சஞ்சலப்படாமல்தீரனுய்பொன் மலையை
யொழிய மற்றகுலகிரிகளைப் பறித்து ஒன்றின்பின் னொன்ருக இரணிய

ன்பேரில்வீசப் பிரசண்டமாருதத்தைப்பெருக்கி வருவதைக்கண்டு சீக்கிரமாய்கணக்கிறந்த திவ்வியபாணங்களைப்போக்கித் துகள்கண்டு சிங்கநாதஞ்செய்ததைப் பூதத்தலைவன்கண்டு கோபதீபிதனாய் மிருகராசனைப்போலத்தாவி இரணியனேறியிருந்த தேரைச்செண்டைப்போல வெடுத்துச்சுழற்றித் தேவர்கள்மருண்டோடும்படிக்கு வானத்தில்வீசிய தறுவாயிற்சுருவளிக்காற்றிற்பட்ட சருகையொத்துகிறுகிறெனச்சுழன்று கொண்டு வாயுமண்டலவரையிற்போய்த்திரும்பிவந்துபூமியில்விழுவதன்முன்னம் நிலத்திற்பாய்ந்து மற்றொருதேரிலேறப் போகின்றசூரன்குமாரனை நீலன் நில்லென்றதட்டிப்பாய்ந்து வலியதன்கரத்தினால் பொன்மயமாகிய மார்பிலறைந்தபோது அதற்குச்சிறிதும் பயப்படாமல் சீக்கிரமாய்நீலனைப்பிடித்து வானத்தில்வீசப்போய் மறிந்தவந்து பூமியைச்சேர்ந்தவுடன்கற்கம்பத்தையொத்த தனதுவலியகாலினால் இரணியன்மார்பிலுதைத்து நிலத்திலுருட்டி யிடியைப்போலஆர்ப்பரித்து நிணச்சேற்றில் மேகத்தைப்போலக்கதறிக்கொண்டு புரளுகின்ற ராசகுமாரன்மீது இந்திரன்பர்வதங்கள் சிறகுகளைக்கண்டிக்கத்தக்கதாக வீசியவச்சிராயுதத்தைநிகர்த்துப்பாய்ந்து அவன்சிரத்திலும்மார்பிலும் தமதுபாதங்களினால் மிதித்துக் குயவன்மண்ணைமிதிப்பதையொப்பத்துவைக்கும்உறுத்து தவினூற்பூமியிளந்துஅவன்மார்புமுற்றிலும்நெருக்குவிட்டுஉதிரமானதூற்றெடுத்தோட நகசசகபரியந்தம் நுறுங்கி அரியதுக்கசாகரத்திலழுந்தித் தப்பித்துக்கொள்ளுமார்க்கமொன்றுந் தோற்றாமல் வலிகுறைந்து கோபமடங்கி எமபடாள்வசப்படும் யிறுதிகாலம்நேர்ந்தது யிதற்கென்செய்வதென்றுயோசித்து வஞ்சகத்தினால் யிவனைத் தப்பித்துக்கொண்டு போகவேண்டுமெனத் தீர்மானித்தவனாய் தட்சிணத்திற்சவுறவமென்னும் மாயமந்திரத்தைப்பத்தியாகச்செபித்துமுடித்தவுடன் அதற்குரியதேவதை அவன்கருத்தின்படிக்கு இரணியனைப்போல உருக்கொண்டு வானத்தையளாவவளர்ந்துநின்றுபிறையையொப்பக்கோறதந்தங்கள்விளங்கமேருவினும்பாரித்திராநின்ற தனுசையிடக்கரத்திற்பற்றி வலக்கரத்தில்மின்னலையொத்த அலகுகளையுடையதிவ்வியபாணகோடிகளைத்தாங்கி கொக்கரித்துஎன்னையொத்தவலியும் வீரமும்பெற்றவர்கள் யாவரிருக்கின்றனர், எத்தகையசூரர்களென்னுடனெதுத்தபோதினும் இந்தநிமிஷத்தில் அதாஅதப்படுத்துவேனென்று பற்பலசபதங்களையும் வீரங்களையும்பேசிக்கொண்டு சுருவளிக்காற்றைப்போலச்சுழன்று சண்டைக்கெதுத்துமேவிட்டுவருவதை நீலன்கண்டு வடவையைப்போற்சீறி இரணியனைமிதித்திருந்தகால்களைப்பெயர்த்து எதிரிட்டுப்பாய்ந்து ரணக்களத்திற் செற்றுக்கிடக்கின்ற ராட்சதவீரர் கரங்களிற்பற்றியிருந்த சொர்ணமயமாகியத

ண்டாயுதமொன்றைபறித்துச் சுழற்றிக்கொண்டுவானத்தில்நிற்கின்றதே
வர்கள் பகைவன்மாண்டான்மாண்டானென்று நீலனைக்கொண்டாடும்
படிக்குவிசித்திரமாயப்படிவத்தின் சிரத்தின்பேரில் மோதினன் சகலரு
ம்பிரமிக்கும்படிக்குஅம்மாயஉருவானதுவானத்திற்காட்டி நல்லகாரிய
ம்உன்பிராணனைச்சற்றுநேரத்தில் எமலோகங் குடியேற்றுவேனென்று
வீரங்கள்பேசுவதைநீலன்கண்டு ரவுத்திராகாரமாகக்கோபித்துகதையைச்
சுழற்றிப்பாய்ந்து அத்தலத்திற்காணாமல்மயங்கிஇதுவென்னபுதுமையா
கவிருக்கின்றதென்றெண்ணுகின்றதருவாயில் அத்தோற்றமானது பூமி
யினிடத்தாற்பரித் துலவுவதைப்பார்த்து இதுமாய்கையென நிதானித்
தவனும் வயிரங்கொண்டு நல்லகாரியம்எவ்விடத்திற்சென்றாலும் உன்னை
விடமாட்டேனென்று சீறிநிலத்திற்பாய்ந்து நெருங்குவதன் முன்னம்
சண்டை செயவதைப்போற்காட்டி மீட்டும் வானத்தெழுந்து சூரனாயி
ருப்பையாகில் என்னுடன் சண்டைக்கு வாடாவென்றதட்டும்அஷ்டதிக்
குகளிலுலவும் பாதலத்திற்செல்லும் வானவெல்லையில்நிற்கும் தனுற்பா
ணியாய் எதிரில்வந்து வயிரங்களைப்பேசும் குதிரையின்பேரிலேறி நட
த்தும்யானையின்பிடரியில்வரும் தேரிற்காட்டும் பற்வதங்களி னுச்சியி
ற்றோற்றியிடியைப்போவார்க்கும் சமுத்திர வெல்லையில்நின்று மேகங்
களுக்குச் சமதையாகக்குமுறிமின்னும் எமலோகத்திற்போகும் கணப்
போதில்எதிரில்நின்று சண்டைக்கழைக்கும்முன்னேவந்துபிடிபிடியெ
ன்னும் பக்கத்திற்காட்டிகுத் துகுத்தென்னும்புறம்பிற்றோற்றி தள்ளுத
ள்ளென்னும் பிடசாரிவலசாரியாகச்சுழன்று பற்பலபடைகளைச் செலுத்
திப்போர்செய்யும் இவ்விதமாகப்பொன்னினிடத்திச்சைகொண்டிருக்கி
ன்றவேசியர்மனதைப்போலநிலையில்லாமல்விண்மண் பாதலவைப்புக
ளெங்கனும் உலவுகின்ற அம்மாயப்படிவத்தின் செய்கைகளை யாவரால்
விரித்துச்சொல்லப்படும் அத்தருவாயிற்புசபெல பராக்கிறமசாலியாகிய
நீலனும் அதுபொன்போனவிடங்களெங்கனும் துடர்ந்துதுடர்ந்து அ
கோரஉயித்தியங்களைச்செய்து அலைச்சற்பட்டு கைகால்களோய்ந்து வலி
குறைந்துஅதின்சவுரியத்துக்குமெச்சிக்கடையில்வடவானலத்தைப்போ
லக் கோபித்து இனியென்செய்வோம் எவ்விதங்களினும் இந்தராட்சத
ப்பாதகனை செயிக்கப்படவில்லையென்றுசற்றுநேரம்யோசித்துநிற்கின்
றதருவாயில் ஒன்றாகநின்றுபோராடிய மாயஉருவமானது பலரூபங்க
ளைக்கொண்டு உலகமெங்கனும் பரந்து ஆற்பரித்து போருக் கழைக்கு
ங் காரணங்களைக்கண்டு நிதானித்து இதுதடையில்லாமல்மாயவித்தையா
மெனநிச்சயித்து வெட்கினவனாய் யிதற்கடுத்த காரியமெதனை முடிப்
போமென்றாராய்கின்றதருணத்தில் யிந்தநீலனால்மார்புதலை நெக்குவிட்

டுதிரம்பெருக மிதிபட்டுச் சோர்ந்திருந்த இரணியனுக்குக் களைதெளி
ந்து சற்றுவலியுண்டாய் அச்சத்துடன்தலையைத் தூக்கித் தன்னிஷ்டதே
வதையின்செய்கைகளைப்பார்த்துக்களித்துத்துரிதமாய் ஒருதேரிலேறி மா
யக்கோலத்துடன்கலந்து வில்லைவளைத்து கணக்கிறந்தபாணங்களைச் செ
லுத்திநீலன்சரீரத்தைத் துளைக்கின்றதருவாயில் திரேகமெங்கும் புண்ப
ட்டு உதிரம்பெருகி சூரியகிரணங்களைப்போலப் பாயுந்தருவாயில்வலிகு
றைந்து மானம்பாதிக்க பற்பல போர்களைச் செய்தும் பிறையோசனை
த்தைக்காணாமற் சலித்துத்திகைத்துநிற்கின்றதையும்இரணியன்மாயஉரு
வுடன்கலந்து நடத்தும் போனாயும் புசபெல பராக்கிறமங்களுக்கொ
ப்பற்ற வீரவாகுதேவர் கண்டவுடன் பலம் படைத்தக் காளகூட
த்தைப்போலச்சீறி பிரசண்டவாயுவேகத்தினுமுந்தி அம்முனையில் வந்
து தமதொப்பற்றவில்லைவட்டாகாரமாகவளைத்து நாணேற்றிகுணத்தொ
னிகொண்ட அதிர்ச்சியினாற் பஞ்சேந்திரியங்களின் நிலைதப்பிப் பிரமித்
து ராட்சதவயிரிவந்தான்வந்தானென்று யிரைச்சலிட்டுக் கொண்டு மற்ற
ராட்சதர்களும் பலமூலைகளிலும் ஓடியொளித்தனர், அத்தருவாயிற் சோ
திமயமாகிய வெற்றிவேலாயுதமூர்த்தியினது பாதகமலங்களைச் சிந்தித்துப்
போற்றித்துரிதமாய் ஞானப்படையையெடுத்து உபசரித்து தனுசிற்பூட்
டிச்செலுத்தினர், அதுவெளிப்பட்டவுடன்பேரொளியைவிளக்கிக்கிரண
ங்களைப்பரப்பி அதிசமகிமைகளைக்காட்டிமேலிட்டுவரும்போது சூரியன்
தோற்றத்துக்கெதிர்ப்பட்டயிருள்மங்கியடங்குமாறுபோலஇரணியனு
லுண்டாயிருந்த மாயவித்தைகளனைத்தும் பறந்து தனியனாய் மனவாட்
டத்துட னிருந்தபோதினுந் தயிரியத்தைவிடாமல் தன்வில்லில் ஆயிர
கோடிபாணங்களைத் தொடுத்துச்செலுத்திக் கொக்கரித்தனன், அதுகளு
ம்வெளிப்பட்டவுடன் ஒன்றுடனொன்றாய்ந்து கனலையிறைத்து அள
வற்றஉற்பாதங்களைக்காட்டி அதிவேகமாய்வந்து வீரவாகுதேவர் மார்பி
ற்றாக்கியவுடன் முனைகள்மழுங்கிப் பொடிபட்டுதிர்ந்தது அதனைக்கண்
டதேவர்கள் கரங்களைக்கொட்டி இரணியனையிகழ்ந்து வீரனைப்புகழ்ந்
து ஆர்ப்பரித்தனர், அத்தருவாயிற்பாலசுப்பிரமணியதேவர் சகோதரன்
மண்டியெரிந்துநூறுதிவ்விய பாணங்களையெடுத்து வில்லிற்பூட்டிப்பி
றையோகித்து ராசகுமாரன்தேரில்நாட்டியிருந்த துசத்தைச்சண்டித்து
அபேதவயிரக்கவசத்தையும் பொடிபடுத்திதனுசையும் யிரண்டு துண்ட
மாகவெட்டி யெறிந்ததருவாயில் இரணியன்மற்றொரு தேரிலேறி வில்
லையெடுத்தான்வீரன் ஆயிரம்பாணங்களைச்செலுத்தி அதனைக் கண்டித்து
அம்புறாத்தூணீரத்தையும் பொடிபடுத்தித்தேரையும்குதிரைகளையும் து
களாக்கி ராட்சதவீரன்சரீரத்தையும் சல்லடைக்கண்களைப்போலத்துளைத்

தபோது அக்காயங்களுக்குச் சற்றுவருந்தி அதறாமல் பெதறாமல் சஞ்சலப்படாமல் மற்றொருதேரிலேறினன் அதையுஞ்சில சூரியநாராசங்களைப்போக்கிப் பொடியாக்கினர், அக்காலத்தில்ராசகுமாரன் யிளைத்துயிரமித்தபோதினும் வீரங்களைப்பேசிக்கொண்டு பக்கத்திலிருந்த தேர்களில்மாறிமாறிப்போயிவா அதுகளனைத்தையும் வீரன்கண்டதுண்டப்படவாட்டியபோதுவேறுதேருதவியும் படைகளின்சகாயமுங்காணமல் இரணியன்யிதனையோசிப்பதாயினன், இனிசண்டைகொடுக்க நினைப்பேனாகில் எமனையொத்த தூதன்கொல்லுவதற்கையமில்லை அத்தூடன்போர்முடிவதுமில்லை பிதாமுதலானவர்களும்மாள்வது நிச்சயம்அவர்களுக்குத்திலதர்ப்பணக்கிரிகைகளை முடிக்கவொருவனாயுங்காணேன் இத்தகைய அபாயங்கள் நேராமல்சவுக்கியத்திலிருந்து வாழும்படிக்குப் பற்பலவுறுதிகளைச்சொன்னேன் செடுமதிசண்ணுக்குத்தோற்றுதென்பதுபோல அதுகளை அங்கீகரியாமலிகழ்ந்தனன், ஆதலாற்பிதாவுக்குமுன்னம் சாவது நன்காயிருக்கின்றது அல்லது உயிர்பெற்றிருப்பேனாகில் இனிவிளைய விருக்கின்றவினசத்தைசகித்துமுடிவதன்று இவையன்றியுந்தேவர்முதலிய சகலரையும்நிமைப்போதிற் புறங்கண்டு அஷ்டதிசைகளையும்வென்று ஆயிரத்தெட்டண்டங்களையுந் தன்வயப்படுத்திராசாதிராசனாகவிருக்கின்றபிதாவானவர் இறந்தகாலத்தில்ஈமவிதிகளை முடிப்பதற்கு ஒருபுத்திரனுமில்லாவிடிற்சந்திரசூரியருள்ளவளவாயில்உலகங்களிற் தீராதபழிப்புரை நிலைபெற்றிருக்கும் அரியதவங்களைச்செய்து புத்திரனைப்பெற்று சகல சிறப்புகளுடனுஞ்சீராட்டி வளர்க்கின்றது தந்தையானவன்மாண்டகாலத்தில் அவ்வவர்கள் குலமுறைப்படிக்குத் தகனமுதலியகிரிகைகளைச் செய்வதற்கன்றோ இவைநிற்கபின்னிடையாமற் சண்டைகொடுத்து யிறப்பேனாகிற் பலராலுஞ்சுத்தவீரனெனக் கொண்டாடவும்வீரசொற்கத்தையும் பெறுவேன் அல்லதுயிந்த உதிரமாம்சச்சுமைகொண்டிருக்கும் திரேகத்தைத் தாங்கிப் பின்னிட்டு உயிரைத்தாங்கிநிற்பேனாகில் தீராதவசை நேருவதன்றியில் என்னுந்திறத்துக்கிழிபுநேரும் இதைக்கருதிக்கீர்த்திப்பிறதாபத்தைத்தேடவிரும்புவேனாகில் அசண்டமண்டவாதிபரனைச் சூரனெனப்பலரும்போற்றவிருக்கின்ற பிதாவுக்குக் காலக்கடன்களை விதிப்படிக்குமுடிக்க ஒருவருமில்லையென்கின்ற அபகீர்த்திநேரும் நற்கதியுங்கிடையாமல்நரகயாதனையிற்பட்டுவாடவரும் ஆதலால்எனக்குஎவ்விதஅபவாதம்நேர்ந்தபோதினும்பெரிதன்று ஆயிரத்தெட் டண்டங்களைப் பலயுகங்களாகப்பாதுகாத்தாண்ட ராசபரமேஸ்பரனுக்கு பழிப்புரைகிடைக்கலாகாதயிதைக்குறித்து என்பிராணனைத்தாங்கி மறைந் திருப்பது கடமைகுமெனத்தீர்மானித்தவனாய்த் துரிதமாகவானத்தெழும்பி மேகத்தி

ல்மறைந்து மாயமந்திரமொன்றைசெபித்து அதன் முயற்சியினல் ஒரு வருங்குந்தன்னுருத்தோற்றுமல் மீனுருப்பெற்றுகடலிற்பாய்ந்தொளித்து இனிபட்டணத்துக்குப்போகலாகாது மேல்நடக்கும் காரியங்களைப்பார்த்திருந்து பிதாவானவர்மாண்ட முன்னிலையில் அந்தியக் கிரிகைகளைச்செய்கின்றவனாயில் இவடத்திலிருப்பது தகுதியெனக் குறித்து சருநீரில்வாசமாயிருந்தான், அத்தருவாயில் இரணியன்செய்த மாயைப்பெருக்கழிந்ததைப்போல இரவுநீங்கி வீரவாகுதேவரோவிய ஞானப்படைக்கொப்பாக ஒற்றைவண்டிலையும் ஏழுபச்சைக்குதிரைகளையும்பூண்டு அருணன்செலுத்தும் ரதத்தின்மீதுசூரியபகவான் ஆயிரங்கிரணங்களைப்பரப்பிஉதையகிரியி லெழுந்தருளியபோது சந்திரன் சூரபதுமன் குமாரனைப்போலச்சோடசகலைகளையும்சுருக்கிமேல்சமுத்திரமுகப்பிலிருக்கும் அஸ்தமானகிரியில்மறைந்தனன், பின்புவீரவாகுதேவர் இரணியன்சாகாமற்கடலிற்பதுங்கியதைக்கண்டு வெற்றிச்சங்கத்தையெடுத்துவாயில்வைத்துபொம்பொம்மெனமுழக்கினர், அவ்வோசையைக்கேட்டபூதப்படைகள்மனவெழுச்சியுடன்செயத்தைக்கொண்டாடிஅண்டங்களதிரத்தக்கதாகஆர்ப்பரித்தனர், வானத்தில்நின்றதேவர்க்கள்சந்தோஷசாகரத்தில்முழுகிகற்பகமலர்களைவாரிவாரி வீரன்பேரிலிறைத்துசெயாவிசைபவாவெனஞ்சிகளைச்சொல்லிவாழ்த்தினர் இதன்மத்தியில்-எண்மர்-இலக்கர்-படைவீரர்சிலரேங்கிசாடும்போது சின்னபின்னப்பட்டு மாண்டவர்கள்போக நின்றராட்சதர்கள் பயப்பிருந்திகொண்டு திசைகெட்டோடிப் போயினர், இக்காரணங்களனைத்தையும் பார்த்திருந்த தூதர்கள்மனவாட்டத்துடன விவேகமாயோடி ராசாதிராசனைக்கண்டுபணிந்து சுவாமிதேவரீர்கட்டளையின்படிக்குப் போனஇரணியன் கொடியபோராச்செய்து சகலசேனைகளையும் மாளக்கொடுத்தவனாய் சத்துருக்களுக்குப் பயந்தொளிக்கவோ அல்லதுசிலதந்திரங்களைச்செய்து அவர்களைவெல்லவோதெரியாதுஒடிசமுத்திரத்திற்பதுங்கினன், இதுதேவரீர்சித்தமறிகவென்று சொல்லிய விசேஷத்தைவிஷத்தைப்போலக்கேட்டு மானமுங்கோபமும்மனதைவருத்தயாதொன்றும் பேசாமற்சரீரம்புழுங்க மனவருத்தத்துட னிருந்தனன், அத்தருவாயில்அக்கினிமுகனென்னுங்குமாரன்பிதாவைக் காணும்பொருட்டு தன்னரமனையைக்கடந்து ராசாதிராசனிருப்பிடத்தை நோக்கிவருவதாயினன்,

# உ௱அ அக்கினிமுகன்வதைப்படலம்.

சவுனகாதிரிஷிகளே, அந்தஅக்கினிமுகன் பராக்கிறமச்செய்கைகளைச்சொல்லக்கேழ்ப்பீராக, பாலப்ருவத்தில் ராசகுமாரர்களுடன்கூடி விளையாடித்திரிகின்றதரா வாயில் அஷ்டதிக்குப்பாலகனாயும் அதனைத்தாங்கிவருகின்றஎண்கிரிகள்முதலிய பற்வதங்களையும்திசையானைகளையும்பற்றிவந்து அம்மானையாடியும் கழகமுருட்டியும் பந்தைப்போலெறிந்தும் சூரியனேறிநடாத்தும் தேரைப்பிடித்துவந்து ராசவீதிகளிற்சிறுதேருக்கிணையாக விழுத்தும் சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கும்மகாவிஷ்ணுவுக்கு வாகனமாகவிருக்கின்றகருடனையும் பிர்மதேவனுரோகணித்துவரும் அன்னப்பட்சியையும்பிடித்துவந்துஒன்றுடனொன்றைசண்டைக்குவிட்டுக்கண்டுகளித்து விளையாடுந்திறன்றனக்குமுன்னவனாகியபானுகோபன்சூரியனைப்பற்றிச்சிறைசெய்ததைக் கேழ்விப்பட்டு ஒருதினம்வாலத்திற்பாய்ந்து சோடசகலைகளை வீசி விமானத்திற்செல்லுகின்றசந்திரனைப்பிடித்துவந்துபலகாலம்அரியகாவலில்வைத்தசூரன்வஞ்சகமே உருக்கொண்டிருப்பதையொத்த கொடியமனதைப் பெற்றவன் வீராதிவீரர்களாக விருக்கப்பட்டவர்களனைவரும் புகழ்ந்துகொண்டாட வல்லபுசபெலபராக்கிறமங்களைக்கொண்டிருப்பவன் பஞ்சபூதங்களுக்கும் மேலானவலியைப்பெற்றவன் அரியதவங்களைச்செய்தும் வலிதினும்தேவர்க்கள்படைகளனைத்தையும் பெற்றிருக்கின்றசம்பத்தையுடையவன்மாலயவஞ்சகம்சூதுஇவைகளுக்குபாதுர்ஸ்தானமாகவிருக்கும் கொடியவல்லிசைகளையும் சிறந்ததேவர்க்கள்முதலிய பலசாலிகளைப் போர்முனையில் வெற்றிகொண்டிருக்கும் செயசாலியாக விருப்பவன் பகைவர்செலுத்தும் தேவாஸ்திரங்களைமதியாமல் அதப்படுத்திய கீர்த்திப் பிறதாபத்தையுடையவன் பிராணிகளனைத்தையுங் காலாதிகளிற்கொண்டுபோக வல்லஎமனுக்கும் ஒருஎமனாகவிருக்கின்ற மகாபாதகன்முகத்திலெக்காலத்திலும் சுவாலைவீசிக்கொண்டிருக்கும் எதுவையினால் அக்கினிமுகனென்னுங்காரணப்பெயரைப்படைத்திருப்பவன் மற்றும்இவன்சூரங்களும்வல்லபங்களும் கொடுமைகளும்அளவற்றதுண்டு அவற்றினைச்சொல்லிமுடிவதன்று இத்தகையமகாபாதகன் பிதாவாகியசூரபதுமன்வாசஞ்செய்திருக்கின்றநகரத்தைச்சேர்ந்துராசாதிராசனைக்கண்டு வணங்கிப்போற்றி ஐயனேமுகப்பொலிவற்றுவாடிமனச்செருக்கொழிந்து துக்காக்கிராந்தனுகவிருக்கவந்தகாரணமென்னை எங்களையொத்தபுத்திரசம்பத்தையுடையதேவரீருக்குயிப்படிக்கும்நேருவதோ அதனைத்துரிதமாகச்சொல்லவேண்டுமென்றுவருந்திக்கேழ்க்கின்றகுமாரனைப்பார்த்துஅதிகவிசனத்துடன்இதனைப்பேசுவதாயினன், புத்திரசிகாமணியேஎன் மனக்குறையையென்னென்று வெளியிடவல்லேன் முன்னம் யிவடம் தாதுபேசவந்த

போது ராசாதிராசனாகவிருக்கின்ற யென்னைமதியாமல் இகழ்ந்துபேசி
யதன்றியில் பலசூராதிவீரர்களைக்கொன்றுஉன்தம்பியையும்வெட்டியெ
றிந்து ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் ராசதானியாகவிருக்கும் பெரு
மையையுடைய யிந்தநகரைப்பதங்கொறையாகவழித்து புரசெனங்களை
யலைத்துப்போனவன்மீட்டும்வந்துநமதுபட்டணத்தையலைத்து அக்கினி
க்கிரையாக்குவதைத்தெரிந்தவனாய் பிரளயமேகங்களைத்தருவித்துமழை
பெய்யக்கட்டளையிட்டு அந்ததீயைஅவிப்பித்தனன்’ அதைக்கண்டவுட
ன் அப்பாதகன் றவுத்திராகாரமாகக் கோபித்து வடவனலாஸ்திரத்தைப்
பிறையோகித்து மேகங்களைவாட்டியகாலத்தில் தாபரிக்கப்படாமையாற்
கடலில்மறைந்தொளித்தது இதைத்தெரிந்தவுடன் அவனைபட்டணத்தை
க்கடக்கத்துரத்தி அதம்பண்ணிவருவதாக இரணியன் கேட்டுச்சொன்ன
படிக்குபலவெள்ளம் ரதகெசதுரகபதாதிகளைக்கூட்டிப் போக்கினேன் த
னக்குப்படைத்துணையாகவந்த ராசகுமாரர்கள்படைவீரர்கள்சேனைகளை
யும்பறிகொடுத்து சத்துருக்களுக்கஞ்சிப் புறந்தந்து சமுத்திரத்திலொ
ளித்தானென்று தூதர்கள்தெரிவித்தனர், குமாரனேபெருங்காலமாகத்தே
டியகீர்த்திக்கழிவுவந்தது மேலும்மிகுத்தசிறப்பினைப்பெற்றிருக்கின்றயி
ந்தமாபுக்கும் நமதுமுன்னோர்களுக்கும் பழிப்புரைசம்பவித்தது இவ
னைச்சவுரியபராக்கிரமசாலியென்றுநம்பிச்செலுத்தினேன், இந்தவுலகமு
ள்ளளவுந்தீராத வசையை நிலைபெறச்செய்தான், இதைநினைந்து நினைந்
துமனந்தாபரிபாமல் வருந்துகின்றனனென்று கொடுங்கோல் செலுத்தி
வரும்பாதகன்சொல்லிமுடிவதன்முன்னம் அக்கினிமுகனுக்குகோபக்க
னல் மனதில்மூள விழிகள்சிவந்துதீப்பொறிகளையிறைக்கவும் முகம்வெ
யர்க்கவும் புருவம்நெற்றியிலேறவும் திரேகம்துடிக்கவும் வடவாமுகா
க்கினியைப்போலக் கொதித்தவனாய் பிதாவே தேவரீர்பல அண்டங்களை
வென்றுசகலரும்போற்றிப் பணியஅரசுசெலுத்தி வாழ்ந்திருக்கும் இத்
தகையசெல்வப் பெருக்கைக்கிடைத்திருக்கின்ற நீர்பதிதனாகிய ஒருதூத
ன்சவுரியங்களையும் புயவன்மைகளையும் நினைந்துநினைந்து வாடுவதோத
ம்மையொத்தசூரன் அதைக்கருத்திற்கொள்ளத்தான்போதுமோ ஆதலா
ல்யிந்தநிமிஷத்திற்போய் அந்ததூதனையும்அவனுடன் வந்திருக்கின்ற
வீரர்கள்பூதப்படைகளையும் மடக்கிக்கொண்டுபெருங்காற்றினிடத்தகப்
பட்டசருகைப்போலச்சின்னபின்னப்படச்சாடிக்கொன்றுசெயப் பிறதா
பத்துடன் வரக்கடவேன் தேவரீர்மனக்கவலையைப்போக்கிக் களித்திரு
ப்பீர் மேலும்யிந்தநிமிஷத்தில் அடியேனுக்குச்செலவுதாருமென்றுவே
ண்டுகின்ற குமாரனிடத்திற்பரிவாய் மார்பிலணைத்திறுகத்தழுவி ஐயனே
நீசொல்லியபடிக்குமுடித்து என்மனதை வாட்டுகின்ற கிலேசத்தையும்

வாட்டத்தையும்போக்கக்கடவையென்றுவிடைதரச்சேவித்து பற்வதாகி
ருதியாகிய புசங்களையுங்காளமேகமும் சருங்கடலும் நாணத் தக்க
ரிகயபிரோசத்தையும்படைத்த ராசகுமாரன் அரமனையைக்கடந்து வெளி
வந்துதன்மாளிகையைச்சேர்ந்து ஆயுதச்சாலையில் நுழைந்து பற்வதத்தி
ன்பேரில் மேகங்கள்கவிந்திருப்பதைப்போல வயிரக்கவசத்தைமார்பிலி
றுக்கிக் கோதைகளைவிரல்கள்தோறுமணிந்து திவ்வியபாணங்கள் நிறைந்
திருக்கின்ற அம்புருத்தூணீரத்தை முதுகிற்கட்டிபிதாமகளாகியமாயை
கடாட்சித்திருக்கின்ற ஒப்பற்றவில்லைவணங்கி யிடதுகரத்திலெடுத்து வ
லதுகரத்தில் தேவப்படைகளைத்தாங்கி - வேல் - வாள் - தண்டம் - சக்கரம்
வச்சிராயுதமாதிய படைகளையுஞ்சேகரித்துக்கொண்டு வீரபட்டத்தை நு
தலிலணிந்துவெளிவந்து அஸ்திரசஸ்திரங்கள் நிறைந்து நவரத்தினமயமா
ய்வானத்தையளாவவோங்கி கணக்கிறந்த சிங்கங்களைப் பூட்டியிருக்கின்
றரதத்தைத்தருவித்து மிருகராசனைப்போலத்தாவியேறி வீற்றிருந்த தறு
வாயில் ராசாதிராசன்கட்டளைப்படிக்குப் பலதூதர்களோடிஎரிமுகன்ப
கைவர்மீதெடுத்த உயித்தியத்துக்குப்புறப்படவிருக்கின்றதைஅறிக்கை
யிட்டவுடன் சேனைத்தலைவர்கள்களித்தவர்களாய்பிறயாணபேரிகையை
அறைவித்தசத்தஞ்செவிகளில்நுழைந்தமாத்திரத்தில்ஆயிரவெள்ளம்தே
ராளிகளும் அத்தொகை மதயானைபெருக்குகளும் தத்தித்தாவி அலைகளை
ப்போலப்பாயவல்ல குதிரைப்பந்திகள் யிரண்டாயிரவெள்ளங்களும் சு
லாயுதபாணிகளாய் சூரத்தன்மைபெற்றிருக்கின்ற ராட்சதவீரர்கள்தொ
கையை யாவராலும்யெண்ணிமுடிவதன்று இவ்விதமாகியநால்வகைச்சே
னைகளும் சத்தசாகரங்களுக்கொப்பாக யிரைச்சலிட்டுவந்துசூழ அவர்க
ளுக்குத்தலைவர்களாக விருக்கப்பட்டவர்கள் - வில் - வாள் - கேடயம் - முச
லம் - கப்பணம் பிண்டிபாலம் - சக்கரம் - சணிச்சி - திவ்வியபாணவகைக
ளைத்தாங்கி வயிரக்கவசத்தைப்பூண்டுதும்பைமாலையைச்சூடி நவரத்தின
மயமாகியதேர்களில் ஆரோகணித்தப்போற்றி வடவாமுகாக்கினிபலஉ
ருக்களைப்பெற்றதைப்போல அதிஉக்கிறத்துடன்வந்துராசகுமாரனைச்
சேவித்துநடக்கும்போது அக்கினிமுகன்யிவர்கள்மத்தியில்விளங்கிமா
னம்பாதிக்க றவுத்திராகாரமாகக்கொதித்து பகைவரை நிமைப்போதில்
நாசஞ்செய்வேனென்று வீரங்களைப்பேசிச் சேனைகளுக்கு முன்னணியி
ல்தேரைத்துரத்திப் போவதாயினன், சவுனகாதிரிஷிகளே, இப்பிறகாரம்
நடக்கின்றசயின்னியங்களின் சிறப்புகளிற்சிலவற்றைச்சொல்லக்கேழ்ப்
பீராக, பலவளங்களையும் காமவின்பநலங்களையும் தரவல்ல மனதுக்கினி
யகணவர்பலகாலம்நீங்கித் தூரதேசங்களிற்போயிருந்துவந்துசேர்ந்த
தறுவாயில்மனம்பூரித்துஅன்புவிளங்க யிரத்தினகடக கங்கணங்களைத்தி

ரித்திருக்கும் தேவியர்தமது திரோசம்புளகமெழ பூரித்துக்காட்டும் அல
குலைப்போலப்பரந்திரா நின்ற நவரத்தினமயமாகியமொட்டு முதலியசி
ங்காரங்களைப்பெற்றிருக்கின்ற தோரணிகள்கெற்சரத்தொனிகளைச்செய்
தோடவும் இலக்குமிக்கொப்பாகிய வனப்பும்வாலிப நலத்தையும்பெற்
றுமனவெழுச்சிகொண்டிருக்குந் தருணமங்கையரா யிருப்பவர்கள்தம
திடத்தில்மிகுந்த சவலைகொண்டுவழிபடும் விற்றர் கலவியை வெறுத்துக
ற்பின் வரம்பைக்கடந்து வாலிபனைத்தேடிப்போவதற் கிணையாகஅங்கு
சத்தினாற்சொற்றும்பாகன்குறிப் பின் வழி செல்லாமல் தன் ம
னம்போனவிதமாகப்போகும்மதயானைக்கூட்டங்கள் பர்வதங்கள்கால்
முளைத்து நடப்பதுக்கொப்பாகவிறிட்டு பிறசண்டவாயுவை நிகர்த்துக்
கடுகிச்செல்லவும் நவரத்தினமயமாகிய பூஷணங்கள் பீதாம்பர வகைகள்
திரவியமுதலிய பொருள்களினிடத் திச்சைகொண்டிருக்கின்றவேசியர்க
ள்அவற்றினைப்பெறும்பொருட்டு வாலிபனைமருட்டி வயப்படுத்தவே
லையொத்தவிழிகளைச்சுழற்று மாறுபோல பஞ்சலட்சணங்களையுடையபு
ரவிப்பந்திகள்வாயுவேகத்தினுமேலிட்டுப்பாய்ந் து பூவட்டமுற்றினும்
பவனிவருந் திசைகளிற்சென்றும் விண்ணகத்திற்பறந்தும் வட்டணை
யுலவியும் அலைகளைப்போலநடக்கவும் வஞ்சகங்குடிகொண்டிருக்கும்ம
னத்தாராய் சிவகாருண்ணியம்கிருபை யிரக்கமென்ப தெவ்வளவுங்கிடை
யாமல் எத்தகையரும்மருளும்படிக்கு நடைநொடிபாவனைகளைக்கற்று
காட்டுவதொன்று குறிப்பொன்றாய்ப் பலவித்தைகளைச் செய்யவல்ல மா
றுபட்டமனதைப்பெற்று அலகுலைவிற்றுண்ணும் வேசியரிடகாவிடம
னதைப்போலக்கறுத்து கடினசித்தமுடைய ராட்சதச்சேனைகள்வீரவெ
ண்டயமணிந்த பாதங்களைப்பெயர்த்துவைக்குந்தோறும் பூமிநடுநடுங்
கிவாடும்படிக்குக்கெற்சித்துப்போகவும் வியசாரத்துவத்தை யிச்சித்தம
னதைப்பெற்ற தூர்த்தமங்கையர்கணவனைவஞ்சித்துகளவும்புணர்ச்சியை
ச்செய்துழலும் பழியுரையெங்கும்துரிதமாகப்பரவுவதைப்போலப்பரி
மளமிகுந்தபுஷ்பமாலைகளைத்தரித்திருக்கின்ற பலகோடிராட்சதர்கள்முழ
க்கிவரும்-ரணபேரி-செயபேரி வெற்றிச்சங்கமாதியவாத்தியங்களினொ
லியானது சகலபுவனங்களினும் பெருத்ததிரவும் அக்காலத்திற்பெருகி
யதுகள்பரந்துபடிந்து நவரத்தினமயமாகிய ஆபரணங்களைத்தரித்திரா நி
ன்றதிரோகசாந்தியின்பொலிவையழித்து யிருண்டு மாசடையச்செய்வதா
ல்பரதாரத்தையிச்சித்துக் களவுப்புணர்ச்சிகளைச் செய்துழலும் மகாபாத
கர்பலராலும் இகழத்தக்கதாகக்கொண்டிருக்கும் ஆசைப் பெருக்கைப்
போலக்காட்டவும் மிகுந்தசுமையைச்சுமந்துசெல்லும் ஒட்டகங்களான
வைபருத்தகழுத்தைநீட்டிப்பின்வாங்கி அசைந்துபோவதைப்பார்க்குமி

# ௨௱௰௨ அக்கினிமுகன்வதைப்படலம்.

டத்திற் காமுகராயிருப்பவர்கள் நேர்ந்தகாலத்திற்றமது வயப்படுத்தும்
பொருட்டுசகல அலங்காரங்களையுஞ்செய்துகொண்டுஅன்னங்களைப்போ
லசைந்தசைந்து கடைவாயலினிடத்தில்வந்து நின்று மெல்லத்தமதுச
ந்திரனையொத்தமுகாரவிந்தத்தைவெளிப்படக்காட்டிக்கூரியவேலையொ
த்தவிழிகளைச்சுழற்றிமருட்டியும்உள்வாங்கியுலவும்பாத்தையனாப்போ
லவிளங்கவும் வீதிட்டுச்செல்லும் மதயானைகளின்மீதினும்ரதங்களினிட
ங்களிலும் நாட்டப்பட்டு வானையளாவி மாறிமாறியசையும் துசபடாங்
கள்கொடிச்சீலைகளையொசிக்குமிடத்திற் றன்னிடத்தி லிச்சைகொண்டுவ
ந்த ஒருபுருடன்வசப்பட்டிருந்த வேசியானவள் அவனினுமேலிட்டதிர
வியத்தைக்கொடுக்க வல்லவனைக் காணப்பெறின் அஞ்சாமல் அவனையு
ம்வாவழைப்பதைப்போலவிருக்கவும் சித்திரங்களெழுதியிருக்கின்றயா
னைகள்மத்தகங்கள்மீதிலணிந்திருக்கும்சிறந்தமுகபடாங்கள்சாற்றினவை
விற்பட்டு விலகியும்மீட்டும் பொருந்தியுமிருப்பதை நிதானிக்குமிடத்
தில் மானையொத்தஅழகியவிழிகளைவாய்ந்தவிலைமாதர் காமுகராகவிருக்
கின்ற காளையர்தங்களிடத்திச்சைகொண்டுமயங்கிக்கிடக்கும்பொருட்டு
தேமல்படர்ந்து சொற்ணக்கலசங்களைப்போலத்தோற்றநின்றகொங்கை
களின்மீதிற் போர்த்திருக்கின்றபையட்டையைமெல்லவிலகச்செய்துஆ
டவர்பார்வைசென்றதுவாயில்மூடி அவர்கள்பிராணனைத்தங்கள் வலையி
லகப்படச்செய்வதையொப்பக்காட்டவும் காளையர்மனதுமருண்டுவாட
ச்செய்யவல்லவேசியர் சேற்கெண்டையைப்போலப் புரட்டிவரும்விழி
களுக்கொப்பாகராட்சதர்கரங்களிற்பகைவர்பிராணனைவருத்தும் - வேல்
தோமரம் - வில் - சூலம் - மழுவாயுதம் - கதை - நாஞ்சில் - முசலம் - சக்
கரம் - இத்தகையபடைகள்சொலித்துக்கொண்டிருக்கவும்இவ்விதவேடிக்
கைகளைக்காட்டி நடக்கின்றதருவாயில் பலகோடிராட்சதர்கள்முழக்கிச்
செல்லும் போற்பறைகள் கணகணென்றதிரும் ஓசையானது மேலிட்டு
வருத்துவதினால் வானத்திற்சஞ்சரிக்கின்றமேகங்கள் திகைத்துச் சோர்ந்
துதமதுநிலைகளிற்பிசகி பற்வதாகிருதியாகிய தேர்களின்மீது விழுந்துக
ளைதெளித்தவுடன் பக்கங்களிலிருக்கின்ற மலைகளினிடத்திலோடியொளி
க்கவும் ரதங்கள்கெற்கரத்தொனிகளைச்செய்தோடும் வேகத்தினாலும்மத
யானைகள் உரலையொத்த பாதங்களைப்பெயர்த்துவைக்கும் உறுதியினாலு
ம் புரவிக்கூட்டங்கள் குளம்புகளைப்பெயர்த்துப்பாய்ந்தோடுவதினாலும்
செயசாலிகளாகிய ராட்சதப்படைகள் வீராவேசங்களுடன்போகின்றந
டையினாலும் பூமிதுகள்பட்டெழுந்த தூளிபடலமானது மேலோங்கி
வானகெங்கையிற்படிந்து சேறாக்கி சத்தசாகரங்களைத்தூர்த்துத்திடர்செ
ய்து புவனங்களிற்பாய்ந்து சகலபிராணிகளையும் திக்குமுக்காடவொட்

கையொப்பமுமிட்டுத்தன்வில்லிற்பூட்டி குமாரதேவனைவாழ்த்தி எமபு
ரத்துக்குப்போய் அதிசீக்கிரமாயோடி வரும்படிக்குக் கட்டளையிட்டுப்
பிறையோகித்தகாலத்தில் மனோவேகத்தினும்மேவிட்டுப்பறந்துசத்தசா
கரங்களைக்கடந்து மானசோத்தரகிரிக்குத் தென்பாரிசத்திலிருக்கும் வை
வசுதபட்டணத்தைச்சேர்ந்து நவரத்தினமயமாகிய சபாமண்டபத்தில்வ
யிரங்களினாற்சோதித்துவிளங்கும் சிங்காதனத்தினிடத்தமர்ந்துபலதிசை
யினுமிருந்துவந்து விண்ணப்பஞ்செய்கின்ற கிங்கிலியர்வாக்கியங்களைக்
கேட்டுசித்திரகுத்தர்யெதிரிலிருந்து கணக்குகளைப் பார்த்துச்சொல்லும்
நியதிகளுக்குத்தக்க கட்டளைகளை யிட்டுக்கொண்டிருக்கும் தருமனெதி
ரில்குறுகுறுத்ததொனிகளுடன் போய்நின்றதைக் கண்டவுடன் அற்புத
மடைந்தவனாய்த்துரிதப்பட்டுசரங்களினைத்தி வீரவாகுதேவர் முத்திரை
யைப்பார்த்து பத்திவினையத்துடன் அதிலிடத்திலெழுதியிருந்தகாரியத்
தைவாசித்தவுடன் மனம்நடுக்குற்று சரீரம்வியர்க்கப்பயந்து சித்திரகுத்
தனைக்கூவி விசாரணைசெய்துகொண்டு வீரவாகுதேவர் துணைவர்யிவடம்
வாராமையால் எங்கன மிருக்கின்றனரோவென்று போதவுணர்வினலாரா
ய்ந்து திருக்கயிலாயத்தி லிருப்பதாகத் தெரிந்தவுடன் சிங்காதனத்தைநீ
ங்கிவெளிவந்து கடாவாகனத்திலேறி சூறைமாருதத்தைப்போலத்தாக்
துடர்ந்துவரத்தக்கதாக மனோவேகத்தினுங் கடுகிச்சென்றுவெள்ளியங்கி
ரியைச்சேர்ந்து பரிசோதித்து குளிர்ந்த நிழலைப் பரப்பிப் பரிமளித்திரு
க்கும்பூங்காவுகளினொன்றில்ராட்சதவீரரால்மாண்டபூதத்தலைவர்கள்போ
ற்றிச்சூழ்ந்திருக்கவும் விஞ்சையர் யாழ்களைமீட்டி தேவகாந்தாரங்களை
ப்பாடிவருவதைச் சிரவணானந்தமாகக் கேட்டுக்கொண்டுகளித்திருக்கின்
றஎழுவரையுங் கண்டவுடன் மனமகிழ்ந்தவனாய், சமீபத்திற்போய்ச்சே
வித்துஐயமாரோ உமதொப்பற்ற தமையன்வாடிவருந்தி துக்கசாகரத்தி
ற்பட்டு உங்களைத்தேடி யலைவதாக நீங்களிந்தவைபவங்களை யனுபவித்தி
ருப்பதுதகுதியோ மேலும் என்பிராணனுக்குவந்திருக்கின்றது ஆதலாற்
றுரிதமாய் பூதவீரருடன் தமையனிடத்துக்கு வரவேண்டுமெனப்போ
ற்றநல்லகாரியமென் றெருமித்துச்சேனைத்தலைவருடன் அத்தலத்தைநீ
ங்கி வீரமாமயேந்திரபுரத்துச்சருகிலிருக்கும் சமர்க்களத் தெல்லையைச்
சேர்ந்து தங்கள்சரீரங்களிற்பொருந்தி நித்திரைதெளிந்தவர்களைப்போ
லவெழுந்தனர், இந்தசுபகரத்தைக்கண்டதேவர்க்கள் களித்துபஞ்சதரு
கமலர்களை வாரிவாரிச் சொரிந்துவாழ்த்திச்செயங்களைக்கொண்டாடினர்
அத்தறுவாயிற் றம்பிய ரெழுவருமோடி தமையன்திருவடிகளிற்சேவித்
தகாலத்தில் நீடுழிகாலம் தன்புகழை இவ்வுலகங்களில்நாட்டிய வீரவாகு
தேவருக் கடுத்திருந்தசோபதாபங்களையொழித்துமனவெழுச்சிபெற்று

ஆனந்தவாரியில்மூழ்கினவராய் ஆசானுபாகுவாகவிருக்கின்ற யிருகரங்க
ளினாலும் வாரியெடுத்து விசாலமாக விளங்கும் மார்பிலணைத்து யிருக
த்தழுவி முகத்துடன் முகத்தைச்சேர்த்துமுத்தமிட்டு உச்சியைமோந்து
முதுகைத் தடவிக்கொடுத்து ராகுவாயிற்பட்டுவெளிவந்த பூரணச் சந்
திரோதையத்தைப்போல முகமண்டலம்பிரகாசித்துக்காட்ட யினிமேற்
பட திவ்விய பாணங்களினால் அவுணரை அதம்பண்ணுவ தெனக்கொரு
பொருளோவென்று வீரங்களைப் பேசிவருமுன்னிலையில் வீரமாபுரந்த
ரன் -இலக்கர்-படைத்தலைவர்- பூதசயின்னியங்கள் களித்து மேகவரவை
க்கண்ட மயிலினங்களைப்போல முகாரவிந்தங்கள்விளங்க மனக்கவலை
யைப்போக்கி அதிசமகிழ்ச்சியையடைந்தனர், சவுனகாதிரிஷிகளேவீரவா
குதேவர் முதலானவர்கள் அக்காலத்திற்பெற்ற சந்தோஷப்பெருக்கினை
என்போலிகளாற் சொல்லிமுடிவதோ இப்படிக்குச் சகலரும் உல்லாச
மாகவிருக்கின்ற தருணத்தில் யிதுநல்லசமயமென்றெண்ணி எமதருமை
ராசன் யிளையபெருமானுக்குச் சமீபத்தில் நெருங்கிச்சேவித்து மின்ன
லையொப்பவிளங்கும் அலகையுடையவேலைத்தாங்கியவீராதிவீரனேஅடி
யேன்பேரிற் கோபங் கொள்ளவேண்டாம் உமது துணைவர்கள் யிந்தப
டைத்தலைவர்களுடன் திருக்கயிலைச்சாரலிற் சேர்ந்திருந்தனர் அதிகமன
வாட்டந்தேவரீருக்கு நேர்ந்தபடியால் யிக்காரணங்களைத் தீர்க்கமாயோ
சித்தவால்ல சிவபிரான் கட்டளையின்படிக்கு நாயினேன் முடித்துவரும்
செய்கைகளைச்சொல்லக் கேட்டருள்க- எத்தகையராயினும் தமதுதிரு
மேனியிற் பரிசுத்தமாகியவிபூதியைப்பூசிஉருத்திராட்சத்தாழ்வடங்களை
த்தரித்து காஷாயத்தை உடுத்திருப்பராயில் அவர்களிடத்தில் நெருங்க
வும்நினையேன் கடவுளாராகக்கொண்டு பயபத்தியுடன் வழிபட்டுப்போ
வேன்அப்படிக்கிருக்க ஒப்பற்றதேவரீர் தம்பியர் பிராணனையுங்கிரகித்
துப்போகத் துணிவேனோ பசிமிகுந்தகாலத்தில் அனலைவிழுங்க நினைப்
பவருமுண்டோ என்னிடத்தில் யிக்குற்றத்தைச் சுமத்திக் கோபித்தேவி
யபாணத்திற்குறித்த கட்டளையைக்கண்டவுடன் கிரிற்பட்டு வெள்ளியங்
கிரிக்கோடி பூதவீரர்குழுக் களித்திருந்த உமது துணைவரைக் கொண்டுவ
ந்துசேர்த்தேன் ஐயனே அடியேனிடத்தில் யாதொருபழியு மில்லாமை
யாற்கோபத்தை ஷெமித்தருள்கவென்று வேண்டுகின்றஎமனைப்பயப்ப
டவேண்டாமெனத்தேற்றி தம்பியர் எமதையன்பதத்திற் சேர்ந்திருப்ப
தைத்தெரியாதவால் அவர்களிடத்திருந்த டாிவினால் பிரிவென்னும் அன
லமனதைக்கொளுத்திவாட்டமயங்கி உனக்கிச்சேதியைத் தெரிவித்தோ
மிதைக்குறித்து வருந்தவேண்டாம் மேலும்யித்தருணத்திற் செய்யா
மற்செய்தஉதவியை முடித்தீர் யிதற்குக் கைமாறுண்டோவெனப் பலஉ

பசாரவார்த்தைகளையாடிச் செலவுகொடுக்க எமதருமராசன்விரனைப்புகழ்
ந்துதன்பரிவாரங்கள் சூழ்ந்துபோற்றத் தென்தேசத்தைச்சேர்ந்து சிவ
னடியரிடத்து நெருங்காமல் தன் தூதர்களுக்குப் புதிய கட்டளைகளைச்
செய்துபழையபடிக்குத் தன்தொழிலை முடித்திருந்தனன், சவுனகாதித
வத்தரோ சத்திராதிகள்வரவுக்கெதிர்பார்த்திருக்கும்வீராதிவீரராகியபடை
த்தலைவர்- பூதவீரர்- துணைவர்- பெரும்புறக் கடலைப்போலக் களித்துச்
சூழ்ந்துபோற்ற ஒப்பற்ற பராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்மதயா
னையைப்போல அவர்கள்மத்தியில் ரணபூமியில் தனுர்பாணியாக விளங்
கினார், இச்சம்பவங்களனைத்தையும் பார்த்திருந்த தூதர்கள் அலறிப்பு
லம்பிவிழுந்துகெட்டோடிச் சபாமண்டபத்திற் சகலரும் புடைசூழச்சி
ங்காதனத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்திவரும் ராசாதிராசனைக்கண்ட
வுடன் விழிகளில் நீரைப்பெருக்கிவிழுந்து சேவித்துப்புலம்பி சுவாமி
தேவரீர்திருக்குமாரன் அக்கினிமுகன் அகோர உயித்தியங்களைச்செய்து
சதுரங்கச்சேனைகளையும் பறிகொடுத்துக் கடையிற்றூதன்செலுத்தியவீ
ரபத்திராஸ்திரத்தினால் மடிந்தனன் இந்தகொடியசம்பவத்தை விழிகளா
ரக்கண்டுவந்தனமெனப் பேசியவாசகஞ் செவிகளிற் புகுவதன்முன்ன
ம்புத்திரசோபம் மேலிட்டுப் பெருங்காற்றின் மோதலினாற்சாயும் பனை
யைப்போலச் சிங்காதனத்திலிருந்து சோர்ந்து குப்புறவிழுந்து களைத்
துஎக்காலங்களிலும்பெறாத துக்கசாகரத்திலழுந்தி புத்திரனை நினைந்து
நினைந்து பிறலாபித்துப் புலம்பத்தொடங்கினன் என்சரீரத்துக் காதாரச
த்தியாகவிருக்கின்ற உயிரோ சுற்றமே கண்ணே சிரோரத்தினமே செல்
வமே ஓ அக்கினிமுகனே என்னைப் புத்திரசோபத்திற்படுத்தி யிவ்வாழ்
வைவெறுத்து தெய்வபோகங்களை யனுபவிக்கவிரும்பிப் பொன்னாட்
டைச்சேர்ந்தனையோ ஒருதரம் உன்னழகிய திருமுகமண்டலத்தைக்காட்
டிப்பவழத்தையொத்த வாயைத்திறந்து தேறுதலைசொல்லி எனக்குதவி
யாகவரமாட்டாயோ புத்திரசிகாமணியே யினிஉயிர்வாழ்க்கையையொரு
போதும்விரும்பேன்இதோஉன்னுடன்வருகின்றேன்வருகின்றேன்ஐய
னே பாதகனாகிய தூதன் முன்னமிவடம்வந்தபோது உன்தம்பியாகிய வச்
சிரவாகுவை வதைத்துக்கொன்றசேதியைக்கேட்டவுடன் தீயிற்பட்டபு
ழுகைப்போல மனம்பதை பதைத்துவாடி வருந்தினை அத்துயரத்தையி
ன்றுடன்போக்கினையோ வானநாட்டிற்சேர்ந்தவுடன் உன்னுடைத்தம்பி
யைக்கண்டு களித்துக் குலவியிருக்கின்றனையோ குமாரனே நம்மவரா
க்கண்டமாத்திரத்திற் கிடுகிடாய்த்துப்பயந்தோடும் பதிதராகிய தேவப்ப
யல்களனைவரும் நீப்பட்டபாட்டைக்கண்டு களித்து மனவெழுச்சிபெற்
திருக்கவும் எக்காலத்திலும் மாறாத துக்கசாகரத்திற்பட்டு என்னைவாட

விட்டுப்போவது உன்னையொத்தவீராதிவீரனாகியபிள்ளைக்கடுக்குமோ
அல்லதழகோமகனே நீஅடபலனுய்யினைத்தொழிலைச்செய்துழலும் நாதன்
கையில் மாளக்கடவையென்றுசிவபிரான்சபித்தனரோமகாவிஷ்ணுகொ
டுமைபேசினரோ அல்லதுபிரமனே உன்தலையிலெழுதினனோஎனக்கொ
ன்றுந்தோற்றவில்லை ஓ புத்திரரத்தினமே நிணப்பசுமையறுமற்சொலி
த்திருக்கும் வெற்றிவேலாயுதத்துக் கென்னைக் காட்டிக்கொடுத்து அக்
கோரத்தைப்பார்க்க மனமில்லாமற் றாதனுல்மாண்டு முந்திப்போய்வி
டுவதுநீதியோ பகைவனுல் நீ சளத்திற் பட்டனையென்னும் சேதிகேட்
டவுடன் நீங்காமலிருக்கின்ற என்பிராணன் யின்னமென்னதுக்கத்தை
யனுபவிக்கமாட்டாது என்னுசையே பஞ்சபூதமே செல்வமே உன்னை
அரியதவங்களைச் செய்துபெற்ற தமியேன் ஓவென் றலறவிட்டு யிறந்த
தைக்கண்டும் மகப்பேற்றை விரும்பிச் சிலர் தவவிரதங்களைச்செய்யவுந்
துணிவரோ ஓ குழந்தாய் உன்னைமுற்றிலும் நம்பியிருந்த என்னைப்பிரி
த்துபோகப்பட்டவன் எனக்கடுத்த புத்திமதிகளைச்சொல்லி நீங்கவொ
ண்ணுதோ குமாரனேமிகவும்வருந்துகின்றனன் ஒருபோது பற்வதாகி
றதியாகவிளங்கும் உன்மார்பைத்தழுவி யென்களைதீரத்தக்கதாகவந்து
டோசமாட்டாயோ மனமில்லையோ மதிமயங்கினையோ என்செல்வமே
கண்ணொளியே என்னன்பே பிறகாசம்பொருந்திய வேலைத்தரித்தகா
தலங்களைப்பெற்ற காளையே என்னரசே என்னைப்பெற்றவனே ஐயனே
உன்னிடத்தன்புள்ள பிதாவைமறந்தனை மறந்தனை என்பாழ்வயற்றிற்றீ
யைக்கொட்டினை யென்றிவ்விதங்களாகப் பன்னிப்பன்னி புத்திரசோ
பத்திற்பட்டுப் புலம்புகின்ற தறுவாயிற் சபையிலிருந்த பந்துவற்சங்க
ள் மந்திரிபிறதானிகள் சேனைத்தலைவர் முதலானவர்கள் தத்தமக் கடுத்த
சம்பவங்களைப்போல முகத்திலும்வாயிலும்வயற்றிலும் அறைந்துகொ
ண்டு விழிகளில்நீரைப்பெருக்கிக் கடலுடைந்ததைநிகர்த்துக் கதறினவி
தங்களைச்சொல்லிமுடிவதோ இப்பிறசாரம் அல்லோல கல்லோலப்படுகி
ன்றதறுவாயில் அக்கினிமுகனைப் பெற்ற தாயாகிய பதுமகோமளை தன்
குமாரனுக்கடுத்த சம்பவத்தைத் தெரிந்தவுடன் வயற்றிலறைந்து துகில்
சோரத்தீயிற்பட்ட அம்சத்தைப்போலச்சோர்ந்து நிலத்தில்விழுந்து மூ
ர்ச்சித்தவளாய் அக்காலத்திற்சூழ்ந்திருந்த தோழியர் சிலதியர் பாங்கியர்
அழுதுகொண்டுசயித்திய உபசாரங்களைச்செய்யத் தேறியெழுந்து கூந்
தல்விழுந்துபுரளப்பரதவிக்கும்போது புரமாதரனைவரும்சேர்ந்து எழ
ட்கொண்டாடினர், அத்தறுவாயில்அந்நகரமெங்கனுஞ் சமுத்திரகோஷ
டத்திலு மேலிடத்தக்கதாகப் புலம்புகின்ற சத்தமானது அஷ்டதிசையி
லும்பரந்து வானவெல்லையினுமொலித்தது.

சூதபுராணிகர் - சவுனகாதிரிஷிகளுக்கு பின்புநடந்தசவிஸ்தார
ங்களையுஞ் சொல்வதாயினர், மேற்கூறித்தபடிக்கு ராசராசன் முதலான
வர்கள் வருந்துகின்றசேதியை மூவாயிரம்பிள்ளைகள் கேள்விப்பட்டவு
டன் மானமுங்கோபமும் மனதைவாட்டக் கடுகிக் கோடிசூரியப்பிரகா
சமாகச் சிரோரத்தினக்காந்தியைவீசி வானத்தையளாவப் பார்திருக்கும்
பிதாவினரமனையைச்சேர்ந்து தனக்கடுத்தபழியென்னுங்குருவளிகாற்
றானது வளைந்துவளைந்துமோதப் புத்திரசோபமாகிய துக்கசாகர அலை
பெருத்து மனமென்னுங்கரையைவாட்ட வீரத்தன்மையைப் போக்கிச்
சோபித்துக்களைத்திரங்கிவாடி முகப்பொலிவற்று விழிகளில்நீரைப் பெ
ருக்கிக் கதறுகின்றபிதாவைக்கண்டு வணங்கிஐயனே,செயசாலியாகியதா
தனும்அவனுக்கிளைய -எண்மர்- இலக்கர் -படைவீரர்- பூதப் பெருக்கும்
ஏகமாய்நெருங்கிப் போரைச்செய்யவிருக்கின்ற சமர்களத்தில் எரிமு
கனைத்தனித்தனுப்பி இப்படிக்குவருந்துவதென்னை அவன் அவ்வீரருட
ன் போராடவல்லனே சகலகலைகளையும் புற்கியாகத்தெளிந்திருக்கின்ற
ராசாதிராசனேகேட்டருள்க, ஒருவன் சேனைப்பெருக்கையும் வலிபெற்ற
துணைவரையும்புத்திரரையும்அகண்டசாம்பிராச்சியச்செல்வங்களையும்பு
சபெலபராக்கிரமச்சம்பத்தையும் பெற்றிருப்பனாயினும் காலதேச வற்
தமானங்களைஆராய்ந்து தகுதியாகிய முயற்சிகளைச்செய்து கொண்டு ஒ
ருகாரியத்தைமுடிக்கவெத்தனப்படாமற் போவனாயில் அபலனாகியஒரு
வனால்பங்கப்பட்டுவலிகுறைந்து பழிக்காளாய் வாடவருமென்று உலகி
னர்வழங்கிக்கொள்வர்மேலும் நீதிநூலின்பிரசரணமுமாம் ஆதலால் யிவை
களைத் தீர்க்கமாயோசியாமற்போனீர் செயசாலிகளாகியசத்துருக்கள்பெ
ருக்கைமதித்துப்பாராமல் ஒருகுமாரனைத்தனிமையிற் றூண்டிநீர் மேல்
வரும்நன்குதீங்குகளைக் கவனியாமற்போனீர் மேலும்அவன்தேவரீர்கட்
டளையின்படிக்குப்போய்த் தன்னாற்கூடியவரையிற்போராடியிறந்து வீ
ரசொர்க்கத்தைச்சேர்ந்தால் அதையொரு பொருளாகவெண்ணி சூரனாக
விருக்கின்ற தாம்தெரியாதவர்களைப்போலப் புத்திரசோபத்திலழுந்தி
வாடுவதழகோ உம்மையொத்ததீரனுக்கடுக்குமோ ஓ, ராசபரமேஸ்பர
னே,அக்கினிமுகனொருவன் களத்திற்பட்டதைக்குறித்து தயிரியத்தையி
ழந்து கிலேசிக்கவேண்டாம் இதனைநமக்கழிந்தோடியதேவர்க்கள்தெரி
வராயில்எளிதமாகும் ஒருகுமாரன்போனதினாலொன்றும்முழுகிப்போ
கவில்லை பற்பலவெற்றிகளைக்கிடைத்திருக்கின்றமூவாயிரவர் சுகசீவிகளா
கவிருக்கின்றபோது உமக்கென்னகுறைநேர்ந்துவிட்டது இதுவுமல்லா
மல் எங்கள் துணைவனான இரணியன் தவங்களைச்செய்துகொண்டு பதுங்கி
தருணம்பார்த்திருக்கவும் சூரியனைத்தளைசெய்த வீராதிவீரனாகிய தமையு

ஸ்ஷேமமாயிருக்கவும் ஒப்பற்றபராக்கிரமசாலியாகியசிறியதந்தைசிங்
கமுகாசூரன் வலியனாயிருக்கவும் திண்ணியராகியபடைத்தலைவ ரிருக்கவு
ம் சவுரியபரராகிய கணக்கிறந்தவெள்ளம் ராட்சதச்சேனைகளிருக்கவும் யி
வையன்றியிற்றமைதுகாவலிற்பட்டமற்றையவண்டங்களிற்செயசாலிகளா
கியசதுரங்கச்சேனைகள்மிகுதியிருக்கவும் உமக்கென்னகுறைபாடா யிற்று
சத்திராதிகள்வலியராய்ச் சிலபிள்ளைகளையும் சயின்னியங்களையும் வாட்டி
க்கொன்றனரென்கின்ற தளர்ச்சியைக்கொண்டு வருந்தவேண்டுவதில்லை,
மேலும்சத்தசாகரங்களும் ஒருகாலம்வற்றிப் போமாயினும் உமதுகட்
டளையினடங்கியிருக்கின்ற சதுரங்கச்சேனைவெள்ளங்களுக் கழிவுண்டா
வதோயிதைக்குறித்துச் சந்தேகிக்கவும் வேண்டுமோ- இஃதன்றியும்த
மது பெருமைகள் தமக்கேதோற்றாமல் மயங்குகின்றீர் ஊழிகாலத்தினு
ம் அழிவில்லாதவச்சிரதிரேகத்தைப்படைத்துதீர்க்காயசைப்பெற்று ஆயி
ரத்தெட்டண்டங்களுக்கும் சக்கிரேஸ்வரனாய் அகண்டசாம்பிராச்சியச்
செல்வவளங்களையனுபவித்திருக்கின்ற தேவரீரிப்படிக்குக் கவலைகொ
ண்டு வாடுவது உமது புயவன்மைக்கும் பெருமிதங்களுக்கு மடுப்பதோ
யிதுவரையிற்பகைவர் தங்களாற்கூடியவரையிற் போராடிக்கொன்ற நா
ல்வகைச்சேனைகளைப்பார்க்குமிடத்திற் பாதலவரையினாழ்ந்து அண்டமு
கட்டைக்கிட்டி பூமிக்கச்சாணியாக விருக்கின்ற மகம்மேருவிலொருதி
னைத்துணைகழிந்ததென மதிக்கவேண்டும் மேலும்ஆயிரத்தெட் டண்ட
ங்களைவென்று சகலரும்வணங்கிப்போற்ற அரசுசெலுத்திவரும் தலை
மையையும்வீரத்தையும் புயவன்மையையும் சுலபகாரியத்தைப் பெரிதா
கவெண்ணியிதுவரையிற்றேடிய செயங்களுடனமர்ந்து ரணக்களத்திற்
பட்டவர்களை நினைந்துநினைந்து புறந்தந்தோடியொளிக்குந் தேவப்ப
யல்களைப்போலக் கிலேசித்துவாடுவதழகோ தேவரீர்திருவுளத்திற் சற்று
சோபம்பிறவேசித்துக் கட்டளையிடுவீராகிற் றேவராசனையும்விஷ்ணுபிர
மனையும்எமனையும் அக்கினிவாயுமுதலாகிய சகலரையும் கணப்போதில்
வலிதிற்பற்றிகட்டிக்கொண்டு வந்து சன்னிதானத்தில்விடவல்லோம் இ
வையன்றியிற் பொன்னுலகையலைத்ததப்படுத்த வேண்டினும்மேருவை
த்துகளாக்கநினைப்பினும் பூமண்டலத்தையெடுத்து சமுத்திரத்திற்கரைக்
கவிரும்பினும் சராசரப்பிரபஞ்சங்களைத் தகிக்கவல்லவடவனலை யவிக்க
த்திருவுளத்திற் கொள்ளுவீராயினும் தேவரீர் கருத்தின்படிக்கு நிமைப்
போதில் முடிக்கக்காத்திருக்கின்றோம் இனிபன்னிப்பன்னிச்சொல்லவே
ண்டுவதில்லை அடியோங்கள்பேரிற்கிருபையுற்றுச்செலவுகொடுப்பீ ராகி
ன்சதுரங்கச்சேனைகளையுங் கூட்டிக்கொண்டுபோய் நிமைப்போதிற் பூ
தவெள்ளத்தையும் எண்மர் இலக்கரையும் யிவர்களுக்குத் தலைமைபெற்றி

ருக்கின்ற தூதனையும்பெருங்காற்றிற்பட்ட பூளைப்புஷ்பத்தைப் போல
ச்சின்னபின்னப்படக்கண்டித்து அவர்களைப்படைத்துணையாகக்கொண்
டுமேலிட்டுவந்தகந்தனையுங் கைப்பிடியாகப்பற்றிவந்து பிதாவின்சன்
னிதானத்தில்விடவல்லோமென்றுயிவ்விததயிரியங்களை வெகுவாகச்சொ
ல்லிவரும் வாசகங்கள் களைபட்டிருக்கின்ற ஒருவனுக்குத் தேவாமிர்தம்
தேக்கிடவுண்ணக்கிடைப்பதைப்போலச் செவிகளில் நுழைந்தவுடன் ம
னதைவருத்தி யிருந்தகிலேசமொழிந்து முகமலர்ச்சிபெறமகிழ்ந்து கு
மாரர்களே நீங்கள் கூறித்தபடிக்குப்பகைவனாயதம்பண்ணி என்மனக்க
ருத்தின் வண்ணமுடிக்கவேண்டுமெனச் சூரபதுமன்கட்டளையிட்டமாத்
திரத்தில் மூவாயிரம்பிள்ளைகளும் செயவுச்சாகத்துடன்புயங்கள் பூரிக்க
வும்பிதாவின்பாதாரவிந்தங்களிற் பணிந்துசெலவுபெற்றுக்கொண்டுகா
ளகூடவிஷத்தைப்போலச் சபையைக்கடந்துவெளிவந்துதங்களரமனைக
ளிற்சேர்ந்து விசாலமாயிருக்கின்ற ஆயுதச்சாலைகளிற்போய் வீரலட்சுமி
யைப்போற்றி வழிபட்டு வயிரக்கவசங்களையெடுத்து வச்சிரமலைக்கொப்
பாகப்பாரித்து முத்துமாலைமோகனமாலைகள் புரளவிருக்கின்ற மார்பிற்
றரித்து பாரித்தவில்லைத்தோளில்மாட்டி திவ்வியபாணங்க ளடங்கியிருக்
கின்ற அம்புருத்தூணீரத்தைமுதுகிலிறுக்கிகாசாடுமாட்டிவிரற்கோதை
களைப்பூட்டி வலக்கரத்திற் றேவாஸ்திரங்களைப்பற்றி வயிரமகுடம்வாகு
வலையமுதலாகிய போர்க்கோலத்தைத்தாங்கிநுதலில்வீரபட்ட மணிந்து
வெற்றிக்குரியதும்பைமாலைகளைச்சூரியனைப்போலப்பிரகாசிக்கும்வயிர
முடிகளின்மீது சுற்றியிவ்விதப் போர்க்கோலத்தைச்செய்துக்கொண்டு
வெளிவந்துபலகோடிதூதரைப் பார்த்து நமதுசேனைகளை யிந்தநிமிஷத்
திற்கொண்டுவரக்கடவீர்களென்று கட்டளையிட்டனுப்பி விட்டு அஸ்திர
சஸ்திரங்கள் நிறைந்திருக்கின்ற கணக்கிறந்தசேமத்தேர்களை சாக்கிறதை
செய்யப் பணித்தவர்களாய் ஆசாரவாயலுக்கெதிரில் பற்வதாகிருதியாய்
பலபுரவிகள் யாளிசிங்கம்புலிகளை அணியணியாகப்பூட்டி சொற்ணமய
மாய் ரத்தினக்காந்திகளைவீசிக் கொத்துமணிகள் கொடிகள்முதலிய சிங்
காரங்களைப்பெற்று நிற்கின்றசித்திரத்தேர்களிற் சிங்கங்களைப் போலப்
பாய்ந்திருந்ததறுவாயில் ராசபுத்திரர்கள் பணிவிடையின்படிக்கு வாயு
வேகத்தினுமுந்திப்பறந்ததூதர்கள் அறிக்கையிட்டவுடன் சேனைக்காவ
லர் அதிசசந்தோஷத்துடன் சற்வாயுதபாணிகளாய் வள்ளுவனைக் கூவிப்
படையெழுச்சியென பேரிகைகளையறைவித்த சத்தத்தைக்கேட்டமாத்தி
ரத்திற் சதுரங்கச்சேனைகளும் பெரும்புறக்கடலைப்போல ஆர்ப்பரித்து
ச்சேர்ந்துதத்தமதுதலைவனை வந்துகூடினர், அத்தறுவாயில்- றணபேரி
செயபேரி-வெற்றிச்சங்கம்- தவுண்டை- மல்லரி-சல்லரி- ஆகுளி- சின்

ணம்-எக்காளை- தப்பட்டை-முதலியபோர்ப்பறைகள் கோடைகால விடி
களுக்கொப்பாகக் கணகணென்றதிரத்தக்கதாகப் புறப்பட்ட சேனைகளி
ன்பெருக்கை யென்னென்றுசொல்லுவேன் பொன்மயமாகிய வண்டில்
அச்சு-மச்சு-முதலிய சிறப்புகளைப்பெற்ற தோணிகளையிவ்வளவெனக் க
ணிக்கப்படுவதோ சித்திரமுகபடாம் பிரகாசிக்கப்பிறையைநிகர்த்துக்கா
ட்டும் கோடுகளில்வயிரப்பூண்கள் பிரகாசிக்க யிருப்புலக்கைகளைத் துதி
க்கைகளினேந்தி நீலகிரியையொத்த பாரித்தநிமோகங்க ளுடன் மேகங்க
ளுமஞ்சியோட வீறிட்டுப்போகும் யானைக் கூட்டங்களை ஒருவராலுங்
கணிக்கப்படாது ரத்தினவெண்டயங்கள் சால்களிற் சத்திக்க அலைகளைப்
போலப்பாயும் வேகமுள்ளபுரவிப்பந்திகளை அளவிடப் படுவதோ தனு
சுதிவ்வியபாணவகைகள்-வாள்- வேல்- தண்டாயுதம்- சூலம்- சக்கரம்-
தோமரம் - பிண்டிபாலம் - முசலம் - கப்பணமுதலிய பற்பல படை
களைத்தாங்கிவீராவேசங்களுடன்வடவையும்ஆலகாலமும் பலவுருக்கொ
ண்டெழுவதைப்போலக் கொக்கரித்துச்சீறிவரும் ராட்சதப்படைவெள்
ளங்களைப் பிரமனாலும்நிதானிக்கப்படாது இத்தகைய சதுரங்கச்சேனை
களும் வெளிப்பட்டகாலத்திற் பெருத்தபலவாத்தியங்களினதிற்சியும்ரத
ங்களோடும்செற்கரத்தொனியும் மதயானைகள்வீறிடுமொலியும் புரவிப்
பந்திகளின்கனைப்பினோசையும்ராட்சதவீரர்ஆரவாரங்களும் ஏகமாயோ
ங்கி பிரளயகாலத்தைப்போல மண்விண்டிசைகளெங்கனும் செவிடுபட
முழங்கவும் வானத்தையளாவிச் செல்லும் ரதபந்திகளின்மீது நாட்டிய
கொடிகளும்யானைகளின்மீது விளங்கும்கண்டாக்களும்ராட்சதவீரர்தா
ங்கிச்செல்லும்வெற்றித்துவசங்களும்வானவெல்லையைமூடிப் படபடெ
ன்றசையவும் அவுணவீரர்கள்சூடியிருக்கும் வெற்றிமாலைகளிற் பெரு
குந்தேனையுண்டு வண்டினங்கள் ரீங்காரத்தொனிகளைச்செய்துலவவும் க
ழுகு-பருந்து-காக்கைமுதலிய பட்சிக்கூட்டங்கள்கூந்தலிட்டுக் கொண்
டுபந்தலைப்போலவானத்தில் வட்டமிட்டுப்போகவும் பூதபசாசங்களினா
கிடைக்குமென்கின்ற களிப்பினாற்குதித்துத்துள்ளிப் பாடியாடி உயித்
தியகளத்தைநோக்கிநடக்கவும் இவ்விதவேடிக்கைகளுடன்சதுரங்கச்சே
னைகளும் போகும்வேகத்தினாலெழுந்த தூளிபடலமான தெப்படிச்சுக்
காட்டியதெனில், யானைகள்கரியைப்போன்றும் செம்பட்ட மயிரலையும்
சிரங்களையுடைய ராட்சதர்தோற்றம்அனலையொத்தும் அதனிடத்தெழு
ம்புகையையொப்பக்காட்டிய துகட்சமோசமானது வானகமெங்கனும்
பரந்துதிசைகளைமூடிச் சமுத்திரங்களைச்சேருக்கிப் பிராணிகளை மடங்கச்
செய்தது இவ்விதஆடம்பரங்களுடன் பூவட்டமெங்கனும் பரந்து தத்
தளிக்கும்படிக்கும் நடக்கின்றசயின்னியங்களின் பெருக்கைமூவாயிர

ம்ராசகுமாரர்களுங்கண்டு மனவெழுச்சியுடன்போனாக்குறித்துமேவிட்
டுவருவதை வானத்தில்நின்றுவேடிக்கைப்பார்த்திருந்ததேவர்க்கள்தே
ரிந்தமாத்திரத்தில் திடுக்கிட்டு மனம்வருந்தி நடுங்கிவாடவும் சத்தமேக
ங்களுந்தம்மினங்களுடன் பூமியில்நழுகி யோடுவதைப் போலக்கரிய தி
ரேகங்களைவாய்ந்த ராட்சதப்படைகள் ரணக்களவெல்லைக்குச் சமீபத்தி
ல்வருவதைப் பூதவீரர்கண்டவுடன் வடவாமுகாக்கினியைப் போலச் சீறி
பாதகர்மேலும்மேலும்வருகின்றனர், இவர்கள் கொடுமையையடக்க வே
ண்டுமென்று கெக்கலிகொட்டி மராமரங்கள்பற்வதங்கள் மற்றபடைக
ளைக்கொண்டுதாக்கியதறுவாயில் அவுணவீரரும்தீரராய்க் கொதித்து மு
ட்டியபோது -ரணபேரி-செயபேரி-தப்பட்டை- வெற்றிச்சங்கம் எக்
காளமுதலிய பறைகளைக் கணக்கெண்ணமுழக்கு மொலிபெருத்து சமுத்
திரகோஷத்தையடக்கித்தடாகத்தையொப்பச்செய்யவும் அண்டச்சுவர்
நெக்குவிடவும்இவ்விதமாகராட்சதப்பாதகர்மீறிபூதப்படைகளின்மீதிற்
பாய்ந்து மின்னலைப்போலப்பளபளத்து விளங்கும்வாளாயுதங்களைவிதி
ர்த்துவெட்டியும கூரியவேல்களினாற் குற்றியும்பருத்த தண்டாயுதங்களை
க்கரகமெனச்சுழற்றிமோதியும் தங்கக்கட்டுகள்பிகிந்திருக்கின்ற நீண்டவி
ற்களைவளைத்து நாணேற்றிகுணத்தொனிசெய்து விஷத்தோய்வைய விட்
டிருக்கின்ற கொடியபாணவருஷங்களைப் பொழிந்தும்- கப்பணம்- க
ழுமுள்-பிண்டிபாலம்- சக்கரம்-சூலமுதலியபடைகளை ஒன்றனந்தமாகக்
கடாவியும் வாட்டும்போதுபூதப்படைகள் பயப்படாமல் திடசித்தராய்
வடவையைப்போற்பொங்கி வானத்தையளாவிதிசைகளைமூடத் தழைத்தி
ருக்கின்ற மராமரங்களைச்சக்கிராகாரமாகச் சுழற்றிக் கைகொண்ட மட்
டும்மோதியும் பருத்தமலைகளைச்செண்டையொப்பக் கடாவியும் யிருப்
புலக்கைகளினாற் சாடியும் தண்டாயுதங்களைக் கொண்டுமோதியும் வளை
தடிகளைவீசியும் இவ்விதமாகச் செயசாலிகளாகிய சிவகணங்கள் அதாஅத
ப்படுத்துகின்றதறுவாயில் அவுணப்படைகள் சின்னபின்னப்பட்டு ரண
க்களமெங்கும் விழுந்தபோது பெருகிய உதிரவெள்ளமானது ததும்
பிக்கொண்டோடிக் கடலிற்பாய்ந்து கருநீலாச்சென்னீ ராக்கவும் அப்
பிறவாகத்திற்-காக்கை-கழுகு-பருந்துகள்-முழுகிக்களித்து வானத்திலெ
ழுந்து சிறகுகளைப் புலர்த்தி வட்டமிடவும் பூதபசாசங்கள் காளிக்கூட்
டங்கள்பசிதணிந்து கரங்களைக்கோத்துக்கொண்டு டம்பைசுற்றியும் வெ
றியாடலைச்செய்தும் தித்தோமெனநடித்தும்வீரன்புகழைப்பாடிக்கொ
ண்டாடவும் பற்வதாகிருதியாக நிற்கின்றதேரணிகள் கிலப்பட்டுகல்லெ
ன்னும் ஆர்ப்புடன்குவியவும் மதயானைகள்வீறடங்கி கண்டதண்டப்ப
ட்டுமாளவும் தத்தித்தாவிப் பகைவர்மீதுபாயும் புரவிப்பந்திகள் உறும்

புகளனைத்தும் வெவ்வேறாகச்சிதைபட்டுமங்கவும் அக்காலத்தில் அவுண
ர்பொங்கிவாட்டப் பூதவீரர்களிற்பலர்தும்சப்பட்டுமாண்டனர், இதை
க்கண்டமூவாயிரராசகுமாரர்களுமதிககோபம்பிறவேசித்து சற்பங்க
ளைப்போலச்சீறி மந்தரத்துக்கிணையாகப் பாரித்திருக்கும் தனுசுகளைவட்
டாகாரமாகவளைத்து நாரியைமாட்டி யிதுதானோயுகப்பிரளயத்தொலிக்
கும்யிடிப்பெருக்கென்று சகலருந்திகைத்துவாடும்படிக்கு டங்காரசத்
தத்தைக்காட்டி விஷத்தொலையைவிட்டுநெய்தடவி கூர்மை யாய்மின்னலை
ப்போலவிளங்கும் அலகுகளையுடைய கொடியபாணவருஷங்களைச்சொ
ரிந்து சிங்கநாதங்களைச்செய்துவாட்டும்போது சின்னபின்னப்பட்டுமா
ண்டும்கலைத்தும் யிளைத்தும் காயப்பட்டுமங்கினவர்கள்போக மற்றபூ
தப்படைகள்திகைத்துஎதிரில்நிற்கப்பயந்து ஒருவருக்குமுன் னொருவ
ராகத் திசைகெட்டோடியதைக்கண்ட தலைவர்கள்மானமுங் கோபமும்
மனதைவாட்டக் காளத்தைப்போலச்சீறித் தங்களிரதங்களைத்தூரத்திவந்
து ராசகுமாரர்களைவளைந்துகொண்டு பருத்தவிற்களைக்கோலிக் கணக்கி
றந்ததிவ்வியபாணங்களைச் சோனைப்பெய்யலையொப்பப் பொழிந்துப
கைவரேறியிருக்கின்ற தேர்களைச் சின்னபின்னப்படத் துகள்கண்டு பாக
ரைவாட்டி புரவிகளைமாய்த்துக்கொக்கரித்தும் சிலவீரர்வலியதண்டாயுத
ங்களைச் சுழற்றிமோதிக் குதிரைக்கூட்டங்களைத் தலைமாடுகால்மாடாகச்
சிதைத்துங்குவித்தும் சிலர்கற்கம்பத்தையொத்தகால்களினுதைத்துப்
பாகன் நிலத்திலுருளும்படிக்கு மதயானைப் பெருக்கைச் சதறிக்கொண்
டுவிழத்தள்ளியும் சிலர்பகைவரேறியிருக்கின்ற ரதங்களைவாரி யெடுத்து
பந்தையொப்பவானத்திலுந் திசைகளிலும்வீசிக் கெற்சிக்கவும் சிலமொ
மூவாயுதங்களைவிட்டு வலியமார்பைப்பிளந்தும் சிலர் வாளாயுதங்களைவீ
சிச்சத்துராதிகள்கரத்தில்விளங்கும் விற்களையிரண்டுதுண்டமாகவெட்டி
த்தள்ளியும் சிலர்பற்பலபாரித்தமலைகளையெறிந்து ராட்சதச்சேனைகளைச்
சதைத்துக்கொன்றும் சிலர்வீராவேசங்களுடன்பாய்ந்து எதிரிகள்கரங்க
ளிற் பிடிபட்டிருக்கின்ற தனுசுகளைப்பிடுங்கிச் சுள்ளிகளுக் கொப்பாக
முறித்து அவர்கள்முகத்திலெறிந்தும் இவ்விதங்களாக பூதநாயகர்கள் சி
லரேங்கி சண்டைகொடுக்கும்உற்பாதங்களைத்தெரிந்தமூவாயிரவரும்அ
திககோபங்கொண்டு குரூரமாகியபாணவருஷங்களைச்சொரிந்த தருவா
யில் அவைகள்வெளிப்பட்டவுடன் தீயையிறைத்து பக்குபக்கென் றெ
ரித்து விடநாகங்களைப்போலச்சீறி வேகமாய்வந்து கோடையிடிகளைப்
போலத்தாக்கி வலியமார்பைப்பிளந்தும்புசங்களைத்துளைத்தும்கால்களை
பாடவொட்டாமல்வாட்டியும் இவ்விதமாகச்சாடும்போதுதிரோகமெங்க
ளும்புண்பட்டுஉதிரம்பீரிட்டோடக்களைத்தும்யிளைத்துப்பிறமைகொண்

டும்மயங்கிநின்றுவிட்ட எதுவையையும்சூரன்குமாரர்கள்செயவுச்சாக
ங்களையும் இலக்கர்கண்டமாத்திரத்தில் றவுத்திராகாரமாகக்கொதித்தப
ற்வதாகிறுதியாகவிளங்கும் புயாசலங்களைப்பெற்றதலைமையனாகிய வீரவா
குதேவர் திருவடிகளிற்பணிந்து யிந்தபோரை அடியோங்களுக்குக்கட்ட
ளையிடவேண்டுமெனப்போற்றப்பரிவாய் அவ்வாறேசெயப்பிற தாபங்
களுடன் மீளக்கடவீர்களெனத் திருவாய்மலர்ந்ததைக்கேட்டவுடன் பு
சங்கள்பூரித்து வானையளாவக்களித்தவர்களாய் தங்கள் ரதங்களைத்தூரத்
திக்கொண்டு- விசையன்- சயன்- இடபவன்-காஞ்- வீரன்- அதிகோர
ன்-அசலன்-அதிகுணன் வாமனன்-அனந்தன்-அகளங்கன்-அனகன்-
சற்வலி-தாருகன்-வருணன்-சசி- தண்டகன். முதலாகிய இலக்ஷர்பனைவ
ர்முனையில்வந்துசேர்ந்து குமாரதேவர் திவ்விய சரணாரவிந்தங்களைத்தி
யானித்துப்போற்றி தங்கக்கட்டுகள்பூண்டு யிருகுதைகளினும் மணிகள்
தூக்கிபாரித்திரா நின்றதனுசுகளை வளைத்துநாணேற்றி உலகங்கள்திடுக்கி
ட்டுவாடக்குணத்தொனிகொண்டு ஊழிகாலமேகங்களைப் போல திவ்விய
பாணவருஷங்களைப்பொழிந்து கெற்சித்ததறுவாயில் அவர்கள்சரவேக
சரவேகங்களைமூவாயிரவர்கண்டு விடநாகங்களைப்போலச்சீறி விற்களை
யிறுக்கிக்கணக்கிறந்தகுரூரமாகிய நாராசங்களைச்சொரிந்தகாலத்தில யி
ருதிறவருந் தாண்டியகணைகளானவை மேகங்களொன்றுடனொன் றெ
துத்துப்பொருவதக்கொப்பாகத் தீப்பொறிகளைச்சிதறி யெதிர்ந்து மு
ட்டியும்தட்டியும் சீறியும்உருத்தும் பொடித்தும் யிடித்தும் கட்டிப்பு
ரண்டும்விழுந்தும் இவ்விதங்களாகச்சூரன்பிள்ளைகள்செலுத்திய அஸ்தி
ரங்களைநம்மவர்கள்கண்டிக்கவும் இவர்கள்செலுத்தியபடைகளை சத்திரா
திகள் துண்டித்துத்தள்ளியும் இத்தகையவேடிக்கைப்போரினைச் சிலநேர
ஞ்செய்துவருந்தறுவாயில்மூவாயிரவர் கைமிஞ்சிசிலகொடியகணைகளைப்
பிறையோகித்துஇலக்கரேறியிருந்தபருத்த தேர்களனைத்தையும் பொடி
படுத்திக்கொக்கரித்தனர், அக்காலத்தில்இலக்கருக்கு அதிசகோபம் பிற
வேசித்துவடவாமுகாக்கினியைப்போலச்சீறி அமோகமாகியதிவ்வியசர
ங்களைத்தாண்டி மூவாயிரவர்சரங்களிற்பிடிபட்டிருந்ததனுசுகளைக்கண்
டித்துப் பாகன்புரவிகளுடன்தேரையும்துகள்படுத்திச் சிங்கநாதஞ் செ
ய்தனர், அதனால்மானம்பாதிக்கக் காட்டழலையொப்பக் கனன்றுபக்கத்
தில்வருகின்றசேமத்தேர்களினிடத்திற்பாய்ந்து புதியவிற்களைத் தாங்கி
விஷங்களைக்கக்கவல்ல கொடியநாராசங்களைப்பிறையோகித்து அட்டகா
சங்களைச்செய்ததறுவாயில் அப்படைகள்வெளிப்பட்டவுடன் மின்னியி
டித்துக் கல்மழைகளைப்பொழிந்து அனற்பொறிகளைச்சிதறிக்கொண்டு
வேகமாய்வருவதை இலக்கர்கண்டு அதறாமல்பெதறாமல் திடசித்தராய்

# ௨௪௮ மூவாயிரப்பிள்ளைகள்வதைப்படலம்.

அமோகமாகியகணைகளைச்செலுத்தி மேலிட்டுவருகின்ற பகைவர் படைக
ளைப்பொடிபடுத்திமேலுஞ்சோனைமாரியைப்போலக்கணக்கிறந்தசிலீமு
கங்களைக்கடாவி மூவாயிரவர் கைகாலாடவொட்டாமல் மூடித்துரிதமா
ய்த்தங்களுக்குதவியாகநிற்கின்ற தோணிகளிற்றுவியிருந்தபோது சூர
பதுமன்பிள்ளைகள் வலியவிற்களைப்பறிகொடுத்து ஏறியிருந்த தேர்களை
யும்மிழந்து நிராத்துவமாகப்பொரும்வலியுங்குன்றித்தங்களுக்குதவியா
கவந்த அளவற்றசயின்னியங்களும் ரணக்களத்துக் கிரையாய்ப் புரளுவ
தையுங்கண்டு தயிரியமழிந்துமதிமயங்கி கோடக்கனலானது மனதையு
ம்உடலையும்கொளுத்திவாட்ட பிரமித்துநின்றனர், அவர்கள் நிலையைத்
தெரிந்தவுடன்சிவகுமாரர்கள் சாளகத்திற்றிரியும்மான்கூட்டங்களைவே
டர்வலைகளைவீசி வளைத்துக்கொள்ளுமாறுபோலச் சூழ்ந்துகொண்டு கடு
ரமாகியபாணவிதங்களைச்சொரிந்து வாட்டு முன்னிலையில் தியாகிகளாக
விருப்பவர் தரித்திரம்நேர்ந்தகாலத்திற் கொடுக்கவகையற்று துக்கசாக
ரத்தில்முழுகி வாடுவதைப்போலத் திகைத்திருந்த மூவாயிரவரும் மான
முங்கோபமும் மனதைவாட்டசர்ப்பங்களைப்போலச்சீறிச் சிலர்பக்கங்க
ளில் வானத்தையளாவநிற்கின்ற பர்வதங்களையுங்குன்றுகளையும் வேருட
ன்பறித்து இலக்கர்பேரில்வீசியும் சிலர்திசைகளைமூடித் தழைத்திருந்த
பருத்தவிருட்சங்களைமுறித்துச்சாடியும் சிலர்ரணக்களத்தில்மாண்டுகிட
க்கின்ற யானைப்பிணங்களைவாரிவாரி யெறிந்ததறுவாயில் அவ்வெல்லைமு
ற்றிலும் தோற்றமலோங்கிவிழுவதைதேவர்கண்டு திகைத்துபாதகர்யினி
யென்ன அனர்த்தங்களைச் செய்வரோவென்றேங்கினர், இப்பிரகாரஞ்சூர
ன்பிள்ளைகள்செலுத்திய மலைகள்முதலியதுகளை இலக்கர் பலகணைகளைக்
கொண்டு சின்னபின்னப்பட்டுப்போகக்கண்டித்துப்போட்டு மேலுங்க
ணக்கிறந்ததிவ்விய பாணங்களைத் தாண்டிபகைவர்மார்புபுசமுதலானயி
டங்களைச்சல்லடைக்கண்களாகத்துளைத்துச் சுறுவளிக்காற்றைப்போலச்சு
ழன்று சுழன்று சாடும்போது திரோகமெங்கனும் சூரியக்கிரணங்களுக்
குச் சமதையாகவுதிரம்பீரிட்டோடச்சிலர்களைத்தும்சிலர் மானமழிந்து
புறந்தந்தும் சிலரிளைத்தும்வருந்துகின்றதறுவாயில் மற்றவீரர்களிற் சி
லர் வடவையைப்போலப்பொங்கி பற்பலபடைகளைச்செலுத்தி அகோர
யுத்தங்களைச்செய்யவும் சிலர்குலகிரிகளையொத்த மலைகளைப்பறித்தெ
றிந்தும் சிலர்வீராவேசங்களுடன்பாய்ந்து இலக்கரேறியிருந்த தேர்களை
ச்செண்டைப்போலவெடுத்து சமுத்திரத்திலெறிந்து தேவர்க்களோவெ
ன்றலறியேங்க ஆர்ப்பரித்ததறுவாயில் அத்தேர்களிலிருந்தவர்கள் சிங்க
ங்களைப்போலநிலத்திற்பாய்ந்து றவுத்திராகாரமாகக்கோபித்து பாதகரை
யினிவிடலாகாதென்றெண்ணி விற்கள்நாரியைபிகித்து கோடிய பாணவ

ருஷிங்களைச்சொரிந்து மேலிட்டுவருவதை ராசகுமாரர்கண்டுவடவையும
ஞ்சச்சீறி யிடிக்கொப்பாகக்கெற்சித்து தழைத்திருக்கின்ற தோப்பினிட
த்திற் பெருங்காற்று நுழைந்து கிளைகளைமுறிக்குமாறு போல வீரவாகு
தேவர் தம்பியர் கரங்களிற்பற்றிய விற்களைப்பறித்து துரும்புகளைப் போ
லமுறித்துவீசியபோது சண்முகதேவர்படைத்தலைவர்சீறி பகைவர் திரோ
கம்நகசெகபரியந்தம் நுறுங்கிஐம்புலன்களுங்கலங்க வலியகரங்களினு
ல்மோதிச் சிங்கநாதஞ்செய்தபோது பகைவர்மிகவும் நொந்தும் வீரத்
தைவிடாமல் தாங்களும்வலியகரங்களைப்பிடித்தமாக்கிக்கொண்டுயிடிக
ளைப்போல எண்மர்மார்பினுஞ் சிரங்களினுங்குத்தினர், இவ்விதமாகக் க
ருங்கடலும்திருப்பாற்கடலும் பகைத்துத்திரைகளைவீசிக் குமுறிப்போ
ராடுவதைப்போல யிருதிறவரும்கொதித்து யிடசாரிவலசாரிதிரிந்து மற்
போரைச்செய்துவருந்தறுவாயிற் கொடியபாதகனாகியசூரன்பிள்ளைகளு
க்குச் செயசாலிகளாகிய வீரர்வலிகுறைந்து விசையனையொழிய மற்றவர்
தாபரித்தெதிர்ந்து போராடக்கூடாமையாற் பின்னிட்டனர், இப்படிக்
குவீராதிவீரர்களாகிய துணைவர்புறந்தந்ததையும் சத்துருக்கள்வீறுப்பை
யும் விசையன்தெரிந்து வடவையைப்போலச்சீறி உலகமுள்ளளவும்பழி
ப்புரையைப்பெற்றுவிளங்கும் சூரன்பிள்ளைகளை எமபுரத்திற்குடியேற்
றுவேனென்று சபதம்பேசிசந்திரசடாதரக்கடவுளாகிய சிவனாதன்தனக்க
னுக்கிரகித்திருந்த வலியதனுசையெடுத்து வழிபட்டு வட்டாகாரமாகவளை
த்து அண்டங்களதிரகுணத்தொனிகாட்டிபிரசண்டமாருதத்தைப்போல
அப்பாதகனைவளைந்துகொண்டுகுரூரமாகியபாணவருஷங்களைச் சொரி
ந்துகரங்களையறுத்தும்புயங்களைமுறித்தும் சிரங்களைக்கண்டித்தும் மா
ர்பைக்கிழித்தும் வயற்றைப்பீறியும் துடைகளைநுறுக்கியும் இவ்விதங்க
ளாகஒருதிண்ணியன் காட்டில்நுழைந்து பலவிருட்சங்கள் கிளைகளைவெ
ட்டிக்குவிப்பதையொப்பச் சாடிக்கொல்லும்போது கண்டிக்கப் பட்டு
பலதிசையினு மிறைந்துவிழுந்த உறுப்புகளனைத்தும் விரைவிற் சேர்ந்
தொன்றுபட்டு பிராணனுண்டாயெழுந்துசெயசாலியாகியவிசையன்பே
ரிற் பருத்தமலைகளையும்விருட்சங்களையும்பறித்தெறிந்து கொடிய போ
ரைச்செய்வதாயினர், கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே, இந்தராசகுமா
ரர்பூர்வத்தில்அளவற்றகாலம் அரியதவங்களைச்செய்துவருவதைப் பிரம
ன்திருவுளத்தில் மதித்துக்காட்சிதந்து உங்களுக்குவேண்டும் வரங்களை
த்தருவோம்செப்பீரெனத் திருவாய்மலர்ந்ததறுவாயில் ராசகுமாரர்வ
ணங்கிப்போற்றி கற்பனையாங்களொருகாலம்சத்துருக்களாற்பின்னப்ப
ட்டிறக்கவரினும்பழையபடிக்குத் தேகமொன்றி உயிர்பெற்றெழுந்து
பகைவரைவெற்றிகொள்ளத்தக்க வரப்பிரசாதங்களைத் தரவேண்டுமென்

பிரந்தனர், அவ்வாறேகடாட்சித்துப் பிரமன் தன்னகளைச் சேர்ந்தான்; அந்தவரப்பேற்றிஞல் அவையவங்கள் பின்னப்பட்டபோதினும் தட்சிணத்திற்கூடிஎழுந்துபோருவதாயினர், இப்படிக்குச்சரீரங்கள்கண்டிக்கப்பட்டதுமீட்டுஞ்சேர்ந்ததெப்படிக்கிருந்ததெனிற் பெருங் காற்றினுலறையுண்டுசிதறிய செலமானது வுடனேகூடு மாறுபோலவும் சூற்கொண்டமேகசாலங்களிற்றோற்றும் மின்னலின்னொளியினல்நீங்கியயிருள் உடனேபெருந்துக் காட்டுவதுச்கிணையாகவும் விளங்கியதுமேற்குறித்தபடிக்குச்செயசாலியாகிய விசையன்செலுத்திய பாணங்களினுற் பலதிரம்பாதகர்கண்டிக்கப்பட்டபோதினும் மீளமீளச்சேர்ந்துயிர்பெற்றுச்சண்டைகொடுப்பதைப் பார்க்குமிடத்தில் ரிஷிகளே, தவத்தினுஞ் சிறந்தபொருளொன்றுமில்லை இப்படிக்குமாண்ட ராசகுமாரர்மீட்டுமெழுந்து அஸ்திரசஸ்திரவிதங்களை அமோகமாகச்செலுத்திவாட்டுகின்றதறுவாயில்விசையனுக்குலகைகாலோய்ந்து பிற்மித்து அற்புதங்கொண்டவனுய்யாதுந்தோற்றுமல்வருந்தி கடையில்யிதுதவத்தினுலுண்டாகியமுயற்சியெனநிதானித்துத் தீயும்புகையுமெழப் பெருமூச்செறிந்து விழிகளிலனற்பொறிகள்சிதற உருத்துப்பார்த்துயிவர்கள் செய்கைவெகுநேத்தியாகவிருக்கின்றதெனக்கோபநகைகொண்டுஇதனைநினைப்பதாயினன், பலதிரம்கொடிப்பாணசோடிகளைப்போக்கிப்போக்கிக் கண்டதுண்டப்பட வாட்டியபோதினும் மீட்டுமுருப்பெற்றெழுந்து போராடி வருகின்றனர் இதனைதிஷ்டாந்திரமாகக்கண்டும் மேலுமேலுங் காங்கள்வருந்த மனம்வெம்பிக்கலக்கத்தக்கதாகச்சரங்களைச்செலுத்திக்கண்டிப்பதினுற்பிறைபோசனமென்னே இதனுற்சத்திராதிகளை வனயறக்கொல்வதென்னுற் கூடாமையாகக்காணுகின்றது அவ்வாறேயிந்தபாதசர்பர்பகல் கணக்கிறந்தசிறந்தபாணசோடிகளினுல் வருந்திச்சண்டை கொடுப்பினும் நம்மையசைக்கவொண்ணுது தமையன் சன்னிதானத்திற் பகைவரை வெற்றிகொண்டுவருவதாகப்பேசிச் செலவுபெற்றுவந்த யான்ராசகுமாரரைக்கொல்லாமல் எந்தமுகத்தைக்கொண்டு தனுற்பாணியாய் அவர்முன்னம் போவேன்அல்லதுபகைவர் வாமுயற்சியையுடையரொன்றும் மாய்கையிற்சிறந்தவரொன்றம்புசபெலபராக்கிரமசாலிகளென்றம் அவர்கள்மூவாயிரவர்நானொருவனென்செய்வதென்றும் சொல்லுவேனுயினும் தோர்வையுற்றத்திரும்பினவனென்று தம்மவர்களிசழ்ந்துபேசி தமதுதிருக்கூட்டத்திற்சேர்க்காமற் றூர்த்தவரும் அப்படிக்குத்துணிந்துசெய்யநினைப்பினும் இத்தலத்தைக்கடந்துபோக பகைவரும்விடமாட்டார்கள் இக்காரணகாரியங்களையோசித்துப்பாராமலொன்றை முடிப்பதற்குப் பித்தனும்மதிமயங்கியிருக்கவுமில்லைநல்லுணர்ச்சியைப்பெற்றவனுய்இனைப்பின்

றிவ்வியனாகவுந் தனுற்பாணியாகவு மிருக்கின்றனன், இப்பாதகனாவதைத் துக்கீர்த்தியை நாட்டினவனுமல்ல யிதனாற் றீராதவசைக் காளாயினேன் ஆதலால்யானிறப்பினும் பிராணனுடனிருப்பினும்யாதொருபிரயோசனங்களையுங்கண்டிலன் நினைத்தகருமத்தைமுடியாத காரணத்தினாற்பிராணனுடன்றிரிகின்ற பிணத்துக்கொப்பாக விருக்கின்றனனென்று இவ்விதங்களாக விசையனென்னுஞ்சூரன் யிருதலைக்கொள்ளியினகப்பட்ட எறும்பைப் போலவும் தாமரையிலையிற்பட்ட நீர்த்திவலையையொத்தும் நடுக்கடலிற் கப்பல்கவிழக் கரைகாணாமற் றிகைப்பவனை நிகர்த்தும் அளவுபடாத துக்கசாகரத்திற் பட்டுவாடித்திகைத் தெண்ணமிடுகின்ற தறுவாயில் நற்குணநற்செய்கைகளையுடையவனாதலாற் றுயரவெல்லையைக் கடந்துபிழைப்பதற் கொருதந்திரமுண்டெனத் துணிவுகொண்டவனாய் மனமகிட்சியுடன் சுயஞ்சோதிவடிவாகிய சண்முகதேவர் திருவடிகளையல்லது யிந்ததருணபேதகமாகியகாலத்தில் வேறொருவுதவியைக் காணேன் இஃதுண்மையெனத்தேறிகற்றன்பாததாமரைகளைப் பத்திவினயங்களுடன்சிந்தித்துத் திரோகபரவசத்தனாய் விழிகளில்ஆனந்த வாரிபெருகத் தன்மனக்குறைகளை முறையிட்டுப்போற்றுவதைப் பத்தர்நினைவின்படிக்குக் கடாட்சிக்கவல்லகிருபாநிதியாய் தீனசரண்ணியனாகவெழுந்தருளிய பாலசுப்பிறமணியக்கடவுள் திருவுளத்தறிந்துவிசையன் விழிகளுக்குமாத்திரந்தோற்றுவதாக வானத்திலெழுந்தருளிஇதனையருளிச்செய்வதாயினர், வீராதிவீரனேசத்துருக்களைவாட்டநினைந்துபற்பலபின்னப்படக்கண்டித்தும்மீட்டும் அவர்களொன்றுபட்டெழுவதற்கடுத்த காரணங்களைத் தெரியாமல்மயங்கி செயப்பிறதாபத்தைப் பெருந்தகைசூறித்துவாடித் திகைக்கின்றனை வீரனே இனியுனக்கு யாதொருகுறைபாடுகளுமில்லை தேவாஸ்திரங்கள்முதலிய திவ்வியபாணங்களைக்கொண்டு பற்பகல்போராடினும் இவர்கள்மாள்வதரிது யித்தகையசிறந்தவர் முயற்சிகளைப்பூர்வத்திற்பிரமனாற் பெற்றிருக்கின்றனரான அவ்வரலாற்றைப்பூர்த்தியாகத்தெருட்டி ஆதியிற்பரமசிவகடாட்சத்தினால்வெளிவந்து அகந்தைகொண்டிருந்தபிரமன்நடுச்சிரத்தைக்கிள்ளிக் கபாலமாகத்தாங்கிஅவனுசிரத்தைப்பலியேற்றுபிராணனைத்தந்து அவ்வாறேவிஷ்ணுதேவர்க்கள் ரிஷிகள் செற்வபங்கப்படுத்திஉலகைப் பாதுகாத்திருக்கின்ற அகோரவீர பத்திரக்கடவுள் திருநாமத்தைக்கொண்டிருக்கும் சிறந்தபடைக்கரசைப்படைத்து விசையனுக்குத்தந்து உலகங்களனைத்தினும் வெற்றியைநாட்டி யிருக்கும்பகைவனாயிப்படையினாற்கொன்று களிக்கக்கடவையெனத் திருவாய் மலர்ந்து தமதிடத்துக்குப்போயினர், அக்காலத்தில்விசையன் மனக்கவலையற்றுதிடசித்தனாய்முருகப்பெருமான்வடிவைத்தியானித்துதிக்குதோ

# ௨௫௨ மூவாயிரப்பிள்ளைகள்வதைப்படலம்.

க்கி வணங்கிப்போற்றி யெதார்த்தனாய் அதிசீக்கிரமத்தில் வீரபத்திராஸ்தி ரத்தைத்தொழுது வழிபட்டுதனுசிற்பூட்டிப்பிறையோகிக்கயெத்தனப்ப டுமுன்னிலையில்வினவயனைத்தையும் மூவாயிரவரிலொருவனாய் உன்மத்த னென்னும்பெயரைக்கொண்டிருப்பவன்தெரிந்து யிந்ததிவ்வியபாணத் தினால்நம்மனைவரையும்வககாலத்தில் வாட்டநினைந்தனன் அதைத்தூண்டு வதன்முன்னம்மாயப்படையைச்செலுத்தி யிவனுயிரையுண்ணவேண்டு மென த்தீர்மானித்தவனாய்த்தட்சிணத்தில் அச்சரத்தைவழிபட்டுப் பிறை யோகித்தனன், அதுவிறிகாடாந்தகாரமாகியயிருளைப்பெருக்கிமேலிட்டு வருவதை விசையன்கண்டவுடன் பாதகன் வஞ்சகத்தைக்கருதினனெனக் கோபித்து வீரபத்திரப்படையைக்கரவேகமாகத்தூண்டிஆர்ப்பரித்தன ன், அந்ததிவ்வியாஸ்திரம்வெளிப்பட்டவுடன்கோடிசூரியப்பிறகாசமாக ச்சொலித்து விஷிங்களைக்கக்கிக்கொண்டுவந்தெதுத்துப் பகைவன்மோக னப்படையையும் அதினாலுண்டாகியமாயைப்பெருக்கையுங்கவளிகாஞ் செய்துவடவையைப்போலச்சீறி பலஉருக்கொண்டுமூவாயிரம்ராசகுமா ரர்களையும் மட்கினதாய்ச்சின்னபின்னப்படவாட்டிக்கொன்றுவானகெ ங்கையில்முழுகி வீரன்புட்டிலிற்சேர்ந்தது, இப்பிறகாரம்கணப்போதி ற்பகைவரனைவரும் களத்திற்கிடப்பதை விசையன்கண்டு குமாரசுவாமி யைவாழ்த்திசெயவுச்சாகத்துடனிருந்தனன் இச்சம்பவங்களனைத்தையும் பூதப்படைகள்தெரிந்தவுடன் பூரணச்சந்திரோதயத்தை யெதிர்ந்தக டலைப்போலக்களியாடலைக்கொண்டோடிசந்தோஷசாகரத்திலழுந்தினர் இக்காரணங்களைத் தப்பியிருந்த ராட்சதப் படைகள் பார்த்தவுடன்மரு ண்டுகிலேசித்து மோசம்நேர்ந்தது யிப்பிருந்தியத்தி லிருப்போமாகில் மாளவருமென்கின்றபயப்பிருந்தியினால் ஒருவருக்குமுன்னொருவராகத் தொலைதூரங்களினோடிமறைந்தனர், இந்தசந்தோஷச்சேதியை வானத் தில்நின்றதேவர்க்கள்தெரிந்து மனம்பூரித்து கிரோசபாவசத்தராய் கற்ப கமலர்களையிறைத்து வீரன்புகழைக்கொண்டாடிவாழ்த்தினர், இக்கொடு மையைத்தூதரறிந்து புலம்பிக்கொண்டோடிராசபரமேஸ்பரன்நகரத்தை ச்சேர்ந்துசகலரும்புடைசூழ்ந்துபோற்ற நவரத்தினமயமாகிய சபையி ல்விளங்கும் சிங்காதனத்தில் ரத்தினமலையைப்போலவீற்றிருந்தசுசெ லுத்தம் ரூபதுமனைத்தெரிசித்து பாதாரவிந்தங்களில் வணங்கி விழிக ளில்தாரைதாரையாக நீரைப்பெருக்கிகற்றனேதேவரீர்பிள்ளைகள்மூவாயி ரவரும்அகோரவுயித்தியங்களைச்செய்து பூதனா அதாஅதப்படுத்திப்படை வீரனைக்கண்டித்து இலக்கணாவாட்டித் தூதன் துணைவனொன்மனையுஞ்சி க்குபடுத்திவருமுன்னிலையில் அவர்களி லொருவன் வலியனைச் செலுத் தியஒருபாணத்தினால் மூவாயிரவரும்மரணக்களத்துக்கினையாயினர், இவை

யனைத்தையும் கண்களாரக்கண்டுவந்தனமென்னும்வாசகம்முடிவதன்மு
ன்னம்புத்திரசோயக்கனல் உதரத்தைக்கொளுத்தமருண்டு தியங்கி எங்கி
சிங்காதனத்திலிருந்துநிலத்திற்பொத்தென்றுவிழுந்து களைத்து மூர்ச்சி
த்துக்கிடக்கும்போது மந்திரிபிறதானிகள்மனவாட்டத்துடன்வேண்டி
யசயித்தியவுபசாரங்களைச்செய்துவருமுன்னிலையிற்சற்றுநேரத்தில்உண
ர்ச்சிபெற்றெழுந்து பூமிபிளக்கத்தக்கதாகக்கரங்களினாலோங்கியறைந்து
சபைமுற்றினுங்கடகடெனப் புரண்டுபுரண்டுமலையினிடத்திருந்து அரு
விபெருகுமாறுபோலவிழிகளிற்றாரைதாரையாய்ச்சலமொழுகப்பழை
யதுயரத்துடன் புதிய கிலேசத்திற்பட்டுக்கதறி பலபலவிதங்களிற்பன்னி
ப்பன்னிப்புலம்பிச்சகிக்கப்படாத துக்கசாகரத்திலழுந்திப்பரதவிக்கின்
றதறுவாயிற்சூரியபகவான்தன்கிரணகாந்தியையடக்கிமேற்றிசையைச்சே
ர்ந்துகடலில்முழுகிமறைந்தனர்அஃதெப்படிக்குக்காட்டியதெனிற், பிள்
ளைகள்மாண்டசேதியைத்தெரிந்தமாத்திரத்தில் ராசாதிராசன் அரசுசெலு
த்திவருவதைமறந்து சிங்காதனத்திலிருந்துதவறி துக்கசாகரத்திலழுந்தி
யதையொப்பக் காட்டியது, இந்த மரணச்சேதியானது அந்தப்புரத்தி
லெட்டியமாத்திரத்தில் மூவாயிரர் தாயர்முகத்திலும் வாயிலும் வயிற்றிலு
ம்அறைந்துகொண்டு கூந்தலைவிரித்துக்கோடுகோடெனப்புலம்பி எழவு
கொண்டாடி மனவாட்டத்துடன்களைக்கப் பட்டணத்தி லிருக்கின்றவர்
கள் தத்தமக்குநேர்ந்தநஷ்டங்களை நினைந்துநினைந்து பிறலாபிக்குமோ
சையுங்கலந்து திசைகளெங்கனும்பரந்து பிரளயகாலத்திலெழும்பேரொ
லியினுமேலிட்டுக்குமுறியது,

## தருமகோபன்வதைப்படலம்.

சூதபுராணிகர், நைமிசாரண்ணியவாசிகளுக்கு, மேல்நடந்த சரி
த்திரங்களையுஞ் சொல்லுவார், முற்குறித்தபடிக்குச் சூரபதுமன் ரணக்க
ளத்தில்மாண்ட தன்பிள்ளைகள் சவுரியத்தையும் புயவன்மையையும் தீரத்
தையும்சுந்தரவடிவையும் கல்விப்பெருக்கையுமெடுத்துப் பாடிப்பாடி
துக்கிக்கின்றதறுவாயில் ராசாதிராசனெதிரிற் றருமகோபனென்னும்பெ
ரியமந்திரிவந்து திருவடிகளிற்சேவித்து இதனைபோதிப்பதாயினன், ஆ
யிரத்தெட்டண்டங்களுக்கதிபனாய்த் தேவர்முதலானவர்களுக் கிறைவனாய்
நூற்றெட்டுகவளாயி லெதிரின்றி செயப் பிறதாபத்தைப் பெற்றிருக்கி

ன்றராசபாமேல்யாளுகிய தேவரீர்திருவுளத்தில் யித்தனையசோபத்தைக் கொண்டு வாடுவீராகில்யிதனைச்சத்திராதிகள் தெரிந்தபோது மனமெழுச்சிபெற்று காங்களைக்கொட்டிநகைத்தேசவரும் யிகழவான்றியும் செயசாலிகளாகவிருக்கின்ற நம்மவர்களும் அவமதித்துப்பேசயிடமுண்டாகும் மேலும்புத்திரசோபத்தில் மனதைப்பூர்த்தியாகச்செலுத்திவிட்ட படியால்அரசருக்குரிய நீதிகளைமுற்றிலும் மறந்தீர் அஃதென்னையெனில், வீரத்தன்மையை பூஷணமாகக்கொண் டிருக்கின்ற ஆரணுளவன் பகைவர் மேலிட்டுப்போராடுகின்றரணக்களத்திற்றன்பிதாவானவன்மாண்ட போதிலும் பிள்ளைகள்நெருங்கியசுற்றத்தினர்பிராணவீதிதராகவிருப்பவர்பட்டபோதிலும்அதையெவ்வளவும்நினைந்துவருந்தாமல்மனவூக்கத்திலெவ்வளவுங்குறைவின்றி பகைவனைவெற்றிகொள்ளவேண்டுவதற்கான முயற்சிகளைத்தேடவேண்டும் இதுவுமல்லாமற் பகைவரால் ரணக்களத்திலிறந்தநம்மவர்களுயிரைச்சற்றுமஞ்சாமற் கிரகித்துக்கொண்டுபோனஎமனுங்கேபோகிறான் பலமுடபடிக்குச் சிருஷ்டிக்கப் பிரமன்காத்திருக்கின்றனன், இத்தகைய ரணவனையும் ஏவல்கொண்டாளும்பெருமையைப் பெற்றிருக்கின்ற நாமும்சாசிவிகளாய் வசிபெற்றிருக்கின்றனம். இக்காரணங்களினால் நமதுவெற்றிக் கொருபோதும் குறைபாடுகள் நேர்வதுமுண்டோ யிவ்விதச் சம்பத்துக்களைப் பெற்றிருக்கின்றநாம் வருந்தவேண்டியகாரணமென்னை இவைநிற்க பரமசிவகடாட்சத்தினாற் சலனமற்ற வயிரத்திரோசத்தையும் அழிவற்றஆயுளையும் மகதயிஸ்வரியச்செல்வப்பெருக்கையும் புசபெலபராக்கிரமச்சம்பத்தையும் நினைப்போதில் அண்டங்கள்முற்றிலும் உலவித்திரும்பவல்ல இந்திரஞாலத் தேரையும் உமதரசைநீடித்துக்காக்கவல்ல ஆக்கியாசக்கரத்தையும் தேவரீர் படைத்திருக்கின்றதால் எமதிறைவனே சிற்றறிவையுடைய பதிதனைப்போலப் புலம்பவேண்டியகாரணமென்னோ இதுஉம்மையொத்தவீரனுக்குத்தகுமோ தேவர்க்கள் சிறையை எக்காலத்திலும்விடுதலைசெய்வதில்லையெனக்கொண்டிருக்கின்றவிரதத்தையும்அவுணர்குலத்துக்குரியமேம்பாடாகியமானத்தையும்சத்திராதிகளைக்கண்டயிடத்தில் வாட்டநினைந்திருக்கின்ற வுறுதியையும்நிலைபெறநாட்டாமல் யிடைவிடாததுக்கசாகரத்திலழுந்தி வாடுவது நம்போலிகளுக்குத்தகுவதோ எளியராகியதேவர்க்கள் - விருத்தர் - கடகங்கணங்களைதரித்திருக்கின்றமங்கையர் - பாலர் - பெறத்தக்கதுயரம்அகண்டமண்டலாதிபராகவிருக்கின்ற தேவரீருக்குத் தகாதென்று தருமகோபன் பலவிதங்களிற்போதித்து தயிரியங்களைச்சொல்லித் தேற்றியதனாயில் சூரபதுமன் புத்திரசோபத்தைச்சற்று நீங்கி வடவாமுகாக்கினியைப்போலச்சீறி பிராணிகளுயிரைக்கொண்டுபோகும் எமனைப் போல

நாளையேபோய்ப்பகைவர்கூட்டமுற்றிலும் தம்சப்படவாட்டிவீரசொர்க்கத்
திற்சேர்ப்பேனென்றுகோபித்து அவுணர்பெருமானெழுந்துயாநசாரியா
கநடக்கும்போது பிறதானமந்திரியாகிய தருமகோபன்றுரிதமாயெதிரி
லோடிபாதங்களிற்சேவித்து ராசாதிராசனேகோபத்தைத்தணித்து இவ
டத்திற்சற்றுநேரம் தரித்திருப்பீராகில் இந்தட்சணத்தில் அடியேன்சது
ரங்கசேனைகளைக்கூட்டிக்கொண்டுபோய் வீற்றிருக்கின்றபகைவரைமட
டக்கிக்கொண்டு அதாஅதப்படவாட்டி வீரகாளிக்கிரையாக ரணக்களத்தி
ற்பெலிகொடுத்து செயப்பிறதாயத்தை தேவரீருக்குத் தாக்காத் திருக்கி
றேன் செவ்வுகொடுக்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தபோது
கோபாவேசந்தணிந்துதிரும்பி சிங்காதனத்தில்வீற்றிருந்து தன்மனது
க்கேற்றமந்திராலோசனைகளைச் சொல்லவல்ல தருமகோபனைப்பார்த்து நீ
சொல்லியபடிக்குப் பகைவரைக்கண்டதுண்டமாகச் சங்கரித்துக் கொ
ன்று என்மனக்கிலேசத்தைநீக்கக் கடவையெனவிடைதரப் பெற்று தரு
மகோபன் சபையைக்கடந்து தன்மாளிகையைச்சேர்ந்து ஆயுதச்சாலையி
ற்போய் வயிரக்கவசத்தையெடுத்து விசாலமாகியமார்பிலணிந்து திவ்வி
யாபரணங்கள் நிறைந்திருக்கின்ற அம்புறாத்தூணீரத்தை முதுகிலிறுக்கி
விரல்கடோறுங் கோதைகளைமாட்டி பற்பவசாகிறுதியாகவிருக்கின்றத
னுசைக்கரத்திற்கொண்டு தும்பைமாலையைக்கிரீடத்தின்மீதுசூட்டிவெளி
வந்தவுடன் பரிசனரைப்பார்த்து திசையானைகளிலொன்றாகிய புண்டரீகத்
தைக்கொண்டு வரும்படிக்குக்கட்டளையிட்டு பக்கங்களிற்பார்த்திருக்கின்
றபலகோடிதூதர்மீதுவிழிகளைப்பரப்பி இந்தநிமிஷத்தில் நமதுசதுரங்க
ச்சேனைகளையுந்தருவியெனப் பணித்ததுவாயில்காரியப்பெயர்க்கோடி
காவல்படுத்தியிருக்கின்ற புண்டரீகமென்கின்ற திசைகளிற்றின்சால் வி
ற்பூட்டியிருந்த பாரவிலங்குகளை நீக்கி அடித்துத் தூரத்திவந்து எதிரி
ல்நிறுத்தினர், தன்மனக்கருத்தின்வண்ணஞ் செல்லவல்லயானையின்பிட
றியில்மேகத்தைப்போலத்தாவியேறி இந்திரன் இவனுக்குமெனச் சங்கை
கொள்ளும்படிக்குக் கெம்பீரமாய்வீற்றிருந்தான் அத்தருவாயில் யிவனு
க்கினையமந்திரிகள்சர்வாயுதபாணிகளாய் பரித்தவிற்களைக் கரத்திற்கொ
ண்டுமற்றபடைகளையும் போரணியையுந்தாங்கிநவரத்தினமயமாகியதே
ர்களின்மிதிலேறிதத்தமது காவலிலிருக்கின்றசேனைகளையுங்கூட்டிக்கொ
ண்டுவந்துசூழ்ந்தனர், இவர்களுடன் தன்னரமனையைத்தாண்டி நடக்கின்
றதருவாயில் முன்னமேோடியதூதர்கள்படையெழுச்சியெனத்தெரிவித்த
வுடன் மனவுச்சாகத்துடன் படைத்தலைவர்கள் போரணிகளைத்தரித்துப
ருத்த-வில்-பாணம்-சக்கரமுதலிய படைகளைப்பரித்தவர்களாய்-வேல்-
வாள்-வளைதடி-தப்பணம்-திருப்புலம்-கை-பாசமாதிய ஆயுதங்களைத்தாங்

கிசெட்டைகளையணிந்து வெளிவந்தராட்சதச்சேனைகள் பாரித்தரதங்கள்
மதயானைகள் அலைகளைப்போலத்தாவும்குதிரைகள்இவ்விதச்சதுரங்கச்சே
னைகள்பலவெள்ளக்கணக்கிற் கடலையொப்பச்சேர்ந்ததைக் கூட்டிக்கொ
ண்டுவேகமாய்வந்து மந்திரித்தலைவனைக்கண்டுவணங்கிப்போற்றிவரத்தக்
கதாகநடக்கும்போது-பணைபேரி-செயபேரி-வெற்றிச்சங்கம்-சின்னம்
கோடு-துகுளி-காளம்-பறை-குடமுழா-சல்லரி-மல்லரி முதலியபோர்
பறைகள்கனகமென்றதிரக் கோடாகோடிதீவட்டிகள் காடைவிளக்கும
த்தாப்புகள்சூரியப்பிரகாசத்தினும் மேவிட்ட ஒளியைத்தரவும் துசபட
ங்கள் வானத்தைமூடிபடபடென்றசையவும்பூரணச்சந்திரனைப்போலக்
கணக்கிறந்தமுத்துகளினுற்சோதித்ததவளக்கொடைகளைக்கவித்துப்போ
கவும்சல்லியங்கள் நடையினு லுண்டாயெழுந்த தூளீபடலமானது
அஷ்டதிசைகளினும் பரந்தலைக்கவும் பற்வதாகிருதியாகியதேர்கள் கெற்
சாத்தொனிகளைச்செய்தோடவும் மதயானைகள்வீறிட்டுப்பகைவரைச்சி
ப்பிரசண்டமாருதத்தைப்போல வேகமாய்நடக்கவும் புரவிக் கூட்டங்
களானவை நான்குபாதங்களினும்பூண்டிருக்கின்றபொன்வெண்டையங்
கள்சலிக்கதலைகளுக்குச்சமதையாகத்தாவி வானவெல்லையினும் திசைகளி
னும் சமுத்திரப்பெருக்கினும்பாய்ந்து யிடிமுழக்கத்துக்குச் சமதையா
கக்கனைத்தோடவும்பிறையையொத்த கோரதந்தங்கள்விளங்க அரக்கினு
ஞ்சிவந்தமுண்டைக்கண்களை உருட்டிதீப்பொறிகள் சிதறப்பார்த்து பூமி
நடுநடுங்கக்கால்களைப் பெயர்த்துவைத்து ஆலகாலத்தையொப்ப ராட்
சதப்படைகள் வீராவேசங்களுடன் சிங்கநாதம் அட்டகாசங்களைச்செய்
துபோகவும் இவ்வித ஆடம்பரங்களுடன் டெங்கனும்பரவி நடக்கின்ற
சதுரங்கச்சேனைகளின்மத்தியில் நீலகிரியையொத்தபுண்டரீகமென்னும்
யானையைச்செலுத்தி மகாபாதகனுகிய தருமகோபன்ராசவீதிகளைக்கடந்
து ரணக்களத்தைநோக்கிவருவதைதேவர்பாத்தமாத்திரத்தில் அம்மவோ
அறத்தைக்கொன்ற கொடியன் திசையானைகளில் முதன்மையாகவிருக்கி
ன்றபுண்டரீகத்தின்பிடரியில் அளவற்றசேனைகள்சூழவருகின்றனன், மா
யையிற்சிறந்தவன் வலியினுப்பற்றவன் பலனாவென்றுகைதேர்ந் திரு
ப்பவன் இத்தகையவீரனைவெல்லவல்லவர்யாவரிருக்கின்றனர், இதற்கெ
ன்செய்வோமென்றெங்கிவாடிக்கரங்களைப்பிசைந்துகொண்டுபிரமித்து
ப்பார்த்திருந்தனர், அத்தருவாயில்சண்முகதேவர்சேனைத்தலைவர்பகைவர்
வரவுகெதிர்பார்த்துவீரசிங்கத்தைப்போலவீறிமதயானைக்கிணையாகவிரு
க்கின்றரணக்களத்தினருகில்வருவதைபூதவீரர்கண்டுவடவையைப்போற்
சீறிவானத்தையளாவநிற்கின்றபடைகளையும்திசைகளைமூடத்தழைத்திருக்கி
ன்றவிருட்சங்களையும்பறித்துக்கொண்டு-யிருப்புலக்கை-தண்டாயுதம்,

வளைதடி-முதலியபடைகளைத்தாங்கித்தாவியிருக்கும்வீரத்தையும்படை
வீரர்பெருக்கையும் இலக்கர்வீரப்பையும் எண்மர்சவுரியங்களையும்இவ
ர்களுக்குத் தலைமைபூண்டிருக்கின்ற வீரவாகுதேவர்தனுப்பாணியாய் மு
ன்னணியைப்போற்றி வீரசிங்கத்தையொப்பநிற்கின்றதைத்தண்டத்தையு
ம்தருமகோபன்கண்டவுடன்மதிமயங்கியின்றுடல் நமது வாணாள்முடி
வெய்துங்காலம் நேர்ந்ததாகவிருக்கின்றது பார்த்தயோதே மனம்நிலை
பெறவில்லைநெருங்கிப்போராத்துடங்குவோமாகில்யென்ன அனர்த்தம்
விளையுமோதெரியவில்லையெனவருந்துகின்றமன்துக்குச்சிலசமாதானங்
களைச்சொல்லித்தேற்றுவதாயினன்,,ஓமனமேபகைவர்விறிபராக்கிறமசா
லிகளாயெதுத்துச்சண்டைகொடுக்கநேர்ந்ததறுவாயில்லூக்கமற்றுவருந்
திஎங்குவது தீராதவகையன்றே இச்செய்கையை நமக்கஞ்சித் திரிகின்ற
தேவர்சிறிதுதெரிவராயில் யிகழ்ந்துபேசி கைகொட்டி நகைப்பர் ஆதலா
ல்யெதிரோறி உருத்துச்சண்டைகொடுத்து வெற்றிகொள்வதே நன்காகக்
காணுகின்றது நீயேன் வீணெண்ணங்களைக்கொண்டு வருந்துகின்றனை
செயசாலிகளாகியபடைத்தலைவரும்வீரத்தன்மையைப்பெற்றிருக்கின்ற
எண்ணிறந்தசேனைவெள்ளங்களும்நம்மைச்சூழ்ந்துவருகின்றனரிமேலு
ம்நானேதேவர்அவுணர் இராக்கதர் முதலாகிய வீராதிவீரர்களைவென்று
வெற்றிக்கொடியைநாட்டி தற்மத்தைத்தலையெடுக்கவொட்டாமற் கொ
ன்றுஇவ்விதவெற்றிகளைப்பெற்றிருக்கின்றனன்,மந்தரத்தையொப்பத்
திரண்டோங்கியிருக்கின்றவில்கரத்திலிருக்கின்றதுதேவர்க்கள்படைகளையு
ம்மற்றவலியஆயுதங்களையும்பெற்றிருக்கின்றனன்,சத்திராதிகளைநிமைப்
பொதில்நாசஞ்செய்யவல்லபுண்டரீகம் நமக்கடிமையாகக்காத்திருக்கின்
றதுயிவ்வளவுஉதவிகளைப்பெற்றிருக்கின்றநீபயங்கொள்ளவேண்டியகா
ரியமென்னைசிவச்செயற்படிக்குமுடியவிருக்கின்றது சத்துருக்கள்நெரு
ங்கியிருக்கின்ற போர்க்களத்தில்வந்து யினியிரங்கிவாடுவதுதகாதுபேடி
யருக்கடுத்தநடத்தையாகும் சண்டைக்குநேர்ந்தகாலத்திற்பகைவனாவெ
ன்று செயப்பிறதாபத்தைப்பெறினும் புறந்தந்தோடினும் அல்லதுமா
ள்வரினும் பின்னிடையாமற்சேனைகளுடன் சத்திராகள்மீதில்வீறிப்போ
வதேகடனல்லது தியங்கிவாடுகின்றதழகோ சமர்க்களத்தில்வீராவேசங்க
ளுடனெதுத்திருக்கின்ற எதிரிகள்சவுரியத்தைக்கண்டு பயப்பிரூந்திகொ
ண்டு பூவபலநினைந்துவாடுவது சுத்தவீரருக்கடுப்பதோ இரண்டிலொரு
காரியம் முடியுறத்துக்குச் சந்தேகமில்லையாதலால்.இனியொருபோதுந்
தளர்ச்சிகொள்ளேனெனமனதைத்திடப்படுத்திக்கொண்டு சூரபதுமனுக்
குப் பிறதானமந்திரியாகவிருக்கின்ற தருமகோபன் செயவுச்சாகத்துட
ன்சேனைகளுக்குமத்தியில்நடந்தனன்,அத்தறுவாயில்யிரவும்பகலு மெ

தூத்தைப்போலக்கொடியமனதைப்படைத்த ராட்சதச்சேனைகளும் ந
ல்லொழுக்கத்தைப்பெற்றிருக்கின்றபூதப்படைகளும்நெருங்கிக்காட்ட
ழலும் வடவையையுமொப்பச்சீறிக்கடலுமஞ்சக்கொக்கரித்துச்சண்டை
செய்யத்தொடங்கினர், அக்காலத்திற்பூதவீரர்கைமிஞ்சிதண்டங்களைக்கொ
ண்டுமோதியும் மழுப்படைகளினால்வாட்டியும் பிரகாசம் பொருந்திய
சக்கரம் கணிச்சிகளைச்செலுத்திக் கலக்கியும்பருத்தமலைகளை யொன்றன
ந்தமாகவீசியும் தழைத்திருக்கின்ற மராமரங்களைக் கிறுகிறெனச்சுழற்றி
க்கொண்டமட்டும்மோதியும் இவ்விதமாக நாலுமூலைகளிலும்பரவிப்ப
கைவனைத்திக்குமுக் காடவொட்டாமல் சாடுகின்றதருவாயில் ராட்சதப்
பாதகரும் பின்னிடையாமல்றவுத்திராகாரமாகக்கோபித்துபருத்து நீண்
டுதங்கக்கட்டுகள்பதிந்து மணிகள்சத்தித்துக்கொண்டிருக்கும் விற்களை
வளைத்துத் திசைகளதிரடங்காரசத்தத்தைக்காட்டி விஷத்தொவையவிட்
டிருக்கின்ற க்ரூரமாகியபாணகோடிகளைப் பிரயோகித்துக்கண்டித்து
ம்வேற்படைகளைவீசி அதப்படுத்தியும் வாள்களைவீசி ·கண்ட துண்டப்ப
டவெட்டியும் நாஞ்சில்களைக்கடாவி தும்சப்படுத்தியும் குன்றங்களை எ
றிந்தனைத்தும் கழுமுட்களினாற்குற்றியும் இவ்விதமாக அஸ்திரசஸ்திரங்
களைச்சோனைப்பெய்யலைப்போலச்சொரிந்து பூதப்படைகளைச் சின்னபி
ன்னப்படக்கலக்கினர், இவர்களிப்பிரகாரம் போராடி வருகின்ற தருவா
யில்மந்திரிக்கூட்டங்களுடன் இலக்கர்எண்மருமெதுத்து வீரங்களைப்
பேசித்தனுசுகளைவணக்கி - ஒன்று - பத்து - நூறு - ஆயிரம் - கோடி - வெள்
ளம்மிவ்விதக்கணக்கிற் கொடியபாணங்களைக் கரவேகமாகப் போக்கிஅ
கோரவுயித்தியங்களைச் செய்தும் அதிககோபத்தினாற் றேவாஸ்திரங்களை
ஒருவர்மீதொருவர் மந்திரபூர்வகமாகப் பிரயோகித்துகெற்சிக்கின்ற
தருவாயில் அவ்வாளிகள்வெளிப்பட்டவுடன் அனலைப்பெருக்கி யிடிமி
ன்னல்குமுறலைக்காட்டிபற்பலபாணவிதங்களைப்படைத்து உலகங்களெ
ங்கணும் நிரப்பிச்சீறி ஒன்றையொன்றுடைத்து சொல்லப்படாத கொ
டியவாதாடுகின்றதாற் பிராணிகளனைத்தும் அதிகாயங்களைப்பட்டு வரு
ந்திஎவ்விதத்திற் பிழைக்கப்போகின்றனமெங்கணும் மலைத்துவலை
யொப்பப் பாணமயமாகக்காட்டுகின்றதென வாடித்திகைத்துப்பயந்து
சோரவும்இவ்விதமாகயிருதிறத்துச்சேனைகளுங்கைகலந்துபோராடுகின்
றதருவாயில் அளவற்றபூதப்படைகளும் ராட்சதப்பாதகரும்தலைகளற்று
ந்தோள்களிற்றும் கரங்கள் துணிந்தும் மார்புகள் துறந்தும் வயறுகிழிந்
தும்குடைகள்முறிந்தும் சின்னபின்னப்பட் டழிந்தும் இவ்விதங்களா
கஅல்லோலகல்லோலப் படுகின்றகாலத்திற் சத்திராதிகள்பட்சத்தில் வந்
துபோராடியமதயானைகள்பாகருடன்பங்கப்பட்டுச்சிந்தியும் தேரணிக

ள்பொடிப்பொடியாயிறைந்தும் புரவிசகூட்டங்கள் - தலை - கால் - உடல்
சேதிக்கப்பட்டுஉருக்கொலைந்தமுன்னிலையில்ரணக்களவெல்லையெங்கனு
ம்பிணமலைகளோங்கியும் யிளைந்துதிணைகளை மோதிப்பெருகியரத்தப்பி
றவாகமான்து கடலைநிரப்பிக்கரைகளைக்கடந்து பூமண்டல மெங்கனும்
பிரளயவெள்ளத்தைப்போலப் பரந்தலைக்கவும் - கழுகு - காக்கை - பாந்து
கள் நிணமாம்சங்களைத்திருத்தியாகப்பொசித்து வானத்தில்வட்டமிட்டு
லவவும் பூதபசாசங்கள்வெறிகொண்டு நடிக்கவும் பலகோடிகவந்தங்கள்
கூத்தாடவும் இப்பாடுபடுகின்றதருவாயிற் சிவகணங்கள்பகைவர் கொடு
மையினாற் சிக்குபட்டுத் தியங்கிவாடுவதை இலக்கரிற்சிலர்கண்டுவிடநா
கங்களைப்போலச்சீறி யெதிரோடிக் கணக்கிறந்த நாராசங்களைப் பொழிந்
துலவுகின்றதறுவாயில்மந்திரிகள்சிலரேங்கிக் கொடியபாணவகைகளினு
ல்அவற்றினைக் கண்டித்ததுமல்லாமல் அவர்கள் சரீரங்களைச்சக்கைசக்கை
யாகப்பேத்தெறிந்தசாடும்போது இலக்கர் மிகவும்நொந்து வலிகுறை
ந்து தத்தளிப்பதையும்சத்துருக்கள்செயவுச்சாகங்களுடன் மேலிட்டுவ
ருவதையும் புசபெலபராக்கிரமசாலியாகிய வெப்பவனென்னுஞ் சூரன்
கண்டுகனன்று சீறியெதிர்ந்துயிடிகளையொப்பக் கெற்சித்து மகிமையு
ள்ளவில்லைவளைத்து ராட்சதர்நடுநடுங்கி யேங்குத்தக்கதாகக் குணத்தொ
னிகொண்டு அளவற்றகுரூரமாகிய சரங்களைப்பிரயோகித்துப் பகை
வரைத் - தலைவேறு - புசம்வேறு - கால்வேறு - இவ்விதங்களிற் கண்டித்து
ம் மார்பைப்பிளந்து சல்லடைக்கண்களைப்போலத் துளைத்தும் காலாந்
தகனைப்போலவும்சூறைக்காற்றுனதுதோப்பினிடத்திற் பிறவேசித்ததுக்
குச்சமதையாகவாட்டும்போதுமந்திரிக்கூட்டங்களனைத்தும் ரணக்களத்
துக்கிரையாகமாண்டும் சமுத்திரத்தைநிகர்த்துயினாந்திருந்தசேனைவெ
ள்ளம்வறண்டு நிலத்திற்புரளவும் இவ்விதமாகத்தேவனை வாட்டிவந்தபா
தகர்தாபரித்தெதுக்கஞ்சியிடைவதைபூதப்படைகள்கண்டுகெக்கலிகொ
ட்டி மேலிட்டுக்கணக்கிறந்த பருத்தமலைகளைப்பறித்துவீசியும் மராமரங்
களைவேருடன்பறித்துச்சுழற்றிச்சாடியும்அலைக்கின்றதருவாயிற் சத்திரா
திகள்வெதும்பிவிம்மி வலிகுறைந்துவூக்கமற்று வடித்திறக்கிய அன்னப்
பாண்டத்தில் வாய்வைத்து அச்சூட்டினால் வருந்தியோடும் பூனையைப்
போலச்சின்னபின்னமாக நாலுமூலைகளிலும்பறந்தோடினர், இப்பிறகா
ரம்ராட்சதரனைவரும் பங்கப்பட் டுடைந்ததருவாயில் கணக்கிறந்தபூத
ரகள் அவர்களைத்தொடர்ந்துவைதுகுப்புறவிழுந்தருளும்படிக்குதைத்து
ம்பதினுபத்களும் பலகறையைப்போல உதிரத்தக்கதாகத்தாடையில
றைத்துமசெவிகளைப்பற்றியிழுத்துத்தாக்கியெறிந்தும்கால்களைத்தட்டி
யலைத்தனர் - இப்படிக்குத்தம்மவர்கள் பட்டதுன்பங்களைச்சூபதுமன்

# உகூய தருமகோபன்வதைப்படலம்.

பெரியமந்திரியாகிய தருமகோபன் கண்டுமனம்பொறாமல் வடவாமுகா
க்கினியைப்போலக்கொதித்து புண்ணையொப்பச்சிவந்து தீப்பொறிகளை
யிறைக்கும் குழிந்தவிழிகளையுடைய பூதர்மேற்சென்று வானத்தையளா
வியமந்தரத்தையொத்த நீண்டவில்லை நாட்டி அண்டங்களதிரக் குணத்
தொனிகொண்டு பிராணனைப்பலிகொள்ளவல்ல கொடிய பாணகோடிக
ளை அபரிமிதமாகச்சொரிந்தனன், அவைகள் அடர்ந்து பூதர்மேற்பாய்வ
தைப்பார்க்குமிடத்தில் இந்திரவாகனமாகவிருக்கின்ற மேகசாலங்கள்க
ருநீரையுண்டு கடலினிடத்திற் சொரிந்ததை நிகர்த்துக்காட்டியது, இவ்
விதமாக விஷங்களைக்கக்கிக்கொண்டு சீறிவந்துதாக்கியபோது பூதப்ப
டைகள் அதிககாயங்களைப்பட்டு நடுநடுங்கி தேவராசன் வச்சிராயுதத்தி
னாற் சிறகுகளையரிந்ததருவாயில் பர்வதங்கள்பட்ட துன்பத்தைப்போ
லமங்கிவாடிவருந்துகின்றதருவாயில் இந்திரனேறிநடாத்தும் அயிராவ
தத்தையொத்தவலியுடைய புண்டரீகமென்னும் திசைக்களிறானது கோ
டையிடிகளைப்போலக்குமுறிவடவையையொப்பச்சீறிமபாசம்போன்
றதுதிக்கையைநீட்டிக்கணக்கிறந்தபூதர்களைவாரிசமுத்திரத்திலெறிந்தும்
திசைகளில்வீசியும் வானமெல்லையிற் கடாவியும் ஒவ்வொரு தாக்கினாற்
கோடானகோடி சிவகணங்களைக்கொன்று உரலையொப்பப்பருத்திருக்
கின்ற கால்களைக்கொண்டு அளவிறந்தபூதரை நிலத்திற்றேய்த்தும் தங்கக்க
ட்டுகள்பூண்டு கூர்மையாய்பிறையைப்போல வளைந்திருக்கும் நாற்கோ
டுகளினாற் பலர்மார்புகள்பிளந்துருளும்படிக்குப்பாய்ந்தும் வால்வீச்சி
னாற்பலரைச்சாடியும் வீறிடுமொலிப்பெருக்கத்துக்கஞ்சிச்சிலரைமூர்ச்சி
த்துவாடச்செய்தும் இவ்விதங்களிற்றருமகோபன்வாகனமாகிய புண்ட
ரீகம்சிலதேங்கிகாய்ந்த புதருகளைவாட்டுங் காட்டழலைப்போலத் துவம்ச
ம்பண்ணுகின்றதருவாயில் பூதப்படைகளும் பின்னிடையாமல தீர்த்து
டன்காளகூடத்தைப்போலச்சீறி பருத்தமலைகளைக்கல்லிவீசியும் மராமர
ங்களைக்கொண்டுசாடியும் பலபடைகளையெறிந்தும்போராடுகின்றபோ
து சேனைக்காவலர் ரவுத்திராகாரமாகக் கொதித்து பாரித்த விற்களை வட்
டமாகவிருக்கி திவ்வியபாணகோடிகளைப் பிறயோகித்து சொக்கரித்த
னர், அவைகள் வெளிப்பட்டவுடன் ஒன்றனந்தமாகப்பெருகிக் கழனிக
ளில்நாற்றைநடவு செய்ததையொப்பத்திரேகமுழுதும்தைத்தபோது வெ
ளுத்தஉடல்மாறி உதிரப்பெருக்கினால் மூடப்பட்டுசிவந்து திரிவதைப்
பார்க்குமிடத்திற் சர்ப்பக்கூட்டங்களினாற் கவ்வப்பட்டு பனிப்படலங்க
ள்மூடச்சந்திரன் நடப்பதைப்போலக்காட்டியது இவ்விதமாகப் புண்
டரீகம்வருந்தியபோதிலும் வலிகுறையாமல்மணிகள்கலிக்கஅண்டகோ
ளகைதெக்குவிட்டதைப்போல கெர்ச்சித்துக்கொண்டு மலையையொத்த

துதிக்கையினைச்சுலவிசாடும்போது அணிவகுப்பாகவெதுத்துவந்த பூத
ப்படைகள்சின்னபின்னப்பட்டுக்கலைந்தோடுவதை இந்திரனென்னும்வீ
ரன்கண்டமாத்திரத்தில் விழிகளில்அனற்பொறிகள்சிதறப் பிரசண்டவா
யுவைப்போலவெதுத்து பாரித்திருக்கின்ற தனுவைவளைத்துருமாரமாகி
யபாணங்களாயிரவற்றைத்தாண்டிவீறிவருகின்றயானையின்மத்தகத்தை
த்துளைத்து சோடையிடியைப்போலக்கெற்சித்ததறுவாயில் வுதிரத்தைப்
பெருக்கிக்கதறிக் களைத்துநிலத்தில்விழுந்து ஒருமுகுற்தகாலம்சோபித்
திருந்ததைத் தருமகோபன்கண்டு றவுத்திராகாரமாகக் கோபித்துச் சா
ணையிட்டுக்கூர்மையாயிருக்கின்ற கொடியபாணங்களைமிகுதியாகச் செ
லுத்தி பூதத்தலைவன்நெற்றியைப்பிளந்தனன், அந்தகாயத்தின் மூலமாக
வுதிரம்பிறவாகமாகப் பெருகியபடியாற் களைத்திளைத்துபிறமித்துநின்ற
னன்அத்தறுவாயிற்பாதகனாகியதருமகோபன் சற்றும்பிரக்கமற்றவனாய்
இவனைக்கொல்வதற்குயிதுதருணமெனநினைந்து எழுவாயுதமொன்றை
யெடுத்துகிறுகிறெனச்சுழற்றி மார்புக்கிலக்காகவீசினன், அதுவெளிப்ப
ட்டவுடன் தீயையிறைத்துக்கொண்டுசமீபிப்பதன்முன்னம்இந்திரனெ
ன்னும் வீரனுக்குத் தெளிவுண்டாயெழுந்துதுரிதமாய் திவ்வியபாண
மொன்றைத்தாண்டிமேலிட்டுச் சீறிவரும் முசலத்தைத்துகளாக்கித்தள்
ளி மேலும்பாதகராகியராட்சதர் அலறிக்கொண்டோடக் கரவேகமாய்க்
கணக்கிறந்தபாணவருஷங்களைப்பொழிந்துமந்திரித்தலைவனைத்தோற்ற
வொட்டாமல்மறைத்தகாலத்திற்பாதகனும்கோடானகோடிகொடியபா
ணசமோகங்களைப்போக்கி வீறிவருகின்றசரங்களைக்கண்டித்ததுமன்றி
யிற் பலகோடிகணைகளைப்பிறையோகித்தபோது அவைகள்காட்டழலைப்
போலமண்டியெரிந்துவந்துதாக்குமுன்னிலையில்அதுகளைச்சட்டைபண்
ணாமல்தட்டிப்போட்டுமீட்டும்பலகொடியபாணங்களைச்செலுத்தித்தரு
மகோபன்மார்புக்கரணாகவிருந்தவயிரக்கவசத்தைத்துகளாக்கிக்கொக்கரி
த்ததறுவாயில் வடவைவையைப்போலச்சீறி மணிகள்சத்திக்கும்பருத்ததண்
டாயுதமொன்றையெடுத்துக் கரகரெனச்சுழற்றி யிதனால்நாசமடையக்க
டவையெனக்கடாவியத்றுவாயிற் சக்கரத்தையொப்பவட்டணைவந்துவே
கங்கொண்டுபோய் அசைவற்றமார்பிற்றாக்கியமாத்திரத்திற் பஞ்சேந்தி
ரியநிலைகள்பிசகி இந்திரனென்பவன் மரணமூர்ச்சையாயினன், இப்பிற
காரம் இலச்கர்வண்மர்படைவீரர் பூதசயின்னியங்கள் மங்கி யடங்கிய
தையும்பகைவன் வீராவேசத்துடன்ரணக்களமெங்கனுமெதிரின்றித்திரி
வதையும் புண்டரீகம் சிலறேங்கிச்சாடுவதையும்புசபெல பராக்கிறமசா
லியாகியவிரவாகுதேவர்கண்டமாத்திரத்தில்மானமுங்கோபமும்மனதை
வாட்டறவுத்திராகாரமாகக்கோபித்துத்தட்சிணத்திற்றன்தேரைத்துரத்தி

வந்து பகைவன்முனையிற்சென்றமந்திரித்தலைவனைக்கட்டித்தருவேனெ
னத்தம்மவர்களுக்கு பலதயிரியங்களைச் சொல்லித்தேற்றி அவர்களுக்கு
முன்னணியிற்சேர்ந்து பகைவனை நெருங்கியதைக் கண்ட ராட்சதர்எம
ன்வந்துவிட்டான்வந்துவிட்டானென்றோடும்போது கொடியமனதை
ப்பெற்றபாதகன் வீரவெண்டையமணிந்தபாதங்களையுடையவீரன்மீதி
ற்பொங்கி அக்கினிமழைதுளிப்பதுக்கொப்பாகவும் நட்சத்திரங்களுதி
ருமாறுபோலவும் விழிகளிற்றீப்பொறிகள்சிதறச் சீறிப்பார்த்து அடாப
யலேநீயோவலியனாய் என்னுடனெதுக்கவந்தாய்ராசாதிராசன்கருத்தின்
படிக்கு உன்னைச்சின்னபின்னப்பட வாட்டிப்போகத் தாம்பூலம்வாங்கி
வந்திருக்கின்றதுதெரியாதோ தப்பித்துக்கொண்டோடினாற்பிழைப்பை
விதிவலிஎன்முன்னந் தள்ளிக்கொண்டு வந்துவிட்டது இனிபிசகவொட்
டேன் இதோ உன்பிராணனை நிமைப்போதில்வாங்குவேனெனக் கெற்சி
த்துச்சொல்லியவாசகத்தைச்சுயஞ்சோதிவடிவாகியபாலசுப்பிரமணியரு
க்கினவல்கேட்டு நகைத்து விவேகஞானியனேகேழ்ப்பையாக. உங்களவர்க
ளிற்செயசாலிகளாய் வீரத்தன்மை பெற்றிருந்த பலரைச் சின்னபின்ன
ப்படவாட்டி இந்தரணக்களத்திற்பெலிகொடுத்து வெற்றிபெற் றிருக்கி
ன்றனன், அலபவலியுடையவுனக்கிடைவனே சிறியகழியானதுஅளவுபடா
தசெலப்பெருக்கையுடைய கடலைமீறிக்கடக்கவல்லதோ அவ்வாறேநிமை
ப்போதில்உன்னைசெயிக்கவல்லேன் நீ பெற்றிருக்கின்றசெயப்பிறதாப
மும்வீரமும் புயவன்மையும் யின்றுடன் நாசமாகப்போக விருக்கின்ற
தைத்தெரியாமல் வீண்வார்த்தைகளையேன்பினத்துகின்றனை அதற்குமுன்
னம் நீகற்றிருக்கின்ற வித்தைகளனைத்தையுங் காட்டக்கடவையென்றுவீ
ரவாகுதேவர்சொல்லி முடிவதன்முன்னம் தருமகோபன் வடவாமுகாக்
கினியைப்போலச்சீறி வெற்றிமாலையினிடத்தில் மொய்த்திருந்த வண்டி
னங்கள் றீங்காரத்தொனியைச்செய்து பறக்கத்துரிதமாய்தன்கரத்திலிரு
க்கின்ற பருத்தவில்லைப்புயவலிகொண்டு வளைத்துநாணேற்றி அயிராப
தம்கெற்சித்ததைப்போலத்திசையெங்குமதிரக் குணத்தொனிகாட்டித்தி
சைக்களிற்றின் பிடரியில்மந்திரித்தலைவனிருப்பதெப்படிக்கிருந்த தெ
னில்வெள்ளியங்கிரியினிடத்திற் சூழ்கொண்டமேகமானது இந்திர தனு
சைக்கொண்டு கவிந்ததையொப்பக்காட்டவும் மந்திரித்தலைவன்வீற்றிரு
ந்தயானையின்தோற்றமானது சோடசகலைகளையுடைய சந்திரன் திரோகத்
திற்பாதிராகுமுடியதைநிகர்த்தும்இவ்விதமாகவிளங்கியதறுவாயில் தரு
மகோபன்துரிதமாய்க்கணக்கிறந்தபாணகோடிகளைச்செலுத்தி வீரவாகு
தேவர் திரோகந்தோற்றாமல் மறைத்தான் அவைகள் வீரன்சரீரத்திற்றாக்
கியவுடன் முனையொடிந்தும் மழுங்கியும் முறிந்தும் துகள்பட்டும்தி

சைகளிற் பறந்ததை யிரவலருக்கு யிம்மியளவுங் கொடாமற் புதைத்து வைத்ததிரவியத்தை யிழந்து திகைக்கின்றவனைப்போலமருண்டுபார்த்து மானம்பாதிக்கமண்டியெரிந்துகூரியவேலாயுதமொன்றையெடுத்துவீர வாகுதேவர் கண்டத்துக்குக் குறிபார்த்து வீசியதருவாயில் அப்படைவீ திவருகின்ற உக்கிரத்தைக் கண்டவுடன் துரிதமாய்ச்சில கொடிய கணைக ளைப்பிறயோகித்தனர், அவைகள்வெளிப்பட்டவுடன் பிறசண்ட மாரு தமும் வடவையும் ஒன்றுபட்டுக்கிளம்பியதைப்போலத்தீயையிறைத்து சற்பங்களையொப்பச்சீறிமேவிட்டுவரும்வேற்படையைப் பொடிப்பொ டியாகக்கண்டித்து அத்துடன்போகாமல் வலிகொண்டுபாய்ந்து தரும கோபன்மார்பிலணிந்திருந்த வயிரக்கவசத்தைப் பேதித்துத் தடாரித்து ருவிப் புறப்பட்டுப்போயது, அக்காயத்தின்மூலமாய் உதிரம் பெருக் கெடுத்தோட மதிமயங்கிவருந்தி அசைவற்றிருந்ததைஅவனுக்கு வாகன மாகவிருந்தபுண்டரீகமென்னுந்திசைக்களிறானது தெரிந்தவுடன் றவுத் திராகாரமாகக்கோபித்துத் திசைகளதிரக்கெற்சித்துப்பாய்ந்துவயிரத்தி னையொத்த கூரியநான்குதந்தங்களினால் வீரவாகுதேவரேறியிருந்ததே ரைத்தாக்கியும்ரணக்களத்தில்விழுந்துகிடக்கின்றபருத்தஎழுவாயுதமொ ன்றைத்துதிக்கையிற்கொண்டு அண்டங்களதிரச் சக்கிராகாரமாகச்சுழற் றிமோதிதேரைநடத்தும்சாரதிதலையையுடைத்துப் புரவிகளையுஞ்சின்ன பின்னப்படச்சாடிவீறிட்டுலவுவதைவீரவாகுதேவர்தமது விழிகளிற்றீப் பொறிகள்சிதறப்பார்த்து வடவானலத்தைப்போலப்பொங்கிதேரைவிட் டுநிலத்திற்பாய்ந்து மேலேறிவந்த யானையின் துதிக்கையினை ஒருகரத்தி னாலசையவொட்டாமற் பற்றிமற்றகரத்தைபிடித்தமர்க்கிக்கொண்டுமதத் தைப்பெருக்கியிருக்கின்ற மத்தகத்தினிடத்திற் கோடையிடியைப்போ லத்தாக்கிப் பெருங்காற்றிற்பட்ட சருகைப்போலச்சுழற்றி மேலுலகத்தி ற்செல்லவீசினார், அத்துடன்போகின்ற தருமகோபன் திகைத்து பெரு காலமாய்ச்சகலசெயங்களையுங்கிடைக்கச்செய்திருந்தகளிற்றினையிழக்கு ங்காலம் நேர்ந்ததென்றுமனம்வருந்தி யானையுடன்திரும்பிவந்துபூமியி ல்விழுந்தவுடன்கிரீடம்துகள்பட்டுவாகுவலயங்கள்நறுங்கிதேகமும் தகசெயபரியத்தம் அதிர்ந்து களைபட்டிருந்தனன், புண்டரீகமும் சரீர முற்றுஞ்சிதைபடமரணமூற்சையாகக்கிடந்ததுஅத்தருவாயில்தருமகோ பன்சிலநேரத்தில் மூற்சைதெளிந்தெழுந்து தன் வாகனத்துக்குநேர்ந்த அபாயத்தைப்பார்த்திரங்கி நல்லகாரியம் இப்படிக்குச் செய்தஇந்தபாத கனைச்சும்மாய்விடமாட்டேன் பிராணனையுண்டுமனவருத்தமாறுவேனெ னக்கோபித்து மந்தரத்தையொத்த தண்டாயுதமொன்றையெடுத்து கிறு கிறெனச்சுழற்றி இதனால்நாசமடையக்கடவையெனவீசினன், அப்படை

வாளாதுவிதிமலிசள்கலிக்க யிளைந்துகொண்டுசமீபித்த மாத்திரத்தில்வீர
ன்சிறுதுரும்பைப்போலவொருகையினாற்றட்டிப்போட்டு சிங்கநாதஞ்செ
ய்தனர், யிந்தசெயத்தைப்பெரியமந்திரிகண்டுமானம்பாதிக்க றவுத்திரா
காரமாகக்கொதித்துதவமுன்னிலையிற்பெற்றிருக்கின்றவச்சிராயுதத்தைக்
கரத்திற்கொண்டுவீரவாகுதேவர்மார்புக்குநேராய்வீசினான்அதுவெளிப்ப
ட்டவுடன்மின்னிப்புகைந்தெரிந்து அதிகமகிமைகளைக்காட்டி யிளைந்து
மேலிட்டுவருவதைவீரன்கண்டுநகைத்துதமதுதிருக்கரத்தினாற்பற்றி வலி
கொண்டு பகைவன் மார்பில்மோதினர், அத்தாக்கலினாற் பெருங்காற்றி
லறையுண்டுவேருடன்சாய்ந்தவடவாலவிருட்சத்தைப்போலவோவென்னும்
யிரைச்சலுடன்நிலத்தில்விழுந்தபோதுவீரவாகுதேவர்உருத்துத்தமதுவ
லியகாலினாலுதைத்துருட்டியதறுவாயில் தலைபிளந்து உதிரங்களைக் கக்கிக்
கொண்டு சூரபதுமன்மனதுக்கினிய பிரதமமந்திரியாகிய தருமகோபன்
மாண்டனன், இச்சம்பவத்தைக்கண்ட ராட்சதர்கள் புலம்பிவாடி சற்று
தாழ்ப்போமாகில் மோசம்வருமென்னும் பயப்பிரந்தியினாற்பலதிசை
யினும்பறந்தொளித்தனர், அத்தறுவாயில்முனம்சோபித்துக்கிடந்தபுண்
டரீகமானதுகளைதெளிந்துகண்களைவிழித்துப்பார்த்து தருமகோபன்பட்
டதையறிந்துதானதுவரையில் அவன்காவலிற்பட்டுவருந்தியிருந்ததுக்க
சாகரத்துக்குக் கரைகண்டதைப்போலக்களித்தெழுந்துவீரவாகுதேவனை
நோக்கிப்பற்பல துதிகளைப்பேசிக்கொண்டு துரிதமாகச்சமீபத்திற்போ
ய்வணங்கிஎமதுசுத்தனே அடியேன்மீதுகோபங்கொள்ளவேண்டாம் கி
ருபையுற்று என்வரலாற்றைக் கேட்டருள்க, இதுபிசகா யிருக்கமாட்டா
துயிதனாற்றேவரீர்தீர்க்காயசாய்ச்சகலசவுக்கியங்களையும் செயப்பிரதாப
ங்களைப்பெற்று வாழ்ந்திருப்பீர் அதாவதுஎன்பெயர் புண்டரீகமெனச்
சொல்வர்பரமசிவகடாட்சத்தின்படிக்குஅஷ்டதிசைகளைத்தாங்கியிருக்கி
ன்ற அயிராபதமேமுதலியயானைகளில் நானுமொருவனாகும் இந்தபாத
கனாகிய தருமகோபன் பிறமுசனாய் எண்டிசைகளையும் செயங்கொள்ள
நினைந்து வெளிப்பட்டகாலத்தில் என்னைபலவத்காரமாகப்பிடித்துத் த
னக்குவாகனமாகவேறிச் சகல்நாடும் வென்று திரும்பித் தன்பட்டணஞ்
சேர்ந்ததினமுதல் கால்களில்விலங்குபூண்டு சிறைச்சாலையிலடைபட்டுப
லயுகங்களாக பெருமைகுன்றிமங்கிவாடியிருந்தேன் புத்தியீனனாகியம
ந்திரியிட்டபணிவிடைகளைச் சிரசிற்கொண்டு யிதுபரியந்தம் அப்பாதக
னுக்குவாகனமாகவும்சுமந்துவருந்தியயான் ஒருகருமத்திற் குழம்பேனு
கில்தட்சிணத்திற் பிராணனையுண்டு றத்தமாம்சங்களை என்வலியுடன்தின்
றுவிடுவதற் கையமில்லை யிதற்கஞ்சி யாதொருசெயலுமற்றுவாடி என்னு
ளவடங்கியிருந்தனன்முன்னொருகாலம்அஷ்டதிசையினும்வாசஞ்செ

யிருந்த அரக்கர்தன்னையிகழ்ந்தலொன்றுஅவர்கள்மீதுகோபித்துஎன்
னிடத்திற்சென்று அந்தவீரனைவரையும்அதப்படுத்தி செயப்பிரதாபத்
துடன்மீண்டனன் யிவன்புயவன்மைகளையும்வெற்றிப்பாட்டையும்ஒரு
விதமாகச்சொல்லி முடிவதோ இத்தகையமகாயாதகனை தேவரீரையன்றி
யில்ஒருவரால்சொல்லப்படுவதோ உலகங்களுக்காதாரசத்தியாகவிருக்கி
ன்றமேம்பாட்டினையுடைய தருமமென்பதைத் தலைகாட்டவொட்டாம
ல்நாசஞ்செய்துதிரிந்த கொடியரிற்கொடியனை அமுதத்தையொத்த தே
வரீரெழுந்தருளிவாட்டியதாற்றேவரனைவரும்இனிசுகசீவிகளாய் அல்லலற்
றிருப்பர் அடியேனுங்கடியதுயரத்தைக்கடந்துபிழைக்கலாயினேன். இ
தையன்றியில்நீரெனக்கென்ன சிறந்தஉதவிகளைச் செய்யப்போதீர் பஞ்
சேந்திரியச் சேட்டைகளையடக்கிச் சிறந்தமுத்தியைப் பெற்றமகத்துக்
களையொத்தானந்தவாரியில்முழுகிக்களித்தனன், முற்செனனத்திற்சிலபா
தகங்களைச்செய்திருந்தபடியால்யித்தினவரையில்ராட்சதர்பட்டணத்தில்
மறிபட்டிருந்தயான் முன்னமெத்தகைய தவங்களைச் செய்தனனோதெரி
யாது தேவரீரைநேரிற்றெரிசிக்கப்பெற்று காவலும்விண்டு கிருதார்த்தனா
னேன் ஓவீராதிவீரனேகட்டளையிடுவீராகிற் சிவபிரான் திருவுளங்கொ
ண்டு அடியேனுக்குக் கடாட்சித்திருக்கின்ற திசையைத்தாங்கி யிருக்கப்
போவேனென்று போற்றிநிற்கின்ற புண்டரீகத்தின் முறைகளைக்கேட்டு
வீரவாகுதேவர்தயைசெய்து உன்னிருப்பிடத்தைச்சேர்ந்து களித்திருப்
டையெனத் திருவாய்மலர்ந்ததறுவாயில் விடைபெற்று ராட்சதர்பயங்க
ளையொழிந்துபழையபடிக்குத் தன்தொழிலைச் செய்திருந்தது இச்செய
ங்களனைத்தினையுங்கண்ட பூதவீரர்கள்மிகுந்த சந்தோஷப் பெருக்கினால்
அண்டங்களதிரக்கொக்கரித்து வீரவாகுதேவர்வெற்றிப் பாடுகளைப்பல
விதமாகப்புகழ்ந்தனர், இச்சம்பவங்களனைத்தையும் திஷ்டாந்திரமாகத்
தெரிந்ததூதர்கள்மனவாட்டத்துடன் வாயுவேகத்தினும்மேலிட்டோடி
த்திருச்சபையைச் சேர்ந்து ராசாதிராசனாகியசூரபதுமனைத் தெரிசித்துத்
திருவடிகளிற்பணிந்து அகண்டமண்டலாதீஸ்பரனேகேட்டருள்க, தேவ
ரீர்பெரியமந்திரியாகிய தருமகோபன்சனக்கிறந்தசயின்னியங்களைக்கூ
ட்டிக்கொண்டுபோய் சத்திராதிகளைவளைத்துஅகோரயுத்தியங்களைச்செ
ய்துகடையிற்றாதனுற் பலசேனைகளையும் பறிகொடுத்துமாண்டனன், பு
ண்டரீகமும்படாதபாடுகளைப்பட்டு வீரனைப்போற்றித் தன்பதியைச்சே
ர்ந்தது இதுநிச்சயமாகியசேதியெனத் தூதர்விண்ணப்பஞ் செய்ததைக்
கேட்டவுடன் தன்மனதுக்கினைந்த மதியூகியாகியதருமகோபனையிழந்த
வருத்தமேலிட்டுவாட்டத் துக்கசாகரத்திலமுழ்ந்திக்கிலேசித்துயாதுந்தோ
ற்றுமற்சித்திரப்பாவையைப்போல அசைவற்றிருந்தனன்.

(௬௭)

சூரபுராணிகர், சவுனகாதிதவத்தருக்கு மற்றையசரித்திரங்களை
யுஞ்சொல்லுவார், இப்படிச்சூரபதுமன் நிசைத்திருக்கின்றதறுவாயி
லிரவுகழிந்துகீழ்த்திசையில்விளங்கும்உதையகிரியின்மீதிற்சூரியபகவா
ன்தோற்றியதெப்படிக்கிருந்ததெனிற் றன்னைமதியாமற் சிறைசெய்த
கள்ளனாகியபானுகோபன் இத்தினமிறக்கவிருக்கின்றதால் மனவெழுச்சி
யுடன் அதைக்கண்டுகளிக்கநினைந்து வெளிவந்தவனைப்போலத் தோற்ற
ஆயிரங்கிரணங்களைப்பரப்பி யிருளைவாட்டிஉலகங்களை விளக்கி ஒற்றை
வண்டில்பூண்டு ஏழுபச்சைக்குதிரைகளிழுக்கும் தேரினிடத்திற் றோற்றி
னர், அக்காலத்தில்வேதவொழுக்கங்களைக்கொன்ற பாதகனாகிய சூரபது
மன்றனக்கடுத்த புத்திரசோகத்தினாலும் பெரியமந்திரியும் வலிபெற்றி
ருந்தசேனைத்தலைவர்கள் மாண்டவிசனத்தினாலும் வாடியிருக்குங்காரண
ங் லாக்கொவ்வைக்கனியினுஞ்சிவந்துகாட்டும்விழிகளைப்படைத்திருக்கி
ன்றதூதர்களிற்சிலர்பாதலத் துரிதமாயோடிபானுகோபன்வாசமாயிரு
க்கின்ற அரமனையைச்சேர்ந்து ராசபுத்திரன் திருவடிகளிற்சேவித்துநே
த்தியதினம் தேவரீர்போர்க்களத்தைச்சேர்ந்து தூதன் முதலானவர்களை
மாயப்படையினால்வாட்டி கடலிற்சேர்த்துமீண்டபின்பு அதனைக்கண்ட
தேவர்கள் பறந்து பாலசுப்பிரமணியனுக்குத்தெரிவித்தமாத்திரத்திற்
றமதுசாலையிலிருந்தபடியே திருக்கரத்தில்விளங்கும் வெற்றிவேலாயுத
த்தைத்தூதன்முதலாகியவர்களைத் தருவிப்பதாகச் செலுத்தினன், அந்த
சிறந்தபடையானது வெளிப்பட்டவுடன் கோடிசூரியப் பிரகாசமாகச்
சொலித்து வானவழிச்சென்றுபோய் அறுகடல்களையுந்தாண்டிசுத்தோ
தகச்சமுத்திரத்தைச்சேரவருவதைக்கண்ட தமதுமாயப்படை நிறுவகிக்
கமாட்டாமற் புறந்தந்தழிந்தது உடனேபிரேதங்களாய்ப்பாதலத்திற்கிட
ந்தவீரவாகுமுதலானவர்கள்சீவந்தராய்மயக்கவாசனையைக்கடந்துகளித்
துவெளிவந்து வேலாயுதத்தைப்போற்றி சத்தசாகரங்களும் பெருகினா
ற்போலயிரைந்து கெக்கலிகொட்டிக்கொண்டு வானமூலமாய்யிவடம்வ
ந்துசேர்ந்தனர், வேலாயுதமுந்திரும்பி யெதாப்பிரகாரம் குமரன்கரத்
திற்சேர்ந்தது நமதுபட்டணத்துக்கருகில்வந்தபூதவீரர்கள்பிரசண்டமா
ருதத்தைப்போலவும் வடவாமுகாக்கினியைநிகர்த்தும் வீராவேசங்களு
டன்மேலிட்டு அவ்வாயலைக் காவல்கொண்டிருந்த படைத் தலைவனையும்
சேனைப்பெருக்கையும் பெருங்காற்றிற்பட்ட சருகைப்போலச்சாடி அ
ம்சப்படுத்தி கோபுரத்தையும்பெயர்த்துகடலிற்றள்ளிமதிலையும்உதைத்
திடித்துநிலத்திற்சேர்த்து பட்டணத்திற்பிரவேசித்து பிரசண்டமாருத
த்தைப்போல நவரத்தினமயமாகச்சொலித்துக் கொண் டிருந்தவீதிகள
னைத்தையும் அல்லோலகல்லோலப்படவாட்டுவதைசக்கிரவர்த்தி யறிந்து

தன்னருகில்நின்ற யாளிமுகனை அக்கினிமுகனை மூவாயிரவனை பெரியம
ந்திரியாகியதருமகோபனையும் அளவற்றநாற்படைகளுடன் மாறிமாறிச்
செலுத்தியதருவாயில்அவர்கள்வடவையைப்போலச்சீறிப்போய்க்கொடி
யபோரைச்செய்துஒருவரான்பினிற் சகலரும்மாண்டனர், இரணியன்மாத்
திரம் போருக்குஞ்சியோ மற்றெந்தகாரணத்தை நினைந்தோ தெரியாது
மீனமாய்கருங்கடலி லடங்கியிருக்கின்றனன், இவையனைத்தினையும் ரா
சாதிராசனறிந்து புத்திரசோபத்தி லழுந்தி சகிக்கப்படாமையால் வாடி
துக்கசாகரத்தில்முழுகிக் கரைகாணாமல் வருந்தி யாதுந்தோற்றாது பித்
தனைப்போலத்திகைத்து மதிமயங்கி யிருக்கின்றனர், இப்பட்டணத்திற்
பெரும்புறக்கடலைப்போல நிறைந்திருந்த சதுரங்கச்சேனைப்பெருக்க
னைத்தும் வறண்டதுஇன்னமும்சத்திராதிகள் யிவடம்விட்டுப்போனவர்
களுமல்ல ஆலகாலவிஷத்தினையொப்ப யெதிர்த்தவர்களனைவரையும்வாட்
டியுலவுகின்றனர், இவையனைத்தும்வுண்மையாகியசேதியென்றுவிண்ண
ப்பஞ்செய்த காரணங்களனைத்தினையும் மனவாட்டத்துடன் ராசபுத்திர
ன்கேட்டுநமது வெற்றியும்சூரமும் செல்வப்பெருக்கும் நசித்துப்போ
குங்காலமும் நேர்ந்ததோவென்றேங்கி கோபமும்மானமும் விசனமு
ம்மாறிமாறித் தோற்றப்பட்டு மனதைவாட்டியலைக்க யாதுந்தோற்றாத
வனாய் பித்தனைப்போலச்சடுதியிற் சிங்காதனத்தைவிட்டிறங்கி பொன்வ
ரைக்குச்சமதையாக விளங்குகின்றதனது மாளிகையைக்கடந்துபிதாவா
சமாயிருக்கின்ற நகரைச்சேர்ந்து கிலேசவாரியிற்பட்டலைகின்ற மனத்த
னாய்ச் சோர்ந்திருக்கின்ற தந்தையின்பாதங்களிற் பணிந்தெழுந்துகரங்
களைக்கூப்பிநின்று மனப்பூர்வசமாக அடியேன்சொல்லப்போறகாரண
ங்களைக்காதுகொடுத்துக்கேட்டு தீர்க்காலோசனைகளைச்செய்து மேல்நட
த்தவேண்டியகாரியங்களைக் கிரமமாகமுடிப்பீராகில் நன்மை யுண்டா
குமெனப்பேசத்துடங்கினன், பிதாமகளாகியமாயைபடைத்தளித்ததிவ்
வியபாணத்தின்முயற்சியினாற் றாதனுகியசத்துருக்களனைவரையும்மாய்த்
து சுத்தோதகச்சமுத்திரத்திற் கொண்டுபோய்ச்சேர்க்கச்செய்தேன் அச்
சேதியைத்தேவர்க்கள் மூலமாகத்தெரிந்த பாலசுப்பிரமணியதேவன்த
மதுகரத்தில்விளங்கும் வெற்றிவேலினாற் றருவித்தனர், இத்தகையபெரு
மையைப் படைத்திருக்கின்ற வீரனைசகனவிலும்வெல்வதரிதுயிதனைதிட
மாகநம்பவேண்டும் இதுவுமல்லாமல்போருக்கெத்தனித்த யிரண்டாவ
துதினம்தேவரீர்சுதாவிற் பலவெள்ளஞ்சதுரங்கச்சேனைகளையுங் கூட்டி
க்கொண்டுபோய்ரணக்களத்திற்பாலசுப்பிரமணியதேவருடனெதித்து
கொடியபோரைச்செய்து வலியும்படைகளின் சீருமிழந்துவருந்தி வறி
யனாய்த் தப்பித்துக்கொண்டிவடம்வந்தபடியால் இதுவரையி லுயிர்பெ

றிருக்கின்றீர், ஐயனேயிவைத்திருஷ்டாந்தரமாகக்கண்ட வுமக்குநான்வி
சேஷித்துச்சொல்லவும்வேண்டுமோ அப்போரில்பரமசிவமளித்த சிறந்
ததனுவைப் பறிகொடுத்ததுமன்றியில் வாமுயற்சிகளையிழந்து தோர்
வையுற்று மானாபிமானமில்லாமற் றிரும்பினை மேலுங் கிருபாநிதியாத
லாற் சுப்பிரமணியதேவர் வுன்னிடத்திற்கோபங்கொண்டவரல்லசற்று
மனத்திரிபுகொண்டாராகில் நாமல்ல மற்றஅண்டபுவனசராசரங்களுந்தா
பரித்து நிற்கப்பெறுவதோ பிரமனுடனுலகங்களனைத்தையுமுண்டுகெற்
பத்தில்லைவத்துக் காத்துமீட்டும் வெளியிட்டருளும் ரட்சகற்றனாகியம
காவிஷ்ணுசெலுத்திய சக்கரப்படையைக்கழுத்தணியாகத்தரித்த செயசா
லியாகிய சிறியதகப்பன்றாருகாசூரனையும் மாய்கைச்சரசலமான கிறவுஞ்ச
னையும் வெற்றிவேலினற் பிளந்துகொன்றவீராதிவீரனை வலியினல்வெல்
லவல்லவர்கள் யாவரிருக்கின்றனர், பலஹீனமாகவிருக்கின்ற சிறுமிருகங்
களையலைத்துத்திரிகின்றவர்களே அவ்வாறே நினைந்து புதையிற்படுத்திருக்
கின்ற வேங்கையைச்சூழ்ந்த அதற்கினையான சதையைப்போல அளவற்
றகாலமாய் தினராகியதேவர்க்கள் முதலானவர்களைவாட்டி செயப்பிரதா
பத்தைப்பெற்றிருந்த யாம்குமாரசுவாமியைப்பகைத்துப் பழமையாக
விருந்தவலிகுறைந்துமங்கும்காலம்நேர்ந்தது குவளைகுருக்கத்தி சடப்
பம்புஷ்பமாலையைத்தரித்துபரிமளித்திருந்தகலவைச்சாந்தங்களைப் பூசி
பொற்பாடகந் தண்டைகொஞ்சும் பாதாரவிந்தங்களையுடைய பாலசுப்
பிரமணியர்செயத்தைக் குறிக்கவேண்டுவதென்னை அவனுக்கிளவலாய்சே
னைத்தலைவனும் வீரபராக்கிரமத்தைப்பெற்றிருக்கின்ற வீரவாகுவென்ப
வனை நம்மையொத்தசூரர்களால் வெற்றிகொள்வதுமிகவும்அரிதாகவிரு
க்கின்றது யிதனைப்பலவிதங்களிற்றிஷ்டாந்திரமாகக் கண்டிருக்கின்றன
ம் ஆதலால், அளவற்றகாலம்கழிவதாயினும்கூடுமானகாரியத்திற்பின்னி
டையாமல் முயற்சிகொண்டுமுடிப்பது விவேகசாலிகளுக்கழகும் ஆண்
மையுமாம் தம்மால்முடிக்கவரிய ஒருகருமத்தைச்சரீரம்வருந்திமனப்பி
ரயாசைகொண்டு யெவ்விதத்திலாவது நிறைவேற்றலாமென நினைப்ப
துபுத்தியீனருக்கடுத்ததாகும் இதற்குத்திஷ்டாந்திரமாகப் புசபெலபரா
க்கிரமசாலிகளாகிய பலபிள்ளைகளைஅனியாயமாகப்பறிகொடுத்தனை. சூ
ரபதுமன் படைத்திருக்கின்ற சதுரங்கச்சேனை வெள்ளங்களுக்குக் கண
க்கில்லையென்று உலகினர் புகழவிருந்த பெருமைகளைப்போக்கி மாளக்
கொடுத்ததுமன்றியில் மதியூகிகளாகிய தருமகோபன்முதலிய மந்திரிபி
ரதானிகள் வீராதிவீரராகவிருந்த சேனைத்தலைவர்கள் மாமன் மைத்துன
ன்சேர்ந்தசுற்றத்தினர் சினேகிதர் முதலானவர்களையும் யிழந்துதேவரீரு
ம்நானுமாத்திரம்தப்பியிருக்கின்றனமாயினும்நமதுமரபை வேருடன்

ளையக்கூற்றுவன் காலங்கருதி பயமற்றுத் துடர்ந்துதிரிகின்றனன், இக்
காரணகாரியங்களை யெவ்வளவும்மதித்துப்பாராமல் வலிபெற்றிருக்கின்
றகல்லையொருவன் கடிக்கநினைப்பதைப்போல பற்பலவெற்றிகளைக் கா
ட்டியிருக்கின்ற செயசாலிகளை வெல்வதாய் யின்னமொருகை பார்ப்
போமென்கின்ற கவலையை உறுதியாகக்கொண்டிருக்கின்றனை ஐயனே ச
வுரியவான்களாய் புயவலிக்கொப்பற்றவீராதிவீரர்கள் சண்டைகொடுக்
கவந்தெதுத்தகாலத்தில் மனப்பூரிப்புடன் வீரசிங்கத்தைப்போலமேலி
ட்டதம்பண்ணவல்ல சூரத்தன்மையைப்பெற்றிருக்கின்ற அடியேன்சத்
திராகளுடன் பொருவதற்கஞ்சி யித்திறங்களைக் காட்டுகின்றனனென்று
எவ்வளவும்நினைக்கவேண்டாம் ஓராசாதிராசனேதேவரீரின்னஞ் சிலகால
ம் தீர்க்காயசாயிருந்து திரோசமும்மனமும்வருந்தி அரிதிற்றேடிய யிச்
செல்வப்பெருக்கினை அனுபவித்து அவுணர்மரபுநீடித்திருக்கவேண்டுமெ
ன்கின்றஆசைதூண்டதுணிந்து யிதுகளைவிரித்துக்காட்டினேன்மேலும்
பிதாவே இத்தருணத்துக்கடுத்த உறுதியொன்றையுஞ் சொல்லுவன்–கோ
பியாமற்கேட்டருளிநடப்பிப்பையாகில் தேவரீர்யிதுபரியந்தந்தேடியி
ருக்கின்ற கீர்த்திக்கும்செல்வத்துக்கும் விருத்துவம்நேராமல் நீடித்திரு
க்கும் அஃதென்னையெனில், நமக்கஞ்சிகாட்டிய பணிவிடைகளைச் செய்
து வாடியிருக்கின்றதீனராகியதேவர்க்கள்பல நாள்களாக அரியசிறையில
டைபட்டிருக்கின்ற காவலைப்போக்கித் தூரத்திவிடக்கடவீர் யிதைச்சர
வணபவன் கேழ்விப்படுவனாயில் நம்மிடத்திற்பகைத்துவந்தகோபந்த
ணிந்து யின்னமும்வேண்டிய வரப்பேறுகளையும் செல்வமுயற்சிகளையு
ங்கடாட்சித்து சகலசேனைகளுடனும்திரும்பி திருக்கயிலையைச் சேருவர்
பின்புவூழிவூழிகாலம் இச்செல்வச்சம்பத்துக்கழிவில்லாமல் அனுபவித்
துபழையபடியே வாழ்ந்திருப்பை அப்பனேஅடியேன் சொல்லியநீதி
களையிகழ்ந்துதள்ளி விடவேண்டாம் இதுகளைதிருவுளத்திற்கொண்டுதீர்
க்காலோசனைசெய்து மோசம்வாராமல் நடப்பிக்கக்கேட்டுக்கொள்ளுகி
றேனெனப்பற்பலவிதங்களில் விரித்துக்காட்டிய குமாரன் வாசகங்கள
னைத்தையும்கேட்டவுடன் தும்பைமாலைதரித்தகிரீடம்பொருந்தியமுடி
யையசைத்து தோட்களுந்தொப்பையுங்குலுங்கநகைத்து பெருமூச்செ
றிந்து அப்பா நீபேசியமந்திராலோசனை வெகுநேத்திரநேத்தி யென்றுயி
தனைச்சொல்லுவதாயினன், ஐயனேயென்னகாரியத்தை நினைந்து இவ்வி
தகாரணங்களை நமதுமுன்னந்துணிந்துகாட்டினை, நீகுறித்தபடிக்கு இ
க்காலத்தில் பலயீனனைப்போலச் சவுரியத்தைமறந்துபொன்னுலக வாசி
கள்வருந்திக்கிடக்கின்ற சிறையைநீக்கிவிட நினைப்பேனாகில் இனிமேற்
படராசாதிராசனென்றென்னையாவர்மதிப்பர்பேதமைப்பாலராகியமந்

லையரும் தம்மைச்சட்டைபண்ணுமலிகழ்ந்துபேசவரும் மேலும்பகை
வருக்கஞ்சி தன்வசப்பட்டிருந்தவனைவிட்டனனென்றும் வசைமொழி
உலகமுள்ளளவும் தீராமல்நிலைபெற்றிருக்கும் யிஃதன்றியும்- கூன்-கு
ருடு. ஊமை- அவையவங்களில் நேர்ந்திருக்கின்ற குறைபாடுகள் சரீரத்து
டன்போம் மானபங்கப்பட்டு பூர்வீகமாகப்பெற்றிருந்தகீர்த்தியும்வெ
ற்றியும்புயவன்மையும்மற்றசிறப்புகளையும்போக்கி உயிரினிடத்திச்சை
வைத்து இந்தபாழத்தஉடலைப்போற்றி உலகத்தின்கண் ணொருவனிருப்
பனாயில் அவன்பெறும் வசையானது எழு பிறவிகளினும் தீராமல் நிலை
பெற்றிருப்பதற்கையமுமுண்டோ குமாரனேமும்மூர்த்திகளி லொருவ
ராகவிருக்கின்ற -மகாவிஷ்ணு- பிர்மதேவனும்- மற்றதேவேந்திரன் அ
வுணவீரர் செயசாலிகளாகிய இராக்கதர் முதலாக நமதேவலைக்கடவாம
ற்போற்றிவா ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்ப் பெருகாலம்
வாழ்ந்தேன் திரிமூர்த்திகளிற் றலைமைபெற் றிருக்கின்ற பரமேஸ்பரனி
டத்தரிய வரப்பிரசாதங்களையும் வச்சிரத்தேகத்தையும் எத்தகையராலு
ஞ்செயிக்கப்படாத புயவன்மையையும் தீர்க்காயுசையும்பெற்றிருக்கின்
ற யான்அபலனாய் நமதுவம்சப்பகைவராகிய தேவர்க்கள் சிறையைவிடு
தலைசெய்வதழகோ ஆண்மைக்கடுப்பதோ இவையன்றியும் -பேரெழில்
இளமை-ஆற்றல்-பெறுதற்கரியசெல்வம்-வீரம்- ஆக்கை-பிறபலசாலிக
ளாகியசுற்றம்-யித்தகையபொருள்கள் நிலைபெற்றிருப்பதோ, சிறப்பா
கச்சொல்லநின்ற கீர்த்தியொன்றுமாத்திரம் சலனமற்று நீடுழிகாலம்ஸ்தா
பிதமாகவிளங்கும் இதைக்கருதிமேலிட்டுவந்திருக்கும்பகைவரைச்சட்
டைபண்ணுமலெதிர்த்து அகோரவுயித்தியங்களைச்செய்து வலிகுறைந் தி
றப்பேனாயினும் தேவர்க்கள்சிறையைவிடுவதுண்டோ மேலும் செயசா
லிகளாய் பேரறிவைப்பெற்றிருக்கின்றவர்கள் நடந்துகொள்ள வேண்டி
யநீதியாவது தமக்குநாசகாலம்நேரினும் அளவற்ற மனவருத்தங்கள் கி
டைக்குமாயினும் தாங்களருமையாகத்தேடியிருக்கின்ற பூஷணமாகிய
மானத்தையிழந்து பழிக்காளாவரோ இரண்டுநாளைய இவ்வுலகவாழ்வை
ப்பெரிதாகவெண்ணி சக்கிரேஸ்பரனாகவிருக்கின்ற நான்கொண்ட பிடி
பாதகத்தைவிடமாட்டேன் இதுவனாயிற்சென்றசென்றஇடங்களிற்சக
லவிதங்களிலும் செயப்பிறதாபங்களைக்கிடைத்து சூரனென்னும் நாமத்
தைப்பெற்றுவிளங்குகின்றயான் பலரும்நிந்திக்க இன்னமொரு ஊழி
காலம் உயிருடனிருப்பினும் அந்தியத்திலிறப்பதன்றியில்நீடித்திருக்கு
ந்திறமுண்டோஉலகங்களிற் செனித்திருக்கின்ற சீவராசிகள்சிவபிரான்க
ட்டளையின்படிக்கு நன்குதீங்குகளை அனுபவித்துமுற்றியபின்பு நசிப்
புறுதிச்சயமெனப்பேசுவது பொய்மையோ அப்படிக்கிருக்கமின்னலை

ப்போலவும் சகடக்காலையொத்தும் மாறிமாறித்தோற்றும்வாழ்வினை நி
ச்சயமாக நினைந்து தேவர்களுக்குப்பயந்து இந்தபிராணனைச்சுமந்திரு
க்கமாட்டேன் விஷ்ணுவாதியானவர்களை வென்று ஆயிரத்தெட்டண்டங்களினு
மென்னுடையாக்கினையைச் செலுத்தியொருவருமெதிரின்றி சக்கிரேஸ்
பரனாய் அரசுசெலுத்திவந்தேன் குமாரனேபாலனுக்கும் தூதனுக்கும்பூ
தங்களுக்குமஞ்சினைபோற்காணுகின்றது ஆதலாற்றுரிதமாய்உன்னரம
னையைச்சேர்ந்து சொஸ்தமாகச்சாப்பிட்டு சகலசெல்வங்களையும் அனு
பவித்துக்கொண்டு சப்பிறகூடமஞ்சத்திற்றேவியருடன்களித் துறங்கி
யிருக்கக்கடவை நித்தியமாகியவரத்தைப்பெற்றநானெக்காலத்தினுமழி
வதில்லை எதிரிகள்புசபெலபராக்கிரமங்களையும் பெருமிதங்களையும் எவ்
வளவும்மதித்து மனவருத்தப்படமாட்டேன் இச்செல்வத்தையுமொரு
பொருளாகமதியேன் மனதுக்கினியபிள்ளைகள் மந்திரி முதலானவர்களை
க்கொன்றசத்துருக்களை அதாஅதப்படுத்தி வெற்றிகொள்ள இதோபோ
ருக்குப்போவேனென்று அதிகோபத்துடன் சூரபதுமன் சொல்லக்
கேட்ட பானுகோபன்மனம்வருந்தி இனியிழைக்குந்திறமில்லையாதலாற்
பிதாவுக்குப் பலதிஷ்டாந்திரங்களைக்குறித்துக் காட்டியபோதினும் அத
னைஉண்மையாகக்கொண்டவனல்லன் விதிவலியைவென்றவர்கள் யாவரு
மில்லை பிறந்தவினைச் சம்பந்தங்களுக்கடுத்த காரியங்கள்முடியவிருக்கி
ன்றதென்று மனதில்நிச்சயித்து இதனைச்சொல்லுவான், அகண்டமண்ட
லாதீஸ்பரனாகிய பிதாவேதேவரீர்மகிமைகளைச்சிறிதுமறியுந் திறனில்லாது
நாயினேன்பேசியகுற்றமாகியவசனங்களைக்கொஞ்சமாவதுமனதிற்கொ
ள்ளாமற்பொறுத்தருளவேண்டும் அறிவுவிளங்காதபாலர் தீயவசனங்களை
யாடினும் புத்திரவாஞ்சையினாற் பிதாவானவன் மழலைச்சொற்களாகப்பா
வித்துவிரும்பிக்கேட்பதல்லது கோபிப்பனோ அவ்வாறேநினைந்து அடி
யேனிடத்திலெத்தகையகுற்றங்களிருப்பினும் க்ஷமித்தருளவேண்டும்
இந்தநிமிஷத்திற்போய் நமதுபதியை யலைத்திருக்கின்ற பூதப்படைகள்
தூதன்முதலானவர்களைக் கண்டதுண்டப்படச்சாடிக்கொன்று உமதுதி
ருவுளமகிழும்படிக்குச் செய்யக்கடவன்செலவுகொடுத்தனுப்பவேண்டு
மெனக்கொடியபாதகனாகிய சூரபதுமன் பாதாரவிந்தங்களில் வணங்கி
கரங்களைக்கூப்பிநின்றிரந்ததறுவாயிற் பதுமகோமளைகணவன் கோபத்
தணித்து மனவெழுச்சியுடன் குமாரனேஉன்மனம் சண்டைகொடுக்கப்
போகத்துணிந்ததோ நல்லகாரியம் இனிஎன் மனக்கவலை நீங்குங்காலம்
நேர்ந்ததுசத்திராதிகளனைவரையும் செயங்கொள்வதாகச் சதுரங்கச் சே
னைகளையும் கூட்டிக்கொண்டுபோகக்கடவையெனக் கட்டளையிட்டவுட
ன்செலவுபெற்று அளவற்ற துக்கசாகரத்திற்பட்டு மனவருத்தத் துடன்

தன்றிருமாளிகையிற்போய் ஆயுதச்சாலையிற் பிறவேசித்து தேவர்க்கள்த
ளுக்குக் கடாட்சித்திருந்த திவ்வியபாணங்களைச் சேகரித்து வேலையொ
த்தவிழிகளையுடையமங்கையர்கொங்கைகளழுந்தும் விசாலமாகிய மார்
பினிடத்தில் வயிரக்கவசத்தைப்பிகிந்து விரற்சோதைகளைமாட்டி மேரு
வையொத்த ஒப்பற்றவில்லைக்கரத்திற்கொண்டு திவ்வியபாணங்க ளடங்
கியிருக்கின்ற அம்புறாத்தூணிரத்தை முதுகிற்சேர்த்து வீரவாளாயுதத்
தைமடியிற்செருகிவீரபட்டத்தினைநெற்றியிற்கட்டி இவ்விதபோர்க்கோ
லத்தைத்தாங்கினவனாய் கடைவாயலினிடத்தில்வந்து பரிசனர் கொண்டு
வந்துநிறுத்திய சொர்ணமயமாக விளங்குந் தேரின்மீதில் மேருவினி
டத்திற்சூற்கொண்ட மேகம்படிந்திருப்பதைப்போலத்தாவியேறிமண்
டிபோட்டுளுக்காந்தான் இதற்குமுன்னம் தூதரோடி அறிக்கையிட்டப
டிக்குக் கணக்கிறந்ததேர்கள் மதயானைகள்தத்தித்தாவும்புரவிக்கூட்டங்
கள் சவுரியவான்களாகிய ராட்சதர்சற்வாயுதபாணிகளாய்தங்களிறைவனா
ச்சேர்ந்துவந்து பெரும்புறக்கடல்பெருகி வருவதைப்போல யினைந்து
வந்துகூடினர், அத்தருவாயில்-ரணபேரி-செயபேரி-வெற்றிச்சங்கமுத
லியபல்லியங்கள் திசைகளதிரமுழங்கவும் துவசங்கள்வானவழியைமறை
த்துச்சூரியனொளியை மாற்றவும்இவ்விதச்சேனைப்பெருக்கின் மத்தியில்
பானுகோபன்பிதாவினிடத்திருக்கும் அன்புந்துக்கமும் மனதைவருத்
தியலைக்கஅரிதிற்பட்டணத்தைக்கடந்துபகைவர்வடவையைப்போற்சீறி
யெதிர்பாத்திருக்கும் ரணக்களவெல்லையைச்சேர்ந்து மூவாயிரந் தம்பி
யர்மற்றமந்திரிகள் முதலானவர்கள்மாண்டு கிடப்பதைப்பாத்து மனம்
வருந்திக்கிலேசித்து அவர்கள் வீரபராக்கிரமங்களை நினைந்து நினைந்து
களைத்துவரும் மனதைத்தேற்றி பகைவர்மீது அதிகோபங் கொண்ட
வனாய் செயவுச்சாகங்களுடன் ஆர்ப்பரித்துநிற்கின்ற பூதப்படைகளையு
ம்படைத்தலைவரானவனையும் தும்சம்பண்ணித் தூதனையும் கெற்வமடக்
காமற்போவேனாகிற் பீதாம்பரத்தினைத்தரித்திருக்கின்ற நிதம்பத்தைப்
படைத்துமயக்கும்வேசியரிடத்திற் காமுற்று அவர்கள்பின்பற்றித்துட
ர்ந்துதிரியும்பதிதன்பெறுங்கதியிற் சேருவேனென்று கொடிய பிறிதிக்
கினையைச்செய்துநெருங்கிவருவதைப் பூதவீரர்கண்டு வருகின்றவன் அ
வுணர்பெருமான் மூத்தபிள்ளையாகவேண்டும் அல்லதுஇவ்விதவீறுப்பு
டன்ராட்சதப்பாதகர் வரமாட்டார்களெனப் பேசிக்கொண்டிருக்கின்ற
தருவாயிற் சூரன்சேனைகள் பிரசண்டமாருதத்தைப் போலக் கெக்கலி
கொட்டிக்கொண்டு பலவாத்தியங்களுங் கணகணென்றதிரத் தூளிபட
லமானதுபெருகித் திசைகளையும்கடல்களையும் நிறைத்துபொன்னாட்டை
யும்மண்ணுலகமாக்க மேலிட்டதைக்கண்டபூதர்கண்டைகிடைத்ததென்

கின்ற சந்தோஷித்தினாற் பர்வதாதிருதியாகிய புசங்களைத்தட்டிப் பாய்
ந்துபக்கங்களிலிருக்கின்ற பருத்தமலைகளைப் பறித்துபகைவர்மீது பந்
தையொப்பக்கடாவியும் தழைத்திருக்கின்றவிருட்சங்களைப்பிடுங்கிக்கிறு
கிறெனச்சுழற்றிச்சாடியும் - இருப்புலக்கை-வளைதடி - தண்டாயுதமாதிய ப
டைகளையொன்றனந்தமாகச்செலுத்தியும்சிங்கநாதங்களைச்செய்ததறுவா
யில்ராட்சதவீரரும் காட்டமலைப்போலக் கொதித்து எழுவாயுதம்-மழு
வாயுதம் பிண்டிபாலம் - கப்பணம் - முசலம் - சக்கரம் - சூலம் - [illegible]ணி
ச்சி தோமாமுதலிய ஆயுதவிதங்களை ஒன்றனந்தமாகப் பகைவர்மீதில்
வீசியும் நீண்டவிற்களைவளைத்து நாணேற்றி அமோகமாகிய கொடிய
பாணசமோகங்களைக் கார்காலமேகங்களுக்கு மேலாகச்சொரிந்தும்வா
ளாயுதங்களைக்கொண்டு வெட்டியும் ஈட்டிகளினாற்குற்றியும்இவ்விதங்க
ளாகயிருதிறத்துச்சேனைகளுங்கைகலந்து ஒருவரையொருவர் வெற்றிகொ
ள்ளவேண்டுமென்கின்றவீராவேசங்களுடன் போராடுவதைப்பார்க்குமி
டத்தில் காடாந்தகாரமாகிய யிருட்பெருக்கும் பிறகாசம்பொருந்திய ப
களும் பகைத்துப் போராடுவதைப்போலக் காட்டியது, இவ்விதமாகச்ச
ண்டைசெய்கின்றபோது பூதர்செலுத்திய மலைகள் மராமரங்கள்வீறி
யினாந்துவருவதை ராட்சதர்கண்டு றவுத்திராகாரமாகக்கோபித்துப்பல
கணைகளினாற்கண்டித்துத்தள்ளி மேலும் கணக்கிறந்த நாராசங்களையும்
ஆயுதங்களையும் கரவேகமாகச் செலுத்திய தறுவாயில் அவைகள் ஒன்று
டனொன்றாராய்ந்து தீப்பெருக்கிப் புகைகளைவீசி மேலிட்டுவரும்
போது பூதவீரர்கள் றவுத்திராகாரமாகக் கோபித்துச்சிறிபருத்தமலைகளை
யெறிந்து தூள்கண்டும் சுள்ளிகளைப்போலப் பற்றிமுறித்தும் துகளெ
ழப்பிசைந்தூதியும் கரங்களினாற் றட்டியும் மராமரங்களினாற்சாடியும்
இவ்விதமாகச் சிலநேரங்கி வாட்டுமுன்னிலையிற்செக்கர்வானத்தைப்போ
லவிளங்கும் சிகையையுடைய அவுணச்சேனைகள்கலங்கித்தலைகளற்றும்ம
ண்டைதுறந்தும் மார்புபிளந்தும்நெற்றிவெடித்தும்புயங்கள்சரிந்தும்
காங்கள்முறிந்தும் வீரகண்டைதரித்த கால்களொடிந்தும் ரணக்களமு
ற்றினும் பிணப்போருகளாக விழுந்ததறுவாயில் ராட்சதரும் பின்னி
டையாமற் சாடியதினால் பூதர்களும் சின்னபின்னப்பட்டு கண்டங்களற்
றும்விழிகள்பிதுங்கியும் மூளைகளிறைந்தும் வயறுபீறுண்டு சற்பங்க
ளைப்போலக் குடல்களிறைந்தும் மலைகளைப்பற்றிய காங்கள் சண்டிக்க
ப்பட்டுவிழவும் பருத்தகால்கள் முறிந்தும் இப்படிக்குப்பலர்மாண்ட
னர், பூதவீரர் மோதியதாக்கினால் பகைவரேறிவந்த தேரணிகள் உருளை
அச்சு மச்சு கூத்துக்கால் கொடிஞ்சிகள் வெவ்வேறாக நறுங்கியும் நீல
கிரிகளையொத்த காத்திர கோபத்தைப்பெற்ற மதயானைகள் துதிக்கைக

ளற்று மத்தகம்பிளந்து கோடுகளிற்றுயானைகளுருண்டுமாளவும் தத்தித்தா
விஅலைகளைப்போலப்பாயும் புரவிப்பத்திகள் பிடரிமயிரலையக் கழுத்த
ற்றும் கடிவாளம்பறந்தும் கல்லணை நுறுங்கியும் வெண்டையங்கள்சலி
க்கும்கால்களொடிந்து மங்கவும் இவ்விதமாக உபயசயின்னியங்களு
ங்களத்திற்பட்ட தறுவாயிற் பெருகிய உதிரப்பிறவாகமானது ததும்பி
யிரைந்து அலைகளைவீசிப்பாய்ந்து கருங்கடலைச் சென்னீராக்கிமேலிட்
டுபூமண்டலமெங்கணு மோடவும் நால்வகைச்சேனைகளும் பூதரும்பட்
டபிணங்கள் பருத்தமலைகளைப்போலக் களமெங்கணுங் குவியவும் ஒரிக
ளின் கூக்குரலும் நாய்களின் கொலைப்பிணொலியும் பெருக்குக்காட்டவு
ம் கழுகுபருந்து காக்கைகளின் பெருக்கம் மேலிட்டலைவவும் கணக்கிற
ந்தகவந்தங்கள் யெங்கணுங் கூத்தாடவும் இவ்விதமாகயிருபடைகளினு
ம்மாளுமுன்னிலையில்ராட்சதசயின்னியங்கள் வடவையைப்போலமண்
டியெரிந்து மேல்விழுந்து சாடுவதற்காற்றாமல் மிகவும்வருந்தி பூதப்ப
டைகளில் முன்னணிமுறிந்து வருவதைக்கண்ட புரவணியில் நின்றவீரர்
கள்வடவைக்கனலையொப்ப மண்டியெரிந்து பிரளயகாலத்திற் சாகரங்க
ள்பெருகி உலகங்களை வளைவதைப்போல ராட்சதப்பாதகரைச் சூழ்ந்து
க்கொண்டு யாரித்தபற்வதங்க ளளவற்றதைப் பறித்தெறிந்து சாடியும்
திசைகளைமூடியிருந்த விருட்சங்களை வேருடன் பிடுங்கிச் சக்கிராகார
மாகச்சுழற்றி தும்சப்படமோதியும் ஆயுதவிதங்களினாற்கண்டித்தும்தி
ருப்பாற்கடலைக்கலக்கிய மந்தரத்தைப்போல ராட்சதச்சேனாசமுத்திரத்
தைஅலைக்கின்றதறுவாயில் மிகுதியாகவிருந்திபருத்த தேரணிகள்நுறுங்
கியிறைந்தும்மும்மதங்களைப்பெருக்கி வீறிட்டுயிருப்புலக்கைகளைத்து
திக்கையிற்பற்றிபகைவரைவாட்டியுலவிய யானைக் கூட்டங்கள்கண்டது
ண்டப்பட்டுமாண்டுப் வானத்தினும் திசைகளினும் கடல்களினும் வாயு
வைப்போலப்பாய்ந் துலவிய புரவிப்பத்திகள் சின்னபின்னப்பட்டுச்சி
தையவும் றவுத்திராகாரமாகக் கோபித்து அஸ்திரசஸ்திரங்களைச் சோனை
ப்பெய்யலையொப்பப் பொழிந்துலவிய அவுணப்படைகள் அதப்பட்
டும்அரையுண்டும் பின்னப்பட்டு நாசமடையவும்- இவ்விதமாகத் தன்
சேனாசமுத்திரம் அல்லோல கல்லோலப்பட்டுமாண்டும்சிதறியுங் கலைந்
தும் மறைவதையும் பூதப்படைகள் அதிகசெருக்குடன் வீறிமேலிட்டு
ஆரவாரங்களைச்செய் துலவுவதையும் ரணரங்கசூரனாகிய பானுகோபன்
கண்டுநீடூழிகாலமாய் செயப்பிறதாபத்தைக் கிடைத்திருக்கின்ற அவுண
ணாக்குறியபாதங்களையுடைய அபலரான பூதர் யிப்படிக்குச் சாடும்கால
மும்நேர்ந்ததோ ஐஐயோ இதற்கென்செய்வே னென்றேங்கிமானமுங்
கோபமும் மனதைவாட்டியலைக்க றவுத்திராகாரமாகச்சீறிச் சொற்ணம

யமாய் ரத்தினகாந்திகளை வீசிக்கொண்டிருக்கும் பாரித்த தன்தேரைய
திவேகமாகத் தூரத்திலந்து "முன்னணியைச்சேர்ந்து மந்தரத்தையொ
த்தபருத்தவில்லைவளைத்து நாணேற்றி பிரசண்டவாயுவின் மோதலினுற்
சத்தசாகரங்களும்பெருகி குமுறுமாறுபோல டங்கார சத்தத்தைக்காட்
டிவிஷித்தொவைவயவிட்டிருக்கின்ற கொடிய பாணகோடிகளைச் சோனை
ப்பெய்யலைப்போல யெவ்விடங்களினுந்தூவிக் காலாந்தகனை யொப்
பச்சூரன்பிள்ளைசெய்துவரும்சேவகத்திறத்தைப்பூதப்படைகள்தெரிந்த
வுடன்வடவைக்கனலைப்போலப்பொங்கிக் கள்வன் வந்தான்வந்தானென்
றேசி சத்திராதிகள் மனந்திடுக்கிட்டு வாடத்தக்கதாகச் சிங்கநாதங்கள்அ
ட்டகாசங்களைச்செய்து நாலுதிக்கினும் வளைத்துக்கொண்டு பற்வதங்
கள்குன்றங்கள் விருட்சங்கள் தண்டாயுதம் வளைதடி யிருப்புலக்கைமு
தலியபடைகளை அமோகமாகத்தூண்டி பகைவன்செலுத்திய பாணவிரு
ங்களைத் துகள்படுத்தி மேலிட்டு வருவதைப் பானுகோபன் கண்டவுட
ன்கோபதீபிதனாய் விஷச்சுவாலையைவீசித் தகிக்கவல்ல கொடியசரவருஷ
ங்களைக்கரவேகமாகத்தூண்டி பகைவர் செலுத்தியவைக ளனைத்தையும்
கண்டதுண்டப்படவெட்டித்தள்ளி மேலுஞ்சணக்கிறந்த திவ்வியபாண
கோடிகளைப் பிறையோகித்ததறுவாயில் குறுகுறுத்த தொனிகளுடன் அ
னலையிறைத்துக் கடுகிவந்து புற்றினிடத்திற் சற்பங்கள் நுழையுமாறு
போலப் பூதர் சரீரங்களிற் றுக்கித் தடாரித்தருவிப் பாதிக்கும்போது
பலாரயங்களினால் வருந்தி மனச்செருக்கற்று வலிகுறைந்து ஆதியில்அ
கஸ்தியர் தண்டத்தினாற் றளைபட்ட கிறவுஞ்ச பற்வதத்தைப்போலத்தி
ரேகமெங்கனுஞ் சல்லடைக் கண்களாக மோதப்பட்டு உதிரம் பீறிட்
டோட நிற்பதைப்பார்க்குமிடத்திற் கன்னானுலையிற்சாயப்பட்டமூசை
யிலகப்பட் டுருகியிருந்த செம்பானது பலதிசையினும் ஓடுமாறுபோல
க்காட்டியது, இந்தசெயத்தை முன்னம் கலைந்தோடிய ராட்சதப்பாதக
ர்தெரிந்தமாத்திரத்தில் மனக்கவலையற்றுவீராவேசங்களுடன்பலதிசையி
னுமிருந்து ஆரவாரங்களைச் செய்துவந்து தமதிறைவனாகிய பானுகோ
பனைச்சூழ்ந்தவர்களாய்த் -தண்டாயுதம்- கணிச்சி-தோமரம்-பிண்டிபா
லம்-எறியீட்டி-சக்கரம் -வச்சிராயுதம்- சூலமுதலியபடைகளையும்கொ
டியபாணசமோகங்களையும் ஒன்றனந்தமாகப் பிறையோகித்து வாட்டு
ம்போது அக்கொடுமைக்கஞ்சி தாபரித்துநின்று போராட திறவாகம
ற்று சுப்பிரமணியதேவர் படைமுறிந்து பின்னிட்டதையும் பானுகோ
பன்சவுரியப்பெருக்கையும் ராட்சதப்படைகளின் செயவுச்சாகங்களையு
ம்வீரவாகுதேவர்கண்டு விழிகளிற் றீப்பொறிகள்சிதறச்சீறித் துரிதமாக
த்தமதுதேனா அந்தமுனையிற் றூரத்திவந்துநிறுத்தி தேவாதிதேவனாகி

யசிவகுமாரன் திருவடிகளைச் சிந்தித்துப்போற்றி மேருவையொத்தப
ருத்ததனுசைவணங்கி நாரியையிழுத்து ராட்சதப்பெருஞ்சானது திடுக்கி
ட்டுச்சோரும்படிக்குக் குணத்தொனிசெய்து மேல்விடுவதைச் சூரபதும
ன்சயின்னியங்கள் பார்த்தவுடன் காலாந்தகனைப்போலக்கொதித்துவிற்
கலைவட்டாகாரமாகவளைத்து விஷத்தையொத்த கொடிய பாணங்களைச்
சொரிந்தும் -பிண்டிபாலம்- முசலந் -தோமரம்- சக்கரம்- கவண்மு
தலிய படைகளை அமோகமாகப்யோக்கி அண்டங்களதிரக் கொக்கரித்த
னர், அக்காலத்தில் வீரவாகுதேவரும் மேகத்தையொத்த தமது வில்லிற்
சரவருஷங்களைப்பெய்து பகைவர்விடுத்த அஸ்திரசஸ்திர விதங்களை நடு
வழிபாதியிற் கண்டித்துமீட்டும் காட்டமலைநிகர்த்த சிலீமுகங்களையுங்
சங்கோபசங்கமாகத் தூண்டியசாலத்தில் அவைவெளிப்பட்டவுடன் தீ
யையும் புகையையும் பெருக்கி விஷச்சுவாலையைவீசி வேகமாயோடிரா
ட்சதப்படைகளின்மீது தாக்கியகாலத்திற் றலையற்றும் மார்பிற்றும் து
டைமுறிந்தும் மறித்தும் யிறைந்து தும்சப்படவும் தோணிகள் பலது
ண்டங்களாகப் பிளந்திறையவும் மதயானைக் கூட்டங்கள் சதைசதையா
க்கண்டிக்கப்பட்டுச் சாகவும் அலைகளைப்போலத்தாவும் வேகமுள்ள
புரவிப்பந்திகள் சின்னபின்னப்படபங்கியும் அத்தாறுயிற்பெருகியஉதி
ரப்பிரவாகத்தை பேசவும் மனம்நடுங்குகின்றது இப்படிக்கு வீரன்சி
லரேங்கிவாட்டும்போது மாண்டவர்க ளன்றியில் மற்றராட்சதர் திகை
த்துமருண்டு பயபீதியினால் மானமழிந்து திசைகெட்டோடினர்,இவ்வி
தமாகத் தன்சேனைகள் சிந்தியதைப்பார்த்து பானுகோபன் மனம்வருந்
திபாகனைக்குறித்து இந்தநிமிஷத்தில்நமதுதேரைப்பகைவனெதிரிற்கொ
ண்டுபோவையெனச் சொல்லிமுடிவதன் முன்னம் தூரத்திவந்துசேர்த்து
ஆர்ப்பரித்தபோது குதிரைகளுங் கனைத்துத் தாவிநின்றது, இதைக்கண்
டவீரன்சாரதியைத்தேனா எச்சரிக்கையாய்க் குறிப்பின்வண்ணம் தூண்
டக்கடவையெனக் கட்டளையிட்டுக் கொக்கரித்த தறுவாற் குதிரைகள் அ
னுமானித்து விழியிருந்தது, அப்போது சூரியகாதகன் தன்வில்லினாரி
யையிறக்கி யிடக்கரத்திற்கொண்டு வலக்கரத்தில் திவ்வியபாணங்களைப்
பற்றினவனாய் குமாரதேவர் சகோதரனைத் தீயெழ வுருத்துப்பார்த்து
அடாதூதனே சமுத்திரத்தைப்போல யிரைந்து சூழ்ந்திருந்த நமதுச
துரங்கச்சேனைகளையும் முன்பின்பாராமற் கொன்றனை இனி நீ பிழைத்
துப்போவதரிது உன்பிராணனை பதைபதைக்கவாட்டி எமலோகத்துக்கி
ந்தநிமிஷத்திற் சேர்ப்பேன் பதலமாயிருந்து சண்டை கொடுப்பையெ
னக்குறித்தவசனத்தை வீரவாகுதேவர்கேட்டு நகைத்து அடாபதிதனேவ
ன்வீண்வார்த்தையாடுவையிறப்பவனாயும்போருக்கஞ்சிப்புறந்தந்தோடு

பவனையும் உன்னையொத்தவன் இக்களத்திற்படப்போற சின்னங்களையு
ம்வானத்திலநின்று பார்த்திருக்கின்ற தேவர்க்கள்கணித்துப் புகழவிருக்
கின்றனர் ஆதலாற்றுரிதமாக வுன்னாற்கூடிய சண்டையைச்செய்யக்கட
வையெனச்சொல்லியவார்த்தை நாராசங்களைப்போலச் செவிகளிற்பட்ட
மாத்திரத்தில் வடவையைப்போலச்சீறித் தன்வில்லில் ஆயிரங் கூரியசர
ங்களைச்சந்திக்து வீரவாகுதேவர் மார்புக் கிலக்காகத்தூண்டிக்கொக்கரி
த்ததறுவாயில் அவைவெளிப்பட்டபோது விஷச்சுவாலையைக்கக்கிக் கா
ற்றினுங்கடுகிச்சென்றுவிசாலமாகிய மார்பிற்றைத்துத் தடாரித்துருவிமு
துகின்மூலமாயோடியது அக்காயத்தில் உதிரம்பீரிட்டோடவருந்தி நல்
லகாரியமெனத் திருமுடியையசைத்துக் காளகூடத்தைப்போலக்கொ
தித்துதேவர்கள் புகழத்தக்கதாகக் கெற்சித்து கனன்றிருக்கின்ற தீட்ச
ண்ணியமுள்ள கொடியபாணவிரங்களைத் தேடியெடுத்து ஆயிரவற்றைத
னுசிற்பூட்டி பற்வதாகிறுதியாசப் பருத்து வலிபெற்றிருக்கின்ற பானு
கோபன்புயங்களுக்குக் குறிகொண்டு காவேகமாசப் போக்கிச் சிங்க
நாதஞ்செய்த்ததறுவாயில் அப்படைகள் அதிக மகிமைகளைக் காட்டிச்சீறி
வேகங்கொண்டுபோய்ச் சல்லடைக்கண்களாகத் துளைத்துருவி யோடிய
போது உதிரமானது பெருக்கெடுத்தோட வாட்டும் உபத்திரவத்துக்கு
ச்சற்றும் வருந்தாமல் தீரனாய்ப்பொங்கி தட்சிணத்திற்கூர்மையுள்ள நூ
று அர்த்தச்சந்திரபாணங்களைப்போக்கி வீரவாகுதேவர் காத்திற் பிடிபட்
டிருந்த வலியவில்லைப் படாலுமென இருகூறாகச்சண்டித்துத்தள்ளினன்
இந்தஅபசெயத்தைத் தெரிந்த தேவர்கள் உச்சாகமடங்கிமிகவும் வருந்
தினர் அக்காலத்தில் வீரன் திடசித்தனாய்க் கூரிய வேற்படையொன்றை
யெடுத்துவலிகொண்டு பாதகன்நெற்றியினிடத்தில்வீசியதறுவாயில்விஷ
ச்சுவாலையை வீசிக்கொண்டு பாய்ந்து திலதப்பொட்டிட் டிருப்பதைப்
போலத்தடாரித்துருவி செக்கர்வானம் நிலத்திலிறங்கியதுக்குச் சமதை
யாகஉதிரம்பெருகிப்பாவஅப்பாதகன் சணப்போதுமதிமயங்கியாதொ
ருசெய்கையுமற்று நின்றனன், அத்தறுவாயில்வீரவாகுதேவர்வேறொருவி
ல்லையெடுத்துவளைத்து நாணேற்றித் துரிதமாய் வாயுவாஸ்திரத்தையெடு
த்துச்சந்தித்து மந்திரபூர்வகமாக வழிபட்டுச்செலுத்தியதறுவாயிற் பா
னுகோபன் கோபந்தெளிந்து வருகின்றபடையின் பெருமிதங்களைமதி
த்துத்தட்சிணத்திற்றானும் வாயுப்படையைப்போக்கி மறித்தனன், உட
னேவீரன்சீறி அக்கினியாஸ்திரத்தைப் போற்றிவிட்ட காலத்தில் வானத்
தெழுந்துபக்குபக்குமென்றெரிந்துகொடியசுவாலையைவீசிவரும்போ
துபானுகோபனும் தன்னிடத்திலிருக்கின்ற அந்த தேவபாணத்தைப்பி
றையோகித்துத் தடுத்ததறுவாயில் அதுகளிரண்டும் சற்றுநேரம்போரா

டித்திரும்பிவிட்டது உடனே பானுகோபன்தெரிந்து சூரியாஸ்திரத்தை
ப்பூசித்து சத்திராதிபிராணனையுண்டு வருகவெனக் கடாவினன், அதன்வு
க்கிறத்தையும் வேகத்தையும் வீரவாகுதேவர்கண்டு துரிதமாய் அந்தபா
ணத்தைக்கொண்டு தடுத்தனர். அப்போது பானுகோபன் வடவையைப்
போலச்சீறி பிரமசிரோருசப் படையையெடுத்து விதிப்படிக்கு மந்திர
பூர்வகமாகச் செலுத்தியபோது பற்பல திவ்விய பாணங்களைப் படைத்
துதியையிறைத்து வானமெங்கனும் நிறைந்து குமுறிக்கொண்டு வருவ
தைவீரர்பார்த்து அந்ததேவப்படையைச் செலுத்தியபோது யிரண்டு
மொன்றுடனொன்று சீறிக்கொடியபோரைச் செய்துமீண்டது அத்தறு
வாயில் ராசகுமாரனுக்கு அதிககோபம்பிறவேசித்து இதினால்நாசமடை
யக்கடவையென்று நாராயணாஸ்திரத்தைத்தொட்டு வழிபாடுகளை திரப்பி
ப்போக்கியபோது அதிகமகிமைகளைக்காட்டி தீயையிறைத்து மின்னி
யிடித்து வடவையைப்போலச்சீறி மேலிட்டுவருவதைச் சிவகுமாரன்பார்
த்துதுரிதமாய் கேசவன்படையையெடுத்துப் பூசித்துப்போக்கினர், அ
வ்விரண்டும்செய்த போரின்பெருக்கை இன்னவிதமெனச்சொல்லிமுடி
யாதுகடையில மின்னலைப்போலமறைந்துபோயது அதனைக் கண்டபா
னுகோபன்மனம்வருந்தி யாதுந்தோற்றாமல்யிதனை நினைப்பதாயினான்
நானருமையாகத்தேடிவைத்திருந்த தேவப்படைகளைவிட விடச்சற்றும
ஞ்சாயல் மாறேவித்தடுத்துவிட்டனன், இனியென் செய்வேன் ஆதிதே
வனாகிய பரமன்படைஒன்றுமாத்திரமிருக்கின்றது அந்ததெய்விகபாண
த்தைப் பகைவனும் பெற்றுவைத்திருக்கின்றனன், இத்தருணத்திற்பாசு
பதத்தைச்செலுத்துவேனாகிற் பகைவனும் அப்படையைத் தாண்டுவன்
இதனால்உலகங்கள்வருந்தி யலைவதன்றியிற் பலப்பிருப்பதிலையக்காண
வில்லை, ஆதலால் இனிமாய்கைப்பெருக்கினால்இந்தவீரனைபிறிமிக்கச்செ
ய்துவெற்றிபெறவேண்டுமல்லது மற்றொரு தந்திரமுங் கண்டிலனென
த்தீர்மானித்தவனாய் சுக்கிராசிரியன் தனக்குப் போதித்திருந்த செகன்
மோகனமென்னும் மந்திரத்தைத்துரிதமாகச்செபித்து அதன்முயற்சியி
னால்தேருடன்மறைந்து யாவருக்குந்தோற்றாமற் சக்கிராகாரமாக நாலு
மூலைகளினுமுலவி கணக்கிறந்தகொடிய பாணவகைகளை ஒன்றின் பின்
னொன்றாகச் செலுத்தத்தொடங்கினன், அவைகள் கோடைகாலத்து மழை
த்திவலைகளைப்போல வீரவாகுதேவர்மீது பாய்ந்து மயிற்கால்கடோறு
ம்பாய்ந்துருவி உதிரத்தைப்பெருக்கி வாட்டுவதைதேவர்க்கள்கண்டுவீர
ன்படுந்துன்பத்துக்கிரங்கி பாதகன்செய்கின்ற வஞ்சகப்போருக் கஞ்சி
நாமிவடத்திலிருப்போமாகில் நம்மையுமென்செய்வனோவென்னும்பய
ப்பீதியினால் அத்தலத்தினைக்கடந்து மேலுலகங்களி லோடிப்பதுங்கிப்

பார்த்திருந்தனர், பூதப்படைகளும் கைகாலாடப் படாமல் சிக்குப்பட்டுபாதகன் தூவுகின்றவாளிகளினாற் கண்டதுண்டமாக வெட்டுண்டும் மாண்டும்சோர்ந்தும் பலதிசையினுமிறைந்தும் இவ்விதமாக ரணக்களத்திலொருவருந் தோற்றாமல்மறையவும் இலக்கர்எண்மர்படைத்தலைவர் பலகாயங்களைப்பட்டு வருந்தித்திகைத்து படாதபாடுகளைப்பட்டு நிற்கின்றதருவாயில் வீரவாகுதேவருங் கதிககோபம்பிறவேசித்துங் கொடியதுற்மாற்கனாகிய பானுகோபன் முன்னமுமிவ்வாறே மாய்கையினாற் றப்பித்துக்கொண்டோடிப்போயினன், இக்காலத்திலும்அவ்வாறேயெண்ணிநம்மவரைமிகவும் வருத்துகின்றனன் இனியிவனைவைக்கலாகாது துரிதமாய்க்கொன்று செயப்பிறதாபத்துடன்பாலசுப்பிறமணியதேவர்பாதாரவிந்தங்களைச் சேவிக்கப்போவேனெனத் தீர்மானித்தவராய் பாதகன்மாய்கையின்பெருக்கை வாட்டக்கருதிஞானப்படையையெடுத்துபத்திபூர்விகமாக வழிபாடுகளைநிரப்பி வில்லிற்பூட்டிப் பிறையோகித்ததருவாயில் யிருளைவாட்டும் பகலைவிளக்கும்சூரியனைப்போல சொலித்துச்சீறிப்பாய்ந்து ராசகுமாரன்செய்திருக்கின்ற மந்திரமுயற்சிகளனைத்தினையும்அதப்படுத்திவீறியதருவாயில் சூரியனெதிரிற்பட்டபனிப்படலத்தைப்போல பகைவன்வஞ்சகங்களனைத்தும்பறந்து பழையபடிக்குவெள்ளிடையாகத் தோற்றியகாலத்திற் பானுகோபன்ரதாரூடனாய்வானத்திற் சாட்டியபோது தான்செய்தமாயையழிந்ததையும்வீரவாகுதேவர்சாமர்த்தியங்களையும்பார்த்துமனம்நொந்து வருந்துவதைத் தேவர்க்களறிந்துமனவுச்சாகங்களுடன்வீரன் தந்திரங்களைக்கொண்டாடிப் புகழ்ந்திருந்தனர், அத்தருவாயில்வீரவாகுதேவர்வானத்தில்நிற்கின்றராசகுமாரனைஉருத்துப்பார்த்து கள்வனே இனியெந்தமூல்மாகத் தப்பிப்போவை இதோ உன்னரியபிராணனைவாங்கிவீரசொற்கத்திற்சேர்ப்பேனென்றுசீறிச்சாரதியையெச்சரித்தகாலத்திற் குதிரைகளையதட்டிவிண்ணிடத்திற்பகைவன்முன்னந்தேரைக்கொண்டுபோய்நிறுத்தினன், அக்காலத்தில் வில்லையிறுக்கிச்சங்கோபசங்கமாகச் சரவருஷங்களைப் பகைவன்மீதிற் சொரிகின்றதருவாயிற் பானுகோபனுந்தீரனாய்த்தன்காண்டபத்திற்கணக்கிறந்த கொடியபாணங்களைசந்தித்துப் பொருகின்றதருவாயில்இவ்விருவீரரும்செலுத்துகின்ற பாணகோடிகளின்கொடுமைகளுக்காற்றாமற்றேவர் முதலானவர்கள்திகைத்துமிகவும்வாடிப்பதுங்கினர், இவ்விதமாகவருணனும்அக்கினிதேவனும் பகைத்துப்பொருவதைப்போலயிருதிறவரும்போராடிவருகின்றகாலத்தில் அவர்களேறியிருந்ததேர்கள்நொடிப்போதில் ஆயிரநூறுகோடிவிசைசக்கிறாகாரமாக வட்டணையாய்யிடசாரிவலசாரி வலசாரியிடசாரியாகத்திரிந்தும் அவ்விருவோரும்தாண்டுகின்றசாமனைழகள்பெ

ருத்து அண்டப்பித்திகைவரையில் நிறைந்து சூரியசந்திரர்கெதிகளைமறைத்
து எவ்வுலகங்களிலிருப்பவர்களுக்கும் மிகுந்த துன்பத்தைச்செய்தும் ர
ணக்களத்திலொழிந்திருந்த தோணிகளைப்பொடிபடவாட்டியும்யானை
ப்பந்திகளைக் கண்ட துண்டப்படவெட்டிக்குவித்தும் குதிரைப் பெரு
க்கைச்சிதைத்துச்சிடத்தியும் ராட்சதவீரரைமடக்கிக்கொண்டு சின்னபின்
னப்படக்கண்டித்துக்குவித்தும் பூதவெள்ளத்தையலைத்துச் சிரம் கரம்
உரம் பதமுதலிய உறுப்புகளைவெவ்வேறாகவெட்டியெறிந்தும் இப்பா
டுகளை செய்யும்போது அவர்கள்தேர்களோடும் வேகத்தினுல் முட்டியு
ம்வானவெல்லையெங்கனும் பவனிவந்தும்சொற்கரத் தொனிகளைச் செய்
தோடும் வண்டில்கள்யிடிகளையொப்பத்தாக்கியும் யிடம்வலமாகச் சாரி
வந்தும் விண்ணவர்திகைத்துமதிக்கும்படிக்கு க்ஷணப்போதில் அஷ்ட
திசைகளிலும் பாய்ந்துமீண்டும்இப்படிக்குலவுகின்றதறுவாயில்நெருங்
கியபோது ஒருவனோருவர்சீறிப்பார்த்துநீயெவ்வளவுஉன்சாமார்த்தியமெ
வ்வளவு உன்னைநொடிப்போதில் வாட்டிநிலத்திற்றள்ளுவேனென்று வீ
ரங்களைப்பேசியும் இகழ்ந்தும் வடவாமுகாக்கினியும் ஆலகாலவிஷமு
ம் சீறியதைப்போலக் கோபித்தும் கொடியசபதங்களைப் பேசியும் விற்
சாதுரியத்தையும் காவேசாவேசத்தையும்சாகசங்களையும் நிதானித்துப்
புகழ்ந்தும் விடநாகங்களைப்போலச்சீறியும் அண்டங்களதிர நகைத்து
ம்கெற்சித்தும் சிங்கநாதங்களைச்செய்தும் பர்வதாகிருதியாகப் பருத்தி
ருக்கும் புயங்களைத்தட்டியும் மீசைகளைமுறிக்கியும் இச்சண்டைவெகு
நேர்த்தியாகவிருக்கின்றதென்று களித்தும் அடிக்கடி செயத்தைக் குறித்
துவெற்றிச்சங்கங்களைபொம்பொம்மென்றூதியும் யிடையிடையிற்சர
மாரிகளைத்தூவியும் அவற்றாள் நுழைந்துவெளிவந்துபோராடுகின்ற கால
ங்களிற்புரவிகள் அலைகளைப்போலப்பாய்ந்து ஒன்றையொன்று தீயெழ
வுருத்துச்சீறிப்பார்த்தும்செவிடுபடக்கனைத்தும்சிரங்களில்மிகித்தும்கடி
த்தும் கால்களினுலெற்றியும் வாதாடவும்சாரதிகள் சவுக்குகளைபடாலுப
டாலுமெனத்தாக்கி ஒருவனையொருவர்வைய்துபேசி அதட்டித்தேர்களை
ரதிகன்குறிப்பின்வண்ணந்தூண்டிக்கொக்கரித்துவரவும் இவ்விதங்களா
கச்சிவகுமாரனும் அவுணர்பெருமான்மனதுக்கினிய புத்திரனும் எவ்வி
டங்களினுந்தாமாகவுலவிக்காவேகமாகச்சொரிகின்றபாணகோடிகளடர்
ந்துவிண்மண் திசைகள்தீபாந்திரங்கள் முதலியதலங்களெங்கனும் நெ
ருங்கிப் பிராணிகளை வருத்தியும் அவைகளோடும் வேகத்தினுலாயுண்
டுஆயிரங்கிரணங்களும்மழுங்கிச் சூரியன்தன்வெப்பகாந்திக ளடங்கிக்
குளிர்ந்தசந்திரனைப்போலக் காட்டவும் சந்திரனும் சோடச கலைகளுந்
தேய்பட்டுவெட்டாகாரமாகத்தோற்றவும் அவ்விருவீரர்விற்களில்நின்றும்

புறப்படுகின்ற தேவாஸ்திரங்களின் கொடுமையும் வேகமும் உக்கிரமும் எப்படிக்குக்காட்டுவதெனில், வாயுவுருத்ததைப்போலவும் சூரியவன் உலகங்களின்மீதுபகைத்தெழுவதுக்கொப்பாகவும் பிரளயத்தீயானது வீதியெழுமாறுபோலவும் ஆலகாலவிழமும்வடவாமுகாக்கினியும் சீறியதன்மையாகவும் கொடியயிடிகள்பெருத் ததிர்வதை நிகர்த்தும் திரிபுராதிகளைத்தகிக்கவெழுந்தபாணமும் நீநகையையும் போன்றும் கிரவுஞ்சபர்வதத்தையும் தாருகனையும்பிளந்துதள்ளிய வெற்றிவேலாயுதத்தையொப்பவும் பலகொடுமைகளைக்காட்டவிளங்கியும் பாயும்வேகத்தினுற் பர்வதங்களிற்றடாரித்துரிவியும்மேகங்களிற்குக்கிநீர்ப்பசுமையைக்கிழித்துசுருக்கிச்சென்றும் அண்டப்பித்திகையைப் பிளந்தப்புறத்திற் சேர்ந்தும் பெருவெளியினிடமெங்கனுமுலவியும்சத்தசாகரங்களில்நிறைந்துநீர்ப்பெருக்கைச்சுவற்றி அலைகளையடக்கியும் திசைகளைக்கடந்துபெரும்புறக்கடலையலைத்தும் சக்கிறவாளகிரியி னிடத்துத் தாவியும் யிருட்பூமியைத்தீயினுல்விளக்கியும் அண்டவாயல்களி னுடைழந்து மேலுலகங்களிலோடியும் பிலத்துவாரங்களிற்புகுந்து பாதலவெல்லையெங்கனு முலவியும் இவ்விதமாகப் பாய்கின்றதிவ்வியபாணங்களின்வெப்பத்தினுல் மேகங்கள் நீர்ப்பசுமையற்று பஞ்சைப்போலவெரிந்தும் அஷ்ட திசைகளைத்தாங்கிநின்ற கரிகள்கரிகளாகமங்கியும் பூமியடபடெனவெடித்துப் பாதலந்தோன்றவுங் கடல்களவற்றி நிலமாயமணற்குட்டினுல் மகரமச்சங்கள்முதலிய சலசரங்கள் புழுகுகளைப்போலப்பதைபதைத்துப் புரண்டுவாடவும்நட்சத்திரங்கள் பொரிபட்டிறையவும் உலகங்களனைத்தும் கரிந்தும்புகைந்தும்எரிந்தும் சுருண்டும் படாதபாடுகளைப் படவும் இவ்விதங்களாகவீரவாகுதேவர்விட்டவிட்ட பாணங்களைப்பானுகோபன் அவற்றிற்கிரட்டி சரங்களைக்கொண்டுதடுக்கவும் பகைவன் பிறையோகித்த சிலீமுகப்பெருக்கைவீரன் பாணகோடிகளினுல்வாட்டவும் இப்படிக்கு வீராதிவீரராகிய அவ்விருவரும் கொடியசித்திரப்போரைச் செய்துவருகின்றதறுவாயிற் பூமண்டலவெல்லையில் வாசஞ்செய்பவரும் விண்ணகத்திற்சஞ்சரிப்பவரும் இவ்விருதிறவர்செய்கைகளைப்பார்த்து அற்புதராய் இந்தசூரனைப்போலச்சண்டைகொடுத்தவனை இதற்குமுன்னம் யாவனையுங்கண்டிலம் கேட்டதுமிராது இக்காலத்தினுந்தெரிந்ததில்லை இனிபிற்காலத்திலுங்கிடைக்கமாட்டாது புசபெலபராக்கிரம சாலிகளாகிய இவர்கள்சவுரியத்துக்கிணை யெடுத்துக்காட்ட யாவருமில்லையெனக் கொண்டாடினர், அத்தறுவாயிற்பானுகோபன்மைமிஞ்சிநாறுயிரங்கொடியபாணங்களைச்செலுத்திபாலசுப்பிறமணியதேவர் தூதன்கரத்திற்பிடிபட்டிருந்ததனுசைக்கண்டதுண்டமாகவெட்டிபெறிந்து அண்ட ரண்டபுவன

ஙாளும் நடுநடுங்கஆர்ப்பரித்ததறுவாயில்புசபெலபராக்கிரமசாலியாகிய
வீரவாகுதேவர்ரவுத்திராகாரமாகக்கோபித்துவேறொருவில்லையெடுத்து
வட்டாகாரமாகவளைத்து விஷத்தொலைவயலிட்டுக் கூர்மையாயிரா நின்ற
ஆயிரந்திவ்வியபாணங்களைப் பிறையோகித்து ராசகுமாரனேறியிருந்த
ரதத்தைச்சக்கைச்சக்கையாகப்பேத்தெறிந்துசிங்கநாதஞ்செய்தனர், அத
னால்வடவைமையைப்போற்சீறி அந்தரத்தில்நின் றவனுய்யிருபத்தைந்து கா
ளகூடத்தையொத்த சரங்களைத்தூண்டி பற்வதாகிருதியாகப் பரந்திருக்
கும்வீரவாகுதேவர் மார்பைத்துளைத்துத் தோளைத்தட்டிக் கொக்கரித்த
னன், அக்காலத்தில்மிகவும்வருந்தி மனம்புழுங்கக்காலாந்தகனைப்போ
லச்சீறி விழிகளிற்றீப்பொறிகள்சிதறவுருத்து வடவைத்தீயுமஞ்சுங் கடூர
மாகிய பதினான்குபாணங்களைக்கரவேகமாகத்தூண்டி வரமுயற்சியிற்ற
னாகிணையற்ற சூரபதுமன்குமாரன்சிரத்திலணிந்திருந்த நவரத்தினமய
மாகச்சொலித்திருக்கும் கிரீடத்தைப்பொடியாக்கினர், அதனாற் சிரோர
த்தினத்தையிழந்த நாகத்தைப்போல மானம்பாதிக்கவருந்தி ஆங்காரி
த்து அதிவேகமாய்ப்பதினான்கு சிலீமுகங்களைக் கொண்டு கற்கம்பத்தை
யொத்த புயங்களைப்படைத்தவீரவாகுதேவர் மார்புக்கரணாகத் தரித்திரு
ந்த அபேதவயிரக்கவசத்தைக் கண்டித்தெறிந்தனன், அக்காலத்தில் விஷ
ப்பற்களைப்பெற்றிருக்கின்ற சற்பாபரணனாகிய சிவகுமாரன் இவன்வில்
வன்மைவெகுநேர்த்தியெனநகைத்து பிறைவாளிகளேழையெடுத்து வில்
லிற்சந்தித்து காளமேகத்தையொப்பப்பிறகாசித்திருக்கும் திரோகத்தை
யுடைய பாதகன்கரத்திற்பற்றியிருந்ததனுசையிரண்டுதுண்டமாகவெட்
டித்தள்ளினர் அப்போதுகாலாந்தகனைப்போலச்சீறி முன்னம்பிர்மதே
வன் தனக்களித்திருந்த மகிமையுள்ளவேலாயுதத்தையெடுத்து கிறுகிறெ
னச்சுழற்றிதூதனைக்கொல்வக்கடவையென வேண்டிக்கடாவினன். அது
வெளிப்பட்டவுடன் அனற்பொறிகளையிறைத்து கோடையிடிகளைப்பெ
ருக்கிமின்னலைவீசி அனேகவுற்பாதங்களைக்காட்டி வருவதை வீரன்கண்
டுவில்நாணியையிறுக்கி ஆயிரங்கடூரமாகிய திவ்வியவாளிகளை ஒன்றின்பி
ன்னொன்றாகச்செலுத்திவரும்போது அதுகளனைத்தினையும் பெருங்கா
ற்றிற்பட்டபூளைப்புஷ்பத்தைப்போலவாட்டிக்கொணடு மேலிட்டுவரு
வதையும் அதன்மகிமைகளையும்மதித்து இப்படைசுலபமான தன்றென்
றெண்ணி சந்திரசடாதரக்கடவுளாகியசிவபிரான்தமக்கனுக்கிறகித் திருந்
தவீரவாளாயுதத்தை உறையிலிருந்தெடுத்து குமாரதேவர் திருவடிகளைத்
தியானித்துப்போற்றிசெய்து சமீபத்தில்வந்தவேலையிரண்டு துண்டமா
கக்கண்டித்துத்தள்ளினர் அந்தசெயத்தைப்பார்த்திருந்த தேவர்க்கள்சந்
தோஷசாகரத்தில்முழுகி வீரன்பேரிற்பஞ்சதாருக்கள்புஷ்பங்களை அபார

ரியாசயிறைத்து வீராதிவீரனென்பது உனக்கேதகுமெனக்கொண்டாடி
னார்கள்பகைவன்பட்சத்தராகிய ராட்சதரோங்கிவாடித்திகைத்துநின்றனர்,
பின்புவீரன் வாளாயுதத்தை உறையிலிட்டு தனுர்ப்பாணியாக நிற்பதையுந்
தன்வேற்படையற்றுவிழுந்ததையும் மாய்கைவல்லபமுடைய சூரப
துமன்பிள்ளை கண்டு மனம்பதைபதைத்துத்தீயெழவுருத்துப் பெருமூச்
செறிந்தவனாய் இவன்சவுரியம்வெகுநேத்தியெனவியந்து துரிதமாய்வர
ப்பிரசாதத்தினாற்றான் பெற்றிருக்கின்ற வாளாயுதத்தை உறையில்நின்று
ருவிக்கரத்திற்கொண்டு மின்னலைப்போல யிடம்வலமாகவீசி வட்டணை
வந்துமுன்னடிவைத்துப்பின்னடிவாங்கித் தாவிவீரங்கள்பேசி மேலிட்
டுப்பாய்ந்துவருவதை வீரவாகுதேவர்பார்த்தவுடன் துரிதமாய்த்தன்வி
ல்லில் அளவற்றபாணங்களைப்பூட்டிப்பிறையோகித்துபாதகன்மலைபோ
ன்றமார்பைப்பத்தலாகப் பிளந்தனர், அக்காயமூலமாக உதிர மானது
பெருக்கெடுத்தோடுமுன்னிலையில் அந்தபாணங்களைச்சட்டைபண்ணாம
ல்மார்புபிளந்தவருத்தத்துக்கு மஞ்சாமல் மானம்பாதிக்கின்றதால் ஒப்
பற்றவாள யுதத்தை விதிர்த்துப்பாய்ந்து வேதவிதியிற் பிசகின்றி நடக்
கவல்லபவுத்திர உள்ளத்தைப்படைத்திருக்கின்ற வீரவாகுதேவர்கரத்தில்
மேருவைப்போல விளங்கும் பாரித்தவில்லை ஒருவீசலினா லிரண்டுதுண்
டமாகவெட்டிப்பின்னிடைந்து அடிபெயர்த்துலவுவதைதேவர் கண்டுவீ
ரனென்பது இவனுக்கேதகும் இவன்மாண்டபின்பு போரென்பதிருக்க
மாட்டாதென்று பேசிக்கொண்டார்கள் அத்தருவாயிற் சர்வசங்காரமூ
ர்த்தியாகியபிதாவைப்போலவீரன் சீறிவெற்றிபெற்றதமது வாளாயுதத்தை
உருவிக்கொண்டுசூறுவளிக்காற்றையொப்பவட்டணைவந்துஎங்கேபோ
கிறாய்நில்லுநில்லெனப்பானுகோபனைவளைத்துக்கொண்டு வீரங்களைப்
பேசும்போது அவனும்வீராவேசத்துடன் பிரசண்ட வாயுவையொப்ப
ப்பாய்ந்து எதிரில்வந்தனன், இவ்விதமாகயிருவீரரும் கோபதீபிதராய்
வாளுயித்தியத்தை எமனையும் அக்கினியையும் போலச் செய்பத் துடங்
கிமாறிமாறிப் பாதங்களைப் பெயர்த்துவைத்து உறுப்புகளைக் குறிகொ
ண்டுவெட்டுவர் அதனைவிலக்கி பின்னப்படுத்தும்படிக்கு நாடுவர் சந்து
தெரியாமற் கரகரெனச்சுற்றுவர் வட்டணைவருவர் யிடசாரிவலசாரியாக
த்திரிவர் இவ்விதங்களாகயிருதிறவரும் வாட்போரைச்செய்து வருமுன்
னிலையிற் சூரன்பிள்ளை தான்கற்றிருக்கின்ற விஞ்சைவல்லபத்தினாற் றமக்
கொப்பனையற்ற இளையபெருமாள்வீசிய வாளைத்தட்டிப் போட்டு ஒங்
கிபுசத்தின்மீதுவெட்டினன், அதனால்அதிககாயப்பட்டு உதிரமானது
ற்றெடுத்துப்பெருக விருந்ததருவாயில் பானுகோபன்களித்து பின்னி
டைத்து அடிபெயர்த்துப்பாய்ந்து வருவதைதேவர்கண்டுபயந்து வீரவா

குதேவரிளைப்பரோ என்னமோ யிதற்கென்செய்வதென்று சந்தேகித்து வாடுகின்ற தறுவாயில் வீராதிவீரன் சண்முகதேவர் பாததாமரைகளைத்தியானித்துப்போற்றி மின்னலைப்போலப் பளபளத்துவிளங்கும் வெற்றிவாளாயுதத்தைவளையவளையச்சுழற்றிமுன்னடிவைத்துப்பின்பாய்ந்துதாவிசத்திராதிபருத்த தோட்களினொன்றைவெட்டி நிலத்திற்றள்ளினர், அக்காலத்திற்பானுகோபன் வடவைக்கனலைப்போலச்சீறிப் பின்னிடையாமல்தீரனாய் வலக்கரத்துடன்விழுகின்றவாளாயுதத்தை யிடதுகரத்தினாற்பிடுங்கிகொண்டு மீட்டும் போர்செய்வதாக உருத்துமேலிட்டுப் பாய்ந்துவருவதையும் அவன் தயிரியத்தையும் வீரவாகுபார்த்து மதித்தவராய்த்துரிதமாய்த்தன் வாளைவீசி மற்றகரத்தையும்துண்டித்தனர், இவ்விதமாகவிரண்டுகரங்களையும் யிழந்தபடியால் வேறு சண்டைகொடுக்க வகையற்றனாதலாற்பிதாமகளாகிய மாயைகொடுத்திருக்கின்ற படையைப் பிறையோகிக்கநினைந்தான் அக்கருத்தைவீரவாகுதேவர்தெரிந்தவுடன் அதற்கிடங்கொடாமற் றுரிதமாய் வெற்றிவாளை ஒருவிசைவீசிவயிரமுடியில்லாமற் சிகையைவிரித்திருக்கும் சிரத்தைக்கண்டித்துத் தள்ளியபோதுபூர்வத்தில் வாயுமோதலினால் மேருபர்வதச்சிகரமற்று சமுத்திரத்தி னிடத்தில்விழுந்ததைப்போலக் கோரதந்தங்கள்விளங்கும்தலையானது ஆர்ப்பரித்துக்கொண்டு ரணக்களத்திலோடும் உதிரவாரியிற்பேரோசையைக்காட்டிவிழுந்தது உடனேதிரேகமும்நீலகிரியையொப்ப நிலம்பிளந்துகுழிபடமறிந்தது அத்தறுவாயில் எமதருமராசன்வீராதிவீரன்சேவகத்திறத்துக்குமெச்சிப்புகழ்ந்தவனாய் பயமற்று பானுகோபனுயிரைக்கொண்டு தென்னாட்டைச்சேர்த்தனன், இந்தசெயத்தைக்கண்ட முப்பத்துமுக்கோடிதேவர்க்களும் நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகளும் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்பன்னகர் உவணராதியாக மனவெழுச்சியுடன் ஆனந்தவாரியிற்றிளைத்து வஸ்திரங்களை மேலெறிந்துகூத்தாடி இவ்விதக்களியாடல்களைச்செய்தவர்களாய் சிவகுமாரனைப்பார்த்து வீராதிவீரனென்பதுஉமக்கேதகும் மேலும்யிதுபரியந்தங் கிடைத்திருந்தஎங்கள் மனக்கவலைமுற்றும்நீக்கினீர் இனிகளித்திருக்கப்பெற்றனம் ஓவீரனேயின்னமும் இதற்குமேலாகிய செயப்பிறதாபங்களைக்கிடைத்து நீடூழிவாழிவாழியென்று அண்டங்களதிர ஆர்ப்பரித்து பஞ்சதருக்களின் புஷ்பங்களையேராளமாகத் தளிரிலைகளுடன்பறித்துப்பறித்து இளையவர்மீதுசொரிந்துசந்தோஷத்தைப் படைத்திருந்தனர், இவ்விதமாக தேவரினங்களும் மற்றஉலகவாசிகளும் அத்தறுவாயிலடைந்த மகிட்சியையின்னவிதமென்று என்போலிகளாற் சொல்லிமுடிவதோ இவைநிற்க ராட்சதராசகுமாரனால் அவதிப்பட்டலைந்துவாடிப் பதுங்கியிருந்த பூதப்படைகள்

எண்மர்-இலக்கர்-சேனைத்தலைவர்கள்-தங்கள்பகைவன் சிரோகம்வெட்டுண்டுநிலத்தில் விழுந்ததைக்கண்டவுடன் ஒருஆவேசம்பிறந்து கொக்கரித்துத் துள்ளித்துள்ளிக்கூத்தாடி கரங்களைக்கொட்டி நகைத்துபற்பலவீரங்களைப்பேசி அகமுகமலர்ச்சியுடன் தங்கள் தலைவனைவாழ்த்திசெயசெயவெனப்போற்றினர், இந்தவெற்றியைக்கண்ட சூரியன் தன்மனக்குறையையொழித்து சந்தோஷசாகரத்திலழுந்தி நடுக்கமொழிந்துதன்செறியிற்சென்றனன், ஓ சவுனகாதிரிஷிகளே நான்விரித்துவிரித்துச்சொல்லவேண்டுவதில்லை இந்தசந்தோஷ வார்த்தையைக் கேழ்விப்பட்டமாத்திரத்தில் விண்மண்திசாதிசையேமுதலிய தலங்களில்வாசமாயிருக்கின்ற சகலரும்சலக்கமொழிந்து புதியஉயிரைப் பெற்றவரைப்போல வாழ்ந்தோம்வாழ்ந்தோமெனக் களித்திருந்தனர். இவ்விதமாகச் சகலரும்மனவெழுச்சிபெற்று வீரனைப்போற்றி சிரோகபரவசத்தராயிருக்கின்றததுவாயில்வீரவாகுதேவரும்மனமகிட்சியுடன்வானவெல்லையை நீங்கிஉயித்தியக்களத்திற் சமுத்திரத்தையொப்பஆரவாரங்களைச்செய்திருக்கின்றசேனைகளின்மத்தியில்வந்திறங்கியபோதுசந்திரனைக்கண்டகடலைப்போலத்தம்பியர்-இலக்கர் -சேனைத்தலைவர்-படைவீரர் சூழ்ந்து சேவித்துப்போற்றிநிற்பவனாக் கிருபையாகப்பார்த்து இதனைச்சொல்லுவார், மாயவல்லபத்தினால் நம்மைபலைத்த பாதகனான பானுகோபனைக் கொன்றனம் பிடித்தாபதத்தையும் பகையையும்முடித்து மனவெழுச்சிபெற்றனம்ஆதலால்யினிசற்றுந்தாழ்க்காமற்சகலரும் எமதுகற்தனுகிய சிவசுப்பிரமணியதேவர்சன்னிதானத்தைச்சேர்ந்து வணங்கிப்போற்றியிந்தபாதகனோடினெல்லையி லிருபகற் றங்கியிருந்த தீங்குகளைப்போக்கிக் களித்திருப்போம்வாருமெனச்சொல்லிய சிறந்தவாக்கியத்தைக் கேட்டவுடன் களித்தவர்களாய் திரிநேத்திர தாரியாகிய சிவபிரான்பெற்றெடுத்த பாலசுப்பிரமணியதேவர் திருவடித்தெரிசினையை யிருதினம் கிடைக்காமல்வருந்துகின்றனம்தேவரீரருளிச்செய்த காரணம் உத்தமமாகுமெனத் துணைவர்முதலாயினர் களித்தததுவாயில்-செயபேரி-வெற்றிச்சங்கம்-சின்னமுதலிய மங்களவாத்தியங்கள் கணகணென்றுமுழங்கப் பெரும்புறக்கடலெழுமாறுபோல பூதசயின்னியங்கள் செயஉச்சாகங்களுடன் ஆரவாரித்துத்துடர -தம்பியர்-இலக்கர்-படைத்தலைவர்-மனவெழுச்சியுடன்சூழ்ந்துபோக புசபெலபாக்கிரம சாலியாகிய வீரவாகுதேவர் அவர்கள்மத்தியிற் பூரணச்சந்திரனைப்போல முகமண்டலந்துலங்க ரதாரூடனாய்ரணக்களவெல்லையைக்கடந்துபோய்விசாலமாய்செலசமற்திபெற்றவழ்வளநதுவானத்தையளாவிய பொன்மதிலின்மத்தியில் நவரத்தினமயமாகவிளங்கும் பாசறையைச்சேர்ந்து திருச்சபையிற்-பிரமன்-விஷ்

ணு தேவேந்திரன் முதலானவர்கள் சூழ்ந்துபோற்றச் சிரோரத்தினங்
களினாற் சோடித்திருக்கும் சிங்காதனத்திற் கோடிசூரியப் பிறகாசமாக
வீற்றிருந்து வாற்றைதயாடிக்கொண்டுவரும் சண்முகப்பெருமானை நே
த்திரோச்சவமாகத்தெரிசித்து வாழ்த்திநெருங்கியதருவாயில் திரோகபர
வசத்தராய் மும்முறைவலம்வந்து திவ்வியசரணாரவிந்தங்களிற் பலதரம்
சேவித்தெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு பத்திவிநயத்துடன்போ
ற்றிநிற்கின்றதமது மனதுக்கினியதுணைவனைப் பரிவாகப்பார்த்து ஐய
னேயிரண்டுதினங்களாக மிகவும்வருந்திச்சூரன் பிள்ளைமுதலாகிய அவு
ணவீரரைக்கொன்று உலகஉபாதியைத்தவிர்த்து நிலைபெறச்செய்தனை இ
தைக்குறித்துமிகவும்களித்தனமாதலால்உனக்குவேண்டியவரங்களைத்தர
விருப்புற்றனம்,கேழ்க்கக்கடவையெனத்திருவாய்மலர்ந்ததருவாயில்வீ
ரன்மீட்டும் வணங்கிவாயைப்பொத்தி கற்தனே தேவரீர் பரிபூரணகடா
ட்சவீட்சணியப் பேற்றினாலல்லது ஒருகாரியமும்முடிவ துண்டோ ஆயி
லும்அடியேனுக்கொரு வரபாலனத்தைத்தரவேண்டும்அஃதென்னையெ
னிற் செல்வப்பெருக்கையுடைய குபேரன்வாழ்வைக்கனவிலு மதியேன்
திரிலோகசக்கிரேஸ்பரனாகிய தேவேந்திரன்கெசேந்திரச் சம்பத்தையும்
அரசுருமையையும் ஒருபொருளாகநினையேன் சிருஷ்டிதிதிகற்தராகியபி
ரமன்விஷ்ணு பதவிகளைச்சுலபமாகக்கருதுவேன் இவையனைத்துக்குங்
காரணமாய்மேலாகியபேரின்பவாரியையுதவவல்லமகிமையையுடையதே
வரீர்பாதாரவிந்தங்களைப் பத்திபூர்வகமாகஎக்காலத்தினும் வழிபட்டுப்
போற்றும் சிறந்தவரத்தினைவிரும்பினேன் இஃது மோட்சசாம்பிராச்சி
யத்தை வேண்டித்தவங்களைச்செய்துவரும் மானுக்களுக்குங் கிடைப்ப
தரிதாதலாற்கிருபையுற்றுத்தயைசெய்ய வேண்டுமென்றிரக்கின்றதுணை
வனிடத்திற்பரிவாய்பரிபூரணகடாட்சத்தினைப்பாலித்து சிறந்தபத்தனே
உன்மனக்கருத்தின்வண்ணம் தந்தனமென்றவாக்கியத்தைச் செவிகளுக்
கமுதமாகக்கேட்டுக்களித்திருந்ததருவாயில்மற்றத்தம்பியரும்இலக்கப
டைத்தலைவர்நெருங்கிப் பிறதட்சணம்வந்துபணிந்தெழுந்து நிற்கின்ற
வர்களிடத்திற் கிருபையுற்றுபற்பலபேறுகளைக் கடாட்சித்துத் தத்தமதி
ருப்பிடத்தைச்சேர்ந்திளைப்பாறிக்களித்திருக்கும்படிக்குக்கட்டளையிட்
டமாத்திரத்தில் வீரவாகுதேவராதியர் கற்தனைவாழ்த்திச் செலவுபெற்று
ப்போய் தமதிருப்பிடங்களிற் சவுக்கியமாகவிருந்தனர், சவுனகாதிரிஷி
களே, இதுபரியந்தம்பேசியசரித்திரங்களைக்கேட்டீர்களன்றோ இனிபுத்
திரசோபத்தினாற்சூரபதுமன்வருந்தியதையும்மற்றகாரணங்களையுந்தெ
ரிவிப்போமென்று சூதபுராணிகர் சொல்லுவார்,பானுகோபன்களத்திற்
பட்டதைப்பார்த்திருந்தசூதர்கள் பிரமித்துஇத்தகைய வீரபராக்கிரம

சாலியைக்கொன்றசெயசாலிகள் நமதிறைவனையும்வாட்டிவதரிதோ இனி என்செய்வோம்நாமனைவரும்நாசப்படுங்காலம்குறுகியதுபிதற்குச்சந்தேகமில்லையெனப்புலம்பிக்கொண்டு வாயுவேகத்தினுமேலிட்டோடி எக்காலத்தினும் மங்கலவாத்தியங்கள்முழங்கி யிருப்பதொழிந்தசணைவளாத்துணைவனைப்புத்திரனை மாமன்மைத்துனன்சுற்றமாயினர் மாண்டகாரணங்களினால் மங்கையர்சேர்ந்துபாட்டிபாடிப்புலம்புகின்றவோசையானதுமேலிட்டுப் பொலிவற்று விழிகளிற்பெருகும் நீரானதுபெருத்தோடும்வீதிகளைக்கடந்துராசராசன் வாசமாயிருக்கின்ற நகரியைச்சேர்ந்துசபாமண்டபத்தில்விளங்குஞ் சிங்காதனத்தின் மீதகுமாரன்போயிருக்கின்றகாரியமென்னமாய்முடிந்ததோவென் றாசலாடும்மனதுடன் வருந்தியிற்றிருங்கின்றசூரனைக்கண்டமாத்திரத்திற் கவலைமிகுத்துவிழிகளில்அருவிகளைப்போல நீரைப்பெருக்கிஅடியற்றபனைகளைப்போலப்பாதங்களில்விழுந்துவிழிகளினும்வாயினும்வயற்றினும் மோதிக்கொண்டு பேசுவதற்குவாயெழாமற் சற்றுநேரஞ்சுளறித்தேறியபின்பு இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர், சுவாமிதேவரீர் பிறதமகுமாரனாகிய வீராதிவீரன்பலவெள்ளஞ்சேனைகளுடன்போய் தூதனுடனெதுத்து அகோரவுயித்தியங்களைச்செய்தகாரணங்களைச் சொல்லிமுடிவதன்றஐயனே கடையிற்றூதன்கரத்தில்விளங்கும் வீரவாளினாற்சிரமற்று புயங்கள்வெட்டுண்டுரணக்களத்தில் விழுந்துமாண்டனனென்று சவிஸ்தாரமாகச்சொன்ன விசேஷம்செவிகளிற்பட்டவுடன் இந்திரபோகச் செல்வத்திலழுந்தியிருந்தசூரபதுமன்திடுக்கிட்டு ஓவென்றலறிபுத்திரசோபமென்கின்ற வாயுமோதவிற்பட்டுமதிமருண்டு சிங்காதனத்தினின்றும் தவறி நிலத்தில்விழுந்துகடகடெனப்புரண்டு பெருமூச்செறிந்துசிரோசங்சாந்தி விழிகளில் நீர்ப்பசுமையற்றுஉதிரம்பெருகவியர்த்து நடுநடுங்கிப்பிராணன்நிலைபெருமலலைந்து மரணமூர்ச்சையாய் அசைவற்றுக்கிடந்தனன். சவுனகாதிதவத்தரோகடந்துளோர்களுங்கடப்பரோ மக்கணமேற்காதலெனச் சொல்லுவதற்குத் திஷ்டாந்திரமாக அக்காலத்திற்சூரபதுமன் துக்க சாகரத்திலழுந்தி வருந்தியகாரணங்களை இன்னவிதமெனச் சொல்லி முடிவதோசிவகடாட்சத்தினாற் றீர்க்காயசைப்பெற்றிராவிடில்மாளவும்வருமெனநினைக்கவேண்டும் அத்தறுவாயில்ராசாதிராசன் விழுந்தகிடக்கின்ற அலங்கோலத்தைச் சபையிலிருந்தவர்கள் விழிகளில்நீரைப்பெருக்கிப்பாத்தவுடன் அரசன்மாண்டனனோவென்னும் சந்தேகத்துடன் வேண்டிய சயித்தியஉபசாரங்களைச்செய்துவரபெருநேரத்திற்குப்பின்புகியாபகந்தோர்றிவிழிகளைத் துறந்துபாத்து மெல்லவெழுந்திருந்து இவ்விதங்களிற்பாடிப்பாடிப்புலம்புவதாயினன், ஓ குமாரனேமதக்களிற்றினையொத்த

நின்னியனேகொடியபாதகனாகிய என்னாவியே என்மனதுக்குத் தெவி
ட்டாதயின்பத்தைதரும் அமுதத்தைப்போன்ற புத்திரசிகாமணியே எ
ன்னப்பனே பத்துமாதஞ்சுமந்து பெற்றதாயை யொப்ப என்னிடத்தி
ற்பரிவாகவிருந்த கண்மணியே என்சவுக்கியங்களைக்கோரியிருக்கின்றசு
ற்றத்தினு மன்புள்ளதீரனே எனக்குதவியாகவிருக்கின்ற யிருபுசங்களை நி
கர்த்த சகோதரவாற்சல்லியத்தையுடைய காளையேஎன்மனதுக்கினியதோ
ழனாகவிருந்து நீதிகளைப்பேசிய கல்விபரனே காரணகாரியங்களை நிதா
னித்துச்சொல்லவல்ல மதியூகிமந்திரியைப்போன்றவனே மகதயிஸ்வரிய
ச்செல்வத்தைப்பெற்றிருக்கின்ற என்வாழ்வேஎன்னரசே புத்திரக்களைதீ
ர்த்தபெருமானே ஆயிரத்தெட்டண்டங்களுக்குமதிபனாகவிருக்கின்றஎ
னக்குபுத்திரனாக விருந்தஉன்னையொத்த வீராதிவீரனைத் தாய்தந்தையற்
ற ஒருவனுக்குப்புத்திரனாகியதா தன் மனந்துணிந்துசொல்வனோ நீஇப்
பாடுகளைப்படுவதற்கோ அரியதவவிரதங்களைச்செய்து பெற்று அருமை
யாகச்சீராட்டிவளர்த்தேன் மன்மதனையொத்த சுந்தரமும் வீரசிங்கத்தி
னு மேம்பட்டவல்லபங்களையும் சூரத்தன்மையையும் கல்வித்திறங்களு
ஞ்சாஸ்திர சம்பத்தும்பெற்று வில்வித்தை முதலிய பராக்கிரமங்களில்
மேம்பட்டவனாய்த்திக்குவிசயஞ்செய்து அளவற்றகீர்த்திப்பாடுகளைஎன
க்குண்டாகச்செய்தனை பிள்ளைகளனைவரையுமிழந்து வருந்தியயான்உன்
புசபெலபராக்கிரமங்களின்பெருக்கைக்கண்டு மனவாட்டத்தைப்போ
க்கித்தேறி துணையாகவெண்ணிமனந்தாபரித்திருந்தேன் ஐயனேஉன்னை
நம்பி யிருந்தவென்னைத் தனிமையில்விட்டு தயையற்று இந்த செல்வங்
களைவெறுத்துப் பொன்னுலகவாழ்வை இச்சித்துப்போய்விடுவையாகில்
இனிதமியேன்பிழைப்பதற்கொரு எதுவையுமுண்டோ குமாரனே இனி
யாதொருஉதவிகளையுங்கண்டிலன் வேடன்வீசியவலையினிடத்தகப்பட்டு
த்தியங்கும்மானைப்போல மதிமயங்கிவாடுகின்றனன், துரிதமாகவோடிவ
ந்து தயிரியங்களைச்சொல்லித் தேற்றலாகாதோ அப்பனே உன்னிடத்தி
ல்எவ்வளவும்வஞ்சனையில்லை சத்திராதிகள்மேலிட்டதைத்தெரிந்து தேவ
ர்க்களைப்படுத்தி யிருக்கின்றசிறையை விட்டுவிட்டால் பிழைக்கலாமெ
ன்றுபற்பலகாரணங்களைவிரித்துவிரித்துக்காட்டினை என்னரசே அதுகளை
உறுதியாகநினையாமலிகழ்ந்து அரியநிதியைப்போன்றஉன்னை அனீதமா
கப்பறிகொடுத்தேன் இனிஅதுகளை நினைந்துநினைந்து வாடுவதிற் பயனை
க்காணேன் பேரறிவாளனேதன்னால்வராதவினைகள்வேறுமுண்டோசால
தேசவர்த்தமானங்களைத் தீர்க்கமாகத்தெரியவல்ல மதியாளனே என்னைத்த
டுத்துச்சத்திராதிகள்மீதிற் பகைத்துச் சண்டைகொடுப்பதினால் வெற்றி
பெறுவதரிதுசமாதானப்படுவது உத்தமமென்றும் அதற்குநடத்தவல்ல

நீதிகளையும்என்னிடத்திருக்கின்ற தயையினால் வெளிப்படச் சொன்னாய்
இதைக்குறித்து உன் மனதிலென்ன நினைந்தனையோவறியேன் இதுகளைக்
கொஞ்சம்யோசித்து நிறுத்தி நான் பகைவர்மீது சண்டைகொடுக்கப்போ
காமல்உன்னிடத்திற்கோபித்துபலவத்காரமாயனுப்பிசிரோரத்தினத்தை
யொத்தஉன்னைப்பறிகொடுத்தேன் இக்காரணம் நேருவதற்கு உன்னிட
த்தில்யாதொரு குறைபாடுகளுமில்லை உன்னரியபிராணனுக்குநான் கூற்
றுவனாகவிருந்தேன் பஞ்சதருக்களின் புஷ்பங்களைக்கொண்டு முப்போ
தும்வழிபட்டிருந்த தேவர்க்கள் உன்னிடத்திருந்த பகையை இக்காலத்
திற்றணிந்துகளித்திருக்கின்றனரோ என்னாசைக்குமாரனே உன்றுணைக்க
ஞ்சிநிலைபெறாமலுழன்று திரிந்தமகாவிஷ்ணுவானவன் நீயிறந்தசேதிதெ
ரியுமாயின் மனமகிழ்ந்து-ஸ்ரீதேவி-பூதேவி-பாதங்களை வருடசேஷசய
னத்திற்கவலையற்றுபழையபடிக்கு நித்திரைசெய்யானோ அவுணராசகுல
த்துக்கு நாயகமாகவிருந்தவனே உன்னையடுத்தவர்களுக்குச்- சங்கநிதி-
பதுமநிதி- சிந்தாமணி- கர்பகத்தருக்களைப்போல வெறுக்கக் கொடுத்
து அவர்களிஷ்டங்களை நிறைவேற்றிவந்த தயாநிதியே என் தெள்ளமு
தமே என்செல்வமே கண்மணியேஅப்பனே தனிமையிற்சென்றெவ்வி
டத்திலிருக்கின்றனை அத்தலத்துக்குநான்வருவேனாயினும் உன்மதுரவச
னங்களைக்கேழ்க்கப் பெறுவேனோ புசபெலபராக்கிரமமும் வீரமும்மந்
திராலோசனைகளுக்கொப்பற்ற திறமைசாலிகளாகிய புத்திரரனைவரும்ப
கைவருடனெதுத்துச்சண்டைகொடுத்துமாண்டனர், அவர்கள்பிரிவென்
னுந் துக்கசாகரத்திற்பட்டலைகின்ற எனக்குத் தேறுதலைசொல்லி யாற்ற
வொருவரையுங்காணேன் இத்தருணத்திற் றயிரியம்பெறச்செய்யப் புத்
திரசிகாமணியே வரவேண்டும் துரிதமா யென்கண்மணியே ஓடிவா அ
ப்படிக்குவரமனதில்லையோ உன்னரியதந்தையாகியயான் இத்தகைய து
க்கசாகரத்திலழுந்திவாடுகின்றதை மறந்து பராமுகமா யிருந்துவிடுவது
உனக்கழகோ அப்பனேபாலபருவத்திற் கிரணசாந்தியானது உன்திரு
முகத்திற்றாக்கியகாரணத்தினாற் சீறிச் சூரியனைச்சிறைபடுத்திபகாலத்திற்
பிரமனாதியர்வேண்டவிடுதலைசெய்துகொண்டுபோன வசைபெற்று வாடி
உனக்கஞ்சித்திரிந்தவன் இனிசந்தோஷசாகரத்திலழுந்தி பயமற்றுவான
த்திற்றிரியானோ நமதுபகைவரிட்டகட்டளைகளைச்செய்து தொண்டனாக
விருந்தழலுந்தாதனோ உன்னையொத்த ராசராசபுத்திரனைக் கொல்வன்
அதைக்கனவிலும்நினைக்கமாட்டேன் உன்றுணைவனைப்பார்க்க விருப்பு
ற்று இவ்விதமாய்கையைச்செய்துபோகச் சற்றனையாயினும் உன்னாவி
யையொத்தபிதாவைப் பிரியுந்துணிவையுங்கற்கலாகுமோ புசபெலபரா
க்கிரமசாலியாகிய உன்னையொத்தமைந்தனிறந்தனனென்னும்கொடிய

சேதியைக்கேட்டவுடன் இந்தபாழத்தஉயிர் நீங்காமல்இன்னமும்வருந்
தித்தாபரித்திருக்கின்றதேகுமாரனேமனம்சோருகின்றது நிலைபெற்றிரு
க்கப்படவில்லை, முன்னம்பரமசிவத்தினிடத்தில்அரிய வரங்களைப் பெ
ற்றதறுவாயில் பிள்ளைகளுமிறவாமற் சிரஞ்சீவிகளாக விருக்கக் கேட்டுக்
கொள்ளாமற்போனேன் பலவிதத்திலும்வெற்றியையுங்கீர்த்தியையும்தா
வல்ல பிள்ளையிறந்தவுடன்மாளாமல்வலியனாகவிருக்கின்றனன், பிராண
னும்கிறடசித்தமாயிருக்கின்றது பலவத்காரமாக மாய்க்க நினைப்பேனா
யினும் நாசமடையாத வரபாலனத்தைக்கிடைத் திருக்கின்றனன், அதுஇ
க்காலத்திற்பிசகாய்நேர்ந்தது என்னாவியே தவப்பேறே குலதெய்வமே
குருவேமந்திரியே உன்னைச்சமருக்கனுப்பி மாளக்கொடுத்து இப்படிக்
குட்பாதவிக்கவோ நாலிவடத்தில்நின்றுவிட்டேன்வருவேனாயில்உனக்
கபாயம்நேரவறியாது சாலாதிகளிற்பிராணிகளனைத்தையுங்கொண்டுபோ
குந்தொழிலையுடைய எமனானவன் தூதனாக அவதரித்துவந்தானோதோற்
றவில்லை அல்லதுஉன்வலியபிராணனைப் பாதகனால்வாங்கப்படுவதோஐ
யனேதென்னாட்டைச்சேர்ந்தனையோ அல்லது மற்றெத்தலத்திலிருக்கின்
றனையோ தெரிகிலேன்சகலமையும்போக்கித் தனிமையில் துயரத்திற்பட்
டு வாடுகின்றனன், இதைத்தணிந்திருக்க ஒருவகையையுங்காணேன்,அர
சேஆருயிரோ துரிதமாய்வாராயோ உன்மனதுக்கினியதேவியர் உன்பிரி
வைத்தெரிவராயின் என்படுவரோ அவர்களைக்குறித்தாவதுதிரும்பாயோ
வென்று ராசாதிராசன் இவ்விதங்களாகப் பன்னிப்பன்னிப் புலம்புகின்
றதறுவாயில் அரசன்படுந்துயரத்தையாற்றநினைந்து சபையிலிருந்தஅவு
ணவீரரிற் சிலரோடி ரணக்களத்திற் கண்டதுண்டமாக வெட்டுண்டுகிட
க்கின்ற ராசபுத்திரன் திரேகத்தையெடுத்துக்கொண்டு புலம்பிவந்து சூர
பதுமன்முன்னம்வைத்தாவலித்தழுதனர் தேவனைவாட்டிச் சிறைபடுத்தி
யிருக்கின்ற ராசபரமேஸ்பரன் துண்டங்களாக விருக்கின்ற புத்திரன் தி
ரேகத்தைக்கண்டஉடன் கதறி மனங்கலங்கிசோபித்துமேல்விழுந்து களை
த்திருந்து சற்றுநேரத்திற் றெளிந்தெழுந்தவனாய் கண்டிக்கப்பட் டிரு
க்கின்ற சிரத்தைககரங்களினாலேந்திபீதாம்பரத்தொங்கலினால்முகத்தை
த்துடைத்துச்சிகையைக்கோதி அதன்பொலிவைக்கண்டு களிப்பன் முத்
தமிடுவன் விழிகளிலொத்திக்கொள்வன் வலியற்ற சற்பத்தைப் போலப்
பெருமூச்செறிவன் நிலத்தில்விழுந்துபுரள்வன் அப்பனேசத்திராதிகளி
டத்திலிருக்கின்றகோபம்இன்னமும் உன்திருமுக மண்டலத்தில் மாற
வில்லையேசிறந்தமானமும் வீரமும்வலியும் இனிஉன்னுடனழிந்துபோ
யது உன்னையொத்தசவுரியவான்களை யாவரையுங்கண்டதுமில்லை கேட்டு
மிலேன் மோசஞ்செய்ததையோவெனச் சோருவன்கரங்களினொன்றையெ

டுத்து விழிகளினிடத்தாற்றெடுத்துப்பாயும் உதிரப்பெருக்கினாற்கழுவி
வானத்திலோடுஞ் சூரியனைப்பிடித்துவந்து தளைசெய்நகரகமல மிதுதா
னோவென் றாற்றுவன் வீரவாகுசெலுத்திய பாணங்களினாற் றுளைபட்டி
ருக்குந் தோட்களையும் மார்பையும்பார்த்து உலகங்க ளுள்ளளவும் நீங்
காதபுகழைப்பெற்ற னான்உன்னையல்லது மற்றும்யாவரிருக் கின்றன
ரெனக்கதறுவன் - பூதபசாசங்கள் - கழுகு - காக்கை - பருந்துலவித்திரியும்
போர்க்களத்தி லுன்பொன்மேனியைக் கூறுபட வெட்டித்தள்ளிய பாதக
னாகியதூதன் பிராணனையுண்டாலல்லது என்மனத்துயர மாறுமோவெ
னச்சீறுவன் இந்தபட்டணத்துக்கு ஒற்றாகவந்த ஒரு தூதனால் அளவற்
றசெயங்களைப்பெற்றிருந்த என்மகன்மாண்டனனென்று சகலரும்பே
சிக்கொள்ளுவாராயின் ஆயிரத்தெட் டண்டங்களையும் நூற்றெட் டுகங்க
ளாகப்பரிபாலித்து தேவராதியரையேவல்கொண்டுவாழ்ந்த என்னரசாட்
சிவெகுநேத்திரேத்தியெனத் தன்னையிகழ்ந்து கொள்ளுவன் பின்னப்ப
ட்டிருக்கின்றகுமாரன் சிரத்தையும் கரங்களையும்சேர்த்துப்பார்த்து வி
ழிகளில்நீரைப்பெருக்கி மேல்விழுந்துபுலம்புவன்தீயிற்பட்ட புழுவை
ப்போலப்பதைபதைத்துவாடும் பிராணனைகருதித்து இன்னமும்என்க
ண்மணிசென்ற இடத்துக்குப்போகாமலிருக்கின்றையோவெனவாடுவன்
வலையிற்பட்டுவாடும்மயிலைப்போல மருண்டுமருண்டுநாலுமூலைகளினு
ம்விழிகளைச்சுழற்றிப்பார்ப்பன் கரங்களைப்பிசைந்துகொண்டு இனியெ
ன்செய்வதென் றுதியங்குவன் பரிவாய்ப்பிள்ளையைப்பார்த்தழுவன் சோ
ர்ந்துகிடப்பன் கரங்களைவிரித்துஇந்த அனியாயமெங்கேனுமுண்டோ
சொல்லுங்கோளெனக்கேழ்ப்பன் என்னாசைக் கழிவுசெய்திறந்தையோ
மகனேயென் றுவாயிலறைந்துகொள்ளுவன் சரீரம்புழுங்கிவியர்க்க வரு
ந்துவன் சமுத்திரத்தினலைகளின்பெருக் கடங்கும்படிக்குப் பெருமூச்
செறிவன் நிலத்தைக்கரங்களினாற் றுழவிமோதுவன்இவ்விதங்களாகரா
சாதிராசன்பட்டதுயரத்துக்களவுண்டோ இச்சேதியை அந்தபுரத்திலிரு
ந்த மயிலையொத்தபதுமகோமளைகேட்டு வேடன்செலுத்தியபாணம்பா
யவாடும்மானைப்போலக்கதறிக் கூந்தலவிழ்ந்து நிலத்திற்புரளச் சரீரம்
நடுநடுங்கி துக்கவெப்பத்தினால்விழிகளில்உதிரமான துளூற்றெடுத் தோ
டக்கோடுசோடெனப்புலம்பி தாமரைஎலையிற்பட்ட செலத்தையொப்
பமனம்நிலைபெறாமற் கலங்கினவளாய்வலையிற்பட்டமஞ்ஞையை நிகர்த்
துவாடிப்பாதவித்துத்திகிற்பட்டு கட்டுக்காவலையுடைய தன்னிருக்கை
யைநீங்கியிறந்தஎன்னாசைக்குமாரனைப்பார்த்துக் களைதீர்வனெனப் பிற
லாபித்துக்கொண்டு சபையைநோக்கியோடிநன் இந்ததுக்கவார்த்தையை
க்கேட்ட புரஸ்ரீகள்பட்டணத்தில் வாசமாயிருந்தபெண்கள் அலறிநமதி

றைவன் தேவிக்குச் சகிக்கப்படாததுக்கம்வந்துநேர்ந்தது வாருங்கோ
ன் வாருங்கோளென்று எதிர்ந்தவனைவனையும் கூவிக்கொண்டு கோவெ
ன்றழுதுவந்து பதுமகோமளையைச்சூழ்ந்துதேமல்பாந்து பொற்குட
ங்களையொத்த தனபாரங்களின்மீதடித்து மயிரை விரித்துப் பிடுங்கி இ
ழவுகொண்டாடினர், அவர்களுடன்லட்சுமிக்குச்சமதையாகிய சுந்தரமு
ள்ளபதுமகோமளை ஆஸ்தானமண்டபத்தைச்சேர்ந்து துண்டித்துக் கிட
க்கின்ற சிமந்தபுத்திரனைக்கண்டவுடன்மேல்விழுந்து மரணமூற்சையா
கியதறுவாயிற்சேடியர்சிலதியர்பாங்கியர்மற்றகன்னியர்கள் ஆவலித்துஒ
வென்றலறியற்பலசயித்திய உபசாரங்களைச்செய்து வருமுன்னிலையிற்ப
ஞ்சேந்திரியங்களும் தத்தமதுநிலைகளிற்சேர மெல்லக்கண்களைவிழித்து
த்தள்ளாடியெழுந்துதிகைத்துமதிமருண்டுபிடியுண்டசற்பத்தைப் போ
லச்சோர்ந்துவிழுந்து புத்திரசோகத்தினாற்றரிக்கப்படாமல் கடகடென
ப்புரண்டு கரங்களைவிரித்துப்பரதவித்தகாரணங்களைச் சேழப்பீராக, ஓ
என்மனதுக்கினியபிள்ளாய் குழந்தைப்பருவத்தில் உன்முகத்தில் ஆத
மத்தாக்கியகாரணத்தினாற் சூரியனைப்பற்றிவந்து எனக்குக்காட்டி தொ
ட்டிலின்காலிற்கட்டிவைத்த வீரமெங்கொடுங்கியது என்கண்மணியே
பிள்ளைக்கவலையையொழித்தசருவலமே குழந்தாய் அந்தசெயத்தைக் க
ண்டுமகிழ்ந்தயான் உன்திருமேனி இவ்விதங்களாகக் கண்டிக்கப் படு
மென்பதைஎவ்வளவும் நினைந்தவளல்ல கனவிலும்மதித்திலேன் இக்கால
த்தில் எமனுக்கிரையாவையென்று எந்தசோதிஷருஞ்சொன்னதுமில்லை
என்னப்பனேமுன்னொருகாலம் பொன்னுலகத்துக்குப்போய்த்தீக்கிரை
யாக்கிநமதுசத்துருக்களாகியதேவஙாப்பெண்டுபிள்ளைகளுடன்சிறைசா
ய்த்துவந்ததினம் உன்திருமுகப்பொலிவையும் பர்வதாகிருதியாக விரு
ந்த புசங்களின் சீரையும் மற்றதிருக்கோலத்தையும் மனங்களிக்கக் கண்
டுமகிழ்ந்தபாதகியாகியயான் அந்தகண்களினால்இப்படிக்குப்பதங்கோ
லமாசக்கிடப்பதையும்பார்க்கப்பெறுவனோஉடனேபிராணனை விட்டுவி
டாமல் துக்கசாகரத்திலழுந்திக் கலங்குகின்றனன், பூற்வத்திற்றுமனை
க்கமலவாசியாகிய மகாலட்சுமி கரத்திற் பற்றியிருந்த பொன்னங்கிளி
யைச்சம்பாதித்து வளர்க்கநினைந்து உன்னுடன்சொன்ன மாத்திரத்தில்
தட்சிணத்தில்வைகுந்தநகரிற்போய்யாதினையும்பேசாமற்பலவத்காரமா
ய்ப்பறித்துக்கொண்டுவந்து எனக்குக்கொடுத்ததீரனே இன்றைக்கிவ்வி
தமாக நொந்துவருந்தும் உன்னுசைத்தாய்க்கு ஒருதேறுதலையானவாச
கத்தைச்சொல்லலாகாதோ மவுனமாயிருப்பதுஉன்னையொத்தபுத்திரனு
க்கழகோ இதுவுமொரு விளையாட்டோ ஐஐயோ இந்த பாதகத்துக்கெ
ன்செய்வேன் ஒன்றுந்தோற்றவில்லையே வயறுபற்றிக்குடல்கலங்குதே

அப்பனேநான்செய்த கொடுமையின்காரணத்தினலோ பெருகாலம் உ
ங்களாற்படாதபாடுகளைப்பட்டு மனம்வருந்தியதேவர்க்கள்ரிஷிக்கூட்ட
ங்கள்சபித்தவலியினலோ அல்லது தேவதேவோத்தமனய் ஆதிமூலமா
யிராநின்ற சிவபிரான்மற்ற- பிரமன்-விஷ்ணு- சோபித்த நிமித்தமோ
மற்றும்எந்தவிதத்திலோதெரிகிலேன் உன்னையிழந்துசோபக்கனலிலகப்
பட்டுவாடுகின்றேன் பொன்னையொத்தபிறகாசத்தைப்படைத்ததிருமே
னியைப்பெற்றிருக்கின்ற கந்தசுவாமியை இந்தபட்டணத்துக் கனுப்பிக்
சொடியபோரையுண்டுபண்ணிச்சிறந்த தவங்களைச்செய்துபெற்றஎன்ன
சைப்பிள்ளைகளனைவரையும்சொல்லுவித்துமகத்தாகியவிசனத்தைத்தந்து
நீயுமிறந்துபோம்படிக்குக் கலகத்தைமூட்டியதேவர்க்கள் பெண்டுகள்
முற்றினும்என்னைப்போலவே பிள்ளைகளைப்பறிகொடுத்து பரதவிக்கக்க
டவர்என்பிறியமுள்ளமகனே உனக்குமுன்னந்தெய்வலோகத்திற்போயி
ருந்ததம்பியராகியவச்சிரவாகுவும்வடவைக்கனலையொப்பக்காந்திக்கொ
ண்டிருக்கும் அக்கினிமுகன் புசபெலபராக்கிறமசாலிகளாகியமூவாயிரர்
மற்றசுற்றத்தினரும்உன்வரவையறிந்துதமையனென்னும்அன்பினலெ
திர்கொண்டுசூழ்ந்தழைத்துப்போயினரோஅப்பனேமன்மதனிலும்வன
ப்புள்ளஉனதுவடிவமானதுபின்னப்படவும்என்சரீரமும்மனதும்வாடி
வதங்கிப் பரதவிக்கத்துணிவுகொண்டு வானநாட்டைச்சேர்ந்தனைஉன்னை
த்தேடிப்போகாமல் இந்தமனம்வருந்தியிருக்கின்றதுகுமாரனேஉன்னி
டத்திருக்கின்றபட்சமும் திரேகசம்பந்தமும்வெகுநேத்திநேத்தியென
க்கவலையுற்றும் அப்பனேபுஷ்பங்களினிடத்திற் பெருகும்தேனைக் கிறி
கிக்கும்வண்டுக்கூட்டங்களைப்போல ரூபலாவண்ணியமுள்ள தருணமங்
கையரிட நிலோத்பலத்தையொத்த விழிகளுக்குவிருந்தாசத்தோற்ற வி
ருந்த உனதுவடிவின்சீரையும் முகாரவிந்தத்தின் சுந்தரத்தையுங் கண்
டுகளித்திருக்கும் பேற்றையற்றேன் குமாரனே தேவாமுதத்தையொத்த
உன்னைஇழந்தயான் இனியிவடத்திலிருந்து இவ்வாழ்வை விரும்பேன்
மேலும்உயிருடன்திரியும் பிணத்தைப்போலாயினேன்புத்திரசிகாமணி
யே என்பிறியமே என்னுவியே நமக்கஞ்சித்திரியும் தேவர்க்களுக்கு மி
குத்த துன்பங்களைச்செய்யவேண்டாம் அதினற்றீங்குவிளையும் அரசுக்
குமழிவுநேரும் செல்வவளங்களுக்குக் குறைபாடுண்டு யிதுநல்லகாரிய
மல்லவென்றுபலதிரம்சொன்னேன், அதனைஎண்ணிப்பாராமல் ஐயனே
உன்னைராசாதிராசன்தோற்றனன், இனிபுத்திரசோபத்திற்பட்டு யிரவா
மலுயிர்தரித்திருக்கவறியான் நிமைப்போதும்பிரிவின்றி யிருந்தமன்ன
னுக்கித் துன்பம் நேருவதோ தெய்வமே உனக்கும் எங்களிடத்திற் ப
கையுண்டோ மகனேநானெப்படி தரித்திருப்பேன் வயறுகுமுங்கிக்கு

டல்சுருண்டுவருத்துகின்றதேயென்று இவ்விதங்களாகப்பன்னிப்பன்னி
திருக்தேவிபுலம்புகின்றதறுவாயில் ராசாதிராசனும் புத்திரசோபமேலி
ட்டலைப்பதாற் கதறிவாடினன், அத்தறுவாயிற் பானுகோபன்துணைவிய
ரும்பர்துவர்க்கங்களும்கன்றைப்பறிகொடுத்துவருந்தும்தலையிற்றுலைவ
ப்போலத் திகைத்துமதிமயங்கிவிழுந்து புரண்டுசோபித்துபடாதபாடு
களைப்பட்டுப்பாதவித்தனர், பட்டணமெங்களும் பெருத்திருந்தமங்க
லவாத்தியமுழக்கமும் களியாடலுமற்று ஓவெனப்புலம்பு மோசைபெ
ருத்து திசைகளெங்குமொலித்தது அத்தறுவாயிற்பலருந் துக்கிக்கின்ற
முன்னிலையிற்பெருகிய கண்ணீரானது ஆற்றைப்போலப் பெருகிச் ச
முத்திரஉவரப்பையாற்றி மேலிட்டோடியது சவுனகாதிரிஷிகளே, அந்
தப்பட்டணம் பட்டதுக்கவருத்தங்களை இன்னவிதமென்றுஎன்னொரு
வாயினாற் சொல்லிமுடியாது பெகுகாலமாய் அகண்டசாம்பிருச்சிய வி
பவத்திலழுந்தி செசேந்திரபோகத்தை அனுபவித்து ஒருவருமெதிரில்
லாமற் செயசாலிகளாகவிருந்தவர்களுக்கு மேகப்பரிசமில்லாமற் சடுதி
யிலிடித்ததைப்போலச் சொல்லப்படாதஅபாயம்நேருமாகில் அவர்களு
க்குக்கிடைத்த துன்பத்தைக்கணித்து முடிவதோ பின்புராசாதிராசனாகி
யசூரபதுமன்சற்றுதேறி புலம்புவதையொழிந்து கற்புக்கரசியாகிய ப
துமகோமளையை நெருங்கிப்பற்பலகாரணங்களைப்போதித்து ஒருமை
ப்படுத்திப் பெண்கள்கூட்டத்துடன் அந்தப்புரத்துக்கனுப்பிவிட்டுமா
னமுங்கோபமும் மனதைவாட்ட வடவைக்கனலைப்போலச்சீறி கண்களி
ல்அனற்பொறிசிதறத் தீயும்புகையுமெழப் பெருமூச்செறிந்து பக்கத்
திலிருக்கின்ற சிலதானவரைப்பார்த்து பகைவர்பெருக் கனைத்தையும் இத்
தினம்கண்டதுண்டப்படச் சங்கரித்துப் பெருகியோடும் உதிரத்தைநெ
ய்யாகச்சொரிந்து ஆபிசாரவேழ்விவையை முடித்து யிறந்துபோனபி
ள்ளைகள்முதலானவர்களை எழுப்பக்கடவன் அதுவனாயிற் குமாரனுடலை
எண்ணைக்கொப்பரையிற் சேர்த்துப்பதலப்படுத்தக்கடவீர்களெனக்கட்
டளையிட்டனன், அதனைச்சபையிலிருந்தவர்க ளனைவருங்கேட்டு யிதுத
கும்தகுமெனச் சூரபதுமன் மந்திராலோசனைக்கு மெச்சிக்கொண் டா
டினர், அரசன்பணித்தபடிக்குக்காரியப்பேர்கள் அவ்வுடலைசேமமாகவி
ருக்கின்றஇடத்திற்சேர்த்துகண்ணிமையைப்போலயிடைவிடாமற்போ
ற்றியிருந்தனர், பின்புராசபரமேஸ்பரனுக்குக் கோபம்மேலிட்ட படி
யால் இதனைச்சொல்வதாயினன், பகைவர்பூண்டில்லாமல் என்னிளவலா
கியசிங்கமுகனுக்கு உணவாகக்கொடுப்பேன் அவர்கள்சமாதானத்துக்கு
வரினும் சம்மதப்படமாட்டேனெனப்பொங்கிகரங்களைக்கூப்பிக்கொ
ண்டு காத்திருக்கும்பலதானைப்பார்த்து பூமண்டலவடபாரிசத்தில்வினு

ங்கும்ஆசுரமென்னும் பட்டணத்துக்கதிவேகமாயோடி அரசரிமைமாளே
ச்செலுத்திவருகின்றனள் துணைவன் சிங்கமுகனைக்கண்டுநாம்பணித்ததாக
த்தெரிவித்துஇந்தநிமிஷத்திற்றருவிரொனக்கட்டளையிட்டுத்துரத்தினன்,

—— ——

## சிங்கமுகாசூரன்வதைப்படலம்.

——

சவுனகாதிதவத்தரே, மேற்குறித்தபடிக்குச் சூரபதுமன்கோப
தீபிதனுய்ப் பணித்தவுடன் அரசனைவணங்கிசபையைக்கடந்துமனோவே
கத்தினு மேலிட்டோடி உத்தரபூமிஎல்லையவளைந்திருக்கும்சமுத்திரக்
கரையைச்சேர்ந்து சக்கிரவாளகிரிக்குச் சமதையாகவளைந்து பொன்மய
மாய்கொம்மைமகளாகிய உறுப்புகளைப்பெற்று டைவனாவாட்டவல்லசி
த்திரப்பிறதமைகள் மலிந்திரானின்ற மதிலுக்கணியாக நவரத்தின காந்
திகளைவீசி அண்ட அடுக்குகளைப்போலப் பலநிலைகளைப்பெற்று வானத்
தையளாவநிற்கின்ற கோபுரவாயலைக்கடந்துசெல்வப்பெருக்கைவாய்ந்து
பலஅந்தவஸ்துகளையுடையதாய் நவரத்தினகாந்திகளைவீசிச் சித்திரவிசித்தி
ரங்களாகவிருக்கின்றமாளிகைகள்உப்பரிகைகள்மேடைகள்மண்டபங்க
ள்கூடங்களேமுதலியவைகளிருமருங்கினும் அணிபடப்பெருத்துவிசா
லமாய்நீண்டிருக்கும்ராசவீதிகளையும்குபேரனும்மெச்சிக்கும்படிக்கு ரத்
தினராசிகளையும்பொற்குவைகளையும்பட்டுப்பட்டாடைகளையும்மற்றசிற
ந்தவஸ்துக்களையும் ராசிராசியாகக்குவித்துவணிகர் பெருத்துக்கல்லென்
னும்ஓசையுறுதிருக்கும் அங்காடிவீதிகளையும்பிறிமித்துமப்புறத்துக்கட
ந்துஅரசன்மாளிகையைச்சேர்ந்துவிசாலமாகப்பொற்சுவர்பரந்திருக்கு
மத்தியில்வயிரத்தினலும் மாகதத்தினலும் சித்திரித் திருக்கின்றபருத்த
தூண்களை அணியணியாகநிறுத்தி பவழப்போரிகளும்பளிங்கினற்பரப்
பிய உத்திரங்களும் பரப்புகளும்விளங்க பற்பலமணிகளினல் விழிகளு
க்கலங்காரமாகச்சோதித்திருக்கும் சபாமண்டபத்திற்போய் அவுணராச
ர்போற்றமந்திரிபிறதானிகள் பக்கங்களிற்சூழ்ந்திருக்கச் சேனைத்தலைவர்
கள்வடவைக்கனலைப்போல உருத்தபார்வையுடன் ராசராசன்பணிவிடை
களுக் கெதிர்பாத்திருக்க பெரியோர்கள்பந்துசெனங்கள் நெருங்கி யிரு
க்கபட்டுவர்புசழ வித்துவச்செனங்கள்பரவக் கட்டிக்காறர் எச்சரிக்கை
களைச்சொல்லிவர கங்கையினிடத்தெழும் அலைகளிற்காட்டும் நுரைகளை
பொப்பவிளங்கும் வெண்சாமரைகளைப்பலர் வீசவும் அருகு ஆலவட்

டங்களையசைக்கவும் சந்திரர்கவிந்திருப்பதுக்குச்சமதையாக வெண்பட்
டினாலும் ஆணிமுத்துகளினாலும் சோடித்துவிளங்கும் பூச்சக்கிறக்கொ
டைகள் கவிந்திருக்கும் நீழலிற்சிரோரத்தினவகைகளினாற் சிற்பிவல்லப
ங்களைக்காட்டி யமைத்திருக்கும் சிங்காதனத்தில் வீரசிங்கத்தைப்போல
வீற்றிருந்து - அரம்பை - யூர்வசி - திலோத்தமை - மேனகையாதிய தேவக
ன்னியர்கள் சதிமுறையே நடித்து குயிலு நாணப்பாடியும் கருடகாந்த
ருவர்தெய்வயாழ்களைமீட்டிசெவிகளுக்கினிமையாகச் சங்கீதங்களைச்செய்
திருக்கவும் இவர்கள்மீதுவிழிகளைப்பரப்பிகிட்டவட்டங்களை கட்டளையி
ட்டுக்கொண்டு சிங்கமுகங்களாயிரம்விளங்க சூரியனைப்போலவயிரமுடி
கள்துலங்கஅரசுசெலுத்திவருஞ்சிங்கமுகாசூரனைத்தெரிசித்தவுடன்போ
ற்றிக்கொண்டு சமீபத்திற்போய் பாதாரவிந்தங்களிற் சேவித்தெழுந்துக
ரங்களைக்கூப்பிவணங்கி அடக்க வொடுக்கங்களுடன் பக்கங்களில்நிற்கி
ன்ற வேகமுள்ளதூதர்மீது விழிகளைப்பரப்பி சரீரமுற்றும் வியர்க்க வ
ருந்தி வேகமாய்வந்தகாரியமென்னை துரிதமாய்சொல்லக் கடவீர்களெ
னக்கேட்டவுடன் வாயைப்பொத்திக்கொண்டுசுவாமி அகண்டமண்டலா
திபராகிய தமையன்தேவரீரைவரும்படிக்குக்கியாபகங்கொண்டனர்
துரிதமாயெழுந்தருளவேண்டுமென்று சரவேகத்திலுமேலிட்டுச்செல்ல
வல்லதூதர்கள் சொன்னதைச்சிங்கமுகாசூரன்கேட்டு நல்லகாரியம் அவ
டத்திலேதேனும் புதுமைகள்நடந்ததுண்டோ அதனையும்சவிஸ்தாரமா
கத்தெரிவிக்கக்கடவீர்களெனப்பேசியபோது தூதர்வணங்கிக் கர்த்தனே
திருக்கயிலையைக்கடந்து பூலோகத்துக்குவந்து செயசாலியாகியதேவரீர்
தம்பியையும் மாயைவல்லபங்களைப்பெற்றிருந்த கிரவுஞ்சபர்வதத்தை
யும் வெற்றிவேலினாற்பிளந்துகொன்ற - பாலசுப்பிரமணியன் - பிரமன்வி
ஷ்ணுமுதலியர்போற்றிவர ராசபரமேஸ்பரன் வாசஞ்செய்திருக்கின்றம
யேந்திரபுரியைச்சேர்ந்து பாசறைவிடுதிகளை உண்டுபண்ணிக்கொண்டு
அதிலிருந்தனன்' இந்தசேதியைச்சக்கிறவர்த்திதெரிந்து கோபங்கொண்
டுகணக்கிறந்த சதுரங்கச்சேனைவெள்ளங்களுடன் புத்திரவற்கங்களையும்
சேனைத்தலைவரையும் மந்திரிபிறதானிகளையும் மற்றுமிராதின்றபிறமுகா
ளையும் ஒருவர்பின்னொருவராகச்செலுத்தினர், அவர்கள்போய் அகோர
வுயித்தியங்களைச்செய்துசெய் து மாண்டதல்லது ஒருவராவது திரும்பிப
ட்டணத்தைச்சேர்ந்ததைக் கண்டிலம் இவர்களில்விவேகசாலியாகிய இர
ணியன்மாத்திரம் போரினைச் செய்திளைத்தோ மற்றேதினைக் கருதியோ
தெரியாது மச்சவுருக்கொண்டு கடலிற்பாய்ந்துமறைந்தனன், இப்பகல்
பானுகோபன் கணக்கிறந்தபடைகளைக்கூட்டிக்கொண்டுபோய்கொடிய
போனாச்செய்து கடையில் தூதனால்வெட்டுண்டுமாண்டனன், பெரிதா

கியஇந்தநஷ்டத்தைக்குறித்து ராசாதிராசன் மிகவும்வருந்திமனந்தேறி வடவாமுகாக்கினியைப்போலப்பொங்கி தேவரீனாத்தரிவிக்கும் படிக்கு அடியோங்களுக்குக்கட்டளையிட்டனுப்பினர், இனிவிரித்து விரித்துச்சொல்லவேண்டுவதில்லை எமதுசக்கிறவர்த்தியைத்தவிர பிறமுகராயிருப்பவர்கள்வீரமாமயேந்திரத்திலொருவருங்கிடையாதுசேனைப்பெருக்கும்வறந்தது ஆதலாற்குமசஞ்செய்யாமற் றுரிதமாயெழுந்தருளவேண்டுமெனப் போற்றுகின்றதறுவாயில் இக்காரணங்களனைத்தினையும் கேழ்விப்பட்டவுடன் கோபமும்மானமும் மனதைவருத்தியலைக்கத் துயரமேலிட்டுத்திரோகத்தைக்கொளுத்தப் பெருமூச்செறிந்துகொண்டு சிங்காதனத்தைவிட்டெழுந்து மந்திரிபிறதானிகள்சேனைத்தலைவர்கள்மன்னமண்டலிகர்போற்றிவர ஆஸ்தானமண்டபக்கடைவாயலினிடத்தில்வந்துசரங்களைக்கட்டிக்கொண்டு காத்திருக்கின்ற தூதரைப்பார்த்து நீங்கள்துரிதமாயோடி நமதுசேனைகளனைத்தையும் கொண்டுவந்துசேர்க்கக்கடவிரென்று கட்டளையிட்டனன். அவர்களும் வணங்கிப்பறந்து பட்டணத்திலும் திக்குகியாந்திரங்களினும் புயங்கள்தினவுண்ணச்சண்டைகிடையாமல் மனஉச்சாகமற்றிருக்கின்ற சேனைகளுக்குப்பிராணனைக்கொண்டுபோகும் எமபடாளைப்போலப் படையெழுச்சியென்று சிங்கமுகாசூரன் பணித்ததைத்தெரிவித்தமாத்திரத்தில் மனவெழுச்சிபெற்று புயங்களபூரித்து விம்மச்சகலாயுதபாணிகளாய்த் தங்கள்தலைவனைத்தழுவிப்பெரும்புறக்கடலைப்போலச்சேர்ந்து ஆர்ப்பரித்துக்கொண்டுவந்து ஆசுரமென்னும் சிறந்தபட்டணத்தைச் சேருமுன்னிலையிற் சாரதியானவன் நவரத்தினமயமாய் - அச்சு - மச்சு - முதலியசிங்காரங்களைக்கொண்டுவிளங்கும்தேனைபற்பலகோடி - சிங்கங்கள் - யானைகள் - புலிகள் - புரவிக்கூட்டங்கள் முதலியமிருகங்களை யணியணியாகப்பூட்டி பூமிதத்தளிக்கும்படியாகக்கெற்காத்தொனிசெய்தோடத் தாத்திவந்து மாளிகைக்கெதிரில்நிறுத்தியதறுவாயிற் சிங்கமுகாசூரன் ஆயுதச்சாலையிற்போய் வயிரக்கவசத்தைவரையையொத்த மார்பிலிறுக்கி மூன்றும்பிறைகளளவற்றவை எககாலத்திற் றோற்றுமாறுபோல வீரபட்டங்களை நெற்றியிற்றரித்து சாசாடுவிரற்கோதைகளைப்பூண்டு சூரியனைப்போல விளங்கிக்கொண்டிருக்கும ஆயிரங்கிரீடத்திலும் தும்பைமாலைகளைச்சுற்றி அட்சயத்தூணிரத்தை முதுகில்இறுக்கி மந்தாத்தைநிகர்த்த பருத்தவில்லைத்தோளில்மாட்டிதேவப்படைகளையும் மாய்கைக்குரிய கணைகளையும் சேகரித்துக்கொண்டு வீரவெண்டயங்களைப் பாதத்திற்கட்டி இவ்விதப் போர்க்கோலத்தைப்பெற்றவனாய் வெளிவந்து மேருவையொப்ப நிற்கின்ற ரதத்தின்பேரில்தாவியேறிவீற்றிருந்ததறுவாயில்மந்திரிபிறதானிகள் மன்னமண்

டவீசர் படைத்தலைவர் பத்துவற்சங்களிற் சிறந்தவீரர்களாகியாகியபிரமு
கான் போரணிகளைத்தாங்கிச் சற்வாயுதபாணிகளாய் தங்கள் வாகனங்களி
லேறிக்கொண்டு அாசனைச்சூழ்ந்து நடக்கின்றதறுவாயிற் சொற்ணமய
மாய் பாரித்திருக்கின்ற தோணிகள்சொற்கரத் தொனிகளைச்செய்துக்கொ
ண்டோடவும் மணிகளிருமருங்கினும் மாறியொலிக்கத்தக்கதாக நீலகி
ரிகள் கால்முளைத்தசைவதைப்போல யானைக்கூட்டங்கள்மும்மதங்களை
யும் பெருக்கிவிதிட்டு யிருப்புலக்கைகளைத் தூதிக்கைகளிற்பற்றி மேக
ங்களும் நடுங்கிப்பறக்கச் சுழற்றிச்செல்லவும் பஞ்சலட்சணங்களையும்
வாய்ந்து அலைகளைப்போலத்தாவும் வேகமுள்ளதாய் வானத்திலும் திசை
களிலும் கடல்மீதிலும்பாய்ந்து நிமைப்போதில்மீளவல்ல குதிரைப்பந்
திகள்நடக்கவும் பாதகங்களனைத்துஞ்சேர்ந்து உருவகப்பட்டுப் பாந்
தறைப்போலக் கறுத்ததிரேகத்தையும் பற்பலபடைகளையும் பரித்து வீ
ரங்களைப்பேசித்தத்தமது தலைவனைவளைந்து வீராவேசங்களுடன் கால்ப
லங்கள்சாயவும் இத்தகையநாற்படைகளின்பெருக்கை இவ்வளவுவெள்ள
மெனக்கணிக்க எத்தகையராலுங்கூடுவதோ இந்தசேனசமுத்திர மத்தி
யிற்சிங்கமுகாசூரன் கெம்பீரமாகச்செல்கின்ற தறுவாயில்- ரணபேரி-
செயபேரி- வெற்றிச்சங்கம்- குடமுழா-ஆகுளி-சின்னம்- தப்பட்டை
தூடுமு-எக்காளை-முதலிய போற்பறைகள் கணகணென்று திசைகள்செ
விடுபடமுழங்கவும் துசபடங்கள்வானத்தைமறைத்து யிருளைப்பெருக்
கிப்படபடத்தசெதானிகளைக்காட்டவும்அக்காலத்திலெழுந்த தூளிபடலத்
தின் பெருக்கினைச்சொல்லி முடிவதோ மேகசாலங்க ளெங்கனுமூடிய
தைப்போல மண்விண் ணெவ்விடங்களினு படர்ந்து பிராணிகளைமயக்
கவும் -பூதபைசாசங்கள்-கழுகு-காக்கைகள்- புசியபிணாகிடைக்குமென்
றுங்களிப்பினுல்பிணாச்சலிட்டுக்கொண்டு துடரவும்இவ்விதஆடம்பரங்
களுடன் வானவழிக்கொண்டுபோய் ஒருநாழிகையில் வீரமாமயேந்தி
ரத்தைச்சேர்ந்தவுடன் சிங்கமுகாசூரான் தன்தேரைவிட்டிறங்கி மந்திரி
பிறதானிகளாதிய வீரர்சூழ்ந்துவரப் டொலிவற்றுஓசையடங்கி யிருக்கி
ன்ற மகாசபையிற்பிறவேசித்து அரியணையின்மீது கவலையிலமுழ்ந்தியம
னத்தனுய் முகவாட்டத்துடன் வீற்றிருக்கின்றதமையனைக்கண்டு பாதா
ரவிந்தங்களில் வணங்கியதறுவாயில் ஆவலுடன் ஆசானுபாகுவாக விருக்
கின்ற நீண்டகரங்களினுல்வாரியெடுத்து வயிரக்குன்றுக்குச் சமதையாக
விளங்குகின்ற விசாலமாகியமார்பிலிறுகச் சேர்த்தணைத்து க்ஷேமங்களை
விசாரித்தபோது சிங்கமுகாசூரான் தமையனைப்பார்த்து தேவரீர்முகாரவி
ந்தம்வாட்டமுற்றசஞ்சலசித்தனுயிருக்கவேண்டுங்காரணமென்னையெ
னப்பரிந்துவிசாரிக்கத் துணைவனைப்பக்கத்திருக்கின்ற சிங்காதனத்திலம

த்தின்மனதுக்கினிய சகோதரனேகேழ்ப்பையாகமுன்னம் நீமந்திரா
லோசனையைச்செய்வதைக்குறித்து இவடம்வந்திருந்துபோனபின்புநம
துதுணைவன்தாருகாசூரனையும் கிரவுஞ்சபற்வதத்தையும்வேலாயுதத்தினு
ற்பிளந்துகொன்றபாலசுப்பிரமணியன்மேலிட்டு துணைவர்படைவீரர்பூ
தவெள்ளங்களுடன் கடலைக்கடந்து இந்தபட்டணத்துக்கருகில்வந்துபா
சறைவிடுதியைஉண்டு பண்ணிக்கொண்டு அதிற் சேர்ந்திருக்கின்ற சேதி
தெரிந்தவுடன் நமதுபடைவீரர் பிள்ளைகள்மந்திரிபிறதானிகளைக் கணக்
கிறந்த வெள்ளம் ரதகெசதுரகபதாதிகளைக்கூட்டிச் செலுத்தியபோது அ
வர்களனைவரையும் சின்னபின்னப்படவாட்டுவித்தனன், இரணியன்மாத்
திரந்தப்பி சமுத்திரத்திலொளித்திருக்கின்றனன், இந்தமானக்குறைவு
ம்விசனமும் மேலிட்டுவாட்டுவதினால் அக்குறைகளைப்போக்கிச் செயப்
பிறதாபத்தைப் பெறும்பொருட்டு உன்னைத்தருவித்தனன், இந்தசேதி
களையோசித்துத் துரிதமாய்ப்பகைவரைக்கடக்கவேண்டுமெனச்சூரன்பே
சிய வாசகங்களைக்கேட்ட சிங்கமுகன் மனவருத்தத்துடன் தமையன்பா
தாரவிந்தங்களில் மீட்டும்வணங்கி இதனைச்சொல்லுவதாயினன், ராசா
திராசனே புசபெலபராக்கிறமசாலிகளாகிய பிள்ளைகளையும்பூர்வீகமாக
விருந்தமதியூகிகளாகிய மந்திரிபிறதானிகளையும்வலிக்கொப்பற்றபடை
த்தலைவர் பந்துவற்கங்களையும் செயசாலிகளாகிய சேனைப் பெருக்கையு
ம்வரையறமாளக்கொடுத்துத் தனியனாய் திகைத்திருக்கின்றனை தமைய
னே கெடுமதிகண்ணுக்குத் தோற்றாதகாரணத்தினால் இத்தகையதுன்பத்
திற்கொண்டுவந்துவிட்டது ஆதியந்தமற்ற சுயஞ்சோதிக்கடவுளை மதி
யாமற் பாலன்பாலனென்றிகழ்கின்றனை நமதுமுன்னவர்கள் பலரும்ம
திக்கவாழ்ந்த இந்தமரபுக்குத் தீங்குநேரிடுவதைச் சற்றும்யோசித்தவன
ல்லை முன்னம்மந்திராலோசனைகளைச்செய்த தறுவாயில் இத்தகையஅன
ர்த்தங்கள் விளையுமெனத் தெரிவித்தகாரணங்களை விடத்தைப் போலமதி
த்து நீக்கிவிட்டனை பிராரத்தவினையின் முயற்சிகளைக் கடந்த புத்திவான்
களொருவருங்கிடையாது பரமசிவச்செயலினால்நேரத்தக்கநன்குதீங்கு
கள் யாவருக்குந்தோற்றுவதரிது ஆதலால் உன்னைவெறுத்தாவதென்னை
இதுபரியந்தம் நடந்துபோனகாரணங்களை நினைந்துநினைந்து வாடுவதிற்
பயனென்னையுங்காணேன் யிரைச்சலிட்டோடுகின்றபெருவெள்ளத்தை
ச்சிறைபடுத்தக்கூடுவதோ அவ்வாறேலோகநாயகனாகிய சிவபிரான் அரு
ட்டிறத்தையும் மீறவல்லமோ ஆதலாற் றேவரீர் சோதிக்கையின்படி
க்கு இந்தநிமிஷத்திற்சேனைப் பெருக்குடன்போய் சத்துருக்களை மட
க்கிக்கொண்டு நான்செய்யப்போறசண்டையின் முயற்சிகளைத் தேவரீர்
கேழ்விப்படுந்தோறும் களிப்பீர் பூதப் படைகளையும் படைவீரரையுந்

வாரிவாரிவாயிற்போட்டுடதாவங்கிக் கிரையாக்கப்பசிதணியவல்லவெனவ் அவர்
களைஒருபொருளாகமதித்தவனன்றுசிவசுப்பிரமணியதேவர் சோபித்தே
வவிருக்கின்ற வெற்றிவேலாயுதத்துக்குத் தப்பிப்பிழைப்பேனாகில் இவ
டம்வந்து உம்மைக்காணப்பெறுவேன் அல்லதுரணக்களத்துக் கிலாயா
வதுண்மையாகும்மேலும் யின்னமுமிருக்கின்றசொஞ்சச்சேனைகளும்ப
டைவீரரும் அவ்வாறேசந்தேகமில்லாமல் மாள்வர் இதைசந்தேகிக்கவே
ண்டுவதில்லை பின்புதேவரீர் திருவுளத்தில்நினைந்தபடிக்கு முடிக்கக்கட
விரொன்றுபற்பலநிர்த்தைவார்த்தைகளைப் பேசிகாட்டி அவடத்தில் நிற்க
மனமில்லாதவனாய் தமையனைவணங்கிச்செலவுபெற்றுசபையைக்கடந்து
வெளிவந்து தன்பரிசனங்கள்சூழ்ந்துவரத் தனக்கேற்படுத்தி யிருக்கின்
ற நவரத்தினமயமாகிய மாளிகையைச்சேர்ந்து ராசராசன்கட்டளையின்ப
டிக்குத் தனக்காகசமைத்துவைத்திருக்கின்ற அன்னக்குவைகளையும் யா
னை-புலி-கரடி-கடமை-மான்- முதலியவூன்களை பதனமிர்துராசாரங்க
ளுடன் செய்து குன்றுகளைப்போலப் பதலைகளிற்சேர்த்திருப்பதையும்
மலைகளைப்போலக்குவித்திருக்கின்ற கச்சாயவகைகளையும் பொரியல் கறி
யல்வறல் சுண்டல் விதங்களையும் தாரிவாயிலடைப்பதைப்போல ஏராள
மாகஆயிரங்கரங்களினாலும் வாரிவாரியுண்டு ஆயிரக்கணக்கிற் குடங்களி
ல்நிரப்பிவைத்திருக்கின்ற ஆவினதிரட்டுப்பால்தயிர்தேன் இவற்றினை பி
லங்களிற் செலமோடுவதைப்போல கடங்கடமாகவெடுத்துவிட்டும்உதி
ரம்நிறைத்திருக்கின்ற பதலைகளையெடுத்து தாகசார்த்தியாகத் தேக்கிடக்
குடித்தும் இவ்விதங்களிற் திருத்தியாகப் பொசித்து முடிந்தவுடன்வா
ய்பூசி கைகால்களைச்சுத்திசெய்துக்கொண்டவனாய் குன்றையொப்பவிள
ங்குஞ் சிங்காதனத்தில்வீற்றிருந்து திசைதிசைகளிற் சாதவழி மணத்தை
வீசியிருக்கும் கலவைச்சாந்துக்குடங்களை மார்பிற்சொரிந்து பூசிக்கொ
ண்டுபுனுகுசவ்வாதுக்குழம்பையப்பி தேன்களையிறைத்துப் பரிமளித்தி
ருக்கின்ற மல்லிகையிருவாட்சி சண்பகம்பாரிசாத மலர்க்களினாற் சோ
டித்தபருத்ததண்டைமாலைகளை மார்பிலுந்தோளிலும் சூடிக்கொண்டு க
ற்பூரதாம்பூலவிடையத்தைச்செய்து விலையுயர்ந்தபீதாம்பரத்தையுடுத்து
சூரியக்கிரணங்களைப்போலச் சொலித்திருக்கும் சிரோரத்தினவகைகளி
னாற்சோடித்த பாரித்தவயிரமுடிகளை ஆயிரஞ்சிரங்களினுங் கவழ்த்து ந
வரத்தினமயமாகச்செய்திருக்கும் வாகுவலையங்களைமாட்டி பருத்த முத்
தாரங்கள் மோகனமாலைகள்சரப்பளிபதக்கங்களைப் பரந்தமார்பினிறை
யச்சாத்தி செவிகளிற்சூரியனையொத்த மகரகுண்டலங்களைத்தூக்கி ஆயி
ரம்வெள்ளியங்கிரியி னுச்சிகடோறும் பிறைகளின்சமோகங்கள் தோற்
றமாறுபோலச்சிங்கமுகங்கள் விளங்கும்நெற்றிகள்முற்றினும் முப்ப

ட்டைகொண்டதிரு நீறுசாற்றித் திலதப்பொட்டுகளுமிட்டுமுற்றியவுட
ன்பரமசிவனைக்குறித்துத்தான்செய்ததவமு ற்சிக்கிரங்கிக்கடாட்சித்திரு
க்கின்றபருத்ததண்டாயுதஞ்சூலமுதலியபடைகளைப் பரித்துதேவாஸ்திர
விதங்களைச்சேகரித்துக்கொண்டு தாயாகியமாயை தயைசெய்திருக்கின்ற
பாசத்தையுங் கரத்திற்றாங்கி மந்தரகிரிகளைப்போல விளங்கும் பருத்த
தனுசுகளைத்தோள்களில்மாட்டி திவ்வியபாணங்களைக்கரங்களிற்கொண்
டு அம்புறாத்தூணிரத்தைமுதுகிலிறுக்கி அபேதவயிரக்கவசத்தைமார்பிற்க
ட்டி இத்தகையபோர்க்கோலத்தைத்தரித்துக்கொண்டவுடன் வெளிவந்து
பத்துநூறாயிரம்பரிகள்யானைகள்பூண்டு நவரத்தினமயமாய்ச்சித்திரவிசித்
திரங்களாக மச்சுகொடுங்கைமுதலியசிங்காரங்களைக்கொண்டுவானத்தை
யளாவநிற்கின்றதேரின்மீதுதாவி யேறிவீற்றிருந்தனன், அத்தருவாயில்
தன்மனதுக்கினிய மந்திரிபிறதானிகள்சேனைத்தலைவர்கள் தங்கள் வாகன
ங்களிலேறிக்கொண்டு வந்து சூழவும் அருகு ஆலவட்டம்வெண்சாமரை
சின்னம் சத்திரவட்டக்கொடைகளைப் பல்லாயிரம் அவுணவீரர்தாங்கித
ங்கள்பணிவிடைகளைச்செய்துபோகவும் பட்டுவர்புகழவும்கட்டியக்கார
ர்எச்சரிக்கவும் மங்களவாத்தியங்கள் முழங்கவும் கொடிகொடைகள்ம
கரதோரணங்கள் நெருங்கவும் இவ்விதராசடரிவட்டணைகளுடன் வெளி
வந்தகாலத்திற் பூரணச்சந்திரோதையத்தைக் கண்டகடலையொப்பாரதகெ
சதுரகபதாதிகள் செயவுச்சாகங்களுடன் ஆவாரித்துக்கொண்டுவந்துசூ
ழ்ந்தனர், சவுனகாதிரிஷிகளே அந்தசதுரங்கச்சேனைகளின்தொகைப்பி
றிவுகளை இவ்வளவென்று ஒருவராலுங்கணிக்கப் படுவதன்று அவ்வீரர்வ
லிகளிற் சிலசொல்லக்கேழ்ப்பீராக—பொன்னுலகவாசிகளாகிய தேவர்க்க
ள்பெருமிதங்களும்வாழ்வும் பூமண்டலத்தில்வாழும் அரசர்கள்சிறப்பு
களும் வீரத்தன்மையும்தானவர்கள் துன்பங்களையும் நீக்கித் தம்மினத்த
வருக்குயாதொருகுறைபாடுகளுமில்லாமல் அகண்டசாம்பிறாச்சியச்செ
ல்வங்களை யனுபவித்துக் களித்திருக்கவைத்த செயசாலிகளாயும் கொலை
களவுகட்காமமென்பதை வேதங்களினொழுக்கமாகக்கொண்டு நடத்த
வல்லபாதகராகவும் பலவிருட்சங்கள்பெருத்த கானகத்தைத் தகிக்கத்தக்
கதாபாக்கினியையொத்த செம்பட்ட மயிர்விளங்கும் காட்சியைப்பெற்
றவர்களாகவும் சீவகாருண்ணியம் தயைதாட்சண்ணிய மெவ்வளவுங் கி
டையாத கொடியமனதைப்பெற்றவர்களாகவும் தெய்வலோகம்பூமண்ட
லமுதலியதலங்களிற் சுந்தரவதிகளாய் கற்புத்தன்மை பொருந்திய மங்
கையர்மீதுகாமுற்று அக்காரணத்தினால் மன்மதன்செலுத்தும் பஞ்சபு
ஷ்பபாணங்களும் சுகந்தபரிமளங்கள்வீசும் மலர்மாலைகளும் எக்
காலத்தும் நீங்காதபுயாசலங்களைப்பெற்றவர்களாகவும் பற்பலசண்டை

களைச்செய்து பர்வதாகிருதியாக விளங்கும் விசாலமாகியமார்பினிடத்ந
ல்லது மற்றகிரோகஉறுப்புகளிற் சாயப்படாமற் செயப்பிறதாபத்தைப்
பெற்றிருக்கின்ற வீராதிவீரர்களாகவும் விண்மண்பாதலமெனச்சொல்ல
நின்ற திரிலோகங்களில்வாசஞ்செய்கின்ற சீவகோடிகளினதுபிராணனை
ப்பரமன்கட்டளைப்படிக்குக் காலாதிகளிற்கொண்டுபோக வல்ல எமனை
யொப்பப்பலவந்தமாக மானிடர்மிருகங்கள்முதலிய செந்துக்களைவாரி
வாரிபிலத்தையொத்தவாய்களிற்போட்டு யிருகடையினும்உதிரம்பீரிட்
டோடமென்று உதாலங்கிக் கிணையாகஉண்டு களிக்கும் பசிப்பிணியை
ப்படைத்தவர்களாகவும் வடவைக்கனலைப்போலக் காந்திக்கொண்டிருக்
கும் சிவந்தமுழிகளைப்படைத்தவர்களாகவும் அஷ்டதிசைகளேமுதலியத
லங்களிலிருப்பவனாவாட்டிக்கொண்ட வெற்றிக்குக்குறியாகக்கட்டியவி
ரகண்டைகலிக்கும் பாதங்களைப்பெற்றவர்களாயும் அண்டங்களாயினும்
விழுங்கத்தக்கவிசாலமாகிய பேழ்வாயைப் படைத்தவர்களாகவும் போ
ரைவிரும்பியெதிர்த்தவீரர்மார்பிற் கூரியமுனையைப்பெற்ற வேலினாலு
ஞ்சூலத்தினாலும்குற்றித்தூக்கிப்பெருகும் உதிரங்களையும் நிணங்களை
யுத்தசைகளையும் ஏராளமாகநிறைத்தும்நிரம்பாதபிலம்போன்றவாயை
யும் கடலையொப்பப்பருத்திருக்கும் வயற்றையுங் கிடைத்தவர்களாகவு
ம்திசைக்களிறுகளின்துதிக்கைகளைச் சேர்த்துமுடிந்து செவிகளிற் குண்
டலமாகவணிந்து மகிழுந்தியமனதைப்பெற்றவர்களாகவும் அஷ்டகுலா
சலங்களைப்பெயர்த்துப் பந்தாடும்புயவன்மையைப்படைத்தவர்களாக
யும் சத்தசாகரங்களின்சலத்தை ஒருகரத்தினேந்தியுண்டுந்தணியாததா
கவிடாயைக்கிடைத்தவர்களாகவும் சொற்கமத்தியபாதலபிடங்க ளெங்க
ளும்நொடிப்போதிற்சுற்றிவரும்வேகத்தைப்படைத்தவர்களாகவும்செ
க்கர்வாளத்தையொத்த மீசைதாடிகளைப்பெற்றவர்களாகவும் குலாசலங்க
ள்கைகால்முளைத்துநடப்பதைப்போன்றகாத்திரமுள்ளதிரேகத்தையுடை
யவர்களாகவும் பிறையைப்பழித்து விளங்குங் கோறதந்தத்தைப்பெற்
றவர்களாகவும் யாளி சிங்கம் புலியானை கரடி மான்முதலிய மிருகங்களை
யொத்த முகங்களைவாய்ந்தவர்களாகவும் சிரமொன்றுகரங்க ளனந்தமு
ம்பலதலைகள் யிரண்டுபுசங்களைக்கிடைத்தவர்களாகவும்பார்த்தவர்கள்கெ
ற்பநிற்பேதப்பட்டுக்களைக்கும் கோறரூபத்தைப் பெற்றவர்க ளாகவும்
தடுத்துப்பேசிற்றுயையும் வதைத்துண்ணுங்கோபாவேசங்களையுடைய
வர்களாகவும்—தண்டாயுதம்-மழுப்படை—தட்டைமுசுண்டி-வில்-வாள்
வேல்—எழு-மழு-நாஞ்சில்—காலபாசம்-சூலம்-ஈட்டி-எறிவேல்-குந்
தம்-கப்பணம்-முசலமாகிய-பற்பலபடைகளைத் தாங்கினவர்களாய் அ
ண்டவடுக்குளழிந்து குலைகுலைந்து வாடும்படிக்கு ஆர்ப்பரிக்கவல்லப

ருத்தகுரலோசையை யுடையவர்களாகவும் இத்தகையகொடிய செய்கை
களைப்படைத்த வீராதிவீரராகிய அவுணவெள்ளங்களும்கோடைகாலமே
கங்கெற்சித்ததைப்போலவீறிட்டு யிருப்புலக்கைகள்பருத்தசங்கிலிகளை
த்துதிக்கைகளிற்பற்றித் திசைகளதிரச்சுழற்றி உரலையொத்த பாதங்களைப்
பெயர்த்துவைக்குந்தோறும் பூமிகுழியநடந்துபோகும்வலியயானை
களினது கன்னத்தினும் கபோலத்தினும்பீசத்தினும்நின்றுபெருகும்மு
ம்மதங்களும்பாய்ந்து சுழலமிட்டுக்கொண்டுதூசிப்படைக்குமுன்னோ
டவும் அலைகள்மிகுத்தசமுத்திரத்திற்றோற்றும்வெளுத்தநுரைப்பெருக்
கைப்போலவிலாழியென்னும்வாய்நுரையைப்பெருக்கிப்பாயும்குதிரை
ப்பந்திகளானவை அனல்வடிவைப்பெற்றசிவந்தகுளப்படிகளைப்பெயர்
த்துவைத்துமிதிக்குந்தோறும் முற்கூறித்த மதவெள்ளம்விலாழிப்பெ
ருக்கானதுசேறாய்ப் பதாதிகள்நடையிலழுந்திபற்வதாகிறுதியாய்ப்பாரி
த்திருக்கும் ரதங்களிற்பூண்டு செற்கரத்தொனியைக் காட்டிச் செல்லும்
வண்டில்களோடியோடிப் பசையற்றுப்பொடியாய் துகள்பட்டெழுந்
துதிசைகளைமூடிப் பொன்னுலகத்தை மண்ணுலகமாக்கவும் ரதசமோ
கங்களினிடங்கடோறும் நாட்டப்பட்டிருக்கின்ற துசபடங்களின்முக
ப்பிற்பதித்திருக்கின்றவயிரச்சிகரங்களின்முனை உறுத்துவதினாற்காளமே
கங்களினது கெற்பங்கள் துளைபட்டு செலத்தைப்பெருக்குகின்றதறுவா
யில் அவற்றினிடத்தசைகின்ற பட்டுச்சீலைகளினாலடைபடவும்இவ்விதஆ
டம்பரங்களுடன்சதுரங்கசயின்னியங்களும்நடக்குமுன்னிலையில் தத்
தித்தாவிப்பாயும் புரவிக்கூட்டங்களினிடகனைப்பினொலியும்தேர்களோ
டுங்கெற்கரத்தொனியும் மதயானைகள் பிளிறொலியும்- தோற்கருவி- து
ளைக்கருவி-நரம்புக்கருவி-மிடற்றுக்கருவி-கஞ்சக்கருவிகளின தமுழக்
கும்ஏகமாய்ப்பேரொலியைக்காட்டுவதெப்படிக்குத்தோற்றுவதெனில்
அசண்டமண்டலாதீஸ்யரனாகிய சூரன்தம்பிசிங்கமுகனிறக்கப்போகின்
றனன், ஐஐயோவென் றிரங்கி யழுமொலிக் கிணையாகவிருந்தது, அத்த
றுவாயிற் பெருத்தெழுந்த தூளிபடலமும் வானத்தையளாவவோங்கிய
சையுந் துகிற்கொடிகளும் விழிகளைமறைத்து செவிகளைப்பொத்தி நாசி
யைத்துற்று மூச்சாடவொட்டாமற் றிகைக்கச்செய்வதினாற் சூரியபகவா
ன்பயப்பிராந்திகொண்டுபகைவர்வானவெல்லையினுஞ்செல்லவொட்டா
ர்களென நடுங்கி பாரிசமாய் ரதத்தைத் துரத்திப்போயினன், இவ்வித
உற்பாதங்களைக்காட்டி நடக்கின்றதறுவாயில் அவுணச்சேனைவெள்ளங்க
ளுக்கதிபனாகியசிங்கனென்னும் பெயரைப்பெற்றவன்வீராதிவீரன்ரண
ரங்கசூரன் தேவர்தமுலாயினரையும்வென்றதீரன் திக்குவிசையம்பெற்
றவனத்தகையரும்புகழ்ந்துபோற்றும்பிறதாபத்தைக்கிடைத்தவனும் தன்

னாசனைப்போன்ற உருவத்தையும் புயவன்மையையும்படைத்த சவுரிய
பாஞுமிய அவுணவீரன்கணக்கிறந்த தேர்க்காறர் பலகோடி யானைவீரர்க
ணிதமற்ற குதிரைச்சேவகர் தொகைபடாத கால்பலங்கள் இவற்றினை அ
ணிபடவகுத்துப்பலதிசையினும்போற்று தலையைக்கிரமப்படிக்கு நாட்
டிகாலாந்தகனைப்போலத்தானுந் தனுற்பாணியாய் நீலகிரியை யொத்த
காத்திரமுள்ளமதயானையின் பிடரியிலாரோகணித்துத் தூசிமுனையைக்
காவல்கொண்டு போமுன்னிலையில் அவனைச்சூழப் பலயானைகளின் மீதி
ற்பேரிகைகளை முழக்கவும் புரவிகளின்பேரில் டங்காக்களைக் கொட்டி
யும் ஒட்டகங்களின்மீது-ரணபேரிசத்திக்கவும்-சல்லரி-மல்லரி- திமிலை
தக்கை-ஆகுளி-முதலியபல்லியங்கள் கடலைப்போலமுழங்கிவரவும்பூத
பசாசங்கள்-கழுகு-பாந்து-காக்கை-நாய்-நரி-முதலிய செந்துக்கள்த
ங்களுக்குப்புதிய விருந்து கிடைக்கப் போகுதென்னும் ஆவலினால் ஒ
ன்றுடனொன்று சீறியும்வகுதுசொடுத்தும் பிணங்கியும் வானத்தினும்ம
ண்ணிடத்தினும் கூக்குரலிட்டுச்சென்றது ரத்தினமயமாய் வானத்தைய
ளாவபாரித்திருக்கும் ரதபந்திகளைப் பற்வதங்களெனக்கருதி மேகசால
ங்களிறங்கி யிடிமின்னலைப்பெருக்கி முழங்கியிருப்பது எப்படிக்கிரு
ந்ததெனிற் றேருருளைகள்கிறிச்சிட்டோடுவதைப்பார்த்து இந்தசயின்னி
யங்களிறக்க விருக்கின்ற அபசெயத்தை நினைந்து நினைந்து துக்கி
க்கின்றனையோ அதற் கென்செய்வோமெனத் தாமும்வருந்தி மினவித்
தேற்றுவதற்கொப்பாகக்காட்டியது இத்தகைய சிறப்புகளுடன் கடையு
கவெள்ளத்தைப்போல நாற்படைகளும் போகின்றகாலத்திற் பகைவரு
க்குக் காலாந்தகனையொத்தசிங்கமுகாசூரன் நடுநாயகமாகப்பலதிக்கினு
ம்விழிகளைப்பரப்பிதிட்டவட்டங்களைச் செய்துக்கொண்டு வருவதைப்
பிரமன்-விஷ்ணு-தேவராசனாதியர்கண்டு சிங்கராசனையெதிர்ந்த யானைக்
கூட்டங்களைப்போல நடுநடுங்கித்திரோகமுற்றும் வியர்க்கத் திகிற்கொ
ண்டுவஸ்திரங்கள்சோரப்பறந்து திருச்சபையைச் சேர்ந்து சிங்காதனத்,
தில்வீற்றிருக்கின்ற வெற்றிவேலாயுதக்கடவுளைவணங்கிப் போற்றி கற்த
னேசூரபதுமனுக்கிளைய சிங்கமுகா சூரனென்பவன் மேருமுடிகளைப்
போன்ற ஆயிரஞ்சிரங்கள்விளங்கவும் மந்தரத்துக்கொப்பாகிய யிரண்
டாயிரங்கரங்களைப்படைத்து ஆயிரத்தெட்டண்டங்களையும் சுலபமாக
வெற்றிகொண்டு ஆயிரயோசனையுயர்ச்சியும் அதற்கடுத்தகாத்திரதிரேகத்
தையும்படைத்து மனதினு ளாவிடப்படாத மாயைப்பெருக்கைக் கற்
றுத்திரிலோகங்களுக்கு மழிவுநேரினும் மாளாத வரமுயற்சிகளைப்பெ
ற்றதீரன் இத்தகைய செயசாலியான சிங்கமுகன் முன்னொருகாலம் அ
ஷ்டதிக்கெசங்கள் அஷ்டமாநாகங்கள் அஷ்டகுலாசலங்கள் கூர்மம்

இவைகள் போற்றுதலைநீக்கி சராசரப்பிரயஞ்சங்க ளடங்கிய யிந்த பூம
ண்டலத்தைத் தன்னொரு கரத்தினாலேந்திய புசபெல பராக்கிரம சம்ப
ன்னன் சர்ப்பாபரண பூஷிதராகிய சிவபிரான் யிவன்முடித்த அரியதவத்
திற்குமெச்சிக் கடாட்சித்ததாய் கணக்கற்ற சத்திராதிகளுயினாயுண்டு அ
வர்க ளுதிரக்கறையும் நிணத்தின்பசுமையு மருமவிருக்கின்ற முத்தலைச்
சூலமொன்றைக் கரத்திற்றாங்கி எமனுக்குமொரு எமனையொப்பாயிரு
க்கும்பாதகன் அஷ்டதிசைகள்பூமண்டலம் சத்தபிலங்கள் பொன்னுலக
ம்அதின்மேற்பட்டபதங்களை முதலியவற்றை ஒருகரத்தினால்வாரியுண்
டுமிழத்தக்க பெருமிதங்களைப்படைத்தவன் யிவன்உருத்துப்பாதங்களை
ப்பெயர்த்துவைக்குந்தோறும் திராசுத்தட்டைப்போல நிற்கின்றபூவட்
டமானது அவ்வெல்லைதாழ்வுபட்டும ற்றையபுறங்களைச்சூழவிருந்தசமு
த்திரமானது மேலோங்கிவிண்ணகத்தினும் அலைகளைவீசும்படிக்குமிகு
க்கவல்லதிண்ணியன் தங்கக்சட்டுகள்பிதிந்து மணிகள்சலகலென்றொலி
க்கும் பருத்ததண்டாயுதத்தைககரத்திற்பற்றி கிறுகிறெனச்சுழற்றிஅண்
டகடாகத்தி னிடத்தில் மோதியகாலத்தில் அத்தாக்கலுக்குத் தாளமாட்
டாமற் பொடிப்பொடியாகவுதிரக்கண்டு நகைத்து யிதற்கு வலிபோதா
தெனநினைந்து அதற்குமேருகிரியைமுட்டுக்கொடுத்தபுயவன்மையைப்
படைத்தவன் சமுத்திரஞ்சூழ்ந்தபூமண்டலவடபாரிசத்திற் சொர்ணம
யமாகிய பருத்தமதில்வளைந்து வானத்தையளாவிநிற்குங் கோபுரங்கள்
நவரத்தினமயமாகியமாடமாளிகைகள் நெருங்கியிருக்கும் ஆசுரமென்
னும்சிறந்தபட்டணத்தில் வாசஞ்செய்பவன் கோபம்பிறவேசித்துவிசு
வனுகில் உலகங்கள்வானத்தையு மொன்றுபடச்சேர்த்துக் கட்டவல்லம
கிமையைப்படைத்திருக்கின்றபாசமொன்றைத்தன்தாயினிடத்திற்பெ
ற்றிருப்பவன் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்புசபெலபரா
க்கிரமசாலியாகச்சகலரும்வணங்கிப்போற்றவாழ்ந்திருக்கின்றசூரபது
மனுக்கு நேரிளையவனாய் அவனிலும்பதின்மடங்கு வலியையும் வீரத்
தையும்மாயவிஞ்சைகளையும் பெற்றிருக்கின்ற வீராதிவீரன் தேவர்கூட்
டங்களைமுதலிய நம்மவரை எக்காலத்திலும் கண்ணிற்காணுமலடித்து
துரத்திவாட்டும்கொடியபாதகன் யித்தகையசவுரியபரனாகிய சிங்கமுகா
சூரனென்பவன் கணக்கிறந்ததகெசதுரகபதாதிகள்பெரும்புறக்கடலை
யொப்பச்சூழ்ந்துவரத்தக்கதாக மேலிட்டு தேவரீருடனெதுத்துச் சண்
டைகொடுத்துவெற்றிபெறநினைந்து வடவையைப்போலச்சீறி யிதோவ
ந்துவிட்டான் யிவனைச்சுலபமாக நினைக்கப்போகாது கர்த்தனே அவனா
ணவத்தையடக்கிக்கொன்று எங்கள்மனக்கவலையை யொழித்து ரட்சிக்
கவேண்டுமென் றிரந்துபோற்றுவதைச்சண்முகதேவர் திருச்செவிகளி

னேற்று அவர்களிடத்திற்பரிவாய் அவ்வாறேசெய்யக் கடவோமெனக்
கையமர்த்தி பக்கத்திற் கைகட்டி நிற்கின்ற வாயுதேவன்மீது விழிகளைப்
பரப்பித் துரிதமாக நமதுதேனைக் கொண்டுவரக்கடவை யெனக்கட்ட
ளையிட்டதருவாயில் வலதுபுசத்தைப்போல அரிகில்வீரவாளைக் கரத்திற்
றொண்டிருக்கும் செயசாலியாகிய வீரவாகுதேவர் பாலசுப்பிறமணிய
தேவர்பாதகமலங்களிற்சேவித்து ஒப்புவமையற்றபுசபெலபராக்கிறம
சாலிகளாய் வெற்றியைப்பெறவல்ல - துணைவர்-இலக்கர்-படைவீரர்-பூ
தசயின்னியங்களுடன் அடியேன்போய் கொடியபாதகனாய்மேவிட்டு
வரும்பகைவனை வளைத்துக்கொண்டுசாடி அவன்பிராணனையுண்டு ராட்
சதவெள்ளங்களனைத்தையும் ரணபத்திரகாளிக்குப் பெலிகொடுத்துதே
வரீருக்கறிக்கையிடக்கடவேன்யிப்போரை அடியேனுக்குக்கடாட்சித்து
யிவடத்திற்சவுக்கியமாகயிருக்கவேண்டுகின்றனன் கற்தனேயென்றுபிரு
த்தித்துகேட்கும்துணைவன் தீரமானவாக்கியங்களைத்திருஉளமகிழக்கே
ட்டருளிசாவுக்குத்துணிந்துவருகின்றசிங்கமுகன் போரைவிரும்பினை
நல்லகாரியம்அவ்வாறேபோய்ச்செயப்பிறதாபத்துடன்மீளக்கடவை இ
வடத்திலிருக்கின்றபூதப்படைகளிற் பாதியைக்கூட்டிக்கொண்டுமுன்ன
ம்நடக்கக் கடவையெனப்பணித்தவுடன் வீரவாகுதேவருக்கு அதிகஉச்
சாகமுண்டாய்வேலாயுதமூர்த்தியை வணங்கி விடைபெற்றுத்துணைவர்ப
டைவீரர்நெருங்கிப்போற்றிவரத்திருச்சபையைக்கடந்துதன்னிருக்கை
யைச்சேர்ந்துபகைவர்மீது ஒவ்வொருதொடையில் கோடானகோடிதிவ்
வியபாணங்களைச்சொரியத்தக்கபெருமையினால் கார்முக மெனப்பெய
ர்பெற்றஒப்பற்ற தனுசையெடுத்துத்தோளில்மாட்டி அட்சயத்தூணிர
த்தைமுதுகிலிறுக்கிதேவாஸ்த்திரங்களைச்சேகரித்துக்கொண்டுவிரற்கோ
தைகளை மாட்டிஅபேதவயிரக்கவசத்தை மார்புக்கணியாகத்தரித்துவெற்
றிக்குரியதும்பைமாலையை மகுடத்திற்சுற்றி வெளிவந்துபற்வதாகிருதி
யாக நிற்கின்றபொற்றேரிலேறியதருவாயில்-எண்மர்- இலக்கர்-படை
வீரர்சற்வாயுதபாணிகளாய்ப் போற்கோலத்தைத்தாங்கி ரதாரூடராய்ப்
பிறசண்டவாயுவைப்போலவீரவாகுதேவரைச்சூழ்ந்தனர் அக்காலத்தில்
ஆயிரவெள்ளம் பூதவெள்ளங்களும் வீராவேசங்களுடன் பருத்துத்த
ழைத்திருக்கின்ற மாமரங்கள் வானத்தை யளாவிய பற்வதங்கள் தோ
மரம்-பிண்டிபாலம்- கப்பணம்-யிருப்புலக்கை- தண்டாயுத முதலிய
படைகளைப்பரித்து யிரைச்சலிட்டுவந்து ராட்சத குலாந்தகனை வளைத்து
செயசன்னாகங்களுடன் நடக்கின்றதருவாயில் பலகோடிபூதர் - வெற்றி
முரசம்- சங்கம்-பேரி-துடுமு தப்பட்டையாதிய போற்பறைகளை முழ
க்கிக்கொண்டு பின்னணியிற்போக யிவர்கள்நடுப்பிறதேசத்திற் பிறளய

காலருத்திரனைப்போலத் தோற்றும் வீராதிவீரன் நாற்புறங்களினும்வி
ழிகளைப்பரப்பிவருவதை சிங்கமுகாசூரனிட நாற்படைகளும்கண்டமா
த்திரத்தில் றவுத்திராகாரமாகக் கோபித்து நெருங்கினர். இவ்விருசேனை
சமுத்திரங்களும் அடர்ந்து ஒருவரை யொருவர்சீறிநின்றதெப்படிக்கி
ருந்ததெனில், பவுத்திரமாகிய சுத்தோதகப் பெருக்கையுடைய கங்கை
யும்லவணசமுத்திரமும் மேலிட்டுப்பெருகுவதைப்போலக்காட்டியது
அத்தருவாயில் உபைய பாரிசங்களினும் -ரணபேரி -செயபேரி- குட
முழா கொக்கரை கோடுவலம்புரிச் சங்கமாதிய வாத்தியங்கள் திசைகள்
திரகணகணென் றுமுழங்கவும் மயிற்பிஞ்சங்கள் ஆலவட்டங்கள்வெண்
சாய்மரைகள் தேர்க்கொடிகளொன்றுடனொன்றாயநெருங்கவும்வீரர்
பாதங்களிற்கட்டிய செயகெண்டாமணிகள் கலீல்கலீலெனச் சத்திக்கவு
ம்தேர்களி னிடங்களில் நாட்டியிருக்கின்ற கொடிகளும் வெற்றித்துவ
சங்களும் வானத்தையளாவிப் படபடத்த தொனிகளைக்காட்டி யசை
வும் ரதங்கள்கெற்கரத்தொனிகளைக்காட்டியோடவும் மதயானைகள் விறி
ட்டுயிருப்புலக்கைகளைச் சுழற்றிமேலிடவும் குதிரைப்பந்திகள் கனைத்
துப்பாயவும் படைவீரர்கள் வீராவேசங்களுடன் சிங்கநாதங்கள்அட்ட
காசங்களைச்செய்துமீறவும் யிவ்வொலிகள்பெருத்து சத்தசாகரங்களைப்
போலவும் மேககெற்சிதத்துக் கொப்பாகவும் அதிர்வதினாற் பிராணி
கள்செவிடுபட்டுத்தியங்கிமயங்கிவாடினர், அத்தருவாயிற்கந்தச்சுவாமி
யார் சேனைகள்கைமிஞ்சி போர்த்தொழிலைச்செய்ய வெத்தனித்தபோது
சிங்கமுகாசூரன் படைகள்சீறி தேராளிகள் யானைச்சேவகர் குதிரைவீர
ர்செயசாலிகளாகிய கால்பலன்கள் மேலிட்டு சிலர் தண்டாயுதங்களைக்கி
றுகிறெனச்சுழற்றி மோதியும் சிலர் கணிச்சிகளைவீசியும் சிலர்பிண்டி பா
லங்களைச் செலுத்தவும் சிலர் தோமரங்களை விட்டார்ப்பரிக்கவும் பலர்
பாரித்தவிற்களை வட்டாகாரமாகவளைத்து டங்கார சத்தத்தைக்காட்டிவி
ஷத்தொலையவிட்டு கழுகிறகுகள்பூண்ட கொடியபாண கோடிகளைச்
சோனைப்பெய்யலைப்போலச்சொரிந்தும்யிவ்விதமாகப் போராடுகின்ற
தருவாயில்பூதவீரரும்பின்னிடையாமல்ஆலகாலத்தையொப்பப் பொங்
கிபெருத்தகிளைகளையுடைய மராமரங்கள் வடவாலவிருட்சங்களை வேரு
டன்பறித்துமண்டலமாகச் சுழற்றிமோதியும் - சிங்கம் -புலி- கரடி-
வாசஞ்செய்திருக்கின்றபற்வதங்களைச் செண்டைப்போலவெடுத்து வீசி
யும் தண்டங்களைக்கொண்டு தாக்கியும் எழுவாயுதங்களைச் செலுத்தியும்
மழுக்களைக்கடாவியும் வளைதடிகளைப்பெருக்கியும் யிவ்விதங்களாகச் ச
முத்திரத்திற்பட்ட பலவளங்களையும் அலைகளினால் வீசுவதைப்போலப்
பலதிசைகளினுமிருந்து செலுத்தி ஆர்ப்பரித்தனர், அவைகள் மேலிட்டு

த்தாக்குவதினால் ராட்சதர்களிற்பலர்வரமுயற்சிகள்மங்கிவலியற்றுக்கா
ல்கள்முறிந்தும் தொடைகளொடிந்தும் மார்புபிளந்தும் வாகுவலையங்
கள்தரித்திருக்கும் புசங்கள்சரிந்தும் நவரத்தினமயமாகிய கிரீடங்களை
த்தாங்கிய சிரங்களுருண்டும் களத்திற்பட்டனர், பூதப்படைகளிலும்சி
லர்சின்னபின்னப்பட்டுமாண்டனர், அத்தருவாயில் படைத்தலைவர்கள்
ருத்திராகாரமாகக் கோபித்து வீராவேசத்துடன் அஸ்திர சஸ்திரவிதங்
களை ஒன்றனந்தமாகச்செலுத்திப் போராடும்போது அந்திவானத்தைப்
போல ரணக்களவெல்லையெங்கணும் ரத்தப்பிரவாகமேலிட்டுப்பாய்ந்து
ம் பிணமலைகள்குவிந்தும் கண்டிக்கப்பட்டிறைந்திருந்த நிணமாம்ச
ங்களை பூதபசாசங்கள் கழுகுகாக்கைகள் நாய்நரிகள்வெறுக்கஉண்டுஉ
திரபானஞ்செய்து வெறிகொண்டு ஒன்றுடனொன்று பகைத்துப்பொ
ருதும் களியாடல்களைச் செய்தும் கொண்டானடித்தும் கூந்தலிட்
டோடியும் வானத்தில்வட்டமிட்டுலவியும்யிவ்விதமாகரணக்களம்விள
ங்குமுன்னிலையிற் கற்சம்பத்தைப்பழித்த வலியபுசங்களைப்பெற்ற ரா
ட்சதச்சேனைகளும் வலிக்கொப்பற்றபூதகணங்களும் மானமுங் கோ
பமும் மனதைவருத்தச்சீறிச் சண்டைக்குநேர்ந்ததருவாயில் அவுணப்
பாதகர்கள் ருத்திராகாரமாகமண்டியெரிந்து விற்களைவளைத்து கணக்
கிறந்த கொடியபாணங்களைச்சொரிந்து ஆயுதங்களினாற் கொண்டகொ
ண்டமட்டும்சாடும்போது சுப்பிரமண்ணியதேவர் தாசிப்படையானது எ
திர்த்துநிற்கச்சக்கியமில்லாமல் முறிந்துபின்னிட்டது, இந்தஅபசெயத்
தை சிங்கனென்னும் பூதத்தலைவன் கண்டமாத்திரத்திற் காளகூடத்தைப்
போலக்கொதித்து பாரித்ததண்டாயுதமொன்றை கரத்திற்கொண்டுகிறு
கிறெனச்சுழற்றி கறுத்தகிரோசத்தைப்படைத்த ராட்சதவீரர்கள் தலைகளு
ருளவும் மண்டைபிளக்கவும் புசங்கள்சரிபவும்தலைகள்நுறுங்கவும்மோ
திசூறுவளிக் காற்றைப்போலச் சுழன்று சுழன்று முன்பின் பாராமற்
கொண்டது கொண்டமட்டும் சாடும்போது அக்கொடுமைக்குத் தாப
ரித்து நிற்கப்படாமையால ராட்சதச்சேனை தத்தளித்துத் தியங்குவதை
ச்சங்கு சக்கரங்களைத்தாங்கியிருக்கும்தசமுகனென்னும் ராட்சதத்தலை
வன்பார்த்து சிரத்தையசைத்து நல்லகாரியம் ஒருதேவப்பயலுக்கு
வெற்றிபெற்றநமது சேனைகள்கலங்கி வாடுவதோவென்னும்மானம்பா
திக்கப்பொங்கி புசங்களைத்தட்டி மீசைதுடிக்கச் சரீரம்வெயர்க்கச் சீறி
ப்பார்த்து எங்கேபோகிறாய் நில்லுநில்லென்றதட்டி தங்கச்சட்டுகள்
பதித்தமணிகள்சத்திக்கும் வில்லைமண்டலாகாரமாகவளைத்து நாரியை
ப்பதித்து திசைகளதிரகுணத்தொனிகாட்டி பகைவன் முனையிற்பாய்ந்
து கணக்கிறந்த கொடியபாணங்களைச் சோனைமாரியைப்போலச்சொரி

ரீத்து சிங்கநாதஞ்செய்தனன் அவைகள்வரும்வேகத்தையும் குரூரத்தை
யும் சிங்கன்மதித்து மந்தரத்தையொத்த தண்டாயுதத்தினாற் கோட்டுப்
புள்ளுகளையொப்பத்தட்டிப்போட்டுஓரடியினால்அவன்மார்புக்கரணாக
த்தரித்திருந்த வயிரக்கவசத்தைப்பொடிபடுத்தினான் அதனால்மானம்பா
திக்கச்சதமுகன் றவுத்திராகாரமாகக் கோபித்துப்பாதகன் பிராணனைஎ
ம்லோகத்துக்கனுப்புகிறேனெனச்சபதம்பேசி வலியகதாயுதத்தைக்கொ
ண்டு கிறுகிறெனச்சுழற்றி வீசினான் அதுவருகின்றவேகத்தையும்கொடு
மையையும்சிங்கன்பார்த்து நகைத்துமற்றொன்றையும்பிறையோகிக்கநி
னையாமல்அசட்டையாய்வீரசிங்கம்போல நிற்கின்றதறுவாயில் வயிரம
லைக்கொப்பாகியவிசாலமானமார்பிற்றாக்கியவுடன் அப்படையின்வேக
மாறிவலியற்றுப்பொடியாய் துகள்பட்டுப்பறந்துபோயது இச்செய்கை
யைராட்சதப்பாதகன்தெரிந்து யிவன்மிகவும்திண்ணியனாகக்காணுகின்
றது ஆகிலுமென்னயிவன்பிராணனை நிமைப்போதில்வாங்கிறேனெனக்
கொதித்து கணிச்சியையெடுத்து அடாபயலேஉன்னாற்கூடுமாகில் யிந்
தப்படையைக் காத்துக்கொள்ளக் கடவையெனப்பேசி வலிகொண்டெ
றிந்தான் அதுகரத்தில்நின்றும் வெளிப்பட்டவுடன் விஷ்ணுமுதலியபி
றமுகாளும் என்னவிளையுமோவென்னும்மனயேக்கத்தினால் நடுநடுங்கி
த்திகைத்துப்பார்த்திருக்க அக்கினிச்சுவாலையைவீசி பிறசண்ட மாருதத்
தைக்கலந்துவரும்விஷப்பெருக்கைப்போலஆரவாரத்துடன்மேலிடும்
போது வீராதிவீரன்சற்றும்பயப்படாமற் பாய்ந்தொடித்ததைக்கண்ட
ராட்சதப்படைகள்பிறமித்துஅம்மம்மயிந்தவீரன்வலியையென்னென்
றுசொல்லப்படும்மந்தரத்தையொப்ப உரறிக்கொண்டுவந்ததண்டைநி
மைப்போதிற்பொடிகண்டனன்மேலும்அதிகமகிமைகளைக்காட்டிவந்த
குந்தத்தையும்நிலத்திற்சேர்த்தான்யிவையன்றியும்சோனைப்பெய்யலைப்
போலச் சரவருஷங்களைத் தாண்டிவந்த வில்லையும்கண்டித்தனன் யித்த
சூரன்செய்கைகளைப்பார்க்குமிடத்திற்பசாசத்தைப்போலக் காணுகி
ன்றதுவீராதிவீரனாகயிருக்கும்நம்மவனிப்பாடுபடுவனாகில்யிவனால்நா
மெல்லவரு மென்னவருத்தப்படுவமோதெரியாதென் றேங்கிவாடித்
திகைத்திருந்தனர், அத்தறுவாயிற்பாதகனாகியசதமுகன்மனம்பொறும
ல்வடவைக்கனலைப்போலக்கோபித்துமற்றொருகணிச்சிப் படையை
யெடுத்துத்தன்வலிகொண்டு யிதனால் நாசமடையக்கடவையென்றுருத்
துவீசினான் அதுவும்ஆலத்தையொப்பஎரிந்துபுகைந்துபற்பலமகிமை
களைக்காட்டி அதிவேகமாய்மேலிட்டு வருவதைச் சிங்கன்கண்டு குறுந
கைகொண்டு தன்னைச்சூழ்ந்திருக்கின்ற பூதப்படைகள் களித்துக்கொ
ண்டாடும்படிக்குத் துரிதமாய்ச் சக்கரமொன்றையெடுத்துக் கரகளொ

ச்சுழற்றிக் காவேகமாகச் செலுத்தியதறுவாயிற் சூரியமண்டலம்போ
லவட்டணைகொண்டுதீயையிறைத்தெதிர்ந்து சணிச்சியை கண்டதுண்ட
மாக்கி தள்ளிவிட்டது, யிதைதசமுகப்பாதகன் தெரிந்தமாத்திரத்தில்ற
வுத்திராகாரமாகக்கொதித்து தட்சிணத்தில் மற்றொருவலிய கதையைச்
சுழற்றிக்கடாவ அதுவும்வேகமாய்வந்து சிங்கன்விசாலமாகிய மார்பிற்
கோடையிடியைப்போலத் தாக்கியஅதிற்சியினால் மார்புபிளந்து உதிர
ப்பிறவாகமோடுவதினால் ரத்தமழையைப்பொழியும்மேகத்துக்குச்சம
தையாகசிரோகமெங்கனும் சிவந்துகாட்டச் சற்றுநேரம் களைபட்டிரு
ந்துதேறினவனாய்மானம் மனை யலைத்து வாட்டச்சீறி பற்வதத்தினிட
த்தருவியானது பெருகு மாறுபோலத் தன்னுடலில் உதிரமோடும்ப
டிக்குப்பாய்ந்து தன்வலிகொண்டு தசமுகன் மார்பிலறைந்தான் அ
த்தாக்கலுக்குத்தாளமாட்டாமல் எலும்புகளொடிந்து ஓ வென்றரற்றி
க்கொண்டு உதிரம்பெருக்கெடுத்தோடப்பூமியில்விழுந்துபுரண்டுதை
த்துக்கொண்டுமாண்டான் யிவ்விதமாகப்பத்துத் தலைகளைப்படைத்திரு
ந்தபாதகன்களத்திற்பட்டதை ராட்சதவீரர்தெரிந்தவுடன் தாயாக்கினி
யையொப்பப்பொங்கிப் போற்பறைகள்கணகணென்று செவிடுபடமு
ழங்க மேலிட்டுவந்து வீறியிருக்கின்ற பூதப்படைகளின்பேரிற் கவிந்
துகொடியபோரைச் செய்யும்போது இலக்கர்களில் அருக்கனென்னும்
வீராதிவீரன் றவுத்திராகாரமாகக் கோபித்து உதட்டையதுக்கி முன்ன
ணியில்வந்து வில்லைவளைத்து அவுணப்பெருக்கைப் பார்த்துச்சீறியெங்
கேபோகிறீர்கள் நில்லுநில்லென்றதட்டிவந்து மடக்கிக்கொண்டுதிருப்
பாற்கடலைக்கலக்கிய மந்தரகிரியைப்போல பாணவருஷங்களைப் பொ
ழிந்து பாதகர்சிரங்களைக் கண்டித்துக் குவித்தும் கைகால் மற்றஉறுப்
புகள் சின்னபின்னப்படவெட்டி பற்வதங்களுக் கொப்பாகச் சேர்த்து
ம் சித்திரவதைகளைச்செய்தும் வாட்டுங்கொடுமைக்காற்றாமல் ராட்சத
ச்சேனைகளனைத்தும் அல்லோலகல்லோலப்பட்டு பிராணபீதியினாற் பல
திசையினும் யிறைந்தோடி யொளித்தனர், இந்தஅபசெயத்தைத் துன்
முகனென்னும் அவுணவீரன்கண்டு தேனாமண்டலாகாரமாகத் திருப்பி
தன்சேனைகளை மடக்கிப் பயப்படவேண்டாம்பகைவருக்கு எமனையொ
த்தநான்வந்துவிட்டேன் நில்லுங்கோள் நில்லுங்கோளெனப் பற்பலத
யிரியவார்த்தைகளைச்சொல்லித் தடுத்து மின்மினிப்பூச்சிகள் சூரியனைவெ
ல்லுமோ அதைப்போலவே என்முனையில் பூதர்தார்பரித்து நிற்பரோஅ
பலராகிய பூதருக்கஞ்சி செயசாலிகளாகவிருக்கும் நீங்கள் பின்னிடைவ
தோ யிதோநொடிப்போதிற் பகைவரை நாசஞ்செய்வேன் போகாதீர்க
ள்போகாதீர்களெனத் தயிரியங்களைக் குறித்துக்காட்டிய போதினும் நீ

ற்கவஞ்சிப்பறந்தனர், இப்படிகருத்தன்சொல்லையும்மீறிச்சேனைகளோடு
ம்போது துன்முகனுக்குஅதிககோபம் பிறவெசித்துபற்றியெரிகின்றதீ
யில்நெய்யையூற்றியதைப்போலச்சீறி நீண்டதன்வில்லை வட்டணையாக
வளைத்து நாணேற்றி பூதப்படைகள் திடுக்கிட்டு கலங்கக் குணத்தொனி
காட்டி கொடியபாணசமோகங்களை யொன்றனந்தமாகச் சொரிந் துல
வும்போது சிவகணங்களும் அஞ்சாமற் பருத்த விருட்சங்களைக்கொண்
டுமோதியும் வானத்தையளாவ நிற்கின்ற பற்வதங்களையெறிந்தும்மற்ற
படைகளைச்செலுத்தியும்பகைவன் விட்ட பாணசமோகங்களைத் தூத்து
மூருக்கிச் சங்கையற் றுலவும்போது துன்முகப்பாதகன்யோசித்துயிவ
ர்களைபாணமுயற்சியினால் வெல்லப்படா தாகையால் மாயைவல்லபத்தி
னாற்சாடிக்கொல்லக்கடவனென நிச்சயித்தவனாய் ஆசிரியன் தனக்குப்
போதித்திருந்த சுந்தரப்பதங்கமென்னும் மாயமந்திரத்தை விதிப்படி
க்குமனப்பூர்வகமாக உச்சரித்து அதன்முயற்சியினால் ஒவ்வொரு பூத
ருக்கு நூறு நூறுருவாகத் தோற்றிப் பற்பலகொடியபோர்களைச்செய்து
திப்பிறமைகொண்டு படாதபாடுகளைப்பட்டு நாசப்படும்படிக்கு வாட்
டுமுன்னிலையில் யிக்கொடுமைக ளனைத்தையும் கதிரவனென்னும் பூதத்
தலைவன்கண்டு மனம்வெந்து பெருமூச்செறிந்து யிந்த கொடியபாத
கன்காட்டிவருத்துகின்ற மாயையின்முயற்சி யொடுங்குவதெவ்விதமெ
ன்றாலோசித்துத் துரிதமாய் ஞானப்படையை யெடுத்து வழிபட்டுவி
ல்லிற்பூட்டிச் செலுத்தியகாலத்திற் கோடிசூரியப் பிறகாசத்தைக்காட்டி
மாயைப்பெருக் கனைத்தையும் நிமைப்போதிற்கவளீகாஞ்செய்து பழை
யபடிக்கு வெள்ளிடையாக்கித் திரும்பிவிட்டதறுவாயில் துன்முகன்வ
ஞ்சகமடங்கித் தனியனாய்நின்றவன் நல்லகாரியம் நமது முயற்சிகளைக்
கெடுத்த பாதகனைக்கொல்லாமல் விடமாட்டேனெனச்சீறிச் சீக்கிரமத்
தில்வில்லைவளைத்து விஷத்தொவையலிட் டிருக்கின்ற கொடியபாணங்க
ளாயிரவற்றைத்தேடியெடுத்துச்சந்தித்துப்போக்கிக் கியாவுமெனக்கொ
க்கரித்தனன் அதைக்கண்ட கதிரவன் கோபதீபிதனாய் மண்டியெரிந்து
தன்வில்லையிறுக்கி அத்தொகை திவ்வியபாணங்களைக் கரவேகமாகத்தா
ண்டிக்கண்டித்து மேலும் எழுநாராசங்களைச்செலுத்திக் கொடியபாதக
ன்கரத்திற் பிடிபட்டிருந்த வலியவில்லை இரண்டுதுண்டமாக்கி மீட்டு
மொருபாணத்தினாற் பகைவன் மார்புக் கரணாகத் தரித்திருந்த வயிரக்க
வசத்தையும் பொடிபடுத்தியுங் கோபந்தணியாமல் மறுபடியும் கணக்
கிறந்த சரங்களைப் பிறையோகித்து அவன்சரீரமுற்றுஞ் சல்லடையைப்
போலத் துளைபடத்தாக்கிய தறுவாயில் அக்காயமூலமாக உதிரமிகுதி
யாகப்பெருகியதால் யிளைத்துக் களைத்துச் சாவுக்குச் சமமாகிய மூர்ச்சை

படைந்து கிடந்தவன் சற்றுநேரத்திற்றெறி பிறக்கினையுண்டாயெழுந்து
இனியிவனுடன் சண்டைக்குநேருவோமாகில் பிராணசேதம் வருவதற்
கையமில்லை ஆகையால்ஒடிப்பிழைப்பதேஉறுதியெனநிச்சயித்தவனாய்த்த
ட்சிணத்திலொரு மந்திரத்தைச்செபித்துதன்தேருடன்மறைந்துவானவ
ழிக்கொண்டுபோயினன், அதைக்கண்ட பூதரிற்சிலர் அப்பாதகனாற்ப
ட்டவருத்தங்களை நினைந்து கோபதிபிதராய் வஞ்சகன் திருடனைப்போல
மாயைசெய்தோடினன் அவனைத்தொடர்ந்துபற்றிக்கொல்லுவோம்வாரு
ங்கோள்வாருங்கோளென்று தம்மினத்தவரைக் கூவுவதைவீராதிவீரனாகி
யசிங்கன்கேட்டுநகைத்தவனாய் அவர்களைப்பார்த்து போருக்கஞ்சி பே
டியைப்போல மறைந்தவனைத் தொடர்ந்துகொல்லவெத்தனிப்பது வீரரு
க்கடாது மேலும்கீர்த்திக்கும் விரோதமாம்ரணக்களத்திலெதுத்துப்போ
ராடுவதற்கஞ்சி மானமிழந்து முதுகுகாட்டித் திரும்பியவர்களையும்பய
பீதியினாற் றஞ்சமெனப் பாதங்களிற் பணிந்தவர்களையும் சரீரம் நடுக்
குற்று மனவாட்டத்துடன் கரங்களைக்கூப்பிப் பிராணபிச்சையிரந்துநி
ற்பவரையும் வலியற்று விழுந்து பிணங்களிற் பதுங்கும் பதிதரையும்
புற்களைவாயிற்கவ்வி நிற்பவரையும் புற்றின்மீதேறி யிருப்பவரையும்
கண்டபோதினும் சீவகாருண்ணியம் பூததயவற்றுக் கொன்றவர்கள் எக்
காலத்துந் தீராதபழியிற்பட்டு பலராலும் யிகழவிருப்பர் ஆதலால்வீர
த்துடனெதுத்தவரையன்றியில் மற்றையருடன்போர்செய்யவெப்போ
தும்நினைக்கவேண்டாம் நீதிநூலுக்குமடாதென்று சொன்னமாத்திரத்
தில்யிதுதகுந்தகுமென்றெல்லவரும் ஒப்புக்கொண்டு வீரனைப்புகழ்ந்
துநின்றனர், இவ்விதமாகத் துன்முகன்பதுங்கியதை ராட்சதர்கண்டுநடு
நடுங்கி திகிற்பட்டு பிராணபீதியினால் நாலுமூலைகளினுஞ் சலைர்திறைவ
தைவீரபராக்கிரமசாலியாகிய சிங்கமுகாசூரன் தெரிந்தவுடன்வெகுநே
த்திநேத்தியெனக் கோபநகைகொண்டவனாய் யிப்படிக்கு நமதுசயின்
னியங்கள் பின்னப்பட்டுப் போகக்கண்டும் நாம்பின்னணியிற்சும்மாயி
ருப்பதிற் பிறையோசனமென்னவென் றுக்குரோஷத்துடன் பகைவர்
மீதுசீறித் தன்தேனைத் துறத்திவந்து தாசிமுனையில் நிறுத்திக் காலாந்
தகனைப்போலத் தோற்றுவதைப் பூதப்படைகள்கண்டு நல்லகாரியம்பி
ன்புசபெலபராக்கிரமத்திற்சிறந்தவனெனச்சொல்லுகின்றனர் அதையு
ம்ஒருகை சண்டைகொடுத் தறிவோமென்னும் விருப்பினாற் கெக்கலி
கொட்டிக்கொண்டு மேலிட்டு வானத்தையளாவநின்ற பர்வதங்களைப்ப
றித்துச்செண்டையொப்பவீசியும் திசைகளிற் பரந்தோங்கியிருக்கும்ம
ராமரங்களை வேருடன்பிடுங்கிக் கரகொனச்சுழற்றிமோதியும்-கணிச்சி,
சூலம்-தண்டாயுதம்-எழு-மழு-திருப்புலக்கை-வளைதடி-முதலியபடை

களை அபரிமிதமாகச்செலுத்தி ஆர்ப்பரிக்கின்றதருவாயிற் சிங்கமுகாசு
ரன்பூதர்செய்யுங்கொடுமைகளை விழிகளிற்றீயெழப்பாத்துவடவையும்
பிறசண்டவாயுவு மொருமித்தெழுவதுக்கொப்பாகப் பெருமூச்செறிந்
தனன் அந்தவேகத்திற் பூதர்வீசிய விருட்சங்கள் படைகள் சுழற்காற்றி
ற்பட்டசருகைப்போல அகப்பட்டுக்கொண்டு யிங்குமங்கும்போவது
ம்வருவதுமாய்ப் பொடிந்தும்தீய்ந்தும் கரிந்தும் பல்மீபடலமாயெ
ழுந்துவானநாடுகளிற்பரந்தும் பூமண்டலவெல்லைமுற்றுமிறைந்தும்ப
டாதபாடுகளைப்பட்டது, இதனைக்கண்டிருந்தபூதர் பிறமித்தவர்களாய்
இஃதென்னபுதுமையாக விருக்கின்றது நாம்யேகமாய்ச்சேர்ந்து ஒன்ற
னந்தமாகச்செலுத்திய கருவிக ளனைத்தும்வீராதிவீரன்மீதிற்பாயாமல்
அவன்விடும் சுவாசத்திற்பட்டலைந்துமங்கிச் சாம்பலாயெழுந்தோடிய
து,இனியிதைவிடநாம் செய்யவேண்டிய சண்டைகளென்னவிருக்கின்ற
துஅம்மம்ம யிவன்வல்லபத்தை இவ்விதமெனச்சொல்லிமுடிவதோமே
லும்யிதுபரியந்தம் போர்முனையிலெதுத்துவந்த சத்துருக்களில் யிவ
னையொத்த புசபெலபராக்கிறம சாலிகளைக்கண்டதில்லைமிகவும்வல்லமை
சாலியாகக்காணப்படுகின்றது அப்படிக்கிருந்தபோதினும் இவனைச்சு
ம்மாய்விடலாகாதென நிச்சயித்தவர்களாய் சற்பங்களைப்போலச்சீறிப்
பாய்ந்து திசைகளில்நிற்கின்றகுலகிரிகளைப்பறித்தும் யிருண்டுதழைத்
தோங்கியிருக்கும் பாரித்தவிருட்சங்களைக்கெல்லியும் மற்றசிறந்தபடை
களையும் மென்மேலும் அதிகவுக்கிறத்துடன் சூரபதுமன் துணைவன்மீ
துகரவேகமாகச்சொரிந்து சிங்கநாதங்களைச்செய்தனர், அவையனைத்து
ம்சிங்கமுகன் சுவாசவீசவி லகப்பட்டுக்கொண்டு அலைந்துகடையில் து
களாய் அஷ்டகோணங்களில் நிறைந்து மேலோங்கிச்சூரியசந்திரர்முத
லிய நவக்கிரகங்களின் கெதிகளைமாற்றி கிரணகாந்தியையடக்கி யிருள்
மூடியதால் யிராக்காலமாயிற்றென்றெண்ணி பட்சிக்கூட்டங்களனைத்
தும்யிரைச்சலடங்கி தங்கள் கூடுகளிற்சேர்ந்திருந்தது, இந்தஉற்பாதத்
தைக்கண்ட மகத்துக்கள்பிரமகற்பம்நேர்ந்ததோவென்றுஅற்புதமடை
ந்தனர், சூரியனானவன் தன்தேர்போவதற் கிடம்பெருமற் கலங்கித்தி
கைத்து பிறமைகொண்டு நின்றுவிட்டனன், அக்காலத்தில் வானத்தில்நி
ன்றுவேடிக்கைபார்த்திருந்த முப்பத்துமுக்கோடி தேவர்க்களும் நாற்
பத்தெண்ணாயிரம் ரிஷிகளும்மற்றவானநாடராகியசெருடகாந்தருவர்சி
த்தவித்தியாதரர் பன்னகர்முதலானவர்களுந் திகைத்துமனவருத்தங்களு
டன்யிதனைச்சொல்லிக் கொள்ளுவதாயினர், யித்தினவரையில் ராட்சதப்
பாதகரால் வாடியிருந்த நாமினி அதிகவருத்தங்களைப் போக்கிச் சவுக்கி
யத்திலிருப்போமென்றிருந்தனம் இப்போது பூதப்படைகள்வீசப்பட்

# ஙாயச சிங்கமுகாசூரன்வதைப்படலம்.

டபற்வதங்கள் விருட்சங்க ளெத்தலங்களினும் நெருங்கிவருத்துவதால்
இவ்விடங்களினும் நிற்பதரிதாக விருக்கின்றதென்றேங்கி ஒருவர்முன்
னொருவராக மேலுலகங்களி லோடிப்பதுங்கினர், மேலும் சிவகணங்க
ள்வீசியமலைகளாதியவை பறந்துதாக்குவதினாற் காளமேகங்களிட செற்
பங்கள் பேதிக்கப்பட்டு மின்னலிடிகளுடன் செலத்தைஉலகங்களெங்க
ணும்பெருக்கிக்கொண்டோடியது, அப்பற்வதங்களில் வாசமாயிருந்த
சிங்கக்கூட்டங்கள் திகைத்து வழுவியிளைச்ச விட்டுக்கொண்டு எங்கும்
பரந்ததைப் பார்க்குமிடத்திற் சிங்கமுகாசூரனைத் தம்மினமென்றெண்
ணிவந்து சூழ்ந்ததைப்போலக் காட்டியது, யானைப்பெருக்கானதுவீழி
ட்டுவிழுகின்றதெப்படிக் கிருந்ததெனிற், சூரன் தம்பியானவன் தங்க
ளுக்குவயிரியாகிய மிருகாசனென்றெண்ணி பயந்தோடுவதை யொப்ப
த்தோற்றியது, இவையன்றியும்பூதர்வீசியபற்வதங்கள் போம்போதொ
ன்றுடனொன்றுராய்வதினாற்சிதறும்அனற்பொறிகள்அபரிமிதமாய்ப்புவ
னங்களெங்கனு முதிர்வதினால்அதிற்பட்டசீவராசிகள்தகிக்கப்பட்டுபொ
ரித்தும் சரிந்தும்மங்கியது சிவகணங்கள்செலுத்திய விருட்சங்கள்குன்
றங்களாதியாகச் சிங்கமுகாசூரன்பேரிற் கவிந்ததையோசிக்குமிடத்தில்
வெள்ளியங் கிரியினிடத்தில் மேகசாலங்கள் பரவியதையொத்தது, இவ்
விதங்களாகத் தாமேவியதனைத்தும் பிறையோசனப்படாமல் பங்கப்ப
ட்டழிந்துபோனதைக்கண்டபூதப்படைகள் கலங்கிவாடினார்கள் தேவர்
கள்பட்டவருத்தங்களை யின்னவிதமெனச் சொல்லிமுடியாது இப்படி
க்குச்சகலரும் பிறிமித்திருக்கின்ற தருவாயிற் சிங்கமுகாசூரன் பூதரைஒ
ருபொருளாக மதியாதவனாய்த் தன்சேனைவிட்டு நிலத்திற்குதித்து மன்
னுயிரைவாட்டவெழுந்த ஆலத்தைப்போலப்பாய்ந்து பல்லாயிரம் பூத
ரைவாரிச்சின்னபின்னப்படப் பூமியிலறைந்தும் சிலரைச்சுழற்றி காற்றி
ற்பட்ட சருகையொப்ப வானத்தில் வட்டமிட்டுச்செல்லவீசியும் பலரை
விஷ்ணுபிரமனுலகங்களில் அலறிக்கொண்டுபோய் விழச்செலுத்தியும்
கணக்கிறந்தவரைச் சத்தசாகரங்களினும் பெரும்புறக்கடலினும் தவளைக
ளைப்போல மிதக்கும்படிக்குக் கடாவியும் சிலரைத்தூக்கித் தெங்கின்க
னியையொப்பச்சூரியன்ரதத்தில்மோதியும்பல்லாயிரவரைத்திசைகடோ
றுமிறைத்தும் சிலரைஅலங்கோலப்படுத்தி நாவைக்கடித்து விழிகள்தெ
றித்து பற்களுதிர்ந்து மூளைகள்சிதற வலியகரங்களினா லறைந்தும் சில
ரைஅம்மானையைநிகராகச்சூலவியெற்றியும் சிலரைவாரித் திரோகம்நறுங்
கிவிழஅண்டச்சுவரிற்றாக்கியும் பலரைப்பந்தைப்போலெறிந்தும் சில
ரைஎமதருமராசன் வாசஞ்செய்யும் வைவசுதப்பட்டணத்திற் செல்லக்
கடாவியும் சிலரைப்பொன்னாட்டிற்போக்கியும் பலரைவடவைக்கனலுக்

ணையாகப்போட்டும்சிலரைவாயுமண்டலத்திற்பட்டுச்சக்கிராகாரமாகச்
சுழலவீசியும் சிலரைத்தீவுதீபாந்தரங்களில்வீசியும் சிலரை உலகங்களெ
ங்கணும் பரப்பியும் இவ்விதமாகச் சிங்கமுகாசுரன் சிலறேங்கிவீசியபூ
தப்பெருக்காலது விண்மண்ணெங்கும் நெருங்கிப் பஞ்சபூதங்கள் பரி
பூரணமாய் நிறைந்திருப்பதைப்போலத் தோற்றியது, சவுனகாதிரிஷிக
ளே இக்காரணத்தைக்கருதியோ மேலையோர்சிவகணங்களுக்குப்பூதங்க
ளெனப்பேரிட்டழைக்கின்றனர் இவையன்றியும் அவுணராசன் காலாந்
தகனாய் வலியபாதங்களைக்கொண்டுகணக்கிறந்தபூதரைத்தேய்த்துக்கொ
ன்றும் பலரைவிரல்களினாலெற்றி மாய்த்தும் சிலரைமண்ணுடன் சலந்
துபோகமிதித்தும் பல்லோரை உதைத்துருட்டி வதைத்தும் சிலரைப்ப
ருத்தகரங்களினாற் பிசைந்தூதியும் பல்லாயிரவரைப் பனைநாரைப்போ
லக்கிழித்தெறிந்தும் பலரைக் சற்கம்பத்தையொத்த புயாசலங்களினாற்
ருக்கிவாட்டியும் சிலரைப்பாயும்வேகத்தினால் மாய்த்தும் சிலரைஅதட்
டிக்கொன்றும் சிலரைக்கோடையிடிகளையொத்த வார்த்தையுரப்பில்மாய்
த்தும் பலரைஉதும்பிக்கொன்றும் சிலரைவெறித்தபார்வைகளினால்மடி
த்தும் வலியகரங்களிரண்டாயிரங்களையும் வலையைப்போலநீட்டிச்சேர்
த்துவாரி பலகோடிபூதரைப் பிலத்தையொத்த வாயிற்போட்டுமெல்லப்
போதாமையால் உமிநீரைப்போல விழுங்கிவிழுங்கிப் பண்டிநிறைந்து
பசிதணியாதகாரணத்தினால் மண்டியெரிந்து எழுவாயுதத்தினாற் சிலரை
வதைத்தும் மழுப்படையைக்கொண்டு பலரைமாய்த்தும் பலரைக்கொ
ழுவினாலடக்கியும் சிலரை முத்தலைச்சூலத்தினாற் குற்றிகளத்திற் படுத்தி
யும்பலரைத்தண்டாயுதத்தினால் மோதிக்கொன்றும் சிலரைவில்லினாலடி
த்துதுகள்படுத்தியும் சிலரைபாணங்களிற்கோர்த்து அரிக்கிடையாகத்த
ள்ளியும் பலரைமேல்வரும் மராமரங்களைப்பற்றிச் சுழற்றிமோதி வதைத்
தும்பூமியிற்கிடத்தியும் இவ்விதங்களாகச் சூறைமாருதம்போலச் சுழ
ன்றுசுழன்று சிங்கமுகாசுரன் சாடுவதைக்கண்ட தேவர்க்கள் அவுணப்
பாதகன் தேர்மீதிருக்கின்றனனோ விண்ணிடங்களி லுலவுகின்றனனோ தி
சைகளிற்பாய்த்துபோயினனோ பூவட்ட வெல்லைமுற்றும் பவனிவருவ
னோசத்தசாகரமீதில் உலவுகின்றனனோ தாமரைக்கமலவாசியாகிய பிரம
ன்பதத்திற்போயினனோ மகாமேருப்புறத்திற் றிரிகின்றனனோ சவுரிய
பராகிய பூதசயின்னியங்கள்பேரிற் சீறிப்போராடி யிருக்கின்றனனோ
யாதுந்தோற்றவில்லை எவ்வெவ்விடங்களினுங்காட்டவுலவி சூறாவளியை
ப்போலத்திரிகின்றனன் இவன்வல்லபத்துக்கொருவரையும் ஒப்புச்சொ
ல்லப்படாதென பிரமித்துப் புகழ்ந்தனர், இவ்விதங்களாகச் சிலறேங்
கிவாட்டிவருமுன்னிலையில் பூதப்படைகள் அல்லோலகல்லோலப்பட்டு

ச்சிதைந்து சிரங்களற்றும் கரங்களற்றும் மார்புகிழிந்தும் வயறுபீறுண்
டுகுடல்கள் சர்ப்பங்களைப்போல யிறைந்தும் பற்களுதிர்ந்தும் துடைகள்
முறிந்தும் வீரவெண்டையங்கள் கலிக்கும் கால்கள் கண்டித்தும் சிதை
ந்தும் கண்டங்கண்டமாயிறைந்தும்சக்கைச்சக்கையாகப்பிளப்புண்டும்
தவுடுபொடியாக நுறுங்கியும் சாம்பலாசமங்கியும் பூமியிற்கவத்தும்பு
தைந்தும்நாசிகள்சதைந்தும்செவிகள்தெறித்தும்மூளைசிதறியும்இவ்வித
அலங்கோலப்பட்டு துயரமேலிட்டு கணக்கிறந்தவர் களத்திற்பட்டனர்
சவுனகாதி தவத்தரோ, அத்தொகைஇவ்வளவெனச்சொல்லிமுடியாதுபோ
ர்களமுற்றினுங் கவந்தங்கள் நாடகரைப்போல நடித்து உதிரப்பிறவா
கமானது யிரைச்சலிட்டுக்கொண்டோடிக் கருங்கடலைச் செங்கடலாக்கி
மகரமச்சங்களுக்கு விருந்திட்டு மேலிட்டு பூமியெங்கனும்பரந்தது,இ
ப்பிறகாரம் சர்வசங்காலத்திற் றோற்றநின்றருத்திரமூர்த்திவிழிகளினின்
றெழும் அனற்பொறியொன்றின் றீட்சணியத்தினாற் சராசரப்பிறபஞ்ச
ங்களனைத்தும் தகிக்கப்பட்டழிந்து மங்குவதைப்போல வீராதிவீரனு
கியசிங்கமுகாசூர னெங்கனுந்தானாகவுலவி பூதப்படைகளனைத்தையும்சி
ன்னபின்னப்படவாட்டிக் கொல்லுகின்றதறுவாயில் தேவர் மருண்டு யி
ந்தபாதகன் காலாந்தகனாய் வீராவேசங்கொண்டு போர்விளையாடலைச்
செய்து உதிரவெள்ளத்திற் புரண்டோடக்கிடத்துவதை யோசிக்குமிட
த்தில் பூதருக்குக் காலாதிகளிற் பிராணனைக்கொண்டுபோகும் எமனைநி
கராகக்காணுகிறது, ஆதலால் முன்னமேநம்மிடத்திற் பூரணகடாட்சமு
ள்ளவனாதலால் யிந்தவீராவேசகாலத்தில் யிவ்விடத்தில்நிற்போமாகிற்கூற்
றவனைப்போல நம்முயிரையுங் கொள்ளைகொண்டு பண்டி தெவிட்டவு
ண்டுகளிகொண்டு சென்றுமுண்டாடி நம்முலகங்களெங்கனுமுலவிமற்
றையரையும் வாட்டாமலொழியான் துரிதமாய் வாருங்கோள் வாருங்
கோளெனத் தம்மினத்தவராக் கூவிக்கொண்டு ஒருவனுக்குமுன்னொரு
வன்முந்தி பலதிசையினும்பறந்து பதுங்கினர், இப்படிக்குச் சகலரும்
பயப்பிருந்திகொண்டு போகும்படிக்கு வடவையைப்போலத்தன்மீதெ
திர்த்து மரங்களையும் மலைகளையும்வீசிப் போராடிய பூதசயின்னியங்க
ளனைத்தையும் சின்னபின்னப்படுத்திசெயசாலியாய்ப் பொன்மலைக்கொ
ப்பாகநிற்கின்றரதத்திலேறிமண்டிபோட்டுளுக்கார்ந்துபாரித்தவிற்களைக்
கரங்களிற்பற்றியிருப்பதையும் தன்சேனைகள்பட்ட கொடுமையையும்க
டல்வண்ணனாகிய தழற்கண்ணனென்னும்பூதத்தலைவன்கண்டுபதைபதை
த்தமானமுங்கோபமும் மனதைவாட்ட வடவாமுகாக்கினியைப்போல
ச்சிறி விழிகளிற்றீப்பொறிகள்சிதற உருத்துத் துரிதமாய்ச் சிங்கமுகாசூ
ரன்முன்னம்வந்துநின்று அடாஅவுணப்பாதகனே இவ்வாறு நம்மவரை

மாய்த்தவுன்னுடன்கொடியபோராச்செய்துநிணமாம்சங்களைத்தெவிட்
டவுண்டு கண்டனாகவிருக்கின்றஉன்னரிபிராணனை எமலோகங்குடியே
ற்றவல்லேன் சண்டைக்குவாடாபயலேயெனப்பேசுவதைச் சிங்கமுகன்
கேட்டுச்சீறி சற்றும் நமதாண்டிறத்தையும்வெற்றிப்பாடுகளையும்அதிகா
ரச்சிறப்புகளையும்புயவன்மைமுதலிய பிறபாவங்களையும்எண்ணிப்பாரா
மல்பயமற்றுயிப்படிக்குச்சொற்றனைபேசும் வல்லபத்துக்கொருவருமு
னக்கொப்பில்லைஉன் தீரம்வெகுநேத்தியென்றுதேவர்க்களஞ்சிஓடும்படி
க்குக்கோபநகைகொண்டனன், அப்போதுவெற்றிபரனாய்ப்புயவன்மைக்
கொப்பற்றபூதத்தலைவனான தழற்கண்ணனென்னும் பெயரையுடையவீர
ன்றவுத்திராகாரமாகச்சீறிஉன்குணவத்தையிந்தநிமிஷத்தில்வாட்டிபுத்தி
வரச்செய்வேன்அதையும்சற்றுநேரத்திற்காண்பையெனவீரங்களைப்பே
சிமின்னலுக்கொப்பாகச் சொலித்துக்கொண்டிருக்கும் முத்தலைச்சூல
மொன்றையெடுத்துபகைவன் மார்புக் கிலக்காகக்கடாவிச்சிங்கநாதஞ்
செய்தனர்அப்படைவெளிப்பட்டவுடன் தீயையும்புகையையும்பெருக்
கிக்கொண்டுபலமகிமைகளைக்காட்டிவீதிமேலிட்டுஎமனாயுதத்தைப்போ
லவேகமாய்வருவதைச்சூரன்தம்பிபார்த்து அதையொருபொருளாய்மதி
யாமலும்மற்றொன்றையேவித்தடுக்காமலும்நகைமுகனாய்ச் சும்மாயிரு
ப்பதைக்கண்டதேவர்க்கள் அற்பசந்தோஷிகளாதலால்மேல்நடப்பதை
த்தெரியாமுன்னம்பகைவன்தோற்றான் தோற்றான் யிப்படையினால்மா
ள்வனென்றுகரங்களைக்கொட்டி செயவுச்சாகங்களைக்கொண்டாடினர்அ
க்காலத்தில் மீறிவந்தசூலப்படையானதுவலியகுன்றிற் றைத்தசிறுமுள்
ளையொத்து வயிரத்தைநிகர்த்த விசாலமாகிய மார்பிற்றாக்கியவுடன் மு
னைமழுங்கி துகள்பட்டுப்போயது, யிதனை பூதவீரன்பார்த்து மதித்துத
வங்களைச்செய்துபெற்றவரங்க ளிவனுக்குக்கிடைத்ததேமேலானபேறெ
ன்று விம்மிதனுப்ச்சூரனாதலால் றவுத்திராகாரமாகப் பொங்கி துரிதமா
ய்பருத்துநீண்டிருக்கும்வலியதண்டாயுதமொன்றையெடுத்துமணிகள்க
லிக்க கிறுகிறெனச்சுழற்றிக் கரவேகமாகக்கடாவியதறுவாயில்வாயுவினு
ங்கடுகியினாச்சவிட்டுக்கொண்டுவந்து கோடையிடியைப்போலச் சாரதி
மார்பிற்றாக்கிய மாத்திரத்திற் கதறிஉதிரங்களைக்கக்கிநிலத்தில்விழுந்து
ருண்டான் அப்போதுசிங்கமுகாசூரன் றவுத்திராகாரமாகக் கோபித்து
தன்கரத்திற்கொண்டிருந்த மந்தரத்தையொத்த தண்டயுதத்தைச்சுழற்
றிவீசியகாலத்தில் பிறசண்டவாயுவைப்போ வினாந்து நிமைப்போதில்
வேகமாய்வந்து பூதத்தலைவன் வலியமார்பிற்றாக்கிய காலத்தில் மனங்கல
ங்கிக்கதறிவருந்தி பறவதத்தினிடத்தில் வச்சிராயுதந் தாக்கியதைப்போ
லப்பிளந்துபிராணவாதையினால் விழிகளிற்சுவாலைபெருக நாசியினிடத்

தும்வாயின்மூலமாகவும் பிளப்புண்டமார்பின் வழியாகவும் குன்றினி
ன்றொழுகும் அருவியைப்போல உதிரம் பெருக்கெடுத்தோடச் சோப
முற்றபோதிலும் வயிரத்தை மறவாமல் விழிகளிற் றீப்பொறிகள் சிதற
பிராணன்போவதும் வருவதுமாய் ஊசலாடப் பொறிகலங்கி அக்கினிமு
கன்களைத்துச்செயலற்று நின்றனன், அக்காலத்திற்சிங்கமுகன் மற்றொரு
சாதியை யமத்திக்கொண்டுகோபித்து மேலிட்டுவருவதைச் சுமாலியெ
ன்னும்வீரன்கண்டு மானமுங்கோபமும்மனதைக்கொளுத்திவாட்டச்சீ
றிப்பாய்ந்துமேருவையொத்த பருத்தமலையொன்றை அடியுடன்பறித்
துர்காவேகமாய்ப்பகைவன்மீதில்வீசி மேகங்களுமஞ்ச செற்சித்தபோ
து அந்தப்பற்வதம் பம்பரத்துக்கொப்பாகக் கிறுகிறெனச்சுழன் றுயினை
ந்துசமீபித்தகாலத்திற் கரங்களினொன்றிற்பற்றி மீளவும் வலிகொண்டு
வீசியபோது அதிவேகமாய்த்திரும்பி விசாலமாகியமார்பிற்பேரிடியை
ப்போலவிழுந்த மாத்திரத்திற் சுமாலியென்பவன்மிகவும்வருந்தி கோ
பதாபம்மனதைவாட்ட உதிரத்தைக்கக்கி அசைவற்றுநிலத்தில்விழுந்து
களைத்தனன்யிக்காரணத்தைத்தண்டியென்பவன்தெரிந்தவுடன்காலாந்த
கனுக்கிணையாக உருத்துத்தன்கரத்திற் கொண்டிருந்த பருத்ததண்டா
யுதத்தைக்கரகமெனச்சுழற்றிப்பாய்ந்து சிங்கமுகன்மார்பிற் றாக்கியகா
லத்தில் வயிரமலையிற்பட்டயிருப்புலக்கையைப்போலப் பொடிப்பொ
டியாயிறைந்தது யிதைக்கண்டவுடன் மானம்பாதிக்கமண்டியெரிந்துத
ன்கரத்தைபிடித்தமாக்கிக்கொண்டு அவுணர்பெருமான்மார்பிற் றாக்கிய
தறுவாயிற் சிங்கமுகன்சிறிக்காலினாலெடுத்து தேவர்களு மருண்டுவாடு
ம்படிக்குவானத்தெறிந்துசெற்சித்தனன் தண்டியும்வேகமாய்அண்டக
டாகவனாயிற்போய்த் திரும்புமுன்னிலையிற் பகைவனை வாட்டவேண்டு
மென்னுங் கருத்தனாய்அவுணப்பாதகன் விசாலமாகிய தோள்களினிட
த்திற்குதித்துத் தன்பருத்தகால்களினால் வலிதின் மிதித்துதைத்துபொன்
மயமாய் பலசிகரங்களைத்தாங்கி வானத்தையளாவநிற்கின்ற மேருகிரியி
னிடத்திற்றழைத்தகிளைகளைவாய்ந்தவிருடசங்கள்மலிந்ததோப்புகடோ
றும் குரங்கினங்கள்பாய்ந்து விளையாடுவதைப்போலப் பகைவன்யிர
ண்டாயிரம் புயாசலங்களின்மூலமாகத்திரிந்து திரிந்துவலிகொண்டுமி
தித்துமிதித்துக்கால்களோய்ந்து அவ்வுறுத்தலின் பரிசஞ்சற்றுந்தோற்
றாமற் றன்வீரத்தைச்செலுத்திவருஞ்சிங்கமுகன் புயவலியையமதித்துமிற்
மித்தவனாய் கரங்கள்தோறும்பாய்ந்தும் அவற்றிற்பற்றி யிருக்கின்றஆ
புதவிதங்களி னிடத்துலவியும் நவரத்தினமயமாகப் பிரகாசித்திருக்கின்
றபருத்தவயிரமுடிகள்தோறும் சஞ்சரித்தும் விசாலமாய்ப் பரந்திருக்
கும் செவிகளிடங்களில்நுழைந்துநுழைந்து வெளிவந்தும்யிவ்விதமா

சபவனிவருவதைப் பார்க்குமிடத்தில் திவ்வியமலர்களைத் தரும் சோ
லைகளில் அழகியசிறகுகளை வாய்ந்த வண்டினங்கள் தேனையுண்ணவிருப்
புற்று முற்றினும் உலவித்திரிவதைப் போலக் காட்டியது,யிவ்விதமாக
பூதத்தலைவன் வலம்வருங்காலத்தில்யின்னதெனத்தோற்றாமல் ஈயென
நினைந்து ஒருகரத்தினாற்றுடைத்துத் தள்ளியதறுவாயில்தண்டியென்னு
ம்வீரன்சரீரம் மிகவும்நொந்தவனாய் அம்மம்ம யினி யிவ்விடத்தில் நி
ற்போமாகிற் பாதகன்றேய்த்துக்கொல்லுவன் மேலும்யிவனையசைக்கி
றத்துக்கு நம்மாலாவதொன்றுமில்லைவெற்றிவேற்படையல்லதுமற்றெ
ந்தவிதங்களினாலும் சளையப்பட்டவனன்றென்றெண்ணி வலியுஞ்சூரமு
ம்கோபமும்மானமுதலாகியதையிழந்து அப்புறங்குறித்துப்பின்னிட்
டனன்,யிந்தசம்பவங்களைக்கண்டபூதப்படைகள்மனங்கலங்கிநமக்குத்
தலைவனாய் புயவன்மைக்கொப்பற்ற தண்டியென்னும்வீராதிவீரனேயிப்
பாடுகளைப்பட்டு பிறையோசனமற்றுவாடித்திரும்புவனாகில் யினிநம்மா
லாகவேண்டுவதென்னையெனமயங்கி யாதுந்தோற்றாமல் நிற்கவும்பய
ந்து ஒருவரும்ரணக்களத்திற் றங்காமல் பலதிசைகளினும் யிறைந்தும
றைந்தனர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே சிங்கமுகாசூரன் வல்ல
பங்களைக்குறித்துப்பார்க்குமிடத்தில் யிவ்வுலகத்திற் றவமென்னுமொ
ருசிறந்த பொருளையன்றியில் வேறுமொருவலியிருக்கின்றதெனச்சொல்
லப்படுவதோ மேற்குறித்தப்படிக்குப்பூதப்படைகளைத்தம் மாண்டு
ம்புறந்தந்தோடியும் ரணக்களத்திலொருவருமில்லாமற் பாழ்பட்டகா
ரணங்களை-எண்மர்-இலக்கர் கண்டுமனம் வருந்தினவர்களாய் படைத்
தலைவர்களுடன்றவுத்திராகாரமாகக்கோபித்துத் தங்கள் தேனாத்துரத்தி
வந்துசிங்கமுகாசூரனைவளைந்துகொண்டு விழிகளிற் றீப்பொறிகள்சிதற
உருத்து தங்கள்கரங்களிலிருக்கின்ற விற்களைவளைத்துநாணேற்றிகுணத்
தொனிசெய்து கொடியதீட்சண்ணியமுள்ள பாணகோடிகளைச் சோனை
ப்பெய்யலைப்போலப்பொழிந்தகாலத்தில் அவைகள்மண்விண்ணெங்கு
ம்நெருங்கிஅனலைவீசிகோடையிடிகளைப்போலச்சீறிக்கொண்டுவேகமா
ய்வந்து சிங்கமுகன்சரீரமுற்றும்தாக்கித்தாக்கிச்சற்றும்காயப்படுத்தா
மற்கொடுமையடங்கிதக்கைகளைப்போல அவனைச்சுற்றினும்பர்வதங்க
ளுக்குச்சமதையாகக்குவிந்துவருவதைப்பார்த்துதிப்பிறமை கொண்ட
வர்களாய்யிதைவிட நம்மாலாகும் போர்த்தொழிலென்னவிருக்கின்றது
இதுபரிந்தம்பெற்றிருந்த நமது புயவன்மையும்வீரபராக்கிறமங்களையு
ம்வெற்றிப்பாடுகளையும்யிழந்தனமென்னும்லச்சையுடனிருக்கின்றதறு
வாயிற்சிங்கமுகன்கோடையிடிகளைப்போலக்கெற்சித்துபலவசைகளைப்
பேசிக்கொண்டுதேனாவிட்டுநிலத்திற்குதித்துப்பாய்ந்துசிலவீரர்கள்தே

ர்களைச்சேர்த்தெடுத்துபந்துகளைப்போலவானத்தெறிந்தும்பலவீரர்தே
ர்களைக்கரங்களிற்பற்றித் தேங்காய்களையொப்பத்தட்டித்துகள்படக்குவி
த்துஞ்சிலசூரர்தங்களையெடுத்துஉள்ளங்கையில்வைத்து நசுக்கிப்பொ
டித்தூளியும் ஒவ்வொருவுதையினாற்பற்பலதேர்களைப் பொடிப்பொடி
யாக்கியும் பலதேர்களை நுறுங்கியிறைய கரங்களினால்மோதியும் சிலதே
ர்களை நிலத்திற்புதைத்தும் சிலதேர்களையெடுத்து அம்மானையாடியும்இ
வ்விதமாக ரணரங்கசூரனாகியசிங்கமுகன்சிலநேரஞ்சீச்சாடும்போது எண்
மர்படாதபாடுகளைப்பட்டு வாகனங்களையுமிழந்து படைத்துணையா
கவந்தவீரர்களையும் பறிகொடுத்துநின்றசிலசேனைகளையும் மாளக்கொடு
த்து தூணீரங்களில் ஒருபாணமாவ தில்லாமலிழந்து வில்லைமாத்திரம்
தாங்கிவலியும்வீரமுமற்று சண்டைமுனையில் நிற்கப்பயந்து பின்னிட்
டனர், அத்தருவாயிற்செயவுச்சாகத்துடன் அவுணராசன்பழையபடிக்கு
த்தேரிற்பாய்ந்து மண்டிபோட்டிருந்து விற்களைக் கரங்களிற் பற்றிக்
கொண்டு எதிர்ப்பவரொருவருமில்லாமையால்வீரசிங்கம்போலப்பார்த்
திருக்கின்றதருவாயில்இந்தசம்பவங்களனைத்தையும்மற்றொருதிசையிலி
ருந்த ராட்சதகுலாந்தசனாகிய வீரவாகுதேவர்பார்த்து மனவருத்தத்து
டன் யிதனை நினைக்கின்றனர் யிந்தசிங்கமுகாசூரன் செய்கைகளைப்
பார்க்குமிடத்தில் மிகவும்அற்புதமாகவிருக்கின்றது தமையனைப் பார்
க்கினும்பதின்மடங்கு செயசாலியாகக்காட்டுகின்றனன் சிலபோதிற்கா
லாந்தகனைப்போலத்திரிந்து நமதுவெற்றிபெற்ற சேனைகளிற்பாதிவரை
யிற்சின்னபின்னப்படக்கொன்றான் மற்றவர்கள் நிருவகிக்கப்படாமை
யால் பற்பலகாயங்களுடன்சிதறி யோடிமறைந்தனர் யிவையன்றியிற்
செயசாலிகளாகிய நமதுதுணைவரும்இலக்கருமயிவனுடனெதுத்துகொ
டியபோரைச் செய்துசெய்திளைத்துபங்கப்பட்டுத் திகைத்திருக்கின்றன
ர்,யிவையனைத்தையும் பார்க்குமிடத்தில் யித்தினமே நமது சேனைகள
னைத்தும் நாசப்பட்டுப்போம்போலத்தோற்றுகின்றது எமதிறைவனுகி
யசிவசுப்பிரமணிய தேவரா நிறுத்தி வெற்றிபெற்று வாக்கடவேனென்
றுவிண்ணப்பஞ்செய்துவந்த யான்யிப்படிக் கசாரீசமாக விருப்பேனா
கில்யிதனால்வரும்அபகீர்த்தி யாரைச்சேரும் ஆதலாற்றாமதஞ்செய்யாமல்
விரைவிற்போயெதுத்துக் கூடியவரையி லொருகை பார்ப்பதே காரிய
மெனத்துணிவுகொண்டு வடவனலைப்போலக் கோபித்துத் துரிதமாய்த்த
ன்தேரைத்தூரத்திவந்து பகைவன் முன்னம்நிறுத்தி பாரித்திராநின்றத
னுசைவளைத்து நாணேற்றி அண்டபுவனசராசரங்கள் கிடுகிடென்றதிரக்
குணத்தொனிகொண்டு வடித்துக்கூர்மையாய் விஷத்தொவையவிட்டிரு
க்கின்ற திட்சணியமாகியபாணசமோகங்களைச் சோனைமாரியைப்போல

மென்மேலும்தாண்டுகின்றதறுவாயில் யெவ்விடங்களினும் பரந்து பு
கைந்தெரிந்துகொண்டு சற்பங்களைப்போலச்சீறிப்பாயுந்தோறும் எது
த்துப்போராடுகின்ற ராட்சதவீரர் சிரங்களைக் கண்டித்தும் புயங்களைச்
சரித்தும் கரங்களைமுறித்தும்மார்பைத்துறந்தும்வயற்றைப்பீறியும்து
டைகளையொடித்தும் கால்களைவெட்டியும் சல்லடையையொப்பத்துளை
த்தும்சின்னபின்னப்படச்சாடியும் கண்டதுண்டமாக்கித்தள்ளியும்மே
லும் யானைகளைத்தலைவேறுமத்தகம்வேறுதுதிக்கைவேறுகோடுகள்வேறு
உரலையொத்தகால்கள்வேறு யிவ்வாறுபின்னப்படுத்தி மாய்த்தும் தேர
ணிகளைச்சக்கைச்சக்கையாகப்பேத்தெறிந்தும் உறுப்புகளனைத்தையுங்க
ளமுற்றினுமிறையப்பொடித்தும் புரவிகூட்டங்களை அலைகளைப்போல
ப்பாயுங்கால்களைத் தட்டியும் சிரங்களையுருட்டியும் மார்பைக் கீறியும்ச
தைசதையாகச்சேதித்தும் ரணக்களவெல்லையெங்கனு முருட்டியது சவு
ணசாதிரிஷிகளே அந்தபாணகோடிசெய்த கொடுமையை யின்னவிதமெ
னச்சொல்லிமுடியாது அத்தறுவாயில்பிணமலைகளோங்கிப்பற்பலகவந்
தங்கள்கூத்தாடவும்உதிரப்பிறவாகமேலிட்டுஅலைகளைப்பெருக்கியெங்க
னும்பாய்ந்தோடியது பூதபசாசங்கள் நிணமாம்சங்களைப்பண்டிநிறைய
த்தெவுட்டஉண்டு உதிரத்தைத் தேக்கிடக்குடித்து ஐயன்புகழைப்பாடி
வெறியாடலைச்செய்தது, கழுகு-பருந்து-காக்கைகள்- மனமகிழப் பிண
ங்களைக்கொத்தித்தின்றுவானத்திற்கூர்தலிட்டுலவியது நாய்நரிகள்களே
பரங்களை யிங்குமங்கு மிழுத்துப் பிடுங்கித்தின்று ஊளமிட்டுக்கொண்
டுஒன்றுடனொன்று வாதாடி சமர்பூமியெங்கனுமுலவியது யிவ்வாறுவீ
ராதிவீரன் வாளிகளினாற் கண்டதுண்டப்பட்டுமாண்டதுபோக நின்றரா
ட்சதசயின்னியங்களை வீரவாகுதேவருக்குச்சகாயமாகஉதிரப்பெருக்கடி
த்துக்கொண்டுபோய்க் கடலிற்சேர்த்து மகரமச்சங்களுக்கு விருந்திட்
டது யிவையன்றியும்-ரணபேரி-செயபேரி-வெற்றிச்சங்கமுதலிய சத்
தங்களும் கொடியபாதகராகிய அவுணவீரர் கரங்களிற்பற்றிய வில்லினி
ன்றெழும் நாணொலியும் பிரளயவெள்ளத்தைப்போலச்சூழ்ந்திருந்த ரத
கெசதுரகபதாதிகளின் ஆரவாரங்களும் வகையறவடங்கி ரணபத்திரகா
ளியினிடகூட்டங்க ளெங்கனுமலிந்து ஆற்பாட்டங்களைச் செய்யுமோ
சையும் பூதகணங்கள் பட்சிசாலங்களி னாரவாரமும்சென்னீர் சுழலமிட்
டோடும்பிளாச்சலும் சமர்க்களவெல்லைமுற்றினும்மலிந்திருந்தது,இஃ
தன்றியும் புசவெலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் கரவேகமாகப்
பிறையோகித்துவரும் பாணகோடிகள்சிடசிடத்ததொனிகளுடன் போ
கும்வேகத்தினால் அஷ்டகுலாசலங்களைத் துளைத்தோடியும் அவுணப்பா
தகர்பற்றியிருந்த வாள்-வேல்-தண்டமாதியபடைகளை நுறுக்கித்தள்ளி

யும்வட்டாகாரமாகவிருந்தவிற்களையிருதுண்டமாக்கியும்நாரிகளைபடா
லுமென்றறுத்தும் ஒவ்வொருபாச்சலில்ஆயிரம்பதினாயிரம்பகைவர்வலி
யமார்புகளைத்துளைத்துக்கொண்டோடியும் கொடியசிரங்களைஏககாலத்
திற்கண்டித்துத்தாவியும் யிவ்விதங்களாகச்சத்திராதிகளைத்துண்டித்தும்
வேகமடங்காமற்சத்தசாகரங்களையும்நீந்தி அஷ்டகுலாசலங்களைத்தாவி
சக்கிறவாளகிரியைத்தடாரித்துப்போய் அண்டப்பித்திகையையுமுருவி
யோடுமாயில் வீரன்பாணங்களின்பெருமைகளையும்துரிதத்தையும்பசி
முடிவதோ யிவையன்றியும் நீர்க்காக்கைகள் ரத்தப்பிறவாகத்தில்முழுகி
மாம்சக்கண்டங்களைக்கவ்வியெழுந்துசிரமலைகளின்மீது நின்று சிறகுக
ளைப்புலர்த்திமண்டைகள்பிளந்துகுவிந்திருக்கின்றமூளைப்பெருககிற்பு
றண்டோடுவதைப் பார்க்குமிடத்திற் கோக்கினங்களென்றையப்படத்த
க்கதாகஉலவும் யிவ்வாறு அதிசூரனாகிய வீரவாகுதேவர்காலாந்தகனாய் ற
ணக்களமுற்றினுந் தானாயுலவி சின்னபின்னப்படக் கொன்றவேடிக்கை
யைச்சிங்கமுகாசூரன்பிள்ளைகள் வீராதிவீரராகிய நாற்றுவர் கண்டுமனம்
புழுங்கி றவுத்திராகாரமாகக் கோபித்துவிழிகளிற் றீயெழவுருத்து நெற
நெறெனப்பலதிரம்பற்களைக்கடித்து உதட்டையதுக்கிமீசைதுடித்துப்
புருவம் நெற்றியிலேறக்கொதித்து நல்லகாரியம்கொஞ்சமாவது பயமி
ல்லாமல் நாமெல்லவரும்பார்த்திருக்கச் சேனைகள்முற்றும்சின்னபின்ன
ப்பட்டுப்போகக் கொடியபோலாச்செய்து வருந்தாதனைவளைந்துகொ
ண்டுகெற்வத்தையடக்கி அதப்படுத்தவேண்டுமென்று ராசபுத்திரரனைவ
ரும்ஒருமுனையிற்சேர்ந்து தேர்களைத்துரத்திவந்து வீரனைச்சூழ்ந்தவரா
ய்த் தனித்தனியே விற்களைவளைத்து விஷத்தொவைய விட்டிருக்கின்ற
கொடியபாண வருஷங்களைப் பொழிந்து கெற்சித்தமுன்னிலையில் அ
வைகள் வெளிப்பட்டவுடன் திசைகளெங்கனும்நிறைந்து அனலைப்பெ
ருக்கிக் குவகுறுத்ததொனிகளுடன் பிறசண்டமாருதத்தைப்போலமே
லிட்டுவருவதை வீரவாகுதேவர்தெரிந்து துரிதமாய் அனந்தகோடி கூரி
யநாராசங்களைச் செலுத்திக்கண்டித்து தேவர்க்கள் புகழும்படிக்கார்ப்
பரித்தனன் அதைக்கேட்டவுடன் நாசகாலம்நெருங்கி யிருக்கின்ற ராச
குமாரர்கள் வடவைக்கனலைப்போலக்கோபித்து விஷத்தொவையவிட்டு
அனலைவிசத்தக்க கொடியவாளிகள்கோடானகோடிகளைக் கரவேகமாகப்
பிறையோகித்துச் சிங்கநாதம்அட்டகாசங்களைச்செய்தனர், அக்காலத்தி
ல்வீரவாகுதேவருக்கு அதிககோபம் பிறவேசித்து காலாந்தகனைப்போ
லச்சீறிக் கணக்கிறந்த பாணவிதங்களினால் மேவிட்டுவருகின்றவைகளைத்
தடுத்து மீட்டும் அமோகமாகிய சரங்களைவினாவிற்போக்கிப் பகைவரோ
டியிருந்ததேர்களைச் சின்னபின்னப்படக் கண்டித்ததுமன்றியிற் காங்க

ளிற்பற்றியிருந்த வலியதனுசுக்களையும் பொடித்துத்தள்ளினர், அக்கால
த்திற் சிங்கமுகன்பிள்ளைகள் நிலத்தேரில்நின்று யிவனை வில்வன்மையி
னால்வெல்வதரிதாகக்காணுகின்றதால் வாட்போரின்மூலமாய் மாய்த்து
செயங்கொள்ளக்கடவோமென நிச்சயித்தவர்களாய் மேலும் ஒருதந்திர
த்தைமனதில்நினைந்து யிதனைச்சொல்லுவார்கள் ஓ வீரனேஉன்சாகசங்
களைப்பார்க்குமிடத்தில் விற்போரொன்றைமாத்திரம் பூர்த்தியாகக் கற்ற
வனாகக்காணுகின்றது வாட்பயிற்சிகளேதெனுந் தெரிந்திருக்குமாகில்ள
ங்களுடன் அப்போரைச்செய்யலாம் ஏதோபார்ப்போமென்று புசங்க
ளைத்தட்டி எமனுமஞ்சஅறைகூவி ஆர்ப்பரித்து அடிபெயர்த்து மா
றிமாறிவைத்துப்பாய்ந்து மேவிட்டுவருவதையும் அவர்கள்பேசியவாசக
ங்களையும் வீரன்தெரிந்தவுடன் கோபநகைகொண்டவராய் லோகநாய
கனாகியசிவபிரான் தமக்கனுக்கிறகித்திருக்கின்ற மின்னலையொப்ப சொ
லித்திருக்கும் கூரியவாளாயுதத்தை உருவிகரத்திற்கொண்டுசிங்காசனை
ப்போலத்தேரைவிட்டுநிலத்திற்பாய்ந்து முன்னடிவைத்துப் பின்னடி
வாங்கித்தாவி பகைவர்மீதுபோவதை தேவர்க்கள்கண்டு நடுநடுங்கிப்பய
ந்துவீரன் தனித்துச்செல்லுகின்றனன், பாதகர்நாற்றுவரும் மடக்கிக்
கொண்டென்செய்வரோவென்னும்ஏக்கத்தினாற் றேவாதிதேவனைத் துதி
த்து நம்மவனுக்குச்செயமுண்டாகக்கடவதென்றுவாழ்த்தி சவனமாகப்
பார்த்திருந்தனர், யிவ்விதமாகவீரவாகுதேவர் சீறிநெருங்கு முன்னிலை
யிற் சிங்கமுகன்பிள்ளைகள்களித்து பாதகன்பக்குவமாயகப்பட்டுக்கொ
ண்டான் யாமெல்லவருமெதுத்துவளைந்துகொண்டுயிந்தநிமிஷத்தில்க
ண்டதுண்டமாக வெட்டித்தள்ளிபகையைமுடித்து மனவெழுச்சிபெற்
றிருக்கக்கடவோமென்னுங்கருத்தராய் தீரத்துடன்கூரியவாட்படைகளை
யிடம்வலம்வலமிடமாகச்சுழற்றித் தனித்தனியே நாலுமூலைகளினும்சூ
ரியனை நேர்ந்தயிருளைப்போலச் சூழ்ந்தவராய் பலசபதங்களைப்பேசிவீ
ராதிவீரன் சிரத்துக்கும் -கண்டத்துக்கும் -தோட்களுக்கும் மார்புக்கு
ம்துடைகளுக்கும் குறித்துக்குறித்து வாளைக்கொண்டு வீசிவீசி வட்ட
ணைவரும்போது வீரவாகுதேவரும் சூறுவளிக்காற்றையொப்ப விரை
ந்துசக்கிருசாரமாகஉலவி பகைவர்செலுத்தும்வாளின் தாக்கலைத்தட்டி
க்கொண்டுலவும்போது பாதகர்மனம்பொருமல்சைமிஞ்சி நெருங்கிஉ
றுப்புகளைநாடிநாடி ஓங்கிவெட்டுகின்றதறுவாயில் வயிரமலையிற்பட்ட
துரும்பைப்போலத் தெறித்துப்போய தல்லது சற்றுங்காயப்படுத்தா
மலும் திருமேனிக்கு வாட்டம்வதக்கமில்லாமலும் மனவெழுச்சியுடன்
வாட்போருக்குரிய சாகசங்களைகாட்டிப்போராடிவருவதை ராசகுமாரர்
கண்டு பிறமித்தவர்களாய் யிதனாலும்யிவனை வெற்றிகொள்வ தரிதாகக்

காணுகின்றதால் அனைவரும்கீரத்துடன்மேல்விழுந்து கைகாலாடவொட்டாமற் கெட்டியாய்ப்பிடித்துக்கசக்கிக் கொல்வதேகாரியமென நிதானித்து சடுதியிற்சகலரும்பாய்ந்து கரங்களினாற் சேர்த்துக்கட்டினர், சவுனகாதிரிஷிகளே அந்தவீரன் சவுரியபராக்கிரமங்களை யென்சொல்லுவேன் அவையங்காத்திருந்த நாகசற்பத்தைப்போலப் பொங்கிச்சீறித்துமிறிவெளிப்பட்டவராய் சராசரப்பிரபஞ்சங்களைத் தகிக்கும் வடவனலைப்போல மின்னலையொப்ப விளங்கும் வீரவாளை வீசிவீசிச் சிரங்கரம்உரம்இத்தகைய அவையவங்களைக் குறித்துக்குறித்து வெட்டிவெட்டிகண்டங்கண்டமாகத் துண்டந்துண்டமாக அந்தநூறுராசபுத்திரரையும் வாட்டி வீரபத்திரகாளிக்குப் பலிகொடுத்து வீரசிங்கம்போலத் திரிவதைத் தேவர்கள்கண்டு விம்மிதராய்அம்மம்ம வீரன்செய்த வாட் பயிற்சியை யென்சொல்வோம்வீராதிவீரனென்பதுயிவனுக்கேதகும்எவ்விதமாகயிந்தப்பாதகனை நிமைப்போதில்மாய்த்தனன் வாளினாலோ அல்லதுமந்திரவலியினாலோ அல்லதுவசைமொழியின்கொடுமையினாலோயாதுந்தோற்றவில்லையென் றதிசெயித்து பஞ்சதாருக்களினது புஷ்பங்களை யேராளமாகச்சொரிந்து வாழிவாழியெனப்போற்றினர், யிவ்விதமாக நூற்றுவரைவானநாட்டுக்கனுப்பிசெயப்பிறதாபத்துடன் வீரன் திரும்பிச்சொற்ணமயமாக விளங்கிக்கொண்டிருக்குந் தமது தேரிற்பாய்ந்து மண்டிபோட்டுளுக்கார்ந்து வாளைஉறையிற்சேர்த்து பொற்கட்டுகள் பிகிந்துயிருகுதைகளிலும் மணிகள்தூக்கியிருக்கும் பருத்ததனுசை கரத்திற்கொண்டிருந்தனன், அக்காலத்திற்றன் மனதுக்கினிய பிள்ளைகளனைவரும்விழிகளுக்கு முன்னதாகக்களத்திற்பட்டதை சிங்கமுகன் பார்த்தவுடன் திகிற்கொண்டு திரோசம்நடுநடுங்க புத்திரசோகமென் னுந்தீயானது மீறித்திரோகத்தையும் மனதையும்வாட்ட அதன்வயப்பட்டவனாய் சகிக்கப்படாததுக்கசாகரத்திலழுந்தி புத்திரரை நினைந்து வாடிவருந்திக் கடையில் மானம்பாதித்துத்தாண்டிய வீரத்தன்மையினா லொருவகையாகத்தேறிச்சோபத்தாழ்ந்தமனதைக்குறித்துயிதனைச்சொல்லுவான் ஓமனனேஎன் துக்கிக்கின்றனை எத்தகையசுமைநேரினுந்தாங்குவதற்குப்பலசிரங்களைப்பெற்றிருக்கின்றனன், பற்வதாகிருதியாகத் திரண்டோங்கியிருக்கும் யிரண்டாயிரம்புயங்களுண்டு ஆசானுபாகுவாகநீண்டிருக்கும்கரசமோகங்களிருகின்றது அபலனாகிய ஒருவன்கரத்தில்விளங்கும்வாளினால்பிள்ளைகளனைவருந்தென்புலத்தைச்சேர்ந்தனரென்றெண்ணமிட்டுவாடுவதென்னை முன்னமேசாவுக்குத் துணிந்துவந்தநீயிக்காலத்தில்மயங்குவதழகோவென் றிவ்விதங்களாகப் பற்பலசமாதானங்களைப்பேசிதிடசித்தனாய்க்காளகூடத்தைபபோல மண்டியெரிந்து நல்லகாரியம் பலருங்காண

பென்னருமைப்பிள்ளைகளை யிந்தபாழத்தவிழிகள் வருந்திப்பார்க்கச்சற்
றம்பயமும்பிரச்சமுமில்லாமல் ரணக்களத்துக்கிரைகொடுத்து யாவரை
யும்மதியாமல் நீரனுகநிற்பனோ யிந்த அபசெயத்தைவிட எனக்குவேறு
மொருவசையும்வேண்டுமோயிவையன்றியும்சத்துருக்கள் நகைக்கத்தேசஉ
டம்பெடுத்தேனா மிஞ்சிமாண்டவர்களைக்குறித்துப்பாராட்டிச்சும்மாயி
ருப்பதில்வரும்பலன்யாது ஆதலால் யினிமேற்படச் சற்றுந்தாழ்க்காம
ற்சத்திராதிகள்பூண்டென்பதில்லாமற் கணப்போதில்நாசஞ்செய்வேன்
மேலும் பூதக்கூட்டங்களையும் மற்றவீரரையும்வாரிவாரி வாயிற்போட்
டுக்கடவாயிலுதிரம்பெருக்கெடுத்தோடக் கசகசென்று மென்றுதின்று
உதிரபானஞ்செய்து களிப்பினல்லது எனக்கடுத்திருக்குங்கோபமாறுவ
தோ பகைவனைச்சின்னபின்னப்படக்கண்டித்து பிறகாசம பொருந்திய
வேலாயுதத்தைத்தாங்கியிருக்கும் பாலசுப்பிறமணியனைச்சாடித் துரத்தி
த்தேவர்க்கெளனச் சொல்லப்பட்டவர்க ளனைவரையும் யித்தினமேவதை
யறநாசப்படுத்தி திரிலோகங்களையும் அல்லோல கல்லோலப்படத்தக்க
தாக யானேவெற்றிகொண்டு திரும்பவல்லேனெனச் சரீரம்புழுங்கிவிய
ர்க்கக்கோபித்தவனுய்ச் சாரதியையெச்சரித்-து பிள்ளைகளைக்கொன்றமகா
பாதகன்முன்னம் நமதுதேரைத் துரத்திக்கொண்டு போகக்கடவையெ
னக்கட்டளை யிட்டபடிக்கிக் குதிரைகளை அதட்டிச்செலுத்தி நெருங்கிவ
ருவதை வீரவாகுதேவர்கண்டு கோபதீபதனுய் தன்ரதத்தை முடுக்கியும்
யெதிரேமிமதயானையைக்கண்டு விடுபட்டுவரும் சிங்க ராசனைப்போல
மேலிடுவதைவிழிகளிற் றீப்பொறிசிதறத்தக்கதாகச் சிங்கமுகன்பார்த்து
யிதனைச்சொல்லுவான் உன்னை நிதானிக்குமிடத்தில் ஆதியந்தமற்ற சிவ
குமாரனுகக்கர்ணவில்லை ஆதலால் இலக்கமெனப் பேசுகின்றவர்களிலொ
ருவனே எண்மரிலொருவனே அல்லது நமதுசக்கிறவற்திவாசஞ்செய்பு
ம்பட்டணத்துக்குவந்து சிலகொடுமைகளைச்செய் துதிரும்பியதூதனே
இவர்களில் நீ யாவன் துரிதமாகவெளியிடக்கடவையெனப் பேசியதறு
வாயில் வீரவாகுதேவர்நகைத்து அவுணராசனே கேழ்ப்பையாக- காளக
ண்டமூர்த்தியின் திருக்குமாரனுக் கடியனுசவிருப்பேன்நேத்தியதினம்
வீரமாமயேந்திரபுரிக்குத் தூதாகவந்து சூரபதுமனுக்குவேண்டியபுத்
திகளைத்தெரிவித்துக்கேளாமல் மிண்டுசெய்தபடியால் பல்லோருடன்ந
கரையும்தகர்கண்டு வெற்றியுடன்மீண்டேன்யிக்காலத்திலும்உங்கள்பூ
ண்டில்லாமல் வேரறக்களைந்துசெயப்பிறதாபத்தைப்பெற்றுப்போகக்
காத்திருக்கின்றனன் என்பெயர் வீரரில்வீரனுகிய் வீரவாகுதேவனெனச்
சொல்வனெனமறுமொழியாடியதுகள் விஷத்திலுங் கடுமையாகச்செவி
களில நுழைத்தமாத்திரத்திற்காளகூடத்தைப்போலச்சீறியிடிகளுமஞ்ச

யிதனைச்சொல்வதாயினன் அபலராகிய சேனைகளைக்கொல்லவும் விற்பயி
ற்சிகளைப்பூர்த்தியாகக் கற்றறியாதசிறுவனைவெல்லவும்பட்டணத்தையழி
த்து அதிலடங்கியிருந்த தீனராய்ப்பெண்டுபிள்ளைகளுடன் வாட்டவுமறி
வையிவைகள்சூரனாகவிருப்பவனுக் கடுத்தவெற்றிப்பாடோ ஆண்மைக்
கடுக்குமோ என்விழிகள்காணச்சற்றும் யிரக்கமற்று நாறுபிள்ளைகளைக்
கொன்ற உன்னாணவத்தைச் சற்றுநேரத்திலடக்கி உன்பிராணனையுமெம
னுக்குவிருந்திட்டு உன்சரீரத்தை நாய்நரி கழுகுபருந்துகளுக்கிரைகொ
டுத்து மேலும் உன்னைச்செலுத்திய சிவகுமாரன் வலியையுமடக்கி இப்
படிக்கொத்த அனர்த்தங்களைவிளையும்படிக்குச் சூதுகளைச்செய்ததேவப்
பயல்கள்பெற்றிருக்கின்ற விருப்பையும்வாட்டி மீந்திருக்கின்ற பூதப்
படைகளனைத்தையும் என்புயவன்மையினால் நிமைப்போதிற்கலக்கி நா
சஞ்செய்யும்படிக்குக் கங்கணங்கட்டிக்கொண்டுவந்திருப்பதைத்தெரி
யாமல்தலைகீழாய்விழுகின்றனை தேவர்சிறையைவிடுவித்துபழயபடிக்குச
கலசெல்வங்களையும் அனுபவித்திருப்பதாகப் பொன்னுலகிற் குடியேற்
றநினைந்து சேனைகளைக்கூட்டிக்கொண்டுவந்த நீ விதிவசத்தினால்என்னெ
திரிலகப்பட்டுபிராணனையிழந்துபோகுங்காலம்நெருங்கிவிட்டது இ
ப்பலனைப்பெறத்தான்வந்தனையோ வெகுநேத்தி யிவையன்றியும் மற்ற
பிறபஞ்சங்களிலிராநின்ற சீவராசிகள் காலாதிகளில் மாண்டதுகள் ஒரு
காலம்பரமசிவகடாட்சத்தினால்மீட்டும் உயிர்பெற் றெழுவதுமுண்டு எ
ன்கோபக்கனலுக் குட்பட்டவர்கள் ஒருபோதும்பிழைக்க வறியார்கள்—
மேலும் காய்ந்தயிரும்புண்டநீர்மீட்டும் சிலமுயற்சிகளினாலுதிக்கலாகு
மென்னுடன்பகைத்தவர்களுக்கு எமலோகஞ் சாணியல்லது நிவாரணங்
கிடையாது அடாபயலே யினி நீ படப்போறகேட்டை உன்னாண்டவன்
கேழ்விப்பட்டு கடகடென்றுருண்டு மனம்வாடிப்புலம்பி யலையச்செய்
வேன் யிப்போது நான்சொல்லிவந்தகாரணங்களிற் சற்றும் பிசகிராது
உன்னையுமென்னையும் வெறுக்கவேண்டியதில்லை பிரமன் உன்தலையிலெ
ழுதியிருக்கின்றகாலமுடிவானால்யாரையும் நொந்துக்கொள்ளக் காரண
மென்னையென்று பலபல நிந்தாஸ்துதிகளைச் சிங்கமுகன் பேசிவருவதை
மனங்கொதிக்க வீரன்கேட்டு கோபநகைகொண்டு நல்லகாரியம் உன்
சூரத்தன்மைகளைச் சற்றுபார்க்கவிருப்புற்றனனென்றுறவுத்திராகாரமா
கமண்டியெரிந்து தமதுகரத்தில் மந்தரத்தையொப்ப விளங்குகின்றத
னுசைமண்டலாகாரமாகவளைத்து திசைகளதிர டங்காரசத்தத்தைக் சாட்
டிப்பதினெண்வகை திவ்வியபாணகோடிகளைச் சிங்கமுகன் மார்புக்குக்
குறிகொண்டு செலுத்தியதறுவாயில் அவைவெளிப்பட்டவுடன் விஷச்சு
வாலைகளைவீசிப்புகைத்தெரித்து சிடசிடத்ததொனிகளுடன் வாயுவேகத்

ஆங்கடுகி பலமகிமைகளைக்காட்டிவந்து பார்தகன்வபிரத்தையொத்தமா
ர்பிற்றாக்கி முனைமழுங்கித்தெறித்தும் நுறுங்கியும் பொடிந்தும் பின்
னப்பட்டுப்போயது, அத்தருவாயிற் சிங்கமுகன் றவுத்திராகாரமாகப்
பொங்கித் தன்கரத்திற் பிடிபட்டிருந்த பாரித்ததண்டாயுதத்தைக் காக
ரெனச்சுழற்றிவீசினன் அதுமணிகள்கலிக்க யிரைச்சலிட்டு வேகமாய்வ
ருவதைப்பாலசுப்பிரமணியர் தூதன்கண்டு துரிதமாய் நான்குதீட்சணி
யமுள்ளசிலீமுகங்களைத் தாண்டி துகள்படக்கண்டித்து மேலுங் கரவே
கமாய் ஆயிரம்கூரியவாளிகளைத் தேவரைவாட்டியபாதகன் சரங்களுக்கி
லக்காகப்போக்கியதருவாயில் அதிகவல்லபங்களைக் காட்டியோடிவந்து
தாக்கிப்பிறையோசனைப்படாம லழிந்துபோயது, இதனைக்கண்ட அவுண
ராசன்சற்பத்தையொப்பச்சீறி யின்னமும் என்னெதிரிற் றூதன் சண்
டைகொடுத்திருப்பதோ நல்லகாரியமெனக்கெற்சித்துத் தன்கரத்திலிரு
க்கும்எமனாயுதத்தையொத்த சூலப்படையை வலிகொண்டு பின்வாங்கி
க்கடாவியபோது சர்வசங்காரகாலத்தில் உலகங்களையழிக்கவெழும் வட
வைக்கனலைப்போல அனலைப்பெருக்கிக் குறுகுறுமென்னுமோசையுட
ன்வருவதின்வேகத்தையுங் கொடுமையையும்பார்த்துத் துரிதமாய்த் தன்
வில்லில்தீட்சண்ணியமுள்ள கணைகளாயிரவற்றைப் பிறையோகித்தனர்,
அதுகளனைத்தையும் சூலமானது கவளீகரஞ்செய்து மேலிட்டிரைந்து
வரும்போது மீட்டும் அத்தொகை சரங்களைப்போக்கினும் அவற்றினை
யும்பட்சணைசெய்துசீறி தேவர்க்கள்திகைத்துவாடி பிரமித்துப்பார்த்தி
ருக்கவீரனைத்தேடிப்பாய்வதை இலக்கர்பார்த்தவுடன் மனங்கலங்கிநடுந
டுங்கியேங்கவும் துணைவரும் யென்செய்யுமோவெனப் பரதவித்துவா
டவும்பூதப்படைகள் கலங்கிப்புலம்பிச்சோரவும் வானநாடர் வருந்தியி
ந்தசூலாயுதத்தை வீரனால்விலக்குவதரிதுபோற்காணுகின்றது யினி யெ
ன்செய்வோமெனப் பெருமூச்செறிந்து சதறவும் இவ்விதமாகச் சகல
ரும்வருந்தவும் மாறேவியபாணங்க ளனைத்தையும் சாடிக்கொண்டுவே
கமாய்ச் சமீபித்த சூலாயுதத்தை மனவுறுதிபெற்று எக்காலத்துந்தன்வலி
யிற்குறைபடாத செயசாலியாகிய வீரவாகுதேவர் பரமசிவந்தனக்குக் க
டாட்சித்திருக்கின்ற வீரவாளையுருவிக்கொண்டு மின்னலைப்போலச்சுழ
ற்றிஒருவெட்டினா லிரண்டுதுண்டமாக்கித் தள்ளியபோது துணைவர்களி
த்தும் இலக்கர் மனவாட்டமொழிந்து சந்தோஷசாகரத்தில்முழுகி வீர
ன்புகழைப்பாடவும் சிவகணங்கள் சரீரம்பூரித்துக்கூத்தாடவும் பூர்வத்
திற்றிருப்பார்கடலிலுதித்த விஷத்தினால்வருந்திய தருவாயில் சிவபிரான
தனையுண்டு ரட்சித்தபோது பிராணிகளனைத்தும் சஞ்சலமற்று மனவெ
ழுச்சிபெற்றதைப்போலத் தேவர்க்க ளனைவரும் மனவாட்டங்களையொ

பூரித்து ஆனந்தபரவசத்தராய் ஆடிப்பாடி வீராதிவீரன் புசபெலபராக்கி
ரமங்களை சற்பகமலர்களையிறைத்துவாழ்த்தவும்மிவ்விதமாகச்சகலரும்க
ளியாடல்களைக் கொண்டாடி யிருக்கின்றதறுவாயில் வீரவாகு தேவருக்
கு அதிககோபம் பிறவேசித்து உடவளைலயொப்பச்சீறி யிந்தபாதகனுயி
ரை நிமைப்போதில்வாங்குகின்றனனென உருத்து எமனை உதைத்தகாலக
ண்டமூர்த்தி யினதுபடையையெடுத்து விதிப்படிக்குச்சோடசஉபசாரங்
களையும்மானச பூசையினால்நிரப்பி மகாவிஷ்ணு பிரமன்முதலிய தேவர்
க்களாலும் சொல்லுதற்கரியபாதகன் பிராணனைவாங்கி உலக வுபாதியை
நீக்கவேண்டுமெனப் போற்றிவணங்கித் தனுசிற்பூட்டிச் செலுத்தினர்,
அந்தபாசுபதமானது வெளிப்பட்டவுடன் தேவாஸ்திர சமோகங்களையு
ம்விஷப்பெருக்கையும் தீப்படலங்களையும் மற்றுமிராநின்ற கொடு
மைகளனைத்தையும் படைத்துக்கொண்டு உலகங்களனைத்தும் நடுநடுங்கி
த்திகைத்து வாடும்படிக்கு அதிக உற்பாதங்களுடன் மேலிட்டு வரும்
போது யிந்தசிவனுதன்படையோ நம்மைக்கொல்வதென்று அண்டங்க
ளதிரக்கோபநகைகொண்டு தன்கரங்களிலொன்றில் விளங்குகின்றபாசுப
தத்தைவழிபட்டுவணங்கி வில்லிற்பூட்டிச்செலுத்தினன், அந்ததிவ்விய
ஸ்திரமும அதிகமகிமைகளைக்காட்டிப்போய்வெகுகாலமாகப்பிரிந்திரு
ந்தபிராணபதமாகிய சிநேகிதர்களொருகாலம்சடுதியில்நேருவராயின்ம
னவெழுச்சியுடன் அவர்கள்மினவிக்களிக்குமாறுபோலயிரண்டுதேவப்ப
டைகளும்சிலநேரம்கலந்துவேடிக்கையாற்தங்களைக்காட்டி விட்டவர்க
ளிடத்தில்மீண்டுவிட்டதுயிவ்விதமாகத் தான்தூண்டியபாசுபதம் வியர்
த்தமாய்த் திரும்பியதறுவாயில் செயசாலியாகிய வீரவாகுதேவருக்கு
மானம்பாதிக்க வருந்தி சூரபதுமன் துணைவனுக் கிணையாகப்பேசுவத
ற்கு யிந்தபிரபஞ்சத்திலொருவனையுங்காணேன் புசபெல பராக்கிறமங்
களிற்சிறந்தவன் வலிக்கொப்பற்றவன் எத்தகையரொதிர்ந்து போராடி
னும்பின்னிடாமல் வெல்லவல்லசவுரியபரன்எமனைப்போலத் தன்னுட
னெதிர்த்தவர்கள்பிராணனை வாங்கத்தக்க வீராதிவீரன்கோடாகோடிசு
ரர்வர் ஒருருக்கொண்டுவந்துபோர்செய்யினும் புறங்கண்டு செயப்பி
ரதாபத்தைப் பெறவல்லன் யிவன்பெற்றிருக்கின்ற வரமுயற்சிகளைப்பு
கழப்படுவதோ யிவன் வல்லபங்களைத்தான் நினைந்துமுடிவதோ யிவன்
படைத்திருக்கின்றவெற்றிப்பாடுகளிலெதனைப்பெரிதாகப்புகழவல்லே
ன் நான்செலுத்திய திவ்வியபாணங்கள் கோடை யிடிகளைப்போலச்செ
ன்றுதாக்கியபோதினும் சற்றுவதுகிரோகத்திற் காயப்படுத்தியதில்லை தே
வாஸ்திரங்களினாலும் பழிபடாத வயிரப்படிவத்தைப்பெற்றவன் யித்த
கையபெருமிதங்களைப்படைத்திருக்கின்ற கொடியபாதகனை எமதுசத்த

ண்பாலசுப்பிறமணியர் திருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலினாலல்லது சொல்லப்படாது, யிவ்விதவலிபெற்ற கொடியனை மாய்ப்ப தரிதாயினும் பிறபலமாகிய போரைச்செய்து யிவனேறியிருக்கின்ற உன்னதமுள்ளரதத்தையழித்து யிவன்படைத்திருக்கின்றபாணங்களைவாட்டி மீந்திருக்கின்றசேனைகளையும் அதப்படுத்தி திகைக்கச்செய்யக்கடவனெனத்தீர்மானித்தவராய்த் துரிதமாய்பதினான்குகடூரமாகிய சரங்களையெடுத்துதமதொப்பற்றகாண்டீபத்திற் பூட்டிச்செலுத்தி சிங்கமுகன் தேரைநடாத்தும் சாரதிசிரத்தைக்கண்டித்து நிலத்திற்றள்ளி செற்சித்ததறுவாயில் அவுணராசனுக்கு அதிககோபம்பிறவேசித்து வலியதண்டாயுதமொன்றையெடுத்துக் கரகமொனச்சுழற்றி யிதனால்நாசமடையக்கடவையென வீசினன் அதுவெளிப்பட்டவுடன் கோடையிடிகளைப்போலக் குமிறிக்கொண்டுவேகமாய்வந்து யிளையபெருமாள் மார்பிற்றாக்கியபோதுவலிகுன்றிச்சாளரவழிகடோறும் பாயும் சூரியக்கிரணங்களைப்போலப் பொடிப்பொடியாய் புகைப்படலத்துக்கொப்பாகப் பறந்துபோயது, அத்தறுவாயில் வீரவாகுதேவர் றவுத்திராகாரமாகமண்டியெரிந்து விழிகளிற் றீப்பொறிகளிறைப வடவையைப்போலச்சீறிக் சரவேகமாய் ஆயிரந் திவ்வியபாணங்களைப்போக்கிப் பொன்மலையையொப்பாகச் சிங்கமுகன் வீற்றிருந்ததேரைச்சக்கைச்சக்கையாகப்பெயர்த்தெறிந்தனர், அத்தறுவாயில்யிதற்குமுன்னம்சிங்கமுகனால் வருந்தியோடியொளித்திருந்த பூதரனைவரும் யிதுதருணமெனச்சேர்ந்து யித்தபாதகனைக்கொன்று கோபந்தணிந்துமனக்குறையைப் போக்குவோமென்று ஏகமுகமாய்ப் பாய்ந்து வானத்தையளாவிநிற்கின்ற பருத்தமலைகளை அபரிமிதமாகச்செலுத்தியும் திசைகளைமூடநின்ற கிளைகளைவாய்ந்த வடவாலவிருட்சங்கள்மராமரங்களைவேருடன்பிடுங்கிக் கரகமொனச்சுழற்றிக் கடாவியும்-பிண்டிபாலம் -முசலம்-கப்பணம்-தண்டாயுதம்- யிருப்புலக்கை- வளைதடி- முதலியபடைகளைச்சரவேகமாகத் தாண்டியும்பிறந்துகிடக்கின்ற ராட்சதர்பற்றியிருந்தசக்கிரப்படைகளைச்சுழற்றிவீசியும் மனம்பொறாமல் சீசீயெனப்பேசியும்வசைகளைச்சொல்லியும்யிவ்விதமாக அவுணராசனைப் பலதிசையினும்சூழ்ந்துகொண்டு கெக்கலிகொட்டிப்போராடுகின்றதறுவாயிற்சிங்கமுகனுக்கு அதிககோபம்பிறவேசித்துச் சர்வசங்கார மூர்த்தியைப்போலமண்டியெரிந்து பக்கத்தில் நிற்கின்ற சேமத்தேரிற்பாய்ந்துமண்டிபோட்டுளுக்காந்துக்கொண்டு ஆயிரங்கரங்களினும்பற்றியிருக்கின்ற விற்களைவலிகொண்டுமண்டலாகாரமாகவளைத்துநாணேற்றி அண்டவடுக்குகள்கலைந்து தடுமாறும்படிக்குகுணத்தொனிசெய்தனன், அதனைப்பார்க்குமிடத்தில் பலசிகரங்களைப்படைத்திருக்கின்ற மேருகிரியினிடத்திற்

காளமேகங்கள்படிந்துயிடிமின்னலைப்பெருக்கி ஆர்பாட்டங்களைச்செ
ய்வதுபோலக்காட்டியது, அந்தருணத்தொனியின் முழக்கமானது செவி
களிற்புகுந்தவுடன் பிராணிகளனைத்துந்தியங்கித் தீயிற்பட்ட புழுக்களி
னையொப்பத்துடிதுடித்து வாடியதன்றியிற் சத்தசாகரங்களுங்கொதிப்
பெடுத்தோங்கி வாயுமண்டலத்திற்பட்டு வருஷித்ததைப்போல பூமண்ட
லமெங்குந்துளித்தது, அவ்வாறேசிங்கமுகன் செலுத்துகின்ற சரமாரி
யானது விஷித்தையும் திசையையும்மறைத்துக்கடுகிவந்து மேலிட்டிருக்கி
ன்றபூதப்படைகளைச்சூழ்ந்துகொண்டு சிரங்களைக்கண்டித்தும் புயங்க
ளைத்துண்டித்தும்- மார்பைப்பிளந்தும்-வயற்றைப்பீறியும்-தொடைக
ளைமுறித்தும்- உடல்களைசின்னபின்னப்படவாட்டியும்- யிவ்விதமாகச்
சாடும்போது ரணக்களவெல்லையெங்கனும் பிணமலைகளோங்கிப்பெரு
ங்காற்றிலடிபட்டெழும் பூளைப்புஷ்பத்தைப்போல மூளைகள்சிதறித்
தோற்றவும் ரத்தப்பிரவாகமானது யிரைச்சலிட்டுக்கொண்டோடியது,
சிங்கமுகன் ஆயிரங்கரங்களினின்றும் பெருகுகின்ற பாணசோடிகளின்
செய்கை யெப்படியிருந்ததெனில், திருப்பாற்கடலினிடத்திருந்து
திரைகள்பெருகுந்தோறும் திவலைகளிறைவதைப்போலக்காட்டியது,யி
ப்படிக்கெழுகின்றபடைகள்வீறிபூவட்டவெல்லையெங்கனும் நிறைந்து
வானவழிகளைமூடி அஷ்டதிசைகளைமறைத்துதிசைக்கரிகளைக்கொளுத்தி
க்கரிகளாக்கிச் சமுத்திரநீரைச்சுவற்றியும் வேகமடங்காமல் யிவ்வண்டத்
தைக்கடந்துமேல்நின்ற அண்டகோடிகளினும்பாயும் யிவையன்றியும்
குலகிரிகளைப் பொடிபடுத்தியும் பொன்மலையையுருக்கிக்குழப்பியும்பி
ரளயகாலத்துலகங்களை தகிக்கவல்லதீச்சிகையைப்பெற்றிருக்கும்வடவை
யின்வெப்பத்தைமாற்றியது, சவுனசாதிதவத்தரோ அவன்செலுத்தும்வா
ளிகளினாற்காயப்படாமலும் வருந்தாமலும் தப்பியபிராணிக ளொன்று
ங்கிடையாதுமண் விண்ணெங்கனும்பாணமயமாய்வெள்ளிடமற்றுஅட
ர்ந்தகாரணத்தினாற் பூமண்டலவாசிகள் வானநாடுகளினும் விண்ணவர்ம
ண்ணுலகத்தினும்போகவரஒருஏணியையொப்பவும்விளங்கியது,யிவை
யன்றியும் பாணங்கள் போகும்வேகத்தினால் ஒவ்வொன்று கணக்கிறந்
தபூதர்சிரங்களைத்துளைத்துத் தடாரித்துருவுகின்றதைப் பார்க்குமிடத்தி
ல்வேடர்மாம்சங்களைச்சுடுவதாகச் சலாகையிற்கோத்திருப்பதைப்போ
லக்காட்டவும் நன்னெறிகளைத் தெளிந்து நடந்துகொள்ள வறியாதமூ
டன் பெற்றிருக்கின்ற செல்வத்தினாற் றன்கிளைகளுக்குங் கேடுண்டாய
ழிவதுக்கொப்பாகச் சிங்கமுகன் செலுத்தியாணைகள் தன்சேனைகளையு
ஞ்சங்கரித்தோடும்வானவெல்லையை பாணகோடிக ளடைத்ததினாற் சூரி
யன்பின்னுமுன்னும்போகவகையற்று நின்றயிடத்திற்றிகைத்திருந்தன

ண், அத்தறுவாயிற்பெருத்தெழுந்த உதிரப்பிறவாகமானது வேகங்கொ
ண்டு ரணக்களவெல்லைமுற்றிலும் யிறைந்துகிடக்கின்ற றணபேரிமுதலி
யபோற்பறைகளையும் வாள் வேலாதிய படைக்கலங்களையுங்களேபரக்கு
வைகளையும புரட்டிக்கொண்டோடுவது சமுத்திரராசன்மீது பகைத்து
செங்கடற்கிறைவன் படைப்பெருக்குகளுடனெதுத்துப் போர்செய்வ
தையொப்பக்கடுகிக் கடலிற்பாய்ந்துகலக்கிச் செக்கர்வடிவாக்கித் தன்வ
யப்படுத்தியதைப்போலவிருந்தது, இவ்விதங்களாக அவுணருக் கரசன்
செய்துவரும் போரின்பெருக்கத்தைச் செயசாலியாகிய வீரவாகுதேவ
ர்யார்த்துக் காலாந்தகனைப்போலச்சீறித் தன்கரத்தில் விளங்குகின்றவைப்
பற்றவில்லைவளைத்துநாணேற்றி அண்டபுவனசராசரங்களுந் திடுக்கிடக்
குணத்தொனிகாட்டியதறுவாயில் அவ்வோசைக்காற்றுமற்பஞ்சேந்திரி
யநிலைகள் கலக்குற்று கைகால்களுதறலெடுத்துத் தேரின்பேரிலிருந்த
ராட்சதப்பிறமுகரும் யானையின்பேரிலிருந்த சூரர்களும் புரவிகளின்மீ
துவந்தசெயசாலிகளும் தீயையொத்தசிகையைப் படைத்திருக்கின்ற வீ
ராதிவீரராகிய கால்பலங்களும் விஷத்துடக்கிற்பட்டுச் சோருகின்றவர்
களைப்போலக் கால்மாடு தலைமாடாகவிழுந்து பங்கப்பட்டுத் தியங்குகி
ன்றதறுவாயில் விஷத்தொவையலிட்டிருக்கின்ற கொடிய பாணகோடிக
ளைத்தொடுத்துச் சோனைமாரியைப்போலச் சரவேகமாய்ப்பொழிந்துசி
ங்கமுகாசூரனாற்செலுத்தப்பட்டு எவ்விடங்களினுமடர்ந்து வருத்தியிரு
ந்தபாணப் பெருக்கனைத்தையும் துத்துளுருக்கி 'வெட்டவெளிசெய்த
னர், அதெப்படிக்கிருந்ததெனில் பிரமனும் அவன்பிள்ளைகளாகிய நவப்
பிற்மாக்களும் பலகாலங்களாகச்சிருஷ்டித்துவந்த சராசரப்பிறபஞ்சங்
களைக்கடையுகத்திற் பரமசிவம் தமது நுதல்விழித்தீயினாற் சாம்பலாக
செய்ததைப்போலத்தோற்றியது கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளேயி
வ்விதமாகநொடிப்போதிற் சிங்கமுகன்பரப்பியிருந்தபாணகோடிகள
னைத்தையும் சின்ன பின்னப்படச்சாடி மன்னுயிருக் கடுத்திருந்த வருத்
தங்களனைத்தையுமொழித்து மனவெழிச்சிபெற்றிருக்கச்செய்தவீரன்வி
ற்சாதுரியங்களையுங் கரவேகத்தையுங் கண்டதேவர்க்கள் அற்புதத்தைய
டைந்தவர்களாய்பிற்காலத்திற் பாலசுப்பிறமணியதேவர் அவுணவற்கத்து
டன் சூரபதுமனையும் நாசப்படுத்துந் தறுவாயிற் றாங்கள்பெறவிருக்கி
ன்றசந்தோஷப்பெருக்கினும் பதின்மடங்கு மனமகிழ்ந்து திர்சம்பூ
ரித்து வஸ்திரங்களையெறிந்து அண்டங்களதிரவாரத்து செயவுச்சாகத்தை
க்கொண்டாடியதன்றியில் யிவ்விதமாகப்புகழ்வதாயினர், நேதகியத்தின
ம்வீரமா மயேந்திரபுரியை அலங்கோலப்படச்சாடிய வீராதிவீரன்றா
ண்டியபடைகளின் வேகத்தையும் கொடுமையையும் யென்சொல்லு

வோம் சூரபதுமன் துணைவன்செலுத்திய சரங்களைமாத்திரம் வாட்டிய
தன்று. அவன்பெற்றிருக்கின்ற செயப்பிறதாபத்தையும் கீர்த்திப்பாடுக
ளையும் வளாயறச்சுட்டுச் சாம்பலாகியதென ஒருவருடனொருவர் மகிழ்
சிரசப்பேசிக்கொண்டு கூத்தாடினவர்களாய்ப் பஞ்ச தாருக்களின்பு
ஷ்பங்களனைத்தையும்தழைகளுடன்பறித்துப்பறித்துவீரவாகுதேவர்மீது
கொட்டி செயாவிசையவாவென வாழ்த்தினர், யிவ்விதமாகத்தான் பிறை
யோசித்த பாணசமோகங்களையிளையபெருமாள் துகளாக்கிய சரணங்க
ளையுமயிந்தவெற்றியைக்குறித்துவிண்ணவர்கொண்டிருக்கிறவீருப்பை
யும் சிங்கமுகாசுரன்பார்த்தமாத்திரத்தில் விழிகளிற் றீப்பொறிகள்சித
றவடவைக்கனலைப்போலஉருத்து அடாபயலேஉன்னிமித்தம் வில்லெடு
த்தேன்அம்முயற்சிவீண்படாமல்யிந்தநிமிஷத்தில்வலிபெற்றிருக்கின்ற
உன்மார்பைப்பிளந்துசிரத்தைக்கண்டித்துருட்டிசங்கையற்றபாணங்க
ளைச்செலுத்துங்கரத்தைவெட்டித்தள்ளிவீரவெண்டயங்கள்கலித்திருக்கு
ம்கால்களையுங்கண்டித்தும் பதட்டமாகப்பேசும் வாயைப்பிளந்துமூக்
கையரிந்துகுண்டை தயிரித்தையுடைத்து பங்கப்படுத்துவேன் ஓஅபல
னேயிதுவுமல்லாமல்யென்வீரத்தன்மைகளுனக்குத்தெரியாது ஆயிரங்க
ரங்களிலும்அத்தொகைதனுசுகளைப்பற்றிமற்றஆயிரங்கரங்களிலும்ஒவ்
வொருதொடையில் சங்கோபசங்கக்கணக்கில்கொடியபாணங்களை அண்
டாண்டபுவனசராசரங்களெங்கனுமூடி வாட்டச்செய்யும் தனுர்வித்தை
மந்திரத்தைப்பூர்த்தியாகச் சுக்கிராசிரியனிடத்திற்கற்றிருக்கின்றனன் பற்
பலதேவாஸ்திரங்களைப்பெற்றிருப்பேன் கதாதண்டத்தையெடுப்பேனு
கில்அண்டவடுக்குகள் குலைந்தும் மோதுங்காலத்திற் பூவட்ட முற்றும்
சோடைகால வெடிப்புகளைப்போலப்பிளந்து மங்கும்படிக்குச்செய்ய
வல்லேன் யின்னமும்அளவற்றவல்லபங்களுண்டு அவற்றைப்பதிதனாகிய
உனக்குச்சொல்லுந்தரமன்று அப்படிக்கொத்தவீராதிவீரனாகியதம்முட
ன்யிரண்டுகரங்களைப் பெற்றிருக்கின்ற அபலனாகிய நீயோ யெதுத்து
ச்சண்டைகொடுத்து நிறவகிக்க விருக்கின்றனை வலியவில்லைத் தாங்கிய
பதட்டமாகியஉன்கைகளைமுறித்து உன்விழிகள்காண நாய்-நரி-கழுகு-
காக்கை-பிடுங்கித்தின்னயிந்தறணக்களத்திற் றள்ளக்கடவன்யிவையன்
றியும் செகங்களெங்கணும்புகழவிருக்கின்ற மயேந்திரபுரியிலிருக்கின்
றபலவளங்களும் தம்சப்படவழித்து அவுணப்படைகளைக் கலக்கி ராச
பரமேஸ்வரன் பிள்ளையைக்கொன்றதுமன்றியில் மனம்பதைபதைக்கயி
ப்போது யென்மனதுக்கினியபுத்திரனையுங்களத்திற்படுத்தியதினாற்பெ
ற்றிருக்கின்ற வெற்றிப்பாடுகளனைத்தையும் சக்கிவிப்பேன் யிப்படிக்கு
இடப்பட்டிருக்கின்ற உன்பிராணனையுண்டு புத்திரசோபந்தணியவிருக்

கின்றேன், ஒருகாலம்பயபீதியினால் திரிலோகங்களினுமோடி மூலைகளிலொளிப்பினும்விடவறியேன் தொடர்ந்துகண்டதுண்டமாக வெட்டியெறிவேனென்று இவ்விதங்களாகியசபதங்களையும் வீரங்களையுங்குறித்துக்காட்டியவந்தப் புசபெலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்கேட்டு கோபநகைகொண்டவராய் ஓ அவுணராசனே வீண்வார்த்தைகளைப்பேசுவதிற் பிரயோசனமில்லை மேற்குறித்த பற்பல வரங்களைப்பெற்றிருக்கின்ற நீவிட்டபாணகோடிகளெத்தனையதாயினும்சின்னபின்னப்படக்கண்டித்து உன்சேனைகளையும் போர்க்களத்துக்கிரையாக்கி வீராதிவீரனாகவிருக்கின்ற உன்னையும்பின்னிடத்தக்கதாக வாட்டித் தீரனாகவுலவப்போகின்ற என் விற்றிறத்தைக்கண்டு பிரமித்து வாடப்போகின்றனையெனப்பேசியவாக்கியங்களைச் சிங்கமுகன் கேட்டவுடன் வடவையைப்போலப்பொங்கி விழிகளிற் றீப்பொறிகள்சிதற உருத்து ஆயிரந்தனுசுகளையும் ஏககாலத்தில்வளைத்துக் கொடியசரங்களை புத்தினிடத்திலிருந்துசிதலைகள் பெரும்போக்கெடுக்குமாறுபோலச் சொரிந்துவருகின்ற தருவாயில் அவைகள்வெளிப்பட்டகாலத்துண்டாகிய கொடுமைகளையும் வேகத்தையும் உற்பாதங்களையும் ஒருவகையாகச்பேசப்படுவதோ இவ்விதமாகமேலிட்டுவருவதை வீரவாகுதேவர்கண்டு யெமனைப்போலவும் மேகத்துக்கொப்பாகவுந் தமதுகரத்தில்விளங்குகின்ற காண்டீபத்திற் பத்துநூறாயிர திவ்வியபாணங்களைச்சந்தித்துக் கரவேகமாகத் தாண்டியகாலத்தில்விஷிங்களைக்கக்கிக்கொண்டோடி பகைவன்செலுத்தியபாணங்களனைத்தினையும் நிமைப்போதில் நாசப்படுத்திக்கொண்டு ஏறிவரும்போது சிங்கமுகன்கோபித்துபத்துநூறாயிரம் கொடியசரங்களைக் கொண்டு அதுகளைதும்சம்பண்ணி காலாந்தகனும் திடுக்கிட்டுவாடும்படிக்குக்கொதித்து ஆயிரகோடிவெவ்விதாகிய வாளிகளைப்போக்கிக் கொக்கரித்தனன், அக்காலத்திலெமதிறைவனாகிய பாலசுப்பிறமணியதேவர்சகோதரனும் அத்தொகைபாணங்களைச்செலுத்தி மேலிட்டுவரும் சரங்களைக் கண்டித்து களத்திற்படுத்தினர், அதைக்கண்டசிங்கமுகன் றவுத்திராகாரமாகக்கோபித்துக் கொடியதீட்சண்ணியமுள்ள இரண்டாயிரம் சிலீமுகங்களைப்பிறையோகித்து வீராதிவீரன்கரத்திற்பிடிபட்டிருந்த வலியவில்லைக்கண்டித்து மற்றொருதனுசையெடுப்பதற்குமுன்னம் மேலும்நாறுதிவ்வியபாணங்களைக்கரவேகமாகத்தாண்டி விசாலமாகவிளங்குமார்பைத்துளைத்ததருவாயில் உதிரமானது பெருக்கெடுத்தோட மிகவும்வருந்தி வடவைக்கனலைப்போல மண்டியெரிந்து மற்றொரு பாரித்தவில்லையெடுத்துவளைத்து நாணேற்றிச் சூரியகிரணங்களையொத்த தீட்சணியமுள்ள நூறாயிரம்சரங்களை வேகமாகச்செலுத்தியதருவாயிற்சிங்கமுகன்

கோபித்து யிறுதிகாலத்திற்பெய்யும்மேகங்களைப்போலச் சரவருஷங்க
ளைப்பொழிந்து அதுகளைத்துகள்கண்டுமேலும் அத்தொகைப்பட்டகூ
ரியபுங்கவங்களைச்செலுத்தி கெற்சித்தான் அக்காலத்தில்வீரவாகுதேவரு
க்கு அதிககோபம்பிறவேசித்து பலகோடிசடுமாகியபாணங்களினாலவ
ற்றினைத்தும்சப்படுத்திமேலும்காவேசமாய்ஆயிரந்திவ்வியபாணங்களை
ப்போக்கி அவுணராசனேறியிருந்த பாரித்ததேரைப்பொடியபடுத்திச்சி
ங்கநாதஞ்செய்தனர். உடனேசிங்கமுகன் மற்றொருசேமத்தேரிற்பாய்
ந்துரவுத்திராகாரமாகக்கோபித்து ஆயிரம்விற்களிலும் கணக்கிறந்தசிலீ
முகங்களைத்தொடுத்துச்செலுத்த உத்தேசித்தமுன்னிலையில் வீராதிவீர
ன்சீறி பலகோடி புங்கவங்களைப்போக்கி ஆயிரம்நீண்ட தனுசுகளையும்
வெட்டியெறிந்து சற்சம்பத்தையொத்தபுசங்களைத்தட்டி வெற்றிச்சங்
கத்தையெடுத்து பொம் பொம்மென்று முழக்கினர், கேட்டோர்களோச
வுனகாதிரிஷிகளே ஒருவராலும்அசைக்கவொண்ணாத விற்களைப்பறிகொ
டுத்து மானபங்கப்பட்டு அஷ்டதிசைகளையும்வெற்றிபெற்று படைத்தி
ருந்தபுகழையும்போக்கி ராசராசனாகவிருந்த பெருமிதத்தையும் யிழந்
து பற்களையும் சிரோரத்தினத்தையும் போக்கிய நாகசர்ப்பத்தைப்போல
உள்ளம்வெந்துமானம்மனதைவருத்திக்கொல்ல யாதுந்தோற்றமற்பய
பசென்று முழித்துக்கொண்டிருப்பதைப் பூதப்படைகள் கண்டமாத்
திரத்திற் கரங்களைக்கொட்டி பற்பலவசைமொழிகளைப்பேசி நகைத்தன
ர், இஃதன்றியும் வானத்தில்நின்று வேடிக்கைப்பார்த்திருந்த தேவர்க்க
ள்மனக்களிப்புடன் அவுணராசனை சுலபமாகநினைத்து யிகழ்ச்சியாகப்
பேசி வீரன்புகழைக் கொண்டாடினர், தற்மதேவதையும் மனவெழுச்சி
பெற்றுநான்குபாதங்களினும் ஆனந்தக்கூத்தாடியது மகாவிஷ்ணுமு
தலானவர்கள் வீரவாகுதேவர் சாமார்த்தியத்துக்குமெச்சிச் சிரக்கம்பஞ்
செய்துவாழ்த்தினர், இப்படிக்குச்சகலருங்களியாடலைச்செய்துவருகின்
றதருவாயிற் சிங்கமுகனென்செய்வன் அதிகமனவருத்தப்பட்டு தன்கர
த்திற்பற்றியிருந்தவலியவிற்களிற்றதையும் வீரவாகுதேவர் விற்சாதுரிய
த்தையும் விஷ்ணுமுதலானவர்கள் களிப்பையும் பூதப்படைகள் கெலிப்
பையும் கண்டமாத்திரத்தில் வடவாமுகாக்கினியைப்போலக்கொதித்து
நமதுகரத்திலிருந்த விற்கள் வெட்டுண்டதைக்குறித்துக் களிக்கின்ற வி
ண்ணவர்சந்தோஷத்தையும் கேசவன்செருக்கையும் இந்திரனாதியதிக்கு
ப்பாலகர்கெலிப்பையும்பூதர்ஆணவத்தையும் தூதன்வெற்றிப்பாட்டை
யும்நிமைப்போதிலடக்கிதுக்கசாகரத்திலழுந்திவாடச்செய்வேனென்று
செற்த் துரிதமாய்தன்னையரிதிற்பெற்ற மாயைகடாட்சித்திருந்த கொடிய
பாசத்தையெடுத்துப்பூசித்து மேலிட்டுப்போராடிவருகின்ற சத்திராதி

ளனைவரையும் ஒருமிக்கக்கட்டிக்கொண்டு வாரிக்கொண்டுபோய் சத்த
சாகரங்களுக்கும் அப்புறத்தில்நிற்கின்றஉதையகிரியிற்சேர்த்துப் பதல
மாய்க்காவல்கொண்டிருக்கக் கடவையென வேண்டிவீசினான் அதுவெளி
ப்பட்டவுடன் சற்வசங்காரகாலத்திற் பெரும்புறக்கடலாதிய சாகரங்க
ள்பெருகி உலகங்களைமூடிக்கொள்வதைப்போல விண்மண்ணெங்கும்
நிறைந்து யிருட்பிழம்பைப்பெருக்கித் தீயையும்புகைப் படலத்தையும்
வீசிவிஷங்களைக்கக்கி பலஉற்பாதங்களைச்செய்துகொண்டுமேவிட்டுவரு
வதைதேவர்க்கள்கண்டு பயப்பிராந்தியினாற் சரீரமுற்றும் வியர்க்கக்கா
ல்கள்தடுமாறநிற்கச்சகிக்கமாட்டாமல் மேலுலகங்களிலோடவும் ரணக்
களத்தில் வீழ்ந்திருந்தபூதப்படைகள் இலக்கர்-எண்மர்-படைவீரர் நடு
நடுங்கி வாடுகின்றதருவாயில் வீராதிவீரனாகியசிவகுமாரன் யிதுவுமொ
ருமாயமென்றெண்ணித் துரிதமாய்ப் பலபாணங்களைத்தாண்டி அதன்
முயற்சிகளையடக்கஉத்தேசிக்கின்ற முன்னிலையில் பாசமானது அதிவேக
மாய்வந்து சிவசுப்பிரமணியதேவர் சேனைகளின் அறிவைமயக்கி எமபா
சத்தைப்போலச் சகலரையும் சேர்த்துக்கட்டியது, கேட்டீர்களோசவுன
காதிரிஷிகளே அதன்வல்லபத்தை யென்சொல்லுவேன் கடையுகப்பெ
ருக்கையொப்ப ரணக்களமெங்கனும் ஆரவாரித்துக்கொண்டு நிறைந்தி
ருந்தபூதவெள்ளத்தையும்-இலக்கர்-எண்மர்களையும்புசபெலபராக்கிரம
சாலியாகிய வீரவாகுதேவனையும் நிமைப்போதில் மயக்கிப் பிரேதங்க
ளாக்கித்திரட்டிக்கொண்டு மேலெழுந்து வானவழிக்கொண்டு மின்னலை
ப்போலவாயுவேகத்தினுங்கடுகிச் சாகரங்களைக்கடந்துமேருகிரியையொ
ப்பவானத்தையளாவி விஷ்ணுபள்ளிகொள்ளும் ஷீராப்தியின்மத்தியில்
நிற்கின்ற உதயகிரியைச்சேர்ந்து அதன்சாரலில்வைத்து காவல்கொண்டி
ருந்தது, அக்காலத்தில் ரணக்களவெல்லைமுற்றினும்பார்த்து அரியபோர்
த்தொழிலைச்செய்திருந்தவர்களி லொருவரையுங்காணாமற் பாழ்பட்டிரு
ப்பதைச்சிங்கமுகாசூரன் விழிகள்குளிரக்கண்டு தேகங்குலுங்க நகை
த்து வடவையைப்போலவீழ்ந்திருந்த பகைவரனைவரையும் கணப்போதி
ல்வாட்டிக்கொண்டுபோய்விட்ட பாசத்தின்வல்லபத்தைமதித்து வெகு
நேர்த்தியெனப்புகழ்ந்து தன்சவுரியபராக்கிரமங்களுக்கு ஒருவரும்நிக
ரில்லையென் றெண்ணினவனாய் ரணக்களமுற்றினுமுலவி யாவரையுங்கா
ணாமல் யிதனைச்சொல்லிக்கொள்வதாயினன், பாலசுப்பிரமணியன் நம
துவெற்றிப்பாடுகளைத் தெரிந்தவனாய் ஓடிப்போயிருக்கவேண்டும் யித்
தலத்திற்காணவில்லை நான்சுற்றிவந்தயிடங்களிற் றட்டுப் படாததால்எ
த்தலத்திலிருக்கின்றனனோதோற்றவில்லை நம்மிடபேரிற் பகைத்துயந்தி
ருக்கின்றனனென்பது மிரட்டுச்சொல்லோமேலும்என்தமையனுடனெ

றுத்துப்போராடி மிகவும் வருத்திலனெனப் பேசிக்கொண்டது மாறு
பாடாகக்காணுகின்றது யானைப்பார்த்தாவது பாலசுப்பிரமணியனென்
றெண்ணி யிரண்டுசொல்லிக் கொண்டனனோ அல்லது பிள்ளையாண்டான்
நாம்செய்தகொடியபோரைத்தெரிந்து ரணபீதியினால் உதைத்துக்கொ
ண்டுமாண்டனனோ வென் றிவ்விதங்களாகச் செயவுச்சாகத்தினால் வசனி
த்து அண்டங்களதிர்ந்து தத்தளிக்கத்தக்கதாக ஆர்ப்பரித்தனன், அத்தரு
வாயில் தூசிப்படையுடன் போயிருந்த தூதனொருவனோடிவந்து அவு
ணர்பெருமானை வணங்கிப்போற்றி வாயைப்புதைத்துக்கொண்டு சுவா
மி ஆயிர வெள்ளம்பூதப்படைகளும் அதற்கடுத்தசேனைத்தலைவரும் பிர
மன்விஷ்ணு இந்திரன்முதலிய தேவர்கள்சூழ்ந்துபோற்றப் பாசறைவி
டுதியில்வெற்றிவேலாயுதனிருக்கின்றனன் யிதனைக்கண்டுவந்தனனென
விண்ணப்பஞ் செய்ததைக்கேட்டு மூன்றாம்பிறையையொப்பவிளங்கு
கின்ற கோரதந்தங்கள் வெளிப்படையாகத்தோற்றநகைத்து புற்றினிட
த்தடங்கியிருக்கின்ற சர்ப்பத்தின்குட்டியைப்போல என்னுடனெதுத்து
ப்போராடுவதற்கஞ்சி பாசறையிற்பதுங்கி யிருக்கிறவனைப் போலக்கா
ணுகின்றது ஆகிலும்விடமாட்டேன் யிதோநானே அவடம்போய் முத்
திக்கைபோட்டுக்கொண்டு பாலனுடன்சகலரையும்வளைந்துசாடி யின்று
டன்போனமுடித்துவிடுகிறேன் யிதுயென்னேரமுந்தலைநோவாயிருக்
கின்றது தமையனும் மனவாட்டத்தினையொழிந்து சொஸ்தமாகவிருப்
பனெனப்பேசி காளகூடத்தைப்போலச்சிறி சகஸ்திர பொற்சிரங்களைப்
பெற்றிருக்கின்றமகம்மேருவானது கால்முளைத்தசைவதுக்கொப்பாகஅ
த்திசையைநோக்கிநடந்தனன். யிக்காரணங்களனைத்தையுந் திஷ்டாந்தி
ரமாகப்பார்த்திருந்த முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெ
ண்ணாயிரம்ரிஷிகளும் வயற்றிலறைந்துகொண்டு நிற்கப்பயந்து பலதி
சையினும்யிறைந்தோடினர், அக்காலத்தில்வாயுதேவன்மனவருத்தத்துட
ன்தன்னடைக்குமேலிட்டுச்சென்று பாசறையைச்சேர்ந்து கிறவுஞ்சபற்
வதத்தைப்பிளந்த வெற்றிவேலாயுத மூர்த்தியினது பாதகமலங்களிற்ப
ணிந்து பெருமூச்சிகளைவிட்டுக்கொண்டு தேவாதிதேவனேஎன்றாண்ட
வனேகேட்டருள்க–தேவரீர்கட்டளையின்படிக்குவீரவாகுதேவர்தமதுது
ணைவர் இலக்கர் படைத்தலைவர்பூதவீரருடன் ரணக்களத்தைச்சேர்ந்து
கொடிய போரைச்செய்து ராட்சதச்சேனைகளையும் படைத்தலைவரையுங்
கண்டித்து சிங்கமுகன்பிள்ளைகள் நூறுபேரையும்வாட்டி அவனையும்பற்
பலசண்டைமுன்னிலையிற் றிகைக்கும்படிக்குச்சாடும்போது பிற்மித்த
வனாய் வடவையைப்போலக்கோபித்து மாயபாசத்தைப் போக்கினன்அ
ந்தவஞ்சகத்தைத்தெரியாமல் நம்மவர்கள் சத்துதாழ்த்தகாலத்தில் அந்த

பாசம்வேகமாய்வந்துமதியைமயக்கி வீரவாகுதேவர்முதலான சகலரை
யும்வாட்டிச்சேர்த்துக் கட்டிக்கொண்டுபோய்உதையகிரியிற்சேர்த்ததுச
மர்க்களத்தில் நம்மவர்களொருவருமில்லாமையாற் சிங்கமுகன்செயசா
லியாய் முற்றினுமுலவிப்பார்த்து யிவடம் வரும்படிக்கு யெத்தனித்தி
ருக்கின்றனனெனச்சொல்லியசேதியைத்திருச்செவிகளிற்கேட்டவுடன்சி
ங்கமுகனெவ்விடத்திலிருக்கின்றனனென வினாவியபோதுவாயுதேவன்வ
ணங்கிகற்றனேகாலம்நேர்ந்தபடியால்ரதாரூடனாய் சதுரங்கச்சேனைகளு
ஞ்சூழ்ந்துவர யித்தலத்தைக்குறித்துப்புறப்பட்டான் யிதுவரையிற்சமீ
பத்தில் வந்திருப்பனெனச்சொல்லக்கேட்டு சண்முகப்பெருமாள் சிறு
நகைகொண்டு சிங்காதனத்தைவிட்டிறங்கி ரத்தினமயமாகிய பாதுகை
யினிடத்திற் றிருவடிகளைச்சேர்த்து வயிரத்தண்டைசலங்கைஅரைக்கிண்
கிணி வீரகெண்டாமணிசத்திக்கத்தக்கதாக ஆசாரவாசல் முகப்பில் வரு
முன்னிலையில் வாயுதேவன்நடத்திவந்துநிறுத்திய தேரின்பேரிற் சிவகு
மாரன் ஆரோகணித்தனர், அதைக்கண்டதேவர்க்கள் மனமகிழ்ந்துசெ
யாவிசைபவாவெனப்போற்றிவாழ்த்தினர்–இந்தஒலக்கத்தைத்தெரிசித்த
இந்திரன் அதிகசந்தோஷித்துடன்வெண்சாமரையைவீசவும்தேவர்க்கள்
ஆலவட்டங்களையசைக்கவும் சந்திரசூரியர் தவளவட்டக் கொடைகளையி
ருபாரிசங்களினுங்கவித்துநடக்கவும் எமதருமராசன் உடைவாளாயுதத்
தையேந்திச்செல்லவும் குபேரன்அடப்பையைச் சுமந்துவரவும் சமுத்
திரராசன்பொற்படிக்கத்தை கரத்திற்பற்றி பக்கத்தில் காத்திருக்கவும்யி
த்தகையசிறப்புகளுடன் சண்முகப்பெருமாள் போனாவிரும்பி வெளி
ப்பட்டதறுவாயில் யிச்சேதியைத்தெரிந்த ஆயிரவெள்ளம் பூதப்படைக
ளும்சகலாயுதபாணிகளாய் சமுத்திரமுழக்கத்தினு மேலிடத்தக்கதாகச்சி
ங்க்நாதம் அட்டகாசங்களைச் செய்துகொண்டு தத்தமதுதலைவர்களுடன்
பாடிவீட்டைவிட்டு வெளிப்பட்டு வீரங்களைப்பேசி பாரித்தமலைகளைப்
பறித்தும் தழைத்தோங்கியிருக்கும் மராமரங்களை வேருடன்பிடுங்கிக
ரங்களிற்பற்றி பெரும்புறக்கடலைப்போல ஆரவாரித்துக்கொண்டு கற்
தனைச்சூழ்ந்துபோகவும் அத்தறுவாயிற் கணக்கிறந்த பூதவீரர்கள் ரண
பேரிசெயபேரிவெற்றிச்சங்கம்குடமுழாதப்பட்டை சின்னம்காகளமாதி
யபோற்பறைகளைதிசைகள்செவிடுபட கணகணென முழக்கிப்போகவும்
சிலபூதகணங்கள் ஐயன்புகழைப்படித்தப் புகழ்ந்துநடக்கவும் பலர்ம
யிர்ப்பிஞ்சம்கொடி மகரதோரணம் அனந்தம்நந்தித்துவசங்களைத்தாங்
கியிடிகளுமஞ்சவசனித்துப்போகவும் சிலகணநாதர்கள் முன்னணியில்
மூவர்முதல்வன்வருகின்றனர், திரிநேத்திரதாரிமனதுக்கினிய குமாரதே
வரொருந்தருளுகின்றனர், அவுணகுலாந்தகன்வருகின்றனர், வெற்றிவே

லாயுதத்தைதாங்கிய வீராதிவீரன்செல்கின்றனர், தேவர்க்கள்முதலானவ
ர்களாலறிதற்கரிய சுயஞ்சோதிச்சொரூபிவருகின்றனர் தேவசேனாபதி
யெழுந்தருளுகின்றனர், தேவதேவோத்தமன்வருகின்றனர் சர்வந்தரியா
மியாய் தீனசரண்ணியனாக விருக்கும் பாலசுப்பிரமணியதேவர் வருகின்
றனரென்று திருச்சின்னங்களில்முழக்கிப்போகவும்இவ்விதச்சம்பிரமங்
களுடன் வீரபராக்கிரம சாலிகளாகிய பூதர்சூழ்ந்துநடக்க விண்ணவர்
செயஞ்செயமென்றுவாழ்த்தெடுப்பக் கந்தசுவாமியார் பாசறையெல்லை
லைக்கடந்துரணக்களத்தைநோக்கி வாயுவேகத்தினுங்கடுகிப்போகின்ற
தருவாயிற் சிங்கமுகாசுரனும் கணக்கிறந்தராட்சதப்படைகள் சேனைத்த
லைவர்களுடன் அதிகவுக்கிரத்துடன் யெதிரில்நேர்ந்தான் அக்காலத்திற்
பர்வதாக்ருதியாகிய பாரித்ததிரேகத்தைப் பெற்றிருக்கின்றபூதப்படை
கள்மனம்பொருமல்வடவைக்கனலைப்போலச்சீறி பாரித்தபர்வதங்களை
வீசியும் தழைத்திருக்கின்றவிருட்சங்களைச் சுழற்றிமோதியும் எழுவாயுத
த்தைப்போக்கியும் மழுப்படையைக்கடாவியும் பாசங்களைவீசியும்தண்
டாயுதங்களைக்கிறுகிறெனச் சுழற்றிக்கடாவியும்வச்சிராயுதங்களைவிட்டெ
றிந்தும் வேலாயுதங்களைப்பிரயோகித்தும் சக்கரங்களைக்கடாவியும்இ
வ்விதமாகப்படைகளை அமோகமாகச்செலுத்தி செயசாலிகளாகியராட்ச
தப்படைகளைத் தலைகளைக்கண்டித்தும்மண்டைகளைப் பிளந்தும்தோள்க
ளைச்சரித்தும்தாள்களைவெட்டித்தள்ளியும்மார்பைப்பிளந்தும்இவ்வாறு
வாட்டியும் பர்வதாகிருதியாகவிளங்கும் பாரித்ததேர்களை அச்சுமச்சுகுத்
துக்கால்கொடிஞ்சைமுதலியஉறுப்புகளைப்பேத்தெறிந்தடக்கியும்யானை
யளிகளைச்சின்னபின்னப்படவாட்டியும்குதிரைபந்திகளைக்கண்டதுண்ட
ப்பட ரணக்களத்திற்கிடத்தியும் போராடுமுன்னிலையில் ராட்சதவீரர்க
ளும்பின்னிடையாமல்வடவைக்கனலுக்கொப்பாகமண்டியெரிந்துகுந்த
ம்-முசலம்-பிண்டிபாலம்-வேல்,எஃகாயுதம்-பாணமுதலியபடைவகை
களை ஒன்றனந்தமாகச் செலுத்திப் பூதப்படைகளை வாட்டும்போது த
லைகள்-தோள்கள்-மார்பு-கால்கள்-மற்றவுறுப்புகள் சின்னபின்னப்பட்
டுமாண்டனர்,இவ்விதமாகஉபையசயின்னியங்களும்ஒருவரையொருவர்
வெல்லவேணுமென்கிற வீராவேசங்களுடன் அகோரமாகிய போரைச்
செய்துவருகின்றதருவாயில் பூதவீரர்சிலரேங்கி மராமரங்கள்முதலிய
ஆயுதங்களைக்கொண்டு முன்பின்பாராமற்சாடிவாட்டும்போது அவுணப்
படைகளனைத்தும் ரணக்கள வெல்லைமுற்றினும்சிதைபட்டிறைந்துபிண
மலைகள்டெருத்து உதிரப்பிரவாகம்சுழலமிட்டோடத் தன்சேனைகள்நாச
ப்படுவதைச்சிங்கமுகாசுரன்கண்டவுடன் மனம்பதைபதைக்கக்கோபாக்
கினிமேலிட்டுவிழிகள்அரக்கைப்போலச்சிவந்து அனற்பொறிகளையிறை

க்கவடவையைப்போலச்சீறிப்பனைவ ரனைவரையும் ஒருமிக்கவாரியுண்ண
ப்பெறினல்லது என்கோபமுந்தாபமுந்தணியாது அப்படிக்குச் செய்
துமுடித்தபின்பு பாலனைவிசாரித்துக்கொள்ளுவோமென் றெண்ணிச்சு
க்கிருசிரியன் தனக்குப்போதித்திருந்த மாயமந்திரமொன்றை யுச்சரித்
துபூமிவானம்திசைகள் நிறையத்தக்க கோரரூபத்தைத்தாங்கி ஆயிரஞ்சி
ரங்களிலும்விளங்குகின்றவயிரமுடிகள் அண்டமுகட்டையுராயவும்கரங்
கள்அண்டப்பித்திகை வரையிலோடவும் பாதங்கள்பூமண்டலவெல்லைமு
ற்றிலும் நிறைந்துகாட்டவும் யித்தகைய மாயப்படிவத்தைக்கொண்டு
புவனங்களனைத்தும் நடுநடுங்கிவாடத்தக்கதாக ஆர்ப்பரித்துக்கரங்களைவி
ரித்துமேலிட்டுச்சீறிவருகின்றசிங்கமுகாசூரன்கோரரூபத்தைப்பார்த்த
வுடன் மன்னுயிரனைத்தையும்காலாதிகளில்வாட்டவல்லஎமதருமராசனும்
திகைத்துகைகாலுதறப்பிறிமித்தசைவற்றிருக்கவும்சூரியன்மயங்கித்திசைகெ
ட்டோடவும் இந்திரன் திரோகமுற்றிலும்வியர்த்து யிப்பாதகன் என்ன அ
னர்த்தங்களைச்செய்யயிக்கோலங் கொண்டனனோவென்னும்ஏக்கத்தினால்
வாடிவருந்தவும் அக்கினிதேவன்பதைபதைத்துத் தன்வெப்ப மடங்கிச்
சோரவும் பிரமனாதியதேவர்க்கள் மதிமருண்டுதியங்கவும் யிவ்விதமாகச்
சகலரும் திப்பிறமைகொண்டுபிறிமித்துப்பார்த்திருக்கின்ற தருவாயிற்
சிங்கமுகன்காலாந்தகனைப்போலச்சீறித் தன்னிரண்டாயிரம் கரங்களை
யும்நீட்டிச் சத்தசாகரங்களைப்போல முழங்கிக்கொண்டிருக்கும் பூதப்
படைகளைச்சேர்த்து வாரிவாரி பெலத்தையொப்பவிருக்கின்ற பேழ்வா
ய்களினிடத்திற்போட்டு மென்றுதின்னப் போதாமையால் சவளீகரமா
கவிழுங்கத்தலைப்பட்டனன், அதெப்படிக்கிருந்ததெனில் சத்தமேகங்க
ளும்சீறிச் சமுத்திரத்தை தமாறுகொண்டுண்பதுக்கொப்பாகக்காட்டியது
இப்பிறகாரம் ஒவ்வொருகரங்களில் ஆயிரகோடி சிவகணங்களைச்சேர்த்
துவாரி ஒவ்வொருவாயினிட்டு உட்கொள்வான் பூதர்கரங்களிற் பற்றியி
ருக்கின்றபலபடைகளையும் மச்சங்களாகவும் மலைகளைத் தசைக்கொப்பா
கவும் அவர்கள்சரீரங்களை அன்னத்தைப்போலச் சேர்த்துண்பன் யிவ்வி
தங்களாகக்கரங்களைச்சுலவிச்சுலவி பிரளயகாலத்தில் மகாவிஷ்ணுவானவ
ர்சகஸ்திர உருவைக்கொண்டு ஆயிரகோடி அண்டங்களையு முண்டுவயத்
திலடக்கியதையொப்பக் கண்டசனாகிய அவுணாசன்வாய்களில் ஆயிர
வெள்ளம் பூதப்படைகளும்அடங்கி உதாகடாசத்திற் சேருமுன்னிலையி
ல்யியாதொருசம்பிறமசாலத்திற்பலதிசையினும்நின்றுசெனங்கள்பற்ப
லமார்க்கங்களின் மூலமாகச்சாதாரணமாய் விசாலமாகிய பட்டணத்திற்
சேருமாறுபோலகண்டங்களின் மூலமாகநடந்து பண்டிவயற்றிற்சேர
த்துடங்கினர், யிதுவுமல்லாமற்சிவகணங்களைச் சிங்கமுகன் கரங்களினு

ல்வாரிவாரி வாயிற்போட்டு விழுங்குவதைப் பார்க்குமிடத்தில் பூலோக
வாசிகள்பற்பலபெலங்களின் மூலமாகப்பாதலத்திற் சேர்வதைப்போல
க்காட்டியது, யிப்படிக்குப்பாதகன்சிறியவயற்றிற்போகின்றபூதர்கள்சு
ற்றுமுற்றும்பார்த்துயிதுபூவுலகமாகக்காணப்படவில்லைதெய்வலோகமு
மன்றிராட்சதப்பாதகர்வாசஞ்செய்யும் புவனத்தைப்போலத்தோற்றப்
படுகின்றதெனச்சங்கையற்றுப்போய்க்கெற்பத்திற்சேர்ந்துசவுக்கியமா
யிருந்தனர், சிலபூதர்களைவாரிச்சிங்கமுகன் வாயிற்போட்ட தறுவாயில்
விசாலமாகியயிடத்தைப்பெற்றிருக்கும் நாசியின் மூலத்தையும் செவிக
ளின்மார்க்கங்களையும் ஆசனத்தையுங் கண்டமாத்திரத்தில் யிவைபிலத்து
வாரங்களைப்போலக் காணுகின்றதெனமதித்து அவற்றின் மூலமாக
வெளிவந்துதப்பித்துக்கொண்டு சிலபூதரோடியொளிக்கவும் சிலபூதர்வி
சாலமாகியபாதகன்வாய்களிற்பிரவேசித்து கண்டத்தைக்கடந்து நெஞ்
சைத்தாண்டி அடிவயற்றிற்சேர்ந்து அங்குமிங்குமுலவினர், அதைப்பா
ர்க்குமிடத்தில்மண்ணுலகவாசிகள்வழுவி பாதலத்தில்விழுந்ததைப்போ
லவிளங்கியது யிவையன்றியும்அவுணராசன் சுவாசத்தை யுட்கொள்ளும்
போது வாய்களின்மூலமாகப் போகின்றபூதர்கள் அதன் வயப்பட்டுநா
பியினடியிற் போய்விழுந்தும் சுவாசம் வெளிவருந் தறுவாயில் ஆயிர
யோசனையுயரமுள்ளகண்டத்தின்சமீபத்தில்வந்தும் யிவ்விதமாகப்போ
வதும்வருவதுமாய்க்கணக்கிறந்த பூதர்களலைந்துழலவும்ஆலத்தையொ
த்த கொடியபாதகன்வயற்றிற்சென்ற சிலகியாஞானிகளாகியபூதர்கள் அத்
தலத்தைப்பார்த்தவுடன் களித்தவர்களாய் ஐம்புலச்சேட்டையையடக்கி
சிந்தனையைச்சிவத்தின் பாதகமலங்களிலிருத்தி அசைவற்றுயோகசாதனை
களைச்செய்வதற்கு யிதுவாசயோக்கியமாகக்காணுகின்றதென மகிழவும்
சிலவீராதிவீரர்களாகிய பூதர்கள் யாதொருதுன்பமுமில்லாமற் சிங்கமு
கன்கெற்பத்திற்பிரவேசித்தவுடன் றவுத்திராகாரமாகக்கோபித்துத்தாங்
கள்வெளிப்படும்பொருட்டு கரங்களிற் பற்றியிருக்கின்ற படைகளினாற்
பலயிடங்களிற் குற்றியும்-வெட்டியும்- யிடித்தும்- அரிந்தும் - பாச்சி
யும்- கீறியும் - இவ்விதங்களாகத் தங்களாற்கூடியவளவில் பின்னப்பட
முயற்சிசெய்தும் அணுப்பிரமாணமாவது அசைவுபெறாமல்வயிரபெ
லத்தைப்போலக்காட்ட மனம்வருந்தி கைகாலோய்ந்து ஆயுதங்களும்
முனைகள்மழுங்கி பின்னப்பட்டுமேற்செய்வதற்கு யாதொரு காரியங்க
ளுந்தோற்றாமல் வாடிநிற்கவும் சிலபூதர் அவுணராசனுற்றுங்கள்ரணக்க
ளத்திற்பட்ட துக்கவருத்தங்களையொழித்து பயமற்றுப்படுத்தும் யிரு
ந்தும்உறங்கியும் சந்தோஷமாகவார்த்தையாடியும் தாங்கள்செய்தசேவக
ங்களையும்பகைவர்பட்டசேட்டையும் பேசிப்பேசிப் பொழுதுபோக்க

வும்சிலபூதர் மகிமைபங்கி யிப்பாதகன் உதாகடாகத்திற்பட்டணம் வெளி
வருவதற்குயாதொரு காரணங்களையுங்காணோம் யிதற்கென்செய்யக்க
டவதென்றுகியங்கிபிற்மைகொண்டு அங்குமிங்குமா யலையவும் சிலபூத
ர்பெருமூச்சிகளைவிட்டு அப்பாகொடியபாதகனாகிய ராட்சதவீரர்களால்
மானபங்கப்பட்டு பற்பலகாயங்களைப்பெற்று வருந்துவதினும் யிவட
த்திற் சற்றுநேரம் சவலையற்றிருக்கக்கடவோமெனத்தம்மிற்பேசிக்கொ
ள்ளவும் சிலபூதர்கள் பகைவர்முன்ன மகப்பட்டுக்கொண்டு பட்டபாட்
டையுங்கெட்டசேட்டையும் அக்காலத்திற்றாங்கள்செய்தசாகசங்களையும்
தங்கள்மனதுக்கினியதோழர்களுடன் முறையிட்டுஆறியும்சிலர்கூட்டங்
கூட்டமாகச்சேர்ந்து முற்காலங்களில்நடந்தகதைகளைச் சொல்லக்கேட்
டுக்களித்திருக்கவும் சிலபூதவீரர்உதரவங்கிக்கு சமீபித்தகாலத்தில் வருந்
தி அம்மம்ம யிந்தஅவுணப்பாதகன்செலுத்திய பாணங்களின்சுவாலையி
த்தலத்திலும் நேர்ந்துவிட்டது யிதற்கென்செய்வோம் யினியெவ்விட
த்தோடி யொளிப்போமென்றேங்கவும் சிலர்வெவ்வேறும்புகளின்சந்
துகளிற்சேர்ந்துசொஸ்தமாய்நித்திரைசெய்யவும் சிலபூதர் வங்கணமாக
க்காரங்களைகோத்துக்கொண்டு உல்லாசமாய்உலவிவரவும் சிலர்அவுணரா
சன் புசபெலபராக்கிரமங்களையும் வெற்றிப்பாடுகளையும் பேசிக்கொ
ண்டாடவும் யிவ்விதங்களாக ஆயிரவெள்ளம் செயசாலிகளாகிய பூதப்ப
டைகளும் அலைந்துவாடியும் அல்லலுற்றிருந்தும் யித்தகையபாடுகளைப்
படுவதாகச் சிங்கமுகன் தன்நீண்டகரங்களினுற்சேர்த்து வாரிவாரிவயிற்
றிலடைத்தகாரணங்களை அனந்தம்வாய்களைப்பெற்று பலகாலஞ்சொன்
னபோதினும் முடிவதன்று-கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே ரணக்க
ளவெல்லைமுற்றினும் ஆரவாரித்தடர்ந்திருந்த பூதப்படைகளொன்றொ
ழியாமற்பூமண்டலத்துக்கொப்பாக விசாலமாகவிருக்கின்றசிங்கமுகன்
பாழ்வயிற்றிற்சேர்ந்ததை விண்ணகத்தில் வேடிக்கைபார்த்திருந்த தேவ
ர்க்கள்தெரிந்தவுடன் நடுநடுக்கிஅற்புதசித்தராய் எண்ணிக்கையற்றசெய
சாலிகளாகிய சிவகணங்களை சிலபோதிற்றட்டாமற் கவளீகரம்பண்ணுன்
யினிபூமண்டலவெல்லையிலடங்கியிருக்கும் பிராணிகளனைத்தையும்தொ
லையலுக்கொப்பாக நாவுகளிற்றடவிச் சப்புவன்போற்காணுகின்றது,
அதன்பின்பு விண்ணிலிடத்திருக்கின்றநம்மையும்பற்றிக்கொறிப்பதற்
கையமில்லை பாதகன்கொண்டிருக்கிற கோலத்தைப்பார்க்கப் பயங்கர
மாய்மனந்தத்தளிக்கின்றதெனச்சொல்லிக்கொண்டோடி அப்புறத்தண்
டங்களிற்பதுங்கியிருந்தனர், யிந்தசெயத்தைப் பார்த்திருந்த தூதர்க
ள்மனமகிழ்ச்சியுடன் ஒருவருக்குமுன்னொருவராகமனோவேகத்திலுங்க
டுகிதிமைப்போதில்வீரமாமயேந்திரபுரியைச்சேர்ந்துநவரத்தினமயமா

களிலங்குகின்றசபாமண்டபத்திலெழுந்தருளிய சூரபதுமனைத்தெரிசித்துவணங்கிப்போற்றியயமற்ற நகைமுகாராய்நெருங்கிநின்றுயிதனைவிண்ணப்பம் செய்வதாயினர், ஐயனேதேவரீர் துணைவன் ரணக்களத்துக்குப்போயினபின்பு அகோரஉயித்தியங்களைச்செய்துசெய்து பகைவரைவகையறமடிப்பது காலதாமசமாவதென்றெண்ணி வடவனலைப்போலக்கோபித்து மாயபாசத்தைவீசி புசபெலபராக்கிரமசாலியாகிய தாரனையும் இலக்கர் எண்மர் படைத்தலைவர்களுடன் பாரிபூதப்படைகளையும்வாட்டிஒன்றொழியாமற்கட்டி உதையகிரியிற்சேர்த்தபின்பு பாசறையிலிருந்தபாலன்முதலானவர்களையும் மடக்கிக்கொண்டு சொல்லுகொல்லெனச்சாடநினைந்து நடக்குமுன்னிலையில்யிச்சேதியைத் தெரிந்தபாலசுப்பிரமணியதேவன் வெற்றிவேலாயுதமுதலிய சர்வாயுதபாணியாய்மற்றப்பாரிபூதச்சேனைகளுடன் வேகமாய்வந்தெதுத்து கொடியபோராச்செய்யுந்தருவாயில் சிங்கமுகாசூரனுக்கு அதிககோபம் பிறவேசித்துமண்விண்திசாதிசைகளைமூடவல்ல திரோசத்தைக்கொண்டு நீண்டகரங்களைவலைகளைப்போலப் பரப்பி பரப்பிச்சேர்த்து வாரிவாரி மற்றபூதப்பெருக்கையும் சற்றுநேரத்தில்வாயிற்போட்டுவிழுங்கிவிட்டான் ராசாதிராசனே அந்தவேடிக்கைகளைச்சொல்லிமுடியாது ரணக்களத்திலும்பாசறைவீடுதியிலும் பூதர்பூண்டென்பதொன்றுங்கிடையாது முக்கியமாய்த்தாரனும்எண்மரும் இலக்கரும்மாண்டுநாசமடைந்தனர், அரசனேயிவையனைத்தையும் திஷ்டாந்திரமாகக்கண்டு தேவரீருக் கறிக்கையிடஓடிவந்தனம் யிவற்றினொன்றும்பிசகிருக்கமாட்டாதுபாலசுப்பிரமணியன்மகாவிஷ்ணுமற்றதேவர்க்கள்மாத்திரம்ஒருமூலையில் பூனைக்குட்டிகளைப்போலஒடுங்கிநின்றனர், அவர்களையும்யிதுவரையிற் சாடித்துரத்திவிடுவதற்கையமிராது அரசனே யினிவிசேஷித்துச் சொல்லவேண்டுவதில்லைஒருநாழிகைப்போது கழிவதன்முன்னம் பகைவர் பூண்டென்பதில்லாமல் வேரறக்களைந்துபோட்டு செயப்பிறதாபத்துடன் யிவடம்வந்துதேவரீரைக்கண்டு வார்த்தையாடுவனென்றுசபையிலிருக்கின்றவர்களனைவரும் மனக்கவலையற்றுசந்தோஷசாகரத்தில்மூழ்கிக் களித்திருக்கும்படிக்குப்பேசியசந்தோஷச்சேதியைச்சூரபதுமன்செவிகளும்மனமுங்குளிரக்கேட்டமாத்திரத்தில் மனவெழுச்சியுடன்திரோகபரவசத்தனாய்ச்சிங்காதனத்தைவிட்டுக்குதித்து செயவார்த்தைகளைக் கொண்டுவந்ததூதர்களைக்கட்டியணைத்து பலதரம் அந்தசுபச்சேதிகளைச் சொல்லச்சொல்லி வெறுப்பில்லாமற்கேட்டுக்கேட்டுத்திரோமம்பூரித்து புயாசலங்கள்வானத்தையளாவவோங்கிவாகுவலையங்கள் தெறித்திறையவும் கடகங்கணங்கள்வெடித்துவிழவும் அதிகசந்தோஷப்பெருக்கிற்பட்டவனாய் வேகமாகவந்த

தூதர்களுக்கு பற்பலசாயித்தஉபசாரங்களைச்செய்வித்து தமதுகரங்களினால்அவர்கள்முகத்திற்பெருகுகின்ற வெயர்வையைத்துடைத்து பற்பலமுகஸ்துதிகளைப்பேசி யிந்தசிறப்புள்ள அவுணர்குலம்விறிவிளங்கும்படியாகிய செயவார்த்தைகளைக்கொண்டுவந்த ஓ தூதர்களே உங்களுக்குத்தக்கடெகுமதிகளெதைத்தரினும் போதாது செய்யாமற்செய்த உதவியாகமனதிற்கொண்டனமென மகிட்சியாகப்பேசித்துரிதமாய் தன்மார்பிலணிந்திருந்த விலையுயர்ந்தபருத்த முத்துத்தாழ்வடங்கள் மோகனமாலைகள்சறப்பளிகளாதியானதை கழற்றிக்கழற்றிக்கொடுத்து மேலும்வெகுமதிகள்செய்வதற்குச்சபையில்வைத்திருந்தஆபரணப்பேழைகளையுங்கொடுத்து சிறந்தபட்டு பீதாம்பரங்களைவீசியதன்றியும் அவர்கள்கேட்டகேட்டவஸ்துக்களை ஒன்றனந்தமாகவழங்கி யித்தினமுதல்நீங்கள் யாதொருதொழில்களையுஞ் செய்யவேண்டிய நிமித்தமில்லை யிதுவரையிற்கொடுத்துவந்த சம்பளத்துக்கு நூறுபங்கதிகமாசத்தாக் கட்டளையிட்டனம் அதைக்கொண்டுசுகசீவிகளாக வாழ்ந்திருக்கக்கடவீர்கள், யிக்காலத்தில்மிகவும் அலசியிருப்பதால் உங்கள்மனைக்குத் துரிதமாகப்போய் அன்னபானாதிகளைப்பொசித்துக் களித்திருப்பீர்களென்று தூதர்களுக்குச்செலவுகொடுத்தமாத்திரத்தில் அவர்களும்மனமகிழ்ந்தவர்களாய் ராசாதிராசனைப் பற்பலவிதங்களிற் றுதித்துப் போற்றி விடைபெற்றுப் போய்விட்டபின்பு சபையிற்காத்திருக்கின்ற சிலதூதனைப்பார்த்து பாலசுப்பிரமணியனுடன் நமதுதம்பிசண்டைசொடுக்கவிருந்ததால் அவனைப்பாலனென்றெண்ணப்போகாது ராட்சதசயின்னியங்களிற் குறைவுபட்டிருக்கும் அதற்குதவியாகப்பட்டணத்திலிருக்கின்ற ரதகெசதுரகபதாதிகளைத்துரிதமாகக் கொண்டுபோய் ரணக்களத்திற்சேர்ந்துப் பகைவனை அதப்படுத்தி வரும்படிக்குச் சேனைத்தலைவருக்குத் தெரிவித்துபடையெழுச்சியென்றுபறைசாத்திவிக்கும்படிக்குக் கட்டளையிட்டனன், அவர்களும்மனோவேகத்தினுங் கடிகிப்பறந்து சயின்னியங்களிருக்கின்றயிடத்தைச்சேர்ந்துராசாதிராசன் உங்களையிந்தநிமிஷத்திற்பிறையாணப்பட்டுப்போர்க்களத்துக்குப்போய்சிங்கமுகாசூரனுக் குதவியாகவிருந்துசெயத்துடன்திரும்பக் கடவீர்களெனப் பணிந்தனனெனப்பேசிமுடிவதன்முன்னம் யானைகளின்பேரில் பேரிகைகளையேற்றி முழக்கியவோசைசெவிகளில் நுழைந்தமாத்திரத்தில் பட்டணத்திலிருந்த ரதகெசதுரகபதாதிகளனைத் தும்பலவெள்ளக்கணக்கில்சர்வாயுதபாணிகளாய்ப்போர்க்கோலத்தைத்தாங்கி பெரும்புறக்கடல்பெருகுமாறுபோல நடக்கின்றதறுவாயிற் சேனைக்காவலரும்வீராவேசங்களுடன் வயிரக்கவசங்களைத்தரித்து வீரபட்டமணிந்து அம்புறாத்தூணிரத்தைமுதுகிலிறுக்கித்தங்

கச்கட்டுகள்பூண்டிருக்கும் வலியவிற்களைக் கரங்களிற்கொண்டு -வாள்-
வேல்-சூலம்-தண்டமுதலானபடைகளைப்பரித்து சொற்னமயமாகியதே
ர்களிலாரோகணித்துச் சதுரங்கச்சேனைகளையுங்காவல்கொண்டு போகு
முன்னிலையில் ரணபேரி-செயபேரி- வெற்றிச்சங்கமாதியாகிய போற்ப
றைகள்சோவடையிடிகளைப்போலக் கணகணென முழங்கவும் கொடி -கு
டைமகரதோரணம் மயிற்பிஞ்சம் ஆலவட்டங்க ளெவ்விடங்களிலும்ப
ரந்துபடபடத்தொனிகளுடனசைந்துவரவுமாதங்கள்கெற்கரத்தொனி
களைச்செய்தோடும் அதிற்சியும் மதயானைகள் வீறிடுமொலியும்புரவிக்கூ
ட்டங்களினதுகனைப்பின்முழக்கமும்செயசாலிகளாகியராட்சதவீரர்சிங்
கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்து வீரவெண்டயங்கள்கலிக்கநடக்கு
ம்ஆரவாரங்களுஞ்சேர்ந்து பிரளயகாலத்தெழுஞ் சத்தத்தைப்போலொ
லிக்கவும் யிவ்விதஆடம்பரங்களுடன் அதிவேகமாய்நீண்டவீதிகளைக்கட
ந்துகோபுரவாயலைத்தாண்டி சிங்கமுகாசூரன் செயவுச்சாகத்துடனுலவு
கின்றரணக்களத்தைச்சேர்ந்தனர், யிவைநிற்கசேனைகளைப் போகும்படி
க்குக்கட்டளையிட்டசூரபதுமன் தன்துணைவன்வெற்றிவேலாயுதமூர்த்தி
யுடனெதுத்துச்செய்யும் போரின்திறங்களையும் வீரத்தன்மைகளையுங்
கண்டு களிக்கும்படிக்குவிருப்புற்றவனாய் மனக்களிப்புடன்தட்சிணத்
திற் சிங்காதனத்தைவிட்டிறங்கிப் பரிசனர் ஆலவட்டங்களையும் வெண்
சாய்மரைகளையும்தவளவட்டக்குடைகளையுந்தாங்கிப்பணிமாறிவரவும்வ
லம்புரிச்சங்கம்திருச்சின்னம்பிள்ளாங்குழலாதிபோகவும் அருகுதிவட்
டிகள்பிடிக்கவும்பட்டுவர்புகழவும்வித்துவச்சனங்கள்பாமாலைகளைச்சா
ற்றவும் கட்டியக்காறர் பொற்பிரம்புகளைக் கரங்களிற்பற்றி யெச்சரிக்
கைகளைச்சொல்லிமுன்னணியிற்பராபரிசெய்துப்போகவும்அரம்பை-ஊ
ர்வசி- திலோத்தமை- மேனகையாதிய தேவகன்னியர் குயிலினங்களைப்
போலப்பாடி மயிலினங்களையொப்ப பரதநாட்டியங்களைநடித்து யெ
திரில்நடக்கவும் யிவ்விதகெசேந்திரஒலக்கத்துடன் அத்தறுவியிலிருந்த
பிறமுகாள்பெரியோர்கள் சூழ்ந்துவரதிருச்சபையைக்கடந்துமுன்னணி
யில்நவாத்தினமயமாய்ப் பலநிலைகளைப்பெற்று மேருகிரியைப்போல
நிற்கின்றகோபுரத்தின்பேரிலேறி சூரியனுதையகிரியில்முளைத்ததையொ
ப்ப மேனிலையைச்சேர்ந்து வெற்றிமாலைதரித்திருக்கின்ற சிங்கமுகாசூர
ன்கொண்டிருக்கிற கோறரூபத்தையும் தன்னிஷ்டப்படிக்கு பூதசயின்
னியங்கள்முதலாகத் தன்துணைவன் செற்பத்திலடங்கிச் சந்தடியற்றிரு
க்குங்காரணங்களையும் கண்களும்மனமுங்குளிரப்பார்த்து சிவராசிகளைய
லைப்பதினால் வெற்றிமுதலியசகலநன்மைகளுமுண்டென்றெண்ணிநடா
த்தவடவைக்கனலைப்போலத் தோற்றியிருக்கின்ற சூரபதுமன் மன-

ச்சாகத்துடன் ஆனந்தவாரியில்மூழ்கி பிறையைநிகர்த்தகோரதந்தங்கள் விளங்க யிடியின் முழக்கமுமஞ்சநகைத்துதம்பி செய்கைகளுக்குமெச்சி அவன்கீர்த்தியையும் சவுரியங்களையும் பக்கத்திலிருக்கின்றவர்களுடன் சொல்லிச்சொல்லி புகழ்ச்சியாகக்கொண்டாடிக்கொண்டிருந்தனன், கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே யிவ்விதங்களாகராசாதிராசன் திரோகபரவசத்தனாகக்களித்து மேல்நடக்கும்காரணங்களைக் காணவிருக்கின்றதறுவாயிற்சமரவெல்லையில்நடந்தசேதிகளையும் செம்ப்பிராகவென்று சூதபுராணிகர் சொல்லத்துடங்கினர், ரணக்களமுற்றினும் ஆரவாரித்திருந்த நாறுவெள்ளம்பூதப்படைகளையும் சிங்கமுகன்கரங்களை நீட்டி வாரிவாரி பேழ்வாயினிட்டுண்டகாரணங்களைச் சண்முகப்பெருமாள்கண்டவராய்ச்சற்வசங்காரகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்களை நீறுசெய்து ஏகனாய் ஆனந்தநடனங்களைச் செய்திருக்கும் உருத்திரமூர்த்தியின் திருக்குமாரன் சத்திராதிகளுடன்போர்த்தொழிலைச்செய்யுந் திருவிளையாடலைத்திருவுளங்கொண்டுசெந்தாமரைக்கமலங்களும்தாவாதேசாதித்தர்களும் அரியதவங்களைச்செய்த முயற்சியினாற்சிவகுமாரன் திருக்கோலத்திற்பட்டுவிளங்குவதைப்போலச் சண்முகாரவிந்தங்களும் பன்னிருபுயாசலங்களையும் படைத்திருக்கின்ற எமதுசுற்தன் சாரதியாகிய வாயுதேவன் மீது திருவிழிகளைப்பரப்பிஎச்சரித்தகாலத்தில் தசவாயுக்களுடன் துரிதப்பட்டு புரவிகளை அதட்டிப் பகைவன்போர்முனையில் ரதத்தைச்செலுத்தி வருகின்ற தறுவாயிற் பூதரைச்சிறுவயற்றிற்பரித்திருக்கும் சிங்கமுகன்படைவீரருந்நால்வகைச்சேனைகளுங் கண்டமாத்திரத்தில் நல்லகாரியம் எமதுசக்கிறவர்த்தியுடன் யிந்தபாலனே போயெதுப்பவன் யிவனைநாமேவாயிற்போட்டுக்கொள்ளுவோமென மகிழ்ந்தவர்களாய் வடவாமுகாக்கினியைக் கோபித்தெழுந்த சமுத்திரத்தைப்போலச்சீறிச் சண்முகப்பெருமாளைவளைந்துகொண்டுதாங்களிதிற்பெற்றிருந்த தேவாஸ்திரங்கள் விஷத்தொவையவிட்டு கூர்மையாயிருக்கின்ற பாணங்கள் அலைலையிறைக்க வல்லகணைகள்யிடிகளைக்க்கும் திவ்வியபாணங்களாதியவைகளைப் பாரித்தவிற்களிற்பூட்டிப் பிறையோகித்தும் - தண்டாயுதம் - சூலம் - வேல் - தோமரம் - பிண்டிபாலம் - சப்பணம் - முசுண்டி - யித்தகைய ஆயுதங்களை யொன்றனந்தமாகக்கடாவியும் எறிபிட்டிகளைவீசியும் யிவ்விதமாகநாலுமூலைகளினுமிருந்து வாதாடும்போது பாதகர்செலுத்திய அஸ்திர சஸ்திரங்கள் சோனைமாரியைப்போலப் பெருத்துவிட நாகங்களுக்கொப்பரசச்சீறிமண்விண்ணெங்கனுமூடி அளவற்ற உற்பாதங்களைக்காட்டி மேலிட்டுவருவதைலோகநாயகன்கண்டு திருநகைகொண்டு உலகங்களுக்கச்சாணியாகநிற்கின்ற மேருவுக்கொப்பாகிய தமதுகோதண்டத்தைநாட்டி நாணே

றிட்டுசிறுசகுணத்தொனிகொண்ட தறுவாயிலுண்டாகிய பேரொலியினா
ல்ஆயிரகோடி அண்டநிலைகளும் அல்லோல கல்லோலப்பட்டு நெக்குவி
ட்டும் அதைச்சூழவிருக்கின்ற ஜலப்பெருக்குடனொன்றியிருக்கும்பி
த்திகைகள்நுறுங்கியும் அதைவளைந்திருக்கும் அனற்படிவவண்டங்கள்
பொடிபட்டும் அதைப்போற்றியிருக்கும் வாயுவண்டம் தத்தளித்தும்
அவற்றின்மேற்புறத்தில்விளங்கும் பாவெளியாகியமுதண்டகோளமைம
ங்கவும் யிப்பிறகாரம்வீறியோங்கிய சத்தமானது சிங்கமுகாசூரனுக்கு
தவியாகவீராவேசங்களுடனெதிர்த்த ராட்சதச்சேனைகள்அவர்களைப்போ
ற்றியிருந்த படைத்தலைவர்கள் செவிகளில்நுழைந்தமாத்திரத்திற் றிடுக்
கிட்டுபஞ்சேந்திரிய நிலைகள்கலங்கிக் சரங்கள்நடுநடுங்கி அவற்றிற்பிடி
பட்டிருந்த படைகளை நழுகவிட்டு அதுநிலத்திற் சேருவதன்முன்னம்
குப்புறமறிந்தனர், யிவர்களிப்பாடுபடுமுன்னிலையில் விறிட்டிருந்தம
தயானைக்கூட்டங்கள் சிங்ககெற்சிதத்தைகேட்டதைப்போலவும்சொற்ப
ணத்திற்கண்டதையொத்தும் கதறிக்கொண்டோடி விழுந்தும் புரண்டு
ம்தலைக்குத்தலிட்டுமங்கவும் தத்தித்தாவிப்பாய்ந்து பகைவர்சிரங்களிற்
பாதங்களைவைக்கவல்ல வேகமுள்ள புரவிப்பந்திகள் கதறித்திகைத்து
ரணக்களமெங்கனும் படுக்கிடையாகவிழுந்து சின்னபின்னப் படவும்
செற்காத்தொனியைக்காட்டி யோடும்பொன்னுருளைகள்வாய்ந்ததேரணி
கள் கீழ்மேலாய் ஒன்றின்மீதொன்றுதாக்கிப் பொடிப்பொடியாயுதிரவு
ம்யிவ்விதமாகச்சதுரங்கச்சேனைகளும்அலங்கோலமாய்விழுந்ததுயிந்த
உற்பாதங்களைச்செயசாலியாகிய சிங்கமுகாசூரன் கேட்டுப்பயந்துவுட
னேமனந்தேறிசிரக்கம்பஞ்செய்து யிந்தகுணத்தொனிக்காற்றுமற்பட்
டான்சேனைகளனைத்தும் படியிற்படிந்ததை திஷ்டாந்திரமாகக் கண்ட
னன், யிவ்விதஒலியையாவராலெழுப்பப்படும் ஆதலால்யிந்தவீராதிவீர
ன்சிவகுமாரனாகவேண்டும் யிந்தசிறுவன்வலியை யோசிக்குமிடத்தில்ந
மதுசகோதரன் தாருகனை வெற்றிவேலினாற்பிளந்தானென்பது உண்மை
புன்மையென்று பிறிமித்துப் பேசினவனாய் யித்தகைய வீரபராக்கிரம
சாலியாகிய யிச்சிறுவன்புயவன்மையை நாமே அடக்கவேண்டுமல்லது அ
பலராகியராட்சதப்படைகளினாலும் சேனைத்தலைவர்களினாலும் மாளுவத
ன்றென்றெண்ணி மனோவேகத்தினு மேவிட்டுச்செல்லவல்ல தன்தேரை
முடுக்கிக் கொண்டுவந்து அடியேனுக்கடிகளாக விருக்கின்ற வேலாயுத
பாணியினெதிரில்நிறுத்தி உருத்துப்பார்த்துயிதனைச்சொல்லுவான்திரிநே
த்திரதாரியாகிய பரமசிவமருளியபிள்ளாய் நானொன்றைக் குறித்துக்கா
ட்டுவேன் கியாபகமாகக்கேட்கக்கடவை துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபால
னஞ்செய்வது அகண்டமண்டலாதிபத்தியமாக உலகங்களை ஆண்டுவரும்

சக்கிறவற்திகளுக்கடுத்தநீதியும் முறைமையுமாம் சாஸ்திரங்களினும்யிவ்வா
றேமுறையிடுகின்றது, ஆதலால்பூர்விகமாய் அவுணர்குல பாரம்பரையா
கத்தாயாதிகளென்றெண்ணாமல் அலைத்துக்கொன்றும்யிரக்கமில்லாமல்
அவர்கள்செல்வவளங்களைக் கொள்ளைகொண்டு செயசாலிகளாய் வீறியிரு
ந்தபங்காளிகளாகியதேவர்க்களை அவர்கள்முற்பகல் செய்தபடிக்குத்தெ
ண்டித்துபயமுண்டாகத்தக்கதாகச் சிறையில்வைத்தனம், அவர்களுக்கு
ப்புத்திவந்தபின்பு விடுதலைசெய்யக் காத்திருக்குறேம், மேலும்நாங்க
ளெவ்விதங்களிலாவது வழக்கிட்டுவாதாடி ஒருமித்துப்போவோம் அப்
படிக்கிருக்க நீயவர்களிலொருவனல்லன் மேலும்யிதரமாய்நமக்கிருக்கி
ன்றபகைவர்களிற்சேர்ந்தவனுமன்று நீங்கள்பொதுநிலமையாக விருக்
கப்பட்டவர்கள் சிலகாலம்தேவர்க்கள்மீறி அவுணர்இராக்கதரைவாட்டி
செயப்பிறதாபத்தைப்பெற்றிருப்பதுமுண்டுசிலகாலம்தாங்கள்அவர்க
ளையடக்கிவெற்றிபராய் புலமையாள்வதுமுண்டு யிச்செய்கைகள் சாதார
ணமாகத்தொண்டுதொட்டு வழங்கிவருகின்றது யிக்காரணங்களைச் சற்று
ம்யோசித்துப்பாராமல் அநீதமாய் நீ எங்கள்மீதெதுத்துச்சண்டைக்கு
வரவேண்டிய நிமித்தமென்ன விருக்கின்றதென யிவ்விதமாக பற்பலதி
ஷ்டாந்திரங்களைப்பேசி வினவியபோது அவன்குறித்தவாக்கியங்களனை
த்தையுந்திருச்செவிகளினேற்று அடியருக்கடியராகவிருக்கின்ற நம்போ
லிகளனைவருக்கும் நாயகத்தலைமைபூண்டு பரிவாய் அஞ்ஞான விருளைப்
போக்கிபேரறிவைத்தந்து பாதுகாத்துமேலும் அரியபதவியில்நிலைபெ
றச்செய்யவல்ல பெருமைபொருந்தியபிரணவவடிவாக விளங்கும் பால
சுப்பிறமணியதேவர் திருநகைகொண்டவராய் மறுமொழிகொடுப்பதா
யினர், அவுணர்பெருமானே நீயிப்போதுபேசியகாரணங்களையோசிக்கு
மிடத்தில் வெகுநேத்தியாகவிருக்கின்றது எமதுசெய்கைகளைச்சொல்லக்
கேழ்ப்பையாகயிந்தபிறபஞ்சங்களனைத்திலும்வாசஞ்செய்கின்றதீனரை
த்தருமசாத்திரத்திற்குறித்த நீதிக்கடாமல் வலுமையினாற் றன்பஞ்செ
ய்தலைக்கும் அசந்தையைப் பெற்றிருக்கின்ற கொடியபாதகரை ஆராய்ந்
து அவர்கள்செய்கைகளுக்கடுத்த தெண்டனைகளைமுடித்தடக்கிமன்னுயி
ரைநிலைபெறநாட்டி அண்டங்களனைத்தையும் பாதுகாத்துவரும் யிறை
மையைச்செலுத்திவருவோம் அக்காரணத்தினால்நீங்கள்பரமசிவகடாட்ச
த்தினாற்பெற்றிருக்கின்றவாமுயற்சிகளையும் செல்வச்சம்பத்தையும்புயவ
ன்மையையும் நீடித்ததாக நினைந்திருக்கின்ற மதாங்காரத்தினால் முன்பி
ன்யோசித்துப்பாராமல் தாயாதிகளென்றும் யெளியரொன்றும் சிவபிரா
னிடத்தில்மெய்ப்பத்தி மான்மியங்களைப்பெற்றவரொன்றும் கொலைகள
வுகட்காமமாதியகுற்றங்களுக்குப் பயந்தவரொன்றும்சற்றுமிரக்கமில்லா

மற்செய்யத்தகாத பணிவிடைகளைக்கொண்டு பலதுன்பங்களைச் செய்த
லைத்துமானபங்கப்படுத்தவும் நினைந்ததுமல்லாமல் அவர்கள்வாசமாயி
ருந்தசிறப்புள்ளபொன்னுலகைக்கொளுத்தி நாசப்படுத்திப் பெண்டுபி
ள்ளைகளுடன் கட்டிவந்து அரியசிறையில் பலகாலம்வைத் தலைக்கின்றப
கைவனைவாட்டி விண்ணவர்படுந்துன்பங்களைப்போக்கி பழையபடிக்க
வர்கள் சுதந்தரமாகிய தெய்வலோகவாழ்வில் நிலைபெற ஸ்தாபிதஞ் செ
ய்யும்பொருட்டு திருக்கயிலையைக்கடந்து பூலோகத்துக்குவந்தனமாத
லால் அக்கருத்தைநிறைவேற்றும்பொருட்டு உத்தேசித்தபோதினும்தரு
மத்தைப்பாராட்டித் தூதின்மூலமாக யிதுதகாது தேவர்களை விடுதலை
செய்து சுகசீவியாகவாழக்கடவையெனத் தெரிவித்ததைமறுத்தபடியால்
சண்டைகொடுத்து விடுதலைசெய்ய நினைந்துவந்ததன்றியில் உங்களிடத்
திற்பகைகொள்வதற்கு மற்றொருகாரணமொன்றுமில்லையிக்காலத்திலு
ந்தேவரைவிடுவீராகில்யிதுபரியந்தம் நீங்கள்செய்திருந்த கொடுமைக
ளைப்பாராட்டாமல் திரும்பிவிடக்கடவோமென்று எமதிறைவன் திருவு
ளம்பற்றியவாக்கியங்களைச் சிங்கமுகன்கேட்டவுடன் கோடையிடிகளை
ப்போலக்கரங்களைத்தட்டி அண்டங்களதிர திரோகங்குலுங்க நகைத்து
வடவைக்கனலுமஞ்சும்படிக்குக்கோபித்து சண்முகப்பெருமானைப்பா
த்துகெலிப்புடனிதனைச்சொல்லுவான் பாலனே நீ பேசியபடிக்குநம்ம
னைவரையும்வென்றனை தேவர்கள்சிறையும்யித்தினமே நீங்கி விண்ணுல
கைச்சேர்ந்தனர், அவர்களை நீயும்விடுவித்தனை நாமும் வலியற்றவர்களா
னோம்உன்னெண்ணமும் செய்யும்முயற்சியும் வெகுநேத்திநேததி சூர
த்துவமென்பது உன்னிடத்திற்றான் விளங்குகின்றது யிக்காரணங்களை
ச்சகலரும் உண்மையாகவேநம்புவர். இந்திரகுமாரனையும்மற்றவிண்ண
வரையும் துக்கசாகரத்திலழுந்த பாரவிலங்குபூட்டி வைத்திருக்கின்றகா
வலைநீக்குவதற்குச் சந்திரசடாமண்டலதாரியாகிய பரமசிவத்தினாலிதுவ
லாயில்முடியாதிருக்குதெனச் சகலரும்வழங்கிக்கொள்ளுவாராயின்பால
னாகிய உன்னொருவனால் நிறைவேற்றவல்லையோ மேலும்திரிநேத்திர தா
ரியாகியகடவுள் நிருமித்து உனக்குதவியாகக் கொடுத்திருக்கின்ற வேலா
யுதத்தின்வலியை யொருபிறையோசனமாகமதிக்கமாட்டேன் மன்னுயி
ரைக்கொண்டு போகவல்ல எமனையொத்ததாருகவீரன் உன்னைஎவ்வளவு
ஞ்சட்டைபண்ணாமற் போர்செய்துவரு முன்னிலையில் அவனைவஞ்சனை
செய்துகொன்றனை அல்லது நீயவனைவெல்லுந்திறம் பெற்றனையோ அப்
படியேபிராணனை தப்பித்துக்கொண்டோடிப்போ யிருப்பையாகில் யி
ன்னமுஞ்சிலகாலம் உயிர்பெற்றுவாழயிருப்பை அதைமறந்து யிவடத்
தில்நீவந்ததையோசிக்குமிடத்தில் உன்செய்கையினால்முடிந்ததன்றாஎங்

கள்நல்வினையும் உன்விதியும் பிடரியைப்பிடித்துத் தள்ளிக்கொண்டுவ
ந்துவிட்டது கடப்பமாலையணிந்திருக்கின்ற பாலசுப்பிரமணியனேயி
தனக்கேழ்ப்பையாக சத்திவேலைத்தாங்கியிருக்கின்ற உன்சேவகத்திறங்
களனைத்தினையும் பூர்த்தியாகத்தெரிந்துக்கொண்டனம் பற்வதாகிருதியா
கியபுசங்களைப்பெற்றிருந்ததாருகனைப்போலவே யிளைப்பனென்றொரு
போதும் நினைக்கவேண்டாம் யினிதுரிதமாய்ச்சண்டைசெய்ய எத்தனப்
படக்கடவை மேலும்உனக்கும்பிராணபதமாய் வலதுபுசத்தைப்போல
உதவியாகவிருந்த வீரபராக்கிரமசாலியாகிய தாருகனும்படைவீரரும்பா
ரிபூதவெள்ளங்களும் ஆயிரங்கிரணசமோகங்களைப் படைத்திருக்கின்ற
சூரியனெழுந்தருளும் உதையகிரியிற்சேர்ந்திருக்கின்றனர், மற்றபாரிபூ
தப்படைகளும் அவர்களுக்குத் தலைமைபூண்டிருந்த வீரரும் உன்விழிக
ள்காண நமதுவயத்திற்பட்டு உதாவங்கிக்கினையாய்மாண்டனர், யிக்கா
லத்திற்சகலரையும்பறிகொடுத்து நீ மாத்திரம் தனிமையில்நிற்கின்றனை
யிக்காரணங்களனைத்தையுந் திஷ்டாந்திரமாகப்பார்த்திருந்தும் யின்னமு
ஞ்சண்டைகொடுக்க வல்லேனென்றெண்ணித் துணிந்திருக்கின்ற உன்தை
ரியத்துக்குமாத்திரம் மெச்சினேன் மகரந்தங்களையிறைத்துத் தேனை
த்துளித்திருக்கின்ற பஞ்சதாருக்களினது நிழலில்வாசஞ் செய்திருந்தவி
ந்திரதனையனாகிய சயந்தனாதியாகிய தேவர்க்கள் சிறையைநீக்கிரட்சிக்க
வெண்ணங்கொண்டுவந்தநீயே மனதுக்கினியதுணைவரையும் வீரபராக்
கிறமசாலிகளாகிய சேனைத்தலைவர்களையும் கணக்கிறந்த பூதசயின்னியங்
களையும் விருதாவாய்சிலபோதிலிழந்து தனிமையிலிருக்கின்றனையிவைய
ன்றியில் வேறுமென்னவப்பிருப்பத்தியைப் பெறப்போறாய் நீசவுரி
யபாலுதலா யித்தகைய அரியபேறுடையனானாய் யின்னமுஞ்சில சேதிக
ளைத்தெரிவிப்போம் அதைக்கேட்டு தீர்க்காலோசனைசெய்து பிழைக்கக்
கடவை, அஃதென்னையெனில் யிதுபரியந்தம்என்னுடனெதுத்துப்போ
ர்செய்தவர்களில் மாண்டதல்லது பிழைத்தவர்களுமுண்டோ அல்லதுஅ
வர்களைகணிக்கத்தான்முடியுமோ மேலும் பின்னப்பட்டு சகலசெல்வ
ஙங்களையும் சேனைத்திறங்களையும்பறிகொடுத்து புறந்தந்தோடினவர்க
ளையுமெண்ணியபவதோ நீ பாலனுதலால் யித்தகைய செயங்களைப்பெற்
றவிராதிவீரனென்றயாவராவது சொல்லக்கேழ்விப்பட்டதுமில்லைபோ
ர்காணுகின்றது வீணில்வருந்திசண்டையைசகுறித்துயிவ்வளவுதூரம்வ
ந்தனை யினிபலபலபேசியாவதென்னை தேவர்க்கள்சிறையைவிடுதலைசெய்
வோமென்பதைக்கனவிலும் நினைக்கவேண்டாம் யிக்காரணகாரியங்களை
ச்செவ்வையாய்நிதானித்துத் திரும்பி தாய்தந்தையருக்குப் பிள்ளையாய்
பிழைக்கக்கடவை யித்திறங்களைமாறிமாறிச் சொல்லவேண்டுவதென்னை

யெனில் நம்மிடத்தில்அதிகபிரியமுள்ள சிவபிரானுக்குப் பிள்ளையாதலா
லும்சிறுபருவத்தைப்பெற்றிருப்பதாலும் தெரியாமைபாயிந்தஅரியகா
ரியத்தைமுடிக்கவந்தனையென்னும் நீதியைப்பார்த்து பரிவாய்ச்சொன்
னதல்லது வேறல்லவென்று சிங்கமுகன்பயமுறுத்திப்பேசிய வாசகங்க
ளனைத்தையும் பன்னிருபுயாசலங்களைப்படைத்திருக்கின்றசரவணபவன்
கேட்டவுடன் யிவன்கொண்டிருக்கின்றஉறுதி வெகுநேர்த்தியெனநகைத்
துநல்லகாரியம் அவுணாசனே நமது குழந்தைபருவத்தின்திறங்களைச்
சற்றுநேரத்திற் காட்டுவோமென்று தமதுகரத்தில்விளங்கும் பரமசிவ
மளித்த தெய்வீகமாகியசாண்டபத்தில் ஒருவயிரவாளியை யெடுத்துப்பூ
ட்டிபிரயோகித்தனர், அச்சிறந்தபாணமானது வெளிப்பட்டவுடன்அ
திகமகிமைகளைக்காட்டிவேகமாயோடிவந்து வயிரமலையையொத்தபாத
கன்மார்பிற்றாக்கித்தடாரித் துருவித்துளைத்து முதுகின் மூலமாயோடி
யது, யிவ்விதமாகஎமதையன்சரமானது அருவிகள்பெருகும்பர்வதத்திற்
பூழைகாட்டுமாறுபோலச் சிங்கமுகன்விசாலமானமார்பைப் பெருவா
யலைப்போலத்துறந்து வெளிப்பட்ட தறுவாயில் அம்மூலமாய் அருவி
யையொப்பச்செந்நீர்பாய மிகவும்வருந்தித் திகைத்துநின்றனன், அந்
தசெயத்தைக் கண்டதேவர்க்கள் சந்தோஷசாகரத்தி லழுந்தினவர்களாய்
கரங்களைக்கொட்டிக்கொட்டி திரேகங்குலுங்கக்குலுங்கநகைத்தனர், பி
ப்பிறகாரம் பெலத்துவாரத்தைப்போல வெளிப்படையாக மார்புபிளந்
தமூலமாய்வெளிச்சந்தோற்றியதறுவாயில் பாதகன்கெர்ப்பத்திற் சஞ்சரி
த்திருந்தபூதப்படைகளனைத்தும் கார்காலத்திற்புற்றினிடத்தெழும் ஈச
ல்களைப்போல அவ்வழியாகபலபலவென வெளிவந்து கடலுமஞ்ச வாரத்
துரணக்களவெல்லமுற்றும் பழையபடிக்குப் பரவிவருவதைச்சிங்கமு
கன்பார்த்தமாத்திரத்தில் மனம்வருந்தி நாகத்தைப்போலச்சீறி வலியகா
ங்களைக்கொண்டுஅத்துவாரத்தைமூடிக்கொண்டவனாய் தட்சிணத்திலொ
ருபாரித்த தண்டாயுதத்தையெடுத்து கிறுகிறெனச் சுழற்றி கந்தசுவாமி
பேரில்வீசியபோது மணிகள்சத்திக்கஅண்டங்கள்வெடித்ததுக்கொப்பா
கயிலாச்சவிட்டுக்கொண்டு வாயுவேகத்தினுங்கடுகி மேவிட்டுவருவதைத்
தமக்கொப்புவமையற்ற கந்தன்கண்டு நான்குகூரிய சிலீமுகங்களைப்பி
ரயோகித்தனர், அவைகள்தீயையிறைத்து பிறசண்டவாயுவுக்குமேலா
னஆரவாரங்களைக்காட்டிப்போய்தண்டைப் பொடிப்பொடியாகநறுக்
கியதுமன்றியில்வேகமாசப்பாய்ந்துசிங்கமுகன் நெற்றிகளிற்றாக்கியுரு
வியோடியது அக்காயத்தின்மூலமாகஉதிரம்பெருக்கெடுத்தோட மனச்
செருக்கற்று வலிகுன்றி உணர்வைவிளக்கும் அறிவுமயங்கிச் செங்கோ
லநடாத்தும் நீதிபரனுகியராசன் அரசாட்சியைச் செலுத்துவதற்குச்சில

யிடையூறுநேர்ந்ததறுவாயில்வருந்தும்உலகத்தைப்போலவாடி பிற்மித்
துநின்றலன், அக்காலத்திற்கோட்டைவாயலைபொளப்ப வெளிப்பட்டுஉதி
ரத்தைப்பெருக்கியிருந்த மார்பைமூடிய கரங்களானவை பரமசிவகடா
ட்சம்பெற்றகாலத்திற் றலையும்மாயையைநிகர்த்துச்சோர்ந்து தாழ்ந்த
முன்னிலையில் பஞ்சரத்தி லடைபட்டிருந்த பறவைகள் அதைக்கடந்து
பறப்பனதைப்போல அத்துவாரமாத்திரமாய்பூதவீரரனைவரும்வெளிவந்து
அதிககெலிப்புடன்சுப்பிரமணியதேவரைச்சூழ்ந்துகொண்டுதிசைசெ
விடுபடத்தக்கதாகச்செயவுச்சாகங்களைக்கொண்டாடிஆர்ப்பரித்தனர்சிங்
கமுகனுதாவங்கியிற்பட்டுமாண்டபூதருந்திசைகள்தோறுமெறியப்பட்
டவர்களும்ரணக்களத்தில்மாய்ந்தவர்களும் மறணமூர்ச்சையடைந்து க
ளத்திருந்தவர்களும் சண்முகப்பெருமாள்கடாட்ச வீட்சணியத்தின்மகி
மையினால்உயிர்பெற்றும்மூர்ச்சைதெளிந்தும்வலியராயுமெழுந்து கெக்
கலிகொட்டிக்கொண்டுவந்துசரவணபவனைத்தெரிசித்துப்போற்றிக்களி
த்திருக்குமுன்னிலையில் பாலசுப்பிரமணியதேவர் உதையகிரியினிடத்தி
ருக்கின்றதமது துணைவர் இலக்கர்படைவீரர்பூதச்சேனைகளையும் நருவிப்
பதாசத்திருவுளத்திலெண்ணிதட்சணத்திற் றெய்வத்தன்மைபொருந்திய
ஒருசரத்தைதயெடுத்துவில்லிற்பூட்டிநம்மவர்களனைவரையுந் துரிதமாகக்
கொண்டுவரக் கடவையெனப்பணித்துச் செலுத்தியகாலத்திற் சூரியகா
ந்தியினுமேலான கிரணங்களைப்பரப்பிவாயுவேகத்தினும் மனோவேகத்தி
னுமேலிட்டுச் சமுத்திரங்களைக்கடந்து சூரியபகவா னெழுந்தருளும்சி
றப்பினைவாய்ந்த பொன்னிறம்பெற்ற உதையகிரியைச்சேர்ந்து வீரவா
குதேவர் முதலானவர்களைச்சேர்த்துப் பந்தித்துவைத்திருந்த பாசப்பி
ணிப்பைநெருப்பிற்பட்ட பஞ்சைப்போலத் துகள்படவாட்டியபதறுவா
யில் கந்தசுவாமியார்கிருபாகடாட்சப் பெருக்கினால் நித்திரைதெளிந்தவ
ர்களைப்போல வீரனுநியமொழுந்து அஞ்ஞான விருளிற்பட் டலைந்திருந்
தபிராணிகள் சிவகடாட்சத்தினாற் போதவுணர்வைப்பெற்ற தறுவாயிற்க
ளித்திருப்பவரைப்போல மனவெழுச்சி பெற்றவர்களாய்ப் பரமசிவன்ம
னதுக்கினிய திருக்குமாரன் திருநாமங்களைச்சிந்தித்துப்போற்றி அத்தி
சையைநோக்கி தீர்கதெண்டன்சமர்ப்பித்துச் சந்தோஷ மிகுதியினால்அ
ண்டங்காதிரசெயசெயவெனஆர்ப்பரித்துக்களித்தனர், யிவ்விதமாகச்ச
கலரும்உயிர்பெற்றெழுந்ததறுவாயில்சண்முகதேவர்செலுத்தியமகத்து
வமுள்ளபடையானதுபிரமன்நிருமித்து சூரபதுமனுக்குக்கடாட்சித்தி
ருக்கின்றபுஷ்பகவிமானத்தைப்போலஅகலநீளமுள்ளதாகவிளங்கிவீர
வாகுதேவர்படைவீரர்பூதச்சேனைகளனைவரையுந்தாங்கியெழுந்து வான
வழிக்கொண்டுஉதையகிரியைக்கடந்துசமுத்திரங்களைத்தாவிவாயுவேகத்

## ௩௫௨ சிங்கமுகாசுரன்வதைப்படலம்.

திணுமேவிட்டுவந்து சமாவெல்லையிலெழுந்தருளியிருக்கின்ற சண்முகப்
பெருமாள்சன்னிதானத்திலிறக்கி பழையபடிக்குத்தன்னுருக்கொண்டு அ
ம்புருத்தாணிரத்திலடங்கியது அந்தறுவாயில் இளையபெருமாள் இலக்கர்
எண்மர் பூதவீரரனைவருங் கற்தனை தெரிசித்தமாத்திரத்திற் பிறவிமுதற்
கொடியவறுமையை அனுபவித்திருந்தவர்கள்பரமசிவகடாட்சத்தினாற்றி
ரண்டசெல்வப்பெருக்கைப்பெற்றகாலத்திற்கிடைக்கும்பேரானந்தத்தை
ப்போலதிருமுக மண்டலங்கள் தாமரைபுஷ்பங்களையொப்பவிளங்க ம
னங்களித்துத்திரேகம்பூரிக்கத் திருவடிகளில் வணங்கியெழுந்து வாயார
ப்போற்றி கரங்களைக்கூட்டிநிற்கின்ற வீரகெண்டா மணிதரித்த வீரவா
குதேவரிடத்தில் எள்ளினெண்ணெயைப் போலவும் மணியினொளிக்கொ
ப்பாகவும் சராசரப்பிரபஞ்சங்களனைத்தினும் பரிபூரணமாகவிளங்கிநடி
ப்பிக்கும் பெருமையினைவாய்ந்த பாலசுப்பிரமணியக்கடவுள் கிருபா
நோக்கம்பாலித்து ராட்சதப் பாதகன்வீசிய மாயவலைக்குள்ளா யறிவழி
ந்து மிகவும்வருந்தி உதையகிரியிற்சேர்ந்து வாடிநீர்களோவெனப்பரிவா
ய்திருவுளம்பற்றினர், அவ்வாக்கியங்களைச் செவிகளுக்கமுதாகக்கேட்டு
ச்சரீரம்பூரித்து விழிகளிலானந்தவாரிபெருக யிதனை விண்ணப்பஞ்செ
ய்வதாயினர், கற்தனேதேவரீர்பரிபூறணகடாட்சம் அடியோங்களிடத்தி
ற்பூர்த்தியாகவிருக்கின்றகாலத்தில் நாங்களுணர்வழிந்துவாடினும்பிரா
ணனைப்போக்கி நரகவேதனையிற்பட்டுவருந்தினும் வெவ்வியதுக்கசாக
ரத்திற்பட்டு நிலைபெறுதலையினும் பற்பலபிறவிகளி லுதித்துச்சோரினு
ம்பாசபெந்தங்களிற்கட்டுண்டு கிலேசக்கினும் அவையனைத்தும்சூரியன்
முன்பனியைப்போல நாசப்பட்டு பவுத்திராய் தமக்கடித்தொண்டு
களைச்செய்திருப்பதற்குத் தாழ்வுண்டோவெனப் பலவாகத்துதிக்கின்ற
தறுவாயில்நான்குவேதங்களினாற் றேடிக்காணவொண்ணாத ஓங்காரப்பொ
ருளாய் பரவெளியில்நின்று ஆனந்தநடனங்களைச்செய்பவல்லபகவன்அ
வர்களிடத்தன்பாய் பேரருளைக்கடாட்சித்தனர், அத்தறுவாயின் அவடத்
திலிருந்த மகாவிஷ்ணு-பிற்மதேவன்- இந்திரன்முதலிய தேவர்கசளும்
வீரவாகுதேவர்முதலானவர்களைச் சூழ்ந்துகொண்டு பற்பலமுகமன்புக
ளைச்சொல்லிப்புகழ்ந்து கற்தன்கடாட்ச வீட்சணியப் பெருமைகளுக்க
திசெயித்துவாழ்த்தினர், யிவ்விதமாகச்சகலரும் பேரானந்தவாரியில்மூ
ழ்கியிருக்கின்றதறுவாயில் முன்னங்குமாரதேவர்காட்டிய நாணொலியி
ன்சத்தத்துக்காற்றாமல் மரணமூற்சையடைந்திருந்த ராட்சதப்பாதகர
னைவரும் கற்தன் தமதன்பரிடத்திற் பாலித்த கிருபாநோக்கும் தங்க
ள்மீதினுந் தாக்கியமுயற்சியினாற் களைதெளிந்துணர்ச்சிபெற்றெழுந்
து பெரும்புறக்கடலைப்போலஆர்ப்பரித்தெழுந்தவர்களாய் றவுதிராகா

ரமாகப்பொங்கி யிந்தபாலல்சூனைத்தொனியினாற் செயசாலிகளாகியயெ
ங்களையிவ்வாறலைப்பதோவென்று மானம்பாரிகக ராட்சதச்சேனைகளும்
படைத்தலைவர்களும்வேகமாய் வடவைக்கனலைப்போலப்பொங்கி விழி
களிற்றீப்பொறிகள்சிதறக்கோபித்துப்புருவம்நெற்றியிலேறவும்கிரோத
முற்றும்வியர்த்துமீசைதுடிக்கவும்விஷநாகங்களுக்கொப்பாகச்சீறிச்சத்
தசாகரங்களும் பெருக்கெடுத்ததைப்போலப்பரந்துஅண்டங்களனைத்
தும்வெடித்ததற்கொப்பாக ஆர்ப்பரித்துச் சர்வசங்காரகாலத்திற்சராச
ரப்பிரபஞ்சங்களனைத்தையுந் தமதுநுதல்விழிக்கனலினா லொடுக்கி ஏக
னாய்ப்பரவெளியில்நடித்தலவும் ஆதிதேவன் திருக்குமாரனை வளைந்து
கொண்டு சூரியனைமூடியபனிப்படலத்தைப்போலக்கவிந்து பாரித்தத
னுசுகளைவட்டாகாரமாகவிறுக்கிச் சகலருந்திடுக்கிடத்தக்கதாக நாணொலி
கொண்டு அர்த்தச்சந்திரபாணங்கள் விஷத்தொவையவிட்டிருக்கின்றசிலீ
முகங்கள்கொடியநாராசங்கள் அனலைவீசும் சரங்களைச்சோனைப்பெய்ய
லையொப்பப்பொழிந்தும்தண்டாயுதங்களைக் கொண்டுமோதியும்சக்கர
ங்களைக்கரகொனைச்சுழற்றிவீசியும் சூலங்களைக்கடாவியும் தோமரங்களை
யெறிந்தும் யிவ்விதமாகக்கொடியபோராட்டங்களைச்செய்துவருவதை
ச்சிவபிரான்நெற்றிவிழிகளிற்றோற்றியகுமாரதேவர்கண்டுதிருநகைகொ
ண்டு தமதுவில்லிற்சணைக்கிறந்ததிவ்வியபாணங்களைச் சந்தித்துப்பிறை
யோசித்தனர், அவற்றின்மகிமைக ளெப்படிக்கொத்ததெனிற்சிலதுஅன
ற்யடிவமாய்த் தீயையிறைத்தோடவும் சிலதுஆலகாலவிஷத்தையொப்ப
மண்டியெரிந்துதகித்தும் சிலதுகாடாந்தகாரமாகமூடி பகைவர்திசை
தெரியாமலலைத்தும் சிலதுகாலாந்தகனை நிகர்த்துச்சீறிப்பாய்ந்தும் சில
துஅனலைக்கக்கிக் கொடியசர்ப்பத்தைப்போல உரறிக்கொண்டுதாவவும்
சிலதுசூரியகிரணங்களுக்குச் சமதையாக சொலித்துமேலிடவும் சிலது
மின்னலைப்பரப்பிக்கொண்டோடவும் சிலதுகோடையிடிகளைப்பெருக்
கியுலவவும் சிலது பொன்னிறம்பெற்ற சக்கிறத்துகளுக்குச் சமதையாகச்சு
ழன்றுசுழன்று பலகொடுமைகளைக்காட்டவும் சிலது வச்சிராயுதங்களைப்
போலத்தாக்கவும் சிலதுயிந்திரதனுசுக்கொப்பாக பற்பலபாணசமோக
ங்களைப்பெருக்கி அதாஅதஞ்செய்யவும் சிலது சூலங்களுக்கொப்பாகத்
தடாரித்துப்பாய்ந்தும் சிலதுபிறசண்டவாயுவைப்போல வேகங்கொண்
டோயவும் சிலதுசூறுவளிக்காற்றுக்கொப்பாகயெதிர்ந்தவைகளனைத்தை
யும்புரட்டிக்கொண்டோடவும் சிலது வாளாயுதங்களைப்போலச் சங்கரி
த்துத்திரியவும் சிலதுபாரித்ததண்டாயுதங்களாய்வாட்டவும் சிலதுவேலை
நிகர்த்துதம்சஞ்செய்யவும் சிலதுசிங்கம்புலியாதிய கொடியமிருகங்க
ளுக்கொப்பாகக்கெர்சித்துக்கொன்றும் யிப்படிச்சுப்பரந்துஅல்லோ

லைகல்லோலப்படுத்தும்இவ்வியபாணகோடிகளிற்சிலதுபாதகனாவாட்டி
நன்னெறிகளைப்பெற்றிருக்கின்ற சிவகணங்களுக்கிடையூறுகளைச்செய்
யாமற்றருமபரிபாலனஞ்செய்வதாற் சிருஷ்டி கற்தனாகிய பிரமனைக்கொ
ட்டாத்தோற்றவும் சிலதுஅண்டபுவனசராசரங்களுக்கு உபத்திரவமில்
லாமற்பாதுகாத்துத்திரியுந் தன்மையினாற் றிதிகற்தனாகிய மகாவிஷ்ணு
வைப்போலக்காட்டவும் சிலதுமன்னுயிரைவாட்டிவருகின்றகொடியம
காபாதகராகிய அவுணர்-இராக்கதராதியரைவரையறநாசஞ்செய்யுந் தன்
மையினால் சர்வசங்காரகிர்த்தியத்துக்குக்கற்தனாகிய உருத்திரமூர்த்திக்கு
ச்சமதையாக எத்தலங்களினுங் காட்டித்திரியவும் வாயுவேகத்தினுங்கடு
கிஉலகங்களெவ்விடங்களினுந்திரிந்து கொடியபார்வையைச்செலுத்திம
ன்னுயிரைக்கொண்டுபோகும்எமதருமராசனுக்கொப்பாக அவுணப்பா
தகரைவாட்டியும் மனோவேகத்தினும்முந்திப்பாய்ந்தும்இவ்விதங்களா
கக்கொடிய வெப்பத்தினைவாய்ந்த வடவாமுகாக்கினியானது பற்பலவ
டிவுகொண்டெடுத்தபோதினும்சீறி அவற்றின்கடுமையை மாற்றவல்ல
மகிமையைப்படைத்தபாணகோடிகளின்சவுரியபராக்கிரமங்களைச்சொ
ல்லிமுடிவதோ சவுனகாதிரிஷிகளே குமாரதேவர் தமதொப்பற்றகாண்
டபத்தில் ஒருபாணத்தைப்பூட்டிப் பிரயோகித்தகாலத்தில் வெளிப்ப
ட்டவுடன் கோடியாகப்பெருத்தும் உடனேகோடாகோடியாகப்பரந்
துபகைவரைவாட்டுமாயின் அவற்றின்கணிதத்தையும்பேசப்படாது,பி
லையன்றியும் அப்படைகளோடும்வேகத்திற்பட்ட சத்தமேகங்களுடல
முற்றும்பீறுண்டு செலத்தைப்பெருக்கி யிடிமின்னல்களைக் கொட்டிப்
பறக்கவும் எழுகடல்நீரைச்சுவற்றிக்கொதிப்படக்கியும் சூரியபகவானே
றிப்போகும் ரதமானது சரிந்துநடக்கக்கூடாமையால் கெதிதப்பிமரு
ளவும் வடவானலவெப்பமடங்கி தத்தளிக்கவும் தேவர் நகரங்கள்பொடி
பட்டும் பொன்னிறம்பெற்ற மேருகிரிசெலத்தைப்போல உருகிப்பாய
வும்விசாலமாகியபூமண்டலமுற்றும் வெடித்துக்காட்டவும் குவாசலங்
கள்நறுங்கியிறைந்தும இஃதன்றியில் ஞானநாயகனாகிய முருகப்பெரு
மான்சரவேகமாகத் தாண்டும் சரவருஷங்கள் ஆயிரகோடி அண்டநிரை
கடோறுமுருவியோடியும் வேகமடங்காமற் பாயுமெனச்சொல்லுவோர்
மாகில்மேற்குறித்தபடிக்கு மகம்மேரு முதலியவற்றை நாசஞ்செய்த
தெனப்பேசியது அவ்வாளிகளுக்கொருசிறப்போ யிவ்விதமாகபாணவ
கைகளெங்குமடர்ந்து அதாஅதப்படுத்தி வருகின்றதருவாயிற் சிங்கமு
காசுரனுக்குதவியாகவந்த ராட்சதப்படைகள் விருப்படங்கித் தியங்கி
க்கைகாலாடாமற்சிரங்களற்றும்-தோள்கள்சரிந்தும்-மார்புகிழிந்தும்-
தலைகள்முறிந்தும்-கண்டதுண்டப்பட்டும்-சல்லடைக்கண்களாகத்

லையுண்டுமாளவும் பற்வதங்கள் கால்முளைத் தசைவதைப்போன்ற பரு
த்ததிரேகத்தைப் படைத்திருக்கின்ற மதயானைக்கூட்டங்கள்சின்னபின்
னப்பட்டுச்களமெங்கனுநிறைந்தும் அலைகளைப்போலத்தாவி வாயுவினு
ங்கடுகிச்செல்லும் புரவிப்பந்திகள் பலதுண்டங்களாக வெட்டுண்டுமா
ளவும் வானத்தையளாவநின்றசொற்ணமயமாகிய -தேர்நிரைகள்-வண்டி
ல்-அச்சுமச்சு-குத்துக்கால்,கொடுஞ்சைமுதலிய உறுப்புகள்சிதைபட்டும
ங்கவும் யிவ்விதமாகச்சதுரங்கச்சேனைப்பெருக்கானது அதப்பட்டுஒன்
றின்மீதொன்று விழுந்துகலந்து ரணபூமியெல்லையில்விழுந்து கிடப்ப
தெப்படிக்கிருப்பதெனில், சற்வசங்காரகாலத்திற் செலப்பிரளயமோங்
கிஅண்டவணிகளைவாட்டி ஒன்றுபடுத்துவதற்கொப்பாகவிருந்தது எம
துகற்தன் செலுத்தும்வாளிகள் பாயுமிடங்கள் தோர்றுமமற் தேவரும்ம
யங்கிஅற்புதசித்தராய் மிமிர்த்துப்பார்த்துக்களைத்திருந்தனர், சவுனகா
திதவத்தரோ யிஃதொருவியப்போ ஒவ்வொருவாளிகள் அளவற்ற சிரங்க
ளைக்கண்டித்துக்கொண்டு அண்டநிரைகளனைத்தையுந்தாண்டிபெருவெ
ளியிலிறைத்தும் பகைவர்களேபராங்களைவாரியோடிஅண்டங்களில் நிரப்
பிஅவற்றினின்றுபாயும் உதிரப்பெருக்கினாற்சோரியண்டங்களாக்குவத
ன்றியிற்சரவணபவன்விடும் சிலீமுகங்கள் பாயுந்தோறும் அவுணப்பாத
கனைச்சின்னபின்னமாகக்கண்டித்தும் யானைகளை துதிக்கைகால்களை வெ
ட்டியெறிந்துமுண்டமாக்கியும் குதிரைகளை பின்னப்படுத்தியும் தேர்க
ளைச்சக்கைச்சக்கையாகப் பேத்துக்குவித்தும் அவற்றினைப்புவனங்களெ
ங்கனும்நிறைத்ததன்மையைப் பார்க்குமிடத்தில் மடப்பள்ளியைப்போ
லக்காட்டவும் யிவ்விதங்களாகக்கணைகள்வீறி சமுத்திரத்துக் கொப்பாக
யினைச்சலிட்டு ரணக்களமெங்கனும்பரந்திருந்த நால்வகைச்சேனைகளை
அதப்படுத்தியகாரணங்களைப் பெரிதாக நினைக்கவேண்டுவதில்லை ஆயிர
கோடிஅண்டங்களினும் மன்னுயிரையலைத்து வாட்டியிருந்த கொடிய
பாதகனைவரையும்வேரறக்களைந்ததுரிஷ்சளேலோசநாயகன் படைகளி
ன்மகத்துவங்களை என்னென்றுசொல்லுவேன் தம்மை மெய்ப்பத்தியி
னால் வழிபடுகின்றவர்களையும் வணங்கப்பெற்றவர்களையும் தமதுபெரு
மைகளைப்புகழத்தக்கமகுத்துக்களையும் தமதுதிருவடிகளைத்தஞ்சமடை
ந்திருக்கின்றஅடியவரையும் தமதுவேஷமங்களைக்கோறியிருக்கின்றதே
வரினங்களையும் யாதொருதீங்குகளையுஞ்செய்யாமற் குளிர்ந்ததடாகத்தி
ல்நிற்பதைப்போலத் தண்மையைக்காட்டிப் பாதுகாத்தலவுகின்றகார
ணத்தினால் தாமரைமலரையொப்ப அகமுகமலர்ச்சிகொண்டு கற்தன்கு
றுதிசெயங்களையெண்ணியெண்ணி அண்டங்களதிரப்போற்றிக்களித்த
னர், அக்காலத்திற்சமரபூமிவிளங்கியஅலங்கோலத்தினையென்சொல்வே

## ௩. ஸ்ரீ சிங்கமுகாசுரன்வதைப்படலம்.

ன்பிணமலைகளெங்கனு மேலோங்கிக்குவியவும் குறைத்தலைமுண்டங்க
ள்அனந்தகோடி கூத்தாடவும் உதிரப்பெருக்கானது சமுத்திரத்தைப்
போலத்தேங்கிட்டுசுழித்துக்கொண்டோடவும் நிணங்கள்வெண்ணையை
ப்போலக்குவிந்துசாட்டவும் மூளைகள்சேற்றுக்கொப்பாகவழுக்கவும்அ
வற்றினைவெறுக்கவுண்டு உதிரபானஞ்செய்த வெறியினால் பூதபசாசங்
களொருபுறத்திற்களியாடல்களைச்செய்யவும் ரணபத்திரகாளிதன்கூட்ட
த்துடன்பவனிவரவும் நாய்நரிகள் ஊளமிட்டுக்கொண்டு அங்குமிங்குமு
லைவிவாதாடிநிற்கவுங் கழுகு - பரந்து - காக்கை-யினங்களிரந்துவானத்
தில்வட்டமிட்டுலவவும் யிவ்விதமாக ரதகெசதுரகபதாதிகளைத்தம்ர
ணபூமிக்கிரையாய் மாண்டகாலத்தில் மண்விண்ணெங்கும் திரோகத்தை
ப்பரப்பிவாதாடியபாலசுப்பிரமணியதேவர்தாண்டிய திவ்வியபாணகோ
டிகளினால் களைத்துநின்ற சிங்கமுகாசுரனுக்கு உணர்வுதோன்றி விழிக
ளைப்பரப்பிப்பார்த்து தனக்குதவியாகவந்தநாற்படைகளும் நாசப்பட்
டொன்றேனுங்காணக்கிடையாமற்றிகைத்து பாலன் சேவகத்திறத்தினால
வாட்டினனென்றறிந்து மானமுங்கோபமும்மனதைவாட்டத்திரோகமெ
ங்கும்வியர்க்க வடவைக்கனலைப்போலக்கொதித்து மந்தரத்துக்கொப்
பாகியதனுசுகளாயிரவற்றையும்பிகிந்து அகண்டமண்டலாதீஸ்பரனாகிய
சூரபதுமனுக்கன்றியிற் சிரங்களைவளையாத புசபெலபராக்கிரமசாலியா
கிய சிங்கமுகன்துரிதமாய் பத்துநாறாயிரம் சுடுசரங்களை யெடுத்துப்பூ
ட்டிக்கரவேகமாய் குமாரதேவர்மீதினும் பூதவெள்ளங்களைக்குறித்தும்
பிறையோகித்து சிங்கத்துக்கொப்பாக கெற்சித்ததறுவாயில் அப்படை
கள்திசையிறைத்து விஷங்களைக்கக்கிபற்பலகொடுமைகளைக் காட்டிவரு
ம்வேகத்தைஎமதுகற்தன்கண்டு திருநகைகொண்டு எத்தகையவாளிகளி
னாலுமசைக்கவொண்ணாததிவ்வியசரங்கள் ஆயிரவற்றைச்செலுத்தி சேதிக்
கொண்டு மேலிட்டுவருகின்ற பகைவன்பாணகோடிகளைகண்டித்துத்த
ள்ளி மேலும்அத்தொகையவிரவாளிகளைப்பிறையோகித்தனர், அவைவரு
ம்மகிமைகளைச் சிங்கமுகன்கண்டு சர்ப்பத்தைப்போலச்சீறி ஓரிலக்கங்
கடுமையுள்ளவைகளைப்போக்கியதறுவாயிற் புகைந்திரைந்துகனலைப்பெ
ருக்கிவருவதைத் சிவகுமாரன்அத்தொகைச்சரங்களைக்கொண்டு கண்டித்
துமீட்டும் ஆயிரம் அர்த்தசந்திரவாளிகளைப்போக்கினர்சிங்கமுகனும்ப
லபாணங்களினால் அவற்றினைமாற்றி அதிககோபங்கொண்டு தீட்சணிய
முள்ளசகஸ்திரக்கணைகளைக் கடுவேகமாகத்தாண்டி குமாரதேவர் தேரை
நடாத்தும் வாயுதேவன்வலியமார்பைப்பிளந்துகெற்சித்தனன், அக்கா
யத்தின்மூலமாய் உதிரம்பெருக்கெடுத்தோடவலிகுறைத்துமிகவும்வரு
ந்தி கைகால்களுதறலெடுக்கமனம்வருந்தியிருப்பதைஎமதுகற்தன்கண்

டுதுரிதமாய்தமதொப்பற்றவில்லில் நூறுபகழிகளைப்பூட்டிப் பிரயோ
கித்துச்சிங்கமுகன்தேரில்நாட்டி யானையுருக்கொண் டிருக்கும் வெற்றி
க்கொடியையக்காலுமெனவெட்டி நிலத்திற்றள்ளிப் பாகனைவாட்டித்தே
ரையும் சக்கைச்சக்கையாகப் பேத்தெறிந்த தறுவாயிற் சிங்கமுகனென்
செய்வன் தன்மனதுக்கிசைந்தவாகனத்தைப்போக்கிச்சோடசகலைகளையி
ழந்தசந்திரனைப்போலபெருமிதங்களனைத்துங்குறைந்துமானம்பாதிப்
பதினால்நிலத்திற்குதித்துத் திசைகள்முதலாக நடுங்கத்தக்கதாகக் கொக்க
ரித்துத்துரிதமாய்த் தன்விற்களையிறுக்கிக் கணக்கிறந்த பாணவிதங்களை
ஒன்றனந்தமாகவருஷிக்குந்தறுவாயில் அவைகள்வெளிப்பட்டுமின்னல்
யிடிதீமுதலியகொடுமைகளைப்பெருக்கி அதிகமகிமைகளைக்காட்டி விறி
வருவதை விழிகளுக்கடையாதசுயஞ்சோதி வடிவினைப்படைத்திருக்கின்
றகுமாரதேவர்பாத்து சிலகணைகளைச்செலுத்திஅவற்றினைமாற்றிச் சலன
ப்படாத திவ்வியபாணங்களாயிரவற்றைத் தாண்டி பாதகனாகியசிங்கமு
கன்கரங்களிற்பற்றியிருக்கின்ற தனுசுகளையும் பொடிசெய்ததறுவாயில்ப
கைவன் வெறுங்கரத்தனாய்த்திகைத்திருப்பதை மகாவிஷ்ணு-பிர்மதே
வன்-தேவர்க்கள்கண்டு செயவுச்சாகங்களுடன் கரங்களைத்தூக்கிமகிட்சி
க்குறிப்புவிளங்க ஆர்ப்பரித்தவர்களாய்க் கந்தன்பெருமைகளைக் கொண்
டாடிப்போற்றினர், யிவ்விதமாகச் சரமழைகளைப் பொழியவல்லவிற்க
ளழிந்ததறுவாயில் ஊழித்தீயினுமேலிட்டுப்பொங்கி வரப்பிரசாதத்தினு
ற்பெற்றிருந்த முத்தலைச்சூலமொன்றையெடுத்துச் சிவகுமாரன்மார்பு
க்குகுறிகொண்டு ஆலகாலவிஷத்தினைத்திருப்பாற்கடல்வெளியிட்டதை
ப்போலப்பின்வாங்கி யோங்கிவீசி கெர்சித்தனன், அதுவருங்கொடு
மையைத்தெரிந்துஎமதிறைவன் பதினொன்றுதீட்சணியமுள்ள சரங்களைப்
போக்கித்துகள்படக்கண்டித்து மேலும் ஆயிரங்கூரிய நாராசங்களைச்
சூரன்துணைவன்மீதிற்பிரயோகித்தனர், அவைகளின்உற்பாதங்களைக்க
ண்டுதுரிதமாய்மந்தரத்தையொத்த தண்டாயுதத்தைகரத்திற்கொண்டும
ணிகளசையக்கிறுகிறெனச்சுழற்றிச் சமீபித்தமாத்திரத்தில் மோதிநுறுங்
கிநிலத்தில்விழத்தள்ளி அண்டங்கள்கிடுகிடாய்த்துநடுங்கஆர்ப்பரித்துக்
கொண்டு மேலேறிவருவதைபாலசுப்பிரமணியக்கடவுள்கண்டு எழுகொ
டியபாணங்களைப்பிரயோகித்து தண்டத்தைப்பற்றியிருந்த கரத்தை
க்கண்டித்துபூமியிற்றள்ளினர், கேட்டீர்களோ சவுனகாதிதவத்தோரே சிங்க
முகன்ஆதியிற் பரமசிவத்தினாற்பெற்றிருக்கின்ற வரப்பிரசாதமகத்தி
யினால் தட்சிணத்தில்மீட்டுமேக்கரம்பழையபடிக்குக்கிளைத்து நிலத்திற்கி
டக்கின்றதண்டத்தினையெடுத்து சூறாவளியைப்போலச்சுழற்றி கொக்க
ரித்துக்கொண்டு சிவகுமாரன்பேரிற் றுவிவீசினன், அதனைத்தன்பேரின்

வர்க்கசேனையைவாட்டுஞ்சூரியனுக்கொப்பாக ஆயிரஞ்சுடுசரங்களைக்கொ
ண்டுபொடிப்பொடியாகவாட்டிப் போக்கியபோதுபாதகன்மண்டியெ
ரிந்துதான்முன்னம் எமனுடன்போராடிப் புறங்கண்டு பறித்துவைத்தி
ருந்தகாலபாசத்தை யெடுத்து யிதனாலுன்வலியொடுங்கி மங்கக் கடவை
யெனப்பேசிவீசியகாலத்திற் றிசைகளெங்கனும்பரந்து பிரசண்டமாரு
தத்தைப்போல ஆரவாரங்களைக்காட்டிவரும் மகிமைகளைக்குமாரதேவர்
தெரிந்து ஆயிரக்கொடியகணைகளை வில்லிற்சந்தித்துப்போக்கித் தீயிற்
பட்டசாசைப்போல நீறாக்கினர், தன்பாசம்வலியற்று நாசப்பட்டதை
க்குறித்து மிகவும்மனம்வருந்தி மானமுங்கோபமும் மனதைவாட்டச்
சற்பத்தைப்போலச்சீறி யிப்பாலனை என்வலிய கரங்களினாற் பற்றிப்பி
சைந்துகொன்றுகாற்றிற்பறக்கவிடுவேனெனத்தீர்மானித்தவனாயிரண்
டாயிரங்கரங்களையுந்திசைகளைமூடப்பரப்பிக்கொண்டுபாய்ந்துமேல்வ
ரும்போது அப்பாதகன்கருத்தை எமதையன்தெரிந்துசற்பங்களுக்கொ
ப்பாகவிஷங்களைக் கக்கவல்ல வேகமுள்ளசரங்க ளிரண்டாயிரவற்றைத
னுசிற்பூட்டிச் சரவேகமாகப் பிரயோகித்து அவன்கரங்கள் முற்றி
னும்நிலத்தில்விழுந்துதுடிக்கும்படிக்கு வெட்டியெறிந்த தருவாயிற்
றவமகிமையினாற்செப்படிவித்தையைப்போல தட்சிணத்திற்கரங்கள்மு
ளைத்துச்சீறிக் கண்டிக்கப்பட்டிறைந்திருக்கின்ற தன்கைகளையெடுத்து தி
றுமிறெனச்சுழற்றிக்கொண்டு அனற்படிவமாகவிருக்கின்ற சிவகுமாரன்
மீதிற்குவிப்போம்போது லோகநாயகனுந்துரிதமாய் ஆயிரஞ் சுடுசரங்
களைப்பிரயோகித்து பாதகன் பெற்றிருக்கின்ற சிங்கமுகங்கள்விளங்
கும்பிரசமோசங்களைக் கண்டித்துத் திசைகளெங்கனு மிறையச்செய்தவ
ராய்மேலுமிரண்டாயிரம் அர்த்தச்சந்திரபாணங்களைப்போக்கி அவுண
ராசன்கரங்களனைத்தையும்வெட்டி நிலத்திற்சேர்த்தனர், யிவ்விதமாகச்
சிரங்களுங்கரங்களும்அற்றுமுண்டமாகச் சிங்கமுகன் நிற்கின்றகோலத்
தைத்தேவர்கள் கண்டவுடன் ஆனந்தவாரியில்மூழ்கிக் களிமிகுதியினாற்
சத்தனைப்புகழ்ந்துகற்பகமலர்களையிறைத்துக்கொண்டாடினர், உடனே
விரதபலத்தினால் எதாப்பிரகாரங்குறைந்த உறுப்புகளனைத்துங் கிளைத்
துமுன்னிலும்அதிகவுக்கிரத்துடன் ஆங்காரித்துவிழித்துநிற்பதைத் தேவர்
கள்முதலானவர்கள்கண்டு மனத்திடுக்கிட்டு திரேகம்வியர்த்து நடுநடுங்கி
யிவ்விடத்தில்நிற்போமாகிற் பாதகனென்செய்வனோவென்றும் ஏக்கறவி
னாற்பலதிசையினும்ஓடத் தொடங்கினர், இக்காரணங்களைத்தேவதேவோ
த்தமனும் சுயஞ்சோதிவடிவாகவிளங்கும் சரவணபவன் கண்டு பூர்வத்தி
ல்யிவர் யாகங்களைச் செய்யுமுன்னில்லையிற்சிரங்களைக்கண்டித்து அவிகொ
டுத்தமுயற்சியினால் நீங்கியடம்புகள்மீளத்தோற்றுகின்றதெனநிதானி

த்து அதற்கடுத்தகாரியத்தினையோசிக்கின்றதருவாயில் விண்ணவர்மனவ
ருத்தத்துடன் யிப்பாதகனெவ்விதத்தில் மாள்வன் சிறந்ததவப் பேறுக
ளைப்பெற்றிருப்பவனாதலால்யிவனைக்கொல்வதுகடினமாகக்காணுகின்ற
தென்றுவாடிப்பார்த்திருக்கும்போது சிங்கமுகாசுரன் நாகசற்பத்தை
ப்போலச்சீறி சிவசுப்பிரமணியதேவரைப்பார்த்துச்சொல்லுவான் ஓ பா
லனேயிவ்விதங்களாக அளவற்றகாலம்உன்கடுசரங்களைக்கொண்டு கண்டி
ப்பையாயினும்மீளமீளக்கிடைத்துளதாப்பிறவாரம்சண்டைகொடுக்குந்
திறத்தைப்படைத்திருக்கின்றசூரனாகவிருக்கும் என்னுடன்போராடியி
ரண்டுகரங்களைப்பெற்றிருக்கின்றநீ பற்பலபாணங்களைச் செலுத்திச்செ
லுத்திக் கைகால்களோய்ந்து யிளைப்பதன்றியில்யாதொருபிரயோசன
ங்களையும்பெறவழியாய் அத்தகையஅபலனானபிள்ளாய் நீயோயெதுத்து
ச்சண்டைகொடுக்கவல்லை நாங்கள் பூர்வத்தில் சிவபிரானைக்குறித்து கடி
னதவங்களைச்செய்து பெற்றிருக்கின்ற சிறந்தபேறுகளைக் கேட்டதில்லை
யோஉன்னப்பனை யொத்தவன் நமதுமன உறுதிக்குமெச்சிப் புகழ்ந்
துபோனகாரணங்களை எவ்வளவுமெண்ணிப் பாத்தவனில்லை சற்றுங்கார
ணகாரியங்களைப்பகுத்தறியும்விவேகமின்னமும் விளங்காதபாலனாதலா
ற்போராடியழித்துப்போகலாமென நினைந்து சிலபூதரைக்கூட்டிக்கொ
ண்டுதுரிதமாகவந்துவிட்டனைபிள்ளைப்பருவத்தினால் நீகொண்டிருக்கிற
துணிவுஉன்பிராணபரியந்தம்வந்து நேர்ந்துவிட்டது நீபலயுகங்கள்வரு
ந்துந்தலைகீழாய்நின்று பொருதபோதினும் பின்னிடையப்பட்டவனன்
று ஆதலால் நீ உத்தேசித்து வந்திருக்கிறபடிக்குத் தேவர்சிறையை விடு
விப்பது உன்னாலொருபோதுமுடியாது உன்னைப்பெற்றவனாலும் மாவ
தன்றுயிந்தநிமிஷத்திலுன்னைப்பற்றிக்கசக்கி வாயிற்போட்டுக்கொள்ள
வல்லேனாயினும் பிள்ளைகளைப்பெற்றவனாதலாற் குழந்தைப்பருவத்தினா
ல்முன்பின்யோசித்துப்பாராமல் வந்துவிட்டனை யென்றும் உன்பிதா
வானவர்நம்மிடத்திற் பரிபூரணகடாட்சம் வைத்திருப்பதாலும் மனம்
பொறுத்தேன் யிதைக்கருதியிந்தநிமிஷத்திற் பிராணனைதப்பித்துக்கொ
ண்டோடிப்போவையாயின் அரிதிற்பெற்ற உன்தாய்தந்தையருக்குப்பி
ள்ளையாயினனஞ்சிலபோதுபிழைத்திருப்பை தெரியாமையினால் நீசெய்
திருக்கின்றகுறைபாடுகளை மன்னித்து விட்டுவிடுவேனென்று விவேகசூ
னியனாகியசிங்கமுகாசுரன்பேசியவாசகங்களனைத்தையும் எமதிறைவன்
திருச்செவிகளினேற்று குறுநகைகொண்டு அவுணாசனேநீயென்செய்
வை நீசெனித்ததருவாயில் விதித்த காலங்கழிந்து உன்னரிய பிராணனை
க்கொண்டுபோகப் பின்புறத்தில்எமனுங் காத்துத்திரிகின்றனன், விவே
கமற்றவனே வீண்வார்த்தைகளை யாடுவதிற் பயனென்னை யினியொருக

ணப்போதிலுன்னுயிரைவாங்குவேன் அதைநீயே காணவிருக்கின்றனை
யெனச்சிருஷ்டிகர்த்தனாகிய பிரமனைக் குட்டிச்சிறைபடுத்தி வேதப்பொ
ருளைவிளக்கிக் குருமூர்த்தமாகத்தோற்றியகுமாரகுருபரன்பேசிமுடித்த
வுடன் சிங்கமுகனுக்கு அதிககோபம்பிரவேசித்து விழிகளிற் றீப்பொ
றிகள்சிதற வடவானலத்தைப்போலச்சீறிக் கோடையிடிகளைப்போலக்
கொக்கரித்துப்பாய்ந்து பாரிசங்களிற்பாரித்தோங்கிநிற்கின்றயிரண்டா
யிரம்பற்வதங்களை அடியுடன்பெயர்த்து பந்துக்கொப்பாக பாலசுப்பி
ரமணியதேவர்பேரில் வீசினன், அதுகள்செய்துவந்த உற்பாதங்களைச்
சொல்லிமுடியாது தட்சிணத்திலேயடலிறைவன் நூறுதிவ்விய பாணங்க
ளைச்செலுத்திப் பொடிப்பொடியாகக்கண்டித்தெறிந்து மேலும்ஆயிர
ங்கடுங்கணைகளைப்போக்கிவயிரத்தையொத்தபகைவன் மார்பைப்பிளந்
தனர், அந்தகாயத்தைஎவ்வளவுஞ் சட்டைபண்ணாமற்பாய்ந்து கணக்கி
றந்தபற்வதங்களைப் பறிக்கத்தொடங்கினன், அதனைக்குமாரசுவாமியார்
தெரிந்து துரிதமாய் ஆயிரங்கடுங்கணைகளை வில்லிற்சந்தித்துப்போக்கி
ஆயிரஞ்சிரங்களையுங் கண்டித்து நிலத்திலுருட்டினர், தட்சிணத்திற்ப
ழையபடிக்குத்தலைகள்கிளைத்து தான்தொட்ட பற்வதங்களனைத்தையும்
எடுத்தெமதுகரத்தன்மீதுவீசிப் பருத்தபுயாசலங்களைத்தட்டி தேவர்க
ள்சூரியனாதியர் குலைகுலைந்து நடுநடுங்கிவாடத்தக்கதாக ஆர்ப்பரித்தன
ன், அவற்றினையிரண்டாயிரஞ்சுடுசரங்களினாற் பொடிப்படுத்திஅவன்வ
லியதோள்களையும்அறுத்துத்தள்ளினர், அவைகள்நிலத்தில் விழுவதன்மு
ன்னம்பழையபடிக்குப் புசங்களனைத்தும்தோற்றியது கேட்டீர்களோ
சவுனகாதிரிஷிகளே யிவர்கள்செய்த தவங்களைப்போல முடித்தவர்கள்
யாவருமிரார்கள் மேலும்தவங்களினுஞ்சிறந்தபொருள் உலகங்களிலொ
ன்றுமிராதாகையால் யாவரும்சிறந்தபேற்றினையே பெறவேண்டும் யிக்
காட்சியைக்கண்டபாலசுப்பிரமணியதேவர் ஒருதிருவிளையாடலைச்செய்ய
த்திருவுளத்திற்கொண்டவராய் தமதுகாண்டீபத்திற் றிவ்வியபாணகோ
டிகளைத்தாண்டுச்சிரங்களைக் கண்டித்துத்தள்ளியும்-தோள்களைவெட்டி
யெறிந்தும்-தாள்களைத்தறித்தும்-இவ்வாறு சிங்கமுகனைக் கண்டதுண்
டமாகச்சேதிக்குந்தறுவாயிற் சிவபிரான்வரபாலனத்தினால் அதுகள்மீள
மீளமுளைத்துவரவும் சிவகுமாரன்அவற்றினையும் ரணக்களத்திலுருட்ட
வும்இவ்விதமாகப்போராடும்போது சிரசமோகங்கள்பெருத்தெழுந்து
திசைகளைநிறைத்தும்தெய்வலோகத்தைத்துத்தும்பூமியெங்கணும்குவிந்
துசத்தசாகரவெள்ளமுற்றிலும் அடர்ந்தும் பிறைகளையொத்த கோறத
ந்தங்கள்விளங்கச்செற்சித்துக்கொண்டும் உதட்டையதுக்கியும் பற்களை
க்கடித்தும்இப்பிரகாரம்பலவிதங்களாகப்போய் பனங்காய்களைப்போ

லவிழுவதை தேவர்க்கள்கண்டு திடுக்கிட்டுமெத்தமயங்கிப் பிராண பீதியினாற்
கைகால்களுதறத்தங்கள்பதங்களில் நின்றும்வழுவிபூவட்டமுற்றிலும்வி
ழவும் அச்சிரங்கள்ஒன்றின்மீதொன்றுசேர்க் குவிவதைப்பார்க்குமிடத்
தில்விஞ்ஞையர்மகளிர் விளையாடவிருக்கின்ற செய்குன்றங்களையொப்ப
க்காட்டவும் சிலதலைகள்சமரவெல்லைமுற்றிலுமுருண்டு பிலங்களைப்போ
லவாய்களைத்திறந்திருப்பதைக்கண்ட பூதர்கள்வேடிக்கையாக அவுணப்
பாதகர்மாண்டுகிடக்கின்றகளேபரங்களைக்கோடாகோடிக்கணக்கில்வாரி
வாரிஅதிற்போட்டுப்போட்டுநிரம்பாமற் கை காலோய்ந்துவாடிப் பிர
மித்துப்பார்த்திருக்கவும் சிலசிரங்கள்வாய்விண்டு காட்டுவதைநிணமாம்
சங்களையுண்டுவெறிகொண்டுலவுகின்ற பசாசங்கள்பார்த்து யிதுநாம்வா
சஞ்செய்வதற்குத்தகுந்த விடுதியென்றெண்ணிக் கொழுத்தபிணவகைக
ளையிழுத்துப்போய்ச்சேர்த்துக்கொண்டு உள்ளேபிறவேசித்த தறுவாயி
ற்கோடிசைகள் அசைவுகொண்டு பற்கள்கிட்டி மூடிக்கொண்டபோதுதத
க்கன்செய்த யாகவெல்லையில்வந்திருந்தவர்கள் வீரபத்திரகடவுள் முத்
திக்கைப்போட்டுச்சூழ்ந்தகாலத்திற் போகயிடமில்லாமல்அங்குமிங்கு
மாய்அலைந்ததைப்போல அதனுட்பட்டுத் திரிந்துதிரிந்துவாடிக் கடை
யில்மலைப்பூழைகளுக்கொப்பாகத்தோற்றுகின்ற செவிகள் நாசிகள்மூல
மாக முற்காலத்திற்கெவுதமர் பத்தினியினிடத் தின்புற்றுச்சோரத்துவ
மாய்ப்பர்ணசாலையிற் பிறவேசித்துச் சிற்றின்பத்தை அனுபவிக்கின்றத
றுவாயில் முனிபுங்கவன்வரவைத்தெரித்து திடுக்கிட்டுப் பயத்தினாற்சல
தாரைவழியாக ஓடிப்போனதேவேந்திரனையொப்ப அத்தலத்தைக்கடந்
துவெளிவந்து தப்பினோமென்னுங்களிப்புடன் சமீபத்தினும் நிற்கப்ப
யந்தோடவும் இவ்விதங்களாகவீரவெண்டயமணிந்திருக்கின்ற பாதார
விந்தங்களைப்படைத்த பாலசுப்பிரமணியதேவர் தாண்டும் டாணசோடி
களானவைகண்டித்துக்கண்டித்துத் தள்ளுகின்ற சிரங்கள்-தோள்கள்-கா
ல்கள்-மீளமீளமாறுமலுண்டாய்விறிக் காட்டுவதைத்தெரிந்து திருநகை
கொண்டவராய் மற்றொரு திருவிளையாடலைக்கருதி பலதிவ்வியபாணங்
களை ஒருதொடையிற்பிறையோகித்து ஒருசிரமும் யிரண்டு கரங்களையும்
நீங்கலாய் மற்றதுகளனைத்தையுங்கண்டித்துத் தள்ளியதறுவாயிற் பழை
யபடிக்கவைகள் அந்நிமிஷத்திற் றேற்றுவதைப் பார்த்துப்பார்த்துக்க
ளித்து இவ்விதமாகச்சிலபோது வினோதப்போனாச்செய்துகடையிற்பி
ற்மதேவன்முதலிய தேவர்க்கள்கலங்கத்தக்கதாகச் சற்றுகோபித்தும்
மென்றுஉக்கிரமாய் அதட்டியதறுவாயில்அவ்வதிற்சிக்கஞ்சி வாய்பேற்
றின்முயற்சியினால் முளைத்துவருதலை மனிதர் அரவங்கண்ட காலத்தில்
ஆமையினதுஉறுப்புகளைஉள்ளடக்கிக் கொள்ளுமாறுபோலபழையபடி

க்குந்தோற்றாமல் ஒரு சிரமும் இரண்டு கரங்களுடனும் சிங்கமுகாசுர
னிருந்தனன் கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளேயிவ்விதமாகக்கிறவுஞ்ச
வரையைப்பிளந்துவாட்டிய பாலசுப்பிரமணியக்கடவுள் கெர்சித்தவலி
க்கஞ்சிரக்கண்டிக்கப்பட்ட அவையவங்கள்தோற்றாமல் அடங்கியகாரண
த்தை அவுணராசன்கண்டு நடுக்கிட்டுமிகவும் வருந்தி சிறந்தமந்திரங்களை
க்கிடைத்து அதனாற் பெறும்பேறுகளை அனுபவித்திருந்த ஒருவன்தெய்
வவல்லபத்தினால்அதனையிழந்து சோருகின்றவனைப்போலத் திகைத்து
மனம்வருந்தி மானமுங்கோபமுந்திரோகத்தைவாட்டியலைக்கத் துக்கசா
கரத்தில்மூழ்கியாதுந்தோற்றாமல் பிரமித்திருந்தனன் அவன்சோர்வை
ச்சண்முகப் பெருமான்கண்டிரங்கி யிதனைச்சொல்லுவதாயினர், ஓ அவு
ணர்பெருமானேயிதனைக்கேம்ப்பையாக அரியயாகங்களைச்செய்து சிவ
பிரான்கடாட்சவீட்சணியத்தினால் நீ பெற்றிருந்த வரமுயற்சியின் நா
ம்பற்பலகாலங்கண்டித்துத்தள்ளிய சிரங்கரம்முளைத்துவந்ததைப்போ
லவிக்காலத்தி லெழாமலடங்கிய காரணமென்னே வருவிக்கயெத்தனப்
படுகின்றனையோ அல்லது நீயிறந்தபின்பு தோற்றவிருக்கின்றதோ சொ
ல்லக்கடவையென்று எமதிறைவன்திருவாய்மலர்ந்த வாக்கியங்கள்சிங்க
முகன்செவிகளில்நாராசத்தைக்காய்ச்சி நுழைத்ததைப்போலச்சுறுக்கிடக்
கேட்டமாத்திரத்தில்வடவையைப்போலச்சீறிஓபாலனே கரங்களையும்சிர
ங்களையுங்கண்டித்தனமென்று அகந்தைகொள்ளவேண்டாம் என்வலியி
ன்திறங்களும்வீரபராக்கிரமமுயற்சிகளும் உனக்கெவ்வளவுந் தெரியா
துமகாவிஷ்ணுமுதலிய தேவர்களறிவர் ஒருதலையையுமிரண்டுகரங்களை
யும்பெற்றிருக்கின்றநாம் அண்டபுவனசராசரங்களனைத்தையும் நிமை
ப்போதிலழிக்கவல்லோம் அதையும் நீயேகண்டு பிரமிக்கப் போகின்ற
னை அதற்குள்ளேகெர்விக்க வேண்டாமெனக்கொக்கரித்துப்பாய்ந்துமே
ருவையொத்த பருத்தமலையொன்றைப்பறித்துக் குமாரசுவாமியின்மே
ற்றுரிதமாய்வீசினன், அதுவரும்வேகத்தை பிரமனுக்குப் பிரணவப்
பொருளைவிளக்கியகுமரகுருபரன்கண்டு திருநகைகொண்டு அதிகதீட்ச
ணியமுள்ளபாணமொன்றையெடுத்து வில்லிற்சந்தித்துப்போக்கித் தூ
ள்படக்கண்டித்ததருவாயிற் சிங்கமுகனுக்குஅதிககோபம்பிறவேசித்து
த்தட்சிணத்தில்நிலத்திற்கிடக்கின்ற தன்கரத்திற்பற்றியிருந்த பாரித்தத
ண்டாயுதத்தைப்பறித்துக்கொண்டு ஓ சிறுபிள்ளாய் வில்லைவளைத்து பா
ணங்களைத்தூண்டுவதும் வேலாயுதத்தைப்பிரயோகிப்பதுங்கற்றதன்
றியில்வேறொருசண்டைகளைச்செய்யத் தெரிந்தவனல்லபோற்காணுகி
ன்றதென்றிகழ்ச்சியாகப்பேசிமூலகாரணனாகிய சிவசுப்பிரமணியதே
வர்மீது சுழற்றிவீசினன், அவன் மதியாமற்பேசிய வாக்கியத்தைக்கே

ட்டமாத்திரத்தில் சரவணபவனுக்குச்சற்றுகோபமுண்டாய் தமதுதிரு
க்கரத்திற் கோடிசூரியப்பிரகாசமாகச் சொலித்துக்கொண் டிருக்கின்ற
வெற்றிவேலாயுதத்தின்மீது விழிகளைப்பரப்பிவஞ்சகனுயிரையுண்டுமீள
க்கடவையெனக்கட்டளையிட்டுச் செலுத்தியபோது அதிஉக்கிரத்துடன்
வெளிப்பட்டவுடன் வடவையும் ஆலகாலமுமஞ்சத்தக்கதாகச் சீறிப்பா
ய்ந்து பிரசண்டமாருதத்தைப்போலயிரைந்து மணிகள்கலிக்கவேகமா
ய்மேலிட்டுவரும்தண்டாயுதத்தைச் சாம்பலாக்கிப் பறக்கடித்துருத்துவ
யிரமலையினிடத்திற் பிரளயகாலத்தெழும் யிடியானது விழுமாறுபோலச்
சூரபதுமன்தம்பியாகிய சிங்கமுகாசூரன் வலிபெற்ற மார்பிற்றாக்கித்த
டாரித்துருவிப் பிராணனைக்கிரகித்துக்கொண்டு உதிரமானது பீரிட்டோ
டமுதுகின்மூலமாக வெளிப்பட்டுப்போயது, உடனே அவுணராசன்பிர
ளயமேகத்தைப்போல ஓவென்னும் யிரைச்சலைக்காட்டிக்கதறிஉதிரம்பி
ரவாகமாயோடப் பெருங்காற்றிற்பட்டு வேரற்றுவிழும் வடவாலவிரு
ட்சத்தைப்போல நிலம்பிளக்கத்தக்கதாகப் பொத்தென்றுவிழுந்து ப
தைபதைத்துவலியும்வீரமுமொடுங்கிஆவியையிகழ்ந்துமாண்டனன், யி
வ்விதமாகச் சிங்கமுகாசூரனைப்பிளந்துதள்ளிய வெற்றிவேலாயுதமான
துதுரிதமாய் வானத்தெழுந்து ஆகாயகங்கையிற்படிந்து பரிசுத்தமாய்
தேவர்க்களிறைக்கின்றபஞ்சதாருக்களினது புஷ்பமாரியில்மூழ்கிமகரந்
தங்கள்படிந்து கமகமெனத் திசைத்திசைகளினும் பரிமளிக்கத்தக்கதா
கமீண்டு சங்கத்திற்றலைமையெய்தி இயலிசை நாடகமென்னும் முத்தமி
ழைப்பரிபாலனஞ்செய்தருளிய குமாரதேவர் திருக்கரத்தில் எதாப்பி
ரகாரஞ்சேர்ந்து சொலித்துக்கொண்டிருந்தது, யிந்தசெயத்தைமகாவி
ஷ்ணு-பிரமன்-இந்திரன்முதலாகிய தேவர்க்கள் கண்டவுடன் களிசிறந்
துதிரோகபரவசத்தராய் செயசெயவெனப்போற்றி ஆனந்தநடனங்களை
ச்செய்து கந்தன்பெருமிதங்களைக்கொண்டாடி நகைமுகராய் பஞ்சகற்
பகப்புதியமலர்களை ஏராளமாகச்சேகரித்துத் திருவடிகளிற்சொரிந்துஅ
ஷ்டாங்க-பஞ்சாங்க-திரியாங்க-ஏகாங்கமாகப் பணிந்தெழுந்துகந்த
ன்திருக்கோலத்தைவிழிகள்களிக்கத்தெரிசித்துக் கரங்களைக்கூப்பிவிம்மி
தராய்நிற்கின்ற தேவர்கூட்டங்களின்மீது கிருபாநோக்கம்பாலித்துஓவி
ண்ணவர்களே அவுணராசனும் மற்றசேனைகளனைத்தும் மாண்டுபோய
து, எதிர்ப்பவரொருவருமில்லைமேலும் அந்திகாலமும்நெருங்குகின்றதி
னாற்பாசறைக்குப்போகவேண்டுமெனத் திருவாய்மலர்ந்தவுடன்வீரவா
குதேவர்கட்டளையின்படிக்குச் செயபேரி- வெற்றிச்சங்கம்-எக்காளம்-
திருச்சின்னமாதியமங்களவாத்தியங்களைப்பலகோடிபூதவீரர்கள்முழக்கி
வரச்சேனைகளைத்திருப்பி இலக்கர்-எண்மர்-படைத்தலைவர்கள்-நாற்புற

ங்களினுங்காத்துச் செல்லுகின்றதருவாயில் பிரமனாதிய தேவர்க்கள்சூழ்
ந்துபோற்றிவாக் குமாரதேவர்தமதுதிருத்தேரினிடத்தில்ஞானசூரியனை
ப்போலநடுநாயகமாகவிளங்கி சமர்க்களவெல்லையைக்கடந்துபொன்னு
லகுபும்நாளும்படிக்குச் சோடித்திருக்கின்ற பாசறையைச்சேர்ந்துரத
த்தைவிட்டிறங்கி தமதாலயத்திற்போய் நவரத்தினமயமாகப் பரந்திருக்
கும்சபாமண்டபமுகப்பிற் சிரோரத்தினவிதங்களினாற்சோடித்துவிளங்
கும்சிங்காதனத்திற்சிவபிரானைப்போலவீற்றிருந்தனர் மகாவிஷ்ணு-பிர
மன்-இந்திரன்-செயசாலியாகிய வீரவாகுதேவர் எண்மர் இலக்கர் முத
லாகியபிறமுகாளும் தத்தமக்குரியபீடங்களிற் சபைமுற்றனும்நெருங்
கிக்களித்திருந்தார்கள், சவுனகாதிரிஷிகளே அத்தருவாயில் இந்திரன்மற்
றதேவர்க்கள்கொண்ட மகிட்சியின்பெருக்கை யின்னவிதமெனச் சொ
ல்லிமுடியாது யிவ்விதசெயப்பிரதாபத்துடன் வெற்றிவேலாயுதக் கட
வுளானவர் தேவர்க்களனைவருடனும் பாசறையைச்சேர்ந்தபின்பு சிவகு
மாரனுடன்வாதாடிக் கண்டதுண்டமாகவெட்டுண்டு உதிரச்சேற்றில்வி
ழுந்து நாய்-நரி-கழுகு-காக்கை-முதலியபறவைகள் பிடுங்கித்தின்னச்சி
ங்கமுகன்பட்டிறந்தகோலத்தைத் தெரிந்தராட்சதத்தூதர்கள் வாயினும்
வயிற்றினும் விழிகளினும்அறைந்துகொண்டு கண்களில்நீரைப்பெருக்கி
க்கோடுகோடெனப்புலம்பிவாயுவேகத்தினுமேவிட்டோடிவீரமாமயேந்
திரபுரத்தைச்சேர்வதன்முன்னம் நவரத்தினமயமாகியகோபுரத்தின்மேல்
நிலையில்வீற்றிருந்துதன் துணைவன்செய்கின்ற யோர்த்தொழிலைக்கண்டி
ருந்தவன்திடுக்கிட்டுப்பெருநேரமாகப்பகைவருடன்போராடிவந்தகார
ணத்தினாற்களைத்து விழுந்தனனோ அல்லதுமாண்டனனோ யாதுந்தோற்ற
வில்லையேயென் றுமதிமயங்கித்திகைத்துவிழிகளைமூடாமல்பார்த்திருக்கி
ன்றதருவாயில் தூதர்கள் அத்தலத்தைச்சேர்ந்து ராசாதிராசனைக் கண்ட
மாத்திரத்தில் அருவியைப்போலவிழிகளில்நீரைப்பெருக்கி ஓவெனப்பு
லம்பிஅடியற்றபனையைப்போலச் சக்கிரவர்த்தியினதுபாதங்களில்விழுந்
துவாயெழாமற் சற்றுநேரங்குளறிக் கடையில் யிதனைவிண்ணப்பஞ்செ
ய்வதாயினர், ராசராசப்பிரவுடகனே யென்சொல்லப்போகுறோம்தேவரீர்
துணைவன் செயசாலியாகியசிங்கமுகாசுரன் பலவெள்ளம் ராட்சதப்ப
டைகளுடனும்போய்ச் சமர்க்களத்திலெதுத்த வீரவாகுமுதலானவர்களை
ச்சின்னபின்னப்பட வாட்டிக் கடையில் பாசத்தினாற் பணிந்து உதைய
கிரியிற்சேர்த்தசேதியைத்தெரிந்து பாலசுப்பிரமணியன் சிவபூதப்படை
களுடன்வந்து போராடுகின்றகாலத்திற் நமதுசகோதரனால் அப்பாலன்
பட்டகேட்டைச்சொல்லிமுடியாது மற்றபூதர்களனைவரையும் வாரிவாரி
வாயிற்போட்டு வயிற்றைநிரப்பியதருவாயிற் சிவகுமாரன்பகைத்துத்த

ன்சேனைகளைவெளிப்படுத்தி உதயகிரியிற் பட்டிருந்தவர்களையும் ஒருக
ணையைச்செலுத்தித்தருவித்துக்கொண்டு செயசாலியாய்ச் சிங்கமுகனைவ
ளைத்துக்கொண்டு கொடியபோரைச்செய்து கிரவுஞ்சமலையைப் பிளந்
தவெற்றிவேலினாற்கண்டதுண்டப்படவெட்டிக்கொன்று ராட்சசசயின்
னியங்களையும் நாசப்படுத்திப்போட்டவனாய் வெற்றியுடன் துணைவன்
முதலானவர்கள் சூழ்ந்துபோற்றப் பாசறையைச்சேர்ந்து களித்திருக்
கின்றனனெனச் சொல்லியசேதி செவிகளில்விஷத்தைப்போல நுழைந்
தமாத்திரத்தில்மனந்திடுக்கிட்டுத்துயரவெப்பமானதுகிரோகத்துடன்கொ
ளுத்தப்புழுங்கி மயிர்க்கால்கள்தோறும் சுவாலைவீசித்தகிக்க விழிகளில்
நீர்ப்பெருக்கற்று உதிரம்பாய வாய்புலர்ந்து சுவாசமெழுந்தோறும்பு
கைப்படலமும் வெப்பமுந்தோற்றச்சோர்ந்து பதைபதைத்துவருந்தி
நோயிற்பட்டுவாடுகின்றவன் அதனைத்தணித்துக்கொள்ளும்பொருட்டு அ
க்கினியையுண்டதைப்போலக்களைத்துவிழுந்துகடகடெனப்புரண்டு நி
லைதெரியாமல்வழுவிக்குண்டாங்கரணம்போட்டுருண்டுவந்துவிழிகளில்
நின்றும்பெருகியோடும்புனற்பெருக்கிற்புவனங்களனைத்திலும்கொண்
டாடவல்ல மகத்துவங்களைவாய்ந்த திருக்காஞ்சிப்பதியி லெழுந்தருளி
யிருக்கின்றகாமாட்சியம்மன் ஆலயத்தில்நின்றங்குளத்தினிடத்திற்கரு
மாரப்பாச்சல்பாய்பவர்களைப்போலவிழுந்து துக்கசாகரத்திலாழ்ந்துசத்
தமேகங்களுமொருமைப்படக்கெற்சிப்பதுக்கொப்பாகக்கதறி கரங்க
ளைத்தட்டி நிலத்திலறைந்து திகைத்துமதிமயங்கி பழமையாகக்கிடைத்
திருந்த வலியும் வீரமும் மானமும் மற்றுமுள்ளசிறப்புகளையுமிழந்து
விசனமென்னும் நீர்ச்சுழியிற்பட்டுத்தியங்கி யிவ்விதமாகப்பன்னிப்ப
ன்னிப்புலம்புவதாயினன், ஓ என்னையனே என்னப்பனே என்னாசைத்
துணைவனே தாருகாசுரனுக்குமூத்தாளாய் ஓசிங்கமுகனேதானவர்குல
த்தைவிளக்கவந்த அன்னை அத்தனை யொத்தவனே தயையாயித்தினவனாயி
ல்என்னைப்பாதுகாத்துரட்சித்தகுமாரனே உன்னையொத்தவீராதிவீரனை
யோ அதரோடிவந்து மாண்டனனெனச்சொல்லுவர் ஆதியில் இந்திரனா
தியதேவரனைவரையும் புறந்தந்தோடப்போர்முனையில்வென்று தமியே
னுக்குவெற்றியைத்தந்தனை அத்தகையசெயசாலியாகிய நீயித்தினம்சமர்
க்களத்திற் பாலனுன்னைக்கொல்லவுமாயிற்றோ நமக்கஞ்சிப் பணியுமவ
மனும்உன்னரியபிராணனை பயமற்றுக்கொண்டுபோகவுமாச்சுதோ ஓது
ணைவனே சண்டை கிடைத்ததெனக் கேழ்ப்பையாகில் தட்சணத்திற்மகி
ழ்ந்துபுயாசலங்கள்வானத்தையளாவப்பூரித்து மேல்நடந்து வாட்டம்வீ
ரபராக்கிரமசம்பன்னனே உன்பிராணனையிழந்து ரணக்களத்திற்பட்ட
னையென்னும்சேதியைப் பிரமன் - விஷ்ணு - இந்திரனாதியதேவர்க்கள்

கேழ்விப்படுவாராயின் பழையபடிக்கு மனவெழுச்சியெற்றுப் பயப்பி
ருந்தியைப்போக்கிச் சலனமற்றுத்தமது பதவிகளிற்சேர்ந்து சவுக்கி
யத்தைப்பெற்றுவாழ்ந்துதலைவைத்துப்படார்களோ என்றுலைசத்துணை
வனேபொன்னைப்புவியை மங்கையரைப் புத்திரர்முதலியசிறந்தபொரு
ள்களையிழந்தவன் ஒருகாலம்வேண்டினால் அதுகளைச்சுலபமாகச்சம்பாதி
த்துமகிழலாகும் அப்பா தம்பிஉன்னையொத்த தீரனையிப்பிறப்பில் பின்
னமொருநிரம்கிடைத்து மகிழுங்காலமும்நேரப்பெறவல்லேனே அய்ய
னே அதற்கேதேனும் ஏதுவையிருக்குமாகில் விரவில்வந்து சொல்லிப்
போகக்கடவை மேலும்சத்திராதிகளென்னும்மதயானைக்கூட்டங்களுக்
குவீரபராக்கிரமத்தைப்படைத்திருக்கின்ற வலியசிங்கத்தையொத்ததன்
லியனேஓசிங்கமுகனே நீவீரசொர்க்கத்திற்சேர்ந்தனையெனச் சொல்லுகி
ன்றனர், அத்தலத்திற்போயிருக்கின்ற வெற்றிமாலை புயங்களும்விசாலமா
கியமார்பைப்பெற்றதாருகனையும் பானுகோபன்முதலிய புத்திரவருக்க
ங்களையும் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் மன்ன மண்டலீகர் பந்
துக்கள்சினேகிதர்முதலானவர்க ளெதிர்கொள்ளக்கண்டு அவர்கள்போற்
றிக்குழக்களித்திருக்கின்றனையோ அந்தவாழ்விலழுந்தியிருக்கின்றநீயினி
யொருக்காலிவடம்வந்து என் துயரத்தையாற்றுவது அரிதரிது ஓதுணை
வனேஉன்னைப்பறிகொடுத்து யாதொருதுணையுமின்றிப் பாதவிக்கின்ற
துன்பத்தைநீக்கி தயிரியங்களைச்சொல்லித்தேற்றமனமிரங்காயோ உன்
னைப்பிதாவைப்போலவும் பிள்ளையையொப்பவும்நம்பியிருக்கின்ற என்
னைச்சுத்தமாய்மறந்துவிடலாகுமோ ஓதம்பி சிங்கமுகனேதிரிலோகங்க
ளிலும்புகழ்ந்து கொண்டாடத்தக்கதாக யிதுபரியந்தம் என்னுடன்கல
ந்துவாழ்ந்திருந்த செஞ்சோற்றுக்கடனைக்கழித்து கீர்த்திபரனாய் மேலு
ம்ஒருசெற்பத்தில் உற்பவித்தவர்கள் செய்யவல்ல கடனையும்முடித்துவி
ண்ணாட்டைச்சேர்ந்தனையோ பல அண்டங்களிலும் அடங்கியிருந்தபிரா
ணிகளையலைத்து வெற்றிபரனாய்த் திரும்பிவரும் உன்சேவகத் திறங்களை
க்கண்டுமகிழத்தக்க செல்வச்சம்பத்தினை யிப்பாதகன் பெருமலடங்கு
ம்காலமும்நேருவதோ அப்பா சிங்கமுகனே உன்னை யென்னவிதமாய்
நினைந்துவருந்தனனெனக் கேழ்ப்பையாகில் என்மனதுக் கிசைந்த துணை
வனாகவும் ஆருயிராகவும்உணர்வாகவும்நெருங்கியசுற்றமாகவும்அம்மை
யப்பனாகவும் எனக்குப்பிற்காலம் அரிதாகத் தேடியிருக்கின்ற ஆயிரத்
தெட்டண்டங்களையும் பரிபாலனஞ் செய்யவல்ல சக்கிறவத்தியாகவும்சி
வபிரானிரங்கிவந்து சகலசெல்வங்களையுந்தந்துபோகத்தக்கதாகவான் அ
ருமையாகமுடித்தவங்களாகவும் மற்றுமிராநின்றசகலவளங்களுக்குங்
காரணம் உன்னைய[illegible]ல்லையெனநம்பி உன்னையேபிராணபதமாக

வெண்ணியிருந்தேன் ஐயனே யிந்த உறுதிகளைச்சற்றும் நினையாமலு
ன்னுடைத் தமையனைநீங்கி யிந்த மகதயிஸ்பரிச் செல்வச்சம்பத்தை வெ
றுத்துதெய்வலோகபோகத்தினிடத் திச்சைகொண்டுதனித்துப்போய் அ
வ்வாழ்வைத்தனிமையிலனுபவிக்கவுங் கற்றனையோ ஓ துணைவனே நமது
சகோதரன் தாருகனிறந்தசேதியைத் தெரிந்தமாத்திரத்தில் ஒருபுசத்தை
ப்போக்கினவனைப்போல வலிகுன்றிவாடியயான் உன் வீரபராக்கிரமங்
களைக்கண்டுதேறிக் களித்திருந்தனன், அத்தகைய நான் யிவ்விதசெயப்
பிரதாபசாலியாகிய ஓசிங்கமுகனே நீமாண்டனையென்னுஞ் சேதிதெரி
ந்தவுடன்மற்றையபுயமும் வலியும்வீரமும்மானமும் பிராணன் முதலி
யசர்வவளங்களையும்போக்கினவனாய்ப்பிரேதத்தினும்கடைப்பட்டுத்திகை
க்கின்றனன், ஓ துணைவனேஉனது திருமுகமண்டலப்பொலிவை இனிஎ
க்காலத்திற்காணப்பெறுவேன் என்னன்பே தோழனே தம்பி யின்னமு
மொருகாலம்நீவந்து என்னுடன்கலந்துபேசும் பாக்கியத்தையும்பெற
வல்லனோ உன்னையொத்ததீரனாகியகுமாரன் மாண்டனனென்னுஞ்சேதி
யைநம்மைஅரிதிற்பெற்றதாயாகியமாயை தெரிவளாயின் என்படுவளோ
தமியேனை எவ்விதங்களில்நிந்திப்பளோ யாதுந்தோற்றவில்லையேயெ
ன்றுயிவ்விதங்களாகத் தான்பெற்றிருக்கின்ற அண்டங்களனைத்தும்செ
விடுபடத்தக்கதாகக் கோவென்றாற்றுமோசையைப் பலகாலம் வாடியி
ருந்த மகாவிஷ்ணுவும்-பிரமனும் இந்திரனும்-மற்றவிண்ணவரும்செ
விக்கமுதமாக மனங்குளிரக்கேட்டு யித்தினம்நமது குறைபாடுகளனை
த்தும்நீங்கினமெனக் களித்துச் சந்தோஷமிகுதியினாற் கரங்களைக்கொ
ட்டிஅண்டங்கள்நடுங்க ஆர்ப்பரித்துத் திசைகங்குலுங்க நகைத்தனர்,
கேட்டீர்களோ சவுனகாதிதவத்தரே இவ்விதமாக அரிய துக்கசாகரத்தில
ழுந்திக்கோடுசோடெனப்புலம்புகின்ற ராசாதிராசனைத்தேற்றவல்லவ
ொருவருமில்லாமையால் பெருநேரம் வாடிவருந்திய சூரபதுமன்றா
னேஒருவகையாகஅச்சோகத்தையொழித்து சற்றுதெளிவுண்டாயெழுந்
துமெல்லமெல்லநடந்து சபாமண்டபத்தைச்சேர்ந்துசொர்ணமயமாய்
சிரோரத்தினகாந்திகளை வீசிக்கொண்டிருக்கும் சிங்காதனத்தில் வீற்றிரு
ந்துமானமுங் கோபமும் மனதைவாட்ட நல்லகாரியம் என்பிராணனை
யொத்த துணைவனைக்கொன்ற சிவகுமாரனுடன் தானேபோயெதிர்த்துச்
சண்டைகொடுக்க நிதானித்ததுவாயிற் சோகமுற்றினும்நீங்கிரோமம்
புழுங்கிவடவைக்கனலையொப்பச்சீறினன், சவுனகாதிரிஷிகளே அத்தரு
வாயில் ராசாதிராசனுக்குப் பெருத்த ஆங்காரத்தை இன்னவிதமெனச்
சொல்லிமுடிவதோ பின்பு சூரன்நடத்தியகாரணங்களைக்கேழ்ப்பீரென்
றுசூதபுராணிகர் பேசத்தொடங்கினர்.

சேழ்விப்படுவராயின் பழையபடிக்கு மனவெழிச்சிபெற்றுப் பய்ப்பி
ருந்தியைப்போக்கிச் சலனமற்றுத்தமது பதவிகளிற்சேர்ந்து சவுக்கி
யத்தைப்பெற்றுவாழ்ந்துதலைவைத்துப்படார்களோ என்னுலைசத்துணை
வனேபொன்னைப்புவியை மங்கையரைப் புத்திரர்முதலியசிறந்தபொரு
ள்களையிழந்தவன் ஒருகாலம்வேண்டினால் அதுகளைச்சுலபமாகச்சம்பாதி
த்துமகிழலாகும் அப்பாதம்பிஉன்னையொத்த தீரனையிப்பிறப்பில் பின்
னமொருசிரம்கிடைத்து மகிழுங்காலமும்நேரப்பெறவல்லனோ அய்ய
னே அதற்கேதேனும் ஏதுவையிருக்குமாகில் விரவில்வந்து சொல்லிப்
போகக்கடவை மேலும்சத்திராதிகளென்னும்மதயானைக்கூட்டங்களுக்
குவிராயபராக்கிரமத்தைப்படைத்திருக்கின்ற வலியசிங்கத்தையொத்ததன்
ணியனேஓசிங்கமுகனே நீவிரசொற்கத்திற்சேர்ந்தனையெனச் சொல்லுகி
ன்றனர், அத்தலத்திற்போயிருக்கின்ற வெற்றிமாலை புரளும்விசாலமா
கியமார்பைப்பெற்றதாருகனையும் பானுகோபன்முதலிய புத்திரவருக்க
ங்களையும் மந்திரிபிறதானிகள் சேனைத்தலைவர் மன்ன மண்டலிகர் பந்
துக்கள்சினேகிதர்முதலானவர்க ளெதிர்கொள்ளக்கண்டு அவர்கள்போற்
றிச்சூழக்களித்திருக்கின்றனையோ அந்தவாழ்விலழுந்தியிருக்கின்றநீயினி
யொருக்காலிவடம்வந்து என் துயரத்தையாற்றுவது அரிதரிது ஓதுணை
வனேஉன்னைப்பறிகொடுத்து யாதொருதுணையுமின்றிப் பாதவிக்கின்ற
துன்பத்தைநீக்கி தயிரியங்களைச்சொல்லித்தேற்றமனமிரங்காயோ உன்
னைப்பிதாவைப்போலவும் பிள்ளையையொப்பவும்நம்பியிருக்கின்ற என்
னைச்சுத்தமாய்மறந்துவிடலாகுமோ ஓதம்பி சிங்கமுகனேதிரிலோகங்க
ளினும்புகழ்ந்து கொண்டாடத்தக்கதாக யிதுபரியந்தம் என்னுடன்கல
ந்துவாழ்ந்திருந்த செஞ்சோற்றுக்கடனைக்கழித்து கீர்த்திபரனாய் மேலு
ம்ஒருகற்பத்தில் உற்பவித்தவர்கள் செய்யவல்ல கடனையும்முடித்துவி
ண்ணாட்டைச்சேர்ந்தனையோ பல அண்டங்களினும் அடங்கியிருந்தபிரா
ணிகளையலைத்து வெற்றிபரனாய்த் திரும்பிவரும் உன்சேவகத் திறங்களை
க்கண்டுமகிழத்தக்க செல்வச்சம்பத்தினை யிப்பாதகன் பெறுமலடங்கு
ம்காலமும்நேருவதோ அப்பா சிங்கமுகனே உன்னை யென்னவிதமாய்
நினைந்துவந்தனனெனக் கேழ்ப்பையாகில் என்மனதுக் கிசைந்த துணை
வனாகவும் ஆருயிராகவும்உணர்வாகவும்நெருங்கியசுற்றமாகவும்அம்மை
யப்பனாகவும் எனக்குப்பிற்காலம் அரிதாகத் தேடியிருக்கின்ற ஆயிரத்
தெட்டண்டங்களையும் பரிபாலனஞ் செய்யவல்ல சக்கிறவர்த்தியாகவும்சி
வபிரானிரங்கிவந்து சகலசெல்வங்களையுந்தந்துபோகத்தக்கதாகவான் அ
ருமையாகமுடித்ததலங்களாகவும் மற்றுமிராநின்றசகலவளங்களுக்குங்
காரணம் உன்னைய[illegible]யில்லையெனநம்பி உன்னையேபிராணபதமாக

வெண்ணியிருந்தேன் ஐயனே யிந்த உறுதிகளைச்சற்றும் நினையாமல்உ
ன்னுடைத் தமையனை நீங்கி யிந்த மகதயிஸ்பரிச் செல்வச்சம்பத்தை வெ
றுத்துதெய்வலோகபோகத்தினிடத் திச்சைகொண்டுதனித்துப்போய் அ
வ்வாழ்வைத்தனிமையிலனுபவிக்கவுங் கற்றனையோ ஓ துணைவனே நமது
சகோதரன் தாருக னிறந்தசேதியைத் தெரிந்தமாத்திரத்தில் ஒருபுசத்தை
ப்போக்கினவனைப்போல வலிகுன்றிவாடியயான் உன் வீரபராக்கிரமங்
களைக்கண்டுதேறிக் களித்திருந்தனன், அத்தகைய நான் யிவ்விதசெயப்
பிறதாபசாலியாகிய ஓசிங்கமுகனே நீமாண்டனையென்னுஞ் சேதிதெரி
ந்தஉடன்மற்றையபுயமும் வலியும்வீரமும்மானமும் பிராணன் முதலி
யசற்வவளங்களையும்போக்கினவனாய்பிறேதத்தினும்கடைப்பட்டுத்திகை
க்கின்றனன், ஓ துணைவனே உனது திருமுகமண்டலப்பொலிவை இனியெ
க்காலத்திற்காணப்பெறுவேன் என்னன்பே தோழனே தம்பி யின்னமு
மொருகாலம்நீவந்து என்னுடன்கலந்துபேசும் பாக்கியத்தையும்பெற
வல்லனோ உன்னையொத்ததீரனாகியகுமாரன் மாண்டனனென்னுஞ்சேதி
யைநம்மைஅரிதிற்பெற்றதாயாகியமாயை தெரிவளாயின் என்படுவளோ
தமியேனை எவ்விதங்களில்நிந்திப்பளோ யாதுந்தோற்றவில்லையேயெ
ன்றுயிவ்விதங்களாகத் தான்பெற்றிருக்கின்ற அண்டங்களனைத்தும்செ
விடுபடத்தக்கதாகக் கோவென் றாற்றுமோசையைப் பலகாலம் வாடியி
ருந்த மகாவிஷ்ணுவும்-பிரமனும் இந்திரனும்-மற்றவிண்ணவரும்செ
விக்கமுதமாக மனங்குளிரக்கேட்டு யித்தினம்நமது குறைபாடுகளனை
த்தும்நீங்கினமெனக் களித்துச் சந்தோஷமிகுதியினுற் கரங்களைக்கொ
ட்டிஅண்டங்கள்நடுங்க ஆர்ப்பரித்துத் திசைகுலுங்க நகைத்தனர்,
கேட்டீர்களோ சவுனகாதிதவத்தரோ இவ்விதமாக அரிய துக்கசாகரத்தில
ழுந்திக்கோடுசோடெனப்புலம்புகின்ற ராசாதிராசனைத்தேற்றவல்லவ
ரொருவருமில்லாமையால் பெகுநேரம் வாடிவருந்திய சூரபதுமன்தா
னேஒருவகையாகஅச்சோபத்தையொழித்து சற்றுதெளிவுண்டாயெழுந்
துமெல்லமெல்லநடந்து சபாமண்டபத்தைச்சேர்ந்துசொற்னமயமாய்
சிரோரத்தினகாந்திகளை வீசிக்கொண்டிருக்கும் சிங்காதனத்தில் வீற்றிரு
ந்துமானமுங் கோபமும் மனதைவாட்ட நல்லகாரியம் என்பிராணனை
யொத்த துணைவனைக்கொன்ற சிவகுமாரனுடன் நானேபோயெதிர்த்துச்
சண்டைகொடுக்க நிதானித்ததறுவாயிற் சோபமுற்றினும்நீங்கிரோசம்
புழுங்கிவடவைக்கனலையொப்பச்சீறினன், சவுனகாதிரிஷிகளே அத்தறு
வாயில் ராசாதிராசனுக்குப் பெருத்த ஆங்காரத்தை இன்னவிதமெனச்
சொல்லிமுடிவதோ பின்பு சூரன்நடத்தியகாரணங்களைக்கேழ்ப்பீரென்
றுசூதபுராணிகர் பேசத்தொடங்கினர்.

இவ்விதமாகஆயிரத்தெட்டண்டங்களுக்கும்அதிபனையசூரன்
கோபங்கொண்ட தறுவாயிற் கொவ்வைக்கனியினும் விழிகள்சிவந்துஅ
னற்பொறிகள்சிதற ஆழித்தீயைப்போலச்சிறி விழிகளைப்பரப்பிப் பக்க
த்திற்கரங்களைக்கூப்பிச் சற்வாயுதபாணிகளாகநிற்கின்ற வேசமுள்ளஆயி
ரகோடி தூதரைப்பார்த்து நமதுகுடைநிழலிற்பட் டிருக்கின்ற அண்
டங்கடோறும்வாசமாயிருக்கும் ரதகெசதுரகபதாதிகளையும் துரிதமாய்
அழைத்துவரக்கடவீர்களென்று கட்டளையிட்டமாத்திரத்தில்ராசபரமே
ஸ்பரன் பாதாரவிந்தங்களிற்பணிந்துவெளிவந்து வாயுவேகத்தினுங்கடு
கியோடி பொன்னையொப்பப் பிரகாசித்திருக்கும் அண்டங்களில் நு
ழைந்து அத்தலங்களில் வாசஞ்செய்திருக்கின்ற சேனாதிபதிகளைக்கண்டு
அரசன்பணித்தகாரணங்களைத்தெரிவித்தவுடன் சண்டைகிடைத்ததென்
றமனமகிழ்ச்சியினாற் பற்வதாகிருதியாகிய புயங்கள் பூரித்து வானைய
ளாவத்தட்சிணத்தில்யானைகளின்பேரில் பிரயாணபேரிகைகளையேற்றி
முழக்கிவைத்த ஓசையானது செவிகளில் நுழைந்தவுடன் மனவெழுச்சி
பெற்றவீராதிவீரராகியகால்பலங்கள்சற்வாயுதபாணிகளாய்ப்போற்கோ
லத்தைத்தாங்கியும் சொர்ணமயமாகிய தேர்க்காறரும் நீலகிரியையொ
த்தயானைச்சேவகரும்தத்தித்தாவும் குதிரைவீரரும்கூடிகணக்கிறந்தவெ
ள்ளக்கணக்கில்வெளிப்பட்டதறுவாயில் அவர்களுக்குத் தலைவராகவிருக்
கின்றஅவுணராசர்கள் நீண்டவிற்களைத்தாங்கித் தவங்களைச்செய்து கிடை
த்திருக்கின்ற பற்பலதேவப்படைகள் நிறைந்திருக்கும் அம்புறாத்தூ
ணிகளைமுதுகிலிறுக்கி–தோமரம் – பிண்டியாலம்–சூலம்– வச்சிரம்ச
க்கரமுதலிய–படைகளைப்பரித்து வயிரக்கவசங்களைத்தரித்து வீரபட்ட
ங்களையணிந்து வெற்றிமாலைகளை நவரத்தினமயமாகவிளங்கும் கிரீடங்க
ளிற்சூட்டிவீரசெண்டைகளைவலியகால்களிலிறுக்கிச்சொர்ணமயமாயோ
ங்கியிருக்கும்தேர்களில்ஆரோகணித்துத்தமதுசேனைகளைப்போற்றிநட
க்கின்றதறுவாயில்ரணபேரி–செயபேரி–வெற்றிச்சங்கம் - எக்காளை - சின்
னம்–தப்பட்டை–சல்லரிதிமிலைதக்கைமுதலியபோர்ப்பறைகள்கணகணெ
னமுழங்கவும் சந்திரவட்டக் குடைகள் வானத்தை மூடவும் துசபடங்
கள்மேலோங்கிப்படபடென் றசைந்து காட்டவும் இவ்வித ஆடம்பர
ங்களுடன்சென்று ஆதியிலேற்படுத்தியிருக்கின்ற அண்டப் பித்திகை
வாயல்களின்மூலமாகவெளிப்பட்டுவருவதைப் பார்க்குமிடத்தில் எப்ப
டிக்கிருந்ததெனில்முன்னொருகாலம்பிரமனுறங்கிவிழித்ததினப்பிரளய
முடிவிற் சராசரப்பிரபஞ்சங்களைப்படைத்து அகந்தையுற்றகாரணத்தி
னாற்சாமளமேகவண்ணனாகிய மகாவிஷ்ணுவுக்கும்பிரமன் கெற்வப
ரிகாரமாகும்பொருட்டுச்சிவாசினைத்தையும்உண்டுமீட்டும்உற்பிமல

மூலமாகவெளியிட்டதைப்போன்றும் சர்வசங்காரகாலங்கழிந்தவுடன்
தானேதானாகநின்ற தற்பரக்கடவுளாகிய சிவபிரான் தம்மிடத் தடங்கிய
அண்டரண்டபுவன சராசரங்களனைத்தையும்மீள வெளியிடத்திருவுளத்
தெண்ணிதமது திருவடிகளினிடமாகப் பிறிதிவு - அப்பு - தேயு - வாயு - ஆ
காயமென்னும் பஞ்சபூதங்களைப்படைத்து அவற்றின் சம்பந்தப்பட்ட
எறும்புமுதல் யானையீறாகச்சொல்லநின்ற எண்பத்துநான்குலட்சம்சீவ
பேதங்களையும் அண்டபுவனங்கள்விதங்களையும் சிருஷ்டித்துவேதாகமத
ருமசாத்திரமாதியகலைகளையும்வெளியிட்டதற்கொப்பாகவுந்தோற்றத்
தக்கதாகச்சகலஅண்டநிரைகளினிடத்திருந்தும் செயசாலிகளாகியராட்ச
தவீரர்களும்பர்வதாகிருதியாகத் தோற்றும் தேரணிகளும் நீலகிரியை
யொத்தமதயானைக்கூட்டங்களும்பகைவர்மீதுபாயும்வேகமும்மூர்க்கமுமு
ள்ளகுதிரைப்பெருக்குகளும் கணக்கிறந்ததாய் நாற்றிசையினும் நின்று
வீரமாமயேந்திரபுரியைநெருங்கவருமுன்னிலையில்எழுந்த தூளிபடல
ப்பெருக்கினாலும் கொடுமையினாலும் ஆயிரகிரண சமோகங்களை விரித்
துலகங்களைவிளக்கிவரும்சூரியபகவான்தன்வெப்பமடங்கிசாந்திமழுங்கி
யோடவும்அக்கினிதேவன் நடுநடுங்கி சுவாலைமங்கிப்பதுங்கவும் சதுரங்
கபலன்களும்மண்விண்ணெங்கும் அடர்ந்துவரும்நெருக்கத்தினால் சர்
வசாதாரணமாயெங்குமுலவிவரும்வாயுதேவன் சஞ்சரிக்கயிடங்கிடையா
மற்சரீரம்வெம்பிப்புழுங்கி வியர்த்தலையவும் யிதுவுமல்லாமல்அவுணப்
பதாதிகள்ஆரவாரங்களும்தேர்கள்செற்சரத்தொனியைச்செய்தோடும்அ
திர்ச்சியும் மதயானைகள்பிளிறுமொலியும் புரவிப்பந்திகள் கனைப்பினோ
சையும்ஏகமாய்ப்பெருத்தஉற்பாதங்களுக்குத்தாளப்படாமல்அகிலங்க
ள்கிடுகிடென்றசைந்து அதிற்பட்டவையனைத்தும்பட்டகேட்டைச்சொ
ல்லிமுடிவதோமேலும்ராட்சதர்களியதிரோசத்தினொளியின்பெருக்கினால்
வானமுதலியஅஷ்டதிசைகளினும் காடாந்தகாரமாகியயிருள்மூடிச்சீவ
ராசிகளனைத்தும் விழிகள்மயங்கிக் குருடரையொப்ப அலையவும் மண்
மாரிப்பெய்யலுக்குச் சமதையாகப்பரவியதுகளானது சத்தசாகரங்களை
யுந்தூர்த்ததால்அலைகளோய்ந்துபெருக்கடங்கவும் அக்காலத்திலுண்டா
கியஆர்ப்பாட்டங்களினால்அண்டப்பித்திகை நெக்குவிட்டுதிரவும்இவ்வித
உற்பாதங்கள்பெருகநாற்சேனைகளும்பிரளயப்பெருக்கினுமேலிட்டுவ
ந்துகூடுகின்றதைத்தேவர்கள்கண்டமாத்திரத்திற் றிரேகங்கள்நடுநடுங்கி
மனம்பதைத்துநிற்கவும்பயந்தோடியொளிக்கவும்யிடங்கிடையாமற்றி
கைத்துவாடினார், அக்காலத்தில்அவர்களுக்குத்தலைவனாகியஇந்திரன்பிறந்
தவர்களுக்கொப்பாக மதிமயங்கிச் சொரணையற்றுக்களைத்து என்னஉற்
பாதம்விளையவிருக்கின்றதோவென்னும் ஏக்கத்தினால்பிரமித்துப் பார்த்

திருத்தனன், மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் மருண்டு அம்மம்மயி
தென்னபுதுமை நமதுபடைப்பினுமேலிட்டுக்காட்டுகின்றதால்நமக்கெ
ன்னசேடுமுடிப் பிருக்கின்றதோவென்று சங்கையுற்றிருக்கவும்மண்வி
ண்திசாதிசைகள்சாகரவெல்லைகள் அஷ்டகுலாசலங்கள்முதலிய பர்வதப்
பரப்புகள் வனங்கள்வனாந்திரங்கள் பாதலவிரிவுகள் மற்றுமிராநின்றத
லங்களெங்கணும் ராட்சதவெள்ளங்களும் ரதசதுரங்களும்எள்ளிட
மிடமில்லாமல்அடர்ந்து வெளியிடையின்றிவருகின்றபடைகள் மகாவி
ஷ்ணுவாசஞ்செய்யும் வைகுந்தநகரத்திலும் பிரமன்பதியாகிய மனோவ
திமுற்றும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள்வீற்றிருக்கின்றபதங்களினு
ம்முப்பத்துமுக்கோடி தேவர்களிருக்கும்நகரங்கள் இந்திரனுக்குரா
சதானியாகவிளங்கும் பொன்னுலகமுற்றும் மற்றகின்னரர்-கிம்புருட
ர்-கெருடகாந்தருவர்- சித்தவித்தியாதரர்-பன்னகர்- உவணர்-நாகர்-ஏ
காதசருத்திரர்-துவாதசாதித்தர்கள்-முதலானவர்கள் அமர்ந்திருக்கி
ன்றபதங்களினுஞ்சூரியர் சந்திரர்முதலியநவக்கிரகங்களோடுங்கெற்களி
னுஞ்சத்தமேலங்களினும் மற்றுமிராநின்றயிடங்களெங்கணும் அடர்ந்து
போவதற்கிடமின்றி நெருக்கித்துநின்றது, கேட்டீர்களோ -சவுனகாதிரி
ஷிகளேமேற்குறித்தஅண்டகோடிகளினின்றும்பெருகிவரும்சதுரங்கச்
சேனைகளின் தூசிப்படைகள் நூறுகோடி யோசனைப்பரப்பில்அடர்ந்து
வருகின்றதெனச்சொல்லுவோமாகிற்றுனையணிகளின் பெருக்கத்தையும்
அவற்றின்பெருமிதங்களையும் எத்தகையாலுங்கணித்துப் பேசப்படுவ
தன்றுமேலுங்கூறியஉயிர்வாழ்க்கையைப்பெற்றிருக்கின்றசக்கிரவர்த்தி
கள்ராசராசக்கள்கூறுமன்னர்களாதியர்படைத்தசேனைகளின் பெருக்கத்
தைப்போலச் சூரபதுமன்கிடைத்திருக்கின்ற சதுரங்கவெள்ளங்களின்
விரிவைக்கணித்துப்பேசுவதற்குச் சிற்றறிவையுடையால்மதிக்கப்படுவ
தோ அல்லது கணிதசாத்திரப்பிரமாணங்களிற் குறித்திருக்கின்றதொகை
களிற்படாதெனவெனச் சொல்லுவோமாயின் அச்சேனைகளின் பெருக்
கத்தைநிதானிக்கவும் போதுமோ உவமானக்குறிப்பினாலாவது பேசிமு
டிவதன்றுமுற்றிப்பெருகிய தூசிப்படையானது விரமாமகேந்திரபுரி
யெல்லைமுற்றினும்நெருங்கி யிடமில்லாமல் மேலிட்டு யிந்தஅண்டத்தி
ன்பரப்பெங்கணும்நிலமட்போதில் நிறைந்தகாரணத்தினால்அக்காலத்தி
லெழுந்தநால்வகைச் சயின்னியங்களின்பெருக்கை என்போலிகளாற்க
ணித்துக்காட்டமுடிவதோ இவ்விதஉற்பாதங்களைக் காட்டிச்சேர்ந்தவ
ருகின்றதறவாயில் தூதர்கள்வாயுவேகத்திலுங்கடுகியோடித்திருச்சபை
யைச்சேர்ந்து சூரபதுமன் பாதாரவிந்தங்களிற் பணிந்து ராசாதிராச
னேதேவரீர்கட்டளையின்படிக்கு மேலண்டங்களிலிருந்துவருகின்ற சே

ளைகளின்பெருக்காளாது யிப்பட்டண நாற்பாங்கிலும் யிடமின்றித்தே
ங்குகின்றது மேலும்முன்னணிமுழுமையுஞ் சேர்வதற்கிடம்பெறுமல்
வானவெல்லைமுற்றும்அடர்ந்துநிற்கின்றதென விண்ணப்பஞ் செய்தந
ருவாயிற் சூரபதுமன்களித்து நல்லகாரியம்யினிநாமசப்படலாகதென்
றெண்ணிச் சொற்ணமயமாய் ரத்தினகாந்தியைவீசிக்கொண்டிருக்குஞ்சி
ங்காதனத்தைவிட்டிறங்கி வெளிவந்து தன்னாமனையைச் சேர்ந்து நீரா
டிப்பரிசுத்தனாய்க் காலைக்கடன்களைமுடித்துக்கொண்டு பிறகாசம்பொ
ருந்திய நுதலிற்றிருநீறணிந்தவனாய்ப்போசனச்சாலைக்குப்போய்ப்பரிசன
ர்திரண்டுபரப்பிய நவரத்தினமயமாகிய பீடத்தில்வீற்றிருந்துவிசாலமா
யிருக்கின்ற சொற்ணப் பள்ளயத்திலும் கிண்ணங்களிலும் - கசப்பு - தித்
திப்பு - புளிப்பு உவர்ப்பு - துவர்ப்பு - கார்ப்பு - யிவ்விதஅறுவகைசுவைக
ளினாற்செய்யப்பட்ட மெல்லல் - தின்னல் - விழுங்கல் - நக்கல் - பருகல் -
என்னும்ஐவகையுண்டியையப்பாகமாகவும் சுவைமிகுதிபெறவும் போக்கி
யமுள்ளதாகவும் செய்திருக்கின்ற அன்னமுதலிய பதார்த்தங்களைப்படை
த்து உபசரித்தூட்டத் திறுத்தியாகப் பொசித்தனன், ஓரிஷிகளே அந்த
போசனத்தை விஷமாகநினைப்பதோ தேவயோக்கியமாகிய அமுதமாக
நினைப்பதோ தெரிந்துகொள்ளக் கடவீர்கள், இவ்விதமாகத் தின்றெழு
ந்து கைகால் சுத்திசெய்துகொண்டவனாய் மற்றொருமண்டபத்திற் பரப்
பியிருந்தசிங்காதனத்தில்வீற்றிருந்து ஸ்ரீகந்தத்தேய்வையை திரேகமெ
ங்கணும்பூசி புனுகுசவ்வாது முதலிய கலவைச்சாந்துகளை யணிந்து திவ்
வியசுகந்தங்களைவீசும் பாரிசாதமலர்களினாற் சோடித்திருக்கின்றசரங்
களைச்சிகையிலும்மார்பிலும்சாத்தி முன்னர்த்தரித்திருந்த வஸ்திராபரண
ங்களைமாற்றி விலையுயர்ந்தபொன்னுடையையுடுத்துசிரோரத்தினவகைக
ளினாற்சோடித்திராநின்ற வயிரமுடியை சூரியன் உதையகிரியிற் காட்டு
மாறுபோலச்சிரத்திலணிந்து வாகுவலையங்களைப் புசங்களிற்சேர்த்தும
ற்றப்பணிதிகளை மனதுக்கிசைந்தபடிக்குத் தரித்துக்கொண்டு வெளி
வந்து ஆயுதச்சாலையைச்சேர்ந்துவீரபட்டத்தைநெற்றியிற்றரித்துவெற்
றிமாலையைமகுடத்திற்சுற்றி வயிரக்கவசத்தை அழகிய திருமார்பிற்சேர்
த்துமந்தரத்தையொப்ப விளக்கும்வில்லைத் தொழுதெடுத்துத் தோளில்
மாட்டிஅட்சயத்தூணிரத்தை முதுகிலிறுக்கி வீரவாளாயுதத்தை யிடை
யிற்செருகிபரமசிவமளித்த பாசுபதாஸ்திரம் மற்றதேவர்கள் தந்ததெ
ய்வப்படைகளைப்பரித்து வெளிவந்தவனாய் பக்கங்களிற்காத்திருக்கின்ற
காரியப்பேறைக்குறித்துச் சகலாயுதங்களும்நிறைந்து உறுதிபெற்றிருக்
கின்ற ஆயிரகோடிசேமத்தேர்களை முஸ்திப்புசெய்யும்படிக்குக் கட்ட
ளையிட்டபின்புபரமன்படைத்துக்கொடுத்திருக்கின்றகேடுபடாதஇந்திர

ஞாலத்தேரையும்சிங்கவாகனத்தையும்முந்திக்கொண்டுபோகும்படிக்கு
ப்பணித்து எதிரில்நிற்கின்ற தேர்ப்பாகனைப்பார்த்து பலவிதசிறப்பு
களைக்கொண்டிருக்கும் தமதுதேரைக்கொண்டுவரும்படிக்குத் திட்டஞ்
செய்தமாத்திரத்தில் அவர்கள்சேர்ந்தோடி நவரத்தினமயமாய் வானத்
தினையளாவும் உன்னதமுள்ளதாய் பொன்வண்டில் அச்சு-மச்சு-குத்துக்
கால்-கொடிஞ்சை-கொடைமுதலிய சிறப்புகளைப் பெற்றிருக்கின்றபாரி
த்ததேரை அலங்கரித்து யானைகளுக்குவயிரியாய் மிருகங்களுக்கரசாகவி
ருக்கின்றவீரசிங்கங்களெழுபதினாயிரவற்றையும் வேகமுள்ள எழுபதினா
யிரம்புரவிக்கூட்டங்களையும் எழுபதினாயிரம்பூதவினங்களையும் எழுபதி
னாயிரம்புலிக்கூட்டங்களையும் சீர்படுத்தி அணியணியாகப்பூட்டி மற்ற
அலங்காரங்களையும் சோடித்தனர், சவுனகாதிதவத்தரோ அந்தமகத்துவ
முள்ளரதத்தின்பெருமையையும் வரலாற்றையும் சொல்லக்கேழ்ப்பீரா
கபூமண்டலத்தெல்லையினும்பரந்தவிடத்தைப்பெற்றதாய் ஊழிகாலத்தெ
ழும்சத்தசாகரங்களினும்மேலிட்டுக் கெற்காத்தொனிகளைச்செய்தோட
வல்லதாய்ப் பற்பலபுவனங்களைக்கொண்டிருக்கும் ஆயிரகோடி அண்ட
ங்களையுந்தன்னிடத்திற் பரிக்கவல்ல வலியினைப் பெற்றதாய்ச் சிங்கத்
துவசத்தைத்தாங்கியதாய்ச் சர்வசங்கார காலத்தெழும் பிரசண்டமாரு
தத்திலும் கடுகியோடும் வேகத்தைக்கிடைத்ததாய்த் தன்னிடத் திருக்கி
ன்றஉருளைகள்செற்கரத்தொனியைச் செய்தோடு முன்னிலையில் நேர்ந்த
பாரித்தபற்வதங்களையும் பொடிபடுத்துந் திராணியுள்ளதாய்ச் சூரியன்
வெப்பத்தையடக்கும் கொடிகொடைகளைப்பெற்றதாய்ச் சத்தசாகரங்
களும்அதின்மத்தியிலிராநின்றதீவுகளும்அதைவளைந்திருக்கும்பெரும்
புறக்கடலும் அதைச்சூழநிற்கும் சக்கிரவாளகிரியும்அணிபடவிளங்குவ
தைப்போலப் பொன்னினாலும் நவரத்தினவகைகளினாலும்சோடித்திரா
நின்றசித்திரப்பாவைகள்-டெக்கையங்கள்-மகரதோரணங்கள்-மணிக
ள்விதங்களைப்படைத்துசொற்ணப்பித்திகையைக்கொண்டுவிளங்கும்அ
ண்டத்துக்கொப்பாகப் புடைபரந்திருக்கும் பெருமிதத்தைப் பெற்ற
துதேவர் முதலிய சகலராலும் புகழ்ந்து போற்றித்தொழும் சிறப்பினை
ப்படைத்துவாழும்சூரபதுமன் ஆதியிற்செய்த யாகத்தில்விழுந்திறந்து
பரமசிவ கடாட்சத்தினாலெழுந்தகாலத்தில் அவனுடன்வெளிவந்த மகி
மையையுடையதமேலும்சமர்க்களத்தில் எதிர்த்தசத்திராதிகள்தமதுப
டைப்பெருக்குடன்சின்னபின்னப்பட்டுப் புறந்தந்தோடச்சாடும்வெ
ற்றிப்பாட்டைப்படைத்தது பிரமனழியுங் கற்பாந்திரத்தினும் நாச
மடையாதநித்தியத்தைப்பெற்றதுகணக்கிறந்த திவ்வியபாணங்களையும்
ஆயுதவிதங்களையும்பரித்து தேவர்களுக்குள்ளசத்தியையுடையதுமுற்

காலத்திற்சகலபேறுகளையுங் கடாட்சித்த சிவபிரான் நிருமித்துக்கொடுத்தஇந்திரஞாலத்தேரையொத்த மகிமையைப்பெற்றது மனத்தினால்அளந்துபுகழவொண்ணாதசுந்தரமிகுத்தது, இவ்விதமகிமைகளைப்படைத்திருக்கின்ற ரதத்தைஅலங்கரித்துத் துரத்திவந்து ராசராசேஸ்பரனாகிய சூரபதுமன்முன்னைம்நிமத்தியகாலத்திற் சிங்காசனைப்போலப் பாய்ந்து நடுப்பிறதேசத்தில்விளங்கும் உன்னதமுள்ளபீடத்தில் வீற்றிருந்தனன், அத்தருவாயில்அவுணமுதியோர்கள் பலர்திரண்டு ராசாதிராசனேசெயப்பிறதாபத்தைப்பெற்றுவாக்கடவையென்று பலவாழ்த்துகளைப்பேசி புஷ்பங்களையிறைக்கவும் சுமங்கிலிமங்கையர்கள் பற்பல ஆலங்களாச்சுழற்றிநிற்கவும் பட்டுவர்புகழவுங் வித்வச்செனங்கள்டாமாலையைத் துதிக்கவும் பின்னாங்குழல்-திருச்சின்னம்-வலம்புரிச்சங்கங்களை முழக்கவும்இவ்விதசம்பிறமங்களை நடத்திவருகின்றதருவாயில் சூரபதுமன் சட்டளையின்படிக்குப்பலசாரதிகள் வார்களைகரங்களிற்பற்றிக்கொண்டுசவுக்கினைக்காட்டித்தேரைமுடுக்குகின்றகாலத்தில் ரணபேரி-செயபேரி-தப்பட்டை-துடுமு-சல்லரி-மல்லரி-எக்காளை- குடமுழவுமுதலியபதினெண்வாத்தியங்களையும் கடையுகத்தெழும் சமுத்திரத்தினும் அதி-ஓசையெழத்தாம்தாமெனமுழகிப்போகவும் பலஅவுணவீரர்கள் வெண்சாமரை ஆலவட்டங்கள்அருகுபூச்சக்கிறக்குடைகள்துசபடங்கள்முதலியசின்னங்களைத்தாங்கி அசைத்துநடந்தனர், அதுவெப்படிக்கிருந்ததென்றால் ஆயிரத்தெட்டண்டங்களையும் வெகுகாலமாய்அரசுசெலுத்திவரும் சூரன் ஆணையாக்கினைகளனைத்தும் மங்களகரமாகிய உருக்கொண்டு சூழ்ந்திருப்பதையொத்தது, தேர்வீரர்கள்-குதிரைச்சேவகர்-யானைச்சூரர்கள்-பலதிறச்செட்டைகளைத்தரித்துச்சற்வாயுதபாணிகளாயிரர்நின்ற ராட்சதப்பிறமுகாள் யிருமருங்கினும்போற்றித்துடரவும் இவ்விதஆடம்பரங்களுடன் நவரத்தினமயமாகியமாடமாளிகைகள்-உப்பரிகைகள்-மண்டபங்கள்-சித்திரக்கூடங்களாதியாக யிருமருங்கினும்நெருங்கி விசாலமாய்நீண்டிருக்கின்றராசவீதிகளைக்கடந்துமேருகிரிக்கிச்சமதையாசவானத்தையளாவி பலநிலைகளைப்பெற்றச் சொர்ணமயமாய்நவரத்தினக்காந்திகளைவீசியிருக்கும் வடபாரிசக்கோட்டை மதிலுக்கணியாகவிளங்கும் கோபுரவாயலைத்தாண்டி வெளிவந்த ராசாதிராசனைக்கண்டமாத்திரத்திற் பெரும்புறக்கடலைப்போலநெருங்கியிருந்த சயின்னியங்கள் சத்தசாகரங்களுங்கொதிப்பெடுத்தடங்கவும்அஷ்டதிசைகளும்செவிடுபட்டுச்சோரவும்வானநாடுகள்திடுக்கிட்டஞ்சவும் நட்சத்திரங்கள்பலபலென்றுதிரவும் செயம்செயமென்றுர்ப்பரித்துக் கடையுகத்திலெழும்வடவாமுகாக்கினிக்கொப்பாகவந்து சூழ்ந்துகொண்டனர், அப்பாதகர் சுமையைப்பரிக்க

ப்படாமையாற் பூமிதேவியானவள் தத்தளித்தேங்கவும் அதைத்தாங்கி
யிருக்கும் ஆதிசேஷன் விழிகள்பிதுங்கி ஆயிரம்பணாமகுடங்களினாலும்
வலிகொண்டுதாங்கி நெளிந்து நெளிந்து வாடவுமாயிற்று, அத்தறுவா
யிற்பல்லாயிரகோடிராட்சதர்கள் யானைகளின்மீதினும் ஒட்டகங்களினிட
த்தினும் புரவிகளின்பேரினும் சகடங்களினும் ரணபேரி-செயபேரி-ப
றை குடமுழவு தட்டை- சாகளம்- சின்னம்- எக்காளம்- துந்துமி- துத்
தாரிமுதலியபோற்பறைகளை அண்டங்கள் திடுக்கிட்டுவாடும்படிக்குமுழ
க்கிப்போகவும் வீராதிவீரர்கள்கால்களிலணிந்திருக்கும்வெண்டையங்க
ளாகலின் கலீலெனச்சத்திக்குமோசையானது புவனங்களெங்கணும்கடை
யு ஒலிக்கொப்பாக அதிரவும் யிவ்விதஆடம்பரங்களுடன் நடக்கின்ற
சதுரங்கச்சேனைப்பெருக்கி னிடத்திருந்தெழுந்த தூளிபடலமானதை
ப்படிக்குக்காட்டுவதெனில் கடையுகமுடிவிற்சத்த சாகரங்களையும்பருகி
மேலெழும்வடவைக்கனலின் புகைப்படலத்தைப்போலத்தோற்றவும்யி
வையன்றியும் விண்ணகத்தும்மண்ணினிடங்களினும் திசாதிசைகளினும்
விசாலமாகப்பரந்திருக்கும் கடல்கடோறும்அடர்ந்துலவுவதைப்பார்க்
குமிடத்திற்சேனைப்பருவத்திற்பின்பனித்தூவலுக்குச்சமதையாகவிரு
ந்தது, இவையன்றியும் ராசமார்த்தாண்டனாகிய சூரபதுமன்வாசஞ்செய்
யும்செடில்தலமாகிய வீரமாமயேந்திரபுரத்தின் வீதிகளில் அடர்ந்திரு
க்கும் நவரத்தினமயமாகியமாடமாளிகைகள் கூடகோபுரங்கள் முதலி
யதலங்களிற்பெருந்தெழும் அகிற்சந்தனாதிதூபங்கள்சுண்ணப்பொடி
களுடன்கலந்துபோவதெப்படிக்கிருக்கின்றதெனில், மேகசாலங்கள்ச
முத்திரசெலத்தையுண்டு மின்னியெழுவதுக்கொப்பாகவிளங்கவும்யிவை
திற்கப்பற்வதாகிறதியாகபாரித்ததிரோகத்தைப்படைத்துமும்மதங்களை
யும்அருவிகளைப்போலப் பெருக்கிச்செல்லும் யானைகளின்மீதினும்தே
ர்களின்சிகரங்களினும் ராட்சதவீரர்கரங்களினும் விளங்குகின்ற துசப
டாங்கசைவதை யோசிக்குமிடத்தில் மாரிகாலத்தில் யிடை விடாமற்
சொரியும்திவலைகளினால் வருந்திப்பாந்தோடும் கொக்கினங்களைப்போ
லக்காட்டவும் அச்சேனைப்பெருக்கின் மத்திமத்தியில் கணக்கிறந்தசெம்
பட்டு வெண்பட்டுக்கொடைகள்காணப்படுவதைப் பார்க்கும்போதும
ண்ணிடம்போதாமல் விண்ணகத்தின் மாற்கமாகச் செல்லும்பதாகைகளி
ன் அடர்பினாலும் துசபடங்களின்பெருக்கினாலும் காடாந்தகாரமாகிய
யிருள்பெருத்துமூடியிருப்பதைச்சூரன் கண்டுதன்னுடையாக்கினையிலட
ங்கியிருக்கும் அண்டங்கடோறுமிராநின்றசூரியசந்திரரைத்தருவித்துயி
ருளைப்போக்கிவருவதாகநினைத்தியதைப்போலக்காட்டவும்இவ்விதஅற்
புதச்சிறப்புகளைவிளைத்துச்சதுரங்கச்சேனைகளும் நெருங்கிப்பரந்துநட

க்கும்போது புசபெலபராக்கிரமசாலியாய் ஆயிரத்தெட்டண்டங்களுக்
கும்ராசபரமேஸ்பரனாய் வயிரத்திரேகத்தைப் படைத்திருக்கின்ற சூரம
காராசன் சொர்ணமயமாய் ரத்தினகாந்திகளை வீசியிருக்கும் பாரித்த
தெய்வீகத்தேரின்மீது நீலகிரியானது மேருவின்புறத்திற் சேர்ந்தமா
றுபோலக்காட்ட நடுப்பிரதேசத்தில் நட்சத்திரக் கூட்டமத்தியிற் சோ
டசகலைகளைவாய்ந்த பூரணச்சந்திரோதயத்தைப்போலப் பலதிசையினும்
விழிகளைப்பரப்பிச் சேனைகளின் வரிசைக்கிரமங்களைப் பார்வையிட்டுக்
கொண்டு ரணக்களத்தைநோக்கிப் போகின்ற தருவாயில் தூசிப்படை
யானது சிவசுப்பிரமணியதேவர் வாசமாயிருக்கின்ற பாசறைவிடுதியை
ச்சூழமேலெங்கனும் வளைந்துக்கொண்ட தருவாயிற் கோடைகாலத்தில்
மேகங்களாலவை வானமெங்கனுமூடிப்பருத்த திவலைகளையிறைக்குமா
றுபோலச்சூரன் முன்னணியில்வந்த நால்வகைச்சேனைகளும் சூழ்ந்தகா
ரணங்களைத் தேவர்க்கள் கண்டமாத்திரத்திற் றிடுக்கிட்டு ஐஐயோ ராட்
சதப்பாதகர் நம்மவரனைவரையும் யிவ்விதமாக மடக்கிக்கொண்டதைப்
பார்க்குமிடத்தில் ஏதோசிலகெடுதிக் கேதுவாகக் காணுகின்றதென்னும்
பரிவினால் மனமிரங்கி விழிகளில் நீரைப்பெருக்கிப் புலம்புற்று வாடி
த்திகைத்துப்பார்த்திருக்கவும் இச்சம்பவத்தைத்தெரிந்த இந்திரன்பிர
மித்துப்பாதகரென்செய்வரோவென்னும் எக்கறவினால் பதுங்கயிடந்
தேடவும் யுகாந்தமுடிவிற் சராசரப்பிரபஞ்சங்களைத் தகித்தொடுக்கவல்
லகொடுமையைப்படைத்திருக்கின்ற அக்கினிதேவனும் பிரசண்டவேகத்
தைக்கொண்டிருக்கும் வாயுதேவனும் தங்கள்ஆற்றலடங்கி பதைபதை
த்துத் தேகம்வெந்து வியர்த்தொடுங்கவும் சேனைத்தலைவர்கள் முற்ப
கல்சிங்கமுகனாற்பட்ட வருத்தங்களை நினைந்துநினைந்து யித்தருணத்தி
லென்னகெடுதிகள் நேரவிருக்கின்றதோவென்னும் பயப்பிருந்தியினால்
தேகம்நடுக்குற்றுப் புழுங்கிவாடவும் பூதப்படைகள் ஆலகாலத்தை
நேர்ந்த மன்னுயிரைப்போலப் பதைபதைத்து ஒருவர்முகங்களை யொ
ருவர்பார்த்துக் கவலையிற்பட்டு மருண்டனர், சவுனகாதிரிஷிகளே அத்
தருவாயிற் சிவகணங்கள்பட்ட துக்கவருத்தங்களை யென்னென்றுசொ
ல்லப்படும் தாபாக்கினியிற்பட்ட மிருகராசிகளைப்போல வுழன்றலைந்த
னர், இவ்விதங்களாகச் சகலரும் தியங்கிமயங்கி மதிமருண்டு வாடுவதை
யும் புசபெலபராக்கிரமசாலியாகிய சூரபதுமன் வரவையும் அவனுடன்
செல்கின்ற சதுரங்கச்சேனைகளின் பெருக்கையும் மற்றகாரணங்களனை
த்தையும் -மகாவிஷ்ணு-பிரமன்- திசைக்காவலர் முதலாயினர்தெரிந்து
அதிகதுக்கசாகரத்திற்பட்டு வருந்தினவர்களாய் யினி தாழ்க்கலாகாதெ
ன்றெண்ணி அந்சேசிரமத்திற் சண்முகப்பெருமான் வீற்றிருக்கின்றதி

குச்சலையைச்சேர்ந்து பெருமூச்சுகளைவிசித் திரோகமுற்றும்பியர்க்கக்
கர்த்தன்பாதாரவிந்தங்களிற் பணிந்தெழுந்தவர்களாய்க் கரங்களைக் கூப்
பிக்கொண்டு யிதனை விண்ணப்பஞ் செய்வதாயினர், ஐயனே தேவரீர்சி
ங்கமுகனைவாட்டிய சேதியைக்கேட்டமாத்திரத்திற் சூரபதுமன் அதிக
விராவேசத்துடன் தன்குடைநிழலிற்பட்ட ஆயிரத்தெட் டண்டங்களி
லும்நெருங்கியிருந்த சதுரங்கச்சேனைப் பெருக்குகளையுந் தருவித்துக்
கொண்டு அவர்களுடன்கலந்து நம்முடனெதுத்துப் போராடிச்செயப்
பிறதாபத்தைப்பெற்றுப் போகநினைந்தவனாய் அநிகஉற்பாதங்கள்விளை
வதாகப் பட்டணத்தைக்கடந்து வருகின்றனன் அதற்குமுன்னம் நாசி
ப்படையானது நமதுபாசறைவிடுநிலைச் சூழவளைந்துக்கொண்டனவெ
னவிண்ணப்பஞ்செய்த காரணங்களைத் திருச்செவிகளினேற்றுசிறுநகை
கொண்டு பன்னிருபுயாசலங்களைப் படைத்திருக்கின்ற எமதிறைவனாவ
ர்தமதுபக்கத்தில் காத்திருக்கின்ற வாயுதேவன்மீதில் விழிகளைப்பரப்பி
யமாத்திரத்திற் கர்த்தன் திருவுளக்கருத்தைத் தெரிந்துகொண்டு துரித
மாகப்போய்த் தெய்வீகம்பொருந்திய திருத்தேரை யலங்கரித்து புரவி
களையணியடப்பூட்டித் தன்வருக்கத்தவருடன் உளுவுகோல்களைக் கரங்
களிற்பற்றி வார்களைத்தாங்கி முன்னணியில்விளங்குகின்ற கீழ்த்தட்டில்
வீற்றிருந்து செற்காத்தொனிகளுடன் ரதத்தைத்துரத்திவந்து முகவா
யிலிடத்தில்நிறுத்தி அறிக்கையிட்ட மாத்திரத்திற் கடப்ப மலர்மாலை
யையணிந்த கந்தசுவாமியார் சிரோரத்தின காந்தியை வீசியிருக்கும் சிங்
காதனத்தைவிட்டிறங்கி-எழுவாயுதம்- வெற்றிவேலாயுதம்-சூலம்- வச்சி
ராயுதம் மின்னலையொத்து விளங்கும் வாளாயுதம்- கேடயம் - சக்கரம்-
தண்டாயுதம் - தங்கக்கட்டுகள் பூண்டிருக்கும் - வில்- சரம்- எறிவேல்- இவ்
விதச்சிறந்தபடைகளைப் பன்னிருகரங்களிற் பரித்தனர், சவுனகாதிரிஷி
களே தேவதேவோத்தமனாகிய சரவணபவன் திருக்குறிப்பின்வண்ணம்
பணிவிடைகளைச் செய்யப்பெற்றதால் அவைகள் செய்தபாக்கியத்தை யி
ன்னவிதமெனச் சொல்லிமுடிவதோ பின்பு பிரமன் - விஷ்ணு - இந்திர
ன் முதலானவர்கள் சூழ்ந்துபோற்றச் சபாமண்டபத்தைக்கடந்து கோ
புரவாயலின்புறத்தில்வந்து சொர்ணமயமாய்நிற்கின்றதேரினிடத்திற்பா
ய்ந்து அரியணையில்வீற்றிருந்தகாட்சி எப்படிக்கிருந்ததெனிற் பூர்வத்
திற்துவாதசாதித்தர்மத்தியிற் சிவபிரான்தோற்றநின்றகோலத்துக்கொப்
பாகக்காட்டியது, அத்தருவாயிற்செயசாலியாகியவீரவாகுதேவர்மற்றது
னைவர் இலக்கர்படைத்தலைவர்களும்சற்வாயுதபாணிகளாய்த் தத்தமதுவா
கனங்களிற்சேர்ந்து கர்த்தனைப்புடைசூழ்ந்துப் போற்றிநிற்குந்தருவா
யில் இவ்வெழுச்சியைத்தெரிந்த இரண்டாயிரவெள்ளம் பூதப்படைகளு

ம்பிரளயகாலப்பெருக்கைப்போலயினாச்சவிட்டுக்கொண்டுவெளிவந்து
திசைகளைத்தாவியிருக்கின்ற கிளைகளைவாய்ந்த மராமரங்கள் குலகிரிகளை
யொத்தபர்வதங்கள் — யிருப்புலக்கை — வளைதடி — தண்டாயுதமுதலியப
டைகளைத்தாங்கிக் குமாரதேவரைத்தொழுது பெரும்புறக் கடலையொப்
பவளைந்துநடக்கின்றதறுவாயில்மகாவிஷ்ணு—பிரமன்—இந்திரன்முதலா
னவர்கள் மனமகிட்சியுடன் தமக்குரிய வாகனங்களிலேறி யிருமருங்கி
னுஞ்சூழ்ந்துபரிமளமிகுந்தபாரிசாதமலர்களைக் கந்தன்மீதிறைத்துசெ
யசெயவெனவாழ்த்தித்தொடர்ந்தனர், இவ்விதஆடம்பரங்களுடன் சற்வச
ங்காரகாலத்திற் சராசரப்பிறபஞ்சங்களனைத்தையும் தமது நுதல்விழிக்
கனலில்மாற்றவல்ல தமதுதாதையைப்போலச் சத்தசாகரங்களும் பெரு
ம்புறக்கடலும்ஒன்றுபட்டுத்தேங்கிநிற்பதுக்கொப்பாக எங்கணும்அட
ர்ந்து வீதியிருக்கும்மாட்சரச்சயின்னியங்களின்மீதில் பாலசுப்பிறமணி
யதேவர்செல்லுகின்றதறுவாயிற் பூமண்டலம்வானமெல்லை திசாதிசைக
ளெங்கணும்நெருங்கி வீராவேசங்களுடன் ஆற்பாட்டங்களைச்செய்துநி
ற்கின்ற அவுணப்பாதகர்நிலைகளையும்வீரத்தன்மைகளையும் கோரரூபங்க
ளையும்மற்றகொடுமைகளையும் பூதப்படைகள் கண்டமாத்திரத்தில்மனங்
கலங்கிஏங்கினவர்களாய்க்கூட்டங்கூட்டமாகச்சேர்ந்துஇதனைப்பேசிக்
கொள்வதாயினர், உலகங்களைவாட்டிக் கொடுங்கோலினைச்செலுத்திவரு
ம்செயசாலியாகிய சூரபதுமன்பூர்வத்திற் செய்திருக்கின்றதவங்களின்
முயற்சியினாற்பெற்றிருக்கின்ற ஆயிரத்தெட் டண்டங்களிலுமிருந்தரா
ட்சதப்பாதகரனைவரும் திரண்டுவந்ததாகக் காணுகின்றது ஓரண்டத்திலி
ருப்பவர் இவ்விதமாகவானகம் வையகம் திசாதிசைகளெங்கணு நெருங்
குவதரிதரிதுமேலும் அவர்களிற்கணக்கிறந்தவெள்ளம் மாண்டுபோயின
ர், யிவையன்றியில் யிந்தஅவுணரைப் பார்க்குமிடத்தில் வாமுயற்சிகளிற்
சிறந்தவர்களாகவும் மாயவித்தைகளில்முக்கியராகவும் புசபெல பராக்
கிரமசம்பத்தைப்பெற்றவர்களாகவும்பற்பலபோர்களைக்கடந்துகைகண்
டவர்களாகவும் வலிக்கொப்பற்றவராகவும்காணுகின்றனர், யிதுவுமல்லா
மற்செம்பட்டமயிர்விளங்கும் அளவற்ற சிரங்களையும் பலகரங்களையு
ம்வலியகால்களையும்பெற்று கோபமே குடிகொண்டிருக்கும் மனதையு
டையவர்களாயுமிருக்கின்றனர் இவர்கள்திறங்களையோசிக்குமிடத்தில்தெ
ய்வலோகவாசிகளாகியவிண்ணவர்புயவல்மையையடக்கிச்சகலசெல்வங்
களையும்பறித்துக்கொண்டு துக்கசாகரத்திலழுந்திவாடப்பொருதுவென்ற
சூராகும்உலகங்களிற்சொல்வதின்றகொடுமைகளனைத்துக்கும்வரம்பா
கத்தோற்றி மேகசாலங்கள் கடலிற்படிந்து செலத்தைப் பருகுமாறு
போலச்சிவராசிகளைக்கொன்றுதின்றுஉதிரபானஞ்செய்துகளிக்கும்கொ

டியசெய்கையைப் பெற்றவர்கள் சிருஷ்டிகர்த்தனாகிய பிரமனொருகால
மெடுத்துவாதாடினும்பின்னிடையாமற் பொருதுவெல்லுந்திறமுடை
யவர்கள் எமதருமராசன் அரசாட்சியைமாற்றி ஆயிரம் யிதழ்க்களைவாய்
ந்தபொன்னந்தாமரைப் பீடத்தினனாகிய பிர்மதேவன் படைப்பையும்
மறைக்கும்வன்மையைக்கிடைத்தவர்கள் பூமண்டலமெல்லையி லடங்கியி
ருக்கின்றமன்னுயிர்களனைத்தையும் கவளீகரமாக விழுங்கியபோதினும் பசி
யடங்கப்பெருத்தபண்டியைப்படைத்தவர்கள் அண்டவணிகளை அல்லோலகல்
லோலப்படுத்தும் வலியகரங்களைப்பெற்றவர்கள் உதிரத்தை யொப்பச்
சிவந்து எக்காலத்துந்தீப்பொறிகளை யிறைத்துவரும் முண்டைக்கண்க
ளைப்பெற்றவர்கள் கடலைப்போலவிரிந்திருக்கும் பேழ்வாயைக்கிடைத்
தவர்கள் சலனமற்றசெயப்பிரதாபங்களைக்கொண் டிருப்பவர்கள்கொலை
களவுகட்காமம் வஞ்சகமெனச்சொல்லும் பஞ்சமாபாதகங்களுக்குமா
தாரஸ்தானமாகவிருப்பவர் சூரியசந்திரர் தங்கள் கெதியிற்போமுன்னி
லையில்நடுநடுங்கிமெல்லவோய்ந்தோய்ந்து போகத்தக்கதாய்வானத்தை
யளாவிநிற்குஞ் சிரங்களைப்படைத்தவர்கள் சத்துராதிக ளெத்தகையரொ
ளிரும்எதிர்த்தகாலத்தில் முன்வைத்தகாலைப்பின்வாங்காமற்சாடிக்கொ
ல்லும் கொடுமையைப்படைத்தவர்கள்சூரன்குமாரன் அக்கினிமுகனைப்
போல எக்காலத்திலும் சுவாலைவீசிக்கொண்டிருக்கும் பல முகங்களைப்
பெற்றவர்கள் யிவ்விதபலகெடுதிகளை வாய்ந்திருக்கின்றவீரபராக்கிரமசா
லிகளாகிய அவுணர்களில்அளவற்றவர் தாருகாசூரனைப்போல யானைமுகங்
களைப்படைத்தவர்களாகவும்பற்பலர் வீரத்தன்மையைப்படைத்தபுலிமுகங்
களைவாய்த்தவர்களாகவும் பலர் சிங்கமுகாசூரனைப்போல சிரங்களைக்கி
டைத்தவர்களாகவும்விளங்குகின்றனர், இவர்கள் புசபெலபராக்கிரமங்க
ளைமதித்துப்பார்க்குமிடத்தில் செயசாலிகளாகிய மதுகயிடவரையொப்
பவும் சகலரும்புகழுங் கீர்த்திப்பிரதாபங்களைப்பெற்றிருந்த சுந்தோ
பசுந்தர்களுக்கொப்பாகவும் சிவபிரான் கோபவுருப்பெற்றிருந்த வீர
ரில்வீரனாகியசலந்தரனைத்திகைத்தும்வலிக்கொப்பற்றமயிடாசூரனுக்கிணை
யாகவும்விளங்குகின்றனர், யிவையன்றியும்பாசுபதாஸ்திரத்தைப் படை
த்திருக்கின்றவரனேகர் பிரமசிரோருகத்தைப் பெற்றிருப்பவரனேகர்ப
ஞ்சாயுதபாணியாகியமகாவிஷ்ணுவினது திருநாமத்தைக்கொண்டு விளங்
கும் தெய்வீகப்படையைப்பரித்தபாதகர் வாயுவாஸ்திரம் வருணாஸ்திரம்
அக்கினியாஸ்திரம்மற்றையதிசைக்காவலர்முதலிய தேவர்க்கள் படைகளை
ப்படைத்திருப்பவர்யித்தகைசிறந்தபாணங் களைக் கிடைத்திரு
க்கின்றஅவுணவீரரைக் கணக்கிறந்தவெள்ளக்கணக்கிற் பட்டதாகச்சொ
ல்லவேண்டுமல்லது மற்றம்பாதொருகணிதத்திலும்தொகைபடக்குறிப்

பதரிதாகும்யித்தகையசெயசாலிகளாகிய அவுணவீரரும் ரதபந்திகளும்
யானைக்கூட்டங்களும்- புரவியணிகளும் சேர்ந்துமண்விண்டிசைதிவக
ளொத்தலங்களினும்நெருங்கியிடமில்லாமல் அந்தரத்தினும் அடர்ந்திரு
க்குமாயில் யிவர்களை நம்மாற்செய்யுந்தா மேதேனுமுண்டோயித்தினை
வரையில் யிவ்வண்டத்திலிருந்தராட்சதவீரர்களுட னெதுத்துப் போரா
டிப்போராடி பலதரம் அடிபட்டு வாடி வருந்தியிருக்கின்ற நாம்யிக்கால
த்தில் மேலண்டங்களினின் றும்பெருகிவருகின்றபாதகரனைவரும்சேர்ந்
துஒருமுகமாய்ச்சாடுவாராயின் நம்மால் அவர்களுட னெதிர்க்குந்தரமுண்
டோமேலும் நாம்பிழைத்துப்போகும்வதுவை யாவதுண்டோஒருகால
ம்அப்படிக்கு நினைப்போமாயினும் அதுஎப்படிக் கிருக்கின்றதெனில்
ஆழிகாலத்திற்பெருகுகின்ற சத்தசாகரங்களையும் அல்லோல கல்லோல
ப்படச்சாடிக்கரைகளைக்கரைத்தொன்றுபடச்செய்யும் வேகமுள்ளஆழி
க்காற்றுனது ஆமணக்கினதுகொல்லையிற் புகுந்தகாலத்தவைதாபரித்து
நிற்கப்பெறுமோ யிவர்களில்ஒருசூரன் உரத்துப் பேசுவனாயின் நாமெ
ல்லவரும்மதிமருண்டு கைகாலொடியவோடிப்பதுங்குவதற்கையமுமு
ண்டோ யிருவீரர் சற்றேஉருத்துத் தாக்குவாராயில் நம்மவர்களிற்பிழை
த்திருப்பவர்யாவர் யித்தகையபுசபெலபராக்கிறமசாலிகளாகிய யிவர்க
ளனைவரும் ஏகமுகமாயெதுத்துச் சண்டைகொடுக்க நேர்வாராயின் எதி
ரேதித்தடுக்குந்தயிரியம்பெற்றவர்கள் நம்மிலொருவனாயுங் கண்டிலம்
யிக்காரணத்தினால் வலியினுக்கொப்பற்ற நமதுதலைவர்களும் மற்றவீர
ர்களும்ஒருகாலம்தீரத்துவத்தைக்கொண்டு எதுத்தபோதினும்சார்காலத்
தூவலைப்போல நெருங்கியிருக்கின்றராட்சதப்பாதகருடன் நிருவகித்
துப்போராடுவது அரிதரிது அப்படிக்கிருப்பதால் அற்பமாகியமரங்களை
யும்மலைகளையும்கொண்டோ நாமிவ்வீரரைவெல்லவிருக்கின்றனம்மான
த்தையெண்ணிநெருங்குவோமாயின் தட்சிணத்தில் நமதுபிராணனையிழ
க்கவரும்சதுரங்கச்சேனைகளும்உருத்துப்போராடுவாராயின்யாமெல்லவ
ரும்படாதபாடுகளைப்பட்டுச்சாம்பலாய்மங்குவதற்கையமுமுண்டோசே
னைத்தலைவர்கள் - எண்மர் - இலக்கர் - பெருங்காற்றிற்பட்ட பூளைப்புட்ப
த்தைப்போலச் சின்னபின்னப்பட்டுப்பறக்கவரும் புசபெல பராக்கிற
மசாலியாகிய நமதிறைவன்வீரவாகுதேவர் மானம்பாதிக்கப்பின்னிடை
யாமற்சண்டைகொடுக்கநினைந்துபோராடுவாராயில் யிதுபரியந்தம்பெ
ற்றிருக்கின்றவெற்றிப்பாடுகளனைத்தையும் பறிகொடுத்து பங்கப்பட்டு
மனம்வருந்துவர், யிப்போது நாம்குறித்தகாரணங்களில் எவ்வளவும்பி
சகாது ஆதலால் வீராதிவீரராகவிருக்கின்ற யிவ்வசுரருடன் வெற்றிவ
வாயுநமூர்த்தியல்லது எத்தகையசூரர்களாலும்போராடப்படுவதோயிது

வளைபோகித்துத் துரிதமாயோடியொளித்தின்னமுஞ்சிலகாலம்பிழைத்
திருக்கவெத்தனப்படுவோமாயினும்பாதகர் விண்மண்டிசாதிசைகளெங்
கணுமெள்ளிடமிடமில்லாமலடர்ந்திருக்கின்றனர், மேலுமெக்காலத்து
ம்நிராதபரியுமாயாடவிருப்போம் ஒதுணைவரோயினியாதொருவெண்ண
ங்களையுங்கொள்ளாமல் தயிரியசாலிகளாய்க்கூடியவரையிற்சண்டைகொ
டுத்தொருகைபார்ப்பதேகாரியமெனச் சகலருமொருமித்தவர்களாய்ம
லைகள்விருட்சங்கள் மற்றப்படைகளைத்தாங்கித் தாங்களுமொருவீரனை
ப்போலக் கெக்கலிகொட்டிக்கொண்டு சத்திராதிகள்மீதேறி நடந்தனர்,
அத்தருவாயில் யிவர்களுக்குத்தலைவராகவிருக்கின்ற செயசாலிகளும் இ
லக்கமெண்மரும்வீரமாக்கிரமசாலியாகிய வீரவாகுதேவரும்தங்கள்ரத
ங்களைத்தூரத்திவந்து சமீபித்ததருவாயிற் கடையுகப் பெருக்கைப்போ
லச்சிங்கநாதம் அட்டகாசங்களைச்செய்துகொண்டு விறியிருக்கின்றசூர
பதுமன்சயின்னியங்களின்பரப்பையும் வீரத்தன்மைகளையும் மதித்து
யினைப்பேசிக்கொள்வதாயினர், யிதுபரியந்தம் வந்தவந்த ராட்சதப்
பாதகரைப்பாலசுப்பிரமணியதேவர் கடாட்சவிட்சணியத்தினால்வாட்டி
ப்பெற்றிருக்கின்ற செயப்பிறதாபங்களையும் புயவன்மைகளையும் தயிரி
யத்தையுமிழந்து மனம்வருந்துங்காலமும்நேர்ந்ததோ யிவர்கள்உக்கி
ரத்தைப்பார்க்குமிடத்திற் சற்றுமிதப்பைத்தினமுடையராயிருப்பின் உ
தைத்துக்கொண்டுமாண்டுபோவதற்குத் தடையிராது உருத்துப்போரா
டுமுன் னிலையில்உலகங்களென்படுமோவென்றுபிரமித்துநின்றனர், இவ
ர்கள்செய்கைகளிப்படியிருக்க இந்திரன்முதலாகியதேவர்க்கள் அகில
வெல்லைமுற்றினும் பெருத்தடர்ந்திருக்கின்ற ராட்சதப்படைகளின் மி
குதியையும் உத்தண்டங்களையும்பார்த்தவுடன்மனமுந்தேகமுந்திடுக்கி
ட்டுநடுநடுங்கப்பயந்து வண்டினங்கள்மொய்த்துப்பரிமளித்திருக்குந்
திருத்துழாய்மாலைபுரளும் திருமுடியினைவாய்ந்திருக்கும் மகாவிஷ்ணு
வைவணங்கி எமதிறைவனாகியமுருகப்பிரான்மீது பலகத்து ஆயிரத்தெ
ட்டண்டங்களினுமிராநின்ற ரதகெசதுரகபதாதிகளனைத்தும் போராட
வெத்தனித்திருக்கின்றதால் யிவர்கள்பெருக்கைச் சண்டைமுனையில் வா
தாடிவெல்வதற்குப்பலயுகங்கள்செல்லும்போற்காணுகின்றது அப்படி
க்கிருப்பதால் அவுணர்பெருமானாகிய சூரபதுமனை வெற்றிகொள்ளுங்
காலமெப்போதுநேரும் ராட்சதப்பாத்கொல்லும்யிரவுகழிந்துதேவர்
கள்சிறைநீங்கிமனவெழுச்சியும் முகமலர்ச்சியும்பெற்றுவாழுமவதவை
யுமுண்டோ பொன்னுலகவாழ்வையும் தேவேந்திரச்சம்பத்தையும் பறி
கொடுத்து நிலைபெறாமல்வாடிவருந்தும் மனவேக்கமும் நீருங்காலமு
ம்நேராதோவெனப் பற்பலதுக்கவார்த்தைகளைச்சொல்லிச்சொல்லிமுறை

யிட்டவர்களாய் ஓகற்தனேயிதற்கொருமுடிவைத் திருவுளம்பற்றவேண்
டுமென்று பலவிதங்களில்முறையிட்டுப் போற்றுகின்றதறுவாயிற் சமுத்
திரமத்தியில்விளங்கியிருந்த இலங்கைக்கதிபனாய்க்கொடுங்கோல்செலுத்
திவந்த இராவணனைக்குலநாசமடையச்செருவறுத்தல்ட்சுமிமணவாளனாகி
ய-விஷ்ணு-விண்ணவர்படுந்துக்கவருத்தங்களுக்கிரங்கி இந்திரனைக்கிரு
பையாகப்பார்த்து ஓ தேவராசனே பயங்கொள்ளவேண்டுவதில்லை தேவ
தேவோத்தமனாய்ச்சுயஞ்சோதிவடிவாய்ச்சர்வசீவதயாபரனாய்லோககாரண
னாயெழுந்தருளியிருக்கின்றநமதிறைவனாகியகுமாரதேவர்பெருமைகளை
யும்வீரபராக்கிரமஉத்தண்டங்களையும்எவ்வளவுந்தெரியாதவனைப்போல
வாடுவதென்னை உனக்குநேர்ந்திருக்கின்ற கிலேசத்தினால் அவற்றினைச்சு
த்தமாய்மறந்தனையாயினும் சிலதைதெரிவிப்பேன்கேட்பையாககாலமா
கவிளங்குவன் அதைக்கடந்த பொருளாகவும்நிற்பன் சராசரப்பிறபஞ்
சங்களைப்படைத்தும் அவற்றின் வினைகளுக்கடுத்த நன்கு தீங்குகளையூ
ட்டியாட்டியுறக்குங்காரண பூதமாகத்தோற்றுவன் அவற்றுட்படாமற்
புறம்பிலுலவுவன் ரூபநாமக்கிரிகையாய் அண்டபுவனங்களைப் படைப்ப
ன் அவற்றுட்படாமல் புளியினோட்டையொப்ப உலவுவன் ராசததாமச
சாத்துவிதமென்னும்முக்குணங்களாய்ச் சிருஷ்டி திதிசங்காரந்திரோப
வம்அனுக்கிறகமென்னும்பஞ்சகிற்தியங்களை நடாத்துங்காரணத்தினால்
உலகங்களையும் அதிற்பட்ட பிராணிகளையும் சிருஷ்டித்தும் ரட்சித்து
ம்-சங்கரித்தும்-மயக்கியும்-பேரானந்தசுகத்திலிருத்தியும் இவ்விததிரு
விளையாடல்களை நடத்திவருவன்தோற்றமொடுக்கமற்றவனாய்ச்சச்சிதானந்
தச்சொரூபியாய்ப் பரவெளியில்நடித்திருப்பன் மேலும்ஆயிரகோடிஅ
ண்டங்களின் தொகைப்படவும்விளங்குவன் அவற்றினைக் கடந்ததற்பர
மூர்த்தியாகவுங்காட்டுவன இவ்விததிருநடனங்களைச்செய்தும் அனாதியாக
விருந்துயென்போலிகளனைவருக்கும் மூலகாரணக்கடவுளாகத் தோற்
றும் பரவஸ்துவானது சண்முகங்களையும் பன்னிரு புயாசலங் களையுங்
கொண்டெழுந்தருளியது, ஓதேவராசனே யிதற்குத்திஷ்டாந்திரமாகக்
குன்றுகடோறும்திருவிளையாடல்களைச்செய்துவருங் குமாரதேவர்முன்
னம்மகம்மேருபற்வதத்தின்மீது உங்களுக்கெதிரிற் பாலனாகக்காட்டி
நீங்கள்கொண்டிருந்தமருட்சியைப்போக்கி ரட்சிக்சத் திருவுளத்தெண்
ணிக்கிருபாநிதியாதலால் அண்டாண்டபுவனங்களும் அவற்றுட்பொ
ருந்தியிருக்கும்யானைமுதல் எறும்பீறுகச்சொல்லும்எண்பத்துநான்கு
லட்சம்சீவபேதங்களும் அசைவற்றபொருள்க ளனைத்துமாய்த் திரிமூ
ர்த்திகள்முதலாகிய தேவர்களனைவரையுந் தமதகத்திற்காட்டி விசுவரூபங்
கொண்டுநின்ற கிருபாநிதியின்பெருமைகளை நீதெரிசினையாகக்கண்டு

ம்விழிகளாத்தெரிசித்து பேரின்பவாரியிற்பட்டுக்களித்த உன்னையொ
த்தவன் அவன்மாய்கைக்குள்ளாய் அந்தத்திவ்வியமங்கள குணாதிசெயங்க
ளைமறந்தனையோ ஓ இந்திரனே யின்னமும் அத்தேவாதிதேவன் பெரு
மைகளைக்கேட்டையாக ஆயிரம்யிதழ்களோவாய்ந்த பொன்னந்தாமரைப்
பீடத்தினனானபிரமனாய் அண்டபுவனசராசரங்களைச் சிருஷ்டிப்பன்அ
ரியெனுருவைத்தாங்கி அவற்றினைப்போஷித்துப்பாதுகாப்பன் பரமசி
வமாய்நின்று அவைகளனைத்தையும்ஒடுக்கிச்சிலபகல்சுசாதீதயின்பங்களை
ப்பெற்றுக்களிக்கவிருந்துவன் நம்மனைவருக்கும் அத்தேவன் ஒருருவி
னைப்பெற்றுத்தோற்றக்காட்டுவதெப்படிக்கிருக்குமெனின்வெளிப்பட்
டுமறையும் மின்னற்கொடிக்கொப்பாகும்யித்தகைய குணாதிசெயங்களை
ப்படைத்துச் சற்வமூர்த்தமாகவிளங்குந் தேவாதிதேவனை நாம்முற்பக
ல்செய்ததவப்பேற்றின் முயற்சியினாற்றோற்றமாகத்தெரிசித்துப்போற்
றிவருகின்றனம், இந்தத்தேவன்சொரூபத்தினையிப்படித்தென ஆதிநூலா
கியவேதாகமங்களினாலும் துதிக்கப்படாது ஆதலால் நாம்பிறமிக்கும்
படிக்குச் சத்தசாகரங்களைப்போலப் பரந்திரைந்தடர்ந்து மண்விண்
ணெங்கணும்சூழ்ந்திருக்கின்றபலசைவன் சதுரங்க வெள்ளங்களின்தொ
கையனைத்தையும்-ஏ-யென்றொலிக்குமோசைமுடிவதன்முன்னம் சற்வ
சங்காரகிற்றியத்தைப்போலநாசஞ்செய்யவல்லர் தேவாசனேயிவனைப்
பாலனென்றொருபோது மெண்ணலாகாது சிவபிரான் நினைப்பிற்றோற்
றிய அண்டங்களெவற்றிலும்பொருந்தியிருக்கின்ற சீவராசிகளனைத்தினு
க்கும் காரணபூதமாக விளங்கிநடிப்பிக்கும்பெருமையைப் படைத்தவ
னாகும் நமதுமுன்னவர்களுடன் செய்ததவப்பேற்றினாற் றிருக்கையிலை
யைக்கடந்து யிவடமெழுந்தருளி யிவ்விதத் திருவிளையாடலைக் காட்டுகி
ன்றன ரல்லது நூற்றெட்டுசங்களாகச்சகலரையும்வென்று கொடுங்கோ
ல்செலுத்திவருஞ்சூரபதுமன்முதலாகியபலசைவரைநாசஞ்செய்யத்திருவு
ளத்திற்பூர்த்தியாகக் கொள்ளுவராயின் நிமைப்போதிற் சிறுநகையினால்
வாட்டவல்லன்கோபக்கனலினால்அழிக்கமாட்டுவன்சொல்வன்மையினா
ல்அதப்படுத்தும்சாமர்த்தியத்தைப்பெற்றவன்மேலும்பாலபருவத்துக்
குரியசிறுவிளையாடலினாற்சாம்பலாக்குந்திறமுடையவன்யித்தகையமகி
மைகளைப்படைத்தகர்த்தனையிவ்விதச் சிறப்பைப் பெற்றிருக்கின்றவனெ
னச்சொல்லவொண்ணாத ஒப்பற்ற நிர்மலமூர்த்தியினது மங்கள கரமாகி
யகுணாதிசெயங்களையாவராலின்னவிதமென் றறிந்து துதிக்கப்படும் இவ்
விதபெருமிதங்களைப்படைத்திருக்கின்ற தேவாதிதேவன்மகத்துவங்க
ளைத்துதிக்கவும்போதுமோ யிவையன்றியும் வீரவாகுதேவர் முதலாகிய
நவவீரர் இலக்கர்செயசாலிகளாகிய பூதவீரரைப் படைத்துணையாகக்கூ

ட்டிக்கொண்டு வெற்றிவேலாயுதமாகிய ஆயுதங்களைத் தாங்கிச்சூரபதும
னுடன்போராடி அவுணர்வம்சநாசப்படக் கொல்லவெழுந்தருளியதை
யோசிக்குமிடத்தில் இதுவுமொருதிருவிளையாடலாகும் ஓ தேவாசனே
யினியற்பலவாகவிசேஷித்துச்சொல்லவேண்டுவதில்லை பாலசுப்பிரமணி
யதேவர் சற்றுநேரத்தில் அண்டங்கள்முற்றினு மிருந்துவந்து நெருங்
கியிருக்கின்றசெயசாலிகளாகிய அவுணவீரர்முதலிய நால்வகைச் சேனைக
ளையும்அதம்பண்ணி திருக்கரத்தில்விளங்கும் வெற்றிவேலாயுதத்தினால்
அகண்டமண்டலா திஸ்பரனாகவிருக்கின்ற சூரபதுமனையும்வாட்டி நம்
மவரனைவரையும்பாதுகாத்து ரட்சிப்பர் யிக்காரணங்களைக்குறித்து நீஎ
வ்வளவும் சந்தேகிக்கவேண்டுவதில்லை இப்போது நான்சொல்லிய உண்
மைகளைச்சிலபோதில் திஷ்டாந்திரமாகக்கண்டு களிப்பையென்று சேஷ
சயனத்திலறிதுயிலமர்ந்தமகாவிஷ்ணுவானவர் யிவ்விதங்களிற்பலஉறுதி
களைக்காட்டி இந்திரனுக்கு உச்சாகமுண்டாகும்படிக்குச் செய்தவராய்யு
கப்பிரளயத்தைப்போல ஆர்ப்பரித்துக்கொண்டு பூமண்டலம் வானவெ
ல்லைமுற்றினும் அடர்ந்திருக்கின்ற சூரான் சதுரங்கச்சேனைப் பெருக்கை
க்குமாரதேவர் துய்சப்படுத்தும் விநோதங்களைத் தெரியவேண்டுமென்
றுநினைந்தவராய் இந்திரனாதியதேவர்க்களுடன்வந்து சரவணபவனைச்சூ
ழ்ந்தனர், யிவர்கள்கருத்தைஎமதிறைவன்தெரிந்து சிறுநகைகொண்டவ
ராய் சண்டைக்காயுத்தப்பட்டு வருகின்றதறுவாயில் வானகமும்வையக
முமொன்றுபடராட்சதப்படைகள் வீராவேசங்களுடன்கொக்கரித்துக்
கொண்டுமேவிட்டுசண்டைசெய்யத் துடங்குமுன்னிலையில் முன்னமேர
டிப்பதுங்கியிருந்தபூதப்படைகள் சிவகுமாரன்வரவைத்தெரிந்தமாத்தி
ரத்திற் பலதிசையினு மிருந்துவந்துசேர்ந்து அதிககெலிப்புடன்பகைவ
ருடன்சற்றுநேரம்போராடித் தாபரித்துநிற்கப்படாமையால்முறிந்து
பழையபடிக்குப்பறந்துமறைந்தனர், அதைசேனைத்தலைவர்கள் கண்டவு
டன் மானமுங்கோபமும்மனதைவாட்ட றவுத்திராகாரமாகச்சிறிராட்ச
தவீரருடனெதுத்து சோனைமாரியைப்போல பாணவிதங்களைப்பிறை
யோகித்தும் வேல்-சூலம்-கப்பணம்-எழு-மழு-நாஞ்சில்-பிண்டிபால
ம்தண்டாயுத முதலிய ஆயுதவிதங்களை ஒன்றனந்தமாகச் செலுத்தியும்
அகோரஉயித்தியங்களைச் செய்துசெய்து யாதொருபிறையோசனத்தை
யும்பெருமல்சத்திராதிகள் போருக்கஞ்சிமானமழிந்து மதிகெட்டுவீர
பராக்கிறமங்களனைத்தையும் பறிகொடுத்துப் பின்னிட்டனர், இதைக்க
ண்டமாத்திரத்திற்செயசாலிகளாகிய இலக்கரும் எண்மரும் அதிஉக்கி
றத்துடன் வடவைக்கனலைப்போலமண்டியெரிந்து சகலரும் ஒருமுகமா
ய்க்கவிந்து பாரித்தவிற்களைவட்டாகாரமாய்வளைத்து விஷத்தொவையவி

ட்டிருக்கின்றபாணங்கள் கொடியகினிமுகங்கள் அதிகதீட்சணியமுள்ள
படைகள்தீயையிறைக்கவல்ல நாராசங்கள் மற்றுமிராதின்றபாணவிதங்
களைக்கரவேகமாகச் சோனைப்பெய்யலைப்போலப்பொழிந்தும் வச்சிரா
யுதம்-சூலம்-வேல்-சக்கரம்-இருப்புலக்கைகள்-வளைதடி-யித்தகையதி
வ்வியஆயுதவகைகளைக் கணக்கிறந்ததாகக்கொட்டியும் சொல்லுதற்கரிய
கொடியசண்டைகளைக்கொடுத்து மனமுந்தேகமும் வருந்திபகைவரை
ச்சற்றும்அசைக்கக்கூடாமல் அவர்களாற்படாதபாடுகளைப்பட்டுத்தியங்
கிமயங்கிமானபங்கப்பட்டு மதிகெட்டு வசைமொழிக்கஞ்சாமல்மடங்கி
ப்போயினர், கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே யிவ்விதமாகத்தமதுத
ம்பியரும் இலக்கர் முதலிய பூதப்படைகளும் போராடிப்புறந் தந்து
போனஅபசெயங்களனைத்தினையும் வீரவாகுதேவர் தெரிந்தமாத்திரத்தி
ல்தம்மவர்கள்பட்ட வருத்தங்களுக்கிரங்கிச் கோபமேலிட்டு வடவாமு
காக்கினியைப்போலப் பொங்கி பகைவர்முனையிற்கலந்து தங்கக்கட்டுக
ள்பூண்டயிருகுதைகளினும்மணிகள்தொங்கிட்டு கவித்திருக்கின்றபாரித்
தகாண்டபத்தை நாட்டிவளைத்துநாரியைபிகிர்ந்து பகைவர் பிறிமிக்கத்த
க்கதாக டங்காரசத்தத்தைக்காட்டி வயிரவூசிகளைப்போலக் கூர்மையாய்
ப்பிறகாசிக்கும் அலகையுடைய திவ்விய பாணகோடிகளைச் சந்தித்து
க்கோடைகாலவருஷத்தினு மேலிடத்தக்கதாகச் சரமாரியைச்சொரிந்து
சொரிந்து அளவற்றராட்சதரைச் சிரங்களைக்கண்டித்துத்தள்ளியும்புசங்
களைவெட்டியெறிந்தும் கரங்களைத்துண்டித்தும் வயிரசவச மணிந்திரு
க்கின்ற விசாலமாகியமார்புகளைப்பிளந்தும் துடைகளைமுறித்தும் தே
கங்களைச்சக்கைசக்கையாகப் பேத்தெறிந்தும் சல்லடைக் கண்களாகத்து
ளைத்தும் சின்னபின்னப்படவாட்டியும் சதைசதையாகஅரிந்திறைத்தும்
இவ்விதங்களாகச்சிலறேங்கி அளவையிற்படாதவிசாலமும்ஆழமுமுடை
யஆயிரகோடிசமுத்திரப்பெருக்கிலொருமலைவிழுந்துகலக்குமாறுபோ
லச்சத்துநேரம் சத்துராதிகளுட னெதுத்துக் கூடியமட்டுஞ் சண்டை
கொடுத்துக்கொடுத்துக் கைகால்களோய்ந்து வில்லூர்தளந்தம்சேனைப்
பெருக்கானது கிஞ்சற்றும் வற்றாத காரணத்தைக்கண்டு பிறிமித்தவரா
ய்ப்பாதகரைவெல்லநம்மால் முடிவதன்றென்றெண்ணி மனவாட்டத்து
டன்திரும்பி பாலசுப்பிறமணியதேவாருகில்வந்துநின்றுவிட்டனன், அ
த்தறுவாயிற்சூரபதுமன்சேனைத்தலைவர்கள் ஆலகாலவிஷத்தைப்போலச்
சீறி நமக்காற்றாமற் பூதப்படைகளனைவரும் திசைகெட் டோடினர் ப
டைத்தலைவரும்பங்கப்பட்டுப்போனயிடமுந்தெரியவில்லை மற்றவீரரு
ம்பயப்பீதியினாற் பின்னிடைந்துபோயினர், இவ்விதமாகவீராதிவீரர்க
ளாய்ச்செயசாலிகளுமாகக் காணுகின்றசகலரும் சின்னபின்னப்பட்டழி

ந்துபோவாராயின் தண்டைசிலம்பு சத்திக்கும் சிறுகால்களைப்பெற்றிருக்
கின்ற யிந்தபாலனே நம்முடனெதுக்கவல்லனென்று எளனமாகப்பேசி
க்கொண்டு மதச்செருக்கினாற்கணக்கிறந்த அவுணப்பாதகர் மேலிட்டுவ
ந்து தண்டாயுதங்களைக் கிறுகிறெனச்சுழற்றிமோதியும் சக்கரங்களைக்கர
கரெனச்சுழலவிவிட்டும் சூலப்படைகளைக்குறித்துக்கடாவியும் பிண்டிபா
லங்களைச்செலுத்தியும் யிருப்புலக்கைகளை விட்டெறிந்தும் குந்தங்களை
ப்போக்கியும் நாஞ்சில்களையிறைத்தும் கப்பணங்களைப்பிறையோகித்து
ம்கவண்களில் பருத்தபற்வதங்களை நிறுத்தி மண்டலாகாரமாகச் சுழற்றி
வீசியும் யிவ்வாறுபடைகள்விதங்களை அமோகமாகவீசியும் பருத்தவிற்
களைவளைத்து நாணொலிகாட்டிக் கொடியசுடுசரங்களைச் சோனைப்பெய்ய
லைப்போல யிடைவிடாமலிறைத்தும் தேவாஸ்திரவிதங்களை மந்திரபூர்வ
கமாகத்தாண்டியும்பாசங்களைவீசியும் மாயப்படைகளைச்செலுத்தியும்வீ
ராவேசங்களினால்உலகங்களெங்கணுஞ் செவிடுபட ஆர்ப்பரித்தும்சிங்க
நாதங்கள்அட்டகாசங்களைச்செய்தும்யின்னமுமிராநின்றபலகொடுமை
களையுங்காட்டி வாதாடுமுன்னிலையிற் றேவாதிதேவனாகிய குமாரதேவர்
தமதுசயின்னியங்கள் முறிந்தோடியதையும் செயசாலியாகிய வீரவாகு
தேவர்முதலாகிய படைத்தலைவர்கள்பகைவருடனெதுத்துப் போராடுந்
திறமற்றுத்திரும்பித் தம்மைச்சூழ்ந்துவாடி நிற்பதையும் சூரபதுமன்
நால்வகைச்சேனைகளும் ஆலகால விஷமானதுபெருகி உலகங்க ளனைத்
தையும்வளைந்துகொண்டதைப்போல யிரைச்சலிட்டுமேலேறிக்கொடிய
போர்த்தொழிலை வெகுவெகுவேடிக்கையாகச்செய்து வீறியிருக்கும்கா
ரணங்களையும்கண்டு திரிநேத்திர தாரியாகிய நமது பிதாவையொப்பச்ச
ற்றுநகைத்து மகாமேருவுக்குச்சமதையாகவிளங்குகின்ற தமதுபருத்த
வில்லையெடுத்துநாட்டிவளைத்து நாணேற்றிநரம்பைத் தடவிக்கொடுத்து
குணத்தொனியெடுத்தனர், அக்காலத்தெழுந்த பேரொலிக் காற்றுமல்
வானத்தில்நின்று போர்வேடிக்கைகளைப் பார்த்திருந்த தேவரினங்கள்-கி
ன்னரர்-கிம்புருடர்-கெருடகாந்தருவர்- மற்றஅந்தரவாசிகளனைவரும்
யிடிமுழக்கத்தைக்கேட்ட சற்பங்களைப்போலத் திடுக்கிட்டுக்கிரோகம்க
ம்பிதப்பட்டுசெவைப்பிறவாகமாய்வியர்த்து மனவெழுச்சியற்றுத்தியங்க
வும் புவனங்களிலிருக்கின்றமனுஷரனைத்தும் பஞ்சேந்திரிய நிலைகள்
பிசகி விடமுண்டவர்களைப்போலச் சோர்ந்துகிடக்கவும் செயசாலிகளா
ய்வீறியிருந்தராட்சதர் செவிகளிற்பட்டமாத்திரத்திற்றிடுக்கிட்டு மனங்
கலங்கி கரங்களிற்பற்றியிருந்தபடைகளை நழுவவிட்டுக்களைத்து திப்பிர
மைகொண்டவர்களாய் நிலைக்கண்பட்டு வெறித்துநிற்கவும் யானையனிக
ன்றலைகுலைந்துவிழிட்டு முற்காலத்தில் இந்திரன்வச்சிராயுதத்தினாற் சிற

கரியுண்டுமெதிர்த்தபர்வதங்களைப்போல நிலத்தில் விழுந்துபுரளவும் தந்தி
ந்தாவியிருந்தபுரவிப்பந்திகள் பிடிகளையொப்பக் கனைத்து ஒன்றின்மீ
தொன்றுவிழுந்து உதைத்துக்கொண்டுருளவும் வானத்தைதவளாவநின்ற
ரதசமோகங்கள்வட்டணையாகச்சுழன்றுசுழன்றுஒன்றுடனொன்றுதாக்கி
ச்சிதைபட்டு மங்கவும் யிவ்விதமாக நால்வகைச்சேனைகளும் அல்லோ
லகல்லோலப்படுகின்றதறுவாயில் வேதங்களுக்காதியாகவிருக்கின்றசிற
ந்தகுடிலையின்நிச்சயங்களை அகஸ்தியருக்குக் குருமுகுத்தமாக நின்று
போதித்தகுமாரதேவர் உடனேகூர்மையாய் விஷங்களைக்கக்கி அதிகதீட்
சணியமுள்ளபாணசோடிகளை ஊழிகாலத்தெழும்மேகங்கள் வருஷிப்ப
தைப்போல அமோகமாய்ப்பொழிகின்றதறுவாயில் தீயையும்புகைப்ப
டலங்களையும்வீசி சிடசிடென்றுங்குருகுறென்றும்யிரைச்சலிட்டுக்கொ
ண்டுமேலிட்டு சர்ப்பங்களைப்போலச்சீறி உருத்துப்பாய்ந்து பூமண்டல
ம்வானவெல்லைஅஷ்டதிசைகள் மற்றபுவனங்களெங்கணும்நெருங்கிஆர
வாரித்திருந்த கணக்கிறந்தராட்சதவெள்ளங்களையும் தேரணிகளையும்யா
னைகூட்டங்களையும் புரவிப்பெருக்கையும் வளைந்துகொண்டு சத்தசா
கரவெல்லையினும் அதுகளினிடையிற்பட்ட தீவுகளெங்கணும் அடர்ந்தி
ருக்கின்ற சேனைப்பெருக்கையும் சுத்திச்சுத்திவட்டணைவந்து அதிவேக
ங்கொண்டுதாக்குகின்றதறுவாயில் படைத்தலைவர்மீதினும்செயசாலியா
கியஅவுணப்பிரமுகாள்மீதினும் தேரணிகள்சிகரத்திலுங்கவிந்திருக்கின்
றமுத்தினங்கள் வெண்பட்டுசெம்பட்டு விதங்களினுற்சோடித்துக்கவி
த்திருந்த பலநிறக்குடைகளவற்றதைக்கருலுமெனக் கண்டித்து
மகம்பேருகிரியைவலம்வரும்சூரியசந்திரர்களுக்கொப்பாகக் காற்றிற்ப
றக்கவீசியும மதயானைகள்மீதினும் ராட்சதவீரர்கரங்களினும்தேர்ப்பர
ப்பிலிடங்களினும் தோற்றுகின்றவெற்றித்துவசங்கள் கொடிச்சீலைகளை
வெட்டிச்சுழற்காற்றிற்பட்ட சருகுகளுக்கொப்பாக யிறைத்தும் வீராதி
வீரர்களாய் பற்பலபோர்களிற்கைகண்ட திராகவிருக்கின்ற காலபலப்
பெருக்கிற்புகுந்து சிவந்தசிகையவாய்ந்தசிரங்களைக்கண்டித்துப்பன
ங்காய்களைப்போலுருட்டியும் தோள்களைத் தறித்துத்தள்ளியும் பெருவா
ழைக்கொப்பாக மார்பைப்பிளந்தும்வயற்றைச்சரித்தும்வீரவெண்டை
யங்கள்கலிக்கும் வலியகால்களை முறித்துத்தள்ளியும் கண்டதுண்டமாக
க்களத்திற்கிடத்தி தழைத்தோங்கிநிற்குந் தோப்பினிடத்திற் சுறுவளிக்
காற்றுபுகுந்ததைப்போலச் சின்னபின்னப்பட சாடியும் தேரணிகளிற்
பாய்ந்துசெற்கொத்தொனிகளைச் செய்தோடும் பொன்வண்டிலை யுருட்டி
அச்சுகளைமுறித்து மச்சுகளைத்தூள்படுத்திக் குத்துக்கால்களை நறுக்கிப்
பொற்கொத்துமணிகள்கலகலவென்றலையகொடுங்கைகளைச்சிதைத்துசொற்

வைகலசத்தைநிலத்திலுருட்டிச் சிறகற்றபர்வதங்களுக்கொப்பாகக்குவித்
துச்சாரதியைமாய்த்துப்பூட்டியிருந்தபுரவிப்பந்திகள் சிங்கநிரைகள்புலி
க்கூட்டங்களைக் களத்திற்கிடத்தி தேர்வீரரை வாட்டியும் மதயானைப்பெ
ருக்கிற்குவி யிருபுறங்களினும்மாறியொலிக்கும் பருத்த மணிகளைக்க
லகலெ- றசைந்தோடத்தாக்கியும் நவரத்தினமயமாகியசித்திரமுகபடா
ம்போர்த்திருக்கும் மத்தகத்தைச்சதைத்து மதவெள்ளத்திற் சேர்த்தும்
யிருப்புலக்கைகளைப்பற்றி யானையையொத்ததசையும்பருத்த துதிக்கைகளை
சர்ப்பங்களைப்போலச் சமர்பூமியெங்கனும் புரளத்தறித்துத் தள்ளியும்ந
ட்சத்திரராசிகளுக்கொப்பாகமுத்துகள் திசையெங்கனுமிறையும்படிக்கு
த்தவளநிறம்பெற்ற வலிய தந்தங்களைப் பிளந்தும் சிறிய விழிகளைக்கல்
லியெறிந்தும் மேகங்களுமஞ்சவிறிடுந்தொனியைப்பெற்றபருத்தகழு
த்தைவெட்டியும் உரலைப்போன்ற பாரித்தகால்களைத்தகர்த்தும் அசைவு
பெற்றிருக்கும்வால்களைத்துண்டித்து நீலகிரிக்கொப்பாகவிளங்கும்கரி
யுடலையிருகூறுக்கிக் காளமேகங்கள் வழுவியதற்கொப்பாக வீழிட்டு
விழத்தள்ளியும் சாத்திர விலக்கணப்படிக்குப்பஞ்சலட்சணங்களுக்குரி
யசுழிசுத்தங்களிற்குறைவுபடாமல் அலைகளைப்போலத் தத்தித்தாவிப்ப
கைவர்மீதுபாயும் வேகமுங்கோபமுமுடைய புரவிப்பந்திகளிற்கூடிபி
டறிமயிரலையச் சத்துருக்கள்திடுக்கிடும்படிக்குக் கனைக்கும் குரலோசை
யைவாய்ந்தகழுத்தைத்தறித்து கடிவாளத்தைநுறுக்கி நவரத்தினகசிதமா
கவிருக்கின்ற சேணிகளைச்சிதைத்துசாமரையையொத்தசையும்நீண்டவால்
கள்சாற்றிற்பறக்கவெட்டியெறிந்து வெண்டையங்கள் கல்கல்லுமெனக்
கலிக்கப்பாயுங்கால்களை ஒருமுனையில்வெட்டிக்கடலினிடத்தெழும்அலை
கள்மறிவதைப்போலக்கிடத்தியும் அவற்றின்மீதுஉருத்துநின்ற சேவக
ரைத்தேய்த்துவாட்டியும் இப்படிக்குச் சதுரங்கச்சேனைகளை நாசஞ்செ
ய்ததன்றியில் வீராதிவீரர்களாய் புசபெலபராக்கிரமசாலிகளாய் எமனை
யும்பூசைகொள்ளவல்ல செயசாலிகளாகவிருக்கின்றபடைத்தலைவர் சமோ
கங்களிற் பிறசண்டமாருதத்தைப்போலநுழைந்து சிரத்திற் கவித்திருக்
கின்றவயிரமுடிகளைச்சிதைத்து நவரத்தினங்களும் நட்சத்திர வினங்களை
ப்போல எங்கனுமிறைந்துவிளங்கக்காட்டி வீரபட்டத்தைத்தகள்செய்
துமுத்தாரங்களைத்தாங்கிக்கல்லென்னுமோசையெழவசனிக்கும்கழுத்தை
க்கருலுமென்றரிந்துகொடுமைகளைப்பேசும்வாயைப்பிளந்துபற்களையு
திர்த்துதியெழஉருத்துப்பார்க்கும்கண்களைக் கல்லியெறிந்தும் மணிகளி
ட்டிழைத்திருக்கும்வாகுவலயங்களைப்பொடித்துபற்வதாகிறுதியாக ஓ
ங்கித்திரண்டுருண்டிருக்கும் தோள்களைச்சரித்து வயிரக்கவசங்களைத்து
கள்செய்து விசாலமாகிய மார்பைப் பிளந்து வில்லையும் பாணத்தையுங்

கொண்டிருக்குங்கரங்களையும் ஒருதாக்கலிற்கண்டித்து விரகெண்டைக
ளாயிறக்கி ரிஷபத்தைப்போல செம்பீரமாக நடக்குங் கால்களைக்கண்
டித்துமுதுகிலிறக்கியிருக்கும் அம்புறாத்தூணிரத்தை அறுத்துத்தள்ளி
யிருக்கின்றசிறந்தபடைகளைத் துகள்கண்டு வாட்டுவதன்றியில் அவ
ர்களேறியிருந்த வாகனங்களையும்பொடித்து புரவிகளைவெட்டிப்பாகரை
க்கொன்று துவம்சஞ்செய்யும்வேகமுள்ளகுமாரதேவர் செலுத்தும்வாளி
களானவை ஒவ்வொன்றுகாற்றினுங்கடுகிச்செல்லும்வேகத்தினால் அஷ்ட
குலாசலங்களையுருவித் திசையானைகளைத்தடாரித்துக்கொன்றும் வேகம
ருமல் அண்டகடாகவெளியினும்பாயுமெனச்சொல்லுவோமாகில் சவுன
காதிரிஷிகளே உதாமாம்சச்சுமையிறுற்பருத்திருக்கும் பகைவர்தப்பிப்
பிழைக்கிறதாமுமுண்டோ இவையன்றியும்பாலசுப்பிரமணியதேவர் தா
ண்டுங்கொடியவாளிகளானவை அதிசஉயரத்தில்விளங்குகின்றதேவரினங்
கள்வாசஞ்செய்திருக்கும் பொன்னுலகமே முதலிய பதங்களிற்சஞ்சரித்து
ம்பிரமன்பதியாகிய மனோவதிப்பட்டணத்திலுலவியும் விஷ்ணுவெழுந்
தருளியிருக்கும் வைகுந்தநகரமெங்கனும்மின்னலுக்கொப்பாகச்சென்
றும் அண்டவெல்லையிற்றிரிந்துதடாரித்துருவி மேல்நின்றபரவெளியினு
மோடுவதன்றியில் திசைகளினும்சத்தசாகரப்பரப்பினும்பெரும்புறவெ
ல்லையினும்நிறைந்து அதைச்சூழ்ந்திருக்கும் காடாந்தகாரமாகிய யிரு
ட்பூமியில் அலைவிசிப்பாய்ந்துகோடிசூரியர் தோற்றத்தினைப்போலஅ
திகபிரகாசத்தினைக்காட்டியுலவிப் பூமண்டலத்தை பிலவாயல்களுக்கொ
ப்பாகப்பிளந்து அதன்மூலமாய்ச்சத்தபாதலமுற்றினுந்துருவிப்பாய்ந்
து ஆதிசேடனாதிய நாகராசாக்கள் வாசஞ்செய்யுந்தலங்களினும் எள்ளிட
யிடமின்றி நெருங்கியோடியது, கேட்டீர்களோ சவுனகாதிதவத்தரோ அ
வற்றின் திறங்களையும் மகிமைகளையும் விருப்பையும் வெற்றிப்பாட்டி
னையும் என்னெனச்சொல்லிப்புகழப்போகின்றனன், யிவ்விதங்களாகஎ
த்தலங்களினுங் குமாரதேவர்செலுத்தியதிட்சணியமுள்ள பாணகோடிக
ள்அடர்ந்துபரந்தபோதினும் உலகங்களிற்பட்ட சகல பிராணிகளையும்
அலைத்துக்கொன்று வாட்டிவரும் அவுணர்இராக்கதர்முதலிய கொடியச
ண்டாளனாச் சின்னபின்னப்படக்கண்டித்து நாசம்படுத்துவதன்றியில்
மற்றதினமாய்மெய்ப்பத்தியைநடாத்தி வேதவொழுக்கங்களை யனுசரித்
துவரும்முப்பத்துமுக்கோடிதேவர்க்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிக
ள்கெருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்முதலிய வானநாட்டினரையும்பூ
மண்டலப்பரப்பிற்றங்கிய தருமசீலரையும் இக்குதியாந்தரமுற்றினுமி
ருப்பவரையும் நெருக்காமலும்யாதொருதுன்பங்களையும் செய்யாமலு
ம்அவர்கள்வாழும் பதங்களைவருத்தாமலும் உலவித்திரிந்தது யிவையன்

றியிற்சண்முகப்பெருமான்வாளிகள்பாய்ந்துகண்டித்தெறிந்த ராட்சத
ப்பாதகர் சிரசமோகங்கள் கோறதந்தங்கள்விளங்க பந்துகளைப்போல
வானத்திலெழுவதைப் பார்க்குமிடத்தில் அந்தரவீதியி லுலவிவருஞ்சூரி
யசந்திரா இராகுகேதுகாலாதிகளிற் சவ்வவெழுவதுக் கொக்கும். இ
வையன்றியிற் குமாரசுவாமியார்பிறையொத்த சுடுசரங்கள்வேகங்கொ
ண்டுபாயும்போ தெதிர்ப்பட்ட ராட்சதவீரர் கரங்களைக் கண்டித்தெறி
யுமுன்னிலையில் அவற்றுட்பிடிபட்டிருந்த வாள் வேலாதியபடைகளினு
ற்சீவகாருண்ணியமற்ற மனதைப்பெற்றிருக்கின்ற பாதகராகிய நம்மை
ப்போலவே தம்மினத்தவரை வெட்டித்தள்ளும் கேட்டீர்களோசவுனகா
திரிஷிகளே சற்வமங்கள குணநிதியாகிய பாலசுப்பிரமணியதேவர் செ
லுத்துகின்ற பாணங்கள்செய்த வேடிக்கைப்போரின் பெருக்கத்தையி
ன்னவிதமென்று ஏன்போலிகளாற் பேசப்படுவதோ இவ்விதமாகச்சர
வருஷங்களைப்பொழிந்து பூமண்டலம் வானவெல்லை மற்றயிடங்களெ
ங்கணும்நெருங்கி வீறியிருந்த ராட்சதவெள்ளப் பெருக்கையும் மற்றர
தகெசதுரகபதாதிகளின் சமோகங்களையும் ஒன்றொழியாமற் சங்கரித்
துரணக்களமெங்கணும் பிணராசிகளாகக்குவித்து உதிரப்பிரவகம்பெ
ருத்துக் கருங்கடலைமீறி செங்கடலைப்போல மண்ணுலகப் பரப்பெங்
கணும் அலைகளைவீசித் தேக்குவதாகச் சூரன்படைகளின தோற்றங்களு
மல்வெள்ளிடமாகிய காரணங்களை - விஷ்ணு - பிரமன் - இந்திரனாதிய
ர்கண்டு அற்புதசித்தராய் அவுணவெள்ளப்பரப்பனைத்தும் நாசமடைந்
தது, இதுபரியந்தம் பாதகர் கொடுமையிற்பட்டு வருந்திவாடிப் பதுங்
கித்திரிந்தநாம் இனிபயமற்று வருத்தங்களைப் போக்கிப் பழையபடிக்
குநமதுபதவிகளிற் றுபரித்திருக்குங்காலம் நேர்ந்ததென்னும் மனப்
பூரிப்புடன் ஒருவரையொருவர்பார்த்து சந்தோஷவார்த்தைகளைப்பேசிக்
கொண்டிருக்கின்றதறுவாயில் விண்ணிடங்களெங்கணும் நிறைந்து சமர
வெல்லையில்நடக்கின்ற விநோதங்களைப்பார்த்திருந்த தேவர்க்கள் ரிஷி
கள்சித்தவித்தியாதரர் கருடகாந்தருவர் முதலாயினோர் பகைவர் சேனைப்
பெருக்கானது யிருளைப்போலமூடி வாதாடுவதைக்கண்டு வாடிநின்றவ
ர்கள் வேலாயுதக்கடவுளானவர் பாணகோடிகளைப்பாய்ச்சிக்கொன்றவித
மொன்றுந்தோற்றமல் பிணமலைகள் வானத்தையளாவப் பெருத்திருப்
பதைநோக்கி விம்மிதமடைந்து யிக்காரணங்களைப் பார்க்குமிடத்தில்
மிகவும்அற்புதமாகக்காணுகின்றதென்று ஐயன்பெருமைகளைக் கொண்
டாடிச் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய்க்கந்தன் பாததெரிசனை
க்கிடையூறாய் மூடியிருந்த ராட்சதப்பாதக ரொழிந்தபோது விழிக
ள்கண்டுகளிக்கப்பெற்றனமென்றுமகிழ்ந்து பாரிசாதமலர்களை யிறைத்

ந்து தங்கியிருந்தனர், சூரபதுமன் படைகளின் போருக்கஞ்சித் திகை
த்தொடுங்கியிருந்த பூதவெள்ளங்களானவை பகைவர் சேனை சமுத்திரம்
வற்றும்படிபோர்த்தொழிலாற்றலைத் தெரிந்தமாத்திரத்திற் புசங்களைத்தட்
டிக்கொண்டு மனவருத்தங்களைப்போக்கிக் களிசிறந்தவர்களாய்ப் பலதி
சையிலும்நின்று பெருகிவரும்போது –நவவீரர்கள்- இலக்கர் முதலாகி
யபடைத்தலைவர்களும் யிக்காரணங்களைத்தெரிந்தமாத்திரத்தில் அதிசம
கிட்சியுடன் கோசம்புரிக்கத் தங்கள்சேனைகளைக் கலந்துவந்து குமாரசு
வாமியைத்தெரிசித்துப் போற்றிச்சூழ்ந்தனர், கேட்டீர்களோ சவுனகாதி
ரிஷிகளே சூரபதுமன் கட்டளையின்படிக்கு பேட்டையண்டங்களி லிருந்
துவந்துநெருங்கிய சதுரங்கச்சேனைகள் மண்விண்ணெங்கும் அடர்ந்
திருந்த காரணத்தினால் அண்டவாயல்கள்மூட்டப்பட்டு வெளிவரப்பெ
றுமற்றேங்கி நின்றநின்ற யிடங்களிற் காலம் பார்த்திருந்த மற்ற சதுர
ங்கச்சேனைவெள்ளங்களானவை முற்சென்ற சயின்னியங்கள் மாண்டு வா
யல்வெளிப்படையாகக்காட்டக்களித்து வீராவேசங்களுடன் அண்டகோ
ளகையின்மேற்புறத்திற்பெருகிக்கொண்டிருந்த மகாகங்கையானதுகீழ்
நோக்கிஓடுமாறுபோலப்பிரசண்ட வாயுவினுமேலிட் டொலித்துக்கொ
ண்டு பலஅண்டங்களினுமிருந்து புறப்பட்ட நால்வகைச் சேனைகளனை
த்தும் பூமண்டலவரைப்பிற்சேர்ந்தமுன்னினும்பதின்மடங் கதிகநெ
ருக்கமாக எத்தலங்களினும் கொக்கரித்து-சிங்கநாதம் அட்டகாசங்களை
ச்செய்துக்கொண்டுகூடி எள்ளிடயிடமில்லாமற்பரந்த சேனைப்பெருக்
கும் அவர்களுக்குத்தலைவர்களாக விருக்கின்ற வீரர்களும் அகண்டமண்
டாதிபனாகிய சூரபதுமன் போர்க்கோலத்தைத்தாங்கி யுத்தசன்னத்த
னாய் சொர்ணமயமாகிய தெய்வீகத்தேரிற் றேறுகின்றதைக்கண்டமா
த்திரத்திற் கரங்களைக்கொட்டி சத்தசாகரங்களும் ஏககாலத்தில் ஒலிப்பதை
ப்போலத் குதித்துப்போற்றினவர்களாய்த் தங்களுக்குமுன்வந்த சதுர
ங்கச்சேனைப்பெருக் கனைத்தும்மாண்டு பிணமலைகளாகக்குவிந்து உதிர
ப்பிரவாகத்திற் கலந்துபிலார்ந்துபுரண்டு அலைகளைவீசிப்பாயுங் கொடு
மைகளைக்கண்டு தம்மவர்கள் பட்டதைக்குறித்து பரிபவப்பட்டவர்க
ளாய் செயசாலிகளாகவிருக்கின்ற அவுணவீரர்பெருக்கைவாட்டியபகை
வன்செயத்தையும் விருப்பையும் நிலைப்போரிலடக்கிப்பற்றிப்பிசை
ந்து தகள்படக்காற்றினூறி யிக்காலத்திலுண்டாகிய கோபத்தைத்தணி
பவல்லோம் மேலும்விழிருக்கின்ற பூதவெள்ளங்களை வாரிவாரி வாயி
ற்போட்டு மென்றுதின்று உதிரபானஞ்செய்து கிரோதத்தைக் கொளுத்
தும் வெம்மையையாற்றி எமதிறைவன் மனக்கோட்டத்தைப்போக்கிக்
களிக்கச்செய்வோம் செயசாலிகளாக விருக்கின்ற பூதகணத்தலைவராம்

பெருங்காற்றிற்பட்ட புளைபுஷ்பத்தைப்போலத் திசாதிசைகளெங்கனு ந்தூற்றுவோம் அரசனுணையைப் போற்றுவோமெனப் பற்பலசபதங் களைப்பேசி ரவுத்திராகாரமாக மண்டியெரிந்து தீராய்மேல்நடந்து- விஷ்ணு-பிரமன்- இந்திரனுதிய தேவர்க்கள் போற்றிநிற்கவும் புசபெல பராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் மற்றவீரர்கள்சூழ்ந்துகாற்கவும் வெற்றியராகிய பூதசயின்னியங்கள் கெக்கலி கொட்டிக்கொண்டு அண் டங்களதிர ஆர்ப்பரித்து கடலைப்போலச் சந்தன்பெருமைகளைப்புகழ் ந்திருப்பதின்மத்தியிற் பிறப்பிறப்பிலியாய் சுயஞ்சோதி மயமாய் சகல சீவதயாநிதியாயிருக்கின்ற சிவகுமாரன் கோடிசூரியர் தோற்றம்போல விளங்கியிருப்பதைக்கண்டு சரங்களைக்கொட்டிநகைத்தவர்களாய் இதனை ப்பேசிக்கொள்ளுவதாயினர், நமதுராசாதிராசன்மீது பகைத்துவந்திரு க்கின்ற சத்திராதியைப்பார்க்குமிடத்தில் அதிபாலனுகவிருக்கின்றனன் மேலும் ரதசமோகங்களையும் மதயானைப்பெருக்கையும் தத்திந்தாவும் புரவிப்பந்திகளையும் படைத்தவனன்று சேனைபெருக்கோ பசிப்பிணியி ற்பட்டு பலிக்குழன்றுவாடும் பசாசங்கள் இத்தனைய அபலமாகியசயின் னியங்களைப்படைத்திருக்கின்ற சிறுவனே நமதரசனுக்குப் பகைவனுய் இவ்வண்டத்திலிருந்த பலவீராதிவீரனைவாட்டிச் செயசாலியாயிருப்பவ ன்மேலும் பேலஅண்டங்களி னிருந்துவந்து நாம் வெளிப்பட யிடமி ல்லாமல் யித்தலமெங்கனும்நெருங்கி ஆண்டிறம்பெற்றுமூடியிருந்த சதுரங்கச்சேனைப் பெருக்கனைத்தையும் சற்றுநேரத்தில் அதாஅதப்பட மாய்க்குந்திறமைபெற்றவன் இக்காரணங்களை யோசிக்குமிடத்திலிமிக வுமதிசயமாகவும் அவிதமாகவுங் காட்டுகின்றது, ஆதலால் இந்தசிறுவ ன்மீதில் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் சக்கிரேஸ்பரனுகவிருக்கின்ற சூரபதுமமகாராசனை நித்துச் சண்டைகொடுப்பதற் கிடங்கொடாமல் நாம்முந்திச்சென்று சிவகுமாரன் முதலிய சகலரையும் சின்னபின்னப் படச்சாடிக் களத்திற்கிடத்திப் போரை வரையறமுடித்தபின்பு செயப்பி ரதாபத்துடன் நமதிறைவனைக்கண்டுகொள்ளவேண்டுமெனத் தீர்மானி த்துக்கொண்டவர்களாய் முன்னணியில்நின்ற சேனைத்தலைவர்கள் புசபெ லபராக்கிரமசாலிகளாகிய நால்வகைச்சேனைப்பெருக்குடன் வடவாமுகா க்கினிவீறியெழுவதைப்போலக் கோபாவேசங்களுடன் மேலிட்டுக் கு மாரதேவனைச் சூரியனைமூடிய பனிப்படலத்துக்கொப்பாக வளைத்துக் கொண்டு ரவுத்திராகாரமாக மண்டியெரிந்து போர்த்தொழிலைச் செய்ய பெத்தனித்ததை வானவெல்லையில் வேடிக்கைபார்த்திருந்த தேவர்கள் கண்டமாத்திரத்தில் திடுக்கிட்டு மனச்சோர்வுடன் பிப்பாதர் செய்வதை களைப்பார்க்குமிடத்திற் கொடியரிற் கொடியராகக் காணுகின்றது என்,

னமாய்முடிய விருக்கின்றதோவெனத் திகைத்துக் குமர குருபரனுக்கு
ச்செயமுண்டாகக் கடவதென்று வாழ்த்தியிருந்தனர், விருப்பமடைந்தி
ருந்தபூதசைனியங்களும் மனச்செருக்கற்றவைகளாய் அசுரநாயகக்
கொடியாரை வென்றிடுவமோவென்னும் பயப்பீதியினால் வருந்தியிருக்கி
ன்றதறுவாயில்- நவவீரர்கள்- இலக்கர்- படைத்தலைவர்கள்- பகைவர்வெ
ற்றிப்பாகங்களைமதித்து மேலிட்டுப்போவதற்கு முன்பின்யோசித்திருந்
தனர், இந்திரன் மனச்செருக்கற்று பகைவர் அபசெயங்களைப் பெறு
மட்டிக்குக் கோதிக்கொண்டிருந்தனன், இவ்விதங்களாகச்சகலரும்கல
ங்கியிருக்குங் காரணங்களை எமதுகர்த்தன் தெரிந்து திருநகைகொண்ட
வராய் சாரதியாகிய வாயுதேவன்மீதில் விழிகளைப்பரப்பிச் சூரன்படைக
ள்மிகுத்துக்காட்டுந் தலங்கடோறும் நமதுதேரைவட்டாகாரமாகச்சுழ
ற்றிவாக்கடவையெனத் திருவாய்மலர்த்தனர், அச்சாமர்த்தியத்தையெ
ன்சொல்லுவேன் அவ்வாக்கிய முடிவதன் முன்னம் சிவகுமாரனைச்சேவி
த்துப்பரிகளை எச்சரித்துச் சக்கிராகாரமாக ரதத்தைத்திருப்பித் திருப்பி
ப்பாதகர்அடர்ந்து விரிந்திருக்கின்றவிடங்கள்முற்றினும்மின்னலைப்போ
லச்செலுத்துவதாயினன், சவுனகாதி ரிஷிகளே அந்த தெய்விகம்பொரு
ந்தியரதத்தின் வேகத்தையும்மகிமைகளையும்புகழவும்போமோகண்
ணிமைகொட்டுவதன்முன்னம் பளிச்சுப் பளிச்சுமெனத்தோற்றப் பூம
ண்டலமுற்றும் வட்டணைவந்தும் திசாதிசைகளுக்கப்புறமோடியும்வா
னவெல்லையை வலம்வந்தும் சத்தசாகரப்பரப்பினும் அவற்றினிடையிற்
பட்டதீவுகளினும் மற்றதலங்களெங்கனும் கரகமெனச்சுழன்றுசுழன்று
திரிவதாக வாயுதேவன்செலுத்தும் ரதத்தின்வேகத்தை யிமையா நாட்
டத்தைப்பெற்றிருக்கின்ற தேவர்க்களாலும் மதிக்கப்பட்டதன்று இவ்
வாறுசுழற்காற்றைப்போல வட்டணைவருகின்றதறுவாயிற் குமாரதேவர்
தமதுசிறந்தவில்லிற் சர்ப்பங்களுக்கொப்பாக விஷங்களைக்கக்கிசிறவல்ல
தாய் அக்கினிச்சுவாலையை வீசத்தக்கதாய் வடவைக்கனலுக் கொப்பாகம
ண்டியெரியத்தக்கதாய் காளகூடத்தினும் அதிககொடுமையைப் படைத்
திருக்கின்ற திவ்வியபாணகோடிகளை ஒவ்வொரு தொடையில் ஆயிரகோ
டிகோடாகோடிக்கணக்கிற்சொரிகின்றதறுவாயிற்அவ்வாளிகள் வெளிப்
படுமுன்னிலையில் எரிந்து புகைத்து அதிகஉற்பாதங்களைக்காட்டி பிரச
ண்டவாயுவினுங்கடுகி யிடிகளைப்போலமுழங்கிச் சூரபதுமன் நால்வ
கைச்சேனைப்பெருக்கிற் பாய்ந்து பாய்ந்து சாடுகின்றதறுவாயிற் றலை
களற்று பத்துசைகளுக்கொப்பாகவும் பெருங்காற்றிற்பட்ட தெங்கின்னெ
ற்றுகளுக்குச்சமதையாகவும் இவ்வண்டப்பரப்பெங்கனுஞ்சிதறிமற்றை
யஅண்டங்களினும் உருண்டுமண்டைகள்பிளந்துவெண்குறைக்கொம்

யாகமுளைகள்தெறித்துக்குவிந்தும்மந்தரத்தையொத்த தோள்களற்றுப்
புரண்டும் உதிரம்பீறிட்டுப்பாய விசாலமாகிய மார்புகள்பிளந்தும் வீர
கண்டாமணிகலிக்கும் கால்கள் கண்டிக்கப்பட்டும் கண்டங்கண்டமாய்
த்துண்டந்துண்டமாய் வெட்டுண்டுவிழுந்தும் இவ்விதமாகமாண்ட ரா
ட்சதப்படைகள் களேபரங்கள் பருத்தமலைகளைப்போலக் குவிந்தசுமை
மிகுதியைப்பொறுக்கப்படாமையாற்பூமிதேவியானவள் தத்தளித்துச்சோ
ருமுன்னிலையில் அதனைத்தாங்கியிருந்த ஆதிசேஷன் ஆயிரம்பணமகுட
ங்களும் நெக்குவிட்டுக் கழுத்துகள்முறிந்து விழிகள்பிதுங்கி விஷங்க
ளைக்கக்கிப்படாதபாடுகளைப்பட்டனன், அக்காலத்திற் பெருத்தெழுந்த ரத்
தப்பிரவாகமானது பிரளயவெள்ளத்தினு மேலிட்டுச்சுழித்து வானவளா
யில்அலைகளைமோதிக்கடலைமீறிமண்ணகமெங்கணும் ஆர்ப்பரித்துக்கொ
ண்டோடிப் பருத்தவளைகளி னுச்சிவளையிற் றேக்கிட்டு இஃதொருசெ
ங்கடலோவெனச் சங்கிக்கவிளங்கியது, சவுனகாதிரிஷிகளே ஒருஅதிசெ
யக்காட்சியைச் சொல்லக்கேழ்ப்பீராக- கொலைகளவு கட்காமம் பொய்
முதலிய துஷ்கிருத்தியங்களையே முக்கியமாகநினைந்து தினந்தோறும்
நடாத்திவரும் மகாபாதகருக்கு உலகங்களுக்குச்சாட்சிபூதமாக விருக்கி
ன்றவேதாகமபுராண தருமசாத்திரங்களில் விதித்தபடிக்கு அவ்வவர்செ
ய்கைக்கடுத்த யிபத்துகள் நேருமாயிற் றமதிடத்திற் பலநாட்களாகவா
சமாயிருந்து உண்டுடுத்து சகலசெல்வங்களையும் ஒருமைப்பட அநுப
வித்துக்களித்திருந்த சினேகிதர் பந்துக்கள் முதலாகயாதொரு உதவிக
ளையுஞ்செய்யாமற் றும்பகைவருடன் சேர்ந்து வருத்தவும்வரும் அவ்
வாறே கரியநிறம்பெற்றிருந்த ராட்சதவீரர் பலநாட்களாகப் பொஷித்
துப்பிரியமனமில்லாமல் உடன்கொண்டுவந்த நாய்க்கூட்டங்களானவை
குமாரதேவர் வாளிகளினுல் வெட்டுண்டு ரணக்களத்தில்விழுந்து கிடக்கி
ன்றதமதுதலைவர் திரேகங்களைச் சற்றும்யிரக்கமில்லாமற்குலைத்துக்கொ
ண்டுபோய் மேல்விழுந்து தலைமுதலிய உறுப்புகளைக் கவ்விக் கவ்விப்பி
டுங்கித்தின்று பெருகுமுதிரத்தை நக்கித்திரிகின்றது, இவையன்றியும்பி
ன்னமுமொரு அற்புதத்தைத் தெரிந்து களிப்பீராக- அஃதென்னவெ
னிற்சராசரப் பிறபஞ்சங்களெங்கணும் பொருந்தி உயிருக்குயிராகநின்
றுநடிப்பித்து சாட்சிபூதமாகவும்நின்று அவைகள்செய்யும் நன்குதீங்
குகளைக்கண்டு களித்துவரும் பெருமையையுடைய பாலசுப்பிரமணிய
தேவர் தமதுகாண்டீபத்திற் சந்தித்துப்பகைவர்மீதிற் கரவேகமாகத்தூ
ண்டுகின்றபாணகோடிகள் பிற்படமுற்பட்டுக்காட்டி வருகின்றனவெனச்
சொல்லுவோமாகில் அவர்வீற்றிருந்து செலுத்தும் தெய்வீகம் பொரு
ந்திய ரதத்தின்கடுமையை யிப்படித்தென்று எத்தகையராலுங் கணிக்க

ப்படுவதோ மேலும்பரம்பொருளாகவிளங்குஞ் சிவகுமாரன்கரத்திற்பி
டிபட்டிருக்கின்ற பருத்தவில்லின் மகிமையையும் சரவேகத்தின் சுறுக்
கையும் சரங்கள்பாயும் உற்பாதங்களையும் அவைகள் அளவிலிறைத்தோ
டிப்பகைவன் சதுரங்க வெள்ளங்களைக் கண்டிக்கும் கொடுமைகளையும்
உக்கிரத்தையும் கெற்சாத்தொனிகளைச்செய்தோடும் ரதத்தின் விரைவை
யும் சாரதியாக முற்றட்டில்நின்று செலுத்தும் வாயுதேவன் கரங்களிற்
பற்றியசைக்கும் புரவிகளின் வார்களினசைவி னோசையும் படால் படா
லெனத்தாக்கும் சவுக்கினது முழக்கத்தையும் அவன் மனவெழுச்சியுட
ன்பகைவர் பாகனைச்சீறிஉரப்பும் ஆரவாரங்களையும் மற்ற வேடிக்கைப்
போரின்திறங்களையும் வீரவாகுதேவர்முதலிய துணைவர்க ளாதியாகக்க
ண்டுஅற்புதசித்தராய் அக்காட்சிகளைக்கொண்டாடி மனவெழுச்சியுடன்
கந்தன்குறுதிசெயங்களைப்புகழ்ந்துபோற்றினர், வானவெல்லையில்நின்
றுசமர்க்களத்தில் நடந்துவரும் சண்டைவேடிக்கைகளைப் பார்த்திருந்த
தேவர்கூட்டமானது பிரமித்து அம்மம்ம இஃதென்ன அற்புதமாகவி
ருக்கின்றது எமதிறைவனாகிய சிவகுமாரன் காண்டீபத்தில்நின்று வெளி
ப்படும் சரங்களின்விரைவைப் பார்க்குமிடத்திற் சரவேகத்தையோ சர
வேகத்தையோ வாயுவேகத்தையோ மனோவேகத்தையோ யாதினைமுந்தி
பேசப்படுமென்று அற்புதத்தைக்கொண்டு புகழ்ந்தனர், இவையன்றியு
ம்சிலசோத்தியங்களைத்தெரிந்து களிப்பிராகச் சண்முகப்பெருமான்கடு
கிவிறைக்கின்ற திவ்வியசரங்களானவை விஷச்சுவாலைகளைவீசி உருத்துப்
பாயுந்தோறும் நேர்ந்தநேர்ந்த ராட்சதப்பாதகர் கரங்களைப்படைகளு
டன்கண்டித்துக்கொண்டு விண்ணகத்திற்பாய்வதைப் பார்க்குமிடத்திற்
றமதுபகைவராகிய பலராகுகள்தொடரச் சூரியர்கள் போவதையொப்பக்
காட்டியது, இவ்விதமாக அவுணப்படைகள் களத்திற்படுமுன்னிலையிற்
சரவணபவன் பாணகோடிகள்சீறி யானைக்கூட்டங்களிற்புகுந்து சாடும்
போது வலியவிருப்புலக்கைகள்சங்கிலிகளைப்பற்றிப்பகைவனாவாட்டிய
லையைப்போலவிளங்கும் துதிக்கைகளைக்கண்டித்துசற்பங்களைப்போல
ப்புரட்டியும் தொய்யலெழுதி சித்திரமுகபடாம்போர்த்துமதநீரைப்பெ
ருக்கியிருக்கும் மத்தகங்கள்பிளந்து மூளைகள்கொட்டுண்டு சேருடவு
ம்நட்சத்திரங்களுக்கொப்பாக முத்துகள்பலபலவென் றுதிரத்தக்கதாகர
வரத்தினமயமாக்ய பூண்கள்பிகிந்து வலிபெற்றிருக்கும் தந்தங்கள்சி
தைந்துவெட்டுண்டு பிறைகளைப்போலவிழவும் பேழ்வாயானது நீண்
டஉதட்டுடன் யிருகூறுபிறையவும் நீலகிரிக்கொப்பாகிய திரேகம்கண்
டித்துக்குவியவும் உரலையொப்பக்காட்டும் பருத்தகால்கள் நான்கும் ஒ
ருகணைப்பறதிபட்டுவிழவும் அசைவுகொண்டிருக்கும்வால் காற்றிற்பற

தீசவும் இதுவுமல்லாமற் கடலைப்போலத்தாவிப்பரந்திருந்த புரவிப்பெ
ருக்கில் நுழைந்துவாட்டும்போது கடிவாளம் துகள்பட்டும் வலியகுர
லோசையைப்பெற்றிருக்கின்ற கழுத்தற்றும் பற்களுதிர்ந்தும் அலைகளை
ப்போலத்தாவும் கால்கள் வெண்ணடைபங்கள் கவிக்கக்கண்டித் திறையவு
ம்சவுரிக்கொப்பாக அசைவுகொண்டிருக்கும் வால்கள்தறிபட்டுச்சுழன்
றுமாளவும் இச்சையின்னியங்களைச் சூழநின்ற தோரணிகளிற்பாய்ந்துபுட்
டியிருக்கின்ற புரவிக்கூட்டங்களைவெட்டிச் சாரதியை நிலத்திற்கிடத்தி
ரதிகளை தும்சம்பண்ணி பொன்னுருளைகள் அச்சு மச்சு நவரத்தினமயமா
கக் கவிந்திருக்கின்ற மேலுறுப்புகள் குடை கொடி சிகரங்க ளனைத்தும்
பலபின்னங்களாகக் குவிந்தகாலத்திற் சொற்லவண்டில்களை சக்கரங்களு
க்கொப்பாகத் தேக்கித் தோய்ந்திருக்கின்ற உதிரப்பெருக்கிற் படிந்
துவிளங்குவது எப்படிக்கிருந்ததெனில், பொன்மயமாகிய மேருகிரி
லையவலம்வரும் துவாதசாதித்தர்களும் தமதுமதங்களினின்றும் வழுவி
பூமண்டலத்திற் சஞ்சரிப்பதுகொப்பாகக்காட்டியது, கேட்டீர்களோ
சவுனகாதிரிஷிகளே மேற்குறித்தவிதங்களாகச்சொற்லமயமாய்பாரித்தி
ருக்கின்ற ரதபந்திகளும் மும்மதங்களையும்பெருக்கி விறிட்டு நிலகிரிக்
கொப்பாகநின்ற யானைப்பெருக்கும் அலைகளைப்போலத்தாவிக் கடலை
யொப்பப் பரந்திருந்த புரவிக்கூட்டங்களும் குமாரதேவர்வாளிகளினு
ற்கண்டதுண்டமாகக் கண்டிக்கப்பட்டு விருப்படங்கிக் குத்துயிருட
ன்ரணக்களத்தில் விழுந்துகிடக்கின்ற அவுணவீரர்மீதிற் சாய்ந்துகொல்
வதெப்படிக்கிருக்கின்றதெனில் தாங்கள்,செய்தவந்த துஷ்கிர்த்தியங்க
ளுக்கடுத்த தெண்டனைகளை அந்தியகாலத்திற்பெற்று வருந்துவதற் கொ
க்கும் இவையன்றியிற்பாலசுப்பிரமணிய ர்சற்றுகோபங்கொண்டுகடை
யுகவெள்ளத்தினும் அடர்ந்திருந்த ரதகெசதுரகபதாதிகளைச் சிலபோதி
ற்சின்னபின்னப்படுத்திக்களத்திற்கிடத்தியதைக்கண்டவர்கள்பிரமித்தவ
ர்களாய்ப் பெரும்புறக் கடலுக்கொப்பாகப் பரந்திருந்த சத்துருக்களை
னவரையும் அலைத்துவந்த சிங்கமுகாசூரன் மாண்டனனென் றிருந்தோ
ம்அவனுக்குமாறுகக் காலாதிகளில் மன்னுயிரைக்கொண்டுபோகும்எம
னைப்போல ராட்சதர்பங்குக்குச் சிவகுமாரன்தோற்றினனென்று அற்புத
மாகவசனித்துக்கொள்ளும் புகழ்ச்சியைப்பெற்றனர், சவுனகாதி தவத்த
ரேஎமதிறைவணங்கிய குமாரசுவாமியார் கரவேகமாகச்செலுத்துகின்றவா
ளிகள்தீயையிறைத்துக்கொண்டோடிச் சாடுமுன்னிலையிற் சற்வாயுதபா
ணிகளாய் வீராவேசங்களுடன் னெருங்கியிருந்த பகைவர் கண்டதுண்
டப்பட்டுப்புரளுவதைப் பார்க்குமிடத்தில்கோடிகெருடப்பட்சிகள்சில
றெங்கிக்கூரியநகங்களையுடைய பாதத்திருலறைகின்றதுவாயிற்சர்ப்பங்

களானவை பவமின்னப்பட் டுருளுவதுக் கொப்பாக விளங்கியது, இவ்
விதமாக அதாஅதப்படுத்துகின்ற பாணகோடிகளானவை முன்னணியில்
வந்துகடற்கரையிற்சேர்ந்திருக்கின்ற நுண்மணலினு மேலிட் டடர்ந்தி
ருந்தநால்வகைச்சேனைகளையும் தடாரித்துருவிவாட்டி அவர்க ளடர்பினு
ல்வாயிடமில்லாமற் பின்னணியிற் றேக்கியிருந்த சேனைப்பெருக்கினும்
யின்னற்படலத்தைப்போல நுழைந்து நுழைந்து சிரம் கரம் உரம்கா
ல்மற் றஉறுப்புகளனைத்தும் சேதிக்கப்பட்டு மாளுவராயில் அவ்வாளிக
ள்லோகநாயகனாகிய சிவபிரானேந்தியிருக்கின்ற சூலாயுதமோ எமதரும
ராசன்கரத்தில்விளங்கும் கணிச்சியோ மகாவிஷ்ணு செலுத்தும் சக்கர
ப்படையோ தேவேந்திரன் பரித்திருக்கின்ற வச்சிராயுதமோ பிரளயகா
லத்திற்பெருகும் பிரசண்டவாயுவின் மோதலிற்பட்டெழும் வடவாமு
காக்கினியோ அல்லது சத்திவடிவாகவிளங்குகின்றவெற்றிவேலாயுதமோ
மேலும் இவற்றிற்கிக்கடுமையுண்டோவெனப்பலரும்பிரமித்துப்பேசி
க்கொள்ளவும் அற்புதங்களைக்காட்டிப்பாயும் குமாரதேவர் படைகளான
ன்வகாருண்ட மேகங்களைப்போலக் கரியதிரேகத்தைப் படைத்திருந்த
ராட்சதப்பாதகர் செய்துவரும் மாய்கைத்திறங்களையும் செயப்பிறதாய
த்தைப்பெறவேண்டுமென்கின்ற அக்கறையினுற் சோனைப்பெய்யலைப்
போலச்சொரிகின்ற கொடியபடைகளின் வகைகளையும் ஒன்றினையும்மீர
விடாமல்வாட்டி அவர்களையும் நெருப்பிற்பட்ட பஞ்சின்பெருக்கைப்
போலச்சாம்பலாக்கியது, இவையன்றியும் திரிநேத்திரதாரியாகிய சிவகு
மாரன்தூண்டுகின்ற திவ்வியபாணகோடிகளானவைமீறி எங்கணும்அட
ர்ந்துவாதாடியிருந்தபாதகர்மீது பாய்ந்துசிரங்களைக்கண்டித்துகரங்களை
த்துண்டித்து கால்களைக்கண்ட துண்டமாக வெட்டியெறியுந்தோறும்
அவர்கள்திரேகமுற்றினுந் தரித்திருந்த பலவகை ரத்தினங்களினுற் சோ
டித்திருந்த பணிதிகள் மின்னலையொப்பத் திசாதிசைகள் பூமண்டலப்ப
ரப்பினிடங்களெங்கணும் சொலித்துக்கொண்டு விழுந்தது, இவையன்
றியும்அப்பாணகோடிகள் பகைவர் பெருக்கிற்பாய்ந்துகண்டிக்குமுன்
னிலையிற் சிதைபடுந் திரேகங்கள் முன்னாம் விஷ்ணுவானவர் வாமனப்
படிவங்கொண்டுபோய் பெலிச்சக்கிறவர்த்தியினிடத்தில் மூன்றடி மண்
ணிரந்து யிரண்டுபாதங்களினும் பூமண்டலம்வானவெல்லையை யளப்ப
தாகக்கொண்ட விசுவரூபத்தைப்போலப் பிணமலைகள் விண்ணகவளா
யியுயர்ந்து சூரியசந்திரர் சஞ்சரிக்கும் மார்க்கத்தையுமறைத்தது, மே
லும்சிவகுமாரன் உருக்குச்செலுத்துகின்ற சாவருஷமானது அவுணர்
மீதுதாக்கிப் பிராணனைக்கொள்ளைகொண்டு திரேகங்களை வாரி வீசுவதினு
ற்சத்தசாகரங்களும்நிறைந்து பெரும்புறக்கடலைத்துத்துத் திடர்செய்த

அமன்றியில் தேவரினங்கள் வாசஞ்செய்யும் வானநாடுகளெங்கணும்பா
ந்துபோகவரவிடமில்லாமல் வாடவருத்தியது, இவ்வாறுசரவணபவன்க
டுங்கணைகள் ஒன்றனந்தமாகவிளைத்து சாம்போது ரணக்களத்திற்பல்
லாயிரகோடி கவந்தங்கள்நாடகனைப்போல நடித்தனவெனச்சொல்லுவோ
மாகில்அக்காலத்தில்மாண்ட நால்வகைச்சேனைகளின் விரிவைக்கணித்து
இவ்வளவென்று எத்தகையாலுங்குறிக்கப்படாது.அத்தறுவாயிற்பெருகி
யரத்தவெள்ளமானது பூவட்டமெங்கணும்பரந்துதேக்கிபிலத்துவாரங்
களின்மூலமாயோடி சத்தபாதலவெல்லை முற்றும்நிறைந்து அத்தலங்க
ளில்வாசஞ்செய்திருக்கின்ற நாகாசாக்களாதியவற்றை அலைத்துப்பெரு
கியவெள்ளமானது மேலிட்டு மண்ணுலகங்களைமூடிப் பிறளயகாலத்தெ
ழும்சத்தசாகரப் பெருக்கைப்போலப்பொங்கி கடலிடங்களிற்பரவி
தீவுகளைமூடித்திசைகளையும்மறைத்தது மன்றியில் மேலோங்கிநட்சத்தி
ரக்கூட்டங்கள் மச்சங்களாகவும் சூரியசந்திரர் செந்தாமரைவெண்டாம
ரைமலர்களைப்போன்றும் மின்னல் யிடிகுமுறலைப்பெருக்கிச் சோனை
மாரியைவீசும் மேகவினங்கள் கப்பல்களைப்போலத் தோற்றவும் வான
வெல்லையளாவி அலைகளைமோதும்உதிரவாரியானது செங்கடலைப்போ
லவிளங்கியது, யிவையன்றியும் எறும்புமுதல் யானையீறாகச்சொல்லும்
எண்பத்துநான்குலட்சஜீவபேதங்களைக் காலாதிகளிற்கொண்டுபோகு
ம்தொழிலைப்படைத்திருக்கின்ற எமதருமராசனும் அவன்மனதுக்கிசை
ந்தமந்திரியாகியகாலனும் யிவர்கள்கட்டளைகளைச் செலுத்தித்திரியுங்கிங்
கரர்கூட்டங்களும்ஒய்வின்றியிடைவிடாமல் ரணக்களத்திற்குடியாகவி
ருந்து செம்படவன்வலையைவீசி மச்சராசிகளைவாரிச்செல்லுமாறுபோல
அளவற்றபாசங்களைக்கொண்டு சங்கையற்றராட்சதர்பிராணன்களைச்சே
ர்த்துக்கட்டியிழுத்துப்போய்த் தென்புலத்திற் சேர்த்துச்சேர்த்துக்கை
கால்களோய்ந்து மனனுங்குழந்தளர்ந்து அலசி யிப்பாதகர் பெருக்கெக்
காலத்திலறுமென்றுவாடினர், இதுவுமல்லாமற் சுழலமிட்டுத் தேக்கித்
கொதித்துக் குமிளியைப்பெருக்கிப்பரவுகின்ற உதிரப் பிரவாகத்தின்மீ
துமிதக்குகின்ற பிணச்சேற்றினிடத்தில் ராட்சதர்கரியகேசபாசங்கள்நவ
ரத்தினமயமாகிய பதக்கமுதலிய பணிதிகள்விளங்கி தெப்பமிட்டு திற்ப
தைப்பார்க்குமிடத்தில் திருப்பாற்கடலின் மத்தியிற் சேஷசயனத்தில் ல
ட்சுமிதேவியைத்திருமார்பிற்சேர்த்துக்கொண்டு அறிதுயிலமர்ந்திருக்
கின்றமகாவிஷ்ணுவைப்போலத் தோற்றியது, அக்காலத்திற் பகற்போ
தைவிளக்கிவானவெல்லையில் ஒற்றைவண்டியும் எழுபச்சைப்புரவிகளையு
ம்பூண்டிருக்கின்றதேரில் சூரியன் ஆரோகணித்து அருணன் அனைக்கண
த்துக்காயிரக்காதவழியாகத் துரத்திப்போகுமுன்னிலையில் விண்ணவை

ளாயிற்பெருகி அலைகளைமோதிக்கொண் டிருக்கின்ற உதிரவாரியைநீந்தி
ச்சண்முகப் பெருமான்செலுத்தும் சக்கரப்படையானது பகைவர்கூட்
டத்திற்பாய்ந்து நடாத்திக்கொடுவதைப்போல ராட்சதவீரர்களத்திற் பட்
டோங்கிநின்ற பிணமலைகளைத் தேருருளையானது அறுத்தறுத்தோட
அதிலவ்வெல்லையைக்கடந்ததன், யிதுவுமல்லாமற் பற்வதாகிருதியா
கக்கரியமேனியைப்பெற்றிருந்த ராட்சதவீரர் வலியகண்டத்தைச்சிவகு
மாரன்படைகள் கறுவுமெனச்சண்டித்தோடுகின்றதருவாயிற்பீறிட்டெ
ழுந்தடங்கித்திவலைகளானவை வானவெல்லையில்நின் றுமேவடிக்கைப்பார்த்
திருக்கும் தேவர்கள்திரேகமெங்கணுந்தெறித்துப் பவுத்திரமாகிய சாந்தி
மாதிரியவர்துகாட்டுவ துளப்படிக்கிருந்ததெனில் மனுவிக்கியானசாத்திர
த்திற்சொல்லுகின்றநீதிப்படிக்குச் செங்கோலைச்செலுத்தி மன்னுயிரை
த்தன்னுயிருக்கொப்பாகப்பாதுகாத்து பூமண்டலத்தைபரிபாலனஞ்செ
ய்துவந்தவிபிச்சகிற வத்தியானவன் தன்மனவுறுதியைச் சோதிக்கவந்த
தைக்கலமடைந்தபுறாவின் நிமித்தம் திரேகமெங்கணும் உதிரம்பெருக்
கெடுத்தோடஉடைவாளைக்கொண்டு சலனமற்று மாம்சத்தை யரிந்தரிந்
து துலைத்தட்டில்வைத்ததருவாயில்அவ்வரசன்மேனிவிளங்கியதைப்போ
லவிருந்தது, சவுனகாதிரிஷிகளேமேற்குறித்தப்படிக்குச் சரவணபவன்
செலுத்தும்வாளிகளின் கொடுமையினுல் அண்டமெங்கணும் பெரும்பு
றக்கடலைப்போல ஆரவாரங்களைச்செய்துக்கொண்டு அடர்ந்திருந்த ரத
கெசதுரகபதாதிகளனைத்தும் சடுதியில்மாண்ட தெப்படிக்குக் காட்டுவ
தெனில், ஊனாய்-உயிராய்-பஞ்சபூதவியாபாரத்துக்கதிபனாய்சராசரப்பி
ரபஞ்சங்களினிடத்திற்பரிபூரணமாகநின்று அவைகளை நடப்பிக்கும்பெ
ருமையினையுடையபரமசிவத்தின் திருநகையினின்றெழுந்த அனலின்வீக்
கத்தினாற்சற்வசங்காரகாலத்தில் அண்டபுவனசராசரங்கள் தகிக்கப்பட்டு
நீருபூத்ததைப்போலத்தோற்றியது, இத்தன்மையாக மண்விண்ணெ
ங்கணும்நெருங்கியிருந்த கணக்கிறந்தராட்சதவெள்ளங்கள் பெருங்கா
ற்றின்மோதலிற்பட்ட பூளைப்புஷ்பத்துக்கொப்பாகமாண்டதருவாயில்
மற்றையவண்டங்களில் அடைபட்டிருந்தசயின்னியங்கள் பிரளயவெள்
ளத்தினுமேலிட்டுயிரைந்து வந்தெதுத்துபலவகை கொடியஅஸ்திரசஸ்தி
ரங்களைச்சோனைப்பெய்யலைப்போலச் சொரிந்துசொரிந்து வாதாடிவரு
கின்றதைச்சிவசுப்பிரமணியதேவர்கண்டு அதிகசோபங் கொண்டவராய்
தீட்சண்ணியமுள்ள கொடியபாணகோடிகளை அமோகமாகப்பிறையோ
கித்தக்கணடதன்டமாகக்கண்டித்துவாட்டியபோதிலும் மீட்டும்மீட்
டும்மாரிகாலத்திற் புற்றினிடத்திருந்து பெரும்போக்கெழும் ஈசலின
தபெருக்கெனமதித்துப் பெருத்துவந்துவந்து போராடுவதை எமது

ஈறதன்றிராவித்து அரலை நிறுத்துவதாகத் திருவுளத்தி னெண்ணிவா
ய்த்தமது திருக்கரத்தில் விளங்கும் ஒப்பற்ற காண்டீபத்தில் நின்றெழு
ம்சரமாரிப்பெருக்கினால் அண்டவாயில்களை அடைத்ததுமன்றியில் நம
துவாளிகளினாற் சண்டிக்கப்பட்ட ரதகெசதுரகபதாதிகள் சின்னபின்ன
மாய்நிணமாம்சாதிகள் உதிரப்பிரவாகத்திற் கலந்து போகயிடமில்லா
மல் அலைந்துதேக்குவதையும் பிணமலைகளாகியானவையோங்கி விண்ண
கவாயில்மூடநிற்பதையுந்தெரிந்து அவற்றினைமாற்றிச் சூரியசந்திரர்
முதலியநவக்கிரகங்கள் வானமூலமாகச்சென்று நமதுபணிவிடைகளிற்
குறைவுபடாமல்நடாத்திவரவும் பிராணிகளுக்குண்டாயிருக்கிற மனவரு
த்தங்களைப்போக்கிக் களித்திருக்கவும்நினைந்துகடையுகமுடிவில்நுதல்
விழிக்கனலினால் சமஸ்தத்தையும்சாம்பலாக்கவல்ல நமதுதாதையைப்
போலச் சிவசுப்பிரமணியக்கடவுளானவர் செந்தாமரை மலர்களுக்கொ
ப்பாகவிளங்கும் திருவிழிகளினாற் சற்றுகோபங்கொண்டு பார்த்தது
வாயில் வடவாமுகாக்கினியினும்மீறி யெழுந்ததீப்படலமானது தாக்கு
வதினாற்சடசடத்த தொனிகளுடன் சுவோபரப்பர்வதங்கள் முதலான
வைதகிக்கப்பட்டுநீறாய்ப்பூமியிலடங்கவும் உதிரவாரியானதுசுவறி மறைந்
ததுவாயிற் சொர்க்கமத்தியபாதலமென்னும் திரிலோகங்களிற்பெருந்
திருந்தபுலால்நாற்றம் நீங்கிப் பழையபடிக்குச் சீவராசிகளனைத்துந்தா
ங்கள்பட்டிருந்த மனச்சஞ்சலங்களைப்போக்கிக் களித்துச் சிவகுமாரன்
பெருமைகளைப்புகழ்ந்துவாழ்த்தியது, யித்தகைய அற்புதக் காட்சியைக்
கண்ட மகாவிஷ்ணு-பிரமதேவன்-இந்திரனாதியகடவுளர்- விம்மிதராய்
அதிஉச்சாகத்துடன்குமாரதேவனைப்போற்றிஅண்டங்களதிரச்செயஉ
ச்சாகங்களைக் கொண்டாடினவர்களாய் நாம்பார்த்திருக்கக் கழுகு-காக்
கை-பருந்து-முதலிய பட்சிசாலங்கள் உலவும்படிக்குப் பெருத்திருந்
தபிணமலைகளையும் பூவட்டமெங்கணும் அலைகளைமோதித் ததும்பிக்காட்
டியஉதிரப்பெருக்கையும்நிமைப்போதிற்கொளுத்தி நீறாக்கிமறைத்தக
ர்த்தன் யிதன்மத்தியில்நின்ற ராசாதிராசனாகிய சூரபதுமனைமாத்திரம்வா
ட்டாமல்விட்டதையோசிக்குமிடத்தில் யிதுவுமொரு திருவிளையாடலாக
த்தோற்றுகின்றதென அதிசெயமாகப்பேசிக்கொண்டு வாழ்த்தினர், அத்
ததுவாயிற்சற்றும் மனச்சஞ்சலமென்பதில்லாமற் சிவகுமாரன்முதலா
னவர்களை அதப்படுத்தி செயப்பிரதாபத்தைப்பெற்றுப்போகவந்திருக்
கின்ற அவுணர்பெருமான் யித்தஅனர்த்தங்களனைத்தையுங்கண்டு மண்வி
ண்ணெங்கணும்அடர்ந்திருந்தநமது சேனாசமுத்திரங்களனைத்தையுஞ்ச
ற்றநேரத்தில்நாசஞ்செய்து வெளிப்படையாக்கிய நமதுபகைவனையும்
அவனுக்குதவியாகச்சூழ்ந்திருக்கின்ற அதனுதியவீரர்களையும் அதாஅத

ப்படுத்தியிவர்கள்செயங்களைக்கொண்டாடி விதிக்களித்திருக்கின்ற இந்
திரர்க்கள்வனுலியதேவப்பயல்களையலைத்துச்சிறையிற்சேர்க்கும்படிக்குயி
க்கருமத்தைத்தனியனாய் நானேமுடித்து மனவருத்தத்தைப் போக்கியி
ருப்பேனென நினைத்ததவாயிற் கோபாக்கினியானதுமேலிட்டுத் தே
கத்தையும்மனதையும்வாட்டுவதினாற் கொவ்வைக்கனியினும் விழிகள்சிவ
ந்து தீப்பொறிகளை யிறைக்கத்தக்கதாக வடவைக்கனலைப்போலச்சீறிந்த
ன்தேனைத்தூர்த்திக்கொண்டு பூதவீரர் முதலானவர்கள்பேரிற் கவிந்துவ
ருத்தலைவாயில் வாயுதேவனும்எச்சரிக்கையாய்த் தன் துணைவருடன்தெய்
வீகம்பொருந்திய திருத்தேரை முடுக்கி எதிர்த்தபோது சொர்ணமய
மாகவிளங்கியிருக்கின்ற ரதத்தின்மத்தியிற் சரவணபவன் ஞானசூரியன்
தோற்றத்தைப்போலவிளங்கிக்கொண்டிருக்கும்திருமேனியினதுவனப்
பையும்சிரோரத்தினமயமாய்ச்சொலித்திருக்கும்வயிரமுடிகள்கவிந்தசண்
முகாரவிந்தங்களின்பொலிவையும் தூவாதசாதித்தர்களுக் கொப்பாகவி
ளங்கியசைகின்ற பன்னிரு மகாகுண்டலங்கள் துலங்கும் செவிகளி
ன்கோலத்தையும் கிருபைக்கிருப்பிடமாகிய குளிர்ந்த பார்வையைப்பர
ப்பும்விழிகளின்குணுகிசெயங்களையும் நவரத்தினமயமாகச் சோதித்தி
ரநின்றவாகுவலயங்களைச்சூடிப் பர்வதாகிருதியாகத் திரண்டுகாட்டும்
பசங்களின்காட்சியையும் ஆசானுபாகுவாய் நீண்டிருக்கும் திருக்காங்
களின்பொலிவையும் அவற்றினிடத்தில்வெற்றிவேலாயுதமுதலிய படை
களின்விளக்கத்தையும் வீரபராக்கிரம உத்தண்டத்தையும் மற்றுமிராநி
ன்றசிறப்புகளையும் ராசாதிராசன் எதிரில் நேராகத் தெரிசித்தபோதினு
ம்பிராரத்தவினையின்சம்பந்தப்பட்டவனாய் பூர்வத்திற்றக்கப்பிரசாபா
லகன்தனக்குச்சகல செல்வவளங்களையுங் கடாட்சித்தபரமனை மதியாம
லிகழ்ந்து கற்றன்றெண்டனைகளுக்காளாய்மங்கியதைப்போலச் சூரபது
மன்பாலசுப்பிரமணியதேவனைப்பார்த்து யிதனைச்சொல்வதாயினன், நா
ம்பலநாட்கள்தேகமும் மனமும்வருந்தி அரியதவங்களைச் செய்ததை
க்குறித்து சந்திரசடாமண்டலதாரியாகிய சிவபிரான்கொடுத்திருக்கின்ற
வரங்களின்முயற்சியினுற் சலனமற்றயிச்சாபத்துட னெக்காலத்துமிரு
க்கவல்லேன்மகாவிஷ்ணுமுதலியதேவர்கள்கனவிலுமென் னுடன்பகை
க்கநினையார்கள், இஃதன்றியில் யிதுவரையில் நம்முடன்சண்டைதொடு
த்தவர்கள் யிறந்ததல்லது பிழைத்துத்திரும்பினவர்கள் யாவருமில்லை அப்
படிக்குமாண்டவர்களைக்கணித்துச்சொல்லவும்போதுமோ யிவ்விதசெ
யப்பிறதாபங்களைப் பெற்றிருப்பது உனக்குத்தெரியாதோ கேழ்விப்ப
ட்டதுமில்லையோ நாம்கட்டளையிட்டுவந்த பணிவிடைகளைச் சிரசாவகி
த்துசெய்து வருத்திபோடியொளித்துக் கள்ளனைப்போலத்திரியும் இந்

திரனுதியதேவர்க்கள்யேதோ சிலகாரணங்களைச் சொல்லியதைச் சிறுபிள்ளையாதலால்மெய்மையெனக்கருதி முன்பின்யோசித்துப்பாராமல்மேலிட்டுவந்து சேற்றினிடத்தகப்பட்டுக்கொண்டுவெளிவர வகையறியாமல்முழிக்கும்பானைக்கன்றைப்போலத்திகைக்கின்றனை மேலும் பெரும்புறக்கடலினுமேலிட்டடர்ந்திருந்த நால்வகைச்சேனைப்பெருக்கனைத்தையும்சற்றும்பிரக்கமற்றுக்கொன்றதுமன்றியில்யிரண்டுபுசங்களைப்போலவிருந்ததுணைவனையும் என்சவுரிய பராக்கிறமங்களை மதித்துப்பாராமல்வேலினாற்சேற்றனை இஃதன்றியும் நமதுமனம்வருந்திவாடும்படிக்குச்செயசாலிகளாகியபிள்ளைகளையும்சேனைத்தலைவர்கள் மந்திரிபிறதானிகள்வருக்கங்களைக்கொல்லுவித்தனை யிக்காரணங்களை நினைக்கநினைக்கச்சோபமேலிடுகின்றபடியால் என்கோபதாபங்கள்தணியும்பொருட்டு அதப்படுத்துவதன்றியில்அதிபாலனென்றுன்னை விடுவேனென்றெவ்வளவும்நினைக்கவேண்டாம்புறந்தந்தோடியபோதினும் பழிபாதகத்துக்கஞ்சாமற்றொடர்ந்துதிகைக்கும்படிக்குச்சாடுவதன்றியில்உலக்குப்படைத்துணையாகவந்துசூழ்ந்திருக்கின்ற தாதன்முதலாகியவீரனா அதா அதப்படுத்திப்பூதரொன்றும்பேரில்லாமல்உன்சயின்னியங்களைச்சம்பலாசகிஉனக்குமந்திராலோசனைக்குவேண்டும்உதவிகளைச்செய்யத் தொடர்ந்திருக்கின்றமகாவிஷ்ணுபிரமன்முதலாகிய தேவர்க்களைச்சின்னபின்னப்படவாட்டியிக்காலத்திலெனக்குநேர்ந்திருக்கின்றகோபக்கனலைத்தணிப்பேனென்றுதன்கிளைகளுடன்நாசப்படவிருக்கின்ற சூரபதுமன் பேசியவாசகங்களனைத்தையும் குமார சுவாமியார் திருச்செவிகளினேற்று நகைத்தவராய்கொடியசெய்கைகளை நடாத்திவருங்கயவனே நீவியர்த்தமாகியவாக்கியங்களையாடினை உன் கருத்தின்வண்ணம் முடிவதொன்றேனுமில்லை யாதலால்வயிரமலைக்கொப்பாகிய உன்மார்பைத்துளைக்கும்படிக்கு நாம்செலுத்தவிருக்கின்றகூரிய அலகைப்படைத்த பாணகோடிகளானவை உன்அகந்தையையடக்கிமறுமொழிசொல்லுமென்று நிர்மலக்கடவுளாகியசிவகுமாரன் பாலசுப்பிரமணியதேவர் திருவாய்மலர்ந்த காரணங்களைக்கேட்டமாத்திரத்தில் அவுணர்பெருமானுக்கு அதிககோபம் பிறவேசித்துவடவைக்கனலைப்போலச்சீறி நல்லகாரியம் உன்விருப்பை யிந்தநிமிஷத்திலடக்கிபுத்திபண்ணிவைக்கின்றனனென்றுருத்துதங்கக்கட்டுகள்பூண்டுமேருவைப்போலவிளங்கும் பாரித்தவில்லையெடுத்து நிறுத்திபகிரதன்பொருட்டுதெய்வலோகத்திருந்திறங்கியகெங்கையைப்போலத்துவங்கும்நாரியைமாட்டிகுமுகுமென்னுமோசைவிளங்கவளைக்கின்றதருவாயில் அச்செய்கையைச்செயசாலிகளாகியபூதவீரர்கண்டுபூர்வத்திற்றிருப்பாற்கடலினின்றெழுந்தகாளகூடவிஷத்தை அதன்காரணமின்னதெனத்

தெரியாமல் வளர்ந்துகொண்டதேவர்களைப்போல வீரபராக்கிரமசாலி
யாகியசூரபதுமனைச்சூழ்ந்தது, அதுவெப்படிக்கிருந்ததெனில் மும்ம
தங்களைப்பெருக்கிவிழியிருக்கின்ற மதயானையைவலியற்றவேடர் பலர்
திரண்டு அபலமாகியவலையைவீசிப்பிடிக்கநினைந்துவளைந்ததையொப்ப
க்காட்டியது, இவ்விதமாகக்கடலைப்போலச்சிவகணங்களும் அவர்களுக்
குத்தலைவரும்மேலிட்டுவீராவேசங்களுடன் வில்லைவளைத்துக்கடுமாகி
யபாணகோடிகளைச் சோனைமாரியைப்போலச்சொரிந்தும் தண்டாயுதங்
களைக்கிறுகிறெனச்சுழற்றிமோதியும் வேலாயுதங்களைக்கடாவியும் சக்கர
ப்படைகளைச்செலுத்தியும் தோமரங்களையெறிந்தும் திசைகளைமூடத்த
ழைத்திருக்கின்ற மாமரங்களைப்பிடுங்கி மண்விண்ணதிரச் சாடியும் ப
ருத்தமலைகளைப்பறித்தெறிந்தும் இன்னமும்அவர்களாற் கூடியவளாயி
ல்அகோரஉபத்திரியங்களைச்செய்துவருவதைச் சூரமகாராசன்கண்டுநகை
த்தவனாய் மந்தரகிரியையொப்பத் தன்கரத்தில்விளங்கும்பருத்தகாண்டி
பத்திற்சங்கோபசங்கங்கணக்கிலுமேலிட்ட சரவருஷங்களைப்பெருக்கி
த்தன்னைமூடவருகின்ற பகைவர்படைகளைநிமைப்போதிற் றுத்துமுரு
க்கலடித்தழித்துமேலும் அமோகமாகியகடுங்கணைகளைச்சந்தித்துப்
போக்கிவானத்தையளாவநிற்கின்ற அரக்குமலையை ஊழிகாலத்தெழுந்
தீயானதுபற்றித்தகித்தழித்ததைப்போலப் பூதப்படைகள்தலையற்றும்ம
ண்டைதுறந்தும்-கண்கள்பிதுங்கியும்-பற்களுதிர்ந்தும்-மார்புபத்தலா
ய்ப்பிளந்தும்- வயறுபீறுண்டு குடல்களிறைந்து சற்பங்களைப் போல
ப்புரண்டும் வீரகெண்டைகலிக்கும் கால்கள்தறிபட்டுவிழுந்தும்-நுறு
ங்கியும்-சிதைந்தும்-துண்டந்துண்டமாய்க் கண்டங்கண்டமா யிறைந்
தும்நிலத்துடனாப்பட்டும் துகளாய் மண்ணுடன் கலந்தும் இவ்வித
ங்களாகச்சொல்லப்படாத் சித்திரவதையில்மாண்டவர்கள்போக மற்றை
யர்திகைத்து யாதுந்தோற்றுமற் பித்தரைப்போலப் பலதிசையினும்பி
றைத்தோடியும் பயபீதியினால் வேற்றுருக்கொண்டு பறந்தும் சந்து
பொந்துகளில் மறைந்தும் இவ்விதங்களிற் பூதசயின்னியங்கள் அல்லோ
லகல்லோலப்பட்டு ரணக்களத்தி லொருவருங்காணாமற்போய்விட்ட அ
னர்த்தத்தை வீரவாகுதேவர்-எண்மர்-இலக்கர்கண்டு மிகவும் மனம்வரு
ந்திமானமுங்கோபமும் கிரோதத்தைச் சுட்டுக்கொளுத்த ஊழிகாலத்தெ
ழும்வடவைக்கனலினும்மேலிட்டு ஒருமுனையில் நாற்புறங்களினும்வளைந்
துகொண்டு வெற்றிமாலைசூடியிருக்கின்ற வலியவிற்களை யிருகுதைகளு
மொன்றுபடவளைத்து மின்னலையொப்பப்பிறகாசித்திருக்கும் கூரியஅல
குகளைப்படைத்த அதிகதிட்சண்ணியமுள்ள கொடிய பாணவிதங்களைச்
சந்தித்துக்கரவேகமாய் சொரிந்தும் -முசலங்களாயிறைத்தும் -பிண்டி

பாலங்களைவீசியும் - மற்றுமிராநின்ற படைகளனைத்தையும் அமோகமா
கத்தாண்டிச் சூரபதுமன் தோற்றங்காணாமல்மறைத்ததருவாயில் அவை
வெளிப்பட்டவுடன் அக்கினிமழையைப்பெருக்கியும் விஷங்களைச் சக்தி
யும்கோடையிடிகளைக் கொட்டியும் குறுகுறெனச் சத்தித்தும் சடசடத்
ததொனிகளைக் காட்டியும் விடநாகங்களைப் போலச்சீறியும் இவ்விதபற்
பலஉக்கிறங்களைக்காட்டி மேலிட்டுவருவதை அவுணர் பெருமான்கண்
டுநலசமுகனாய் அவற்றினை மாறெருன்றேவித் தடுக்கவும் மதியாமல்வீர
சிங்கம்போலப் பார்த்திருக்கின்ற தருவாயில் வயிரமலையினிடத்தில் அ
டலமாகிய ஊசிகள் தைக்குமாறுபோலச் சலனமற்ற திரேகமெங்கனுந்
தாக்கித்தாக்கி முனைகளொடிந்தும் மழுங்கியும் சின்னப்பட்டும் முறிந்
தும் துகள்பட்டும் எரிபட்டும் இவ்விதங்களாகச் சிவகுமாரன் தணைவ
ர்வீசிய அஸ்திர சஸ்திரங்களனைத்தும் யாதொரு துன்பங்களையுஞ் செய்
யாமல்அதப்பட்டு மங்கிய காலத்திற் பகைவர் ஒன்றுபட்டுவந்து வளைந்
து சண்டைகொடுக்கின்ற சூட்சியை ராசாதிராசன்தெரிந்து நல்லகாரியம்
யிவர்கள்செற்வத்தை யடக்குவேனென நினைந்தமாத்திரத்தில் அதிகோர
யம்பிறவேசித்து காட்டழலைப்போலச்சீறி ஒப்பற்ற தன்காண்டபத்தில்
வெவ்வியபாணவிதங்களைப்பூட்டிச் சோனைப்பெய்யலினும் பதின்மண
ங்கதிகமாயிறைத்து தெய்வீகம்பொருந்திய தன்தேனாச்சக்கிருகாரமா
கச்சுழற்றிக்கொண்டு கோடாகோடிசுடுசரங்களை ஒவ்வொரு தொடையி
ற்றாண்டி எதிரிகள்விடும் ஆயுதவிதங்களனைத்தையும் துகள்படக்கண்டு
அவர்களேறியிருந்த பருத்ததேர்களைச் சக்கைச்சக்கையாகப் பேத்தெறி
ந்து புரவிகளையும் பாகனையும் நிலத்திற்கிடத்திப் பகைவர் கரங்களிற்பி
டிபட்டிருந்த நீண்டவிற்களைக் கண்டித்ததருவாயில் வீரவாகுதேவர் மு
தலிய செயசாலிகள் பலவருத்தங்களைப் பட்டபோதினும் சுத்தவீராத
லால் மானமுங்கோபமும் மனதைத்தாண்ட நிலத்திற்பாய்ந்து நல்ல
காரியம் இப்பாதகனைச் சும்மாய் விடலாகாது கூடியவரையிற்போராடி
வெற்றியுடன் மீளக்கடவோமெனத் துணிவுகொண்டவர்களாய் மீட்டும்
போர்செய்ய யெத்தனப்படுவதன்முன்னம் பாதகன்கணக்கிறந்த தீட்ச
ணியமுள்ள சிலீமுகங்களை அபரிமிதமாகப்போக்கி வலியபுசங்கள்விசா
லமாகிய மார்புகள் முதலிய உறுக்களைச் சல்லடையைப்போலத் துளைய
டும்படிக்குச் சாடும்போது பிரளயகாலத்தில் அனலைச்சொரியும்மேகா
சிகளுக்கொப்பாகத் திரேகமுற்றினும் உதிரம்ஊற்றெடுத்தோடப்பிரமி
த்துமதிமயங்கி யாதொரு போரையுஞ்செய்ய நிறுவாகமில்லாமற் கை
காலோய்ந்துநிற்கவும்பயந்து எண்மரும் இலக்கரும் மானமிழந்துமதி
கெட்டுபுறதந்தோடினர், இவ்விதமாகச் சூரன்கொடுமைக்காற்றுமல்தன்

துணைவர்களனைவரும் பறந்ததைச் செயசாலியாகியவீரவாகுதேவர் தெரிந்து மானமென்னும்பூஷணத்தை முக்கியமாக நினைந்திருப்பவராதலால்ரௌத்திராகாரமாக மண்டியெரிந்து ராசராசப்பிறவுடைசனாகிய சூரபதுமன்வீற்றிருக்கின்ற ஒப்பற்றதேரின்மத்தியிற்பாய்ந்து சிவபிரான்கடாட்சித்திருக்கின்ற வாளாயுதத்தை உறையினிடத்திருந் துருவிக்கொண்டு அவுணர்பெருமான்சரத்தில் விளங்குகின்ற மகிமையுள்ளகாண்டபத்தை அதிகஓசையெழ யிருதுண்டமாகச்சண்டித்து கெற்சித்தனர், சவுனகாதிரிஷிகளே அந்தவீரவாகுதேவர் சவுரியபராக்கிரமத்தையும் மனவூக்கத்தையும் சாகசத்தையும் யென்னெனச் சொல்லுவேன் நூற்றெட்டுகவனாயில்யாவராலும் அசைக்கவொண்ணாமல் பலவெற்றிகளைப்பெற்று மேருவையொப்பக்காட்டும் தனுசை நிமைப்போதிற் றறித்து நிலத்திற்கிடத்துவராயின் அவர்புயவன்மைக் கெவர்களை ஒப்பெடுத்துப் பேசப்படும்இப்பிறகாரம் தன்வலியில்லற்ற முன்னிலையில் சூரமகாராசனுக் குண்டாகிய கோபதாபங்களையும் பேசவொண்ணாததாபாக்கினியைப் போலமண்டியெரிந்து வச்சிரதிரேகத்தைப் பெற்றிருக்கின்ற பாதகன் ஆசானுபாகுவாகநீண்டிருக்கும் தன்கரத்தையோங்கி வீராதிவீரன்மார்பினிடத்தறைந்தனன் அக்கொடுமையை யென்சொல்வேன் அந்தநிமிஷத்தில் விசாலமாய்வலிபெற்றிருந்த மார்பானது பத்தலாய்ப்பிளந்து மலையினிடத்திருந்துபெருகும் அருவியைப்போலச் சொரியானதுவூற்றெடுத்தோடவீரசிங்கத்தைப்போன்றகாளை பகைவன் ரதத்தின் முற்றட்டினிடத்தில் அதிகவேயட்டுவிழுந்து சொரணையற்றுக் கைகாலசைவின்றிக் கிடந்த தருவாயில் அக்கோலத்தைத்தெரிந்த அவுணராசன் சற்றுதன்கோபந்தணிந்தவனுயிர்த் தூதனைக்கொல்வது நம்மையொத்த சக்கிறவர்த்திக்கடாதென்றெண்ணித் துரிதமாயெடுத்து வானத்தெறிந்தவேகத்தினாற் சக்கிருகாரமாகச்சுழன்றுகொண்டு அண்டப்பித்திகைவரையிற்போய் மீளுமுன்னிலையில் வாயுவின்பரிசந் திரேகமெங்கணுந் தாக்கத்தாக்கக் களைதெளிந்து உணர்ச்சிபெற்று நிலத்துக்குச் சமீபத்தில்வந்தகாலத்திற் பாய்ந்து சூரனுடன்மறுபடியும்போராடுவதினாற் பயனில்லை எமதிறைவன் திருக்கரத்தில்விளங்கும் வெற்றிவேலினாலல்லது மற்றெவ்விதங்களினும்இவனை அசைக்கவொண்ணாதெனநிதானித்தவராய்ரிஷபத்தைப்போல நடந்துபோய்சுயஞ்சோதிமயமாகவிருக்கின்ற பாலசுப்பிரமணியர் பக்கலில்மனவெழுச்சியற்றுச் சோர்வுடன் நின்றனர். இப்பிறகாரம் செயசாலியாகிய வீரவாகுதேவர் பின்விட்டதருவாயிற் சூரபதுமன்வெட்டுண்ட வில்லைமனவருத்தத்துடன் வீசிப்போட்டு தன்தேரில் நாட்டியிருக்கின்ற மற்றொருசிறந்தவில்லையெடுத்து இடதுகரத்திற் பற்றினன், ரிஷிகளே அதன்மகி

மைகளிற் சிலதைச்சொல்லச்சேழ்ப்பிராகச் சூரியபகவான்தோற்றநின்ற
உதையகிரியையும் மேற்குத்திசையில்விளங்கும் அஸ்தமானகிரியையும்
போலப்பருத்துப் பொன்மயமாய் வானத்தையளாவநிற்கும் மேருவை
யொப்பநீண்டு டலதங்கக்கட்டுகள் பிகிந்து மணிகள்கலிக்கத் தக்கதாய்
பலசிகரங்களைப்பெற்று தீனவாவாட்டிச் சிவகுமாரன் வெற்றிவேலினாற்
பிளப்புண்ட கிரவுஞ்சபற்வதத்தைப்போல நித்தியமும் பிறருக்கிதங்
களைச்செயது மன்னுயிரைக்கொண்டுபோகும் எமனை நிகர்த்துவிளங்கு
வது அத்தகையகொடுமையைவாய்ந்த தனுவை மண்டலாகாரமாக வளை
த்துவயிரத்தைநிகர்த்து மின்னிக்கொண்டிருக்கும் நாரியைமாட்டித்த
டவிக்கொடுத்து பிரளயகாலத்திற் புனலும்தீயும்வாயுவும் ஒன்றுபடவெ
ழுந்து உலகங்களையலைத்தொலிக்குமாறுபோலச் சகலரும்திடுக்கிட்டே
ங்கிவெருந்தும்படிக்குக் குணத்தொனிகாட்டியதைத் தம்மையடுத்திருக்
கின்றதேவர்களின்னலைப்போககிப் பாதுகாத்துரட்சிக்கும்படிக்குக் கங்
கணங்கட்டியவர்திருக்கும் பாலசுப்பிரமணியக்கடவுள்தெரிந்து யுகமுடி
விற்காளமேகவண்ணனாகிய மகாவிஷ்ணு பூமண்டலத்தையுண்டு கெர்ப
த்திற்டரித்ததுவாயினும் ஆயிரம் யிதழ்க்களைவாய்ந்த பொன்னந்தாம
ரைப்பீடத்தமர்ந்திருக்கும் பிர்மதேவனுறங்கு மிராப்போதினும் அவ
ன்காலமுடிந்து மாளவரும்போதும் சலனமற்று சாச்விதமாக நிலைபெ
ற்று அண்டத்தின்கீழ்வளையிலாழ்ந்து மேற்புறத்தையுருவஓங்கி லோக
நாயகனைப்பரித்து எங்குந் தனுதொளியைப் பரப்பிவிளங்கும் பெரு
மிதத்தைப்படைத்த திருக்கயிலாயபர்வதத்தைப்போன்ற வலியவில்லை
ச்சிவகுமாரன் கரத்திற்கொண்டனர், அதன்மகத்துவங்களையும் சொல்
லச்சேழ்ப்பிராக- சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஏகமாய்ப்
பெருக்கெடுத்தெழுந்த பிறளயவெள்ளத்தினாற் சராசரப்பிறபஞ்சங்கள
ழிகின்றதறுவாயில் மேருமுதலிய குலகிரிகளும் மற்றைய பற்வதங்களு
ம்வானவெல்லையிற் பரவியிருந்த மேகசாலங்களும் அந்தமண்டலத்துக்
குமேற்பட்ட பொன்னுடாதிப உலகங்களும் அவற்றினிடையில் வாச
ஞ்செய்கின்ற முப்பத்துமுக்கோடிதேவர்க்கள் நாற்பத்தெண்ணாயிரம்
ரிஷிகள் சருடகாந்தறுவர் சித்தவித்தியாதராதியாகத் தத்தமது வாசஸ்த
லங்களைநீங்கி அரகரவென்னும் பேரொலியைக் காட்டித் திருக்கயிலாய
வரைச்சாரலிற்சேர்ந்து சூழவிருந்து மனஉச்சாகங்களுடன் தேவதே
வோத்தமனைப் போற்றிவரும் சிறந்த ஒலியையொப்பக் குமுறுமென்
னமுழங்கவல்லது, இவ்விதமகத்துவங்களையும் உன்னதத்தையுமபெற்ற
தெய்வீகம்பொருந்திய வில்லை எமநிகறவனாகிய சிவசுப்பிரமணியக்கட
வுள்மின்னலையொத்தநாரியைமாட்டித் தோள்வலிகொண்டுமணிகள்கலக

வெனச்சத்திக்கத்தர்கதாக வளைத்துமாட்டி யிடக்காத்திற்பற்றிக்கொண்
டுவலதிருக்கரத்தினாற்றடவி - தேவர் - மக்கள் · பைசாசு · நாகர் - விலங்கு
பறவை - செந்து வெனச்சொல்லநின்ற எழுவகைப்பிறவி பேதங்களிற்
றோற்றியிருக்கின்ற எறும்புமுதல் யானையீறாகச்சொல்லும் பலவகைச்சீ
வராசிகளும் யிடியேற்றின்கூட்டமாய் ஆர்ப்பரிந்ததைப்போலக்குணத்
தொனிகொண்டனர், அவ்வதிர்ச்சியானது செவிகளிற்பட்டமாத்திரத்தி
ற்கலைவாகனத்திலேறிநடாத்தும் ஸ்ரீகாளியானவள் திடுக்கிட்டுமனம்வரு
ந்திவாடினளெனப் பேசுவோமாகில் மற்றப்பிராணிகளுக்குண்டாகியயி
ன்னலை யிவ்விதமென்று யாவராற் குறிக்கப்படும் இப்படிக்குச்சமஸ்த
மும் நிலைகுலைந்து தத்தளிக்கின்ற தருவாயிற் காலனுக்குக்காலாந்தகனை
பொத்த கொடியசூரபதுமன் மனம்பொறாமல் கோபதீபிதனாய்கைமி
ஞ்சியிருபது நூறாயிரம்தீட்சணியமுள்ள பாணங்களைத் தேடிஎடுத்துவில்வி
ற்பூட்டி ஆகரணாந்தபரியந்தமிழுத்துப்பிறையோகித்ததருவாயில் அவை
ஒன்றனந்தமாகப்பெருகி மண்விண்ணெங்குமடர்ந்து சூரியசந்திரர்கா
ந்தியையடக்கிச் சத்தசாகரங்களையடைத்து பூமண்டலமுற்றும் துளைத்து
ப்பாதலவரையிலோடி பஞ்சகற்பகச்சோலை தழைத்துகுளிர்ந்தநிழலைப்
பரப்பியிருக்கும் பொன்னுலகமாதிய விண்ணாடுகளைமறைத்து அதிகொ
டுமைகளைக்காட்டி வாயுவேகத்தினுமேலிட்டுப் பாய்ந்தும் தாபாக்கினி
க்கொப்பாகத் தீயைவிசிப்பரந்தும் கூர்த்தபார்வையையுடைய கூற்றுவ
னைநிகர்த்துப் பாய்ந்தும் திருப்பாற்கடலினுதித்த விஷத்தினும் அதிகசு
வாலையைவீசியுறறியும் சரபப்பட்சியைப்போலப் பறந்துசாடியும் பற்ப
லசிரங்களைக்கொண்டுறுத்தும் அஷ்டதிசைகளேமுதலிய புவனங்களிற்
புகழ்ந்துவணங்கவிருக்கின்ற சூரபதுமன் ஆக்கியா சக்கிறத்துக் கொப்
பாகஉலவியும் கடியவேகத்தையும் ஆக்கத்தையும்பெற்றுலவியும் உலக
த்துச்சாணியாக நிற்கின்ற மகம்மேருபர்வதத்தைத் துளைத்தோடியு
ம்பாரிசங்களிற்சூழவிருக்கின்ற மலைகளைப்பிளந்துதள்ளியும் அண்டவெ
ல்லையைத்தார்த்தும் யிடியேற்றையொப்ப முழங்கிக்கொண் டோடியு
ம்விஷப்பெருக்கைக்கக்கியும் பற்பலநிறங்களுடன் பாய்ந்தும் சற்பங்
களைப்போலச்சீறியும் மற்றுமிரா நின்றகொடுமைக ளனைத்தையும்பெரு
க்கியும் இவ்விதங்களாகப் பிறையையொத்த கோறதந்தங்களைப் படைத்
திருக்கின்ற சூரபதுமன் செலுத்துகின்ற பாணகோடிக ளானவை எத்த
லங்களினும் நெருங்கி அதிகஉற்பாதங்களைச் செய்துசாடும் அனந்தங்க
ளைத்தேவர்க்கள்கண்டு பிறிதுத்தவர்களாய்க் கரங்களைப் பிசைந்துக்கொ
ண்டோடி மகாவிஷ்ணுவைக்கண்டு வணங்கிப்போற்றி ஐயனே இக்கா
லத்திற்சூரனால்நேர்ந்திருக்கின்ற அபாயத்தைநீங்கி நாங்கள் ஒளித்துப்

பிழைக்க ஓரிடமுண்டோ விரைவிற்காட்டி ரட்சிக்க வேண்டுமென்றமு
றையிடுகின்ற விண்ணவர் நடுக்கங்களையும் மனக்கோட்டத்தையுந்தெரி
ந்து அவர்களுக்கு கேசவன் சிலதேறுதல்களைச்சொல்லி யாற்றுவதன்மு
ன்னம் பிரகாசம்பொருந்திய வேலாயுதத்தைப்படைத்த பாலசுப்பிரம
ணியக்கடவுளானவர் தேவர்கூட்டமுதலியர் படும்வருத்தங்களைத் திருவு
ளத்திற்றெரிந்து பிரளயகாலத்தெழுந்தலைக்கும் வடவைக்கனலையவிக்க
வல்லபிறசண்டவாயுவையொத்த தனுசினிடத்தில் அதிசதீட்சணியமுள்ள
வ ளிகளைச்சந்தித்துச்சோனைச்பெய்யலைப்போல அமோகமாகத்தூண்டி
க்கொடியபாதகன்முயற்சியினால் எங்கும்நிறைந்திருக்கின்றசரப்பெருக்
கணைத்தையும் சின்னபின்னப்படக்கண்டித்தும் தூள்படச்சாடியும் நு
றுக்கியும்துண்டந்துண்டமாக வெட்டிக்குவித்தும் இவ்விதங்களில் ஒன்
றொழியாமல்மாற்றினர், இந்தசெயத்தைத் தெரிந்ததேவர்கள் சோபதா
பங்களையொழித்து நீடித்திருந்தயிரவொடுங்கிவிடிந்ததறுவாயிற் சூரிய
பகவான் உதையகிரியினிடத்தெழுந்த தோற்றத்தைக்கண்ட உலகத்தைப்
போலஅகமுகமலர்ச்சிகொண்டு ஆனந்தவாரியில்முழுகிக்களித்தனர், இது
களனைத்தையும்பார்த்த சூரபதுமன் வடவையைப்போலச்சீறிநல்லகாரிய
ம்தேவப்பயல்களும் நமதெதிரில்நிற்கவும்தயிரியம்பெற்றனரோ யிந்த
நிமிஷத்திற்பாலனை அடக்கி யிவர்கள்மனச்செருக்கைமாற்றி துக்கசாகர
த்திலழுந்தச்செய்வேனென வயிரங்களைப்பேசி எமதிறைவனுக்குச் சமீ
பத்தில்நெருங்கி வெற்றிபெற்றிருக்கின்ற தீட்சணியமுள்ள சரவருஷங்
களைத்தூண்டி செர்சித்ததறுவாயிற் குமாரதேவர் அவற்றின்கொடுமைக
ளைமதித்து-௭-என்னும் அளவையிற் பலகோடிதிவ்விய பாணங்களைத்த
மதுகாண்டபமூலமாகப்போக்கி அவுணர்பெருமான் தூண்டியபடைவி
தங்களனைத்தையும் அக்கினிப்பொறிகளையிறைத்துக் கொண்டுநிலத்தில்
விழுவதாகச் சின்னபின்னப்படக்கண்டித்தனர், அக்காரணத்தைத் தரும
மார்க்கத்துக்குக்கடைப்பட்டபாதகன்கண்டவுடன் மண்டியெரிந்துமீட்
டும்கணக்கிறந்தகொடியசரங்களைக்கோடைப்பெய்யலுக்குமேலாகச்சிவ
பிரான்திருக்குமாரன்மீதிற் செலுத்தினன், அவற்றின்கடுமையைக் கந்த
சுவாமியார் நூறுமகிமையுள்ளஅர்த்தசந்திரபாணங்களினால் அதப்படுத்தி
மேலும்எழுநூறுசிறந்த சிலீமுகங்களைத்தனுசிற்பூட்டி மாயைபுத்திரன்
பேரிற்செலுத்தினர், அதுகளின்வேகத்தையும் வீறுப்பையும் அவுணரா
சன்தெரிந்து அதற்கடுத்த தொகைசரங்களைப்போக்கிவாட்டி தட்சிண
த்தில் இரண்டாயிரம் தீட்சணியமுள்ள சிலீமுகங்களைக் குமாரதேவர்
திரேகத்துக்குக்குறிகொண்டுதூண்டிக் கியாவும்மனச்சிங்கநாதஞ்செய்த
தறுவாயில் எரிந்து புகைந்து அதிஉக்கிறத்தைக்காட்டிமேலிட்டுவரும்

போது அத்தொகை சிறந்தபடைகளினால்மாற்றி மேலும் இரண்டாயிரம்புங்கவங்களைச் சூரபதுமனைக்குறித்துப் பிரமனை வேதப்பொருளை வினவிச்சிறைசெய்துசிருஷ்டித்தொழிலைநடாத்தியகற்தன்விசிய தறுவாயில் அவைகள் வெளிப்பட்டவுடன் தீயையும் புகைப்படலங்களையும் விஷச்சுவாலையையும் வீசிக்கொண்டு வாயுவினுங்கடுகி மேலிடவருவதைச்சூரன்கண்டு இரண்டாயிரத்தொகை விஷத்தொவையவிட்டிருக்கின்றசரங்களைத்துரிதமாகத்தனுசிற்பூட்டிப் பிறையோகித்துச்சிவகுமாரன்படைகளைபங்கப்படுத்தி ஆதிசேஷன்வாசஞ்செய்திருக்கும்பாதலப்பரப்பனைத்தும் கிடுகிடெனத் தத்தளிக்கத்தக்கதாக ஆர்ப்பரித்தவனாய் தட்சிணத்தில்சனைக்சிறந்தகொடிய கணைவிதங்களை மாறிமாறி யிடைவிடாமற் சொரியத்தொடங்கினன், அதுகளனைத்தினையும் பாலசுப்பிறமணியதேவர் தமதொப்பற்றதனுசில் தீட்சணியமுள்ள கடுங்கணைகளைப்போகவி அதிகச்சுவாலையவீசியெரிந்துவருங் காட்டழலிற்பட்ட பொருளைச்சாம்பலாக்கிவாட்டுவதைப்போலக் கண்டதுண்டமாக வெட்டித்தள்ளி மேலுங்காவேகமாக அமோகமான சுசரங்களைப்பிறையோகித்தனர், இவ்விதமாக எமன்தயனேவிய பாணகோடிகளைச்சூரன்தன் படைகளினால்மாற்றவும்அவுணாசுரன் தொடுத்துவருங் குடுசரங்களை லோகநாயகன் கண்டித்தும் இவ்விருவீரர்களும் பிறையோகிக்கின்றவாளிக ளொன்றுடனொன்றெதித்து குறுகுறென்றும் சுருசுறென்றும் சிடசிடென்றும் உராதிக்கொண்டு சிறி உலகமெங்கனும் பாய்ந்தும் முட்டியும் தட்டியும்புகைந்தும் எரிந்தும்வெட்டியும் நறுக்கியும் இவ்விதங்களிற் தறிபட்டு வானத்தையளாவக்குவிந்தருமன்றியில் அவைகள் கண்டிக்கப்பட்ட தருவாயிற் பெருத்ததீப்படலமான துமிறி டாணராசிகளிற்குவிப் பரந்துடெரிந்தோங்கிய சுவாலையான துதாவிவாட்டுவதினால் பற்வதங்கள்படபடெனவெடித்துப் பொடியவும் சத்தசாகரங்களின் செலப்பெருக்கானது கொதிப்பெடுத்துச்சுவறி அவற்றுட்பட்ட திமிதிமிங்கில கிலங்களாதிய மச்சராசிகள்அச்சுடுகைக்காற்றுமல் வானவனாயி லெழுந்தெழுந்து விழுந்தலையவும் விண்ணிடத்திற் பெருகும் கங்கைவெள்ளம் தளபிளவெனப் பொங்கிமங்கவும் நட்சத்திரராசிகள் பொரிந்திறையவும் மேகசாலங்கள் நீர்ப்பசையற்றுச் சுருண்டுருளவும் மற்றவிண்மண் ணிடங்களிற்றங்கிய சமஸ்தமும் அல்லோல கல்லோலப்பட்டு வருந்திய கொடுமைகளை யின்னவிதமெனச்சொல்லப்படுவதோ இப்பிறகாரம் வெற்றிமாலைபுரளும் புயாசலங்களைப்படைத்த வேலாயுதமூர்த்தியும் செயசாலியாகிய சூரபதுமனும் வண்டில்களுடன் வண்டில்கள்தாக்கநெருங்கிக்கொடியபோர்த்தொழிலை நடாத்திவரும் உத்தண்டங்களைக்கண்ட வீரலஷ்சுமி சந்தோஷித்தவளா

யியாவரிடத்திற்சேருவோமெனச்சங்கையுற்று நிற்கவும்வீரகாளியானவள்
களித்து ஐயன்வில்வன்மையையும் கரவேகசரவேகத்தின் முயற்சிகளையு
ங்கொண்டாடி பரணிபாடி நடிக்கவும் இவ்விதஆடம்பரங்கள் நடந்துவ
ருகின்றதருவாயிற் கற்தனைச்சூழவிருந்த -மகாவிஷ்ணு -பிரமன் - இந்தி
ரன் -வீரவாகுதேவர் முதலானவர்களும் விண்ணகத்தினின்று சமரவெ
ல்லையில்நடக்கின்ற அற்புதப்போர்த்தொழிலைப் பார்த்திருந்த தேவர்கூ
ட்டங்களும் ரிஷிகளும் பாணகோடிகளெங்கணும்பார்த்து அதிககொடு
மைகளைக்காட்டி உலவுவதைக் கண்டனரல்லது அவற்றைத்தூண்டும்வீர
பராக்கிரமசாலிகள் தேர்கள்போருமிடங்களைத்தெரியாமல் திகைத்து அ
ம்மம்ம யிதுவென்ன அற்புதக்காட்சியாக விருக்கின்றதென்று புகழ்ந்
திருந்தனர், இவ்விதங்களிற் பாணவருஷங்களைப் பொழிந்துகொண்டுல
விவருமுன்னியில் முன்னம் நாரதர் யாககுண்டத்தெழுந்த வெள்ளாட்டு
க்கடாவினை வாகனமாகக்கொண்டு நடாத்தும் பெருமையைவாய்ந்தச
ரவணபவன் விடுத்தவாளிக ளனைத்தையும் சூரபதுமன் பலகோடிகடுங்
கணைகளைச்செலுத்திச்சின்னபின்னபட்டுப்போகக்கண்டித்ததுமன்றியி
ல்மேலும்சிலகூரியவாளிகளைக் கரவேகமாசப்போக்கிக் கற்தன் வீற்றிரு
த்துசூருவளிக்காற்றையொப்ப வட்டணைவருகின்றதிருத்தேரில் நாட்டி
யிருந்தவெற்றித்துவசத்தை வெட்டித்தள்ளிக்கோடையிடியுமஞ்சக்கொ
க்கரித்துவெற்றிச்சங்கத்தையெடுத்துப் பவழத்தையொப்பவிளங்கும்வா
யினிடத்தில்வைத்து தன்கீர்த்திப்பிரதாபங்கள் எத்தலங்களினும்பரந்து
விளங்குவதைப்போல ஓசையெழுந் துலகங்களில் நிறைந் தலைப்பதாக
ப்பொம்பொம்மென முழக்கினன், சவுனகாதிரிஷிகளே யென்சொல்
வேன் அவ்வதிற்சியானது ஒருமுகூர்த்தகாலம் உலகங்க ளெங்கணுஞ்செ
விடுபடச் சத்தித்தது இதுவுமல்லாமல் தட்சிணத்திற் சங்கோபசங்கமா
கக்கொடியபாணங்களை வில்லிற்பூட்டிச் சோனைப் பெய்யலைப்போலச்
சொரிந்து முருகப்பெருமாள் தோற்றங்காணாமற் சகலரும்பிரமிக்கும்
படிக்குமூடிச்சிங்கநாதஞ்செய்தனன், அத்தருவாயிற்பாலசுப்பிரமணி
யக்கடவுளுக்குச் சற்றேகோபம்பிறவேசித்துப் பகைவனால்விடப்பட்டு
மண்டியெரித்துமூடியகணைகளனைத்தையும் அமோகமாகிய பாணவருஷ
ங்களினால் நிமைப்போதில் மாற்றிமீட்டும் ஏழுகோடி தீட்சணியமுள்ள
சிலீமுகங்களையெடுத்து தனுசிற்பூட்டி ஆகர்ணாந்தபரியந்தமிழுத்துக்கர
வேகமாகப்போக்கியமுன்னிலையில் அதிகவுற்பாதங்களைக்காட்டித் தீயை
யிறைத்துக்கொண்டு வாயுவினுங்கடுகியோடிவிழுந் து சூரபதுமனேறி
யிருந்ததெய்விகத்தேரைச் சக்கைசக்கையாகப் பேத்தெறிந்துஅதிற்பூட்
டியிருந்தபலகோடிவேகமுள்ள புரவிக்கூட்டங்களைச் சின்னபின்னப்ப

டக்கண்டித்து ரதிகன்மனக்கருத்தையறிந்து செலுத்தவல்ல மதியூகியா
கியபாகன்சிரத்தைக்கண்டித்து நிலத்திலுருட்டி முகப்பில் நாட்டியிரு
ந்த சிங்கக்கொடியையுந்தறித்துக் கடலிற்சேர்த்தனர், சவுனகாதிரிஷிக
ளேஇவ்விதமாகச் சூரபதுமன் பங்கப்பட்ட குறைபாடுகளைத் தெரிந்த
பூதசேனாதிபதியாகிய பானுகம்பன் அதிகமனஉச்சாகத்துடன் புயங்கள்
பூரித்துவானத்தையளாவ ஆனந்தபரவசத்தனாய்க் கர்த்தன் குணாதிசெயங்
களையும் வெற்றிப்பாட்டினையுங் கொண்டாடிப்போற்றி தேவர்க்கள்கர
ங்களைக்கொட்டி வாழ்த்தெடுப்பத் தமதுசுந்தரமுள்ள ஆயிரந் திருவா
ய்கள்தோறும் தவளநிறம்பெற்றிருக்கின்ற உன்னதமுள்ள சுரிமுகச்சங்
கங்களைச்சேர்த்து உலகங்களனைத்தும் செவிடுபட்டுத்திகைத்து மதிமரு
ண்டுவாடிச்சோரும்படிக்குப் பேரொலியெழ பொம் பொம்மென்றூ
தினன் அவ்வதிற்சியானது அண்டங்களெங்கனும்பரந்து அளவற்றபுவ
ங்கள்சத்தித்துக்கொண்டிருந்தது, இந்தவெற்றியைக்குறித்து செந்தாம
ரைக்கண்ணனாகிய மகாவிஷ்ணு மனமகிழ்ந்தவராய் பவழத்தைப் பழித்
துவிளங்கும் சிவந்தஅதரத்திற் பாஞ்சசன்னியமென்னும்சங்கத்தை வைத்
துப்பகைவர் மனமருண்டுவாடும்படிக்கு முழக்கிய தருவாயில் இந்திர
னுக்குண்டாகிய சந்தோஷப்பெருக்கை யிப்படித்தென்று என்போலி
களாற்சொல்லப்படுவதோ மற்றதேவர்க்கள் நகைமுகராய் ஆனந்தக்கூ
த்தாடி ஐயன்பெருமைகளைக் கொண்டாடிப்போற்றி ஆதிதேவனாகிய பா
லசுப்பிரமணியர் வீற்றிருக்கும் தெய்வீகம்பொருந்தியதேரில்மீதந்து
சபடமில்லாத காரணத்தினால் மிகவும்மனவுருத்தி பக்கத்தில்நிற்கின்றஅ
க்கினிதேவனைப்பார்த்து ஓ வீராதிவீரனே துரிதமாய் எமதிறைவன் ரத
த்தினுச்சியில் வெற்றிக்கொடியாக நின்றசைய வேண்டுமெனக் கேட்டுக்
கொண்டதருவாயில் திரேகம்பூரித்தானந்தபரவசத்தனாய்இப்பணிவிடை
யைச்சிரசாவகித்துச் செய்யக்கடவேனென்று சம்மதித்து தட்சிணத்தி
ல்அழகியசிறகையும் சிவந்தகொண்டையையும் படைத்திருக்கின்றகோ
ழிக்கொடியுருக்கொண்டு தேவதேவோத்தமன் திருத்தேரினிடையில்நி
ன்றஅண்டங்களதிர்ந்து அவற்றுட்பட்ட பிராணிகளனைத்தும்பிடியுண்
டசற்பங்களைப்போலத் தத்தளித்து வாடிச்சோரும்படிக்கு நீண்டகண்
டத்தைத்தூக்கிச் சொக்கநாதாவென்னும் பேரோசையெழக் கூவினன்,
சவுனகாதிரிஷிகளே அக்காட்சியெப்படிக்குத் தோற்றுவதெனில், உலக
ங்களைவருத்தியிருந்த அவுணனென்னும் பிராக்கால விருள்கழிந்து மன்
னுயிரனைத்தும் மனமகிட்சிபெற்றுக் களிக்கவல்ல விடியற்காலம் நேர
விருக்கின்றதென்று சகலருக்குந் தெரியக்காட்டுங் குறிப்பை யொப்பத்
தோற்றியது, முனம்பானுகம்பன் முழக்கிய சங்கநாதத்துடன் அக்கினி

தேவன கூக்குரலிட்டதைக்கேட்ட சந்தோஷப்பெருக்கினால் மகாவிஷ்
ணுவானவர் திரோகபரவசத்தராய் சகலருந் திடுக்கிடும்படிக்குக் கியாவு
மென்றார்ப்பரிக்கவும் பிர்மதேவன் கெக்கலிகொட்டவும் இந்திரன் து
ள்ளித்துள்ளிக் கவலையற்றுவாழ்ந்தோம்வாழ்ந்தோமென்றுங்களிப்பினா
ல்மகிழவுஞ்சந்திரன்முகமலர்ச்சியுடன் கந்தன்புகழைப்போற்றவுஞ்சூரி
யன்பயமற்று வெற்றிநம்முதாயிற்றென் றேற்றவும் எமதருமராசன் த
ன்சேனைகளுடன் வீறிப்பேரொலியைக்காட்டவும் வாயுதேவன் கந்தன்
திருத்தேரில்நின்று பகைவரையிகழ்ந்துபேசவும் கடற்கிறைவன் -ஏகசி
ஏகசி- ஏ - ஏ-யென்றேசவும் செல்வப்பெருக்கையுடைய சிவபிரான்றோ
ழனாகிய குபேரன் கரங்களைக்கொட்டிக் களிக்கவும் மற்றதேவர்களிருஷி
கள்கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் நாகர் உவணர் முதலி
யமேலுலகவாசிகள் சந்தோஷ சாகரத்தில்முழுகி மெய்மறந்து வஸ்திர
ங்கள்சோரக்கிளம்பி செயஉச்சாகங்களைக் கொண்டாடவும் இப்பிரகா
ரஞ்சகலரும் களியாடலைச்செய்துவருகின்ற தறுவாயிற் பெருத்தோங்கிய
பேரொலியானது அண்டகோளகை பரியந்தந்தழைத்து கூர்த்தபார்வை
யைப்பெற்ற சூரபதுமன் செவிகளிற் புகுந்தமாத்திரத்தில் விஷத்துட
க்கிற்பட்டவனைப்போலச் சஞ்சலசித்தனாய் மானம்பாதிக்கச் சிங்காசனு
க்கொப்பாய்க்கெற்சித்து நல்லகாரியம் யிந்ததேவப்பயல்கள் நமதுகட்
டளைகளைச்செய்திளைத்து எதிரினும் நிற்கப்பயந்து பறவைகள் மிருகங்க
ளையொப்பத் தமதுபதவிகளையிழந்து சரபசார்த்தூலங்கள் வாசஞ்செ
ய்யும் ஆரணியங்கள் பர்வதங்களினிடத் தோடியொளித்துத்திரியவாயி
க்காலத்திற் சற்றும்பயமற்று நேரிலிருந்து இப்படிக்கும்மனவுறுதியெ
ற்றுசெயவுச்சாகங்களைக் கொண்டாடி கெலிப்புடனிருப்பரோ இதுபா
லசுப்பிரமணியன் வலிகொண்டு நடத்துகின்றனரோவெனச்சீறிச் சிரத்
தையசைத்து மூக்கினிடத்தில் விரலைவைத்து யிக்காலத்தில் நமக்கடுத்த
சிலஅபசெயத்தைக்குறித்து மனச்செருக்குடனிருக்கின்ற -விஷ்ணு-பிர
மன்- இந்திரன் முதலாகிய தேவர்க்கள் கெலிப்பை முன்னமழித்துச்சி
ன்னபின்னப்படவாட்டியபின்பு யிவர்களுக்குதவியாகவந்திருக்கும் பா
லனையும்மடக்கிக்கொண்டு திகைக்கும்படிக்குச்சாடித்துரத்தக் கடவே
னெனத்தீர்மானித்தவனாய் ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்றுதன்வய
ப்படுத்திஅரசுசெலுத்திவரும் சூரனானவன் வடவாமுகாக்கினியைப்போ
லப்பொங்கி தட்சிணத்தில் பக்கத்தில்நிற்கின்ற சேமத்தேர்களிலொன்றி
ற்சிங்கத்தைப்போலப்பாய்ந்து மண்டிபோட்டிருந்து இதனையோசிப்
பதாயினன், இச்சிறுவனுதவி இத்தலத்தினல்லது விண்ணிடத்திற் கிடை
யாதாகையால் வானவெல்லையில்வீற்றிருக்கின்றதேவர்க்கள் தெய்வத்தை

 சூரபதுமன்வதைப்படலம்.

இத்தரியிஷித்தில் மட்டடக்குவேன் ஓ சாரதி துரிதமாய்ச் சூரியன்செ
ல்லும்வீதியில் நமதுதேரைக்கொண்டுபோய் நிறுத்தக்கடவையெனக்க
ட்டளையிட்டகாலத்தில் பணிந்து கர்த்தனே யிதோ நடத்துவேனென்றுச
வுக்கைக்காட்டிக் குதிரைகளைத்தட்டிப் பொன்மயமாய் நவரத்தினகாந்
திகளைவீசி மேருவையொப்பவிருக்கின்ற தேர்மணிகள் கலகலெனச்ச
த்திக்கத்தக்கதாகவெழுப்பி - வாயுமண்டலம் மேகமண்டல முதலியவ
ற்றைக்காற்றினுங்கடிதித்தாண்டி தேவர்களிருக்கின்ற யிடத்திற்கொண்
டுபோய்நிறுத்தினன், அத்தருவாயில் மன்னுயிரைவாட்டும் எமனையொ
த்தகொடியதனுசைவளைத்து நாணேற்றித் திசைகள் நடுங்கக் குணத்தொ
னிகாட்டிக் கூர்மையுள்ளதாய் விஷத்தொவைய விட்டிருக்கின்ற கடியக
ணைகளை அமோகமாகச்சந்தித்துச் சோனைப்பெய்யலைப்போலச் சொரிகி
ன்றதருவாயில் தீயையும் புகையையும்விஷச்சுவாலையையும் வீசிக்கொண்
டுவானவெல்லைமுற்றும் படர்ந்தடர்ந்து முகமலர்ச்சி பெற்றிருந்த வி
ண்ணவர் சமோகத்திற் பாய்ந்து பாய்ந்து தேகமெங்கணுந் துளைத்து
ச்சாடும்போது பலபங்கப்பட்டு பாணங்கள் சுழலவளைந்திருப்பதினால்ஒ
டியொளிக்கவும் கூடாமற் றிகைத்து ஒருவர்பேரி லொருவர் விழுந்து
வாடுகின்றகொடுமைகளையும் சூரபதுமன் சூட்சியையும்சிவகுமாரன்தெ
ரிந்தவராய் ரணக்களத்திலிருந்தபடிக்குத் துரிதமாய்த் தமதுசிறந்தகா
ண்டபத்திற் கணக்கிறந்த நாராசங்களைச்சந்தித்துக் கரவேகமாகப் போ
க்கிப் பாதகனால் விடுபட்டலைத்திருந்த பாணப்பெருக் கனைத்தையும்தி
மைப்போதிற் கண்டதுண்டமாகவெட்டி நிலத்திற் றள்ளியவுடன் பாக
னாகமுற்றட்டிவிருக்கின்ற வாயுதேவன்மீது விழிகளைப்பரப்பி யிந்தரி
யிஷித்தில் நமதுரதத்தைவானவெல்லையிற் றிரிகின்றசூரபதுமன்முன்ன
ங்கொண்டுபோகக் கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் வணங்
கிப்புரவிகளையெச்சரித்து மண்ணுலகம் விண்ணுலகத்தைக்கண்டு வாற்
தையாடப்போவதென நினைக்கும்படிக்குத் துரத்தி மின்னலையொப்பச்
சூரன்முன்னம் நிறுத்தினன், அத்தருவாயில் தேவரினங்கள் படாதபாடு
களைப்பட்டுநிற்கவும்பயந்து போகவும் யிடமில்லாமல் அங்கு மிங்கும்
அலைந்துமனவாட்டத்துடன் சிதறி அலைகின்றதைக் குமாரதேவர் கண்டு
நயந்தித் திருக்கரத்தைநீட்டி ஓதேவர்களே யினிபயங்கொள்ளவேண்டுவ
தில்லை மனச்சஞ்சலமற்றிருக்கக்கடவீர்கள் பாதகனையிதோவாட்டுகின்ற
னெனத் தேற்றறவுசொல்லி யமைத்துக் கிருபாநோக்கம் பாலித்ததரு
வாயில் தீனசரண்யனாகிய கர்த்தன் வந்துவிட்டனர் உயிர்பெற்றுப்பி
ழைத்தோம் பிழைத்தோமென்று களித்தவர்களாய் ஓடுவதையொழிந்து
தைரியங்கொண்டுநின்றனர், இக்காரணங்களனைத்தையும் சூரபதுமன்தெ

ரிந்தவுடன் றவுத்திராகாரமாய் மண்டியெரிந்து மகாவிஷ்ணு பிர்மதே
வன்முதலிய பிறதட்டதேவதைகள் நமதைசுவரியத்துக்கஞ்சி யிட்டபணிக
ளைச்செய்துவருகின்றனர் அப்படியிருக்க ஒருபாலனோ நமதென்னை
ங்களைத்தடைசெய்து வெல்லவல்லனென்று அவையங்காற்றிராதின்றச
ற்பத்தைப்போலச்சீறி தன்கரத்திற் பற்வதாகிருதியாகவிளங்கும் வலிய
வில்லிற்கடுங்கணைகள் அளவற்றதைச் சந்தித்துப்போக்கிச் சரவணபவ
னைமுடிக் கியாவுமெனச் சிங்கநாதஞ்செய்தனன், அவை வெளிப்பட்ட
வுடனொன்றனந்தமாய் ஆலகாலவிஷத்துக்கொப்பாக எரிந்துபுகைந்து
கொண்டு சவிந்துவரும்போது எமதிறைவன் துரிதமாய் திவ்வியபாண
கோடிகளைக்கொண்டு துத்துமுருக்கிச்சாடினதைச் சூரனறிந்து அதிக
கோடங்கொண்டுமீட்டும் கணக்கிறந்தசரமழைகளைத் தூண்டத்தூண்ட
பாலசுப்பிரமணியக்கடவுளும் அவற்றிற்குத்தக்க சிலிமுகங்களைச்செலு
த்திச்செலுத்திச் சின்னபின்னப்படக்கண்டித்து இவ்விதமாகயிருவர்க
ளும் பின்னிடையாமல் திவ்வியபாணங்களைச் சோனைப்பெய்யலினுமே
விட்டிறைத்தும் ஒருவர்பிறையோகிக்கின்றசரங்களை யொருவர்மாற்றிவீ
ரங்களைப்பேசியும் வெற்றிபெற வேண்டுமென்கிற அக்கறையினால் அ
கோரயுத்தியங்களைச்செய்துவருமுன்னிலையிற் பெருத்தெழுந்த அன
ற்பொறிகள்விறித் திசாதிசைகளைக்கொளுத்திவாட்டவும் விண்ணுடுகள்க
ரிந்துபொலிவற்றுத் தோற்றவும் அச்சுடுகைக் காற்றாமல் தேவர்க்கள்ரி
ஷிகளாதியானவர் நெளிந்துநெளிந்தேங்கவும் மற்றவைபட்ட துன்பத்
தைச்சொல்லிமுடிவதோ யிப்படிக்குவாதாடுகின்றவர்கள் தேர்கள் மின்
னலையொப்பப் பளிச்சுப் பளிச்செனச்சாட்டிக் குலாலன் சக்கரத்தைப்
போலத்திரிந்துங் காற்றாடிக்கொப்பாகக் கரகரெனச்சுழன்றும் சூறாவ
ளிக்காற்றினுஞ்சடுதி வட்டணைவந்தும்யிப்படிக்கு யிடம்வலம்வலம்யிட
மாகத்திரியும்போது வண்டில்களுடன் வண்டில்கள் தாக்கியும் புரவிக
ளொன்றையொன்றுசிதிக்கால்களினாலேற்றித் திசைகளதிரக் கனைக்கவும்
பாகர்கள்சவுக்கைப் படால்படாலுமெனச்சாடியிகழ்ந்துபேசி ஒருவர்மீ
தொருவர் தேர்களையோட்டி கெக்கலிகொட்டவும் யித்தருணங்களில்ம
த்திமத்திலில் ரதிகர்கள் கரவேகமாகதிவ்வியசரமாரிகளைப் பொழிந்தும்
அவற்றைவிலக்கியும்வாதாடி வருகின்றதறுவாயில் அவ்விரதங்கள்செற்க
ரத்தொனிகளைச்செய்தும் காகரென்றோடியும் சத்தசாகரங்களின் பாய்
பிற்காட்டியும் பூவட்டமெங்கணுமுலவியும் திசாதிசைகளிற் பாய்ந்தும்
பெரும்புறக்கடலினிடத்திற்றாவியும் சக்கிரவாளகிரியின்மீது வட்டணை
வந்தும் புவனங்களிற்பவனிவந்தும் பிர்மதேவன்வாசமாயிருக்கின்றமன
னோவதிப் பட்டணத்திற்றோற்றியும் மகாவிஷ்ணுபதத்திற் சஞ்சரித்தும்தி

மைப்போதிற்றுயிருந்த தலத்திற்காட்டியும் மீட்டும் மின்னற்கொடி
யைப்போலத்தாவி அண்டப்பித்திகைச்சாரலில்விளங்கும் காடாந்தகார
மாகியயிருட்பூமியிற்றோற்றம் அண்டகடாகத்தினெல்லையிலுலவும்வா
னராடுகளிற்பாந்தும்இவ்விதமாய்ஓடுகின்றகாலங்களிற்சுரகவெனப்பாயு
ந்தேருருளைகளின்சத்தமாத்திரம் அடுத்தார்க்குக்காட்டுவதன்றியில் மற்
றெருகாரணங்களுந்தெரியாதவதுவையிலுற் பிரமன்இந்திரன்முதலா
னவர்கள் மனமருண்டுதியங்கிச்சோர்ந்து குமாரதேவர்தோற்றங்காணுமை
ல்வருந்தவும் சூரியசந்திராதியநவக்கிரகங்கள் தாங்கள்போகும்மார்க்க
ங்காணுதுமயங்கவும் மேலுலகைவாசிகள்பிதிமித்துச்சித்திரங்களைப்போல
சைவற்றுபார்த்திருக்கவும் பூமண்டலத்திலிருக்கும்பிராணிகள் தத்தளி
த்துவாடவும் யிவ்வுற்பாதங்கள் பெருத்தகாலத்தில் நாகலோக வாசிகள்
யிடியுண்டவர்களைப்போலக்கலங்கிவாடவும் யிப்படிக்குசமலதமும்அ
ல்லோலகல்லோலப்படும்படிக்கு அகோர உயித்தியங்களைச் செய்தலவு
ம்செயசாலிகளேறியிருக்கின்ற தெய்வீகத்தேர்கள் மணிகள்கலகலெனச்
சத்திக்கத்தக்கதாக டகடென்றேடும்வேகத்தினாலும் அதிற்சியின்கொ
டுமையாற்றுமலும் பூமண்டலமானது கீழ்மேலாகத் தத்தளித்து கிடுகி
டென்றதிரவும் சத்தசாகரங்களுங்குமிதிமுழங்கி அலைகளைப் டெருக்கிய
லையவும் மேருவாதியகுலகிரிகள் நடுநடுங்கிப்பிளந்தும் பிதிர்ந்துமங்க
வும்அண்டப்பித்திகைநெக்குவிட்டுக் கலகலத்துத்தோற்றவும்நட்சத்திர
ராசிகள் பொரிந்தெங்கனு மிறையவும் சத்தமேசங்களானவை நீர்ப்பசு
மையற்றதங்கள் நிலைகளிற்பிசக பூவட்டமெங்கனு மோடவும் இவ்வித
மாகபாலசுப்பிரமணியக்கடவுள் விற்றிருக்கின்றரதமும் அவுணர்பெரு
மானேறியதேரும் அதிவேகங்கொண்டு சக்கிருகாரமாய் மூட்டண்டகோ
ளைகைமுதலியதலங்களிற் சாரிகைதிரிந்துவருகின்றதறுவாயிற் செயசாலி
யாகியசூரமகாராசன் தன்கைவல்லபத்தினுற் சர்வசங்காரகால[illegible]தில் ருத்தி
மேகங்கள்பரவி அக்கினிமழையைப்பொழிந் துலகங்களைவாட்டுமாறு
போலச் சுயஞ்சோதிமயமாகியகுமாரதேவர்மீதிற் கொடியசரவருஷங்க
ளைப்பொழிந்து மேற்ம்மத்திமத்திலில் அனந்தகோடி மழுப்படைவ
யிரவுசிகளைப்போலவிளங்கும் முத்தலைச்சூலம் -கப்பணம்- பிண்டிபா
லம்-சவன்-கொழுப்படை-வச்சிராயுதம்-வேற்படை எழுவாயுத முதலி
யஆயுதங்களைக்கபவேகமாகத்தூண்டினன், சவுனகாதிரிஷிகளே அவுண
ராசன்கற்றிருக்கின்ற வித்தைகளின்முயற்சியையும் விற்சாதுரியங்களையு
ம்கரவேகசரவேகங்களையும் மற்றதிறங்களையும்சொல்லிமுடிவதன்று,இ
வ்விதமாகஆயிரத்தெட்டண்டங்களையும்வென்று தன்குடைநிழலிற்படு
த்திஅகண்டசக்கிராதிபதியாக அரசுசெலுத்திவரும் சூரபதுமன் கூறுற்

வனுமினையும்வாட்டவல்ல வேகமுங்கொடுமையையும்படைத்திருக்கின்
றஅஸ்திரசஸ்திரவகைகளை சக்கிரசாரமாகச்சுழன்றுசுழன்று செலுத்துந்
தோறும் எமதுகற்றனுகியசிவசுப்பிரமணியதேவரும் அத்தலங்களெங்க
ளுந்தொடர்ந்துதொடர்ந்து ஆலகாலவிஷத்தினுங்கடுமையுள்ளசாமாரிகளைச்
செலுத்திச்செலுத்திப்பகைவன்படைகளனைத்தினையுங்கண்டதுண்டப்ப
டவாட்டித்துத்துமுருக்கியதன்றியிற் றமதுமகிமையினால் வயிரவூசிகளி
னுங்கூரியஅலகையுடைய தீட்சணியமாகியபதினன்கு அர்த்தச்சந்திரபா
ணங்களைக்காற்றினுங்கடுகத்தாண்டி அண்டாண்ட புவனங்களெங்கணு
ம்புகழவல்ல சால்லிதமாகியசித்தியைப்படைத்திருக்கின்ற சூரன்ஆரோ
கணித்திருக்கும் சொர்ணமயமாயரத்தினகாந்திகளை வீசி மேருவுக்குச்ச
மதையாகச்சகலவெணமணிகள்சத்திக்கவும்பூச்சக்கிறக்குடைகொடிமுதலி
யசிங்காரங்களைப் பெற்றிருக்கின்றதாய் மனோவேகத்தினுங்கடுகிரதிக
னுக்குவேண்டும் படைகளின் விதங்களைப் பரித்திருக்கும் மகிமையுள்
ளரதத்தைப் பொடிப்பொடியாகதுணித்துத்தள்ளி பூட்டியிருந்த புரவி
ப்பந்திகளைக்கண்டித்து சாரதிசிரத்தைத்தறித்தெறிந்ததறுவாயிற் சிரோ
ரத்தினத்தைப்பறிகொடுத்த நாகத்தைப்போலவாடி அழகுகுலைந்துகாத்
திற்பற்றியவில்லுடன் வெளிவந்துநிலத்திற்பாய்ந்து தீரனாய்நின்று நா
ரிகையிறுக்கிவிஷங்களைக்கக்கவல்ல கொடியவாளிக ளாவற்றைச்சந்தி
த்துச்சோனைப்பெய்யலைப்போலப் புங்கோபுங்கங்களாகத் தாண்டிக்
காலாந்தகனையொப்ப நேர்ந்து சாடும்போது அவை மந்திரவல்லபங்க
ளினால்ஒன்றனந்தமாகப்பெருகித்தீயையிறைத்துபுகைப்படலங்களைவீசி
ச்சுறுக்குசுறுக்கென்று தைக்குமுன்னிலையில்லேழைகளாகியபூதப்படைக
ளென்செய்வர்பவபின்னங்களைப்பட்டுவேறுகதிகாணாமற்சிதறி அல்லோ
லகல்லோலப்படும்கொடுமைகளை வானத்தில்நின்ற சிவகுமாரன்கண்டு
மனமிரங்கி நம்முன்காட்டியபாதகன் நிமைப்போதில் மண்ணிடத்திற்
சேற்றிசிவகணங்களை யலைக்கின்றனன். நல்லகாரியம்வாயுதேவனை நம
துதேரைவிரைவிற்சமரவெல்லையிற் சேர்க்கக் கடவையென்னும்வா
க்கியமுற்றுவதன்முன்னம்நிலத்திற்சூரனுக்குநேராகக்கொண்டுபோய்நி
றுத்தினன், அவன்சாரத்தியத்திறங்களை என்போலிகளாற்புகழப்படுவதோ
அந்தறுவாயிற்றமதொப்புவமையற்றதனுசிற்பலகோடிதிவ்வியபாணப்
பெய்யலைச்சொரிந்து பகைவன் தூண்டியலைக்கின்ற சரங்களின் கொடு
மைகளைமாற்றியதறுவாயிற் சூரபதுமனுக்கு அதிகோபம்பிரவேசித்து
வடவானலத்துக்கொப்பாகச்சீறித் தட்சணத்தில்அனந்தகோடிசுடுசரங்
களையெடுத்துத்தனுசிற்பூட்டிக் கரவேகமாய்ச்சிவகுமாரன்மீதிற்செலுத்
திக்கொக்கரித்தனன், அவைகள்வரும்வேகத்தையும் தீட்சணியத்தையும்

எமதையன்மகிழ்ந்துதுரிதமாகப் பலகூறாகிய கணைகளைப்போக்கிக்
கண்டித்ததுமன்றியில் மேலுநூறுவடவைக்கனலையொத்தகொடியசர
ங்களைக்காசிபன் மூத்தபிள்ளையாகியசூரன் புயங்களுக்கிலக்காகக்கடாவிய
போதுபுகைந்தெரிந்து குமுகுமுத்துத்தொனிகளுடன் கார்மினுங்கடுவெ
ற்றுருமியிர்ப்பிசகின்றிகோடை யிடிகளையொப்பத் தாக்கியமாத்திரத்தில்
நவமணிகளுக்குநாயகமாகியசிரேஷ்டம்பெற்றவயிரக்குன்றினிடத்தில்
கன்மழைபெய்யுமாயின் பலதிசையிலுமிறைவதைப்போலத்துகளாய்நா
ற்றிசையிலும்பறந்தது, யிச்செய்கையை புசபெலபராக்கிரமங்களுக்
கொப்பற்றவனாகிய அவுணர்பெருமான் தெரிந்தமாத்திரத்தில் திசைகள
திரக்கோபாவேசத்தினால் நகைத்துத்தீயும்புகையும்வீசுவதாகப் பெருமூச்
செறிந்து அரக்கைப்போலவிழிகள்சிவந்து அனற்பொறிகள்குபீல்குபீ
லென்றிறையச் சற்பத்தையொப்பச்சீறி நல்லகாரியம்மிதுபரியந்தம்மெ
த்தனைதேவர்களும் விழிகளைச்செலுத்திப்பார்க்கவும் பயங்கரப்பட
வல்லமதுதோட்களிலிருந்தபாலனோ கணைகளைச்செலுத்துவன் யிந்தநி
மிஷத்திலிவனுணவத்தையடக்கித்துரத்தாவிடில் நான்சூரனல்லனெனச்ச
பதங்களைப்பேசி யிரண்டாயிரம் வயிரவாளிகளைத் தேடியெடுத்துக் கர
வேகமாகஎமதையன் புயாசலங்களைக்குறித்துப் பிரசண்ட வாயுவினும்
வேகமாய்ச்செலுத்திதேவர்களும் திடுக்கிட்டுவாடும்படிக்குச் சிங்கநா
தஞ்செய்தனன், அக்கொடியசிலீமுகங்கள்விடநாகங்களுக்கொப்பாகக
ளன்றுருத்துநெருங்கினுனவான்களாற்றெரிசித்துப்போற்றும்மகத்து
வத்தையுடையபகவன்றோளிற்பட்டவுடன் லோகநாயகனுகிய சிவபிரான்
நுதல்விழிக்கனலின்வெப்பத்தினுற் சாம்பலாகத்தகிக்கப்பட் டழிந்தம
ன்மதனைப்போலக்கருகிவெந்து தூளிதமாய்த்திசா திசைகளிற் பறந்தது
தட்சணத்தில்எமதையன் சிலகடுங்கணைகளை ராசராசன்மீதிற்செலுத்தும்
போதுசூரன் அவற்றினைக்கண்டித்து அமோகமாகிய திவ்வியவாளிகளை
மழைத்துளிகளினுமதிகமாகப்பொழிந்து பூதப்படைகளையும்படைத்த
லைவரையும் மற்றவீரரையும் அல்லோலகல்லோலப்படும்படிக்குக் கலக்க
த்தொடங்கினன், இவ்விதமாகதேவகாதகன்மீறி வாட்டும்திறத்தைப் பாவ
லிதுவாகவிளங்கும் சிவகுமாரன்கண்டு ஆயிரந் திட்சணியமுள்ள சரங்க
ளைத்துரிதமாகத்தாண்டியபோது வெளிப்பட்டவுடன் ஒவ்றனந்தகோ
டிகளாகப்பெருகி பாதகன்கணைகளைக்கண்டதுண்டமாகத் தறித்துத்தன்
னியும்வேகமடங்காமற் சீறிக்கொண்டோடிச் சூரன் கரத்திற்பிடிப
டுருத்தவலியவில்லைப்படாலுமென வெட்டித்தள்ளிப்போடியது, அதுநி
லத்தில்விழுவதன்முன்னம் வேறொரு திண்டமாண்டபத்தைத் தாங்கினா
னேற்றிஅண்டங்களதிரக்குணத்தொனிகொண்டு ஊழிமேகங்களுமுற

க்கநீங்கித்திடுக்கிட்டுக்கலங்கியோடச்செற்றித்தவனுப்பலகோடியதிகதி
ட்சணியமுள்ளசாங்கங்களைமன்விண்ணெங்கணுமுடச்சொரிந்து மாயவி
த்தையின்முயற்சியினாற்சடுதியில் மின்னலுக்கொப்பாக வானத்திற்காட்
டிப்பற்பலவித்தைகளைச்செய்து பூதனாவருத்துகின்றவன் சூதைச்சிவகு
மாரன்தெரிந்து துரிதமாய்த்தமது திருத்தேரை விண்ணகத்திற் செலு
த்திவைத்துக்கொண்டுபோய் பகைவனைமிஞ்சவொட்டாமல் அவன்செய்
யும்மாயப்போராவாட்டி ஒருநாழிபரியந்தம் அகோரவுயித்தியங்களை ந
டத்தியதருவாயில் சூரன் தன்மாய்கைவல்லபத்தினால்அத்தலத்தில்மறைந்
துசெப்படிவித்தையாளனைப்போல உயித்தியகளத்திற்றோற்றி தன்வில்
லைமண்டலாகாரமாகவளைத்து விஷச்சுவாலையைவீசும்கடுங்கணைகளைத்தூ
விபூதசயின்னியங்களைவளைத்துவளைத்து சின்னபின்னப்படச்சாடும்போ
து சிவகுமாரன் தட்சிணத்திற்றமது தேரைநிலத்திலிறக்கி அவுணராசன்
முன்னம்நின்றுசரமாரிகளைப்பொழிந்து தன்சேனைகளின்மீது கவிந்து
வருத்தும்அஸ்திரங்களனைத்தையும் கண்டதுண்டப்படுத்திவாதுகொடுக்
கும்போது பகைவன்தன்னுருவைமறைத்து அலைகள்பெருத்துசெலசம
த்திரியாய்ப்பார்ந்திருக்கும்கடலினெல்லையிற்றோற்றிச்சரவருடங்களைத்தூ
விச்சிவகணங்கள்முதலானவர்களைத்திகைக்கும்படிச்சு அலைப்பதைக்கந்
தசுவாமிதெரிந்துஅத்தலத்தைச்சேர்ந்து அவனேவுகின்றபடைகளைவாட்
டிமீறிப்போராடிவருகின்றதருவாயிற்சூரபதுமன்ஒருமந்திரத்தையுச்ச
ரித்துமறைந்து சடுதியில் அண்டகடாகவெல்லையில்நின்றுகொடியதிட்ச
ணியமுள்ளபாணங்களை அமோகமாகயிறைத்துப் பூதப் பெருக்கைக்க
ண்டதுண்டப்படுத்திவீழ்த்தியிருப்பதை எமதையன்கண்டு தாமும்அத்தல
த்திற்போய்த் திவ்வியபாணகோடிகளை யொன்றனந்தமாகப்போக்கிச்சி
வகணங்களுக்குவருத்தமில்லாமற் போற்றினவராய் மேலும் கணக்கிறந்
தசிலீமுகங்களைக்கொண்டு தேவகாதகனைத் திக்குமுக் காடவொட்டாம
ற்பொருகின்றதருவாயில் அக்கினியைப்போலவிளங்கும்வேலைத்தாங்கி
யசூரமகாராசனுருவைமறைத்துச் சேஷனாதியநாகராசாக்கள் வாசஞ்செ
ய்யும் பாதலத்திற்பிறவேசித்து அத்தலங்களிலிருக்கின்ற தீனரையலைக்க
நேர்ந்தமுன்னிலையிற் பன்னிருபுயாசலங்களையுடையசரவணபவன் அவ
னைத்துடர்ந்துபோய் அத்தலங்களில் நிறைந்தலைத்திருந்த பாணகோடிக
ளையடக்கிப்பகைவனைவளைந்து கடினமாகியசண்டையைச்செய்துவரும்
போதுபாதகன்மறைந்து உலகங்களுக்கச்சாணியாய்ச் சொர்ணப் படிவ
ங்கொண்டு ஆயிரக்கோடிமுடிகளைப்பெற்றிருக்கின்ற மகமேருவினு
ச்சியிற்றோற்றி அத்தலத்தினுலவியிருந்த தேவர்-கின்னரர்- கிம்புருடர்
முதலானவர்களையும் அதன்சாரலிற்றவங்களைச் செய்துவரும்ரிஷிக்கூட்

டங்களையும்பலசரங்களினால் திகைக்கும்படிக்குச்சாடுகின்ற காலத்திற்சி
வகுமாரனும்பொன்மலையைச்சேர்ந்து அத்தலத்திலிருப்பவனைப்பாது
காத்து ராசராசனைமடக்கிக்கொண்டு திவ்வியபாணங்களைத்தாண்டி யல
க்கின்றமுன்னிலையிற் சூரனுருக்கரந்து மின்னலையொப்பச்சுடுதியில்மகா
விஷ்ணுவுக்கிருப்பிடமாகியவைகுந்தநகரைச்சேர்ந்து சிறந்ததவப்பேற்
றினைவாய்ந்த பாகவதரைச்சிக்குப்படுத்தி வருத்துகின்ற தருவாயில் எம
னையனும்சலியாமல் அத்தலத்தினும்போய் மாயைபுத்திரனுடனெதுத்
து அவன்கொடுமைகளையடக்கித்திகைக்கச்செய்தபோது சற்றுநேரந்தா
னும்அகோரவுபத்திரியங்களைச்செய்துசெய்து நிருவகிக்கப் படாமையா
ல்மறைந்து அண்டகோளகைமேற்புறத்தி லிருக்கின்றவாயலுக் கருகிற்
போகுமுன்னிலையிற் சுபஞ்சோதிவடிவினனாகிய பாலசுப்பிரமணியதே
வரும்தொடர்ந்து கொடியபோரைச்செய்து சூரனேறியிருந்த நவரத்தின
மயமாகியரதத்தைச் சக்கைச்சக்கையாகப் பேத்தெறிந்து குதிரைகளையு
ம்பாகனையும்அதம்பண்ணி விசையலட்சுமியைமணந்து வீறியிருக்கின்
றதருவாயில் அவுணர்பெருமான்தன்வாகனத்தையிழந்தகாரணத்தினாற்
காட்டமுலைப் போலச்சீறி முன்னம்பரமசிவம்கடாட்சித்திருக்கின்றஇந்
திரஞாலத்தேரைவரும்படிக்குச்சிந்தித்தனன்தட்சிணத்தில் நவரத்தினம
யமாய்ப்பலமணிகள்கலகலெனச்சத்திக்கஉத்தம அசுவப்பந்திகளைப்பூண்டு
அண்டங்களதிரக்கெற்கரத்தொனியைக்காட்டி கோடிசூரியர் தோற்றம்
போலவிளங்கிப்பாற்தோங்கியிருக்கும் தெய்வதன்மை பொருந்தியாத
மானதுஎதிரில்வந்துநின்றதருவாயிற் சிங்காசனைப்போலத்தாவியேறி
ப்பீடத்தில்வீற்றிருந்தவனாய்த் தன்கரத்திற்பிடிபட்டிருந்ததனுசானது
வட்டாகாரமாகவளைந்து மணிகள் கவிக்கத்தக்கதாக பலவித கொடியபா
ணசமோகங்களைச்சிவகுமாரன்மீதிற்போக்கிச் சொல்லப்படாதபோர்வி
ளையாடல்களைச்செய்து வருபவன்முன்னம்சரவணபவன்போராடும்போ
து அக்காலத்திற்புற்றிலிடத்தில்நின்றும்ஈசற்கூட்டங்கள்பெரும்போக்
கெழுவதைப்போலவந்துபோராடுகின்ற அவுணச்சயின்னியங்களை நம்ச
ம்பண்ணிப்பண்ணி அவைகள்பெருகும் எதுவைவைத்தெரிந்துமேலும்
மேலும்வரவொட்டாமல்பாணகோடிகளினால் அண்டவாயலை அடைத்தத
ற்வித்தையின்வல்லபத்தைக்கண்டவுடன் கோபநகை கொண்டவனாய்நம
தாசாட்சிவெகுநேத்திநேத்தியெனச்சீறிச் சிவகுமாரன் அக்காலத்திற்றா
ண்டிவரும் சரமழைகளையும் பலபடையினால்வாட்டி அவர்தோற்றங்கா
ணமல்மூடிவருபவன் சர்வேசசாமர்த்தியத்தினால் வயிரவூசிகளினும்மு
னையுள்ளதிட்சண்யமாகிய நாராசங்களைவற்றதைத்தாண்டி அண்டவாய
லையடைத்திருந்த சக்கூட்டைத் துகள்கண்டு வானத்திற் பறக்கச்சாடிய

ழையபடிக்குவெள்ளிடையாக்கி அதன்மேற்புறத்தில்நெருங்கித்தேக்கி
வருங்கடலைப்போலஆரவாரித்திருக்கும் ரதகெசதுரகபதாதிகளாகிய தன்
சேனைப்பெருக்கைப் பார்த்து கரங்களை நீட்டியசைத்து வாருங்கோள்
வாருங்கோளென்று புவனங்கள்கிடுகிடாய்த் ததிரும்படிக்குக் கூக்குரலி
ட்டழைத்துப் பற்வதாகிருதியாகவிளங்கும் தன்புசங்களைத்தட்டி அண்
டங்களதிரகெற்சித்தனன், இவ்விதமாகத்தமதிறைவன் தரிதப்படுங் கா
ரணத்தைத்தெரிந்தமாத்திரத்தில் யிவ்வண்டமேற்புறத்திற் றேக்கிட்டிரு
ந்ததேர்த்தொகையும்-யானைக்கூட்டமும் குதிரைப்பந்திகளும் கூர்த்த
பார்வையையுடையஅவுணப்படைகளும்எண்ணிக்கைப்படாத வெள்ளக்
கணக்கிற் பெரும்புறக்கடலானதுபெருகுமாறுபோல அத்தலத்திற்செறு
ற்றநின்றபெருவாயலைக்கடந்து ரணபேரி-செயபேரி-வெற்றிச்சங்கம-
குடமுழவு-தப்பட்டைஎக்காளைமுதலியவாத்தியங்களை முழக்கிக்கொண்
டுஅஸ்திரசஸ்திரவிதங்களையும் தேவப்படைகளையும் பரித்தவர்களாய் வி
ழிகள்அரக்கையொப்பச்சிவந்து தீப்பொறிகளை குபீல்குபீலெனக்கொ
ட்டத்தக்கதாக அதிககோபாவேசங்களுடன் பற்வதங்கள் கால்முளைத்த
லைசவதைப்போல அதிகஆற்பாட்டங்களைச் செய்துகொண்டு போர்நேர்
ந்ததென்றுங்களிப்பினால் புயங்கள்பூரித்து வானத்தோங்கிவாகுவலயங்
கள்தெறிக்க விண்ணிடமெங்கணுமூடிச்சிவகுமாரனைக்கண்டமாத்திரத்தி
ல்வடவைக்கனலினுமேலிடச்சீறி நல்லகாரியம்யிப்படிக்குநமதுவரவுக்கு
த்தடைசெய்து ராசாதிராசனைத்தனிமையில்மடக்கிக்கொண்டு வாதாடுகி
ன்றயிச்சிறுவன்செற்வத்தையும் ஆணவத்தையும் யித்தநிமிஷத்திலடக்கி
ச்செயப்பிறதாபத்துடன் மீளக்கடவோமென்று பற்பல சபதங்களைப்
பேசிமேலிட்டுஆயிரக்கிரணங்களைவிசியுலகங்களைவிளக்கிவருஞ்சூரியபக
வானைமூடியபனிப்படலத்தைப்போலக் குமாரதேவனை வளைந்துக்கொ
ண்டுஅகோரமாகியயுத்தங்களை செய்யத்துடங்கிய காரணங்களை வா
னவெல்லையில்நின்று வேடிக்கைப்பார்த்திருந்த தேவர்கள்-பிரமன்-இ
ந்திரனாதியர்கண்டுமனங்கலங்கி அம்மம்மயிக்காலத்தில்மூடிய சதுரங்
கச்சேனைப் பெருக்கைப்பார்க்குமிடத்தில் சற்வசங்காரகாலத்திற் சிவபி
ரான்கட்டளையின்படிக்குச் சராசரப்பிறபஞ்சங்களனைத்தையும் தகித்து
வாட்டவெழநின்ற வடவாமுகாக்கினியின் பெருக்கோ பேரண்டங்க
ளிற்பரந்திருக்கின்ற கங்கைகள்முற்றும் ஏகமாய்ப்பாயுந்தோற்றமோ
திருப்பாற்கடலிலுதித்துப் பிராணிகளையலைத்த ஆலகாலவிஷமானது மீ
ட்டுமெழுந்ததோ பிரள்யகாலத்திலுலகங்களை நாசஞ்செய்யவல்ல ஆதி
மேகங்களானவைபல்லாயிர உருக்களைத்தாங்கிவந்தகாரணமோ யின்ன
தெனக்கணிக்கப்படவில்லை யிதற்கென்செய்வோமென்று மிகவும் வாடி

ப்பார்க்கவும்பயந்து நிற்கவுந் தாயரியாமல் கைகால்களுதறலெடுக்கநடு
நடுங்கித்தமது நிலைகளைவிட்டுதிசைகெட்டுப் பலதிசையினும் ஓடியும்ப
துங்கியும் எங்கியும் என்னவிளையவிருக்கின்றதோ வென்றும் சஞ்சலசி
த்தராய் அல்லோலகல்லோலப்படுகின்றதறுவாயிற் பாதகனாகிய சூரன்ப
டைத்திருந்தசேனைப்பெருக்கானது வீராவேசங்களுடன் வடவைக்கன
லைப்போலச்சீறிக்கொக்கரித்து நீண்டவிற்களை யிருகுதைகளுமொன்று
படவளைத்து தேவாஸ்திரவிதங்கள் விஷத்தைவையவிட்டிருக்கின்றகொ
டியகணைகள்விஷங்களையிறைக்கும் சரங்கள் அனலைக்கொட்டும்சிலிமுக
ங்கள்சற்டங்களைப்போல வெற்றியுடன் மீளவல்ல படைகள் விதங்களனை
த்தையும்சந்தித்துச் சோனைகாலத்திற்சத்தமேகங்களும்ஒன்றுபடக்கவி
ந்துபொழியுந் திவலைகளையொப்பக்கொட்டியும்மந்தாகிரிக் கொப்பாக
விளங்கும் தண்டாயுதம்-முசலம்-சப்டணம்-பிண்டிபாலம்-எறியீட்டி-
சூலம் சக்கரம் - எழு-மழு-கவண்-வளைதடி-யித்தகைய ஆயுதவிதங்களை
ஒன்றனந்தமாகச்செலுத்தியும் மற்றும் பற்பலகொடியபோர்த்திறங்க
ளைச்செய்து அண்டங்களதிர ஆர்ப்பரித்து வாதாடுவதையும் சேனைத்தலை
வர்கள்வீராதிவீரராகவிருக்கின்றஅவுணராசாக்கள்மன்னமண்டலீகர்பல
போர்முன்னிலையிற்கைகண்டசூரர்கள் தங்கயமாதியதேர்களைக்கெர்சர
த்தொனிகளைச்செய்தபோகத்துரத்தித்தமது நெடியவிற்களைமணிகள்க
லிக்கவளைத்து அதிசதிட்சணியமுள்ள ஏவுகளை அமோகமாகச்செலுத்திச்ச
ண்டைகொடுப்பதையும்அனற்டிவமாகவிளங்குகின்றசரவணபவன்தெ
ரிந்து சகலனாயும்ஒருமுனையுவொடுக்கத் திருவுளத்தெண்ணி சோபப்பா
ர்வையைச்சிறிது சத்திராதிகள் பெருக்கத்தின்மீது நாட்டிய மாத்திர
த்திற்பெருகியசுவாலையின்வெம்மையினாற் பஞ்சாக்கரமகத்துவங்களைம
றந்துதிருநீற்றின்பெருமையையிகழ்ந்து பரமசிவகடாட்சத்தினாற்கிடை
த்திருக்கின்றஅரியசெல்வப்பெருக்கனைத்தையும் பறிகொடுப்பவனுய்யா
னென்றென்றும் ஆணவத்துடக்கிற்பட்டு நல்லுணர்வைப்போக்கிமய
ங்கியிருக்கின்றசூரபதுமன் சதுரங்கச்சேனைப்பெருக்கனைத்தும் பக்
கென்றெரிந்து பங்கிச் சாம்பலாயெழுந்துகள் படிந்த காரணத்தினாற்
சொர்ணமயமாகவிளங்கிக்கொண்டிருந்த அண்டச்சுவரானது தன்பிறகா
சமழிந்து காளிதப்படிவமாகக்காட்டியது, சவுனகாதிரிஷிகளே யிவ்வி
தமாகமுன்னணியிற்பெருகிவந்த ரதகெசதுரகபதாதிகள்முற்றும்நாசம
டைந்தகாலத்தில் மற்றையவண்டங்களிலிருந்துவெளிவந்த சயின்னியங்
களிற்சிலது வடவைக்கனலைப்போல ஆரவாரங்களைச்செய்துகொண்டுவ
ந்தவின்மன் நிசாதிசைகள் சாகரப்பரப்பெங்கணும்நெருங்கிச்சிற்பா
மூர்த்தியாகிய பாலசுப்பிரமணியக்கடவுளைச் சூழ்ந்துகொண்டு கொடிய

பாணவிதங்களையும் வலியஆயுதவகைகளையும் கோடைகாலத் திவலைகளி
னும்கடுகிச்செலுத்தியும் மாயப்பெருக்கைக்காட்டிமயக்கியும் இத்தகை
யஅகோர உயித்திபங்களைச்செய்து அதிக உச்சாகங்களுடன் சிங்கநாத
ம்அட்டகாசங்களைமுழக்கிவிதியுலவுவதைச் சுயஞ்சோதிப் படிவமாகிய
சிவகுமாரன்கண்டு அக்கினிச்சுவாலையெழப் பெருமூச்செறிந்து சற்று
ஹுங்காரித்தனர், அக்காலத்திற்றோற்றிய சுவாலையின்கொடுமையினால் வா
னத்தையளாவக்குவிந்திருந்த பூளைப்புஷ்பப்பெருக்கிற் றீச்சிகைதாக்கு
மாயின்வாடிச்சுருண்டுமங்கி நிலத்திற்சேருமாறுபோலத் தகிக்கப்பட்
டுநீருப்பெருந்து உலகங்க ளனைத்தினும் நிறைந்து சிவகுமாரனையும்
வளைந்துகொண்டகாட்சி யெப்படியிருந்ததெனில் அதிகவீராவேசங்க
ளுடன்ஆரவாரங்களைச்செய்துவந்த நால்வகைச்சேனை வெள்ளங்களான
வைபோராடி வெற்றிகொள்ள நிறுவகிக்கக்கூடாமையால் ஆருயிர்க்கோ
லங்கொண்டு மாயைப்பெருக்கினாற் செயிக்கக்கடவோமென நிதானித்
துக்கவிந்ததுக்கொப்பாகக்காட்டியது, ரிஷிகளே யிவ்விதமாகமுந்திவ
ந்தகணக்கிறந்தவெள்ளச்சேனைப்பெருக்கனைத்தும்பலவகைப்போர்த்தி
றங்களைச்செய்து ஐயன் கோபித்தூப்பி ஓங்காரித்த ஓசையின்உற்பாதத்
தினாற் பச்மீபடலமாய்மாண்டகாலத்தில் வழிபெறாமல் மேலையண்டங்
களில்அடைபட்டிருந்த் செயசாலிகளாகிய ரதசெசதுரகபதாதிப் பெரு
க்கானதுகடையுகவெள்ளத்தினுமேலிட்டு கியாவுமென்னும் ஓசையெழவி
றிவந்துநெருங்கி நெடியவிற்களைவளைத்துக்கடியபாணவிதங்களைச்சா
னைப்பெய்யலைப்போலச் சொரிந்தும் அமோகமாகிய கொடியஆயுதவ
கைகளைஒன்றனந்தமாகக்கடாவியும் ஆக்கிரமித்துமேலிட்டுப் போராடு
கின்றஉத்தண்டங்களையும் செருக்கையும் நீர்வளம் நிலவளம் குடிவளம்
யித்தகைய செல்வச்சம்பத்தைப்பெற்ற தென்னாட்டிற் பலரும்புகழும்
பெருமையினைவாய்ந்த மதுரைப்பதிக்கரசனாயிருந்த மலயத்துசபா
ண்டியன்அரிதிற்செய்துவந்த தவவிரதமுயற்சியினாற் பராசத்தி யானவ
ள்புத்திரியாய் மும்முலைத்தாடகையென்னும் திருநாமத்தைக் கொண்டு
செகமனைத்தையும்பரிபாலித்து திக்குவிசையஞ்செய்துவருமுன்னிலையி
ற்றிருக்கயிலையைச்சேர்ந்தபோது சுற்றன்திருநோக்கம் பட்டவுடன் ஒ
ருதனமறைய நாணினவளாய்ச்சிவபிரான்கட்டளையின்படிக்குத்தன்பதி
யைச்சேர்ந்ததறுவாயிற் பரமேஸ்பரனெழுந்தருளித் திருக்கலியாணஞ்
செய்துகொண்டவராய் சோமசுந்தரபாண்டியனென்னும் பெயரைத்தா
ங்கிஅரசுசெலுத்திவருகின்றகாலத்தில் அவர்களுக்குப்புத்திரனா யவதரித்
துஉக்கிரபாண்டியனென்னும் பெயர்விளங்க ராசாதிராசனாய் உலகங்க
ளைப்போஷித்துவருமுன்னிலையிற் பிதாவினாற்கடாட்சிக்கப்பெற்றிருந்

தவேலாயுதத்தினாற்றம்மையவமதித்துக்கடையுகவெள்ளத்தினுமேலிட்டு
ப்பெருமதுனைப்பகையை யழிக்கவந்த கடற்கிறைவன்கெர்வத்தையடக்
கியும் க்ஷாமகாலம்நேர்ந்து மன்னுயிர் வருந்துவதற்கிரங்கி நிதிக்குவை
யைப்பெற்றுவரும்பொருட்டு சென்றகாலத்தில் அசந்தை கொண்டிருந்
தமகம்மேருபர்வதத்தைச் செண்டினல்வாட்டியும் தமது திருநாட்டி
னெல்லைமுற்றினும் வருஷியாதநிமித்தம் மேகங்களைப் பற்றிவந்தது
வாயிற்சிறையெடுத்ததேவேந்திரனை வளைவடியைவீசிப் புத்திபண்ணியும்
இஃதன்றியும் இயலிசைநாடகமெனச்சொல்லநின்ற முத்தமிழின் திறங்
களைவளர்த்துவரும் சங்கத்துக்குத்தலைமையாகவிளங்கி சிவமகத்துவத்தை
நிலைபெறநாட்டிச் சிரேட்டமாகியசைவசன்மயத்தை ஸ்தாபித்தும்யித்த
கையதிருவிளையாடல்களை நடாத்திவரும் சிவசுப்பிரமணிய தேவர்மேற்
குறித்திருக்கின்ற அவுணப்படைகளின்காரணங்களைக்கண்டு யிப்பெருக்
கூடல்போவதன்று ஆதலால் ஒருமுனையிற்சகலனையும்வாட்டியொழிப்
பதாகத்திருவுளத்தெண்ணினவராய்த் தமது திருக்கரங்களின் விளங்கிக்
கொண்டிருக்கின்றவெற்றிப்படைகளாகிய கைவேல்-கணிச்சி-சூலம்-சக்
ரம்-தண்டம்-யித்தகையசிறந்தஆயுதங்களின்மீதுவிழிகளைபரப்பிசெய
ப்பிரதாபத்தைப் பெற்றிருக்கின்றநீங்கள் நாற்றிசையினும் விரைவிற்
போர்ச்சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஒன்றுபட்டுப் பெருகு
மாறுபோலப்பரந்து சூழ்ந்துவாதாடிவரும் சூரன் சதுரங்கச்சேனைவி
ரிவனைத்தையுந்தும்சப்படவாட்டி வருவதற்கிடம்பெறுமல் மேலைஅண்
டங்களிற்றேக்கிட்டிருக்கின்ற நால்வகைச்சயின்னிய வெள்ளங்களையும்
பற்பலவுருக்கொண்டுவளைந்து சின்னபின்னப்படச்சாடியபின்புநம்மி
டத்துக்குவரக்கடவீர்களெனக் கட்டளையிட்டுச்செலுத்தினர், சவுனகாதி
ரிஷிகளே அந்ததெய்வீகம்பொருந்தியஆயுதங்கள் வெளிப்பட்டவுடன்
அனந்தகோடிபடிவங்களைத்தாங்கி விஷச்சுவாலையைப் பெருக்கித்தாபா
க்கினியைவீசியிடிகளைக்கக்கி அனற்பொறிகளை யிறைத்து கல்நெருப்பும
ழைகளைப்பொழிந்து மற்றுமுள்ளகொடுமைகளெவற்றையும் காட்டிக்
கொண்டுகாளகூடத்தைப்போலமேலிட்டு யெதிரிற்கொக்கரித்துப்பொ
ருதிருந்த ரதகெசதுரகபதாதிகளின் விரிவனைத்தையும் நிமைப்போதிற்
கண்டதுண்டப்படச்சங்கரித்துத் துகளாக்கிமேலிட்டுஅவுணர்பெருமா
ன்குடைநிழலிற்பட்டஆயிரத்தெட்டண்டங்களிலும்மின்னற்கொடியை
ப்போலச்சடுதியில்நுழைந்து நுழைந்து அத்தலங்களில்நெருங்கியிருக்கி
ன்ற ரதகெசதுரகபதாதி வெள்ளங்களனைத்தையும் அதாஅதப்படவாட்டி
க்கொன்றுசேனைத்தலைவர்களையும்மாய்த்து செயப்பிரதாபத்துடன் திரு
ம்பிவானகெங்கையிற்படிந்து பவித்திரமாய்க்குமாரதேவர் திருக்கரங்க

ளிற்பனைமயபடிக்குவிளங்கியது, அக்காலத்திற்பெருகியரத்தப்பிறவாகத்
தையும் பிணமலைகளையும் கவந்தப்பாட்டையும் மற்றும் ரணக்களத்தில்
நேர்ந்தகொடுமைகளையும் ஆயிரநாப்படைத்திருக்கின்ற ஆதிசேஷனாலு
ம்கணித்து ஒருவகையாகச் சொல்லிமுடிவதோ அல்லது சிருஷ்டிகர்த்தனாகி
யபிரமனாலும் நினைந்தாவதன்று இவ்விதமாகச் சரவணபவன் தூண்டியப
டைகள்வீறிப்போய்த்தன்சேனைகள்முற்றும் நாசப்படச்சாடியகாரணங்
களைச் சூரபதுமன் தெரிந்தமாத்திரத்தில் வடவைக்கனலும் ஆலகாலவிஷ
மும்பயந்தொளிக்கத்தக்கதாக மண்டியெரிந்து நல்லகாரியமிப்பாடுப
டுத்துகின்றபாலனையினிசும்மாய்விடமாட்டேன் கணப்போதிற்பெற்ற
வனுக்குப்பிள்ளையாகவொட்டாமல் சின்னபின்னப்படக்கொல்லக்கடவ
னென்று ஆங்காரித்து முனந்தன்தவத்துக்கிரங்கிச்சிவனாதன் கடாட்சித்தி
ருந்ததெய்வீகம்பொருந்திய சக்கரப்படையையெடுத்துவிதிப்படிக்கு
ச்சோடசஉபசாரங்களுடன் பூசித்துப்போற்றிகரகரெனச்சுழற்றிச் சிவ
குமாரனைக்கண்டித்து வருவதாகவேண்டி வேகமாய்ச்செலுத்தினன். அ
ப்படைவெளிப்பட்டமாத்திரத்தில் தேவர்க்கள்முதலியசகலரும்விழிகள்
கூசிமதிமருண்டு விஷமுண்டவனைப்போலக் கலக்கும்படிக்குச் சொ
லித்துக்கொண்டு கிறுகிறெனச்சுழன்றுதீப்பொறிகளையிறைத்து பற்பல
கொடியஆயுதவிதங்களைப்படைத்து சொல்லப்படாத உற்பாதங்களையு
ம்காட்டி பிரசண்டமாருதமும்பயந்தொளிக்க வேகங்கொண்டுசீறி நெ
ருங்குமுன்னிலையிற் குமாரசுவாமியார் தமதுதிருக்கரங்களி லொன்றை
நீட்டிவட்டாகாரமாய்ச் சூரியனுக்கொப்பாகச்சொலித்திருக்கும் சக்கரத்
தைவாவாவென்றழைத்துபற்றிச்சலனமற்றுநகைமுகனாயிருந்தனர், யிப்
படிக்குத்தான் அருமையாகக்கிடைத்திருந்தசக்கரம்முருகேசன் வசப்ப
ட்டுப்போன அபசெயத்தைக்கண்ட சூரனென்செய்வன் செருக்கற்றுப்
பெருமூச்செறிந்துமானமுங் கோபமும் மனதைப்பாதிக்கச்சர்ப்பத்தை
ப்போலச்சீறியிந்தபாலனைமாய்கையின் முயற்சியினால்வெல்லக்கடவனெ
னநிதானித்தவனாய்ச்சிவபிரான்கடாட்சித்தயிந்திரஞாலத்தேரிலிருந்தவன்
சுக்கிராசிரியன் போதிக்கப்பெற்ற பிங்கலையென்னும் மந்திரத்தைச்செ
பித்துஅதன்முயற்சியினால் பற்பலஉருக்களைத்தாங்கிஎங்குந்தானாய்க்கா
ட்டி விற்களைவளைத்து கூரியபாணங்கள் கொடிய ஆயுதங்களைச் சோனை
ப்பெய்யலினுமேலிடச்சொரிந்து வீரங்களைப்பேசி சிங்கத்தைப்போல
க்கெர்ச்சித்து சூறவளிக்காற்றைப்போலச் சுழன்றுசுழன்று அகோரயு
த்தங்களைச்செய்துலவுகின்றதைப் பாலசுப்பிரமணியதேவர் தெரிந்து
பகைவன்மிரட்டிவருகின்றமாயையை வெகுநேர்த்தியாக விருக்கின்றதென ந
கைத்தவராய்த்துரிதமாய் ஞானப்படையையெடுத்துத் தமதுதனுசிற்சந்

ரித்து பாதகன்வஞ்சகங்களை நிமைப்போதிற் அகப்படுத்திவாக் கடலை யெனப்பணித்துச்செலுத்தியவுடன்கடுகிச்சென்று வேதவொழுக்கங்களுக்குமாருய்க்கொடுங்கோலை நடாத்திவரும் சூரமகாராசன் மாயப்பெருக்கனைத்தையுங்கவளீகரம்பண்ணிப் பகைவனைஎதாப்பிறகாரந் தனியனாக விட்டுமீண்டு கற்றன்அம்புக்கூண்டி லடங்கியது, சவுனகாதி ரிஷிகளே மேற்குறித்தபடிக்குத் தன்முயற்சிபின்னப்பட்டுப்போனதறுவாயில்மனந்தளர்ந்துவானத்தையளாவநிற்கின்றதேரிலிருந்தபடியேமேல்நடத்த வேண்டியதைக்குறித்துச்சற்றுநேரம்யோசித்திருந்தனன், யிக்காரணங்களைக்கண்டதேவர்கூட்டமானது அகமுகமலர்ச்சியுடன்சத்தசாகரங்களும்யிரைத்தெழுந்ததைப்போலக்கற்றன் செயத்தைக்கொண்டாடிதேன்களைப்பெருக்கிப்பரிமளித்திருக்கும் பஞ்சகற்பகமலர்களைவாரிவாரிசிவகுமாரன்மீதிலிறைத்துச்செயம்செயமெனக்கொண்டாடிப்போற்றினர், இப்படிக்குத்தன்பகைவர்விறியிருப்பதையும் தனக்கடுத்தகுறைபாடுகளையும்நினைந்துநினைந்துவெம்பிச் சடுதியிலொரு நினைவக்கொண்டவனாய் மின்னலைப்போலத்தேருடன்மறைந்து அண்டகோளகைமேல்வாயலினருகிற்றோற்றிக்கொக்கரித்துபயந்தோடாமற்சூரனானல்சண்டைக்குவரக் கடவையெனஅறைகூவி கோடையிடிகளுமஞ்சப்புசங்களை தட்டிக்கொண்டுமேலைஅண்டத்திற்பிறவேசித்துஆற்பாட்டங்களைச்செய்திருப்பதைஎமதிறைவன்தெரிந்து துரிதமாய்த்தமதுதேரை அத்தலத்திற் கொண்டுபோய் கொடியபோரைச்செய்து சிக்குப்படுத்துமுன்னிலையிற் சடுதியில்மறைந்துமற்றொரு அண்டத்திற்பாய்ந்ததறுவாயிற் சண்முகப்பெருமானும்சலியாமற்சூரன்முன்னம்நேர்ந்துபடைகளைக்கொண்டுதிகைக்கும்படிக்குச்சாடும்போது பாதகன்அதனைக்கடந்து தன்காவலிற்பட்ட மற்றைய அண்டக்கடோறும்பாயுந்தோறும் சரவணபவனும் பின்பற்றிப்போய் அகோரயுத்தியங்களைச்செய்துசெய்துவருமுன்னிலையிற் சிவகுமாரன் தோற்றங்காணாதகாரணத்தினாற் பிரமன் இந்திராதியதேவர்க்கள் மனச்சோர்வுடன்பார்வாய்வளர்த்துவரும தற்றாய்தந்தையைப்பிரிந்துவாடும் பிள்ளைகளைப்போலவருந்தி பெருமூச்செறிந்து ஏங்கினவர்களாய்மகாலட்சுமியை மார்பிற்படைத்திருக்கின்ற விஷ்ணுவைச்சேவித்துப் போற்றிக்கற்றனைவீரவாளாயுதத்தைத் தாங்கியிருக்கும் மாயைபுத்திரனுடன்றொடர்ந்து இவ்வண்டவெல்லைகடோறும்வாதாடியிருந்தகற்றன் யிதனைக்கடந்துமேலையவண்டங்களினும்பாதகனைவிடாமல்பின்பற்றிப் போயினர், பரமசிவகடாட்சத்தினாற்பெற்றிருக்கின்றவரமுயற்சிகொண்டுசூரன்சற்றுஞ்சளைந்தவனாக்காணவில்லைமேலும்சலனமற்றவயிரப்படிவத்தையும்மாளாதவபதையும்படைத்திருப்பவனாதலாலும் மாயைவஞ்சகமாதிய

பாதகங்கள்சேர்ந்திருப்பதுக்கொப்பாகிய கொடியமனத்தையுடையநிய
ன்மித்தலத்தைக்கடந்து மறைவிடங்களிற் போகுங்காரணத்தையோசிக்
குமிடத்தில் ஏதோசிலசூதுகளை நினைந்திருப்பவனைப்போலக்காணப்படு
கின்றது, எம்மிறைவனுக்கு அவுணர்கிடைத்திருக்கின்ற மாயப்பெருக்கு
களொன்றுந்தெரியாதுசூ ன்யிளைத்தவனைப்போலக்காட்டி யோடியதை
த்தெரிந்தமாத்திரத்தில் யிவனைவெல்வதற்கிதுதருணமெனநினைந்து நம
தையனும் போர்த்தொழிலைச் செய்துகொண்டே தொடர்ந்துபோயினர்,
அவுணராசனைக்கண்டுவாதாடுகின்றனரோ அல்லது க ணப்படாமல் தேடு
கின்றனரோ மற்றும் யென்னகொடுமைகள் விளைகின்றதோ யாதுந்தோ
ற்றப்படாதகாரணத்தினுல்அடியோங்கள்மனமொருமைப்படாமல்சஞ்ச
லத்திற்பட்டுவாடிவருந்துகின்றனம்கண்காணுமிடங்களிற்சற்றும்யிரக்
கமற்றபாதகன் கொண்டுபோயினான், அத்தலங்களில்நடக்கும் வினைவின்
னதெனத்தெரியாமல் ஏழைகளாகியயாங்கள் பயப்பிராந்தி கொண்டுதி
கைக்கின்றனமாதலால் ஒருவகைதேறுதலைகளைச்சொல்லிக் கிலேசத்தைப்
போக்கியாளவேணுமென்று போற்றுகின்றபிரமனுதியர் முகவாட்டத்
தையும்சோர்வையும்கேசவன்தெரிந்து நகைத்தவராய் மனங்கிலிக்கமுற்
று ஓ தேவர்க்களேபயப்படவேண்டாம் யாதொரு எண்ணங்களையும்நி
னைந்துவருந்த வேண்டுவதில்லையென்று அபையஸ்தமளித்து யிதனைத்தி
ருவுளம்பற்றுவதாயினர், கொடியசெய்கைகளையுடைய சூரனும்பலகால
ம்பட்டவருத்தங்களினுல் அவன் சவுரியங்களையும் புயவன்மைகளையும்
பெரிதாகமதித்துக்கலங்குகின்றீர்கள் அதனையினிவிட்டுவிடக் கடவீர்க
ள்எமதிறைவனுகியசண்முகப்பெருமாள் புசபெலபராக்கிரமத்திறங்களை
த்திஷ்டாந்தமாகப்பலதரங்கண்டிருந்தும் யிப்படிக்குச்சங்கையுற்று
வாடுவது உங்களையொத்தவர்களுக்கேற்பதோ வேதாகமங்களை யோதிப்
பரத்துவநிச்சயங்களைத்தெளிந்திருக்கும்மகத்துக்களாலும் அறியப்படா
தபரவஸ்துவாய் சச்சிதானந்தசொரூபியாய் ஆதிமூலமாய் அண்டாண்ட
புவன சராசரங்களுக்குககாரணபூதமாய்ச் சுயஞ்சோதிவடிவைப்பெற்று
தம்மைத்தொழும் எம்போலிகளுக்கெல்லாம் சாரணசற்தனுக விருப்ப
வன்சரவணபவனென்றறியக்கடவீர்கள் பிறப்பிறப்பில்லாத நித்தியத்தை
க்கிடைத்திருக்கின்றதேவாதிதேவனுகிய சிவபிரானே பிள்ளைப்பருவத்த
னுய்ச்சண்முகாரவிந்தங்கள் விளங்கக்காட்டுகின்றனனெனச் சொல்லதல்ல
துவேறுமுண்டோ வேலாயுதமூர்த்தியினது குணதி செயங்களையும்மகி
மைகளையும்கண்டறிந்தும் அவன் மாய்கைப்பெருக்கினுலுங்கள்ம
னந்தெளிவுபெருமல்மயங்குகின்றீர் ஓ தேவர்க்களே யினிசற்றும்ஐயப்
படவேண்டுவதில்லை சூரபதுமனுனவன் தன்வல்லபத்தினுல் ஆயிரகோ

டிஅண்டங்களெங்கணும் போனபோதிலும் நமதுசத்தன் தொடர்ந்துஅ
கோரமயித்தியங்களைச்செய்துசெய்துவாட்டிச்சற்றுநேரத்தில்யிவடத்தி
லிருப்பாதகனைக்கலந்து வாவிருக்கின்றனர், யிதனை உள்ளங்கைநெல்லிக்
கனியைப்போலக்காட்டுவோம் அக்காட்சியைக்கண்டு களிப்பீரென்று
மொழிந்திலுவாளவர்சிவகுமாரன்மகிலமகளை விரித்துப் போதித்தமாத்
திரத்திற் பிரமனுதியதேவர்க்கள் மனச்சஞ்சலங்களை யொழிந்து ஒசுற்
றனை பேரின்பவுணர்ச்சியைப் பெருந்தாரணத்திலுல்மயங்கினேம்தே
வரீர்வாக்கியங்களைச் செவிகளுக்கமுதமாகக்கேட்டுஉண்மையைத்தெளி
ந்துநிறைசாத்தாயினேமென்றுபோற்றிக்களித்துப் பாலசுப்பிரமணிய
க்கடவுளினதுவரவுக்கெதிர்பாத்திருந்தனர், இச்சரித்திரம்நிற்கசூரபதும
னனவன் மேற்குறித்தபடிக்கு ஆயிரகோடிஅண்டங்கடோறும் மின்ன
லையொப்ப இரதிரரு லத்தேனைச்செலுத்தி உலவுகின்றகாலங்களிற்கந்த
நம்பின்பற்றப்போய் வளைந்துகொண்டு பலமிகவுடையுள்ளபாணங்களை
ச்சோனைப்பெய்வதுமேலிடச்சொரிந்து போராடுமுன்னிலையிற்பாத
கனும்பின்னிடையாமல் அதிசதீட்சணியமுள்ள சரவருடங்களைப்பெரு
க்கித்தன்மேல்வரும்படைகளைக்கண்டித்து மேலுமேலும்அமோசமாகி
யகோடியகணைகளைப்போககிக்கொக்கரிக்கவும் அவற்றினை முருகப்பெ
ருமான்மாற்றவும் யிவ்விதமாகச் சூரைக்காற்றையொப்பத் தங்கள்தேர்
களைத்திருப்பித்திருப்பி ஒருவரைஒருவர்வெல்லவேண்டுமென்கிற வயிர
ங்களுடன்நெருங்கிச் சண்டைகொடுத்தவேடிக்கையையும் அவ்விருசூரர்
கள்தீரத்தையும் சரவேகசரவேகத்தின்பெருக்கையும்தேர்களோடும்வேக
த்தையும் ஒருநாவைப்படைத்திருக்கின்ற என்னாற்சொல்லிமுடிவதன்று
அவர்கள்விடுத்தபாணகோடிகள் வெட்டுண்டுமகாமேருவினு மேலிட்டு
க்குவிந்ததெனப்பேசுவோமாகில் மற்றகாரணங்களை கணிக்கப்படுவதோ
இவ்விதமாக அண்டநிலைகளெங்கணுந்திரிந்து வாதாடியசூரன் சடையி
ல்யிர்தபூமண்டலத்தைச்சூழ்ந்த சமுத்திரமத்தியிற் சொர்ணமயமாக வி
ளங்கிக்கொண்டிருக்கும் வீரமாமயேந்திரபுரியி னெல்லையிற்சேர்ந்திய
காலத்திற் சரீரத்தைப்பிரிவின்றி உலவும் நிழலைப்போலக் கந்தசுவாமியு
ம்அந்தவக்கிரத்துடன் தொடர்ந்தபோது அத்தலத்திற்கூடியிருந்தாரதகெ
சதுரகபதாதிகளனைத்தும் வீராவேசங்களுடன்பெரும்புறக் கடல்பெரு
குமாறுபோலமேலிட்டு நமதுசக்கிரவர்த்தியைவிடாமல்வாதாடிவருகின்
றயிந்தபாலன் ஆணவத்தையடக்குவோமெனவடவைக் கனலைப்போலப்
பொங்கித் தங்கள்கரங்களிற்பிடிபட்டிருந்தவிற்களை யிருகுதைகளுமொ
ன்றுபடவளைத்து தாங்களிலேற் றேடிவைத்திருக்கின்ற தேவப்படைக
ளானகூடவிஷத்துக்குச்சமதையாகிய சிலீமுகங்கள்வயிரவாளிகள்முதலி

யஅஸ்திரங்களைச் சோனைமாலப்பெய்வதினு மேலிடச்சொரிந்தும்மந்
தரகிரியையொப்பக்காட்டும் வலியதண்டாயுதம்-சக்கரம்-சூலம்பிண்டி
பாலம்-வச்சிராயுதம்-கழுமுள்-வேலாதிய ஆயுதங்களை ஒன்றனந்தமாக
க்காவேகங்கொண்டேவியும் மாயவித்தைகளினால் பலகொடுமைகளைக்
காட்டியும் இன்னமுஞ்சொல்லநின்றசித்திரப்போர்களைச் செய்துகொ
ண்டுமேலோர்க்குங்கெட்டாத மூலகாரணக்கடவுளாய் சுயஞ்சோதிமய
மாயிராநின்ற சிவசுப்பிரமணியதேவனை யெதிர்ந்துகொண்ட தறுவாயில்
அப்பாதகர்மனவலியையும் புசபெலபராக்கிரமத்திறங்களையும்எமதிறை
வன்மதித்து அவர்களனைவரையும் ஒருமுனையில்மடிக்கவெண்ணிச்சற்று
கோபநகைகொண்டனர், அதனிடையிற்றோற்றிய தீப்படலமானதுமே
விட்டுக்கொளுத்த முப்புராதிகளைப்போலவெந்து நால்வகைச்சேனைவெ
ள்ளங்களனைத்தும் சாம்பல்மலைகளாகக்குவிந்தது, சவுனகாதிரிஷிகளேயி
தாவானவர்செய்ததொழிலை பின்னைமுடிப்பதுதகுதியாகவே காணப்படு
கின்றது, இவ்விதமாக திசாதிசைகளெங்கணும் நெருங்கி ஆர்ப்பாட்டங்க
ளைச்செய்துகொண்டு போராடியிருந்த ரதகெசதுரக பதாதிப்பெருக்
கானது சூரியன்முன்பட்டபனிப்படலத்தைப்போல நாசமடைந்துபெ
ருத்தோங்கியிருக்கும் தூளிதமலைகளைக்கண்ட தேவர்க்கள் மனவெழுச்
சிபெற்றவர்களாய் அம்மம்மயித்தகைய பெருவெள்ளத்தை யாவரால்மு
டிக்கப்படுமென்று கந்தனபெருமைகளைக்கொண்டாடி பஞ்சகற்பகம
லர்களைஏராளமாகவாரிவாரி முருகேசன்மீதிலிறைத்து செயவிசையவா
வெனவாழ்த்திப்போற்றிக்களித்திருந்தனர், சவுனகாதிரிஷிகளே யித்தவ
ண்டப்பரப்பெங்கணும்நெருங்கி ஆற்பாட்டங்களைச்செய்திருந்தரதகெ
சதுரகபதாதிக ளனைத்தும் குமாரதேவர் சீற்றவழியினாற் றகிக்கப்பட்
டொழிந்தகாலத்திற் மானமுங்கோபமும்சொலிக்கத்தக்கதாகச் சூரபது
மன் நின்றகாட்சியெப்படிக்கிருந்ததெனிற் பூர்வத்தில்ஒருகாரணநிமித்
தியமாகஅகஸ்தியர்கருங்கடற்பெருக்கை உள்ளங்கையினேற்று ஆபோச
னஞ்செய்ததறுவாயில் வடவையானது கொழுந்துவிட்டுச்சொலித்துக்கா
ட்டியதையொத்தது, அக்காலத்திற் சிவகுமாரன் நகையழலின் கொடு
மையினாற்பிரளயவெள்ளத்தைப்போலப் பெருத்தடர்ந்து வீதிநின்றக
ணக்கிறந்தவெள்ளம் ரதகெச துரகபதாதிகள் மங்கியதையும் எவனுக்கு
மொருவருமில்லாமல் தான்தனிமையில் நிற்பதையும் தனக்கடுத்தமான
க்குறைச்சலையும் செயசாலிகளாகியநவவீரர் இலக்கர் படைத்தலைவர் பூத
வெள்ளங்களுடன் தூதன் மனவெழுச்சிபெற்று செலிப்புடன்கொக்கரித்
திருக்கின்றஆரவாரங்களையும்தெரிந்து அதிசமனஸ்தாபத்துடன்அவுணர்
பெருமான் யிதனைநினைப்பதாயினன், 'வீராதிவீரர்களாய்யிருபுசங்களை

வொப்பர்காத்திருந்ததுணைவர் சூரியனைத்தளைசெய்யவல்லசவுரியயானுமி
யபானுகோபன்முதலியபிள்ளைகள்மந்திராலோசனைக்குயோக்கியமா
யமந்திரிபிறதானிகள்பிராணபதமாகவிருந்தசிநேகிதர்நெருங்கியசுற்
றத்தினர்சென்றவிடங்களில் வெற்றியுடன்திரும்பத்தக்க புசபெலபராக்
கிறமசாலிகளாகிய சேனைத்தலைவர்கள் மற்றுமிராநின்ற அவுணப்பிறவுடைக
ர்கள்யிந்தவீரமாமயேந்திரபுரி முதலியயிடங்களில் வாசமாயிருந்தசயி
ன்னியங்கள்முற்றும் மாண்டதுமல்லாமலென்றுணையிற்பட்டிருக்கின்
றமற்றையண்டங்களிருந்துபெருகியபல்லாயிரகோடிவெள்ளச்சேனைப்
பெருக்கும் பன்னிருபுயாசலங்களைப்படைத்திருக்கின்றபாலன்மகத்து
வத்தினால்நாசப்பட்டுப்போயது நானுமொரியாய்த்திகைத்திருக்கின்றனை
ன், யினியென்னால்முடிக்கவேண்டியகாரணங்களொன்றையுங் காணே
ன்யிதுபரியந்தம்நடத்திவந்ததந்திரஉபாயங்களைவிடயினி என்னவிரு
க்கின்றதென்று பற்பலஎண்ணமிட்டவனாய்ப்பெருமூச்செறிந்து யாது
ந்தோற்றாமற் சிலநேரம் மயங்கியிருந்தவனுக்கு ஒருஞாபகமுதித்த
வுடன்சற்றுமனச்சஞ்சலத்தையொழித்து தட்சிணத்தில் மிகுத்தஅன்பு
டன்தன்னை அரிதிற்பெற்றதாயாகிய மாயையை மனப்பூர்வகமாகநி
னைத்தனன், யிப்படிக்குத் தன்சிரேஷ்டபுத்திரன் மனவருத்தத்துடனி
யாடசங்கொண்டகாரணத்தைச்சுமாலினியென்னுஞ்சிறந்தபர்வதச்சாரலி
லிருந்துபரமனைநோக்கிஅரியதவங்களைச்செய்துவருமவள் தெரிந்தவுட
ன்அத்தலத்தைக்கடந்துபவனவேகத்தினுங்கடுகிவந்து மின்னலைப்போ
லச்சூரன்முன்னந்தோற்றிச்சிவபிரான் கடாட்சித்த ஆயிரத்தெட்டண்ட
ங்களுக்கதிபனாய்மகதயிஸ்வரியங்களையனுபவித்துவந்தபுசபெலபராக்
கிறமசாலியாகியகுமாரனே சதுரங்கச்சேனைப்பெருக்கையும் படைவீர
ளையும்துணைவர்புத்திர மித்திரகளத்திராதிகள்மதியூகிமந்திரிகள்மற்றட்டி
சனர் ராசசின்னங்களெவற்றையும்நீங்கிஅதிகமனக்கிலேசத்துடன்தனிய
னாய்நிற்கச்சம்பவித்த காரணமென்னை யிக்காலத்தில் என்னைவரவழைத்
துநிமித்தம்யாது அதனைவிரைவிற்சொல்லக்கடவையெனக்கேட்டகாலத்தி
ல்துக்கவருத்தங்களுடனும் பட்சத்தினாலும் அன்னையைப் பிறதட்சணம்
வந்துசேவித்துக்கொண்டவனாய் கரங்களைக்கூப்பிநின்று யிதனைமுறை
யிடத்துடங்கினன், ஓ தாயே நாற்றெட் டுகெங்களாகச் சகலரும்போற்
றவாழ்ந்திருந்தவெனக்குயிக்காலத்திற்சம்பவித்தவருத்தங்களையென்னெ
ன்றுசொல்லுவேன் சிவபிரான் நுதல்விழியில்நேற்றியத்தினந் தோற்றி
யபாலசுப்பிரமணியன்நிற்நிமித்தியமாய் நம்மிடபேரிற்பகைத்து திரு
க்கயிலையைக்கடந்து சிலபூதவெள்ளங்களுடனும் சமுத்திரஞ்சூழ்ந்த பூ
மண்டலத்திலிறங்கிவருபவன்வழியில்நேர்ந்த உன்றுசைக் குமாரனாகிய

தாருகாசூரனையும்மாயைக்காசனாகவிருந்தகிரவுஞ்சனையும்வெற்றிவேலி
னாற்பிளந்துகொன்று அவனைப்போற்றியிருந்தமந்திரிபிரதானிகள்படை
த்தலைவர்கள்முதலிய சேனைப்பெருக்கையும்நாசப்படுத்தினதுமல்லாமல்
தொலைதூரங்கடந்துவந்து சமுத்திரத்தைத்தாண்டி யாவராலும் நோக்
குதற்கரியகட்டுக்காவலையுடைய யிந்தவீரமாமயேந்திரபுரிக்கருகில் பா
சறைவிடுதிஉண்டுபண்ணிக்கொண்டு நமக்குப்பயந்தொளித்திருந்தயி
ந்திரனாதியதேவர்க்களைசேர்த்துக்கொண்டு விஷ்ணுபிரமன்போற்றவிரு
ப்பதைத்தெரிந்து யித்தலத்தைக்கடந்துபோவதாகப்பயமுறுத்தம்படி
க்கு ஜெயசாலியாகிய உன்பேரன் பானுகோபனைச் சில சேனைகளுடன்
செலுத்தினால்சற்றுமிரக்கமில்லாமல் அவனையும்மற்றபிள்ளைகள்மந்திரிபி
ரதானிகள்மன்னமண்டலீகர் சேனைத்தலைவர்கள் கணக்கிறந்தவெள்ளம்
ரதகெசதுரகபதாதிகளையும்கொன்று என்பிராணபதமாகவிருந்த சிங்க
முகாசூரனையும் அவன் பிள்ளைகளாதியவரையும் அதம்பண்ணியும்விடாம
லென்னையும்மடக்கிக்கொண்டு அண்டநிரைகள்முற்றினுமிருந்த நமது
சயின்னியப்பெருக்கனைத்தையும்வாட்டித்துடர்ந்துபோராடி வருகின்
றனன், தாயேசகலனாயும் பறிகொடுத்து ராசாதிராசனாக விருந்தயான்
ஓரியாகநிற்கின்றனன், எனக்கடுத்திருக்கின்றதுக்கவருத்தங்களைச்சொல்
லிமுடிவதன்றமேலும் எங்களுக்கேதெனும் குறைபாடுகள்நேர்ந்து நி
னைந்தவுடன்வந்து அவற்றைப்போக்கிப்பாதுகாப்பதாகமுன்னம் வாக்
குதத்தஞ்செய்திருப்பதாலும்புத்திரருக்கடுத்தயின்னலைத்தாய்தந்தையர்
விலக்கிரட்சிப்பதுகடமையாகவிருக்கின்றதினாலும்யிதுசமயத்தையும்
யோசித்துத்தாமரையிலையிற்பட்டநீர்த்துளியைப்போல மனந்தரியா
மலலைகின்ற சஞ்சலங்களைப்போக்கியாள்வதாகத் திருவுளத்திரக்கமுற்று
அனிதமாகமாண்டதம்பி பிள்ளைகள்மந்திரிபிரதானிகள்படைவீரர்மற்ற
சேனைப்பெருக்கனைத்தும் ஒருமுனையிலெழுவதற் கொருசூட்சியைத்த
யைசெய்யவேண்டும்யிதையன்றியில் மற்றொருவருத்தங்களைக்கொடுக்க
வில்லை வினையில்இக்கோரிக்கையைக் கடாட்சிக்கக்கடவையெனமிகவும்
வருந்திக்கேட்டுக்கொள்ளும் சிரேஷ்டபுத்திரன்கோரிக்கைகளனைத்தையு
ம்கவனித்துக்கேட்டு நகைத்தவளாய் யிதனைப் போதிப்பதாயினள், ஐய
னேபுசபெலபராக்கிரமசாலிகளாகிய துணைவர்பிள்ளைகள் மாமன் மைத்
துனன்-சிநேகிதர்-பெரியோர்கள்- மற்றுமுள்ளசுற்றத்தினர் வீராதிவீ
ரராகவிருந்தபடைத்தலைவர்கள் அவுணராசாக்கள்மனதினாலும் அளவிட
ப்படாத ரதகெசதுரகபதாதிகள்முதலிய ராசசின்னங்களையுந் தோற்றன
வற்பனிவிடைகளுக்கொருவருமில்லாமல்ராசராசப்பிரவுடனாகவிருந்
தஉன்னையொத்தவன்யிக்காலத்திற் றனித்திருக்கவும் பெறுவையோயிஃ

படிக்குச்சகலவளங்களையும்பதிகொடுத்தும் யின்னமும்நீரோராய்த்தாயா
திகளாகவு மிருக்கின்ற தேவர்க்கள் சிறையைவிடுதலை செய்துபோட்டுமே
சகலைஸ்வரியவைபவங்களையுமனுபவித்துச் சவுக்கியமாகவிருக்கநினையாமல்
மிப்பாடுசெய்யட்டும் சண்முகப்பெருமானுடன்யுத்தஞ் சண்டைசெ
ய்யவேநினைந்திருப்பதாகக்காணுகின்றது அப்படிக்குத்துணிவு கொள்
ளுவையாயின் தற்காலத்திலிருக்கின்றசம்பத்துகளையும்போக்கிச்சிவபிரா
ன்கொடுத்திருக்கின்ற வரப்பேறுகளையும் அரியவயிர திரேகத்தையும்
வலியபிராணனையுமிழக்கவருமுன்னிருபுயாசலங்களைப் படைத்திருக்
கும் சத்தன்குறுகுறிசெயங்களை மதித்துப்பாராமல் பாலன் பாலனென
ப்பேசுகின்றனை யித்தகையதண்டனைகளைக் கிடைத்தும் யின்னமும் அ
வன்பெருமைகளுனக்குத்தோற்றவில்லையோ சுயஞ்சோதிமயமாய் எள்
ளினெண்ணெயைப்போல நிறைஞ்சனமாய்விளங்கி சராசரப்பிரபஞ்சங்க
ளைநடப்பித்தவரும் ஆதிதேவனுமித்தோற்றங்கொண்டெழுந்தருளியி
ருக்கின்றனர், சற்வசிவதயாபரமூர்த்தியாதலால் உன்னிடத் திரக்கமுற்று
யித்தகைய திருவிளையாடல்களைச் செய்து வருவதல்லது சற்றுகோபங்
கொண்டுதமது திருக்கரத்தில்விளங்கும் வெற்றிவேலாயுதத்தைச்செலுத்து
வாராயில் நிமைப்போதில்யித்தவயிரதிரேகம் பிளப்புண்டு மாண்டு போ
லைவாளுளைவியர்த்தமாகப்போகஉறுதிகொண்டு என்மொழியைமறுப்
பையாயத்துரிதமாய்க்கெடுதிநேரும் மேலுந்தலையிலெழுதியிருக்கின்ற
விதியின்காரணங்களைமாற்றினவர்க ளொருவருங்கிடையாது ஆதலால்யி
க்கருமங்களை நிர்க்காலோசனையைச்செய்து நடந்துக்கொள்ளக் கடவை
யிவைநிற்கஉன்கருத்தின்படிக்கு யிதுபரியந்தம் யிறந்தவர்களனைவரை
யுமெழவேண்டுவையாயில் சத்தசாகரங்களுக்குக்கடையிற் சொர்ணமய
மாய்வானத்தையளாவவோங்கி வளர்ந்திருக்கும்சக்கிரவாளகிரியைச் சூழ்
ந்தபெரும்புறக்கடலினருகிற் குளிர்ந்த கிரணங்களை வீசுஞ் சஞ்சீவிளங்
கும்மந்தாகூடமென்றொரு பற்வதமிருக்கின்றது அதனைத்தருவிப்பை
யாயின்உன்னெண்ணங்கைகூடுமெனச்சொல்லி குமாரனே பிரமன்றிற்
னப்படிக்குச்சகலமுமுற்றவிருக்கின்றது நான்விருதாவாவெண்ணியா
வதொருகருமமுமில்லையென்றுபற்பலஉறுதிகளையெடுத்துக்காட்டியும்
சூரன்கருத்து பேதியாதகாரணத்தினால் அவனை வெறுத்துக்கொண்டு ம
றைந்து தன்னிருப்பிடத்தைச் சேர்ந்தனன், அதன்பின்பு நீலகிரியைப்
போலப்பருத்த திரேகத்தைக்கொண்டிருக்கிறஅவுணர்பெருமான் மன
ச்சஞ்சலங்களைப்போக்கிப் புசங்கள்பூரித்து வானையளாவமகிழ்ச்சிறந்தவ
னாய் நற்றுய்வத்துயோசித்துப்போனது நல்லஉபாயமாகவிருக்கின்ற
தெனமதித்து ரணக்களத்திற்பட்டவர்களனைவரையும் எழுப்புவதற்கு யிதை

யன்றியில் வேறொருமார்க்கமில்லையாதலாற் சஞ்சீவிமலையைக்கொண்டுவ
ருவதற்கு யாவனைத்தூண்டுவோமெனச் சற்றுநேரம் யோசித்தகாலத்தி
லொருவருமில்லாமையால் மாயையிற்பிறந்ததாய் மனோவேகத்திலும்
வாயுவேகத்திலுங்கடுகிப்போய் வரவல்ல இந்திரஞாலத்தேரைப் போக்
குவதாகத்துணிவுகொண்டவனாய் தட்சணத்தில் ரதத்தைவிட்டிறங்கிவீர
த்தன்மையும்வலியும்வீரமும் பலமகத்துவங்களையுங்கொண்டிருக்கும்
சிங்காசனத்தைநினைந்தனன், ராசாதிராசன் கருத்தின்வண்ணம் அதிக
உக்கிரபார்வையுடன்பிடரிமயிரலையப் பருவாயைத்திறந்துகொண்டுவ
யிரத்தையொத்தகூரியநகங்களைவாய்ந்தமிருகராசன நிலமட்டோடிமு
ன்னம்வந்துநின்றமாத்திரத்தில் அதன்பிடரியில் ஆரோகணித்துப் பர
மசிவகடாட்சத்தினாற்பெற்ற தெய்விகம்பொருந்திய ரத்தின்பிதிக்கி
ழிகளைப்பாய்ப்பின்மனதிலும் விரைந்துசென்று பெரும்புறக் கடலைச்
சேர்ந்து அதனருகில் கண்டதுண்டப்பட்டிறந்தவர்கள் சரீரத்தை
ப்பொருந்தச்செய்துஉயிரைத்தந்தெழுப்பவல்லமகத்துவமுள்ள சஞ்சீ
வியைப்படைத்திருக்கின்ற மந்தரகூடமென்றொருபர்வதமிருக்கின்றது
அதனையிந்தநிமிஷத்திற் பெயர்த்தெடுத்துக்கொண்டுவந்து சேர்க்கக்கட
லையெனக்கட்டளையிட்டமாத்திரத்திலாசயரமேவியான்கருத்தின்படி
க்குமின்னலைப்போலவேகிச்சடுதியிற் சத்தசாகரங்களைக்கடந்து அவற்றி
னிடையிற்பட்டதீவுகளைத்தாண்டிச்சக்கிரவாளத்தைநீங்கிப்புறம்பிலக
ண்டாகாரமாய்ப்பரந்திருக்கின்ற பெரும்புறக்கடலினருகிற் சேர்ந்து
பெருகாலமாய்சலனமற்று வானத்தையளாவநிற்கின்ற மந்தரகூடபர்வ
தத்தைவேருடன்கெல்லிதன்னிடத்திற்பரித்ததாய் மனோவேகத்திலுமு
ந்தித்திரும்பிவீரமாமகேந்திரபுரிக்கருகில்வருகின்றதறுவாயில் இந்திர
ஞாலத்தேர்கடுகும்வேகத்திற்பெருகும்வாயுவானது சஞ்சீவிப்பரிசைப்ப
ட்டுமுந்திரணகளவெல்லைமுற்றும் பரந்துமுயற்சியினால் அத்திணவனை
யிற்சிவசுப்பிரமண்ணியராலும் படைகளாலும்கண்டதுண்டப்பட்டுமா
ண்டுவிழுந்துகிடக்கின்ற சூரன்சதுரங்கச்சேனைகளும் மற்றயிரமுகாசுரு
ம்கடையுகத்தில்வடவைக்கனல்கருங்கடலைநீங்கிவீறியெழுந்துமன்னுயி
ரைவருத்தப்பெருகியதைப்போலக்கொக்கரித்துக்கொண்டுசிங்கநாதங்
கள்அட்டகாசங்களைச்செய்து பற்பலசபதங்களைப்பேசியொருமுனையிற்கு
பிலென்றெழுந்ததறுவாயில் மதயானைகள் பனையையொத்த துதிக்கைக
ளிலிருப்புலக்கைகளைப்பற்றி அண்டங்களதிரவீசிட்டுப்பகைவர் குலை
நடுங்கிக்குலைகுலைந்தோடமும்மதங்களைப்பெருக்கிமேலிடவுஞ்சாமரங்க
ளைப்போலப்பிடரிமயிருடன் வாலசையநாலுகால்களிலும் வசைவென்
டையங்கள்கலிக்கவானத்திலும் பூவட்டமுற்றிலும் திசைகளிலுங்கடவி

விடங்களினும்பாய்ந்து சத்துருக்கள்சிரங்களில்மிதிக்கவல்லபாவிப்பத்
திகள்மிகுபலவவும் தங்களிற் பூட்டிவந்த-சிங்கம்-குஞ்சரம்-புலி-கரடி
-கண்டபேரண்டங்கள்-பரிகளாதியமிருகங்கள்பேரொலியைக்காட்டிப்
பாயவும் யிப்படிக்குசமஸ்தமுமெழுந்த தறுவாயில்அவ்வணிப்படைகள்
வீராவேசங்களுடன் முன்னடைகண்கள்சிவந்து புகையையும்அனற்பொ
றிகளையும்மிலறக்கக் காட்டமலைப்போலச்சீறித் தண்டாயுதம்- வேல்-சக்
கரம்-பிண்டிபாலம்- யிருப்புலக்கை-எழு-மழு-கப்பணம்-கவண்-மு
சலம்-கொழுப்படைமுதலிய ஆயுதங்களைப்பற்றியும்யிருகுதைகளினும்
மணிகள்தூக்கித் தங்கக்கட்டுகள்பூண்டு பருத்து நீண்டிருக்கும் விற்களை
வட்டாகாரமாகவளைத்து யிடதுகரத்திற்கொண்டு கொடியதீட்சண்ணிய
முள்ளதெய்வப்படைகள் தீட்சண்ணியமுள்ளநாராசங்களைவலக்கரங்களிற்
பற்றிச்சந்தித்துக்கொண்டுபூதவெள்ளங்களின்மீதுபாயவும். இவ்விதமாக
அவையவங்கள் கண்டிக்கப்பட்டவர்களும் கையற்றவர்களும்கால்கவொ
டிந்தவர்களும்-மார்புபிளந்தவர்களும்-வயறுபீறுண்டவர்களும்- சிலகு
மாரன்நகைப்பினும் விழிச்சுவாலையினும் தகிக்கப்பட்டுச் சாம்பல்ம
லைகளாகக்குவிந்து கிடந்தவர்களும் பலமுயபடிக்குத் திரோகம்பூரித்து
மிகவும்வலியராயெழுந்து அதிககெலிப்புடன் பூவட்டமுற்றினும் வான
ப்பரப்பெங்கணுந்திசாதிசைகள் திபாந்திரங்கள் சத்தசாகரப்பரப்புகள்
பெரும்புறக்கடல்அதைச்சூழவிருக்கும் சக்கிறவாளவெல்லை அதனருகில்
விளங்கும்காடாந்தகாரமாகியவிருட்பூமி அண்டப்பித்திகையோர்முதலி
யதலங்கள்முற்றினும் அடர்ந்துமேலிட்டு அதல-விதல-சுதல-நிதல-த
ராதல-மகாதல-பாதலமென்னும்சத்தபிலங்களின் விரிவினும் பூலோக
புவலோக-சுவலோக-சனலோக-தபலோக-சத்தியலோக-மகாலோகமெ
ன்னும் எழுவகைப்பட்டமேலுலகங்களின்பரப்பினும் நிறைந்து அண்ட
த்தளைமேற்புறத்திற்சூற்றம்வெள்ளிடை முதலியயிடங்களில்என்
கோ..ப்பிடமில்லாமல் நெருங்கியதறுவாயிற்பெருத்தவோசையைக்கடையு
ளிடம் ..ம் ஒலியென்சொல்லமுடியாத பிரசண்டமாருதவதிர்ச்சியை
சத்தொ..ழமதிக்கவேண்டும் அதன்திறத்தையின்னவிதமென்றுயென்று
ச்சொல்லமாட்..ருவதன்று யிப்படிக்குப் பெருத்திருக்கின்றாதபெச தூரப்
ற்பேசப்பட்டு ..மாகத்திற் சிவளைமிஞ்சி மந்தாரத்தையொத்த கதை-எழு
தாதிகளின்ச..ழு-வச்சிரம்-முத்தலைச்சூலம்-பரசு-பல்லயம்-திரிசி க்
ட்டடை-தோமா..ரம்-முசலம்-கணிச்சி-மழுப்படை-வேல்- வாளாதி
குலர்-பிண்டிபாலமாகச்செலுத்தியும் பலர்பருத்த விற்களை வளைத்து
படைகளைக்காவேகத்தொடுகணைகள் நிலயிறைக்கும் சில்முகங்கள்வி
தெய்வபாணங்கள் செ..த்தி முதலிய அஸ்திரங்களை அமோகமாகச் சொ
ரிந்தொவலிட்டசரங்கள்

னைப்பெய்யலினுமேலிடத்தாண்டிக்கொக்கரித்தனர். நிலகிரியையொத்த
பாரித்ததிரேகத்தைப் பெற்றமதயானைகளின் மீதிலிருந்தவீரர்கள் கொ
டியபோர்விளையாடல்களைச்செய்து வருந்தலாயிற் றதிக்கையிற்பற்றி
யிருந்தயிருப்புலக்கைகள் சங்கிலிகளைச்சுழற்றிச்சாடவும் குதிரைச்சேவ
கர்அகோர உயித்தியங்களைச்செய்து போராடவும் இவ்விதங்களாகவிவ்
வண்டத்திலும்மற்ற அண்டங்களினிடங்களிலும் சூரன் கட்டளைக்குட்
பட்டிருந்த சேனாசமுத்திரங்கள்செய் துவரும்போர்த்தொழிலின்பெரு
க்கையும் உத்தண்டங்களையும் யிப்படிக்கென் றாதிசேஷனாலும் அளவி
டப்படாது யிவைநிற்கச் சஞ்சீவிக்காற் றுமெல்லவந்து தாக்கியமாத்திர
த்தில் சின்னபின்னப்படப்பிளப்புண்டு நிலத்தில்விழுந்துகிடந்த சிங்க
முகாசூரன் அவையவங்களொன்றிப் பிராணனுண்டாய்வடவைக்கனலுந்
திடுக்கிட்டஞ்சவும் மூதண்டகோளகை வெடித்ததோவென் றையுறவும்
கொக்கரித்துக்கொண்டெழுந்து மூன்றாம்பிறையைப்போல கோறதந்
தங்கள்விளங்க ஆயிரம்சிங்கமுகங்களுமசைய விழிகளிற் றீப்பொறிகள்
சிதறநிற்கவும் ஆலகாலவிஷத்துக்கொப்பாகச்சீறி ஞராதிவீ ரபயானு
சோபனெழுந்து கொடியபாதகனாகிய நாதனேங்கேயெங்கேயென் றுப
லவீரங்களைப்பேசவும் காட்டமலையொப்ப எதிர்முகனென்னும் சூரனெ
ழுந்து சண்டையில்முயற்சிகொள்ளவும் வச்சிரவாகுவென்னுந் தீரன்கு
தித்தெழுந்துபகைவனைப்பார்க்கவும் மற்றமூவாயிரம்பிள்ளைகளும்விட
நாகங்களுக்கொப்பாகத்துள்ளிநிற்கவும்பெரியமந்திரியாகியதருமகோ
பனெழுந்து தான்பட்டதுன்பத்தையெண்ணி மனங்கொதித்திருக்கவு
ம்யிவர்களன்றியிலிருக்கின்றமந்திரிபிறதானிகள்சேனைத்தலைவர்களாகிய
யிமமுகனும்உயிர்பெற்றெழுந்தனர்யிவர்களிற்பலர் அதிகஉக்கிறமாகச்
சிவகணங்களையும் அவர்களுக்குத்தலைவராகவிருக்கின்றவீரனையும்பார்த்
துபேழ்வாய்களைத்துறந்துயிடிக்கூட்டங்களுமஞ்சஆர்ப்பரித்துபுசங்க
ளைத்தட்டி வயிரங்களைப்பேசி முன்றங்களைமடக்கிக்கொண்டுசாடிக்கொ
ன்றபகைவனைத்தேடியும் யிக்காலத்தில் நம்முடன் சண்டைதொடுக்கவரு
மவனைச்சசக்கிப்பிழிந்து உதிரத்தைக்குடித்துத் தாபத் தணிவோமென்
அசவுரியங்களைப்பேசியும் சபதங்களைநாட்டியும் வெற்றிமாலைகளைச்சூ
டியும் யிவ்வித ஆடம்பரங்களுடனும் தமதிறைவனாகிய சூரபதுமனைச்
சூழ்ந்துகொண்டு போர்த்தொழிலில்முயற்சிகொள்ளுமுன்னிலையில்மா
யைத்திறங்களிலும்மற்றவல்லபங்களிலும்சிறந்ததாய்சிவபிரான்படைத்
தளித்தெய்வீகம்பொருந்திய இந்திரஞாலத்தேரானது சஞ்சீவியிருக்
கின்றபர்வதத்தைத்தாங்கி அவுணர்பெருமான் முன்னம்வந்து மின்ன
லையொப்பநின்றது. சவுனகாதிரிஷிகளே சூரபதுமன் தன்தேரைக்கண்

டமாக்கிரத்தில் அதனிடையிலிருக்கின்றமருந்தின்மகிமையினாற் றன்சே
னைகள்தம்பியின்னைகள்முதலாகச் சிவந்தாரெழுந்தனவெனத் தெளிந்து
மனமகிழ்ந்தவனாய்த்திரேகம்பூரித்து புசங்களோங்கிவானத்தையளாவவு
ம்மயிர்சிலிர்க்கவும் விழிகளில் ஆனந்தவாரிபெருகவும் மனதைவாட்டியி
ருந்தகிலேசத்தையும்வாட்டத்தையுமொழித்து திசைகளதிரக்கோடநகை
கொண்டு தேவர்க்களைச்சிறிப்பார்த்து நல்லதுகெலிப்புடன் விழியிருக்கி
ன்றடங்களானவத்தைதச்சற்றுநேரத்திலடக்குகின்றனனெனச்சபதம்பே
சிமனவெழுச்சியுடன்தாயைப்புகழ்ந்து சந்திரோதயத்தைப்போலமு
காரவிந்தமலர்ந்தங்கயின்னமுமிராநின்றசந்தோஷப்பெருக்கனத்தை
யும் ஏககாலத்திற்பெற்றவனாய் உண்பதற்கும் உடுப்பதற்கும் வகையற்
றயிர்த்துவயற்றைறவனத்துத்தரித்த கொடியவறுமையாளனொருவனுக்கு
க்கிவபிரான் கடாக்ஷிட்சணியமுயற்சியினால் கெபேசர்திரச்சம்பத்துக்களை
வற்றையும்திரிலோக அரசுரிமையையும் ஒருமுனையிற்பெறுவனாயிலச்
காலத்தவனடையும் பேரின்பத்தினும்பதின்மடங்கு மனவெழுச்சிபெ
ற்று சிரோரத்தினங்களினாற் சோடித்திருக்கின்ற கிரீடத்தைத் தாங்கியசி
ரமவானத்தையளாவப் புயங்கள்விம்மி வாகுவலயங்கள்தெறித்துமணிக
ளிறைபடமாங்குளிர்ந்து தன்னையும்மறந்தகளிப்பைப்பெற்றனன், ரிஷி
களே அத்தருவாயில் ராசாதிராசன்கொண்ட உச்சாகத்தையிவ்வகையென்
றளத்தையாலுஞ் சொல்லிமுடிவதன்று மேற்குறித்தபடிசகு வீரசூர
பராக்கிரமசாலியாகிய ஸ்ரீராமகாராசன்சந்தோஷசாகரத்தில்முழுகிஉழை
த்துக்கொண்டிருக்கின்றதருவாயில் யிக்காரணங்களனைத்தையும் திஷ்டா
ந்திரமாகக்கண்டிருந்த தேவர்க்கள்திகைத்துமதிமயங்கிப் பிறமைகொ
ண்டு யிமையாநாட்டங்கள்கூசிச் சொருகவிடையாதுந் தோற்றுமல் யித
னைப்பேசிக்கொள்ளுவதாயினார், இதென்ன அற்புதக்காட்சியாக விருக்கி
ன்றதுவெள்ளிடையாகவிளங்கிய அண்டகோளமுற்றினும் சடுதியிற்சில
யிடமுமில்லாமல்மூடிக்கொண்டது சதுரங்கச்சேனைப் பெருக்கோதிரு
ப்பாற்கடலினுதித்த காளகூடவிஷம்பெருகியதோற்றமோ சர்வசங்கா
ரகாலத்தெழும் பெரும்பிரளயவெள்ளப்பெருக்கோ அல்லதுகனவின்வி
க்கமோயாதுந்தோற்றவில்லை யிப்படிக்கும் முடிக்கவல்லவர் யாவர்செ
ப்படிவித்தையாகவும் இந்திரசால மகேந்திரசாலநடிப்பாகவும் காணு
கின்றது யிதற்கென்செய்வோம் என்னவிளைய விருக்கின்றதோவென்றே
ங்கிகிடெனத்திரேகம்நடுக்குற்று வியர்த்துத்தளர்ச்சிகொள்ளக்கைகா
ல்களோய்ந்து சஞ்சலித்தாய் பொன்னுலகமாகிய விண்ணுடுகளின்வா
ழ்வும் சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்திற்பட்ட பதிகளினசெல்வமும்
மாதலவாசிகள்சம்பத்தும் யிவையன்றியும் எவ்வெவ்வுலகங்களின் வளங்

களும்பித்தினமுதற்சத்திராதிகள்பெற்றுசாக்ஷிதமாகஅனுபவித்திருக்க
த்தாராதத்தஞ்செய்து விட்டனமெனநினைக்கவேண்டியதல்லது வேறெ
ன்னவிருக்கின்றது யிதுபரியந்தம்நமது துர்க்கவருத்தங்களைப் போக்கிச்
சவுக்கியப்படுவோமென்னு மிச்சைகொஞ்சமிருந்தது அதையும் வனாய
றமறந்துவிடுங்காலம் நேர்ந்ததுமன்றியில் அதிக வீராவேசங்களுடன்
தோற்றியயிந்தஅவுணப்பாதகர் நம்மைப்பற்றிப்படாதபாடுகளை அனு
பவிக்கச்சித்திரவதைசெய்வதற்குமுன்னம் தப்பித்துக்கொண்டோடிப்
பிழைப்பது உத்தமமெனத்தீர்மானித்தவர்களாய்தாங்களேறிவந்தவிமா
னங்களைமறந்து துணைவர் சுற்றத்தினையிழந்து பெண்பிள்ளைகளையு
ம்நினையாமல் கரங்களிற்பற்றியிருந்தபடைகளையும் நழுகவிட்டு பின்றி
ரும்பிப்பாராமற் றனித்தனியே புறங்கால்புட்டத்திற்றுக்க அதிவேகமா
ய்மேலுலகங்களைநோக்கியோடவும் சிலதேவர்க்கள் பயமிகுதியினாற் –கி
ளி - மயில் - புறவு - அன்னம் – நாகணவாய்ப்பட்சி - குயில் - கோழி - ஆந்தை
காக்கை – கழுகு - வண்டினங்கள்முதலிய பறவைகளினுருக்கொண்டுதிசா
திசைகளிற்பறந்து பர்வதங்கள் விருட்சங்கள் வனங்கள் யித்தகையயிட
ங்களிலொளித்தனர், விண்ணவர்பட்ட வருத்தங்களையும்சஞ்சலங்களையும்
சொல்லிமுடிவதன்று யிவ்விதமாகத்தேவரினங்கள் ஒருவராவது நில்லா
மற்பலதிசையினும்மறைந்து போனதைக்கண்ட பூதத்தலைவர்கள்தியங்
கிமதிமயங்கிப் பாலசுப்பிரமணிய தேவர்உக்கிறப்பார்வையினாற் சாம்ப
லாகமங்கியசயின்னியங்களும்யிதற்குமுன்னம் ரணக்களத்திற்கண்டது
ண்டமாகவெட்டுண்டுவிழுந்துகிடந்த ரதகெசதுரகபதாதிகளும் ஏதோ
ஒருகாரணத்தினால் மின்னலைப்போல சடுதியிற்றோற்றி வடவைக்கனலி
னும்கோபாவேசங்களுடன் விறிவருகின்றனர், யிக்காரணங்களை யோசி
க்குமிடத்தில் யினிநாமிறப்பதற்குச்சந்தேகமில்லை யிதற்கென்செய்வோ
மெனச்சோரவும் புசபெலபராக்கிறமசாலியாகிய வீரவாகுதேவரும் து
ணைவரும் இலக்கரும் யித்திறங்களைக்கண்டமாத்திரத்தில்அற்புதமடை
ந்துமனம்வருந்திக்கலங்கி மானம்பாதிப்பதினால் அதிககோபமுங் கொ
ண்டவர்களாய்க் கருமானுலையைப்போலத்தீயும் புகைப்படலமும்பெ
ருகப்பெருமூச்சுகளைவிட்டுக்கொண்டியாதுந்தோற்றுமற்றிகைத்துநிற்
கவும் பிரமன் - விஷ்ணு - இந்திரன் – மனச்செருக்கற்று எமதிறைவன்பக்க
த்தில்நெருங்கினொனப்பேசவுவோமாகில்தீனராகியபூதப்படைகள்பட்
டதுக்கவருத்தங்களையும் வாட்டத்தையும் சொல்லவும்வேண்டுமே உயி
ருடனிருக்கின்றபிரேதங்களைப்போலவும் சித்திரப்பிறதமைகளை யொத்
தும்யாதொருசெயலுமற்று நிலைக்கண்பட்டு தேவமருள் கொண்டவரை
யொப்ப நின்றநின்றயிடங்களில் அசைவற்றிருந்தனர், இவ்விதங்களாக

சகலரும் பரிபவப்பட்டுச்சோருமுன்னிலையில் யிக்காரணங்களையும் ஒ
ற்பாதவினைவையும் பாலசுப்பிரமணியதேவர் திருவுளத்திற்மதித்து நல்
லகாரியம்சத்திராதியாகியசூரன் தந்திர உபாயவஞ்சகங்களும் யிவனைப்
பெற்றமாயையேபோதித்துப்போன சூட்சியும் சஞ்சீவியினது வல்லபமும்
யிவன்முயற்சியினுற்பிலமுத்தெழுந்து ஆரவாரித்திருக்கும் நாற்படைக
ளின்செருக்கும் வெகுநேத்திரேநத்திரியெனக்காங்களைத்தட்டி அனற்சுவா
லைவிசநகைத்துயின்னமும் யிவர்கள்செய்கையையறிவோமெனப்பார்த்
திருந்தனர், சவுனகாதிரிஷிகளேயிச்சரித்திரம்நிற்க சஞ்சீவியின்மகிமை
யினுல்உயிர்பெற்றுக்களித்திருந்த சிங்கமுகாசூரன் பானுகோபனுதிய
பிள்ளைகள் தருமகோபன் முதலியமந்திரி பிரதானிகள் சேனைத்தலைவர்
கள்தமகிறைவனுகிய சூரபதுமனைக்கண்டு வணங்கி மானமுங்கோபமு
ம்மனதைவாட்ட யிதனைவிண்ணப்பஞ்செய்வாராயினர், அவுணர்குலோ
த்தாரகனே அயிரத்தெட்டண்டங்களுக்கதிபனேசெயலட்சுமிவையமணந்
திருக்கின்றதீரனே யிதனைக்கேட்டருள்கசற்றுநேரம் தேவரீர் யிவ்விடத்தி
லமர்ந்து வேடிக்கைபார்த்திருந்து அடியேங்களுக்குச்செலவுகொடுப்பி
ராகில் நம்மவரனைவரையும்மானமழிந்து மதிகெட்டுச்சின்னபின்னப்ப
டக்கண்டித்துக்கொன்றபாலனைத் திசைதப்பியோடப்பறக்கடித்து நவ
வீரர்இலக்கர்முதலியசூரரைக் கண்டதுண்டப்படவெற்றிகொண்டுகளத்
தி கிடத்தி பண்டிவயற்றையுங்குறிய தாள்களையும் படைத்திருக்கின்ற
பூதவெள்ளங்களை அல்லோலகல்லோலப்பட வதைத்தடக்கிவந்து தேவரீ
ர்பாதாரவிந்தங்களிற் சேவிக்கக்கடவோம் யாமெல்லவரும் ஒருமுனையி
ற்சென்றுசெய்யும் போர்த்திறங்களைப்பார்த்து மதித்துக்கொண்டாட
ப்போதீர் யிந்தவார்த்தைதயைசெய்ய வேண்டுமென்றிருக்கின்ற விரபரா
க்கிரமசாலிகளாகிய துனைவன்பிள்ளைகளாதியர் வாக்கியங்களை அவுணர்
பெருமான் செவிகளினேற்றமனவெழுச்சிபெற்றவனுய்செயசாலிகளே
நீங்கள் குறித்தகாரியம்நன்றாக விருக்கின்றதால் அவ்வாறேநடத்தி செ
ன்மவயிரிகளாய்ப்பிடித்தலைத்திருக்கின்ற சிவகுமாரனுதியபலகவனாதி
ம்சப்படவாட்டி எனக்கு வெற்றியைத்தரக் கடவீர்களென விடைதந்த
மாத்திரத்தில் ராசராசனைப்பணிந்து பிரளயகாலத்தூழிமேகங்கள் பேரி
டிகளைப்பெருக்கியெழுமாறுபோல ஆர்ப்பரித்துதேவாஸ்திர விதங்களை
யும் கொடியதிட்சணியமுள்ளபாணவகைகளையும் சோனைப்பெய்யலினு
ம்பதின்மடங்கதிகமாகச் சுவேகங்கொண்டு செலுத்தியும் வாள்-பட்
டா-சரிகையிவற்றினுல்வெட்டியும் வேல்-சூலம்-கழுமுள்-ஈட்டிகளினு
ற்குத்தியும் தண்டாயுதம்-யிருப்புலக்கை-தோமரவகைகளினுல் மோதி
யும் வளைதடி-சக்கரமாதியபடைகளை அமோகமாகவிசியும் மாயைத்திற

ங்களினுற்போராடியும் யின்னமுஞ்சொல்லநின்ற பல கொடுமைகளைக்
காட்டி வெற்றிவேலாயுதத்தைத் தாங்கியிருக்கின்ற முருகப்பெரு
மானைவளைந்துகொண்டு ஆயிரங்கிரணங்களைவீசி யுலகைவிளக்கிவரும்
சூரியனைமூடிய யிருட்பெருக்கைப்போலவும் பனிப்படலத்தையொத்
தும்அடர்ந்து போர்த்தொழிலைச் செய்து வருந்தருவாயில் யிக்கொடு
மையினுல்பூதவெள்ளங்களனைத்தும் பலஅவதிகளைப்பட்டுச் சோரவும்
வீரவாகுதேவர்முதலிய புசபெலபராக்கிறமசாலிகள்திகைத்துயித்தகைய
சேனைப்பெருக்குடனெதிர்த்துப்போராடுவது நம்மாலாவதன்று அதிக
உத்தண்டத்துடன்வருகின்ற சிங்கமுகனெதிரில் நிற்கவும்போதுமோமா
ற்றவீராதிவீரர்களுடன்வாதாடுவது நம்மையொத்தவர்களாற்கூடாதுகூ
டாதென்று மனச்சோர்வுடன்திகைத்திருந்தனர், அத்தருவாயில் எமதி
றைவனுகிய சரவணபவன்ராட்சதச்சேனைகள் வீராவேசங்களுடன் போ
ராடுவதையும் சிங்கமுகன் பானுகோபன்முதலாகிய செயசாலிகள்கொடு
மைகளையுந்தமதுதுணைவர் படைவீரர் தியக்கத்தையும் பூதவெள்ளங்க
ளின்சோர்வையும் விஷ்ணுவாதியதேவர் மனவாட்டத்தையும் திருவுளத்
தில்மதித்து யிரக்கமும்கோபமும்மனதைவருத்த நல்லகாரியம் யிப்பா
தகர்பெருக்கை நிமைப்போதிலடக்கி நம்மவரைப் பாதுகாப்பேனெ
னத்தீர்மானித்தவுடன் சற்வசங்காரகாலத்தில் ஆயிரகோடிஅண்டவடுக்கு
களையும்அவற்றிற்பட்டபுவனங்களையும் சராசரப்பிரபஞ்சங்களனைத்தை
யும் நகையழலின்பெருக்கினுற்றகித்துச் சாம்பலாக்கித்தானேதா[illegible]ய் ஆ
னந்தநிருத்தஞ் செய்திருக்கும் பெருமையினையுடையசதாசிவமூர்த்தியி
ன்அங்கையிற்றோற்றநின்ற பாசுபதாஸ்திரத்தையெடுத்து தூபதீபநை
வேத்தியமுதலிய சோடச உபசாரங்களையும் மானசபூசையினுல் நிரப்பி
விதிப்படிக்குவழிபாடுகளைமுடித்தபின்பு தமதொப்பற்ற தநுசிற்சந்தி
த்து சிங்கமுகன்பானுகோபனுதியபிரமுகரையும் வீராதிவீரராகிய சே
னைத்தலைவர்களையும் சங்கையில்லாமற்பிரளயவெள்ளத்தினுமேலிட்டொ
லித்து வீறியிருக்கின்ற ரதகெசதுரகபதாதிவெள்ளப்பெருக்கையுமிந்
நிமிஷத்தில்தும்சம்பண்ணியழித்துத் திரும்பச்சட்வையெனவேண்டி
தோள்புரள ஆகாணுந்தபரியந்தமிழுத்துக் சரவேகமாய்ப் பிறையோகி
த்ததருவாயில் அந்தபடைகளுக்கரசானது வெளிப்பட்டவுடன் கோடி
சூரியப்பிறகாசமாய் பக்குபக்கென்றெரிந்த நாருயணுஸ்திரங்கள்பிரம
ன்படைகள் மற்றதேவர்பாணங்கள் கொடியகணைகளின்விதங்கள்உருத்
திரகோடிகள்விஷச்சுவாலைகள்பேரிடித்தொகைகள் வடவைக்கனலின்கொ
டுமைகள் காளிகாளியென்னும் பற்களையுடைய சற்பசமோகங்க
ள்சரபசார்த்தூலவினங்கள் மற்றுஞ்சொல்லநின்ற உற்பாதங்களையும்ப

டைத்து தாபாக்கினியைவீசி எவ்விடங்களினுந்தனது மயமாய்ப்பேரொ
ளியைக்காட்டிச்சீறிமேவிட்டதாய்மண்விண்சாகரப்பரப்புகள் தீவுதிபா
த்திரங்களில்நிறைந்து மூதண்டகோளகைவரையி லடர்ந்து ஆழித்தீயும்
பிரசண்டமாருதமுங்கலந்தெழுந்ததைப்போல ஆரவாரித்து வீரங்களை
யுங்கொடுமைகளைப்பேசிக்கொண்டு அதிகதீக்ஷணியமுள்ள அஸ்திரசஸ்
திரவிதங்களை ஒன்றனந்தமாகச் சோனைப்பெய்யலினுமேவிடப்பொழிந்
து அகோரயுத்தங்களைச்செய்துபின்னிடையாமல் வீராவேசங்களுட
ன்காளகூடவிஷத்தைப்போலவாதாடிநிற்கின்ற சதுரங்கச்சேனசமுத்தி
ரத்தை ஏ பெனுமுன்னம் மடக்கிக்கொண்டு அதாஅதப்படச்சாடிக்
கொன்றதாய்ச் சிங்கமுகாசுரன்சூரியகாதகனுகிய அவுணவீரரைத் தகித்
துச்சாம்பலாக்கி இவ்விதமாக ஒருவரொழியாமல்வாட்டியதுமன்றியில்
இந்திரஞாலத்தேரின்மீதில்விளங்கியிருந்த சஞ்சீவிமலையையும் பிளந்து
இவ்விதமாய்ப்பலாத்தெடுத்திருந்தவர்களில் யாவனாயும் மீதிவிடாமல்அ
டக்கியபின்பு வானவெல்லையிற்றாவி ஆகாயசெங்கையிற்படிந்து பரிசுத்
தமாய்த்திரும்பிய பாசுபதாஸ்திரமானது பாலசுப்பிரமணியதேவரிடத்
தில்ஏதாப்பிரகாரம்சேர்ந்திருந்தது, சவுனகாதிரிஷிகளே அந்த தெய்வி
கப்படையினதுமகத்துவங்களையும் வேகத்தையும் சாகசங்களையும்ஆயி
ரம்வாயைப்படைத்திருக்கின்ற ஆதிசேஷனுலும் பேசப்படாதெனின் ஒ
ருநாவைக்கொண்ட என்னுல்புகழப்போதுமோ அக்காலத்திற் சிவபிரா
ன்றருநாமத்தைப்படைத்திருக்கின்ற ஒப்பற்றபடை ஆக்கிரகித்து மேற்
குறித்தபடிக்குக்கெக்கலிகொட்டி அவுணர்பெருமான் மகிழ்ந்துநோக்க
ப்பரமசிவகுமாரனுடன் றவுத்திராகாரமாகிய போனாச்செய்து வீறிநின்
றசிங்கமுகன்-பானுகோபன்-எரிமுகன்-வச்சிரவாகு-மூவாயிரர்முதலிய
பிள்ளைகள் தருமகோபனுகிய மதிநூகிமந்திரிகள் பிரதானிகள் மன்னம
ண்டலிகர் சேனைத்தலைவர்களுடன்சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலு
ம்உலகமுடிவிற் கலந்தெழுமாறுபோல அடர்ந்து பரந்திருந்த நால்வ
கைச்சேனைப்பெருக்கும் அருமையாகத்தருவித்தமந்தரகிரியும் நாசப்
பட்டுஎங்கும்வெள்ளிடையாகச் சகலஆடம்பரங்களும் அடங்கிநிச்சந்த
டியாகரணங்களாந்தோற்றுவதைஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனு
கியசூரமகாராசன்கண்டமாத்திரத்திலென்செய்வன் திடுக்கிட்டுவாடிவலி
குன்றிமனச்செருக்கற்று மெய்மறந்துகிலேசித்தவனுய் பெருமூச்செறி
ந்துமானமுங்கோபமும்மனதைக்கொளுத்திவாட்டஎதாப்பிரகாரம்யா
தொருதுணையுமற்றவனுய்த்தனிமையில்நின்றனன், யிப்பிறகாரம்சகலவ
ளங்களையும்பறிகொடுத்துக் கொடியபாதகனென்னமிட்டிருப்பதையும்
சதுரங்கவெள்ளங்கள்முதலியவனைத்துங் கற்றன்கணமுயற்சியிலுல்லக

காலத்தில்அதப்பட்டுமங்கியதையும் வீரவாகுதேவர்-எண்மர்-இலக்கர்-
படைவீரர்-பூதவெள்ளங்கள்-மகாவிஷ்ணு,பிற்மதேவன்-இந்திராதிய
தேவர்கள்மனமும்விழிகளுங் குளிரப்பார்த்தவுடன் தாங்கள்கொண்டி
ருந்தமிகுத்தவருத்தங்களையும்என்னமாய்முடியுமோவென்னும்சந்தே
கங்களையும் போக்கினவர்களாய் இறந்துபிறந்தவர்களைப்போல மனமகி
ழ்ச்சியுடன் ஆடிப்பாடி ஐயன்குணாதிசெயங்களின்காரணங்களைப்புகழ்ந்
துகொண்டாடிநிற்கவும் அந்தரவாசிகள் ஆனந்தவாரியில்முழுகி உரோ
மங்கள்சிலிர்க்கத்திரேகம்பூரித்துகற்பகமலர்களைவாரிவாரி சிவசுப்பிரம
ணியதேவர்மீதில்விறைத்து அவுணகுலாந்தகனே வாழிவாழியெனப்போ
ற்றிச்சந்தோஷங்களைக்கொண்டாடினர், யிப்படிக்குச் சிவகணங்களாதி
யர்மனவெழுச்சிபெற்றிருக்கின்றதறுவாயில் மெய்வாய்-கண்-மூக்குச்
செவியென்னும் பஞ்சேந்திரியவிஷையங்களின்வயப்பட்டுசத்தபரிசரூ
பரசகந்தமெனச்சொல்லநின்றவிடையாதிகளி லழுந்தி வாடச்செய்ய
வல்லஅஞ்ஞானவிருளைக்கடந்துமேலாகியமோட்சசாம்பிராச்சியச்செல்
வத்தைபெறவிருந்தவர்ஆழ்வினைத்துடர்பினால் மீட்டும்பழையதெசையி
ற்றள்ளுண்டு வாடுபவனைப்போலச்சூரமகாராசனானவன் சஞ்சீவிமகிமை
யினாற்சகலரும் சீவந்தராகவெழுந்தகாலத்திற்களித்தும்மீட்டும்மாண்ட
முன்னிலையில் மனம்வருந்திவாடிநின்ற அவுணர்பெருமான் அதிதுக்க
சாகரத்தில்முழுகி நிலைபெருமல்அலைந்திருந்தவன் ஒருஎண்ணம்சடுதியி
ல்மனதிற்சேருந்தியமாத்திரத்தில் வடவாமுகாக்கினியும் ஆலகாலவிஷமு
ங்கலந்தெழுவதுக் கொப்பாக ரவுத்திராகாரமாகக்கோபித்து நல்லகாரி
யம்ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்அதிபனாய் தேவர்முதலிய சகலரும்
வணங்கிப்போற்ற ராசாதிராசனாய்வாழ்ந்திருந்த நம்மையொத்த சூரனை
த்தனியனாக்கிப் பெரும்புறக்கடலையொப்பச்சூழ்ந்திணைந்திருந்த சதுர
ங்கச்சேனைப்பெருக்கையும் துணைவன்புத்திரமித்திரர் முதலானவர்களை
யும்நிமைப்போதில் வாட்டிச் செயசாலியாக விருக்கின்ற யிந்தபாலனை
வளைந்து அதிககெலிப்புடனிருக்கும்பூதப்படைகளாதியவீரரை அதாஅ
தம்பண்ணி நம்மைப்போலவே ஓரியாக்கியபின்பு யிவனைவத்துக்குத்
தக்கபுத்தியைப் பண்ணக்கடவேனெனத் தீர்மானித்தவனாய் பூர்வத்தில்
தான்பலகாலம்வருந்திச்செய்த விரமாமகத்துக் கிரங்கிசிவபிரான் காட்
சிதத்துசகலபேறுகளையுங்கடாட்சித்ததறுவாயிற் படைத்தளித்தமகிமை
யுள்ள இந்திரஞாலத்தேரின்மீதுவிழிகளைப்பரப்பி யிதனைச்சொல்லுவதா
யினன், குதலைச்சொல்மாருதசிறுவனைச்சூழ்ந்த வயிரத்தையொப்ப வி
ளங்கும்கோறதந்தங்களைவாய்ந்து சொக்கரித்திருக்கும் பூதவெள்ளங்க
ளையும் அவர்களுக்குத்தலைவனையும் இலக்கர் எண்மனையும் தனுற்பாணி

யாசநிற்கின்றதானையும் யிந்தநிமிஷத்தில் உன்மாயைப் பெருக்கினால்
மயக்கிச்சேர்த்தவகையறவாரிக்கொண்டுபோய் அண்டவெல்லையி னுச்சி
யில்வைத்து நாம்மறுகட்டளையிடும்பரியந்தம் காத்திருக்கக்கடவையெ
னப்போதித்து விடைதந்தமாத்திரத்தில் பூமண்டலப்பரப்புமுற்றும்வி
ரிந்தகாடாந்தகாரமாகியயிருளைமூடி பகைவர் மதியைமயக்கிப் பிரேத
ங்களாகத்தள்ளி வீரவாகுதேவாதியவீரரையும் சிவகணங்களையும் தன்னி
டத்திற்சேர்த்துக்கொண்டு மின்னலைப்போலச்சரேலெனவானத்தெழுந்
து அண்டத்தினுச்சியிற்கொண்டுபோய் பாதகன்றனக்குக்கட்டளையிட்டி
ருக்கின்றபடிக்குவைத்திருந்தது, சவுனகாதிரிஷிகளே அந்ததேரின்வல்
லபத்தையும்பெருமைகளையும்மாயைத்திறங்களையும்மற்றகாரணங்களை
யும்ஒருவகையாகவும் சொல்லிமுடிவதன்றுயிவ்விதமாகநிமைப்போதில்
முடித்ததறுவாயில்கடலைப்போலடர்ந்திருந்த சேனைப் பெருக்காளது
வற்றிப் பாலசுப்பிரமணியதேவர் ஏகாங்கியாக நிற்பதை அவுணர்பெரு
மான்கண்டு மனவாட்டத்தைப்போக்கி நகைமுகனாய்த்திரேகங்குலுங்க
நகைத்துதனதுரதத்தின்வல்லபம்வெகுநேர்த்தியென்றுகொண்டாடிநிற்
பதைப்பார்த்ததேவர்க்கள்திடுக்கிட்டு மனங்கலங்கிமறுபடியும் கொடி
யதுன்பப்பெருக்கிற்பட்டுயாதுந்தோற்றாமல் வாடித்திகைத்துப் பார்த்
திருந்தனர், இந்திரன்பதைபதைத்துத்துடிதுடித்து மதிமருண்டுபட்ட
துக்கவருத்தங்களைப்பேசிமுடிவதோ யிப்படிக்குச்சகலரும் மதிமயங்
குகின்றகாரணங்களையும் சூரன் நடாத்திய மாறுபாடுகளையும் துணைவர்
பூதப்படைகளறிவையழித்து வாரிக்கொண்டுபோன இந்திரஞாலத்தேரி
ன்வல்லபத்தையும் தமக்கொப்புவமையற்று ஏகனாய் விளங்குகின்றபால
சுப்பிரமணியதேவர் தெரிந்தமாத்திரத்திற்சற்றுகோபங்கொண்டவராய்
ஒருதிவ்வியபாணத்தையெடுத்துதமதுதனுசிற்பூட்டியிந்தநிமிஷத்தில்அ
ண்டகோளகைமுகப்பிற்போய் நமதுசயின்னியங்கள் முதலானவனைவ
ருஞ்சித்துக்கொண்டுபோய்வைத்திருக்கின்ற இந்திரஞாலத் தேரைதிருப்பி
வரக்கடவவெனக்கட்டளையிட்டுமந்திரபூர்வகமாய்த்தூண்டினர், அப்
படைவெளிப்பட்டவுடன்வெற்றிவேலாயுதத்தையொப்பச்சொலித்துமி
ன்னலைப்போலத்தாவிப்பிரசண்டமாருதத்திலும்வேகங்கொண்டு பலமகி
மைகளைக்காட்டியோடிபூலோக-புவலோக-சுவலோகசனலோக-தபலோ
க-சத்தியலோக-மகாலோகமென்னும்மேலுலகங்களேழுங்கடந்தும
ற்றப்பதங்களையும்நிமைப்போதிற்றாண்டி மூதண்டகோளகைமுகட்டை
ச்சேர்ந்து மாய்கைத்திறங்களிற் சிரேஷ்டமாகவிருக்கின்ற இந்திரஞா
லத்தின்வலியையடக்கி மேகசாலங்களைப் பெருங்காற்றலைத்துப் பறக்கடி
ப்பதைப்போலத் தள்ளிவைத்து வானவெல்லையைக்கடந்து வெற்றிமாலை

புராளும்பன்னிருபுயாசலங்களைப் படைத்திருக்கின்றசரவணபவன் சன்
னிதானத்தில்இந்திரனாகியதேவர்களித்துத் துள்ளும்படிக்குச்சேர்த்துத்
தன்னிருப்பிடத்தை தக்கலந்தது. எமதிறைவன் கிருபாநோக்கம்பட்டமா
த்திரத்தில் மையலொழிந்து உணர்ச்சிபெற்றவர்களாய் வீரவாகுதேவர்
துணைவர்-இலக்கர்-படைத்தலைவர்-பூதவெள்ளங்கள் சிங்கங்களைப்போ
லத்தேனைவிட்டு நிலத்திற்பாய்ந்து தெவிட்டாதபேரின்பவாரிச் இறைவ
னைதேவதேவோத்தமனைசுயஞ்சோதிவடிவினனைமனமும்விழிகளும்திரு
த்தியடையும்படிக்குத்தெரிசித்துக்களித்தவர்களாய்த்திவ்வியசரணாரவிந்த
ங்களிற்பன்முறைபணிந்துபோற்றிபழையபடிக்குச்செயவுச்சாகங்களு
டன்சூழ்ந்திருந்தனர், அக்காலத்தில் அண்டரண்டபுவன சராசரவுருவக
மாய்அவற்றுட்படாமற் புறம்பில்நின்று சூத்திரதாரியையொப்ப நடி
ப்பித்துஅவ்வவற்றிற்குரிய போகங்களையூட்டியாட்டியிவ்விதநாடகங்க
ளைச்செய்துவரும்பெருமையினையுடையகர்த்தன்தமதெதிரில்வலியடங்கி
நிற்கின்ற அதிசுந்தரமும்மோகனவித்தைமுதலிய வல்லபங்களையும்பெ
ற்றிருக்கின்றஇந்திரஞாலத்தேனைப்பார்த்துதேவராசனாதியர்மனமகிட்சி
பெற்றுக் கொண்டாடும்படிக்குத் திருவுளம்பற்றுவதாயினர், பூர்வத்தி
ற்ஞானரியமகத்தை முடித்தநிமித்தம் தேவதேவோத்தமனாகிய சிவபிரா
ன்கிருபையுற்றுப்பலவரங்களுடன் உன்னைப்படைத்தளித்தபோது யிந்
தச்செல்வச்சம்பத்தை நூற்றெட்டுகங்கள்சலனமற் றனுபவித் திருப்பை
யெனநியமித்ததவணைகாலம்முடிவெய்தியபடியால்யித்தினம்மாளவிருக்
கின்றனன், யினி நீ அவன்கட்டளைக்குட்பட்டிருக்கவேண்டுவதில்லைஒசு
ந்தரமிகுத்தமாயவிரதமே நம்மிடத்திற்சேர்ந்திருக்கக் கடவையெனத்
திருவாய்மலர்ந்தனர், சவுனகாதிரிஷிகளே அண்டரண்டபுவனசராசரங்க
ளினும்பரிபூரணமாகநிறைவெய்தித்தமதாணையைசெலுத்திதுஷ்டநிக்கிற
கசிஷ்டபரிபாலனஞ்செய்துபாதுகாத்தாளும்குணசம்பன்னராகியகர்த்த
ன்டணித்தவாக்கியங்களைக்கேட்டமாத்திரத்தில் அவுணர்பெருமானிடத்
துக்குப்போவதற்கஞ்சி தன்வல்லபங்களனைத்தையுமொடுக்கி பயபத்தி
யுடன்பிறப்பிறப்பற்றபரமன் திருக்குமாரன் ஆக்கியாபனப்படிக்கு நி
ன்றுவிட்டது யிப்பிறகாரம்அண்டமுகட்டைச்சேர்ந்திருந்தஇந்திரஞா
லத்தேனை சிவசுப்பிறமணியக் கடவுளானவர் ஒரு திவ்விய பாணத்தைக்
கொண்டு நிமைப்போதிற்றருவித்தகாரணங்களையும் அருமையாகத்தே
டிதன்மனேபிஷ்டப்படிக்குச்செல்லவல்லரதம்தன்னிடத்துக்கு எதா
ப்பிறகாரம்வராமல்பகைவன் பட்சத்தில் நின்றுவிட்டதையும் வீராதிவீ
ரனாகிய வீரவாகுதேவரும்-எண்மர்-இலக்கர்-படைத்தலைவர்-பூதசயின்
னியங்களில்யாதொரு துன்பமுமில்லாமல்பழையபடிக்கு முருகப்பெ

குமாரர்சூழ்ந்துகொண்டு மனவெழுச்சியுடன் கெக்கலிகொட்டிசெய
வுச்சாகங்களுடன்வீற்றிருப்பதையும் திஷ்டாந்திரமாகத்தெரிந்த சூர
பதுமனுக்கு அதிககோபம்பிறவேசித்ததால் வடவைக் கனலைப்போலச்சீறி
மானமானதுமலைதைப்பிடித்துவாட்டத் தட்சிணத்திற்பருத்துநீண்டுத
ங்கக்கட்டுகள்பூண்டிருக்குதைகளினும் மணிகள்கலிக்கும் ஒப்பற்றவில்
லொன்றையெடுத்துமின்னலையொத்த நாரியைப்பிடித்து செயதடங்கார
ஓசையினால் உலகங்கள்பட்டபாட்டை யின்னவிதமெனச் சொல்லிமுடி
தோ வுடனேதகத்தாய்மாகச் சொலித்துக்கொண் டிருக்கும் அலயசயு
டைய அதிக தீட்சணியமுள்ள கடுங்கணைகளையும் விஷங்களைக் கக்கவல்ல
கொடியபாணகேடிகளையும் சென்றவிடங்களில் வெற்றியுடன் மீளுந்
திறம்பெற்றசுடுசரங்களையும் கோடாகோடிக்கணக்கில் ஒன்றின்பின்னொ
ன்றாகக்கரவேகமாய்ச்சேனைப்பெய்யலினுமேலிடத்தாண்டி எமதைப
ண்தோறங்காணமல்மறைத்து அதிசவுக்கிறத்துடன் கியாவுமெனசிங்
கநாதஞ்செய்தனன், அந்தபடைகளின் வல்லபத்திறங்களை யென்சொல்
லுவேன மண்விண்ணெவ்விடங்களினும்அடர்ந்து புகையைவீசித்தீயை
ப்பெருக்கி குமுகுமென்றும் சிடசிடென்றும் குமுறிக்கொண்டுமின்ன
ற்கொடியைப்போலத்தாவி டேரிடிகளைப்பெருக்கிமேலிட்டு ஆலகாலத்
தையொப்பவரும்உற்பாதங்களைக்கண்டவர்கள் பாசுபதமோ நாரணன்
படையோ பிரமசாபமோ அல்லதுமாயவித்தையின்வல்லபமோ இவ்வி
பரீதம்விளைவதற்குக்காரணம்யாதோவென்று சங்கையுற்று நடுநடுங்கி
வாடும்போது யிக்காரணங்களனைத்தையும்பாலசுப்பிரமணியதேவர்தெ
ரிந்தவராய் தட்சிணத்தில் தமதொப்பற்ற தனுசில் அதிகமகிமைகளைப்ப
டைத்திருக்கின்ற வெவ்வியபாணவிதங்களை அமோகமாக மாறேவிப்ப
கைவன்வருந்தச்செலுத்தியபடைகளின்பெருக்கனைத்தையும்சுழற்காற்றி
ற்பட்டசருகுகளைப்போலச்சின்னபின்னப்படப்பறக்கடித்தனர், அக்கா
லத்திற்பாதகன்காளகூடத்தைப்போலச்சிறிக்கணக்கிறந்தசுடுசரங்களைக்க
ரவேகமாகப்பிறையோகித்துச் சிவகுமாரன்தேரைநடாத்தும் வாயுதேவ
ன்சரீரத்தில்ஊசிநாட்டயிடமில்லாமற் றுளைத்துவாட்டிய தறுவாயில்உ
திரமானதுபெருக்கெடுத்தோட மிகவும்நொந்து பஞ்சேந்திரிய நிலைக
ள்பிசகிமோகந்தவர்ச்சிகொண்டு கைகால்க ளோய்ந்தமையாற் புரவிகளி
ன்வார்களையசைத்துத் தேரைச்செலுத்தநிறவகிக்கமாட்டாதவனாய்ச்சித்தி
ரப்பிறதமையைப்போலஅசைவற்றிருந்தனன் யிவ்விதமாகத்தன்சாரதி
க்குநேர்ந்தஅபாயத்தைக்கந்தன் திருவுளத்தில்மதித்துப்பரிவாய்அவனி
டத்திற்றயபாநோக்கத்தைப் பாலித்தவராய் உடனே அதிககோபங்கொ
ண்டுதட்சிணத்தில திவ்வியபாணங்களாயிரவற்றைஒப்புவமையற்ற காண்

டயத்திற்பூட்டிச்செலுத்தி கொடியமனதைப்பெற்ற சூரபதுமன்சாத்திற்றிருப்பாற்கடலைக் கடைந்தமந்தரத்தையொப்பவிளங்கியிருந்தநீண்டதனுசைத்தேவர்க்கள் துள்ளிக்கூத்தாடும்படிக்குயிருதுண்டமாகக்கண்டித்தனர்கரத்திலிருந்த பருத்தவில்தறிபட்டபோது அவுணர்பெருமானுக்கதியுக்கிரம் பிறவேசித்தகாரணத்தினால் சற்பத்தைப்போலச்சீறிக்கொடியநினைவைக்கொண்டவனாய்த் தான்செய்ததவத்துக்கிரங்கிச்சிவநாதன்கடாட்சித்திருந்தமுத்தலைச்சூலாயுதத்தையெடுத்துக்கரத்திற்கொண்டு வீரபராக்கிரமமுள்ளசிங்கவாகனத்தைப் பாலசுப்பிரமணியக்கடவுள் ஆரோகணித்திருக்கின்ற சிறந்தரதத்தினருகிற்றூண்டிவருமுன்னிலையில் அப்பாதகன்மனதினும் கடிதிப்பாய்ந்து வயிரத்தினும் வலிபெற்றுக்கூர்மையாயிராநின்றநகங்களினால்சரவணபவன்வீற்றிருக்கின்றரதத்திற்பூட்டியவேகமுள்ளகுதிரைகள்பதைபதைத்துத்திரேகமுற்றும் உதிரப்பிறவாகராபோட அறைந்தும்சாத்தனைச்சூழவிருந்த பூதாதிபர்நடுநடுங்கிவாடத்தக்கதாகக்கெற்சித்தும் பலகொடுமைகளைச்செய்தும்உலவுகின்ற தருவாயில்அதன்பிடரியில்விளங்கும்சூரன்தனதுவலக்கரத்தில்நின்றநீண்டசூலப்படையைப்பின்வாங்கி தன்வலிகொண்டு சிவகுமாரனைப்பின்னப்படுத்துவதாகக்கடாவி கோடையிடிகளுமஞ்சக் கெற்சித்தபோதுமின்னலையொப்பப் பளபளெனப்பிரகாசித்துக்கொண்டு வானவெல்லையிற்றுவிக்குபீல்குபீலெனத்தீப்பொறிகளையிறைத்துயிடிக்கூட்டங்களைப்பெருக்கிப் பற்பலதேவாஸ்திரங்களைப்படைத்துக் கலகலென்னுமாரவாரங்களுடன்வீறி பூதகணப்பெருக்கைச்சிருஷ்டித்து விஷச்சுவாலையைப் பெருக்கிக்காற்றினுங்கடுகிவரும்சூலத்தின் கொடுமையைத்தெரிந்த தேவரினங்கள் திடுக்கிட்டு மதிமருண்டு செயலற்று பலதிசையினும்மறையவும் உலகங்களில்வாசமாயிருந்தபிராணிகளனைத்தும்திகிற்கொண்டு அல்லோலகல்லோலப்படவும் சுவாலையைவீசிக்கொண்டு மேலிட்டுவரும்தெய்வீகப்படையின்மகிமைகளை எமதிறைவன்மதித்து ஆயிரகோடிசிறந்தபாணங்களைத்தேடியெடுத்து ஒருதொடையிற்பூட்டிக் கரவேகமாய்ப் பிரயோகித்தமுன்னிலையில் வடவையும்ஆலகாலமும்கலந்தெழுமாறுபோலத்தியைவீசிஉரறிக்கொண்டுவந்துநெருங்கியமாத்திரத்திற் சூலமானது அதிக்கிரமித்துஅவற்றினைவெளிகரமாகவிழுங்கிச்சூரபதுமன்கோபக்கனலினுமேலிட்டுச்சீறிச் சமீபித்துவரும்போது ஞானநாயகனாகியபரமசிவமளித்தபடையின்வீரத்தையும்வேகத்தையும்நிதானித்தவராய்த்தமதுகரத்திற்பிரகாசித்திருக்கும் வெற்றிவேலாயுதத்தின்மீது விழிகளைப்பாய்ச்சியிந்நிமிஷத்திற்போய்ப் பகைவனேவிய சூலத்தைப் பிடித்துவரக்கடவையெனத்திருவாய்மலர்ந்தமாத்திரத்திற் சரேலென்றெழுந்து கோடிசூரி

யப்பிரகாசத்தைப்பரப்பினராய் வடவைச்சுவாலையினுங்கொடுமைகொண்டு
வருகின்ற சூலத்தைக்கிட்டியமாத்திரத்திற் சொலித்துக்கொண் டிருக்கு
ம்முத்தலைகளையும் சேர்த்துப்பற்றியிழுத்துக்கொண்டுபகைவன் றியங்கி
வாடத்தக்கதாகத்தட்சிணதிக்கில்மீண்டுஆதிசேஷன் ஆயிரம்படமகுடங்க
ளினும் கவித்துப்போற்றிய தருவாயில் மகம்மேருவினது சொர்ணமய
மாகியசிகரங்கள்மூன்றினைப்பறித்துக்கருங்கடலிற்சேர்த்தவாயுதேவனைப்
போலவந்த குமாரசுவாமியார்திருக்கரத்திற் சூலப்படையைச்சேர்த்து
எதாப்பிரகாரம் தன்னிலையில்நின்றது, சவுனகாதிதவத்தரோ பலதிவ்விய
பாணங்களையும் சட்டைபண்ணுமல் மீறிவந்தசூலத்தை வெற்றி வேலைக்
கொண்டுதுருவித்து கரத்திற்கொண்ட மகிமையைக்கண்டதேவர்க்கள்கர
ங்களைசிரங்களிற்கூப்பி ஓ தேவாதிதேவா பத்தவற்சலா அடியோங்கள்
படுந்துக்கவருத்தங்களைத் திருவுளத்திற்கொண்டிரங்கியிப்பாதகனைத்து
ரிதமாகக்கொன்று தினைப்பாதுகாத்து ரட்சிக்கவேண்டுமென்று போ
ற்றுகின்றபத்தர்கள்முறைகளைத் திருச்செவிகளினேற்று யிரக்கமுற்றவ
ராய்த்தட்சிணத்தில் யிரண்டாயிரம்குடுசரங்களை தனுசிற்சந்தித்துப்போ
க்கிச்சூரபதுமனைத்தாங்கி சுந்துபோட்டு அனற்தங்களைச்செய் தலவுகி
ன்ற சிங்கவாகனத்தின்சிரத்தைப் பத்தலாகப்பிளந்தகாலத்தில் உதிரமு
ம்மூளையும்கலந்திறையவானத்தெழுந்து ஆற்றிக்கொண்டு நிலத்தில்வி
ழுந்துபதைபதைத்துப் பிராணனைப்போக்கிமாண்டது, அத்தருவாயிற்
சூரபதுமன்பூமியிற்பாய்ந்து பெருகாலமாய்த் தன்மனோபீஷ்டப்படி
க்குநடத்திவந்தவாகனம் பட்டசேட்டைப்பார்த்து மனம்வருந்தினவனாய்
த்தான்அருமையாக வைத்திருந்த சூலாயுதமானது பாலசுப்பிரமணிய
தேவர்வசப்பட்டுப்போனதையும் தனக்குவேறொருஉதவியுமில்லாமல்நி
லத்தேரில்நிற்கும்மானக்குறைச்சலையும் நினைந்து நினைந்துவருந்தி ஊழி
காலத்தெழும் வடவைக்கனலினுமேலிடக்கொதித்து யிதனையெண்ணுவ
தாயினன், சிவபிரான்கடாட்சித்திருந்த பெருமைபொருந்திய இந்திர
ஞாலத்தேரையும் வலியிற்சிறந்தசூலத்தையும் தன்வயப்படுத்திக்கொண்
டுவீரத்தன்மையைக்கொண்டிருந்தசிங்கத்தையும்வதைத்துஇந்தபாலன்
செயப்பிரதாபத்தைக் கிடைத்தவனைப்போல நினைந்து விருப்பையடை
ந்திருக்கின்றனன், யிவனுணவத்தையடக்கி அதிகசெலிப்புடன் செக்கலி
கொட்டி மதிப்பற்றிருக்கின்றபூதவெள்ளங்களையும் நவவீரர் இலக்கர்மு
தலியபடைத்தலைவர்களையும் நிமைப்போதில் மாயவுருக்கொண்டுவிழு
ங்கிகோபதாபங்களைத் தணிந்து செயப்பிரதாபத்துடன் மீளக் கடவ
னெனத்தீர்மானித்தவனாய்த் தனதாசிரியனாகிய சுக்கிரபகவான் போதித்
திருந்த மோகனமந்திரமொன்றைவிதிப்படிக்குச்சரித்து அதன்முயற்

கியினால் வலிக்கொப்பற்ற சக்கிரவாகப்புள்ளுருக்கொண்டு அலைகளைவீசி
க்கலென்றொலிக்கும் கடலினின்மேலிடமுழங்க வார்ப்பரித்து மகம்
மேருபர்வதயானது சிறகுமுளைத்தெழுமாறுபோலப் பரந்திருக்கும்றெ
க்கையைக்கொட்டிஉலவினன், அதெப்படிக்குக்காட்டியசெனில் ஊல
யொப்பத்திரண்டுகாட்டும்யாதங்களையுடைய மதயானைகளின் மத்தகங்
களைக்கொத்தி உதிரத்துடன் மூளையைவெண்ணெயை நிகர்த்து வாரியுண்
ணும்வீரபராக்கிரமமுள்ள சிங்கவாகனத்தி லாரோகணித்துச் செம்டஞ்
சுக ழம்பின்காட்சியும் பத்தர்கள் அருச்சிக்கும் திவ்வியபரிமளமிகுந்த
புஷ்பங்களின்மணமும் பெருத்திருக்கின்ற திருவடிகளையசைத்துலவும்
ரணபத்திரகாளியானவள் போர்க்களத்திற்கணக்கிறந்தவெள்ளம் சேனை
ப்பெருக்கானதுகண்டதுண்டப்பட்டு உதிரம் பெருக்கெடுத்தோடக்க
ண்டுகளித்து நிர்த்தஞ்செய்கின்றதறுவாயில் பற்பலபூதகணங்கள் பறைக
ளையறைந்துலவுமாறுபோலவிளங்கியது, யித்தகையகாத்திரதிரேகத்தை
யும் பரந்தசிறகையும் வயிரத்தைத்தொய்த்தமூக்கையும் கூரியநகபந்திகளை
யும் வேகத்தையுங்கொண்ட சக்கிரவாகமானது தனதுத்தசிறகையசைக்
குந்தோறும்பெருகியவாயுவின்மோதலினாற்பூமண்டலமுற்றும் தத்தளி
த்துப்பிளக்கத்தக்கதாகவும்வானத்திற்சஞ்சரிக்கும்முன்னிலையிற்சிறகின்ப
ரப்பினாற்சூரியன்காந்தியையடக்கி உலகங்களெங்கணுஞ்சாடாந்தகாரமா
கியயிருள்பரந்துபிராணிகள் அல்லோலகல்லோலப்பட்ட வட்டமிட்டுத்தி
ரிகின்றவன் சமுத்திரமுதலியசெல்ப்பெருக்கில் வாசஞ்செய்யும் மீனின
ங்களைப்பறவைக்கூட்டங்கள் பாய்ந்து கவ்வுமாறுபோல பூதசயின்னிய
ங்கள்மத்தியிற்றாவி கூரியநகங்களினால் அளவற்றவைகாச்சாடியும்பிளந்
தும் விழிகளைப்பெயர்த்துச்சிரங்களைக்கிள்ளியும் வயிற்றைப்பீறியும்மார்
புபத்தலாகப்பிளக்கத்தாக்கியும் திசாதிசைகளில்வீசியும் வயிரத்தையொ
த்தமூக்கினால் மண்டைகள் துறக்கக் குத்தியும் நாசிகளைக் கிள்ளியெறிந்
தும்செவிகளைத் தறித்தும் சிறகின்மோதலினாற்பலரைப் பெருங்காற்றிற்ப
ட்டதோப்புகள் சோலைகளைப்போலநிலத்திற்படியத்தள்ளியும் உருட்டி
யும்நகசெகபரியந்தம் சின்னபின்னப்படச்சாடியும் வெற்றி வேலாயுதக்
கடவுள் ஆரோகணித்திருக்கின்ற கொடி குடைமுதலிய சிங்காரங்களை
க்கொண்டிருக்கும்தேரைச்சூழவட்டணைவந்தும் புரவிகளைத் தாக்கியும்
சாரதியாக விருக்கின்ற வாயுதேவனைக் குப்புறவிழுந்து களைக்கமோதியு
ம்குத்துக்கால்கொடுங்கைகள் கலகலென்றசையும்படிகுலுக்கியுந்திகை
த்துப்பார்த்திருக்கின்றசேனைவீரரை வாரிவாரிவிழுங்கியும் அவர்கள் கர
ங்களிற்பற்றியிருந்த பருத்தவிற்களைக் கறித்தெறிந்தும ஆயுதவிதங்க
ளைமுறித்தும் அம்புறாத்தூணிரத்தை அறுத்துநிலத்திற் றள்ளியும் தன்

டாயுதம் சூலமாகியவற்றைமுறித்தும் துகள்செய்து பங்கப்படுத்தியும்
ஒன்றோடொன்றுதாக்கித்தீயெழச்சாடியும் அவர்களேறியிருக்கின்ற ரத
ங்களைப்பறக்கடித்தும் புரவிகளைக்கால்களற மொத்தியும் சாரதிகள்தலை
களைக்கிள்ளிக்கடல்களில்வீசியும் பூவட்டமெங்கணு முருளாயிறைத்தும்
தேவர்களைக்கலைக்கியும்பறக்கடித்தும் திசைக்கச்சாடியும் யிவ்விதமாகச்
சகலரும்பிரமித்துவாடத்தக்கதாகச் சூரபதுமன் சக்கிறவாகப் படிவங்
கொண்டு காற்றுடியைப்போலவானவெல்லையிற்சுழன்றுசுழன்று சாடும்
போது மெய்ப்பத்தினுற்றமது திருவடிகளுக்கன்புசெய்து துதிக்கவல்ல
பத்தர்கள்செனன மரண துக்கவருத்தங்களைப்போக்கிச் சகலசெல்வங்க
ளையுங்கடாட்சித்துக்கடையில்மோட்சசாம்பிராச்சியவாழ்வையுந்தந்தா
ளுங்கிருபைக்கடலாகிய பாலசுப்பிரமணியதேவர்பிராணிகள்படும்உபத்
திரவத்துக்கிரங்கி கோபநகைகொண்டுசரங்களைக்கொட்டி யிந்தஅவுண
ராசன்கற்றிருக்கின்றவிஞ்சை வெகுநேத்திரமச்சிறி பூமிக்கச்சாணி
யாகவிருக்கின்ற மகாமேருவைப்போலப் பருத்து நிமிர்ந்திருக்கும்த
லை வட்டாகாரமாகவளைத்து பலகோடிசுரசாங்கங்களையும் விஷங்களைக்
கக்கவல்லசிலீமுகங்களையும்பூட்டி விசாலமாகிய சிறகைவிரித்து பேரோ
சையெழக்கூந்தவிட்டு வருத்தித்திரிகின்ற அவுணராசன்மீதிற் செலுத்தி
னர், அவ்வஸ்திரம்பட்டவுடன் அனலைப்பெருக்கிப் புகையைவீசிக்குமி
திக்கொண்டு மேல்வரும்போது சிறகடிமோதலினாலும் கூரியநிகங்களி
னாலும் உறுதிபெற்றுவிளங்குமூக்கினாலும்தட்டியும் முறித்தும் துக
ள்களர்நிவீரவேகத்துடன்வானமெங்கணுமுலவியும்சத்தசாகரப்பரப்பி
ற்சுற்றியும் பெரும்புறக்கடலிடங்களிற்றாவியும் யிருட்பூமியிற் பறந்
தும் வானநாடுகளிற்சுற்றியும் நாகராசாக்கள் வாசஞ்செய்யும் பாதலவிட
ங்கடோறுஞ்சஞ்சரித்தும் மின்னலையொப்பச் சடுதிசடுதியிற் போர்க்
களத்தில்வளைந்துவளைந்து தினராகியபூதப்படைகளைச் சின்ன.பின்னப்ப
ட்டழியமோதமுன்னிலையிற் சர்வாந்தரியாமியாகவிளங்கி அண்டரண்ட
புவனசராசரங்களை நடிப்பித்தாளும்பெருமையினையுடையசிவகுமாரன்
சூரன்செய்கையை நிதானித்தவராய் சகலவளங்களையும்போக்கி பட்சியு
ருக்கொண்டுதிரிந்து போராடுகின்றவனை நம்மையொத்தவன் தேரில்நி
ன்றுவாட்டுவது நீங்கடாது மேலும் பழிக்கிடமாகுமென் றெண்ணி
தேவர்க்கன்மத்தகயில்நிற்கின்றவெள்ளையானை வாகனனாகியஇந்திரன்மீது
விழிகளைப்பரப்பியதருவாயில் கர்த்தன்தன்னிடத்திற் பரிபூரணகடாட்சத்
தினுல் திருவுளத்தெண்ணியகுறிப்பைத்தெரிந்து தட்சணத்தில் அழகியக
ண்கள்விளங்கும் பசியதோகையைவாய்ந்த பருத்தமயிலுருவைக்கொ
ண்டு மரகதமலையானதுசிறகுமுளைத்துலவுவதைப்போலப்பறந்திருக்கி

ன்ற றெக்கையைக்கொட்டி உலகுக்கச்சாணியாகநிற்கும் மேருகிரியும்
சத்தகுலாசலங்களுங்குலைகுலைந்து திசைகள்தத்தளிக்கச்சத்தசாகரங்களு
ம்அலைகளைமோதிக்கலங்கிப் பெருக்கெடுத்தோடவும் விஷப்பற்களையு
டையசர்ப்பக்கூட்டங்கள் பதைபதைத்து நாசமடையத்தக்கதாகப் பறந்
துவட்டணைதிரிந்துசரவணபவன் சந்நிதானத்தில்வந்துநின்றுவணங்கி
ப்போற்றி அண்டங்களதிராயிதனை விண்ணப்பஞ்செய்வதாயினன், தே
வாதிதேவனேகேட்டருளும் மகாவிஷ்ணுபிரமருத்திரகடவுளர் தமதுக
ட்டளைகளுக்கெதிர்பார்த்துத் தொண்டுசெய்யக் காத்திருக்கும்போது அ
டிமையினிடத்திற் பரிபூரணகடாட்சம்பாலித்துப் பணிவிடையினைத்த
ந்தருளியதாற் சகலசிறுமைகளையும்போக்கிப் பேறுதற்கரியமோட்சசா
ம்பிராச்சியப்பதவிக்குப்பாத்திரனானேன் உமதுசெந்தாமரைகளை யொ
த்ததிருவடிகளைத்தாங்கும்பேற்றைக் கிடைத்ததுமன்றியில் பாசபெந்த
ங்களுக்குக்காரணமாகிய இல்வாழ்க்கையினா லுண்டாகும் பாதகங்களை
யொழித்துபவுத்திரனாயினேன், ஓ கர்த்தனே பெருகாலமாய் தீராகிய
தேவர்க்கள்வருத்தங்களையலைத்துத் தகாதபணிவிடைகளைக்கொண்டுவரு
வதுமன்றியில் அரிபசிறைசாலையினுமடைத்து பாரவிலங்குகளைப் பூட்
டிவருத்திசகலபுவனங்களினும் கொடுங்கோலைநடாத்திவருகின்ற சூரப
துமன்வஞ்சகநினைவைக்கொண்டுபறவையினுருத்தாங்கி பறக்குமிடங்க
டோறும்தேவரீரையேந்தி பவனிவந்து கொடியபோரைச்செய்துவென்
றுசெயப்பிரதாபத்தைப்பெறும்படிக்குச்செய்யவல்லேன் ஆதலாற்சிறு
பையும்றுவிரைவில்திருத்தேரைவிட்டிறங்கிஅடியவனைவாகனமாகஆரோ
கணிக்கத்தயைசெய்யவேண்டுமென்று பலவிதங்களிற் றுதித்து வேண்டு
முன்னிலையிற்சண்முகப்பெருமாள் அவன்பத்திவிசுவாசங்களுக்கிரங்கிக்
கிருபாநோக்கம்பாலித்துத்துரிதமாய்நவரத்தினகாந்திகளைவீசிக்கொண்
டிருக்குந் திருத்தேரைவிட்டிறங்கி விரிந்தகலாபத்தைப்பரப்பி நிற்
கின்றமஞ்சைவாசனத்தின்மீதிற்றேவர்போற்றகெம்பீரமாகவீற்றிருந்து
சூரபதுமன்சக்கிறவாகப்புள்ளுருக்கொண்டு விண்ணுலகத்தி லுலவுமிட
ங்களிற்செலுத்தி யிறுதிகாலத்தில் உலகங்களையழிக்கவெழும் வடவைக்
கனலின்பெருக்கைநசிக்கமோதும் பிரசண்டமாருதத்தைப்போல அவு
ணர்பெருமானைவளைந்துகொண்டு போர்த்தொழிலைச்செய்யவெத்தனித்
தமுன்னிலையில் யிக்காரணங்களைத்தெரிந்த சூரன் றவுத்திராகாரமாகக்
கோபித்து யிந்தபாலன்குட்சிவெகுநேத்தியாக விருக்கின்றதெனச்சீறி
அலைகளைமோதும்கடலைப்போல ஆர்ப்பாட்டங்களைச்செய்துகொண்டுதாவி
ப்பசிய தோகையைவாய்ந்த இந்திரனைப்பகைத்துத் தன்கூரியநகங்க
ளினாற்றசையைப்பிடுங்கி யெறிந்தும் பிஞ்சங்களைப்பறித்து வீசியு

ம்வயிரத்தையொத்தமுழக்கினாற் சிரமெங்கணும் உதிரம்பெருக்கெடுத்தோ
டச்சொத்தியும் கிரோசமுற்றும் பிறண்டு செக்கர்வானத்தைப்போலத்
தோற்றச்சாடியும் இவ்விதமாகப் பல பின்னங்களைச்செய்து சுழற்காற்றி
னுமேலிட்டுத்திரிகின்றதனவாயில் மயிலுருப்பெற்றிருக்கின்றஇந்திரனு
ம்அக்கொடுமைகளையெவ்வளவுஞ்சட்டைபண்ணமற்பட்சியசிறகைக்கொ
ண்டு சூரன்றிகைத்துவாடும்படிக்குச்சாடியும் அவன்போகும் செதிமா
றித்திகைக்கும்படிக்கறைந்தும்பசியகழுத்தைநீட்டி நீண்டமூக்கினால்மூ
ளைவெளிப்படும்படிக்குப் பாதகன்சிரத்திற் சொத்தியும் வலிய சிறகுக
ளைவாரிவாரித்திசைகளில்வீசியும் வளைந்து கூர்மையாயிருக்கின்ற நகங்க
ளினாலறைந்து உடலமுற்றும புண்படவாட்டியும் பிறமிக்கும்படிக்கு
உருட்டியும் இவ்விதமாகத்தேவராசன்மீறிவரும்போது சூரன் அதிகோ
பங்கொண்டு நமக்கஞ்சிஓடி திருடனைப்போலப்பதுங்கித்திரிந்தயிவன்
கெர்வத்தைச்சற்றுநேரத்திலடக்கவேண்டுமென்றுருத்து உக்கிரசாரு
யிடமயில்வாகனத்தைவிடாமற் சுழன்றுசுழன்று ஆகாசத்திற் பொலிவாக
த்தலமுழக்கிருக்கும பசிய பீலிகளைப்பறித்துப்பிடுங்கியும் சலதசதையாகப்
பேத்தெறிந்தும தலையைப்பிளந்து விழிகளைப்பின்னப்படுத்தியும்கால்க
ளையொத்தியும் சிறகடிகாற்றினாற்பின்னிடையும்படிக்குமோதியும்பின்ன
முஞ்சொல்லப்படாத கொடுமைகளைச் செய்துகொண்டு சூறவளிக்கா
ற்றினுங்கடுகி அனர்த்தங்களைச்செய்துவரும் உத்தண்டங்களை எமதைய
ன்றெரிந்து தன்வாகனத்துக்குநேர்ந்த துன்பகத்துக்கிரங்கி ஆலகாலம்
பெருகுமாறுதீயெழநகைத்து யிந்தபாதகன்வலியைநிமைப்போதில்அ
டக்குவனெனச்சிறித் தமதுகரத்திற்பினாகத்தைப்போலவிளங்கும்பருத்
தவில்லைவளைத்து நாரியைப்பிறாகிவயிரவூசிகளையொத்தபாண சோடிகளை
அபரிமிதமாகச் செலுத்தித் தலையைப்புண்படுத்தியும் விழிகளைமயக்கியு
ம்சிறகுகளைச் சின்னபின்னப்படத்தறித்தெறிந்துதிரோசதில்ஆசிநாட்ட
யிடமில்லாமற்றுளைத்தும் சக்கைசக்கையாகப் பேத்தெறிந்தும் உதிரத்
தைப்பெருக்கியும் சிறகுகளுக்குமாருகசாங்களைப்பூட்டியும் கால்களை
முறித்துரேகையையொடித்தும்இவ்விதமாகவிஷத்தையொத்த கணை
களைப்பெருக்கிச் சாடும்போது சக்கிறவாகப்புள்ளிருப்பெற்றனர்த்தங்
களைச்செய்துலவியசூரன் பதைபதைத்து நடுநடுங்கி மிகவும வருந்திய
போதினும் வீராதிவீரனுதலாற் சற்றுமிளையாமல் விடநாகத்தைப்போ
லச்சீறி வட்டமிட்டுத்தோறும் விழிகளிற்குபீல் குபீலெனப் பெருத்துதி
ரும்தீப்பொறிகளைலையாற்றி வானநடுகளைக்கொளுத்தியும் திசாதிசை
களைச்சுட்டுக் கரியாக்கியும் புவனங்களைத்தகித்தும் பூமண்டல மெங்க
ணும்நெருப்புமழையைப்போலப்பாத்து மன்னுயிர்களை அல்லோலகல்

வோலப்படவருத்தியும்இத்தகைய அனாற்றங்களைச்செய்துக்கொண்டுகாற்
றுடியைப்போல நிலைபெருமற் றிருந்துதிரிந்து வாட்டும்போது எம
தையனும் தேவராசனுருவமாகிய மஞ்ஞைவாகனத்தை வாயுவேகத்தினு
ங்கடுகிநடாத்தி அவ்வவ்விடங்களிற் றொடர்ந்துதொடர்ந்துஅரத்திருல்றுவ
ப்பட்டு விஷத்தொர்வையைவிட்டுக் கூர்மையாகவிளங்கும் அலகையுடைய
குடுசரங்களைச்சோனைப்பெய்யலினுமேலிடச்சொரிந்துசொரிந்ததேவ
ர்க்கள் துதித்துவாழ்த்த அகோரஉயித்தியங்களைச்செய்து திகைக்கும்படிக்
குச்சாடித்திரிகின்றதறுவாயில்அவுணர்குலதிலகனுகியராசாதிராசன்தான்
கொண்ட கோலம்தோற்றுமற் சரங்களழுந்தி வுதிரமானதுமிகுத்துப்
பாய்வதினுல் வலிகுறைந்து திரோகம்நடுங்கவருந்தியபோதினும் மானமு
ங்கோபமும் மனதைப்பிடித்தலைக்கக் காளகூடத்தைப்போலச்சீறிவெற்
றிவேலாயுதப்பெருமாள் திருக்கரத்தில்விளங்கும் நெடியவில்லை நொடி
ப்போதிற் கடித்தொடிக்கநினைந்து கூரியஅலகைப்பெற்ற வாயைத்துற
ந்துகொண்டு அண்டங்களதிரச் சிறகைக்கொட்டி அதிவேகமாய்மேலிட்
டுவருகின்ற பாதகன்றீர்மானத்தைச் சிவகுமாரன்றெரிந்து சமீபித்தமா
த்திரத்திற் செந்தாமரைக் கமலத்தைப்பழிக்கும்அழகிய திருக்கரங்களி
லொன்றில் தசத்தகாயமாக விளங்கும் வீரவாளாயுதத்தினை மின்னலைப்
போலஒருவிசை விதிர்த்தோங்கி பகைவன் சொண்டிருக்கும் பறவையு
ருவாலதுயிருகூருய்விழத்தக்கதாகவீசினர், சவுனகாதிரிஷிகளே அழிவ
ற்றவயிரத்திரோகம்பிளக்கப்பட்டசெயத்தைக்கண்ட விஷ்ணு பிரமனுதிய
தேவர்க்கள்களிமிகுகியினுற் றிரோகபரவசத்தராய் விழிகளில் ஆனந்தநீர்
பெருகவும்மயிர்ச்செறிவெழவும்துள்ளித்துள்ளிக்கூத்தாடிப்பாலசுப்பிர
மணியதேவர்வீரத்தன்மையைக்கொண்டாடிப்பரிமளமிகுத்தகற்பகமல
ர்களைச்சொரிந்துசெயம்செயமெனவாழ்த்தினர், அக்காலத்தில்அவர்கள்அ
டைத்தமகிட்சியின்பெருக்கை இவ்விதமென்றுயாவராலுஞ் சொல்லிமு
டிவதன்று இவ்விதமாகத்தேவர்க்கள் களியாடலைச்செய்து விறியிருப்ப
தைச்சூரன்றெரிந்தமாத்திரத்தில் நல்லகாரியப் இவர்களாணவத்தைநிமை
ப்போதில்அழித்தபின்பு பாலனையும் வாட்டவல்லேனெனத் துணிவுகொ
ண்டவனாய் பட்சிஉருவைமாற்றித் தட்சிணத்தில் பூமண்டல மெங்கும்
பரந்துவானவளாவி உயர்ந்துகாட்டும் மணற்றிட்டை வடிவைக்காட்டி
தேவரினங்கள்திடுக்கிட்டு நடுநடுங்கும்படிக்குத் தாளியைப் நெருக்கிச்
சத்தசாகரங்களையுந்துத்து வானவழியையடைத்துச் சூரியன்கெதியைமா
ற்றி வாயுவின்பரிசந்தோற்றுமல் அம்மண்டலத்தைநிறைத்து திசைகளை
மூடி திக்கெசங்கள்மதத்துளையடைபட்டு வெறியடங்கிச்சோரவும்பண்
ணுலகவாசிகள் யிருளென்னபுதுமையாக விருக்கின்றதென்று திகைத்து

வாடவும் இப்படிச்சூ மண்விண்ணெங்கனும் அடர்ந்துநிற்கின்ற பாதகன்மாயவஞ்சகங்களைச் சிவகுமாரன் மதித்து இஃதுசூரனால்விளைந்ததெனத்திர்மானித்தவராய் அதிகோபங்கொண்டு தமதுதிருக்கரத்திற்பற்றியிருக்கின்ற வில்லையிறுக்கித் தெய்வீகம்பொருந்திய எழுபாணங்களைச் சந்தித்து அவற்றிற்குரிய மந்திரங்களையுச்சரித்து இதனைக்கட்டளையிடுவதாயினர், ஓ படைகளே சாங்காலம் நேர்ந்தகாரணத்தினாற் றிருவிளக்கணையும்போது மிகுத்தபிரகாசத்தைக் காட்டுமாறுபோலப்பாதகன் அதிசவல்லமையைப்பெற்றவனாய் பூமண்டலம் வானமுற்றும் நிறைந்தமனற்றிட்டையுருக்கொண்டு நிற்மிகும்படிக்கு நமதுமுன்னம் காட்டுகின்றனனாதலால் நீங்கள் சத்தசாகரப்படிவத்தைத்தாங்கிப்பெருகி அலைகளின்வலியினால் நிமைப்போதி லதனைக்கலைத்து உருத்தோற்றமழித்துத்திரும்பக்கடவீர்களெனப் போதித்து எத்தகையருக்குந் தமதுபெருமைகளைக் கணித்தறியவொண்ணாத மூலகாரணக் கடவுளாகிய சரவணபவன் தூண்டியபோது அச்சிறந்தபாணங்கள் வெளிப்பட்டவுடன் பிரளயவெள்ளத்தினும் பதின்மடங் கதிகரித்துப்பாய்ந்து வானத்தையளாவத் திரைகளைமோதி அண்டங்களதிரமுழங்கிவேகங்கொண்டுபாய்ந்துமண்விண்ணெங்குமூடநின்ற மண்மோட்டைகெல்லிக்கரைத்ததப்படுத்தி அதன்சுவடுகாணமல் மாற்றியவுடன் சாகரவுருவைமறைந்துபழையகோலங்கொண்டுதிரும்பிசெருக்களத்திற்றிருவிளையாடல்களைநடாத்திநிற்கின்றஎமதிறைவனைச்சேர்ந்துதமதிடத்தில்நின்றது. அத்தருவாயிற்கொடியமனதைப்பெற்ற சூரன் வடவையைப்போலப் பொங்கித் தட்சிணத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் பகைத்து பூமியையழிக்கநினைந்தெழுமாறுபோலப் பெருவெள்ளத் தோற்றங்கொண்டுமேருகிரிஉச்சிவரையிற் றிரைகளைவீசிப்பாய்ந்து சமஸ்தமும் திப்பிரமைகொண்டுவாடியேங்கப் பேரொலியைச்செய்து சிவகுமாரன் விழிகள்காணப்பெருகிநிற்பதைக் கந்தன்பார்த்து பாதகன்மாயப்பெருக்குவெகுநேத்திரேத்தியெனத் திருநகைகொண்டு டளபளத்துக் கூரிய அலகைப்பெற்றதிவ்வியபாணங்கள் நூற்றையெடுத்து தனுசிற்பூட்டி மந்திரத்தையுச்சரித்து ஓ படைகளே நீங்கள் ஆழித்தீயின்தோற்றமாகப் பாந்து பாதகனாலுண்டாய் உலகங்களைவருத்தவரும் செலதின்வீறுப்பையடக்கிச்சிறுதுளியுமில்லாமற்பருகியழித்துத்திரும்பக்கடவீர்களெனத்தூண்டியமாத்திரத்திற் சிவகுமாரன் திருவுளப்படிக் கவ்வாளிகள் வடவைக்கனலிருக்கனலைத்தாங்கிச் சிடசிடென்றும் படபடென்றும் மிகுத்தஓசையெழமண்டியெரிந்து பாய்ந்து சூரன்கொண்டிருக்கின்ற செலப்பரப்பனைத்தையும் நிமைப்போதிற் சுண்டித்துமீண்டது இதனைப்பாதகன்தெ

ரிந்தமாத்திரத்திற் கோபசகிதனாய் ஊழித்தீயினுருக்கொண்டு பூமி
முதல்அண்டகோளகைபரியந்தம் கொழுந்துவிட்டெரியச் சுவாலையைவி
சிச்சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும்கொளுத்தியும்சுட்டும் சாம்பலா
க்கியும் கரித்தும் எரித்தும் இப்பாடுகளைப்படுத்தும்போது பாலசுப்பி
ரமணியதேவர் சூரன்வஞ்சகம் நன்றாகவிருக்கின்றதென்றுருத்து அதிக
மகிமைகளைப்பெற்றிருக்கும் தீட்சணியமுள்ளசரங்களாயிரவற்றைதனு
சிற்றொடுத்து நீங்கள் பிரசண்டமாருதப்படிவத்தைத்தாங்கி வேகமா
ய்ப்பாய்ந்துகனற்பெருக்கனைத்தையும்பிந்தநிமிஷத்தில்வாட்டிவருவீரெ
னப்போக்கியகாலத்தில் வேகங்கொண்டு கடையுகக்காற்றினுமேலிட்டு
அண்டகடாகமதிர்ந்து குலகிரிகளுருண்டுமங்கவும் மற்றபுவனகோடிக
ள் அல்லோலகல்லோலப்பட்டுத் தியங்கும்படிக்கு ஆர்ப்பரித்துத் தாவி
விண்மண்திசாதிசைகள் முதலியவிடங்களில்நிறைந்து சுட்டுக்கொளுத்
திவந்ததீயின்காரணமெவ்வளவுங்காணாமல் நிமைப்போதில் நாசஞ்செ
ய்துபழையபடிக்கு உலகங்கள்களித்திருக்க நிறுத்தி ஒன்றாய்ப்பலவாய்
ப்பெருவெளியாய் ரூபநாமக்கிறிகைகளற்ற பரவஸ்துவாக விளங்கும்
பெருமையினைக்கிடைத்திருக்கும் சண்முகப்பெருமாள் சன்னிதானத்
திற்றிரும்பியிருந்தது இவ்விதங்களாகத் தான்கொள்ளும்படிவங்களனை
த்தையும் வீறவொட்டாமலடக்கிவருவதைநினைந்துநினைந்துமானமும்
வயிரமும்மனதைச்சுட்டலைக்க மண்டியெரிந்துறவுத்திராகாரமாகக்கொ
தித்துத் தீயும் புகைப்படலமும் வீசத்தக்கதாகப் பெருமூச்செறிந்து ந
ல்லகாரியம் இச்சிறுவன்சாமாத்தியங்களையறிகின்றனனென்றுருத்துஊ
ழிகாலத்தெழுந்து சராசரப்பிரபஞ்சங்களைவாட்டவல்லபிரசண்டமாரு
தப்படிவத்தைத்தாங்கி ஓவென்னும்மிரைச்சலைக்காட்டிவீறிமேலிட்டு அ
ண்டபுவனங்களினடுக்குகள்குலைந்துதத்தளிக்கமோதியும் திசைத்துநிற்கி
ன்றபூதவெள்ளங்கள் குலைகுலைந்து பதைபதைத்துக் கைகால்களொடிந்
தலையத்தக்கதாகமாறியும் பேரொலியைச்செய்து திசைகளனைத்தும் செ
விடுபடக்கலக்கியும் குலகிரிகள்சிறுதேர்களைப்போலுருளத்தள்ளியுங்கட
ல்களைக்கலக்கியும் தேவர்கள்சின்னபின்னப்பட்டிறையப்பார்த்தும் இவ்
விதஉற்பாதங்களைக்காட்டிப் பாதகன்செய்து வருகின்ற அனற்தங்களை
லோகநாயகன்கண்டுகோபநகைகொண்டு மன்னுயிர்படும் துக்கவருத்த
ங்களையொழிப்பதாகத் திருவுளத்தில்மதித்தவராய்த் தட்சிணத்திற் குமா
ரமாகிய பதினாயிரம்திவ்வியபாணங்களை ஆய்ந்தெடுத்துதமதொப்பற்ற
தனுசிற்பூட்டி அவற்றிற்குரியமந்திரங்களைப்பேசி யிதனைக்கட்டளையிடு
வதாயினர், ஓபடைகளே நீங்கள்விசாலமாகிய படங்களைவாய்ந்த பல்லா
யிரகோடி நாகவினங்களினுருவங்களைக்கொண்டு தாவிப் பாதகன்மா

பவல்லபங்களனைத்தையும் நிமைப்போதிலழித்து மீளக் கடவிர்களென்
றேவியமாத்திரத்தில் அவைகள்விதிவாளத்தெழுந்து பற்பல சிரங்களைக்
கொண்டிருக்கும் படங்களைவிரித்துவிஷச்சுவாலை பெருக புச்புச்செனச்
சீறிமேலிட்டு எங்கனும்பரந்து எமனுக்குமொரு யெமனைப்போலச்ச
கலபிராணிகளையும் அலைத்துத்திரிகின்ற சூரபதுமன் கொண்டுதிரிகின்ற
வாயுவின்பெருக்கத்தையுண்டு பரிசமறச்செய்ததாய்வெற்றியுடன் பழை
யபடிக்குவேலாயுதமூர்த்தியினது சன்னிதானத்தைச்சேர்ந்திருந்தது, கே
ட்டீர்களோசவுனகாதிரிஷிகளே செயசாலியாகிய அந்தசூரன் முடித்துல
வியமாயவித்தைகளின் பெருக்கத்தையும் கொடுமைகளையும் யின்னவித
மென்றுவிரித்துச்சொல்லவும் போதுமோ அம்மம்ம அவன்சாமார்த்திய
ங்களுக்கு யிவ்வுலகங்களிலொருவனையும் ஒப்புச்சொல்லப்படாது யிவ்
விதமாகபற்பலஉருவகங்களைத்தாங்கி நான்குநிலவனாயில் ஊணுறக்கம
ற்று யிரவுபகலாகச்சொல்லப்படாத கொடுமைகளுடம் அனர்த்தங்களையு
ஞ்செய்துகொண்டு சராசரப்பிரபஞ்சங்கள் தத்தளிக்கத்தக்கதாக வருத்
திக்கினாகியபூதப்பெருக்கை அல்லோலகல்லோலப்படச்சிதறடித்தும்
படைத்தலைவராதியர்கலங்கி எங்கச்சாடியும் விஷ்ணுபிரமன் முதலாயின
ரும்மதிமருண்டுதிகைக்கத்தக்கதாக அகோரஉபித்தியங்களைச்செய்துசெ
ய்துஆயிரத்தெட்டண்டங்களிலும் உலவியுலவி பலமாயைகளைக் காட்
டிவருபவன் நூதனமாகியகோறரூபங்களைக்கொண்டு சிவகுமாரனையலை
த்துவெல்லக்கருதி தன்குலகுருவாகிய சுக்கிராசிரியன் முன்னம் போதி
த்திருந்தசம்மோகனசித்தியென்னும் சிறந்தமந்திரத்தை விதிப்படிக்கு
ச்சரித்து அதன்முயற்சியினாற்சிருஷ்டி திதிசங்காரமென்னும் முத்தொ
ழிலைநடாத்திவரும்பிரமனாகவும் விஷ்ணுவாகவும்உருத்திர மூர்த்தியாகவு
ம்ஒருபாரிசத்திற்றோற்றப்பட்டு தண்டாயுதத்தைவீசியும் சக்கரத்தைகி
றுகிறெனச்சுழற்றிப்போக்கியும் பாசுபதாஸ்திரத்தைச்செலுத்தியும் மற்
றமிராநின்றதீட்சணியமாகிய அஸ்திரசஸ்திரவிதங்களைச் சோனைப்பெய்
யலினுமேலிடச் சொரிந்து அண்டங்களதிர வாரத்தும் தேவேந்திரனை
யொப்பவிளங்கி அயிராபதத்தின்பிடரியில்வீற்றிருந்து வச்சிராயுதமா
தியபடைகளைவீசிஒருபுறத்திற்கொக்கரித்தும் முப்பத்துமுக்கோடிதே
வர்களைப்போலவிமானங்களிற்காட்டிப் பாலசுப்பிரமணியக் கடவுளை
த்தியெழப்பாத்து அவுணர்நமதுதாயாதிகளாதலால் எங்களிற் சண்டை
கொடுத்து வாதாடியபோதினும்பிறத்தியாருக் கிடங்கொடுப்பமோவரு
த்தவும்பார்ப்பமோ உனக்கிவ்விடத்தென்னகாரியம்ஓடினாலுயிர்பெற்று
ப்பிழைப்பையெனப்பலவசைமொழிகளைப்பேசிசுடுசரங்களாதியபடை
களைச் சோனைமாரியைப்போலச் சொரிந்தார்த்தும் மற்றொருபுறத்தில்

இராக்கதர்உருவைப்பெற்றுபிரளயவெள்ளத்தைப்போலவளைந்துகொண்
டுநம்மவனை அதா அதப்படுத்தியஉன்னைச்சுலபமாகவிடமாட்டோம்பால
னாயிருந்தபோதினும் விதங்கோம்எத்தலங்களிலோடியொளிப்பினுந்
தொடர்ந்துவாட்டுவோம்சிறைசாலையிலடைத்துவருத்துவோமெனவயிரங்
களைப்பேசிசத்தி-சூலம்-பிண்டிபாலம்-கப்பணம்-சணிச்சி-சக்கரம்-த
ண்டாயுதம்-சூலம்-குந்தம்-வளைதடி-திவ்வியபாணவிதங்களை அமோக
மாகச்செலுத்திப்போராடியும் ஒருபாரிசத்திற்பலகோடி பூதங்களாகவ
ந்துபருத்தபற்வதங்களைவிசிக்கெற்சித்தும்மற்றொருபுறத்தில் எமனைப்
போலநின்று ஆவாவென வாயைத்திறந்து மேலிட்டும் ஒரு பாரிசத்திற்
பேய்க்கூட்டங்களாகநின்றுவிழிகளானவை அனலையொப்பக்காந்திவாய்
களிற்றீப்பொறியையிறைத்துச்சிறிவந்தும்ஒருபுறத்திற்புகைப்படலமே
விடப்பிரளயத்திக்கோலங்கொண்டு அதிகஓசையெழமண்டியெரித்துபூத
ரைவாட்டியும் ஒருபுறத்திற்பிறசண்டமாருதமாகஓவென்னும்பினாச்சலை
க்காட்டிச்சகலரும்திடுக்கிட்டுவாடமோதியும்சற்வசங்காரகாலத்திற்சராச
ரப்பிறபஞ்சங்களையழிக்கவெழும்பெருவெள்ளத்தைப்போலத்தாவி அ
லைகளைமோதி பூதப்படைகளைவாரியலைத்தும்ஒருபுறத்தில்ஆலகால விஷத்
தையொப்பக்கனன்றுஎதிர்ப்பட்ட வனைத்தையுங்கொளுத்தித்திரிந்தும்
ஒருபாரிசத்தில்வடவைக்கனலைப்போலப்பூதரைச்சுற்றித்தகித்துவீறியும்
ஒருபுறத்தில் காளமாநாகங்களினுருக்கொண்டு விஷச்சுவாலைகளைக் கக்கி
மேலிட்டுக்கடிந்துவருத்தியும் மற்றொருதிசையில் மேகசாலங்களாய்மி
ன்னல்பிடிகளைப்பெருக்கி அக்கினிமழை கல்மழைகளைப் பொழிந்து
சாடியும் ஒருபுறத்தில்சாடாந்தகாரமாகிய இருள்வடிவுகொண்டுபூதராதி
யரைத்திகைக்கும்படிக்குமூடியும் மற்றொருபாரிசத்தில் இடியேற்றை
ப்போல அண்டங்களதிரக்குமுறிக்கலக்கியும் ஒருபுறத்தில்வரைகளாய்வி
ழுந்துகொன்றும் ஒருபக்கத்தில் தன்னுருக்கொண்டுருத்து கொடியதீ
ட்சணியமுள்ள பாணவிதங்களை படைவகைகளை ஒன்றனந்தமாகச்செலு
த்தியும்மற்றொருதிக்கில் துவாதசாதித்தர்படிவங்கொண்டு அதிகவெப்
பமெழக்காய்ந்துவதைத்தும் ஒருபாரிசத்திற்சதுறங்கச்சேனைகளினுருக்
கொண்டெதுத்துநம்மவனைக்கொன்றபழியைவாங்குவோம் குத்துவோ
ம்வெட்டுவோம் கொல்லுவோம் உதிரத்தைக் குடிப்போமென்று பல
கொடுமைகளைப்பேசித்திரிந்தும் ஒருதிக்கில் அஷ்டகெசங்களாய்மதங்
களைப்பெருக்கிவீறிட்டு துதிக்கைகளில் யிருப்புலக்கைகளைக்கொண்டு சு
ழற்றிச்சாடியும் ஒருபாரிசத்திற்சிங்காசனைப்போலக் கெற்சித்தலைத்து
ம்ஒருபுறத்திற் சக்கிறவாகப்புள்ளினுருப்பெற்று பெருங்காற்றெழசி
றகைவீசிப் பூதரைச்சருகைப்போலப் பறக்கடித்தும் ஒருபாரிசத்தில் பரு

னைமுகத்தைப்படைத்ததுணைவனாகிய தாருகாசுரனைப்போல் வடிவுகொ
ண்டு அதிகஉக்கிரத்துடன் பாலனெங்கேஎங்கேயெனக்கொதித்து கொ
டியபாணசமோகங்களையுங்கடியபடைவகைகளையும்காவேசமாகத்தூண்
டிஅகோரஉயித்தியங்களைச்செய்தும் மிருகராசனையொத்தசிரசமோகங்
களாயிரவற்றையுடைய சிங்கமுகாசுரனைப்போல மற்றொருபுறத்திற்கா
ணப்பட்டு விழிகளிற்றீப்பொறிகள்சிதறப் பகுவாய்களைத்துறந்துபூதப்
படைகளைவாரிவாரிவாயிற்போட்டுவிழுங்கியும் நெடியவிற்களையிருக்கி
கடியசரவருஷங்களைத்தூவிக் கொடியபோராமுடித்தும் ஆலவிழுதுக்கி
ணையாகப்பரந்திருக்கும் நீண்டவிரண்டாயிரங்கரங்களா வலைகளைப்போ
லவளைத்துப் பகைவரைச்சேர்த்துமோதியும் வானத்தெறிந்தும் சின்னபி
ன்னப்படச்சாடித்திரிந்தும் மற்றையபுறங்களில் தன்பிள்ளைகளாகியபா
னுகோபனைப்போலக்காட்டித் தூதனைத்தேடித்திரிந்தும் சிவகணங்களை
யும்படைவீரரையும் சின்னபின்னப்படப் பொருதும் எரிமுகனுருக்
கொண்டுவடவைக்கனலினுமேலிட்ட உக்கிரத்துடன் அனர்த்தங்களைச்செ
ய்து தீனரைச்சிதைத்தும் இரணியன் வச்சிரவாகு மற்ற மூவாயிரர்தோற்
றமாகத்தோன்றிபலதிசையினுஞ்சூழ்ந்து சொல்லப்படாதசமர்த்தொழி
லைச்செய்து சிவகுமாரன்சேனைகளை அல்லோலகல்லோலப்பட அதாஅத
ம்பண்ணிக் காட்டாக்கினிக் கொப்பாகத்திரிந்தும் தன்மனதுக்கினியபி
றதமமந்திரி தருமகோபனையொப்ப ஒருபக்கத்தில் வாதாடியுலவியும்தி
சாதிசைகள்முற்றினும் செயசாலிகளாகவிருந்தபடைத்தலைவர்கள்சோல
மாகநின்று நீண்டதனுசைக்கோலிச் சரமாரியையிறைத்தும் பருத்ததண்
டாயுதம்-பிண்டிபாலம்-முசலம்-கப்பணம்-தோமரம்-சக்கரம்-சூல
ம்-வளைதடி-ஈட்டி-யித்தகையபடைகளை அமோகமாகவீசியும் மின்ன
லையொத்த வாளாயுதங்களையும் பட்டாக்களையும்சுழற்றிப் பகைவரைக்க
ண்டதுண்டமாகவெட்டியும் சிதைத்தும் பலபின்னங்கள்படச்சாடியும்
கோபமாருமற் சூருவளிக்காற்றைப்போலத்திரிந்தும், சவுனகாதிரிஷிக
ளேமேற்குறித்தபடிக்குப் பற்பலதோற்றங்களாகக் காட்டிச் சூரபதும
ன்எங்குந்தானாய் சிவசுப்பிறமணியதேவரை வளைந்து நெடுநேரம் போ
ராடியும் பூதரையும்படைத்தலைவரையும் திகைக்கும்படிக்கு வாட்டியும்
உக்கிருகாரனாய்த்தன்னாற்கூடிய வஞ்சகங்களையும் மாயைப்பெருக்கையு
ம்காட்டிப்போராடி வருகின்றதருவாயில் இவ்வுற்பாதங்களைக் கண்ட
இந்திரனாதியதேவர்க்கள் மனநொந்து மயங்கித் திகைத்துத் திரோகமுற்
றும்வியர்க்கவாடிச்சோர்ந்து யினிப்பிழைக்குமெதுவையைக்காணோமெ
னப்புலம்பி ஊழிகாலத்திற்பிராணிகளனைத்தும் செலப்பெருக்கி லாழ்ந்
துதத்தளித்துவருந்துமாறுபோலப் படாதபாடுகளைப்பட்டு நிற்கவும்ஒ

ட்வுங்காலெழாமல் தளர்ச்சிகொண்டனர், அவர்கள் பட்டவருத்தங்களை
யாவராலுஞ்சொல்லிமுடிவதன்று யிவ்விதங்களாகச்சூரபதுமன்மாயமந்
திரத்தின் முயற்சியினாற்செய்துவருங்கொடுமைகளுக்கஞ்சி தேவர்க்கள்
படும்பின்னல்களையுமபூதப்படைகள்துணைவராகிய வீரர்கள்தியக்கத்தை
யும்எமதுகந்தன்திருவுளத்தில் மதித்திரங்கினவராய்த்தமது திருக்கரத்தி
ற்கொண்டிருக்கும் பினாகத்தையொத்த தனுசையிறுக்கி துரிதமாய்அதிக
தீட்சணியமுள்ள ஆயிரம்திவ்வியபாணங்களை யெடுத்துச்சந்தித்துவேத
த்தின்மூலத்தை யறியாதபிரமனைத் தளைசெய்து தேவர்க்கள் பெந்தபாச
ங்களை நீக்கியாள்வதற்குக் குருமுகூர்த்தமா யெழுந்தருளிய பாலசுப்பிர
மணியதேவர் இதனைக் கட்டளையிடுவதாயினர், சத்திராதிகளைத்தும்சப்ப
டுத்தவல்ல கணைகளிற்சிறந்தபடைகளே நீவீரதுரிதமாகப்போய்க்கொடி
யபாதகனாகிய சூரபதுமன் தன் மந்திரவல்லபத்தினாற் பலவாகத்தோற்
றிமுடித்துவருகின்ற கொடுமைகளை நிமைப்போதிலடக்கிமாயையப்பெ
ருக்கைவாட்டித்திரும்பக்கடவீர்களென்ப் யோதித்து மந்திரபூர்வசமா
கச்செலுத்தியதருவாயிற் சவுனகாதிரிஷிசளே அவற்றின் மகத்துவங்களை
யும்வீரத்தையும் யென்சொல்வேன் ஒன்றனந்தகோடிகளாகப் பெருகி
விஷச்சுவாலைகளையும்தீயையும்வீசிபிரசண்ட மாருதத்தினுங்கடுகிவிடநா
கங்களைப்போலச்சீறிப் பாதகன்கொண்டிருக்கின்ற மாயரூபங்களொவ்
வொன்றுக்கு எவ்வேழாகச்சூழ்ந்துகொண்டு சின்ன பின்னப்படக் கண்
டித்துவிண்மண்பாதலம் திசாதிசைக ளெங்கனும் பரந்திருந்த மாயப்
பெருக்கனைத்தையுங் கவளீகரஞ்செய்து எதாப்பிரகாரம் சகலமையும் நி
லைபெறவிருத்திச் சூரபதுமன்திடுக்கிட்டுத்தியங்கி மனம்வருந்திவாடத்த
க்கதாகத் தனிமையில்விட்டுதங்களிடத்துண்டாய் வீறிவாட்டியபடைகள
னைத்தையும் சுருக்கிக்கொண்டு சரேலெனத்திரும்பிபழையபடிக்குமுரு
கப்பெருமான் அட்சயத்தூணிரத்திற் சேர்ந்திருந்தது, இச்செய்கையை
த்தெரிந்தவிண்ணவர் கந்தன்வீரபராக்கிரமங்களையும் பெருமைகளையு
ந்துதித்துவேதவாக்கியங்களினாற்போற்றஇப்படிக்குச்சகலமுயற்சிகளு
மங்கி எண்ணமிட்டுக்கொண்டு நிற்கின்ற சூரமகாராசனைச் சிவகுமாரன்
பாத்துபரிவாய்த்திருவுளம்பற்றுவதாயினர், அவுணர்பெருமானே கேட்
பையாக- காருண்டகரியமேகசமோகங்களினிடத்தெழுந்துசொலித்தட
ங்கும் மின்னற்கொடிகளைப்போல நமதுமுன்னம் பற்பல ரூபங்களைக்
கொண்டு வாதாடிவந்த உன்முயற்சிக ளனைத்தையும் நாமேவியபாணங்
கள்நிமைப்போதில் நாசஞ்செய்ததைக்கண்டனை நிலைபெறாத வஞ்சகப்
போனாச்செய்துவெல்ல நினைந்தபேதாய் எக்காலத்துஞ் சலனமற்றநி
த்தியமாகவிளங்கும்தமதுபேருருவைக்காட்டுவோம்தரிசிக்கக்கடவை

யெனத் திருவாய்மலர்ந்தருளி சத்தசாகரங்கள் பெரும்புறக்கடல்சூழ்ந்
தபூமண்டலம் அசிற்பட்டதிசைகள் திவுகள் விண்ணுடுகள் எறும்புமுத
ல்யானையீறுச்சொல்லநின்ற எண்பத்துநான்கு லட்சம் சீவபேதங்கள்
முப்பத்துமுக்கோடி தேவர்க்கள் நாற்பத்தெண்ணுயிரம்ரிஷிகள் செறு
டாந்தருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் உவுணர் கின்னரர் கிம்புருட
ரேகாதசஉருத்திரர் துவாதசாதித்தர் சூரியசந்திரர் முதலிய நவக்கிறகங்க
ள்றிதுக்கள் காலங்கள்முதலிய சமஸ்தமும் ஆதிதேவனாகிய சண்முகப்
பெருமாள்திருமேனியிலமைந்ததல்லதுவேறொன்றில்லையெனச்சகலரும்
திஷ்டாந்திரமாகத்தெரிசித்துக் கிருதார்த்தராதற்பொருட்டு விசுவரூபத்
தைக்கொண்டருளினர், சவுனகாதிரிஷிகளே அவனருளின் முயற்சியினு
ல்என்னாற்கூடியவனாயில் அத்தோற்றத்தின் பெருமிதங்களைச்சொல்லக்
கேட்டுக்கிருதார்த்தராகக்கடவீர், அஃதெங்ஙனெனில்திருவடிகளி னுட்
புறத்திற் சத்தகுலாசலங்களாதியபற்வதங்கள்தோற்றவும்புறவடியிற்சா
கரவிதங்கள்காட்டவும் கூரியநிகங்கள்வாய்ந்த விரல்கள்முற்றினும் நிதி
வாரயோககாணங்கள் நட்சத்திறங்கள் கிறகங்கள் யிடிக்கூட்டங்கள்தோ
ற்றவும் பரட்டினிடத்தில்வருணராசன் சந்திரன்கரியமேனியைப்படை
த்தநிருதிஅரக்கர்நிற்கவும் பாதங்களுக்குமேல் உருண்டுகாட்டும் கணை
க்காலில்ஆரிடர்தோற்றவும் முழந்தாளில்விஞ்சையர் மற்றகடவுளர்காட்
டவும் தொடைகளினிடத்தில்இந்திரன் அவன்பிள்ளை சயந்தன்நிற்கவும்யி
டையிற்காலன்தோற்றவும் அரைஸ்தானத்தில் அவுணகூட்டம்விளங்கவு
ம்விலாவெலும்புகடோறும்சிறந்தகடவுளர்நிற்கவும் கோசத்தலத்தில்அ
சுவனிதேவதைகள்காட்டவும் வயற்றினிடத்தில்நாகரினங்கள்விளங்கவும்
நாபிமூலத்தில்மன்னுயிர்களடர்ந்திருக்கவும் மார்பகத்திற் கலைக்கியான
ங்களொளிக்கவும் முப்புரிநூலிற்சலனமற்ற ஞானம்சொலிக்கவும் ரோ
மங்களில்அளவற்றஅண்டகோடிகள் புல்முனையில்விளங்கும் பனித்திவ
லைகளைப்போல அணிபடத் தோற்றவும் திருக்கரங்களில் அகிலபோகங்
கள்தோற்றவும் அழகியபுயாசலங்களிற் பிரமன்விஷ்ணுநிற்கவும்மிருது
வாகியதளிர்களைப்பழித்துக்காட்டும்விரல்களில் இலக்குமி சரஸ்பதிமுத
லியதேவமங்கையர்பிறதிபிம்பித்திருக்கவும் திருக்கழுத்தினிடத்தில் அக்
கினிதேவன்தோற்றவும் வயிரத்தினும் சிறந்தசுந்தரமுள்ள திருவாய்களி
ற்சதுற்வேதங்கள்ஆகமசாத்திரங்கள் அத்தேவன்மங்களஞ்செயங்க
ளைத்துதித்துநிற்கவும்தந்தங்களினிடங்களில் அகரமுதலியஅன்பத்தோ
ரட்சரங்களும்விளங்கவும் நாவினிடத்திற் சிவாகமபேதங்கள் பிறபலித்
துத்தோற்றவும் சுந்தரமுள்ளஅதரத்தில் மனுவிக்கியான சாஸ்திரம் மு
றையிடவும் நாசியினிடத்தில்வாயுதேவன் சஞ்சரித்திருக்கவும் சூரியசந்

திரர்கள்விழிகளாகப்பிறகாசித்திருக்கவும் செவிகளிற்றிசைகள் விளங்கவு
ம்நெற்றியிற் குடிலைப்பொருள் தோற்றவும் சிரத்தினிடத்திற் பரவெளி
காட்டவும் யித்தகைய சிறப்புகள்வாய்ந்த தமதுபழமையாக விருக்கின்
றதிருக்கோலத்தைக்காட்டி நின்றகாலத்தில் ஆயிரங்கிரணகாந்திகளைப்ப
ரப்பியுலவுகின்ற கோடிசூரியருதித்து ஒரிடத்திற் குலவுமாறுபோலமி
குந்தபிறகாசத்தையெறித்துவிளங்கும்திருமேனியின்பொலிவைச்சிறந்த
தவங்களைச்செய்ததேவர்க்கள் தெரிசித்தமாத்திரத்திற்றிடுக்கிட்டு மனம்
நடுங்கிபிறமைகொண்டவர்களாய் சித்திரப்பிறதமைகளைப்போலப் பாத்
திருக்கின்றதறுவாயிற் பத்தவற்சலனாகிய சிவசுப்பிறமணியக்கடவுள் வி
ண்ணவர்சோர்வைத் திருவுளத்திற்கொண்டிரங்கிப் பேரொலியெழப்ப
யப்படாதீர்கள் பயப்படாதீர்களெனத்திருக்கரத்தையமைத்துக்கிறுபா
நோக்கம் பாலித்தஉடன் களைபட் டிருந்தவர்களுக்குத் தேவாமுதங்கி
டைத்ததைப்போல அவ்வருள்மொழியானது செவிகளிற்பட்டுரோகப
ரவசத்தராய் மகிழ்ச்சியையடைந்துமனங்குளிர்ந்து போதவாரிவிழிகளி
ற்பெருககரங்களைச்சிரங்களிற்கூப்பி செயசெயவெனப் போற்றிப்பணி
ந்தவர்களாய்க்குளிர்ச்சிபெறச்சிறுதிவலைகளைவீசியெழும்மேகவரவைக்க
ண்டுகளிக்கும் மயிலினங்களைப்போலஆனந்தக்களியாடல்களைச் செய்து
க்கொண்டிருந்தனர் அத்தறுவாயில் ஆதிமத்தியாந்தரகிதராகிய சிவகு
மாரன்சொரூபக்காட்சியைக்காளகூடவிஷத்தையொத்தமனதைப்பெற்
றசூரபதுமன் கண்டவுடன் விம்மிதனாய்த்திகைத்து யாதொருசெய்கையு
மற்றுதேவமருள்கொண்டவனைப்போலநின்றனன் அக்காலத்திற்பேரறி
வாளராலுமறிந்துபோற்றுதற்கரிய பெருமையையுடைய சண்முகப்பெ
ருமாள் அவனிடத்திரக்கமுற்று சிறிதுஞானவுணர்ச்சியை அனுக்கிறகஞ்
செய்தமாத்திரத்தில் நல்லறிவுதோற்றியமகிமையினால் யிவ்விதங்களில்நி
னைப்பதாயினன்பிரளயகாலவெள்ளத்தினுமேலிட்டுஓவென்னும்யிரைச்ச
லுடன் கொடியபோரைச்செய்திருந்த ரதகெச துரகபதாதிகளின் பெரு
க்கைநிமைப்போதிலழித்து தேவர்க்கள் அவுணர் இராக்கதர் முதலிய ச
கலவீரரையும்வென்றுதிக்குவிசையங்கொண்டுராசாதிராசனாய்ச்சூரனெ
னப்பேர்பெற்றிருக்கின்ற என்னுடன் அகோரயுத்தியங்களைச்செய்து
செய்துவிடாமல் அண்டகோடிகள்முற்றுமுலவி வாதாடியும் அத்தலங்
களில்நெருங்கியிருந்தநமதுசயின்னியங்களைநகையழலினாலும்உரப்பி
னாலும்உக்கிறப்பார்வையினாலும்வ என்னும்முன்னம்தகித்துச்சாம்பலா
க்கியதுமன்றியில் யிதுபரியந்தம்போராடிவருகின்றதல்லாமல் எனக்கு
மேவிட்ட புசபெலபராக்கிறமசாலியாகிய தம்பி சிங்கமுகாசுரனையும்பு
த்திரமித்திரர் மந்திரிபிறதானிகள் முதலிய அவுணப்பூண்டில்லாமல்வேர

றக்களைந்துநாசப்படுத்திப்பரமசிவம்பிறையையுற்றுத்தந்தசுந்தரமுள்ள
இந்திரஞாலத்தேரையும் நம்மிடத்துக்குவராமற்றடுத்து நான்கொண்ட
மாயப்படிவங்கள்முற்றினும்கொடியசரங்களினால்மாற்றி அரிதிற்றேடி
வைத்திருந்ததேவாஸ்திரங்களொன்றேனும்பிரயோசனப்படாமல்வா
ட்டியதுமன்றியிற்சராசரப் பிறபஞ்சங்களடங்கியிருக்கின்ற அண்டநி
ரைகள்மயிர்க்கால்தோறும்அளவற்றுவிளங்கவும்தேவர்கள்மக்கள்நாகர்
முதலியசமஸ்தமும்தமது திருமேனியிற்காணும்படிக்குயித்தகையபே
ருருவைக்கொண்டென்முன்னம்நிற்கின்றனர் அழகியகலாபத்தைவிரித்
தாலவும்மஞ்சைவாகனத்தின்மீதுவிளங்குகின்றகுமாரதேவனைப்பாலன்
பாலனென்றுயிதுபரியந்தம்பேசியும்அவமதித்துமிருந்தேன்யித்தேவ
ன்பெருமைகளைநிதானித்துத்தெரிந்து தகுதியாகியகாரியங்களில்முயற்
சிகொள்ளாமற்போனேன்மகாவிஷ்ணுபிரமனாதியதேவர்க்களனைவருக்
கும்மூலகாரணமாகவிருக்கவல்லதேவன் யிவனல்லது வேறில்லை யிதில்
யெவ்வளவும்பிசகிராதுயிதன்காரணங்களைப்பலவிசையாந்தமாகத்தெரி
ந்திருக்கின்றனன்யிவையன்றியும்முன்னந்தூதாகவந்தவீராதிவீரன்ஒப்
புவமையற்றயிந்தசரவணபவன்குணாதிசெயங்களைவிரித்துக்காட்டியது
மன்றியில்பற்றிகலற்றபரம்பொருளே இக்கோலங்கொண்டெழுந்தரு
ளினனெனப்பலவிதங்களிற் சுடச்சுடச்சொற்றனன், ஊழ்வினைமுயற்சியி
னாற்செல்வச்செருக்கிற்பட்டுஅவ்வாக்கியங்களைநிச்சயப்பொருளாகவெ
ண்ணிநடந்துகொள்ள வகையற்று சவுரியத்தையும்மானத்தையும் பெரி
தாகமதித்துயிப்படிக்குக்கெட்டேன் அவனருளின்திறத்தினாலும்சற்வ
மங்களகுணாதிசெயங்களின்காட்சியினாலும்யிக்காலத்தில்தேவதேவோத்
தமனிவனெனக்கண்டுகொண்டேன் வீரவாகுசொன்னகாரணங்களனைத்
தும்உண்மையாகும்அதற்குத்திஷ்டாந்திரமாகப்பூற்வத்தில்சிவபிரான்க
டாட்சவீட்சண்ணியத்தினால் நான்கிடைத்தாண்டுவந்த ஆயிரத்தெட்ட
ண்டங்களுடன் மற்றகாரணங்களையும்முத்திக்குரியசண்முகப்பெருமா
ள்பாதாரவிந்தங்களிற்பெருத்திருக்கின்றஉரோமங்களில்ஒடுங்கிநிற்கக்க
ண்டனன், மேலும்தேவர்கள்முனிசிரோஷ்டர்கள் மற்றவையாவும்தமத
கத்தில்விளங்கக்காட்டியபகவன்விசுவரூபமுற்றும்பாந்தமாகக்காண்பத
ற்குயாவரால்முடியும் சரீரமுற்றும்விழிகளைப்படைத்தவர்களுக்காயினு
ம்யித்தெரிசினையைப்பூர்த்தியாகத்தெரிந்துபுகழ்வதற்கு அனந்தகோடிக
ற்பகாலம்செல்லும்தேசோமயமாகவிளங்குகின்றயிக்கற்தன்வகித்திருக்
கின்றவடிவத்திற்றோற்றநின்றபேரொளியின் சிறப்புகளையும் யிளமைந
லங்களையும் வடிவத்தினையும் மற்றமங்களகரமாகியவடிவத்தின்தோ
ற்றமுதலிய காட்சிகளனைத்தையும்பெற்றவர்கள் வானநாடுகளிற் சிறந்தி

ருக்கின்ற பிறதமதேவர்க்களினும்பூமண்டலவாசிகளிற் சக்கிறவற்திகளா
கவிருக்கப்பட்டவர்களிலும் மற்றுமெத்தகையர்களினுமிருக்கமாட்டா
ர்கள் யிவ்வற்புததெரிசனையை விழிகளையிமையாமல் பலதிரம் பார்த்த
போதினும் மனதுக்கும் அமையாதனவாகவும் தெவிட்டாததெள்ளமுதி
ன்பெருக்காகவுமிருக்கின்றதுதமக்கொப்புவமையற்றமூலகாரணக்கட
வுளாகிய யித்தேவன்யிக்காலத்திற் றோற்றக்காட்டிய சிறந்த உருவத்தின்
காட்சியைதெரிசிக்குமிடத்தில் மிகவும் அச்சங்கொள்வதல்லது யிச்சோ
தியின்விக்கத்தை தயிரியங்கொண்டுநின்றுகாணவல்ல தேவர்க்களொரு
வரிருக்கின்றனரோ தவங்களிற்சிறந்த விண்ணவர்களால்முடியாதெனில்
மற்றயாவராற்கூடும்பலகாலம் அரியதவங்களைச்செய்துபரமசிவகடாட்ச
த்தினாற்பற்பலவரப்பேறுகளையும் அழிவற்றவயிரப்படிவத்தையுங்கிடை
த்திருப்பவனாதலாற் சற்றுநிதானித்துத்தெரிசிக்கப்பெற்றனன் மேலும்
அதிகசுந்தரமுள்ள வனப்பெனச்சொல்லநின்றஒருபொருளானது ஆயிர
கோடியுருக்கொண்டு எககாலத்திற்றிரண்டோன்றி விளங்குவதாயினும்
வெற்றிவேலாயுதமூர்த்தியினதுபவுத்திரமாகிய பாதாரவிந்தங்களினழகு
க்கெவ்வளவும் எவ்விதத்தினுமொப்புவமைசொல்லப்படுவதோ அப்படி
க்கிருக்கயிந்தஆதிகற்தன்சிறந்த உருவகங்களனைத்துக்கும்பாவுரால் உவ
மானங்களை எடுத்துக்காட்டப்படும் எனக்குபிராணபதமாகவும்மனதுக்
கினியனாகவும் ஞானபாத்துக்குரியனாகவும் கல்விகேழ்விகளிற் சிறந்த
பேரறிவாளனாகவும்புசபெலபராக்கிறமங்களுக் கொப்பற்றவனாகவுமிரு
ந்ததம்பிசிங்கமுகாசுரனும்புத்திரசிரோமணிகளாகவிருந்தபானுகோப
னும் சாத்திரசம்பன்னனாகியஇரணியனும் என்னிடத்திற்பரிவாய் வெற்
றிவேலாயுதத்தைத் திருக்கரத்திற்கொண்டிருக்கும் குமாரசுவாமியை பா
லன்பாலனென்றிகழவேண்டாம் அவன்திறங்களும் மகத்துவங்களும்ந
ம்போலிகளுக்குத்தெரிவதன்று பிரமன் விஷ்ணுமுதலாகியசிறந்ததேவ
ர்க்களாலும்காணவொண்ணாத பரம்பொருளே யிக்கோலங்கொண்டெ
ழுந்தருளியிருக்கின்றனர், யிதற்கியாதொரு சந்தேகமு மில்லையென்று
பற்பலவிதங்களில் விரித்துக்காட்டி மனப்பூர்வகமாகப் போதித்தனர்,
அவர்கள்தெருட்டியஉண்மைகளையும் வேதநிச்சயமாகிய வாக்கியங்களை
யும்ஆழின்பாலனாய்ப்பரமசிவ மனுக்கிறகித்திருந்த வரப்பேறுகளையும்
சலனமற்றவயிரப்படிவத்தையும் மற்றதம்பியர் பிள்ளைகள் சம்பத்தையு
ம்பெரிதாகமதித்து யிகழ்ச்சியாகப்பேசிமறுதலைசெய்தனன், அவையனை
த்தையும் யிக்காலத்தில்உண்மையாகத் தெரிந்துகொண்டேன் ஆதிமூல
த்தோற்றமாகிய பாலசுப்பிறமணியதேவர் காட்டியிருக்கின்றதிருமேனி
யின்வனப்பனைத்தையும் பாதாதிகேசபரியந்தம் பற்பல ஆழிகாலவரை

யில்வருந்திப்பாத்தபோதினும் விழிகளுக்கமையாதனவாக விருக்கின்ற
துமனதினால் நிச்சயப்படுத்துவோமெனினும் கருத்துக்கெட்டாததாக
வேமுடியும்யித்தகையகுணாதிசயச்சம்பத்தைப்பெற்ற கர்த்தன் என்னை
யொருபொருளாகமதித்துச்சண்டைகொடுக்க நேர்ந்ததை யோசிக்குமி
டத்தில் யிதுவுமொருதிருவிளையாடலாகவும் அருட்டிறமாகவும் நினைக்க
வேண்டுவதல்லது வேறுமுண்டோ இஃதன்றியும் யித்தெரிசனையைக் கி
டைத்தபின்பு முனமெனக்குண்டாயிருந்த றவுத்திராகாரமாகிய கோபா
வேசங்கள்முற்றினுமடங்கி வீரத்தன்மையுமொழிந்துபோரினிடத்தினு
லூக்கமற்றதுமன்றியில்திரேகம்குதுகுலித்துபரவசப்பட்டுஉரோமங்கள்
சிலிர்த்து விழிகளினும்பேரானந்தவாரிபெருக யித்தேவனிடத்தில்மெய்
ப்பத்திவிளைந்து நாயினேனுக்குத் திரேகமுமென்புங்குழைந்து உலையி
ற்பட்டமெழுகையொப்பக் கரைந்து அகந்தையனைத்தும் நாசப்பட்டு
அவனருளின் திறத்தினால் ஞானஉணர்ச்சிதோற்றிய காரணத்தினால்வலது
பாரிசத்திலிருக்கின்ற நேத்திரமும் புசமும் துடிக்கின்றதுமேலும் அண்
டாண்டபுவன கோடிகளிற்பட்டபொருள்களனைத்தும் உள்ளங்கைநெ
ல்லிக்கனியைப்போல வெள்ளிடையாகக்காணக் கிடைத்தேன் ஆதியிற்சி
வபிரானைக்குறித்து அடியேன்செய்திருக்கிற சிறந்ததவமுயற்சியினால்தே
வாதிதேவன்மங்களகரமாகியதோற்றத்தையெதிர்க்காட்சியாகத்தெரிசிக்
கப்பெற்றனனாதலால் யிச்சிறந்த வயிராக்கையைக் கிடைத்திருக்கின்ற
தற்குத்தக்க பேற்றினைக்கிடைப்பதாக யித்தேவனைப்பாதங்கள் வருந்த
பலதரம் பிறதட்சணம்வந்தும்சிரமானது பூமியிற்படியச் சேவித்தும்
ஆசானுபாகுவாகநீண்டிருக்கும்கரங்கள் பவுத்திரமாதற்பொருட்டுக்கூ
ப்பித்தொழுதும் செனனதுக்கத்தை யொழிக்க வேண்டும் யிதுபரியந்
தம் செல்வச்செருக்கிற்பட்டு பழிபாதகங்களுக் கெவ்வளவு மஞ்சாம
ற்செய்துவந்த துஷ்கிர்த்தியங்களினாற் சம்பவித்திருக்கின்ற மகாபாதகங்
கள்நசித்துக் கிருதார்த்தனாதற்பொருட்டு யிக்கடவுளினது குணாதிசயங்
களைமனோவாக்குக்காயமொருமைப்படத்தக்கதாக வாயாரவாழ்த்தி நா
வாரத்துதித்துப் பேரானந்தவாழ்வைப்பெற்று தீயபுத்தியை யொழித்
துயிக்கடவுளுக் கடிமைப்பட்டு நித்தியத்தையடைந்து யிவ னருளுக்கு
ப்பாத்திரனாக வென்மனம்விரும்புகின்றதாயினும் மேற்குறித்தகாரண
ங்களை வினாவில்முடிப்பதற்குஅகந்தைக்குரிய மானாபி மானமென்னு
ம்பாசபெந்தமானது யென்னைத்தடுத்துக்கெடுத்தது அப்படிக்கி
ருந்தபோதினும் வம்சபரம்பரையாய்ப் பகைவராகவிருக்கின்ற தேவர்
க்கள்சிறையைநீக்கவெத்தனித்து பலபூதர் படைவீரராக கூட்டிக்கொண்
டிவடம்வந்து கொடியபோரைச்செய்து என்வம்சநாசப்பட வாட்டியபி

த்தேவனுருவைக்கண்டமாத்திரத்திற் கோபமுண்டாவது தகுதியாகும் அப்படிக்கிருக்கத்திரமாகவிருந்த என்மனம்தீயிற்பட்ட வெண்ணெயைப் போலச்சகலஉச்சாங்கங்களுமற்று உருகியுருகிக் கரைந்து காட்டியாயின்உணர்ச்சியும்யாக்கையும் மற்றகருமங்களு மென்வசப்பட்டதெனச்சொல்லப்படவில்லை தேன்களைத் துளித்து மகரந்தங்களையிறைத்துபொன்னையொத்தயிதழ்களைப்பரப்பி வண்டினங்கள் றீங்காரத் தொனிகளைச்செய்துயிடைவிடாமல் மொய்த்திருக்கும் குளிர்ந்தகடப்ப மலர்மாலை புரளும்விசாலமாகிய திருமார்பையுடைத்திருக்கின்றகுமாரதேவர் யிக்காலவரையில் நீடித்தபற்பலபோரை நடாத்தி பிரியாவிடையாய் காட்சிதந்திருப்பதையோசிக்குமிடத்தில் யிதுவுமொரு திருவிளையாடலாக நம்ப வேண்டுவதல்லது வாட்டக்கருதுவராயில் நிமைப்போதில் நாசஞ்செய்யவல்லர் அதனைத்தடைசெய்வதற்கு யாவராலு முடிவதன்று குற்றமற்ற தேவர்க்களை நான் அநீதமாகஅலைத்துச் சிறையிலும் வைத்திருப்ப தாகவும்யிதுதகாதகாரியம்மிகவும்பொல்லாங்கெனப்பலருமிழந்தனர், அக்காரணத்தின்மூயற்சியினாற்சதுர்வேதங்களும்பிரமனாகியதேவர்க்களும்தேடிக்காண்பரியதேவதேவோத்தமன் யிவடம்வரவும் நிசதெரிசனமாகக் கண்டுமனமானந்தமடைந்து களிக்கப்பெற்றனன், ஆதலால் நான்முற்செய்தநல்வினையின் மகத்துவத்தினால் தீயகருமங்களையும் நன்காகவேமுடித்து மேலும்மூலகாரணனாகவிருக்கின்ற யிக்கடவுளருளைப் பின்னிடையாமல் யித்தினவரையில்யெதுத்துநின்று அரிய போர்களைச் செய்துவருகின்றயான் யினி தினவரைப்போலமனந்தளர்ந்து வாடுவதழகோ ஆண்மைக்கடுப்பதோ சூரியசந்திரர் பஞ்சபூதங்களுள்ளபரியந்தம் நிலைபெற்றுவிளங்கும் சிறந்த கீர்த்திப்பிரதாபங்களைப்பெறவும் வீராதிவீரன்ரணரங்கசூரனெனப்பலரும்புகழ விருக்கின்றனன், ஆதலால்யிப் புகழ்ப்படிவம் மண்ணுள்ளபரியந்தம் நீடித்திருக்குமல்லது அநித்தியமாகியயிவ்வுடலம்அழியின்நிநிற்பதுண்டோ யினிதேவர்க்கள்சிறையை நீக்கி யித்தேவனைவணங்கி உதிரமாம்சச் சம்பந்தத்தினாற் றாலித்திருக்கின்றயிவ்வுடலையும் வீணாகவிருப்பவன் அணுப்பிரமாணமாக மதிக்கத்தக்க உயிரையும்பெரிதாகநினைந்துபோற்றி எளியரைப்போல வணங்கியிருப்பது என்னையொத்தஞானுக்கடுப்பதோ யித்தினவரையில்விஷ்ணுபிரமனாதியதேவர்க்களையும்வீரபராக்கிரமசாலிகளாகிய அவுணர் இராக்கதர்முதலியசெயசாலிகளையும்வெற்றிகொண்டு சகலரும்வணங்கிப்போற்ற அகண்டசாம்பிராச்சியச்செல்வவளங்களையனுபவித்து ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் ராசசக்கிரேஸ்பரனாய் நூற்றெட்டுகவரையில்எதிரின்றிஅரசாட்சியைச்செய்து ஆயிரகோடிஅண்டங்களினும் புகழும்படிக்குப்பு

ரந்துவிளங்கும் கீர்த்திப்பிறதாபத்தையும் வீரத்தன்மையையும்அற்பவா
ழ்வையிச்சிப்பேனாகில் வியர்த்தமாகப்போக்கவரும்மிகவும் வருந்தித்தே
டியசூரத்துவமானது நிமைப்போதிலழிந்து போகாதோவென்றிவ்வி
தங்களிற்பன்னிப்பன்னிச் சூரபதுமன் பேசிக்கொண் டிருக்கிறதருவா
யிற் சராசரப்பிறபஞ்சங்கள் அண்டநிரைகளாதிய சமஸ்தத்துக்கும்மூ
லகாரணனாகவிருக்கின்ற குமாரசுவாமியானவர் மனதினாலும் விழிகளி
னாலும் கவனித்துநிதானிக்கப்படாமல் பேருருவைக்காட்டநின்றவிசுவ
ரூபக்காட்சியைச்சடுதியில்மறைத்துப் பசியகலாபத்தைவாய்ந்தமஞ்ஞை
வாகனத்தில் முனமெழுந்தருளியிருந்த சுந்தரமுள்ள வடிவைக்கொண்
டவராய்ச் சூரபதுமனுக்குக் கடாட்சித்திருந்த போதவுணர்வை மாற்றி
ப்பழையகியாபகத்தைத்தோற்றச்செய்தனர், சவுனகாதிரிஷிகளேபிறிதிவு
அப்பு தேயு-வாயு, ஆகாயமெனச்சொல்லநின்றபஞ்சபூதச்செயற்கையிற்
பட்டசராசரப்பிறபஞ்சங்களாய்அவைகள்கொண்டிருக்கின்றபலஅண்ட
நிரைகளின்றோற்றமாய் அவற்றுட்பட்டபிராணிகள்செய்துவரும்வினை
ப்போகங்களுக்கடுத்த நன்குதீங்குகளை அனுபவிக்கச்செய்துயித்தகைய
திருவிளையாடல்களை நடத்தியும்அவற்றுட்படாமற்சிதாகாசவெளியில்நட
னஞ்செய்துஎவற்றினும்பரிபூரணமாக நிறைவெய்தி தமதுமாயாவிலாச
ங்களைக்கண்டு களிக்கும்பெருமையினையுடைய சிவபிரான்மனதுக்கினிய
குமாரதேவர் சூரபதுமனுக்கு ஞான உணர்ச்சியைத்தந்து நீக்கியவுடன்
பழையபடிக்கு மானமுங்கோபமும் வீரமும் பெருத்தெழுந்து மன
தைவாட்ட உருத்துநின்றதைப்பார்க்குமிடத்தில் சோடசகலைகளையுடை
யசந்திரபகவான்கிழ்த்திசையில் விளங்கும் உதையகிரியிற் றோற்றியகா
லத்திற் பறந்தோடியயிருளின்வீக்கமானது அத்தேவன்அஸ்தமித்ததை
த்தெரிந்தவுடன் மீட்டும் முன்னினுமதிககருமையைக்கொண்டுலகங்
களிற்பரந்ததையொக்கும்இவ்விதமாகமனச்செருக்கைப்பெற்றசூரன்
அழகியசிறகினைவாய்ந்தமஞ்ஞைவாகனத்தின்மீதில்விளங்கும்பாலசுப்பி
றமணியதேவர்தோற்றமானது விழிகளிற் பட்டமாத்திரத்தில்றவுத்திரா
காரமாய்மண்டியெரிந்து போனாச்செய்யவிரும்பினவனாய் நமதுவல்ல
பமும் வீரபராக்கிரமும் வெகுநேத்திநேத்தியெனத்திமெழக் கரங்களை
ப்பிசைந்தவொன்றுடனொன்றை கோடையிடிகளைப்போலத்தட்டி ஆதிசே
ஷன்பூமண்டலத்தைத் தாங்கமாட்டாமல் தத்தளிக்கத்தக்கதாகத் திரேக
ங்குலுங்கநகைத்து யிதனைப் பேசுவதாயினன், பாலவடிவைக் கொண்டி
ருக்கின்றயிந்தகள்வன் நம்முடனெதுத்துச் சண்டைகொடுக்கநிருவாகமி
ல்லாதவனாய் மாயப்பெருக்கொன்றைக்காட்டிச் சற்றுநேரம் தீரத்துவ
த்தைக்கொண்டிருக்கும் நமதுமனதைபிறமிக்கும்படிக்குச்செய்தபோ

தினும்முற்றினும் அதன்வசப்பட்டுப்போகாமல் நமக்கடுத்திருக்கின்ற
பேரறிவைக்கொண்டுவாட்டி பழையபடிக்குஅசைவற்ற தீரத்தைப்பெற்
றிருக்கின்றனன், ஆதலால்நமக்கெவர்களு மொப்பிரார்கள்எக்காலத்தினு
ம்சலனமற்ற வயிரப்படிவத்தைப்பெற்ற வரப்பிரசாதத்தைக் கிடைத்தி
ருக்கின்ற நாம் யிப்பாலகன்மாய வஞ்சகத்துக்குட்பட்டு கருத்தழிவது
ண்டோ கிரவுஞ்சபற்வதத்தைச்சூதினாற் பிளந்தழித்த வேலைத்தாங்கிய
கரதலத்தைப்படைத்திருக்கின்ற குமாரனுடன் கொடியபோரைச்செய்
துசற்றுநேரத்திற் செயப்பிறதாபத்தைப்பெற்று மீளக்கடவன் அக்கரு
த்தைமுடிப்பது பின்பாகட்டும் யில்லாதுபொல்லாதுகளைச் சொல்லிமு
றையிட்டுக்கொண்டு யித்தகையகலகத்தைமூட்டி வேடிக்கைபார்த்திருக்
கின்ற பாதகராகியதேவப்பயல்க ளனைவரையும் மடக்கிக்கொண்டு வாட்
டிக்கொன்றுதின்று உதிரப்பெருக்குடன் உயிரையும் குடித்திக்காலத்தி
ல்நமக்குண்டாயிருக்கின்ற கோபதாபங்களிரசீறி தாறியபின்பு மற்றைய
காரியங்களையும் நிமைப்போதில்முடித்துக்களிக்கவல்லேனெனத்துணி
வுகொண்டவனாய்ச் சூரபதுமனனவன்டமையபடிக்குக் கொடியமாயம
ந்திரமொன்றையுச்சரித்து அதன்முயற்சியினாற் சூரியனொளிமழுங்கிம
ன்னுயிரனைத்தும்திகைத்துவாடும்படிக்கு விண்மண் திசாதிசைகளெங்
கும் காடாந்தகாரமாய் மூடவல்ல இருள்வடிவைத்தாங்கி அப்பெருக்கி
ல்மறைந்து அண்டகோடிகள் கிடுகிடென்றதிரக்கொக்கரித்த முன்னிலை
யில்அக்கொடுமைக்காற்றாமல்பூர்வத்திற்றிருப்பாற்கடலினிடத்திற்றோ
ற்றியகாளகூடவிஷமெழுந்தலைத்ததைப்போலபூமண்டலமுற்றும்கிடுகி
டாய்த்துஅஷ்டதிக்குகளனைத்தும்தத்தளித்துவாடவீங்கியயிருட்பெருக்
கானது அண்டப்பித்திகைவரையில் நிமிர்ந்தடர்ந்துதிகைக்கச்செய்த்சரி
யகோலத்தின்பொலிவைக் கண்டதேவர்க்கள்திடுக்கிட்டு போதவுணர்வி
னாலும்விவேகத்தினாலும் யிப்படிவம் சூரன்மாயப்பெருக்கினாலுண்டா
யதெனத்தெரிந்துகொண்டு பாதகனென்செய்வனோவெனவருந்தி மனச்
செருக்கற்றுத்திகைத்து மேல்நடப்பதை உன்னித்துப் பாத்துக்கொண்
டிருக்கும்போது அவுணர்பெருமான் அவ்விருளின் வீக்கத்தினொன்றிக்
கலந்துஆயிரக்கொடிமுடிகளை அணிபடப்படைத்திருக்கின்றமகம்மேரு
பற்வதத்தினையொப்பப்பருத்தகாத்திரமுள்ளதேகத்தைக்கொண்டுபல
சிரங்கள்விளங்கஅவைக்கிரட்டிகரசமோகங்கள்பெருத்துக் காட்டத்தங்க
தாகியஒருபேருருவைத்தாங்கி வானத்தில்நிற்கின்ற விண்ணவர் கூட்டத்
தைவார்வாரிவாயிற்போட்டுத் தின்னக்கருதினவனாய் வானவெல்லையில்நி
மிர்ந்து விழிகளிற்றீப்பொறிகள்சிதறவாய்களைத்திறந்து கரங்களைப்பர
ப்பி மறைவிடமாய்வருவதைப் பேருணர்ச்சியினாற் றெரிந்தவுடன்தின

ராகியதேவர்க்களென்செய்வர் காலாதிகளிற்பிராணனைக் கொண்டுபோகு
ம்கூற்றுவனை எதிர்ந்தமன்னுயிரைப்போல நடுநடுங்கிக் குலைகுலைந்து ம
திமயங்கிப்பிரமித்தவர்களாய் நிற்கவும்பயந்து தலைத்தலை சிதறியோடி
ஞானநாயகனைக்குறித்துப்புலம்பி முறையிடுவதாயினர், தீனராகியதொ
ண்டர்களுக் கடுத்தவினைகளைப்போக்கிப் பாதுகாத்தருளும் பொருட்டு
விருதுக்கொடியை நாட்டியிருக்கும் பக்தவற்சலனேஓலம் பாசபெந்த
ங்களைக்களைந்து நன்னெறிகளையனுஷ்டித்துவரும் மகத்துக்களுக் கிரு
ப்பிடமாகியஞானநாயகனேஓலம் விண்ணுடுகளிற் சிறந்திருக்கும் வான
வருக்குத் தலைமை பெற்றிருக்கின்ற தேவதேவோத்தமனே ஓலம் அ
ஞ்ஞானவிருளைப்போக்கிப் பேரானந்தத்தைப் பெறச்செய்யவல்ல பர
ஞ்சுடரின்மூலமேஓலம் வேதாகமங்கள் முதலியவற்றினுலெண்ணி யள
விடுதற்கரியகர்த்தனேஓலம் சராசரப்பிரபஞ்சங்க ளெவற்றையும்படைத்
து அவைகளுக்குரிய வினைப்போகங்களை யூட்டி யாட்டும் பரவஸ்துவே
ஓலம்தேவர்களிற் சிரேஷ்டமாகவிளங்கும் திரிமூர்த்திகளில் முதன்மை
பெற்றிருக்கின்ற நுதல்விழியினைப்பெற்றசிவபிரான் பெற்றருளியகட
வுளேஓலம் விண்ணவர்களுக்கதிபனாய்த் தேவசேனாபதியென்னுந் திரு
நாமத்தைக்கிடைத்திருக்கின்றவீராதிவீரனேஓலம் சச்சிதானந்தம் சத்து
ச்சித்தானந்தமென்னும் முப்பத்தாறுதத்துவ பேதாபேதங்களாகவிளங்
கும்காண்டான்காண்பன் சாட்சியின்உருவகமாகக்காட்டநின்ற விராட்
சொரூபத்தைவகித்தாட்டுங்கடவுளேஓலம் தமதுவழியடிமைகளாகவிரு
க்கின்ற தீனரைவாட்டியலைக்கும்சத்துராதிகளுக்கு இடியேற்றினையொப்
பக்காட்டி அதஞ்செய்யும் தீனசரண்ணியனே ஓலம் சத்திப் படிவமாய்
அமைந்திருக்கும்வெற்றிவேலாயுதத்தைத் திருக்கரத்திற்றாங்கியிருக்கின்
றநிர்மலக்கடவுளேஓலம் தேவரீர் மகத்துவங்களையும்பெருமிதங்களையு
ம் பாமாலைகளினாற்புகழவல்ல தொண்டருக்கெளிவரும் கர்த்தனே ஓலம்
நவரத்தினமயமாகியவாகுவலயங்கள் பிரகாசிக்கும்பன்னிரு புயாசலங்
களைப்படைத்ததேவனேஓலம் சிருஷ்டிதிதிசங்காரத் தொழிலைநடாத்தி
வரும் திரிமூர்த்திசொரூபக்காருண்ணியக்கடவுளே ஓலம் ஓலம்பித்தலை
யசோவங்களைத்தாங்கி உலகவியாபாரங்களை நடிப்பித்துவரும் ஆதிமூல
க்கடவுளே அடியோங்கள் துக்கவருத்தங்களைத் திருச்செவிகளினேற்று
ப்பாதுகாத்துரட்சிக்கவேண்டும் காலதாமசஞ்செய்வீராகிற் சர்வசங்கா
ரகாலத்தைப்போல நாசமடைவோம் ஒசற்தம்ன கொடியசூரன் யிதோ
கார்காவயிரவிற் பரந்தெழும்பும் காளமேக சமோகக் காட்சியைப்போல
மாலையின்முயற்சியினாற் காடாந்தகாரமாகியயிருளைப்பரப்பி கோரரூ
பத்தைத்தாங்கி அதனிடையில் மறைந்தோங்கி தமது தொண்டராகிய

அடியோங்களைப்பற்றிவிழுங்கக்கருதிப்போந்தனன் தப்பித்துக்கொண்டோடியொளிக்கவும் வலியற்றனாயினெங்கள் ஐயனே யினியெவ்வாறுபிழைக்கப்போகின்றனம், ஒகற்றனே சிறிதுந் தாழ்க்காமற் பரசுகப்பிராணனைவாட்டி பத்தரிடத்திற் கிருபாநோக்கம் பாலித்தாளுகின்றவிர் வேறொருகெதியையுங்காணேமென் றுயிர்ப்பிழந்த சகலதேவர்க்கள் முறையிட்டுக்கொள்ளுமுன்னிலையில் அழகியகலாபத்தைதவாய்ந்தமயிலினுருக்கொண்டு முருகப்பெருமானைத்தாங்கியிருக்கின்றஇந்திரனும் கடவுளர்படுந்துன்பத்துக்கிரங்கி ஓகற்றனே கொடியரிற்கொடியனாகியசூரபதுமன்செய்கைகள் திருவிழிகளிற்காணப்படவில்லையோ யின்னமுஞ்சற்றுநேரம்பராமுகமாகவிருப்பீராகிற் சரவிடமாக நின்றகள்வன் எளியராகிய நம்மவனைவாயிற்போட்டுக் கொள்வதல்லாமற் பிரபஞ்சங்களனைத்தையும் நிமைப்போதிற்கவளீகரஞ்செய்துபோடுவதற் கையமில்லைமேலும் என்னென்ன அனர்த்தங்களைச்செய்வனோதோற்றவில்லை எமதுகுலதெய்வமேகிருபையுற்றுவிரைவிற்றேவகாதகனாகியசூரபதுமனைக்கொன்றுமன்னுயிர்வருந்தங்களை நீக்கி யாளவேண்டுமென்று பலவாகத் துதித்துவேண்டுவதையும் விண்ணவர்சோர்ச்சையையும் பாலசுப்பிரமணியக்கடவுள் திருச்செவிகளினேற்று சூரன்கொண்ட மருட்படிவத்தையுங்கொடியநினைவையும்மதித்துத் தீனசரண்ணியனாதலால்உலகஉபத்திரவங்களைத்தவிர்த்து நிலைபெறச்செய்யச் சித்தமிசைந்தவராய்த் தட்சிணத்திற்றமது திருக்கரங்களிலொன்றில் தேசோமயமாகவிளங்கிக் சத்துருகட்டங்களுக்கெதிர்பார்த்திருக்கும் சத்திவேலாயுதத்தின்மீது விழிகளைப்பரப்பி மாயவித்தைகளைச்செய்து தேவரைவருத்துகின்ற யிந்தக்கொடியபாதகனைவிடாமற் சரீரத்தையிருகூறாகப் பிளந்தடக்கி நிமைப்போதில்மீளக்கடவையெனப்பணித்து அளவற்ற அண்டகோடிகளைவென்று செயப்பிரதாபத்தையும் பலராலும்புகழத்தக்ககீர்த்திப்பாடுகளையும் பெற்றிருக்கின்ற சூரமகாராசன்மீதிற் செலுத்தியவுடன் கோடிசூரியப் பிரகாசத்தைப்பரப்பி பிரசண்டமாருதமுமஞ்சப்பாய்ந்து தாடாக்கினியையிசிவிஷிங்களைப்பெருக்கி பலதேவாஸ்திரமுதலிய உற்பாதங்களைப் படைத்துவிடநாகத்தையொப்பச்சீறிச் சமீபித்ததறுவாயில் அவுணர்பெருமான்கொண்டிருந்த விருட்படிவப்பரப்பனைத்தும் சூரியன்முன் பனியைப்போலநீங்கியது, யிவ்விதமாகத்தானுண்டாக்கிய மாய்கைமுற்றும்நாசப்பட்டதையும் பாலசுப்பிரமணியக்கடவுள்விடுத்த கூரிய வேற்படைஅதிகவிருப்புடன் நெருங்கிவருவதையும் சூரன்பார்த்து நல்லகாரியம்சலனமற்றவரப்பேற்றினைக் கிடைத்திருக்கின்ற நம்மையிப்படையினுலென்னசெய்யப்படுமென்றெண்ணி கோபநகைகொண்டு வடவைக்கன

னுந்திடுக்கிட்டோடப்பொங்கி யித்துணிவைக் கொண்டனன், சமுத்திர
ஞ்சூழ்ந்தபூமண்டலத்தையும் அஷ்டதிசைகளையும் சத்தபாதலங்களையும்
விண்ணுலகங்களையும் பிரமன்முதலியகடவுளரையும் மற்றசீவராசிக ளனைத்
தையும்முடிந்தி வரையறக்கலக்கிக் கொன்றபின்பு யிந்த குமரனைவாட்டுவ
னெனத்தீர்மானித்தவனாய் விசாலமாய் ஆழ்ந்து செலசமர்த்திகொண்டிரு
க்கும் சமுத்திரமத்தியிற்பாய்ந்து மண்விண்டிசாதிசைகளை மூடத்தக்கப
ருத்தமாவிருட்சவுருக்கொண்டு நின்றனன், சவுனகாதிதவத்தோர் அத்தரு
வின்காட்சியிற் சிலவற்றைத்தெரிந்தமட்டுஞ் சொல்லக்கேழ்ப்பீராகவா
னமெல்லைவளாயோங்கி அஷ்டதிசைகள் முற்றினும்பரந்து யிருள்மூ
டத்தழைத்ததாய் அக்கினிக்கொழுந்தையொப்பச்சிவந்துமிருதுவாய்அ
சையுந்தளிர்களைப்பரப்பித்தியினிடத்துண்டாய்ப்பரந்துகாட்டும்புகை
ப்படலத்துக்குச் சமதையாகத்தழைகளை விரித்து தங்கத்தினாற்செய்த
மைக்குக்கொப்பாகக்காட்டும் புஷ்பக்கொத்துகளைத் தாங்கி மரகதத்
தினும்பசுமைதங்கியபருத்தகாய்கள் தொங்கச் செம்மணிகளுக்குச் சம
தையாகத்தோன்றும் கனிகளைப்பெருக்கி மேகசாலங்களை யொப்பப்ப
ருத்துநெருங்கியிருக்கின்றகிளைகளைத் திசாதிசைகளில்நீட்டி அண்டகோ
ளசைபரியந்தமுயர்ந்து பூமண்டலமெல்லைமுற்றினுமடர்ந்து மண்ணு
லகைத்தாங்கிநிற்கும் ஆதிகூர்மம்வாசஞ்செய்திருக்கும் பாதலவரையில்
வேர்களையோட்டி பச்சனத்தோற்றவதாய்ப் பதினாயிர யோசனை நிவப்பி
னைப்பெற்று கோடாகோடிச்சினைகள் கொம்புகள்நெருங்கிப் பரந்திரு
ப்பதால் சத்தசாகரங்கள்அவற்றாற்பட்ட தீவுகள்பெரும்புறக்கடல்யிரு
ட்பூமிவானமெல்லைமுற்றினும் பூமண்டலப்பரப்பனைத்தினும் குளிர்ந்த
நிழலைப்பெருக்கியித்தகைய சிறப்புகளைக்கொண்டுநின்ற மாவிருட்சத்தி
ன்கொடுமையினாற் சோடசகலைகளைப்படைத்திருக்கின்ற சந்திரப்பிறை
யையும் கங்காபவானியையும் மழுவையும்நகுவெண்டலையையும் சற்பம்
கொன்றைவெள்ளெருக்கு சிரமாலிகைமுதலிய வளங்களைத் தரித்திருக்
கும்சிவபிரான் அதிசெயிக்கவும் அஷ்டயிஸ்வரியச்செல்வவளங்களைப்பெ
ற்றிருக்கின்ற அளகாபுரிக்கிறைவனாகிய குபேரனும்மும்மதங்களைப்பெ
ருக்கி நீலகிரிகளுக்கொப்பாக காத்திரதிரேகத்தைப் பெற்றிருக்கின்றதி
சைக்களிறுகளும் கடாவாகனத்திலாரோகணித்துச் சகலபிராணிகளையுங்
கொண்டுபோய் அவற்றின்வினைகளுக்கடுத்த தெண்டனைகளைச்செய்துவ
ரும் எமதருமராசனும் திடுக்கிட்டுவாடத்தக்கதாக மாவாய்நின்ற சூரப
துமன் மற்றொருசூட்சியைநினைந்து கருடவாகனனாகிய மகாவிஷ்ணுவு
மஅம்சத்தின்மேனிநடாத்தும் பிர்மதேவனும் அவுணப்பாதகருக்கஞ்சிக
ரியகுயிலுருப்பெற்றும் கவுதமர்பத்தினியின் நிமித்தம் கோழியாகவு

ம்நித்தியப்பதவியைப்பெறும்பொருட்டு யிக்காலத்தில் அழகியசலாப
த்தைவாய்ந்த மயிலினுருப்பெற்று எமதிறைவனைத்தாங்கிவரும் பெரு
மையினைப்படைத்த தேவாசனும்போர்க்களத்தில் நிர்த்தஞ்செய்திருக்
கும் ரணபத்திரகாளியும் பாலசுப்பிரமணியதேவர் திருத்தேரினுச்சியி
ற்கோழிக்கொடியாக அசைந்திருக்கின்ற அக்கினிதேவனும் திக்கிட்ட
ஞ்சி நடுநடுங்கிச்சோரும்படிக்குவளைந்தகழுத்தும் நீண்டமூக்கும்வெ
ளுமையாய்த்தழைத்தசிறகுகளினால் மூடப்பட்ட காத்திரதிரேகத்தையு
ம்நீண்டகால்களையும்படைத்தகொக்கினுருவைத்தாங்கி அவ்விருட்சத்
தின்மத்தியிலோங்கியிருக்கும் கிளையில்நின்று வாயுதேவன் பிரமித்துவா
டவும் ஆதிசேஷன் ஆயிரம்பணமகுடங்களையும் கவிழ்த்துச்சோரவும்
பேரறிவாளராகிய வசுக்களேங்கித்தாமரைக்கமலங்களைப்பழித்துவிளங்
கும்கரங்களைமறித்துத்தேம்பவும்சூரியன்திசைதப்பியோடவும் திக்குப்
பாலகர்சரீரமுற்றும்வியர்த்துமனம்புழுங்கித் தத்தளிக்கவும் சொர்ணக
லசங்களையொப்பப்பூரித்து தங்கத்தைப்போலதேமல்பரந்துவிம்மித்த
தும்பி நீலமணியையொத்தகாம்புகள்நிமிர்ந்துகாட்டுந் தனங்களைத்தாங்
கிமெல்லியயிடையைவாய்ந்தஅரம்பையர்முதலியர் அப்பட்சியின்கோர
ரூபத்தைப்பார்க்கப்பயந்து சேற்கெண்டைகளைப்போலப்பிறழும்விழி
களைத் திருக்கரங்களினால்மூடிக்கலழவும் யித்தியாதியகொடுமைகள்நே
ரும்படிக்கு கொக்கினுருப்பெற்றிருக்கின்றபாதகன் அத்திஅரசமாங்க
ள்வேருடன்பெயர்ந்துசாயவும் ஆல்வன்னிமராமரங்களாதிய விருட்சங்
கள்தத்தமிடங்களைநீங்கித்திசைகளிற்பறக்கவும்யிறகைஅசைத்துஅதிக
விருப்புடன்தேன்களைத்துளித்துமகரந்தங்களையிறைத்துப்பரிமளிக்கு
ம்கடப்பமலர்மாலையைத் தரித்திருக்கின்றமுருகப்பெருமாள் செலுத்தி
யவெற்றிவேலாயுதத்துக் கெதிரிற் பருத்தோங்கிய மாவிருட்சமாகவும்
நின்று பருத்துநீண்டிருக்கும்கிளைகளையசைத்து வானநாடுகளைச்சிதைத்
துத்திக்குப்பாலகர் வாசஞ்செய்யும் பதங்களைநறுக்கியும் மேலுமதொ
ண்ணூற்றொன்பதுவயதினனாய்த் திரோகத்தளர்ச்சியினாற்பாதமுதல்சிரசு
பரியந்தம் நடுக்கத்தள்ளாடிநடக்கும்விருத்தனைப்போலச்சலனமற்றமன
தையும்வீரபராக்கிரமத்தையும் பெற்றிருக்கின்றசூரபதுமன் தற்செயலா
ய்அசைவுகொண்டு விசாலமாகப்பரந்திருக்கும்பூமண்டலத்தைத்தமது
டணமகுடங்களாயிரத்தினொன்றின் சுமையாகததாங்கிவரும் பெருமை
யினையுடையஆதிசேஷன் அப்பாரத்தைத்தாங்கப் படாமையால் நாக்க
ளைநீட்டிவிழிகள்பிதுங்கி மணிகளிறைய வாய்கள்தோறும்விஷங்களைக்க
க்கிவாடவும்பூமண்டல முற்றிலும் பரந்திருக்கின்ற யிருட்பெருக்கனைத்
துமொன்றுபட்டுருவளிக்கோலங்கொண்டுகுலவித்திரிவதைப்போலக்

காடார்த்தாரமாகத்தழைவுகொண்டுபிறசண்ட மாருதத்தைப்பெருக்கிவ
ட்டமிட்டலைந்துசொற்னகலசங்களாயிரவற்றைக் கொண்டிருக்கும்ம
கம்மேருபர்வதமானது ஊசலாடுமாறுபோலத் தான் துரிதமாக மாளவி
ருக்கின்றதைத்தெரியாதசூரன் மாவிருட்சத்தினடிமாத்தைச்சுழலஅசை
த்துவருங்காலத்தில் பருத்துநீண்டோடியிருக்கும் வேர்கள் கிளம்புவதி
னால் மண்ணுலகமெங்கணும்கிடுகிடெனநடுங்கி படபடெனவெடித்துயி
டிந்துபிலத்திற்சரிந்தும் அவ்வதிர்ச்சியினாற் சத்தபாதலங்களும் அடுக்கு
கள்குலைந்து தாறுமாறாகப்பொடிபட்டுதிரவும் பூமியைத்தாங்கிநின்றகூ
ர்மமானது உதரப்புகளைவெளியிட்டுத்தியங்கவும் அஷ்டமா நாகங்கள்க
சிக்கப்படாமையாற் புரண்டும் நெளிந்தும் படாதபாடுகளைப் படவும்
திசைகளைத்தாங்கும்யானைகள் மதங்களைப்பெருக்கி விழிட்டுக்களைக்கவும்
சத்தசாகரங்களும் அலைகளைமிகுதியாகப்பெருக்கி ஓவனக்குமிறிதீவுக
ளைக்கரைத்தொன்றுபடச்செய்யவும் குலகிரிகள் செண்டுகளைப்போலத்
துள்ளியெழவும் சக்கிறவாளபர்வதமானது நெக்குவிட்டு பங்கப் படவு
ம்அண்டப்பித்திகையாரிசங்கள்பிளந்துமங்கவும் எறும்புமுதல்யானையீ
றாகச்சொல்லநின்ற சீவகோடிகள் அல்லோல கல்லோலப்பட்டுத் தியங்கி
மதியயங்கியிடியுண்டசர்ப்பங்களைப்போல நாசமடையவும்நட்சத்திரரா
சிகள்நிலைகுலைந்து பூமிப்பாப்பெங்கணும் படபடென்றுதிரவும் நவக்கி
ரகங்கள் பயமிகுதியினாற்கலக்கமுழ்ந்துமறியவும் சூரியபகவானூரோகணி
த்துச்செல்லும் ரதத்திற்பூட்டியபுரவிகள்மிரண்டு அருண சாரதியத்து
க்குட்படாமல்வேகமாய் மாறிப்பாயவும் சந்திரன் தானிருந்தவிமானத்
தினின்றும் தவறிவிழுந்துதிகைத்துப் பார்க்கவும் முப்பத்து முக்கோடி
தேவர்க்கள் நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள் கின்னரர் கிம்புருடர்சித்தவி
த்தியாதரர் பன்னகர் உவணர்முதலியவானநாடர்சொல்லப்படாத அன
ர்த்தங்களிற்பட்டு துக்கசாகரத்திலாழ்ந்து தத்தமது நிலைகளைப் பிரிந்துதி
ருக்கயிலாடவரை மேருகிரிச்சாரல்கள் குகைகள்யித்தியாதியமறைவிடங்
களிற்சேர்ந்தொளிக்கவும் திரிலோகங்களுக்கும்ராசதானியாய்ச் சலனம
ற்றுநிற்கின்றசொர்க்கலோகமானது பொடிபட்டும்அதன்மேற்புறத்தில்
ரிஷிகள் வாசமாகியசத்தியலோகம்மிடியுண்டும் விஷ்ணுவாசஞ்செய்யும்
வைகுந்தநகரும் பிரமனுலகும் பார்க்கப்பதங்குறையாய் அழிந்துபோ
கவும், சவுனகாதிதவத்தரோ விரித்துவிரித்துச் சொல்லவேண்டுவதில்லைபு
வனசராசரங்கள்கூடநின்ற அண்டகோளமானது நெக்குவிட்டுபற்பல
பினவாய்ச்சரியுமாயின் அதற்குட்பட்டிருக்கின்ற பொருள்களின்கேட்
டைப் பேசிமுடிவதோ யிவ்விதமாக அண்டபுவனகோடிகளும் பிதிர்ப
ட்டுசகலபிராணிகளும் திடுக்கிட்டுவதைப்பட்டுமங்கும்படிக்குத் தினாகன்

பெருத்த சாகரமத்தியில் மாவாகநின்றகொடியபாதகனானசூரன் செய்து
வரும் அனர்த்தங்களையும் சமஸ்தத்தையுமவாட்டவிருக்கின்றஅவன்மனக்
கருத்தையும் தேவதேவோத்தமனாகிய சரவணபவன்செலுத்திய வெற்றி
வேலாயுதமானதுதெரிந்தவுடன் அதிககோபங்கொண்டதாய் ஆயிரகோ
டிஅண்டநிரைகளிற்பொருந்தியிருக்கும் அக்கினியும் அவற்றினைச் சூழ
விருக்கும்பித்திகைகளைக்கலந்துதோற்றுந்தீயும்ஒன்றுபட்டோங்கிவிரி
ந்தெழுமாறுபோலஅனற்சுவாலையைவீசிவானத்தெழுந்து மகத்துக்களா
கவிருப்பவர்களும் திடுக்கிட்டுவாடத்தக்கவெம்மையைக்காட்டிவடவை
யும்ஆலகாலமும்கலந்து தாவுவதுக்கொப்பாகச்சீறிப்பாய்ந்து அசைவற்
றவயிரத்திரேகத்தைக்கிடைத்திருக்கின்ற சூரபதுமனுயிரைவாட்டக்கோ
பித்தவெற்றிவேலானது சற்வசங்காரகாலத்தில் ஆயிரகோடி அண்டங்க
ளையும் அதிற்பட்டபுவனசராசரங்களனைத்தையும் நாசமடையச்செய்யவ
ல்லருத்திரமூர்த்தியைப்போலவும்பூர்வத்தில் யாம்யாம் மூலகாரணமாக
விளங்கும் பரப்பிரமமென்றும் நம்மைத்தவிர வேறில்லையென்றும்அக
ந்தைகொண்டு பிராணிகள் துக்கசாகரத்திலழுந்தி வாடத்தக்கதாக பெரு
காலம்அகோரஉயித்தியங்களைச்செய்துவருந்தறுவாயில்உலகஉபாதியை
யும் அவ்விருதிறவரும்பயந்துவாடவும் அவர்கள் மையலையொழித்தாள
வுந்திருவுளத்திற்கொண்டுசிவபிரான் அவர்கள்மத்தியில் ஆதியந்தந்தோ
ற்றப்படாத அனற்படிவமாய் அண்டகடாகத்தையும்உருவவெழுந்த அ
க்கினிமலையின்காட்சியாகவும் அதிகவுக்கிறத்தைக்காட்டி மேலிட்ட அந்
தவெற்றிவேலாயுதத்துக்குச் சபலசித்தராகியதேவர்க்கள் படைகளிலெத
னைநேராகச்சொல்லப்படும் சவுனகா திரிஷிகளே பூதகிஸ்தன்னிய பானத்
தைஅவளுயிருடனுண்டமாயவனும் தாமரைப்பீடத்தினனான பிர்மதே
வனும்பரத்துவநிச்சயத்தைக் குறித்துக்கொண்டிருந்த செருக்கைச்சோ
தனைசெய்தடக்கியசிவபிரான் திருக்கரத்திற்றாங்கியிருக்கும் தெய்வீகம்
பொருந்தியமுத்தலைச்சூலத்தினைக் குறிப்பதல்லதுவேறுமுண்டோயித்
தகையமகத்துவமுள்ள வேலானது பூமண்டலவெல்லைமுற்றினும் சத்த
சாகரபரப்பினும் பெரும்புறக்கடலினெல்லையினும் விண்ணுடுகளினும்
வானத்தையளாவநிற்கின்ற மேருவேமுதலிய குலகிரிகளினும் அஷ்டதி
சைகளினும் அண்டமுகடுபரியந்தமும் அனற்கொழுந்துகளைக் கற்றைக்
கற்றையாகவீசிக்கொண்டு அரனிடத்துண்டாகும் சுவாலையானது மண்
ணுலகமுற்றினும்பரந்து அல்லோலகல்லோலப்படுத்தியும்சமுத்திரமு
ற்றினுந்தாக்கி நீர்ப்பசுமையறவுண்டும் திசாதிசைகள் முற்றுமடர்ந்து
கொளுத்தியும் விண்ணுடுகளிற்பாய்ந்துகரித்தும் வீறியவெப்பமானது
ரிஷிகளேவிரித்துவிரித்துச்சொல்லவேண்டுவதில்லை சுயஞ்சோதிமயமா

பெபரமேஸ்வரன் வீற்றிருக்கின்ற திருக்கயிலையங்கிரியைத்தவிரமற்றகு
லகிரிகளாகியதலங்களிற் பொரிந்துங் கரிந்தும் எரிந்தும் புகைந்துப
ஸ்மீபடலமாகவும் கொளுத்தப்பட்டதன்றியில் நிலைபெற்றிருந்த பொ
ருளொன்றுண்டோயினையன்றியும்அனலண்டத்தின்மீதினும்சுவாலையை
வீசி அதல்கொடுமையைஅடக்கியும் திருப்பாற்கடலினிடத் துதித்துப்
பிராணிகளையலைத்தெழுந்த ஆலகாலவிஷத்தையுண்டு கண்டத்தடக்கிரட்
சித்த சிவநாதன் நுதல்விழித்தீயானது அவர்கரத்தில் விளங்கும்மழுவினை
க்கலந்து வீறியதையொத்தும் பிரளயகாலத்தோங்கி எத்தகையபொரு
ள்களாகியவற்றைத்தகிக்கவல்ல அக்கினிதேவன் தன்பிறபாவங்களனைத்
தையும் ஏகமுகத்திற்சேர்த்தப் பூரணகலையுடனுருப் பெற்றுச்சீறித்தாவு
வதுக்கொப்பாகவும்மண்டியெரிந்துவந்த வேற்படையானது ஆணவம
லத்துடக்கிற்பட்டுத் தன்னையும் பகைத்து வந்திருக்கின்ற படையின்சிற
ப்பையும்யோசியாமல் அஞ்ஞானத்தழுந்தி உலகங்களனைத்தையும் பிடி
த்துநுலக்கி அதாஅதப்படுத்தித் தும்சஞ்செய்ய வெத்தனித்துச் சூரப்
துமனெனவன் விண்மண்திசாதிசைகளெங்கனு மூடத்தக்கதாகத் தழைத்
தோங்கிநிற்கும் மாவிருட்சத்தினடியிற்பாய்ந்து தடாரித்துருவி அண்
டங்களதிருமோசையெழப்பிளந்திருகூறுகத்தள்ளியது, சவுனகாதிரிஷி
களே அந்த அவுணராசன்பெருமைகளையும் வீரத்தன்மையையும் மற்ற
காரணங்களையும் என்னென்றுசொல்லவல்லேன் மிகவும்அற்புதக்காட்சி
யாகும் மேற்குறித்தபடிக்குவெற்றிவேலானது தாக்கிப் பிளந்தமாத்தி
ரத்தில் அண்டகூடபரிபந்தந்தாவி சகலமுங்கலங்கியழிய அனீதங்களைச்
செய்துருத்துமாவுருக்கொண்டு நின்றவஞ்சகன் பேரொலியெழ அரற்
றிக்கொண்டுபின்னப்பட்டுவிழுந்தபோதினும்மாண்டவனல்லன் தான்மு
ற்காலத்திற்காளகண்டமூர்த்தியைக்குறித்துச்செய்துமுடித்தவீரமாமகத்
தினருமைக்குமெச்சிக் கொடுத்திருக்கின்றவரத்தின்பெருமிதத்தினாற்பி
ராணனைப்போக்காமல் மேலுஞ் சிலபோரைச்செய்யக் கருதினனெனில்
அதிகமாட்சிமையினைக் கிடைத்திருக்கின்ற தவத்தினையல்லது நீடித்தவஸ்
துவேறொன்றிருக்கின்றதோ ரிஷிகளே பசியபிறைகவாய்ந்திருக்கின்றகி
ளியின்மூக்கினை நிகர்த்துப் பருத்துவளைந்தமுனையுடன்காட்டுகின்றஅழ
கியகாய்களைதொங்கவிட்டோங்கிநின்ற மாவுருவானது நிலைகுலைந்துவெ
ட்டுண்டுசாய்ந்தமாத்திரத்தில் மனதில்நின்று காந்தியிருக்கும் கோபாக்
கினியானதுமேலிட்டுச் சொலிப்பதாகவிழிகளிற் தீப்பொறிகள்சிதறச்சீ
றிப்பழையதன்வயிரப்படிவத்தைக்கொண்டுசூரனெனவன்வடவைக்கனலை
யொப்பமண்டியெரிந்து ஒருநினைவைக் கொண்டு துரிதமாயிடையிற்
செருகியிருந்த உடைவாளாயுதத்தையுருவி வலக்கரத்திற்பற்றினவனாய்த்

கொதித்துச் சண்டைசெய்வதையேமுக்கியமாகநினைந்து அண்டபுவனச
ராசரங்களனைத்தும் நிலைகெட்டுமயங்கிப்படாதபாடுகளைப்பட்டுக் கொடி
யதுன்பங்களையநுபவித்துத் தத்தளிக்கும்படிக்கிஆர்ப்பரித்து முன்ன
டிவைத்துப்பின்னடிவாங்கி மின்னலையொப்பவாளாயுதத்தை யிடம்வல
ம்வலமிடமாகச்சுழற்றிப்பாய்ந்து கெக்கலிகொட்டிக்கொண்டுகோடை
யிடிப்பெருக்கையொப்பக்கெற்சித்து அதிகதீரத்துடன் மேலிட்டுச்ச
ற்பத்தையொப்பச் சீறிவரும்போது வெற்றிவேலாயுதமானது ரவுத்தி
ராகாரமாகக்கொதித்து வயிரப்படிவத்தைக்கொண்டிருக்கின்ற சூரபது
மன்வலியமார்பிற்பாய்ந்துதிரேகத்தையிருகூறாகப்பிளந்து அலைகள்பெ
ருத்திருக்கின்றகடற் கரையிற்றள்ளி செயப்பிறதாபத்தைப் பெற்றதாய்
வேதங்கள் திசாதிசைகளெங்கனும்செவிடுபடத்தக்கதாக துதித்துக்கொ
ண்டாடும்படிக்கு வேற்படையானது கோடிசூரியப் பிறகாசமாய் சொ
லித்துக்கொண்டு வானவெல்லையிலெழுந்துயிந்தபிறபலசெயத்தைக்கண்
டதேவர்க்கள் திரேகம்பூரித்துஆனந்தபரவசத்தராய் வஸ்திரங்களைவான
த்தெறிந்துகூத்தாடி செயசெயவெனப்போற்றிச் சொரிகின்ற தேன்கள
ருதபஞ்சதாருக்களின் மலர்மழைப்பெருக்கினிடையிற்றிளைத்துப்போ
ய்அனற்படிவமாகக் கனன்றிருந்த வெம்மையையடக்கிப் பழையபடிக்
குத்தனதருளுருவத்தைக்கொண்டு மதுரமிகுத்து அலைகளைவீசிச் செல
சமற்தியாகப்பெருகிக் கொண்டிருக்கும் ஆகாயகெங்கையிற் படிந்து
பவுத்திரமாய்த்திரும்பி தேவர்க்கள்யின்னலைப் போக்கிப் பாதுகாத்தாள
வெழுந்தருளியிருக்கின்ற எமதுகற்தன் செந்தாமரை மலரைப்பழித்து
விளங்குந்திருக்கரத்தில் எதாப்பிறகாரம் சொலித்துக்கொண்டிருந்தது
சவுனகாதிரிஷிகளே மேற்குறித்தபடிக்கு ஒப்புவமையற்ற கூரியவேலா
யுதமானது வெற்றிகொண்டுமீண்டதறுவாயில் தற்பரமூற்தியாகியபர
மேஸ்பரன் அரிதிற்செய்துமுடித்த விரமாமகத்துக்கிரங்கிக் காட்சிதந்
து அனுக்கிறகித்துப்போன வரபாலனத்தின்முயற்சியினாற் சாவில்லாப்
பேற்றினைக்கிடைத்திருக்கும் சூரபதுமனானவன் யிரண்டுகூறாகவெட்டு
ண்டுவிழுந்த தன்னுடலைமீட்டும் அழகிய சூட்டினையும் சிவந்த யிறகுத
ழைத்த பருத்தஉடலினையும்கூரியமூக்கினையும் வயிரவூசிகளையொத்தஆ
ரல்களினையும் சிவந்தமுழிகளையும்பெற்றசேவலாகவும பசுமைதங்கிநீ
ண்டகழுத்தினையும்வளைந்தமூக்கினையும் செம்புகளுக்கொப்பாகவிளங்கி
க்கொண்டிருக்கும் வட்டமாகியகண்களையும் அழகியசூட்டினையும்மரக
தமலையைநிகர்த்த பருத்ததிரேகத்தையும் பீலிகள்விளங்கும் தழைத்தக
லாபத்தினையும் நீண்டகால்களையும்கெம்பீரநடையினையும்படைத்தமஞ்
ஞையாகவும் உருக்கொண்டுவீற்றி நவமணிகளினு லியற்றிய பற்வதமொ

ன்றும்பச்சைவணாயொன்றம் யிரண்டுகால்களையும் சிறகினையும்பெற்று
க்காளமேகங்களுந்திசைத்தோடும்படிக்கு பேரோசையைக்காட்டி. ஆர்
ப்பரித்துக்கூவிக்கொண்டு பூமியினிடத்திலும் வானவெல்லையிலும்பாய்
ந்துமயிலுஞ்சேவலும் அதிசவுக்கிரத்துடன் சண்டைகொடுக்கச் சருதி
தேவசேனாபதியாகிய பாலசுப்பிரமணியதேவனை யெதிர்த்துவந்தனன்,
கேட்டீர்களோரிஷிகளே பூர்வத்திற்செய்திருந்த நல்வினைப் பிறையோ
சனமானது கற்தன் திருவடிகளுக்கடிமைப்படத் தக்கதாகப் பிடரியை
ட்பிடித்துத்தள்ளிக்கொண்டுவருவதைப்பொல எக்காலத்தும் தனக்கொ
ப்புவமையில்லாத வீரபராக்கிரமச்செல்வச்சம்பத்தைக் கிடைத்திருக்கி
ன்றமஞ்ஞையுருப்பெற்றிருக்கின்ற அவுணர்பெருமான் அதிக வயிராக்
தைப்பெற்றிருக்கும்மனத்தனாய் தேவர்க்கள்மருண்டு பல திசையினும்
வோடியொளிக்கத்தக்கதாக வீராவேசத்துடன் அதிகஉற்பாதங்களைக்கா
ட்டி ஞானநாயகனாகியசிவகுமாரனெதிரில் வலியபாதங்களினால் பூமிதத்
தளிக்கமிதித்து கூக்குரலிட்டுவந்தனன், யிப்பிரகாரம் அறிவுவிளங்காதப
ட்சியின்வடிவுகொண்டு தமதுசன்னிதானத்தில்வந்த சக்கிரேஸ்பரனாகிய
சூரபதுமன்காரணங்களையும் அவனிருக்கின்றகோலத்தையும் எமதிறை
வன்கண்டமாத்திரத்தில் அதிகபிரியமும் யிரக்கமு முண்டாய் கிருபா
நோக்கத்தைப்பூர்த்தியாகப் பாலித்தனர், அதன்முயற்சியினால் தட்சிண
த்திற் சத்துருத்துவத்தையும் சோபதாபங்களையும் நீங்கிச் சிவபிரானரு
ட்டிறத்தைப் பெற்றிருக்கின்ற சிறந்தமேலையோர் திருநோக்கம் பட்ட
மாத்திரத்தில் அபலமாகியகரியயிரும்பானது சிறந்ததங்கமாவதையொ
த்தும் எத்தகையனெனினும் பாபரகிதராய் நன்னெறிகளுக்குப் பாத்திர
ராகுமாறுபோலவுஞ்சூரனல்லுணர்ச்சியைக் கிடைத்தமனத்தனாய் பத்தி
விசுவாசத்துடன் அடங்கிஒடுங்கிசகலவிருப்புகளையுமொழித்துகுளிர்ந்த
பார்வையைக்காட்டி நின்றனன், சவுனகாதிரிஷிகளேசொல்லப்படாதபிற்
மத்தியாமாபாதகங்களையும்மற்றுமிராநின்றதீங்குகளனைத்தையுஞ்செய்
துவரும்மகாகர்மிகளே ஆயினும்பிரூர்த்தநல்வினையின் சம்பந்தத்தினா
ல்சுயஞ்சோதிப்படிவத்தனாய் பேரின்பவாரிக்கொரு தெப்பமாய்தீனசர
ண்ணியனாய் சராசரப்பிரபஞ்சங்களனைத்திலும் எள்ளினெண்ணெயைப்
போலப்பரிபூரணமாகநிறைவெய்தி அவற்றின்வினைப் போகங்களுக்க
டுத்தகருமங்களை யூட்டியாட்டி யுறக்குந் திருவிளையாடல்களை நடாத்தி
வரும்தேவதேவோத்தமனாகவும் விளங்குகின்ற குமாரதேவர் திருமுன்
புநேர்ப்பெறுவராயிற் பரிசுத்தவான்களாய் மெய்ஞ்ஞானசம்பத்தைக்
கிடைத்து மேலாகியசாயுச்சியப் பதவியைப்பெற்றுச சாச்விதமாகவா
ழ்ந்திருப்ப ரென்பதைச் சொல்லவும் வேண்டுமோ ஓரிஷிகளே நூற்றெ

ட்டிச்சுவனாயிற்கொடுங்கோலைச்செலுத்திச் சிவசாருண்ணியத்தையும் பரமசிவனிடத்திற் மெய்ப்பத்தியையும் சிறந்ததவவிரதங்களையும் பெற்றிருந்ததேவர்களையும் பஞ்சேந்திரியவாஞ்சையையொடுக்கியானெனதென்னும்செருக்கற்றுபரார்த்தவநிச்சயங்களை தெரிந்தமகத்துக்களையும்தவங்களிற்சிறந்தமுனிபுங்கவர்களையும்தீனராகிய மானிடர்முதலியசீவகோடிகளையும் அலைத்துவருத்தியும்மேலும்சற்றும்மதிப்பற்றுபாலசுப்பிரமணியனைப்பகைத்து ஆறுதினவளவில் அகோரஉபத்திரவங்களைச்செய்திருந்தமாயைபுத்திரனானசூரபதுமனுமல்லவோஅளவற்றகிருபைப்பெருக்கைப்பெற்றுச்சாசுவிதப்பேற்றைக்கிடைத்துவாழவிருக்கின்றனன், ஆகையால்அந்தபாலசுப்பிரமணியக்கடவுளினது மகத்துவங்களையும்சர்வமங்களகுணசம்பத்துகளையும்என்போலிகளாற்கண்டறிந்துசொல்லப்படுவதோயித்தகையமகத்துவங்களைவாய்ந்த கர்த்தன்பெருமிதங்களை கேட்கவிருப்புற்றஉங்களையொத்தபுண்ணியசீலர்யிப்பிரபஞ்சங்களிலொருவருமிருக்கமாட்டார்கள் அத்தேவன்சரித்திரங்களிற் றெரிந்தவனாயிற் பேசிவந்தசிறந்தபலப்பிருப்பத்தினால் அடியேனும்கிருதார்த்தனானேன், யிதற்குக்காரணம்நீங்களாதலால் உம்மினும் நமக்கு நன்கினைச்செய்தவர்கள்யாவரெனப்பற்பலஆனந்தபரவசமாகிய வார்த்தைகளையாடி அதிகமனஉச்சாகத்துடன்மற்றைய சரித்திரங்களையுஞ் சொல்லுவார் மேற்குறித்தபடிக்குமயிலானதுமனவெழுச்சியுடன் பவுத்திரப்பட்டிருந்ததட்சிணத்திற் கந்தன்திருநோக்கம்பாய்ந்தவிசேஷித்தினால் விருப்டனைத்தமடங்கிபெருணர்வைக்கிடைத்துப்பணிந்திருக்கும்கோழியின்மீதுவிழிகளைப்பரப்பித்தரிதமாய்நீநமதுதிருத்தேரின்மீதுதுவசமாகநின்றுகூவக்கடவையெனத்திருவாய்மலர்ந்தமுன்னிலையில் யிப்பணிவிடையினைச்செய்தற்கெத்தகையநோன்பினைச் செய்தனனோவெனக் களித்து அடியேனுக்கிதுதகுந்ததாகுமெனச்சம்மதித்துவிசாலமாகியசிறகினைக்கொட்டிக்கொண்டு விண்ணிற்பறந்துஅறுப்பறுப்பாக அரக்கினையும்முருக்கின் புஷ்பத்தினையும்பழித்துச்சிவந்தநிறத்தினைப்பெற்றுவிளங்கும் கொண்டையினையுடையசேவலானதுபருத்தோங்கிப் படபடத்த தொனியைக்காட்டி யசையும்வெற்றிக்கொடியினுருக்கொண்டு மனோவேகத்தினும் வாயுவேகத்தினுமேலிட்டுப்பாயவல்லதாய் வலியினும்சகலசிறப்புகளினுஞ் சிறந்ததாய்நவரத்தினமயமாய்வானத்தையளாவப்பரந்தோங்கியிருக்கும் திருத்தேரினுச்சியிற்போய் பூமண்டலமும் அண்டகடாகமும்யிடிபட்டுமங்கவும்பேரிடியானது கிடுகிடாய்த்துப்பறக்கவும் அக்கினிதேவனுந் திகைத்துவாடவும் அதிசவோசையெழக்கூவிக்கொண்டுஅத்தலத்தில்அசைவுகொண்டுபகைவர்வெருவத்தக்கதாகநின்றது, உடனே சுயஞ்சோதி மயமான

ப்பிரகாசித்திருக்கும் அழகியதிருமேனியினராய்ந் தகுமாரசுவாமியாரு
ம்அலையொப்பச்சொலித்திருக்கும் விழிகளைப்படைக்குத் தமதுகரு
த்தின்வண்ணம் செல்லும்படிக்கு வாகனமாகநின்ற தேவராசனுருவக
மாகியமஞ்ஞையின்பிடரியில்நின்றும் பாய்ந்து பேருணர்வைப்பெற்
றப்பயபத்தியுடன் ஒடுங்கிநிற்கின்ற சூரனுருவகித்திருக்கும் கலாபம
யில்வாகனத்தின்மீதுவீற்றிருந்து தம்மைச்சுமந்துலவக்கடவையெனத்தி
ருவாய்மலர்ந்து பூவட்டமெங்கனும் வானமெல்லாமுற்றும் செலுத்து
வதாயினர், சவுலகாதிதவத்தரோ அதன்பெருமிதங்களையும் வல்லபத்தை
யும்என்சொல்வேன் மேற்கூறித்தபடிக்கு முருகப்பெருமான் ஆரோக
ணித்தவுடன் பசுமையாகத்தழைத்திருக்கும் றெக்கையை அசைத்து அதி
னுண்டாகும் பிறசண்டவாயுவின் மோதலினால் விசாலமாய் ஆழ்ந்து
செலசமற்றிகொண்டிருக்கும் சத்தசாகரங்களும் பெரும்புறக் கடலும்
அல்லோலகல்லோலப்படப் பெருத்த அலைகளைமோதிக் கரைகளாகவி
ளங்கும்தீவுகளைக்கரைத்து ஒன்றுபட்டுப்பெருகவும் பூமிக்கச்சாணியாக
திற்கும் மகம்மேருமுதலிய குலகிரிகள்யிடிபட்டுமங்கவும் பூமண்டல
முற்றும்பாதலந்தோற்றத்தக்கதாகப் பாளம்பாளமாக வெடித்துக்காட்
டவும் அதிகஅழலினைக்கொண்டிருக்கும் வடவைக் கனலானதுசகிக்கப்ப
டாமையால்பதைபதைத்தொடுங்கவும் சூறைமாருதமும் துடிதுடித்து
த்தன்வேகமாறிப்பதுங்கவும் அண்டப்பித்திகை கிடுகிடென்றசையவும்
மற்றையபொருள்களனைத்தும் படாதபாடுகளைப்பட்டுச்சோரவும் அழ
கிய கலாபத்தை யசைத்து யிடிக்கூட்டங்கள் சிதைந்து புரளும்படிக்
குக்கியாவுமெனக்கூந்தலிட்டுக்கொண்டு மயில்வாகனமானது பறந்தும்
கருங்கடலை உடையாகக்கொண்டிருக்கும் பூமண்டலத்தைச் சுமந்துவ
ரும்ஆயிரம்பணமகுடங்களையுடைய ஆதிசேஷனும் யிக்கொடுமைக்கா
ற்றாமல் பதைபதைத்துப்புரளவும் மற்றைய அஷ்டமாநாகங்கள்முதலி
யநாகராசாக்கள் பேரிடியின்முழக்கத்தைக் கேட்டதையொப்பத் திடுக்
கிட்டுத் தத்தளிக்கவும் ஸ்ரீதேவி பூதேவிக்குக் கணவனுக்கிருக்கின்றம
காவிஷ்ணுவைத்தாங்கியிருக்கும் சற்பமானது ஏங்கித்திகைத்து வாடவு
ம்வானத்திற்சஞ்சரித்து சூரியசந்திரரைக் காலாதிகளில்மறைத்து உடற்
குறையுண்டிருக்கும்-ராகு-கேதுவென்னும் பாந்தள்களும் பிரமித்து
கெதிதப்பியோடவும் அம்மஞ்ஞையூர்தியானது கெம்பீரநடையைக்கா
ட்டிச்சஞ்சரித்தும் யிப்பிரகாரம் ஆதிகாலத்தில்மகாவிஷ்ணு வெளிப்ப
ட்டவுடன் தமக்கு நியமித்திருக்கின்ற திரித்தொழிலை நிறைவேற்றும்
பொருட்டு எத்தனப்படுமுன்னிலையில் அக்கருமம் முற்றுப்பெறாமல்வ
ருந்திச்சிருஷ்டிகர்த்தவ்வியத்தினை நடாத்தும்படிக்குப்பிரமனையும்மற்ற

சராசரப்பிரபஞ்சங்களையும் படைக்குங்கருத்தா முற்றப்பெறும்பொ
ருட்டு மகாவிஷ்ணுவானவர் பற்பலயுகங்கள் மேகவடிவுகொண்டு திரிநே
த்திரதாரியை வருந்திச்சுமந்து பத்திமான்மியந்தைச்செலுத்தி வந்தனர்,
அதனைமேகவாகனக் கல்பமெனச்சொல்லப்படும் அதைப்போலவும் வீ
ராதிவீரர்களில் முதன்மையாகவசனிக்குஞ்சூரத்தைப்பெற்ற வெற்றிவே
லாயுதத்தினைத்திருக்கரத்திற்றாங்கியிருக்கும் குமாரசுவாமியைச் சூருரு
வாகவிளங்கும் பசியமயிலானது தன்முதுகிற்றாங்கியும் பறக்குமுன்னி
லையில் ஆயிரங்கிரணங்களைப்பரப்பி உலகங்களை விளக்கிவரும் அனந்த
கோடிசூரியர்கள் திரண்டோருருக்கொண்டு மேகசஞ்சாரமறுதவிசாலமா
கியஆகாயத்தினிடத்திற்றிரிகின்றதைப்போல சர்வமங்களகுணநிதியாக
விருக்கின்றவெற்றிவேலாயுதமூர்த்தியானவர் மரகதமணிச்சொப்பாகப்
பிரகாசித்திருக்கும் பசியதிரோகத்தினைவாய்ந்த மஞ்ஞையாசனத் திடத்
தமர்ந்து வானவெல்லைமுற்றும்பவனிவந்தும் திசாதிசைகளெங்கணுமு
ல்லாசமாகவுலவினர், சவுனகாதிரிஷிகளேசத்தசாகரங்களுமேகோதித்து
ப்பெருகியதருவாயில் வடவைக்கனலனைத்துந் திரண்டொருவடிவுகொ
ண்டு அவ்வெள்ளத்தின்மத்தியிற் குலவிக்காட்டுமாறுபோல அண்டபுவன
நிரைகளெங்கணும் மயிலின்மீதுலவிவந்தசத்கிரதலத்தனுகியகுமாரசு
வாமியார் திரும்பிக் கொடுங்கோலைச்செலுத்தியிருந்தசூரபதுமன்கெடி
ல்தலமாகிய வீரமாமயேந்திரபுரிக்கடுத்திருக்கின்ற சமர்க்களத்தினெல்
லையிற்சேர்ந்தவுடன் எமதுகற்றனுகியசரவணபவன் அழகியபீலிதழைத்த
சையமஞ்ஞைவாகனமாகவும் சேவற்கொடியாகவும்முனமிருந்ததேவரா
சன்அக்கினிதேவன்மீது விழிகளைப்பரப்பித் துரிதமாய்உங்கள் பழைய
கோலத்தைக்கொண்டு வரக்கடவீர்களெனத்திருவாய்மலர்ந்தவுடன் தட்
சிணத்தில்அவர்களும்தங்களுருவைத்தாங்கி அதிசமகிழ்ச்சியுடனோடிவந்
துகற்றன் திவ்வியசரணாரவிந்தங்களிற் பலதரம் தீர்க்கதெண்டஞ்சமர்
பித்துக்கரங்களைக்கூப்பிநின்றுவேதவாக்கியங்களினால் அநேகவிதங்களி
ற்சிவகுமாரன் குணாதிசெயங்களையெடுத்துப்போற்றி உள்ளமுமென்பு
ங்குழைந்துகுழைந்து மெய்ப்பத்திவிளங்கிய காரணத்தினால் திரோகபர
வசத்தராய் விழிகளில்ஆனந்தபாஷ்பங்களைப்பெருக்கி வார்த்தைபாடுவ
தனைத்தும்குளறிமயிர்ச்செறிவெழ அதிகசந்தோஷப் பெருக்கினாற்றது
தேனைக்கிறிகிக்கவரும் வண்டினங்களைப்போலக்களித்திருந்தனர், இவ்வி
தமாக இந்திரனும்அக்கினியும் களியாடலைக்கொண்டாடு முன்னிலையிற்
சோதிமயமாகப்பிரகாசித்திருக்கும் வெற்றிவேலாயுதக்கடவுளானவர் பு
சபெலபராக்கிரமசாலியாய் ஆயிரத்தெட்டண்டங்களுக்குந் தலைமைபூ
ண்டுசகலரையும்வென்று ஏவல்கொண்டு உலகங்களனைத்திலும் சூரன்சூ

ரனென்று கொண்டாடிப்போற்றிவரும் செல்வச்சம்பத்தைச்சியடைந்து அகண்டசாம்பிராச்சியவளங்களை யனுபவித்திருந்த அவுணர்பெருமான் சூலதாசமறவாட்டி அழகினுக்கிருப்பிடமாகவிருக்கின்ற பசியதோகை யிலைவாய்ந்த மஞ்ஞைவாகனத்தாரோகணித்து மண்விண் ணெங்கனுந் திரிந்துதிரிந்து களித்தவராய் முன்போலப் போர்க்களத்திற் றேற்றிய தைக்கண்டமாத்திரத்திற் சண்டையினிடத் தூக்கங்கொண்டு மானமுஞ் சோபமும்மனதைவாட்ட வடவைத்தீயையொப்பப் பூவட்டமெங்கனு ம்பரந்தெரிந்தாத்திருந்த பூதகணவெள்ளங்களும் வீராதிவீரராகவிரு க்கின்ற எண்மரும் இலக்கரும் படைத்தலைவர்முதலானவர்களும் சலனம ற்றுநிற்கின்ற உலகங்களுள்ளவனாயில் நிலைபெறநாட்டும் சவுரியபராக்கி யவீரர்ல்வீரன் வீரவாகுதேவரும் தாயைப்பிரிந்த கன்றுகளைப்போல அ திசூவவுடன் கடிதின்வந்து மும்முறைவலம்வந்து பலதிரம்பணிந்து பேரோசையெழச் செயசெயவெனத்துதித்து பாலசுப்பிரமணியக்கடவு ளைச்சூழ்ந்து சோடசகலைகளையுடையபூரணச்சந்திரோதயத்தைக்கண்ட கடலையொப்பவும் உதையகிரியில்முளைத்த சூரியபகவானைப்பார்த்தமாத் திரத்திற்சராசரப்பிரபஞ்சங்கள் அகமுகமலர்ச்சியடைந்தமகிழ்வதைநிகர் த்தும்ஆனந்தபரவசத்தராய்யிருந்தனர், சவுனகாதிரிஷிகளே அக்காலத் தில்விண்ணவர்மண்ணவர் சிவகணங்களாதியர்கொண்ட மகிட்சியின்பெ ருக்கத்தைப் பலநாக்களைப் படைத்தபோதினும் விவரித்துச்சொல்லமு டிவதோ ஆதலால் அடியேனுக்கிருக்கின்ற ஆவாவினாற் கூடிய வரையிற் பேசினேனென்றுமுடித்தனர்.

# தேவர்போற்றுபடலம்

சூதபுராணிகர்தன்னாசிரியன் திருவடிகளை மனப்பூர்வகமாகச்சி ந்தித்துப்போற்றி அதிசவுச்சாகத்துடன் மேல்நடந்தசரித்திரங்களையும் நைமிசாரணிய வாசிகளுக்குப் போதிப்பதாயினர், சிறந்த தவங்களைக் கி டைத்திருக்கின்றரிஷிகளே முற்குறித்தபடிக்கு யாதொரு ஒப்புவமைக ளுமின்றிவிளங்கும்நிற்மலக்கடவுளாகிய சரவணபவன் தமதுதிருக்கர த்திற் கோடிசூரியப்பிரகாசமாகச் சொலித்துக்கொண்டிருந்த வெற்றி வேலாயுதத்தினாற் ஆயிரத்தெட்டண்டங்களைவென்றசெயசாலியாகிய சூர பதுமன் வயிரத்திரேகத்தைப் பிளந்து தள்ளியவுடன் பகைத்தெழுந்த

அவள்கூறுரிய அழியொலாயத்தைப்பரப்பியெழும் மாகதமலையையொ
ப்பச்காட்டும் மஞ்ஞையினிடத்திற் கிருபாநோக்கம் பாலித்து வூர்தியா
கக்கொண்டுலவிவந்து ஞானசூரியனைப்போலச்சமரவெல்லையிற் குமார
தேவர்தோற்றப்பட்டவுடன் அக்கோலத்தினைத் தெரிசித்த மாத்திரத்தி
ல்மண்ணையுண்டகண்ணனுக்கும் சகலாலும்மதித்தெண்ணிக்கைப் பட
விருக்கின்ற விண்ணாடுகளினும் பூமண்டலப்பரப்பினும் பாதலவெல்லை
யெமுதலியதலங்களெங்கனுமிரா நின்ற சீவராசிகளைப்படைத்துவரும்சி
றந்தசிருஷ்டித் தொழிலைக் கிடைத்திருக்கின்ற பிற்மதேவனுக்கும் மற்
றையதேவருக்கும் புதிய அமுதத்தைக்கிடைத்துத் தெவுட்டவுண்டவர்க
ளைப்போலமனமகிட்சி பெற்றவர்களாய் திரோகபரவசப்பட்டு சத்தசாக
ரங்களுமொலித்தெழுமாறுபோல ஆனந்தக்கூத்தாடி விழிகளிற்போத
நீரைப்பெருக்கி மயிர்ச்செறிவெழ விம்மிதராய் வேதவாக்கியங்களினு
ற்பாலசுப்பிறமணியதேவர் திருநாமங்களைத்துதித்துவீரயாக்கிரமச்செ
யப்பிறதாபத்தைத்கொண்டாடி ஐயன் கிருபைப்பெருக்கின் காரணங்க
ளையும் மங்களகரமாகியகுணசம்பத்துகளையும் வாயாரவாழ்த்திமனங்க
ளிக்கச்சிந்தித்துப் பேரானந்தக்களியாடல்களைக் கொண்டாடி மகரந்த
தங்களையிறைத்துத் தேனைப்பெருக்கித் திசாதிசைகளிற்பரிமளித்திருக்கு
ம்பஞ்சகற்பசமலர்களை வாரிவாரிச் சோனைப்பெய்யமலையொப்பக்கர்த்தன்
மீதிற்சொரிந்துசெயசெயவெனப்போற்றிச்சரவணபவன்தமதிடத்திற்க
டாட்சித்திருக்கின்றஅனுக்கிறகித்தின்பெருக்கை நினைந்துநினைந்துகளி
மிகுதியினாற் பேரானந்தவாரியிற்றிளைத்துத் திரோசம் சம்பிதப்பட்டும
யிர்ச்செறிவெழச்சிரங்களிற் கரங்களைக்கூப்பிக்கொண்டு கோடிசூரியப்
பிறகாசமாகவிளங்கிக்கொண்டிருக்கும் வெற்றிவேலாயுதத்தினைத் திருக்
கரத்திற்படைத்தருளிய பாலசுப்பிறமணியக்கடவுளைச் சூழ்ந்துகொண்
டுஅதிகஉச்சாகங்களுடன் யிவ்விதங்களிலெற்றெடுப்பதாயினர், அம்
மையப்பனையொப்பப் பாதுகாத்தாளவெழுந்த குலதெய்வமே ஓதீனச
ரண்ணியக்கடவுளே மேகங்களானவைமின்னியிடித்துக்கவிந்து விசால
மாயாழ்ந்து செலசமற்திகொண்டிருக்கும் சமுங்கடலினிராநின்ற நீரை
க்கிறிகித்தெழுமாறுபோலப் பிறளயவெள்ளத்தினுமேலிட்டுவீறிவந்தப
சைவன் ரதகசதுரகபதாதிகளின் வெள்ளப்பெருக்கைஅதாஅதப்படுத்
திஅவுணராசன்படைத்திருந்தசேனைகளனைத்தையும் நிமைப்போதில்வா
ட்டவல்லசத்திப்படையைச்செலுத்திதீனராகியநாயினேங்கள்முதலியசக
லரையும் தன்வயப்படுத்திக் கொடுங்கோல்செலுத்திவந்த சூரபதுமன்வ
ம்சநாசமறக்கொன்றதன்று தேவரீருக்கு வழியடிமையாக விருக்கின்ற
யாங்கள் தொண்டுசெய்துவருவதற்கு யாதொருகுறை பாடுசெளும் நோரா

மற்சலனமற்றமனதைக்கொண்டுமுடிக்கும்படிக்கு ஆழ்வினையின்கொ
டுமைகளைவேரறக்களைந்து கவலைமுற்றினும் போக்கியதாகினும் ஓ பரம்
பொருளே யித்தினமுதல்யாதொருகுறைபாடுகளு மில்லாமல்வாழக்கட
வோம் மேலும்உலகங்களிற்பிரமசிருஷ்டியிற்பட்டு சாதாரணமாகவிரு
ப்பதற்கு விருத்துவமாகியமாறுமுகங்களையுங் கோரரூபங்களையுங்கொ
ண்டுதீனராகியதேவர்க்கள் மக்களைமடக்கிக்கொண்டு தலைகாட்ட வொட்
டாமற்சின்னபின்னப்படச்சாடியலைத்து நூற்றெட்டுகவணாயில் ஏகச்சக்
கிராதிபத்தியத்தைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களை யாண்டுவந்தஅ
வுணப்பாதகர் தாங்கள்கிடைத்திருந்த செல்வப்பெருக்கினால் முன்பின்
யோசித்துப்பாராமல்யிதக்கம்பூததயவுபச்சியாத்தாபமுதலியசிவகாருண்
ணியமென்பதெவ்வளவுமில்லாமல் தகாதபணிவிடைகளைக்கொண்டு மிக
வும்வருத்தியகாரணங்களினால் மனச்செருக்கற்றுநன்னெறிகளை மறந்து
படாதபாடுகளைப்பட்டுவாடித்திகைத்தும் அச்சஞ்சலங்களுக்கொருதே
றுதலையைக்காணாமல் மதிமயங்கியபீதியினா லொளித்துத்திரிந்து நாட்
களைக்கழித்திருந்த தொண்டர்களிடத்திற் கிருபையுற்றருளுந் தயாரசத்
தைக்குறித்து தேவரீர்சண்முகாரவிந்தங்களைப்பெற் றவதரித்த தல்லது
வேறுமுண்டோ அப்பேற்றினால் வேதவொழுக்கங்களுக்கு விருத்துவ
மாய்நடாத்திவந்த அவுணராசராற்பெற்றிருந்த துன்பங்க ளனைத்தையு
மொழித்து தீராதபழிப்புனாவையும்போக்கிக் கிருதார்த்தராயினோம் யி
துவமல்லாமல் ஆதிநூலாகவிளங்கும் வேதாகம ஒழுக்கங்களையும் சிவபி
ரான்பூர்வீகமாகக்கட்டளையிட்டிருக்கின்ற செல்வவளங்களையும் நமக்கு
உரியபதிகளில்நிலைபெற்றுவாழும் சம்பத்தையும்மற்றுமிராநின்ற பாக்
கியங்களனைத்தையும் யித்தினந்தேவரீர் புதிதாகக் கடாட்சிக்கப்பெற்றத
ல்லதுவேறுமுண்டோ எந்தாய்இனி யெமக்கொரு குறைபாடுகளுமின்
றிவாழக்கடவோம் மேலும் கொடியரிற்கொடியராகவிருந்து மன்னுயி
ரைப்பங்கப்படுத்திவந்த அவுணவீரர்உபத்திரவத்துக்கஞ்சி பழிபாதகங்
களுக்குடன்பட்டு பணித்தவை யனைத்தையும் சிரசாகவகித்துச் செய்து
கொண்டு உயிருடன்திரிகின்றபிரேதங்களைப்போல மனவாட்டத்துடன்
சோர்ந்திருக்கச்செய்துவந்த எங்கள்பகைவரை வகையறக் கொன்றடக்கி
க்கடாட்சித்தமையால் ஐயனேபோனபிராணன்மீட்டும் வரப்பெற்றுள
க்காலத்தினும்பெறவரியாதமகிட்சியை ஒருங்கெய்தக்கிடைத்தனம், ஓ
கர்த்தனே ஆக்குவோனும்ஆக்கிவைப்பவனும்அவற்றிற்குரிய வினைப்போ
கங்களையூட்டியாட்டி யடக்குந்திருவிளையாடல்களைமுடித்து அவ்வினை
தங்களைகண்டுகளித்திருப்பவனும்நன்னெறிகளைவிரும்பி யனுஷ்டித்து
வரும் ஒருவன்பெறவேண்டும் சீவானுபவச்செல்வத்தைத் தரவல்லசாயுச்

சியப்பதவியும் மற்றமிராநின்ற நன்னெறிகளைத் தம்தேவரீர்கிருபை
பெருக்கினாலும் குணாதிசயங்களின் காரணத்தினாலும் தம்மையல்ல
தொன்றில்லையெனத் தெரிந்துகொண்டனம், அத்தகைய பேற்றினை ஏக
காலத்திற்பெற்றவராதலால் யிதுபரியந்தம்செய்துவந்தகொடியமகாபா
தகங்கள்முற்றும் நீறாய் மங்கிப்போகப் பேரருளுக்குப் பாத்திரராய்
மோட்சவீட்டையெளிதிற்பெறவல்லோம் லோகநாயகனே யிதுபரியந்த
ம்நம்மவருக்கடாத யிடர்களைச்செய்துவந்த அவுணப்பாதகரனைவரையு
ம்பொருதழிக்கும் ஏதுவைகளைத்தேடி அடியோங்களைப் பாதுகாத்தாண்
டபடியால் யினியெத்தகைய போகபாக்கியவளங்களையும் வேண்டோம்
சிறந்தமோட்ச சாம்பிராச்சியச் செல்வத்தைத்தரவல்ல அடிகள்திருவடிக
ளுக்குத்தொண்டுபூண்டு வழிபடக்கடவோம்மேலும்யின்னாவினால் யினி
யாதொருதேவதைகளையும்புகழவறியோம் ஒதற்தனே யிக்காலத்திலிரங்
கிஆண்டவாறேநாயினேங்களை வழியடிமைகொண்டு யிற்படிக்கும்கட
த்தேற்றவேண்டுமென்றுதேவர்க்களனைவரும்ஒருமுகத்திற்றுதித்துபற்
பலவிதங்களில் வேண்டுகின்றதறுவாயில் பத்தர் விண்ணப்பங்களனைத்தி
னையும் வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் திருச்செவிகளிற் கேட்டருளிப்
பிரமன்-விஷ்ணு இந்திரனாதியர்மீது கிருபாநோக்கத்தைப் பரப்பியி
னியாதுக்கும் அஞ்சாதீர்களென்றாதரித்தனர்.

---

## இரணியன்புலம்புறுபடலம்

---

சூதபுராணிகர் மனவெழுச்சியுடன் சவுனகாதி ரிஷிகளுக்கு மற்
றையசரித்திரங்களையுஞ் சொல்லத்துடங்கினர்,மேற்குறித்தபடிக்குமகா
விஷ்ணு-பிற்மதேவன்-இந்திரனாதியர்-சண்முகப்பெருமாள்-மகத்துவ
ங்களையும் வீரபராக்கிரமமுதலியகாரணக்களையும்நினைந்துநினைந்துமன
ப்பூர்வகமாகவாழ்த்தியதறுவாயிற்புசபெலபராக்கிரமத்துக்கொப்பற்ற
வீரவாகுதேவர்-எண்மர்-இலக்கர்-படைத்தலைவர்-வீராதிவீரராகியபூத
வெள்ளங்கள்-மனஉச்சாகங்களுடன் கற்தனைபலதிரம்பணிந்து வாயார
ப்போற்றி விழிகள்களிக்கத்தெரிசித்துபூர்ணசந்திரோதயத்தைக்கண்ட
கடலையொப்பக்கல்லென்னும்ஓசையெழச்செயங்களைக்கொண்டாடியிரு
க்கவும்வானத்தில்வேடிக்கைபார்த்திருந்தமுப்பத்துமுக்கோடிதேவர்க
ள்நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள் கெருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்

முதலாகியவானநாடர் சூரன்களத்திற்பட்டொடுங்கியசேதிதெரிந்தமா
த்திரத்தில் ஆனந்தக்கூத்தாடித் துள்ளித்துள்ளிக் கந்தன் பெருமிதங்களை
க்கொண்டாடி அவர்கள் அக்காலத்திற்கொண்ட சந்தோஷப் பெருக்கை
யின்னவிதமென்று யாவராலும்சொல்லிமுடிவதன்று மற்றையபுவனங்
களிலிராநின்ற ஆத்துமகோடிகளனைத்தும்தற்செயலாய் பேரின்பமனு
பவித்து மங்களகரமாகியகாரியங்களை முடித்துச்சொல்லப்படாத மகி
ட்சியிற்றிளைத்திருந்தனர், சூரியசந்திரர் திசைக்காவலர் தங்களைவாட்டியி
ருந்ததுக்கவருத்தங்களையொழித்துச் சிவகுமாரனைத் துதித்திருந்தனர்,
சவுனகாதிரிஷிகளேகேழ்ப்பீராக அண்டபுவனசராசரங்களனைத்தும்பே
ரானந்தக்களிப்பிற்பட்டு மெய்மறந்து வீற்றிருந்ததெனில் மற்றவர்க
ளின்மிகுதியைப்பேசவும்வேண்டுமோ யிப்பிரசாரம் சமஸ்தமும்மனம்பூ
ரித்து விம்மிதப்பட்டிருக்கும்போது ரணக்களத்தில் அவுணர்பெருமா
ன்பட்டதையும் மற்றகாரணங்களையுந்தெரிந்ததூதர்கள் விழிகளில்நீரை
ப்பெருக்கிக்கதறிக்கொண்டோடிபொலிவற்று மங்கலவாத்தியங்களுக்
குமாறுசப்பேரொலியெழ அழுகைக்குரல் மேலிட்டிருக்கும் வீரமாம
யேந்திரபுரியின் நீண்டவீதிகளைக்கடந்துராசபரமேஸ்பரன்வாழ்ந்திருந்
தநகரத்தைச்சேர்ந்து நவரத்தினமயமாய்வானையளாவிநிற்கும்அந்தப்பு
ரத்தில்ஓவென்றழுதுக்கொண்டுபோய்ப்பட்டபூதேவியாகியபதுமகோம
ளையம்மன்பாதங்களில் அடியற்றபனைகளைப்போல விழுந்து வாயினும்
வயிற்றினுமறைந்துகொண்டு கைகால்நடுங்க வாய்குழற யிதனைச்சொல்
லுவதாயினர், ஓமாதாவேமோசம்நேர்ந்தது குறிப்பதற்கு நாவெழவில்
லை ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய் வயிரத்திரேகத்தையும்தீர்
காயசையும் மகதயிஸ்பரியச்செல்வத்தையும்பெற்று எங்களையொத்தவர்
களுக்குக்கற்பகத்தருவைப்போலப் போஷித்துவந்த அவுணர் பெருமா
ன் சூர்மகாராசன் பாலசுப்பிரமணியன் செலுத்தியவேலினாற் பிளப்புண்
டு ரணக்களத்தில்விழுந்தனன், இனியிதற்கென்செய்வோமெனப்புலம்பு
ம்சத்தமானது செவிகளில் விஷத்தைப்போலக் கேட்டமாத்திரத்தில் யி
ணைபிரியாதஅன்றிற்பட்சியைப்போலப் பலகாலம் வங்கணமாகக் கூடி
க்களித்திருந்தவளாதலால் யிடியேற்றின்முழக்கத்தைக்கேட்ட நாகசற்
பத்தைப்போலபதைபதைத்துத் துடிதுடித்து மனஞ்சுழலவிழிகள்சோ
ர்ந்துகைகால்களோய்ந்து யாதொருசெயலுமற்று இலக்குமிக்கொப்பா
கியசுந்தரமுள்ளராசபத்தினி பதுமகோமளைபிராணனையிழந்து விண்ணு
ட்டைச்சேர்ந்தனள், கேட்டீர்களோ சவுனகாதிதவத்தோமனப்பூர்வமா
யிபட்சமுண்டாயிருக்குமாயின் யிப்படிக்கல்லோ நேரவேண்டும்மே
லும்கற்புசதன்மையென்பதை யிப்பதிவிரதையின்பட்சத்திற் பூர்த்தியா

சக்கண்டனம். யிருநிற்க ஆயிரத்தெட்டண்டங்களுக்கதிபனும்சகலரும்
போற்றிவணங்கத்தக்கனாக ஆசுசெலுத்திவந்த சூரபதுமன் மணமுன்
னிலையிலும்சார்ந்தற்வவிவாகமுலமாகவும்சிலநசாய்த்துவந்தும்புஷ்பங்க
ளிலிடத்திற்றேனையுண்டுகள்க்கும்வண்டினங்களைப்போலச்சாசகல்லாய
சிலகளையனுபவித்துக் களித்திருந்தமற்றையதேவியரும் யிந்தகொடிய
சம்பவத்தைத்தெரிந்தமாத்திரத்திற் றீயிற்பட்டபுழுகையொப்பவும் பூ
ஊட்பஷ்பத்தைநிசர்த்தும் நிடுக்கிட்டுத் தாபரித்துநிற்கப்படாமையால்
கோகம்லூசலாடக்கைகால்களுதறலெடுக்கவாய்புலரவிழுந்துமுகப்பொ
லிவற்று தாங்கள்வாழ்ந்த எதுவையனைத்தையும் பன்னிப்பன்னிப்புலம்
பிவாயிலும்வயற்றிலும் மோதிக்கொண்டு பரிமளித்து விசாலமாய்நின்
டிருக்கும் கூந்தல்விழ்ந்துநிலத்திற் புரளத்தக்கதாகத் துக்கசாகரத்தில
மூழ்கிக்களைசாறுது சிலநேரம் சோயித்திருந்தவர்களாய்க் கடையில் ரா
சாதிராசனைப்பிரிந்திருக்கமனமில்லாமல் துணிவுகொண்டுசந்தனம் அகி
லதேவதாருமுதலிய சிறந்தகட்டைகளினு லுண்டாக்கிய அக்கினிகுண்ட
த்தில்விசுவகர்மன்குமாரியாய் தங்களுக்குமூத்தவளாய் பூமிதேவியை
யொத்தபொறுமையும் குணசம்பத்தையுங்கற்புத்தன்மையையுமுடைய
பதுமகோமளையினுதிரோகத்தை முந்திநிமியிட்டுத்தாங்களும்பாய்த்
துமேலாகியபதவியைச்சேர்ந்தனர், உடனேயானுகோபன் எதிர்முகனுதி
யபுத்திரர்தேவியரும் மற்றையசூரர்பத்தினிமார்களுந்தமதுத்தடாகத்
தினிடத்திற்சேர்ந்த தமதினமாகிய சுரும்பினங்களைத்தேடிப் பெண்வண்
டுகள் கலந்துகளிக்குமாறுபோல வானத்தையளாவ எரிக்கின்ற தீ
யினிடத்தில்விழுந்து பரமெதியைக்கிடைத்துக் களித்தனர், சவுனகாதிரி
ஷிகளேமேற்குறித்தபடிக்குப் பதிவிரதாசிரோமணிகளாகவிருந்த அவு
ணராசபத்தினியரனைவரும் அகண்டயிஸ்வரியச் செல்வங்களைவெறு
த்துத்தங்கள்மனதுக்கினிய கணவனைப்பிரிந்திருக்க மனமில்லாமல்அவர்க
ளை நினைந்துநினைந்துபுலம்பினவர்களாய் அக்கினிக்கிரையாய்ப் போன
முன்னிலையில் அப்பட்டணமெப்படிக்குக் காட்டியதெனிற் செக்காதி
ரம்பெற்றயப்பாந்திருந்த மாலைப்போது நேர்ந்தபோது பெருத்துமு
டியாடாந்தகாரமாகியபிருளானது சந்திரன்றேற்றங்கண்டமாத்திரத்
தில்மங்கியடங்குவதைப்போல ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்ராசதா
னியாய்ப்பலவளங்களையும் மென்மேலும் நிறைவெய்திக் கண்டவர்மன
தையும் கண்களையுங்கவர்க்கவல்லமங்களகரமாய்க்கரியத்தோகத்தைப்பெ
ற்ற அவுணப்பாதகருக்கிருப்பிடமாகவுமிருந்த வீரமாமகேந்திரபுரிசித்
சூரபதுமன் ஆணை ஆக்கினைக்குட்பட்டுக் குலவியிருந்த தனிய லட்சுமி
தனலட்சுமி-மனைலட்சுமி- தானியலட்சுமி புத்திரலட்சுமி- பந்துலட்சு

யி-வாசனலட்சுமி-அடிமைலட்சுமியெனச் சொல்லநின்ற அஷ்டலட்சு
மிவிலாசங்கள்முற்றினும் அப்பட்டணத்தைக்கடந்து தமதாசருத்தின்ப
டிக்குப்போயிற்று, யிவ்விதமாகாசாதிராசன்முதலிய சமஸ்தமும்மங்
கியடங்கியதருவாயில் முன்னம்பூதகணத்தலைவருக்கஞ்சியோடி மீனுரு
க்கொண்டுகடலினிடத்தில்மறைந்திருந்த சூரபதுமன் கடைப்பிள்ளை இ
ரணியனென்பவன் அவுணர்பெருமானாகவிருந்த தன்பிதாவானவன் வெ
ற்றிவேலினால் இருகூறாகப்பிளப்புண்டு மஞ்ஞைவாகனமாகவும் கோழிக்
கொடியாவும்நின்றகாரணங்களைப் பார்த்துமாகத்தெரிந்தவுடன் திடுக்கிட்
டுமெய்மயங்கிமிகவும் வருந்திச்சோர்ந்து விழிகளில் நீரைப் பெருக்கிப்
பெருமூச்செறிந்து அவன்பட்டதுக்கவருத்தங்களைச்சொல்லிமுடியவேதா
அதன்பின்புமனத்தாபரியாதவனாய் வானமூலமாகவந்து பிதாவைக்குறி
த்து யிவ்விதங்களிற்புலம்புவதாயினன், அரியதவவிரதங்களைச்செய்தமு
யற்சியினால் அடியேனைப்பெற்றுச் சகலவைபவங்களுடனும்சீராட்டித்த
மதுவிசாலமாகியமார்பினுந்தோள்களினுஞ்சேர்த்துப்பரிவாய்வளர்த்து
வந்தபிதாவே ஆயிரத்தெட்டண்டங்களுக்கு மதிபனாய்ச்சகலரையும் வ
வல்கொண்டு ராசபரமேஸ்பரனாகவாழ்ந்திருந்த சூரனே புயவன்மைக்
கொப்பற்றதீரனே போரிலைக்கிடையாதவனாக விருந்தபோதினுங்காரி
யகாரியங்களை நிதானித்து யிதுநன்றாகுமென்று மேல்நடக்கவிருக்கின்
றநிலைகளுமங்களைநாயினேன் விண்ணப்பஞ்செய்து கொண்டதுகளைச்ச
ற்றும் ஆலோசித்துப்பார்த்து யிதுநல்லகாரியமெனத் திருவுளத்தில் மதி
யாமல்சுற்றத்தீர் ஐயனைவலியபிராணனைப்பறிகொடுத்துமாள்வதற்கோ
சிவகுமாரனுடன் பகைத்துச்சண்டைகொடுக்கத்துணிவுகொண்டீர் ஓ எ
ன்மனதுக்கினியபிதாவே நவரத்தினமயமாய்ப்பார்த்திருக்கும் சபாமண்ட
பத்தில் மன்னமண்டலீசர் சேனைத்தலைவர்கள் மந்திரிபிரதானிகள் புத்
திரவர்க்கமுதலியபெரியோர்கள்போற்றிச்சூழச் சிரோரத்தினமயமாகிய
சிங்காதனத்தில்வீற்றிருந்து அரசுசெலுத்திவரும்தேவரீர் திருக்கோலத்
தைநாயினேனினியெக்காலத்தில்யிந்தபாழத்தகண்களினாற்றெரிசித்து
மகிழ்வேன் தேகத்தைப்பிரிவின்றித்தொடரும்சாயையைப்போலப்பிதாவை
க்கலந்திருந்துகூடியமட்டும்போராச்செய்துபழியையும்செஞ்சோற்று
க்கடனையுந்தீர்த்துக்கொள்ளாமல் என்னுயிரைப்பெரிதாகநினைந்தோடி
யொளித்தனன், குலவன்மையைப்பிழைத்தனன் சவுரியத்தை மறந்தன
ன் யிவன்பிதாவினிடத் தன்புள்ளவனென்று நம்மவர்களிகழ்ந்து வசை
பேசிக்கொள்ளத்தக்கதாக கொடியபாதகனும் அதிக அன்புள்ளவனைப்
போல மனவருத்தத்துடன்பேசிக்கின்றனன், ராசாதிராசன்னமதுச
த்திராதிகள் வல்லமைகளையும் வீரதன்மைகளையும் பலவிதங்களிற் றெ

ரிந்திருந்தும் போர்களத்தில்யாதொரு உதவியையுஞ்செய்யாமற் றேவ
ரீரைத்தனிமையிற் கொடியசண்டைமுனையிற் காட்டிக்கொடுத்துவிட்டு
மானாபிமானமற்றவனா யொளித்தபதிதனென்றிகழ்ந் தென்முனம்வாச்
சகியாமலெவ்விடத்திற் போயிருக்கின்றீர் திருவாயைத் திறந்தொரு உ-
த்திரவுசொல்லலாகாதோ ஓபிதாவே புத்திரனாகவும் சவுரியவானாகவுமிரு
ந்தயான் தருணத்திற்கூற்றுவனையொப்பச் சமனசித்தனைப் நீக்கியபாத
கனைக்கலர்தூறவாடக்கூலவ மனம்விரும்புவீரோ தேவரீர் வருந்திநோற்
றவீரமாமகத்துக்கிரங்கித் திரிநேத்திரதாரியாய் மழுக்கரதலத்தினனாகிய
சிவபிரான்கடாட்சித்திருந்த வரபாலனத்தின் நிச்சயத்தை ஒருபோதும்ம
றக்கவறியீர் அத்தகையசிறந்தவாக்கியம் பொய்பட்டுப் போம்படிக்கு
அடியேன் புத்திரனாகத் தேவரீர் திருவயற்றிற் பிறந்தேன் மேலும் தமக்
கொருஎமனாகவுந்தோன்றினேன் நீரின்மேற்குமிளியைப்போலவும் மி
ன்னலைநிகர்த்தும் சடுதியிலழிந்துபோகும் யிந்தநாற்றவுடலை நிலைப்ப
ட்டதாகமதித்துக்கண்டவுடன் பலரும் வசைமொழிகளையாடிக் கரங்க
ளைக்கொட்டி நகைக்கத்தக்கதாக உம்முடன்சொல்லாமற்போய் விட்ட
னுந்தேவரீர் மாண்டமுன்னிலையில் அதிகஆவலுடன் வந்து உனக்கடுத்த
சம்பவங்களை நினைந்து நினைந்துருகுகின்றனன், யிதனால் மெய்ப்பத்தி
யையும் செயப்பிறதாபங்களையும் எடுத்துப் பேசும்போது நாயினேனை
உலகர்முந்திப்பேசப்படுவரோ பிராணனை இணைத்துணையாகமதித்தப்ப
கைவளாவாட்டவல்லபுசபெலபராக்கிரமசாலிகளாகப்புகழநின்றஅவுண
ர்மாயிற்றேருந்திய வஞ்சகச்சிரேஷ்டனாகிய தீயன்பிதாவானவிமாண்
டபின்புமித்திரனைப்போலக்கிலேசித்துக்கொண்டு வரப்பெற்றனன் மு
ன்வைத்தகாலைப்பின்விடாமற் பகைவரைச் செயிக்கத்தக்க சாமர்த்திய
பராக்கிய தமக்குதவியற்ற கொடியனைப் பிள்ளையென வழங்கிக்கொள்வ
தைப்பார்க்குமிடத்திற் குலஅதமனாகவும் பூமிக்குச் சுமையாகவுந்தோ
ற்றுகின்றதல்லது யாதொருபிரயோசனத்தையுங் காணேன் அவுணர்கு
லவாழ்வே என்னையனே புயவன்மைக் கொப்பற்றவனானே சிருஷ்டிகர்த்த
னாகியபிரமதேவனும் ரட்சகர்த்தனாகிய மகாவிஷ்ணுவும் திரிலோக சக்கி
றேஸ்பரனாகவிருக்கின்ற இந்திரனும் மற்றையதேவர்களினங்களும் அவு
ணராசர் இராக்கதமன்னர் மற்றுமிராதின்றராசராசாக்களும் மகாசபை
யில்விளங்குகின்றசிங்காதனத்திற் றேவரீரைத் தெரிசித்தமாத்திரத்தில்து
யிரதெட்டண்டங்களுக்கும் அரியனே எமதிறைவனே எவ்வெவர்களு
ம்போற்றிவணங்கும் செயப்பிறதாபங்களைப்பெற்றிருக்கின்றவீரதீ
ரனேயென்று பலவாகப்புகழ்ந்த தேற்றத்தக்கதாக அகிலமுஞ் செலுத்தி
அகண்டசாம்பிராச்சியசெல்வவளங்களனைத்தினையும்அனுபவித்துவாழ்

ந்திருந்த தம்மையொத்த பிறவுடைசாரணவர் திரிபுரகலோராய்த் திருநீற்றி
னொளியராய்ச் சுயஞ்சோதிமயமாகவிருக்கின்ற சிவபிரான் திருக்குமார
க்கோலகப்பிரமணியக்கடவுளினது திருத்தேரில் வெற்றித் துவசமாகநி
ன்று நாப்புலர்ந்து சரீரம்வருந்தி விலாவொடியக் கூவுகின்றனையோ தம
துடைநிழலிற்பட்டிருந்த மன்னமண்டலீசர் புசபெல பராக்கிரமசா
லிகளாகியபிறமுகாளனைவரும் தினந்தோறும் காலையில்வந்துவணங்கிப்
போற்றிஎழுமுன் விலையில் நவரத்தினமயமாகிய கிரீடங்களுளைத்தியுறுத்
திசெந்தாமரைமலரையொப்பச்சிவந்து விளங்கும்பெருமிதங்களைவா
ய்ந்ததிருவடிகளைப்படைத்திருந்த தேவரீர் அனற்படிவமாகத் தோற்றி
யிருக்கின்றசரவணபவனை மயிலுருக்கொண்டு மிகவும்வருந்திச் சித்தப்
படிந்துசுமந் திருக்கின்றனையோ யிதுவுமொருநாளோ விதிவலியையம
தியென்றமுயற்சியினுல் வென்றவர்களுலகங்களிலிருப்பரோ எனையனே
யிற்படி யிவ்வாறுநேருமென்று பலபலதிஷ்டாந்தங்களையும் அநுபவ
ங்களையும்காட்டி மனம்வருந்தி விண்ணப்பஞ்செய்துகொண்டபோதி
லும் அவ்வாக்கியங்களைச் சிறுசற்றுங்காதுகொடுத்துக்கேளாமற்போனீ
ர் சூராசக்கிரவர்த்தி மாற்றானைப்போலவந்த பாலசுப்பிரமணிய தேவரு
டன்பகைத்து அகோரமாகிய யுத்தங்களைச்செய்து படையிற்றோற்ற
காரணத்தினுல் மஞ்ஞைவாகனமாகச் சுமந் திருக்கின்றனையோ என்னைய
னேசலனமற்றபெருவாழ்வையிழந்து வயிராத்திரோகத்தையாற்ற வேற்று
ருவாகியபட்சியின் கோலத்தைப்பெற்றிருக்கின்றமையால் நீயிறந்தவ
னுமல்லையாதலால் பழிபாதகங்களுக்கு உட்பட்டுமறைந்திருந்த அடி
யேன்கருத்தின்வண்ணம் வேதவிதியிற்சொல்லும்திலதர்ப்பணமுதலியபி
துர்க்கர்மத்தையும்நடத்தும் பாக்கியத்தைப்பெறாமற் போனேன் அனீ
தமாயிவ்வுடலைச்சுமந்து வசைமொழிக்காளானதன்மையில் யாதொரு பல
ப்பிரப்பட்டத்தியையும்பெறாமல் வியர்த்தனானேன் ஐயனே பிள்ளைமதிசூடி
யசடாமண்டலதாரியாகியசிவகுமாரன் கந்தசுவாமியை புள்ளிபட்டிருக்
கும்தோகைவாய்ந்த மயிலுருப்பெற்றுப்பரித்திருக்கின்றயிக்கால
த்தில் தேவரீர்கருத்துக்குவிருத்துவமாகிய நன்னெறிகளை அடியேன்பல
விதங்களிற்குறித்துக்காட்டியவையும் அதைத்தடுத்துத்தாம் பேசியவாச
கங்களையும் பிதாவேமனதில்நினைந்துநினைந்து வருந்துகின்றனையோ அ
லதுவேற்றுருப்பெற்றமையால்மறந்துவிட்டோ அவுணர்பெருவாழ்
வே சர்வசங்காரகாலத்தில் அண்டபுவன சராசரங்களனைத்தையும் வாட்
டவல்ல வடவாமுகாக்கினியும் பயந்தடங்கத்தக்கதாகப் பொங்கியெழு
ங்கோபாவேசமும் எத்தலைவனையும் சட்டைபண்ணுமல் வாட்டநினைந்
திருக்கும் சவுரியபராக்கிரமங்களும் மனதிற்கூடுங்கொண்டிருந்த மான

மென்னும்பூஷணமும் செயப்பிறதாபங்களும் அரமும் புசபெலபரா
க்கிறமச்சம்பத்தும் யாதொரு பிறையோசனங்களையுந் தராமற்பறந்து
விட்டதன்றியிற் பசைவர்சைவசப்பட்டிருக்கின்ற தேவரீரிடத்திற்சிறிது
ங்கண்டிலன் அவற்றின்கொடுமைக ளனைத்தும் எவ்விடத்தி லடங்கியது
யாதுந்தோற்றாமல்மயங்குகின்ற அடியேனுக்கொரு காரணங் களையும்
சொல்லலாகாதோ ஆதரிக்கினையாயோ தெறுதலையாவது பேசாயோ எ
ன்மனதுக்கினியபிதாவேயென்று யிவ்விதங்களில்இரணியன் பலபலதுய
ரமொழிகளைப்பேசிப்பிறலாபித்து மனந்தளர்ச்சிகொண்டு பெருமூச்செ
றிந்து அருவிகளைப்போலவிழிகளில்நீரைப்பெருக்கிக் கிலேசித்தவனுக்
குச்சடுதியில்பயமுண்டாய் இவடத்தில் ஞனிருப்பதுபூதவிரருக்குச்சற்
றுசாடைதெரியுமாயின் தட்சிணத்திற் பாய்ந்துப் பற்றிப்பிசைந்து கொ
ன்றுநின்று கோபந்தணிவர் யிதற்குப் பிசகிராதென நினைந்து பிதாவை
நீங்கிப்போக மனமில்லாமலருமையில் அத்தலத்தைக்கடந்து பழைய
படிக்குச்சமுத்திரத்திற்பாய்ந்தொளித்தவன் மேல்நடத்தவேண்டியகாரி
யங்களை முடிக்கக்கருதித்துரிதமாய் மாயமந்திரமொன்றை யுச்சரித்துஅ
தன்முயற்சியினால்உருக்கரந்து மறைவிடமாய்ச்சென்று குலக்குருவாகி
யசுக்கிராசிரியனிடத்துக்குப்போய் அதிகக்கிலேசத்துடன் வணங்கிவிழிக
ளில்நீர்பெருகுவதாகரணக்களத்தில் நடந்தகாரணங்களனைத்தையும்சவி
ஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்தவனாய் ஆசிரியனைக்கொண்டுசத்திராதிக
ளுடனெதுத்துப் பொருமுனையிற்பட்டபிதாக்களுக்கும் துணைவருக்கு
ம்தீயிற்பாய்ந்ததாயார்முதலான தம்மினத்தவரனைவருக்கும் நடத்தவே
ண்டிய திலதற்பணமாதியகடன்களை சாத்திரோத்தமாகமுடித்துச்சகல
காரியங்களுமுற்றியவுடன் குரவனிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு
போய்செல்வமானது மமதையிற்றள்ளி துக்கத்துக்குவித்தாக விருந்து
அல்லலிற்றள்ளுவதால் அதைவிடப்பகைவேறொன்றில்லையெனத்துணிவு
கொண்டு அதனிடத்திச்சையில்லாமல்வெறுத்துத்தவவேடத்தைத்தாங்கி
தேவதேவோத்தமனாகியசிவபிரானைச் சித்தத்திருத்தி அரியவிரதங்களைமு
டித்து நற்கெதியைப்பெற்று வாழ்வதாகத் தவங்களைச் செய்துகொண்
டொருபாரிசத்திலிருந்தனன்.

## மீட்சிப்படலம்

சூதபுராணிகர்சவுனகாதிரிஷிகளுக்கு மற்றைய சரித்திரங்களையு
ஞ்சொல்லுவார் மேற்குறித்தபடிக்குச்சூரபதுமன்முதலானவீரனாவாட்
டிச்செயசாலியாய்ப்பிரமன்முதலிய தேவர்க்கள்போற்றிச்சூழத்தக்கதா

தமராகதமலைக்கொப்பாகப் பாரித்த திரேகத்தையும் பசிய தோகையையு
ம்வாய்ந்தமஞ்ஞையூர்வாகனத்தின்மீது ஆரோகணித்திருக்கின்ற பாலசுப்பி
ரமணியதேவர் தமதருகில் உடைவாளாயுதத்தைக் கரத்திற்பற்றிக் கொ
ண்டுநிற்கின்றவீரவாகுதேவரைக் கிருபையாகப் பார்த்தருளி வீராதிவீர
னேகொடுங்கோலைச்செலுத்திவந்த அசுரத்தையினாலழிந்த பாதகனானசூர
பதுமன் அருமையாகத்தேடிய செல்வத்தைப்போல நெடுநாட்களாகத்
தளையிட்டு கடியசிறையில் வைத்து வருத்திவந்ததினால் வாடிமனந்தளர்ந்
திருக்கின்றசயந்தன்முதலியதேவர்க்களைத்தருவிக்கக் கடவையெனத்திரு
வாய்மலர்ந்தமாத்திரத்தில்அதிகவுச்சாகத்துடன்கிரவுஞ்சவரையைப்பிள
ந்தவெற்றிவேலாயுதமூர்த்தியினது திவ்விய சரணாரவிந்தங்களிற் பணிந்
துசுற்தனேதேவரீர்கட்டளையின்படிக் கிந்தநிமிஷத்திலழைத்துவரக்கட
வனெனச்செலவுபெற்றுக்கொண்டு துணைவர் இலக்காதியபிரமுகர்களு
ம்துவரத்தக்கதாகச் சூரபதுமன் அரசுசெலுத்திவந்த கெடில்தலமாகி
ய வீரமாமயேந்திரபுரிக்குள்ளே பிரவேசித்துபதனழிந் திருக்கின்றப
ற்பலவீதிகளைக்கடந்து சயந்தனாதிய விண்ணவர் மனவருத்தத்துடனிரு
க்கின்றசிறைச்சாலையைச்சேர்ந்து நெருங்கிவருமுன்னிலையில் வீரவாகு
தேவர்நகைமுகராய் மனவெழுச்சியுடன் கெம்பீரமாய் நடந்துவரும்கா
ரணத்தையோசித்துநமக்குநல்லகாலம்நேர்ந்ததாகக்காணுகின்றதென்று
சகலவருத்தங்களையுமொழித்து சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய்
பிரிந்ததாயைக்கண்ட கன்றுகளைப்போல ஆவலுடன் விரைந்தோடி பா
தாரவிந்தங்களிற்பன்முறைப்பணிந்து சந்தோஷமிகுதியினாற் றிரேகம்
பூரித்து விலங்குகள்தெறித்துப்போகத்தக்கதாக மகிழ்சிறந்தவர்களாய்
கரங்களைக்கூப்பிக்கொண்டு ஓவீராதிவீரனே எங்கள்குலதெய்வமேபிரா
ணன்நீங்கவிருக்கின்றதறுவாயிற் கிடைத்தஅமுதத்தையொத்ததயாநிதி
யேபலயுகங்களாகப் பகைவர்கொடுமைக்கஞ்சி பூனைவாயிற்பட்ட கிளி
களைப்போல அலைச்சற்பட்டிருந்த அடியோங்கள் துக்கவருத்தங்களை
யொழித்துக்கொண்டுபோக வெழுந்தருளிற்றே யினியாதொருதுன்ப
ங்களுமின்றிபிழைத்தோம்பிழைத்தோமென்று பலவிதங்களாகக் கடலி
னோசையுமடங்கத்தக்கதாகப்போற்றிவருகின்றதறுவாயில்தேவதேவோ
த்தமனாகியசரவணபவன்தம்பியானவர் அவர்களைப்பரிவாகப் பார்த்துஅ
ரியதவங்களைச்செய்து பொன்னுலகவாழ்வைப்பெற்றிருந்ததேவர்களே
மனவருத்தங்களையொழிந்து சந்தோஷமாயிருக்கக்கடவீர்கள்நெடுங்
காலமாய்உங்களையும் மற்றவிண்ணவர்மண்ணவராதியரை எழினையொப்
பஅலைத்திருந்தசூரபதுமனைத் துணைவர் புத்திரமித்திராதியவீரரையும்
அளக்கிறந்தவெள்ளம் ரதகெசதுரகபதாதிகளையும் வகையறப் பாலசுப்

பிரமணியக்கடவுள் அபயப்படுத்தியருளினர், இனிநீங்கள் யாருக்
கும்அஞ்சவேண்டுவதில்லை பிறையாணப்பட்டு வாருங்கோள்வாருங்கோ
ளெனச்சொல்லிய சந்தோஷவார்த்தையானது செவிகளுக்கமுதமாகக்கே
ட்டவுடன்பொருந்தியுடன்சாயுச்சியப் பதவியைச்சேர்ந்தவர்களைப்போல
ப்பேரானந்தவாரியில் முழுகிக் கர்த்தனையும்வீரனையும் பலவிதங்களிற்று
தித்து விழிகளிற்போதநீர்ததும்ப மயிர்சிலிர்த்து உடனே கால்களில் மா
ட்டியிருந்த பாரவிலங்குகளைக்கழற்றியெறிந்துபோட்டு தேவர்கள் அ
ரம்பையர்சூழ்ந்துவரச் சயந்தராசன்வீரவாகுதேவருடன் அவுணராசன்
பதியைக்கடந்துவெளிவந்து பெரும்புறக் கடலைப்போல ஆர்ப்பரித்தி
ருக்கின்ற பூதப்படைகளாதியவீரர்கள் நெருங்கியிருக்கின்ற சமரவெல்
லையிற்சேர்ந்து அவர்கள்மத்தியிற்சுயஞ்சோதிமயமாய்மஞ்ஞைவாகன
த்தின்பிடரியில்விளங்கும்குமாரதேவரைவிழிகள்களிக்கத்தெரிசித்தமா
த்திரத்தில்அகமுகமலர்ச்சியுடன்திருவடிகளில்மும்முறைவலம்வந்துசே
வித்துக்கொண்டவர்களாய்வேதவாக்கியங்களினாற்சிவகுமாரன்திருநாம
ங்களையெடுத்தேற்றிவாழ்த்துகின்ற தருவாயில்சரவணபவன் அவர்களிட
த்திற்கிருபாநோக்கத்தைப்பரப்பிப்பேரருளைக் கடாட்சித்துத்தேவர்க்க
ளைநன்னெறிகளிற்பிசகி சகலரையும்அலைத்திருந்த தாரகன்நகரத்தில்ப
லகாலம் அரியசிறையிற்பட்டு வருந்தியிருந்தீர்கள் யினியாதொருதுன்
பங்களுமில்லாமற் பழையபடிக்கு பொன்னுலகைச்சேர்ந்து மகதயிஸ்
வரியச்செல்வவளங்களையனுபவித்துக்களித்திருக்கக்கடவீர்களெனத்திரு
வுளம்பற்றியமாத்திரத்தில் விண்ணவர்கொண்ட மகிட்சியையிவ்விதமெ
னச்சொல்லிமுடிவதோ தட்சிணத்திற்சகலரும் பாலசுப்பிரமணியதேவ
ர்திருவடிகளில்மீட்டும்பணிந்து யிருமருங்கினும் துதித்திருக்கின்றதரு
வாயில் சயந்தனானவன் நீருண்டகாளமேகவரவை யெதிர்பார்த்திருக்கின்
றமயிலையொப்பப் புத்திரவாஞ்சையுடன் நிற்கின்ற பிதாவாகியதேவேந்
திரன்பாதங்களிற்பணிந்தபோது அதிகஆவலுடன் வாரியெடுத்துமார்பி
லணைத்துத்தொடையின்பேரில் வைத்துக்கொண்டு உச்சியைமோந்துமு
த்தமிட்டு முதுகைத்தடவிக்கொடுத்து கிருபையாகப்பார்த்து பிள்ளையா
னவன் தன்னைநீங்கிப்பகைவன்பட்டணத்திலரியசிறையிலிருந்தகாரண
த்தினால் வாடிப்பொலிவற்றிருந்த முகமண்டலமானது சூரிய னுதயத்
தைக்கண்டதாமரைக் கமலத்தைப்போல விளங்கத்தக்கதாக மனம்பூரித்
துக் களித்தவனாய்ச்சொர்க்கலோகவாழ்வைப் பெறவிருக்கின்ற சந்தோ
ஷத்தினும்பதின்மடங்குமனவெழுச்சிபெற்றுபீதாம்பரத்தொங்கலா
ல்முகத்தைத் துடைத்துக் கொஞ்சியவார்த்தைகளுட னிதனைப்பேசுவதா
யினான், என்மனதுக்கினிய புத்திர ரத்தினமே கண்மணியே பொன்னுல

ருக்காமே நாம் முன்ஞ்செய்த வல்வினையின் கொடுமையினாற் பலயுகங்
களாய்க் கொடிபாதகனாகிய சூரன்பட்டணத்தி லடைபட்டு பாரவிலங்
கைப்பூட்டி யிட்டதகாதபணி விடைக ளனைத்தையும் செய்துசெய்து மி
கவும்வருந்தினையோ திரோகமெலிந் திளைத்தனையோ அக்காலத்தில்லெண்
ணுதெல்லா மெண்ணியெண்ணிக் கிலேசித்தனையோ அரிதிற்பெற்றெடு
த்தபிரியமுள்ள உன்தாயைநினைந்து களைத்தனையோவென்று அன்பின்
பெருக்கத்தினாற் பலவாகப்பேசினன், சவுனகாதிரிஷிகளே அக்காலத்தில்
இந்திரன்கொண்ட சந்தோஷமிகுதியை யொருவராலும் சொல்லிமுடி
வதன்று இவ்விதமாகப் பிள்ளையுடன் குலவிக்கொண் டிருக்கின்ற தரு
வாயிற் சிறைவிடுபட்டுவந்த தேவர்க்கள் தமதிறைவன் திருவடிகளில்வண
ங்கியதருவாயிற் றனித்தனிதழுவி அவர்கள் பட்டிருந்த துக்கவருத்தங்
களுக்கிரங்கிப் பரிவுடன் விசாரணைசெய்து ; இனிநமக்கொரு துன்பங்
களுமில்லாமற் பதியைச்சேர்ந்து பழையபடிக்கு வாழ்வோமென்று சில
தேறுதலைகளைச்சொல்லி அவர்களுடன் இந்திரன் களித்திருந்தனன், இவ்
விதங்களாகச் சகலரும் ஆனந்தவாரியிலழுந்தி அகமுகமலர்ச்சியுட னிரு
க்குமுன்னிலையிற் சமர்க்களத்தில் அவுணப்பாதகரால் மாண்டுபோனபூ
தப்படைகள் முதலானவர்க ளுயிர்பெற்று வருவதாகச் சிவகுமாரன் தி
ருவுளத்திற் சிந்தித்தமாத்திரத்தில் நித்திரைதெளிந் தெழுபவரைப்போ
லச்சகலரும் வெளிவந்து பெரும்புறக்கடல்பெருகியதைப்போல ஆர்ப்
பரித்துக்கொண்டுவந்து குமாரதேவர் பாதாரவிந்தங்களில் விழுந்து
சேவித்துக்களித்தவர்களாய்த்தங்களினத்துடன்கலந்திருந்தனர் அக்காட்
சியெப்படிக்கிருந்ததெனில் விசாலமாய் ஆழ்ந்திருக்கின்றசெலப்பெரு
க்கினைவாய்ந்தகடலினிடத்தில் மேகசாலங்கள் மின்னியிடித்துப்படிந்த
தைப்போலக்காட்டியது அதன்பின்பு கிருபாநிதியாகிய சரவணபவன்த
மதருகில்நிற்கின்றவருணராசன்மீது விழிகளைப்பரப்பிச் சூரபதுமனுக்
குவாசஸ்தலமாகவிருந்த வீரமாமயேந்திரபுரத்தை வானத்தை யளாவநி
ற்கின்றமதில்மாடமாளிகைகள் -சித்திரக்கூடங்கள்-உப்பரிகள்மற்றவை
ங்களனைத்துடனும்அழித்து பழையபடிக்குநீரிற்கரைத்து ஏகசமுத்திர
மாக்கக் கடவையெனத் திருவாய்மலர்ந்தவுடன் மகாபாக்கியமென்றுவ
ணங்கிவிடைபெற்றுப்போய் அலைகளைமென்மேலும்பெருக்கிமயேந்தி
ரபுரியைச்சூழ்ந்திருந்தமதில்-கொம்மைகள்-கோபுரவாயல்கள்- உப்ப
ரிகைகள்-மாளிகைகள்சித்திரக்கூடங்கள்-அங்காடிவீதிகள்-ரதகெசதுரக
பதாதிகளுக்கேற்படுத்தியிருந்தவிடுதிகள்-அவுணராசன் வாசமாயிருந்த
நகரதிலிருந்தமாடங்கள் அரமனை ஆஸ்தானமண்டபமுதலிய வளங்க
ளனைத்தையும் அலைத்துச்சாடி தும்சம்பண்ணி மகாவிஷ்ணுபூமியையுண்

டதைப்போலப் பாதலவனாயிற் செல்லித் தறைப்படுத்தி யாதொன்றுந்
தோற்றாமல்அழித்தபின்பு அதிலிருந்த அவுணர்பெண்டுபிள்ளைகளுடன்
கடலிற்சேர்த்துவிட்டவனாய்க்கர்த்தன் சன்னிதானத்துக்குவந்துதேவரீர்
கட்டளையின்படிக்குநகரத்தைச்சிதைந்து செலத்திற்கலந்துபனமுயபடி
க்குச்சமமாக்கினனென விண்ணப்பஞ்செய்தனன், யிச்சம்பவம்நேர்ந்த
தைத்தெரிந்த பிரமன்-விஷ்ணு-இந்திரனாதியர் மனமகிட்சியுடன்பால
சுப்பிரமணியரைவாழ்த்திக் கடற்கிறைவன்வல்லபத்துக்குக் கொண்டா
டியிருந்தனர், யிப்படிக்குச் சகலமுமுற்றியவுடன் குமாரதேவர் மஞ்
ஞைவாகனரூடராய் தேவர்க்கள்சூழ்ந்துவர ரணக்கள வெல்லையைக்கடந்
துவானவழிக்கொண்டு துணைவர் இலக்சருடன் போருமுன்னிலையில் இர
ண்டாயிரம் பூதவெள்ளங்களும் படைத்தலைவர்களும் செயஉச்சாகங்க
ளுடன்செயபேரி ரணபேரிமுதலிய மங்கலவாத்தியங்களை அண்டங்கள்
திரமுழக்கிக்கொண்டு நடந்த தறுவாயில் அவ்வெல்லையையும் சமுத்திர
ராசன் உருத்தெரியாமல் மாற்றிவிட்டதுமன்றியில் அம்மார்க்கத்திற்சொ
ர்ணமயமாய் விளங்கிக்கொண்டிருந்தஇலங்கையையும் மற்றப்புறங்களி
ற்போற்றுதலாகநின்றவையனைத்தையும்களைத்துச்சமமாக்கினன், யிந்த
வேடிக்கைகளைப்பார்த்துக்கொண்டுகடலைக்கடந்து கந்தமாதனவரையை
த்தாண்டித்தாம்முன்னமெழுந்தருளியிருந்த மகத்துவமுள்ள திருச்செ
ந்திற்பதியைச்சேர்ந்தவுடன் மரகதமலையைப்போலக் காட்டும் அழகிய
கலாபத்தைவாய்ந்த மயில்வாகனத்தில்நின்றும் குமாரசுவாமியார் யிறங்
கிவிஷ்ணுபிரமனாதியர் செயசெயவெனப்போற்றி யிருபாரிசங்களினும்
சூழ்ந்துவரத்தக்கதாக நவரத்தினமயமாய்ப் பார்திருக்கும்சபாமண்ட
பத்திற்போய் பொன்மலையையொப்ப விளங்கிக்கொண்டிருக்கும் சிங்
காதனத்திலெழுந்தருளி சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் அல்லலின்
றிப்பாதுகாத்துரட்சிக்கும் அருட்பார்வையுடன்கொலுவிருந்தனர், மற்
றையரும் தத்தமதுஸ்தானங்களில் கர்த்தன்மீது விழிகளைச்செலுத்தி அக
முகமலர்ச்சியுடன் களித்து சந்தோஷவார்த்தைகளை யாடிக்கொண்டிருக்
கிறதறுவாயில் அத்தினப் போதுகழிந்து சூரியபகவான் மேற்றிசைக்க
டலில்மூழ்கினன், அதெப்படிக்கிருந்ததெனில் ஒருகுடியிற்பிறந்தநம
துசாயாதிகளாகிய அவுணரனைவரும் மாண்டனர், மேலும் நமதுகிரணங்
கள் அவர்கள் களேபரங்களினும ரத்தமாம்சப் பெருக்கினுந் தாக்கியது
ஆதலால்அச்சூநகத்தையும் ஆகுசத்தையும்எககாலத்தில் நீக்கிக்கொள்ளு
ம்பொருட்டு ஒற்றைவண்டிலையும் எழுபச்சைக்குதிரைகளையும்பூண்டு அ
ருணன்சாரத்தியஞ்செய்யத் தேரைத் துரத்திக்கொண்டுபோய் செலத்தி
ல்முழுகுகின்றவனைப்போலக்காட்டியது, யிப்பிரகாரம்ஆதித்தன்அஸ்த

மித்தநவாயிற் செக்கர்வானந்தோற்றியதைப் பார்க்குமிடத்திற் கடை
யுகத்திலுலகங்களனைத்தையும் வாட்டநின்ற வடவாமுகாக்கினியானது
அவுணவீரரனைவரும் வகையறமாண்ட செய்தியைத் தெரிந்தவுடன் மனம
கிழ்ந்துயிப்பாதகருக்கஞ்சி பலநாட்களாகநமதுவிருப்பனைத்துமடங்கி
யிருந்தனம் இனி அல்லலற்றுதினத்தைக்கழிக்கலாகுமென்னும் மனவெ
ழுச்சியினால்கிரோதம்பூரித்து நிவந்தகாலத்தில் அதன்சுவாலை தாக்கியதை
யொப்பச்சிவந்துவிளங்கியது, அக்காலத்திற் பிரமன்-விஷ்ணு-இந்திர
னாதியர் ஒருநினைவைக்கொண்டெழுந்து பாலசுப்பிரமணியக் கடவுளைவ
ணங்கி கர்த்தனே கொடியபாதகராகிய அவுணர் உபத்திரவங்களிற்பலநா
ட்கள்மிகவும்வருந்தி நன்னெறிகளைமறந்து பலதீங்குகளைத் தேடிக்கொ
ண்டனம், யிக்காலத்தில் மனவருத்தங்களைப்போக்கி ரட்சித்தகடவுளுக்
குளங்களாற்செய்யும்கைம்மாறுண்டோ ஆகிலும்சகலபாபங்களையும்போ
க்கிக் கிருதார்த்தராதற்பொருட்டுதேவரீர்திருவடிகளைப்பூசித்துவாழவிரு
ப்புற்றதால்யிந்தவரபாலனத்தைத் தரவேண்டுமென் றிரக்கின் றதேவர்க்க
ளிடத்திற்பரிவாய்உங்கள்கருத்தின்வண்ணம் முடிக்கக்கடவீர்களெனத்
திருவாய்மலர்ந்தமாத்திரத்திற் சந்தோஷசாகரத்தில் முழுகினவர்களாய்
ப்பலவாத்திரத்தித் திருமஞ்சனதூபதீபநைவேத்திய புஷ்பமாதிய பூ
சாதிரவியங்களனைத்தையுந்தரிவித்துக்கொண்டு ஆதியில் எமதிறைவனாகி
யசிவபிரான் பராசத்திக்குப்போதித்திருக்கின்றஆகமசாத்திரப்பிரமாண
ப்படிக்குச் சரவணபவனைப்பரிசுத்தமாகியவாளம்செங்கையின் தீர்த்தத்தி
னால்முழுக்காட்டி பனியையொப்ப விளங்கிக்கொண்டிருக்கும் மிருது
வாகியவஸ்திரத்தினால் யீரத்தைப் புலர்த்தி விலையுயர்ந்த பீதாம்பரத்தையு
டுத்தித்திருநீற்றுக்காப்பிட்டுத் திலதப்பொட்டுமிட்டு திவ்விய சுகந்தங்க
ளைவீசும் கலவைச்சாந்துபுனுகுகஸ்தூரியைத்திமிர்ந்து சிரோரத்தினமய
மாய்ச்சொலித்துக்கொண்டிருக்கும் அழகியவயிரமுடியைச் சிரங்களிற்
றரித்து வாகுவலயங்களைப்பற்வதாகிருதியாக ஓங்கியிருக்கும் புயங்களி
ல்மாட்டி அர்த்தசந்திரனையொப்பக்காட்டும் திருநுதல்கடோறும்வீ
ரபட்டங்களையிறுக்கி பன்னிருசூரியர்தோற்றம்போல மகரகுண்டலங்
களைச்செவிகளிற்றொங்கவிட்டுமுத்துமாலை-மோகனமாலை-சரப்பளிபத
க்கம்-முப்புரிநூல்விதங்களை விசாலமாகத்தோற்றும் மார்பினிடத்தில
ணிந்து வயிரக்கங்கணங்களைக்கரங்களிற்சேர்த்து விரல்கடோறும் மோ
திரங்களைத்தரித்துப் பொன்னரைநாண் அரைச்சலங்கைகளை யிடையிற்ற
ரித்து பாடகம்-சிலம்பு-தண்டை-யிவற்றினைத் திருவடிகளிற்சூடியிவ்வி
தங்களாச்சகலபணிகளையும் அலங்கரித்தவுடன் தேன்சொரிமல்பரிமளி
த்திருக்கின்ற பஞ்சகற்பகப்புதியமலர்களினாற் றொடுத்திருக்கின்ற தொ

ண்டைமாலை தண்டைமாலையாதிபரிசிங்காரங்களைச் சிரசுாள்முதல் பாதவ
ணாயிற்சாற்றிமுற்றியவுடன் திட்டுப்பால்-வடை-அதிரசம்-தோசை அ
ப்பம்-சுண்டல்முதலிய-பலகாரவகைகளையும்,மா,வாழை-பலா-வாதியக
னிவகைகளையும்திரட்சியாகப்பொற்பள்ளயங்களிற் சேர்த்துத்திருமுன்
புவைத்து நிவேதித்தவுடன் சாம்பிருணிதூபம் கற்பூரநீராஞ்சனமுதலி
யசுடர்களைக்காட்டி அருகு ஆலவட்டம் மயிர்ப்பிஞ்சமுதலிய சோடசஉ
பசாரங்களையும் விதிப்படிக்கு முடித்தானபின்பு மனமும் விழிகளுங்க
ளிக்கத்தெரிசித்துத் தேகபரவசத்தராய் மெய்ப்பத்தி விசுவாசத்துடன்
விழிகளில்ஆனந்தவாரிபெருக்கெடுத்தோட மும்முறைவலம்வந்து அஷ்
டாங்க-பஞ்சாங்க-திரியாங்க-ஏசாங்கவிதங்களிற் திருவடிகளிற்பணிந்
துகிறுகாற்தராயெழுந்து கரங்களைக்கூப்பிக் கொண்டு சன்னிதானத்து
க்கெதிரில்நின்று சிவகுமாரன்திருநாமங்களை வேதவாக்கியங்களினாலெ
டுத்தேற்றி அவன்பெருமைகளையுங் குணாதிசயங்களையும் பலவிதங்களி
ற்போற்றி வருபவரிடத்தில் எமதிறைவன் அதிக பிரியத்துடன் கிருபா
நோக்கத்தைப்பாலித்து ஓ தேவர்க்களே யின்னமு முங்களுக்கேதேனு
ங்குறைபாடுகளிருப்பினும் யெத்தகைபேறுகள்வேண்டினும் உங்கள்
மனோபீஷ்டங்களைச் சந்தேகமில்லாமற்கேட்டுக்கொள்ளக்கடவீர்களெ
னத்திருவுளம் பற்றியபோது மனவெழுச்சியுடன் இதனைவிண்ணப்பஞ்
செய்வதாயினர், தேவதேவோத்தமனே கேட்டருள்கநூற்றெட்டுகவரை
யில்ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்ச் சகலனாயும் தன்னானை
யாக்கினைக்குட்படுத்தித்தகாத ஏவல்களைக்கொண்டுவருத்திக்கொடுங்கோ
லைச்செலுத்திவந்த சூரபதுமனைவம்சநாசமறக்களைந்துஅளவற்றகாலமா
ய்க்கொடிய துன்பங்களையனுபவித்து மனம்வருந்தியிருந்த எங்கள்கு
றைபாடுகளையொழித்து அல்லலற்று மனக்களிப்புட னிருக்கத்தக்கபெ
ருவாழ்வைத்தந்தீர் யித்தகையதேவரீர் திருவருளைப்பூர்த்தியாகக் கிடைத்
திருக்கின்ற அடியோங்களுக்கிதனிலும் வேறுமொரு பேறுமிருக்கின்ற
தோ ஆயினும் கர்த்தனே நாயினேங்கள் மனவிருப்பத்தைச்சன்னிதானத்
தில்விண்ணப்பஞ்செய்வதாவது யித்தேகம்நிற்கின்றபரியந்தம்மெய்
ப்பத்தியுடன் தேவரீர்திருவடிகளுக்கன்பு செலுத்தத்தக்கவரத்தினைவே
ண்டுகின்றனம் யிப்பேற்றினைத்தந்தாள்கவென் றிரக்கின்றதேவர்க்களிட
த்திற்பரிவாய்உங்கள்மனோபீஷ்டப்படிக்குக்கடாட்சித்தனமெனத்திரு
வாய்மலர்ந்தமாத்திரத்திற் தேகம்பூரித்து விழிகளில்ஆனந்தவாரிபெரு
கக்களித்தவர்களாய் மகாவிஷ்ணு-பிரமன்-இந்திரனாதியதேவர்க்கள்மன
ப்பூர்வகமாய்கல்லென்னுமோசையெழ மண்ணவர் விண்ணவர் முதலி
யசகலரும் புகழும்பெருமையினையுடைய கந்தசுவாமியைத் துதித்திரு

ந்தனர், சவுனகாதிரிஷிகளே யிவ்விதமாகக்கடவுளர் கிடைபாக திருவரு
ளைப்பெற்று மனவெழுச்சியுடன்போதுபோர்குமுன்னிலையில் உலகங்க
ளில் வாசமாயிருக்கின்றபிராணிகளைக் கொடியஎமனைப்போல அலைத்து
வருத்திவந்தகரியதிரோகத்தைப்பெற்ற அவுணப்பெருக்கைப் போலக்கா
டாந்தகாரமாகிய யிருள்யாந்திருந்த அவ்விரவானது அவர்கள்நாசப்பட்
டதைப்போலக்காழிந்து வானமெல்லைமுற்றினும் முத்துகளை யொப்பப்
பரந்திருந்தநட்சத்திராசிகள்மறைந்து தமன்னுயிரனைத்தும் களித்தெழு
ம்படிக்குக்கடையுகத்தில் அண்டபுவனசராசரங்களனைத்தினையுமெரித்த
ழிக்கவல்ல உருத்திரமூர்த்திக்கொப்பாக ஒற்றைவண்டிலையும் ஏழுபச்சை
க்குதிரைகளையும்பூண்டு அருணன்நடாத்துந் தேரினிடத்தில் ஆரோகணி
த்துச்சூரியபகவான் கீழ்ப்பாரிசத்தில்விளங்கும் உதயகிரியிற் றோற்றி
னவராய்த்தமது திருத்தேரை நடக்கவொட்டாமல் மறித்துப் போராடிவ
ரும் அவுணர் இராக்கதரை வாட்டித்துரத்தச்செலுத்தும் பிரகாசம்பொ
ருந்திய கணைகளைப்போலக்கிரணங்களை விரித்து சத்துருக்களை யொப்ப
வீதி உலகங்கிளிலடர்ந்துமயக்கியிருந்தயிருட்பெருக்கனைத்தையும்வா
ட்டி அவர்கள்சரீரங்களிலிருந்தொழுகித்தோய்ந்த உதிரத்தைப்போலச்சி
வந்துமெல்லமெல்ல வானவழிக்கொண்டு ஆயிரங்கிரணசமோகங்களை
ப்பூர்த்தியாகப்பரப்பிப் பிரபஞ்சங்களை விளக்கி பிராணிகளனைத்தும் அக
முகமலர்ச்சிபெற்றோங்கத்தக்கதாகத் தன்னெறியிற்சென்றனன், யிவ்வி
தமாகப்போது விடிந்தவுடன் திருச்செந்திற்பதியிலெழுந்தருளியிருக்கி
ன்றகுமாரதேவர் தமதுபிதாவாகியசிவபிரானை வழிபடுங் கருத்தினராய்
தேவசிற்பியினால்பிரகாரகோபுர மண்டபமுதலிய சிறப்புகளைக்கொண்
டிருக்கும் ஆலயமொன்றைப்படைப்பித்து சுயஞ்சோதிமயமாகவிளங்
கும் இலிங்கத்தைச்சாத் திரோத்தமாகத் தாபித்து பஞ்சகவ்விய முதலா
கிய பூசாதிரவியங்களைத்தேவர்களைக்கொண்டு தருவித்து கங்காசலத்தினு
ற்றிருமஞ்சனமாட்டி யீரத்தைப்புலர்த்தித் திருநீறணிந்து விலையுயர்ந்த
பீதாம்பரத்தையுடுத்து நவரத்தினாபரணங்களைச்சூடி கற்பகமலர்மாலை
களைத்தரித்து சந்தனத்தேய்வை புனுகு சவ்வாது முதலிய பரிமளதிரவிய
ங்களைப்பூசித் திரட்டுப்பால்பலகாரவகைகள் கனிவிதங்களைப் பொற்பள்
ளயங்களிற்படைத்து நிவேதித்தபின்பு தூபதீபமுதலிய சோடசஉபசா
ரங்களைச்செய்து மும்முறைவலம்வந்துபணிந்து வேதவாக்கியங்களினு
ற்பரமன்சகத்திரத்திருநாமங்களையெடுத்தோதி மனமும்விழிகளுங்களி
க்கத்தெரிசித்து வாழ்த்தினர், அக்காட்சியைத்தேவர்க்கள்மனமும்என்பு
ங்குழையத்தக்கதாகக்கண்டு ஆனந்தபரவசத்தராய்ப் பரமனைப் போற்
றிக்கிறதாற்றராயிருந்தனர்,

சூதபுராணிகர் சவுனகாதி ரிஷிகளைப்பார்த்து மேற்குறித்தபடி க்கு ஆகமசாத்திரப்பிரகாரணமாகச்சிவகுமாரன்பரமனைப்பூசித்துவழிபட் டவுடன் திருப்பரங்குன்றென்னும்ஸ்தலத்துக்குப்போவதாகநினைந்தவ ராய்த்தங்கமயமாய்நவரத்தினகாந்திகளைவீசிக்கொண்டிருக்கும்ஆலயத் தைக்கடந்துவெளிவந்துசொற்னமாகதமொருமித்தனைமந்தனைப்போல ப்புள்ளிபட்டிருக்கும் பசியகலாபத்தைவாய்ந்த மஞ்ஞைவாகனத்திலெ ழுந்தருளி கர்த்தன்கட்டளையின்படிக்குத்தத்தமது வாகனங்களில் ஏற்றி ருந்து மகாவிஷ்ணு-பிரமன்-இந்திராதியதேவர்கள் ரிஷிக்கூட்டங்க ள்வீரவாகுதேவராதிய துணைவர்கள் இலக்கர் படைத்தலைவர்மனவெழுச்சி யுடன்புடைபரந்து நெருங்கிவரத்தக்கதாகச்சரவணபவன் திருச்செந்தி ற்பதியைக்கடக்குமுன்னிலையிற் சூரியனைப்போலப் பிரகாசித்திருந்தசி காங்களாதியவளங்களைக்கொண்டிருந்த ஆலயமருங்கெங்கணும் நெருங் கியிருந்தயிரண்டாயிரம் பூதவெள்ளங்களும் செயவுச்சாகங்களுடன் செயபேரி ரணபேரி-குடமுழா-சல்லரி-மல்லரி-திமிலை-தக்கை-மொந் தை-தவுண்டி-மத்தளம்-தாளம்உடுக்கை-எக்காளம்-சின்னமுதலியதோ ற்கருவி-துளைக்கருவி-நரம்புக்கருவி-கஞ்சக்கருவி-மிடற்றுக்கருவி-வி தங்களாகியபதினெண் மேளவாத்தியங்களையுந்திசைகளதிரத்தக்கதாகமு ழக்கிக்கொண்டு பெரும்புறக்கடலைப்போல ஆரவாரங்களைக்காட்டித்த மதுதலைவனைச்சேர்ந்து நடக்கும்போதெழுந்ததூளிபடலமானது பெ ருத்துதிசாதிசைகளைத்தூர்த்து சமுத்திரத்தைச் செருக்கியதன்றியிற்றெ ய்வலோகத்தினும்பரந்தது, யிதையோசிக்குமிடத்தில் விவேகஞானியராக விருக்கின்ற கீழ்மக்களாயினும் பேரறிவைப் பெற்றிருக்கின்றமகத்துக் களைச்சேரப் பெறுவராயின் பாபரகிதராய் நற்கதியைச்சேர்ந்து வாழ்வ ரென்பது உண்மையாதலாற் பத்திமான்மியங்களிற் சிரேஷ்டராகவிருக் கின்ற சிவகணங்கள் பாதப்பரிசப்பட்டமாத்திரத்திற்பூமியும்பவுத்திரப் பட்டு பொன்னகரவாழ்வைப்பெறலாயிற்று, அக்காலத்திற் பலபூதர்கள் பலநிறப் பட்டுகளினாற் செய்திருக்கின்ற கொடிகளைத்தாங்கிச் செல்வ தைப்பார்க்குமிடத்திற்சூரியசந்திராதியநவக்கிரகங்கள் மற்றையராசிக ள்முதலாகக்கர்த்தன்தெரிசனத்துக்குவந்துகாத்துப்போவதையொத்தும் வெண்பட்டுக் கொடிகள் வானத்தையளாவப் படபடத்த தொனிகளுட ன் அசைவதெப்படிக்குக்காட்டியதெனில், வானதேவதை சிவகுமாரன்மீ து தாசிபடியாமலசைப்பதையொத்தும் ரணபேரி செயபேரிமுதலியம ங்கலவாத்தியங்களின்முழக்கத்தின் பேரொலியானதுகோடையிடிகளைப் போலமண்விண்ணெங்கணும் குமிறிக்காட்டவும் வெண்பட்டாடைகளி னால்வட்டமாக்கி முத்துச்சரங்கள்சுற்றினுமசைய நீண்ட பொற்காம்புக

ளிறுச்சியி லசைந்துகொண்டுபோகும் நவிகைகளின் காட்சியானது வி
ண்ணவர்தேவமூராசங்களைத்தாங்கிச் செல்வதுக்கொத்தும் வானத்தைமு
ட்டநிவந்தசைந்திருக்கின்ற துசபடங்களைப் பார்க்குமிடத்திற் சூரியன்
வெப்பத்தினாற்கொதிப்பெடுத்து அலைகளைப்பெருக்கிச்சூடுகொண்டிரு
க்கும் வானகெங்கையினது தீட்சணியத்தை விசிறியாற்றுவதுக்கொத்து
ம்சேனைப்பெருக்கின் மத்திமத்தியிற் பலவாத்தியங்கள்முழங்குவதைப்
பார்க்குமிடத்திற் பாலசுப்பிரமணியதேவர் அவுணப்பாதகருக் கிடங்
கொடுத்தனையெனக்கோபித்துக் கடற்சிறைவனைத் தெண்டித்தகாலத்திற்
பயப்பிரந்தியினால் அலைகளைச்சுருக்கிக் குமுறிவருந்தியதைப்போன்று
ம்மிவ்விதசம்பிரமங்கள்மத்தியிற் சரவணபவனேறி நடாத்தும்மயிலா
னது அண்டங்களதிரக் கூவுமொலியைப் பாதலத்தில் வாசமாயிருந்துயி
ப்பூமியைத்தாங்கிவரும் ஆயிரம் பணாமகுடத்தை யுடைய சேடனாகிய
நாகராசாக்கள்கேட்டமாத்திரத்தில் திடுக்கிட்டு குலைகுலைந்து புரளும்அ
சைவையமயில்தெரிந்து துரிதமாய்க்கூரியதன்மூக்கினால் நிலத்தைக் குற்
றிக்குற்றிச்சோதித்துநடக்கவும் சிவகுமாரன் திருத்தேரினுச்சியிற்றுவச
மாகநிற்கின்றசிவந்தகொண்டையையுடையசேவலானது கொடியபட்சி
யாதலால் வானத்திற்செல்லும்மேகசாலங்களை வயிரத்தையொத்த மூக்கி
னாற்கீறி செலத்தையுண்டு அவற்றினிடத்திற்றோற்றும் யிடிகளைப்பரல்க
ளென்றெண்ணிக் கொத்திக்கொத்தியெறிந்தும் நட்சத்திரங்களைப்பொ
ரிகளாகமதித்திறைத்தும் யிவ்விதச்சிறப்புகளுடன் போறமுன்னிலையில்
பூதவெள்ளங்கள் அதிகஉச்சாகங்களுடன் நாற்புறங்களினுங் கற்றனைச்சூ
ழ்ந்துவர பஞ்ஞைவாகனத்தைக்குமாரதேவர் நடத்திக்கொண்டுதிருச்செ
ந்திற்பதியி னெல்லையைக்கடந்துசரபசார்த்தூலங்கள்சஞ்சரிக்கத்தக்கா
னகவழிக்கொண்டுபோகுமார்க்கத்திற்காட்டியவினோதங்களைக்கேட்பீரா
கப்பூதவீரர்கள்கெலிப்புடன் அண்டங்களதிரவசனிக்கும்பேரொலியை
க்கேட்டமதயானைகள் தாங்களுண்ட வெளாங்கனியினது பயனைக்கிறிகித்
துக்கொண்டுவெறுங்குடுக்கையைத் தள்ளுமாறுபோல திடுக்கிட்டுப்பய
த்துடணர்வற்று உதைத்துக்கொண்டு விழுந்துருளவும் உலகத்தில்வா
ழும்பிராணிகள் தாங்கள்செய்ததீவினைகள் தங்களையே துடர்ந்துவாட்டு
மென வழுங்குவதைப்போல வலியினாற் பசுக்களைக்கொன்றுதின்றுசஞ்
சரித்திருந்த புலிக்கூட்டங்கள் ரிஷபங்களின் தோலினாற் செய்யப்ப
ட்டபேரிகைகளைப்பூதர்முழக்கும் சத்தத்துக்கஞ்சியோடி விழுந்துருள
வும் மதயானைகளின்மீதுபாய்ந்து மத்தகத்தைப்பிளந்து மூளையைத்தி
ன்னும் வீரபராக்கிரமத்தைப்பெற்றிருக்கின்ற சிங்கங்களானவை யானை
முகத்தைப்படைத்திருக்கின்ற செயசாலிகளாகியபூதவீரர்கள் உலகங்கள்

தத்தளித்துச்சோரும்படிக்குக் கெற்சிக்கும் ஒலியானது செவிகளிற்பட்
டமாத்திரத்திற் றிருப்பாற்கடலிலுதித்துப் பிராணிகளை யலைத்தெழுந்த
ஆலகாலவிஷத்தையெதிர்ந்த தேவர்க்கள் கிடுகிடாய்த்து நடுங்கியதைப்
போலப்பயப்பிருந்திகொண்டு உடலமுற்றும்வியர்க்கக் களைத்துவிழவு
ம்வீராதிவீரராய்ச் செல்வச் சம்பத்தைக் கிடைத்திருந்த செயசாலிகளாக
விருந்தபோதினும் யிடம்பொருளேவல்முதலிய உதவியற்றுவலியுங்கு
றைவராகிற் காலதேச வர்த்தமானத்தைப் பாராட்டிச் ஞாத்துவத்தையும்
பாராட்டாமல்மறந்து தங்களுக்கடாத தீயமார்க்கங்களை முக்கியமாக
வெண்ணித்துடர்ந்து காலத்தைக்கழிப்பர் அதைப்போலப் பருத்தசரீ
ரோகத்தையும் வலியதுதிக்கைகளையும்விழிகள்அரக்கையொப்பச்சிவந்து
கோபாவேசத்துடன் வீதியுலவும் யாளிக் கூட்டங்களானவை மான்மு
கங்களைப்பெற்றிருக்கின்றபலசாலிகளாகிய பூதர்கள் ஆரவாரங்களின்பே
ரொலியைக்கேட்டமாத்திரத்தில் கிரோகமுற்றும்உதறவெடுத்துமனங்க
லங்கித்தாபரித்து நிற்கவும்அஞ்சி அபலமாகிய குரங்கினங்கள் வாசஞ்
செய்திருக்கும் தோப்பினிடங்களைச்சேர்ந்து பதுங்கவும்மிவையன்றியு
ம்வலிக்கொப்பற்ற செயசாலிகளாகிய பூதப்படைகள் பாரித்த அடிகளை
நிலங்குழிபடப் பெயர்த்து வைத்து நடக்கின்றதறுவாயில் அவ்வதிற்சி
யினால் மகாவிஷ்ணுவானவர் வாமனாவதாரங் கொண்டகாலத்திற் பாதங்க
ளினால்அளக்கப்பட்டும் பிரமகற்பத்திற் பிராணிக ளனைத்தையும் பாது
காக்குநிமித்தம்உண்ணப்பெற்றும் யித்தகையவசைகளைப்படைத்திருக்
கின்றபூமண்டலத்துக்காதாரசத்தியாகத்தாபித்திருக்கின்ற அஷ்டகுலாசல
ங்களும் மற்றையபர்வதங்களும் தத்தளித்து நிலைகுலைந்தசையவும் சிவ
கணங்கள்சிங்கநாதம் அட்டகாசங்களைச்செய்து நடக்கும்போதெழுந்
தசந்தடிக்காற்றுமல் கொடியவிஷப்பற்களைப்படைத்திருக்கின்றநாகங்
களும் வீரத்தன்மைபொருந்திய சிங்கக்குட்டிகளும் திகிற்பட்டு மயங்கி
தங்களிடங்களிற் போகப்பயந்து குன்றுகளிடத்திற் றேற்றும் சிறுபு
ழைகளில்வருந்தி நுழைந்தொடுங்கவும் சிங்கமுகங்களைப் பெற்றிருக்
கின்ற பூதர்கள்கனைப்பி னோசைக்கஞ்சிய மேகங்கள்நடுநடுங்கிமின்னலை
ப்பெருக்கியிடிகளைக்கக்கிக்கொண்டோடித் தவறிவிழுந்து பயமிகுதியினா
ல்என்னநேருமோவென்றஞ்சி எழுந்திருக்கவும்கூடாமையாற் புரண்டுபு
ரண்டுபடாதபாடுகளைப்படவும் மலைச்சாரலையடுத்திருக்கின்ற காட்டினி
டங்களிற் சஞ்சருத்திருக்கும்வேடர்கள் வட்டமாயிருக்கின்ற பறைகளை
ப்பேரொலியெழவறைந்தும் கலகலென்னும்ஓசையெழ ஆர்ப்பரிக்கும்
சத்தங்களைக்கேட்டமாத்திரத்திற் காடுகளிற்படுத்திருந்த பறவைக் கூட்
டங்களானவை திடுக்கிட்டுக்குலைகுலைந்து தங்கள்குட்டிகளை கவ்விக்கொ

ண்டு திசைகளிற்பறந்துபோகுமாறுபோலச் சிவந்த கொண்டையையும் கூரியமூக்கையும் பருத்தவுடலையும்பெற்றுத் துசமாகநிற்கின்றசேவலின்கூக்குரலினோசையும் புள்ளிபட்டதோகையையும் அழகிய கழுத்தினையும்நீண்டகால்களையும்மரகத மலையையொத்தபாரித்த கிரோகத்தையும்படைத்துச் சிவகுமாரனுக்குவாகனமாகவிருக்கின்ற மயிலின் முழக்கமுஞ்சேர்ந்தெழுந்த சத்தப்பெருக்கினைக்கேட்டமாத்திரத்திற் பிராணிகளனைத்தும் திகைத்துச்சோர்ந்து அல்லோலகல்லோலப்படவும்வேடமங்கையராகியர்மனவெழுச்சியுடன் விளையாடித்திரியும்சோலைகளிற்றொங்கவிட்டிருக்கும்ஊஞ்சல்களில்மரங்களசையத்தக்கதாகவூசலாடுவதைப்போலப்பாலசுப்பிரமணியக் கடவுளினது திருத்தேரினுச்சியில் நின்றொலிக்கும் சேவலினது ஆர்ப்பச்சோலைகளிற்றங்கி மலைத்திருந்த குரங்கினங்கள்கேழ்விப்பட்டமாத்திரத்தில் நடுநடுங்கித்திகைத்துக் கைகளைவிரித்துப் பற்களைத்துறந்து கீச்சுக்கீச்சென்றுகூவி மிரளமிரள முழித்து ஒன்றில்நின்று மற்றொருகிளைகளிற்றாவிச்சோலைகடோறுமுலவியலையவும்அவ்வனங்களிற்றவங்களைச்செய்துவரும் முனிபுங்கவர் பாராயணஞ்செய்யும்வேதாகமங்களினொலியும் தேவரினங்கள்மனப்பூரிப்புடன் கந்தனைக் குறித்துச்செயாவிசையபவாவென வாழ்த்திப்போற்றும் சத்தமும்பூதர்கள்முழக்கிப்போகும்பல்லியங்களின் அதிர்ச்சியும் சேனைகள் செயவுச்சாகங்களுடன் கெக்கலிகொட்டிக்கொண்டுபோகும்பேரொலியும் காரணசாரியங்களிற்படாமற் புறம்பினுலவிச் சராசரப்பிரபஞ்சங்களை நடிப்பித்துவரும்சயஞ்சோதிப்படிவத்தனாகியசரவணபவன் கொடியாகிய சேவலின் சத்தத்துக்கும் வாகனமாகவிருக்கின்ற பசியதோகையைவாய்ந்த மயிலின்முழக்கத்துக்கும் பிற்பட்டடங்கியொடுங்கும் சவுனகாதிரிஷிகளே யிவ்விதச்சிறப்புகள் மலிந்துகாட்டும்படிக்கு செயசாலிகளாகிய பூதவெள்ளங்களும்நவவீரர்-இலக்கர்-சேனைத்தலைவர்-விஷ்ணு- பிரமனாதியர்-சூழ்ந்துவரத்தக்கதாகப் பாலசுப்பிரமணியக்கடவுளானவர் குறிஞ்சித்திணையைக்கடந்து தெய்வீகம்பொருந்தியமதுராஸ்தலத்துக்கு மேற்பாரிசத்தில்விளக்கும் சிறந்ததிருப்பரங்குன்றமென்னும் திவ்வியநகரத்தைச் சேர்ந்ததருவாயில் அத்தலத்திற்றவஞ்செய்திருந்த பராசரிஷிபிள்ளைகள் அறுவரும்எதிர்கொண்டு சிவகுமாரனைச்சேவித்துப் பிரமனாதிய தேவர்க்களுடன் யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர், கந்தனே யிவ்வனவாசயோக்கியமாயும் பலவளங்களையும்மகத்துவங்களையுங் கொண்டிருப்பதால்கிருபையுற்று இவ்விடத்தி லெழுந்தருளினால் உத்தமமாகவிருக்கின்றதெனப்போற்றுகின்றதருவாயில் அவர்களிடத்திலிருந்தபிரியத்துடன் கிருபாநோக்கத்தைப்பாலித்து யிதனைத்திருவுளம் பற்றுவதாயினர்,

நாம்யிவ்வனாயினிடத்தில் வாசஞ்செய்ய நினைத்தபடிக்கு நீங்களும் வே
ண்டுகின்றதால்நம்மெல்லவர்கருத்துமொருமித்தபடிக்குஉங்கள்மனோ
பீஷ்டத்தைமுடிக்கக்கடவோமெனச்சம்மதித்தவராய்மையையொப்பக்
கறுத்துபாரித்ததிரோகத்தையும் பிராணிகள் மையலிற்பட்டு வாடத்தக்க
பிளிறொலியையும் உமிநீராப்பெருக்கிப் பனையைப்போல நீண்டகையு
ம் துதிக்கைகளையும் படைத்து கன்னமதம் கபோலமதம் பீசமதமென்
னும்மும்மதங்களையும்பெருக்கி பிடிகள்கன்றுகள் சூழ்ந்துவர யானைக்கூ
ட்டங்கள்உலவிவரும்சாலையுடைய அவ்வனாயின்மீதிற்பார்பதிதிருக்கு
மாரனாகிய சிற்பாமூர்த்தியாகவிளங்கும்சரவணபவன் மெல்லமெல்லவே
றியதருவாயில்யுகமுடிவுநேர்ந்தபோது சத்தசாகரங்களும்ஏகமாய்ப்பெ
ருகிவடபாரிசத்திற்சேருற்றநின்ற மகம்மேருகிரியைவனைந்தொலிப்பதை
ப்போலப்பூதர்சிவகுமாரனெழுந்தருளப்பெற்றமகத்துவமுள்ளஅந்தி
ருப்பரங்குன்றத்தினடிவாரமெங்கனும்பேரொலியைக்காட்டிநெருங்கி
த்தங்கியும்யிடம்போறாமல் அவ்வனாயின்மேற்புறங்களினும் அடர்ந்தி
ருக்கின்றகாலத்திற் பாலசுப்பிறமணியதேவர் பக்கத்தில்நிற்கின்றதேவத
ச்சன்மீது விழிகளைப்பரப்பி ஒ மயனேதுரிதமாய்யிதனுசரியில்நமக்கு
ம்மற்றதேவர்க்கள்முதலானவர்களுக்கும் தகுந்தவிடுதிகள் முதலியசிற
ப்புகளைக்கொண்டிருக்கும் நகரமொன்றைநிர்மிக்கக்கடவையெனத்திரு
வாய்மலர்ந்தவுடன் மனம்பூரித்துக் கர்த்தனைவணங்கிச் செலவுபெற்றுப்
போய் அவ்வெல்லையைத்திருத்திச்சிற்பநூலின்பிரகாரணப்படிக்குநிதானி
த்துப்பருத்து உன்னதமுள்ளமதிலை யெழுப்பிபலநிலைகளையும் சிகரங்க
ளையும்சித்திரப் பிறதமைகளையுங் கொண்டிருக்கின்ற கோபுரவாயல்களை
நாற்புறங்களினுந்தாக்கி அம்மதிலைச்சூழவரச் சேனைத்தலைவர்முதலியவீ
ரர்களுக்குத்தக்கமாளிகைகளை மனரஞ்சிதமாகப் படைத்து அதனுட்பு
றத்தில் மகாவிஷ்ணு-பிரமன்- நவவீரர்-இலக்கர்- முதலானவர்கள்தங்க
யோக்கியமாகிய அரமனைகள்-மாடமாளிகைகள்-மேடைகள்- விதங்களை
ச்செய்தமைத்தபின்பு நடுப்பிறதேசத்தில் தேவாதிதேவனாகிய குமாரசு
வாமியாரெழுந்தருளுவதற்குப் பாத்திரமாகிய ஆலயமொன்றை நவரத்
தினமயமாய்விளங்கும்படிக்குத் தன்வல்லபத்தைக் கொண்டுமுடித்து
விசாலமாய்நீண்டிருக்கும் வீதிகளை நியமித்து அதன் மத்தி மத்தியில் த
டாகங்கள் குளங்கள் சுனைகள்தழைத்தோங்கிக் குளிர்ந்தநிழலைப்பரப்பு
ம்சோலைகள்தோப்புகள்திவ்வியபரிமளத்தைவீசும்மலர்கள்நிறைந்தபூங்
காவுகள் நந்தவனங்களாதிய வளங்களைக்குறைவின்றிச்செய்துமுடித்தவ
னுய்வேண்டும்பண்டங்களையும் ஏராளமாகத் தகுந்த யிடங்களிற் பண்
டாரங்கள்தோறும்நிறைத்து யிவ்விதமாகச்சமஸ்தமும் முற்றியவுடன்,

சிற்பியானவன் மனமகிழ்ச்சியுடன் கர்த்தனைப்பணிந்துதேவரீர்கட்டளையி
ன்படிக்கு நகரமாயிற்றென்றுவிண்ணப்பஞ்செய்தமாத்திரத்தில் அவன்
மீதுகிருபாநோக்கத்தைப் பாலித்தவராய் மகாவிஷ்ணு பிரமன் இந்திர
ன்முதலானவர்கள் தொடர்ந்துவர பட்டணத்திற்பிறவேசித்து அதன்சிற
ப்புகளைப நித்து தேவசிற்பியின்வல்லபத்துக்கு மெச்சிக்கொண்டாடிச்சி
த்திரவீதிகடோறும் சேனைத்தலைவரை யிருக்கச்செய்து தமக்கேற்படுத்
தியிருக்கின்றஆலயத்தினருகிற் சேர்ந்தவுடன் பசியகலாபத்தைவாய்ந்த
மஞ்ஞையூர்வாகனத்தைவிட்டிறங்கி பிரமனாதிய தேவர்க்கள் செயசெயவெ
ணப்போற்றிச் சூழ்ந்துவரத் தக்கதாக அதனுள்ளே பிறவேசித்துச்சொ
ர்ணமயமாய்ச் சொலித்துக்கொண்டிருக்கும் விசாலமாகியதிருச்சபையை
ச்சேர்ந்து அதன்முகப்பிற்சிரோரத்தினங்களினுற் சோடித்திருக்கின்றசி
ங்காதனத்திற் குமாரதேவனெழுந்தருளியதறுவாயிற்கற்தன்கட்டளையின்
படிக்குப்பிரமன்மகாவிஷ்ணுஇந்திரனாதியதேவர்க்கள் தத்தமக்குத்தகு
தியாகியபீடங்களிலிருந்ததறுவாயிற் புசபெலபராக்கிறமசாலியாகியவீர
வாகுதேவரும்-எண்மரும்- இலக்கரும்-குலகிரிகளையொத்தகாத்திரதிரே
கத்தைப்பெற்றபூதத்தலைவர்களும் சிவகுமாரனைவணங்கித் தமதுபணிவி
டைகளைச்செய்துகொண்டு யிருபாரிசங்களினும்போற்றி வருமுன்னிலை
யிற்பராசரிஷிபுத்திரர்அறுவரும் ஆகம விதிப்படிக்குப் பத்திவயிராக்கி
யங்களுடன் பாலசுப்பிறமணியக்கடவுளினது திவ்வியசாறார விந்தங்க
ளிற்பரிமளமிகுத்ததிவ்வியமலர்களினுல் அரிச்சனைவழிபாடுகளைக்குறைவ
றமுடித்துச் சேவற்கொடியைப்படைத்தகற்தன்திருக்கோலத்தை விழிக
ள்களிக்கத்தெரிசித்து போதநீர்பெருக்கெடுத்தோடத் திரோகம்பூரித்தும
யிர்ச்செறிவெழத்தக்கதாகச் சிவகுமாரன் சகஸ்திரத் திருநாமமந்திரங்க
ளைவேதவாக்கியங்களினுற்றுதித்து கரங்களைக்கூப்பியெதிரில் நிற்கின்றரி
ஷிபுத்திரர்மெய்ப்பத்திக்கிரங்கிக் கிருபாநோக்கம் பாலித்தவராய்த் தா
ம்முனம்சரவணப்பொய்கையினிடத்திற் றிருவிளையாடல்களைச் செய்தி
ருந்ததறுவாயிற் சந்திர சடாமண்டல தாரியாகிய பரமனெழுந்தருளி
த்திருக்கயிலைக்கழைத்துப்போம்போது அவ்வறுதவத்தருக்குங் கடாட்
சித்துச்சென்ற அருட்டிறங்களைச் சற்வபரிபூரணனுய் முற்றுமுணர்ந்த
குமாரசுவாமியார் நினைந்துபாரசகுலோத்தாரகஞ்செய்யத்தோறறியநிஷ்
டபரராபத்தவங்களேஉருவதித்திருப்பதையொப்பத்தோற்றும்ரிஷிபுத்
திரருக்கு ஞானயோகத்தைப்போதித்துரட்சிக்கும்படிக்குக் கிருபையுற்
றுச்சின்மயமுத்திராமுதலியபிரசரணங்களைப் பஞ்சஉறுப்புகளினுல்வி
ளக்கிஅசைவற்றுச்சித்தத்தைச்சிவத்தின்கண்ணிறுத்திக்காட்டினர்யிவ்வித
மாகச்சண்முகப்பெருமான் போதித்தற்கரியபோதசாதனையைத் தெருட்

டிவருமுன்னிலையில்ரிஷிபுத்திரர் அறுவரும்பேரானந்தவாரியில்மூழ்கின
வராய் அந்நிலையிற்றுங்களும்திடசித்தம்பெற்றுபஞ்சேந்திரியவிடைய
ங்களைநிக்கிரகித்து ஐம்புலச்சேட்டைகளை யடக்கி மவுனிகளா யிருந்து
ஞானயோகத்திறங்களைப் பூர்த்தியாகத்தெரிந்துகொண்டு சிவகுமாரனைவ
ணங்கிப்போற்றி சற்தனே தேவரீர்கிருபையின்முயற்சியினாற் கிடைத்த
ற்கரியபதத்தைப்பெற்றீடேறினேம்யினிசீவன்முத்தராய்வ ழக்கடவோ
மெனவாழ்த்தித்தவத்தர்களிற்சிரேஷ்டராயினர், சவுனகாதிரிஷிகளேயிது
பரியந்தம்ஒப்புவமையற்று மகதயிஸ்வரியச் செல்வச்சம்பத்தைக் கிடை
த்திருந்த வீரமாமயேந்திரபுரியைப் பாலசுப்பிரமணியதேவர் சேர்ந்து
ஆயிரத்தெட்டண்டங்களுக்கதிபனாய்க் கொடுங்கோல்செலுத்திவந்தசூர
பதுமனைத்துணைவர் புத்திரமித்திரர் சேனைத்தலைவர் கணக்கிறந்த வெள்
ளம் ரதகெச துரகபதாதிகளுடன்சேற்று அப்பதியைக்கடலுக் கிரையாக்
கிசெயஉச்சாகத்துடன் திரும்பிபூமண்டலத்தில் விளங்கும் தலங்களிற்சி
ரேஷ்டமாகவிருக்கும் திருப்பாங்குன்றமென்னும் தெய்வீகப்பதியை
ச்சேர்ந்தவனாயிற் சொன்னேம் யினியாமெல்லவரும் கிருதார்த்த ராதற்
பொருட்டுக் குறைவற்றதவவிரதங்களைச் செய்தமுயற்சியினால் இந்திர
னவன்புத்திரியாகப் பெற்றிருக்கும் தெய்வானையம்மனைச் சண்முகப்
பெருமானுக்குப்பாணிக்கிரகணஞ் செய்துகொடுத்த மகோச்சவச்சிறப்
புகளின்சரித்திரங்களைப்பேசுவோமென்றுசூதபுராணிகர் ஆரம்பித்தனர்,





உ

சிவமயம்.

# தேவகாண்டம்.

## தெய்வயானை திருமணப்படலம்.

நைமிசாரணியவாசிகளே மேற்குறித்தபடிக்கு நூற்றெட்டுகவ
ளாயிற் கொடுங்கோல்செலுத்தி ஓரிடத்திற்றுபரித்து நிற்கவொட்டாம
ல்அலைத்துவந்தகொடியசெய்கையையுடைய சூரபதுமன் வம்சநாசமா
க்கொன்றுபொன்னுலகவாழ்வையும்திரிலோகாதிபத்தியத்தையும் பழை
யபடிக்குக்கிடைக்கச்செய்தருளும் தீனசரணியனாகிய வெற்றி வேலாயுத
க்கடவுளுக்கு மேகத்தையொப்பக்கறுத்திருக்கும் அளகபாரத்தையும்
இலக்குமிக்குமேலாகிய சுந்தரத்தையும் படைத்திருக்கின்ற தன்புத்திரி
தெய்வயானையம்மையைத் திருக்கலியாணஞ்செய்துதர இந்திரன்விருப்
புற்றவனாய் யிந்தசுபவார்த்தையை மகாவிஷ்ணு பிரமன்முதலானவர்களு
க்குத்தெரிவித்தமாத்திரத்தில் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய்த்
தேவராசனே நீ நினைந்தகாரியம் மிகவுநன்றாகவிருக்கின்றது குமார
தேவர்நம்மிடத்திற்பரிவாய்ச் செய்யாமற்செய்த உதவிக்குமாறயிதைத்
தவிரவேறொன்றையுங்கண்டிலம் மேலும் கருமணலையொப்பவிளங்கு
ம்கூந்தலைச்சீர்படுத்திப்பின்னலிட்டு சடபில்லைமுதலிய அலங்காரங்களை
ப்பெற்று வனப்புக்கரசியாகவிருக்கும் அக்கன்னிகையும் சிவகுமாரனை
வங்கணமாகக்கூடிப்பிரியாவிடையாய்க் களித்திருக்கவெண்ணி முன்ன
மேசரவணப் பொய்கைக் கரையினிடத்தில் அரிய தவவிரதங்களைச்செ
ய்துபாலசுப்பிரமணியதேவரிடத்தில் வரபாலனத்தையும்பெற்றிருக்கின்
றனள் அதன்பிறயோசனம்யிக்காலத்தில்முடியவிருக்கின்றதெனமகிழ்
சிறந்தவர்களாய்த்தேவேந்திரனைப்பார்த்துசேற்கெண்டையைப்போலப்பி
றழ்ந்து காதளவுமோடிக்கறுத்திருக்கும் விழிகளைப்பெற்ற உனதுபெ
ண்கொடியைக் கிரவுஞ்சபர்வதத்தைப்பிளந்த வெற்றிவேலாயுதபாணிக்
குத் துரிதமாய்வேதவிதிப்படிக்குத் திருமணமுன்னிலையிற் றாதத்தஞ்

செய்யவேண்டும்முயற்சிகளை முடிக்கக் கடவையெனச் சொன்னவுடன்
இந்திரனானவன் அதிகசந்தோஷித்துடன் பக்கத்தில்நின்றவேகமுள்ள
தன் தூதனைப்பார்த்து மனோவேகத்தினுங்கடுகிப்போய் மகம்மேருபர்வ
தத்தின்-சாரலில்வாசஞ்செய்திருக்கின்ற நமதுபத்தினி இந்திராணியையு
ம்பெண்ணையும்இந்தநிமிஷத்தில் அழைத்துவரக் கடவையெனக் கட்ட
ளையிட்டமாத்திரத்திற் றூதனும்மனப்பூரிப்புடன் யிறைவனை விடை
கொண்டுவந்தனனெனப்பணிந்தோடி பொன்வனாலயைச் சேர்ந்து திரி
லோகச்சிறேஷ்டமாண்மனைவியைக்கண்டு சேவித்தவனுப்பித்தாயேதமது
மனோபீஷ்டப்படிக்குச்சகலகாரியங்களுங்கைகூடிற்று அஃதென்னவெ
னில்நமதுசென்மவயிரிகளாய்த் தலைகாட்டவொட்டாமல் அலைச்சற்படு
த்திவந்தகொடியபாதகன் சூரன்புத்திரமித்திர களத்திராதிகளுடன்நாச
ப்பட்டனன், உமதுமனதுக்கினியதிருக்குமாரன் சயந்தனும் தேவர்க்
களும்குமாரதேவர்கடாட்சணியத்தினுல் வீரமாமயேந்திரபுரியிற் சிறை
பட்டிருந்த காவல்நீங்கிப் பிதாவைச்சேர்ந்து களித்திருக்கின்றனன்,
இப்போதுமகாவிஷ்ணு பிரமன்முதலாகிய தேவர்களுடன் சிவசுப்பிர
மணியக்கடவுள்பூலோகத்திற் சிரேஷ்டமாகப்புகழும் பெருமைபொரு
ந்திய திருப்பரங்குன்றமென்னுந் தெய்வீகத்தலத்திலெழுந்தருளிமன
வெழுச்சியுடன்வாசமாயிருக்கின்றனர், உமதுகணவன் யிந்தநிமிஷத்தி
ற்றம்மையும் புத்திரியையும்தருவிக்கும்படிக்கிட்டகட்டளையின்படிக்கு
வந்தனன், தீவரமாய்ப்புறப்படுங்கோள் போவதற்கென்னும் சந்தோ
ஷவார்த்தைசெவிகளுக்கமுதமாகக் கேட்டமாத்திரத்திற் கற்புக்கரசியாகி
ய இந்திராணியானவள் அதுபரியந்தம்பீடித்து வாட்டியிருந்தமனக்கிலே
சங்களனைத்தையுமொழிந்து கிடைத்தற்கரியசந்தோஷப்பெருக்கிலழுந்
தினவளாய்த் தங்களுக்குக்காவலாகப்போற்றியிருந்த அயிராபதத்தினமீ
திற்குமாரத்தியுடன் ஆரோகணித்து அக்காலத்திலிருந்ததேவரினங்களுட
ன்மகம்மேருச்சாரலைக் கடந்துவானவழிக்கொண்டுபோய் பர்வதங்களி
ற்சிறந்ததாய் மகத்துக்கள் தவச்சிரேஷ்டருக்கு வாசயோக்கியமாகவுமி
ருக்கின்ற திருப்பரங்குன்றையடைந்து வெள்ளையானையைவிட் டிறங்கி
யானைக்கோடுகளைப்போலநிமிர்ந்து தங்கக்கலசங்களுக்கொப்பாகவிளங்
கிக்கொண்டிருக்கும் தனபாரங்களையுடையகுமாரத்தியுடன்தேவராசன்
வாசமாயிருக்கின்றஉப்பரிகையிற்போனகாலத்தில்மயேந்திரபுரியிலடை
பட்டுபலநாட்களாகவருந்தி விடுபட்டுவந்திருக்கின்ற அரம்பையர் அதி
கஆவலுடனெதிர்கொண்டு நமதுயிறைவியைக் கூடப்பெற்றதால் யினி
சகலசவுக்கியங்களையுங்குறைவின்றி பழையபடிக்குக்கிடைத்தவாம்வா
மென்னுங்களிப்புடன் இந்திராணியினது பாதங்களில்தனித்தனிவணங்

னெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு பலவிதங்களிற்போற்றிவாழ்த்
தி வானத்திற்பெருகும் மேகங்களின்வாய்களைத் திறந்துவெளியிடும்மின்
னலின் பெருக்கைக்காண வெதிர்நோக்கி யிருக்கும் மயிலினங்களைப்
போலத் தங்க ளிறைவியின்மீதில் விழிகளைச் செலுத்திப் பேரானந்தத்
தையடைந்திருந்த தறுவாயில் இந்திராணியும் அவர்களிடத்தில் அதிக
பிரியத்துடன் ஓ தேவகன்னியர்களே பெருகாலம் கொடிய பாதகன்ப
ட்டணத்தில் அலைச்சற்பட் டிருந்தீர்களோ யிக்காலத்தில் பாலசுப்பிரம
ணியக்கடவுளினது கடாட்சத்தினால் நாமெல்லவரும் சகலதுக்கவருத்தங்
களையும்போக்கி அல்லலற்றிருக்கும்பருவமும்நேர்ந்ததோ சிவபிரான்க
ட்டளையின்படிக்குச் சகலதெண்டனைகளையும் அனுபவித்தோம் யினியெ
தாப்பிரகாரம் நமது பதவியைச்சேர்ந்து வாழ்வதற்கையமில்லை பயப்ப
டாதீர்களென்றுபல ஆதரணைகளைச்சொல்லிக்கொண்டு மாளிகைக்குள்ளே
போய்ஓரிடத்திற்சேர்ந்து க்ஷேமலாபங்களை விசாரணைசெய்துக்கொண்
டிருக்குமுன்னிலையில் ஒருவன்தரித்திரவானாய்உண்ண உடுக்கக்கிடையா
மல் அல்லலிற்பட்டு வாடுகின்றதருணத்தில் பரமன்கடாட்சத்தினாற் றுன்
முனந்தேடிவைத்திருந்த பொருள் தற்செயலாய்க்கிடைத்துக்களிப்பவ
னையொப்பச்சயந்தனானவன் மாதாவின்வரவைத்தெரிந்துதாயைப்பிரிந்
துகூடும்கன்றினும் அதிகஆவலுடன் நகைமுகனாய் ஓடோடியும்வருகின்
றதிருக்குமாரனைப்பார்த்தவுடன் தேவாமுதத்தைக்கிடைத்தவளைப்போ
லமனம்பூரித்துவயறுகுளிர்ந்து அதிகஉச்சாகத்துட னெழுந்து எதிரோ
டிஅழகிய கரங்களினாற் கட்டியணைத்து முத்தமிட்டு உச்சியைமோந்து
சிரோகத்தைத் தடவிக்கொடுத்து தனதுடையட்டைத் தொங்கலினால் மு
கத்தைத்துடைத்துக் கொங்கைகளிற்பால்பீறிட்டோடத்தக்கதாகத் திரோ
கபாவசத்தளாய் என்னாசைக்குமாரனே கண்மணியேஎன்னன்பே செல்
வமேயெங்களைப்பிரிந்து தியங்கி பல்நாட்கள் பாதகன் வசப்பட்டுக்கி
லேசித்தனையோயென்னபாடுபட்டனையோஉன்னையொத்தராசபுத்திரனு
க்கித்தீங்குகளும்நேருவதோசிவன்செயலிப்படிக்குமிருந்ததோ அப்ப
னேஐயனேஎனப்பரிந்துபேசிக்கொண்டு வருந்தருணத்திற் றாதனோடி
இந்திரனுக்குப்புலோமிசை வரவைத்தெரிவித்தமாத்திரத்தில் ஆனந்தப
ரவசத்தனாய்த் துரிதப்பட்டுவந்து தன்மனதுக்கினிய திருத்தேவியைக்
கண்டவுடன்பசிப்பிணியினால் யாதுங்கிடையாமற்சோபித்துவாடுகின்ற
வனுக்கும் தேடுதற்கரிய அமுதமானது எளிதி லுண்ணப்பெற்றுக் களை
தெளித்துமகிழ்பவனைப்போலவும் இன்பனலங்களை யனுபவித்துக்களி
த்தவனைநிகர்த்தும் தன்னையறியாத சந்தோஷப்பெருக்கினாழ்ந்துநெரு
ங்கியுடன்ஆலிங்கனஞ்செய்து விழிகள்களிக்கப்பார்த்துபெண்களரசே

பொன்னுலகத்துக் கிறைவியோ என்வாழ்வே நமதிறைவன் கடாட்ச வி
ட்சணியத்தினாற்பகைவனையொழிந்து சவுக்கியத்திலிருக்குநாள் நேர்ந்த
து, யினிமனச்சஞ்சலங்களைப்போக்கி மகிழ்ந்திருக்கக்கடவையெனப்ப
லபலசந்தோஷவார்த்தைகளையாடினன், சவுனகாதிரிஷிகளே அக்காலத்தி
லிந்திராணியும் - தேவராசனும் - சயந்தனும் - மற்றதேவர்க்கள் அரம்
பையர்கொண்ட சந்தோஷப்பெருக்கை யிவ்விதமென்று ஒருவராலும்
பேசிமுடிவதன்று சுகாதீதப் பேரின்பவாழ்வை யொருங்கெய்தப்பெற்
றுக்களிப்பவனைப்போலத் தனித்தனியே க்ஷேமங்களை விசாரணைசெய்து
ஒருவகையாய்ச்சந்தோஷவெறியைத் தெளிந்தகாலத்தில் தேவேந்திரன்ம
னவெழுச்சியுடன் அரியதவமுயற்சியினாற்பெண்ணைக் கிடைத்திருக்கின்
றதெய்வானையம்மனிடத்தில் யிருந்தபட்சத்துடன் சிலபோதுகொஞ்சி
க்கொஞ்சி சுபகரமாய்வார்த்தையாடி யிருந்தபின்புகுமாரத்தியைச்சிவகு
மாரனுக்குத்திருக்கலியாணஞ்செய்துகொடுக்க நினைந்திருப்பதைத் தன்
தேவிக்குத்தெரிவித்தனன், அந்தசந்தோஷவார்த்தையைக் கேட்டவுடன்
மனமகிழ்ந்து என்பிராணநாயகனே யிதுமிகவுஞ்சுபகரமாயிருக்கின்றப
டியால் காலதாமசஞ்செய்யாமல்விரைவில்முடிப்பது உத்தமமெனவே
ண்டினள், உடனே தேவராசன் அவர்களை அத்தலத்தில் நிறுத்திப்போய்
ப்பிரமனாதியதேவர்களைக்கலந்து தன்புத்திரியின் வரவைத்தெரிவித்தவ
னாய்த்தங்கள்கலசங்களையொப்பப்பூரித்து தேமல்பரந்திருக்கின்றகொ
ங்கைகளைப் படைத்திருக்கின்ற கன்னிகையைத்திருமண முன்னிலையிற்
றத்தஞ்செய்யவிருக்கின்ற கருத்தைச் சரவணபவனுக்குத் தெரிவிக்கநி
னைந்தவனாய்ச் சகலருடனுந்திருச்சபையைச்சேர்ந்து சிரோரத்தினங்களி
னாற்சோதித்திருக்கும் அரியணையி லெழுந்தருளி யிருக்கின்ற கந்தனை வி
ழிகள்களிக்கத்தெரிசித்து அகமுகமலர்ச்சியுடன் சமீபித்தவனாய்ப் பரிம
ளமிகுந்தபாரிசாதமலர்களைக்கொண்டு திருவடிகளில் அருச்சித்துமும்மு
றைவலம்வந்து தீர்க்கதெண்டன்சமர்ப்பித்தெழுந்து கரங்களைக்கூப்பி
விழிகளில்ஆனந்தவாரிபெருக்கெடுத்தோட மனப்பூரிப்புடன் யிந்தவி
ண்ணப்பத்தைச்செய்துக் கொள்ளுவதாயினன், கந்தனே நாற்றெட்டுக
வாயில் கொடுங்கோலைச்செலுத்தித் தேவரிஷிகளாதியானவர்களையும்
அலைத்து உலகங்களுக்கதிக உற்பாதங்களைச்செய்துகொண்டு ஒருவரையும
சட்டைபண்ணாமல் மகதாயிஸ்வரியச்செல்வங்களை யநுபவித்திருந்த
சூரபதுமனைத்துணைவர்புத்திரமித்திரர்களுடன்வாட்டியதுமன்றிபிறசந்
தம்பங்களையொத்தபுசங்களைப்பெற்று மன்னுயிரை வாட்டிவந்த அவுண
ப்பாதகர் பூண்டில்லாமல் வம்சநாசஞ்செய்து பலயுகங்களாக வீரமாம
கேந்திரபுரியிலடைபட்டுவருந்தி யாதொருகெதியுங்காணாதவர்களாய் வா

மயிருந்த அடியேன்குமாரனையும் தேவர்பெண்டுபிள்ளைகளுடனும் விடு
தலைசெய்து சகலனாயும்மனமகிழ்ச்சியுட னிருக்கக் கடாட்சித்தீர் மேலும்
முழுமையும்பிறந்துபோனபொன்னுலகச்சாம்பிராச்சியத்தை நாயினே
னுக்குத்தந்தீர் கர்த்தனே யித்தனையபேருதவிகளைச்செய்தாண்ட கடவுளு
க்குஅடியோங்களால் முடிக்கவல்ல கைமாறுயிந்தவுலகங்களிலேதேனு
முண்டோ தமதுதிருவடிகளைப்பூசிக்கவகையறியாதயாங்களிப்படி
க்குநினைப்பது மிகவும் அபசாரமாக விருந்தபோதினும் புத்திரபாவக
மாகத் திருவுளத்திற்கொண்டு அடியோங்கள் கோரிக்கைகளைத் திருச்செ
விகளிலேற்று அவ்வரத்தைத்தரவேண்டும் அஃதென்னையெனில், எங்கள்
முன்னவர்கள் செய்திருக்கின்ற தவங்களின்முயற்சியினாலும் அடியேன்
விரதபலத்தினாலும் புத்திரியாகப் படைத்திருக்கின்ற கற்புக்கரசியாகிய
தெய்வநாயகியைத்தேவரீருக்குத் தத்தஞ்செய்துகொடுக்க விருப்புற்றன
ன்கர்த்தனேசிறுமையுற்றஅக்கன்னிகையைத்திருக்கலியாணஞ்செய்துவயி
ரஸ்தம்பத்தையொப்பவிளங்கும் தமதுதிருத்தோள்கள்பூரிக்கத்தக்கதாக
ஆலிங்கனஞ்செய்து நாயினேங்கள் கிருதார்த்தராய் யிவ்வரியபிறவியிற்
பெறவேண்டும் பலப்பிருப்பத்தினைக் கிடைத்துவாழ்ந்து களிக்கும்ப
டிக்குக் கடாட்சிக்கக்கிருபைவைத்தாளும் கர்த்தனேயென்றுபல்விதவுப
சாரவார்த்தைகளைப்பேசி யிரக்கமுன்னிலையில் தேவராசன்பத்திக்கிரங்கி
க்குமாரசுவாமியார் அவன்மீது கடாட்சவீட்சணியத்தைப்பாய்ச்சி ஓ இந்
திரனே முன்னமே அப்பெண் கொடியானவள் திருக்கலியாணஞ் செய்யும்
பொருட்டு நம்மைக்குறித்துப்பலநாட்களரியதவவிரதங்களைச்செய்தனள்,
அதற்கிரங்கி அப்பேற்றினைக்கடாட்சித்திருக்கின்றனம் மேலும் யிக்கா
லத்தில் நீயும்வருந்திக்கேட்டுக்கொள்ளுகின்றனை ஆதலால் உங்களிருவர்
மனோபீஷ்டப்படிக்குநாளைக்கே மணவினையைமுடிக்க விருப்புற்றன
ம், அதற்குவேண்டும்முயற்சிகளை விரைவில்முடிக்க கடவையெனத்தி
ருவாய்மலர்ந்தனர், அவ்வாக்கியத்தைத்தேவராசன் கேட்டமாத்திரத்தில்
மனம்பூரித்துத்திரோகபரவசத்தனாய்த் தன்னியனானேன் மோட்சசாம்
பிராச்சியத்தையெளிதிற்கிடைத்தேனென்று மீட்டும்கர்த்தன்திருவடிகளி
ல்வணங்கிச்செலவுபெற்றுக்கொண்டோடிப் பூதவீரர் காவல்கொண்டி
ருக்கும் கடைவாய்தலினிடத்தில்நிற்கின்றவேகமுள்ளதேவதூதனைப்பா
ர்த்து ஓ சாரணர்களே நமதுதிருக்குமாரத்தியைத் தேவதேவோத்தமனாகி
யபாலசுப்பிரமணியசுவாமியாருக்கு நாளையத்தினம்பாணிக்கிரகணஞ்செ
ய்துக்கொடுக்கவிருப்பதால் நீங்கள் தீவிரமாகப்போய் திரிமூர்த்திகளில்
முதன்மைபெற்றிருக்கின்ற சிவபிரான்வீற்றிருக்குந் திருக்கயிலாயபர்
வதச்சாரலில்வாசஞ்செய்யும்பாக்கியத்தைக்கிடைத்திருந்துயிக்காலத்தில்

பூமண்டலத்தைஒருகுடைநீழலில் ஆண்டுவரும் முசுகுந்தச் சக்கிரவர்த்தி
யும் மற்றராசாக்கள் - குறுநிலமன்னர் - பிராமணசிரேஷ்டர் - தவத்தாற்பெ
ரியோர்களாதியானவர்களுக்கும் விண்ணுலகில்வாசஞ் செய்கின்றதே
வர்கணங்கள் - திக்குப்பாலகர் - சத்தரிஷிகள் முதலாகச்சொர்க்கமத்தியபா த
லமெல்லையில்வாசமாயிருக்கின்றசகலருக்கும்நமதிறைவனுக்கு நாளையத்
தினம்நடக்கவிருக்கின்ற திருக்கலியாணசம்பிரமத்தைத் தெரிவித்து அ
வர்களெல்லாரையும்பெண்டுபிள்ளைகள்முதலானவர்களுடன் இவ்வாயிலி
டத்துக்குத்தீவிரமாய்வந்துசேரும்படிக்கு நாம்வேண்டிக்கொண்டதாக
வும்சொல்லிப்போட்டுத்துரிதமாய் வரக்கடவீர்களெனக் கட்டளையிட்ட
மாத்திரத்தில் நமதிறைவனைச்சேவித்து பணிவிடையின்படிக்கு முடித்
துவரக்கடவோமென விண்ணப்பஞ் செய்தவர்களாய்த் தட்சணத்தில்ம
னோவேகமும்வாயுகதியும்பிற்படத்தக்கதாகஓடினார் இவர்கள்சென்றபின்
பு இந்திரன்தன்மரபுக்குரியசிற்பியாகியமயனைத்தருவித்துப்பரிமளமிகு
த்தகடப்பமலர்மாலைபுரளும் புயாசலங்களையுடைய பாலசுப்பிரமணிய
தேவருக்குநடக்கவிருக்கின்ற மணத்துக்குத் தக்ககலியாணமண்டபமி
த்தமகோச்சவத்தைத்தெரிசிக்கவரும் விண்ணாட்டினர்பூமண்டலவாசிகள்
பாதலத்தினர்முதலானவர்கள்வீற்றிருக்கயோக்கியமாகியவிடங்கள்வீதி
களாதியவற்றைச்சாத்திரவிதிப்படிக்குப்பொன் னுலகமும்நாணும்படிக்
குத்தீவிரமாய்முடிக்கக்கடவையெனப்பேசியகாலத்தில் அதிகமகிழ்ச்சியை
யடைந்தவனாய் இந்தபணிவிடையைச்செய்தற்கு அடியேன்என்னதவஞ்
செய்தனனோவென்றேத்தி யிந்தநிமிஷத்தில் தமதிஷ்டப்படிக்குச்செய்
யக்கடவனெனச்செலவுபெற்றுப்போய் அவ்வாயிலின் பக்கத்திலோரிடத்
தைக்குறித்து அவ்வெல்லையைச்சூழவாப் பருத்தோங்கியமாதின்றமதிலை
யெழுப்பி நாற்புறங்களினும் விசித்திரமாகவிளங்கும் கோபுரவாயல்க
ளைத்தாக்கி அதனுட்புறத்திற்கலியாணமகோச்சவத்தினைத்தெரிசிக்கவரத்த
க்கவர்கள் மனவெழுச்சியுடன்வாசஞ்செய்யும்படிக்குமாடமாளிகைகூடப்
பரிகைமேடைசாலைகள் முதலியவற்றை வரிசைப்படச்செய்து விசாலமா
ய்நீண்டிருக்கும் வீதிகளைப்பிரித்து மத்திமத்தியிற் சித்திரக்கூடங்கள்
பளிங்குமண்டபங்கள் சந்திரகாந்தத்திண்ணைகளாதிய சிறப்புகளைப்ப
டைத்து கலியாணத்துக்குவேண்டும் பதார்த்தங்களை வைக்கத்தக்க பண்
டாரங்கள் அறைகள்விதங்களைமுடித்து தாமரைஅல்லிமுதலிய புஷ்பங்
கள்மலிந்திருக்கும்தடாகங்கள் - சித்திரக்குளங்கள் - ஓடைகள் - கேணிகளை
யும்வானத்தையளாவத் தழைத்தோங்கிக்குளிர்ந்தநிழலைப்பரப்பிக்கிளைவ
கைகளைக்கொண்டிருக்கும் சோலைகள் தோப்புகள் நவ்விய பரிமளமிகு
த்தபற்பலவிதபுஷ்பசாதிகள் மலிந்திருக்கும் நந்தவனங்கள் பூங்காவுக

ள்முதலியதுகளைச்சிருஷ்டித்துமுடிந்தவுடன் யிவற்றிற்குநடுப்பிறதேச
த்தில் மணச்சடங்குமுடித்தற்குகலியாணமண்டபத்தை விசாலமாகப்ப
டைத்து அதன்மத்தியில் நவரத்தினமயமாகிய சிங்காதனமொன்றுசித்
திரவிசித்திரங்களாகச்செய்து அதைச்சூழ்வர மகாவிஷ்ணு - பிரமன் - இ
ந்திரனாதியதேவர்கள் ரிஷிபுங்கவராதியர் களித்திருக்கத்தக்கவிடங்களை
வரிசையாகப்பாட்டி முத்துமாலைகள் - புஷ்பச்சரங்கள் - மயிற்பிஞ்சங்க
ள் - வஸ்திரத்தொங்கல்கள் - விதங்களைப் பலநிறப்பட்டினாற்சோடித்திரு
க்கின்றவிதானங்களிலும்சொர்ணமயமாகத்தோற்றும்மண்டபமேற்பா
ப்புகள்முதலியவிடங்களிற்செருங்கவிட்டுப்பொற்பாவைகள்சித்திரப்பிறத
மைகள் நிலைக்கண்ணாடிகள் யிவற்றைச்சுவர்ப்புறங்களிலும் பருத்தோ
ங்கிநிற்கும் பலவிதத்தூண்களோடும்பதித்து ஓமகுண்டம் அதைச்சூழ
வாவேதிகைமுதலியநிறமங்கள் மற்றும்வேண்டுவனவனத்தையும்சிறப்ப
றப்படைத்துமிவ்விதமாகச் சகலமும்முடிந்தவுடன் மணச்செருக்குடன்
மயனானவன் வந்ததேவேந்திரனைக்கண்டு ஆக்கியாபனப்படிக்குச் சகல
வளங்களையும்பெற்றிருக்கின்ற கலியாணமண்டபம் மற்ற உபகரணங்க
ள்யாவற்றுங்குறைவறச்செய்தாயிற்றென்று அறிக்கையிட்ட மாத்தி
ரத்தில் தீவரப்பட்டுவந்து அதின்சிறப்புகளைக்கண்டு அதிக சந்தோஷத்
தைப்பெற்றவனாய் தேவதச்சன்செய்பாகத்துக்கு மெச்சிக்கொண்டாடி
தட்சிணைக்கிற்சிலகாரியப்பேரைத்தூத்தி வானகெங்கையைத்தருவித்து
ம் தருப்பை - மாவிலை - சமித்து முதலிய - ஓம திரவியங்களை சேகரித்துக்
கொண்டுவாழை - கமுகு - தெங்கின் குலைமுதலியசிறப்புகளைவேண்டுமிட
ங்களில் அணிபடநாட்டிவித்து வீதிகள்தோறும் பனிநீரையிறைத்துப்பு
ழுதியையடக்கியும் கலியாணமுத்தமெங்கலுமசந்தனக்குழம்பினால்மெ
ழுகிட்டு அழகிய கோலங்களையுமிடுவித்து பாலிகைகாகமாதிய நிணுசுகளை
த்தேடிவைத்துத்திருவிளக்குபலவிளக்குகுடதீபமாதியசோதிகளையேற்றி
வைத்துமிவ்விதமாகக்கலியாணச்சடங்குகளை முடிப்பித்துக்கொண்டுதே
வேந்திரன்சற்வசாக்கிறதையுடனுந்திரிந்துதிரிந்துபார்த்துவருகின்றதறு
வாயில்மேல்நட்டத்சேதிகளையும் சொல்லக்கேழ்ப்பிராக முனம்தாண்டி
யதேவநாதர்வினாத்தோடிச் சிவசுப்பிறமணியதேவருக்கும் கற்புக்கரசி
யாகியதெய்வயானையம்மனுக்கும் திருக்கலியாணம் நாளையப்போதில்ந
டக்கின்றதென்று வானநாடருக்கும் பூமண்டலவாசிகளுக்கும் பாதலத்
தில்வாசமாயிருக்கும் நாகராசாக்களுக்கும் மற்றமுண்டான சகலருக்கு
ம்தெரிவித்தவர்களாய்ச்சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்தைஒருகுடைநி
ழலிற்படுத்திமன்னுயிரைத் தன்பிராணனைப்போலப் பாதுகாத்துச்செங்
கோலநடாத்தும்நீதிபரனும் அந்தவிவாக மகோச்சவத்தை தெரிசித்து

வாழவேண்டுமென்றுமென்னைக்கொண்டு பிறையாணைப்பட்டு வருகின்
றமுசுகுந்தச்சக்கிரவர்த்தியின் வரலாற்றைத் தெரிந்தவனாயிற் சொல்லக்
கேட்பீராகவென்று சூதபுராணிகர் மனவெழுச்சியுடன் நைமி சாரணிய
வாசிகளுக்குவெளியிடுவதாயினர், அஃதென்னையெனில் கல்லென்றுமோ
சையைக்காட்டிப் பளிங்கைபொப்பவெளுத்து மணிகளை வாரிக்கொண்
டிழியும் அருவிகள்பெருத்து சாவள்ளியமாகப்பிரகாசத்தினைவீசி மகத்
துக்களுக்கிருப்பிடமாகவிருக்கின்ற சிறப்பினைவாய்ந்த திருக்கயிலையங்
கிரியின் சாரல்களிற்றழைத்தோங்கி குளிர்ந்தநிழலைப் பரப்பிப் புஷ்பக்
கொத்துகளையுங் கனிவகைகளையும் பெருக்கித் தேன்களையும் பொன்னை
யொத்தமரகதந்தத்தையுமிறைத்துப் பரிமளத்தைவீசியிராநின்றகொன்
றைவில்வம்-குருக்கத்தி-புன்னை-பாதிரி-பாரிசாதம்-அரிச்சந்தனமாகிய
சிறந்ததருக்கள்மலிந்ததாயிருக்கின்ற நந்தவனங்கள்சோலைகள்காவுகளி
லொன்றில்காளகண்டமூர்த்தியாகியபரமசிவம் மனவெழுச்சியுடன்பார்வ
தியாளைக்கைலாகுகொண் டழைத்துப்போய் அதன்வளங்களைச் சுற்றிப்
பார்த்துக்கொண்டுவருமுன்னிலையில்எதிரில்நேர்ந்ததிவ்வியபரிமளபுஷ்ப
வகைகளைப்பறித்து மாலைதொடுத்து தமதுதிருத்தேவியினதுகொண்டை
யிற்சூடியும் தண்டைமாலைகளைக்கட்டிமார்பிலணிந்தும் கரங்களிற்றரி
த்தும் புன்னையாதியமலர்களைபறித் தொருவர்மீதொருவரிறைத்துக்களி
த்தும்அச்சோலையிற்சேருற்றும் சிங்காரங்களைப் பராசத்திக்குக்காட்டிந
கைமுகராகச்சென்றும் கனிவிதங்களைக்கொய்து கொடுத்தும் பளிங்குப்
பாறைகளினூற்செய்தமைத்தபடிகளைவாய்ந்தசித்திரக்குளத்திலாடியும்அ
திற்பிரகாசித்திருக்கும் பொன்னந்தாமரையாதிய புஷ்பங்களின் வனப்
பைக்காட்டியும்அன்னங்கள் முதலியபட்சிசாதிகளின் மிருதுவாகியதொ
னிகளைக்கேட்டுமகிழ்ந்தும்யிவ்விதமாகக் கரங்களைக்கோத்துக்கொண்டு
வங்கணமாகஉலவிவருந்தறுவாயில் தங்களுக்கெதிரில் தளிர்களைவிரித்து
க்கவிந்துபரிமளித்ததாய் குளிர்ந்தநிழலைப்பரப்பி நிற்கின்ற வில்வமரத்
தினடியிற்சேர்ந்து சந்தோஷவார்த்தைகளை யாடிக்கொண் டிருக்கின்றத
றுவாயிற் டருத்தநீண்டிருக்கின்ற அதன்கிளைகளிற் பல முசுக்கூட்டங்
கள்களித்துக்குலவிருக்கின்றவைகளிலொன்று முற்பவத்திற்செய்தநல்வி
னையின்பிறையோசனத்தினால்வில்வப்பத்திரங்களைப்பறித்துப்பறித்தக்
கீழ்ப்புறத்திலெழுந்தருளியிருக்கின்ற அம்மையப்பர்சிரங்களில்யிடை
விடாமற்போட்டுக் கீச்சுக்கீச்செனக்கூவிப் பற்கள்விளங்கநகைத்துக்கு
தித்துக்குதித்துப்பத்திரங்களை மென்மேலுஞ் சொரிந்துவருகின்றதறு
வாயில் தங்கள்களியாடலுக்கு விருத்துவமாகச்செய்துவரும் அதனுப
த்திரவத்துக்குப் பரமேஸ்பரி சகிக்கமாட்டாதவளாய் உருத்துப்பார்த்

# ௫௰௮ தெய்வயானை திருமணப்படலம்.

துக்கோபித்தகாலத்திற்றமது தேவியின்கருத்தைச் சிவபிரான் தெரிந்து ஓநாயகியஞ்சவேண்டாம் மிஞ்சவேண்டாம் நம்மிடத்திற் பிரியபத்தியுடன் அருச்சனைவழிபாடுகளை நடாத்திவரும்முசுக்களுக்கரசின்மீதுசீறவார்களோ வெகுமித்தருள்கவெனத் திருவாய் மலர்ந்தவுடன் சிறவைமேவிட்டு அருள்நோக்கைக்காட்டினள் உடனேருஞநாயகனுக்கு இவ்வொழுந்துக்கு அதிகட்டமுண்டாய் உமாபரமேஸ்வரர்மீது மனவெழுச்சியுடன் வில்வார்ச்சனை செய்துவரும் ஒருநிலைவாய்ந்த முசுகின் மடமையொழித்துப்போதிவைவிளக்கிக் கிருபாநோக்கத்தையும் பாவித்தமாத்திரத்தில் அஞ்ஞானவிருளகன்று ஞானமுண்டாய் நடுநடுங்கித் துரிதமாய்விருட்சத்தைவிட்டிறங்கி அதிகமனவருத்தத்துடன் தேகத்தையொடுக்கி அம்மையப்பரைவலம்வந்து மும்முறைவணங்கி நின்று கரங்களைக் கூப்பிக்கொண்டு யிதனைவிண்ணப்பஞ்செய்கின்றது ஓ லோகநாயகனே தீனசரண்ணியனே அடியவருக்கெளிவரும்பரமே நல்லுணர்ச்சியென்பதுசற்றுமில்லாத மிருகசாதியிலுதித்து சத்கருமங்களைச்செய்யவறியாதபாமரனாகியஅடியேன்முடித்தயிக்குற்றங்களைத் திருவுளத்திற் கொள்ளாமல் தீனனிடத்தி லிரக்கமுற்றுரட்சிக்கவேண்டும் அல்லது மகாபாதகங்களுக்காளாய் ரவரவாதிநரகக்குழியிற்பட்டு யிதனிலுப்பீனப்பிறவியிற்செலுத்துவாடவரும் ஓ தயாநிதியே சரணம் சரணமென்று மனக்கலக்கத்துடன் பற்பலவிதங்களிற்போற்றி வாடுகின்றமுசுகிலையிற் சிவபிரான் அதன்பத்திவினயங்களுக்குமெச்சி அதிகதயவுண்டானவராய் அந்தமுசுவைப்பிரியமாகப்பார்த்து நீமனம்வருந்தவேண்டாம் கொடுமைசெய்யினன்றோ பொறுமைகேட்டுக்கொள்ளவேண்டியது நமக்குவப்பாகவிருக்கின்ற பரிமளமிகுந்தவில்வதளங்களினால் நம்மிருவரையும்சிறந்த அருச்சனைவழிபாடுகளைச்செய்தனையிப்பேற்றினுற்பிரார்த்தவினைமுற்றிலுமொழித்து பரிசுத்தவானுய்ச் சமுத்திரஞ்சூழ்ந்திருக்கின்ற பூமண்டலமுழுமையுமேகச்சக்கிறத்தைச்செலுத்திச்செங்கோன்மைமுறையினுல் மன்னுயிர்களைக்காத்துவர்த்த மனுச்சக்கிரவர்த்திமரபில் அவதரித்து ராசாதிராசனுப்ச்சகலரும்வணங்கிப்போற்ற அகண்டயில்பரியச்செல்வங்களையனுபவித்துமன்னுலகமுற்றினும்ஒருகுடைநிழலிற்படுத்தியாளும்பேற்றினையுங்கிடைத்தனையிவையன்றியும்நம்மிடத்தில்மெய்ப்பத்தியுண்டாய்விளிவாழும்சம்பத்தையுந் தந்தனமெனத் திருவுளம்பற்றியபேரருளைக்கேட்டமாத்திரத்திற் சோரனுகவிருப்பவன் சமுகியிற்காவலர் வசப்படுவனுகிற் றியக்கிமதிமயங்கிப்பிரமித்துப் மிரளமிரள முழிப்பதைப்போலமிகவும்மனம்வருந்தித் தேகமுற்றும் வியர்க்க நடுநடுங்கித் துக்கசாகரத்திலழுந்திச்சோர்ந்ததாய்ப் பெருங்காற்றிற்பட்டுச்சாயுங்கற்பகத்த

ருவையொப்பச் சிவபிரான்பாதகமலங்களில்விழுந்து பலதரம்சேவித்து
க்கரங்களைக்கூப்பிக்கொண்டு விழிகளில் நீரைப்பெருக்கிக் கைகால்களு
தறலெடுக்க வாய்புலர்ந்துநாத்தடுமாறி சொற்களும் தவறத்தக்கதாய்இ
தனைமுறையிடுவதாயிற்று, ஓலோகநாயகனே அன்பருக்கெளிவரும் கு
ணக்குன்றமே கிருபைக்கடலே சச்சிதானந்தமூர்த்தியாகவிளங்கும் கர்த்த
னேயென்றுபலவிதங்களிற்போற்றி ஐயனே ஒப்பற்றவிந்ததிருக்கயிலா
யத்தைச்சூழவரவிளங்கும் வனத்தில்வாசமாயிருக்கும் பேற்றைக்கிடை
த்தும் உமாபரமேஸ்பர மூர்த்தமாகத்தோற்றுந்தேவரீர்மங்களக்கோ
லத்தை எக்காலத்தும் விழிகள்மனமுங் களிக்கத்தக்கதாகத் தெரிசித்து
செனனமரணதுக்கத்தைப்போக்கித் தமது திருவடிகளின் நிழலிற்சுகாதி
தச்செல்வங்களை யனுபவித்துக்களிக்கவிருக்கின்ற நாயினேன் யிந்தசிற
ந்ததலத்தைநீங்கி அல்லலுக்கிருப்பிடமாகும் பூமண்டலத்தில் அற்பவா
ழ்வையுடைய மானிடசெற்பசம்பவப்பட்டு வருந்தி யோனித்தழும்பு
ண்டுதித்து அனித்தியமாகிய சிறுவாழ்வென்னும் சவலையிற்பட்டு அ
ஞ்ஞானியாய்மதிமயங்கி ஆணவமலத்துக்குள்ளாயுழலப்பெறுவேனாயி
ன் எமதிறைவனேயினி எவ்விதத்தில் அத்துடக்கைக்கடந்து பிழைக்கவ
ல்லேன் மீட்டும் யிச்சிறந்ததலத்தை எக்காலத்திற்சேர்ந்து களிக்கப்பெ
றுவேன் ஓகர்த்தனே யிந்தஅபலச்செல்வத்தை வேண்டேன்வேண்டேன்
தமதுதிருவடிச்சேவையையே யிச்சித்திருக்கின்றனனென்று மிகவும்வரு
ந்திக்குறையிரந்து வாடுகின்ற முசுவினிடத்திற்பரிவாய் நம்மிடத்தில் உ
னக்கிருக்கின்றஅன்புக்குமெச்சினோம் நமதுவாக்கியம் பொய்படாதா
கையாற் சிலகாலம்பூமண்டலத்திற்சக்கிரவர்த்தியாய் நல்லறிவையும்நமதி
டத்தன்பையும்பெற்று வாழ்ந்திருந்தபின்பு எதாப்பிரகாரம் யிந்தவெ
ள்ளியங்கிரியைச்சேர்ந்து மகிழ்வை யினிமனச்சோர்வுடன் யாதினையும்
நினைக்கவேண்டுவதில்லையெனத்தேற்றிப் பேரருளைச்செய்தகாலத்தில் உ
மாபரமேஸ்பரனை மீட்டும்வணங்கி முசுவரசானது யிதனைவிண்ணப்பஞ்
செய்கின்றது, தேவதேவோத்தமனே தேவரீர் கட்டளையின் படிக்குப்
போய்வரக்கடவேனாயினும் ஒருவரபாலனத்தைத் தந்தருளவேண்டும்அ
ஃதென்னவெனில் நீரினிடத்திற்றோற்றும் குமிளியைப்போலவும்மின்
னலையொத்தும் நிலைபெறாமலிருக்கும் புலால்நாறுமுடலை மெய்மைப்
பட்டதாகச்சருகிப்போற்றிச் செல்வச்சம்பத்தி லாழ்ந்து தாய்தந்தைய
ரென்றும் புத்திரமித்திரகளத்திராதிகளென்றும் பாசத்தழுந்தியானென
தென்னும் மமதையிற்பட்டுமதிமயங்கிஅஞ்ஞானியாகாமற்படிக்குயித்
தமுகத்துடனுதித்துப் பழையஅறிவுடன் நன்னெறிகளை யநுஷ்டித்து
தேவரீரிடத்தில் மெய்ப்பத்திவிளங்கிக் கிருதார்த்தனாகத்தக்கப்பேற்றினை

ந்தநீ தாளவேண்டுமென்று போற்றுகின்ற முசுவினிடத்தில் அன்பாய்உ
ன்சோதிச்சைகையின்படிக்குத் தந்தனமென்று திருவாய்மலரக் கேட்டவு
டன்சிரோசம்பூரித்துமனவெழுச்சியுடன் கற்சனைப்பணிந்து விடைபெற்
றுத்திருக்கயிலாயச்சாரலில்விளங்குஞ்சோலையைக்கடந்து சமுத்திரஞ்சூ
ழ்ந்தபூமண்டலத்தில்வந்து சத்தியசந்தனாய் அரசுசெலுத்திவந்த மனுச்ச
க்கிரவர்த்திமரபிற் செபசாலியாய் நன்னெறிகளை யனுசரித்து பூடாரத்தை
த்தவிர்த்தாண்டுவந்த திலீபனென்னும் சக்கிரவர்த்திக்கும் சத்தரிஷிகளி
லொருவராகிய விசுவாமித்திரர் வஞ்சகத்தினால் அரசுடைமையை யிழந்துசக
லசெல்வங்களையும் பறிகொடுத்து வறியனாய்ப் பதியையும் நீங்கி நிறை
யொழுக்கங்களைமறந்து படாதபாடுகளைப்பட்டுபெண்டுபிள்ளையைத்து
றந்துதகாதவினத்தொழிலைச்செய்யவரினும் சொன்னசொல்லை மறுமல்
பாதுகாத்துச் சத்தியபாஷைஅரிச்சந்திரனென்னும் திருநாமத்தைஉலக
முள்ளளவும்நிலைபெறநாட்டிய சக்கிரவர்த்தியினது சகோதரியாகியமங்க
லவதியென்னும்பட்டபூதேவிக்கும்நல்லசுபமுகூர்த்தத்தில் முசுமுசத்து
டன்சுந்தரமுள்ளமானிடதேகத்தைப்பெற்றுத்தோற்றிச்சகலசீர்சிறப்
புகளுடனும்வளர்க்கப்பெற்றுச்சாத்திரங்களெவற்றினும் சம்பன்னனாய்
தனுர்வித்தைமுதலியராசயோக்கியங்களைப்பூர்த்தியாகத்தெரிந்துசத்துரு
க்களைவாட்டிச்சற்சனரைப்பரிந்து போற்றித்தன் குடைநிழலிற்பட்டபி
ராணிகளைத்தன் னுயிரினும் மேலாகப்போஷித்து பூமண்டலமுற்றினுக்
கும்சக்கிரவர்த்தியாய் அன்பத்தாறுதேசத்துராசாக்களுங்கப்பங்களைச்செ
லுத்திப்போற்றிவரத்தக்கதாகஅரசுசெலுத்திதன்மாதுலனாகியஅரிச்சந்தி
ரன்புத்திரியாய்ச்சற்புக்கருந்ததியைப்போலவும்சுந்தரத்தில்லட்சுமிக்கு
மேலாகவும் சகலசுபகுணங்களையும் பெற்றிருக்கும விசித்திரவதியென்
னும்ராசபுத்திரியை தேவப்பிராமணர்சாட்சியாய்ச் சகலாடம்பரங்களுட
னும்திருக்கலியாணஞ்செய்துகொண்டு முசுகுந்தச்சக்கிரவர்த்தியென்னு
ம்திருநாமத்தைப்பெற்றுநீர்வளம்நிலவளம்-குடிவளமுதலியசிறப்புகளை
யும் அஷ்டலட்சுமிகள்குடிகொண்டிருக்கும் செல்வங்களையும் பெற்றுச்சி
வாலயங்கள்மலிந்து தென்பிறதேசத்திற்சகலரும் புகழவிளங்கும்கருவூ
ரென்னும் சிறந்தபட்டணத்தை ராசதானியாகக்கொண்டுவீற்றிருந்துபி
ராமணரைப்பூசித்தும் அதிதிகளைப்போஷித்தும் சோடசமகாதானங்க
ளைமேகங்களைப்போலவும்கற்பகத்தருக்களையொப்பவும் வழங்கி ஆலயங்
கடோறும்திருவிழாமுதலிய சத்கருமங்களை நடாத்திவரும்சக்கிரேஸ்வர
னைவன்பரமசிவத்தின்கடாட்சத்தினாற் கிடைத்தற்கரியசெல்வப்பெருக்
கைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்த்தீனராகியதே
வர்க்களைவாட்டித்தகாதவல்களைக்கொண்டுமன்னுயிரையலைத்துக்கொடு

ங்கோல்செலுத்திவரும்சூரபதுமன் ஆணை ஆக்கினைக்கடங்கி வாழ்ந்துவ
ருகின்றதறுவாயில்பரமசிவத்தின்நுதல்விழியிற்றிருவவதாரஞ்செய்தபா
லசுப்பிரமணியதேவர்கொடியபாதகனாகியசூரபதுமனைவம்சநாசப்படுத்
தியசேதிகளைத்தெரிந்துமுனம்இந்திரனாற்கண்டிக்கப்பட்டசிறகைப்பெ
றுமாயினமேருகிரிச்செத்தகைய சந்தோஷமுண்டாகுமோ அதனிலும்
பதின்மணங்குமனமகிழ்ந்து சகலதுன்பங்களையும்போக்கிச்செயசாலி
யாய்நவரத்தினமயமாகிய சபாமண்டபத்தில்விளங்கும் அரியணையில்வீ
ற்றிருந்து அன்பத்தாறுதேசத்துராசாக்களும்போற்றிவாழ்த்தவும் மந்
திரிபிரதானிகள்களித்துச்சூழவும் படைவீரர் வீரசிங்கங்களைப்போலப்
பரந்திருக்கவும் பட்டுவர்புகழவும் கட்டியக்காறர் எச்சரிக்கையைச்சொ
ல்லிவரவும்கவிவாணர்பாவினங்களைச்சாற்றிநிற்கவும்வெண்பட்டினாலும்
முத்துச்சரங்களினாலும்அலங்கரித்திருக்கின்றபூச்சக்கிறக்குடையானது
நவரத்தினகசிதமாகியகிரீடத்தின்மீதிற்சந்திரனையொப்பக்கவிந்திருக்க
வும்வெண்சாமரைகளையசைக்கவும் அருகுகள் ஆலவட்டங்களைத்தாங்கி
ப்பணிமாறவும் தேவகன்னியரையொத்தசுந்திரவதிகளாகியநாடகப்பெ
ண்கள் பரதநாட்டியங்களைச்செய்துவரவும் மற்றுமிராதின்றராசசின்ன
ங்கள்பெருத்திருக்க யித்தகையவைபவங்களின்மத்தியில் ராசவிசாரணை
களைச்செய்து செங்கோன்முறையே நீதிகளை நடாத்திவருகின்ற தறுவாயி
ல்தேவராசன் தூண்டியதூதர்கள் ஆஸ்தானமண்டபத்தைச்சேர்ந்துசெந்
தாமரைக்கமலங்களுக்குச்சமதையாகிய திருவடிகளிற்பணிந்துபோற்றி
ச்சுவாமி தேவரீருக்குப்பிராணபத்மாகிய சினேகிதன் இந்திரன் செலுத்
துவந்ததூதராகும் உமதுசுற்றத்தினருடன் மனமகிழ்ந்துசெல்வம்நீடித்
துவாழ்விலிருத்தும்சுபகரமாகிய திருக்கலியாண மகோச்சவச்சேதியை
அறிக்கையிடவந்தனம், அஃதென்னையெனில் ஆயிரத்தெட் டண்டங்க
ளுக்கதிபனாய்ச் சகலரும்வணங்கியேறறக் கொடுங்கோலைச்செலுத்திதே
வரைச்சிறைபடுத்தியிருந்த சூரபதுமனையும் துணைவர் புத்திரமித்திரகள
த்திராதிகளையும் கணக்கிறந்தவெள்ளம் ரதகெச துரகபதாதிகளுடன் வ
கையறமாளும்படிக்குப் பாலசுப்பிரமணியதேவர்சாடி. செயப்பிறதாப
த்துடன்தென்பூமியில்விளங்கும் திருப்பரங் குன்றமென்னுந் திவ்வி
யஸ்தலத்திற் பிரமன் விஷ்ணு இந்திரன்முதலாகியதேவர்களுடன் வந்
திருக்கின்றனர், யித்தகையபேருதவியைச்செய்த சிவகுமாரன் சுந்திரவ
டிவுக்கும் மங்களகுணாதிசெயங்களுக்கும் இந்திரன் காமுற் றவனாய்த்
தான்முடித்தஅரியதவமுயற்சியினாற் பெற்றிருக்கின்றபுத்திரிதெய்வயா
னையம்மனைச்சரவணபவனுக்குநாளையத்தினம் திருக்கலியாணஞ்செய்து
கொடுக்கும்படிக்குநியமித்து சகலசாக்கிறதைகளும் நடத்திவருகின்ற

௯. யிந்தசுபவார்த்தையைத்தேவரீருக்குத்தெரிவித்து வரும்படிச்செங்களைச்செலுத்தினர், கற்பனையற்ற கடவுளுக்கு நடக்கவிருக்கின்ற யிந்த விவாகசம்பிறமத்தைத்தமது பந்துவர்க்கங்கள் சதுரங்கச் சேனைகளுடனும்வந்துதெரிசித்துப்போகவேண்டும் காலதாமசஞ்செய்யாமல்பிறையாணப்பட்டு செல்வவளங்களில்மிகுந்து இயலிசை நாடகமென்னும்முத்தமிழ்மூவளர்த்துவரும் மதுரைமாநகருக்கடுத்து விளங்கும் தெய்வீகம்பொருந்திய திருப்பரங்குன்றத்துக்கெழுந்தருள வேண்டுமெனத்தூதர்கள்மனவெழுச்சியுடன்சொன்னகாலத்தில் முசுகுந்தச் சக்கிறவற்தியானவர் அச்சுபமொழியைக்கேட்டமாத்திரத்தில் மனம்பூரித்துச் சந்தோஷிம்பெருத்து மீறுவதைப்போலத் திரோசம்குதுகுலித்து மயிர்சிலிர்க்க விழிகளில் ஆனந்தவாரியைப்பெருக்கி மனமகிட்சியுடன் சிங்காதனத்தைவிட்டிறங்கி வாருங்கோள் வாருங்கோளென்று தூதருக்கருகில் வந்து ஆசானுபாகுவாகத்தாழ்ந்திருக்கும் கரங்களை நீட்டிமார்பிற்சேர்த்தணைத்துக்கொண்டவராய் செவிக்களுக்கமுதமாகச்சொரிந்த தேவாதி தேவன் திருக்கலியாணத்துடக்கத்தைக்கேட்டு கிருதார்த்தனாகிய நான் உங்களுக்குத்தரவல்ல பொருளென்னிடத்தென்னவிருக்கின்றது நமது சுற்றத்தினுமினியதூதர்களே எங்கள்முன்னோர்கள்பலகாலமாகத்தேடிப் பண்டாரங்களிற்சேர்த்துவைத்திருக்கும் திரவியங்கள் மணிகள் முதலானதைக்கொண்டுபோகச்சம்மதமோ பூச்சக்கிறக்கொடையைப் பெற்றுப் போகச்சம்மதமோ வெண்சாமரை ஆலவட்டம் யிவ்விதராச சின்னங்களைத்தருதுமோ பூர்வாபூர்விகமாய் அரசுசெலுத்திவந்த பூமண்டலமுற்றும்கிடைத்துப்போகயிஷ்டமோ உங்கள்மனதில்விரும்பியதைப் பயமற்றத்தடையின்றி கேழ்க்கக்கடவீர்கள் யிதோதரக் காத்திருக்கின்றனனெனமனப்பூரிப்புடன் யின்னதைச்சொல்லுகின்றனமென்று யாதுந்தோற்றாமற்பேசியகாலத்திற்றூதர்கள் அதிசயித்துச் சக்கிறவற்தியினது உதாரத்துவத்தையும் செருக்கையும் தயாரசத்தையும் மதித்துக்கொண்டாடிராசாதிராசனே தம்மையொத்த பிறபுக்கள் சொல்லியசேதிகளை யறிக்கையிட்டுத்திரியும் யீனத்தொழிலைப்பெற்றிருக்கின்ற அடியோங்களுக்குத்தேவரீர்யிக்காலத்திற்கொடுக்க வெத்தனித்திருக்கின்ற செல்வங்களைடுப்பதோ தமதபந்துவற்கங்களுடன் பிறையாணப்பட்டுப்போய் தேவேந்திரனைக்கண்டு வார்த்தையாடுகிறாகில்யிப்போது குறித்தவளங்களிற்பதின்மடங்குதவைசெய்ததாகும்சக்கிறவற்தியென்பதுஉமக்கே தகும் நாங்கள்திரியாதயிடமொன்றுமிராது யிதுபரியந்தம் தம்மை யொத்த உதாரகாம்பீரியப்பிறவுக்களைக்கண்டதில்லை ராசபரமேஸ்பரனே அஷ்டலட்சுமிகள்விலாசங்களை அனுபவித்துச் சகலசவுக்கியங்களையும் பெற்

ருவாழும்படிக்கு எங்களிஷ்டதேவதையை வேண்டுகின்றனமெனப்பல
வாகத் துதித்துக் கொண்டாடிச் செலவுபெற்றுக்கொண்டு அப்பதியைக்
கடந்து சமுத்திரஞ்சூழ்ந்தபூமண்டலமுற்றினுந்திரிந்து குமார சுவாமி
யார்மணச்சேதியை ராசாக்கள்-குறுநிலமன்னர்-பிராமணசிரேஷ்டர்-ரி
ஷிபுங்கவர் பெரியோர்களுக்குத்தெரிவித்து அஷ்டதிக்குப்பாலகருக்குத்
தெருட்டிவானத்திற்சஞ்சரித்துத்தினத்தைவிளக்கிவருஞ்சூரியசந்திராதி
யநவக்கிரகங்கள்முப்பத்துமுக்கோடிதேவர்க்கள்நாற்பத்தெண்ணாயிர
ம்ரிஷிகள் கெருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்-பன்னகர்-உவணாதி
யவிண்ணோட்டினருக்குச்சொல்லினவர்களாய் பாதலத்தில் வாசமாயிருக்கி
ன்றஆதிசேஷன்முதலியநாகராசாக்கள்உருத்திரகோடிகள்கூர்மாண்டே
யர்முதலாகியருக்குந்தெரிவித்துத்திருப்பரங்குன்றத்தைச்சேர்ந்துஇந்
திரனுக்கறுக்கையிட்டிருந்தனர் சவுனகாதிரிஷிகளே தூதர்கள்பாலசுப்பி
ரமணியதேவர் திருக்கலியாணமகோச்சவத்தைஒருவரொழியாமற்றேடித்
தெரிவித்துமீண்டபின்பு அச்சம்பிறமங்களைத்தெரிசிக்கப்போகின்றவர்க
ளில்முசுகுந்தச்சக்கிரவர்த்தியின்வரவின்காரணங்களைச்சொல்லக்கேழ்ப்பீ
ராகதேவதூதர்களையனுப்பிவிட்டபின்பு தன்னகரத்தில்வாசமாயிருக்கின்
றவர்களையும் பந்துவர்க்கங்களையும் ரதகெசதுரகபதாதிகளாகியசதுரங்கச்
சேனைகளையும் சரவணப்பெருமாள் திருக்கலியாணத்தைத்தெரிசித்தீடே
றும்படிக்கு முந்திநடப்பதாகப்பிறையாணபேரிகையறைவிக்கும்படிக்
குக்கட்டளையிட்டமாத்திரத்திற் பூர்வத்தில்மதுரைப்பட்டணத்தில்அரசு
செலுத்தியிருந்த மீனாட்சியம்மனை பரமசிவமெழுந்தருளிப் பாணிக்கிர
கணஞ்செய்ததருவாயில் அச்சம்பிறமத்தைக் கண்டுகளிக்கும்படிக்குச்ச
கலரும்போவதாகத் திரிலோகசக்கிறேஸ்பரனாகியதேவேந்திரன் தன்வெ
ள்ளையானையின்மீது தேவமுரசையேற்றித் திரிந்துதிரிந்து பறைசாற்றிய
தைப்போல வள்ளுவன்பட்டபுயானையின் பிடரியில் மங்கலமுரசத்தை
வைத்துசகலசெல்வ வளங்களுங்குடிகொண்டிருக்குங்கருவூர்வீதிகடோ
றுமுலவி அரசன்கட்டளையின்படிக்கு முழக்கியஓசை செவிகளிற்பட்ட
மாத்திரத்திற் புரசெனங்கள் அதிகவுச்சாகங்களுடன் பெண்டுபிள்ளைகள்
சுற்றத்தினருடன் வெளிப்படவும் நவரத்தினமயமாகச்சொலித்துக்கொ
ண்டு சொற்னப்படிவமாய்ப்பருத்தோங்கியிருக்குந்தேர்ப்பந்திகளும்
சித்திரமுகப்படத்தைக்கவித்து மும்மதங்களையும்பெருக்கி நிலகிரிகளைப்
போன்றகாத்திரதிரோகத்தைக்கிடைத்தயானைக்கூட்டங்களும் மல்லகதிம
பூரகதிகளையுடையதாய் அலைகளையொப்பப்பாயவல்ல புரவிப்பந்திகளும்
சிவபத்திமான்மியங்களையும் வீரத்தன்மையையும்பற்பலபடைகளையும்
பெற்றிருக்கின்றசேனைப்பெருக்கும் தத்தமதுதலைவர்களுடன் பிறையரு

ணப்பட்டுமெனவெழுச்சியுடன்சத்தசாகரங்களும்பெரும்புறக்கடலைநோ
க்கிப்பெருகுவதைப்போலப்பேரொலியெழ ஆர்ப்பரித்து யிரண்டாயிர
வெள்ளம்பூதப்படைகள்-இலக்கர்-நவவீரர்கள்-படைத்தலைவர்-பிரமன்
விஷ்ணுவுடன்குமாரசுவாமியா ரெழுந்தளியிருக்கின்ற திருப்பரங்குன்
றைநோக்கிநடக்கின்றதறுவாயில்நேர்ந்தஅதிசெயக்காட்சியையும்உவமா
னங்களையும் பத்தியினதுகாரணங்களையும்சொல்லக்கேழ்ப்பீராக நீலகிரிக
ளைப்போலப்பருத்துயர்ந்த காத்திரதிரோகத்தைப்படைத்த மதயானைகள்
துதிக்கைகளைநீட்டி வானத்திற்செல்லும்மேகங்களைப்பற்றிநீரைக்கிறிகித்
துதாம்விருப்புற்றிருக்கின்றபிடிகள்வாயிற்சொரிந்து யிடிகளைப்போல
வீறிட்டுநடப்பதைப்பார்க்குமிடத்தில் உலகமுண்டாகியகாலத்திற்றிசை
களைத்தாங்கும்படிக்கு அஷ்டகெசங்களையுண்டுபண்ணியிருப்பதால் அ
ண்டப்பரப்பைப்பரிக்கவெண்ணி பலகுஞ்சரங்களைப் பிரமன்படைத்த
தையொப்பக்காட்டவும்சாமரையைநிகர்த்தகேசையும்வாலையும்மதற்தயார்
லைவயையும்பாலையொப்பவெளுத்துவிளங்கும்செவிகளையும் சுழிசுத்தமு
தலியளவங்களைலட்சணப்படிக்குத் திரோகஉறுப்புகளிற்கிடைத்திருக்கு
ம்புரவிகள்பொன்வெண்டையங்கள்கலிக்கத்தக்கதாகத்திரைகளினுமேலி
ட்டுக்கடல்களின்மீதிற்பாய்ந்து பூவட்டமெங்கனும்வையாளிவந்தும்பி
வ்விதமாக நடத்துப்போகவும் உத்தம அசுவங்களை அணிபடப் பூண்டு
பொன்னுருளைகள் அச்சு மச்சு குத்துக்கால் நவரத்தின மயமாகியகொடு
ங்கை-டெர்கையங்கள்-கொத்துமணிகள்-சந்திரவட்டக்குடை-பொற்
சிகாம்பிவற்றினாற்சிங்காரித்து மகம்மேருவை யொப்பக்காட்டும் ரதப
ந்திகள்செற்கரத்தொனியைக்காட்டி நிலம்குழியடப் பிளந்தோடவும்சி
ங்கத்தையொத்தவீரமும் மதயானையைப்போன்றவலியும் ரிஷபத்தைநி
கர்த்தநடையையும் காத்திர திரோகத்தையும்பெற்றுத் திவ்வியபாணவித
ங்களையும் வலியபடைகளையும்கிடைத்தவர்களாய்ப்பகைவர்நேர்ந்தகாலத்தி
ல்முன்னிட்டகாலைப்பின்வாங்காமலெதுத்துப்போராடி வெற்றிபெறவ
ல்லசெயசாலிகளாகியகால்பலமானது விறிப்போகவும் யிவ்விதச் சிறப்
புகளைவாய்ந்த சதுரங்கச்சேனைகளுக்குத் தலைவராகவிருக்கின்ற வீராதிவீ
ரர்கள்நவரத்தினமயமாகிய கிரீடங்களைத்தாங்கி வீரபட்டங்களையணிந்
து செயகெண்டைகள்பாதங்களில் கலீல்கலீலெனச்சத்திக்கப் பருத்தவி
ற்களைக்கரங்களிற்பற்றிக் கொடியபாணங்கள்நிறைந்த அம்புறாத்தூணி
ரத்தைமுதுகிலிறுக்கி புலியுமஞ்சக்கெற்சித்துச் சொர்ணமயமாகிய ரத
ங்களிலேறிப் பலதிசையினும் பார்வையைச்செலுத்திக்கொண்டு சேனைக
ளைப்போற்றிவரவும் வெண்பட்டினாலும்முத்துச்சரங்களினாலும்அலங்க
ரித்திருக்கின்ற தவளச்சத்திரக் குடைகளும் மேகங்களைப்போலப் பரத்

றுபடபடத்த தொனிகளைக்காட்டி வானத்தையளாவி யசைந்திருக்கின்ற
கொடிகள்சித்திரங்களாக வமைந்திரா நின்ற மகரதோரணங்கள் பெருத்
துமூடியிருப்பதினால் யிருள்மூடிக்காட்டவும் வீரபராக்கிரமசாலிகளா
கியசூரர்கள் கரங்களிற்பற்றியிருக்கின்ற வாள்-வேல்-பளபளத்து விளங்
கும்ஒளியும் நவரத்தினமயமாகச் சோதித்திருக்கும் பலவகைப்பணிகளி
ல்நின்றும் சொலித்தெழும்பிரகாசமும்பெருத்த யிருளையொட்டி. வர
வும்செயபேரி-மங்கலமுரசம்-வலம்புரிச்சங்கம்-மத்தளம்-குடமுழா
சின்னம்-எக்காளை-துத்தாரிமுதலியபதினெண்வாத்தியங்களும் திசைக
ளதிரமுழங்கிக்காட்டவும் யிந்தகைய ஆடம்பரங்களுடன் நடக்கின்றத
ருவாயில்ராசகுமாரர்களும் மற்றசெயசாலிகளும் தத்தமது தேவியருட
ன்போவதைக்குறித்தும் மற்றஅதிசெயங்களையும் சொல்லக்கேழ்ப்பீரா
க கணீல் கணீலெனக் கண்டைகள்சலிக்கப்பாதங்களைப் பெயர்த்துவைத்
துமுதுகிற்படைகள் நிறைந்தபுட்டிலையிறுக்கி இந்திரசாபத்தையொத்த
காண்டீபத்தைப்பற்றுவதாகிறதியாகத்தோற்றும் தோள்களில்மாட்டி சிற
ந்தபூஷணங்களைத்தேகமுற்றுமணிந்துதிவ்வியபரிமளங்களைவீசிதேன்
களைத்துளித்திருக்கும் மல்லிகைமுல்லை யிருவாட்சி சண்பகம் பாரிசாத
முதலிய திவ்வியமலர்களினாற் றொடுத்திருக்கின்ற புஷ்பமாலைகளைக்கிரீ
டத்தினும்விசாலமாகியமார்பினும்தரித்தமுப்பத்திரண்டிலட்சணங்களி
னுங்குறைவற்ற வடிவைத்தாங்கிய காளையரும் இலக்குமிக்குமேலான சு
ந்தரமும்கறுத்துநீண்டிருக்கும்அளகபாரத்தையும் சந்திரனையொத்தமு
கமண்டலத்தையும் வேலைப்போலவிளங்கிச்சேற்கெண்டைக்குச் சமதை
யாகப்பிறழ்ந்துகாதளவுமோடிய விழிகளையும் தாமரைக்கடலங்களைப்ப
ழித்த கரங்களையும்தங்கக்கலசங்களைப்போலப் பூரித்துத்தேமல்பரந்து
ததும்பி விளங்கியிருக்கும் கொங்கைகளைக்கிடைத்து சிலம்பு தண்டை
கொஞ்சும்பாதங்களைப்பெயர்த்து அன்னங்களையொப்ப நடையையுடை
யமனதுக்கினியதேவியருடன்வங்கணமாகக்கைகோத்துக்கலந்துமன்ம
தனையும் யிரதியையும்போலக் கெம்பீரமாகப்போகவும்சிலராசகுமாரர்
பொற்குமுளுகள்தோற்றக் கவிந்திருக்கும் கேடையங்களை யிடதுகரத்
திற்பற்றி வலக்கரத்தில்மின்னலையொத்தவாளைக்கொண்டு விதிர்த்துவயி
ரக்கவசங்கள்மார்பிற் பிரகாசிக்கத்தக்கதாக அஷ்ட திசைகளினும் விழிக
ளைப்பரப்பி மதயானைகளைப்போல நடப்பதைப்பார்க்குமிடத்தில். மறு
வற்றபூரணச்சந்திரனையொப்ப விளங்குகின்ற முகமண்டலத்தைப்பெற்
றமங்கையரது செவ்வரிபரந்தவிழிகளென்னும்வேல்பாய்ந்துகொல்லா
மல்வருத்துமெனநினைந்து படைகளைத்தாங்கி எச்சரிக்கையாகப் போவ
தையொப்பக்காட்டவும்அதிரூபலாவணியமுள்ள சிலதருண மங்கையர்

கள்சர்வாபரணபூஷிதைகளாய்ச்சேடியர் பாங்கியர் சூழ்ந்துவர புஷ்பக்
கொம்பையப்போல அன்னங்களும்பிடிகளும்வெழ்க்கி நாணும்படிக்கு
நடக்கும்போது பூமிதேவியானவள் தான்முன்செய்த நல்வினையின்
பிறயோசனத்தினால் அப்பெண்கொடிகள் மெல்லியபாதங்கள் தன்மீ
துபொருந்துவதினால் திரோகம்பூரித்துக்களிக்கவும் பலசுந்தரவதிகளாகி
யமங்கையர்கள் நட்சத்திரராசிகளைப்போல தங்கள் மனதுக்கிஷ்டமாகி
யபாங்கியர் - சேடியர் - சிலதியர் - அடர்ந்து சுத்திவரத்தக்கதாகப் பீதாம்
பரங்களினாற்செய்திருக்கின்ற றவிக்கைகளிற் கட்டுண்டு யானைக்கோடுக
ளைப்போலநிமிர்ந்து பூரணகும்பத்தையொப்பவிம்மி முத்துமாலைகள்
மோகனமாலைகளைத்தாங்கி பொன்போன்றதேமல்பரந்தசையும்கொங்
கைகளின்பாரத்தைச்சுமக்கப்படாமையினால் உடுக்கையைநிகர்த்துச்சுரு
ங்கி நுண்மையாகவிருக்கும் மிடைமிகவும் வருந்தும் படிக்கும் பூமிதே
வியினதுஉடலானது புளகித்துக்களிக்கத்தக்கதாகக் குமாரசுவாமியார்தி
ருக்கலியாண மகோச்சவத்தைவிழிகளும்மனமுங்களிக்கத்தெரிசிக்கவே
ண்டுமென்னும் ஆவலுடன் மயிலைப்போலசைந்து குயிலையொப்பக்கொ
ஞ்சிப்பேசிஅன்னத்தைப்போலமெல்லமெல்லநடந்து காமுகர்மனதை
யும்விழிகளையும் கலக்கிச்செல்லவும் யித்தகையசம்பிறமங்களுடன் போ
குமாற்கங்களில் அடுத்தடுத்து மதுரமாகத்தெளிந்தோடும் செலப்பெ
ருக்கையுடைய கால்வாய்களும் - மடுக்களும் நீரோடைகளும் - குறுக்கில்
நேர்ந்தமுன்னிலையிற் பொன்காய்த்தமரத்தைப்போலத்திரோகமுற்றினு
ம்நவரத்தினமயமாகிய பணிதிகளையலங்கரித்துக் கொண்டு வேடிக்கைக
ளைப்பார்த்துப்போகின்ற யிரதிக்குச்சமமாகியவனப்புள்ளநாயகிகள் மா
னையொப்பமிரளமிரளமுழித்துக்கொண்டு அப்புறப்படுவதற்குக் கூடா
மையால்திகைத்திருக்கின்றதருவாயில் ரிஷபங்கள்நாணும்படிக்குநடந்
துவரும் மன்மதனையொத்தவடிவுள்ள காளையரோடிவந்துமேகத்தினிட
த்திற்காட்டும்மின்னலைப்போலத்தழுவிக்கொண்டுதீர்ப்பெருக்கைக்கட
க்கக்கொண்டுபோயினர், ஆதலாற் சவுனகாதிரிஷிகளே பேரறிவைமாற்
றிநன்னெறிகளுக்கு விலக்காகவிருக்கின்ற சிற்றின்பத்திலழுந்திய வாலி
பருக்குத்தாங்கள்கொண்ட காதல்கடலினும்பெரிதன்றோ, இஃதன்றியு
ம்நவரத்தினமயமாகியகிரீடங்களைச்சூடி வாகுவலயங்களையணிந்து மக
ரகுண்டலங்கள்செவிகளிற்பிரகாசிக்க மற்றபணிகளையும் விலையுயர்ந்த
வஸ்திரங்களையுந்தரித்திருக்கின்ற ராசகுமாரர்கள் இலக்குமியை யொத்த
சுந்தரவதிகளாகியதமதுதேவியருடன்பற்வதாகிருதியாகக்காட்டும்யானை
யின்பிடரியிற்போவதைப்பார்க்குமிடத்தில் திரிலோகசக்கிரேஸ்பரனாகி
யதேவேந்திரன்தன்பத்தினியாகவிருக்கின்ற இந்திராணிசமேதனாய்அயி

ராவதத்தின்பிடரியில் ஆரோகணித்துப் பொன்னுலகத்திற்பவனி வருவ
தைப்போலக்காட்டவும் சொர்ணமயமாயிருக்கின்றவண்டில்கள் அச்சும
ச்சுளாதியசிங்காரங்களைப்பெற்றதாய்க் கெக்காச்சொலிகளைச்செய்தோ
டும்பாரித்தாதங்களின்மீதில் வீரசிங்கத்தையொத்தபுசபெல பராக்கிரம
சாலிகளாகிய காளையரும் கற்புச்சாலிகளாகவிருக்கின்ற தருணமங்கைய
ரும்வீற்றிருந்துபோவதை யோசிக்குமிடத்திற் சூரியபகவான் சந்திரனை
த்தழுவிஒற்றைவண்டிலும் ஏழுபச்சைக்குதிரைகளையுமுடைய தேரினிட
த்திலமர்ந்து உதையகிரியிற்காட்டிச்செல்வதுக் கொப்பாக விளங்கவும்
உலகங்களிற்செனித்திருக்கும் பிராணிகளனைத்தையும் காலாதிகளிற்கொ
ண்டுபோகவல்ல எமதருமராசன் மீதுசெல்லுமாயினும் பிராணனையலைத்
துவாட்டத்தக்கதாய்மைதிமிர்ந்து செவ்வரிபரந்து வேலைப்போலக்காதள
வும்பாய்ந்து சேற்கெண்டையையொப்பப் பிறழ்ந்திருக்கும் அழகியவி
ழிகளையுடைய வாலியப்பெண்ணரசிகள்பெண்யானைகளின் மீதிற்போவ
தைக்குறிக்குமிடத்தில் பெண்கள் நடைக்குத் தோற்றபடியால் மிகவும்
நாணிஅவர்களைச்சுமந்துதிரிவதைநிகர்க்கவும்சொர்ணக்கச்சையிலடங்
கித்தங்கக்கலசத்தைப்பழித்து முத்துமாலைகளைத்தாங்கி யானைக்கோடுக
ளைவென்றோங்கியிருக்கும் கனதனங்கள்வாய்ந்த சுந்தரப் பெண்கள்
போகுமார்க்கத்திலநேர்ந்த மதயானைகள்முகத்தில்விழியிருக்கும்தத்தங்க
ளைக்கண்டயாத்திரத்திற் றிகைத்துத் தமதுகணவனைத்தேடி யோடுவதை
ப்பார்க்குமிடத்தில் தாம் முற்பகல்செய்தவினை பிற்பகல்வந்து வருத்து
மாறுபோலக்காட்டவும் சரிகையினாலும் பட்டுவகைகளினாலும் நவமணி
களினாலும் சோடித்திருக்கின்றசினிகள் முதுகில் விளங்கவும் சொர்ணம
யமாகியகடிவாளத்தைவாயிற்கவ்விபிடரிமயிரைப்பின்னிக்குச்சுகள்தொ
ங்கமுகவணிகள்பிரகாசிக்க நான்குபாதங்களினும் வெண்டையங்கள்க
லகலெனச்சத்திக்கத்தக்கதாக வானத்தினும்திசைகளினும் பாய்ந்த வீர
மாங்களைப்போலவால்சுழல யிருபாரிசங்களினும் சவுரிகள்தொங்விட்டு
அலைகளையொப்பப் பாதங்களைப் பெயர்த்துவைத்துப் போகும்புரவிக
ளின்மீதிற் சில மாதரேறிப்போவதைப் பார்க்குமிடத்தில் திருப்பாற்க
டலைக்கடையுமுன்னிலையில் வெளுத்தநுரைகள்பெருத்து அலைகளோங்கி
யதருவாயிற் அதன்மத்தியிற் பல லட்சுமிக ளெழுவதை நிகர்க்கவும்சில
ராசபுத்திரிகள் முத்துச்சிவிகைகளிற்போவதைப்பார்க்குமிடத்தில் மேக
ங்கள்மின்னலைப்பாய்ச்சி இந்திரதனுசைப்பரித்து விளங்குவதையொத்து
ம்சிலராசபட்டதேவியர் பீதாம்பரங்களினாலும் முத்துகளினாலும் அல
ங்கரித்திருக்கின்ற மூடுபல்லக்குகளினிடத்திற்போவதை நிதானிக்குமிட
த்திற் சோடசகலைகளையுடையசந்திரன் நட்சத்திரங்கள்சூழ்ந்துவரமேக

ங்களில்மறைந்துநடப்பதையொத்தும்பிவ்விதச்சிறப்புகளுடன்புரசெ
ணங்கள் நெருங்கிச்செல்லுகின்றகாலத்தில் வேலையொத்துக் காட்டும்வி
ழிகளைச்சுழற்றிமயக்கியும் பூரணச் சந்திரோதயப்போன்றமுகாரவிந்
தத்தைக்காட்டிப்பிறிமிக்கச்செய்தும் எமனையொப்பவிளங்கும் கொங்
கைகளைமூடித்துறந்துவெருட்டியும்இவ்விதங்களிற் காமுகராகவிருக்கி
ன்றஆடவரைத்தங்கள்மையல்வலையிற்படுத்திப்பொருளைக்கிறிகிக்கவல்ல
நிதம்பத்தைப்பெற்றசுந்தரவதிகளாகவிருக்கும்கணிகையரைக்கனவிலு
ம் நினையாமற்பரமனை யிதயகமலத்திலிருத்தித்தவங்களைச்செய்துவரு
மரிஷிக்கூட்டங்களும் சதுர்வேத பாராயணராகியபிராமணசிரேஷ்டரு
ம்குமாரதேவர்கலியாணச்சம்பிரமத்தைத்தெரிசிக்கும்ஆவலினால்நெரு
ங்கிப்போகின்றமார்க்கத்திற் காமவின்பத்தைத்தந்துமயக்கவல்லயாத்தை
யருங்கலந்துபோமுன்னிலையிற் செம்பஞ்சூட்டிய பாதங்களினால் மிதி
யுண்டும் மூங்கிலைப்பழித்துவிளங்கித் திரண்டுறவிக்கையினால் மூடப்ப
ட்டிருக்கும் தோள்களினாற்றுக்குண்டும் முத்தாறங்கள் சறப்பளிகளைத்
தாங்கிச் சொர்ணகலசங்களை நிகர்த்த கொங்கையினாலிடியுண்டும் மனம்
பதைபதைத்துவருந்தி நாணினவர்களாய்ப் போகயிடம்பெறாமல் பக்க
ங்களிலொதுங்கியொதுங்கிநடக்கவும் ஏதோசிலகுற்றங்களைப் பாராட்
டியூடலினால்தங்கள் தங்கள் மனதுக்கினியகணவன்பேசும் யிங்கிதவா
ர்த்தைகளைக் காதுகொடுத்துக்கேட்க்கமனமில்லாமற் கோபித்துப் போகி
ன்றதேவியினெதிரில் டாரித்தயானை மதநீரைப்பெருக்கிப் பாகனைச்சட்
டைபண்ணாமல்வெறிகொண்டு விறிட்டுவருவதைக் கண்டமாத்திரத்திற்றி
டுக்கிட்டஞ்சித் தான்பெற்றிருந்த பிணக்கை மறந்தோடிவந்து கொழு
னைத்தழுவியகாலத்திற் புஷ்பமாலைபூணும்புயாசலங்களையுடையகுமா
ரன் அக்கன்னிகையினிடத்திற் பெற்றிருக்கின்றகாமவெறியினாற்காங்க
ளைக்கூப்பி எதிரேறிவருகின்றயானையைவிலகிப்போம்படியாகவேண்டித்
தொழுதுநிற்கவும் மின்னலைப்போலக்காட்டியும் காட்டாமையாகவும்
தோற்றநின்றமெல்லியயிடையையுடைய தருணமங்கையர்மஞ்ஞையை
ப்போலவசைந்து நடக்கும்போது விம்மித்ததும்பிபாரித்தோங்கியிருக்
கும்கொங்கைகளைச் சுமக்கப்படாமையால் அசைந்தசைந்து வருந்துவ
தைப்பார்த்துத்தியங்கித்தப்போம்போற்காணுகின்றது, அப்படிச்சு
தேருமாயின் மதனாசழிந்துபோமெனவெண்ணித்துரிதமாய்த்தேவிய
ரையனைத்துச் சிலராசகுமாரர்மெல்லமெல்லப்போகவும் மற்றொருதரு
ணமங்கையானவள் தன் கணவன்செய்தகுறையாடுகளை யெண்ணியெண்
ணிமனமெரிவள், மனதுக்கினிய கணவன்றோளைத் திரோசபரவசமாகத்த
ழுவியணையாமற்பிரிந்துபோவதினாற் காமக்கனலிற்பட்டுத்தியங்கித்திரே

சமுற்றும்வெதும்பி மெழுகைப்போலஉருகுவன், குமாரதேவருக்கும்
தெய்வானையம்மனுக்கும் நடக்கவிருக்கின்ற திருக்கலியாணச்சம்பிறம
த்தைநினைந்துமகிழ்வன், யிவ்விதமாகமனம் நிலைபெறாமல் ஆசலையொ
ப்பவலைந்துநடந்தனன், சேட்டர்களோசவுனகாதிரிஷிகளே மேற்குறித்
தபடிக்குக்குமாரதேவனாஎத்தேசகாலமும்மனதிற்சிந்தித்துப்போகின்
றசெனங்களில் அம்முயற்சியினாற் கரங்கள் குறைபட்டிருந்தவர்களுக்
கு ஆசானுபாகுவாகமுளைத்தும்சப்பாணிகளாகவிருந்தவர்களுக்குவலிய
கால்களுண்டாய் ரிஷபங்களைப்போலநடந்தும் பிறவிக்குருடருக்குச்
செந்தாமரைக் கமலங்களைப்போலக் கண்கள்தோற்றி சமஸ்தத்தையும்
பார்த்துப்பிரமித்துத் துணையுதவியில்லாமல்மதயானைகளைப்போலச்சு
ற்றுமுற்றும்பார்த்துப்போகவும் நடக்கச்சத்தியில்லாமற்கைலாகுகொ
டுக்கவந்தவர்களுக்கு மிகுந்தவலிபெற்றுச் செல்லவும் ஊமர்கிள்ளைகளை
யொப்பக்கொஞ்சி வசனித்துத்துடரவும் யித்தகையமகத்துவங்கள் தோ
ற்றியபடியால் ரிஷிகளே எமதையனாகியபாலசுப்பிரமணியதேவரிடத்தி
ல்மெய்ப்பத்தியுடன் எத்தேசகாலமும் மனதைச்செலுத்தவல்லபுண்ணி
யசீலருக்கு யித்தகையபேறுகள்கிடைப்பதரியனவோ பிறவிக்கடலையொ
ழித்து பெறுதற்கரிய மேலானமோட்சசாம்பிராச்சியத்தைக் கிடைத்து
சுகாதீதச்செல்வங்களையனுபவித்து அவன்பாதநீழலிற் றங்கி வாழ்வதற்
கையமுமுண்டோ அவர்களைச்சீவன்முத்தரெனப் புகழவேண்டும்யிவை
யன்றியும்விஷத்தொவையவிட்டிருக்கின்றவேலையொப்பப்பாய்ந்துகாத
ளவுமோடிச்செவ்வரிபரந்து சேற்கெண்டையைப்போலப் பிறழ்ந்திரு
க்கும்விழிகளையுடைய தருணமங்கையொருத்திநடக்கின்றவேகத்தினாற்
யையட்டைசாதிபூரணகும்பத்தையொத்தகொங்கைகள்தோற்றவெழுச்சி
ததுரிதமாய் மேற்போர்வையைமூடி மறைத்ததறுவாயில் அவள்முலைப்
பார்த்துப்பக்கத்தில் வருகின்றவிடையுருட்டனொருவன் அவற்றினைத்தெ
ரிசித்தவுடன் மயங்கித் துடர்ந்தனன், அதைப் பார்க்குமிடத்திற்றருத்த
முலைநெருக்கினும் போர்வைத்தொங்கலினும் அகப்பட்டுத் திரும்பவ
சைப்பறியாமலலைகின்ற அறிவை மீட்கவெண்ணி வருந்திப் போகின்றவ
னையொப்பக்காட்டவும் அம்மார்க்கத்திற்காணப்பட்டதடாகங்கள் ஏரிக
ள்மடுக்களிற்புஷ்பித்திருக்கின்றதாமரைமலர்களையும் அல்லிநீலோற்பல
முதலியபுஷ்பவகைகளையும்பறித்துக் கறுத்தஅளகபாரத்தையுடைய தே
வியருக்குக்கொடுத்தும் கொண்டைகளிற்சூடியும் கரங்களைக் கோத்து
உல்லாசமாய்நடப்பதெப்படிக்கிருந்ததெனில் மங்கையர்விழிகளுக்கு
ம்மற்ற உறுப்புகளுக்குந்தோற்றதிவைகளெனக்காட்டு மாறுபோலத்
தோற்றவும் மயிலையொத்தசாயலையும் அன்னத்தினுமெல்லியநடையையு

யுமுடைய ஒப்பற்றசுந்தரமுள்ள ஒருபெண்கொடியினது மேற்போர்
வையானது விலகி யானைக்கோடுகளையொத்த கொங்கைகள்வெளிப்படக்
கண்டகாளையொருவன் மனச்செருக்கற்றுச்சோர்ந்தவனாய் யிக்கனதனங்
களைத்தெரிசித்தமாத்திரத்திற் வலிபெற்றிருக்கின்ற என் சித்தையைமாறு
படுத்தித்தன் வயப்படுத்திக்கொண்டதால் அதன்பரிசப்பட்டகாலத்திலெ
ன்னபாடுபடவருமோவென் றுஉயிர்பதைத்து நிற்கவும் தெய்வலோகத்தி
லிருக்கின்ற கற்பகத்தருவின் மீதுபடர்ந்தசையும் வல்லிசாதக்கொடியை
யொத்தசுந்தரவதியாகியஒருபெண்கொடியினிடத்திற் றன்பெற்றிருக்கி
ன்றஆசைப்பெருக்கிலாழ்ந்து யிராப்பகலாய்வேண்டியபணிவிடைகளைச்
செய்தும்மனதுக்கினிய பண்டங்களைத்தந்தும் அலைந்துவாடித்திரிந்தஒ
ருகாளையானவன் அவளிடத்தில்யாதொருபலப்பிரப்பத்தியையும்பெறா
தவனாய்த்தியங்கிஅவள்பின் றுடர்ந்துபோகுமார்க்கத்திற்பீதாம்பரத்தினா
ல்முடியிருந்தமேற்போர்வையானது காற்றின்வீசலினால் விலகிமுத்தார
ங்களையணிந்துபொன்போன்ற தேமல்படர்ந்து பூரணகலசத்தினும் பூ
ரித்தோங்கியிராநின்றகொங்கைகள் சிறிதுதோற்றியமாத்திரத்திற்றேவா
முதத்தையுண்ணப்பெற்றவனைப்போலவும் அரியதனத்தைக்கண்டவனை
யொப்பவும் பலகாலம்வருந்திநோற்ற தவவிரதங்களுக்கடுத்தபேற்றை
க்கிடைத்தவனைநிகர்த்தும் மனமகிழ்ந்துபேரானந்தவாரியில்முழுகிமன
வெழுச்சியுடன் பின்பற்றிப்போகவும் ஒப்பற்ற வனப்புள்ள தருணமங்
கையொருத்திமன்மதனையொத்த வடிவைப்பெற்றிருக்கின்ற தன்கணவ
னைக்கலந்துசுரதலீலைகளைச்செய்து களித்திருந்தகாலத்தில் அதரபானங்
கொடுத்துகளுவும்போது பட்ட பற்குறியானதையாவருக்குங் காட்ட
வொண்ணாதென்கிற மானம்பாதித்தகாரணத்தினாற் பவழத்தையும் முரு
க்கின்மலரையும்பழித்துச் சிவந்துவிளங்கும் உதட்டைத் திறவாமலும்
யாவருடனும் வார்த்தையாடாமலும் மவுனியைப்போல நடக்கின்றதரு
வாயிற் பக்கத்திற்றுடர்ந்துவருகின்றகொழுனன் அக்குறிப்பைத்தெரிந்
து ஓபெண்கள்சிகாமணியே மன்மதராசன்கட்டளையினாற்பெருகும்மது
ரமாகிய அமுதஊறல்நிறைந்திருக்கின்ற செப்பினிடத்திற் குறியேதேனு
முண்டோ அக்காரணத்தினாற்சற்றாவது திருவாயைவிண்டுமனங்களிக்க
ஒருவார்த்தையையும்ஆடாமற்போநீரோவெனச் சக்கட்டம் பேசியகால
த்தில் மனதிலடக்கப்படாதமகிட்சியினாற் கக்கடகக்கட நகைத்துக்காந்த
னிடத்திற்பிணங்கிமுந்திநடக்கவும்புணர்ப்பினிடத்தின்புற்றவேகமாய்ந
டக்கின்றபெண்யானையின்பிடரியில் ஆரோகணித்துப்போகின்றசுந்தர
வதியாகியபெண்கொடியொருத்தி மதயானையொன்று அப்பிடியின்குறி
ப்பைத்தெரிந்து மேலிட்டுவரக்கண்டஞ்சித்திகைப்பதைப் பக்கத்திற்

போகின்றராசகுமாரன்கண்டு ஓ பெண்கள் சிகாமணியே என்பயந்துவா
டிவருந்துகின்றீர் பாந்துகாட்டும் நிதம்பமாகிய தேரையும்கால்களாகிய
புரவிகளையும் கொங்கைகளாகியயானைகளையும் விழிகளாகிய படைகளையு
ம்கொண்டு ஆடவர் பஞ்சப்பிராணனையும்வாட்டவல்ல நீர் ஒருமதயானை
க்கஞ்சவேண்டுங்காரணமென்னே வெனப்பரிகாசங்களைச்செய்து களி
த்துச்செல்லவும் யிவையன்றியும் யானைகளின்பிடரியிலும் தேர்களின்
மீதிலும்போகின்ற பாடன்மகளிரும் நாடகப் பெண்களும் மன
வெழுச்சியுடன் திருப்பாற்கடலினுதித்த அமுதமானது அலைகளைவிசியெ
ழுவதைப்போல ஏழிசைதந்திகள்பிகிர்ந்திருக்கின்ற மகாயாழினைச் சுதிகூ
ட்டிச்சேழ்ப்பவர்செவிகளுக்கானந்தமடையும்படிக்குக்குயிலையொத்த
சாரீரம்பெற்ற கண்டத்தொனியை யெழுப்பிப்பாத்தும் நிழலுமொப்
பஒன்றும்படிக்குப் பாடியும் அபிநயங்களைக் காட்டிக் கல்லென்றுஞ்
சத்தமெழஅன்னங்களைப்போலநடித்தும்மேற்குறித்தசம்பிரமங்கள்ம
த்திமத்தியில் நேத்திரோச்சவமாகக் காட்டிப் போகவும், இஃதன்றியும்
யின்னமுஞ்சிலஅருசெயக்காட்சியைச் சொல்லக்கேழ்ப்பீராக அணிபட
ச்செல்லுகின்ற மதயானைகள் பிடிகள் மத்தகங்களிலும் முகத்தினிடத்தி
லுமெழுதி யிராநின்றசிந்தூரத்தொய்யலும்போர்த்திருக்கின்றபலநிற
ப்படாங்களும்தருணமங்கையரும் மன்மதனையொத்தவடிவுள்ள ஆடவ
ரும்அணிந்திருக்கின்ற நவரத்தினமயமாகிய ஆபரணவிதங்களும்வெண்
பட்டினாலும்முத்துக்கோவையினாலும்அலங்கரித்திருக்கின்ற சந்திரவட்
டக்குடைகள் பற்பலநிறம்பெற்றதுசபடாங்களுமெங்கனும் நிழலைப்ப
ரப்பிக்கவிந்துவிளங்குவதினாற் கடலைப்போல ஆரவாரித்துப் போகும்
சேனைப்பெருக்கில்இரவும்பகலும்மாலைப்போதும்ஒன்றுபட்டுக்கலந்து
போவதையொத்துக்காட்டவும் யானைகுதிரைசடங்களினிடத்திற் செய
பேரி-மங்கலமுரசம்-டங்கா-மத்தளம்-திருச்சின்னம்- துத்தாரிஎக்கா
ளைவலம்புரிச்சங்கம்-பிள்ளாங்குழல்-செயகெண்டை- உடுக்கை-நாரிய
ம்சொக்கனை-குடமுழா-தக்கை-சல்லரி-மல்லரி-பிற்மதாளம்சங்கீதவா
த்தியமெனச்சொல்லநின்ற தோற்கருவி- துளைக்கருவி- நரம்புக்கருவி-
கஞ்சக்கருவி-மிடற்றுக்கருவி-விதங்களாகிய பதினெண்வாத்தியங்களையு
ம்சத்தசாகரங்களும்பெருகியதைப்போல பலதிசைகளெங்கணுஞ் செவி
டுபடத்தக்கதாகத் தாம்தாமெனமுழங்கிவரவும் இத்தகைய ஒலக்கத்தின்
மத்தியில் வேதாகமங்களைப் பூரணமாகவோதி யுணர்ந்தபண்டிதர் பிரா
மணசிரேஷ்டர் தவங்களிற்சிறந்தரிஷிகள் மகத்துக்கள் பெரியோர்கள்
தேவலோகவாசிகளாகியகடவுளர் மனவெழுச்சியுடன் செங்கோலைநடாத்
திமன்னுயிரைத்தன்னுயிரைப்போலப் போற்றிவரும் முசுகுந்தச்சக்கிற

வர்த்தியானவன் சுகசீவியாய்ச்சகலசெல்வங்களையும் அநுபவித்துவாழும்
படிக்குப் பலஆசிகளைச்சொல்லி அநாகுஅட்சதைகளைத் தூவியும் கற்ப
கமலர்களையிறைப்பதைப்பார்க்குமிடத்திற் காரியகாரணங்களுக்குப்புற
ம்பிலுலவியும் எள்ளினெண்ணெயைப்போலவெங்கும்பரிபூரணமாகநிறை
வெய்தி சராசரப்பிரபஞ்சங்களையாட்டிப்பூட்டி யுறக்கிவரும்சிவகுமாரன்
திருமணச் சம்பிரமத்தைத்தாமும் தெரிசித்துப் பேரின்ப சுகத்தைப்
பெற்றுவாழும்யிச்சைகொண்டு வானத்திற் சஞ்சரிக்கின்ற நட்சத்திரரா
சிகளிறங்குவதைப்போலக்காட்டியது, சவுனகாதிரிஷிகளே மேற்குறித்
தசம்பிரமங்கள்பெருக்கோங்கும்படிக்கு ராசதானியாகவிருக்கின்றநகரு
ரில்வாசஞ்செய்யும்சனங்களும் அந்நகரைச்சூழ்ந்தநாடுகளிலிருப்ப
வரும் ரதகெசதுரகபதாதிப்பெருக்கும் செயஉச்சாகங்களுடன் மங்கல
வாத்தியங்கள்சமுத்திரத்தைப்போலக் கோஷித்துவரப் பூமியெங்கும்
பரந்து நெருக்கிப்போமுன்னிலையில் முசுகுந்தச் சக்கிரவர்த்தியானவர்
நவரத்தினமயமாய் வானத்தையளாவவிருக்கின்றபாரித்த தேரினிடத்தி
ல்ஆரோகணித்துப் பந்துவர்க்கங்கள் மந்திரி பிரதானிகள் சேனைத்தலைவ
ர் மன்னமண்டலிகர் தத்தமது வாகனங்களிலேறிச்சூழ்ந்துவரவும் பட்
டவர்புகழ்ந்து வித்துவான்கள் பாமாலைகளைச்சாற்றிப் போற்றி வரத்தக்
கராகாரசவோலக்கங்களுடன் நடுநாயகமாய்விளங்கிச்சென்றுநாடுநகரங்
கள்வனங்கள்வனாந்திரங்கள்நதிபர்வதங்களாதியாகத்தாண்டிசூரியன்
உச்சியில்நேர்ந்தமத்தியானகாலத்திற் பாலசுப்பிரமணியதேவ ரெழுந்த
ருளியிருக்கும்திருப்பரங்குன்றத்தைச் சக்கிரவர்த்தியானவர் தன்சயின்னி
யங்களுடனசேர்ந்தனர், யிந்தகலியாணச்சம்பிரமத்தைத் தெரிசித்துக்
கிருதார்த்தராதற்பொருட்டு தேவரினங்களும் ரிஷிக்கூட்டங்களும் மற்
றவன்றூடரும் அன்பத்தாறு தேசத்துமன்னரும் ராசவோலக்கத்துட
ன் தத்தமதுபுத்திரமித்திரகளத்திராதிகள்நால்வகைச்சேனைகளுடன்வந்
துசேர்ந்தனர், இவ்விதமாகப்பூமண்டலத்திலிராநின்றநால்வகைச்சயின்
னியங்கள்மற்றபிராணிகளனைத்தும்ஒருமுகத்திற்கூடியதறுவாயில்மலைச்
சாரலிலும் அதன்மேனிலையிலும் மற்றயிடங்களிலும் எள்ளிடவிடமில்
லாமல்நெருங்கி மனவெழுச்சியுடன் கலியாணமகோச்சவத்தை எதிர்பா
த்திருந்தகாலத்தில் நேர்ந்தசில அதிசெயக்காட்சியையும் சொல்லக்கேழ்
ப்பீராக அந்தமலையைச்சூழவிருக்கின்ற பருத்தமராமரங்களிலும்தேவ
தாரத்திலும் சந்தனத்தருக்களிலும் யிருப்புச்சங்கிலிகளினாற் பந்தித்தி
ருக்கின்றமதயானைகளொன்றுகாமக்கவலையிற்பட்டுத்தனபக்கத்திலிரு
க்கின்ற பெண்யானைக்குப்பசியைத்தவிக்கநினைந்து நீண்டிருக்கின்றது
திக்கையைநீட்டித் தெய்வலோகத்திற்றழைத்திருக்கின்ற பஞ்சகற்பகத்த

ருக்களிலது இளைகளைமுறித்துக்கொடுத்தும் கூரியதந்தங்களினால்வான
த்திற்சஞ்சரித்திருக்கின்ற மேகங்கள் வயற்றைப்பீறி அதனிடத் திருக்கி
ன்றசெலத்தைக்கிரகித்து வாயிற்சொரிந்துமகிழவும் சிலவலியயானைகள்
அவ்வரையைச்சூழ்ந்திருக்கும்காட்டிற்சஞ்சரிக்குங்குஞ்சரங்கள் வீறிடி
மொலியைக்கேட்டவுடன் சீறிக்கட்டுத்தறியைமுறித்துக் காலிற்பூட்டியபி
ருக்கின்றசங்கிலிகளுடன் உலவுவதைப்பார்க்குமிடத்திற் பூர்வத்தில்தே
வராசன் வச்சிராயுதத்தினாற்சிறகுகளைவெட்டியகாலத்தில் தத்தமது நிலை
களில்விழுந்துகிடக்கின்ற பர்வதங்கள் கால்கள்முளைத்தசையப் பெற்ற
தைப்போலக்காட்டவும் மற்றொருபாரிசத்திற் கட்டியிருந்தவெறிகொ
ண்டயானையொன்று தலைக்கெதிரில்மேகங்கள்கவிந்து யிடிமின்னலைப்
பெருக்கியிருக்கும்பர்வதத்தைப்பார்த்து யிதுதிசைக்களிறுகளிலொன்
றுகக்காணுகின்றதென்றெண்ணி மதங்களைப்பெருக்கிச்சீறி விறிட்டோ
டவும் மற்றொருபாரிசத்தில் யிளமைதங்கிய பெண்யானையொன்று கல்
விக்குறிப்பைக்காட்டித் துதிக்கையையசைத்துயிரைச்சவிட்டுநடப்பதை
க்கண்ட மதயானைக்கூட்டங்கள்வெறிகொண்டு சங்கிலிகளைமுறித்தும் வி
ருட்சங்களைவேருடன்பறித்துக்கொண்டு துதிக்கைகளைத்தூக்கிச் சுவைப்
பின்பற்றித்தொடர்ந்துபோவதைப்பார்க்குமிடத்தில்ஆதியிற்றிருப்பாற்க
டலினுதித்தஅமுதகலசத்தைச் செகன்மோகினியாகநின்றமாயன்றிருக்க
ரத்திலேந்தி மெல்லமெல்லபாதங்களிற்றரித்த சிலம்பு தண்டைகள்சத்தி
க்கத்தக்கதாகநடக்கும்போது அவள்ரூபலாவணியங்களைக்கண்டுகாமுற்
றமதவெறிகொண்டு கரியதிரோகத்தைவாய்ந்த அவுணர் இராக்கதர்சூழ்ந்
துபற்களைத்துறந்து வாயைச்சப்பியிங்கிதவார்த்தைகளைப்பேசியின்பவ
வத்தைப்பெற்றுப் பிழைக்கவெண்ணிச் சூழ்ந்து போனதைப் போலத்
தோற்றவும் அம்மலையைச்சூழப்பெருகுகின்றஅருவிகளிற்பாயும் மதுர
முள்ளசெலப்பெருக்கினிடத்திற்போய் தாகசாந்திசெய்துகொள்ளவும்
முழுகிக்களிக்கவும் விருப்புற்றுவிடுபட்டோடிவிழுந்து வானவரையில்
நீரொழுந்துவிழும்படிக்கலைத்துவயிரத்தையொத்தவலிபெற்றவெண்கோ
டுகள் மின்னலைப்போலக்காட்டவும் கபோலத்திலுங் கன்னத்திலும்பீச
த்தினும்மதநீரைப்பெருக்கி ஆழிகாலத்தெழும் பேரிடிக்கொப்பாக வி
ட்டு இந்திரதனுசுக்கிணையாகப் பலநிறம்பெற்றிருக்கின்ற முகபடாத்
தைப்போர்த்துத்திரியும் யானைக்கூட்டங்கள் எப்படிக்குக் காட்டுவதெ
னில் மேகசாலங்கள்மின்னிக்குமுறிநீர்த்துளிகளையிறைத்துப்போவதை
ப்போலவிளங்கவும் ஒருமதயானையானது பாகனைச்சீறி அதிகவிருப்புட
ன்நடக்குமுன்னிலையிற்பிடித்துமின்னிக்கவிந்திருந்தமேகத்தைப்பகை
த்துக்கூரியதந்தங்களிற்பாய்ந்ததவாயிற் பீறிட்டோடும்செலப்பெ

ருக்கைத்துதிக்கையினுறிஞ்சித்திசைகளிற்செல்ல வீசுவதைப்பார்க்குமி
டத்தில் முன்னொருகாலஞ்சிவபிரான் களிறாகத்தோற்றியதிருவிளையாட
லின்போது சத்தசாகரங்களின் நீர்ப்பெருக்கையுறிஞ்சித்து வீசியுலவியது
க்கொக்கும் தேவதாத்தருக்களிற்பிணித்திருக்கின்ற யாரித்தஒருயானை
யானதுபிடிகள்கன்றுகள் சுற்றிலும் நிற்க மத்தியில் விளங்குவ
தைப்பார்க்குமிடத்திற் குன்றுகள்மத்தியில் நீலகிரியொன்று காட்டுமா
றுபோலவிளங்கவும் அதிகவீறுப்புடையஒருமதயானையானது தன்பிடரி
யிலிருந்து பாகனானவன் அங்குசத்தினால்வலிகொண்டுகொத்தியபோதினு
ம் அவன்குறிப்பின்வண்ணம்போகாமல் காட்டானையின் அவத்தைத்தெ
ரிந்துமீறி வாயுவினுங்கடுகியோடுவ தெப்படிக்கிருந்ததெனில் வஞ்சக
வார்த்தைகளினால்காமுகர்மதியைமயக்கிப் பொருளைக் கவருமெண்ணங்
கொண்டிருக்கின்ற தாய்க்கிழவியானவள் சீறிச்சொல்லும் வசனத்தைக்
காதுகொடுத்துக்கேளாமல் அதிகவடிவுள்ளஒருசுசிங்காரனிடத்தில்மை
யல்கொண்டுபோகும்வேசி மனதைப்போலத்தோற்றவும் யித்தகையசிற
ப்புகளைவாய்ந்த யானைகளின்பெருக்கைக்கணித்து முடிவதோ யிதுநிற்
கச்சிவபிரான்கடாட்சத்தினாற்பெற்ற வரமுயற்சியினால் ஆயிரத்தெட்ட
ண்டங்களுக்கும் அதிபனாய்க் கொடுங்கோலைச்செலுத்தி சகலசெல்வங்
களையும் அனுபவித்து எத்தகையரும்வணங்கிப்போற்ற வீற்றிருந்தசூர
பதுமன்ஒருகாலங்கோபித்துத் தசவாயுக்களையும் பிடித்துவந்து தனதுபூ
ட்டிக்காவலில்வைத்திருந்ததைப்போலச் சுழிசுத்தங்களையும் வேகத்தை
யுமுடைய புரவிக்கூட்டங்களை அணிபடத் தோப்புகள்தோறும் பந்தித்
தும்வெற்றிவேலாயுதக்கடவுளினது திருக்கலியாணமகோச்சவத்தைக்க
ண்டுகளிக்கவிருப்புற்று வானகத்திலிருக்கின்ற தேவர்நகரங்களும் அஷ்
டதிக்குப்பாலகர் பதங்களும் பூமண்டலத்திலிராநின்றபதிகளுஞ்சேர்ந்
துவந்திருப்பதைப்போலமேககற்சிதத்தினும்பெருத்துக்காட்டுங்கனை
ப்பையுடைய அசுவப்பந்திகளைப்பூண்டு கெற்காத் தொனிகளைக் காட்டி
யோடும்பொன்மயமாகியதேர்களனந்தகோடி எம்மருங்கினும் அடர்ந்தி
ருக்கவும்விஷத்தையொப்பக்கறுத்துப்பாலினும்வெளுத்துவேலுக்கொ
ப்பாய்க்காதளவு மோடியிராநின்ற அழகியவிழிகளைப்படைத்தமாதரும்
மன்மதனையொத்தவடிவும்புசபெலபராக்கிரமங்களையும்பெற்றிருக்கின்
றகாளையரும்படைத்தலைவரும்வீராதிவீரர்களாய்ப்பலநிறைச்செட்டைக
ளையணிந்துசர்வாயுதபாணிகளாயிராநின்றசேவகர்களும் புரசெனங்களா
தியாகமனவெழுச்சியுடன்பலநிறப் பீதாம்பரவகைகளினாற்சோடித்துவரி
சையாகநாட்டியிருக்கின்ற கூடாரங்கள்தோறும் கிரமப்படிக்குவாசஞ்
செய்யவும்ஒருகாலந்தேவேந்திரன் தனக்கிடும்பொங்கல்பூசனையைமாற்

தியகாரணத்தினாற் கோவலர்மீது பகைத்துவருந்தி வாடும்படிக்குச்சத்த
மேகங்களைக்கொண்டுகல்மாரிபெய்வித்ததுவாயிலவர்கள்படுந்துன்
பங்களுக்கிரங்கிஸ்ரீகிருஷ்ணபகவான் கோவர்த்தனகிரியையெடுத்துசுண்டுவி
ரலினாற் குடையாகத்தாங்கி யாதவர் பெண்டுபிள்ளைகள் பசுக்கூட்டங்க
ள்கன்றுகளையும்யாதொருதுன்பங்களுமில்லாமற்போற்றிக்காத்ததைப்
போலப் பொன்னையொத்த தளிர்களைவிரித்துப் பலநிறக் காய்கனிகளைக்
கொண்டுதழைத்துக்கவிந்திருக்கும்மா - பலா - தேவதாரமுதலிய தருக்க
ள் அடர்ந்தோங்கியிருக்கும் - தோப்புகள் - சோலைகளினிடங்கடோறும்
சொர்ணமயமாகியவிடுதிகளையேற்படுத்திக்கொண்டு ராசகுமாரர்கள் தங்
கள்பத்தினிமாருடன் களித்திருக்கவும் இவையன்றியும்சக்கிரவர்த்தியின
துநகரவாசிகளாய் அச்சேனைப்பெருக்குடன்வந்திருக்கின்றவணிகர்முத
லியவியாபாரிகளும் சிவகுமாரன்வீற்றிருக்கின்ற தலத்திலிருக்கும்வர்த்த
கரும்மனவெழுச்சியுடன் முத்து - பவழம் - வயிரம் - கோமேதகம் - புஷ்
பராகம் - மரகதமணிவகைகளையும் - பொன் - வெள்ளி - திரவியங்களையும்
நவரத்தினங்களினாற்செய்யப்பட்டிருக்கின்றகிரீடம் - வாகுவலயம் - மக
ரகுண்டலம் - மதாணிப்பதக்கமுதலிய ஆபரணங்களையும் பீதாம்பரம்
சித்திரவிசித்திரமாகச் செய்திருக்கின்ற பட்டாடைகளையும் புனுகுசவ்
வாதுமுதலிய பரிமளமிகுத்தகலவைச்சாந்துகளையும் சுகந்தங்களை வீசும்
திவ்வியபுஷ்பமாலைகளையும் மற்றுமிராநின்ற விலையுயர்ந்தபுதிய பண்ட
ங்களனைத்தையும் மேடைகள்மீதினும் கூடாரங்களினும் குப்பல்குப்ப
லாகக்குவித்தும் பொற்பள்ளயங்களில் நிரப்பிவைத்தும்பரப்பியும்சிப்
பம்சிப்பங்களாகவடுக்கியும் யிரவலர்விருந்தினர், மனோபீஷ்டத்தை நி
தானித்துத்தகுந்தபடிக்கு வழங்கிவரும் தியாகிகளைப்போல வீற்றிருந்
து துலாக்கோல்களைகரங்களிற்பற்றி வேண்டிவருபவரிஷ்டப்படிக்குக்கு
றைவறப்பகர்ந்து குபேரன்பட்டணமும்நாணும்படிக்குவிதிபிரித்தெ
த்தலங்களினுமிருக்கவும்யிவ்விதச்சம்பிரமங்கள்மலிந்திருக்கின்றதிருப்
பரங்குன்றச்சாரல்கடோறும் அடர்ந்துநெருங்கிவருகின்ற ஸ்ரீமான்
களும் மற்றையரும் வானத்திற்சஞ்சரிக்கும் மேகராசிகளினிடத்திருந்
துமின்னற்கொடிகள்மெல்லநழுவிப் பூமியிற் சஞ்சரிப்பதைப்போலத்
தாமேறிவந்தபிடிகள் அம்பாரிகள் சொர்ணமயமாகியதேர்கள் விமான
ங்கள்முத்துச்சிவிகைகள் மூடுபல்லக்குகள் புரவிகளாதிய வாகனங்களை
விட்டிறங்கி அன்னங்களையும் மதயானைகளையும் ரிஷபங்களையும்போல
இரதியையும் மன்மதனையும்நிகர்த்து தம்பதிசமேதராய்க் கரங்களைக்
கோத்துக்கொண்டு கேளிவிலாசமாய்ப்போய் அத்தலங்களிலிருக்கின்ற
விநோதங்களைக்கண்டுமகிழ்ந்தும் குயில்கள் நாணவாலித்தும்மயில்கள்

வெழிக்கெப்புறமட நடந்தும் வானத்தையளாவவோங்கித் தழைத்துக்கு
ளிர்ந்து நிழல்பரப்பியிருக்கின்ற தோப்புகளினிடங்களிற்சென்று கனி
வகைகளைப்பறித்தருந்தியும் மனோஞ்ஞமாகத் தோற்றுகின்ற காவுகள்ந
ந்தவனங்கள் உத்தியானவனங்களிற்புகுந்து திவ்வியபரிமளங்களை வீசி
ப்பொன்னையொத்தமகரந்தங்களையுதிர்த்துத் தேன்களைச்சொரியுந்திவ்
வியசுகந்தமலர்களைப்பறித்து ஒருவர்மீதொருவ ரிறைத்தும் மாலைகள்
சேர்த்துக்கொண்டைகளிற்சூடியும் மார்பிலணிந்தும்கரங்களிற்றரித்து
விளையாடியும் மதுரமிகுந்தசெலசம்ருத்தியாகவிருக்கின்ற சுனைகளிலும்
கால்யாறுகளிலும் மடுக்களிலுமிறங்கி நீரையிறைத்தும் செலக்கிரீடை
களைச்செய்தும் மனவெழுச்சியுடன்வெளிவந்து கல்லென்னுஞ்சத்தமெ
ழச்செனங்கள் வசனிப்பதினுற் பெருத்துக்காட்டும் அப்பறவைகளி னார
வாரங்களைக்கேட்டு விம்மிதராய் இதற்குப்பிரமாண மிருக்கின்றதோவெ
னமகிழ்ந்து தாமும்மாறிமாறிக்கூவிக்களித்தும் தோகையைவிரித்துமயி
லினங்கள் நிர்த்தஞ்செய்வதைப்பார்த்துமகிழ்ந்தும்மற்றவேடிக்கைவினோ
தங்களைநோக்கிமனவெழுச்சிபெற்றும், சவுனகாதிரிஷிகளே யிவ்விதங்க
ளாக இலக்ஷுமியையொத்தசுந்தரவதிகளாகிய ராசபத்தினியர்-சேடியர்-
பாங்கியர்-சிலதியர்-சூழ்ந்துவரத்தக்கதாக அன்னங்களையொப்ப மெல்
லமெல்லவச்செம்பஞ்சூட்டிய பாதகமலங்களைப்பெயர்த்து பூமிதேவிதி
ரோமம்பூரித்துக்களிக்கவுலவவும்மன்மதனிலும்வடிவும் புசபெலபராக்கி
ரமங்களையும்கல்விச்சம்பத்தையும் நல்லொழுக்கங்களையுமுடைத்திருக்
கின்ற ராசகுமாரர்கள் வரிவரியாகத்தங்கக்கட்டுகள்பதித்த யிருகுதைக
ளினும்மணிகள்சத்திக்க இந்திரதனுசைப்போலப் பாரித்துநீண்டிருக்கு
ம்விற்களைப்பற்றுவதாலிறுகியதோளில்மாட்டி மின்னலையொத்த அல
குகளையுடைய திவ்வியபாணவகைகளைச்சேர்த்திருக்கும் அம்புறாத்தூணி
ரத்தைமுதுகிலிறுக்கி-வாள்-வேல்-கேடயம்-சக்கரம்-தண்டாயுதமா
தியபடைகளைப்பரித்துவீரகெண்டாமணிகலீல்கலீலெனச் சத்திக்கத்தக்க
தாகவும் முத்தாரங்கள்மோகனமாலைகள்விசாலமாகியமார்பிற் புரளவும்
பிறையைப்போல வீரபட்டம் நுதலில்விளங்கவும்தமது மனதுக் கினிய
தோழர்களுடன்கூடி உத்தியானவனங்களிற்சென்று மகிழ்ந்தும் மலைய
ருவிபெருகுவதைப்பார்த்து அதிசெயித்தும் மதுரமிகுந்த செலசம்ருத்தி
யாகவிருக்கும் சுனைகளைக்கண்டு களித்தும் மதயானைகள் வீறிட்டுத் துதி
க்கைகளைச்சுலவிச்சாடி ஒன்றுடனொன்று போராடுந்திறத்தை நோக்கியு
ம்விரசிக்கத்தைப்போன்றும் ரிஷபத்துக்கொப்பாகவும் கெம்பீரமாகத்
திரிந்தும் யிவ்விதமாகச்சகலரும் ஆனந்தவாரியிலழுந்தி வருகின்றதரு
வாயில் ஸ்ரீபுமான்கள்தரித்திருக்கின்ற புஷ்பமாலைகளிற்பெருகும்தேனை

யுண்டுகளித்திருந்தவண்டுக்கூட்டங்கள்பறந்து சுனைகளில் விகசித்திருக்
கும் தாமரைக்கமலங்கள் அல்லிகளிலிறங்கிப் புதியமதுவையுண்டு அக
னிடத்திருந்ததமதினங்களுடன் கலந்துகுலவவும் சொர்ணமயமாகியற
விக்கையினுற்கட்டுண்டு தேமல்படர்ந்து விம்மியிருக்கின்றதனபாரங்க
ளையுடையதருணமங்கையரும் மதனனைப்போன்றசவுந்திரியம்பெற்ற
காளையரும்மலைச்சாரலினிடங்களினெங்கனும் வேடிக்கைபார்த்துக்கொ
ண்டுதிரிந்ததறுவாயிற் றுக்கிரசூரியனது கிரணவெப்பத்தணியும்பொரு
ட்டுச் சுத்தோதகப்பெருக்கில்முழுகித் தாபங்களைத்தணிய நினைத்தவர்க
ளாய்ப்பலவிதமலர்களலர்ந்து நேத்திரோற்சவமாகக்காட்டும் தடாகங்
களின்கரைகளினிடங்களிற்சேர்ந்து மேகசாலங்கள் சஞ்சரிக்கும் வான
நாடுகளில்வாசஞ்செய்திருந்த விஞ்சையர்இயக்கர் கின்னரர்முதலியரும்
பூரணச்சந்திரோதையத்தைப்போலத் துலங்கிக்கொண் டிருக்கும் திரு
முகமண்டலங்களைப்பெற்றிருக்கின்ற அவர்கள்தேவிமார்களும் திரண்
டிறங்கியதுக்கொப்பாக விசாலமாய்பளிங்கையொப்பத்தெளிந்தமது
ரமிகுத்த செலசமற்றியாய்புஷ்பவகைகள்பெருத்து அன்னங்களாதியப
ட்சிசாதிகள்சிரவணாநந்தமாகஒலித்திரா நின்ற தடாகங்கள்குளங்கள்மடு
க்களிலிறங்கி மனவெழுச்சியுடன் முழுகிவிளையாடுகின்றகாளையர் தத்தம
துதேவியருடன் செய்துவரும் நீராட்டின் வேடிக்கைகளிற்சிலவற்றைச்
சொல்லக்கேழ்ப்பீராகவயல்முதலிய வளங்களிற் குறைவின்றிச்செழித்தி
ருக்கும் மருதநிலங்களில்வாசமாயிருக்கின்ற சுந்தரவதிகளாகியகடசியர்
செவ்வரியடர்ந்துவிசாலமாய்காதளவுமோடியிருக்கும்விழிகளுக்குஉவமா
னப்படாதகுறையாட்டினுல்வெழ்க்கிப் பழிக்குள்ளாய் வாடிவந்து அப்
பேற்றைக்கிடைக்கவெண்ணித்தவங்களைச்செய்துமறைந் திருப்பதுபோ
லவிளங்குகின்ற குவளைமலர்களைக்கண்டபேதமைப்பாலராகியசிலகன்னி
யர் அதிசெயித்து இஃதென்னை அலைகளைப்பெருக்கியிரை ந்திருக்கின்றத
டாகங்களுக்கும் நம்மைப்போலகண்களுண்டோவெனத்தங்கள்சொழு
ணைவினவியும் சிலகன்னியர்தங்கள்பக்கங்களிற்றோற்றுகின்றதாமரை
க்கமலங்களைமுகமண்டலங்களாகவும் பரவியிருக்கின்ற பசியபாசியைக்
கூந்தலாகவும செங்காந்தள்மலரை அதரங்களாகவும் வுலவுகின்ற சங்கின
ங்கள்கழுத்துகளாகவும் அலைகளைவெண்பட்டாடைகளாகவும் அதனிடத்
திற்றங்கியபட்சிகளொலியை வார்த்தையாடுவதாகவும் மதித்துத் தம்மை
ச்சூழ்ந்திருக்கின்ற பெண்கள்முகத்தைப்பார்த்து அடிதோழி-பாங்கி-
யிதுவென்னபுதுமையாகவிருக்கின்றது யித்தடாகமொரு பெண்பாலா
கக்காணவில்லை பற்பலவுருவங்களாகத்தோற்றுகின்றது, யிதன்காரணம்
உங்களுக்கேதேனுந்தெரியுமோ சொல்லிரெனக்கேட்டும் மற்றொருபுற

த்தில்மன்மதனையொத்த சுந்தரமுள்ளகணவனுடன்கூடிச் சந்தோஷமா
ய்மலர்களாட்டமடித்துக் கிளிகளையொப்பவசனித்து வஞ்சணமாய் விளையா
டிக்கொண்டிருந்த ஒருநாயகியானவள் மங்களகரமாகிய தன்திருமேனி
செலத்திற்றோற்றக்கண்டவுடன் திகைத்துச்சற்பத்தைப்போலச்சீறிஎன்
னைவஞ்சித்துயிவடத்திலொருசோரநாயகியைக்கொண்டுவந்தொளித்து
க்களிக்கின்றீரென்றுமனவருத்தத்துடன்கணவன்கரத்தைத்துமுறிக்கோ
பத்துடன் துரிதமாய்க்கரையைச்சேர்ந்து பிணங்கிநிற்கவும் மற்றொரு
காளையானவன் அதிகசந்தோஷத்தைக்கிடைத்த மனத்தனாய்ப் பளிங்கை
யொப்பத்துல்லியமாகவிருக்கின்ற நீரை வாய்நிறையக்கொண்டு கொப்
பளித்துக்கொப்பளித்து எதிரில்நிற்கின்ற காதலியினது முகாரவிந்தத்
திலுமிழ்கின்றகாலத்திற் சகிக்கப்படாமையாற் காதலனிடத்திற் பிணங்
கிமனச்சோர்வுடன் செலத்தில்முழுகித் தாமரைபுஷ்பச்சாட்டில் முகார
விந்தத்தைமாத்திரங்காட்டி யிருக்கின்ற தறுவாயில் அவளிடத்திற் றுன்
கொண்டிருக்கின்றமையலினால்மயங்கி அதனைக்கமலமாகவே நினைந்து
ஐயையோ யென்மனதுக்கினிய தேவியைக் காணேன் யென்செய்வேனெ
னப்பதைபதைத்து மனவருத்தத்துடன் தேடித்தேடித்திரிந்தலைவதற்கி
ரங்கிநகைத்தமாத்திரத்தில் மனம்பூரித்துத் தழுவியெடுத்துக்குலவியிரு
க்கவும் பசியமூங்கிலைப்பழித்தவளப்புடன் திரண்டு றவிக்கையினால்மூ
டப்பட்டிருக்கின்ற தோள்களையுடைய ஒருபெண்கொடியானவள் காம
னையொத்தவடிவுள்ள தன்காந்தன்மீதிற்பரிவாய் திருக்கரங்களைக்கொண்
டுசெலத்தைவாரிவாரியிறைத்துப் பரியாசங்களை யாடியிருப்பதைப்பார்
க்குமிடத்தில் வேதாகமபுராண எதிகாசங்களில் தமக்குரிய கணவனைத்
தொழுவதன்றியில் மங்கையருக்கு வேறுதெய்வமில்லையெனமுறையிடு
வதற்கிலக்கணமாகத் திருமஞ்சனமாட்டித் துதித்து வழிபடுவதற்கொப்
பாகக்காட்டவும், இத்தகையவேடிக்கைகளின்மத்தியில்தேவாமுதத்தினு
மினிமையாகவசனிக்கும் சுந்தரவதிகளாகிய ராசகன்னியர் முதலிய மங்
கையர்விழுந்து எத்தலங்களிலுந் திரிந்துதிரிந்து முழுகிக்களித்து விளை
யாடிவருந் தறுவாயில் அப்பொய்கையிற்சஞ்சரித்திருந்தநண்டுகள்வரா
லினங்கள்-சேற்கெண்டைகள்-வட்டமாயிருக்கின்றஆமைகள்தவளப்ப
டிவம்பெற்றிருக்கின்றசங்கினங்கள்வெருவித்தாமரைக்கமலங்கள்மலி
ந்திருக்கும்நீரலைவதினாற்கரைகளைச்சேரஒதுங்குவதெப்படிக்கிருக்கின்
றதெனில்அம்மங்கையர்உறுப்புகளுக்கிணையொவ்வாதகாரணத்தினால்நா
ணிப்புறந்தந்துபதுங்கப் போவதைப்போலத் தோற்றவும் மகாலட்சுமி
க்குச்சமதையாகிய வடிவைப்பெற்றுச்சற்வாபரண பூஷிதைகளாகவிருக்
கின்ற தருணமங்கையரும் கருப்புவில்லைத்தாங்கி வீறிருக்கும்மன்ம

தனையொப்பக்காட்டும்வனப்பையுடையகாளையரும் கூட்டுறவாய்மனப்
பூரிப்புடன்ஒருவர்மீதொருவர் நீரையிறைத்தும்விழுந்து கலக்கியும்முழு
கியும்பாய்ந்தும்இவ்விதங்களில்உல்லாசமாய்விளையாடிவருமுன்னிலையி
ல்அப்பொய்கையானது அல்லோலகல்லோலப்பட்டு அலைகள்மிகச்சிதறுந்
திவலைகளானவை தாமரையினுடையயிலைகடோறும் பரந்திருப்பதைப்
பார்க்குமிடத்தில்வனப்புக்கொப்பற்றஸ்ரீபூமான்களைவரும்ஏககாலத்
திற்றன்னிடத்திற்சேர்ந்துகளியாடலைச்செய்துவரும்பூரிப்பினால்பூந்தடா
கமென்னும்கன்னிகைக்குத்திரோகபாவமாய்மயிர்சிலிர்த்திருப்பதைப்
போலவிளங்கவும்விழிகளுக்குத்தோற்றப்படாதமெல்லியறவசல்லாக்க
ளையுடுத்துப்புனலிற்பாய்ந்துவிளையாடித்திரியுமுன்னிலையில்வஸ்திரம்ந
னைந்துநிதம்பஸ்தானம்வெளிப்படையாகத்தோற்றக்கண்டவுடன்சகிக்
கப்படாதநாணத்தைக்கொண்டவளாயெதிரில்நிற்கவெட்கிக் கொழுந
னைச்சேர்த்தணைத்துத் தனபாரங்கள்விசாலமாகியமார்பிலிறுகத்தழுவியி
லக்குமியானவள் விண்டுவின்மார்பில் விளங்குவதுக்கொப்பாக விருக்
கவும்பேதமைப்பாலளாகிய ஒரு பெண்கொடியானவள்தன்னுடன்கலந்
துதடாகத்தில்விளையாடியிருக்கின்றகட்டழகுள்ளகணவனிட அதரம்வெ
ளுத்திருப்பக்கண்டமாத்திரத்திற்சீறி நானருகிலிருக்கும்போது பவழத்
தையொத்தவனப்புள்ள உமது அதரத்தி லெச்சலிட்ட சோரநாயகி யாவ
ளெனக்கொதித்துப்பிணங்கிப்போயினள், சவுனகாதிரிஷிகளே யிவ்வி
தச்சரசநீர்விளையாடல்களைச் செய்துவருகின்ற தறுவாயில் கொவ்வைக்க
னி- அரக்கு-முருக்கமலர்-யிவற்றைப்பார்க்கினும்சிவந்துகாட்டும்அதர
மானது வெளுத்துக்காட்டவும் மையையொப்பக்கறுத்துப் பாலைநிகர்
த்துவெளுத்து செவ்வரிபரந்து நீலோத்பலத்தைப்போலப் பிரகாசிக்கி
ன்ற விழிகள் அரக்கினுமதிகமாகச்சிவக்கவும் கறுத்து நீண்டிருக்கும்அ
ளகபாரக்கட்டவிழ்ந்துபரந்துபுரளவும் அதிற்செருகியிருந்தபுதியமலர்
களினிடத்தொழுகுந் தேனையுண்டு களித்திருந்த வண்டினங்கள் நீங்கா
த்தொனிகளைச்செய்து பலதிசையினும்பறக்கவும் யிவ்விதக்காட்சியை
ப்பெறச்செய்தமையால் வல்லிசாதக்கொடியைப்போன்றசாயலையுடைய
அம்மங்கையருக்குத் தாங்கள்குளித்திருந்த தடாகமானது சரசல்லாப
ங்களினால் களிப்பைத்தரவல்ல கணவனைப்போன்றும் கள்ளையொப்பவு
ங்காட்டியது, இஃதன்றியும் சர்ப்பத்தினது படத்தைநிகர்த்துத் தோற்ற
தின்ற அல்குலைவாய்ந்ததெரிவையரிரண்டு செலக்கிரீடை யாடுகின்றமு
ன்னிலையில் அலைந்துதாவளியமாகப்பெருத்த குமிளிகளைப் பார்க்குமிட
த்திற் பொய்கையாகியகன்னிகைதன்னிடத்திற் குளிக்கின்ற மங்கையர்வ
னப்பின்பெருமிதங்களை யிரண்டுவிழிகளினும் பார்த்துக் கணிக்கப்படா

றென்றெண்ணித்திரோசமுற்றினும்பற்பலவிழிகளைக்கிடைத்து யிமையா
மற்கண்டுகளிப்பதையொத்தும் விராகிவீரர்களாகவிருக்கின்ற சுந்தரமு
ள்ளபாலகுமாரர்களும் சவுந்தரியவதிகளாகிய சற்புத்சரசிகளும்புனல்வி
ளையாடலைச்செய்து பரிமளித்திருக்கின்ற செலத்தின் அவர்கள்பூசியிருந்த
பொற்பிறகாசம்பொருந்தியகுங்குமக்குழம்பும் புனுகுசவ்வாதுகஸ்தூ
ரிமுதலியகலவைச்சாந்துகளுங்கலந்து படிந்து காட்டுவதைப்பார்க்கு
மிடத்தில் மின்னலுடன்கலந்தமேகசாலங்களும் சிதேவியுடன் கூடியி
ருக்கின்ற விஷ்ணுவையுமொப்பக்காட்டவும் ஸ்ரீபூமான்கள் நீாலந்துகு
முறும்படிக்கு விழுந்துவிழுந்து கலக்கிவிளையாடுமுன்னிலையில் அவர்க
ள்திரோகங்களிற்பூசியிருந்த சந்தனத்தேய்வையும் நானச்சேறும் பொய்
கையிற்படிந்து அலைகள்பெருத்தோங்குவதினால் திசைகளெங்கனும் ப
ரிமளங்களைவீசிப்பொன்னுலகவாசிகளாகிய தேவர்க்கள் நாசிகளினும்நு
ழைந்து சுகந்தங்களைக்காட்டிக் களிக்கச்செய்யவும் யிவ்விதமாக மார
னையொத்தவடிவுள்ள ராசகுமாரர்முதலிய ஆடவரும் இலக்குமிக் கொப்
பாகியசுந்தரமுள்ள ராசபத்தினிகளாகியமங்கையரும் வெறுக்கத்தடாகத்
தில்முழுகிமனதுக்கினியவிளையாடல்களைச்செய்து முடிந்தவுடன்சரங்க
ளைக்கோத்தமாரனும் இரதியும்போல வங்கணமாய்அன்னங்களையொப்
பநடந்து விசாலமாய்ப்பரந்திருக்கும் கரையின்மீதுவந்து பனியினும்
வெளுத்தவஸ்திரங்களினால் யீரத்தைப்புலர்த்தி சொற்னாந்தியைபரப்
பியிருக்கும்விலையுயர்ந்தபீதாம்பரமுதலியபட்டாடைகளையுடுத்துநவரத்
தினமயமாகவிளங்கியிருக்கும் ஆபரணங்களைத்தரித்துக் கூந்தலையாற்றி
முடித்துக்கொண்டவர்களாய்த்தங்கக்கலசத்தில்முத்தாரத்தைப்பதித்திரு
ப்பதையொத்த தந்தபந்திகளைப்பெற்றதருணமங்கையரும் பொன்னை
யொப்பவிளங்குந்திருமேனியைப்படைத்தகாளையரும் ஏகமாகத்திரண்
டுமதயானையைப்போலக் கெம்பீரமாய்ப்போகின்ற தத்தமது கணவரு
டன்காமுற்றுத்துடரும்பிடிகளுக்கொப்பாகத் துணைவியர்கலந்துவங்க
ணமாய்க்குலவிப் பலபரியாசங்களையும் வினோதமாகிய வார்த்தைகளையும்
பேசிநடந்து வானத்தையளாவஓங்கித் திசைகளைமூடக் கிளைகளைப்பரப்
பிப்பசியயிலைகள்பொன்போன்ற தளிர்களைப்பரப்பிக் குளிர்ந்தநிழலைக்
காட்டி காய்கனிகள்மிகுந்து அழகியபுஷ்பங்களைப்பெற்றெதிரிற் றோற்
றநின்ற சோலைகளினும் தோப்புகளிடங்களினும் காவுகள்தோறும் சே
ர்ந்ததருவாயில் அத்தலம் விளங்கிய காட்சியாவது அடர்ந்திருக்கின்ற
தருக்களின்மீதில் மேகங்களானவை மின்னலைப்பெருக்கிக் கவிந்திருப்
பதைப்பார்க்குமிடத்திற்சொற்னகாந்தியைவீசியிருக்கும்விண்ணாட்டை
ப்போலவும் ஸ்ரீபுருடர்களித்துலவுவதுபோக பூமியிலிருக்கின்ற கற்பக

க்காவுகளில்தேவர்க்கள் தம்பதிச்சமேதாய்ச்சேர்ந் துல்லாசமாயுலவுவ
தற்கொக்கும் அக்காலத்தில் நேர்ந்தஅதிசெயக்காட்சிகளிற் சிலவற்றைச்
சொல்லக்கேட்பீராக, அச்சோலையினிடத்திருக்கின்ற பலவகைத் தருக்
கள்குலுங்கப்பூத்திருக்கின்றசாயையானது அதனடியிற்பொருந்தியபளி
ங்குத்திண்ணைகளினிடத்திற்சாட்டியிருப்பதை ஒருபெண்கொடியானவ
ள்கண்டமாத்திரத்தில் அதனைஉண்மையாகநினைந்து தொடர்ந்துவருகின்ற
தன்கணவனைக்கரங்களைக்கூப்பித்தொழுது யிந்தடாகத்தி லலர்ந்திருக்கி
ன்றமலர்களைப்பறித்துத் தரவேண்டுமெனக்கெஞ்சிக்கெஞ்சி வேண்டிக்
கடையில் அதனுண்மையைத்தெரிந்து நகைத்துப்போகவும் ரிஷபத்தை
ப்போலப்பாதங்களிலிறுக்கியிருக்கும் வீரகண்டாமணிகளின்சவினன
ச்சத்திக்க யிறுமாந்துபோகின்ற ராசகுமாரனொருவன் பரிமளமிகுந்த
கொங்குமலரைக் கரத்திற்கொண்டு மயிலைப்போலசைந்து அன்னத்தை
யொப்ப நடந்துபோகின்றநாயகியைப்பார்த்துபெண்களரசே பொன்க
லசத்தைநிகர்த்த உமதுகொங்கைகளுக் கொவ்வாதயிம்மலரை வாங்கிக்
கொள்ளக்கடவீரெனப்பேசியமாத்திரத்தில் அரக்கையொப்பவிழிகள்சி
வந்து உமதுமனதிற்குடிகொண்டிருக்கும் சோரநாயகிமுலைகளுக் கொ
ப்பென்றெண்ணியோ கரங்களினாற்பறித்துப்பற்றியிருக்கின்றீரெனச்
சீறிநோக்கி மனச்சோர்வுடன் பிணங்கிவேகங்கொண்டு முந்திப்போயி
ன்றனள், ரிஷிகளேயின்னமொரு அதிசெயத்தைக் கேட்பீராக சோட
சகலைகளைவாய்ந்த முழுமதியின்றோற்றம்போல விளங்கிக்கொண்டிருக்
கும்முகமண்டலத்தைப்பெற்றிருக்கின்றமாதர்கள் திருநோக்கந் தாக்கி
யமாத்திரத்தில் யாதொரு உபயோகமுமில்லாமல் வறிதாயுலர்ந்துவிற
காய்நின்றதருக்கள்தளிர்த்துப் பசியயிலைகளைவிரித்து பரிமளமிகுந்த ம
லர்களைப்பரப்பிக் குளிர்ந்தநிழலைக்காட்டுமாயின்யிஃதிடாலாபமாய்ஆட
வரைக்கலந் தின்பத்தைத்தருமுன்னிலையிற் பெறும்களிமிகுதியை யாவ
ராற்சொல்லிமுடியும் அச்சோலையில் மாரனைப்போல உலவிவருகின்றஒ
ருராசகுமாரன்தனக்கெதிரில் நிறையபுஷ்பித்திருக்கும்முல்லைச்செடியைய
ப்பார்த்து அதிசெயித்தவனாய் வானத்தில் விளங்கிக்காட்டும் தாரகாகணங்
கள்பூமண்டலத்திலிறங்கிஒருமுகமாய்இவடத்திற்சேர்ந்திருப்பதோவெ
னக்களித்துப்பேசி பக்கத்தில்வருகின்ற வேலைப்பழித்துக் காதளவுமோ
டியவிழிகளையுடையபெண்கள்சிகாமணியின்மீது குளிர்ந்த பார்வையை
ச்செலுத்தி ஓ அன்னமே தேவரீர்தந்த பற்களுக்குத்தோற்ற முகைக
ளிவையாகுமெனச்சொல்லக்கேட்டு பற்கள்வெளிப்படையாகத்தோற்ற
நகைத்துப்போகவும் சேற்கெண்டையைப்போலப்பிறழ்ந்து செவ்வரி
பரந்து விளங்கும்விழிகளைப்படைத்த நாயகியானவள் திவ்விய பரிமள

யிருக்தபுசியமலர்களைப்பறித்து தரும்படிக்கு தன்கணவனைக்கேட்டமு ன்னிலையில் பக்கத்தில்வரும்மற்றொரு சுந்தரவதியினது தேமல்பரந்த கொங்கைகளினிடத்தில் விழிகளைச்செலுத்தி மயங்கினவனாய்த் தளிர்மு லைகளுடல்கொய்துகொடுத்தமாத்திரத்தில் உமக்கு மையலைத்தந்தவள் கொண்டையி லிவற்றினைச்சூடிக்களியுமென்று சற்றும்மனம்பொருந்தி ச்சகிக்கப்படாதவளாயெறிந்துபோட்டு மனம்வாடித்திகைத்திருக்கவும் யிருத்தகாமத்தைத்தந்திருக்கின்ற மற்றொரு பெண்ணரசியினிடத்திலம னதைப்பூர்த்தியாகச்செலுத்தித் திகைத்திருக்கின்றகுமாரனொருவன் தன் னிழலைப்போலத்தொடர்ந்துவரும் தேவிவிரும்பிக்கேட்டஅறிப்புஷ்ப த்துக்குமாறாய் அதலிலைகளைக்கொய்து தந்தகாலத்தில் மனவெறுப்புட ன்றயையற்றவனிடத்திற் சேர்ந்திருப்பதைப் பார்க்கினும் யிவ்விலையை த்தின்றுசாதலேமுக்கியமாக விருக்கின்றதெனக் கொதித்துப் பின்னிட வும்மற்றொருசுந்தரமுள்ளராசகுமாரன் அதிசவிருப்புடன் திரிந்துவ ருகின்றதலைவாயில் பக்கத்தில்நேர்ந்த ஒப்புவமையற்ற வனப்புள்ளபெ ண்ணரசியைப்பார்த்துநகைமுகளாய் ஓ கண்ணே யிதோயெதிரில் நிற்கி ன்ற தெங்குமரத்தைக்கண்டையோ அதிர்காய்த் திருக்கின்ற குரும்பை யானது உமதழகியகொங்கைகளுக் கொப்பாகவிளங்குகின்றது, பக்கத் திலிருக்கின்ற யிளநீரானது உமது தாயினது குயங்களுக்குச் சமதையா கவிருக்கின்றது அவற்றிற் கீழ்ப்புறத்திற் றொங்கியிருக்கின்ற பாளையை ப்பார்க்குமிடத்தில் அவள் தாயினுடையதோப்புமுலைக்குச்சமதையாகவி ருக்கின்றதெனக்காட்டிப் பரியாசஞ்செய்ததைக்கேட்ட தேவியானவள் திரோகங்கொலுங்கருலுங்கநகைத்தமுன்னிலையில் கணவனும் மனதிலடங் காதசந்தோஷித்துடன்கூடிப்போகவும்மற்றொருவிடைநாயகன் தழைத் திருக்கின்றதெங்கினிடத்தில் விரிந்திருக்கின்றயிளம்பாளையொன்றைத் தாவிப்பறித்துவந்ததைபலுக்குக்காட்டி ஓபாவாய்தமியேனுயிரோஉமது பணைத்தமுலையினிடத்திற்சேர்க்கவொண்ணாதமுத்தாரமிதுவாகும்தயை செய்துகொள்ளுமெனத்தந்து யிருவருங்.களித்துப்போகவும் மற்றொ ருகாளையானவன் இரதியையொத்தவனப்புள்ள தேவியை மகிழச்செய்ய நினைந்துபெண்கள் சிகாமணியே பரிமளமிகுந்த வெண்கைமலரும் புன் னைப்புஷ்பமுந்தேடிக்கொண்டுவந்தேன் அணிந்துகொள்ளக் கடவை யெனச்சொன்னமாத்திரத்தில் முகம்புலர்ந்து மன்னு உமக்குப் பலஸ்திரீ களுண்டோ மலர்விதங்களைக் குறிக்குங்காரணமென்னோவென்று தன் உருவையொத்தகொழுனனைச்சிறிக் கிலேசித்துநடக்கவும்லக்குமி இரா திக்குச்சமதையாகச் சொல்லத்தக்க பேரழகைவாய்ந்த யிருதேவியனாய் பெற்றிருக்கின்ற லட்சுமிவிலாசம்பொருந்திய ஒருராசகுமாரன் அவர்க

ள்மக்கியிற்குலவிக்கொண்டு போமுன்னிலையில் எதிரில்நேர்ந்ததிவ்விய
பரிமளமிகுத்த மலர்களைப்பறித்துச் சூரியவேலையொத்த விழிகளையு
டையஅவ்விருவருக்கும் சமபாகக் கொடுத்த காலத்திற் பின் பெற்ற
வள்யிதுபழுதுபழுதென்றெறிந்தனள், அதைக்கண்ட முன் கிடைத்தவ
ளும் அவ்வாறேவீசிப்போட்டு யிருவரும் பிணங்கிப் போயினர். சவுன
காதிரிஷிகளேயிருபெண்டாட்டியடைத்தவனுக்குவேறுகூற்றுவனும்வே
ண்டுமோ. யிருதலைக்கொள்ளியிலகப்பட்ட எறும்பைப்போலஅவனிடத்
தும்யிவளிடத்தும்திரிந்துதிரிந்துபலசமாதானங்களைப்பேசிஅலைந்தி
ரியவும் அம்பையொப்பக்காதளவுமோடியிருக்கின்றவிழிகளைப்படைத்
தபெண்கொடியொருத்தி மூவகைமலர்களைச் சுறுத்துவிளங்கும்கொண்
டையிற்செருகிக் களித்திருப்பதைரிஷபத்தையொத்த ஒருசாளைகண்டுபூ
வையையொப்பக் கொஞ்சியமொழிகளையாடும்பாவாய்மெல்லியஉமதி
டைஅசைந்தசைந்துவருந்தும்படிக்குசுருமணலையொப்பப்பிறகாசிக்கு
ம்அவகடாரத்தில் முப்பூவிளைந்தவாறென்றேநகைசெய்து சொல்லக்க
டவையெனவேண்டிப்பின்பற்றிப்போயினன் இவ்விதங்களாகமதயானை
யையும்ரிஷபங்களையும்போன்றநடையையுடையராசகுமாரர்முதலியஆ
ண்பிள்ளைகளும்கோகிலங்களும்நாணும்படிக்குவசனித்துமயிலையொப்
பவசைந்துஅன்னத்தினுமெல்லியநடையையுடையதருண மங்கையரும்
ஏகமாய்த் திரண்டு தழைத்துக் குளிர்ந்திருக்கின்றகாவுகளினுலவிவேடி
க்கைகளைப்பார்த்தும் விநோதங்களையாடியும் பரியாசங்களைப்பேசியும்
திவ்வியசுகந்தமலர்களைப்பறித்துச் சரங்கள்சேர்த்துச்சூடியும் கொண்
டைகளிலணிந்தும் செண்டுகள்செய்து ஒருவர்மீதொருவர்வீசியும் பிண
ங்கியும் மீட்டுமொருமித்துக்களித்தும் உலவினவர்கள் திரும்பித் தத்த
மது விடுதிகளிற்சேர்ந்து மனமகிழ்ந்திருந்ததறுவாயில் ஒற்றைவண்டி
லையும் ஏழுபச்சைக்குதிரைகளைப்பூண்டு அருணன்செலுத்தும்ரதத்திலா
ரோகணித்துப் பகற்பொழுதைவிளக்கிவந் சூரியபகவான் ஆயிரங்கிர
ணங்களைச்சுருக்கி மேற்றிசையில்விளங்கும் அஸ்தமானகிரியிற்சேர்ந்து
மறைந்தனன், அக்காட்சியெப்படிக்கிருந்ததென்னில்மலர்பொதுளியபூங்
காவுகளிற்சஞ்சரித்த ராசகுமாரர்முதலாயினர் தத்தமது தேவியருடன்
விநோதவிளையாடல்களைச்செய்துவந்த கோலத்தைக்கண்டிருந்தவனா
னும்தன்பத்தினியுடன் வங்கணமாய்க்குலவிக்களிக்கும் விருப்பத்தை
க்கொண்டவனாய்த் துரிதப்பட்டுமேற்பாரிசத்திற் காட்டியசெக்கர்வான
மாகிய பூஞ்சோலையிற் சேர்ந்தவனைப்போலத் தோற்றியது, அத்தறுவா
யிற்பரந்தமாலையிருளையும் நட்சத்திரராசிகளையும்பார்க்குமிடத்தில்அந்
திவண்ணனாகியசிவபிரான் கயாசூரன்தோலையுரித்துடம்பெருகத்தோ

விற் போர்த்ததைப்போல யிருளும் செவ்வானமும் விளங்கவும் அத்த
ருவாயில்தேவர்கள்மகிழ்ந்துபரமனைப்போற்றி யிறைத்தகற்பகமலர்க
ளையொப்பத்தாரகைகள்தோற்றவும் உடனேசோடசகலைகளைப்பெ
ருக்கிச் சந்திரனெழுந்ததைக்குறிக்குமிடத்திற் சக்கரதாரியாகிய மகாவிஷ்
ணுமுன்னொருகாலம் திருப்பாற்கடலைக் கடையுமுன்னிலையில் ஆமையா
ய்க் கவிழ்ந்துமந்தாகிரியைத்தாங்கியும் மற்றும்பல வருத்தங்களைக்கொ
ண்டு அமுதத்தைத்தந்தனர், மீட்டும் அவருக்குச் சிறுமை கொடுக்கலாகா
தென்றெண்ணி தேவர்களிரண்டுகுளிர்ந்த நிலவின் வீக்கமாகிய தயிர்க்
கடலைமத்திக்குமுன்னிலையில் வெண்ணெய்திரண்டுமேலெழுந்ததைப்போ
லவிளங்கினன், மேற்குறித்தபடிக்குப்பிரகாசிக்கும்சந்திரன்தோற்றத்
தைக்கண்டமாத்திரத்திற் சரசசல்லாபங்களுடன்காமவின்பத்தையனுப
வித்தவர்களினும்மிகுத்தசந்தோஷித்தராய்ராசகுமாரர்களும் தருணம
ங்கையர்முதலாயினோர் சிநேகம் குளிர்த்தேறலையுண்டு விடாய் தணியநினை
த்தவர்களாய் ஸ்ரீமான்கள் கூட்டங்கூட்டமாகச் சேர்ந்து குடங்குட
மாய்மதுமிகுத்தகள்ளைத்தருவித்துக்கொண்டுசொர்ணபாத்திரங்களிற்
றேறலைநிரப்பிவாலிபப்பெண்கள் கமலங்களையொத்த கரங்களிலேந்திய
போதுராசகுமாரர்களும் மற்றகாளையரும்பொற்கிண்ணங்களிற்கள்ளைபூ
ரித்துக்கொண்டுபலநாள்செலத்தையிலிறத்துவளர்த்ததெங்கின்பலனை அ
வற்றிலிட்டுண்டாகும்இளநீர்க்காய்களின்மூலமாகப் பெறுமாறுபோ
லத்தமதுதேவியருண்ணக்கொடுத்துக் களிப்பையுண்டாக்கி அவர்கள்
சிவந்த அதரத்தினூறுகின்ற தேறலையருந்த விருப்புற்றுக்கட்டியணைத்
துச்சரசசல்லாபங்களினால் மனத்திருத்திபெற்று வருமுன்னிலையில் திரு
ப்பாற்கடலினுதித்தெளிந்த அமுதத்தினுமினிய வசனங்களை யாடவல்
லவிலாசகன்னியர் கள்ளைநிரப்பிக் கரங்களிற்றாங்கியிருக்கின்றவெள்ளி
க்கிண்ணங்களின்தோற்றமெப்படியிருக்கின்றதெனிற் சோடச கலைக
ளைவிரித்து யிரவைவிளக்கி வானத்திற்சஞ்சரித்துவரும் சந்திரனைப் பார்
த்து பொறுமையால் பூமியினிடத்திற்கணக்கிறந்த அம்புலிகளானவை
மாறுகொண்டுதித்து விளங்குவதையொப்பக்காட்டியது, அக்காலத்தில்
அளிக்குப்பாத்திரமாகவிருக்கின்றதேறலைமிகுதியாகக்குடித்தவிடைநாய
கியொருத்திமயக்கமிகுத்தகாரணத்தினால்விழிகள்சொருகவிடமதியயர்
கிபற்கள் வெளிப்படநகைத்துவானத்தில்விழிகளைச்செலுத்திச்சந்திரனே
பரிமளித்துச்சுவைமிகுத்த யித்தமதுவிலொரு துளியையுண்ணப் பெறு
வையாயின் பலநாட்களாக உன்னிடத்திற்பிறிவின்றிவிளங்கும்மாசனைத்
தையும்போக்கி அதிசாந்தியைப்பெற்றுத் தேய்வில்லாமல் யினியெக்
காலமும்விவ்வொளியைப்பெற்றிருப்பையாதலால் உன்னிடத்திற்பரிவா

ய்இந்தவுறுதியைச்சொன்னேன் தாமசஞ்செய்யாமல் துரிதமா யிறங்கி
வாயிறங்கிவாவெனக் கரங்களைநீட்டிக்கூவியும் மற்றொரு பெண்கொடி
யானவள்கள்ளினையுண்டவெறியினால் வானத்தைப்பார்த்து ஒசந்திரபகவா
னேநான்தினந்தோறும்மனத்திருத்தியாகச் சாப்பிட்டுவரும் நறவின்பெ
ருமிதங்களைப்பார்த்து அதிக யிச்சைகொண்டவனாய் நாடோறும்வருந்
தித்திரிகின்றனை ஒருகாலம்யாவருங்காண்பென நாளுந்திருக்கின்ற
னையோ தனிமையிலென்னுடன் வாயைத்திறந்து வெளிப்படையாகச்
சொல்லலாகாதோ அதற்கடுத்ததந்திரங்களைத்தேடேனோ யிதன்மகத்து
வங்களும்பெருமைகளும் உனக்கெவ்வளவுந்தெரியாது அதனைச்சொல்
லக்கேட்பையாக யித்தேறலிற் றிவலைப்பிரமாணங் கிடைத் துன்னைப்
பெறுவையாகில் அதன்முயற்சியினால் ஆயிரங்கிரணங்களைப்படைத்திரு
க்கின்ற சூரியனைப்பார்க்கினும் பிரகாசத்தைப்பெற்றுத்தேய்தலும் வள
ர்தலுமின்றிகுறைவற்றபெருமையைப் பெற்றுவாழ்வை தினந்தோறுங்
கண்டுயெங்கிதருகின்றதால் உன்னிடத்தில் மிகுத்த பிறிய முண்டாயது
கொஞ்சந்தருவேன் துரிதமாயிவடத்தில்வரக்கடவையென்றழைத்தும்
மற்றொருமங்கையானவள் வெறிமிகுதியினால் விழிகள்சோர்ந்து மதிம
ருண்டுதன்னிழலைப்பார்த்துஎன்னுடனுதித்தனை எனக்கடுத்தநன்கினைவே
ண்டாமலிருப்பதென்னகாரணம் முன்பின் னிடைவிடாமற் றொடர்ந்து
நாடோறுந்திரிவை திரோசபவுத்திரமாக்கி மனவெழுச்சியைத்தரவல்லசிற
ந்தநறவைவலிதிற் கொடுப்பினுஞ்சாப்பிடவிரும்பாய் உன்வறுமைக்கெ
ன்செய்வேன் கொடியபாதகியென்றிகழ்ந்துபேசி மனம்வருந்தவும்ம
ற்றொருதருணமங்கையானவள் சொற்னவள்ளத்தில் மதுவைமொண்டு
மொண்டுபொசித்தசோர்வினால்மயக்குற்றுதன்விழிகள்சிவந்திருப்பதை
யும் யிதழ்வெளுத்துக்காட்டுவதையுந்தெரிந்தவுடன் திகைத்து மதிமரு
ண்டுஎன்னையறியாமற்கணவன் வஞ்சகப்புணர்ச்சியைச்செய்துப்போயி
னனோவெனச்சீறி நாலுமூலைகளினுமோடியோடித்தேடியலைந்தும்பினைவ
யன்றியும் சற்வாங்கபூஷ்தைகளாய் இரதிக்குமேலாகிய வனப்பைப்பெ
ற்றிருக்கின்ற சிலராசகன்னியர் உல்லாசமாய் வாற்தையாடிக்கொண்டி
றுத்தியாய்மதுபானஞ்செய்து வாயைச்சப்பிக்கொண்டு யித்தேறலுக்கு
முன்மேன்மையாகச் சொல்லும தேவாமுதம் அப்பிறைபோசனமாகக்
காணுகின்றது,யிதன்காரணங்களைத்தெரியாதவொன்பெறவேனவெறு
த்து அவ்வெறியினால் காமவாசிரிமேலிட்டு கணவனைத்தழுவிபுணர்ந்தின
புறவேண்டுமென்கிற ஆசைப்பெருக்கினால்வருந்திச்சோர்ந்து சந்திரனை
துகாந்தியைதழலாகப்பாவித்து வாடினர் யிவ்விதக்களிப்பைத்தருமகள்
ளையுண்டதருணமங்கையர் வெளியிற்போயிருந்த கணவனைநினைந்துவாடு

டையும் அவர்கள்வரவைத்தெரிந்தவுடன் யிதுபரியந்தம் யெத்தலத்துக்கு
ப்போயிருந்தீரென்றாடையும் கட்டியணைந்து காதலிலீலைகளைச்செய்கின்
பமூர்த்திகளித்தும் சேழ்ப்பவர்கள் செவிகளுக்கமுததாரையைப்போல
ப்பாடமகிழ்ந்தும் சிவர் பிணங்கியிருக்கின்றகாந்தனைச் சேவித்துப்ப
ஞ்சணைமெத்தைதயிலில் புற்றிருக்கவேண்டியும் சிலகன்னியர் தங்கள்காத
லன்விழிகளைமூடியோடிப் பக்கங்களிலொளித்தும் சிலமடந்தையர்தா
ங்களுண்ணும் மதுவைக்கிள்ளைகளுக்கருத்தியும் பூவைகளுக்கு குடிப்பா
ட்டியும்வெறியிருயினுல் வண்டினங்களிறங்கி யுண்பதைத் தெரியாமல்
தாமுங்குடித்தும் . ம்மையடுத்தபாங்கியர்களுடன்கலந்துண்டுமகிழ்ந்
தும்பலபெண்கள்மயக்க மிகுதியினுல் நாணத்தைப்போக்கிப் பாயரங்
கமாகத்தள்ளாடித்திரிந்தும் யிடையிலணிந்தஆடையானது நழுகிச்சோர்
வதைத்தெரியாமற்சஞ்சரித்தும் தமக்குத்தாமேபேசி வாதுதொடுத்தும்
நினைப்பதொன்றுவசனிப்பதொன்றாய் புத்திமயங்கி வார்த்தையாடியும்
குடியமொளவழங்கிக்கொள்வதற்குத் திஷ்டாந்திரமாய்க் கால்களிடறிவி
ழுந்தும்தள்ளாடிநடந்தும்உணர்வழிந்துறங்கிவாய்களில்ஈக்கள்மொய்க்
கப்பிரேதங்களைப்போலஅசைவற்றிருந்தும் யிவ்வாறுமானத்தையும்யி
னத்தையும்மறக்கச்செய்யுங்காரணத்தினுல் ரிஷிகளே கள்ளைவிடக்கருத்
தையழிக்கவல்லபொருள்வேறென்றுங்காணேன் மேற்குறித்தபடிக்கு
தம்பதிசமேதராய் மதுபானங்களைச்செய்து மத்தனைப்போல மயங்கியி
ருந்தவர்கள் தெளிந்தவர்களாய் காமலாகிரிமேலிட்டு விரகாக்கினியான
துரோகத்தைவருத்த ஸ்ரீபுமான்கள் புஷ்பச்சயனங்களிற்சேர்ந்துசரசல்
லாபலீலைகளைச்செய்து விளையாடியிருந்தனர், யிதுநிற்கமுசுகுந்தச்சக்கி
றவர்த்திமுதலியராசாக்கள் செய்கைகளையும் பாலசுப்பிரமணியக் கடவு
ளினது திருக்கலியாணச்சிறப்புகளையும் யின்னுங்கேட்பீரென்றுசூதபுராணி
கர்நைமிசாரணியவாசிகளுக்குச் சொல்லத்துடங்கினர், கூரிய வேலைத்தா
ங்கியமுசுகுந்தச்சக்கிறவர்த்திமுதலாகிய அரசர்கள் திருப்பரங்குன்றத்தை
ச்சேர்ந்தவுடன் தமதுவாகனங்களைவிட்டிறங்கிப் பொன்மயமாகியகொ
டிமுடிகள்பெருத்திருக்கின்ற அம்மலையின் மீதேறி அதன் மேற்புறத்தி
ற்தெய்வதச்சனுற்செய்யப்பட்டு நவரத்தினகாந்திகளை வீசியிருக்கும் நக
ரத்தின்வீதிகளிற் பிறவேசித்துப் பலசிறப்புகளையும்பார்த்து மனமகிழ்
ந்தவர்களாய்த் திருக்கலியாணத்துக்குவேண்டும் உபகரணங்களைச்சேக
ரித்தும் மற்றகாரியங்களையும்சற்வசாக்கிறதை செய்துகொண்டு தேவேந்
திரனிருக்கின்றமண்டபத்தைச்சேர்ந்து சக்கிறவர்த்திமுதலிய பிறமுகாள்
விண்ணவர்தலைவன் – பாதாரவிந்தங்களிற் சேவித்துக் கரங்களைக்கூப்பி
க்கொண்டு நிற்கின்றவர்களிடத்தில் பரிவாய் க்ஷேமலாபங்களைவிசாரணை

செய்து உங்களையொத்தபுண்ணியவான்கள் மிகவும்வருந்திவரத்தக்கபா
க்கியத்தைப்பெற்றேனென்று பலஉபசாரவார்த்தைகளைப் பேசியஉடன்
செலவுபெற்றுப்போய்சிவகுமாரன் வீற்றிருக்கின்றமாளிகையைச்சேர்
ந்துபணிந்து போற்றியிருக்கின்றதருவாயில் அக்கணத்தில் ஆயிரக்கா
தவழியாகச்சென்று தினத்தைவிளக்கிவருஞ்சூரியன்சந்திரன் முதலியநவ
க்கிரகங்கள் திக்குப்பாலகர் முப்பத்துமுக்கோடிதேவர்க்கள் நாற்பத்
தெண்ணாயிரம்ரிஷிகள்-கருடகாந்தருவர்-சித்தவித்தியாதரர்-பன்னகர்-
ஏகாதசருத்திரர்-துவாதசாதித்தர்-ராசிகள்-காலங்கள்-வேதங்கள்-கலைக
ள்-பாதலவாசிகளாகிய சேடனாதிய நாகராசாக்கள்-மற்றதீவுதீபாந்திர
ங்களிலிருப்பவர்களனைவரும் ஏகமாகத்திரண்டு சத் சாகரங்களும்கடை
யுகத்தில் மேருவைச்சூழ்வதைப்போலச் சிவகுமாரன் திருக்கலியாணச்ச
ம்பிரமத்தைத்தெரிசித்திடேறும் களிப்பினராய் செயஉச்சாகங்களுடன்
ஓவென்னுஞ்சத்தமெழ நாற்புறங்களினு மிருந்துவந்து திருப்பரங்கு
ன்றத்தைச்சேர்ந்து மனப்பூரிப்புடனிருக்கின்ற இந்திரனைக்கண்டமாத்
திரத்தில் தேவர்க்களனைவரும் ஆவலுடன் திருவடிகளிற் பணிந்துபோற்
றவும் ரிஷிசிரேஷ்டர்கள் மனவெழுச்சியுடன் வேதவாக்கியங்களினாற் சகல
துன்பங்களையுமொழித்து தேவேந்திரச்சம்பத்தைப்பெற்று வாழக்கட
வையென்று பற்பலஆசிர்வாதங்களைச்சொல்லவும் மற்ற ஆதிசேஷன்மு
தலாகியபிரமுகாளைத்தழுவியும் முகமன்புகளைப்பேசியும் சுகசீவிகளாக
விருக்கக்கடவீர்களென வாழ்த்தியும் யிவ்விதங்களாக அவரவர்களுக்குத்
தக்கவிசாரணைகளைச்செய்துவருமுன்னிலையில் மகாலட்சுமி சரஸ்வதிதே
வியுடன் அவடம்சேர்ந்துகளித்திருக்கும்போது சந்தோஷப் பெருக்கி
சூழ்ந்துவந்த அரம்பையரினங்கள்-ராசபத்தினிகள்-வானப்பெண்கள்-
தீரமகளிர்-திசையாளர்-தேவியர்-நாககன்னியர்-ரிஷிபத்தினியர்- முத
லியஸ்ரீசனங்கள் அமோகமாகத்திரண்டுவந்து திரிலோகசக்கிரேஸ்வர
ன்தேவியாகிய இந்திராணிவாசஞ்செய்யுந்தலத்தைச்சேர்ந்துவழிபட்ட
வர்களாய்த் தெய்வயானையம்மையை விழிகள்களிக்கத்தக்கதாகக்கண்டுப
திவிரதாசிரோமணியேகேட்டருள்க ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அ
திபனுஞ் சகலரும்வணங்கிப்போற்றச் செங்கோல்செலுத்திமன்னுயி
ரையலைத்துவந்தபாதகனாகியசூரபதுமனை நிமைப்போதில் வாட்டியவெ
ற்றிவேலாயுதக்கடவுளுக்குத்தேவியாகவிருக்கின்றதால் எவ்வுலகங்களுக்
குமிறைவியாவையெனச் சகலருங்கொண்டாடித் திருவடிகளில்வணங்கி
ப்போற்றினவர்களாய் மிகுத்தபத்திவிசுவாசங்களுடன் அம்மனைச்சூழ்ந்
துகொண்டு யியற்கையாகவிருக்கின்ற அழகுக்குச்செயற்கையினாற்சில
கோலங்களை அலங்கரிக்கவிருப்புற்றுசூழ்ந்துசுபசோபனங்களைப்பாடி-

# ௫௰அ தெய்வயானை திருமணப்படலம்.

ஒப்பற்றவடிவுள்ளமன்மதனை நுதல்விழிக்கனலினால் தகித்தசிவபிரான்மு
னதுக்கினிய திருக்குமாரனைப் பாணிக்கிரணஞ்செய்யுங் கருத்தளாய்
ப்பலகாலம் அரியதவவிரதங்களைச் செய்துவர்த முன்னிலையிற் பரிமளமி
குத்துநீண்டிருக்குங்கூந்தல் சடையர்ந்திருப்பதைச் சுகந்தத்தயிலங்க
ளைத்தடவி நிகங்களினால்மெல்லமெல்லநீக்கிச்சீர்படுத்தி யியர்க்கையாக
ப்பரிமளித்திருக்கும்மயிரில் நாலச்சேமா-சம்பங்கி-எண்ணைபச்சைகற்
பூரம்-புநியசாந்தமாதிய பரிமளதிரவியங்களைத்திமிர்ந்துவானசெங்கை
யினாலும்பனிநீராக்கொண்டும் திருமஞ்சனமாட்டிவைத்து வெளுத்திரு
க்கின்றபணிப்படலங்கள்சேர்ந்து சீறிவரும் சற்பத்தைக் கவ்வுமாறுபோ
லவெள்ளைவஸ்திரத்தைக்கொண்டுதுடைத்து யீரத்தைப்போக்கிக்கோதி
ச்சிக்கறுத்தபின்பு மிருதுவும்வளப்பும் காந்தியும்பெற்று மாந்தளிரை
யொப்பக்கூட்டுறவின்றிச் சிவந்திருக்கும்தெய்வீகம்பொருந்திய பீதா
ம்பர ஆடையை மெல்லியயிடையினிடத்துடுத்தி ஆயிரங்கிரணங்களைப்ப
ரப்பி மாதந்தோறுமொவ்வொருவராய் உலகங்களை விளக்கிவரும் துவா
தசாதித்தர்களுமொருசமயமாய்வானத்தைக்கடந்துபூமண்டலமெல்லையினிடத்
தில்வரக்கண்டஞ்சியிருளின் பெருக்கனைத்தும் திரண்டொருமித்துவேறு
போற்றுதலாகியதலத்தைக்காணாமையாற்சிவகுமாரன் பத்தினியாகவிரு
க்கின்றஎமதிறைவியினதுகூந்தலினிடத் தபயமடைந்ததைப்போலக்க
றுத்துக்காட்டும் மயிரினிடத்திருக்கின்றயீரத்தை பரிமளமிகுத்தஅகிற்க
டைகளைமேன்மையாகச்சீவிச் சொற்ணக்கும்பிட்டியினிடத்திட்டெழு
ப்பியநறும்புகையையூட்டிவாட்டியபின்புதேவர்க்கள் முன்னோர்களுட
ன்செய்திருக்கின்றதவங்களின்மேம்பாட்டினால் அவதரித்திருக்கின்றதெ
ய்வநாயகியார் அளகபாரத்தைத் தந்தச்சீப்பினாற்சிக்கறுத்துவாரிச்சீர்படுத்
தியவுடன்சொற்னத்தினாலமைந்திருக்கின்ற சீதேவிக்கோலத்தையும்சிவ
குமாரன்மீதுசீறிவந்தகாலத்தில் அவனுக்கிறகத்தினாற் பேருணர்ச்சியை
க்கிடைத்துவாகனமாகவிருக்கின்ற அழகியகலாபத்தையுடையமஞ்ஞைக்
கோலத்தையும்வலம்புரிச்சங்கின்படிவத்தையும் மகரமச்சத்தின் உருவத்
தையும்தகுதியாகியயிடங்களில்தேவகன்னியர் மங்கலவாழ்த்துகளைச்சொ
ல்லிஅணிந்தவுடன்பிதழ்க்களைவிரித்திருக்கின்றகொங்குமலரிணையும்வெ
ட்சிப்புஷ்பத்தையும்மயிலாரோகையெடுத்துச்சொருகி பருத்தமல்லிகை
வகைகளின்பிதழ்க்களை அவற்றின்மத்தியி விரைத்துதிவ்வியசுகந்தங்களை
வீசுபுஷ்பவிதங்களினாற்சீர்பெறச் செய்திருக்கின்றசரங்களைச்சூழவரவ
மைத்துதண்டைமாலைகளை அவற்றைவளையச்சாத்தியபின்பு பொற்கிமிளை
ப்போலவட்டமாய்க்காட்டும்கொண்டையைப்போட்டுமலர்களைபுஷ்பிடி
யாகவணிந்துசோடசகலைகளையுடையபூரணச்சந்திரபிம்பத்தினிடத்திற்க

ளங்கத்தோற்றுவதை யொப்பக் கருமைதோற்றம் படிக்கு விழிகளின்
றெப்பைகளினும் புருவங்களினிடங்களினும் மையையிட்டு அர்த்தசந்
திரனை நிகர்த்த நுதலினிடத்திற் சாந்துப்பொட்டுமிட்டு நறும்புகையையூ
ட்டிக்கமழ்ந்திருக்கும் மயிர்செறிந்த சிரத்தின்முற்புறத்தி லிருந்து அ
ழகியநெற்றியிலிட்டிருக்கின்ற பொட்டுக்குச்சமீபத்திற் றொங்குவதாக
ச்சொர்ணத்தினாலும் வயிரங்களினாலும் முடித்திருக்கின்ற சுட்டியைத்
தொங்கவிட்டனர், அதுஎப்படிக்குக்காட்டுவதெனிற் சேருவானதுமே
கத்தினிடத்தினின்றுஞ் சந்திரனைக்கவ்வவருமுன்னிலையில் நாவைநீட்டி
க்கக்கியவிஷத்துளியையொப்பத் தோற்றவும், யிவையன்றியும் அழகிய
சொர்ணவளையல்களைத்தரித்திருக்கின்ற தேவப்பெண்கள் மனவெழுச்சியு
டன்பொற்பேழைகளைத் திறந்து சிரோரத்தினங்களினாற் செய்யப்பட்டி
ருக்கின்ற சடைபில்லை-சந்திரப்பிறை-சூரியப்பிறை-அரசிலைத்தொங்கல்ச
டையணிவிதங்களை அளகபாரத்தைச்சூழ்வரத்தரித்து வயிரக்குண்டலங்
களைத் தொங்கட்டங்களுடன் செவிகளிற்பூட்டிச் சங்கத்தை நிகர்த்த
திருக்கழுத்தினிடத்தில் முத்தாரம்-சரப்பளி-மோகனமாலை-மதாணிப்
பதக்கம்-நவரத்தினமயமாகச்சொலித்திருக்கும் காறைவிதங்களைத்தரித்
துபசியமூங்கிலைப்பழித்துத் திரண்டுவிளங்கும் தோள்களிற் புயவணிக
ளைச்சேர்த்து தாமரைக்கமலத்தினு மெல்லியகரங்களில் வயிரவளையல்கங்
கணவிதங்களைச்சாற்றி பவழத்துண்டுகளுக்கொப்பாகவிளங்கும்விரல்க
டோறும்மோதிரங்களைப்போட்டு பொற்சன்னங்களைப்பரப்பியிருப்ப
தைப்போலத்தேமல்பார்த்து தங்கக்கலசத்தைப்பழித்து வட்டமாய்ப்பூ
ரித்துத்ததும்பியிருக்கும்கொங்கைகளின்மீது பரிமளமிகுத்த கலவைச்
சாந்துகளையப்பி சித்திரத்தினாற் றொய்யலெழுதி சொர்ணப்பட்டா
டையினாற்செய்தமைத்திருக்கின்ற றவிக்கையையணிந்து பஞ்சகற்பகம
லர்களினாலும்மருமருக்கொழுந்தியவற்றினாற் சோடித்திருக்கின்றதன்
டைமாலையைப் பலபணிதிகளுடன்சாத்தி விலையுயர்ந்த பீதாம்பரப்பை
பட்டையினால்மறைத்து உடுக்கையைப்போலச் சிறுத்தயிடையி னிடத்தி
ற்சற்றுமிரக்கமற்றவர்களாய்இவ்விதப் பூஷாச்சுமைகளைச்சேர்த்தபின்பு
யாழினோசையைப்பழித்துக் குயிலும்நாணும்படிக்குக்கொஞ்சியவார்த்
தைகளைப்பேசவல்லதெய்வயானையம்மனிடையாதாரவித்தங்களிற்செம்ப
ஞ்சுக்குழம்பைச்சாத்தி சித்திரங்களையெழுதி பொற்பாடகம்-சதங்கை-
தண்டை-யிவற்றைச்சூடி விரல்கள்தோறும் மோதிரம் பீலிமுதலிய அல
ங்காரங்களைப்பூட்டி யிவ்விதங்களிற்றெய்வகன்னியர்திரண்டு அழகுக்க
ரசியாகவிருக்கின்ற தெய்வநாயகியாருக்குச் சிங்காரச் சிறப்புக்களைத்த
டித்தேடிமனப்பூர்வகமாகச்செய்து முடித்தவுடன் நவரத்தினமயமாக

ச்சோடித்திருக்கின்ற பீடத்திலெழுந்தருளச்செய்து இஷ்டபரிகாரமாகு
ம்பொருட்டு கறுப்பு-சிகப்பு-மஞ்சள்-பச்சை-வெள்ளை நிறம் பெற்ற அ
ன்னத்தினாற்செய்யப்பட்ட ஐயவியைச்சுற்றி நாற்புறங்களினுமிறைத்து
மஞ்சள்நீரைப்பொற்றட்டிலேந்தி ஆலஞ்சுழற்றி யித்தகைய சடங்குக
ளைமுடித்தவர்களாய் பூரணச்சந்திரனைச் சூழவிருக்கின்ற நட்சத்திரங்க
ளைப்போலக்கலியாணப்பெண்ணை வளைந்துகொண்டு சுபசோபனங்களை
ப்பாடி மனவெழுச்சியுடனிருந்தனர், யிவை நிற்கக் குவளைக் காட்டை
யொப்ப ஆயிரம்விழிகளைப்படைத்திருக்கின்ற தேவேந்திரன்செய்கை
களையினிசொல்லக்கேழ்ப்பீராக மேற்குறித்தபடிக்கு மணப்பந்தலில்
வேண்டும் உபகரணங்கள்முதலாகச்சாக்கிறதைப் படுத்திவைத்தவுடன்
தேவாசன் பிரமனிருக்கின்ற யிடத்துக்குப்போய் வணங்கி சுவாமிகலி
யாணமண்டபம் மற்றும்வேண்டுவையனைத்தும் சோடித்துமுடிந்தது
தேவர்க்கள்-ரிஷிகள்-ராசாக்கள்-பாதலவாசிகளனைவரும் வந்துசேர்ந்தி
ருக்கின்றனர், யினியெதிர்பார்க்கவேண்டுவ தொன்றுமில்லை ஆதலாற்க
டப்பமலர்மாலைபுரளும் பன்னிருபுயாசலங்களையுடைய குமாரசுவாமி
யாருக்குநமதுபுத்திரியைதாராதத்தஞ்செய்துகொடுக்கயோக்கியமாகிய
காலத்தைஆராய்ந்துமுகுர்த்தம் நடக்கவேண்டியநாழிகையையேற்படுத்
தவேணுமென்று விண்ணப்பஞ்செய்தகாலத்திற்பிரமன் நகைத்துசுயஞ்
சோதிப்படிவத்தனாகிய பாலசுப்பிறமணியக்கடவுளுக்குத் திருக்கலியா
ணத்தை நடப்பிப்பதற்கு ஒருவேளையைக்குறிக்கவும் வேண்டுமோ எக்
காலமும்நன்காகவேயிருக்குமாயினும் வேதவிதிப்படிக்கு ஆராயுமிடத்
திற்பொருத்தநிமித்தங்களும் திதிவார யோககரணமுதலிய சமஸ்தமும்
யித்தினம்மிகவும்சுபகரமாகவிருக்கின்றது, துரிதமாய்நடப்பிக்கலாமெ
னச்சொல்லியபோது இந்திரன் மனமகிழ்ச்சியுடன் மகாவிஷ்ணு பிரம
னைவணங்கி நாமெல்லவரும்திருச்சபைக்குப்போய் அரிதிற்பெற்றபெ
ண்கொடியைபாணிக்கிரணஞ் செய்துகொடுப்பதற்கு யின்றைக்கே முகு
ர்த்தகாலம்நேமித்தபடியாற் கிருபையுற்றுக் கலியாணமண்டபத்துக் கெ
ழுந்தருளவேண்டுமெனப் பாலசுப்பிறமணியதேவருக்கு விண்ணப்பஞ்
செய்தழைத்துவரவேண்டுமாதலால் காலஅரணஞ்செய்யாமற் புறப்பட
ச்சித்தமாங்கக்கடவீர்களென் றிரப்பதற்குச் சம்மதித்தவர்களாய் மற்ற
தேவர்க்களுடன் இந்திரனைக்கலந்துசென்று நவரத்தின மயமாகச்சோ
டித்திருக்குஞ்சிங்காதனத்தில்வீற்றிருந்து முசுகுந்தச்சக்கிறவர்த்திமுதலி
யசகலருஞ்சூழ்ந்துபோற்ற அவர்கள்மீது கிருபாநோக்கத்தைப் பாலித்
திருக்கின்ற சரவணபவனைத்தெரிசித்துஆனந்தபரவசத்தராய் மும்முறை
வலம்வந்துபணிந்து கரங்களைக்கூப்பி நிற்பவர்களிற் பிரமன்யிதனை.

விண்ணப்பஞ்செய்கின்றனன்கற்றனைதெய்வநாயகியைத்திருமணமுன்
னிலையில்தேவரீருக்குக்கொடுப்பதற்கு யிப்பகலசுபகாமாயிருக்கின்றது
மேலும்வாத்தக்கவர்சேர்ந்திருக்கின்றதுமல்லாமல்மணச்சடங்குக்குவே
ண்டும் உபகரணங்கள்முதலாகச்சேகரித்து சாக்கிறதையாக விருக்கின்ற
மையால் தயைசெய்து மணப்பந்தலுக் கெழுந்தருளவேண்டுமெனப்
போற்றுகின்றதருவாயிற் சிவகுமாரன்நகைமுகராய் நல்லகாரியம் உங்
கள்மனோபீஷ்டப்படிக்கு நடத்தக்கடவீர்கள் யிதோ நாமும் வருவோ
மெனத்திருவாய்மலர்ந்து தூரிதமாய் அரியணையைவிட்டிறங்கிவீரவாகு
தேவர்உடைவாளாயுதத்தைக் கரந்திற்கொண்டு எதிரில்நடக்கவும் எண்ம
ர்-இலக்கர்-படைவீரர்-பிருடாரிசங்களினும் போற்றிவரவும்விஷ்ணுபி
ரமனுதியர்களித்துச்சூழவும் முகவாயலினிடத் தெழுந்தருளிஅத்தலத்தி
ற்காத்திருக்கின்றஅழகியசலாபமஞ்ஞைவாகனத்தின் மீதிலாரோகணித்த
தருவாயில் விண்ணவரனைவரும்ஆனந்தபரவசத்தராய் பஞ்சதாருக்களி
னதுபுதியமலர்களைச்சொரிந்து பாதாரவிந்தங்களிற் பணிந்துவாழ்த்தத்
தக்கதாக விசாலமாய்நீண்டிருக்கின்றவீதியில்நடக்கின்றதருவாயில் ஆயி
ரங்கிரணங்களையுடைய சூரியனும் சோடசகலைகளைவாய்ந்த சந்திரனும்
தவளக்குடைகளைத்தாங்கவும் வாயுதேவன்வருணராசன் வெண்சாமரை
களைவீசவும் எமதருமராசன்திசைக்காவலர் அருகுசத்திரவட்டம் சூரிய
வட்டப்பிறைபிள்ளாங்குழலாதிய பதினெண்வாத்தியங்களையும்திசைகள்
முற்றும் செவிடுபட்டு மயங்கத்தக்கதாகக்கணகணென்றறைந்து போக
வும் ஒப்பற்றவனப்பும்பெருமையும் படைத்து சர்வாபரண பூஷிதைக
ளாகவிருக்கின்ற ரம்பை-யூர்வசி- திலோத்தமை- மேனகையாதியதெய்
வப்பெண்கள் சொர்ணவிமானங்களி லிருந்து செவ்வரிபரந்து வேலை
யொப்பக்காதளவுமோடிமிராநின்ற விழிகளைக் காமுகருக்கு விஷத்தை
ப்போல மதியைமயக்கிக்கொல்லாமற்கொல்லும்படிக்குசேற்கெண்டை
பிறழ்வதற்கொப்பச்சுழற்றி வீணைகளின் தந்திகளை முடுக்கிமிடற்றினோ
சையும்தந்தியினொலியும்ஒன்றுபட்டுக்கேட்பவர்கள்செவிகளுக்கமுததா
ரையைப்போல தேவகாந்தாரங்களைவாசித்துப்போகவும் விஞ்சையர்-
கருடகாந்தருவர்-மகரயாழ்க்களை மீட்டி சிரவணானந்தமாகவும் அன்
னங்களையொப்பப் பாதநாட்டியங்களை நடித்து வருவதற் கிசைவாகவு
ம்பாடிப்போகவும் யிவ்விதஆடம்பரங்களுடன்பெரும்புறக்கடல்பெரு
குமாறுபோல எள்ளிடயிடமில்லாமல்அடர்ந்து பூதவெள்ளங்கள் நவவீ
ரர்கள்-இலக்கர்-தேவர்க்கள்-பிராமணர்-ரிஷிகள்- மன்னமண்டலிகர்-
பாடலவாசிகளாதியாசநடக்குமுன்னிலையிற் கிரீடங்களுடன் கிரீடங்கள்
புசங்களுடன்புசங்களுமோதாக்க தெருக்களெங்கணும் நிறைந்து முத்த

ங்கள்வானவெல்லைமுற்றமடர்ந்து போவதாயினர், சவுனகாதிரிஷிகளே
மேற்குறித்தவைபவங்களுடன் விசாலமாகிய பல தெருக்களைக்கடந்து
புரசெனங்கள்மனவெழுச்சியுடன் விழிகள்களிக்கத்தெரிசித்து ஆனந்த
வாரியில்மூழ்கத்தக்கதாக மெல்லமெல்லப்போய் தேவதச்சனைக் கொண்
டுஇந்திரன்சீர்பெறச்செய்திருக்கின்றகலியாணச்சாலைமுகவாயலுக்கருகி
ல்வரும்போது ஆகமவிதிப்படிக்குப்பொற்குடங்களில் வானகங்கையை
நிரப்பிதருப்பையினிடத்திலிருத்திச் சடங்குகளை முடித்துவைத்திருந்த
பூரணகும்பங்களைத் தவத்தர் பிராமண சிரோஷ்டர் கரங்களிலேந்தி சண்
முகப்பெருமாள் முன்னம் வேதங்களைஒதிவந்து மந்திரங்களைச்செபித்
து பவுத்திரமாகியதீர்த்தத்தைக் கர்த்தன்மீதிற் புரோக்ஷித்து வாழிவாழி
யென்றுஆசிகளைப்பேசிநிற்கவும் - அரம்பையர் - ரிஷிபத்தினிகள்திரண்
டுசாமரைநிறைகுடம்கண்ணாடிமுதலிய எண்வகைஆலங்களையும் மங்க
ளகரமாகவேந்தி அணிபடநின்று சோபனங்களைப்பாடிச்சுழற்றி தேவா
திதேவனைப் போற்றிச்சூழவும் நாககன்னியர் நீரமகளிர் கற்பூரதீபமு
தலியசோதிகளைப் பொற்றட்டங்களிலேந்தி சுயஞ்சோதிப் படிவத்தனா
னபாலசுப்பிரமணியர்திருமுன்சேர்ந்து சுபங்களைப்பாடிக் காட்டவும்
வெண்பட்டாடைத்தொங்கல்அசைத்துவரவும் தேவப்பிராமணர் வேத
ங்களையோதவும் இவ்விதச்சுபங்கள் பெருத்திருக்கின்ற தருவாயிற்கடலி
னிடத்திற்படிந்திருந்த மேகங்களெழுமாறுபோலத் திருமணக்கோல
மமைந்திருக்கின்றநமதுகர்த்தனானவர் மரகதமலையையொப்பப் பாரித்
துப்புள்ளிபட்டிருக்கும் அழகியகலாபத்தைவாய்ந்த மயில்வாகனத்தை
விட்டிறங்கி திருமணக்கோவிலினது முகவாயலினிடத்தில் வந்தமாத்தி
ரத்தில் தேவகன்னியர்மத்தியில் அழகுக்கரசியாகிய இந்திராணியானவள்
கரங்களைக்கூப்பிக்கொண்டுமெல்லநடந்துவந்து தன்கணவன் கட்டளை
யின்படிக்குப்பொற்பள்ளயத்திற்சரவணபவன் திருவடிகளைச்சேர்த்து
ஆவின்புதியபாலினாற்கழுவி முந்தானையால் ஈரத்தைப் போக்கிச் சந்த
னக்காப்பிட்டுதிவ்வியசுகந்தங்களைவீசும் கற்பகமலர்களைச் சொரிந்துதூ
பதீபங்களைக்காட்டித் திரோகபாவசத்தளாய் மகிழ்ந்துவணங்கிப்பலஅ
ரம்பாஸ்திரிகளுடன் அடுக்காலங்களையேந்தி எமதிறைவன் முன்னின்றுமு
ம்முறைசுழற்றி நாணத்துடன் மின்னற்கொடியைப்போலசைந்துதே
வகன்னியருடன்தன்னிருப்பிடத்தைச்சேர்ந்தனள், இந்திராணி மெய்ப்
பத்தியுடன் நடத்திப்போனவழிபாடுகளுக்குச் சிவகுமாரன் களித்துக்கி
ருபாநோக்கம் பாலித்தவராய் மகாவிஷ்ணு பிரமன் கரங்களைப்பற்றிக்
கொண்டுதேவர்முனிவர்சூழ்ந்துவர அவ்வாயலைக்கடந்து நவரத்தினமய
மாகியபொன்னார்மாலைகள் அணிபடத்தூக்கித்தண்டைமாலைகளைத்தொ

யிக்கவிட்டு சித்திரவிசித்திரங்களாக வமைந்திருக்கும் பொற்பட்டாடை
களினால்மேற்பாப்புகள் சுவர்ப்புறங்களை அலங்கரித்துவாழைகளை நாட்
டிபொற்பாவைகள்மற்ற சிங்காரங்கள்மிகுத்து சிரோரத்தின தீபங்கள்
பிரகாசித்துக்கொண்டிருக்கும் கலியாணமண்டபத்தினிடத்திற் சிவகு
மாரன்சேர்ந்தவுடன் அதன்மத்தியிற்பருத்தமணிகளினாற் சோடித்திரு
க்கின்ற சிங்காதனத்தின்மீது பிரமன் விஷ்ணு முதலாயினர் செயசெய
வெனப்போற்றிக் களிக்கத்தக்கதாகவீற்றிருந்த காலத்தில் கற்தன்கட்ட
ளையின்படிக்கு பக்கங்களிலிருக்கின்றபீடங்களில்விஷ்ணுபிரமன்உரு
த்காரவும் மற்றயிடங்களிற்கிரமப்படிக்கு தேவர்-ரிஷிகள்-வீரவாகுதே
வர்-எண்மர்-இலக்கர்-பூதவீரர்கள்-மனவெழுச்சியுடனிருந்தனர், அத்த
ருவாயிற் பூமண்டலமுற்றினும் ஒருகுடை நிழலிற்படுத்திச் செங்கோ
லைநடாத்தியாண்டுவரும்குணசம்பன்னனாகிய முசுகுந்தச்சக்கிறவர்த்தியு
ம்அன்பத்தாறுதேசங்களைப்பரிபாலனஞ்செய்துவரும் அரசர்களும்மந்
திரிபிறதானிகள் சூழ்ந்துவரக் கலியாண மண்டபத்தைச்சேர்ந்து அதிக
விசுவாசத்துடன் பாலசுப்பிறமணியக்கடவுளினது திருவடிகளிற் றனித்த
னிவணங்கித் துதிப்பவர்களிடத்திற் பரிபூரணக் கடாட்சத்தைப் பாலித்
துப்பணித்தபடிக்குத் தமக்கேற்படுத்திய பீடங்களில் மனமகிழ்ந்திரு
ந்தனர், சவுனகாதிரிஷிகளே விசாலமாகச்செய்திருக்கின்றமணச்சாலையி
னிடத்தெள்ளிடயிடமின்றிநெருங்கிச் சகலரும்சேர்ந்துசந்தோஷசாகர
த்திற்படிந்து விழிகள்களிக்க ஆனந்தவாரியைப்பெருக்கிக் குமாரதேவ
ர்மீதில் மனத்தையும் நாட்டங்களையும் வைத்திருக்கின்ற யித்தகைய ம
கோச்சவகாலத்தில்நடந்த அற்புதங் காட்சிகளையும் சொல்லக் கேட்பீ
ராக அன்ப ருள்ளத்தைப்போலத்துல்லியமாக விளங்கிக்கொண்டிருக்கு
ம்பெருமையினையுடைய திருக்கயிலாயத்திலிருக்கின்ற சிறந்தநகரத்திற்
சிரோரத்தினமயமாகவமைந்து விசாலமாயிராநின்ற திருச்சபையின்மு
கப்பிலோங்கியிருக்கும்சிங்காதனத்திற் பராசத்தியுடன் வீற்றிருந்து ச
னகாதிகள்முதலிய மகத்துக்களுக்கு வேதநிச்சயங்களைப் போதித்துக்
கொண்டுவருகின்ற ஞானநாயகன் தமதுதிருக்குமாரனுக்குநடக்கவிருக்
கின்றதிருக்கலியாணவைபவங்களைத் திருவுளத்திலறிந்து தாமும் அத்தல
த்துக்கெழுந்தருளிப்பார்த்துப் போகவிருப்புற்றவராய் யிச்சேதியைப்
பார்பதியாருக்குத்தெரிவித்தமாத்திரத்தில் மனப்பூரிப்புடன்கர்த்தனைவ
ணங்கி நாம்போயிருந்துநடப்பிப்பதுஉத்தமாகவிருப்பதால்இறைபு
ற்றுத்துரிதமாய்ப்பிறையாணப்பட வேண்டுமெனப்போற்றுவதற்குச்ச
ம்மதித்தவராய்ச் சிங்காதனத்தை விட்டிறங்கி வெளிவந்து சொர்ணமய
மாகியவிமானத்திலேறி யோகியர்-தவத்தர்-கணநாதராதியராகச்செயசெய

போற்றியென்று வாழ்த்தித் துதிக்கவும் சிவகணங்கள்-முத்துக் குடைக
ள்-ஆலவட்டம்-வெண்சாமரை-அருகு-சாந்தாலாத்தி முதலிய சின்ன
ங்களைக்கவித்துவாவும் தேவதுந்துமி-வலம்புரிச்சங்கம்-திருச்சின்ன மா
திரமங்கலவாத்தியங்கள் திசைகளெங்கும் அதிரமுழங்கவும் யித்தகை
ய திருவோலக்கத்துடன் வெள்ளியங்கிரியைக்கடந்து வானவழி கொண்
டு திருப்பரங்குன்றத்துக்குநேரா வருகின்றதறுவாயி லெழுந்த பேரொ
லியைக்கேட்டு மனப்பூரிப்புடன் பத்திபரவசத்தராய்த் தட்சிணத்திற்சி
ங்காசனத்தைவிட்டெழுந் தெதிர்கொண்ட தறுவாயில் யிக்காட்சியைத்
தெரிந்த மகாவிஷ்ணு-பிரமன்-இந்திரன்-மற்றதேவர்க்கள்-ரிஷிகள்-ந
வவீரர் இலக்கர்-கணநாதர்-ராசராசக்களாதிய க ஆனந்தபரவசத்தராய்
த்தேகங்குதுகுலித்து மயிர்ச்செறி வெழவும் விழிகளில் போதநீராய்
பெருக்கெடுக்கநிற்போப்ஸமதுசுத்தன் வந்தனர் தேவதேவோத்தமன் வந்
னர் செகதீஸ்பரன் வந்தனனெனக் கூத்தாடிப் பேசினவர்களாய் யினியா
மெல்லவரும் பரிசுத்தவான்களாய்ச்சிறந்தனமெனக் கரங்களைச் சிரங்களி
ற்கூப்பிக்கொண்டு வேதவாக்கியங்களினுற் பலவிதங்களிற் றுதித்தெதிர்
நோக்கியிருக்கின்றதறுவாயிற் சிவபிரான் சமீபத்தில்வந்து பராசத்தியு
டன்விமானத்தைவிட்டிறங்கியகாலத்தில் சண்முகப்பெருமான் அதிக ஆ
வலுடன் தாய்தந்தையர்திருவடிகளிற் சூரியன் தாமரைக்கமலங்களைக்கூ
டுமாறுபோல வயிரமுடிகள்பொருந்தும்படிக்குவிழுந்து தீர்க்கதெண்
டஞ்சமர்ப்பித்தெழுந்து அழகிய பன்னிருகரங்களையுங்கூப்பிக்கொண்டு
துதித்துநின்றதிருக்குமாரனிடத்திற் பரிபூரணகடாட்சத்தைச்செலு
த்திகரங்களினுற் றழுவித்தனித்தனியே மார்பிற்சேர்த்தணைத்து முத்தமி
ட்டுஉச்சியைமோந்துபெற்றபொழுதினும் பெருமகிழ்ச்சியை யடைந்தி
ருக்கின்றதருணத்தில் மகாவிஷ்ணு-பிரமதேவன்-இந்திரன்-முப்பத்து
முக்கோடிதேவர்க்கள்-நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள்- நவவீரர்கள் இல
க்கர் பூதகணத்தலைவர்-முதலாகஅதிகசந்தோஷங்களுடன் சராசரப்பிற
பஞ்சங்களனைத்தையும் யீன்றருளியஉமாபரமேஸ்வரர் திருவடிகளில்மு
ம்முறைவலம்வந்துசேவித்துக் கரங்களைக்கூப்பினவர்களாய் கந்தனேநீ
ரோச்சாயைப்போலச்சூழ்ந்தலைக்கும்வினைப்போகங்களையனுபவித்துழ
லுகின்றஅடியோங்கள் அஞ்ஞானமயக்கத்தைப்போக்கிவாழ்வித்தீர் யித
னினும் வேறுபேறுவேண்டுமோவென்று பலவிதங்களிற்பரமன் குணாதி
செயப்பெருக்கையெடுத்துப்புகழ்கின்றதறுவாயில் உயிருக்குயிராய்ம
ன்னுவார்க்குக்கெட்டாமல் திருநடனங்களைச்செய்துவரும் பிதாவைஅன்
னையுடன் நவரத்தினமயமாகச்சோதித்திருக்கும் கலியாண மண்டபத்தி
லழைத்துக்கொண்டுபோயினர், அத்தறுவாயிற் பரமன் திருவுளப்படிக்

ருவானத்திலிருந்து சூரியனிறங்கியதைப்போலத் தேசோமயமா யொரு
சிறந்தவிமானம்வந்து மத்தியிலிருந்ததவாயில் மயிலையொத்தசாயலை
யுடையவுமையவளுடனீற்றிருந்து குமாரதேவனை வாவழைத்துப்பரி
ந்தெடுத்து யிருவர்மத்தியிலிருத்தித் தழுவியிருக்குங்கோலத்தைக்கண்ட
பிரமன்வணங்கி யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினன், கற்தனேபலயுக
ங்களாகஅடியோங்களைமானபங்கப்படுத்தி வருத்தியகொடுமைக்கிரங்கி
பாலசுப்பிரமணியக்கடவுளைப்படைத்துப் பகைவரைவாட்டிரட்சிக்கும்
படிக்குச்செலவுகொடுத்தனுப்பியவாறே வீரமாமயேந்திரபுரியைச்சே
ர்ந்து சூரபதுமன்வம்சநாசமாகக்கொன்றொழித்து நேத்திரத்தினம்சய
ந்தன்முதலியர்சிறையையுமீட்டுமித்தலத்தில்வந்திருக்கின்றனர்செய்யா
மற்செய்தநன்றியைக்குறித்து அதற்குத்தக்கமைமாறுமுடிப்பதற்கொன்
றுமில்லாமற்போனபோதினும்யிக்காலத்தில்எங்கள்மனதிற்கிடைத்திரு
க்கின்றசந்தோஷத்தினால் அவுணர்குலகாலனாகிய பாலசுப்பிரமணியக்க
டவுளுக்கு தேவேந்திரன் அரிதிற்பெற்றிருக்கின்ற தெய்வயானையம்ம
னையித்தினம் திருமணமுன்னிலையிற் றரவெத்தனித்து அதற்கடுத்தசற்வ
சாக்கிறதைகளையுமுடித்து யிதோ நிறைவேற்றிவிருக்கின்ற சுபகாலத்திற்
சற்வசீவசாருண்ணியாகிய பராசத்திசமேதராய் தேவரீ ரெழுந்தருளிய
தாற்சிற்றறிவையுடைய எங்கள்செய்கைகள்சிறந்ததாயிற்று,கற்தனேசெ
லவுகொடுப்பீராகில்மற்றசடங்குகளையும் திருமுன்பு முடிக்கக்கடவோ
மெனவேண்டுமுன்னிலையிற் சிவபிரான் நகைமுகராய்ப்பிரமனைப்பாத்து
யிதனைத்திருவுளம் பற்றுவதாயினர், நீங்களெத்தனித்து நடத்தவிருக்கி
ன்றசுபகாரியம் நன்காகவிருக்கின்றதால் யிச் சம்பிரமத்தைப் பார்த்து
ப்போகப் பரிமளமிகுந்தபுஷ்பங்களைத்தரித்திருக்கும்அளகபாரத்தையு
டையபத்வதராசபுத்திரியுடன் யிவடம்வந்தனமாதலாற்காலதாமசஞ்செ
ய்யாமல் முகூர்த்தத்தைச்செய்யவெத்தனப்படுமென்று திருவுளம்பற்றி
யமாத்திரத்திற் சந்தோஷித்தாழ்ந்து பிரமனும்விஷ்ணுவும் தேவேந்திர
னைப்பாத்து தேவராசனெ நீ செய்ததவமுயற்சிகளை யின்ன விதமெனச்
சொல்லிமுடிவதோ ஒன்றாகவிருக்கின்றகற்தன் லோகமாதாவுடன் வந்
துவிட்டனர், உன்பெண்ணைசரவணபவனுக்கு தாராதத்தஞ்செய்துகொ
டுக்கநிச்சயித்தகாலமும் சமீபித்தது துரிதமாகப்போய்த் தெய்வயானை
யம்மனை அழைத்துவரக் கடவையெனக்கட்டளையிட்டவுடன்சந்தோஷ
சாகரத்திலழுந்தினவனாய் யிதோ தருவித்தனனென்றோடித் தன்விடுதியை
ச்சேர்ந்து மகாலட்சுமி-சரஸ்பதி-இந்திராணி-தேவகன்னியர்-முதலான
சுந்தராவதிகள் சோபனங்களைப்பாடவும் மத்தியில் நடுநாயகமாக வீற்றி
ருக்கின்ற தன்பெண்ணைக்கிளியையாகப்பாத்து என்னைப்பெற்றதாயே

குலக்கொழுந்தே யாங்களீடேறவந்த நவவமுதே வருக வருகவென்ற
ழைத்ததருவாயில் தெய்வநாயகியார் அதிகசந்தோஷத்துடன் நவரத்தின
மயமாகியபீடத்தைவிட்டெழுந்து யால்கள்யாந்திருக்கும் மலையினிட
த்திற் செந்தாமரைப்புஷ்பத்தினு மெல்லிதாய்ச் செம்பஞ்சூட்டிப்பிற
காசித்திருக்குந்திருவடிகள்பொருந்தி நடக்கப்பொறுதுபொறுதென்ற
ஏற்றுவதைப்போலத்திருவடிகளிற் றரித்திருக்கும் தண்டைசதங்கைசத்
திக்கவும் முத்தாரங்கள்-மோகனமாலைகள்-வயிரப்பதக்கங்களைத் தாங்
கிப்பருத்து விம்மியோங்கியிருக்கின்ற கொங்கைச் சுமைக்கு உடுக்கை
யையொத்தமெல்லியயிடையான தாற்றுதாற்றுதென்று முறையிடுவதற்
கொப்பாக அரையிற்றரித்திருக்கும்நவரத்தினமயமாகியமேகலாபரணத்
திற்றொங்கவிட்டிருக்கும் பொற்கிண்கிணிகள்கலிக்கவும் அத்தருவாயிலி
ருந்தபெண்கொடிகளனைவரும்பின்பற்றிப்போற்றிவரவும்மெல்லமெல்
லப்பாதங்களைப்பெயர்த்துவைத்து மிருதுவாகவிருக்கின்றயிலவம்பஞ்
சையாய்ந்துசீர்படுத்திப்பரப்பியிருக்கும் அணையிற்பொருந்துமாயினும்
வருந்துந்திருவடிகளுக நடந்தசெயலை அருமையாகப் பேசுவதுபுதுமை
யன்றுகோடிசூரியப் பிரகாசமாகச் சொலித்திருக்கும் வெற்றிவேலாயுத
மூர்த்தியினதுடையபசாரவிந்தங்களும்கொடியரிற்கொடியனாகவிருக்
கின்றநாயினேன் அஞ்ஞானவிருள்மூடிக்கவலையுற்றிருக்கின்றமனமாகிய
வலியபாறையினிடத்திற்பொருந்திநடிக்குமாயின்சர்வசிவதயாபரியாக
விருக்கின்ற எமதன்னைமலைப்புறத்தில்நடப்பதைச் சகசமாகவே நினைக்க
வேண்டும் யிவ்விதமாக-இலக்குமி -சரஸ்பதி -சரங்களைகைலாகுகொண்
டுதேவகன்னியராதியாகச்சுபங்களைப்பாட அயிராபதம் போற்றிவளர்த்த
பெண்ணரசியானவள் மெல்லியமாந்தளிர் நாணும்படிக்கு விளங்கியிரு
க்கும் சிறடிகளைப்பெயர்த்து மனமகிழ்ச்சியுடன் எதிரில்நிற்கின்ற பிதாவி
னருகில்வந்தமாத்திரத்தில்முகத்துடன்முகத்தைச்சேர்த்துமுத்தமிட்டுஉ
ச்சியைமோந்தவனும் அதிககளிப்புடன்மணச்சாலையினிடத்துக்கழைத்
துவந்ததருவாயில் தேவர்க்கள் கற்பகமலர்களைச்சொரிந்து போற்றிப்ப
ணியவும் தவசிரேஷ்டர்கள்அட்சதைகளையிறைத்துதாயேவாழிவாழியென்
று ஆசிகளைச்சொல்லி வணங்கவும் சபையிருக்கின்றமற்றவர்களனைவரும்
செயசெயவென்றேதுதித்தொழவும் யிவ்விதக்களியாடல் நடந்துவரும்
போது எதிரிலிருந்தஅணையில்வீற்றிருக்கின்ற உலகமாதாவையும் ஆதி
தேவனையும்தொழுதவுடன தெய்வநாயகியானவள் அதிகபிரியத்துடன்
அருகிற்போய் பாதகமலங்களிற்பணிந்து மத்தியிற் சுயஞ்சோதிப்படி
வத்தனாய்விளங்குகின்ற வெற்றிவேலாயுதபாணியைப்பார்த்தவுடன் ஆப
ரணங்களைத்தாங்கிப் பொன்னையொத்த தேமல் பரந்திருக்கும் தனபார

ங்களையுடையபெண்ணரசியானவள் நாணந்தலைக்கொண்டுவெட்கி அன்
னத்தையொப்பப்பாகத்திலொதுங்கினள், அத்தருவாயிற் சிவபிரான்த
ம்மைவணங்கியமருகியி னிடத்திற் பரிபூரணகடாட்சத்தை வைத்துக்கி
ருபாநோக்கத்தைப்பாலித்தவுடன் பரமசிவத்தையணைத்துக் குழைவித்
துக்கொங்கைத்தழும்பும் வளைத்தழும்பும் விளங்கச்செய்த பார்வதியா
ருந்தமது திருக்கரத்தைநீட்டி மருமகளைச்சேர்த்து முதுகைத் தடவிக்
கொடுத்தவளாய்ப் பக்கத்திலிருக்கின்றதேவசேனாபதியாகிய திருக்குமா
ரனையும்தேவராசபுத்திரியையும் யிருகரங்களினாலும் அணைத்துப்போய்
ப்பொன்மயமாய் நவரத்தினகாந்திகளை வீசிக்கொண்டு எதிரிலிருக்கும்
பீடத்தில்இருவரையும்உளுக்காரவைத்து ஆசீர்வதித்துத்தமதிருப்பிடத்
தைச்சேர்ந்தனள், சவுனகாதிரிஷிகளே கலியாணப்பெண்ணும்மாப்பிள்
ளையும் ஒருமைப்படவீற்றிருந்தகாட்சியெப்படிக் கிருந்ததெனில் வீர
வெண்டையமணிந்த பாதாரவிந்தங்களைப்படைத்திருக்கின்ற சிவபிரா
ன்பராசத்திசமேதனாயெழுந்தருளியதோற்றத்தையொப்பக்காட்டியது
இவ்விதமாகப்பதிவிரதாசிரோமணியாகிய தெய்வநாயகியுடன்பாலசுப்
பிரமணியக்கடவுள் அரியணையிற்காட்டியகோலத்தை மகாவிஷ்ணு பிர
மன்முதலியசகலரும் தெரிசித்தமாத்திரத்தில் ஆனந்த பரவசத்தராய் வ
ணங்கிப்பலவிதங்களிற்போற்றினர், அம்மையப்பரும் மனப்பூரிப்புட
ன்மங்கலஆசிகளைச்சொற்றனர், இந்திரன் அவர்கள்மணவணிக்கோலத்தை
மனமும்விழிகளுங் களிக்கக்கண்டுபுகழ்ந்து கரங்களைச்சிரத்திற்கூப்பித்
தொழுது மதுரமாகியதேனைவெறுக்கஉண்டு களிக்கும் வண்டினங்களை
ப்பார்க்கினும்அதிசமனவெழுச்சிபெற்று அவ்வாறேகளித்துப்பக்கத்தில்
நிற்கின்றதேவியையெச்சரித்தவுடன் துரிதமாகப்போய் பலதேவப்பெ
ண்களுடன் திருமஞ்சனம்-கற்பகமலர் தூபதீபமுதலாகிய வஸ்துக்களை
ப்பொற்பள்ளயங்களினேந்திநஞ்சமஞ்சுந்தோற்றங்களையுடையஇந்தி
ராணியானவள்கலியாணப்பந்தலைச்சேர்ந்து கணவன்பக்கத்தில் நின்றன
ள், அக்காலத்திற்பிரமன்பணித்தபடிக்குத் தேவராசன் தன்தேவியுடன்
பன்னிருபுயாசலங்களையுடைய குமாரதேவர் சன்னிதானத்திற்போய்வே
தவிதிப்படிக்குப்பாதபூசையை செய்யவெத்தனப்பட்டவனாய் பொற்ற
ட்டினிடத்தில்ஐயன் திருவடிகளைச்சேர்த்துத் தன்தேவியானவள் நாணமி
குதியினால்தலையைக்கவிழ்ந்து தன்கரத்திலிருக்கின்ற தங்கலசத்தில்நிர
ப்பியிருக்கும்மதுரமிகுத்தகெங்காசலத்தை மெல்லமெல்லக் கவிழ்த்து
வாச்சுத்திசெய்துதன்மீதிருக்கின்றஉத்தரியத்தினால் யீரத்தைப்புலர்த்திக
ளபகஸ்தூரிக்குழம்பைப்பூசி பஞ்சதாருக்களினது புதியமலர்களைக்கொ
ண்டர்ச்சித்துசாம்பிராணி தூபத்தைக்காட்டி கற்பூரநீராஞ்சனங்கொடுத்

துச்சோடசவுபசாரங்களுடன் பூசையைநிரப்பியவுடன் இந்திராணியா
னவள்பயபத்தியுடன்கற்தன் திருப்பாதங்களில் அருச்சித்திருக்கின்றநின்
மலப்பொருள்களனைத்தையும்பதலமாகவெடுத்துத்தங்கப்பாத்திரத்திற்
சேகரித்துக்கொண்டுபோய்க்ஷேமமாயிருக்கின்றயிடத்திற் பதலப்படுத்
தியந்துசணவன்யக்கலிற்சேர்ந்தவுடன் திரிலோகசக்கிரேறல்பாலயப்ப
லரும்போற்றிவணங்கும்பெருமையினையுடையதேவராசன்மனப்பூரிப்
புடன்பாலசுப்பிறமணியக்கடவுளினது திருக்கரங்களில்தெய்வநாயகியா
ர்கடககங்கணங்களையணிந்திருக்கும் அஸ்தங்களைச்சேர்த்து அருமையாக
ப்பெற்றிருக்கின்றயிந்தபெண்ணரசியைத்தமது திருத்தேவியாகச்சொடு
த்தனன் அங்கீகரித்தன்பாயாண்டுரட்சிப்பதுஉமதுகடனெனவேண்டிஇ
ந்திராணிவிட்டவானநதிப்புனலினுல் தாராதத்தஞ்செய்து வணங்கினன்,
கேட்டீர்களோசவுனகாதிதவத்தரோ இவ்வதிசயத்தையென்சொல்லுவேன்
மெய்ப்பத்தியுடன் தமதுதிருவடிக்கன்பு செய்பவராகவிருக்கின்ற புண்
ணியசிலருக்கு யிம்மைமறுமைச்செல்வங்களனைத்தையும்மென்மேலும்
கடாட்சித்துக்கடையிற் சாருபப்பதவியையுந் தந்தாளவல்லசரவணபவ
ன்தேவராசனுனவன் வேதமந்திரங்களையோதிதன் குமாரத்தியை தாராவா
த்துக்கொடுக்க மனமகிழ்ச்சியுடனேற்றனனென்னில்அவன் திருவிளையாட
லின்பெருமிதங்களை யாவராற்கணித்துப்புகழப்படும்உடனேபிற்மதே
வனெழுந்துமானசத்தினுல்நியமித்தமங்கிலியத்தைதேவபிராமணர் ஆசி
களைச்சொல்லி வேதங்களையோதத்தக்கதாகச் சிவசுப்பிறமணியக்கடவுளி
னதுதிருக்கரத்திற்கொடுத்தவுடன் அதன்சூத்திரங்களை யிருகரங் களினு
ற்பற்றிக் கணகணெனதேவதுந்துமிகள்முழங்கவும் வேதாகமங்கள் து
தித்துவாழ்த்தவும் மாங்கிலியதாரணத்தை எமதன்னை திருக்கழுத்திற்றரி
த்துமும்முடிபோட்டு திவ்வியமலர்மாலையொன்றைத் திருத்தேவியின்
சிரத்துக்கணியாகத்தரித்தனர், அத்தருவாயில் தேவேந்திரன் தன்னிஷ்ட
சித்தியைப்பெற்றுக்களித்தவனுய்க் காரியப்பேணக்கூவி-வாழை-பலா-
மா-வெனச்சொல்லும்முக்கனிகளையும் மற்றபழவிதங்களையும் மதுரமி
குத்தகருப்பஞ்சாறு-ஆவின்பால்-தேன்-கற்கண்டு-யித்தகையசிறந்தவ
ஸ்துக்களைஎதெஷ்டமாகத்தருவித்து தங்கப்பள்ளயங்களினும்கிண்ண
ங்களினும்நிரப்பிக்கொண்டுவந்துசண்முகப்பெருமாள் முன்னம்பரப்
பியிவற்றினைப்பொசித் தடியேனை ரட்சிக்கவேண்டுமென நிவேதித்தன
ன், இத்தகையமகோச்சவகாலத்தில் வார்களினுவிறுக்கியிருக்கின்றமங்க
லபேரி முரசம்-மத்தளம்-டமாய்-குடமுழா- தக்கை-வலம் புரிச்சங்க
ம்-பின்னாங்குழல்-திருச்சின்னம்-பூரி-எக்காளை-துத்தாரி- செயகெண்
டைமுதலிய மங்களவாத்தியங்களைப் பல்லாயிரங்கணுதர் அண்டங்க

ளிர்ந்து திசைகள்செவிடுபடத்தக்கதாகத் தாம் தாமென்று முழக்கவும் வீரவாகுதேவர் - எண்மர் - இலக்கர் - மனவெழுச்சியுடன் தங்கள் முன்னவன் திருவடிகளிற்பணிந்து கரங்களைக்கொட்டி செயசெயவெனப் போற்றவும் சனாதிபதிகள்மனமும்விழிகளும்பூரித்துக் களிக்கத்தக்கதாக மணக்கோலத்தைத்தெரிசித்து வணங்கிவாழ்த்தவும் மகாவிஷ்ணு பிரமன் இந்திரனாகியதிசைக்காவலர் சூரியசந்திரர்முதலியநவக்கிரகங்கள்முப்பத்துமுக்கோடிதேவர்க்கள்-நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள்-கருடகாந்தருவர்-சித்தவித்தியாதரர்-பன்னகர்-நாகர் - ஏகாதசருத்திரர்- துவாதசாதித்தர் - மருத்துவர்முதலிய வானநாடரும்சதுர்வேதபாராயணராகியபிராமணர்-முசுகுந்தச்சக்கிரவர்த்தி அன்பத்தாறு தேசராசாக்கள் குறுநிலமன்னர் மற்றையபூமண்டலவாசிகளும் ஆதிசேஷனாகிய அஷ்டமாநகர்முதலியபாதலவாசிகளும்மற்றும் தீவுதிபாந்திரங்களிலிருந்து வந்திருக்கின்றசகலரும் தம்பதிசமேதராக வெழுந்தருளியிருக்கின்ற பாலசுப்பிரமணியர் மணக்கோலத்தை விழிகள்களிக்கத் தக்கதாகத்தெரிசித்துச் சந்தோஷசாகரத்தில் முழுகினவர்களாய் யித்தினம் சென்மசாபல்லியாய் முத்திக்காளானோமென்று பலவிதங்களிற்றுதித்துச் சமுத்திரகோஷமுமஞ்சும்படிசகு மங்களத்தைக்கொண்டாடிவருமுன்னிலையிற் பிரமதேவன் தன்குமாரவர்க்கங்களுடன் ஓமகுண்டத்தைச் சுற்றிலுமிருந்து தருப்பைகளைப்பரப்பி அட்சதைகளையிறைத்து புதியமலர்களினால் விநாயகர்முதலிய பிறதமதேவதைகளைவழிபட்டு பூரணகும்பம் குடவிளக்கு மற்றையவிதங்களையும் விதிப்படிக்குத் தாபித்து முற்றியவுடன் மந்திரபூர்வகமாகமுத்தீயையும் ஓமகுண்டலத்திலெழுப்பிச் சரவணபவனையும்தெய்வநாயகியம்மையையும் அதனருகிலெழுந்தருளச்செய்து சத்தரிஷிகளாதியமகத்துக்கள் வேதப்பிராமணர் வேதசாகைகளையோதிச்சமித்துக்களைகிறமப்படிக்குப்போட்டு ஆவிநெய்யையூற்றிமத்திமத்தியிற்பொரி பாலையிறைத்து நவக்கிரகஓமம் மற்றுமிராநின்ற கருமங்களை வேதவிதிப்படிக்குச்சரவணபவனைக்கொண்டு முடிப்பித்து பூர்ணாகுதியுங்கொடுத்தவுடன் அத்தீயினிடத்திருந்தெடுத்த பவுத்திரமாகிய மையை மாப்பிள்ளையைக்கொண்டு கலியாணப்பெண்ணின்திருநுதலிலிடுவித்து அக்காலத்தில்நடத்தவேண்டிய சடங்குகளனைத்தையும் வரன்முறையாய்ச் செய்தாயினபின்பு கலியாணமாப்பிள்ளைக்குமகாவிஷ்ணு தேமனுநின்றுகைவாகுகொடுத்துப் பீடத்திலிருந்தெழுப்பிபதமவாயில் மகாலட்சுமி-சரஸ்வதி-துற்கை-காளி-யித்தகையசிறந்தபத்தினிகள் தோழிப்பெண்களாகவிருந்து கலியாணப்பெண்ணைத் தழுவியெடுத்தகாலத்தில் உலகநடவடிக்கைப்படிக்கு எமதுகற்தன் கண்ணன்[illegible]முன்

(௱௩௮)



னம்போகின்றதருவாயில் தெய்வநாயகியாரும் கணவன்சுண்டுவிரலை தண்ணுவிரலிற்கோத்துக்கொண்டு மகாலட்சுமிமுதலானவர்கள் சூழ்ந்துபோற்றியாத்தக்கதாகப் பின்பற்றிநடந்து தீக்குண்டத்தைமும்முறைவலம் வந்து வடபாரிசத்திற்சேர்ந்ததருவாயிற் பிரமன்சிரத்திற்றமது திருவடிகளைச்சூடி வேதப்பொருளையனுக்கிரகித்தபகவானானவர் தமதுமனைவி திருப்பாதத்தைக் கரத்தினாற்பற்றியெடுத்து அம்மியின்மீதில் வைத்த உடன்வெற்றிவேலினாற்சூரபதுமன் தோற்றமாகிய மாவிருட்சத்தையிருகூறாகப்பிளந்துவாட்டிய முருகப்பெருமானுக்கும் அம்மனுக்கும்வானத்தில்விளங்கும் வசிஷ்டர்பத்தினி பதிவிரதாசிரோமணியாகிய அருந்ததியைக்காட்டிஇவ்விதமாகத்திரிமூர்த்திகள் - அக்கினிதேவன் நவத்தர்-தேவர்கள் - வேதப்பிராமணர் - மற்றும்சபையிலிருந்தவர்கள் சாட்சியாகத்திருக்கலியாணச்சம்பிரமங்களனைத்தும் கிரமமாகமுடிந்தவுடன் பாலசுப்பிரமணியக்கடவுள்திருத்தேவியுடன் அம்மையப்பராகிய உமாபரமேஸ்பரை மும்முறைவலம்வந்து பத்திவினயத்துடன் சேவித்ததருவாயில் பரமனும்பராபரையும்மனமகிழ்ந்து பற்பல ஆசிகளைச்சொல்லி ஆவலுடன்வாரியெடுத்துத்தமது பக்கலிலிருத்திப் பரிபூரணகடாட்சத்தையுங்கிருபாநோக்கத்தையும் பாலித்தவர்களாய்த்தழுவி உச்சியைமோந்து முத்தமிட்டுமுதுகைத்தடவி அதிகப்பிரியத்துடன் யிப்பேற்றினைக் கடாட்சிப்பதாயினர், குமாரப்பிரவுடைகளே யின்றுமுதல் நமக்கிருக்கின்றமுதன்மைகள் உங்களிருவருக்குங்கிடைத்துச்சகலராலும்பூசித்து வணங்கும்வரத்தைத்தந்தனம் நீங்களிருவரும் வங்கணமாய்வாழ்ந்திருப்பீர்களென்றுவாழ்த்தினர், கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே மேற்குறித்தபடிக்குப் பர்வதராசபுத்திரியும் பரமேஸ்பரரும்மனப்பூர்வமாய்ப்பிள்ளைக்கும்மருமிக்கும்தலைமைப்பேற்றை யனுக்கிரகித்தமேம்பாட்டைத்திருக்கலியாணப் பந்தலினிடத்திருந்த பிரமன் இந்திரனாதியதேவர்கள் ரிஷிகளும்தெரிந்தவுடன் அவர்கள் தேவியருடன் மன உச்சாகமாய் கடப்பமலர்மாலையைத்தரிக்கும் கந்தசுவாமியை திருத்தேவியுடன்மும்முறை வலம்வந்து பாதாரவிந்தங்களிற் பணிந்து போற்றமுன்னிலையிற் சபையினிடத்திருந்த மற்றையரனைவரும் சந்தோஷசாகரத்தின்மூழ்கினவர்களாய் சண்முகப்பெருமானையும் தெய்வநாயகியாரையும்தங்கள்இஷ்டதேவதைகளாகக்கொண்டு முன்னினும்அதிகபிரீதிபத்தியுடன் கிரமப்படிக்குவந்தனைவழிபாடுகளைச்செய்துவருபவர்களிடத்திற் பிரியமாய்சிவகுமாரன் தமதுபூரணகடாட்சவீட்சணியங்களைப் பாலித்தனர், இவ்விதமாகத் தமதுதிருக்குமாரனுக்கு நடந்துவரும்சிறப்புகளைக்கண்டுமனமகிழ்ச்சியுடன் உமாபரமேஸ்பரர் அத்திருச்சபையி னிடத்திருக்

கின்ற சகலரிடத்தும்பரிபூரணகடாட்சத்தைப்பாலித்து தவிசைவிட்டெ
ழுந்து உருத்திர கணங்கள்பூதவீரர்முதலாகச்சூழ்ந்து தத்தமதுபணிவி
டைகளைச்செய்துபோற்றிவரத்தக்கதாக விமானத்திலெழுந்தருளி அந்த
லத்தைக்கடந்து எதாப்பிறகாரந் திருக்கயிலாயத்தைச்சேர்ந்திருந்தனர்
உமாபரமேஸ்பரர்மறைந்ததை திருமணச்சாலையி லிருந்தவர்க ளனைவரு
ம்தெரிந்தமாத்திரத்தில்அற்புதசித்தராய் உயிருக்குயிராகவிளங்கும் ஆ
திதேவன் குணாதிசெயங்களை நினைந்துநினைந்து பலவிதங்களிற் கற்தன்
பெருமைகளைவாயாரப்போற்றிச் சிறந்தவர்களாய் உலக மாதாபிதாவை
ப்பிரிந்தகாரணத்தினால் நடுக்கடலில்விழுந்தவர்களைப்போல மனம்வரு
ந்தி பரமன்கடாட்சத்தினாற்கரையைக்கண்டு சேர்ந்து களிப்பவரையொ
ப்ப நவரத்தினமயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற குமாரதேவ
னைப்பிராட்டியாருடன்தெரிசித்தமாத்திரத்தில்உமாபரமேஸ்பரர்கோல
மாகத்தோற்ற ஆனந்தபரவசராய்மனக்கவலையைப்போக்கிச்சிவபிரான்அ
மர்ந்தபீடத்திற்காட்டும் சரவணபவன் சுயஞ்சோதிப்படிவத்தைக் காணு
ந்தோறும் மனதிற்பேரானந்தவெள்ளமூற்றெடுத்துப் பெருகிவிழிகளி
ற்றாரைதாரையாக நீர்சொரியத் திரேகங் குதுகுலித்து மயிர்சிலிர்த்து
க்கிடையாதயின்பநலத்தையனுபவித்துச்சிவகுமாரன்திருவடிகளிற்பன்
முறைபணிந்து திரேகபரவசத்தராய்க்கூத்தாடி வாயில் வந்தவந்தவிதங்
களாகஅவன்பெருமைகளைவழுத்தினர், சவுனகாதிரிஷிகளேஅத்தறுவாயி
ற்சபையிலிருந்தவர்களனைவருங்கொண்ட சந்தோஷப்பெருக்கை யின்ன
விதமென்று ஆதிசேஷனாலும்சொல்லிமுடிவதன்று உடனே சண்முகப்
பெருமான்தேவியுடன்அரியணையைவிட்டிறங்கி மகாவிஷ்ணு பிற்மதே
வன்இந்திரன்முதலானவர்கள் சூழ்ந்துபோற்றிவரவும் திருச்சின்னம் பி
ள்ளாங்குழலாதியமங்கலவாத்தியங்கள் கற்ணாமிர்தமாக முழங்கவும் கலி
யாணமண்டபத்தைக்கடந்து தமதுதிருக்கோயிலிற் பிறவேசித்து விஷ்
ணுபிரமனாதியரிடத்திற் கிருபாநோக்கத்தைப்பாலித்து தத்தமதுபதவி
களுக்குப்போவதாகச்செலவுகொடுத் தனுப்பிவிட்டுத் தன்பரிசனரைவா
யில்கடோறுமிருந்து போற்றிவரக் கட்டளை யிட்டவராய் அடிபேணயி
ன்றெடுத்தஅன்னையுடன் அந்தப்புரத்தைச்சேர்ந்து சராசரப்பிறபஞ்ச
ங்கள்தழைத்தோங்கும்படிக்கு பள்ளியறையிற் பஞ்சணைமெத்தைகளை
ப்பரப்பி மலரப்பாயலைவிரித்து மற்ற வைபவங்களுடனும் சோடித்தி
ருக்கின்றபொன்மஞ்சத்திலெழுந்தருளி தேவியுந்தாமுமாய் சரசல்லா
பங்களைச்செய்து சுரதலீலைகளினால் அவளின்பநலங்களை யனுபவித்துக்க
ளித்தவராய் வானநாட்டிற்சஞ்சரித்திருக்கும் வெள்ளையானை மேருச்சார
லிற்போற்றிவளர்த்த தெய்வயானையை வெற்றிவேலாயுத மூர்த்தியானவர்,

நாணமென்னுந் தளையினாற்கட்டி பள்ளியறையிற்சேர்த்து சிரோரத்தின
ங்களினாற் செய்யப்பட்ட ஆபரணங்களைத் தாங்கியிருக்கும் கொங்கைக
ளாகிய அங்குசத்தை திருக்கரங்களினாற்பற்றி ஓக்கி அருளென்னும் சங்
கிலியைக்கொண்டு புயாசலங்களாகிய தறியிற்பிணித்ததைப்போலக் கட்
டியணைத்து முத்தமிட்டும் அதரபானஞ்செய்தும் குலவியும் தேவாமுத
ம்போன்ற மதுரமொழியையுடைய குமரியுங்குமாரதேவரும் இவ்வித
மாகக்காமவின்பத்தையனுபவித்து அந்தப்புரத்திற் பிரியாவிடையா யி
ருக்கின்றதருவாயில் முனம் பாலசுப்பிரமணியக்கடவுள் பணித்தபடிக்
கு மகாவிஷ்ணுபிரமனாதியதேவர்க்கள் திருமுதுகுன்றமென்னுந் தலத்
தைநீங்கி தமதுதேவியருடன்வைகுந்தம் மனோவதிமுதலியநகரங்களைச்
சேர்ந்து கவலையற்றுப் பழையபடிக்குமனவெழுச்சியுடனிருந்தனர், தே
வேந்திரன் அதிகசந்தோஷித்துடன் முசுகுந்தச்சக்கிரவர்த்திமுதலியராசா
க்களையுபசரித்துத் தன்மாளிகைக்கழைத்துப்போய் அவர்களுக்குத் தக்
கவிடுதிகளைக்கொடுத்துக் காமதேனுவைத்தருவித்து அறுசுவை யுண்டி
பலகாரவகைகள் கனிவருக்கங்கள் கிட்டுட்பால் யித்தகையயிஷ்டான்ன
போசனங்களை திருத்தியாகவூட்டி சந்தனக்குழம்பு புனுகுசவ்வாது முத
லியகலவைச்சாந்துகளைப்பூசி பரிமளமிகுத்த பஞ்சதாருக்கள்மலர்மாலை
களைச்சாத்தி தாம்பூலத்தைக்கொடுத்துமுற்றியவுடன் நவரத்தினமயமா
யிராநின்றகிரீடம் வாகுவலயம்-மகரகுண்டலம்-மதாணிப்பதக்கம்மு
த்துமாலை-மோகனமாலையாதியபணிகளையும் விலையுயர்ந்தபீதாம்பரங்க
ளையும் முத்துப்பல்லக்கு சொர்ணமயமாகவிளங்கும் அம்பாரிகளைத்தா
ங்கியிருக்கும் யானைகள் தேர்கள் பஞ்சகல்யாணிகளாக விருக்கின்றபு
ரவிப்பத்திகள் தாசிதாசர்கள் ஏராளமாகப் பொழியும் பசுக்கூட்டங்க
ள்முதலாகியஉவப்பைகளை அபாரியாகப்பெருமதிசெய்து உங்களுக்கு
அதிகசிறமையைக்கொடுத்தேனென்றுபலவிதஉபசாரவார்த்தைகளைச்சொ
ல்லிஅவ்வவர்கள்பட்டணத்துக்குப்போய்வரும்படிக்குச்செலவுகொடுத்
தமாத்திரத்தில் தேவராசனைவணங்கிஉம்பால்மோட்சவீட்டையெளிதிற்
கிடைக்கப்பெற்றனமென மாறுரையாடி அதிகசந்தோஷித்துடன் நால்
வகைச்சேனைகளும் கடல்பெருகுமாறுபோலயிரைச்சலிட்டுப்போகவும்
ரணபேரி செயபேரி வெற்றிச்சங்கமாதிய டிண்டிம மேள வாத்தியங்க
ளும்திசைகள்செவிடுபடத்தக்கதாக முழங்கவும் தங்களுக்குரிய வாகன
த்திலாரோகணித்து மந்திரி பிரதானிகள் சேனைத்தலைவர் சூழ்ந்துவரத்தி
ருப்பரங்குன்றத்தைக்கடந்து நாடு-நகரங்கள்-வனங்கள்- வனாந்திரங்
கள்-மலைகள்-நதிகள்-முதலாகத்தாண்டி தத்தமது நகரங்களிற் சேர்ந்து
மனவெழுச்சியுடன்சவுக்கியமாயிருந்தனர், மேற்குறித்தபடிக்கு வால

நாடர் பூலோகவாசிகள் பாதலத்தினர்மற்றுந் திருக்கலியாணந்தூர்குவந்
திருந்தசகலரும்போனபின்பு இந்திரன் தன்மனதுக்கினியதேவியாகிய
இந்திராணியுடன்போக போக்கியங்களை யனுபவித்து திருக்குமாரனாகி
யசயந்தனுடன் சவுக்கியமாய் சிலதினம் அத்தலத்திற பலதேவர்கள்பணி
விடைகளைச்செய்துவரவாசமாயிருந்தனன், சவுனகாதிரிஷிகளே தேவதே
வோத்தமனாகிய பாலசுப்பிரமணியக் கடவுளினது திருக்கலியாணக்கதா
ப்பிரசங்கங்களைக்கூடியவரையிற்பேசினேனிதனை பத்திபூர்வகமாய் ம
னதொருமித்துக்கேட்ட புண்ணியசீலர் பெறும்பேற்றையாவரார்கணிக்
கப்படும்பின்தேவராசன்பொன்னுலகத்தைச்சேர்ந்துபழையபடிக்குத்தி
ரிலோகசக்கிரேஸ்பரனாய் வாழ்ந்த சரித்திரங்களைக் கேழ்ப்பீரென்று
சூதபுராணிகர் ஆரம்பித்தனர்.

## விண்குடியேற்றுபடலம்

நைமிசாரண்ணியவாசிகளே பாலசுப்பிரமணியக்கடவுள்தெய்வ
யானையம்மை யிளமை நலத்தை யனுபவித்து வருகின்ற நாள்களிலொரு
தினம் பெருகாலமாய்ப் பதியையிழந்து யாதொருசவுக்கியங்களுமில்
லாமல்வாடியிருக்கின்ற தேவேந்திரனைச் சீர்படுத்தவும் பழையபடிக்கு
ப்பொன்னுலகத்துக்கதிபதியாகப் பட்டாபிஷேகத்தைச்செய்யவுந்திரு
வுளத்திலெண்ணி அக்கருத்தைத்தேவிக்குத்தெரிவித்து தம்பதிசமேதரா
ய்அந்தப்புரத்தைக்கடந்து நவரத்தினமயமாய்ப்பாந்திருக்கும் சடாம
ண்டபத்தில் வருவதை வீரவாகுதேவர்-எண்மர்-இலக்கர்- பூதத்தலைவர்க
ண்டவுடன்சூரியனொளிமுச்சியைத்தெரிந்தஉலைப்போலக்களித்துத்தாம
ரைக்கமலங்களுக்கொப்பாக முகாரவிந்தங்கள் துலங்கத்துரிதமாயெதிர்
கொண்டுதிருவடிகளிற்பணிந்து அண்டங்களதிரப் போற்றிட தருவாயில்
இந்திரன்மனஉச்சாகத்துடனோடிவந்துசுகற்தன் திருவடிகளிற்சேவித்துக்
கரங்களைக்கூப்பிநிற்கின்றவனிடத்திற் கிருபைகூர்ந்துதேவராசனேயித்
தினம்தெய்வலோகவாழ்வைப் பழையபடிக்குத்தருவோமெனச்சொல்லி
யவாக்கியம்செவிகளுக்கமுததாரையாகநுழைந்தமாத்திரத்திற்பேரான
ந்தத்தைக்கிடைத்துயாதும்பேசாமல் நகைமுகனாயிருந்தனன்அக்காலத்
திலுண்டாகியபேரொலியானதுஎங்கணும்பரந்ததைக்கேட்டபிரமன்வி

விஷ்ணுமுதலிய தேவர்கள்-ரிஷிகள் வெற்றிவேலாயுதமூர்த்திவெளிவந்த
னர், வந்தனவொன்றுஆனந்தபரவசத்தராய்த் தங்களுக்குரியவழிபாடுகளை
ச்செய்து நிறைதாற்றாதற்பொருட்டுத் துரிதமாய்த்தமது பணிவிடைக
ளை நீங்கித் திருப்பரங்குன்றத்தினிடத்துக்குவந்து கிருபாநிதியாகியசிவ
குமாரன் பாதகமலங்களில்வணங்கி வழுத்தியதருவாயில் அவர்கள்மீது
விழிகளைப்பரப்பி யிந்ததேவாசனுக்கு விண்ணாட்டைத் தாவிருக்கின்
றதால் நீங்களனைவரும்வாக்கடவீர்களெனப்பேசிப் பக்கத்தில்நிற்கின்ற
வாயுவையெச்சரித்து நமதுதேரைத்தீவிரமாய்க்கொண்டு வருவையென்
னும் வாக்கியமுடிவதன்முன்னம் மகா பாக்கியமென்றோடி வாகனச்சா
லையைச்சேர்ந்து சொர்ணமயமாகியதேராவெளிப்படுத்தி பலஉத்தம அ
சுவங்களைப்பூட்டி மற்றசிங்காரங்களைப்பூர்த்தியாகச் சோடித்தவுடன்த
ன்துணைவருடன் முதற்றட்டிலிருந்து வார்களைப்பற்றிச்சவுக்கையசைத்
து மனோவேகத்தினுங்கடுகித்தூர்த்திவந்து முகவாயலினிடத்தில் நிறுத்தி
னன், உடனேபாலசுப்பிரமணியக்கடவுள் திருச்சபையைக்கடந்து வெ
ளிவந்து உமாபரமேஸ்பரனைப்போலத் தெய்வநாயகியுடன் திருத்தேரி
லாரோகணித்தகாட்சியை விழிகள்களிக்கத்தெரிசித்ததேவர்க்கள் மனப்
பூரிப்புடன்கற்பகமலர்களைவாரிவாரிச்சோனைப்பெய்யலைப்போலச்சொ
ரிந்து அஷ்டதிசைகளும் திடுக்கிட் டதிரும்படிக்குக் கரங்களைக்கொட்
டிசெயசெயவென்றார்க்கவும்வீரவாகுதேவர்-துணைவர்-இலக்கர்-படை
த்தலைவர்-பாரசர்பிள்ளைகள்அறுவருடன்முத்துக்கொடைகள்-வெண்சா
மரைகள்-ஆலவட்டங்கள்-அருகுகள் - மயிற்பிஞ்சங்களாதிய பரிவட்ட
ங்களைத்தாங்கிச்சூழ்ந்தனர்யிப்படிக்குச்சகலரும் நெருங்கியிருக்கின்ற
தருவாயிற்சரவணபவன் கிருபாகடாட்சமும்அருள்நோக்கமும்பெற்று
வாகனமாகவுமிருக்கின்றசிறப்பையுடையமஞ்ஞையானது தனதுபாதத்
தையெடுத்ததேவர்சிரங்களில்வைத்துநடந்துவந்துசற்றன்திருமுன்னம்
நின்றது, சவுனகாதிரிஷிகளே ஞாபகமன் ஆதியிற்செய்திருக்கின்ற அரி
யதவம் வீண்பட்டுப்போவதோ அதிகமேம்பாட்டையுடைய தேவர்க்க
ளைச்சட்டைபண்ணுமல்விதியிருக்கின்றது யிதையன்றியிற் சிறந்த பொ
ருளொன்றுமில்லாது பின்பு சண்முகதேவர்- மகாவிஷ்ணு-பிரமன்-முத
லானவர்களைப்பார்த்து நீங்களனைவரும்வாகனங்களிலேறி நம்முடன்பொ
ன்னகரத்துக்குவாக்கடவீர்களெனத்திருவாய்மலர்ந்தவுடன் மனமகிழ்
ந்தவர்களாய்ப் பிரமன் அன்னவாகனத்தினும் மகாவிஷ்ணு கெருடன்மீ
திலுமேறிச் சிவசுப்பிரமணியருக்குச் சக்கரரட்சகராக யிருமருங்கினும்
போகவும் வெள்ளியங்கிரியினிடத்திற்பெருகும் அருவியைப்போலமு
ம்மதங்களையு மொழுக்கும் வெள்ளையானையின்மீது இந்திரன்விற்றிருந்

ஞ்சீ நடக்கவும் மற்றதேவர்க்கள் ரிஷிகள் விமானங்களிலும் யிதாமாதியவா
கனங்களிலும்போயினர், சயந்தன் இந்திராணிமுதலிய அரம்பையர் ரி
ஷிபத்நிகள்-பல்லக்கு-சவுதாக்கள்-புரவிகள்-கூடாரவண்டிகளினிட
த்திற்சென்றனர், இவ்விதமாகச்சகலருந்தொடர்ந்து வரும்படிக்கு தெய்
வலோகத்தைநோக்கிக் கந்தர்பிறையாணப்பட்டசேநையயிரண்டாயி
ரவெள்ளம் பூதப்படைகளும் தெரிந்தவுடன் அதிகசந்தோஷசித்தராய்
வேலாயுதம்-தண்டம்-சூலம்-கணிச்சி தோமரம்-பிண்டிபாலம்-சக்கர
ம்யிருப்புலக்கைமுதலிய படைகளைப்பரித்துச்சற்வசங்காரகாலத்திற்சத்
தசாகரங்களும் பெரும்புறக்கடலும்பெருகுமாறுபோல வீராவேசங்க
ளுடன் ஆரவாரங்களைச்செய்துகொண்டு போம்போது பல்லாயிரம் பூத
வீரர்கள் செயபேரி-மத்தளம்-திருச்சின்னம்-பின்னாங்குழல்-காகளம்
வலம்புரிச்சங்கமாதிய பதினெண்வாத்தியங்களையும் சகல புவனங்களு
ம்திடுக்கிடும்படிக்குக் கணகணெனமுழக்கிப் போகவும் பலர் வெற்றிக்
கொடிகளைத்தாங்கிவரவும் யிவ்விதஆடம்பரங்களுடன் திருப்பரங்குன்
றவெல்லையைக்கடந்து வானவழிக்கொண்டு ஒருநாழிகைப்போதில் மா
நிலன்பதியாகிய பொன்னுலகைச்சேர்ந்து மகாவிஷ்ணு பிரமனுடன்வீ
திகளிற்போம்போது சூரபதுமன் திருக்குமாரன் பானுகோபன் முன்
னம் அக்கினிதேவனுக்கிரைகொடுத்தகாலத்திற்சகலசிறப்புகளையும்போக்
கிச்சீரழிந்து பார்க்கப்பதங்குறையாய்க்கருகிக் குட்டிச்சுவராக நிற்கின்
றகோலத்தையும் அதைக்கண்டவுடன் முகப்பொலிவற்ற இந்திரன்மன
வாட்டத்தையும்தாமெழுந்தருளியகாரணத்தினால் அவற்றை விலக்கியிரு
க்கின்றகெலிப்பையும் நிதானித்திரக்கமுற்றவராய்ப்பழையபடிக்குத்தே
வலோகத்தைச்சீர்படுத்தத்திருவுளத்திற்கொண்டுசிற்பநூலின்பிரகரணங்க
ளைமுற்றுமுணர்ந்தமதியூகியாகிய மயனைப்பார்த்து பெரு காலமாய்ப்ப
தியையிழந்து வாடியிருந்த துக்கவருத்தங்களைப்போக்கி மனச்சோர்வு
டனிருக்கின்ற யிந்தஇந்திரன் அதிகசந்தோஷத்துடன் கெசேந்திரபோ
கங்களையனுபவித்து மனவெழுச்சியுடன் அரசாட்சி செய்திருக்கும்படி
க்கான சகலவளங்களையும் பெற்றிருக்கத் தக்கதாக யிந்த பொன்னாட்டை
முன்னினும்பதின்மடங்கதிகச்சிறப்புடன்விளங்கவினாவிற்செய்தமை
க்கக்கடவையெனக்கட்டளையிட்டவுடன் கந்தனே பணிவிடையின்படிக்
குயிதோநடத்திவருவேனென்று திருவடிகளிற்சேவித்துப்போய் நாற்பு
றங்களிலும்சுற்றிப்பார்த்து பரிவப்பட்டவனாய் சாத்திரவிதிப்படிக்குஅ
ண்டமுகட்டைத்தாவப்பருத்துவளைத்திருக்கும்சத்தப்பிராகாரப்பொன்
மதிலையெழுப்பிபலஉறுப்புகளைச்சீர்பெறப்படைத்துசத்தசாகரங்களினு
ம்ஆழ்ந்துபரந்திருக்கும் அகழிகளைக்கல்லி அவற்றின் நாற்புறங்களி

ளுந்தேவர்களுந்நினைத்துப்பார்க்கவல்ல பிறதமைகள் - சித்திரங்கள் - மு
தலான அழகைப்பெற்ற எழுநிலைகளை வாய்ந்த நவரத்தினமயமாகியகோ
புரங்களைத் தாக்கி அதனுட்புறத்திற் சக்கிறவாளகிரியும் பெரும்புறக்கட
லும் நாணும்படிக்குப் யர்ந்து நீண்டு யிருமருங்கினும் பல நிலைகளைப்
பெற்றமேடைகள் சந்திரகாந்தமாளிகைகள் நவரத்தினமயமாகிய உப்ப
ரிகைகள் நிலாமுத்தங்கள் சித்திரக்கூடங்கள் பளிங்குத்தெற்றிகள் விசித்திர
ங்களாகவிருக்கின்ற மண்டபங்கள் சதுக்கங்கள் பலஓடைகள் தடாகங்க
ள் குளங்கள் பூங்காவுகள் உத்தியானவனங்கள் சோலைகள் தோப்புகள்மு
தலாகிய வளங்களைத்தகுதியாகப்படைத்தபின்பு சிருஷ்டிகர்த்தனாகிய பிர
மனும் நாணும்படிக்குத் தான்கற்றிருக்கின்றவிஞ்ஞானயின் வல்லமையினா
லும் பேரறிவின் விசாலத்தினாலும் கட்டுக்காவலையுடைய அப்பட்டணத்
தின்மத்தியில் நவரத்தினமயமாய்ப் பல அடுக்குகளையுடையதாய் அதிகசி
றப்புகளைக்கொண்டு விசாலமாயோங்கியிருக்கும் அரமனை யொன்றை
ப்படைத்து மகாலட்சுமியும் காமுறும் செயகுன்றங்கள் செங்கழுநீர்ப்
புஷ்பங்களலர்ந்திருக்கும் ஓடைகள் சித்திரக்குளங்கள் செந்தாமரைவெ
ண்டாமரை அல்லிமுதலியதிவ்விய மலர்களை விகசித்திருக்கும் தடாகங்
களாதியவற்றையுண்டுபண்ணி விஸ்தீரணமாகிய யிடத்தைப் பெற்றிருக்
கும்சபாமண்டபம்-அரங்குகள்-முகவாயல்-சந்திரகாந்தத் திண்ணைகள்
நாடகச்சாலைகள்-விதங்களை யமைத்தவுடன்தேவேந்திரன் அபிராணியுட
ன்வாசஞ்செய்யத்தக்க அந்தப்புரம் சண்முகதேவர் வீற்றிருக்கயோக்கிய
மாகியகோயில் மகாவிஷ்ணு பிரமன் வாசஞ்செய்வதற்கு உப்பரிகைகள்
தேவர்களிருக்கத்தக்கவிடுதிகள்மகாலட்சுமி சரஸ்பதிமுதலியதேவகன்னி
யருக்குவாசயோக்கியமாகியமாளிகை வகைகள் கற்பகக்காவுகள் நீராடும்
பொய்கைகளாதியவளங்க ளனைத்தையும் நான்முறை தெரிந்து வைகுந்
தத்திலும் மனோவதிப்பட்டணத்திலும் அளகையிலும் சிறந்திருக்கின்
றதெனக்கண்டவர்கள் புகழும்படிக்குப்பொன்னாட்டை யலங்கரித்தன
ன்சவுனகாதிரிஷிகளே அஷ்டலட்சுமிகளு மிருப்பிடமாய்த்திரிலோகசக்
கிரேஸ்பரனுக்கு ராசதானியாகவிருக்கின்ற அப்பட்டணத்தின் சிறப்புக
ளை என்போலிகளால்விரித்துச்சொல்லப்படுவதோ யிவ்விதசிறப்புகளனை
த்தையும் மனதினால்நிச்சயித்து அரைநாழிகைக்குள்ளாகச் சிருஷ்டித்தநீ
வாத்தைத்திருத் தழாய்மாலையைத்தரித்திருக்கும் நாராயணனும்நான்மு
கனும்கண்டவுடன் விம்மிதராய் உனக்கு நிகராகப் படைக்கத்தக்கவர்க
ளொருவருமில்லையென தேவதச்சனைப் புகழுமுன்னிலையில் இந்திரன்அ
ந்தப்பட்டணத்தின்வளங்களைமதித்துநிர்மித்தவனாய் சிற்பியைக்கட்டி
க்கொண்டு சகலசிறப்புகளையும் மிகுதியாகக்கொடுத்தனன், பின்புசிற்பி

யானவன்றுரிதமாய்ச் சண்முகப்பெருமானிருக்கின்ற விடத்தைச் சேர்ந்
து திருவடிகளில்வணங்கி சுற்றளே கட்டளையின்படிக்கு நகரமாயிற்றெ
ன்றுவிண்ணப்பஞ்செய்தனன், அவன்மீ தருபாநோக்கத்தைப் பாலி
த்தவராய்த் தம்மைச்சூழ்ந்திருக்கின்ற நவவீரர் இலக்கர் கணபதிகளு
டன் குமாரதேவர்போய் தேவராசனுக்கமைந்திருக்கின்ற அரமனைமுக
வாயலினருகிற் சேர்ந்தகாலத்தில் மகாவிஷ்ணு பிரமனுதியர் வாகனங்க
ளைவிட்டிறங்கி செயசெயவெனப் போற்றெடுக்கத்தக்கதாக தெய்வநா
யகியாருடன் சொற்னமயமாகிய திருத்தேரைவிட்டிறங்கி சகலரும்போ
ற்றிச்சூழ்ந்துவரத்தக்கதாக பாலசுப்பிரமணியதேவர் பிராட்டியாருட
ன்கோடிசூரியப்பிறகாசமாக விளங்கிக்கொண்டிருக்கும் சபாமண்டப
த்திற்பிறவேசித்து முன்னவனுகியசூரபதுமன் மஞ்ஞைவாகனமாய்ச் ச
மந்திருக்கும் பேற்றைக்கிடைத்திருப்பதாற் சிங்கமுகாசூரனும் அச்சி
றப்பைக்கொண்டு வாழவெண்ணிவந்து குமாரசுவாமியைத் தன்சிரத்தி
ற்றாங்க விருப்பதையொப்பநாற்புறங்களினும் சிங்கமுகங்களையுடை
யகால்கள்விளங்கும்படிக்குச் சிரோரத்தினமயமாகச் சொலித்துக்கொ
ண்டிருக்கும் அரியணையிற் சிவகுமாரன்தெய்வநாயகியார்சமேதராய்வீ
ற்றிருந்தகாலத்தில் மகாவிஷ்ணு பிரமன்-தேவர்கள்-ரிஷிகள்-முதலா
னவர்களனைவரும் சபைமுற்றும் நெருங்கிப் பாலசுப்பிரமணியனைப்பு
கழ்ந்திருந்தனர், இந்திராணியானவள்மகாலட்சுமி சரஸ்பதி முதலாகிய
மங்கையர்களுடனுபசரித்து அந்தப்புரத்துக்கழைத்துப்போய் அதிகமரியா
தையுடன் அவர்களுக்குத்தக்கவிடங்களையமைவித்து எழுந்தருளச்செய்
துசுபகரமாகிய வார்த்தைகளையாடிக்கொண்டிருந்தனள், திருச்சபையினி
டத்துவிளங்கும் சிங்காதனத்திலமர்ந்த பாலசுப்பிரமணியதேவர் மகா
விஷ்ணுபிரமதேவனைப்பார்த்து இந்திரனுனவன் திரிலோகசக்கிரேஸ்பர
னுய் யிப்பட்டணத்தி லிருந்து அரசுருமைகளைச்செலுத்திச் சகலசவுக்கி
யங்களையும் அநுபவித்திருக்கும்படிக்கு யித்தினமே மகுடாபிஷேகத்
தைச்செய்விக்கக்கடவீர்களெனத் திருவாய்மலர்ந்தனர், அத்தவிசேஷ
ம்செவிகளிற்பட்டமாத்திரத்தில் மகாபாக்கியமென்று பிரமன் பலதே
வர்க்களைத் தருவித்து கெங்காசலம் ஆடைஆபரணங்கள் கற்பகமலர்மாலைச
ந்தனக்குழம்பு-வெண்சாமரை-வாள்-மகுடம் தவளவித்திர முதலாகி
யராசசின்னங்களனைத்தையுந் தருவித்துக்கொண்டவனாய் சத்தரிஷிகளு
ம்வேதங்களையோதவும் தேவதுந்துமிமுழங்கவும் விண்ணவர்வாழ்த்தெ
டுக்கவும் அரம்பையர்பணிவிடைகளைச்செய்யவும் யித்தகைய சிறப்புக
ன்நடந்துவருகின்றதறுவாயில் பொற்குடங்களில் நிரப்பியிருக்கின்றவா
ணசெங்கையைக்கொண்டு மந்திரபூர்வகமாகஸ்நானஞ்செய்வித்து பிதா

ம்பாத்தையுடுத்திச் சந்தனத்தேய்வை புனைசெய்வாது கஸ்தூரிமுதலியக
லவைச்சாந்தைப்பூசி நவரத்தினமயமாகிய ஆபரணங்களைப்பூட்டி சற்ப
கப்புஷ்பமாலைகளையணிந்து மற்றகோலங்களையும் சீர்பெறச் செய்வித்த
வுடன் பிரமன் இந்திரன் கரத்தைப்பற்றி அழைத்துவந்து பருத்த மணி
களினற்செய்தமைத்திருக்கின்ற சிங்காதனத்திலேற்றி தேவமுரசங்களா
திமங்கலவாத்தியங்கள் தாம்தாமென முழங்கவும் தேவரிஷிகள்வே
தங்களையோதி அட்சதைகளையும் புஷ்பங்களையும் இறைக்கவும் கண்ண
ன்கண்டுகளிக்கவும் மற்றையர் மனமகிழ்ச்சிபெறவும் பிரமதேவன் வயிர
முடியைக்கரத்திலெடுத்து சிவசுப்பிரமணியதேவர் பரிபூரணகடாட்சவீ
ட்சணியத்தினால் திரிலோகங்களுக்கும் சக்கிரேஸ்பரனாய்ச் சகலரையும்
போஷித்து அரசுருமைகளைச்செலுத்தி சுகத்தில் வாழ்ந்திருக்கக் கடவை
யென்று ஆசீர்வதித்துசிரத்திற்றரித்தனர், அக்காலத்தில் இந்திரன்பவழ
மயடக்கு அரியணையில் வீற்றிருந்தகோலத்தைக் கண்டமாத்திரத்தில்ம
னமகிழ்ச்சியுடன்தேவர்க்களனைவருமெழுந்து தங்களரசன் திருவடிகளிற்
பணிந்துபோற்றிநிற்கவும் சத்தரிஷிகளாதிய தவத்தர் கற்பகமலர்களையி
றைத்து அண்டபண்டவாதிஸ்பரனே வாழிவாழியெனவாழ்த்தவும் ரம்
பை-ஊர்வசி-திலோத்தமை - மேனகை-முதலிய தெய்வப்பெண்கள்பர
தநாட்டியங்களைச்செய்யவும் விஞ்சையர் கருடகாந்தருவர் மகதியாழ்க்க
ளைமீட்டிச் சிவஞானத்தமாகதேவகானங்களைப்பாடவும்சங்கநிதி-பது
மநிதி சிந்தாமணி-காமதேனு- உச்சச்சிரவ முதலாகிய வளங்கள்பக்கங்
களிற் பணிவிடைக்கெதிர்பார்த்துக்காத்திருக்கவும் யித்தகையவைபவங்க
ள்நடந்துவருமுன்னிலையில் தேவேந்திரன் சிங்காதனத்தைவிட்டிறங்கி
தேவதேவோத்தமனாகிய பாலசுப்பிரமணியக்கடவுள் சந்நிதானத்திற்
போய்மும்முறைவலம்வந்து தீர்க்கதெண்டன் சமர்ப்பித்து கரங்களைக்
கூப்பிப்போற்றினவனாய் யிதனைவிண்ணப்பஞ் செய்வதாயினன், கற்த
னேபலயுகங்களாகப்பதியையிழந்து பெண்டு பிள்ளையைத்தோற்று கா
டேசெறியாகத்திரிந்தலைந்திருந்த அடியேனிடத்திற் பரிபூரணகடாட்ச
ம்வைத்துத் திருமேனிவருந்திக் கொடியபோராச்செய்து பகைவனைவாட்
டிசெல்வவளங்களிற்சிறந்தசுரர்க்கநாட்டைப் படைத்துக் கொடுத்தப்ப
ழையபடிக்காசாட்சியையுங்கடாட்சித்து சகலரும் புகழத்தக்க ஏற்றமு
ம்மேம்பாட்டையும்பெறச்செய்தீர் மேலும்நாயினேனைத் தொண்டனு
மாக்கிக்கொண்டீர் ஆதலாற் சிறுதாழ்த்தலுமேனினியிதனினும் பெறவேண
டியபேறுமொன்றுமில்லையெனப் பலபலவிதங்களிற் றுதிக்கின்ற தே
வேந்திரனிடத்திற்பரிவாய் கிருபாநோக்கத்தைப்பாலித்து யின்னெக்கால
மும்மனமகிழ்ச்சியுடன் சகலரும்போற்றிவணங்கத் திரிலோகாதிபத்திய

த்திரைப்பெற்று செசேர்ந்திச்சம்பத்தைய நுபவித்து பெண்சாதிபிள்ளை
யுடன்சுகிவியாய் யிருக்கக்கடவையெனத் திருவுளம் பற்றினவராய்ச்ச
பையிலிருக்கின்றபிரமன் விஷ்ணுமுதலானவர்கள்மீது விழிகளைப்பரப்
பிதங்கள்பதவிகளுக்குப்போய்ச் சலனமற்று வாழக்கடவீரெனச்சொல்
லிச்செலவுகொடுத்தனுப்பிவிட்டபின்பு தமதுமாளிகையைச் சேர்ந்தகு
றியபாதங்களையுடையபூதவீரனாவாயல்கடோறும் காவலிருக்கத் தெய்வ
நாயகியாருடன் லீலாவிநோதங்களைச்செய்திருந்தனர், விஷ்ணுபிரமனு
தியர்பொன்னுலகைக்கடந்துபோய்தங்கள்பதவிகளிற்சேர்ந்துதேவிமா
ருடன் அல்லலற்றுக்களித்திருக்கவும் தேவேந்திரனும்இந்திராணிசமேத
னாய்ச்சுராதலிகைகளைச்செய்தும் திரிலோகாதிபதியாய்ச் சகலசெல்வங்களை
யும்அநுபவித்துசஞ்சலமற்றிருக்குமுன்னிலையில்விண்ணவர்பொன்னு
லகவாழ்வையல்லாமல் மற்றபுவனங்களினுள்ள வளங்களையும் பெற்றவர்
களைப்போல மனவெழுச்சியுடன்தங்கள்தேவியருடன் தத்தமக்குரியத
லங்களிற் சுவக்கியமாயிருந்தனர்.

---

## கந்தவெற்புறுபடலம்.

சவுனகாதிரிஷிகளேமேற்குறித்தபடிக்குச்சகலரும் அதிமேகிட்
சியுடன் தமக்குரிய அரசுகளைச்செலுத்திச் சவுக்கியத்திலிருக்கின்றதருவா
யில் ஒருதினம் வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் கந்தவேற்பைச்சேர்ந்தி
ருக்குமப்படிக்குத்திருவுளத்தில்நினைந்து அந்தப்புரத்தைவிட்டுவெளிவ
ந்து திருச்சபையில்வீற்றிருந்தசேதியை மகாவிஷ்ணுபிரமனுதியர் போ
தவுணர்விற்றெரிந்தமாத்திரத்தில் பூவினிடத்திருக்கும் தேனையுண்டுகளி
க்க வண்டினங்கள்பலதிசையிலுமிருந்து பூஞ்சோலையைநோக்கிவருமா
றுபோல அதிகஆவலுடன் தங்கள்பதவிகளைநீங்கி தெய்வலோகத்தைச்
சேர்ந்து குமாரதேவனைக்கண்டு வணங்கிப்போற்றுகின்றவரிடத்திற்ப
ரிவாய்விசாரணைகளைச்செய்தபின்பு யிதனைத் திருவுளம்பற்றுவதாயினர்,
நாம்சிலபோது கந்தவெற்பைச் சேர்ந்திருக்க நினைந்திருப்பதால் யித்தி
னமயிறையாணைப்படுவோம் நீங்களனைவரும் உங்கள்பதவிகளிற் போய்
ச்சகலசெல்வவளங்களையும்அநுபவித்து சவுக்கியமாயிருப்பீர்களென்று
அவர்களுக்குச்செலவுகொடுத்தனுப்பிவிட்டு தேவேந்திரனுக்கும் தன்க
ருத்தைத்தெரிவித்து நீ யித்தலத்தில்வாசமாயிருந்து சகலரையும் போற்

ரிவாழ்க்கடலையெனப்பணித்து வாயுவைப்பார்த்து விரைவில் நமதுதேரை
க்கொண்டுவாக்கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் அதிவேகமா
ய்ப்போயலங்கரித்துப்பரிகளைப்பூட்டிக்கொற்றத்தொனிகளெழக்கு
ரத்திவர்துளதிரில்நிறுத்தினன், உடனேகுமாரதேவர்தெய்வநாயகியுடன்
மாதுலனிடத்தில் அனுப்பிவித்துக்கொண்டு திருத்தேரிலேறியபோதுசா
ரதியானவன்குதிரைகளைப்பதட்டிச் செலுத்தினன் நகரவாயில் வீரவாகு
தேவர்-துணைவர்-இலக்கர்-படைத்தலைவர்-தங்கள்தங்கள் வாகனங்களி
ன்மீது சூழ்ந்துவாத்தர்களாகவும் இரண்டாயிரவெள்ளம் பூதப்படைக
ளுஞ்சேனான்றுங்களுடன் றணபேரிசெயபேரிமுதலியவாத்தியங்களை
முழக்கிக்கொண்டு கல்லெனுஞ்சத்தமெழக் கர்த்தனைப் புகழ்ந்துவரவு
ம்பொன்னாட்டைக்கடந்து திருக்கயிலாய கிரியைச்சேர்ந்து அரமனை
முகவாயலிற்றேரைவிட்டிறங்கித் திருத்தேவியாருடன் ஆலயத்துக் குள்
ளேபோய்த் திரிநேத்திரதாரியாகியசிவனையும் தாயையுஞ் சேவித்துப்
போற்றித் தாங்கந்தபற்வதத்துக்குப் போகவிருக்கின்ற சேதியைவிண்
ணப்பஞ்செய்து உமாபரமேஸ்பரர் ஆசீர்வாதங்களையும் விடையையும்
பெற்றுமீட்டுந் திருத்தேரிலாரோகணித்து தம்பியர் முதலானவர்களு
ழ்ந்துவரச்சகலலோகங்களுடனும்வெள்ளியங்கிரியைகடந்து அதற்கு
த்திருக்கின்ற கந்தவெற்பினிடத்திற்சேர்ந்துவாகனத்தைவிட்டிறங்கிநவ
ரத்தினமயமாகவிளங்கியிருக்கும் ஆலயத்திற்பிறவேசித்து சபாமண்டப
முகப்பிற் சிரோத்தினங்களிலமைந்திருக்கின்ற சிங்காதனத்தில் தம்ப
திசமேதராய் வீற்றிருந்ததறவாயில் வீரவாகுதேவர் முதலான பிரமுகா
ள்சற்றன்றிருமுன்னம் பரப்பியிருக்கின்ற பீடங்களிலமர்ந்து பணிவி
டைகளுக்கெதிர்பார்த்திருந்தனர், பூதகணங்களும் திசைத்திசையிலும்பா
ந்தகாவல்கொண்டமர்ந்தனர், இத்தகைய சுபகரமாகிய காலத்திற் புரா
ணிகர் வாழ்த்தெடுப்பதாவது பவித்திரமாக விருக்கின்ற வேதாகமங்க
ளிறைந் துதித்தற்கரியவெற்றிவேலாயுதமூர்த்தியினது திருப்பாதகமல
ங்கள்வாழ்க சேவலும்மயிலும்வாழ்க கொடுங்கோல்செலுத்திவந்த அவு
ணர்பெருமான் சூரபதுமன் வயிரமார்பைப்பிளந்துவாட்டியவெற்றிவே
ல்வாழ்க அக்கர்த்தன்பாதகமலங்களைப்பத்தியுடன் வழிபட்டுப்போற்று
ஞ்சிறப்பையுடைய அடியவர்கூட்டம்வாழ்க அவனருளின் பெருக்கினுற்
சகலபுவனங்களும் வாழிவாழியென்றேத்தினர்.

சூதபுராணிகர்சவுனகாதிரிஷிகளைப்பார்த்து யிதுபரியந்தம் பால
சுப்பிரமணியர் சகலபுவனங்களிலும்புகழும்சிறப்பினைப் பெற்றிருக்கு
ம்கந்தவெற்பைச்சேர்ந்திருந்தவனாயிற் கேட்டீர்கள் இனி பொன்னகர
த்திலமர்ந்து திரிலோகசக்கிரதிபதியாய் அரசுசெலுத்திவரும் தேவே
ந்திரன்செய்கைகளையும் மற்றசரித்திரங்களையுஞ் சொல்லுவோ மென்று
சூதபுராணிகர் ஆரம்பித்தனர், அவுணர் பூண்டறக்களைகளைந்தெறிந்தவெ
ற்றிவேலாயுதத்தைப் பரித்திருக்கும் பாலசுப்பிரமணியதேவர் பரிபூர
ணகடாட்சவீட்சணியத்தினால் அரசுருமையைப்பெற்று முப்பத்துமுக்
கோடிதேவர்க்கள் சகலபணிவிடைகளையும்செய்துபோற்றிவரவும் நாற்
பத்தெண்ணாயிரம்ரிஷிகள் மங்களஆசிகளைச்சொல்லித்துதித்து நெருங்
கியிருக்கவும் கின்னரர் கிம்புருடர் சித்தர் வித்தியாதரர் மங்களங்களைப்
பாடியேற்றவும் சகலசாத்திரபண்டிதனும் திரிகாலவர்த்தமானங்களை உள்
ளங்கைநெல்லிக்கனியைப்போல தெரியவல்ல குணசம்பத்தைப் பெற்று
குலகுருவாகவிருக்கின்ற பிரகஸ்பதிபகவான் அருகிலிருக்கின்றஆசனத்தி
ல்வீற்றிருந்து மந்திராலோசனைகளைச்சொல்லிவரவும் ரம்பை-ஊர்வசி-தி
லோத்தமை- மேனகை- முதலாகிய சுந்தரவதிகளாகிய அரம்பையர்அபி
னயங்களைக்காட்டி சதிமுறையிற்பாதங்களிற்கட்டியிருக்கின்றசிலம்பைக
ள்கலகலெனச்சத்திக்கத்தக்கதாகப் பெயர்த்துப்பெயர்த்து வைத்து மயி
லையொப்பப்பரதநாட்டியவியல்புப்படிக்கு நடித்தும் குயில்கள் நாணு
ம்படிக்குச்சிரவணாநந்தமாகப்பாடவும் கருடகாந்தருவர் தேவயாழ்க்
களைமீட்டி மதுரமாகியகீர்த்தனங்களைவாசிக்கவும் பலதேவர்கள் பயபக்
தியுடன் அருகிலிருந்துவெண்சாமரைகளையசைக்கவும் சுருகுகளைப்பி
டிக்கவும் ஆலவட்டங்கள்வீசவும் கட்டியக்காரர் எச்சரிக்கை சொல்லவு
ம்பட்டுவோர்புகழவும் மற்றராசச்சிறப்புகளனைத்தும் குறைவறநடந்துவ
ருகின்றதறுவாயில் தேவதுந்துமிமுதலிய வாத்தியங்கள் தாம்தாமென
முழங்க நவரத்தினகசிதமாகவிளங்கும் காம்புகளினுச்சியில் வெண்பட்
டினாலும்ஆணிமுத்துகளினாலும் சோடித்திருக்கின்ற பூச்சக்கிர தவளக்
குடைகளை யிருபாரிசங்களினும் சந்திரசூரியனையொப்பக் கவிக்கவும்
அவற்றின்கீழ்ப்புறத்தில் நவரத்தினமயமாகச் சோடித்துவிளங்குகின்ற
சிங்காதனத்திலெழுந்தருளி திரிலோகங்களினுந் தனது ஆணைஆக்கினை
களைச்செலுத்திப் பாதுகாத்தரசுசெலுத்திவருகின்ற தேவேந்திரன் ஒருதி
னம்சடுதியில்மனதுக்கதிக சஞ்சலங்காட்டியபடியால்யிதனைச்சிந்திப்ப
தாயினன், திரிபுவனசக்கிரேஸ்பரனாகவாழ்ந்திருக்கின்றநான் சத்துராதி
களாய்த்தாயாதிகளாகவுமிருக்கின்ற சூரபதுமனுக்கடிமைப்பட்டு அவன்க
ட்டளைகளுக்கடங்கித்தகாதபலவினைத்தொழில்களைபெருங்காலஞ்செய்துஅ

ளவற்றையுகங்களைச்சுழித்தனன் யிதன்மத்தியிற் பாதகராகிய அவுணரால்
நேர்ந்ததுக்கவருத்தங்களையும் யிடையூறுகளையுஞ்சொல்லிமுறையிடவந்தாயி
ன்னையொருபக்கம்தேவியொருபக்கம் நானொருபக்கமாயிருந்துபது
ங்கிபடாததுன்பங்களையனுபவித்தனம் அவற்றினையிக்காலத்தில் நினைப்
பினும்மனம்நடுங்குகின்றது ஐயோயிவ்விததுன்பங்களிற்பட்டவர்க
ளொருவருமிருக்கமாட்டார்களெனப் பலபலவெண்ணியெண்ணி சஞ்ச
லித்தனுந் தன்செல்வத்தை வெறுத்துக்கொண்டு இந்திராணியினது
பொற்கலசங்களையொத்த கொங்கைகளை யிறுகப் புல்லியணையுஞ்சுகத்
தைமறந்து மகேந்திரச் செல்வங்களைச்சற்றும்மதியாமல் அசுசெ
தித்துவனை யுமிகழ்ந்து எக்காலத்தும்சலனமில்லாமல் நன்னெறிகளைக்
கிடைக்கச்செய்யும் சிறந்ததவங்களைச்செய்து சிவபிரானதுபூரணகடாட்
சத்தைப்பெற்று நித்தியமாகிய மோட்சசாம்பிராச்சியத்தை யடைந்து
பேரானந்தத்தை யனுபவித் திருப்பதைத்தவிர வேறுநன்றொன்றுமில்
லையெனமதித்து அவ்வாறேதுறவாச்சிரமத்தை யனுஷ்டித்துவனத்திற்போ
ய்த்தவங்களைச்செய் த்துணிவுகொண்டனன் இப்படிக்கு இந்திரன்உத்
தேசித்திருக்கின்றதனையவ ஆசிரியனாகவும் மந்திரியாகவும் புரோகிதனா
கவும் தலைவனாகவுமிருந்து தேவர்கள்சவுக்கியங்களுக்கு வேண்டும்உத
விகளைத்தேடிரட்சித்துவரும் பிரகஸ்பதி தெரிந்துமாத்திரத்திற்றிடுக்கிட்
டுமோசம்நேர்ந்தது யிவன்கொண்ட கருத்தின்படிக்கு வெளிப்படுவனா
கில் தெய்வலோகத்துக்கரசனில்லாமல் தலைவிரிகோலமாய்அலந்துபகை
வருக்கிடமுண்டாகும் ஆதலால் யினிதாமசப்படாமல் யிதற்கொருநிவா
ரணத்தைத்தேடவேண்டுமெனக்கருதி ஒருதந்திரத்தைமனதிற் றீர்மானி
த்துக்கொண்டவனாய் தேவேந்திரனுக்கருகில்நெருங்கியிதனைபேசுவதா
யினன், பர்வதங்களின்சிறகைக்கண்டித்து உலகங்களை வருத்தமின்றிக் காத்
துவரும் வச்சிரதரனாகிய இந்திரனேகேழ்ப்பையாக சிவகாருண்ணியம்ந
டுநிலைமைசத்தருமங்களாகிய நன்னெறிகளெவ்வளவுமற்ற கொடியபாத
கனாகவிருந்து கொடுங்கோல்செலுத்திவந்த சூரபதுமனாற் கிடைத்தது
க்கவருத்தங்களையும் அபகீர்த்தியையும் பெரிதாகநினைந்து நூறுஅசுவ
மேதயாகங்களைக்குறைவறச்செய்து முடித்த பலப்பிருப்பத்தினாற் சி
வபிரான்கடாட்சித்திருக்கின்ற சிறப்பையுடைய யிவ்வரசுருமையையும்
திரிலோகசாம்பிராச்சியச்செல்வங்களையும் வெறுத்து யேதோ சில
வெண்ணங்களைக்கொண்டிருக்கின்றனைபோற்காணுகின்றது ஐயோஉ
ன்விவேகத்தையென்சொல்வேன் யித்தகைய பெருவாழ்வைநீ . க யினி
மேற்படமுக்கியமாகிய தவவிரதங்களைச்செய்து நீபெறவிருக்கின்றபல
ப்பிருப்பத்தியானது யின்னதெனத்தோற்றப்படவில்லை வெய்யல்-குளிர்

பனி-யிவற்றினாலும்பலவிடையூறுகளினாலும் அலைச்சற்பட்டுத்தேகமு
ம்மனமும்வருந்திச்சிறந்த நோன்புகளைச்செய்தவரன்றே மேம்பாடா
சப்புகழவல்ல யிந்தமகதயிஸ்வரியங்களையும் தேவேந்திரவாழ்வின் சம்ப
த்தையும்பெற்றுக்களிப்பவர்கள் ஓ ராசாதிராசனே யிஃது உண்மட்டல்
லமைதித்துப்பார்க்குமிடத்தில் யிந்த திரிலோகங்களினும் சாதாரணமாக
நடந்துவரும்இயற்கையாம்பற்பலதுன்பங்களைச்சகித்துயிடைவிடாது
அரியதவங்களைச்செய்துவரும்பேற்றினைவாய்ந்தரிஷிபுங்கவர்களினும்சி
வபூசைமுதலிய நற்கருமங்களை மனதொருமைப்படநடாத்திவந்தபெ
ருமையினாற்பொன்னுலகவாழ்வைப்பெற்றுதேவரொடொப்புமக்களித்திருக்
கின்ற சொர்க்கவாசிகளினும்சமுத்திரஞ்சூழ்ந்தபூமண்டலத்திலிருக்கின்ற
புண்ணியசீலர்களினும் பாதலவெல்லையில்வாழும்ஆதிசேஷன்முதலியநா
கராசாக்களினும் சிருஷ்டி திதிசங்காரமென்னும்முத்தொழில்களை நடா
த்திவரும் மகிமையையுடைய திரிமூர்த்திகளினும் பொற்பிரவைப்போ
லஅழகிய தேமல்பரந்து தங்கக்கலசத்தையொப்பப்பூரித்து விம்மித்த
தும்பி நீலரத்தினத்துண்டத்தினும்சுந்தரமுள்ளமணிக்காம்புகளைப்பெ
ற்றிருக்கின்றகொங்கைகளைப்படைத்து அதிசுரூபலாவண்ணியங்களைப்
பெற்று கலாபமயிலையொத்தசாயலையும் அன்னத்தையொத்த மெல்லியந
டையினையும் கிள்ளையையும் குயிலையும் யாழிசையையும்பழித்து தேவா
ம்ருதத்தைப்பார்க்கினும் மதுரமாகக்கொஞ்சி வார்த்தையாடும் தருணமங்
கையரைக்கலந்து பேரானந்தத்தைப்பெறச்செய்யவல்லபோகபோக்கிய
யின்பரசத்தைக்கைத்து நீங்கியிருப்பவர்க ளொருவருண்டோ முற்பக
ல்மனமொருமித்துச்செய்த தீயகருமங்களுக்குத்தக்க தெண்டனைகளைச்
சிவபிரான்கட்டளையின்படிக்கனுபவித்துச் சூரியன்முன்பட்ட பனிப்ப
டலத்தைப்போலச்சழித்துவிட்ட சம்பவங்களை யிகழ்ச்சியாக நினைந்து
கவலையிற்பட்டுழலுமனத்தனாய் அரிதிற்கிடைத்திருக்கின்ற யிந்த சிறந்த
மகதயிஸ்வரியத்தை ஊனமென்றெண்ணித்துறந்து வறியனாய்த் தனிமை
யிற்றவங்களைச்செய்துழலுங்காலத்தில் நீ பெறவிருக்கின்ற துக்கவருத்த
ங்களுக்கொரு அளவையுமுண்டோ கோடைகாலத்திற்றோன்றுங் கானல்
செலத்தைக்கடக்கவறியாது பயப்பிரந்திகொண்டுவாடுகின்றவன் ஆழ்ந்
தகடலினிடத்தில்விழுந்து நிலைபெறாதலைந்து வாடநினைக்கப்படுமோ ஊ
ணுறக்கமற்று பனி-வெய்யல்-குளிர்-மழை-முதலிய கொடுமைகளிற்ப
ட்டுச்சரீரம்வாடவருந்தி சத்த-பரிச-ரூப-ரச-கெந்தமெனச் சொல்லநி
ன்றபஞ்சேந்திரியவிடையங்களில் ஐம்புலன்களின்மீறிச்செல்லவொட்டா
மலடக்கி காமக்-குரோத-லோப-மோக மத-மாற்சரியமென்னும்அறு
வகைப்பகையினைப்போக்கிச் சித்தத்தைச்சிவத்திற்கலந்து அரியயோகசா

தனைகளைச்செய்யவல்ல மகத்துக்கள்பெறும் பயனைத்திரிலோகாதிபத்தி
யத்தைப்பெற்றிருக்கும் ராசாதிராசனே நினைக்குமிடத்தில் போகமல்ல
துவேறுமுண்டோ யிவ்வாக்கியத்தைக்கடைப்பிடியாக நம்பக்கடவையி
லொன்றியும்பொறிபுலன்களையடக்கி அவாவைப்போக்கிச் செய்கைகளறு
த்துவிலைக்கூடாகிய இரோகவாசனையைநீக்கி நித்தியசுகத்தைத்தரவல்ல பேரி
ன்பவீடொன்றிருக்கின்றதென்றுஞ் சிலசயலசித்தர்சொல்லுவதுமுண்டு
அதனைக்கண்டவர்களைக் காட்டவல்லமோ இம்மையில் உள்ளங்கைநெல்
லிக்கனியைப்போலத் திஷ்டாந்தரமாய் அனுபவித்துக்களிக்கும் போக
போக்கியங்களையேஉண்மையாக உலகங்களிற் சாதாரணமாய் வசனித்
துக்கொள்ளவிருக்கின்றது ஆதலாற்பொய்மையாகியகானலை மதுராமிரு
த்ததெளிவுள்ளசெலமெனக்கருதி அதனிடத்திச்சைகொண்டு காத்திலகப்
பட்டிருக்கின்ற சிறந்ததேவாமுதத்தைக்கமரிற்கவிழ்த்துவிட்டு மோசம்
போனவர்களையொத்துச்சிலர் நித்தியமெனச்சொல்லும்மோட்சவீட்டை
ட்பெறநினைந்துயிம்மையிற்கண்ட பலனைக்கிடைத்திருக்கின்ற பிர
யோசனத்தைப் பலவத்காரமாயிழந்து போகும்படிக்குச் சம்மதித்திரு
க்கின்றஉன்னெண்ணம்வெகுநேத்தியாகவிருக்கின்றது ஓ தேவாசனே
தன்மனதுக்கினிய சுந்தரமுள்ளமங்கையரை அம்சதூலிகா சயனத்திற்ச
ரசசல்லாபங்களினாற்சுரதலீலைகளைச்செய்துபெறும் பேரின்பமேமோ
ட்சாருண்ணியமாம் அவர்களுடன்கலந்து வாழ்வதே யில்வாழ்க்கையா
ம்நடைநொடிபாவனைகளிற்குறைவின்றிக் கற்புத்தன்மையைக் கிடைத்
திருக்கின்ற கன்னிகைக்கிடைத்தலே செல்வங்களிற்சிறந்ததாம் அத்தகை
யதருணமங்கையர் தங்கக்கலசத்தையொத்த வனப்புள்ள கொங்கைகள்
மார்பிலிறுகக்கட்டியணைந்து யின்பநலத்தைப்பொருந்த வறுமையைவி
டக்கொடியதரித்திரம்வேறுமுண்டோ மறுவற்ற சோடசகலைகளைவாய்த்
தபூரணச்சந்திரோதயத்தைப்பழித்து விளங்கும் அழகியமுகாரவிந்த
ங்களைப்படைத்த மங்கையர்புணர்ச்சியைச் சிலர் சிற்றின்பமெனப்பே
சியிகழ்கின்றனர், அதின்சிறப்பைத்தெரிவராயின அதனைப் பேரின்பமா
கவேயெண்ணி நிமைப்போதும்பிரியாவிடையாய்க் கூடியிருப்பர் மேற்
குறித்தமேம்பட்ட யின்பமானது பூர்வத்திற்செய்ததவப்பேற்றினாற்கி
டைக்கவல்லதல்லது நினைத்தகாலத்திற் சுலபமாகப் பெறவும் போகு
மோ ஓ ராசாதிராசனே அதன்பெருமிதங்களைசவிஸ்தாரமாகக் கேட்க
மனமிருக்குமாகில்சொல்லக்கடவோமென்று தனக்கானுக விருக்கின்ற
ஆசிரியன் குறித்தவாக்கியங்களைச் செவிகளுக் கமுததாரையைப்போலக்
கேட்டவுடன் வச்சிராயுதபாணியாகிய இந்திரனுக்குச் சரீரம் பூரித்துந
கைமுகனாய் ஓமக்கனலிற்பட்ட வெண்ணெயைப்போல மனங்கரைந்துக

மக்கவலையில்முயற்சிகொண்டவனுய் குலக்குரவனைச்சேவித்து மனக்கவ
லையைப்போக்கி நற்காட்சியைப் பெறச்செய்ய தேவாமுதத்தைப்போ
லஅருகிலிடைவிடாமலிருக்கின்றகுருநாதனே தேவரீர்கிருபையுற்றாயிக்
காலத்திற்போதித்தமங்கையர்சிறப்புகளையும் குணுதிசெயங்களையும்பே
ரானந்தத்தைத்தரும் காமவின்பநலத்தையும் அடியேனுக் கிதுபரியந்த
ம்தெருட்டாமலிருந்தகாரணமென்னேவெனத் திரோகமுற்றினும்விழிக
ளைப்படைத்திருக்கின்றசிற்றறிவையுடைய தேவராசன் வினவியகாலத்தி
ல்யிவன்மனதிற்கொண்டிருந்தாருத்தழிந்து மருண்டுமோகவாசனையில
கப்பட்டுக்கொண்டனனெனத் தெரிந்துகொண்டவனுய் வேதாகமபுரா
ணசாத்திரவிதங்களைப்பூரணமாகவாசித்து அவற்றின் நிச்சயங்களைத்தெ
ரிந்திருக்கின்றபண்டிதனுகிய பிரகஸ்பதிபகவான் திரிலோகசக்கிரேஸ்
பரனைப்பார்த்து அரசனேமோட்சவீட்டை எளிதிற்றரும் சிறப்பையுடை
யமங்கையர்மகத்துவங்களையும் அவர்களாற்பெறவிருக்கின்றயின்பநல
த்தையும் விளக்கும் மதனசாத்திரத்தின் நிச்சயப்பொருள்களை மேம்ப
ட்டதாகச்சிந்தித்தறியும் ஆசைப்பெருக்கில்லாதபருவத்தில் மேலையோ
ராகவிருப்பவர் போதிக்கமாட்டார்கள் அவ்வாறேஐயனே உமக்கித்தின
வரையில் அனுக்கிரகஞ்செய்யாமற்சூழ்த்தனம் இதுதருணமாகத் தெரி
ந்தபடியால் சந்திரனைக்கொடையாகப்படைத்திருக்கின்ற மன்மதராச
னதுசரித்திரமாகியகடலை விசாலமாகிய கூர்த்தபுத்தியினுல் அளந்து பரி
சோதித்து நிச்சயித்திருக்கின்ற உண்மைகளின் பிறகாரணங்களனைத்தை
யும்சொல்லுவோம் பராமுகமில்லாமல் மனதையும்செவிகளையு மொரு
மித்துக்கேட்பையாக ஆதியில்யிந்நூலைத்திருக்கயிலாயபற்வதத்தைக்கா
வல்கொண்டிருக்கும்பெருமையினையுடையநந்தியெம்பெருமான்கண
க்கிறந்தவிரிவாயுண்டுபண்ணியிருந்தனர், சிலகாலத்திற்குப்பின்பு மேலை
யோரால்நூற்றெட்டுசாகைகளாகச்சுருக்கினர்யிக்காலத்திற்றசபிரகரண
ங்களாகஏர்ப்படுத்தியிருக்கின்றதுபூர்வாசிரியர்களினுல்யிதற்குரியசமை
யங்கள் அறுவகைத்தாகப்பிறித்தனர் அவைகளில்அமுதத்தினுமினியயின்
பத்தையனுபவிக்கவிருக்கின்றமக்களுக்குஇம்மையில்அளவுபடாதபோ
கத்தைக்கிடைத்துக் களித்தலே முத்தியெனப் பேசுகின்றது லோகாயுத
மெனச்சொல்லநின்ற சமையத்துக்குரிய சரித்திரங்களை விசாரணைசெய்
துஅம்மார்க்கத்தையனுசரித்துச் சுகாதிதப் பேற்றைக்கிடைத்து வாழ்பவ
கேஆடவராவர் அத்தகையசிறந்தமுத்தியின் யின்பநலங்களைத் தரவல்ல
வர் வேலையொத்த கூரியவிழிகளைப் படைத்திருக்கின்ற மங்கையராம்அ
வர்களாற்பெறும்யின்பசாதகங்களுக்கடுத்த கிரிகைகளையும் அவைகளை
க்கருவியாகக்கொண்டு கிரீடிப்பதற்கடுத்த தன்மைகளையும் பெறவல்ல

# இந்திரபுரிப்படலம்.

ஆடவர்செய்கைமுதலியவற்றைச்சாத்திரோத்தமாக யினி உமக்குப்போ
திக்கின்றனன், அஃதென்னையெனில்-மக்களுக்கடுத்தசாதி இயர்க்கை-அ
ங்கம் குணம்-சத்துவம்-தேசவியல்பு-புணர்ச்சிப்பருவம்-யித்தன்மை
களைப்பார்த்தமாகத்தேர்ந்து கருத்தினிடத்தில் அமையச்செய்துகொண்
டுநடப்பதாம் மேற்குறித்தகாரணங்கள் மன்மதவேதத்திற் சொல்லும்
சிறந்தபொருள்களின்தொகையாகவிருக்கும் ஓராசாதிராசனே இதுகளி
ன்வரன்முறையையினிவரித்துக்காட்டுவோம்பராமுகமில்லாமற்கேட்ட
றிந்துகொள்ளக்கடவை மாந்தர்சாதிலட்சணமாவன பதுமினி-சித்தினி
சங்கினி அத்தினியென்னும் நாற்கூறுய்விளங்கும் அவற்றுள்ஆடவர் க
ணப்பிரிவுகளாவன-முயல்-ரிஷபம்-குதிரை-யெனப்படும்- இவற்றுள்
முதற்குறித்திருக்கின்றகணத்தின் குறியினளவையைக் குறிக்குமிடத்தில்
நான்குமுதல்ஆறங்குலமாம்-இரண்டாவதுகணத்துக்கு-எழுமுதல்ஒன்
பதங்குலம்-மூன்றாவதுகணத்துக்கு-பத்துமுதல் பன்னிரண் டங்குல
மெனச்சொல்லுகின்றது யினிமங்கையர்களுக்குரிய கணப்பிரிவுகளைக்கே
ம்பையாக-மான்-பெண்குதிரை-பெண்யானையெனப்படும் யிம்மூன்
றுமாபுக்குரியகுறியினுழ்ப் பிறமாணமும் மேற்படி ஆடவருக்குச்சொ
ல்லியிருக்கின்ற கணிதங்களைக்கொண்டிருக்கும் யிவற்றுள் ஆண்பெண்
குறியளவைப்பிரமாணம் சரிப்படச்சேர்ந்தின்பத்தைப்பெறுவதுயியர்க்
கைபுணர்ச்சியெனப்படும் பேதித்திருப்பவை மாறுபட்ட கலவியாகமு
டியும் ஏன்னியர்அங்சமாவன-தேவர்-மக்கள்-நாகர்-இயக்கர்-காந்தருவ
ர்-பசாசம்-அசுரர்-காழ்தவம்-எனப்படும்-மேற்குறித்திருக்கின்றஇனப்
பிறிவுகளை நிதானித்தறிந்து வாத-பித்த-சிலேத்துமமெனச் சொல்லநின்
றமும்மைத்திறங்களுக்குரியகுணம்-குறி,பருவங்களை யூகித்தறிந்துகொ
ண்டபின்பு கன்னியரைப்புணர்வது இசைக்கலவியாம் இஃதன்றியும்-உ
ருவம்-வண்ணம்-செயர்க்கை-நாள்முதலியவற்றை சீர்தூக்கிப்பாத்துக
ன்னியர்மரபுமுதல்குணவரையில் கவனித்துத்தெரிந்தணைவது சிறப்புக்
கூடலெனப்படும் வானத்தில் நின்று மேகங்கள் ஏககாலத்திற் பெய்யு
மாயினும் நிலங்களின் குணத்தின்படிக்கு மதுரம்-உவர்ப்பாகநீர்-
திருந்துமாறுபோலவே தேசங்கள்தோறு முள்ள மங்கையரது-நீதி-உ
ள்ளம்-செய்கையாதிய குணக்கிறமங்களைப்பகுத்தறிந் தணைவது தேச
வியர்க்கைப்புணர்ச்சியெனப்படும்யிவையன்றியும்பாலை-தருணை-பிறவு
டை-விருத்தையென்னும் பருவங்களுக்கடுத்த காலநியதிகளையும் சித்த
வியல்பையும் மகிட்சிகசிறமங்களையும் பிரித்தறிந்துகலத்தலே அங்கமெ
னப்படும் மேற்குறித்திருக்கின்ற முக்குணங்களையும் மும்மையையும்
நான்குசாதிகள் மற்றஎண்வகைச்சத்துவங்களையும் பெற்றிருக்கின்றகன்

லியர்பருவங்களை நிதானித்து காலத்தைத்தெரிந்து சேர்தலே காலபருவ
மெனப்படும் பட்சங்கள்தோறும் தினவாரியாய் மங்கையர் தேகத்திற்
பொருந்தியிருக்கின்ற அமுதநிலை யிழிந்துமேறியும் வரும் அதுநின்ற
நிலையைப்பிசகறநாடி யிருவர் தேகமும்மனமு மொன்றுபட்டுமகிழக்
கலத்தலேபுணர்ச்சியிற்றலைமையாகப்பேசப்படும் அன்புள்ளவர் இல்லா
தவர் குறியளவையொத்தவர் ஒவ்வாதவர் கூடாஒழுக்கமுடையவர் யித்த
கையகாரணங்களைப்பெற்றிருப்பவனாக் குணங்குறிகளினாற்பகுந்தறிந்
துகொண்டபின்பு மங்கையைத்தழுவி யின்பநலத்தைப்பெற்றனுபவி
த்தல் யிந்நூலைப்பூரணமாகக்கற்றறிந்த மேலையோருக்கழகு மாண்மை
யுமாம் ஓ ராசாதிராசனே யிதுபரியந்தம் ஆடவர்பெண்கள்யியர்க்கைகு
ணாதிசெயங்களைப் பகுத்ததாம் யினிசுரதநிலைகளினால் அவ்விருதிறவரு
ம்கலந்தின்புறுதலும் அதற்குநடத்தவேண்டும் முயற்சிகளாதியாகச்சொ
ல்லுவோம் அஃதாவன- ஆலிங்கனம்-சும்பனம்-நகக்குறி பற்குறி- குட்
டல்-தட்டல்-புள்ளொலி-கரணபேதமுதலிய செய்கைகளாம் அதுகளை
விரித்துக்காட்டுவோம் இருவகைக்குறிகளில்ஒன்றுக்கொன்று உயர்ந்து
ம்-சமமாகவும்-தாழ்ந்து மிருப்பது- உச்சம்-சமம்- நீச்ச மெனப்படு
ம்அவற்றினைக்குறித்தறிந்து ஐவகைக்காரணங்கள் அவற்றினுட்பேதமா
கியசதப்பிறகரணங்களினாலும் அதுகளுக்குரியபுறத்தொழில்களினாலும்
களிப்பித்துமங்கையைப் புணர்க்கலந்தின்புறுதலே மதனசாத்திரோத்த
ப்புணர்ச்சியாம் இஃதன்றியும் பெண்கள் புருடனை மேலிட்டுக்கலத்தல்
உபரிசுரதமெனப்படும் யிதுவுமல்லாமல் எண்வகை ஆலிங்கனபேதமு
ண்டுஅஃதாவனகற்பகத்தருவைச்சுற்றிப்படரும்வல்லிசாதக்கொடியைப்
போலவும்விருட்சத்தினிடத்திலேறுமாறுபோன்றும்எள்ளும் அரிசியுங்க
லந்துகாட்டுவதுக்கொப்பாகவும் பாலும்நீரும் பொருந்தி யிருப்பதை
நிகர்த்தும் துடைகளுடன் துடைகள்நெருங்குதலும் இருகுறிகள்சேர்
ந்தொன்றவும் கொங்கைகள்மார்பிலழுந்தவும் நெற்றியுடன்நெற்றிபொ
ருந்தவும் கரங்களினால்தேகங்களைகட்டித் தழுவிக்களித்தலாம் மேலு
ம்எண்வகைச்சும்பனங்களுண்டு அவற்றினைச்செய்யுந் தானங்களேதெனி
ல் நேத்திரஸ்தானம் கபோலஸ்தானம் கொங்கையினிடம் நெற்றியி
னிடம் கரங்களின்மூலம் நிதம்பஸ்தானம்· அதரஸ்தானம் உந்தியினிடம்
எனப்படும் யிவையன்றியும் நகக்குறியிடுமிடம்பதினொன்றுண்டு அது
களேதெனில்-கைமூலம்-மார்பு-தோள்-பிடர்-கழுத்து- விலாப்புறம-
கபோலம்- கொஙகை-அல்குல்- வாய்- துடை- யித்தலங்களாம் மே
லுந் தந்தக்குறி- ஐந்துண்டு- அவையாவன-மூடிகம்-அனுச்சூனகம்-
பிரவாளமணிபந்து-மணிவிந்துமாலை-சோலசற்விதம்- என்பனவாமிவ

சுருதிகள் சும்பனத்துக்குரியஸ்தானங்களில்மேல்அதரம்-நா-விழி-யிம்
மூன்றிடங்கள் நீங்கலாக மற்றையதலங்களில் அழுத்தவேண்டும் தாடன
வகையெட்டுண்டு அவையேதெனில் கரங்களில்விளங்கும் விரலினைக்குவி
த்துத்தட்டல்-குட்டல்-அங்கையினுற்றட்டல்- கரத்தினைப்பிடித்தமாக்
கிக்கொண்டு மெல்லமெல்லக்குத்தல் ஆள்காட்டிவிரலினுலூன்றல் அவ்
விரலினுலும் நடுவிரலினுலும் நெருக்கல் அவ்விருவிரல்களைமடக்கிப்ப
ற்றக்குறடுபோலப்பிடித்தல் ஆள்காட்டி விரலைக்கொண்டு சுழவலாம்
இத்தொழில்களைச்செய்யுந்தானங்களாவன-கொங்கைகளின் மத்தி-உச்சி
நெற்றி-கன்னம்-சகனம்-முதுகு-பிடர்-துடை-எனப்படும்- இஃதன்
றியும்மற்றனம் அறுவகைத்தாகும் அவையேதெனில் சரிகரம் காமாயி
தம்-காமவுஷிதம்-மதனங்குசம்-மன்மதபதாகை- தோத்திரம்- என்ப
னவாம் இதுவுமல்லாமல் புள்ளொலி எழுண்டு அவைகளாவன- மயில்-பு
று-அன்னம்-காடை-வண்டு-குயில்-கோழி-செம்போத்து-என்பனவா
ம்இவற்றுள்தலைவன் காதலியின்பிரகாணப்படிக்கு யிருதிரோகங்களு
மொன்றுபடக்கட்டியணையுங்காலத்திற் புணர்ச்சிக்களிப்பினுற்றலைவியி
னதுகண்டத்தினின்றெழும் ஒலியினைச் சீர்க்காரமெனச் சொல்லப்படு
ம்மேற்குறித்த காரணங்களனைத்துக்கும் ஆதாரசத்தியாகநின்று நடிப்
பிக்கவல்ல பஞ்சகரணங்களுண்டு அவையாவன உத்தானிகம் திரியக்கு
ஆசிதகம்-ஷிதகம்-ஆன்மிலமெனப்படும் இவைகளின் பேதங்களாவன
கிராமியம்-பவுத்திகம்-நாகபாசம்-நாகரீசம்-இந்திராணிகம்-கூனம்-இ
தமாயதம்-ஊர்த்தம்-சங்கிராணிகம்-மாண்டுகம்-பாரிசம்-பீடிதம்-கு
லம்-சுரும்பிதம்-பதுமபீடம்-பாற்சம்புடம்-வெட்டிதம்-விசும்பிதம்
உற்புல்லம்-பிண்டிதம்-கடிபீடிதம்-பிரோதகை- அனுயாதம்- பண்டத
ம்-கடகம்-அத்தம்-பதுமாசனம்-சமூர்த்தம்- நண்டகம்-அளிதம்-வே
ணுசாரிதம்-சமவேசனம்-ஆடவம்- உத்தானசம்புடம்-பரிவத்தம்-சங்
காடகம்-தேனு-மற்கடம் ஐம்பதம் சாருகர்ப்பாந்துகிலம்-பீனமாத்
திரம்-சூர்ப்பன்னம்- பீடிதொருகம்- பீதம்- பீடிகை- விக்கிரமம்-எ
சோழுக்கம்- இந்நாற்பத்தெட்டுமென்றியிலிராநின்ற பலகாரணங்களினு
ம்பரிமளமிகுந்தகூந்தலையுடைய மங்கையர்புளகிக்கு மாறுசுரத நூல்
வல்லோர்கள் கிரீடிக்குமுறைகளனைத்தும் சித்திரகரண மெனப்படும்ம
ங்கையரிடபாவமும் நிலையும் அவைகளின் திறங்களும் சேரும்பதக்கிரம
மேம்பாட்டையும் சீர்தூக்கிப்பார்த்தநுபவித்தறியவல்ல ஆடவராயினும்
கற்புடையமங்கையரன்றியிற்காமுகராகவிருக்கின்றவாலிபனாமயக்கும்
வேலையொத்த கூரியவிழிகளையுடைய பரத்தையர்காமக்கன்னியர் இத்த்
கையர்களைப்புணர்தலுங்கலவித்திறங்களைத் தேர்ந்தின்புற்றமகிழ்தலும்

மன்மதசாத்திரத்தைவாயறக்கற்றறிந்த மேலையோர்கள்கடறைகும்பித்
தஒப்பற்றநூலைவரன்முறைப்படிக்காராய்ந்து சோதனைகளினற்சங்கை
யறத்தெளிந்து தருணமங்கையரைத்தழுவவல்ல குணசம்பன்னர்பெறுதி
ன்றயின்பமுத்தியையொருவரால் கணித்துச்சொல்லவும்போதுமோவென்
றுமேற்குறித்ததொகைவகைவிரிவாக கொக்கோகசாத்திர முறைக்கிரம
ங்களனைத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல மனதிலுணர்ந்
துகொள்ளும்படிக்குபிரகஸ்பதிபகவான் போதித்தவுடன் தேவராசன்
அக்காரணகாரியங்களைப்பார்ந்தமாகத்தெரிந்தவனாய் மங்கையரைச் சரத
லீலைகளினாற் றழுவி யின்பநலத்தைப்பெற்றுக் களிக்கும் காமக்கலையி
ல்மனதைச்செலுத்தியவுடன் சிங்காதனத்தைவிட்டு நீக்கென் றெழுந்து
ஆசிரியன்பாதாரவிந்தங்களிற்பணிந்து எமதையனே குருசுவாமியாரே
அடியேனிடத்திற்கிருபையுற்றுத் தெருட்டிய மதனசாத்திரப்பிரகரண
ங்களனைத்தையும் வேதமொழிகளாகநிச்சயித்துக் கொண்டனன் யினிம
ற்றொருபொருளினிடத்திலும் யிச்சைவைத்து விரும்பேன் அளவுப
டாதயின்பநலத்தைக்கிடைத்து கிருதார்த்தனுவேனென்று மனவெழுச்சி
யுடன்குருவனை மீட்டும்வணங்கிச் செலவுபெற்றுக்கொண்டவனாய் பொ
ன்னுலகாதிபத்தியத்தைச் செங்கோன்மைமுறைப்படிக் கரசுசெலுத்திவ
ருவதாகத் தன்திருக்குமாரனாகிய சயந்தமகாராசனிடத் தொப்பித்துப்
போட்டு குளிர்ந்தசோடசகலைகளைவாய்ந்த சந்திரபிம்பத்தையொப்பவி
ளங்கும் முகாரவிந்தத்தையுடைய இந்திராணிவாசஞ்செய்யும் அந்தப்
புரத்தைச்சேர்ந்து நினைத்தற்கரியபோகங்களை அவளிடத்திற்பெற்றம
னங்களித்துதிருப்பாற்கடலினிடத் துதித்த அமுதத்தையி துபரியந்தம்
யினிதென்றிருந்தனன், யிக்காலத்தில் வியர்த்தமாகக் காணுகின்றதென
வெறுத்துச்சற்வாபரணபூஷிதையாகியதேவியினது சிவந்தயிதழூறலாகிய
அமுதமானதமிகவும் மதுரமாகவிருக்கின்றதெனக்களித்துப்பின்வெ
ள்ளியங்கிரியைப்போலத்தாவள்ளியமாகப் பருத்ததிரேகத்தைப்பெற்று
நவரத்தினமயமாகியபூண்களணிந்து கூர்மையா யிருக்கின்ற நாற்கோடு
களினுற் சத்திராதிகளையதம்பண்ணவல்ல வலிபெற்ற அயிராபதத்தைமற
ந்துமுத்தாரங்கள்மோகனமாலைகள்புரளும்இந்திராணியினதுபருத்தோ
ங்கியிருக்கும் கொங்கைகளாகிய களிற்றின் மீதுயிடைவிடாநயட்சத்து
டன்ஆலிங்கனஞ்செய்து திரேகபாரவசத்தனாய்க் களித்தும் தேவர்கள்மு
தலியசகலரையும்வெல்லத்தக்க வலிபெற்றிருந்த விருத்திராசூரன்மீதுசெ
ல்லடைக்குச்செல்றதறுவாயில் ஆரோகணித்திருந்த இந்திரபட்டத்துக்
குரியபதத்தையிகந்து அதனினுஞ்சிறந்ததாய்மின்னற்கொடியைப்போ
லத்தோற்றி மறைந்தசையும் மெல்லியயிடையையுடைய இந்திராணியி

ளாகஅல்குற்றேரினிடத்தின்யமுற்றுப் பிறியாவிடையாய்வாசஞ்செய்தி
ன்புற்றும் கருங்கடல்சூழ்ந்தபூமண்டலமானது நடுநடுங்கித் தத்தளிக்க
த்தக்கதாசமுழங்கும் இடியைவெறுத்துச்சத்துருக்கள் பிராணனைவாட்
டியலைக்கும் கணையைப்போல ஆகரணுந்தபரியந்தமோடிச்சேற்கெண்
டைக்கொப்பாசப் பிறழ்ந்திருக்கும் விழிகளைப்படைத்த தேவியினதுவ
ல்லிசாதக்கொடியினும் சிறந்தயிடையாகிய மின்னற்கொடியி னிடத்தி
ன்புற்றுக்கொண்டாடுவன் தவங்களிற்சிறந்த ததீசிமாகாரிஷியினதுமுது
குத்தண்டெலும்பினுற் செய்யப்பட்டுபற்வதங்கள் சிறகையரிந்துசத்து
ருக்களுக்குவயிரியாகவிருக்கின்ற வச்சிராயுதத்தைக்கரத்திற்கொள்ளவெ
ட்கி யெறிந்துபோட்டு கலாபமஞ்ஞையைப்பழித்த சாயலைவாய்ந்தபு
லோமிசையினது விழிகளாகிய வேற்படைக்காற்றுமற்சோர்ந்தும் பிரா
ணனைப்பரித்துக்குலவியும் காளமேகத்தினிடத்திற்காட்டும் இந்திரதனு
சைமறந்து இலக்குமியைப்போன்றசுந்தரவதியாகிய தேவியினதுபுருவ
மாகிய சிலைகளைமதித்துச்சகலவெற்றிகளையுந்தரவல்லதென்றெண்ணிப்பு
கழ்வன் தனக்குரியவாகனமாகிய மேகங்களைப்பழிகூறி யியர்க்கையாக
ப்பரிமளித்துக் கற்பகமலர்களைச்சூடியிருக்கும் இந்திராணியினது கரி
யகூந்தலென்னும்புயல்கலவிப்போரிற்சோர்ந்தலைவதைச்சேர்த்துக்கோ
தியாரிமுடித்துப் பூச்சொரிந்துக்களிப்பன் பஞ்சதாருக்களினிடத்திற் பட
ர்ந்து துவண்டசையும்வல்லிசாதக்கொடியைக்கோபித்துக் கனதைபொ
ருந்திய கனதனங்களைத்தாங்கப் பொருமல் வாடிவருந்தும் யிடையின்
வருத்தத்துக்குச்சகிக்கமாட்டாதவனுய்க்கிலேசித்துத் தழுவிமனச்செருக்
கைப்பெற்றும்பஞ்சணைமெத்தையினும்புஷ்பப்பாயலினும்அன்னத்தூ
விகளினுற்சோடித்தமெத்தைவிரித்திருக்கும் பொன்மஞ்சத்தின் மீதினு
ம்மதனநூல்விருத்திப்படிக்கு சும்பனம்-தாடனம்-புட்குரலொலி-நக
க்குறிஆலிங்கனமுதலிய லீலைகளைச்செய்துகளித்துவருங் காலத்திற்கலைந்
திறையும் ஆபரணங்களைத்திருத்தியும் பூந்துகிலையுடுத்தும் அளகத்தைமு
டித்தும் புதியகற்பகமலர்களைச்சாத்தியும் அடிக்கடியிதழூறலமுதையரு
ந்தியிளைப்பாறியும் கறுத்தோடியிருக்கும் விழிகளுக்கஞ்சன மெழுதியு
ம்அனிச்சமலரினுமெல்லியபாதங்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பினுற்சி
த்திரங்களெழுதியும் புதியபட்டாடைகளை யுடுத்தும் மாற்றியும் மலர்க
ளினுற்சோடித்தபோர்வையைச்சாத்தியும் யிவ்விதங்களாகத் தேவாசன்
சுந்தரவதியாகியஇந்திராணியினிடத்தில் முழுமனதைச் செலுத்தினவனுத
லாற்கிடைத்தற்கரியமோட்சப்பதம் சுலபமாகப் பெறவரினும் கைப்பா
கவெண்ணத்தக்ககருத்தைக்கொண்டு மதனநூலிலக்கணங்களை நாடிகாம
வின்பநலங்களையே சிறந்ததாக மதித்துப்பலநாட்கள் யிடைவிடாதுஇ

ந்திராணியைக்கலந்தனுபவித்திருந்தனன்அத்தருவாயில் மாறிமாறிமோ
றும்அலைகள்பெருத்த கடலினைப்போல ஆசைப்பெருக்கினுழ்ந் தணைந்
துகளிக்கும்யின்பநாலை இந்திரனுக்குப்போதித்து அவன்கொண்டிருந்
தமனஉறுதியைக்கலக்கி மாறுபடச்செய்து மங்கையர் புணர்ச்சியிற் கவ
லைபெறநாட்டியனுப்பிவிட்டு மனவெழுச்சியுடனிருக்கின்ற பிறகஸ்பதிய
கவான்அருகிலிருந்துபோதித்துவரும்நீதிகளின் உதவியைக்கொண்டுசய
ந்தமகாராசன் இந்திரபட்டத்துக்குரிய வயிரமுடியைச்சுமந்து செங்
கோலைத்தாங்கி முப்பத்துமுக்கோடிதேவர்க்கள் நாற்பத் தெண்ணுயிர
ம்ரிஷிகள் செருடகாந்தறுவர் சித்தவித்தியாதரர்முதலிய விண்ணுடர்இ
ந்திரசபையில்நெருங்கிப்போற்றி வாழ்த்தத்தக்கதாகக்கோடிசூரியரொ
ருமுனையிற்றோற்றுவதையொப்பவிளங்கிக்கொண்டிருக்கும் அரியணை
யில்வீற்றிருந்து திரிலோகாதி பத்தியத்துக்குரியஅரசாட்சியைச் செலுத்
தியும் சிவவிரதமாண்மியங்கள்முதலியசத்கருமங்களைச்செய்துவரும்பே
ற்றினைவாய்ந்ததேவர்களுக்குச் சூரபதுமனால் நேர்ந்தருக்கவருத்தங்க
ளுக்கு முதற்காரணங்களை ஆசிரியனை வினாவிப் யாந்தமாகத் தெரிந்து
கொண்டும்மற்றவிசாரணைகளிற் குறைவறநடாத்திவருந்தறுவாயில்ஆசி
ரியன்போதனைக்குட்பட்டு அந்தப்புரத்தைச் சேர்ந்து சுரதலீலைகளைச்
செய்துகளித்திருந்த தேவேந்திரன் ஒருபரியாயமாகப் போகத்தினிடத்
திற்றிருத்திபெற்றவனாய் அரிதில்அந்தப்புரத்தைக்கடந்து வெளிவந்து
திரிலோகச்சாம்பிராச்சியச்சின்னங்களைப் பல்லாயிரதேவர்க்கள்சூழ்ந்து
செய்துவரத்தக்கதாக வீரசிங்கத்தைப்போலக்கெம்பீரமாய் சித்திரவிசி
த்திரங்களாகச்சோடித்திருக்கின்ற மகாசபையினிடத்தில்வந்து குலக்கு
ருவைமும்முறைவலம்வந்து சேவித்துக் கரங்களைக்கூப்பி நின்றவனாய்
யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், ஆசிரியனே அடியேனிடத்திற்கி
ருபையுற்றுப்போதித்த பேரின்பத்துக்குரியகாரணங்களைத் திஷ்டாந்தி
ரமாகஅனுபவித்து மனமுந்திரோகமுமொன்றுபடப் பேரின்ப வாரியி
ற்றிளைத்துமகிழ்ந்தனன், யிதனையன்றியில் வேறொரு மோட்சசாதகமு
ண்டெனப்பேசுவது பேதமைப் பாலதன்றியில் விவேகசம்பன்னருக்க
டாதெனமன்மதசாத்திரத்தின்பெருமைகளையும் அதினாற்கிடைத்த யின்
பநலங்களையேமுக்கியமாகப் பேசிக்கொண்டு பழையபடிக்கு இந்திரச
பையில்விளங்கும் சிங்காதனத்தில்வீற்றிருந்து தேவர்க்கள் ரிஷிகளாதிய
ர்மங்களாசிர்வாதங்களைச்செய்துபோற்றி வரத்தக்கதாக அரசுசெலுத்தி
யிருந்தனன்.

பாலசுப்பிரமணியக்கடவுளினது கடாட்சவிட்சணியத்தினாலே தி
ரிலோகாதிபத்தியத்துக்குரிய பட்டாபிஷேகத்தைப் பெற்றுக்கொண்
டஇந்திரன்தெய்வலோகத்தில்விளங்கும் மகாசபையிற் சிரோரத்தினம
யமாகிய சிங்காதனத்தின்கண்வீற்றிருந்து அரசுருமைகளை நடாத்திவரு
கின்றகாலத்திற் கடல்சூழ்ந்தபூவட்டத்தை ஒற்றைக்குடைநிழலிற் படுத்
திரணபேரி செயபேரி வெற்றிச்சங்கமுழக்கபருத பருக்கிரமசாலிகளா
கிய ரதகெசதுரகபதாதி யென்னும் நால்வகைச்சேனைப் பெருக்கைப் ப
டைத்து சத்திராதிகளுக்குயிடியேற்றையொப்ப விருக்கின்ற முசுகுந்த
ச்சக்கிரவர்த்தியானவன் பரிமளமிகுந்தகடப்பமலர்மாலைபுானும் பன்னி
ருபுயாசலங்களையுடைய பாலசுப்பிரமணியதேவருக்குரிய சிறந்தவிரத
ங்களையனுஷ்டித்து மிகுந்தபத்தி வயிராக்கியங்களுடன் அதற்கடுத்த பூ
சனைவழிபாடுகளிற்குறைவின்றி சகலசம்பிரமங்களுடன் நடாத்திவருமு
ன்னிலையில் தன்னரசாட்சிக்குட்பட்ட நாடுநகரங்களில் வாசமாயிருக்கி
ன்றசகலரையும் அவ்விரதங்களைச்செய்துவரக் கட்டளையிட்டு அவர்களு
க்குவேண்டும்செல்வங்களையுந்தந்து அலைகளைமோதிச்சுருட்டும்சமுத்தி
ரத்தை ஆடையாகத்தரித்திருக்கும் பூமண்டலமுற்றினும் செங்கோல்மு
றையே ஆணை ஆக்கினைகளைச்செலுத்திஆண்டுவரும் பதக்கிரமங்களையும்
நீதியையும் மற்றுமுள்ளசத்கருமங்களையும் சூதபுராணிகர் நைமிசாரணி
யவாசிகளுக்குப்பாந்தமாகச் சொல்வதாயினர், முசுகுந்தச் சக்கிரவர்த்தி
யானவன் தன்னதிகாரத்தி லடங்கியிருக்கின்றபிராணிகளுக்கு யாதொரு
யிடையூறுகளும்நேராமல் தன்பிராணனைப்போலப் பாதுகாத்து ரட்சி
த்துவரும் நீதியினாலும் வேதப்பிராமணர் ஆகம விதிப்படிக்கு யாகாதி
கிரதுக்களை நடாத்திவரும் மேம்பாட்டினாலும் தன்கணவனைத் தெய்வ
மாகப்பாவித்துப்பூசித்துவரும்மங்கையர் கற்புத்தன்மையினாலும்மாத
ந்தோறும் மும்மாரிகுறைவறப்பெய்கின்றதால் குடிவளம் வயல்வளம்
நீர்வளமிகுந்துச் சகலசம்பத்துகளும்பெருத்து பயிர்தழைத்தோங்கிக்
குவிக்கின்ற பண்டங்களில் ஆறிலொரு கடமையைக்கொண்டு அவற்றி
னால்-நந்தவனங்கள் -சோலைகள் -குளங்கள்- தடாகங்கள்- தண்ணீர்பந்
தல்-அன்னசாலைகள் - ஆதுலருக்கிருப்பிடமுதலிய உபசாரங்களைச்செ
ய்வித்துப் பலதேவாலயங்களைக்கட்டிவைத்து லோகநாயகனாகிய சிவக்
கொழுந்தைத்தாபித்து அவற்றிற்குவேண்டும்உபகரணங்களைவரன்முறை
யேநிரப்பி நித்தியக்கட்டளைப் பஞ்சபர்வம் பிற்மோச்சவ காலங்களில்
தேவர்களும் நாணும்படிக்குச்சகலவுபசாரங்களுடன் முடிப்பித்துது
ஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனங்களைச்செய்து தருமமானது நான்குபா
தங்களினும்நடக்கத்தக்கதாகச் செங்கோன்மைப்படிக்கு அரசுருமை

னைநடாத்தி மனவெழுச்சியுட னிருக்கின்ற நாட்களி லொருதினம் மாட
மாளிகை கூடகோபுரங்களாகிய சிறப்புகளைக்கொண்டு குபேரபதத்தி
னும் சிறந்திருக்கும் பட்டணத்தைக் கடந்து ரதாரூடனாய் மந்திரிபிர
தானிகள் சேனைத்தலைவர் முதலானவர்கள் சூழ்ந்துபோற்ற வெற்றியாரா
கியசேனைவெள்ளமானது ஆரவாரித்துத்தொடரவும் பதினெண்வாத்தியங்
களும்திசைகளதிரத்தக்கதாகத் தாம்தாமெனமுழங்கவும் மற்றாசஜால
க்கத்துடன் வலத்திற்சென்று தவச்சிரேஷ்டராகிய வசிஷ்டர் வாசஞ்செ
ய்திருக்கும்பர்ணசாலையைச்சேர்ந்து தேரைவிட்டிறங்கி மிகுந்தபயபத்
திவிசுவாசங்களுடன் மும்முறைவலம்வந்து பணிந்தெழுந்து கரங்களை
க்கூப்பிக்கொண்டு போற்றி யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், ஓத
போநிதியே கேட்டருள்க தேவதேவோத்தமனாகிய கந்தசுவாமியாருக்
குரிய விரதமான்மியங்களனைத்தையும் முறைப்படிக்கு அடியேனிடத்தி
ற்கிருபையுற்றுப் போதிக்கவேண்டுமென்று பலவிதங்களில் வேண்டுகி
ன்றமுசுகுந்தச்சக்கிரவர்த்தியினது சோதிக்கையைக்கேட்டமாத்திரத்தில்
உளமுந்திரோகமும்பூரித்து மயிர்கிளர்க்க விழிகளில் ஆனந்தவாரியைப்
பெருக்கி அரசனைத்தெற்பாசனத்திலிருக்கச்செய்து மங்களாசீர்வாதங்க
ளைச்செய்து ராசாதிராசனேஉன்மனோபீஷ்டப்படிக்குச் சரவணபவனை
ப்பூசித்து வழிபடும்விரதங்களனைத்தையும் சாங்கோபாங்கமாகப்போதி
க்கின்றனம், ஒருமைப்பட்டமனதுடன் பத்தியாய்க் கேழ்க்கக்கடவை
யென்றருளிச்செய்வதாயினர், அதிகமேம்பாட்டையுடைய வாரங்களே
ழினுஞ்சிறந்தோங்கியிருக்கும் சுக்கிரவாரத்திற் பொன்னுலகத்தைத்தி
ருத்தி இந்திரனுக்குப்பட்டாபிஷேகஞ் செய்தருளிய பாலசுப்பிரமணிய
தேவருக்குச்செய்யவல்ல விரதமொன்றுண்டு அதனை ஆகமமுறைப்படி
க்குவழுவின்றிமுடித்தபுண்ணியவான்கள் மனோபீஷ்டங்களைக்கந்தசுவா
மியார்தந்தருளி இம்மையில் அனுபவிக்கத் தக்கபோகபோக்கியங்களைப்
பெறச்செய்து கற்புக்கரசியாகியபத்தினியையும் சுபுத்திரர்முதலியவளங்
களனைத்தினையும்கடாட்சித்து மறுமையில் மோட்சசாம்பிராச்சியத்தை
யும்பெறும்வாறுச்செய்வர், அதற்குத்திஷ்டாந்திரமாக முன்னோர்கள்செ
ய்திருக்கின்றசரித்திரங்களைச் சொல்லக்கேழ்ப்பையாக பூர்வத்திற்சூரிய
ன்மரபிற்றோன்றி யிந்தபூமண்டலத்தைஒருகுடைநிழலிற் பரிபாலனஞ்
செய்துவந்த பகீரதமகாராசனைப்பகைத்து நிகரற்றபுசபெலபராக்கிரம
சாலியாகிய கோரனென்னும்அவுணராசன் பலவத்தரமாய் அவன்ராச்சி
யமுற்றினும் அபகரித்துக்கொண்ட முன்னிலையிற் பதியையும் செல்வவ
ளங்களையுமிழந்து தானும் மனைவியையும் பிள்ளைகளையும் அழைத்துக்
கொண்டு கானகத்திலோடி அன்னபானாதிகள்கிடையாமல் அலைந்துதிரிந்

துகடையில் புகலொன்றுந் தவச்சிரேஷ்டர் பிரானைதெரிசித்துப் பயபக்
திவிசுவாசத்துடன்பாதாரவிந்தங்களிற் றீர்க்கதெண்டன் செய்து கரங்
களைக்கூப்பிக்கொண்டு பலவாகப்புகழ்ந்துபோற்றித் தனக்குச் சம்பவி
த்திருக்கின்ற குறைபாடுகளைப்பாந்தமாக விண்ணப்பஞ்செய்து சுவாமி
கள் இதற்கொருமார்க்கத்தைக்காட்டி யாளக்கடவீரெனப் பரிபவப்பட்டு
வேண்டுமுன்னிலையில் பாற்கவனென்னும் ஆசிரியனானவன் அரசன்மு
றைகளைத்திருச்செவிகளினேற்று மனமிரங்கியிதனைப்போதிப்பதாயினர்
ராசாதிராசனேபயப்படவேண்டாம் வெற்றிவேலாயுத பாணியாகிய கந்
தசுவாமியாருக்குப் பிரியமாகவிருக்கின்ற சுக்கிரவாரவிரதத்தைச் சாத்தி
ரோத்தமாய்ப்பத்திவயிராக்கியத்துடன் மூன்றுவருஷகாலம்செய்துமுடி
ப்பையாகில் உன்வளங்களைப்பறித்துக்கொண்டு அலைத்துத்துரத்திய மூ
ர்க்கனாகிய அவுணராசன் மாண்டுபோவதற்கையமில்லை பின்பு பழையப
டிக்கு பூமண்டலமுழுமையும்பரிபாலனஞ்செய்து சகலசெல்வங்களையு
ம்மென்மேலும் அனுபவித்துச்சவுக்கியத்திலிருப்பையென்று அனுக்கி
ரகஞ்செய்தவாக்கியங்களைச் செவிகளுக்கமுததாரையைப்போலக்கேட்
டுமனமுந்திரேகமுங்குளிர்ந்தவனாய் அடியேனிஷ்டதெய்வத்தைப்போ
லவெழுந்தருளியிருக்கின்ற தவச்சிரேஷ்டரே நல்லமார்க்கத்தைக் காட்டினீ
ர்கட்டளையின்படிக்குச் செய்யக்கடவனெனச்சம்மதித்து அவனைவேண்
டிப்புரோகிதனாகவைத்துக்கொண்டு அடுத்தவியாழத்தினம் பிராதகாலத்
தெழுந்து சுத்தோதகத்தில்முழுகிக் காலைக்கடன்களை முடித்துக்கொண்
டு தானுந்தேவியுமாய் ஒருபோது பகற்காலத்திற்கிடைத்த உண்டியையு
ண்டுசத்காலட்சேபங்களைச்செய்து போதுபோனபின்பு உறக்கத்தைநீக்
கிப்பாலசுப்பிரமணியதேவனைத்தியானித்து அவருக்குரிய சகஸ்திர நாம
ங்களையோதியோதியிரவைக்கழித்து மறுதினம் சுக்கிரவாரம் வெடியற்
காலத்தெழுந்து முற்படிக்கு நித்திய கருமங்களை முடித்துக்கொண்ட
வனாய் தெற்பைகளைத்தேடிக்கொய்துவந்து சேர்த்தபாயலினிடத்திற்சுப்
பிரமணியக்கடவுளின்து கோலத்தைத்தாபித்து ஆகமவிதிப்படிக்குத்திரு
மஞ்சனமாட்டி மலராடையைச்சாத்தி புனுகு சவ்வாது கஸ்தூரியினாற்
செய்தகலவைச்சாந்தைப்பூசிக் கனிவகைகளைப்படைத்து தூபதீபங்களை
ச்சுழற்றி மற்றசோடசஉபசாரங்களையும் கிரமமாகச் செய்துமுடித்தபி
ன்பு உபவாசமாயிருந்து கந்தன் சரித்திரங்களைக் கேழ்விப்பட்டு யிரவு
முற்றும் சாகாரமாயிருந்து மறுநாள்உதையகாலத்தில் நீரிற்படிந்து கந்
தனைப்போற்றிவணங்கிபின்பு பாரணைசெய்துஅப்பகல்விழிகளை மூடா
மல்கந்தனைவழிபட்டும் இவ்விதமாக ஆசிரியன்பணித்தபடிக்கு மூவரு
டமாயில்விரதபங்கமில்லாமல் நடாத்தி முற்றிய காலத்தில் சண்முகப்

பெருமாள் அவன் பூசனைக்கிரமங்களுக்குமெச்சி கிருபாநோக்கத்தைப்
பாலித்தமாத்திரத்தில் திருக்கரத்திற்கோடி சூரியப் பிரகாசமாகச்சொலி
த்துக்கொண்டிருந்த வெற்றிவேலாயுதமானது சரேலென்றெழுந்து அதி
கவொளியைக்காட்டிச் சூரியப்பிரகாசத்தைமாற்றி மனோவேகத்தினுங்கடி
கிவந்து கொடியபாதகனாகியபகைவன்மார்பைப்பிளந்துஉயிரையுண்டுநி
லத்திற்கிடத்தி கந்தலிடத்திற்சேர்ந்தது யிச்செய்தியைப் பரோதன்தெரிந்
தவுடன் வேலாயுதத்தைப்போற்றிச் சரவணபவனைத் தியானித்துப் பல
தரம்நிலத்தில்விழுந்துசேவித்து அவன்குணாதிசெயங்களைக் கொண்டா
டினவனாய்ப் புரோகிதனாகவிருந்தபார்க்கவன் திருவடிகளில்வணங்கிசுவா
மிகளே தேவரீர்கிருபாகடாட்சத்தினால் சகல துன்பங்களையும்போக்கிப்
பழையவாழ்வைக்கிடைக்கப்பெற்றனனென்று பற்பலவுபசாரங்களைப்
பேசி அவர் ஆசிகளையும்விடையையும்பெற்றுத் தன்பட்டணத்தைச்சேர்
ந்து எதாப்பிரகாரம்அரசுருமைகளைச்செய்து களித்திருந்தபின்பு அந்தி
யத்திற்கிடைத்தற்கரியசாயுச்சியப்பதவிக்குப் பாத்திரனாய்ச்சுகாதிதச்செ
ல்வத்தையனுபவித்திருந்தனன், ராசாதிராசனேகந்தசுவாமிக்குகந்தவிரத
மின்னமொன்றுண்டு அதனையும் சொல்லக்கேழ்ப்பையாக மகாவிஷ்ணு
வினதுஉந்திக்கமலத்திலுதித்திருக்கின்றபிரமபுத்திரனாகிய நாரதரிஷியா
னவர் சிறந்தவிரதங்களைச்செய்து சத்தரிஷிகளில் முதன்மையாகப்புகழ
த்தக்கபேற்றையும் மேம்பாட்டையுங் கிடைக்கவெண்ணி வேதாகமசா
த்திரங்களைசம்பூரணமாக ஓதியுணர்ந்தஅவ்விருடியானவர் பார்பதியார்
பிறதமகுமாரனாகியவிநாயகமூர்த்தியைத் திருமஞ்சனமுதலிய சோடசஉ
பசாரங்களினால் ஆராதித்து அத்தேவனைத்தெரிசிக்கப்பெற்றவனாய்ப்பா
தாரவிந்தங்களிற்சிரமூதேற்றி கந்தனே சகலராலும் புகழவிருக்கின்ற
சத்தரிஷிகளில்முதன்மைப்பேற்றைக்கிடைத்துவாழத்தக்க சிறப்பைத்த
ரவல்ல விரதமொன்றினை அடியேனுக்குப் போதிக்க வேண்டுமென்றுப
லவாகப்போற்றுதல்செய்வதைக் கந்தன்கேட்டருளிக் கிருபையாகப்பா
த்துஉன்மனோபீஷ்டப்படிக்குக் கிடைக்கச்செய்யத்தக்க நோன்பிருக்
கின்றது அஃதென்னையெனில் சண்முகப்பெருமானுக்கு விருப்பமாகி
யகார்த்திகைமாதத்தில்வரும் கிர்த்திகை விரதத்தையனுசரித்து ஆகமவிதி
ப்படிக்குப் பன்னிருவருடம்நிடசித்தனாய் முடிப்பையாகில் உன்னெ
ண்ணங்கைகூடுமென் றனுக்கிறகித்ததருவாயில் கந்தனேகட்டளையின்ப
டிக்குச் செய்யக்கடவனெனப்பணிந்து விடைபெற்று நாரதரிஷியான
வர்பூமண்டலவெல்லையில்வந்து ஒரு சிறந்ததலத்தைச்சேர்ந்து பரணியி
னன்றுபிர்ந்தகாலத்தெழுந்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டுப
ரிசுத்தனாய் ஒருபோதுண்டு சிவகுமாரன்கதைகளைப்பாராயணஞ்செய்து

# ௫௭௯ முசுகுந்தன்கந்தவிரதப்படலம்.

அதிகாலமெழுந்து வெடிந்த கிர்த்திகைநாள்உதயத்தில் பவித்திரமாகிய
தெண்ணீரில்முழுகி வெள்ளாடையையுடுத்து சித்தசங்கற்பத்தைதக்கவனி
த்து வெற்றிவேலாயுதமூர்த்தியினது பூசனைவழிபாடுகளைச் செய்யத்தொட
ங்கு ஐம்புலவிடையங்களையடக்கி ஆசிரியன்திருவடிகளை மனப்பூர்வக
மாகச்சிந்தித்து வந்தனுதிகளை முடித்தபின்பு தெர்ப்பாசனத்தில் பாலசுப்
பிறமணியதேவர் வடிவினை ஸ்தாபித்து சங்காசலத்தினால் திருமஞ்சனமா
ட்டிபட்டாடையையுடுத்து பரிமளமிகுந்ததிவ்வியபுஷ்பமாலைகளைச் சூடி
சந்தனக்கலவையைப்பூசி தூபதீபநைவேத்தியமுதலிய சோடச உபசார
ங்களையும் கிறமப்படிக்குமுடித்தவராய் குமாரதேவர் திருவிளையாடல்
களடங்கியிருக்கும் புராணகாலட்சேபஞ்செய்துமனமுருகி உள்ளங்கை
செலத்தைப்பொசித்து யிவ்விதமாகப்பகற்போதைக் கழித்து யிரவுநே
ரந்தகாலத்தில் தருப்பையைப்பரப்பி அதனிடத்திருந்து புஷ்பக்கொம்
பையொத்தசாயலையுடைய மங்கையரைக் கனவிலும் நினையாமல்எட்டனைப்
போலமதித்துசிவகுமாரன்பாதாரவிந்தங்களை யிதயகமலத்திருத்தித்தி
யானித்து உறக்கமின்றிக்கழித்து அடுத்தரோகணிதினங்காலைப்புனலா
டிநியதிகளைச்செய்துகொண்டுகற்தனைப்பூசித்துதன்னுடைசதங்கையணிந்
திருக்கும்திருவடிகளில் வணங்கிப்போற்றி அக்காலத்திற்சேர்ந்திருக்கின்
றதவசிரேஷ்டர்களைக் கற்தவ்வியமாகப்பாவித்துச் சமயந்தியிலிருத்தி
ப்பாரணைசெய்து அப்பகல்உறங்கினால் ஒருகாரணமு மில்லாமல்வேத
பாராயணராகிய பிராமணோத்தமர் அன்பத்திருவனைக்கொன்ற மகாபா
தகம்நேருமாதலால் மிகுந்தபயத்துடன் சகலகலைகளினும் வல்லவனாகிய
நாரதரிஷியானவர் நிமையைக்கொட்டாமல் சாக்கிறதையாய்விழித்திரு
ந்து புராணங்களைவாசித்துப் புண்ணியபதமாகியகேழ்விகளைவினவியும்
இவ்விதமாகச்சூரியன் மேற்பாரிசத்தில் மறைகின்றபரியந்தம்காலத்தை
க்கழித்து சந்தியானுஷ்டானங்களை முடித்து பாலசுப்பிறமணிய தேவரு
க்குமற்றபூசைகளையும்நிரப்பினர், சவுனகாதிரிஷிகளே நாரதர் நடாத்தி
யபூசாவிதிகளின்கிறமங்களைச் சண்முகப்பெருமானே யறிவரல்லது ஒரு
வாற்புகழ்ந்துமுடிவதன்று மேற்குறித்தபடிக்குயாதொருகுறைபாடுக
ளுமில்லாமல் பன்னிரண்டுவருடவளவாயில்பத்திவயிராக்கியத்துடன்செ
ய்துவருமுன்னிலையில் சரவணபவன்காட்சிதந்துபரிபூரணகடாட்சத்தை
ப்பாலித்தவாறே சத்தரிஷிகளினும் முந்திப்பேசிக் கொண்டாடத் தக்க
மேலானபதத்தைப்பெற்று யிதுபரியந்தம் சகலாலும்பூசிக்க வாழுகி
ன்றனன், யிவையன்றியும் அந்தமகத்துவமுள்ள விரதத்தைச்சதுர்வேத
பண்டிதனாகவிருக்கின்ற பிராமணனொருவன் ஆகமவிதிப்படிக்குப்பூ
சனைவழிபாடுகளிற்சற்றுந் தாழ்வுநேராமல் வயிராக்கியங் கொண்டுபல

நாட்கள்முடித்துவருகின்றதறுவாயில் பாலசுப்பிரமணியர் கிருபாகடா
ட்சவீட்சண்ணியத்தினால் அப்பிறவியை யொழித்துச் சூரியன் மரபில்
மனுச்சக்கிரவர்த்தியாய் அவதரித்துக் கடல்சூழ்ந்த பூமண்டல முழுதும்
ஒருகுடைநிழலிலாளப்பெற்று சகலசவுக்கியங்களையும் அனுபவித்து து
ஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்து அரசருக்குரியநீதிகளையும்மற்ற
கிரமங்களையும் ஏற்பாடுபண்ணி தன்பெயரால் மனுவிதியான சாத்திர
மெனப்புகழ்ந்து சகலமதத்தினரும் அபேதமாயனுசரித்துநடந்துகொ
ள்ளநாட்டி அளவற்றகாலம்செங்கோன்முறையைநடாத்தியிருந்துகடை
யிற்கயிலையங்கிரியைக் காணியாகப்பெற்று சுசாதீதச்செல்வங்களை யனு
பவித்துவருகின்றனன், மற்றொருபிராமணோத்தமன் அந்தசிறந்தநோன்
பைசாத்திரோக்தமாகப் பலகாலஞ்செய்து சிவகுமாரன் திருவருளின்படி
க்குத்தன்மனதிற்சிந்தித்தவாறேதிரிசங்குமகாராசனாகத்தோற்றிச்சகலக
லைவல்லவனாய்ப்பகைவருக்குவயிரியாகவிருந்து புலியும்பசுவும்ஒருதடா
கத்தில்நீரருந்தும்படிக்குச் செங்கோன்மை முறைப்படிக்குஅரசாட்சி
யைச்செலுத்தி சொல்லுதற்கரிய போகபோக்கியங்களை யனுபவித்து சத்
தியபாஷைஅரிச்சந்திரனென எக்காலத்தினுங்கொண்டாடவல்ல கிர்த்திய
ரனாய் ஒப்பற்றபராக்கிரமசாலியாய் சிவகாருண்ணியத்தை முக்கியமாக
வகித்துவரும் மேம்பாட்டையுடைய பிள்ளையைப்பெற்று பூமண்டலத்
துக்குச்சக்கிரவர்த்தியாக மகுடாபிஷேகத்தைச்செய்துபோட்டு மோட்ச
வீட்டைக்கிடைத்துச் சவுக்கியமாகவிருக்கின்றனன், யிதுவுமல்லாமல்ம
ற்றொரு ராசனும் வேடனும் யிவ்விரதத்தைப்யாந்தமாகப் பலகாலம்
செய்துவந்தசிறப்பினால் சரவணபவன் அனுக்கிரகப்படிக்குஅவ்வுடல்க
ளையொழித்து புசபெலபராக்கிரம சாலிகளாகிய அந்திமான் சந்திமா
னென்னும்ராசகுமாரர்களாகச்செனித்துப் பிறமுகராயக்கடல்சூழ்ந்தபூ
மண்டலமுற்றினும்ஆக்கியாசக்கிறத்தைச்செலுத்தி துஷ்டநிக்கிரக சிஷ்
டபரிபாலனஞ்செய்து தருமசீலரெனப்பலராலும்புகழ வாழ்ந்திருந்த
னர், அவர்களுக்குமோட்சசாம்பிருச்சியங்கிடைத்ததென்பதைச் சொல்
லவும்வேண்டுமோ ராசாதிராசனே முற்குறித்தபடிக்கிக் கிர்த்திகை சேர்ந்
ததினத்தில் யிந்தமகிமையுள்ளநோன்பை பயபத்திவயிராக்கியங்களுட
ன்கிரமமாய்நடாத்தி யிம்மைமறுமைச் செல்வவளங்களையும் திரிலோக
ங்களினுமிராநின்ற பொருள்களை மனோபீஷ்டப்படிக்குப்பெற்று சவுக்
கியப்பட்டபுண்ணியசீலனாக் கணக்கிட்டுப் பிரமனாலும் சொல்லிமுடிவ
தோஇஃதன்றியும்ஒப்பற்றமற்றொரு விரதமிருக்கின்றது அதனையும்வா
ன்முறைப்படிக்குக்கேழ்ப்பையாக பூர்வத்தில்முப்பத்துமுக்கோடிதே
வர்க்களும் நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகளும் மற்றவிண்ணுடரும்டை

 முசுகுந்தன்கந்தவிரதப்படலம்.

வாறும்பின்னமுமிருக்கின்றயிடையூறுகளினாலும் தங்களுக்குச்சம்பவி
த்திருக்கின்ற துக்கவருத்தங்களை நிவாரணஞ்செய்துகொண்டு சலனமற்
றிருக்கும்படியாக நினைவுகொண்டவர்களாய்ச் சகலருஞ்சேர்ந்து மனோ
வதிப்பட்டணத்துக்குப்போய்த் தவச்சிரேஷ்டர்கூடியிருக்கும் சபையி
ல்நவரத்தினமயமாகியசிங்காதனத்தில்வீற்றிருந்து வார்த்தை யாடிக்கொ
ண்டிருந்தபிரமதேவனைத்தெரிசித்துத் திருவடிகளில் வணங்கிக் கரங்க
ளைக்கூப்பிநின்றுபலவிதங்களிற் போற்றியபின்பு தங்கள் மனக்குறைக
ளைமுறையிட்டவர்களாய் கர்த்தனேயிதற்கொரு நிவாரணத்தைப்போதித்
தாளவேண்டுமென்றிரந்ததறுவாயில் உந்திகமலவாசியாகியபிரமன் அவர்
களிடத்திற்பரிவாய் பயப்படா தீர்களெனக் கையமர்த்தி ஆதரித்துச்சற்று
நேரம்யோசித்து ஓதேவர்களேஉங்கள் சஞ்சலங்களைப்போக்கிச்சவுக்கி
யப்படச்செய்யவல்ல கந்தசஷ்டிவிரதமொன்றுண்டு அதனை நீங்களனைவ
ரும்பத்திபூர்வகமாகத்தொடங்கிமுடிப்பீராகில்நினைந்தசித்திகளனைத்தை
யுமடைந்துவாழ்வீர்களெனப்பேசி அதற்குரிய விதிகளையும்தெருட்டிச்
செலவுகொடுக்கப்பெற்றவர்களாய் வெளிவந்து ஒருபவித்திரமாகிய தல
த்தைச்சேர்ந்து பூசாவிதிகளுக்குவேண்டும்வஸ்துக்களை ஏராளமாகச்சேக
ரித்துக்கொண்டவுடன் அற்பசிமாத சுக்கிலபட்சத்திற் பிறதமை தொ
ட்டுசஷ்டிவரையில்கணிதப்பட்ட அறுதினங்களினும் கொடியபாதகனா
கியதாருகாசூரனையும் மாயையிற்சிறந்த கிரவுஞ்ச பர்வதத்தையும் ஒரு
முனையில் வெற்றிவேலினாற் பிளந்துவாட்டிய பாலசுப்பிரமணியக்கடவு
ளை ஆராதிக்கவெத்தனப்பட்டவர்களாய் முதற்றினந்தொட்டு பிருதகால
த்தெழுந்து கங்காஸ்தானஞ்செய்து பவித்திரமாகிய பட்டாடைகளையுடு
த்துமேற்போர்வைசாத்திச் சந்தியானுஷ்டானசெபதபங்கள்முதலிய நி
த்தியகருமங்களைமுடித்துக்கொண்டபின்பு பூரணகலசத்தை சுத்திசெய்
துகங்காசலத்தைநிரப்பி கந்தஅட்சதைகளைச்சேர்த்து மாவிலைக்கொத்
தைஅதனிடத்திற்பொருத்தி தருப்பையையவரன்முறைப்படிக்கு முடிந்
துசாத்தி வேதங்களையோதி தருப்பாசனத்தில்வைத்து மந்திரபூர்வகமா
கக்குமாரதேவனை அதனிடத்தாவாகனஞ்செய்து ஆகமவிதிப்படிக்குத்
திருமஞ்சன தூபதீபமுதலிய சோடசஉபசாரங்களினாற் பூசனைவழிபா
டுகளைபகற்போதிற்சோர்வுமிரவில் நித்திரையையும்போக்கி அறுகால
ங்களினுங்குறைவறநிறப்பிகற்கண்டுசேர்த்து தேன்தினைமாவினாற்சமை
த்தஉருண்டைபாற்சோறு அதிரசம் சுண்டல்முதலியபலகாரவகைகளையு
ம் மா பலா வாழை யாதிய கனிதங்களையும்கருப்பஞ்சாறு மற்றுமிரா
நின்றசிறந்தவஸ்துக்களைக்காலங்கள்தோறும் நிவேதித்து கற்பூரதாம்பூ
லமசந்தனத்தேய்வைபுஷ்பாரங்கள் மிகுதியாகச்சமர்ப்பித்து யவ்விதங்க

ளிற்றிருத்திசெய்தபின்புதேவதேவோத்தமனுகிய சரவணபவன் திருச்ச
ரித்திரங்களைக்கேழ்விப்பட்டு மனமகிழ்ந்து ஒருகைசெலமருந்திடபவா
சமாகவிருந்து யிவ்வாறுசஷ்டித்தினங்களைக்கழித்து ஏழாநாள் காலையி
லெழுந்து பரிசுத்தராய் முருகப்பெருமானுக்கு மனமகிழும்படிக்குப்
பூசைக்கிறமங்களிற் சற்றும்பிசகில்லாமற்செய்து முற்றியவுடன் நேர்ந்
தஅதிதிகளைப்பூசித்து அவர்களுடன்கலந்து பாரணையுண்டும் யிவ்விதங்
களாகவருஷேவருஷேநடாத்தி வருகின்றகாலத்திற் கந்தசுவாமியாருக்கு
மிகவும்உவப்பாயக்கடாட்சித்தப்படிக்கு அவுணர்வலிதிறப்பற்றிக்கொண்
டதங்கள்பதவிகளையும் மற்றசிறப்புக ளனைத்தையும்பெற்று யனவெழு
ச்சியுடன் யிதுபரியந்தம் அனுபவித்து வருகின்றனர், யிதுவு மல்லாமல்
நோன்புகளில்விசேஷமாகவிருக்கின்ற யிந்தவிரதத்தை மனப்பூர்வகமா
கவிதிப்படிக்குநிரப்பி கர்த்தன் கிருபானுக்கத்தைப்பெற்று யிம்மைமறு
மைச்செல்வவளங்களையனுபவித்து கடையில் மோட்சசாம்பிருச்சியத்
தைப்பெற்றவர்களையெண்ணி முடிவதன்று யிவ்விரதத்தைச்செய்யநினை
ந்தபுண்ணியவான்களும்மனேபீஷ்டங்களைக்குறைவின்றியனுபவித்தற்
கையமில்லையென்று கந்தவிரதமான்மியங்களைச் சாங்கோபாங்கமாகவ
சிஷ்டர்போதித்தசரித்திரங்களைமனமொருமித்துக்கேட்ட முசுகுந்தச்ச
க்கிறவர்த்தியானவர் இரோகமும்மனமும்பூரித்து விழிகளில் ஆனந்தவாரி
பெருக்கெடுத்தோட யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், எமதுகுல
க்குரவனே தேவரீர் அடியேனிடத்திற் பரிபூரணகடாட்சத்தினுல்நன்னெ
றிகளைத்தரவல்ல சிறந்தவிரதங்களையநுக்கிறகித்தீர் யிவற்றினைக்கேட்டுக்
கிருதார்த்தனுனேன் சுவாமிகள்நேமனப்படிக்கு மேற்குறித்தநோன்புக
ளைப்பக்குவமாகச்செய்யக்கடவனென்று ஆசிரியனை வணங்கிப்போற்றி
பலஆசிகளையும் விடையும் பெற்று ரதாரூடனுய் மந்திரி பிறதானிகள்
சதுரங்கச்சேனைகள்சூழ்ந்துவர வனத்தைக்கடந்து ஒப்புவமையற்றதன்
பட்டணத்தைச்சேர்ந்து செங்கோன்மைமுறையேமன்னுயிரைப்பாது
காத்துவிரதகாலம்நேர்ந்தபோது பாலசுப்பிறமணியர் நோன்புகளைத்து
டங்கி ஆகமவிதிப்படிக்குத்தகுந்த புரோகிதரையேர்ப்படுத்திக்கொண்
டு அறுதினங்களினும்பத்திபரவசத்தனுய் பூசாவிதிகளிற்குறைவில்லாமல்
முடித்துவேதப்பிராமணர் ஆதுலர் முதலானவர்களுக்குத்திரவியம் வஸ்
திராபரணங்கள் கறவற்பசுக்கள் விளைபுலங்கள் கன்னிகா தானமுதலிய
சோடசமகாதானங்களையும் வெறுக்கக்கொடுத்து சுற்றத்தினர் விருந்தா
ளிகளுடனுண்டு மனமகிழ்ந்துவருபவன்தன்குடைநிழலிற்பட்டதேசா
தேசங்களிலிருப்பவர்களனைவரும் யிந்தவிரதத்தைஅன்புடன்செய்துவ
ருவதாகக்கட்டளையிட்டு விருத்திசெய்வித்து வருகின்றநாள்களிற் றமக்



# ௫௮௰ முசுகுந்தன்கந்தவிர்தப்படலம்.

ருவிருத்துவமாகநடந்துக்கொள்பவனைத்தெரிந்தமாத்திரத்திற் சதுரங்
கச்சேனைகளுடன் போனபோன யிடங்களெங்களும் அவர்களை யடக்கி
வெற்றிக்கொடியைநாட்டி தன்னுணையாக்கினைகளைச் சமுத்திரஞ்சூழ்ந்த
பூமண்டலமுழுதினும்நடாத்தி அரசுசெய்துவருகின்ற காலத்தில் புசவெ
லபராக்கிரமசாலியாய் வீராதிவீரனுகவிருக்கின்ற வலாசூரனென்னும் அ
வுணராசன் கணக்கிறந்த ரதகசதுரகபதாதிகளைக்கூட்டிக்கொண்டுபோ
ய்பொன்னுலகத்தைவளைந்து முத்திக்கைபோட்டு அனர்த்தங்களைச் செய்
வதை இந்திரன்தெரிந்து அதிகவுக்கிரத்துடன் வடவானலத்தைப்போலச்
சீறிட்டுச்சன்னத்தனுய் வச்சிராயுதம் இந்திரதனுசு தேவப்படைகள் மு
தலிய ஆயுதங்களைப்பரித்து அயிராவதத்தின்மேல் ஆரோகணித்து தே
வசேனைகளைச்சேர்த்துக்கொண்டுபோயெதிர்த்துச் சிலபோது அகோரவு
யுத்தியங்களைச்செய்துவருகையில் அவுணவீரர்களைமிஞ்சி கொடிய பாண
ங்களினுலும் தண்டாயுதம், பிண்டிபாலம்-கப்பணம்-சக்கரம்-எறிவேல்
-சூலம்-கழுமுள்-முதலிய ஆயுதங்களைக்கொண்டும் அநாஅதப் படுத்து
முன்னிலையில் விண்ணவர்தாபரித்துநின்று போராடக்கூடாமையால்ப
லபங்கப்பட்டு திசைகெட்டோடியொளித்தனர், அத்தருவாயில் தேவரா
சன்மானமுஞ்சோயமும் மனதைவாட்டச் சற்பத்தைப்போலச்சீறி தனு
சைவளைத்து அதிகதீட்சணியமுள்ள பாணங்கள் தேவாஸ்திரங்களைக்கொ
ண்டுசாடிடம் வச்சிராயுதத்தினுல்சின்னபின்னப்படவாட்டியும் காலாந்த
களைப்போலதிரிகின்றதருவாயில் வெள்ளையானையும் அதிகதீரத்துடன்ய
ருத்ததிக்கையினுலும் கால்களினுலும் கூரியகோடுகளினுலும் மாய்க்கி
ன்றமுன்னிலையில் பகைவன்சேனுசமுத்திரம் அல்லோலகல்லோலப்பட்
டுபொன்மயமாகியதேர்கள்சிதைந்தும் நீலகிரிகளையொப்பப்பாரித்ததி
ரேகங்களையுடைய மதயானைகளுருண்டும் தத்தித்தாவும் வேகமுள்ள புர
விப்பர்திகள் பறந்தும் வீராவேசங்களுடன் சனியனைப்போலப்போ
ராடியிருந்த அவுணப்பெருக்குவறண்டும் யிப்பாடு படுமுன்னிலையில்
வலாசூரன் ஆக்கிறகித்துமண்டியெரிந்து நேரைத்தூரத்திவந்து திரிலோ
கச்சக்கிரேஸ்பானைவளைந்து தனுசைவளைத்துத்திசைகளதிரக்குணத்தொ
னிகாட்டி கொடியதீட்சணியமுள்ள பாணவிதங்களைச் சோனைப் பெய்
யலைப்போலப்பொழிந்து திகைக்கும்படிக்குப் பொருகின்றதால் அயி
ராவதம்திரேகமுற்றும்துளையுண்டு உதிரம் பெருக்கெடுத்தோட மதிமய
ங்கியேங்கவும்அதன்மீதிருந்த இந்திரன் அதிகாயப்பட்டுபடைகளனைத்
தையுமிழந்து தனியனுய்நிற்பவன் யினியென்செய்வோம் நம்முடன்வ
ந்தவர்களொருவரும் நில்லாமல் மறைந்தனர் எனக்கும்கைகால்களோய்
ந்துகளைமேலிடுகின்றதென்று பலபலவென்னி யெண்ணி வேறுகதிகா

னுதவனுய்த்திசைப்பவனூர்கூத் தெய்வகடாட்சத்தினு லொருநினைவுதோ
ன்றி சற்றுதயிரியங்கொண்டுபக்கத்தில் நிற்கின்ற தூதனெனுநவனைப்பா
த்துநீவாயுவேகத்தினுங்கடுகியோடி பூமண்டலத்தைப் பரிபாலனஞ்செ
ய்துவரும் முசுகுந்தச்சக்கிறவர்த்தியைக்கண்டு நான் பகைவன்கையி லக
ப்பட்டுக்கொண்டு வாடுகின்றஷேமங்களைத்தெரிவித்து யித்தருணத்தித்
றயைசெய்து சேனைகளுடன்யிவ்விடம்வந்து உதவிசெய்யவேண்டுமென்
றும்சற்றுதாழ்ப்பீராகில் தெய்வலோகமும் நானும்சத்துராதிவசப்பட்டு
வருந்தவரும் யிதனைச்செய்யாமற்செய்த உதவியாக யோசித்துத் துரித
மாய்வரும்படிக்குடன்படுத்திச் சீக்கிரமாய்அழைத்துவாக் கட்டளையிட்
டவுடன்வணங்கி காற்றினும்விரைந்து கடந்து மண்ணுலகத்தைச்சேர்ந்
துராசாதிராசனைத்தெரிசித்துப்பணிந்துபோற்றிவிண்ணுட்டிற்சம்பவித்
தகாரணங்களைச்சவிஸ்தாரமாகவிண்ணப்பஞ்செய்தவனுய் ஓசக்கிறவர்த்தி
தேவராசனுப துவரவுக்கெதிர்பார்த்திருக்கின்றனன் காலறணஞ்செய்யா
மல் யிந்தநிமிஷத்திற்பிறையாணப் படவேண்டுமெனப்பேசிய தூதன்
வார்த்தைகளைக்கேட்டமாத்திரத்தில் நல்லகாரியம் யிதோ வந்துவிட்டே
ன்யிச்சேதியைமுந்தி நீபோய் உன்னிறைவனுக்கறிக்கையிடக் கடவை
யென்று அனுப்பிவிட்டு பட்டத்தானையின்பேரில் பிறையாணபேரிகை
யையேற்றிப்பறைசாற்றிவித்த ஓசைசெவிகளிற்பட்டவுடன் நால்வகை
ச்சயின்னியங்களும் சர்வாயுதபாணிகளாய் ஆலகாலவிஷப்பெருக்கைப்
ப்போல வீராவேசங்களுடன் தங்கள்தலைவனைக் கலந்துவந்து கூடியவு
டன்சக்கிறவர்த்தியானவன் சொர்ணமயமாகிய ரதத்தில்ஆரோகணித்து ம
ணபேரி-செயபேரி-வெற்றிச்சங்கம்- ஆகுளி- நத்தாரி- எக்காளை- வீர
கெண்டைமுதலியபோர்ப்பறைகள் கணகணென்றுமுழங்கிவாத்தக்கநாக
நடுநாயகமாய்விளங்கி அதிவேகங்கொண்டுவிண்ணுட்டைநோக்கிப்போ
ய்ச்செயசாலியாய் சூரியசந்திரர்யிருந்தபூமண்டலமுள்ளபரியந்தம்கீர்த்திப்
பிறதாபத்தைநாட்டியிருக்கின்ற முசுகுந்தச்சக்கிறவர்த்தியானவர் கவலைப்
பட்டமனத்தனாய்ச் சத்துருகையிலகப்பட்டுக்கொண் டிருக்கின்ற இந்
திரனைக்கண்டுசேவித்து அவன் குறைபாடுகளை வினவி பயப்பட வேண்
டாமென்று பற்பலதயிரியங்களைச்சொல்லித்தேற்றினவனாய் அத்தருணத்
தில்நேர்ந்ததேவசேனைக்கதிபனாய் தன்னுடன்வந்தரதகசதுரகபதாதி
களையுங்கூட்டிக்கொண்டு மான்கூட்டங்கள்பேரில் சிங்கராசன் தாவுமா
றபோலக்கொடிய அவுணப்படைகளின்மீதுகவிந்து சேனைகள்வீராவே
சங்களுடன் அஸ்திரசஸ்திரங்களை அமோகமாகப்பொழிந்து பலதிசை
யினுஞ்சூழ்ந்து போராடவும் தாமும மந்தரத்தை யொப்பப் பாரித்தி
ருக்குமதனுசைவளைத்து அண்டமுமதிரும்படிக்குக் குணத்தொனிசெ

ய்துசங்கோபசங்கமாகிய கொடியயாணவருஷங்களைப் பெருக்கி அதா
அதப்படுத்துமுள்ளிலையில் செயசாலிகளாய்ப்போராடியிருந்த அவுண
ப்பாதகர் முனையழிந்து சிரங்களறுந்தும் மகுடம்பறந்தும்சமுத்திரம்
வாருவலையங்கள்கவிர்திருக்கும் புயங்கள்சரிந்தும் வலியகவசங்கள்மூடி
யவிசாலமாகிய மார்புகள்பிளந்தும் வயறுபீறுண்டு சர்ப்பங்களைப் போ
லக்குடல்களிறைபவும் வீரசெண்டாமணிகலிக்கும் கால்களொடிந்தும்
திரேகமுற்றிலும்சல்லடைக்கண்களாகத் துளையுண்டும் சின்னபின்னப்ப
டவெட்டுண்டும் தளர்த்தும் யிளைத்தும் இவ்விதங்களாக அவுணப்படை
கள்பாளவும் பற்வதாகிருதியாகச்சொடிகொடைகள் கொடுங்கைமுதலி
யஅலங்காரங்களைக் கொண்டிருந்ததேரணிகள் பொடிப்பொடியாயுதிர்
ந்தும் மதயானைகள்- துதிக்கை-மத்தகம்-கோடுகள்- பருத்த பாதங்கள்
வெட்டுண்டு களமெங்கணும்குவியவும் அலைகளைப்போலத்தாவும்குதிரை
வாய்ந்தபுரவிப்பர்திகள் பலபங்கப்பட்டுமாளவும் யிவ்விதமாக நால்வ
கைச்சேனைகளும் அதப்பட்டதவாயில் அலைகளைப் பெருக்கியெழுந்தர
த்தப்பிரவாகமானது பொன்னுலகமெங்கணும்பரந்து செக்கர் வானத்
தைப்போலக்காட்டச்செய்து மேவிட்டுயிர்த்தமழையைப்போலபூமண்
டலமுற்றிலும்பொழியத்தலைப்பட்டது, சவுனகாதிரிஷிகளே அக்காலத்
தில்முசுகுந்தச்சக்கிரவர்த்திசெய்த சாகசங்களை ஒருவாயினாற் சொல்லிமு
டிவதோ யிவ்விதமாகச்சிதைத்து அவுணக்கடலைவறளச்செய்த காலத்தில்
தேவேந்திரனுக்குமனவுச்சாகத்துடன் வீராவேசம்பிறந்து சக்கிறவர்த்தி
உதவியைக்கொண்டு வெள்ளியங்கிரியைப்போலக்காட்டும் பாரித்ததிரே
கத்தையுடைய அயிராபதத்தைத்தூண்டி வலாசுரனைச் சட்டைபண்ணும
லெதுத்துச் சிலபகல்அகோரமாகியசண்டைகளைச்செய்து பகைவனால்மி
கவும்வருந்தியபோதினும் அதிக்கிரமித்து தன்கரத்திற் பிடிபட்டிருக்கு
ம்ஒப்பற்றவச்சிராயுதத்தைஓங்கிப் பகைவன்மார்புக்குக் குறிகொண்டுவ
லிதிற்சடாவினன், அப்படையானது ஆலகாலத்தையொப்பச் சீறி பலம
னைமகளைக்காட்டி அதிவேகமாய்ப்போய்ச் சத்திராதி வயிரமலைச்சொப்
பாகிய மார்பிற்பாய்ந்துதடாரித்தருவி உதிரத்தைப்பெருக்கி உயிரையு
முண்டுவெளிப்பட்டு வானகெங்கையில்மூழ்கி தேவராசன்கரத்தில் நின்
றது, ஓ தவத்தரோ வலாசுரனைமிகவும்வருந்திக் கொன்ற காரணத்தினல்
அன்றுமுதல்இந்திரனுக்கு வலாரியென்னும் சிறப்புப்பெயர்பலராலும்
கொண்டாடும்படிக்கு விளங்குகின்றது யித்தகையசெயப்பிறதாபத்தைக்
கிடைத்தமனமகிட்சியுடனிருக்கின்ற தேவேந்திரன் சடிதில்வந்துமுசு
குந்தச்சக்கிறவர்த்தியை விசாலமாகிய மார்பிற்சேர்த்தணைத்து சிலமுகஸ்
துதிகளைப்பேசிக் கரத்தைப்பற்றி அழைத்துக்கொண்டு இந்திரபுரியட்ட

ணவிதிகளைக்கடந்த சிரோரத்தினமயமாய் சொலித்துக்கொண்டிருக்கு
ம்தன்னரமனையைச்சேர்ந்துசொர்ணமயமாய்ப் பாந்திருக்கும் சபாம
ண்டபத்தில்முழுமணிகளினால் சோதித்திருக்கின்ற சிங்காதனத்தில் வீற்
றிருந்துசக்கிறவர்த்தியைத் தன்னருகில்வைத்துக்கொண்டவனாய்மனவெ
ழுச்சியுடன் யிதனைச்சொல்வதாயினான், ஓராசாதிராசனே பலநாளாகஎன
க்குசென்மவயிரிகளாய்யிடைவிடாதலைத்திருந்தஅவுணர்பூண்டைவேற
க்களைந்து மனச்சஞ்சலங்களைமாற்றித்திரிலோகாதிபத்தியமாகியயிந்தஅ
ரசாட்சியைப்புதிதாகத்தந்ததுமன்றியில்சிறந்தபுகழும்வெற்றியும்பலரா
லும்மதிக்கவல்லமேம்பாட்டையுங்கிடைக்கச்செய்தஎன்பிராணபதமான
தோழனே உன்னையன்றியில் நெருங்கியசுற்றமும் உதவியும் சம்பத்துக
ளும்வேறொன் றுண்டோவென்று பற்பல உபசாரவார்த்தைகளைப்பேசி
யமுன்னிலையிற் சபையில்நெருங்கியிருந்த தேவர்க்கள் கர்ப்பமலர்களை
யிறைத்து அகண்டமண்டலாதீஸ்பரனே வாழிவாழியென் றேற்றெடுக்க
வும்ரிஷிக்கூட்டங்கள் அட்சதைகளையிறைத்து மங்களாசீர்வாதங்களைச்
செய்யவும் ரம்பை- யூர்வசி - திலோத்தமை யாதிய தேவகணிகையர்பர
தநாட்டியங்களைச்செய்யவும் யித்தகையவேடிக்கைகளைச் சிலநேரம் பார்
த்திருந்து சிங்காதனத்தைவிட்டிறங்கித்தோழனைக்கரலாகுகொண்டுமே
ருவோவென்றுரைப்படத்தக்க பொன்மாளிகையினிடத்திற் சேர்ந்துதே
வகங்கையைத்தருவித்துத்தாளஞ்செய்வித்து புதியபீதாம்பரத்தையுடுக்
கச்செய்து சிரோரத்தினங்களிட்டிழைத்திருக்கும் கிரீடம்-வாகுவலையம்
மகரகுண்டலம்-முத்துமாலை-மோகனமாலை-மதாணிப்பதக்கம்-வீரகெ
ண்டாமணியாதியபூஷணங்களை யணியச்செய்து திவ்விய சுகந்தங்களை
வீசும்சலவைச்சாந்தும் பஞ்சதாருக்களின் புதியமலர்மாலைகளைத்தன்கர
த்திலுற்சாத்திமுடிந்தவுடன்பொற்பீடத்திலிருக்கச்செய்துதுரிதமாய்த்
தானும்நீரில்முழுகிப்பரிசுத்தனாய்ச்சக்கிறவர்த்தியைக்கூட்டிக்கொண்டுபூ
சையறைக்குப்போய் ஒருபுறத்திலிருக்கச்செய்தபின்பு ஆதியில் மகாவி
ஷ்ணுஆராதித்துவைத்திருந்து தனக்கனுக்கிறகித்தஉமாபரமேஸ்பரரை
த்தேவகங்கையினாற் திருமஞ்சனமாட்டி பீதாம்பரத்தை யுடுத்து சிரோர
த்தினமயமாகியஆபரணாதிகளைப்பூட்டி ஸ்ரீகந்தக்கலவை புனுகுசவ்வா
துகற்பகமலர்மாலைகளினால் அலங்கரித்து தூபதீபநைவேத்திய முதலிய
சோடசஉபசாரங்களைச்செய்து கரங்களைக்கூப்பி எதிரில்நின்று வேதவா
க்கியங்களினால் துதித்துவருகின்ற தருவாயில் திருக்கயிலாயத்தில் திருத்
தேவியுடன்குமாரதேவர் நடுப்பிறதேசத்தில்விளங்கவீற்றிருக்குங்கோ
லமாய்முசுகுந்தச்சக்கிறவர்த்தியினது விழிகளுக்குக்காட்டத்தெரிசித்தவு
டன்பழைய அன்புபெருத்துத் திரேகங் குதுகுலித்து விழிகளிற்போத

# ௫௮௪ முசுகுந்தன்கந்தவிரதப்படலம்.

நீர்பெருக மனமுருகி அனந்தபரவசத்தனாய் யாதுந்தோற்றாம லிருந்து சற்றுநேரத்திற்றெளிந்தவனாய் சந்தோஷப்பெருக்கிலாழ்ந்து கூத்தாடியும் பன்முறைபணிந்தும் கர்த்தன்பெருமைகளை யெடுத்தேற்றியும்வயிரமுடி திருப்பாதங்களிற்படத் தீர்க்கதெண்டன் சமர்ப்பித்தும்என்புமுள்ளமும் குழைந்து குழைந்து துள்ளியும் பரமன்புகழ்த்திறங்களைப்பாடியும் சகத்திர திருநாமங்களை ஸ்மரித்தும் செயசெயபோற்றியெனக்கரங்களைக்கொட்டியும் சொல்லுதற்கரியபேரானந்தவெள்ளத்திலழுந்தியும்சிந்திப்பதொன்று வார்த்தையாடுவதொன்றாய் மொழிகுழறியும் உடல்முற்றினும் ரோமங்கள்சிலிர்த்தும் முனம் வெள்ளியங்கிரியினிடத்திற்றிருநேத்திரதாரியினது திருக்கோலத்தைச்சலியாமற்கண்டுகண்டுமனத்தின்கண்களிமிகுதியைக்கொண்டிருந்தபான்மானிடப்பிறவியிற் செனித்தகாரணத்தினால் மயங்கிமறந்தனனே யென்றும் யிடைவிடாமற் சிறந்தபொருளொன்றை முக்கியமாகப்போற்றிக்களிக்கவிருந்தவன் சோபித்து நித்திரையாயிற்பட்டுறங்கியதைப் போலப் பூர்வக்கியானந் தோற்றுமாற முசுமுகத்தைப்பெற்றிருந்தபோதினும் சற்கிருத்தியானவன் மயக்குற்று தேவாதிதேவனைப்பார்த்து யிவ்விதங்களிற்றுதிப்பதாயினன் பரப்பிர்மசொரூபராகவிளங்கும் கர்த்தனேபோற்றி திரிமூர்த்திகளே முதலியசகலருக்குமூலகாரணக் கடவுளாகவிருக்கின்ற பரமேபோற்றிலோகநாயகியாகியபராசத்தியை வாமபாகத்திற் படைத்து அச்சன்னதி மகிமையினாற்சராசரப்பிரபஞ்சங்களை விர்த்தியடையச்செய்துவரும் தயாநிதியேபோற்றி சுயஞ்சோதிமயமாகக்காட்டும்யிறைவனேபோற்றி காளகண்டமூர்த்தியேபோற்றி மகாவிஷ்ணுவினது கோலமாகிய ரிஷபவாகனத்திலேறிநடாத்தும் முதற்காரணக்கடவுளேபோற்றி யானெனதென்னும்மதாங்காரச்செருக்கிற்பட்டு தம்மைமதியாமற்றுடங்கிய தக்கன் மகத்தைபங்கப்படுத்திவைத்த தேவாதிதேவனேபோற்றி மகாவிஷ்ணு பிரமன்றேடிக்காண்பரியசோதியேபோற்றி அடியருக்கெளிவரும் தீனசரண்ணியனேபோற்றி எம்மையொத்த வழித்தொண்டர்களுக்கு நாதனாகவிருந்து எடுத்தாண்டுரட்சிக்கும் பத்தவற்சலனேபோற்றி களங்கரகிதமாகியதிங்களேபோற்றி மணிகளிற்சிறந்த சிரோரத்தினமேபோற்றிசிவபெருமானேபோற்றி அடியேனையொருபொருளாய் ஆளவிருக்கின்ற கர்த்தனேபோற்றி சோமசூரியாக்கினியைத் திரிநேத்திரங்களாகக் கொண்டிருக்கும்நாதனேபோற்றி காளிகராளி மாதங்கியென்னும் விஷப்பற்களைப்படைத்திருக்கின்ற நாகாபரணனேபோற்றி சென்ம சாபல்லிய மாக்கும் பெருமையையுடைய திருநீற்றைதிரேகமுற்றினு மணிந்திருக்கின்றஆதிதேவனேபோற்றி கன்னமதம் கபோலமதம் பீசமதமெனச்சொல்லதின்

றமும்மதங்களைப்பெருக்கி அண்டங்களதிரவீறிட்டுவந்த யானையைத்த
ள்ளி யதனையுரித்துப்போர்த்துபிராணிகளைக் கலங்காமலாண்ட கிருபாநி
தியேபோற்றி மகாபிறளயகாலத்திற் உருத்திரமூர்த்தியாகத்தோன்றி சர்
வசங்காரஞ்செய்து சவுக்கியத்தி விருத்திய தயாநிதியே போற்றி பரம்
பொருளேபோற்றிபிறப்பிறப் பிலியாய்ச்சலனமற்று எக்காலத்தும்விள
ங்கும்பெருமையினையுடையதாணுவேபோற்றி முதன்மையாகப் புகழ
நின்றபொருள்களனைத்திற்கும் மூலமாகக்காட்டும் ஆதிப்பொருளே
போற்றி எறும்புமுதல்யானையீறாகச்சொல்லும் எண்பத்துநான்குலட்ச
ம்சீவபேதங்களினிடத்தும்அந்தரான்மாவாகப்பொருந்திஆட்டியூட்டி
யுறக்கிவரும்லோகநாயகனேபோற்றி வேதாகமமுதலிய சாத்திரங்களி
ன்முடிவில்நின்று நிருத்தஞ்செய்யும் அண்ணலே போற்றி அடியேனை
யொருபொருளாகமதித்தாண்டு பூலோகத்திற்சக்கிரவர்த்தியாக நிறுத்திச்
சகலசெல்வ வளங்களையும் அனுபவிக்கத்தந்து பலராலும் புகழத்தக்க
மேம்பாட்டைகிடைக்கச்செய்ததயாநிதியேபோற்றிதேவரீர் திருவடியை
த்தெரிசிக்கக்காட்டி பழைய உணர்ச்சியைத்தந்து பாதுகாத்த நித்தனே
போற்றி யிவ்வுலகங்களில்வாசஞ்செய்யும் பிராணிகளில் எத்தகையராயி
னும்அவ்வவர்கள்வழிபடும் அந்தந்ததேவதைகளாகவிளங்கி அவர்களும
னோபீஷ்டங்களைகடாட்சித்தாளும் காரணவஸ்துவேபோற்றி மெய்ப்ப
த்தியினால்தேவரீரை ஆராதித்து தெரிசிக்கப்பெற்றபுண்ணியவான்களுக்கு
த்தேவபோகபோக்கியங்களையனுபவிக்கச்செய்து கடையில்மோட்சசா
ம்பிராச்சியத்தையுந்தயைசெய்தாளும் அடிகளேபோற்றி சிருஷ்டிகர்த்த
னாகவிருக்கின்ற பிரமதேவன் திதிதொழிலை நடாத்திவரும் மகாவிஷ்
ணுமுதலியதேவர்கள் தத்தமக்குக்கடாட்சித்திருக்கின்ற பதங்களை நீடூ
ழிகாலம் நிலைபெற்றுளத் தந்தாளவேண்டும் தற்பரமூர்த்தியே என்று
மனஉறுதியுடன்போற்றி வழிபடும்பொருட்டுவேதாகமங்களையுண்டுப
ண்ணிஅவற்றினை அன்புடன் பதக்கிரமமாய்ப்பாராயணஞ்செய்துவரும்
மேன்மைபெற்றவர்களுக்கு தேவப்பதங்களைத்தகுதியாக அனுக்கிரகஞ்
செய்துவரும் சர்விக்கியனேபோற்றி தேவரினங்களனைவருஞ் சூழ்ந்து
துதிக்க கல்லாலின் நீழலிற்குருமூர்த்தமாகவெழுந்தருளி வேதங்களைச்ச
னகண்டசவுனகாதிகள்நால்வருக்கும் ஞானயோகசாதனங்களைக்காட்டா
மற்கடாட்சித்தசோதியேபோற்றி முப்பத்தாறு தத்துவங்களுக்குமே
லாகவிளங்கிநடிக்கும்தற்பரமூர்த்தியேபோற்றிபோற்றி அடியேன்பிழை
களைப்பொறுத்தாளவேண்டுமென்று ஒருமைப்பட்ட மனதுடன் முசுகு
ந்தச்சக்கிரவர்த்தி எற்றெடுக்குந்தோத்திரங்களை எமதுகர்த்தன் திருச்செ
விகளினேற்றுமனமகிழ்ந்து பரிபூரணகடாட்சத்தைப்பாலித்தவராய் ரா

# ௫௮௬ முசுகுந்தன்கந்தவிர்தப்படலம்.

சாகிராசன்மீதுதிருநோக்கத்தைச்செலுத்தி தேவாசனுக்குத் தோற்றும
விதனை அனுக்கிறகஞ்செய்வதாயினர், ஒசக்கிறவற்றி உன் மெய்ப் பத்தி
மான்மியங்களுக்கு மகிழ்ந்தனமாதலாற் சக்கிறகாணுகிய மகாவிஷ்ணுப
லசாலம் அரியதவவிரதங்களைச்செய்துவந்தமுயற்சியினாற்கிடைத்துபத்தி
வயிராக்கியங்களுடன் ஆசமவிதியிற்சற்றுந்தாழ்வில்லாமல்மனவெழுச்
சியுடன் நம்மைபெருகாலம்ஆராதித்திருந்தவன் ஒருபோது சில யேது
லவயினால்தேவேந்திரனிடத்தில்ஒப்பித்துப்போயினன், யிவனும்நமது
மனதுக்குவப்பாகிய பூசனைவழிபாடுகளைச்செய்து பலநாட்களாக வைத்
திருக்கின்றனன், உன்னிடத்தில்நமக்குயிரக்கமுண்டானதால் நீ நம்மை
ப்பூலோகத்துக்குக்கொண்டுபோய் ஸ்தாபித்துப் பூசிக்கக் கடவையென்
றனுக்கிறகஞ்செய்யக்கேட்ட முசுகுந்தனுக்கு மனம்பூரித்து அதிசசந்
தோஷத்தைக்கிடைத்தவனாய் கர்த்தனே தேவரீர்திருவுளம்யிப்படிக்கிருக்
குமாகில் யினிஅடியேன்சகல வினைகளையும்போக்கிக் கிறுதார்த்தனாய்ப்
பிழைத்தேன்பிழைத்தேனென்று காங்களைக்கூப்பிக் கொண்டு கர்த்தனை
த்துதித்திருந்தனன், யிதன்மத்தியிற் தேவாரசன் சாத்திரோத்தமாய்ப்
பூசனைவழிபாடுகளைப்பூர்த்தியாகச் செய்தவனாய்முத்தீயையுமெழுப்பிஓம
விதிகளையும்வரன்முறைப்படிக்குமுடித்து கர்த்தனைப் புகழ்ந்துகொண்
டு அத்தலத்தைக்கடந்து மற்றொருசொர்னமயமாகிய சாலையைச்சேர்ந்
துகாமதேனுவைக்கொண்டு செயசாலியாகிய முசுகுந்தச்சக்கிறவற்திக்கு
அறுசுவையுண்டிவிதங்களைத்தேவாமுதத்துக்குமேலான திறத்திற்பெறச்
சமபந்தியில் வைத்துக்கொண்டு சாப்பிடச்செய்து அவருடன்வந்திரு
கின்றமந்திரிபிறதானிகள் சேனைத்தலைவர் நால்வகைச் சயின்னியங்களு
க்கும் அவ்வவர்கள்மனயிஷ்டப்படிக்குக் கச்சாயவகைகள் முதலாகியது
டன் விருந்திட்டானவுடன் அவர்களுக்குத்தக்க வெகுமதிகளையுங் கொ
டுத்துசந்தன தாம்பூலவகைகளினாற் திறுத்திசெய்து சக்கிறவற்தியையும்
மற்றொருசபாமண்டபத்தினிடத்தழைத்துப்போய் பொற்பீடத்திலிரு
த்திதிவ்வியபரிமளமிகுத்தகலவைச்சாந்துகளைப்பூசி கற்பக மலர்மாலைக
ளைச்சாத்தி கற்பூரதாம்பூலத்தையும் சிரோரத்தினமயமாகிய கிரீடம்வாகு
வலயமுதலிய பணிதிகளையும் பீதாம்பரவகைகளேமுதலிய விலையுபர்ந்த
வஸ்துக்களைதன்மனயிஷ்டப்படிக்குந்தந்து தானஅருமையாகத் தேடி
வைத்திருந்த தேவர்படைகளையும மந்திரபூர்வகமாக தத்தஞ்செய்து யி
விதமாச்சகலஉபசாரங்களையும் முடித்தகாலத்தில்தேவேந்திரனுக்குக்
கிடைத்திருக்கின்றசந்தோஷப்பெருக்கினால் சக்கிறவற்தியைத்தயையா
கப்பாத்து என்மனதுக்கினியதோழனே நமக்குச்சம்பவித்தஅபாயகா
லத்திற்செய்த உதவிக்குக்கைம்மாறுண்டோ ஆகிலும்உமக்கு என்னுலாக

வேண்டும் பிறையோசனமிருக்குமாகில் சங்கைப்படாமற் சேழ்க்கக்கட
வையிதோதாக்காத்திருக்கிறேனென்று இந்திரன்பேசி முடித்தமாத்திர
த்தில் நம்நினைந்திருக்கின்றபடிக்குப் பெற்றுக்கொள்வதற்கு யிதுநல்
லதருணமாகவிருக்குதென நினைந்து தேவராசனைக்குறித்து முசுகுந்தச்
சக்கிரவர்த்தியிதனைக்கேட்டுக்கொள்வதாயினன், பிரமன்விஷ்ணுமுதலிய
சகலராலுங் கண்டறியவொண்ணாதசுயஞ்சோதிப்படிவத்தனாய் சோமசூ
ரியாக்கினிகளைத் திரிநேத்திரங்களாகப் படைத்தவனாய்ச்செகமனைத்துக்கு
ம்மூலகாரணத்தலைமைபெற்றுமன்னுயிரைத்தந்தபராசத்தியைவாமபாக
த்தில்வைத்துபலநாடகங்களைக்காட்டிச்சுகாதீதவெல்லையில்நடிக்கும்நிற்
மலக்கடவுளாகவிருக்கின்ற நமதிறைவனைதேவர்க்கள்பூசித்துவரும் சிவ
பிரானைத்தயைசெய்து மெய்யன்புடன் கொடுப்பீராகில்மனவெழுச்சியு
டன்பூலோகத்துக்குக்கொண்டுபோய் என்பட்டணத்திற்றாபித்துசகலசி
றப்புகளுடன்பூசனை வழிபாடுகளைச்செய்து கிருதார்த்தனாய் யிம்மைமறு
மைச்செல்வங்களைஒருங்கெய்தப்பெற்றுவாழக்கடவன் யிப்பேற்றைய
ன்றியில்வேறொன்றைவிரும்பேனென்றுவிண்ணப்பஞ்செய்தகாரணங்
களைதேவேந்திரன்கேட்டவுடன்திடுக்கிட்டுமனம்வருந்திஒருவகையாகத்
தேற்றிக்கொண்டு என்னன்புள்ளசினேகிதனே யித்தேவன் வரலாற்றைச்
சொல்லக்கேழ்ப்பையாக பிரமனைஉந்திகமலத்திற்படைத்துஉலகங்களை
பரிபாலனஞ்செய்துவரும்மகாவிஷ்ணுவானவர் சிலதினங்களுக்குமுன்
னம்தமக்குபுத்திரசம்பத்தில்லாதகாரணத்தினால்அண்டாண்டபுவனசரா
சரங்களுக்கும்அம்மையப்பனாகவிருந்துநடிப்பிக்கும்சிவபிரான்பாதக
மலங்களையே தஞ்சமாகநினைந்து மிகவும்வருந்தி அளவற்றகாலம் தவ
ங்களைச்செய்துவருகின்ற தறுவாயில் அவர்பத்திமை வழிபாட்டுக்கிரங்கி
பரமேஸ்பரரானவர் கவுரியுடன் ரிஷபவாகனத்திலாரோகணித்து சணுதி
பதிகள்-குடை-கொடி வெண்சாமரை அருகு ஆலவட்டம்திருச்சின்ன
ம்பிள்ளாங்குழல்முதலிய பணிவிடைகளைச்செய்துவரத்தக்கதாகத்திருக்
கயிலையைக்கடந்து சகவாடம்பரங்களுடன் கண்ணனுக்கு காட்சிதந்த
காலத்தில் பூமியையுண்டகேசவன்திடுக்கிட்டெழுந்து பயபத்திவிசுவாச
ங்களுடனெதிர்கொண்டு போற்றி நிலத்தில்விழுந்து தீர்க்கதெண்டஞ்ச
மர்பித்து கரங்களைக்கூப்பித்துதித்து நிற்கின்றவிஷ்ணுவினிடத்திற் ப
ரிவாய் உமாபரமேஸ்பரர் கிருபாநோக்கத்தைப்பாலித்து நெடும்பகல்வ
ருந்திவிரதங்களைச்செய்து மிகவும்வாடினை அவற்றினை யங்கீகரித்தனம்
ஆதலாலஉனக்குவேண்டும்வரங்களைப் பெற்றுக்கொண்டு பதியைச்சேர்
த்துசவுக்கியமாயிருக்கக்கடவையெனத் திருவுளம் பற்றிய தறுவாயில்ம
காவிஷ்ணுவந்தித்து கர்த்தனே திரிமூர்த்திகளிலொருவனாகவிருக்கின்றசி

றப்பையும் அர்தமில்லாதஆயுளையும் சலனமற்றபிராணனையும் செல்வங்
களுக்காசியாகிய மகாலட்சுமியுடன்கலந்து சகலபோக போக்கியங்களை
யும்அனுபவித்துக்களித்துவாழுஞ் செல்வச்சம்பத்தையுந் தந்தாண்டீர்ச
மதிசூடவனே யித்தகையவளங்களைக் கிடைத்திருந்தபோதினும் தன்மர
பைவிளக்குஞ் சுபுத்திரரில்லாத குறைபாட்டினால் மனம்வருந்திக்கிலேச
த்திற்பட்டுவாடுகின்றனனுதலாற் செல்வங்களுக்கு முதன்மையாக விரு
க்கின்றஅப்பேற்றைக்கடாட்சித்து முற்றினும்மனவெழுச்சி பெற்றிரு
க்கத்தக்க வார்த்தைத் தந்தாளவேண்டுமென்று கோவர்தன கிரியைக் கு
டையாகத்தாங்கி கோவலர் பெண்டுபிள்ளைகளுடன் பசுக்கூட்டங்களைத்
தேவராசன் கட்டளையின்படிக்கு மேகங்கள்வருஷிக்குமகன்மாரியிற்ப
ட்டுவருந்தாமற்பாதுகாத்தகண்ணன் முறையிட்டுக்கொண்டமனுவைத்
திருச்செவிகளிலேற்று பிரக்கமுண்டாய்உன்கோரிக்கையின்படிக்குத்
தருவோமென்று ஆதாரணைசொல்லி வனப்பில் மிகுத்த சுந்தர வடிவும் தீ
ர்க்காயுசையும் கிடைத்திருக்கும் ஒருகுமாரனைப் பெற்றுக்களித்துவாழு
ம்படிக்குஅனுக்கிரகஞ்செய்தனமெனச் சகலதேவர்களுக்கும்மூலகார
ணனாகவிருக்கின்ற சிவபிரான் திருவாய்மலர்ந்த வாக்கியங்களைக்கேட்ட
மாத்திரத்தில்லட்சுமிகாந்தனுக்குத்தேகம்பூரித்துமயிர்சிலிர்த்துவிழிக
ளில்ஆனந்தவாரிபெருக்கெடுத்தோடத்தக்கதாக ஆனந்த பரவசத்தனாய்
மதிமயங்கிப் பிராரத்தவினையின்முயற்சியினால் சிவனுதனை மாத்திரம்ப
லவிதங்களிற்றுதித்து வணங்கி வாழ்த்துகின்றதறுவாயில் நேர்ந்தஅபா
யத்தை ரிஷிகளே கேழ்ட்பீராக மகாவிஷ்ணுவினது விவேகத்தை யென்
சொல்லுவேன் வாமபாகத்தில் மாகதநிறம்பெற்று பிரியா விடையாய்ப்
பொருந்திவிளங்குகின்றசெகன்மாதாவாகியபராபரையை நினையாமலு
ம்திருவடிகளிற்சேவியாமலும் தோத்திரங்களைச் சொல்லாமலும் பத்தி
சமவழிபாடுகளின்திறங்களை யெவ்வளவுங்காட்டாமல் சுத்தமாய்மறந்
துவிட்டனன், ரிஷிகளே முறையினால் தனக் கிளையவளென் றெண்ணிப்
பராமுகமாயிருந்தனனே மூலமும் நடுவும் யிறுதியுமில்லாத பரமனுக்
குநம்மைப்போலவே யிவளு மொருசத்தியாக விருப்பவளென்று அச
ட்டைசெய்தனனே மலையிறைவன்புத்திரியென்று பதிப்பிற்றனனே மா
யன்கருத்தின்னதெனத் தோற்றவில்லை முற்பவத்திற்செய்த வினைக்கீடா
ய்உமையவளிடத்திற்சற்றும் அன்பைச்செலுத்தாமல் மத்தனையப் பரம
னைவழிபட்டுநின்றனன், பராசத்தியையன்றியில் பரமனைத் தொழுது அ
வனொருவனுக்கடிமைப்படும் யித்தகைய சிறந்தபேற்றினை ஐம்புலன்க
ளையென்ற அவாவைபடக்கிப் பரிசுத்தமனதைக்கிடைத்து உடலழிய்வ
ரினும் திரசித்தனாய் மூலாதாரத்தில் விழிகளைச் செலுத்திச் சிவத்தைத்

கண்டுகளித்துஎமகிறைவனை யன்றியில்யிதரதெய்வங்களைக் கருத்திலும்
நினையாமல் அவனுக்கேவழிபாடுகளைச் செய்துவரும் குணசம்பன்னரா
ய்அக்காரணத்தைக்குறித்துப் பரமனருளியமூன்றாம்பாதத்தைக்கிடை
த்திருக்கின்றபிருங்கி மகாரிஷிக்கல்லது அண்டரண்டபுவன சராசரங்க
ளையும் யின்றுங்கன்னிகையாகவிளங்கும் எம்பெருமாட்டியைதரிசிக்கற்
றனைக்கண்டுகளிக்குந்திறம் மற்றொருவருக்குக்கிடைக்கவல்லதோ அக்
காலத்தில் யித்தயிகட்சியைத்தெரிந்த லோகநாயகியானவளுக்குச் சற்று
மனோங்கலத்து சக்கிரதாரூகியமகாவிஷ்ணுவை உருத்துப்பார்த்து யிக்கா
லத்தில்நம்மைஅவமதித்தகாரணத்தினால்எமகிறைவனிடத்தன்புள்ளவனு
யினும் அரியதவவிரதங்களைச்செய்தமுயற்சியினால் நீபெறவிருக்கின்றபு
த்திரன் அடியாள்பிராணநாயகன் அனல்விழித்தீயிற்பட்டு சாம்பலாய்ப்
பறந்துபோகக்கடவனென்று நினைத்தற்கரியகடினசாபத்தையிட்டு ஆதி
தேவனைப்பார்த்து யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினள். ஓ கற்சனே ஆ
திமூலமாகவிளங்கும் பரப்பிரமம் யானன்றிவேறில்லையென்றகங்கொ
ண்டிறுமாந்தபேதையாயும் உலகங்களிலிருக்கின்ற தீனாகியபிராணிக
ளைமாயவலையிற்படுத்தி யலைத்துத்திரியும் வஞ்சகனுக்கெதிரிஞ்ஞானவான்
களாய் நல்லுணர்ச்சியையும் சிவசாருண்ணியங்களையும் மெய்ப்பத்திமா
ன்மியங்களையுங்கிடைத்திருக்கின்ற புண்ணிய சிலருக்கன்றியில் காட்சித
ராததேவரீ ரெழுந்தருளுவதழகோ உடலினிடத்திற் பொருந்தி யிருக்கி
ன்றஉயிரில் அந்தரான்மாவாகக்காட்டி நடிப்பிக்கும் பரம்பொருளே
வாரும்வாருமென்றுசற்றெனைப் பார்பதியம்மன் பலவத்காரமாய் அழை
த்துப்போவதை மகாவிஷ்ணுகண்டவுடன் திடுக்கிட்டு பராபரையாடிய
வாக்கியங்களையெண்ணியெண்ணி மனம்நடுங்கித்திகைத்து யாதுந்தோ
ற்றுமற்றுமாறிச்சரீரமுற்றினும்வியர்த்துத் துலைதூரத்திலிருந்து விலை
யுயர்ந்தபலசரக்குகளை யேற்றிக்கொண்டுவந்தகப்பலானது கடற்கரை
யைச்சேருகின்றதருவாயில்தற்செயலாய்க்கவிழ்ந்து அதிற்பட்டவளங்கள
னைத்தையுமிழந்து மதிமயங்கிச்சோரும்வணிகனைப்போலமிகவும்வருந்
தி அம்மையைவழிபடாதகாரணத்தினால்யித்தகையயிடையூறுநேர்ந்ததெ
னத்தெளிந்தவனாய்த் தட்சிணத்தில் தம்மையனுகிய சிவபிரானையும் லோ
கநாயகியையும் குமாரசுவாமியையும் பாவனைஉருப்படச்செய்து சொற்
ணப்பீடத்திலிருத்தி நீராடிப்பரிசுத்தனாய் ஆகம விதிப்படிக்குத் திரும
ஞ்சனதூபதீபநைவேத்தியமுதலியபூசாதிரவியங்களைக்கொண்டு அருச்ச
னைஆராதனைகளைப்பத்திவயிராக்கியத்துடன் முடித்து சோடசஉபசாரங்
களையும் வரன்முறையேநடாத்தி வேதவாக்கியங்களினால் அந்தமுத்தே
வதைகளினதுபெருமைகளை வாயாரவாழ்த்தித்தீர்க்கதெண்டன்சமர்ப்பித்

தவனைப் அன்றுமுதொட்டு மெய்ப்பத்தியுடன்மனவுறுதிகொண்டு வருந்தி
யிவ்விதமாகப்பல்லாயிரகோடிவருஷிகாலம் பணிவிடைகளிற்குறைபாடி
ல்லாமல் விரதத்தைச்செய்துவருகின்றதலுவாயில் விஷ்ணு கொண்டிருக்
கின்றகிடசித்தத்தையும் பத்திவயிராக்கியத் திறங்களையும் மனவாட்டத்
தையும் பலகாலம் அரியவிரதத்தையனுஷ்டித்துவரும் வருத்தஎச்சங்களை
யுந்தெரிந்தரிஷிபுங்கவர்கள் திரோகம்புழுங்கி யிதனைப் பேசிச்சொல்வ
தாயினர், மூவரிலொருவனாகவிருக்கின்ற யிந்தகேசவன் செய்து வரும்
முக்கியமாகிய தவஉறுதிக்கிரங்கி யின்னமும்பரமசிவம் வெளிப்படாத
காரணத்தினால் யினிமேற்படயாவர் விரதங்களைச்செய்ய நினைப்பார்கள்
யிதுமிகவும்புதுமையாகவிருக்கின்றதென்று மனவாட்டத்துட னிருக்க
வும்மகாவிஷ்ணுவானவர் தான்உத்தேசித்துமுடித்துவரும் பூசனைகளிற்
சற்றும்பிசகில்லாமல் நடாத்திவருகின்றகாலத்தில் தேவதேவோத்தமனு
ம்லோகநாயகமாகவிருக்கின்ற சிவபிரான்மனமிரங்கியிச்சம்பவங்களைத்
திருத்தேவிக்கறிவித்து ஒருமைப்படுத்தி பராசத்திசமேதனாய் ரிஷபவா
கனத்தில் ஆரோகணித்துப் பல்லாயிரகோடிகணநாதர்கள்சூழ்ந்து பணி
விடைகளைச்செய்து செயசெயவெனப்போற்றி வரத்தக்கதாக வெள்ளிய
ங்கிரியைக்கடந்து வானவழிக்கொண்டுவருந்திருக்கோலத்தைக் கேசவன்
தெரிசித்தமாத்திரத்தில் மனக்கவலையைநீங்கிக்களிசிறந்துவிழிகளில் ஆன
ந்தவாரிபெருக்கெடுத்தோடத்தக்கதாகதிரோகபரவசத்தனாய் எதிர்கொண்
டோடிமுந்தி பார்பதியார்திருவடிகளில் மும்முறைவலம்வந்துபணிந்த
பின்புஎமதிறைவன் திவ்வியசாரணாவிந்தங்களினும் கிரமப்படிக்குத்தீர்
க்கதெண்டன்சமர்ப்பித்து உமாபரமேஸ்பரர்கீர்த்திப்பிரதாபங்களை வேத
வாக்கியங்களினால்பலவாகவழுத்திக்கரங்களைக்கூப்பிநிற்கின்றவிஷ்ணுவி
னிடத்திற் கிருபாநோக்கத்தைப்பாலித்து ஆதரித்தவராய் தேவியின்மீ
துவிழிகளைச்செலுத்திப்பெண்ணரசியேஉன்சகோதரனிடத்திற்றயைசெ
ய்து அனுக்கிரகஞ் செய்யக்கடவையெனத் திருவுளம்பற்றியபோது பார்
பதிதேவியும் மனமிரங்கி விஷ்ணுவைப்பார்த்து யிதனைச்சொல்லுவதாயி
னள், நமதிறைவன்கடாட்சித்திருக்கின்ற பேற்றிற்கும்நாம்சோபித்துப்
பேசியவசைமொழிக்கும் எவ்வளவும்பிசகு வாவதியாது யிதனையெத்த
சையராலுந்தடுப்பதரிது ஆதலால் அவ்வாறே எமதுநாயகன்கடாட்சவி
ட்சண்ணியப்படிக்குப்பெறவிருக்கின்ற உமதுபிள்ளையானவன் ஒருதின
ம்சுற்றன்னுதலில்விழித்தீயிற்பட்டுசாம்பலாயிறந்துசெயசாலியாயிருந்
தமேம்பாடுகளனைத்தையும்யிழந்தபோதினும்பரமன் திருவுள முபற்சி
யினாற்பழையபடிக்குத் தோற்றித் தீர்க்காயசாய் எக்காலத்தினும் சலன
மற்றுசலலோகங்களையும்தன்வல்லபத்தினால் வெற்றிகொண்டு செயசா

லியாயிருக்கக்கடவனென்று பராசத்திசாபவிமோசனத்தைச் சொல்லியவு
டன்பரமசிவமும்அவ்வாறே முற்றுப்பெறக் கடவதென்று ஆசீர்வதித்
துத்திருத்தேவியுடன்மறைந்துவெள்ளியங்கிரியிற்சேர்ந்தனர், அம்மை
யப்பர்யிவ்வாறருளிச்செய்து போனவுடன்மகாவிஷ்ணுவும் மனவெழுச்
சிபெற்று அத்திசையைநோக்கித்தொழுதேற்றித் தவநிலையை நீங்கித்தா
ன்பூசித்துவந்தமுத்தேவதைகளையு மெடுத்துக்கொண்டு வைகுந்தநகரை
ச்சேர்ந்து தன்பட்டணத்தில்வாசமாயிருக்கின்றதருவாயில் நல்லசுபமு
கூர்த்தத்தில் பரமனருளுருப்பெற்றெழுந்ததைப்போலக் காருண்டநீல
மேகத்தையொப்பப் பிரகாசிக்கும் சுந்தரமுள்ள திரேகத்தைப்பெற்று
மகாவிஷ்ணுவினதுமனத்தின்மூலமாய்மன்மதகுமாரனுதித்துக்காளைப்
பருவத்தனாய்வனப்புகளனைத்துந் திரண்டோருருப்பெற்றெழுந்ததை
ப்போன்ற மங்களகரமாகியவடிவைக் கொண்டு குலவுகின்ற தருவாயில்
பிதாவானவர்பிள்ளையின்திரேககாந்தியையும் குணாதிசயங்களையுங்கண்
டுகளித்துமடியில்வைத்துக்கொண்டு முத்தமிட்டுச்சீராடியவுடன் அவன்
வல்லமைக்குத்தக்க பலசிறப்புகளைப் படைத்தளித்தனர், உடனேதிரளா
ய்ச்சுரும்பினங்களை நாரியாகக்கொண்டிருக்கும் கருப்புவில்லையும் அர
விந்தம்-அசோகம்-சூதம்-முல்லை-குவளையென்னும்பஞ்சபுஷ்பபாண
ங்களையும் கரங்களிற்கொண்டுகுளிர்ந்த சோடசகலைகளையுடைய சந்திர
னைக்குடையாகவும் கிளிகள்பூண்டதென்றற்றேரையும் அலைகளை ஆரவாரி
த்தமோதும்சமுத்திரத்தைப்பேரியாகவும்அதிரூபலாவண்ணியமுள்ள
பெண்படைகளையும் சிரவணானந்தமாகக்கூவும் குயிலாகியகாளத்தையு
ம்மேகத்தினிடத்திற்றோற்றிமறையும் மின்னற்கொடியையும் தானைம
டல்உடைவாளையும்பெற்றுத் திரிலோகங்களினுஞ்சஞ்சரித்துத்தருணம
ங்கையரையும் காளையரையும்மயக்கிக் காமச்சவலையிற்பட்டுக் களித்து
ழலும்படிக்குத் தன்வயப்படுத்திச் சகலரையும்வென்று எத்தலங்களினு
ம்வெற்றிக்கொடியைநாட்டிச்சகலரும் பூசிதையாகக் கொண்டாடும் ப
டிக்குசுந்தரவதியாகிய இரதியென்னுங்கன்னிகையைமணந்து அவளை
க்காலத்திலும்பிரியாவிடையாய் வஞ்சனமாகக்குலவி காமவின்பங்களை
யனுபவித்து ஒருவருமெதிரில்லாமல் வீறியிருக்கின்ற தருவாயிற் பரா
சத்தியைப்பிரிந்து வடவாலவிருட்ச நிழலிலமர்ந்து சனகாதியருக்கு ஞா
னயோகசாதனையைத்தெருட்டியிருக்கின்ற சிவபிரான்மனவுறுதியையழி
த்துப்பராபரையைச்சேர்ந்து திருக்குமாரனைத்தந்து சூரபதுமன் முத
லாகிய அவுணரைவாட்டித்தாங்கள் சவுக்கியமடையும்பொருட்டுபிரமனா
தியதேவர்க்கள்போதனைக்குட்பட்டவனாய்ச்சற்றும் எண்ணிக்கையில்லாம
ற்சுயஞ்சோதிப்படிவத்தனான சிவபிரான் திரேகத்தினிடத்திற்பஞ்சபுஷ்ப

யாணங்களையும் ஒருதொடையிற்சந்தித்தேவியகாலத்திற் கந்தன்கோபி
த்துப்பார்த்தநுதல்விழிக்கனலினும் தகிக்கப்பட்டுச் சாம்பலாய்மங்கிய
பின்பு இரதிதேவிகோரிக்கையின்படிக்கு பரமனனுக்கிரகத்தினால் அரு
வுருப்பெற்றெழுந்து முன்னைப்படிக்குச் சகலவளங்களையும் பெற்றுத்திரி
லோகாதிபத்தியத்தைப்பரிபாலனஞ்செய் திருந்தனன், சேட்டீர்களோசௌ
னகாதிரிஷிகளே செகன்மாதாவாகவிருக்கின்ற பர்வதராசபுத்திரியின
துவாக்கியம்பொய்படுவதோ அல்லதுயெத்தனையராலும்விலக்கவும்போ
ருமோ யிச்சரித்திரம்நிற்கமகாவிஷ்ணுவானவர் அதிகபிரியத்துடன்வழி
பாடுகளைச்செய்துவரும்பரமனையும்பார்வதியாளையும்குமாரனையும்உடன்
கொண்டுதிருப்பாற்கடலைச்சேர்ந்துஅத்தேவதைகளைவிசாலமாகியதமது
மார்பகமேபீடமாகவெழுந்தருளச்செய்து சேஷசயனத்திற் பள்ளிகொ
ண்டுஅளவற்றகாலம்அறிதுயிலமர்ந்துபோற்றிவருந்தறுவாயில்மாறிமா
றியெழும்சுவாசத்தினசைவினாலும் ஆதிசேஷனிடத்துண்டாகும்பெரு
மூச்சினசைவினாலும் மதுரமாகிய திருப்பாற்கடலினிடத் துண்டாகும்
அலைகளின்மோதலின் அசைவினாலும் அளவற்றதிருவிளையாடல்களைச்செ
ய்யவல்ல மூவரும் ஊஞ்சலாடிக்களித்திருந்தனர், அத்தறுவாயில்தேவர்க
ள்பங்குக்கு எமனைப்போலஅவுணர்மரபில் வாற்கல்லிஎன்றுஞ்சூரனொ
ருவன்அவதரித்துப்பிரமனையுஞ்சிவபிரானைநோக்கிப்பலகாலம்சொல்லு
தற்கரிய கடினமாகியதவங்களைச்செய்து அவரனுக்கிரகத்தினால் வில்-வா
ள்-தேர்-பாணங்களாதியசெல்வவளங்களைப்பெற்றுவந்து தன்வம்சத்து
க்குரியசிற்பியினால் சொர்ணமயமாய் ரத்தினகாந்திகளை வீசிக்கொண்டி
ருக்கும் கோட்டை-கொம்மை-அகழ்-கோபுரவாயல்கள்-மாடமாளிகை
மண்டபமாதிய சிங்காரங்களைக்கொண்டுபொன்னுலகமும்நாணும்படி
க்குப்பட்டணமொன்றைச்செய்வித்து அதனிடத்தமர்ந்து அவுணருக்கு
ராசாதிராசனாய் பலவெள்ளம்ரதகெச துரகபதாதிகளைச்சேர்த்துக்கொண்
டுதிக்குவிசயஞ்செய்யநினைந்து பறையாண பேரிகையை யறைவித்து
ரதாரூடனாய் நால்வகைச்சேனாசமுத்திரங்களுடன்போய் அஷ்டதிசையி
லிருப்பவர்களனைவரையும் நிமைப்போதில்வென்று தன்வயப்படுத்தி ஒ
ருவருமெதிரில்லாமற்கொடுங்கோல்செய்துவருபவன்விண்ணுலகிலிரு
ப்பவனையும்வெற்றிகொள்ளக்கருதி சதுரங்கவெள்ளங்களுடன்வானத்தி
ற்சென்று பொன்னுலகத்தைவளைந்துகொண்டதறுவாயில் நானும்வீரா
வேசத்துடன் தேவப்படைகளைச்சேர்த்துப்போய்ப் பலபகல்அகோரயு
த்தங்களைச்செய்து வருமுன்னிலையிற் பாதகன் மேவிட்டு நமதுசே
னைகளைசின்னபின்னப்படவாட்டி என்னையும்பிரமிக்கும்படிக்குச் சாடி
த்துரத்திவிட்டு செயசாலியாய்தெய்வலோகத்தை தன்வசப்படுத்திக்கொ

ண்டு திரிலோகாதிபத்தியத்தை ஒருங்கெய்த அனுபவித்து வருங்காலத்
தில்பதியையுஞ்செல்வவளங்களையும் பறிகொடுத்து நிற்க நிழலில்லாமல
லைந்து வேறொருஉதவியையுங்காணாததால் வாடிவருந்துகின்றதேவர்க்க
ளைக்கூட்டிக்கொண்டுபோய் திருப்பாற்கடலைச்சேர்ந்துசகத்திரப்பணாம
குடங்களையுடைய பாம்பணையிற்றுயிலமர்ந்திருக்கும் கேசவனைவணங்
கிப்போற்றினவனாய் எனக்குச்சம்பவித்த அபாயத்தையும் மானக்கோ
லைச்சலையும் சாங்கமாகவிண்ணப்பஞ்செய்து கர்த்தனே அவுணப்பாதக
னால் மிகவும்நொந்து துக்கசாகரத்திலழுந்தி கனாகாணாதலைகின்றனமா
தலால் தேவரீர் அடியோங்கள்பேரில்கிருபையுற்று அப்பாதகனைஅதாஅ
தப்படுத்திவிண்ணாட்டின் அரசுரிமையைத்தயைசெய்யவேண்டுமென்று
மிகவும்வருந்திப்போற்றமுன்னிலையில் தேவர்களுமபரிபவத்துடன்
லோகரட்சகனேயிக்காலத்திற் பராமுகமாயிராமல் சீக்கிரத்தில் பகைவ
னைவாட்டிப்பாதுகாத்தாள்வது தமதுகடனென்று பலவிதங்களில் மு
றையிடுவதனைத்தையுந்திருச்செவிகளினேற்றுமனமிரங்கிசற்பப்பாயலை
விட்டெழுந்து செந்தாமரைமலரைப்பழித்துவிளங்குந் திருக்கரத்தை
நீட்டி பயப்படாதீர்கள் பயப்படாதீர்கள் உங்களுக்குயித்தகைமனவரு
த்தங்களையுந் தீங்குகளையுஞ்செய்தகொடியபாதகனுயிரையுண்டு சஞ்சல
மற்றுச் சவுக்கியத்திலிருக்கச் செய்வோமென்று பற்பல தயிரியங்க
ளைச்சொல்லி ஆதரித்தவுடன் பிரளயகாலத்தில் உலகங்களனைத்தையுந் தி
ருவயற்றினிடத்திருத்தி வடபத்திரசாயியாயுறங்கியபின்பு வெளியிட்டா
ண்ட திருத்துழாய்மாலைபரிமளித்துப்புரளுந் திருமார்பையுடைய மகா
விஷ்ணுவானவர் அடியேனிடத்திற் பரிபூரண கடாட்சத்தையும் நம்பிக்
கையையும்வைத்து ஓ தேவராசனேநமதுமார்பகத்தில் மனோரஞ்சிதமா
கவெழுந்தருளியகர்த்தனையும் பராசத்தியையும்திருக்குமாரனையும் பாரு
ம்இந்தமூவரையும் ஆதிமுதலிதுபரியந்தம் பத்திபூர்வகமாக வழிபட்டு
என்குறைகளனைத்துமொழிந்துகிறுதார்த்தனானேன் ஆகிலும் நீபலவிதங்க
ளிலும் பகைவராகிய அவுணர்இராக்கதரால்துன்பங்களையனுபவித்துவா
டுவதற்காக நமக்குமிகவும்இரக்கமுண்டாகியதால்தாய்தந்தையரையொ
த்தயிம்மூவரையும் தருகிறேன் பயபத்தி விசுவாசங்களுடன் ஆகமவி
திப்படிசகுப்பூசனைவழிபாடுகளிற் குறைவறச்செய்துவருவையாகிற்சகல
யிக்கட்டுகளையுமொழிந்து செயசாலியாய்ச்சலனமற்ற செல்வப்பெரு
க்கையனுபவித்து சவுக்கியத்திலிருப்பையெனப்பேசி உடனே அதிகபி
ரியத்துடன் மகாலட்சுமிக்கிருப்பிடமாகிய மார்பினிடத்திற்பொற்பீட
த்தமர்ந்தசைந்திருக்கும் தேவதைகளைமெல்லவெடுத்து நீட்டிய தருவா
யில் மனப்பூரிப்புடனிருகரங்களினாலுமேந்தி என்முன்னோர்களும் நா

னும்முடிக்கிருக்கின்றதவப்பேற்றினால் சொக்கிற்றுங்கிஆனந்தபரவசத்
தனுயிருக்கின்றசுவுவாயில் மகாவிஷ்ணுவானவர் கருடனைநினைர்ந்து தரு
வித்துக்கொண்டு அதன்பிடரியில்ஆரோகணித்து வில்-வாள்-சக்கராமுத
லியபஞ்சாயுதபாணியாய் நம்மவர்களுடன்திருப்பாற்கடலைக் கடந்துக
டல்சூழ்ந்திருக்கும்பூமண்டலத்தைச்சேர்ந்து பவுத்திரமாகிய நாவலந்
தீவிற்போய் தேவதேவோத்தமனாகிய சிவபிரான் ஆனந்தநடனங்களைச்
செய்துவரும் தில்லையம்பலத்தைத்தெரிசித்து கனகசபைக்குமுன்னம்வி
ழுந்து தீர்க்கதெண்டன்சமற்பித்துத் திரோகபாவசத்தனுய் மனஞ்சொக்
கிவிழிகளில்ஆனந்தவாரி பெருக்கெடுத்தோடச் சிந்தையானது உயிருக்
குயிராய்விளங்கும் சிவபூரணவெல்லையிலழுந்தியிவ்விதமாகச்சேர்ந்து
நான்குமாதம்அசைவற்று ஆதிமத்தியாந்தமற்றசுற்தன்யாதநிழலிலடங்
கிச்சிவானந்தச்செல்வத்தையனுபவித்திருந்துசிவபிரான் கட்டளையின்ப
டிக்குதுரியாதீதத்தைக்கடந்து பரவெளியிற்களித்திருந்த உயிரானதுமீ
ண்டுசாக்கிறத்திசையிற்சேர்ந்ததறுவாயில் கருவிகாரணங்கள் யிவற்றி கு
க்காரணமாகவிருக்கின்ற உணர்ச்சிமுதலாகிய தத்துவங்கள் தத்தமதுஸ்
தானங்களிற்சேர்ந்தமுன்னிலையில் நித்திரை தெளிந்தவர்களைப்போலம
காவிஷ்ணுவானவர் உணர்ச்சிபெற்றெழுந்து செந்தாமரைக் கமலத்தினு
ம்சுந்தரமாகவிளங்கும்சிவனுதன்திருவடிகளிற்பன்முறைபணிந்துவேத
வாக்கியங்களினுற்போற்றினவராய் ஆலயத்தைவிட்டுவெளிவந்து தேவ
சேனைகளுடன்போய் பூமண்டலமுற்றினும் வானநாடுகளினும் ஏகச்சக்
கிறத்தைச்செலுத்திக் கொடுங்கோன்முறைபே அரசுநடாத்திவரும்கொ
டியபாதகனுகிய வாற்கலிஎன்னும் அவுணராசனை வளைத்துக்கொண்டு அ
கோரயுத்தியங்களைச்செய்து சதுரங்கச்சேனைகளுடன் அவனையுங்கொ
ன்று தென்னுட்டைச்சேர்ந்துசெயப்பிறதாபத்துடன் திரும்பும்மகாவி
ஷ்ணுவானவர் அடியேனையுந் தேவர்க்களையுங்கிருபையாகப்பாத்துயினி
யாதொருகுறைபாடுகளுமில்லாமல்உங்கள்பதங்களிற் சேர்ந்துசகலசவுக்
கியங்களையும்அனுபவித்துமனவெழுச்சியுடன் யிருக்கக்கடவீர்களெனத்
திருவாய்மலர்ந்து விடைகொடுத்து மறைந்து பழையபடிக்குத் திருப்
பாற்கடலைச்சேர்ந்துசேஷசயனத்திலறிதுயிலமர்ந்திருந்தனர், பின்புநா
ன்தேவர்க்கள்கூட்டங்களுடன் யிந்த பொன்னுட்டை யடைந்தவுடன்
சேவன்மார்பகமேதொ டிலாக வாசஞ்செய்திருந்த யிந்த மூவரையும்
அதிகபிறியத்துடன் சாத்திரோத்தமாய் ஆராதனை வழிபாடுகளைச்செய்து
வருகின்றனன், யிந்தமூத்தேவரு மெனக்குக்கிடைத்த காரணமிதுவா
கும்என்மனதுக்கினியதோழனே ஒப்புவமையற்ற யிவர்களைப் பூசிக்கு
ம்படிக்குக்கொண்டுபோக விரும்பினையாதலால் துணிந்து கேட்டனை

மெத்தநல்லகாரியம் உன்மனோபீஷ்டப்படிக்குத் தருவது என்னிச்சை
யன்று மகாவிஷ்ணுவினது அனுக்கிரகத்தைப்பெற்று வருவையாகில் த
டையில்லாமற்கொண்டு போகலாமென்று பிரிய மனமில்லாமல் முகப்
போதாவாய் ஒருமார்க்கத்தைக் காட்டியபோது முசுகுந்தச் சக்கிரவர்த்தி
யானவர் தேவராசன் கருத்தைத்தெரிந்துகொண்டு நல்லகாரியம் அவ்வா
றேபெற்றுவருவேனென்று தேவேந்திரனிடத்திற்செலவுபெற்றுப்போ
ய்திருப்பாற்கடலிற்பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணுவைத் தெரிசித்துத்
திருவடிகளில் வணங்கிப் போற்றிக் கரங்களைக்கூப்பினவனாய் உமாபர
மேஸ்பர குமாரமுகூர்த்தமாக வெழுந்தருளி யிருக்கும் தெய்வங்களைக்
கொண்டுபோய்ப்பூசிக்கும்படிக்குத் தான் இந்திரனைச்சேட்டதையும்அ
வர்சொன்னமறுதலையையும் சவிஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்து கர்த்த
னேதேவரீர்கிருபையுறறாயிவ்வரயானத்தைத்தந்தாளக்கடவீரென்றிர
ந்ததறுவாயில்அரசன்பத்திமைக்குமெச்சி நீயரிவாய்ச்சேட்டுக்கொள்ளு
கிறபடியால்நமதுபிராணபதமாகவிருக்கின்றகடவுளரைக்கொடுத்தனம்
யிப்பிரகாரம்நாம்கட்டளையிட்டதைஇந்திரனுக்குத்தெரிவித்துப்பூமண்
டலத்திற்கொண்டுபோய்ப் பூசிக்கக்கடவையெனத்திருவுளம்பற்றியவுட
ன்மனமகிட்சியாய்க்கேசவனைத்தொழுதேத்தி விடைபெற்றுத் திரும்பி
பொன்னுலகைச்சேர்ந்து இந்திரனுக்குக் கண்ணன் சம்மதத்தைத்தெரி
வித்தவுடன் மனந்தளர்ந்து மிகவும்வருந்திவாடிக்கிலேசித்தவனாய்அத்தி
னந்தன்னையின்றருளிய தாயைநீங்கும்பிளங்கன்றைப்போலமிகவும்பரி
பவப்பட்டுயினிதடைசெய்வது தகாதனவென்று மாறுபாடுசெய்துகொ
டுத்து ராசாதிராசனையனுப்பிவிடவேண்டுமெனத் தந்திராயுத்திகளை நிதா
னித்தவனாய் உடனேதோழனைப்பார்த்து நல்லகாரியம்அவ்வாறே தருகின்
றனனென்று உபசாரவார்த்தைகளைச் சொல்லியிருத்தித் தேவதச்சனைத்தரு
வித்து அந்தரங்கமானவிடத்திற் கழைந்துப்போய்முத்தேவர்உருவகங்
களைச்சரியாகச்செய்வித்து சகலஅலங்காரங்களையுஞ்சோடித்துபொற்பீ
டத்திலிருத்திமெல்லவேந்திசக்கிறவர்த்தியிருக்குமிடத்திற்சென்றுதுணே
வனே பத்தியுடனிவர்களையேந்திக்கொள்ளக்கடவையெனக்கள்ளஉபசார
ங்களைச்செய்யும்போது வஞ்சகமாகக்காணுதெனச் சந்தேகித்து யிருகர
ங்களையும்நீட்டியேந்தி குமாரன்திருத்தேவியுடன் ஷிதிவிடங்கப் பெரு
மானெழுந்தருளிற்றேனென்னும் ஆவலுடன்போற்று முன்னிலையில்ஆ
தியிற்றனக் கருளியவாறே யாதொரு கடாட்ச வாக்கியத்தையும் சொ
டாதகாரணத்தினுல்சங்கையுற்று திரிலோகச்சக்கிறேறல்பரனே யித்தோற்
றங்கள்தேவரீர்பூசிக்கக்கண்டதேவதைகளன்று மனதொருமித்து அவர்க
ளைக்கடாட்சித்தனுப்ப வேண்டுமென்று கேட்டவுடன் ம[illegible] அவ்வா

றே அஞ்சுதடவைமாறிமாறிச்செய்தமைத்துத்தந்தபோதினும் முசுகுந்தச்சக்கிரவர்த்திமறுத்தமையால் யினிதாமதப் படுத்தலாகாதென் றெண்ணிமகாவிஷ்ணுமார்பகமென்னும் பொன்னூசலாடலை மனதுக்கின்பமாகக்கொண்டு தேவியுங்குமாரனுந்தாமுமாகக் களித்திருந்த எமதிறைவனைமனவருத்தத்துடனேந்திவந்து சக்கிரவர்த்திக்குக் காட்டியிவர்தானோவென்றுவினவியபோது சிவபிரான்கிருபையுற்று இந்திரனுக்குத்தோற்றுமல்முசுகுந்தன்மீது கிருபாநோக்கத்தைப் பாலித்து உன்னிடத்துக்குவந்தோம் யினிநிமைப்போதுந்தாழ்க்காமல் நம்மைபூமண்டலத்துக்குக்கொண்டுபோய் மனமகிட்சியுடன்பூசிக்கக்கடவையெனச் சர்வசங்காரமூர்த்தியாகியசிவநாதன் கட்டளையிட்டமாத்திரத்திற் பேரானந்த வின்பசாகரத்தில்மூழ்கினவனாய்ப் பணிந்துபோற்றித் தேவராசனைப் பாத்துமகாவிஷ்ணு மார்பிடங்கொண்டிருந்த கர்த்தனிவர்தான் திருலோகசக்கிறேஸ்பரனே தயைசெய்து யித்தேவனைத்தரவேண்டுமெனத் திருவடிகளிற்பணிந்ததறுவாயில் முசுகுந்தன் அன்புக்கிரங்கி ஓ துணவனே நான்முனங்கொடுத்த ஆறுதேவதைகளுடனிவனையும் சகல வளங்களையுங்கொண்டிருக்கும்பூமண்டலத்திற்கொண்டுபோய்மகத்துவமுள்ளசமலாலய முதலியதலங்களிற்றாபித்துப் பத்திபூர்வகமாகப்பூசனை வழிபாடுகளிற் குறைவின்றி நடப்பித்துவரக்கடவையெனப்பேசி முசுகுந்தன் கரத்திற் கொடுத்து பலஉபசாரவார்த்தைகளைப் பேசிச் செலவுதந்தனன், அத்தறுவாயிற்றேவதேவோத்தமனைச் சிரத்திலேந்திமனப் பூரிப்புடன் அனுப்பிவைத்துக்கொண்டு தன்பரிவாரங்களுடன்செயசாலியாய்பொன்னகரைக்கடந்து மங்கலவாத்தியங்கள்முழங்கப்பூமண்டலத்திலிறங்கிச்செல்வவளங்களில்மிகுத்து தென்பிறதேசத்தில் லோகப்பிறசித்தமாகப்புகழும் மகத்துவமும் சிவபிரான் மனமகிழ்ந்து வீற்றிருக்கும் பெருமையையுமுடைய திருவாரூரென்னும்சிறந்தபதியில் வானத்தை யளாவிய மதில் கோபுரவாயல்கள் மண்டபமுதலியஅலங்காரங்கள்பெருத்திருக்கும்ஆலயத்திற் பிறவேசித்து ஆகமவிதிப்படிக்குத் தேசிகரால் சகலசடங்குகளையும்முடிப்பித்து மங்கலவாத்தியங்கள் முழங்க பிராமணர் வேதங்களையோதஇவ்விதமகோச்சவங்களை நடப்பித்தபின்பு பரிமளமிகுத்த திருத்துழாய்மாலையின் மணமருதிருத்தோள்களையுடையமகாவிஷ்ணு மார்பகத்திலெழுந்தருளியிருந்தசிவபிரானைச்சொற்ணமயமாகவிளங்குகின்ற சிங்காதனத்தினிடத்திற் றாபித்துத்திருமஞ்சனதூபதீபநைவேத்தியமுதலியசோடச உபசாரங்களினாற் பூசனைவழிபாடுகளைக்குறைவறநடப்பித்துசோடசமகாதானங்களைவழங்கி தேவர்க்களும் பிறமித்துப்புகழும்படிக்கு அதிகோலகலத்துடன்திருவிழாவைச்செய்வித்துமனமகிட்சியுடன்

பரமனைப்பன்முறைபணிந்து போற்றி விழிகள்களிக்கத்தெரிசித்துமிவ்
விதமாகவேண்டும் சிறப்புகளனைத்தையும் முடித்தபின்பு தேவராசன் ப
டைத்துக்கொடுத்தமற்றதேவர் அறுவரையும் நாகபட்டணம்- திருநள்
ளாறு-திருக்காறுயல்-திருக்கோளிலி திருவான்மியூர்-வேதாரணியம்-
யிந்தசிறந்ததலங்களில்வேதவிதிப்படிக்குச் சகலவுபசாரங்களையுஞ்செய்
வித்து எழுந்தருளச்செய்து அரிச்சினை வழிபாடுகளிற் குறைவறநடத்தி
வைத்து ஆனந்தபரவசத்தனாய்த் தீர்க்கதெண்டன் சமற்பித்து விழிகள்க
ளிக்கத்தெரிசித்து வாயாரவாழ்த்தி மனம்பூரித்தவனாய் ஆகம சாத்திரோ
த்தமாய்த்திருவிழாமுதலிய சிறப்புகளனைத்தையும் நடாத்தி அவ்வாறே
வருஷவருஷே குறைவறமுற்றுப்பெறும்பொருட்டு மானியங்கள்
சேருக்கங்கள் முதலியவற்றை திட்டவட்டிகள்செய்து மேற்குறித்தபடிக்
குதாம்தெய்வலோகத்திலிருந்து கொண்டுவந்த தேவதைகளை ஸ்தாபித்த
பின்பு மனவெழுச்சியுடன் மந்திரிபிறதானிகள் சேனைத்தலைவர்கள் நால்
வகைச்சயின்னியங்கள் சூழ்ந்து மங்கலவாத்தியங்கள் திசைகளதிர முழ
ங்கிவரப்போய் தனக்குராசதானியாகவிருக்கின்ற கருவூரென்னும் வள
மிகுத்தபட்டணத்தைச் சேர்ந்து சகலசம்பிறமங்களுடனும் அரமனையி
ற்பிறவேசித்து நவரத்தினமயமாகியசபாமண்டபத்தில்விளங்கும் அரிய
ணையில்வீற்றிருந்து செங்கோன்முறையே அரசுரிமைகளைச்செலுத்திஅ
ளவற்றகாலம் துஷ்டநிக்கிறக சிஷ்டபரிபாலனங்களைச்செய்து வாழ்ந்தி
ருந்து மன்னுயிரைத்தன்பிராணனைப்போலவெண்ணி யாதொரு குறை
பாடுகளுமில்லாமற் களித்திருக்கத்தக்கதாகப் பாதுகாத்து வருகின்றதரு
வாயிற் பரமசிவ கடாட்சத்தை நினைந்து பழையபடிக்குத் திருக்கயிலை
யைச்சேரவிருப்புற்றவனாய்த் தன்குமாரனுக்குப் பட்டாபிஷேகத்தைச்
சகலாடம்பரங்களுடனும்தரித்து மந்திரி பிறதானிகளைப் புத்திரனருகி
லிருந்து நீதிகளைத்தெருட்டி உலகபாலனத்தைச்செய்வித்து வருவதாகப்
பலநன்மொழிகளைப்பேசி யாவரிடத்தினும்செலவுபெற்றுக்கொண்டுயி
ல்லறத்தைத்துறந்து தவவேடம்பூண்டுகானகத்திற்போய் அரியதவங்களை
ச்செய்தவனாய் பேறுதற்கரியசிவபதவியைச்சேர்ந்து எதாப்பிறகாரம்ஞா
னநாயகனாகிய சிவபிரானை எத்தேசகாலமும் தெரிசித்து வணங்கிப்போ
ற்றிச்சுகாதீதச்செல்வத்தை யனுபவித்திருந்தனன், ஆதலாற்சவுனகாதிரி
ஷிகளே சிருஷ்டிகற்தனாகவிருக்கின்ற பிற்மதேவனாலறியப்படாதவேத
ங்களின்மூலத்தைத்தெரிந்த பாலசுப்பிறமணியதேவருக்குரியவிரதங்க
ளை எத்தகையராயினும் பத்திவயிராக்கியங்களுடன் பூசித்து வழிபடப்
பெறுவராயின் அவனருளின்முயற்சியினால் யிம்மையிற்பெறத்தக்கசக

லசெல்வவளங்களையுங்கிடைத்து உலகமெங்கும்போற்றவாழ்ந்து மறு
மையினும் தெய்வவிமானத்தேறி விண்ணவர் போற்றப் பேரின்ப வீட்
டையடைந்து கந்தன்திருவடிநிழலிலிருப்பர்;

## வள்ளிநாயகியார்திருமணப்படலம்.

சூதபுராணிகர்மற்றசரித்திரங்களையுஞ்சொல்லுவதாயினர் ஓ நை
மிசாரணியவாசிகளே முற்குறித்திருக்கிறபடிக்கு வெள்ளியங்கிரிக்கொரு
பாரிசமாய்ப் பலகொடிமுடிகளுட னோங்கியிருக்கின்ற கந்தமாதனபர்
வதத்தினிடத்திற் பொன்மயமாகிய மாடமாளிகள்முதலிய சிறப்புகளைப்
பெற்றிருக்கும்நகரத்திற் தெய்வநாயகியாருடன் கலந்து யின்பநலங்க
ளையனுபவித்திருந்த குமாரதேவர்கருங்கடல்சூழ்ந்திருக்கும் பூமியின்
கண்வேடர்போற்றவளரும் வள்ளியம்மனைத் திருக்கலியாணஞ்செய்து
உபையநாச்சியாருடனும் வங்கணமாகக்குலவியிருந்தகதாப்பிரசங்கங்
களையுங்கேழ்ப்பீராக பிரமன்படைத்த யிவ்வண்டத்துக்கு ஆவியைப்
போலவளமைகளனைத்தையும்பெற்றுச் சிவபிரான் மனதுக்கினிமையாக
வெழுந்தருளவல்ல சிறப்பினையுடைய தேவாலயங்கள்மூழ்கினவர்களைமு
த்தியிற்சேர்க்கும் மகத்துவங்களைக்கிடைத்திருக்கும் நதிகள் மற்றுமிரா
தின்றசெல்வச் சம்பத்துகளைக் குறைவறப்படைத்திருக்கின்ற தொண்ட
நாட்டினிடத்திற் சுனைகள் காவுகள் சோலைகள் தினைப்புனங்களாதியவள
ங்கள்மிகுத்துச் செழித்திருக்கும் மேற்பாடியென்னும் பதியொன்று
ண்டு அதற்கருகில்வானத்தையளாவப்பருத்தோங்கிய பற்வதமொன்றி
ருக்கின்றது அதன்பெருமிதங்களிற் சிலவற்றைச்சொல்லக்கேழ்ப்பீராக
பூற்வத்திற்செயசாலியாய் கீற்திக்கொப்பற்றிருந்த மாபெலிச்சக்கிறவற்
தியினிடத்தில் மூன்றடிமண்ணிரந்து மண்ணையும் விண்ணையுமளந்தம
காவிஷ்ணுகொண்ட விசுவரூபத்துக்கொப்பாக மேலோங்கியும் இஃத
ன்றியும் கோரத்தினங்கள்வாய்ந்த நாகங்கள்படங்களை விரித்தாடியுலவு
வதினாலும் யிளஞ்சந்திரன் நெருக்கிப்போவதினாலும் தவளநிறம்பெற்
றஅருவிகள் பிறபலமாய்ப்பெருகுவதினாலும் ஆத்தி-குரவு-கொன்றை-
கூவிளம்-யித்தருக்கள் நிறையப்பூத்து மலர்களையிறைத்து வருந்தன்மை
யினாலும் மான்னினங்கள்பெருத்து கூரியகோடுகளையுடைய மதயானைகள்
வீறிட்டுலவுங்காரணத்தினாலும் அவ்வனாயைப்பார்க்குமிடத்திற் மூப்ப

த்துமுக்கோடிதேவர்க்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் மிகுந்
தபயபத்தியுடன் தொழுதுபோற்றும்பெருமையையுடைய திரிநேத்திர
தாரியாகியசிவபிரானை நிகர்த்துக்காட்டவும் பவித்திரமாகிய வானகெங்
கையில்நின்றும் பெருகும்செலதாரைகளும் காருண்ட நீலமேகங்கள்க
விந்தடர்ந்துமிருப்பதைப்பார்க்குமிடத்தில் மான்தோலினையும் முப்பு
ரிநூலினையுங் கொண்டிருக்கும் மார்பையுடைய சதுர்முகப் பிரமனைப்
போலக்காட்டவும் குமாரசுவாமியார் குறமங்கையினிடத்திச்சைகொண்
டுசிலதிருவிளையாடல்களைச் செய்தமரவிருக்கின்றதைத்தெரிந்து தெரிசி
த்தீடேறுமாசை தாண்ட அலைகள்பெருத்தவாளகெங்கையிற்றோய்ந்துப
ரிசுத்தமா யிருக்கவெண்ணிச் செல்வதை யொப்ப நிவந்தும் தேன்களை
ச்சொரிந்தும் மகரந்தங்களையிறைத்துப் பரிமளித்திருக்கும்குளிர்ந்தம
லர்மாலையையணியும் புயாசலங்களையுடைய சிவசுப்பிரமணியதேவர் சில
காலம்காளைப்பருவத்தைமேற்கொண்டு நடனங்களைக்காட்டி மனவெழு
ச்சியுடனுலவும்படிக்குக் கற்புக்கரசியாகியவள்ளிநாயகியாரைத்தன்னிட
த்திற்படைத்திருக்கும்மகத்துவத்தைக்கிடைத்து அப்பேற்றினால்வள்ளி
மலையெனப்பலரும்புகழத்தக்க சிறப்புப்பெயரைக்கொண்டிருக்கும்அ
ப்பர்வதத்தின்மேன்மைகளை எத்தகையராலுங்கணித்துப் பேசுவதன்று
யிவையன்றியும் சிலசிறப்புவிதிகளைத்தெரிவிப்போம் சிவந்து காட்டும்
குண்டுமணிகளும் அச்சாரவினிடத்து முளைத்து மேலோங்கி அதிகவோ
சையைக்காட்டி அசைந்திருக்கும் மூங்கில்களொன்றுடனொன்று தாக்கி
யும்உராய்ந்துவெடித்துதிர்ந்துப்புரளும் பருத்தமுத்துகளும் காளிகரா
ளியென்னும் விஷப்பற்களையுடைய சர்ப்பக்கூட்டங்களுமிழந்துவரும்சி
ரோரத்தினங்களும் வரைமுற்றினுமடர்ந்து கிரணங்களைப்பரப்பிவிளங்
குவதெப்படிக்கிருக்கின்றதேனில் நட்சத்திரக் கூட்டங்களானவை ஆ
யிரங்கிரணங்களைப்பரப்பியெழுந்த சூரியனதுவெம்மைக்காற்றாதுநிலை
குலைந்துவிழுந்து கிடக்குமாறுபோலப்பிரகாசித்துக் காட்டவும் செழி
ப்பாகப்படர்ந்திருக்கின்ற முல்லைக்கொடிகளினிடத்தில் மலர்கள் மலிந்
திருப்பதினாலும் பருத்தமூங்கில்தீப்பட்டிறைக்கும் முத்துகளினாலும்த
ழைத்தோங்கிக் குளிர்ந்தநிழலைப் பரப்பியிருக்கும் காவுகளினிடத்திற்
தேன்களைச்சொரியும்பூங்கொத்துகளணிபடத்தொங்கும் சிறப்பினாலு
ம்சோடசகலைகளையுடையசந்திரனும்தாரகாகணங்களும்ஒன்றுபட்டுஉதி
த்ததையொப்பவிளங்கவும் வண்டினங்கள் ரீங்காரத்தொனிகளைச்செய்
துவத்திறங்கி புண்ணும்படிக்கு மதுரமிகுத்த தேன்களைச் சொரியும் நீ
லோத்பலம்-சேந்தாமரை-வெண்டாமரை- அல்லியாதிய புஷ்ப வகைக
ளைவிரித்துப்பரிமளங்களைவீசிஆழ்ந்த மதுரசெலப்பெருக்கையுடைய

சுனைகள் அச்சாரலினெல்லமுற்றுந்தோற்றுவதைப்பார்க்குமிடத்தில்யா
வராலுங்கண்டறியவொண்ணாத மகிமையையுடைய கந்தசுவாமியார் வே
டமங்கையைக்குறித்து அத்தலத்தில்மாயவுருக்கொண்டு பற்பல திருவி
ளையாடல்களைக்காட்டவிருக்கின்றமையால் அக்காட்சிகளைத் தெரிசித்து
க்களிக்கும்பொருட்டு அப்பர்வதமானது பலவிழிகளைக்கொண்டு முன்
னெச்சரிக்கைப்பட்டிருப்பதற்கொத்தும் வானத்தையளாவவோங்கியிரு
க்கும் வள்ளிமலையின்மேற்புறத்திற்பாரந்தசுனைகள்செலசமற்றியாயிருப்
பனதக்குறிக்குமிடத்தில் சூரியசந்திரர்முதலியதேவர்க்கள் சரவணபவன்
நடாத்தவிருக்கின்றவேடிக்கையாற்தங்களையும் திருக்கோலப்பொலிவை
யுங்கண்டுகளிப்பதாகமண்மடந்தையாளவள் பற்பல கண்ணாடிகளைப்பர
ப்பிவைத்ததைப்போல விளங்கவும் பிரகாசம் பொருந்திய தளிர்களையு
டைய வேங்கைமரத்திற்கிளைத்திருக்கின்ற கிளைகளினிடத்துலவி அசோ
குவிருட்சத்திற்றாவி விளாமரங்களிற்பாய்ந்து விளையாடித்திரியும்குரங்
கினங்களை வலிபெற்ற மந்திகளாலவைசீறி உருத்தகாலத்திற் பயந்துமீ
ள்வதையோசிக்குமிடத்தில் பதிதனாகவிருப்பவனைச் சிறந்த தியாகிகளாக
வெண்ணித் தரித்திராகவிருப்பவர்கள்சேர்ந்து அகமுகப் பொலிவற்று
பற்களைக்காட்டி யிருகரங்களை நீட்டித் தனக்கடுத்திருக்கின்றவறுமைகளை
யுந் துக்கவருத்தங்களையும் மனக்கலக்கத்துடன்சொல்லியிரந்தகாலத்தி
ல்அன்டாப் வரவழையாமல் மனம்வருந்தி திரோகங்குன்றி வாடும்படி
க்குயிகழ்ந்து சுடச்சுடப்பேசிவேட்டைநாயைப்போல மேல்விழுந்து
துரத்துமுன்னிலையில் அந்தயிரவவர் மன வாட்டத்துடன் மோப்பக்கு
ழையுமனிச்சம் முகந்திரிந்து நோக்கக்குழையும் விருந் தென்பதைப்
போலபுலம்பித்திரும்புமாறுகாட்டவும் செங்காந்தளமிகுதியாய்ப்புஷ்
பங்களைவிரித்துப் பிறகாசித்திருக்கும் குளிர்ந்தசோலைகளில் மனவெழு
ச்சியுடன்புள்ளிபட்டிருக்கும்கலாபத்தைவிரித்துமயிலினங்கள்நடித்துத்
திரிவதைப்பார்க்குமிடத்தில் அச்சாரலிற்பருத்தோங்கியிருக்கும் மூங்கி
ல்கள்காற்றினலசைவுகொண்டு ஒன்றுடனொன் றுராய்ந்திறைக்கும் அன
ற்பொறிகள்சிதறிவிழுந்து சருகுகளிற்பற்றிப் புகைந்திருப்பதுக்கொத்
தும்சாமத்திற்பட்டலையும் மனத்தராகிய காளையர்தங்கள் குலமகளிரை
யெதிர்த்தவுடன் பகற்போதென்றும்பாராமல் அவர்கள்கரங்களைப்பற்றி
யணைத்து யின்சொற்களைப்பேசி யில்லங்களிற்கொண்டுபோகும்கரு
த்தையறிந்து பிறர்தூறுதலுக்கஞ்சிச் சிலபாசாங்குகளைக் காட்டி விலக்கு
மாறுபோலப் பர்வதத்தின்மேற் பரப்பிற் றழைத்தோங்கி யிருக்கும்
குளிர்ந்த சோலைகளி விராநின்ற வேங்கைமரங்கள் பசிய யிலைகள்தழை
த்து நீண்டிருக்கும் கிளைகளைப்பரப்பி வானத்திற் செல்லும் சூரியனது

ரணங்களானவை தடாகங்களிற் புஷ்பித்திருக்கும் தாமரை மலர்களி
ற்பாய்ந்து களிக்கவிருப்பதைத்தடைசெய்து கவிந்திருக்கவும் காமவெ
றிகொண்டு மும்மதங்களையும்பெருக்கி வரையின்மீதில் பிடிகளைப்போ
லவீறிட்டுலவும் யானையின்கெற்சிதத்தை அதனடிவாரங்களி லிருக்கும்
கெவிகளிற்படுத்திருந்த வீரசிங்கங்கள் கேட்டமாத்திரத்திற் சீறிப்பா
ய்ந்து உறும்பி நாற்றிசையினும்விழிகளைப்பரப்பி நாடுவதைப்பார்க்கு
மிடத்திற் பிறகலாதனன் எங்கும்பரிபூரணமாக நிறைவெய்தி யிருக்கும்
நாராயணனே பரமெனப்பேசிய வாசகத்தைச் செவிகளிற் கேட்டமாத்
திரத்தில் வடவையைப்போலக்கொதித்து இரணியன்கரத்தையோங்கி எ
திரில்நிற்கின்ற தூணினிடத்தறைந்ததறுவாயில் வெடித்துஅதனிடத்தெ
ழுந்துருத்து அவுணராசனைப்பிளந்துகொன்ற நாரசிங்கத்தின் கெற்சித
த்தையொப்பக்காட்டவும் வள்ளிமலைச்சாரலில் வாசஞ்செய் திருக்கின்ற
வேடர்கள் காலங்கருதிக்குறிஞ்சித்திணைப்பறையைமுழக்கி அக்குறிப்பி
னால் வானத்தில்மேகங்கள்பரவி மழைபெய்யவிருக்கின்ற பிறையோச
னத்தைபலருக்குந் தெரிவிப்பவர்களைப்போலச் சந்திரன் சோடசகலைக
ளைவிரித்து அமுததாரையைப் பெருக்கி வருவதைக்கண்ட எண்காற்பு
ள்ளானது தழைத்திருக்கின்றசிறகையசைத்துச்சந்தோஷமாய்க்கூவுங்கு
ரலோசையினாற் றெரியக்காட்டியவுடன் மலைப்பாம்புகளிடைவிடாமற்
சத்தித்திரைதேடித்திரியவும்விசாலமாகியவிண்ணகத்தில் அதிர்ச்சிகாட்ட
வும்மதயானைகள்வீறிட்டுகாமமிகுதியினாற்பிடிகளைத்தழுவித் திரியவும்
வீரசிங்கங்கள் கெற்சித்துஉறும்பியுலவவும் இத்தகைய பற்பலவளங்கள்
பெருத்திருக்கின்ற வள்ளிபற்வதத்துக்கருகில் வேடர்திரட்சியாய்வாசஞ்
செய்யுமொரு சிற்றூரானது சண்முகப்பெருமாள்பிற்காலத்திற்றன்னி
டத்திற்சேர்ந்து திருவிளையாடலைச்செய்வதற்குவிருப்புற்றுப்பொன்ன
கரமானது அரியதவங்களைமுடித்து யிறங்கிவந்திருப்பதை யொப்பச்சி
றந்ததாய் யாதொருகுறைபாடுகளுமில்லாமல் கண்டவர்கள் விழிகளுக்க
ணியாகச்செழித்திருக்கும் அந்தகுறிச்சியில் வாசஞ்செய்யும் கிராதர்கள
னைவருக்கும் ராசனாய்அவர்களைப்போற்றிச் சிவகுமாரன்திருநாமங்களி
லொன்றாகிய குமாரனென்னும் பெயரைப்படைத்திருப்பவனொருவனு
ண்டு அவன்தன் துணைவியுடன்சுப்பிறமணியக்கடவுளைக்குறித்துஅளவற்
றகாலம்செய்துவந்த விரதபலத்தினாற் சிலபிள்ளைகளைப்பெற்று புத்திரி
யில்லாமையால்அந்தபாக்கியத்தையும் கிடைத்துக் களிக்க விருப்புற்ற
வனாய் தங்கள்குலதேவதையாயிருக்கின்ற சுப்பியமணியக்கடவுளுக்குபூ
சனைவழிபாடுகளைச்செய்தும்திருவிழாவைச் சம்பிறமாசநடாத்தியும்வெ
றியாடல்களைமுடித்தும் யிவ்விதங்களாகப்பத்திவயிராக்கியத்துடன்தே

ன்-தினைமா-கனிவகைகள்-பாற்சோறு முதலிய நைவேத்தியங்களைத்திரு
த்தியாகப்படைத்துத் தன்பந்துவற்கங்களுக்கு விருந்திட்டு சகலசிறப்
புகளுடன்சோடித்து வருகின்றகாலங்களில் நேர்ந்த சம்பவங்களையுஞ்
சொல்லக்கேழ்ப்பீராக மேற்குறித்திருக்கின்ற பற்வதச்சாரலினருகிற்ற
ழைந்தோங்கியிருக்கும் சோலையின்கண் சிவமுனியென்னுந் தவச்சிரேஷ்
டர்பர்ணசாலைசெய்துகொண்டு அதில்வீற்றிருந்து பஞ்சேந்திரியச்சேட்
டைகளைவென்று விஷயவாஞ்சைகளையடக்கிச் சித்தத்தைச்சிவத்தின்பா
தாரவிந்தங்களிலிருத்தி மனதை ஒருவழிப்படநிறுத்தி அரிய தவங்களைச்
செய்து பிரமன் விஷ்ணு தேடிக்காண்பரிய சிவநாதனுக்குரியசைவவிர
தத்தைக் குறைவறப்போற்றி வருகின்ற தருவாயில் பருத்துச் சுழன்று
நோக்கும் விழிகளையும்சிறுத்ததலையையும் நெறித்தசையும்நீண்டகாதுக
ளையும்மெல்லிதாய்க்குறுகியிருக்கும் கால்களையும்புள்ளியிட்டுப் பொன்
னையொப்பச்சுந்தரமாகவிளங்கும் தேகத்தையும் மயிர்ச் செறிவையும்
சிறுகுளம்புகளையும்பெற்றிருக்கின்ற பெண் மானொன்று கண்டவர்கள்
பிரமித்துநோக்கும்படிக்குவந்து தவச்சாலைக்கெதிரிற்பாய்ந்தும்புற்க
ளைமேய்ந்து உலவியிருக்கின்றதருவாயில் சிவமுனியானவர் வெற்றிவே
லாயுதக்கடவுளினது திருவருளினாற்றோற்றிய பொன் மயமாகிய பெட்
டைமானைப்பார்த்தவுடன் ரூபலாவண்ணியங்களைப் பெற்றிருக்கின்றத
ருணமங்கையைநேர்ந்த காமுகனைப்போலமதிமயங்கிபிரமித்துகாமக்
கவலையிற்பட்டு வாடும்மனத்தனாய் சொர்ணச்சாயையையுடைய பிணையி
னிடத்தில் மையலுற்று அதிகபிரமைகொண்டு தவத்தினிடத்திற்பொரு
ந்தியிருந்த மனவுறுதியழிந்து ஆமத்தங்காயைத் தின்றவனைப்போலஉ
ன்மத்தனாய்ச் சற்பபடத்தைப்பழித்த நிதம்பத்தைக் கொண்டிருக்கின்
றஅரம்பாஸ்திரீகளிடத்திற் றேவர்க்கள் புணர்ச்சிப்பயனைக்கிடைக்குமாறு
போலக்காட்சியினால் யின்பநலத்தை யடைந்து நீத்தற்கரிதாய் அலைத்தி
ருந்தவிகாரத்தையொழித்து மெய்ப்புணர்ச்சியை அனுபவித்ததாகக்களி
த்துஉடனே புலவிற்படிந்து பரிசுத்தனாய்ப் பழையபடிக்குச் சிவபிரா
னைக்குறித்துதவஞ்செய்திருந்தனன், அந்தசிவயோகியின் திருஷ்டிசம்ப
த்தத்தினாற் பெண்மானிட உதரத்தில் ஞானவான்களுக்கன்றி வெளிப்ப
டாத மகாவிஷ்ணுபெற்றகன்னிகை அத்தலத்துக்கருகிற்றவஞ்செய்திரு
ந்தவள் கிறவுஞ்சமலையைப்பிளந்தவெற்றிவேலைத்தாங்கியசிவசுப்பிரம
ணியதேவர் கட்டளையின்படிக்குமால்மருகனிடத்திற் காமுற்றிருக்கும்
மானுக்கினியமகளானவள் அத்தருணத்தைத்தெரிந்து சொர்ணச்சாயலையு
டையபெண்மான்வயற்றிற்பிறவேசித்திருந்தனள் பின்புஅந்தமானானது
அத்தவத்தைக்கடந்துபுனமெங்கனுமுலவியும் பசியபுற்களைமேய்ந்துசு

ணைநீரையுண்டுவெய்யலுக்குத்தோப்பினிடங்களிற்றங்கியும்வள்ளிபர்வதத்
தின்பேரிலேறிஅவடத்தில்வளர்ந்திருக்குந்தினைப்புனங்களைத்தாண்டிவே
டமங்கையர்செவ்வரிபரந்தவிழிகளைப்போலப்பாய்ந்துவள்ளிக்கொடிக
ள்நாட்டியிருக்குங்கொல்லையிற்போய் சுப்பிரமணியதேவர் மனதுக்கி
னியலோகநாயகியைச்சுமந்திருக்கும்பெண்மானுக்குப்பூரணசெற்பமா
ய்த்தள்ளாடித்திரிந்து பிறசவகாலம்நேர்ந்ததால் வயறளைப்பெடுத்துவ
ருந்திக்கதறிவேடப்பெண்கள் சில்லாக்கோலினால்வள்ளிக்கிழங்கைக்கல்
லியெடுத்திருக்குங்குழிகளினொன் றில்வள்ளிநாயகியையீன்றது சவுனகா
திரிஷிகளேயிப்புதுமையையென்சொல்லுவேன் தலையணி-காதணி-முத்
தாரம்மோகனமாலை-கடகங்கள்-பாதசரம்-சிலம்பு-யித்தகைய பூஷணா
ங்களைத்துறந்துவள்ளித்தழைப்பாயலில்அவ்விலைகள் திரோகமெங்கனுமூ
டத்தக்கதாக வுணர்ச்சியற்றுஒப்புவமையல்லாதஎமதிறைவியானவள்மா
னிடமாகத்திருவவதாரஞ்செய்தனள்,யிதுவுமொருதிருவிளையாடலாகநி
னைப்பதன்றியில் வேறுமுண்டோ அந்தபெண்மான் சற்றுநேரத்தில்யி
ளைப்பாறி மெல்லயெழுந்து ரத்தினவளையல்களைத்தரிக்கும் கரகமலங்க
ளையுடையபெண்குழந்தையைப்பாத்து யிது நம்மினமன்று வேற்றுரு
வாகக்காணுகின்றதென்றெண்ணி மருண்டு பயந்தோடிப்போயது யிப்
படிக்குத்தாயாகச்சுமந்துபெற்றமான் தனித்துவிட்டுநீங்கியதருவாயில்
ஒப்பனையற்றதலைவியானவள் எகாங்கியாய் பசியினால்வருந்திக் கைகால்க
ளையுதறிக்கின்னரிப்பட்சியி னோசையோ மகதியாழி னொலியோ பிரமன்
நாவிலெழுந்தருளியிருக்கும் சரஸ்பதிதேவியினதுயின்னிசையின்பெரு
க்கோவெனக்கேட்டவர்கள் சந்தேகிக்கும்படிக்குகாவுகாவென்றழத்து
டங்கினள், அத்தருவாயில்பாலசுப்பிரமணியதேவர்அருட்டிறத்தின்முய
ற்சியினால் வெடர்களுக்கரசன்தன்தேவியுடன் தம்மினத்தவர்பலர்சூழ்ந்
துவரத்தக்கதாகதினைப்புனங்களைப்பாத்துப் போகநினைந்துஅந்தலத்தி
ல்வரும்போது அம்மனெழுந்தருளியிருக்கின்றகொல்லையில் நுழைந்து
குழந்தையழுகையினோசையைச் செவிகளுக்கினிமையாகக் கேட்டவுட
ன்தேவியுந்தானுமாய் அதிசெயித்துயித்தகையமதுரமாகியகுரலோசை
யிவடத்திலுண்டாகுங்காரணமேதோவென்று திகைத்துத் துரிதமாய்ந
டந்து அழிபட்டிருக்கும் வள்ளிக்குழிகளி னொன்றி லிருக்கின்ற தூண்
டாவிளக்கம்போன்ற கரியகூந்தலையுடைய பெண்ணரசியைப்பார்த்தமா
த்திரத்தில் வேடராசனுக்குத் திரோகபரவசமாய்ப் பிறிமித்து கரங்களைக்
கொண்டுமெல்லவெடுத்துப் பின்பற்றிவருகின்ற துணைவியைக்கூவி வெ
ண்கள்சிகாமணிகிடைத்தனள், என்தாய்எளிதிலகப்பட்டனள் வாவாதெ
ன்றழைத்துநெருங்கியவுடன் தேவிகரத்திற்கொடுத்துச் சந்தோஷிசித்ப

ளுப்புசத்தில்மாட்டியிருந்த வில்லையெறிந்துபோட்டுத் துள்ளித் துள்ளி
ப்பாய்ந்தும் பிழைத்தோம்பிழைத்தோமென்று அங்குமிங்குமா யோ
டியும் கூக்குரலிட்டும் ஆனந்த வெள்ளத்தி லழுந்திக்களித்தும் பற்கள்
வெளிப்பட நகைத்தும் யினியெனக்கிணையாவ ரிருக்கின்றனரெனப்பருத்
திருக்கின்றபுசங்களைத்தட்டியும் முற்பிறப்பிற் பெரியோர்க ளுடன் நா
னென்னதவங்களை முடித்தனனோ யாருந் தோற்றவில்லையென்று பலவி
சைபேசியும் விழிகளில் ஆனந்தவாரியைப் பெருக்கித் திரோகம்பூரித்து
மயிர்சிலிர்க்க தனக்குக்கிடைத்தபேறையெண்ணியெண்ணிப்பொங்கியு
ம்யிவ்விதங்களாகவேடர்பெருமான் கொண்ட மகிட்சியின்பெருக்கை
யாவராற்சொல்லிமுடியும் யித்தகையகளியாடல் நடந்து வருகின்ற தரு
வாயில் வேடர்களுக் கரசியானவள் தன்கணவனிடத்தி லிருந்த பெண்ண
முதைத் தன்கரங்களி லேந்தியஉடன் பிறசவகாலத்தி லுண்டாகும்வருத்
தமும்யிளைப்பும் மற்ற குறிகுணங்களுங்காட்ட பிள்ளையைப்பெற்றகா
லத்திலும் அதிக மனமகிட்சியைக்கிடைத்துத் திரோகம்பசித்துக் கொங்
கைகள்பூரித்துச்சொரிகின்றபாலமுதத்தைதெவிட்டக்கொடுத்துமுதுகை
த்தடவிமுத்தமிட்டு உச்சியைமோந்துதழுவி யிவ்விதங்களிற் சீராட்டும்
கொடிச்சிக்குஅக்காலத்திற்கிடைத்த மகிட்சிக்கோ ரளவுண்டோஉடனே
வேடராசன்வீசிப்போட்டவில்லையெடுத்துக் கரத்திற்பற்றிக்கொண்டுதி
னைப்புனங்கள்வள்ளிக்கொல்லைகளைத்தேவி புத்திரியுடன் நிமைப்போதிற்
கடந்து தன்பதியாகியசீறூரைச்சேர்ந்து விடுதியிற்போனவுடன் தேவா
முதத்துக்கொப்பாகிய மகளைக்கிடைத்தபடியால் அதிகமனவெழுச்சியை
க்கொண்டு களித்தவனும் வலியகால்களையும் வெள்ளியங்கிரிக்குச் சமதை
யாகவிளங்கும் திரோகத்தையும் படைத்திருக்கும் நந்திவாகனத்திலேறிந
டாத்தும் சிவபிரான்வருக்கமாக நுதல்விழியிலவதரிக்குங் குமாரதேவர்
திருவடிகளைவழிபட்டு வேடர்கள்திரண்டு குறிஞ்சிப்பறையாகியதொண்
டகத்தைத்திசைகளதிரமுழக்கிவரச் சந்தோஷமிகுதியினால் ஆண் பெண்
வேற்றுமையின்றிக் கரங்களைக்கோத்துக்கொண்டு குலாசாரப் படிக்குக்
கூத்தாடும்சம்பிரமங்களைச்செய்வித்தும் பின்புதேவராட்டி முதலியவன
தேவதைகளுக்குபலிகொடுக்கவெத்தனித்து பூசனைவழிபாடுகளை முடிப்
பித்து ஆடுகள்முகத்தைக்கழுவி பச்சரிசி மஞ்சளையரைத்துப் பூசிவளைந்
தகொம்புகளில் புஷ்பமாலைசூடி சன்னதிமுன்கிடத்தி வாளினாற்கண்டித்
தும்கோழிகளைச்சுற்றிவிட்டும் யிவ்விதபூசனைகள்முற்றியஉடன் வெற்றி
வேலாயுதபாணிக்குரிய சிறப்புகளைக்கோடித்து தேவமருள் கொண்டிரு
க்கிறவன் வேலைக்கரத்திற்றாங்கி முன்செல்லவும்மற்றையர் ஆவேசங்களு
டன்குறிகள்சொல்லிக்கூத்தாடும் உச்சவங்களைமுடித்து யிவ்விதங்களிற்

சகலசிறப்புகளையும்செய்வித்து வேடருடன் அரசன்களித்துத் தம்மினத்
தவருக்குவிருந்திட்டு சுபங்களைக்கொண்டாடிவருநாளையில் அருந்ததியை
யொத்தகற்புத்தன்மைபொருந்தியவேடராசன்தேவியானவள் அரிதிற்கி
டைத்ததன்பெண்குழந்தையை முழுக்காட்டி நெற்றியில்திருநீறணிந்து
திலப்பொட்டுமிட்டு என்தாய் அலசினளெனப்பரிவாய்யானைத்தந்தங்களி
னாற்கால்கள்சட்டங்களைச்செய்துபுலிகறடிநகங்களை அதனிடைகளில்வரி
சைப்படப்பதித்து முத்துக்கோவைகள் பலகறைத்தாவடங்கள் சிரோரத்
தினமாலைகளை நாற்புறங்களினுந்தொங்கவிட்டு பொன்னையொப்பவிள
ங்கும்கண்களையுடைய மயிலினதுதோகைகளினால் அலங்காரமாகச் சோ
டித்திருக்கும் தினையைமுற்றினும்சூழவரக்கட்டி புலித்தோலைப்பாயலா
கவிரித்திருக்கும் பூந்தொட்டிலினிடத்திற்சேர்த்து மெல்ல வசைத்துஎ
ன்கண்மணியே பெண்கலிதீர்க்கவந்த பெருமாட்டியே குலதெய்வமே
என்னைப்பெற்றதாயே உறங்குறங்கெனத்தாலாட்டியும் வேடர்மரபுக்கு
ரிய பாட்டுகளைச் சொல்லியும் லோகநாயகியை நித்திரைசெய்வித்தனள்,
சவுனகாதிரிஷிகளே அந்தவேடர் பெருமான்தேவியினதுபாக்கியத்தை
என்னெனச்சொல்லுவேன் தேவதேவோத்தமனாகிய பாலசுப்பிரமணிய
க்கடவுளுக்குமனதுக்கினியதேவியாகவிருக்கின்றலோகநாயகியைப்புத்
திரிபாவமாகக்கொண்டுஅன்புடன் கரங்களினேந்தியும் மார்பிலணைத்து
ம்அமுதத்தைக்கொடுத்தும்தோளிலேந்தியும்அவள்பெருமைகளைக்கொ
ண்டாடி வாலிகளைப்பாடியும் யிவ்விதங்களிற் சகலசிருடனும்போற்றப்
பெற்றமையால் அந்தராசாத்திக்குக்கிடைக்கவிருக்கின்ற பேற்றையாவ
ராற்கணித்துப்பேசப்படும் அத்தருவாயில் தங்களிறைவனுக்குப்பெண்
ணரசிகிடைத்தனளென்னுஞ் சேதிமுற்றினும் பரவக்கேட்டவுடன்பற்க
ளுதிர்ந்து உடல்தொங்கி நாத்தளர்ந்து தலைநடுக்குற்றுமயிர் நுரையைப்
போலவெளுத்து புருவஞ்சரிந்து முகந்திரைந்து சதைகனாந்துதோல்
தொங்கியாட முதுகுவளைந்து கோலையூன்றித்தள்ளாடி நடக்கும் பருவ
முடையநூற்றெட்டு வயதுசென்றகிழவேடத்திகள் கூட்டங் கூட்டமா
ய்வந்துசூழ்ந்து பெண்குழந்தையைப்பார்த்து மனமகிழ்ச்சியுடன் தளர்
ந்தவசனங்களினால் யிதனைச்சொல்வதாயினர், யிப்புத்திரியினதுலட்சண
ங்களைப்பார்க்குமிடத்தில் அற்புதமாகவிருக்கின்றது தேவஅம்சையை
காட்டுகின்றதால் நம்மனைவருக்கும்யிறைவியாவள் சகலசவுக்கியங்களையு
ம்அனுபவித்து மனவெழுச்சியுடனிருப்பள் யிதற் கையமில்லையெனப்
பேசிக் குழந்தைதாடைகளை யிருகரங்களினாலுந்தடவிக்கொடுத்து திஷ்
டிபரிகாரமாக தங்கள்கன்னங்களில்விரல்களைநெட்டமிட்டு தீர்க்காய்சா
ய்எத்தேசகாலமும் சுமங்கிலியாய் கைகால்களுக்குநோயில்லாமற் குறை

வற்றசெல்வியாய்வாழக்கடவளெனப் பல ஆசீர் வாதங்களைச் சொல்லித்
தொட்டிலிற்கிடத்தி வேடராசன்மனைவியைப்போற்றித்தாயே யிந்தகு
ழந்தையை வள்ளிப்பாத்தியிற்கண்டெடுத்துவந்தபடியால் யிவளைவள்ளி
யென்றழையுங்கோளென்று காரணப்பெயராயிட்டு அக்காலத்தில்நேர்ந்
தவேடமங்கைய ரனைவரும்சேர்ந்து வாழ்த்தெடுத்துசுபங்களைக்கொண்
டாடினார், அத்திருநாமத்தைக்கேட்டவுடன் வேடராசனும் அரசியும்ம
னச்செருக்குடன் அதிக சந்தோஷித்தைக் கிடைத்தவர்களாய் வந்தவர்க
ளுக்குத் தேன் - தினைமாவு - பண்டு-பலாதிகள்முதலிய உணவைத் தந்து
பலஉபசாரங்களைச்செய்து களியாடல்களைக்கொண்டாடினவர்களாய்உல
கமாதாவை வேடருக்கதிபன் தன்பெண்ணாகவெண்ணி மிகுந்த பிறியத்
துடன் எத்தேசகாலத்திலும் அருகிலிருந்துபாராட்டி வருகின்றமுன்னி
லையில் குறிஞ்சிநிலத்துக்கு அதிதேவதையாகவிருக்கும் சுப்பிறமணிய
தேவருக்குத்தேவியாகவிருக்கின்றவள் மலைகள்சூழ்ந்தகுறிஞ்சி நிலத்துக்
கதிபனாகவிருக்கின்ற வேடராசன்மகளாய்த் தன்பிதாவானவர் முனம்ஆ
யர்பாடியில் வாசமாயிருந்ததைப்போலப் புற்களினாற் செய்திருக்கும்
சிறுகுடிசையிற்சேர்ந்து வளர்வதாயினள், யிவ்விதமாகத் திரிமூர்த்திகளி
லொருவராகவிருக்கும் மகாவிஷ்ணுபெற்ற தவவமுதத்தைத் தேவதே
வோத்தமன்திருத்தேவியை மிருகங்கள்வாசஞ்செய்யும் கானகத்திலிரு
க்கின்ற வேடர் தமதுரிமைமகளாகக்கொண்டு போற்றிவருகின்றதால்அ
வர்கள்முன்னோருடன்செய்திருக்கின்ற தவவிரதங்களை யாவராலளந்து
சொல்லப்படும்பின்பு எமதன்னையானவள் பருவக்கிறமமாய் சப்பாணி
கொட்டியும்தவழ்ந்தும் தளர்நடைகொண்டும் தோழிகளுடன் கலந்து
வேங்கைமரங்கள்தழைத்துக்குளிர்ந்த நிழலைப்பரப்பியிருக்கும் முத்த
ங்களினுலவிவிளையாடியும் முச்சிலில் மணிகளைவாரிக் சொரிந்தும் முத்
துகளினாற் சிற்றில்செய்தும் நிலாச்சோறுசமைத்தும் மணிகளைக்கொ
ண்டுஅம்மானையாடியும் சிறுதேருருட்டியும் அம்புலியைக்கூவியும்புஷ்
பங்களைப்பறித்துச்செண்டுகள்தொடுத்துப்பந்தாடியும்மாலைகள்செய்து
சூடியும் யிவ்விதவினோதத் திருவிளையாடல்களை நடத்தி பூர்வக்கியானஞ்
சற்றுமில்லாதவளாய் தாய்பலவிதஉபசாரங்களைச்செய்துவரும்படிக்குவி
ற்திசந்திரனைப்போலத் தினமொரு மேனியாய்வளர்ந்து எமதுகர்த்தன்
புயாசலங்களைத்தழுவுவதற்குயிந்தப்பருவந்தகும்தகுமெனக்கொண்டா
டும்படிக்குத்தேமல்பரந்து தென்னங் குரும்பைப் போலக் காட்டுந்
கொங்கைகள் வெளிப்படையாகக்காட்ட ராசபுத்திரிக்குப் பன்னிரண்டு
வயதுநிறைந்து பாலகுமாரத்தியாகக்காணும் தருணத்தைத்தாய்தந்தை
யர்தெரிந்து களித்தவர்களாய்த் தங்கள்குலமுறையைப் பாராட்டி மான்

வயற்றுதித்தவள்ளிநாயகியாரை நீண்டகதிர்களைவிரித்துப் பசுமையாகவி
ருக்கும் தினைப்புனத்திற் கிளிகளாதிய பறவைகளிறங்கிக் கதிர்களைக்கவர
வொட்டாமற்போற்றியிருக்கும்படிவைக்கநினைந்து நீண்டவில்லையும்மி
ன்னலையொப்பவிளங்கும் கூரியஅலகையுடைய பாணங்களையும் யிடை
விடாகற்கரங்களிற்கொண்டிருக்கும் வேடராசன் கோடிசூரியப் பிரகா
சம்பொருந்திய வெற்றிவேலாயுதமூர்த்திமனதுக்கினிய திருத்தேவி யாகி
யதெள்ளமுதைக்கூட்டிக்கொண்டுபோய் கொல்லைக்குமத்திற்பருத்தமர
ங்களை நாட்டித் தழைகளையும்கொம்புகளையும்பரப்பிப் போட்டிருக்கின்
றபரணினிடத்திலேற்றித் தாயேபக்கங்களிலிருக்கின்ற புனங்களில்வேட
கன்னியர்பாதுகாத்து வருவதைப்போலவிந்தகவணைக்கரத்திற் கொண்டு
மணிகளைவைத்தெறிந்து பட்சிகளைத் துரத்திப் போற்றிவரக் கடவையெ
னச்சொல்லிவைத்தனன், அதைப்பார்க்குமிடத்திற்கிடைத்தற்கரியசிரோ
ரத்தினத்தைக்காட்டிற்சஞ்சரிக்கும் பறவைகள் எளிதிற் கண்டெடுத்தவ
ந்துகுஞ்சுகள் அதன்பிரகாசத்தைக்கண்டு களித்திருக்கும்படிக்குப்புல்
லியகூடுகளிற்பொருத்திவைப்பதைப்போல விருந்தது, சவுனகாதிரிஷிக
ளேபிதாவின்கட்டளையின்படிக்கு வள்ளிநாயகியாரும் அதிகசந்தோஷ
த்துடன்மற்றவேடர்பாவையருடன் நீண்டிருக்கும்யானைத்தந்தங்களை
க்கால்களாகச்சேர்த்து வயிரப்பழுதுகள்மாட்டியிருக்கின்றவணியின் மூ
லமாகத் திருவடிகளைமெல்லமெல்லவைத்தேறி வீற்றிருந்து பெண்கள்சி
காமணியானவள் கவணைக்கரத்திற்கொண்டு நீலோத்பலத்தைப் பழித்து
சேற்கெண்டையைப்போலப்பிறழும் விழிகளைத் தினைப்புனமுற்றினுஞ்
சுழற்றிப்பார்த்துக் காவல்கொண்டிருக்குமுன்னிலையில்நேர்ந்தசம்பவங்
களையுஞ்சொல்லக்கேழ்ப்பீராக கதிர்கள்முற்றும் பருவமாதலாற் பலதி
சையினுமிருந்து பசியசிறகையுடைய கிள்ளைகள்—அன்றிற்பட்சிகள்— மா
டப்புருக்கள்—முதலியபட்சிசாதிகளும்மான்—பன்றி—கடமையாதியமிரு
கங்களும்வள்ளிமலையைச்சூழ்வரத்தழைத்தோங்கி விளைந்திருக்கும்தினை
ப்புனங்களில் வுணவைவிரும்பிப் புறநிலங்களி லிருப்பவை யனைத்தும்
திரட்சியாகவந்துசேர்ந்தது அவற்றின்பெருக்கத்தை யாவராலுங்கணித்
துப்பேசக்கூடுவதோ அக்காலத்திற் கட்டுகள்பூண்டுநீண்டிருக்கும்விற்க
ளைக்கரங்களிற்பற்றியிருக்கும் வேடர்களிட்ட பரணினிடத்தில் எம்பெ
ருமாட்டியாகியவள்ளியம்மையானவள் கவணிற்கட்டியிருக்குங்கயற்றி
னொன்றைவிரலில்முடிந்துகொண்டு கதிர்கள்மலிந்து சோவென்னும்
யிரச்சலைக்காட்டி அசைந்திருக்கும் தினைப்புனத்தினருகில்மான்மரைமு
தலியமிருகங்கள் நெருங்கவொட்டாமலும் கிள்ளைகளாதிய பறவைக்கூ
ட்டங்களிறங்க வொட்டாமலும் கூ வா வெனக்கூவிக்கறைத்து வேலையொ

ப்பக்காதளவுமோடி மைகிமிர்ந்து விளங்கும் நேத்திரங்களைவாய்ந்தவ
ள்ளியம்மனானவள் நவமணியிணங்களைகரங்களுக்கு மாருகச் சேர்த்துக்
கொண்டுகவணிடத்திட்டு கிருகிறெனச்சுழற்றி வீசியோட்டிய விதங்களை
அடியேன் கிருதார்த்தனாதற்பொருட்டுவிரித்துச் சொல்லக்கேழ்ப்பிராக
செந்தாமரைக்கமலத்தைப்பழித்துவிளங்கும் அழகியதிருக்கரங்களிற்ப
ற்றியகவணை ஒவ்வொருதரம் சுழற்றிப் பூவைகளை மாடப்புருக்காள் ஆ
லோலமெனக்கூவி மணிகளைக் கடாவியோட்டியும் அழகிய கலாபத்தை
யுடைய மயிலங்காள் மதுரமாகிய வார்த்தைகளையாடும் பசிய கிளிகாள் ஆ
லோலமென்றதட்டியும் செவிகளுக் கினிமைபெறக்கூவும் கரிய குயில்
காள்ஆலோலமெனத்துரத்தியும் சிவந்தகொண்டையைப்பெற்றிருக்கின்
றசேவல்காள்ஆலோலமெனப்பேசியும் நீண்டகொம்புகளையுடையமான்
காள்பருத்ததேகத்தைப்பெற்ற கடமைகாள்கூரியதந்தங்களைப்படைத்
தபன்றில்காள் ஆலோலமென்றுருத்துக்கற்களைக்கடாவித்துரத்தியும்பல
விதங்களாகப்பட்சிகூட்டங்களையும்மிருகப்பெருக்கையும் அடிக்கடிக
வணைச்சுழற்றி படால்படாலெனமணிகளைவீசித் திசைகெட் டோடப்
பறக்கடித்து வள்ளிநாயகியார்தினைப்புனத்தை ஏமாறுமற்போற்றிப்பி
தாவானவன் வேளைவேளைக்குக் கொண்டுவந்து கொடுக்கும் தேன்தினை
மாகச்சாயவகைகள் பண்டுபலாதிகளைத்திருத்தியாகவுண்டு மனவெழுச்
சியுடனிருக்கின்றதறுவாயில் பாலசுப்பிரமணியதேவர் முனம் அவளுக்க
னுக்கிரகித்திருக்கின்றபடிக்குக்காட்சிதந்து ஆண்டுரட்சிக்கும்படிக்குத்
திருவுளத்திற்கொண்டவராய் கந்தவனாயில் தெய்வயானை யம்மனுடன்
குலவியிருந்தவர் அத்தலத்தினும் முன்போலவேகாட்டி வெளிப்பட்டு
த்தனியனாய்வந்து மூங்கிலடவிநெருங்கி யொலித்திருக்கும்சாலையுடை
யதிருத்தணிகைவனாயைச்சேர்ந்து காலம்பார்த்திருக்குந் தறுவாயில்யி
சைநாலைப்பூரணமாகத்தேர்ந்து அதன்மதுரத்தைப்பாந்தமாகக்கிருகித்
துமனவெழுச்சியுடன் சரிகமபதநிசவென்னும் யிசைக்கிறமப் படிக்கு
யாழினைமீட்டி சிவபிரான் புகழ்த்திறங்களைப்பாடிப் பேரானந்தத்தைய
னுபவித்து உலகமெங்கனு முலவிவரும் தவச்சிரேஷ்டராகிய நாரதரிஷி
தெய்வலோகத்தைக்கடந்து கருங்கடல்சூழ்ந்தபூமண்டலத்தில்வந்தும
கத்துவமுள்ள சிறந்த நதிக ளிருக்குமிடமெங்கனுந் தேடிப்போய்தான
ம்பண்ணி பரமேஸ்பரர் பார்பதியாருடன் களித்தெழுந்தருளி யிருக்கி
ன்றதெய்வீகத்தலங்களிற்போய்ப் பாடியாடிப் புகழ்ந்துபோற்றித்தெ
ரிசித்துஆனந்தபரவசத்தனாய்ப்பூவலம் வருமுன்னிலையில் வளங்களனைத்
தும்பெருத்தோங்கிச் சோலைகள் சுனைகள்மலிந்து மங்களகரமா யிருக்
கும்வள்ளிமலைச்சருகில் வருகின்றதறுவாயில் நீண்டகதிர்களைவிரித்தவி

ணாச்சவிட்டு எங்கனும்பரந்திருக்கும் தினைப்புனங்களினொன்றில்பரணி
னிடத்திருந்து கவணைக்கரத்திற்றாங்கி ஆயாலோட்டிக் காத்திருக்கின்ற
வேடராசபுத்திரியைத் தெரிசித்தமாத்திரத்தில் உளமுமெய்யுமுருகத்த
க்கதாகபத்திவிளங்கிமனப்பூரிப்புடன்கரங்களைக்கூப்பித்தொழுதுஅற்
புதத்தையடைந்தவனாய் எமதன்னையினது மங்களகரமாகியரூபலாவண்
ணியத்தின் பெருக்கையும் குணாதிசெயங்களையும்மனதினாலளவிட்டுப்பு
கழநினைப்பினுமுடிவதோ யித்தகையஎம்பிராட்டியானவள்முற்சென்ம
த்தில்எமதிறைவனாகிய பாலசுப்பிரமணிய தேவருக்குப்பாரியாதற்பொ
ருட்டு அரியதவங்களைச்செய்து அவனருளையும் பெற்றிருப்பதால் யிந்த
மாதாவினது பெருமிதங்களைச் சிவகுமாரனுக்குத்தெரிவித்துக் கவலையி
ற்படுத்திக் கூட்டுறவாக்குவது என்போலிகளுக்காழகும் தவமுமாமெ
னநினைந்து வள்ளிநாயகியாளைமெய்ப்பத்தியுடன்போற்றிவாழ்த்தி அத்
தலத்தைக்கடந்துவிரைந்துபோய் ஒருமுகூர்த்தகாலத்திற்றினந்தோறும்
மூன்றுசெங்கழுநீர்மலர்களைத்தரும் பெருமையினையுடைய சரவணப்
பொய்கைவிளங்கும் திருத்தணிகாசலத்தின்மீதிற்சேர்ந்து அத்தலத்திலி
ருக்கும் திருவாலயத்தினெழுந்தருளியிருக்கின்றபன்னிருபுயாசலங்களை
ப்படைத்த கந்தசுவாமியைவிழிகள்களிக்கக்கண்டு சன்னிதானத்தைச்சே
ர்ந்துமும்முறைவலம்வந்து தீர்கதெண்டன் சமர்ப்பித்தெழுந்துவேதவா
க்கியங்களினாற்றுதித்துப் பேரானந்தவாரியில்மூழ்கிக்களித்தவராய்இத
னைவின்ணப்பஞ்செய்வதாயினர், கர்த்தனே யிதற்குச்சமீபத்தி லொரும
லையிருக்கின்றது அதன்சாரலில்விளங்கும்வனத்திற் சிவமுனி யென்னுந்
தவச்சிரேஷ்டர் மவுனவிரதத்தைப்பூண்டு யோகசாதனையைச் செய்திருக்
கின்றதறுவாயிற் பெட்டைமானொன்று அதிகவடிவுடனெதிரினுவவக்க
ண்டுகாமாந்தகாரனாய்க்களித்துப்பார்க்க அவர்நோக்கம் பட்டமாத்திர
த்தில்கருக்கொண்டுசிலதினங்களுக்குப்பின்பு பெண்குழந்தையைப்பெ
ற்றுத்தன்னினமல்லாதபடியால் மானானது சிசுவைத் தனிமையில் விட்
டோடிப்போயது உடனேவேடராசனெடுத்து வளர்த்துப்போற்ற வள்ளி
யம்மனென்னுந்திருநாமத்தைக்கொண்டுபன்னிரண்டுவயதுபாலகுமா
ரத்தியாய் வள்ளிமலைப் பக்கங்களி லிருக்கும் தினைப் புனத்தைக் காவல்
கொண்டுபரணியிருக்கக்கண்டுவந்தனன், கர்த்தனேஅந்தமாதாவின்சுந்த
ரவடிவின்பெருக்கையும் குணாதிசெயங்களையும் மற்றசிறப்புகளையும்பா
ர்க்குமிடத்திற் செந்தாமரைகமலவாசியாகிய மகாலட்சுமிக்கு மேற்ப
ட்டவனப்பைக்கொண்டிருப்பதாகக்காணுகின்றது யிப்போதுநான்வி
ண்ணப்பஞ்செய்தகாரணத்திற் சற்றும்பிசகிராது எதார்த்தமாகவேநம்ப
த்தக்கது, தேவரீரெழுந்தருளி திஷ்டாந்திரமாகக்கண்டு களிக்கலாகும்.

மேலும் லோகநாயகியாகிய அப்பெண்ணமுதானவள் முதல் மகாவிஷ்
ணுவினிடத்துற்பத்தியாய்த் தமதுதேசோமயமாகிய கோலத்தினிடத்தி
ற்காமுற்று பன்னிருபுயாசலங்களையும் சொற்ணக்கலசத்தையொப்பவி
ளங்கும் தனபாரங்களொன்றுபடத்தழுவி யின்புறும்படிக்கு நினைந்து
அளவற்றகாலம் கடினமாகியதவவிரதங்களைச்செய்திருந்ததுவாயில்தா
மெழுந்தருளிகடாட்சித்தவாறே யிக்காலத்தினுந்திருவுளத்திரங்கித்தடு
த்தாண்டு ரட்சிக்கவேண்டுமென்று நாரதரிஷியானவர் பரிவாய் வேண்
டுகின்றதனத்தையும் பாலசுப்பிறமணியதேவர் நகைமுகராகக்கேட்டரு
ளிதவச்சிரேஷ்டனே நம்மிடத்திற் பிறிதியத்தியுடன் தெரிவித்த சந்தோ
ஷவார்த்தைகளுக்கு மகிழ்ந்தனம் மேலும் நன்காகவும் நடத்தவேண்டிய
காரணமாகவுமிருப்பதால் உன்மனோபீஷ்டப்படிக்கு அத்தலத்தைச்சே
ர்ந்து வள்ளியைவசப்படுத்திக்கொண்டு வரக்கடவோமெனத்திருவாய்ம
லர்ந்தவராய் நாரதரிஷிக்குச் செலவுகொடுத் தனுப்பிவிட்டு அக்கன்னி
கையினிடத்தில் மையல்கொண்டு காமக்கவலையிற்பட்டு மனமுருகிச்சற்
றுந்தாழ்க்கச்சம்மதமில்லாமல் வில்லையும் அம்பையும் யிடைவிடாமற்க
ரங்களிற்கொண்டு வேட்டையாடித்திரியும் வேடராசபுத்திரியானவள் பி
ழைத்தற்பொருட்டுத் திருவுளமிரங்கி சுயஞ்சோதிமயமாகிய தமதற்புத
க்கோலத்தைமறைத்து காமக்குரூதலோபமதமாற்சலியமென்னுங்கவ
லையிற்பட்டு பஞ்சேந்திரியச்சேட்டையின்வயத்தராய்மயங்கியுழலும்மா
னிடவேடத்தைத்தாங்கி வேதங்கள் பூசித்துக் காண்பரியதிருவடிகளிற்க
லின்கலிலெனச்சத்திக்கும் வீரகெண்டாமணியைக்கட்டி சல்லடத்தைத்
தரித்து கச்சையைசுந்தரமுள்ளயிடையினிடத்திறுக்கிப் பரிமள மிகுத்த
புஷ்பமாலையைத் தோள்களினிடத்திற் புரளும்படிக்குச்சூடி நீண்டதனு
வையும் கணைகளையுங் கரங்களிற் கொண்டு காளமேகத்தை யொப்பக்க
றுத்திருக்கும் சிகையைச்சேர்த்து கொண்டையாகமுடிந்து அதனைச்சூ
ழ்வரப் பலகறைத்தாழ்வடத்தைச்சுற்றித் திருப்பாதங்களிற் செருப்ப
ணிந்து யிவ்விதமாகவேடக்கோலத்தைப்பெற்றவராய்க் கிள்ளையையொ
ப்பயிங்கிதவார்த்தைகளையாடும் வேடமங்கையினிடத் துண்டாயிருக்கின்
றமோகமானது நிறையையழித்து மனதைப்பிடித்துத்தள்ள அதன்வய
ப்பட்டு எமதிறைவனாகிய சிவசுப்பிறமணியதேவர் திருத்தணிகை வெற்
பைக்கடந்து செந்தாமரைமலரைப்பழித்து விளங்கும் அழகியதிருவடி
கள்பரல்கள்பரந்தபூமியிற்பதிந்து கன்றிச்சிவந்து காட்டும்படிக்கு வழி
யைத்தாண்டி வள்ளிமலைக்குச்சமீபத்தில்வந்து மண்டலமெங்கனும் புக
ழும் பெருமையினையுடைய அப்பற்வதத்தின்பேரில்மெல்லமெல்லவே
றிக்கதிர்கள்மலிந்து கண்டவர்கள் விழிகளுக்கலங்காரமாக ஓசையைக்கா

ட்டி அசைந்திருக்கும் தினைப்புனத்திற்காட்டும் பரணின்மீதில்நின்று க
வணினிடத்தில்மணிகளைவைத்து கரத்திற்கொண்டு வேலையொப்பக்காத
ளவுமோடி செவ்வரிபரந்து சேற்கெண்டையைப்போலப் பிறழ்ந்திருக்
கும்விழிகளை நாலுமூலைகளினும்பரப்பிக்கிள்ளையாதியபட்சிக்கூட்டங்க
ளையும்மான்மரைமுதலியமிருகங்களையும் நெருங்கவொட்டாமல் அதட்
டிவசிப்பாளாக்கிருக்கும்செல்வத்தைஎம்பெருமாட்டியைத்தெள்ளமு
தைலோகசரணியைத்தன்மனதுக்கினியதிருத்தேவியை ஒருவன்வறுமை
யுற்றகாலத்திற் றன்முனம்வைத்துக்காணாதிருந்த பழம்பொருள்கிடை
த்துக்களிப்பவனைப்போல விழிகள்களிக்கும்படிக்கெதிர்ந்து குடத்தில்
நின்றொழுகுவதைநிகர்த்துத் தேனைப்பெருக்கிப்பொற்சன்னங்களுக்கு
ச்சமதையாய்மகரதந்தங்களையுறைத்து சகத்திர யிதழ்க்களைவிரித்தலரும்
பொன்னந்தாமரைப் பீடத்தளாகிய மகாலட்சுமியைப் போலத் தழைத்
தோங்கிக்குளிர்ந்தநிழலைப்பரப்பியிருக்கும்சோலைகள் காவுகள் தோப்
புகள்பலவகைப்புட்பங்களைவிரித்து மதுரமிகுத்தசெலசமற்திகொண்டி
ருக்கும் சுனைகள் மடுக்கள் ஓடைகள் மிகுதியாய் வளங்கள்பெருத்திருக்
கும்வள்ளிவனா மேற்புறத்திருந்து பிதாவின்வாக்கியப்படிக்குவேறொ
ருகியாபகமுமில்லாமல்நோக்கி சித்தத்தைப்புறம்பிற்செலுத்தாமல் ஏக
மனதாய்ப்பயிரைப்போற்றிவரும் மேகத்தையொத்தகறுத்தகூந்தலையு
ம்மின்னலைப்பழித்துவிளங்கும் அழகியதிரோகத்தையும் மற்றகுணசம்ப
த்துகளையும் பெற்றிருக்கின்றவேடர்பெருமான் தவக்கொழுந்தைகடப்
பமலர்மாலைமணம்நீங்காத பன்னிருபுயாசலங்களையுடைய பாலசுப்பிர
மணியக்கடவுள் நெருங்கி எதிர்க்காட்சியாகக்கண்டவுடன் அனலிற்பட்
டமெழுகைப்போலமனங்கனிந்துவிரசாக்கினிமேலிட்டுஉளத்தையும்உ
டலையும்தகித்து வாட்டச்சோர்ந்துவெம்பி,தாபரித்திருக்கப்படாமையா
ல்தினைப்புனத்தின்மத்தியிலிருக்கும் பரணுக்கருகில் மெல்லமெல்ல நெ
ருங்கிஅம்மன் மீதில்விழிகளைச்செலுத்தி பற்கள்விளங்க நகைமுகமாய்க்
கூரியவேலைப்போலவிளங்கிக் காதளவுமோடி செவ்வரிபரந்து மைதிமிர்
ந்துபாலையொப்பவெளுத்து விஷத்தினுங்கறுத்து மான்பார்வையைப்ப
ழித்தநேத்திரங்களைப்படைத்திருக்கும் பெண்கள்சிகாமணியேமனமிர
ங்கிநான்சொல்லவிருக்கின்றநீதிகளைக் கேழ்ப்பையாக, . உமதுசுந்தரவ
டிவையும் நிலையையுங்கண்டமாத்திரத்தில் நமக்குமனந்தாளவில்லை செ
ல்வப்பெருக்கையுடையபொன்னகரத்தினும்சமுத்திரஞ்சூழ்ந்தபூமண்ட
லப்பரப்பினும் ஆதிசேஷனையொத்தவன்வாழும் பாதலத்தினும் அதிசு
ந்தரவதிகளாகிய பெண்களனைவருக்கும் நாயகமாகப் புகழவல்ல சற்வம
ங்களரூபலாவண்ணியமுள்ள உம்மையொத்தவளைக் கண்டபேரண்டம்

சாயசாரத்தாலம் - சிங்கம் - புலி - யானை முதலிய - கொடியமிருகங்கள் சஞ்சரிக்கின்ற யிந்தமலையின் மீதிற்றனைத் தக்கதிர்களை விரித்திருக்கும் தினைப்புனத்தைக்காக்கும்படிக்கு யாதொருஉதவியுமில்லாமல் தனிமையில் வைத்துப்போனவேடருக்குச் சிருஷ்டிகர்த்தனுகியபிரமன் உமது நாணயத்தையும் பெருமைகளையும் பகுத்தறிந்து அதற்கடுத்த காரணங்களை நடத்தத்தக்கவிவேகத்தையும் பரிவையுங் கிடைக்கச்செய்தவனல்லன் ஐஐயோயிவைநப்யார்க்குமிடத்தில் நீதியுமன்று அவலமாகவு மிருக்கின்றது அதுநிற்க கருத்து நீண்டிருக்கும் கூந்தலைவாய்ந்தபெண்ணரசியேநூலதாரத்திலிருந்துவத்தயான் உமதுமங்களகரமாகிய தோற்றத்தை எதிர்ப்பட்டமாத்திரத்தில் யித்தலத்தைக்கடத் தப்புறம்போகச் சம்மதப்படாமல் மதிமயங்கிவருந்துகின்ற நமதுமனங்களிக்கத்தக்கதாகப் பவழத்தையொத்தவாயைத்துறந்து அருள்நோக்கத்தைச்செலுத்திஉமதுமங்களகரமாகியபெயரைச்சொல்லும் அதற்குச்சம்மதமில்லாவிடின் நீர்வாசஞ்செய்யும் சிறந்தபதியின்பெயரைப்பேசும் அதுவும் சம்மதமில்லாமற்போமாயின ஒப்பற்ற தமதுசீரூருக்குப் போகும் மார்கத்தையாவதுதயைசெய்துகேசயத்தைப்பழித்து விளங்கும் திருவாயைவிண்டு செவிகளுக்கமுததாரையாகப்பூரிக்கவேண்டும் ஓ பெண்கள்நாயகமே என்கேள்விகளைக்காதுகொடுத்துவினவி மறுமொழியாடமனமிரங்கிராயின்யானென்செய்வேன் அவைநிற்க என்மனமும்தேகமும் பூரித்துக் களிக்கும்படிக்கு நகைமுகத்தையாயினுங் காட்டவொண்ணதோ அல்லதுசேற்கெண்டையைப்போலப்பிறழும் திருநோக்கத்தைக் குளிர்ச்சியாகச் செலுத்தவேண்டும் உமதுதெரிசனையைக்கிடைத்தமாத்திரத்தில் மனநிலைகலங்கி பொறிகள்மயங்கிக் காமக்கவலையிற்பட் டுழலும் தமியேன்களித்துப்பிழைக்கும் மார்கமொன்றைக்காட்டாமற் சற்றும் என்னிடத் தன்பைச்செலுத்தாமலும் யிரக்கமற்று யிவ்வாறே யிருப்பையாகில் சத்தியமாகச்சொல்வேன் எக்காலத்திலுந்தீராத பழிபாதகம் உம்மைச் சேருவதற்கையமில்லை பராமுகமாயிராமற் றுரிதமா யிதற்கொரு வகைதேடவேண்டுமென்று உலையிற்பட்டமெழுகைப்போலமனங்கரைந்து வேடப்பாவையின்பேரிற்கொண்ட மையல்வலையிலகப்பட்டுக்கொண்டு திகைப்பவனையொப்பப்பற்களைக்காட்டி முகமலர்ச்சியுடன் வருந்திக்கெஞ்சிக்கெஞ்சிக் கரங்களை நீட்டிநீட்டிக்குறையிரந்து நின்றனன், கேட்டீர்களோசவுனகாதிதவத்தரோ அக்காலத்திற் பாலசுப்பிறமணியக்கடவுள்நடித்ததிருவிளையாடல்களைப்பார்க்குமிடத்திற் சோடசகலைகளையுடையசந்திரன்விளக்கமானது அலைகள்மிகுத்த நீர்ப்பெருக்கு தோற்றும்போது கலங்கிக்காட்டுமாறுபோல விளங்குகின்றது யிவ்விதமாகக்குமாரதேவர்கே

சவன் திருக்குமரி எதிரில்நின்று யிங்கித வாற்தைகளைப் பேசி மையற்
பெருக்கைக்காட்டி பலபலவழக்குகளைக்குறித்து வாதாடிக்கொண்டிரு
க்கிறதறுவாயில் வள்ளிபம்மனுக்குத் தினந்தோறுங்காலங்களில் உணவு
கொண்டுவந்து கொடுத்துப்போகும்வழக்கப்படிக்கு வேடராசன் தன்
பரிசனர் பன்றி-மான்-சறடி-யானைமுதலிய மிறுகங்கள் பட்சிசாலங்க
ள்பயந்தோடியொளிப்பதாகச்சொம்புகளையூதியும்பறைகளை கணகணெ
ன்றறைந்துக்கூக்குரலிட்டும் துடர்ந்துவரத்தக்கதாகத் தன் சேனாக்க
டந்து தினைப்புனத்தைநோக்கிவருவதைக் குமாரசுவாமியார் தெரிந்தவு
டன் அவர்களுக்குத்தமது நிசதெரிசனையைக்காட்டாமல்மறைத்து வே
தங்கள்வேராகவும் சிவாகமங்கள்அடித்தூண்டமாகவும் தருமசாத்திரம்
கலைக்கியானங்களாதியாகக்-கிளைகள் இலைகள் தளிர்-மலர்-பிஞ்சு-காய்-
கனியாகவும் யித்தகையசிறப்புகளைப்பெற்றிருக்கும் வேங்கைமரக்கோ
லங்கொண்டு குளிர்ந்தநிழலைப்பரப்பிக் கற்தன்நின்றபோது வேடராச
னும்அதிசந்தோஷித்துடன் தீவரமாய்த் தன்புத்திரிகாவல்கொண்டிருக்
கும்கொல்லைபைச்சேர்ந்து தன்குலம் நீடூழிகாலம்புகழ்பெற்றோங்கும்
படிக்குஎழுந்தருளியிருக்கும் பதிவிறுதாசிரோமணியைக்கண்டு தாயே
மிகவும்பசித்திருக்கின்றனையோவெனப் பாராட்டித் தான்பதன்படுத்திக்
கொண்டுவந்த வள்ளிக்கிழங்கு தினைமா தேன் திரட்டுப்பால் மதுரமிகு
த்தபழவகைகளாதியான தின்பண்டங்களைக்கொடுத்துதினைப்புனத்தைப்
பதலமாகப்போற்றியிருக்கும்படிக்குச்சொல்லித்திரும்புமுன்னிலையில்
பக்கத்திற்றழைத்தோங்கிநிற்கும் வேங்கையைக்கண்டவுடன் அதிசெயி
த்திருக்கின்றதறுவாயில் ராசனுடன்வந்த கொலைத்தொழிலையுடைய கடி
னசித்தராகியவேடரும்பார்த்து பிரமித்தவர்களாய் யிதுபரியந்தம்நாம்
வரப்போகவிருக்கின்றனம் யிந்தமரத்தைக் கண்டதுகிடையாது நூதன
மாகக்காட்டுகின்றதால் யிதனுற்சிலதீங்குகள்நேரும்போலக் காணுகின்
றது, ஆதலாற்சூரியக்கிரணங்களையடக்கித் தழைத்திருக்கும்வேங்கைமர
த்தையிந்தநிமிஷத்தில்முறித்தெறிவோம்வேருடன்பறித்துத்தள்ளுவோ
ம்கோடாலியினாற்சறணையாடுவோம் தரிதமாய்எதைக்கொண்டாவது அ
தப்படுத்திப்போடுவது உத்தமமென்று பலபலவிதங்களாகப்பேசி மே
விடும்தியலாவிலக்கி அரசன்குமார்த்தியினது முகத்தைப்பாத்துப் பரிம
ளமிகுத்தபுஷ்பங்களைவிரித்து வேங்கைமரமொன்றுபுதிதாய் யிதோகா
ணுகின்றது யிதுவருங்காரணமென்னே உண்மையாகச் சொல்லக் கட
வையெனக்கேட்டமாத்திரத்தில் அம்மன்பயந்து அப்பனேயிந்தமரம்
வந்தனதுவைபெனக்கொன்றுந்தெரியாது மாயமாகவிருக்கின்றது நே
த்தியதினமில்லாதது அதிசெயமாகத்தோற்ற விருக்கின்றதெனத் திரோக

மும்மனமும் நடுங்கும்படிக்கு யிதுதவிர் எனக்குயாதுந் தெரியாதெ
னப்பேசியதறுவாயில் பிதாவானவன்பரிவாய் தாயே அச்சப்பட வேண்
டாம் நீ தனிமையில்யிவடத்தில்யிருக்கிறபடியால் அழகாய்ப் பூத்திருக்
கும்வேங்கை உனக்கு மலர்களைப்பறித்துக் களித்து காலங் கழிக்க உப
யோகமாகவிருக்கும் ஆதலால்பயமில்லை கிளிகள்முதலானசெந்துக்களைக்
கிட்டவொட்டாமல் கியாபகமாய்ப்பாத்திருவெனக்கட்டளையிட்டு வே
டர்களுடன் திரும்பித் தன்குறிச்சியைச் சேர்ந்திருந்தனன். இவ்விதமா
கஅவர்கள்மறைந்தவுடன் கொல்லைக்கருகில் வேங்கையுருக்கொண்டுநின்
றசுப்பிறமணியதேவர் அக்கோலத்தைமாற்றிப் பழையபடிக்கு மன்ம
தனிலும்அதிகசுந்தரமுள்ள மானிடவடிவைத்தாங்கி வேடராச புத்திரிக்
கெதிரில்நின்று காமக்கவலையிலகப்பட்டு வாடுகின்றவனைப்போலப் பல
நடனங்களைக்காட்டி நகைமுகராய்க் கரியஅளகபாரத்தையுடைய வள்ளி
நாயகியாருக்குச் சமீபத்திற்போய் அவளிடத்திலிருக்கும் கிருபைப்பெ
ருக்கினால்யிதனைச்சொல்வதாயினர்; கோங்கரும்பையொப்பக் குருத்து
ப்பொற்குடத்தைப்பழித்து விம்மித்ததும்பித்தேமல் பரந்திருக்கும்
தனபாரங்களைக்கிடைத்திருக்கின்ற குறப்பாவாய் தயைசெய்து சேழ்ப்
பையாக, உன்மங்களகரமாகியவடிவின்பொலிவையும் குணாதி செயங்க
ளையுங்கேழ்விப்பட்டு தொலைதூரத்திலிருந்து மிகவும்வருந்தி உன்னைநா
டியிவடம்வந்தேன் யினிதேவரீர் செந்தாமரைமலரையொத்ததிருவடிக
ளல்லது வேறுகெதியில்லை எக்காலத்திலும் உம்மைப்பிரியவறியேன்சற்
றும்யிடைவிடாமற்கலந்து குலவியிருக்கவிரும்பினேன் மாவடுவைப்
போலப்பரந்தோடியிருக்கும் விழிகளையுடைய பெண்ணமுதமே தீன
னாகியயான்தம்மைவிட்டுப்போகவுந் துணிவனே அப்படிக்குச் செய்ய
வெத்தனப்படினும் மனமொருமித்துநிற்குமோ உடலைப்பிரிந்துஉயி
ர்தாபரித்திருக்கவல்லதோ யிக்காரணங்களை விரித்து விரித்துப்பேசவும்
வேண்டுமோ மின்னலையொப்பக்காட்டிமறையும் மெல்லிய யிடையை
யுடைய பேதாய் மைதிமிர்ந்துவேலைப்போலக்காட்டும் தேவரீர் கூரியக
ண்களின்சுழல்வலையிற்பட்டு வாடித்திகைக்கின்ற அடியேனுக்கு கிருபா
நோக்கக்கடையையாவதுகாட்டாமல்தாழ்க்கலாகுமோ யிதையன்றியில்
பிழைக்கும்மார்க்கம்வேறுண்டோயிந்தஅபாயகாலத்திற்சற்றுதயைசெய்
துதமதுதிருக்கரத்திலணைந்து ஊசலாடும் யிவ்வுயிரைக் கார்க்கக்கடவை
தருக்களடர்ந்திருக்கும் மலைச்சாரலில்வாழும்வேடமின்னே தீர்களித்து
நீராடபோக்கியமாகியசுனையாய்மனவெழுச்சிபெறு கொங்கைகளினிடத்
திற்பூசும்பரிமளமிகுத்தசாந்தமாய்க்கறுத்து நீண்டிருக்குங் கொண்டை
யினிடத்திற்செருகவல்லசுகந்தங்களைவீசும்புதியமலராயுருப்பெற்றுதம்

மைச்சேர்ந்தமகிட்சிபெற்றிருக்கும் பாக்கியத்தைப்பெருமற்போனே
ன்விரசாக்கினிமேலிட்டுத் திரேகத்தையும் மனதையும் சுட்டுக்கொளுத்
துவதினல் மிகவும் வாடுகின்றனன், தமதுகிறமைக்குப் பாத்திரமாதற்
பொருட்டுயினிசெய்யவேண்டுங் கருமமென்னேயாதுந்தோற்றவில்லை,
அதைக்காட்டுவையாகில் மனேபீஷ்டப்படிக்குநடத்தக்காத்திருக்கின்ற
னன் ஓபெண்கள்சிகாமணியே யிதுவெள்ளவனியாயம்சிங்கசார்தூலங்க
ளாதியகொடியசெந்துக்கள்சஞ்சரிக்கும்யிந்தஆரண்ணியத்தில்அபலமா
கியதினைப்புனத்தைப்போற்றிவருவது தம்மையொத்தபெண்கள்சிகாம
ணிக்கடாதுஅடாது மிகவும்யீனமாகக் காணுகின்றது என்கண்ணேஆவி
யேகிலையபுற்றுட்பின்பற்றிவருவீராகில்மகசேந்திராச்சம்பத்தையுடைய
பொன்னுலகவாழ்வைப்பெற்றிருக்கும் அரம்பாஸ்திரீகளெவரும்வணங்
கிவேண்டியதொண்டுகளைச்செய்து போற்றிவரவும் தெய்வயோகமுற்றி
னும்தாமேஅனுபவித்துக்களிக்கிருக்கவைப்பேன் இஃதன்றியும் தேவரீ
ர்மனதில்விருப்புற்றவைகளைத் திருவாயைத்துறந்து சொல்லுவீராகில்எத்
தகையதாயினும் அவற்றையிந்தநிமிஷத்திற் றேடித்தரவல்லேனென்று
யிவ்விதங்களிற்பற்பல யிஞ்சொற்களைப்பேசி காமவாகிரியனுண்டா
கும்வருத்தங்களைக்காட்டிக் கரங்களைநீட்டி பற்களைத்துறந்து நலகமுக
னுய்கெஞ்சிநிற்கின்றதருவாயில் வேடராசபுத்திரியானவள் அவ்வாக்கி
யங்களனைத்தையுங்கேட்டுக் குறிப்பாய்க் குமாரசுவாமியார் மனக்கருத்
தைநிதானித்தறிந்துகொண்டு யிவர்வடிவின்பெருக்கும் குணதிசெயங்க
ளும்கொஞ்சிப்பேசும் வார்த்தைகளின்குளிர்ச்சியும் வெகுநேர்த்தியாகவி
ருக்கின்றதென்று மனதிலெண்ணி நாணமிகுதியினற் றலையையிறங்கியி
வ்விதமறுமொழிகளைப்பேசுவதாயினள், நான்யிழிகுலமாகிய வேடர்
பாவையாகும் உம்மிடவடிவின் சீரையும் நடைநொடி பாவனைகளையும்
பார்க்குமிடத்தில் ராசகுமாரனுகவும் புவனங்களனைத்தையும் பாதுகாத்
துரட்சிக்கும்முதல்வனுகவுங்காணுகின்றது, அத்தகையசிறப்பினைப்பெ
ற்றிருக்கின்றதேவரீர் யீனளாகிய என்னைத்தழுவநினைந்து தகாதனவாகிய
வார்த்தைகளைத் தயிரியமாய்ப்பயமற்றுப்பேசுவது பழியல்லதநன்மார்க்க
த்துக்கடுப்பதோ கதிர்களைவிரித்துச்செழித்திருக்கின்ற தினைப்புனத்தை
ப்போற்றிமிகவும்அருசியாயிருக்கின்ற குறப்பெண்ணினிடத்தில் உலக
ங்களைப்பரிபாலனஞ்செய்யவல்ல தம்மையொத்த இறைவன் உளமயங்
கிகருத்தழிந்து பித்தனையொப்பப்பேசிகலவியை யிச்சித்துவழக்காடுவ
துஞியாயமல்ல வீரத்தன்மைபொருந்திய புலியானது பசிப்பிணியினுல்
வாடுமாயினும் அற்பமாகியபுல்லைத்தின்ன நினைப்பதுண்டோவென வள்
ளிநாயகியார்யிவ்விதங்களிற்பற்பலநீதிகளையும் பகுப்பையும் விரித்துக்

காட்டிமறைந்தலைபேசியகாலத்தில்எமதன்னைமனம்திடுக்கிட்டுபயப்பிருந்
திகொள்ளும்படிக்குவேடர்திரண்டு குறிஞ்சிப்பறைகளையும் பம்பையா
தியவாத்தியங்களையும்முழக்கிக்கொண்டு சூழ்ந்துவரும்படிக்கு அரசன்
தன்படியைக்கடந்துவருகின்ற ஆடம்பரங்களைத் தெரிந்தமாத்திரத்தில்
வள்ளியம்மன் திரேகமுற்றும் வியர்க்கநடுநடுங்கி மனம் நிலைபெறாமல்
வாந்திக்கரங்களைப்பிசைந்துகொண்டு எமதுகர்த்தன் திருமுகமண்டல
த்தைப்பார்த்து ஐயனே கொலைத்தொழிலையே முக்கியமாக வெண்ணிந
டாத்தும் தீயசெய்கைகளையுடையவேடர் மிகவும் கொடியர் முன்பின்
யோசிக்கும்தாட்சணியமென்பது அவர்களிடத்திற்கிடையாது ஆதலாற்ச
ற்றும்தாழ்க்காமற்றுரிதமாய்யித்தலத்தை நீங்கியோடித் தப்பிப்பிழையு
ம்யிதுதருணமேதம் போம்போமென்று பரிவாய்ப்பேசியஅன்பின்கா
ரணங்களைத்தெரிந்தவுடன் கர்த்தனுக்கு மனம்பூரித்துப்பெண்ணரசியே
பயப்படவேண்டாம் உமதெண்ணப்படிக்குச் செய்வோமெனச்சொல்
லிதேசாதேசங்களெங்கனும் புகழ்ந்துபோற்றத்தக்க சைவ சமையத்தை
யனுசரித்துநடந்துகொள்ளவல்ல விரதசன்னியாசிவேடங்கொண்டுஅதி
கஆற்பாட்டங்களைக்காட்டி அதட்டி உருட்டி கெக்கலிகொட்டி மிருக
ங்களைத்துரத்திக்கொண்டுவருகின்ற வேடர்களெதிரிற்போய் ராசனைக்க
ண்டுபரிபூரணகடாட்சத்தைப்பாலித்துகரத்திற் பற்றியிருந்த பையிலி
ருக்குந்திருநீற்றையிருவிரல்களினு லெடுத்து சிவநாதனே ரட்சிக்கக்கட
வனெனக்கொடுத்து ஓ வேடர்பெருமானே சென்றசென்ற யிடங்களில்ச
கலவெற்றிகளையுங்கிடைத்துச் செயசாலியாய்ச் செல்வச்சம்பத்தை யனு
பவித்து நீடூழிகாலம்வாழக்கடவையென பற்பலவாழ்த்துகளைச்சொல்லி
ஆசீர்வதித்தபோது வேடர்பெருமான் தன்கரத்திற்கொடுத்த விபூதியை
நெற்றியிற்சாத்தித் துரிதமாய்த்தன்முடி கர்த்தன்பாதகமலங்களிற் படு
ம்படிக்குத்தீர்க்கதெண்டன்சமற்பித்து சுவாமிகள்வயதுமுதிர்ந்த விர்த்த
ராய்காடுசூழ்ந்த யிந்தபர்வதத்தைத்தேடிவந்தது நானும் எங்கள்முன்
னவர்களும்செய்ததவமாகும் ஆதலால்தேவரீருக்கு விருப்பமாகியவஸ்
துக்களேதேனு மிருக்குமாயின் தயைசெய்துசொல்ல வேண்டும் யிந்த
நிமிஷத்திற் றரிவித்துக்கொடுப்பேனெனப்போற்ற முன்னிலையிற்சர
வணபவன்அவனிடத்திற்பரிவாய்வேடர்மரபிற்சிறந்தராசனேகேட்பிரா
க,வயதுமுதிர்ந்துசரீரம்தளர்ந்துவந்தயிடத்தைத்தேடியிருக்கும்பருவ
முடையஎனக்கு நீயென்னகொடுக்கப்போறாய் நமக்கொன்றுந்தேவை
யில்லை அப்பா நமதுவரவின்காரணத்தைக்கேழ்ப்பையாக யிந்தவள்ளிவ
லையிலுதித்து உங்களனைவருக்கும் பிரியமாகவிருக்கின்ற குமரியைக்க
லந்துயிக்காலத்தில் நேர்ந்திருக்கின்றமனமருட்சி தீர்க்கத்தக்கதாக எத்

தேசகாலமும் அதிற்படிந்து யின்பக் களிப்பை யனுபவித்துச் சவுக்கிய
மாயிருக்க விருப்புற்று துலதாரத்தி னின்று வருந்தி வேகமாய்வந்தன
ம் அப்பேறு நமக்குக்கிடைக்குமாயின் அதுவே நீயெமக்குச்செய்யவே
ண்டும்உபகாரம் என்னையொத்தவனுக்கு வேறுமொரு பொருளைத் தர
வேண்டுமோவென்று தவங்களிற்சிறந்த முநியாகவந்த கர்த்தன் சிலே
டையாகச்சொன்னவிசேஷித்தை வேடராசன்உண்மையாகக் கேட்டவுட
ன் நல்லகாரியம் தேவரீர்சோதிக்கையின்படிக்கு அந்தக்குமரி தீர்த்தத்தி
ல்முழுகி உம்மிடயிஷ்டசித்தியைமுடித்துக்கொண்டு என்பெண் தனித்
திருக்கின்றனள், பெரியவரோ அவளுக்குத் துணையாகவும் அடிக்கடிக்கு வ
ந்து விசாரணைசெய்துபோகவேண்டுமெனப் போற்றுவதற் கிரங்கி யிது
மிகவும்அழகாயிருக்கின்றது அவ்வாறேசெய்யக் காத்திருக்கின்றனனென்
னச்சம்மதித்துக்கொண்டனர், அரசனும்அதிகசந்தோஷித்துடன் குமா
ரீத்தியிருக்கின்ற கொல்லையைச்சேர்ந்து தினைமா கிழங்கு தேன் கனிவ
கைகளாதியாகவேண்டுவையனைத்தையும் வழக்கப்படிக்குக் கொடுத்துத்
தாயே யிந்தபெரியவர் குமரிதீர்த்தமாடவந்திருக்கின்றனர், உனக்கும்ச
காயமாயிருப்பரெனத்தெரிவித்து அவர்களிருவரையும்அத்தலத்தில்நிறு
த்திப்போட்டு வீரகண்டாமணிகலிக்கும் பாதங்களையுடையவேடராசன்
தன்பரிசனருடன் திரும்பி பதியைச்சேர்ந்தனன், அவர்கள்மறைந்தவுட
ன்முநியர் வள்ளியம்மையைப்பார்த்து பெண்கள்சிகாமணியே என்செய்வே
ன்பசிப்பிணிபாதிக்கின்றது தாபரிதிற்சப்படவில்லைகளைத்துவருகின்
றது எதனையாவது தின்றாற்று சாப்பிடாவிடில் மோசம் வரும்போற் கா
ணுகின்றதெனப் பரிபவப்படுவதைக்கண்டவுடன் எமதன்னைக்குமிகவு
ம்யிரக்கமுண்டாய் பெரியவரோ பயப்படவேண்டாமென்றுதரித்ததி
னைமா தேன் கனிகளை நீட்டியபோது கபடசன்னியாசியானவர் ஆவலு
டன்காங்களையேற்றுவாங்கிக்கொண்டு துரிதமாயுண்டு அப்பா பசிதணி
த்ததாயினும் வெய்யலில்நடந்துவந்த வேஷ்டையினாலும் உதரவங்கிப்
பெருக்கினால் நெஞ்சுலர்ந்திருந்தபோது மாவைமிகுதியாகத்தின்றதினா
லும்கண்டத்திலடைத்துக்கொண்டு வருந்துகின்றனன், நீர்வெடாய்ப்ப
ட்டுமூர்ச்சிக்கவருகின்றது யிதற்கென்செய்வேனென மிரளமிரளமுழிப்
பதைவேடர்பாவையறிந்தவுடன் ஓ தவச்சிரேஷ்டரே காலதாமசஞ் செய்
யாமல்இந்தமலையைத்தாண்டி யிதற்கடுத்துக் காட்டும் ஏழு குன்றுகளை
க்கடந்துபோவீராகில் அவ்விடத்தில்மதுரமிகுத்த நீர்ப்பெருக்கையுடைய
ஒருசுனையிருக்கின்றது திருத்தியாய்வேண்டியமட்டுஞ் சாப்பிட்டுவருவீ
ரெனச்சொல்லியபோது தனுப்பாணிகளாகியவேடர்பெருமான்மனதுக்கி
னியபெண்ணேதாகத்தினால் சோபிக்கின்றதுமல்லாமற் றள்ளாதகிழவனு

யிருக்கப்பட்டநான்பர்வதங்களின்மத்தியிற்போகப்பட்டபாதையையெ
ப்படிக்குக்கண்டுபிடிக்கப் போறேன் மேலும் முன்பின்யிவடம் வந்தி
ருந்துபழகினவனுமல்ல ஆதலால்பாதங்கள்வருந்துமென்று தாழ்க்காம
ற்றுரிதமாய்என்னுடன்வந்து சுனைநீரைக்காட்டித் திரும்பிவிடுமென்று
சண்முகங்களைமறைத்து விருத்தவேடத்தைத்தாங்கி எதிரில் பாசாங்குக
ளைக்காட்டிநிற்கின்றகள்வன்சொல்வதை வள்ளியம்மை எதார்த்தமாகநம்
பியிரங்கினவளாய் பரணைவிட்டிறங்கி சுவாமி வாரும் வாருமென்று தா
ன்முன்னதாகவழிகாட்டி யிட்டுப்போய் குன்றுகளனைத்தையுங்கடந்து
குளிர்ந்தசெலப்பெருக்கையுடைய சுனையைக்காட்டியபோது வேடாய்
த்தவனைப்போலயிருகரங்களினாலும் புனலைவாரிவாரிக்குடித்து அகமுகம
லர்ச்சியுடன்தேவியைக் கிருபையாகப்பார்த்து யிதனைச் சொல்லுவதாயி
னர், ஓ பெண்கள்சிகாமணியே உதரத்தைக்கொளுத்திப் பிராணனை வருத்
திச்சரீரத்தைச்சோரச்செய்து பாதித்திருந்தபசிப்பிணியைத் தவிர்த்துதா
கசாந்திக்குச்சுத்தோதகத்தையுங்காட்டி நீர்வேட்கையைத் தணித்தீர் யித்த
னையபேருதவிகளைச்செய்தபோதினும் யின்னமும்நமது மனத்தளர்ச்சி
நீங்கவில்லைமேகத்தை நிகர்த்தகரிய கூந்தலையுடைய மின்னே என்னுவி
யேஅடியேன்கொண்டிருக்கும்மோகக்கவலையையும்தணியச்செய்து ஆத
ரிப்பீராகில்நமக்குச் சம்பவித்திருக்கும்குறைபாடுகளனைத்தும் முற்று
ப்பெற்றதாகக்களிப்போமென்று சலனமற்றவிரதசன்னியாசி மிகவும்
வருந்திமதிமயங்கி யிருகரங்களையுஞ்சேரக்கும்பிட்டு குறையிரந்து எ
திரில்நிற்கின்றதருவாயில் சுகந்தபரிமளங்களைவீசும் சிறந்தமலர்களைய
ணிந்திருக்கும்அளகபாரத்தையுடைய நங்கைநகைத்துப் பெருமூச்செ
றிந்துநடுநடுங்கிச்சிறி மாறுத்திரங்கொடுப்பதாயினள் நற்கெதியிற்சே
ர்க்கவல்ல சிறந்ததவவேடத்தைப்பூண்டிருக்கின்ற முதியரோ மதிமருண்
டுதகாதவார்த்தைகளைப்பேசினீர் ஐயரோ உமது குணதிசெயங்களை யோசிக்
குமிடத்தில்எப்படிக்கிருக்கின்றதெனில் சகலருக்கும் மதுரமிகுத்தபா
லைப்போலக்காட்டிசாப்பிட்டகாலத்தில் அவர்களுயிரைவாட்டும்விஷத்தி
னும்கொடுமையாகத்தோற்றுகின்றது பட்சிகள்மிருகங்கள் சேரவொட்
டாமல்தினைப்புனத்தைக்காவல்கொண்டிருந்த என்னைகுற்றமற்ற தவங்க
ளைப்பெற்றமுநியைப்போலவந்து ஏதோசிலயிங்கிதவார்த்தைகளையாடி
வஞ்சித்தநெடுந்தூரங்கொண்டுவந்து நம்மை ஆலிங்கனஞ்செய்யவிரு
ம்புற்று நினைத்தற்கரியதகாதகாரணங்களைக் குறித்துக்கெஞ்சிக் கரங்க
ளைக்கூப்பிஎதிரில்மறித்துநிற்பது உம்மையொத்த தவத்தருக்குநீதியோ
உம்மிடமாறுபட்டசெய்கைகளிற் சிறிதேனும் நம்மவராகிய வேடருக்
குத்தெரியுமாயின் நம்மிருவருக்கும் துரிதமாய்க்கொடியதீங்குவந்தே

ருவதற்கையமில்லை சங்கைப்போலவெளுத்த சிகையையுடைய முதியரோ
யிவ்வனாயில் நன்னெறிலை யனுசரித்துவந்த உம்மிடத்திற் சற்றும்நல்
லுணர்ச்சியைக்காணேன் நீவிரித்தனைக்காலத்தைக் கழித்தீர் யிதனாற்பிறை
யோசனமொன்றுமில்லை இழிகுலத்திற்பிறந்தவென்னிடத்திச்சைகொண்டு
பயித்தியங்கொண்டவனைப்போல வாயில்வந்ததுகளைப் பினத்துகின்றீர்
யிதைப்பார்க்குமிடத்தில்வில்வேடர் மரபுக்குத் தீராதபழி யொன்றை
நாட்டவெத்தனித்திருப்பதாகக்காணுகின்றது நான்காவல்கொண்டிருந்
ததினைப்புனத்தினிடத்திலொருவருமில்லாமையால்மிருகங்கள்பட்சிக்கூ
ட்டங்களனைத்துஞ்சேர்ந்து முதிர்ந்தகதிர்களனைத்தையும் தறித்துக்கொ
ண்டுபோவதன்றியில் பயிரையுஞ்சின்னபின்னப்பட அழித்துப்போடும்
என்பிதா அதைப்பார்ப்பாராகில் கோபித்துக் கொள்ளுவர் ஆதலால்பே
ச்சுக்கற்றகிழத்தவத்தரோ நீர்சற்றும்யிவடத்தில்நில்லாமல் நடந்துவிடும்
நடந்துவிடும் அல்லதுவந்தகெதியைப்பட்டுக்கொள்ளும் சற்றுந்தாழ்
க்காமல் நான்விரைவிற்போய்க் கொல்லையைச்சேருவேனென்று கூறிக்
கொண்டுவள்ளியம்மன் வேகமாய்நடக்கும்போது பாலசுப்பிரமணிய
க்கடவுள்இலக்குமியையொத்த பெண்கொடியின் மனஉறுதிக்குமெச்சி
த்திகைத்தவராய் யினியென்னசெய்வோமெனச் சற்றுயோசித்து ஒருநி
னைவுகொண்டு ஒப்புவமையற்றமுன்னவனாகிய விநாயகமூர்த்தியைக்குறி
த்து மீறிப்போகின்ற யிக்கன்னிகையினெதிரி லெழுந்தருளித்தடைசெ
ய்யவேண்டுமெனப்போற்றுகின்றதறுவாயில் தம்பியினிடத்திற் பரிவா
ய்அவர்கோரிக்கையின்படிக்கு பருத்ததிரேகத்தைப் பெற்றமதயானையி
ன்கோலங்கொண்டு கடலைப்போலிரைந்து திசைகளதிரவீறிட்டுப்பருத்
துதீண்டிருக்கும்துதிக்கையை நீட்டி மரங்களை வேருடன் பறித்து வழி
யையடைத்து அதிசஉற்பாதத்தைக்காட்டி வள்ளிநாயகியாருக் கெதிரில்
வருவதைக்கண்டவுடன் என்செய்வள் மனம்கலங்கி நடுநடுங்கித் திரேக
முற்றும்வியர்க்கமதிமருண்டு யாதொரு உதவியையுங் காணாதபடியால்
ஈரோவெனத்திரும்பி கைகால் உதறலெடுக்கத்தக்கதாக வேகமாயோடிவ
ந்துதவவேடத்தைக்கொண்டிருக்கும் குமாரதேவர்பக்கலிற் சேர்ந்தசு
வாமியிதோமதயானை துரத்திவருகின்றது அதன்வசப்பட்டு மாண்டுபோ
காதபடிக்கு யித்தருணத்தில் அடியாளிடத்திரக்கமுற்று அதைத் துரத்தி
காற்சக்கடவீர் நீர்குறித்தபடிக்கெல்லாம் சம்மதப்படுவேன் படுவேனெ
ன்றுபின்புறத்தில்வந்துமுதுகைத்தழுவிக் கட்டியணைத்திருந்தனள், சவு
னகாதிரிஷிகளே யிந்தத்திருவிளையாடல்களை என்சொல்வேன் முனந்தெய்
வயானையைமணந்து மருப்பையொத்த யிருதனபாரங்களுமழகியதி
ருமார்பிற்றிளைக்கும்படிக்குத்தழுவி யின்புற்றிருந்த கமதனிக்காலத்

திற்பிடநடையவாய்ந்த குறப்பாவையினதுசொற்னசலசங்களைப்போ
ன்றகொங்கைகள்முதுகினிடத்திற் றுக்கியபோது வயிரத் தம்பத்துக்
கொப்பாகநின்ற பாலசுப்பிறமணியதேவருக்குத் திரோகம்பூரித்து உள
முங்குளிர்ந்து திருமுகமண்டலத்தைச் சற்றுதிருப்பி பெண்கள் சிகாம
ணியேபயப்படவேண்டாம் யானையைத் துரத்திவிடுவோம் மனச்சஞ்சல
மற்றிருக்கக்கடவையென்று பற்பலவார்த்தைகளைச்செல்லி ஆதரித்துத்த
ந்திமுகத்தெற்தையத்தியானித்து வந்தனைகளைச் செய்துவழுத்தி தேவரீ
ர்தயைசெய்தெழுந்தருளிய காரணத்தினால் மனதைப்பிடித்தலைத்திருந்த
கவலையைப்போக்கினேன் மங்கையும் என்னிஷ்டப்படிக்குச்சம்மதப்ப
ட்டுச்சேர்ந்தனள், எமதிறைவனே எதால்தானத்துக்குத் திரும்பக்கடவீ
ரென்றிரந்ததறுவாயில்விநாயகமூர்த்தியுந்தம்பியினிடத்திற்றயைசெய்து
மறைந்தனர், பின்புசரவணபவன் வள்ளி ம்மனைத்தழுவிக்கொண்டுபோ
ய்ஒருபூங்காவைச்சேர்ந்து உளமுந்திரோகமும்பூரித்துக்களிக்கத்தக்கதா
சக்கலத்தின்புற்று மனமகிழ்ந்தவராய் அவளிடத்திற் கிருபையுற்றுச்சடு
தியில்மறைந்து வயிரமுடிகள் கவித்திருக்கும் சண்முகங்கள் பூற்ணசந்
திரோதையங்களைப்போலப் பிறகாசிக்கவும் துவாதசாதித்தரை யொப்ப
ப்பன்னிருமகரகுண்டலங்கள் செவிகளினிலங்கவும் நவரத்தினமயமா
கியவாகுவலயங்களைப்பூட்டியிருக்கும் டன்னிருபுயாசலங்கள்கெம்பீர
மாகக்காட்டவும் முப்புரிநூல்புரளும் விசாலமாகிய மார்பையும தண்
டைசிலம்புசரித்துக்கொஞ்சுந்திருவடிகள் தாமரைக்கமலங்களை யொப்
பக்காட்டவும் வெற்றிவேல்-தனுசு -சக்கரம்-கதைமுதலிய படைகள்வி
ளங்கும்கரதலங்களைக்கொண்டு பொன்னையொத்தகண்களையுடையகலாப
த்தைவிரித்து நடிக்கும்மஞ்ஞைவாகனத்தின்மீதி லெழுந்தருளிக்குறம
கள்நேத்திரோற்சவமாகத் தெரிசித்துக்களிக்கும்படிக்குப் பாலசுப்பிற
மணியதேவர்காட்சிதந்தனர், யித்தகைய மங்களகரமாகிய திருக்கோலத்
துடன்வெற்றிவேலாயுதமூற்த்தியானவர் எதிரில்நிற்குங்காட்சியை வள்ளி
யம்மன்தெரிசித்தவுடன் விழிகளில்ஆனந்தவாரிபெருகத் திரோகம் பூரித்
துமனமகிட்சியுடன்மும்முறைவலம்வந்து பலதரம்திருவடிகளிற்பணி
ந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு மெய்ப்பத்திவிசுவாசத்துடன் கற்தன்
பெருமைகளையுங் குணாதிசெயங்களையுமெடுத்துப்போற்றி போதவாரி
யிலழுந்தி உடல்முற்றுங்கம்பிதப்படக்கூத்தாடி பெறுதற்கரியயின்ப
த்தைக்கிடைத்தவளாய் யிப்பிறகாரம் விண்ணப்பஞ்செய்யத் துடங்கின
ள், சுயஞ்சோதிமயமாய் சற்வத்தரியாமியாய்க் கோடிசூரியப்பிறகாசம்
பொருந்தியவெற்றிவேலைத்தாங்கியிருக்கும் எமதிறைவனே யிக்காட்சி
யைமுன்னமேகாட்டி நாயினேனைத்தொண்டுகொண்டு மனயிஷ்டப்படி

க்குபோகபோக்கியங்களையனுபவித்துக் களியாமல் யிதுபரியந்தம் பல
நடனங்களைக்காட்டி வீண்காலத்தைக்கழிக்குங் காரணமென்றோ பேத
மைப்பாவளாகிய யான் பெண்மதியினால் தமது பெருமைகளைக் கண்ட
றியாமல் பலகுறைபாடுகளைச்செய்தனன், அதுகளனைத்தையும் திருவுள
த்திற்பாராட்டாமல்க்ஷமித்து ரட்சிப்பது தமதுபாரமாகும் யின்றுமு
தல்நாயினேனை வழியடிமையிற்சேர்த்து ஆட்கொள்ள வேண்டுமென்று
திரேகம்நடுநடுங்கபலவிதங்களிற் போற்றுமுன்னிலையில் குமாரதேவர்
பரிவாய் அவளிடத்திற்கடாட்சவீட்சணியத்தைச் செலுத்தி பெண்ணரசி
யே நீ முன்னம்மகாவிஷ்ணுவுக்குமகளாய் நம்மைச்சேர்ந்து களிக்கும்
விருப்பத்தைக்கொண்டு அளவற்றகாலம் கடினமாகியதவங்களைச்செய்த
போது நாமெழுந்தருளிக்கடாட்சித்தபடிக்கு யிப்பிறப்பில் உமக்குஅ
னுக்கிரகஞ்செய்யவந்தனம்மேலும்நம்மைக்குறித்துப்பேசியவாசகங்க
ளனைத்தையும் தோத்திரங்களாகக்கொண்டனம் மனம் வருந்தாமற் சந்
தோஷித்திருக்கக்கடவையென் றுதரித்துத்தழுவிபரிபூரணகடாட்சத்தை
ப்பாலித்துவேடர்பாவாய்நீயிவடம்வந்துபோதாயிற்றுதினைப்புனத்தை
க்கார்க்கும்படிக்கு முன்னேபோகக்கடவை நாமும்பின்பற்றிவருவோ
மெனத்திருவாய் மலர்ந்தமாத்திரத்தில் வள்ளிநாயகியாருக்கு அதிசமகி
ட்சியுண்டாய் மீட்டும்திருவடிகளிற்சேவித்து விடைபெற்று மனமும்
விழிகளும் கணவனிடத்திற்கிடக்க அரிதிற்போய்த் தினைப் புனத்தைச்
சேர்ந்துபழையபடிக்குப் பரணிலேறிக் கவணைத் திருக்காத்திற்கொ
ண்டுபட்சிகள்மிருகங்கள் யாவியோடத்தக்கதாக ஆயாலோட்டி யிருந்
தனள், அத்தறுவாயில் அடுத்தகொல்லையிற்போர்தியிருந்த பாங்கியான
வள்சிலசந்தேகப்பட்டு தலைவியிடத்துக்கு மெல்லவந்துசேவித்துச் சில
போதுவார்த்தையாடிக்கொண்டிருந்து மனமும்தோற்றமும் நடைநொ
டிபாவனைகளும் பேச்சும் கருத்தும் மற்றகாரணங்களனைத்தும் வேறு
பட்டுக்காட்டுவதைக் குறிப்பாய்த்தெரிந்து அதற்கடுத்த விளைவையும்நி
தானித்து பாங்கியானவள்தலைவியைப்பார்த்து யிதனை வினவுவதாயினள்,
தாயே யித்தினைப்புனம் பட்சிகளினாலும் மிருகங் களினாலும் அழிந்து
போகும்படிக்குவிட்டுத் தனிமையில் நீரெவ்விடத்திற்போனீர் சொல்
லுமெனக்கேட்டபோது தலைவிமிகவும்நாணினவளாய் அடிதோழி வெ
ப்பத்தினாற் சகிக்கப்படாமற் சுனையிற்படிந்து நீராடிவரப்போயிருந்த
னனென மாறுத்தாரந்தந்தபோது தோழிநகைத்து நல்லகாரியம்தீர்பேசி
யதுவெகுநேர்த்தியாகவிருக்கின்றது மையிட்டுக்கறுத்துகாதளவுமோடியி
ருக்கும்விழிகள்சிவக்கவும் கொவ்வைக்கனியினும் பிரகாசித்திருந்தஅதர
ம்வெளுத்துக்காட்டவும்சரீரம்வட்டமுற்று வியர்க்கவும்சொற்னக்கலச

த்தையொத்தகொங்கைகள்பசலைமுடிவிம்மவுங்கரங்களிற்பதியப்பூட்டி
யிருந்தவளையல்கள்தளர்ந்துகலிக்கவும்யித்தசையமாறுபாடுகளைத்தரவல்
லசுனை எத்தலத்திருக்கின்றது காட்டக்கடவையென வினவிய போதுபா
ங்கியைக்கோபித்துப்பார்த்து என்பிராணபதமாகிய தோழியென் றுன்
னை நினைத்துநம்பி நானிவடத்திலிருக்கும்போது மெல்லவந்து என்னிட
த்திலேதோசிலகுற்றங்களை கல்பிக்கவெண்ணினை யிதைப் பார்க்குமிடத்
தில்மிகவுங்கடினசித்தமுடையவளாகக்காணுகின்றது சற்றும் யிரக்கமற்
றயிப்படிக்குப்பேசுவையோவெனப் பிணங்கி யிவ்விதங்களாகத் தலைவி
யும்பாங்கியும்வாதாடிக்கொண்டிருப்பதைமுனம்வேங்கைமரமாகநின்
றசிவசுப்பிரமணியதேவர்கண்டு யிதுநல்லதருணமென் றெண்ணி ஒருதி
ருவிளையாடலைச்செய்யஉத்தேசித்துத் துரிதமாய் சல்லடத்தை யுடுத்துத
ட்டியைக்கட்டி சிகையைக்கோதிமுடிந்து அதைச்சூழ்வர மயிற்பீலியை
ச்செருகி பலகறைத்தாழ்வடத்தைச்சுற்றி அடிகளில் மிதியடிகளைச்சேர்த்
துவில்லைவளைத்து நாரியைமாட்டி யிடக்கரத்திற்கொண்டு வலக்கரத்தில்
பாணத்தைப்பற்றிக் குறியாகப்பூட்டி அரையிற் குறியவாளொன்றைச்
சொருகினவராய் வேட்டையாடி வருகின்ற வனைப்போலப் பலதிசையி
னும்விழிகளைச்செலுத்திப்பார்த்து அதட்டிகொண்டு பாதங்கள் சிவக்க
வேகமாய்வந்து காந்தட்புட்பத்தினும்சிவந்து மிருதுவாகக்காட்டும்கர
கமலங்களைப்படைத்திருக்கும்பெண்களே நான்செலுத்திய பாணத்தினு
ல்திரேகமுற்றுங்காயப்பட்டு உதிரம்பெருகப் பேழ்வாயைத் திறந்து
யிடியைப்போலவீரிட்டு ஓய்ந்தநடையுட னொருயானையானது யிப்பிரு
ந்தியத்தில் வரக்கண்டீர்களோ சாடைதான் தெரியுமோ ஒளித்து வைத்
தீர்களோ துரத்திவிட்டீர்களோவென்று பற்பலகேள்விகளைவினவி பால
சுப்பிரமணியக்கடவுள்நிற்பதைப் பாங்கிகண்டு மாறுனாயாடுவ தாயின
ன், உம்மையொத்த புசபலபராக்கிரமச்சம்பத்தையுடைய வீரர்களுக்
குடைசூரத்தன்மைகளையும் செயப்பிறதாபங்களையுஞ் சொல்லுவீரா
னில்அவர்களால்மதித்துப்புகழத்தகும் புல்லியதினைப்புனத்தைப் போற்
றிவரும் பேதையராகியமங்கையரிடத்திற் சவுரியவார்த்தைகளை யாடி யா
வதென்னேயென்று மறுதலைபேசினவளாய் மேலும் ஐயர் வேட்டையா
டிவரும் நிலைமைகளையும் தினைப்புனத்தைக் காத்திருக்கும் தலைவியின்
நாட்டத்தையும் குறிகுணங்களையும்மதித்து யிப்போது பேசிய தனைத்
தும்உண்மையோ மாறுபட்டுக்காட்டுகின்றது யிவ்விருவர் நடத்தையை
யும்யோசித்துப்பார்க்குமிடத்திற் றழைகளைத் திரேகமுற்றினும்மூடி வ
ஞ்சகக்குரலைக்காட்டி பறவைகளைப்பிடிக்கும் வேடர் நிலமை யாகக் கா
ணுகின்றதுயிவர் கன்கொண்டிருக்கும் மையலின்குறிப்பை விழிகளேகா

ட்டுகின்றதெனத்தீர்மானித்தவளாய் யினியிவடத்தி லிருக்க வாராதென்
றெண்ணி யாங்கியானவள் துரிதமாய் அடுத்த கொல்லையைச்சேர்ந்திருந்
தனள், யானையையெய்தனனென் றவீரம்பேசிவந்தசேவகன் தானும் பின்
பற்றிப்போய் மேகத்தைப்போலக் கரியகூந்தலையுடைய பெண்மணே எ
ன்கோறிக்கையைக்கேட்டருள்கவெனச் சொல்வதாயினர், தமியேனுக்கு
றுதியாகியசுற்றமும்நீங்களே பிராணபதமான சிநேகிதரும் நீங்களே எ
ன்னுடலும்உயிருமாகவிருக்கின்ற உங்களிருவருக்கும் வேண்டிய பொ
ருள்களெத்தனையதாயினும் யிந்தநிமிஷத்திற் றருவித்துக்கொடுக்கக்கா
த்திருக்கின்றனன் நீங்கள்காட்டியபணிவிடைகளிற் குறைபாடில்லாமற்
செய்யவல்லேன் கோபங்கொள்ளாமற் சற்று நீஅனுக்கிரகஞ்செய்யவே
ண்டுமென்று கற்தன்சொன்ன வாற்தைகளின் குறிப்பைத்தோழி தெரிந்
துக்கொண்டவளாய் ஐயனேஉமதெண்ணமிதுவோ சிறந்தஎங்கள் குலத்
துக்குப்பூமியுள்ள பரியந்தம் தீராதபழிப்புரையைப் நாட்டவந்தீராயினு
ம்யிழிபாகியமரபி லவதரித்திருக்கின்ற மறவர்பாவையை உம்மையொத்
தகண்ணியவான்விரும்புவதழகோ யிதுதகாதனவாதலால்மறந்துவிடுமெ
ன்றுமறுமொழியாடிய தோழியைப்பார்த்து மகாவிஷ்ணுபெற்றஅமுத
த்தைவேடர்வருந்திப்பெற்ற தவக்கொழுந்தைபெண்கள் நாயகத்தை எ
னக்குக்காதலைத்தந்து நல்லருள்செய்தகாரிகையைக்குறப்பேதையெனப்
பேசுவதேபேதமையாமெனக்குறித்த யினியவாசகங்களைக்கேட்டயாங்
கியானவள் யாதுந்தோற்றுமல் மயங்கிஐயரேசற்றுநேரத்தில் வேடர்தி
ரட்சியாயிவடம்வருவர் அவர்கள்மிகவுங்கொடியர் சில சந்தேகங்களைக்
காண்பாராயின் முன்பின் பாராமல் பழிபாதகங்களுக்கும் அஞ்சாமற்
கொலைசெய்வதற்கையமில்லை நீரிவடத்திலிருப்பதைத் திஷ்டாந்திரமா
கப்பார்ப்பாராயின் எங்கள்பிராணனுக்கானிவரும் உம்மையுமென்செய்
வரோதெரியாது மேலும் நீர் யிவடத்திலிருப்பதினு லாவதொன்றுமில்
லை ஆதலால்வீண்வாதே னுடுகின்றீரெனப் பற்பலநீதிகளைச்சொல்லி து
ரிதமாயித்தலத்தைக்கடந்துபோய் வாருமென்றுபயமுறுத்திய காலத்தி
ற்சரவணபவன்நகைத்து நல்லகாரியம் செவ்வரிபரந்தவிசாலமாய்க்காத
ளவுமோடியிருக்கும் விழிகளையுடையபெண்ணே உமதிறைவியுடன்யெ
ன்னைக்கூட்டுறவு செய்யாமற் போவையாகில் எட்டினிடத்தவன்வடிவை
யெழுதிமடலேறி உங்களூர்வீதிகளி லோட்டத்துணித்திருக்கின்றனன்,
அக்காலத்திற்சகலரும் பாயரங்கமாய்த்தெரிவர் யிதையோசித்து என்ம
னக்கருத்தை முடியாமற் றடைசெய்வையாகில் நான்குறித்த படிக்கு
நாளைக்கேமுடிக்கக்கடவன் யிதைச்சத்தியமாக நம்பக் கடவையென்று
தேவதேவோத்தமனாகவிருக்கின்ற பாலசுப்பிரமணியக்கடவுள் பேசிய

தைப்பாங்கிகேட்டவுடன் யிதுவென்ன அனீதமாயிருக்குதென்று பய
ப்பிருந்திகொண்டவளாய் சுவாமிநீர் யனைமட லேறுவது நீதியன்றமே
ஒம்மீராதவசையாகும் ஆதலாற் கோபியாமற் சற்றுமனமிரங்கி அதோ
காணுகின்றமாதவிச்சோலையிற்போய் மறைந்திருப்பீராகில் எங்கள்கா
தல்மங்கையைஅத்தலைத்துக் கழைத்துவருவேனென்று உடன் படிக்கை
சொல்லிஅனுப்பிவிட்டு அடுத்தபுனத்தைக் காவல்கொண்டிருக்கின்றதலை
வியினிடத்துக்குப்போமுன்னிலையில் எமதிறைவனும் மன மகிட்சியுட
ன்நடந்து மேகங்கள்சஞ்சரிக்கும் உன்னதமுள்ள மாதவித்தோப்பைச்
சேர்ந்து மனவெழுச்சியுடன் யிவர்கள்வரவுக்கெதிர்பாத்திருந்தனர், பா
ங்கியும் தலைவியைச்கலந்து திருவடிகளிற்பணிந்து வேலைத்தாங்கியகும
ரனுக்கடுத்திருக்கின்ற காதல்மிகுதியையும் அதற் கிசையாமற்போனால்வ
ரும் அவதூறுகளையும் விவரித்துச்சொல்லி மனதைத்தேற்றி ஒருமைப்
படுத்தினவளாய்த் தலைவியைத்தினைப்புனத்தைக்கடக்க மெல்லக்கொண்
டுபோய் மயிலினங்கள்களித்தாடும் குளிர்ந்தமாதவிப்பொங்கரில் நுழை
ந்து களிமிகுதியையுடையபாவாய் யிவ்வளாயைச்சூழவர விருக்கும்பரிம
ளமிகுந்தமலர்களைப்பறித்துவந்து மாலைதொடுத்து உமது கொண்டை
யிலணிவேன் அதைத்தேடிவருகின்ற பரியந்தம் யிவடத்தில் வேடிக்கை
பார்த்துக்கொண்டிருமென்று தோழியானவள் குறிப்பாய்த் தெரிவித்
துப்போனவுடன் வள்ளியம்மனானவள் கந்தனை நினைத்து மனமுருகிச் சு
ற்றிலும்விழிகளைப்பரப்பிப் பாத்திருக்கின்றதருவாயில் அளவிறந்தமகி
ட்சியுடன் சண்முகப்பெருமாள் பழையகோலங்கொண்டு எதிரில்வந்து
நின்றபோது வேலைப்போன்ற விழிகளையுடைய வள்ளிநாயகியாரும்எம
திறைவன்பாதகமலங்களிற் சேவித்தமாத்திரத்திற். கந்தன் திருக்கரங்களை
நீட்டி வாரியெடுத்தணைத்து ஒருவிருட்சத்தினடியிற்சேர்ந்து அவளின்ப
நலங்களையனுபவித்து யிருவரும்திரோசபரவசத்தராய்க் களித்திருக்கின்
றதருவாயில் தேவியைப்பாத்து உன்பிதாவாகிய அரசன் வேடருடன்வ
ரும்போது உன்னைக்காணாதவர்களாய்த்தேடவரும் ஆதலாற் பாங்கியுட
ன்விளாவிற்போய்த் தினைப்புனத்தைக் காவல்கொண்டிருக்கக்கடவை நா
ளும்நாளையத்தினம் யிவடம்வருவோமென் றனுக்கிரகஞ்செய்து மறை
ந்தனர், அக்காலத்தில்வள்ளியம்மனானவள் எமதிறைவன்றோற்றங் காணா
மையால் மிகவும்வருந்தி மாதவிப்பொதும் பரைக்கடந்துவரும்போது
பாங்கியு மெதிர்சென்று யிருவருங் கலந்து தான்பறித்துவந்த சாந்தட்
புட்பங்களைக்காட்டி கொண்டையிற்சூடிக் குலவிப்பேசிக்கொண்டழை
த்துப்போம்போது வள்ளியம்மனும் தன்மனதுக்கிசைந்தவாறே நடந்
துக்கொள்ளவல்ல தோழியுடன் தினைப்புனத்தைச் சேர்ந்து கிளிகள்முத

வாகியதுகளையோட்டிக்காத்திருந்ததறுவாயில்எமதன்னையானவள்கணவ
னைப்பிரிந்தகாரணத்தினால் மனவாட்டத்துடன் தன்தொழிலைச்செய்துவ
ருமுன்னிலையில் தினைக்கதிர் முற்றிவிளைந்ததை அத்தறுவாயில்வந்த வே
டராசன்முதலானவர்கள் தெரிந்து குறிச்சியி லிருப்பவ ரனைவருந் திர
ண்டுவரும்படிக்குப்பணித்து அரசன் தன்பெண்ணாகிய குறிஞ்சிநிலத்தி
றைவியைப்பார்த்து தினைக்கதிர்களை அறத்தொப்படிசெய்யும் காலம்நே
ர்ந்தது வேங்கைப்புஷ்பங்கள் மலர்ந்ததினால் அக்குறியையுங் காட்டுகி
ன்றதால் தாயே யிதுபரியந்தம் பனி வெய்யல் குளிர் முதலியசிறுமை
யிற்பட்டு அடவியில்யிருக்கின்றயிப்புனத்தில்வீற்றிருந்துமிகவும்வருந்
தினையினியுன்சிறுகுடிலைச்சேர்ந்து சகலசவுக்கியங்களையும் அனுபவித்து
மனவெழுச்சியுடனிருக்கக்கடவையெனப் பிதாமுதலானவர்கள் பரிவாய்
ச்சொன்னவாசகங்களைக் கேட்டவுடன் வேலாயுதமானது பாய்ந்தபுண்
பட்டிருப்பதில் எரிநுழைந்தாற்போலத் திடுக்கிட்டு மனம்வருந்தித்
திகைத்து கணவனைக் காணப்பெறாத காரணத்தினால் ஊசலாடிய மனத்த
ளாய்த்தினைப்புனத்தைக்கடந்து தோழியுந்தானுமாய்ப் போகுமார்க்கத்
திலெதிர்ந்தமான்-மரா-மயில்-குயில்-வேங்கை-யாதியவற்றைக்கரங்க
ளைக்கூப்பித்தொழுது யிதுபரியந்தம் எங்களுக்குத் துணையாகவிருந்த
பறவைகாள்மிருகங்காள் எமதிறைவன்வந்த எங்களைத்தேடுவராயின் நா
ங்கள்பதிக்குப்போனசேதியைத் தயைசெய்து மறவாமற் றெரிவிக்கக்க
டவீர்களெனவேண்டிக் காலெழாமல் மனத்தளர்ச்சியுடன் கொழுனனை
நீங்கித்தனியளாய் தன்மனையைச்சேர்ந்தபோது குறிகுணங்கள் வேறுப
ட்டுப்பழையபடிக்குச் சேடியருடன் கலந்து கொஞ்சிப்பேச மனமி
ல்லாமலும் அவர்களைப்பிரியமாய்ப்பார்த்து க்ஷேமங்களை வினவாமலும்
அம்மானைசிறுவீடுமுதலான விளையாடல்களைச்செய்யச் சகியாமலும்அதி
கவாட்டத்துடன் மனவருத்தப்பட்டிருக்குந்தறுவாயில் குலக்கொழுந்
தாகியவள்ளிநாயகியார் வந்தசேதியைத்தெரிந்த அன்னையும் வளர்த்ததா
யும்ஓடிவந்து ஆவலுடன் கட்டியணைத்து மடியில்வைத்துக்கொண்டு மு
த்தமிட்டுஉச்சியைமோந்து தலையைக்கோதி எங்களைப்பெற்றதாயே பல
நாட்களாகக்கொல்லையிற் பட்சிகளைக்காத்து மிகவும்வருந்தினை வெய்ய
ல்பனியிக்கொடுமையினால் திரேகத்தின் காந்திமாறி தளர்ச்சி கொண்டீ
ரோவெனப்பலவிதங்களிற்பாராட்டி வினவுவதைக்காதுகொடுத்துக்கே
ட்டுஅகமுகமலர்ச்சியுடன் பழையபடிக்குக்குலவிக் கோகிலத்தைப்போ
லக்கொஞ்சிப்பேசாமல் தலையைக்கவிழ்ந்து துக்கசாகரத்திலழுந்தி யிரு
ப்பதைக்கண்டவுடன் திகைத்துத் தாயே உன்னழகியதிருமேனிவேறுப
ட்டுக்காட்டவும் யாதொருவார்த்தையையும் களித்துப் பேசாமலும் பிற

மைகொண்டிருக்கின்றனை யித்தகைய குற்றம் நேரிடுவதற்குக் காரண மென்னே அதைமறையாமற்சொல்லடி தாயேயெனப்பயமுறுத்திக்கே ட்டும்கோபித்தும் தங்களாற்கூடியவளாயிற்பாத்து எதனையும் வெளியி டாதகாரணத்தினுல் பயப்பிருந்திகொண்டு யிதுவென்னவனியாயமாகவி ருக்கின்றது மகள்அதிகசவலையிற்பட் டிருக்கின்றவளைப் போலக் காட்டு கின்றதெனத்துரிதமாய் ஒருஅறையிற்சேர்த்துக் காவற்படுத்திப் போற் றிவருந்தருவாயில் சித்திரப்பிறதமையைப்போன்றவடிவையும்சாயையு முடையவள்ளியம்மன்'வெற்றிவேலாயுதமூர்த்தியைக்கலந்தின்புற்றிருந் தவள் அவரைக்கண்டுவார்த்தையாடிச் செலவுபெற்றுவாராமற் சடுதியில்பி ரியவந்தகாரணத்தினுல் மனம்வெந்துசரீரம்கன்றி தீயிற்பட்ட தளிரைப் போலப்பிராணனுண்டோயில்லையோவெனச் சங்கைகொள்ளும்படிக்கு ச்சோர்ந்து பிறக்கினைதப்பிவிழுந்தனள், யிச்சம்பவத்தைக்கண்டசெவிலி த்தாய்முதலாகியவேடப்பெண்களோடிவந்து அதிககிலேசத்துடன் வாரி யெடுத்து மாருடனணைத்து மடியிற்சேர்த்துச்சகலருஞ் சூழ்ந்துகொண் டுதுக்கசாகரத்திலழுந்தினவர்களாய் வள்ளியம்மன் திரோகஉறுப்புகளைக் குறிப்பாகப்பாத்து அழகியதிருமேனிதுவண்டு காந்தி மங்கிக்காட்டுவ தையும் கரங்கள்மெலிந்துபிருத்தமாயிருந்த தங்கவளையல்கள்தளர்ந்துக ழல்வதையும் வேலையொப்பக்காதளவுமோடி செவ்வரிபரந்திருக்கும்வி ழிகளில் நீர்பெருகுவதையும் குறிகுணங்கள்முதலிய காரணங்கள்வேறு பட்டுக்காட்டுவதையும் நரம்புகள் பசலைகொண்டு பூரித் திருப்பதையும் கொங்கைகளில் திகக்குறிபட்டு பூரித்துவிம்மி ததும்பியிருப்பதையும்நி தானித்துப்பார்த்தவுடன் சூர்ப்பகையாகிய கந்தன் தொட்டதையறியா மல்யிதனைச்சொல்வதாயினர், மலையின்மீதிருக்கும் தினைப்புனத்தைத்த னிமையிற் காவல்கொண்டிருந்ததருவாயில் யிந்தபெண்ணரசியைவள்ளி பற்வதச் சாரலிலிருக்கும் தேவதைசோங்கிற்றோ யாதுந் தோற்றவில்லை யிப்படிக்கொத்தகளைபட்டுக் கண்களைத் துறவாமற்கிடப்பதென்னவெ னப்பலரும் பற்பலவிதங்களைப்பேசித் திகைத்திருக்கின்ற தருவாயில்த ந்தையாகிய வேடர்பெருமானும் மற்றசுற்றத்தாரும் யிக்காரணங்களைக் கேழ்விப்பட்டவுடன் ஏகமாய் திரண்டுவந்து சூழ்ந்து கொண்டு வள்ளி நாயகியார் ஸ்திதியைப்பார்த்துக் கிலேசித்தவர்களாய்த் தட்சணத்திற்ற ங்கள்குலதேவதையாகிய குறமுதாட்டியையும் முருகனையும்வரன்முறை ப்படிக்குக் கோடித்து பூசனைவழிபாடுகளைச்செய்து பணிந்து போற்றி யவுடன் வெற்றிவேலாயுத மூர்த்தியைத் தாபித்து பத்திர புஷ்பங்களைச் சாத்தி தூபதீபங்களைக்கொடுத்து பாற்சோறு தினைமாவிளக்கு பண்டிய வாதிகளைத் திரட்சியாகப்படைத்துவேடரனைவரும் தீர்க்கதெண்டன்செ

ய்தவுடன் ஆவேசங்களுண்டாய்வெறிபாடல்களைச்செய்துவரும்போதுமு
ருகன்மருள்பிடித்திருக்கின்றஒருவன்பேரில் சுப்பிரமணியதேவர்வந்தத
னவாயில் அவன்முருகாமுருகாவெனக் கூவிக்கூத்தாடி முன்னிலையில்வே
டரிற்சிலமுதியர்சமீபத்திற்போய்தூபங்களைக்காட்டிக்கரங்களைக்கூப்பி
க்கொண்டுஎங்கள் குலதெய்வமேமுருகப்பிரானே வெற்றிவேலனேபோ
ற்றிபோற்றிதேவரீர்திருவுளமிரங்கி இந்தகன்னிகைக்குச்சம்பவித்திருக்
குங்குற்றத்தையின்னதெனத்திருவாய்மலர்ந்து அதற்கு நிவாரணத்தையு
ம்கடாசிக்கவேண்டுமெனப்போற்றுகின்றகாலத்தில் முருகன்மருள்பி
டித்தவன் அதட்டி அடாயபயலே உண்மையாகிய சம்பவத்தைத்தெரியாமல்
மயங்குகின்றீர் யிதுமற்றொன்றுமல்லவேடராசபுத்திரியானவள் தினைப்
புனத்திற்றனிமையிற்காவல்கொண்டிருந்தகாலத்தில் அவளிடசுந்தரவடி
க்கிச்சித்து நாமேவலிதிற்றொட்டனம் எமதுள்ளமகிழும்படிக்குச்சகல
ஆடம்பரங்களுடனும் பூசையைச்செய்து அவளையும் நமதுவெறிபாட்டு
க்குள்ளாக்குவீராகில் யிப்போதுகண்டிருக்கும் மயக்கமும் மற்றகுறை
பாடுகளும் நிவர்த்தியாய் முன்னினும்பதின்மணங்கு சவுக்கியப்பட்டும
னவெழுச்சியுடனிருப்பளெனக் குறிப்புவினையாகச்சொல்லி முடித்தவுட
ன்குமாரதேவருடையவாக்கியம் வள்ளிநாயகியார் செவிகளில் அமுததா
ரையைப்போலநுழைந்தமாத்திரத்தில் களைதெளிந்து கண்களைவிழித்து
மெல்லவெழுந்து எதாப்பிரகாரம் தாய்தந்தையருடன்வார்த்தையாடிச்ச
ந்தோஷசாகரத்திலழுந்திக்களித்திருந்தனள், யிந்தசுகுணத்தைக்கண்ட
மாத்திரத்தில் செவிலித்தாயானவள் மனமகிட்சியுடன் முருகனைநினைந்
துசற்தனேதேவரீர்திருவுளமகிழும்படிக்குத் திருவிழாமுதலியசிறப்புக
ளைச்செய்வோம் யிவளைப்பாதுகாத்து ரட்சிப்பது உமது பாரமெனப்
போற்றி பிரார்த்தனைசெய்துமஞ்சள்வஸ்திரத்துண்டில்சென்னெல்லைச்சே
ர்த்துமுடிந்து வள்ளியம்மன்திருக்கரத்திற்கட்டினள், யிவ்விதமாய் எம
தன்னைவேடர்சிற்றில்லத்திலிருக்க வேடராசனும் முருகனுக்குஉச்சவாதி
களைநடப்பிக்கவேண்டியயெத்தனங்களிற் சற்வசாக்கிறதையாய் முடித்
துகதிர்கள்முற்றித்தாறியபடியால் வேடரனைவரும் தங்கள் தேவியருட
ன்கலந்துபோய் அரித்து ஒப்படிசெய்து ராசனுக்குரிய கடமையைக்
கொடுத்து யாசகருக்குவெறுக்கத்தந்து மிகுதியை யில்லங்களிற்சேர்த்
துக்கொண்டு பந்துவர்க்கங்கள்சிநேகிதர் ஆத்திகளுடன் சாப்பிட்டுச்சவு
க்கியமாகவிருந்தனர், யிதன்மத்தியில் வள்ளிமலையினிடத்தில் வள்ளிநா
யகியாரைத்தழுவிக் களவுப்புணர்ச்சியைச்செய்திருந்த குமார சுவாமியா
ர்மறுதினம்வழக்கப்படிக்கு மாறுவேடத்தைத்தாங்கிக் கெம்பீரமாய் வ
ந்துதிருத்தேவியைக்காணாமல் தினைப்புனத்தை யரிந்திருப்பதைத்தெரி

ந்தவுடன் மனங்கலங்கி மதிமயங்கி பிறமை கொண்டவனாய்யோலப்
புலம்பிவனமுற்றினுந் திரிந்தலைந்து யாதுந் தோற்றாமல் திகைத்துவா
னத்திற்செல்லும்மேகங்களைப்பார்த்து யிந்தத்தினைப்புனத்திற் காவல்கொ
ண்டிருந்த என்மனதுக்கினியபெண்கொடியானவள் போனவிடந்தெரி
யுமோவென்று வினவியும் தாங்கள்உல்லாசமாய்க் காமயோகங்களையனு
பவித்துக்களித்திருந்தசோலைகள் மாதவிப்பொங்கரி னிடங்களிற்போய்
அத்தலங்களில்மனவெழுச்சியுடன் கலாபத்தைவிரித்தாடும் மயிலினங்க
ளைக்கூவி என்பிராணனைக் கிரகித்துக்கொண்டு மறைந்த நாயகியினது
சேதிதெரியுமாயின் மறையாமல்வெளியிடக்கடவிரென்றுகெஞ்சியும் ஓ
தினைப்புனமே உன்னிடத்திற்பலநாட்களாக வாசமாய் யிப்பறணினிட
த்திலிருந்தவேடமங்கை எத்தலத்தைநோக்கிச் சென்றனள், சந்தேசமில்
லாமல்உனக்குத்தெரியுமே மறையாமற்பேசுவையென்றிரந்தும் அழகி
யசிரலைவாய்ந்தபூவைகாள் என்னுன்மாலையொத்த வள்ளியின் காரண
ம்ஏதேனும்தெரியுமாயில் பேசக்கடவையெனக் கரங்களைக்கூட்டியும்
பசியகிள்ளைகாள் பெண்ணரசியைக்கண்டீர்களோ வென்று வினவியும்
விறிட்டுச்செல்லும்மதயானையைப்பார்த்து பொற்பாவையையொத்தமி
ன்னைப்பார்த்ததுண்டோவெனக்கேட்டும் மான்கூட்டங்களின்மீதுவி
ழிகளைப்பரட்டி உங்களினத்திலுதித்தமங்கை ஏதேனும்யிக்கூட்டத்திற்
சேர்ந்திருக்கின்றனளோவெனக்கெஞ்சியும் தோப்புகளினிடங்களி னுல
விதென்றற்காற்றுத்தாக்குவதினால் மிகவும்வாடி யித்தலத்தி லிருக்கின்ற
னளோவெனக்கேட்டும் மலைகளினிடங்களினுலவி அருவிப் பெருக்கைக்
கேட்டு ஏதோசிலஅரவங்காட்டுகின்றதால் அப்பெண்கொடியைக் குறித்
துச்சந்தேகிக்கவேண்டிக் காட்டுவது அதன் காரணத்தைச் சொல்லெனக்
கேட்டும் தாம் தாகசாந்திசெய்தசுனையைப்பார்த்து முனம்யிவடம்நம்மு
டன்வந்தநாயகியைப்பார்த்திருப்பீர் பின்பேதேனும்யிவடத்தில்வந்ததா
வதுயிதன் மூலமாய்ப்போகக்கண்டதுண்டோவெனப்பேசியும் இவ்வித
ங்களில்வனாசன்குன்றுகள் காடுகள்மற்றுமிராநின்றயிடங்களெங்கணுஞ்
சுற்றிச்சுற்றிவினவிவினவிக்கூவிக்கூவி அலைச்சற்பட்டுயிளைத்துவாடிமன
ஆக்கமற்று நெஞ்சுலர்ந்து காமக்கவலையுற்று பெருமூச்செறிந்து :நடுந
டுங்கித்தியங்கி வள்ளியம்மன் அடிச்சுவட்டை நாடித்திரிந்து குறமகளைஎ
ங்குந்தேடியும்அலைந்தனர், கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளே யிக்கா
ரணங்களையோசிக்குமிடத்தில் தேவதேவோத்தமனாகிய குமாரதேவருக்
குயிதுவுமொரு திருவிளையாடலாகக் காணுகின்றதல்லது வேறுமுண்
டோமேற்குறித்தபடிக்குத் தனக்கின்பத்தைத்தந்தவள்ளியம்மனைத்தே
டுகின்றவனைப்போலப் பகற்போதைக்கழித்து முன்னிரவிலும் சொல்லை

தினைப்புனமெங்கணுஞ்சுழன்றுசுழன்று கடையில் அர்த்தராத் திரிவேளை
யில்மெல்லமெல்ல வேடர்சிறாரிற்புகுந்து குலமினராகிய குறவர் பெரு
மான்வாசஞ்செய்யும் குடிசைக்கருகிற்போய்ப் பதுங்கிநின்று காத்தை
த்தட்டி சிலசைகைசெய்தனர், இச்சம்பவம் நேருமென்று முன்னமே
தெரிந்து மனக்கவலையினால் நித்திரை கொள்ளாமற் படுத்துப் புரண்டுக்
கொண்டிருந்த பாங்கியானவள் இந்தஅரவந்தெரிந்தவுடன் மெல்லவெ
ழுந்துவெளிவந்து சுப்பிரமணியதேவனைத் தெரிசித்தவளாய்திருவடிக
ளில்வணங்கி தேவரீர்இராக்காலத்தில் யிவடம்வருவதுதகாது நீங்களிரு
வருங்கலந்தின்புறுவதற்குத் தகுந்தயிடமுமில்லை அப்படிக்கு நேரினு
ம்பின்பு எங்கள்பெண்கொடியானவள் பிரிந்திருக்கத்தரியாள் யிவ்விதச
ங்கட்டங்களிருக்கிறபடியால் வள்ளியம்மனை உமதிடத்துக்குக்கொண்டு
போய் மனயிஷ்டப்படிக்குக் குலவியிருப்பது யாந்தமாகக் காணுகின்
றதெனச்சம்மதப்படுத்திச் சிவகுமாரனை அவடத்தில்நிறுத்தித் திரும்பி
குடிசையில்நுழைந்து வள்ளிநாயகியார் பள்ளிகொண்டிருக்கும் யிடத்
தைச்சேர்ந்து செவிகளுடன்வாயைவைத்துத் தாயே உமது மனதுக்கினி
யகொழுநன் பிரிவினால்மிகவும்வருந்தி மனந்தாபரியாமல் உம்மைக்கா
விடமாய்த்தன் சாலைக்குக் கொண்டுபோம்படிக்குத் துணிவுகொண்டுக
டைவாயலின்புறத்தியில் வந்திருக்கின்றனர், துரிதமாய்ப் புறப்படக்க
டவையென்று மெதுவாய்ச்சொல்லிய வாசகங்களைக்கேட்ட மாத்திரத்தி
ல்மனங்குளிர்ந்துதிரோகம்பூரிக்கக்களித்தவளாய் யிது மிகவும் நன்காகவி
ருக்கின்றது அவ்வாறேசெய்வேனெனஒருமித்து தாய்தந்தையர் மெய்ம
றந்து தூங்குவதையும் மற்றசுற்றத்தார் கைகால் போனதுதெரியாமல்
சோர்ந்துறங்குவதையும் சாடைகளினுலறிந்து திடசித்தளாய் விழிகளை
மூடாமற்காத்திருக்கும் வேட்டைநாய்கள்அப்போது தான் சற்றுகண்க
ளைமூடியதையுந்தெரிந்துகொண்டு அண்டைஅசலார் சந்தடியில்லாமை
யையுங்கண்டு ஆவொங்கனும்ஓய்ந்திருப்பதையும் மதித்துக் கொடியபே
ய்களுறங்கும் நடுசாமத்திற்பாங்கியானவள் கரத்தைப்பற்றி அரவந்தோ
ற்றாமல் மெல்லக்கூட்டிவந்து நடையைச்சேர்ந்தவுடன் தாப்பாள்சத்த
ந்தெரியாமல்விலக்கிக் கதவை ஒருக்களிப்பாய்த்திறந்து வள்ளியம்மனை
வெளியிற்கொண்டுவந்து சேர்த்ததறுவாயில் வேடராசபுத்திரி யானவள்
ஆவலுடனெமதிறைவனை எதிர்கொண்டு வணங்கிச் சிறுதொழில்களைச்செ
ய்துவரும் குறவர்குடிச்சியில் நாயினேன் பொருட்டுச் செந்தாமரைமல
ர்களையொப்ப மெத்தெனவிளங்கும் பாதங்கள்கன்றி வருந்தும் படிக்
குநிசாராத்திரிக்காலத்தில்யாதொருதுணையுமில்லாமல் தேவரீர்வருவதோ
யிக்குற்றத்தைக்ஷமிக்க வேண்டுமெனப்பரிபவப்பட்டுகரங்களைக்கூப்பி

# ௬௩.௰ வள்ளிநாயகியார் திருமணப்படலம்.

த்தொழுது தவக்கொழுந்தாகிய தேவிநிற்கும்போது தோழியானவள்சு
ப்பிரமணியக்கடவுளைப்பார்த்து வில்லையும் கணைகளையும் யிடைவிடாமற்
கரங்களிற் பற்றிக்கொண்டு கொலைக்கஞ்சாமற் றீயதொழில்களையே மு
க்கியமாகக்கருதிச்செய்துவரும் கடினசித்தராகியவேடர் யிக்காரணங்க
ளைக்காண்பாராயிற் கெடுதிநேருவதற்கையமில்லை யிதைக்குறித்துக் கால
தாமதஞ்செய்யாமல் யிந்தநிமிஷத்திற் றமதுசிறந்த பதிக்குக்கொண்டு
போய் யிவளைப்பாதுகாத்தாட்சிப்பது தேவரீருக்குப்பாரம்யிப்பெண்
கொடியைஅருமையாய்ச்சீராட்டிவளர்த்தனம் யிக்காலத்தில் உமதடைக்
கலமாகத்தந்தனனென முத்துக்கோவையை யொத்த தந்த பந்திகளையு
டைய தலைவிகரங்களை முருகப்பெருமாள் கையில்வைத்து கரங்களைக்கூ
ப்பித்தொழுது போற்றியதருவாயில் கடப்பமலர்மாலைபுரளும் பன்னி
ருபுயாசலங்களையுடையகற்தன் அவளிடத்திற் பரிபூரண கடாட்சத்தை
வைத்து கிருபையாகப்பார்த்து ஓ பெண்ணே நீ நம்மிடத்திற் பரிவாய்ச்
செய்த கருணையைஒருபோதும்மறக்கமாட்டோமெனத்திருவாய் மலர்
ந்தபோது மைதிமிர்ந்தவிழிகளையுடைய பாங்கியானவள் வள்ளிநாயகி
யாரைச்சேவித்துத்தழுவி தாயே தேவதேவோத்தமனைக் கணவனாகப்பெ
ற்றஉமக்குயாதொருகுறைகளுமில்லை அவர் மனயிஷ்டப்படிக்கு நடந்
துக்கொள்ளக்கடவை துரிதமாய்த் தலைவனைப் பிரியாமல் கூடப்போய்
வாருமென்று ஐயனுடன்கூட்டித் தலைவி செலவுகொடுக்கப் பெற்றுத்தி
ரும்பி விழவினுற்சோடித்திருக்கும் சிறுகுடியில் நுழைந்து சந்தடியில்
லாமல் மெதுவாய்க்கபாடபந்தனம்செய்துகொண்டு தன் படுக்கையைச்
சேர்ந்துநித்திரைசெய்திருந்தனள், அவள் மீண்ட பின்பு அன்னநடை
யைவாய்ந்த தேவியுடன் வெற்றிவேலாயுத மூர்த்தியானவர் அனையிருளி
ற்காவலனைத்தையுங்கடந்து வேடர்சேரியைத்தாண்டி காமன் பாணங்க
ளாகிய முல்லை-அசோகு-நீலம்-அல்லி-மா-புன்னை-குருக்கத்தி-கொ
ங்குசண்பகமுதலாகிய தருக்கள்தழைத்துப்புஷ்பங்களைவிரித்துப் பரிம
ளித்துத்தேன்களைத்துளித்து சுனைகள்மிகுந்து யிருண்டிருக்கும் சோலை
யிற்சேர்ந்து திருத்தேவியுடன் கற்தன் குலவிக்களித்துவரு முன்னிலையி
ல்யிரவுநீங்கி விடியற்காலமானதால் வேடராசன்மனைவியானவள்திடுக்கி
ட்டவளைப்போலவெழுந்தபோது பக்கத்திற்படுத்திருந்தகடகங்கணங்
களையணிந்திருக்கும்புத்திரியைக்காணாமையால்வீட்டிலிருக்கின்றஅறை
கள்முற்றம் தாழ்வாரமெங்கனும் தேடிப்பார்த்துத் தோற்றாமல் தோழி
யைக்கண்டுவள்ளியம்மையெங்கே காண்கிலனென்று வினவியகாலத்தில்
தாயேமுன்சாமத்தில் அவளும்நானுமாய் தேவரீர் பக்கத்திற்படுத்துநி
த்திரைசெய்ததுண்டு அதன்பின்பு எனக்கொன்றுந்தெரியாதென மாறு

த்தாம்கொடுத்தவுடன் தாயானவள் அனலிற்பட்ட மயிலைப்போலப்ப
தைபதைத்துக்கிலேசித்தோடி கணவனைக்கண்டு என்பிராணநாயகா என்
சொல்வேன் நமது பெண்ணரசியைக்காணோம் இதற்கென் செய்வேனெ
ன்றுபுலம்புவதைத்தெரிந்தவுடன் மதிமயங்கி உடனே கோபம்பிறவே
சித்துவடவாமுகாக்கினியைப்போலச்சீறி யிந்தசேரியில் நாட்டியிருக்கு
ங்காவலைக்கடந்து நம்மனைப் போற்றுதலைச் சட்டைபண்ணாமல் குண்
டைதயிரியமாய்ப்பெண்கொடியைக்கொண்டு போனகள்ளன் யாவனவ
வனையிந்தநிமிஷத்திற்பற்றிவந்து தகுந்ததெண்டனையைச் செய்வேனெ
னச்சீறி உடனேசல்லடத்தைமாட்டி தட்டியையிடையிலிறுக்கிவாளாயுத
த்தைஅரையிற்செருகி வில்லையும்பாணங்களையுங் கரங்களிற் பற்றிக்கொ
ண்டுஅதிதீவிரமாய்க் குமரியைத் திருடிப்போன திருடன் அடிச்சுவடை
நாடிஅந்தமார்க்கத்தைக்கண்டு அதிகவீராவேசத்துடன் ராசன்நடக்கும்
சேதியைத்தெரிந்தவுடன் கட்டுக்காவலையுடைய யிந்தவூரில் அற்தாத்திரி
யில்வந்து வள்ளியம்மனைக்கொள்ளைகொண்டு மாயமாய்ப்போனசோர
னைசும்மாய்விடலாகாது தொடர்ந்துபிடித்துக் கட்டுவோம் குத்துவோம்
சிறையிலடைப்போமென்று பற்பல வீரங்களைப்பேசி தட்டி சல்லடத்
தைக்கட்டி வில்-பாணம்-வாள்-வளைதடி- சில்லாக்கோல் முதலாகிய ப
டைகளைப்பரித்து உத்தசன்னத்தராய்ச் சேரியிலிருக்கின்ற வீரரனைவரு
ம்ஏகமுகமாய்த்திரண்டு பிரசண்டவாயுவினுங்கடுகிப்போய் தமதிறைவ
னைக்கலந்து பறைகளைமுழக்கியும்கொம்புகளையூதியும் நடக்கின்றவர்அ
ம்மார்க்கத்திற்பாதச்சுவடுகளைக்குறித்துப்பார்த்துப் பலதிசையினுமோடி
யும்சிலர்தோப்புகளிற் புகுந்தாராய்ந்தும் பலர் தினைப்புனங்கள்பரந்தி
ருந்தஎல்லையெங்கனும்பார்த்தும் மற்றயிடங்களிற் பற்பலவேடர்புகுந்
துசந்துபொந்து மூலைமுடுக்குகளெங்கனும் நுழைந்து நுழைந்துதே
டிவரும்ஆரவாரங்களை அதற்கடுத்த சோலையினிடத்திற் பாலசுப்பிரம
ணியதேவருடன் கொஞ்சிவார்த்தையாடிக்கொண்டிருந்த வள்ளிநாயகியா
ர்தெரிந்தமாத்திரத்தில்திடுக்கிட்டு தேகம்நடுநடுங்கி வியர்க்கமிகவும்ப
யந்தவளாய்ச் சண்முகதேவர் பாதாரவிந்தங்களில் விழுந்துசேவித்தும
னவருத்தத்துடன் யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினள், ஓ என்பிராண
வல்லபாகேட்டீரோ அதோஒலிக்கின்ற ஆரவாரங்களைமோசம் வந்தது
அடியாளைக்காணாதகாரணத்தினால் என்பிதாவும் மற்றவேடரும் கோப
தீபதர்களாய்-வில்-வாள்-குந்தம்-எழு-மழு-பிண்டிபாலம்- கப்பணம்
பாணவிதங்களைத்தாங்கி திசாதிசைகளெங்கனுந்தேடிக்கொண்டுவந்துயி
தோயிந்தசோலையின்பக்கத்தில் நேர்ந்துவிட்டனர், அவர்கள் கொடுமை
யையும்கடினசித்தத்தையும் பலநாள்கண்டு பழகினவளாதலால் அடியாள்

மனம்பதைபதைத்து நடுங்கிவாடுகின்றது யினிமேல்நாம்செய்வதொன்
றும்தோற்றவில்லை வேடர்மிகவும்பொல்லாதபாபிகள் என்செய்வரோ
யிதற்கடுத்தமுயற்சிகளை விரைவில்நினைந்து வேண்டிய சாக்கிறதையுடனி
ருக்கவேண்டும் கந்தனேயென்று பரிபவப்பட்டுப்போற்றுகின்றதிருத்
தேவியிடத்திற் கருணைகூர்ந்து உன்பத்திமைக்குக் களித்தனம் நீயொ
ன்றுக்கும்அஞ்சி பயப்படவேண்டுவதில்லை வருத்தமின்றி மனவெழுச்
சியுடனிருக்கக்கடவை நீடூழிகாலம்வாழிவாழியென் றுதரித்துப்பெண்
கள்சிகாமணியே யிதனைக்கேழ்ப்பையாக, மாயைவல்ல கிறவுஞ்ச பர்வ
தத்தையும் செயசாலியாகவாழ்ந்திருந்த தாருகாசூரனையும் ஒருமுனையி
ற்பிளந்துகொன்ற வெற்றிவேலாயுதமுதலிய சிறந்தபடைகளிருக்கின்ற
தநும்மவர்கள் பகைத்துப்போர்செய்ய வருவராயின் நிமைப்போதில்
வாட்டவல்லோம் யிந்தவேடிக்கைகளைப்பாத்துக்கொண்டு நமதுபின்பு
றத்திலிருக்கக்கடவையென் றருளிய வாக்கியங்களைக்குறமகள் கேட்டவு
டன் மனமகிட்சியாய்சுப்பிறமணியதேவருக்குப் பின்போயிருந்தனள்,
அத்தருவாயில் வேடர்ஆறபாட்டங்களைச்செய்துகொண்டு அதட்டியுரு
ட்டிபற்பலவசைமொழிகளைப்பேசிக் கந்தன் திருத்தேவியுடனிருக்கின்
றசோலையிற்சிலர் நுழைந்து உத்துப்பாத்துக் கள்ளன் அகப்பட்டான்வா
ருங்கோள் வாருங்கோளென்றுகூவி சிராதகத்தொழிலையுடைய குறவா
னைவரும் ஏகமாய்க்கூடிச்சோலையைவளைந்து முத்திக்கைபோட்டுக் கொ
ண்டுற்றவுத்திராகாரமாகக்கொதித்திருக்குமுன் னிலையிற்பின்னணியில்வந்
தவேடராசன் யிச்சேதிலயத்தெரிந்தவுடன்காளகூடத்தினும்கோபித்தவ
னுப்நன்சேனைகளுக்குமுன்னணியில்முந்தி நமதுபெண்ணை அபகரித்து
க்கொண்டுவந்தகள்ளன் யித்தகையபெருஞ்சேனையின் வரவைக்கண்டும்
சற்றும்அச்சமில்லாமல் மனவெழுச்சியுடன் அசைவற் றிருக்கின்றனன்,
நமதுவலியையும் வீரத்தன்மையும் செயப்பிறதாபங்களையும் அசட்டை
செய்திருக்கின்றனன், யிவன்புயவன்மையை நிப்பட்டெரிந்து சாம்பலா
குமகாட்டைப்போல யிந்தநிமிஷத்தில் வாட்டுவோமெனப் பொங்கி
வேடராசனும்மற்றப்பாதகரும் சமுத்திரப்பெருக்கைப்போல ஆர்ப்ப
ரித்துவில்லைவளைத்து ஆயிரங்கிரணசமோகங்களையுடைய சூரியனைமேக
ங்கள் கவியுமாறுபோல நாலுதிசையினுஞ் சூழ்ந்து சர வருஷங்களைப்
பொழிந்துவாதாடு முன்னிலையில் அவ்வாளிகள் மேலிட்டுச் சிடசிடென்
றம்குறுகுறென்றும்சடசடென்றும யிரைந்துசொண்டு அதிவேகமாய்
வந்துபத்தர் அரிச்சனைசெய்யும்மலர்களைப்போலக் கிருபைக் கடலாகிய
குமாரதேவர் திருமேனிஎங்கும தைத்துத்தைத்தும் பலபலென்றுசுற்றி
லும்யிறைந்தது யிக்கொடுமையைத் தேவியார்கண்டமாத்திரத்திற்பதை

பதைத்துவிழிகளில்நீராப்பெருக்கிக் கிலேசித்தவளாய் யிதனை விண்ண
ப்பஞ்செய்கின்றனள், கடூ.ணசித்தமுடையசத்துருக்கள் கூரியயாணைகோ
டிகளை அமோகமாகச் செலுத்துகின்றனர், அவைவீறிவந்து தமது மங்க
ளகரமாகியவடிவிற்றாக்கி யாதொருதீங்குகளைச்செய்யாமற் போனபோ
தினும் அதனைப்பார்க்க மனந்தாபரிக்கவில்லை யாதலால் அடியாளிடத்தி
ற்கிருபையுற்று வெற்றிவேலாயுதத்தை யிந்தநிமிஷத்திற்செலுத்தி கொ
டியபாதகரனைவரையும ஏககாலத்திற்கொன்று யென்மனக்கவலையைத்தீ
ர்க்கவேண்டும் வீரபராக்கிரமச்சம்பத்தையுடைய சிங்கராசன்பாய்ந்து
கொல்லாமற்சும்மாய்ப்படுத்திருக்குமாயின் மான்-மரை-யானை-பன்றி
கரடி யித்தகையமிருகங்கள்நெருங்கிக் காதைப்பற்றியாட்டிப்பரியாச
ஞ்செய்யாதோ ஆதலாற்சற்றுந்தாழ்க்காமல் எம்மவர்களென்னும் யிரக்
கத்தையொழிந்து கண்டதுண்டமாக்கி நிலத்திற்றன்றுமென்று வள்ளி
நாயகியார் அதிகபிரியத்துடன் பேசியபோது நல்லகாரியம் உம்மிடயி
ஷ்டப்படிக்கு நடக்கப்போகுது அதையும் சற்றுநேரத்திற் பார்ப்பை
யெனத்திருவுளம்பற்றினவராய் தமதுவெற்றிகொடியைநினைந்தனர் அ
க்காலத்திற் சிவந்தகொண்டையையுடையசேவலானதுதன்குறிப்பின்
படிக்கு விசாலமாய்த்தழைத்திருக்கும் சிறகைவிரித்தசைத்து வானவழி
க்கொண்டு பறந்துவந்து சிவகுமாரன்சன்னிதானத்தில் நின்றுகழுத்தை
நீட்டி பேரொலியெழ ஒருவிசைகூவிற்று அந்தமுழக்கமானது பிரளய
காலத்தெழும் பேரிடியினும்மேலிட்டுப்பகைவர்செவிகளிற்கேட்டமா
த்திரத்தில் விஷப்பரிசம்பட்டவர்களைப்போல வேடராசன் தன்பிள்ளை
ள்யந்துவற்சங்கள் கொடியமனதையுடைய சேனைகளுடன் பிரசண்ட
மாருதமோதலிலகப்பட்ட விருட்சங்களைப்போலப் பொறிகள்கலங்கிபு
லன்களொடுங்கி கைகால்கள்தளர்ந்து ஒருவர்மீதொருவர்விழுந்து மாண்
டனர், யிவர்கள்போராடுமுன்னிலையிற் கந்தனிடத்திற்பரிவாய் அதம்ப
ண்ணிப்போடும்படிக்கு வேண்டிய என்தாய்அவர்களிடத்தில் வளர்ந்து
சகலஉபசாரங்களையும் பெற்று மனவெழுச்சியுடன் குலவி யிருந்தவ
ளாதலால் யிவ்விதமாகப்பிதாவும் சகோதரர் எழுவரும் மாமன்மைத்து
னன்உறவாகவிருந்தவர்முற்றும் ஒருமுனையிற்செற்ற கொடுமையைக்க
ண்ணுறக்கண்டமாத்திரத்தில் திடுக்கிட்டு மனம்பதைபதைத்துத் திரேக
ம்நடுக்கமெடுக்கவிழிகளில் நீரைத் தாரைதாரையாகப்பெருக்கிக்கதறி எ
ண்ணுதெல்லா மெண்ணியெண்ணிச் சோருகின்றதறுவாயில் யிக்காரண
ங்கள்யாதுந்தெரியாதவளைப்போலத் தமதுதிருத்தேவி யன்னைச்சோதி
க்கும்பொருட்டு மனக்கலக்கமற்று முருகப்பெருமாள் அச்சோலையைக்
கடந்து சித்தையில் அருள்வெள்ளமானது பெருக்கெடுத்தலைக்கக்கெம்பீ

ரமாய்நடந்துபோம்போது தேவியும் நிழலையொப்பப் பின்பற்றிச்செ
ல்லுகின்றதருவாயிற் யிச்சம்பவங்களனைத்தையும் போதவுணர்விற் றெ
ரிந்த நாரதரிஷியிசவும் சிந்தாக்கிராந்தனாய் மனோவேகத்தினுமுந்தியெ
தியில்வந்து கற்தன்திருக்கோலத்தைத்தெரிசித்து மனமகிட்சியுடன் அம்
மையப்பர்திருவடிகளில்வணங்கிச் செயசெயபோற்றியென்று வாழ்த்தி
னவராய்க் கற்தனேஅடியேன் தம்மைக்கண்டுநீங்கியபின்பு நடந்தசே
திகளைத்திருவுளம்பற்றக்கடவீரோன வேண்டுவதற்கிரங்கி ரிஷியைப்பரி
வாகப்பாதது தாம்திருத்தணிகை வரையைக்கடந்து வள்ளியம்மனைக்க
ண்டு தன்வயப்படுத்தி அக்காரணத்தினலெதுத்துவந்த வேடராசன் வம்
சநாசமறக்களப்படுத்தியவரையிற் சவிஸ்தாரமாகத் திருவாய்மலர்ந்தசம்
பவங்களைக்கேட்டநாரதர் மனயிரக்கத்துடன் கற்தனை வந்தித்து சுவா
மிகள்சொல்லியகாரணங்கள் வெகுநேத்தியாகவிருக்கின்றது தேவரீர்தி
ருவிளையாடலுக்கொரு எல்லைகிடையா தாயினும் யிந்த அனீதமெங்கே
னுமுண்டோ தம்மைக்குறித்துப் பற்பலதவவிரதங்களைச் செய்துவருந்
திநோற்றசிறப்பினுற் கிடைத்தற்கரிய எம்பிராட்டியைப் பெண்ணாகப்ப
டைத்து சீராட்டிப்பாராட்டிப்போற்றிஅரிதில்வளர்த்துப் பரிபக்குவப்
படுத்திப்போற்றிவந்தபிதாவையும் துணைவரையும் மற்றசுற்றத்தினராதி
யரைக்கோபித்துக்கொன்றபோதினும் சற்றும் தயைதாட்சண்ணியமில்
லாமலும் அதற்கொருநிவாரணத்தைக்காட்டாமலும் யிதுபரியந்தம்அ
வர்கள் கிரகத்தில் உண்டுடுத்துவளர்ந்த பதிவிரதா சிரோமணி யானவள்
மனங்கலங்கி வாடிவருந்தும்படிக்கு யிட்டுக்கொண்டுபோவது அழகோ
உலகநடைக் கடுப்பதோ மூடராகவிருக்கும் வேடருக்குத் தேவரீர் மகி
மைகள்தெரியுமாயின் யிப்பெண்கொடியை தத்தஞ்செய்துஅதிகமரியா
தையுடன் பூசித்தனுப்புவதற்குத்தடையுண்டோ கள்ளவேடத்தைத்தாங்
கிப்பரிந்துவளர்த்த பெண்ணையுந் திருடிக்கொண்டுபோனல் சும்மாய்
விட்டுவிடுவார்களோ கற்தனே தேவியின்மனவருத்தந்தீர்ந்து களித்திரு
க்கத்தக்கதாக அவர்களிடத்திற் கிஞ்சற்றுத்தயைசெய்து கிருபா நோக்க
ம்பாலிக்கவேண்டுமென்று பலவாசப்போற்றுகின்ற ரிஷியைப் பரிவாக
ப்பார்த்தருளி நல்லகாரியம் உம்மிடயிஷ்டப்படிக்காகுமெனத் திருவாய்
மலர்ந்துதிரும்பி தேவியும்ரிஷியும் பின்பற்றிவரச் சோலையி னிடத்திற்
சென்று தமதிடத்தில்மெய்ப்பத்தியும் அன்பும் மற்றக் களிப்பையும்பூ
ர்த்தியாகப்பெற்றிருக்கின்ற வள்ளியம்மன் முகார விந்தத்தைப்பார்த்து
நம்மிடத்தில் அபவமாகியபோரைச்செய்து மாண்டுநிலத்தில்விழுந்துகி
டக்கும் உன் சுற்றத்தினரனைவரையும் எழுப்பக் கடவையென அம்மன்
பெருமைகள்பலருக்குத்தெரிவதாகத் திருவுளம் பற்றியமாத்திரத்தில்ஆ

ணர்தபரவசத்தளாய் மகாபாக்கியமென்று கர்த்தனைச்சேவித்து அவன்தி
ருவடிகளைமனதிற்றியானித்து பத்திபரவசத்தளாய் அரியபிராணனை யிழ
ந்துதிரேகம்புழுதியிற்பட நிலப்பாயலில் அலங்கோலமாய் விழுந்துகி
டக்கின்ற என்றனைப்பிதாவே சீராட்டிவளர்த்ததுணைவரோ அருமையாகப்
போற்றிவந்த சுற்றத்தாரோ நீங்களனைவருங் கர்த்தன்கட்டளையின்படிக்கு
எழுந்திருந்துகுலவிஎன்மனக்கவலையைத்தீர்க்கக்கடவீரென்றுஒருவாக்
கியத்தைப்பேசியமாத்திரத்தில் உறங்கியிருந்தவர் உணர்ச்சி பெற்றெழு
மாறுபோலப்பிராணனைக்கிடைத்துத் துள்ளிக்கொக்கரித்துவேடராசனு
திியர் எழுந்ததுவாயில் சிவகுமாரன் அக்காலத்திற் கொண்டிருந்தகோ
லத்தைமறைத்துக் கிருபாசமுத்திரம் பெருகும் சண்முகார விந்தங்களை
யும்பொன்வரையைப்பழித்தோங்கியிருக்கும் பன்னிருபுயாசலங்களையு
ம்வெற்றிவேல் சக்கரம்தனுசுமுதலியபடைகள்கரங்கள்தோறும் தாவாத
சாதித்ததைப்போல விளங்கவும் பித்தகைய தமது திருவடிவைத்தாங்கின
திரில்நின்றகாலத்தில் அந்தஅற்புதக்காட்சியை வேடராசனுதியானவர்க
ள்தெரிசித்த மாத்திரத்திற்றிடுக்கிட்டு திரேகம் நடுக்கமெடுக்கப் பயப்பி
ரந்திகொண்டு அடியற்றபனைகளைப்போல நிலத்தில்விழுந்துபன்முறை
வணங்கி வாயில்வந்தவந்தவிதங்களிற்போற்றிசெய்து விழிகளில் ஆனந்
தவாரியைப் பெருக்கி திரேகம்குதுகுலித்து மயிர்ச்செறிவெழ அளவுப
டாதபேரானந்தத்தையடைந்தவர்களாய் கரங்களைக்கூப்பிக்கொண்டுபி
தனைவிண்ணப்பஞ் செய்வதாயினர், ஓ எமதுகுலதெய்வமே கொலைத்
தொழிலையேமுக்கியமாகவிரும்பி நடாத்திவரும்பிழிகுலராகிய அடியோ
ங்கள்வம்சபரம்பரையாக அடிமைகொண்டு யாதொருதீங்குகளும் நே
ராமல் எங்கள்சேரியைப்பாதுகாத்து அந்நிலத்துக்கு ஆதிதேவதையாக
வுமிருக்கின்றதேவரீரோ நாயினேங்கள் முன்னவருடன்செய்ததவமுயற்சி
யினாற் பெற்றுப்போற்றிவளர்த்திருந்த பெண்கொடியை அரையிருளில்
குறிச்சியிற்புகுந்து சோரத்துவமாய்க் கவர்ந்துகொண்டுபோய்ப் பல
ரும்புகழவிருந்த யிந்தகுலவரம்பையழித்து உலகமுள்ளளவுந் தீராதப
ழிப்புரையொன்றைப்பிரசித்தமாகத் தாமித்தீர் பத்துமாதஞ் சுமந்துவ
ருந்திப்பெற்று அருமையாகவளர்த்தெடுத்த நற்றாயானவள் பாலுசார்ப்
பதுக்குபதிலாய் வயிரங்கொண்டு விஷத்தையூட்டுவளாயின் அதைக்க
ண்டுதடைசெய்யவல்லவர்க ளொருவருண்டோ யிக்காரணந்தேவரீர்திரு
வுளத்துக்குப்பாத்தமாக யிருக்குமாயின் தமதுவழியடியர் செய்யவே
ண்டுவதென்னை யிதுநிற்க எங்கள் குலக்கொடியினிடத்தில் மையல்கொ
ண்டு நாயினேங்களுக்குத்தெரியாமற் சேரியிலிருக்கும் பெருங்காவலை
க்கடத்துபலவந்தமாய்தன்மையிலிவடங்கொண்டுவந்துவீட்டாதலா.



ள்ளமகிறைவனேகிருமையயுற்ற கன்னிகையுடன் எங்களுனைச் சேர்ந்து
அக்கினி-ஆதித்தன்-கடவுளர்-பந்துக்கள் சாட்சியாய்த் திருக்கலியாண
ஞ்செய்துகொண்டு எங்கள் மாபுக்கடுத்த சீர் சிறப்புகளுடன் நாங்கள
னைவருஞ்சந்தோஷத்துடன் அனுப்பி வைக்கும்படிக்குத் தாராளமாய்த்
திருத்தேவியை உம்மிடவூருக் கழைத்துப் போகலாமென்று விண்ணப்
பஞ்செய்ததருவாயில் மாதுலன் அவன்வற்கத்தவர் சோதிக்கையின்படி
க்கிசைந்து அவ்வாறேநடப்பிக்கின்றனமெனத் திருவாய்மலர்ந்தவராய்
வள்ளிநாயகியார் தொடர்ந்துவர நாரதரிஷியுடன் தழைத்தோங்கிக்குளிர்ந்
தநிழலைப்பரப்பியிருக்கும் மலர்க்காவை நீங்கி பாதகமலங்கள் கன்றிவ
ருந்தும்படிக்குநடந்து வள்ளிவரைக்கருகிலிருக்கின்றசிற்றூரிற்பிறவே
சித்தனர், வேடராசன்மற்றவருடன் மனமகிழ்ந்து ஆனந்தபரவசத்தரா
ய்ச்சூழ்ந்துவந்து தங்கள் சேரியைச் சேர்ந்தவுடன் தம்மினத்தவரைப்
பார்த்து சங்கரன்குமாரராய் நமதுகுலதெய்வமாய் யிந்தநிலத்தைப் பா
துகாத்துவரும் சுப்பிரமணியக்கடவுளே வலியவந்து நமதுமாதைத்திரு
டிப்போயினன், யிப்போது அடியேன்சோதிக்கையின் படிக்குத் திரும
ணமுன்னிலையில் வள்ளியாளைப் பெற்றுப்போகச் சம்மதித்து வந்தா
னென்று யார்த்தமாய்ச் சகலருக்குந் தெரிவித்தனன், அக்காலத்தில்மு
ன்னம் பொங்கிக்கொண்டிருந்த கோபமும் நாணமுமடங்கி மகிட்சியி
லுசியினுல் ரோகம்சிலிர்த்து மயிர்பொடிப்பச் சந்தோஷசாகரத்திலழு
ந்தியிப்படிக்கோவிருந்தது நமதையன்திருவிளையாடலென்று கூத்தா
டுகின்றதருவாயில் வேடராசன் குறிச்சியிற் றலைமைபெற்றிருக்கின்றவிசா
லமாகியதன்னில்லத்திற் சரவணபவனையும் பரிமளமிகுத்த புஷ்பங்களை
ச்சூடியிருக்கும் அளகபாரத்தையுடைய வள்ளியம்மனையும் பணைகள்மு
ழங்கபம்பையதிர யித்தகைய வைபவங்களுடன் அழைத்துப்போய்க் கு
லமுறைப்படிக்கு மஞ்சள்நீர் ஆலம் மற்றசடங்குகளைத்தன்தேவி நடத்
திவணங்கிப்போகப் பொற்பிரகாசமாகவிளங்கும் வேங்கைத் தளிர்க
ளினுற் சோடித்த பாயலின்பேரி லெழுந்தருளச்செய்து நாரதருக்கும்
தெற்பாசனத்தைக்கொடுத்துமுற்றியபின்பு கலியாணகாரியங்களிற்சற்வ
சாக்கிறதைசெய்தும்யிந்தமங்களவார்த்தையைப்பக்கங்களி லிருக்கின்றத
ன்பந்துக்களுக்குத்தாதின்மூலமாகச்சொல்லியனுப்பியுந்திரிகின்ற தரு
வாயில் வேலாயுதமூர்த்தியானவர் தமதருகில்வீற்றிருக்கின்ற தேவியின்மீ
துகிருபாநோக்கத்தைப் பாவித்தமாத்திரத்திற் பழையவடிவும் குறமக
ளிர்அலங்கரித்திருந்த சிங்காரங்களுமாறி ஆதியில் மகாவிஷ்ணுபுத்திரி
யாகவிருந்ததெய்வப்படிவத்துடன் நவரத்தினமயமாகியசற்வாபரணபூ
ஷிதையாய்க்கண்டவர்கள் விழிகளுக்குக் களிப்பைத்தரும் சிறந்தகோல

த்துடனிருப்பதைக் கவலைமுற்றுமொழிந்து மனவெழுச்சியுட னிருக்
குந்தந்தையும்தாயும் செவிலியும் தோழிமுதலான பந்துவர்க்கங்கள்தெ
ரிந்தமாத்திரத்தில் புஷ்பத்திற்பெருகும் தேனைக்கிறிக்கவரும் வண்டி
னங்களைப்போலப் பலதிசையினுமிருந்துவந்து பெண்ணரசியினது சா
ட்சியைத்தெரிசித்து அற்புதமடைந்து யிந்ததேவியானவள் குலமினரா
கியநம்மனையிற்சேர்ந்து குலவியிருந்ததை யோசிக்குமிடத்தில் நமது
முன்னவருடன்செய்திருக்கின்றதவப்பேறுகும் மற்றொன்றையுங்குறி
க்கப்படவில்லையென்று தமதிறைவன்டாக்கியத்துக்குக் கொண்டாடியி
ருந்தனர், வேடராசனும் அதிகசந்தோஷத்துடன் தங்களினத்திற் கலியா
ணமுடிக்கும்போது செய்துவரும்கிறமப்படிக்குமுருகனுக்குப் பூசை
களை நடத்தித்தழைகளினாற்பந்தலிட்டு புஷ்பக்கொத்துகளையும் தளிர்களை
யும்மத்திமத்தியிற்றூக்கிமுடிந்தவுடன் பாணத்தைநாட்டி அந்நிழல்அ
டியைக்கார்க்குமத்தியானகாலம் நேர்ந்தபோது வேடர் குரவைகளைப்
பாடிமலர்களை யிறைத்துக் கூத்தாடத் தக்கதாகத் தானரிதிற்பெற்ற பெ
ண்ணரசிதிருக்கரத்தைக்குமாரதேவர் அஸ்தத்தில்வைத்து எங்கள்தவக்
கொழுந்தைசூரியதேவன்சாட்சியாய் மனப்பூர்வமாக தத்தஞ்செய்தன
ன், கர்த்தனே தேவரீர்பணிவிடைக்கு ஒப்புக்கொள்ளுமென்று தன்தே
விவிடும்சரகநீராவிட்டுப்போற்றினன் பின்பு நாரதரிஷியானவர் சிவகு
மாரன்கட்டளையைப் பெற்றுக்கொண்டு ஓமக்கனலையெழுப்பி சமித்து
களையும் ஆவினெய் பால் பொரிமுதலிய திரவியங்களினால் நவக்கிரகஓ
மத்தைநடத்திப் பூர்ணாகுதிகொடுத்து பெண்ணையும்பிள்ளையையும்திவல
ஞ்செய்வித்து அருந்ததியைக்காட்டிவேதவிதிப்படிக்குச்சகலசடங்குக
ளுமுடித்தகாலத்தில் மகாவிஷ்ணு பிரமன் முப்பத்துமுக்கோடிதேவர்
க்கள் நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதர
ர்ஏகாதசருத்திரர் துவாதசாதித்தர் முதலியரனைவரும்சூழ்ந்து செயசெ
யவெனப்போற்றிவரவும் பூதகணங்கள்மங்கலவாத்தியங்களைமுழக்கித்து
டரவும் யித்தகையஓலக்கத்தின்மத்தியில் பற்வதராசபுத்திரி சமேதராய்
ரிஷபவாகனத்திலாரோகணித்து தேவதேவோத்தமனாகிய சிவபிரான் வா
னவெல்லையிலெழுந்தருளி தமது திருக்குமாரன்குறமகளைப் பாணிக்கிற
கணஞ்செய்யும் சம்பிறமங்களைப்பாத்து தம்பதி சமேதராய்க் களித்து
பலஆசீர்வாதங்களைச் செய்துவருமுன்னிலையில் மகாவிஷ்ணு பிரமனாதி
யானவிண்ணவர் கற்பகமலர்களை வாரிவாரியிறைத்து பாலசுப்பிரமணி
யக்கடவுளை வணங்கி அஞ்சலியஸ்தராய்ச் செயசெயவெனப்போற்றினர்
யிக்காட்சியைச்சரவணபவன் தெரிசித்தமாத்திரத்தில் சந்தோஷ சாகரத்
தில்முழுகினவராய்த் தாய்தந்தையரைவந்தித்துவாழ்த்தி மற்றையரிடத்

இற் கிருபாநோக்கம்பாவித்தனர், அதன்பின்பு சிவபெருமான் தம்முட
ன் வந்த திருக்கூட்டத்துடன் திரும்பி வெள்ளியங்கிரியைச் சேர்ந்துகளி
த்திருந்தனர், நாரதரிஷியும்மணப்பந்தலில் நடத்தவேண்டிய சடங்குக
ளனைத்தையும் நிறைவேற்றியபின்பு வெற்றிவேலாயுத மூர்த்தியைய வள்ளி
நாயகியாருடன்வணங்கித்துதித்து வரும்போது சுற்றன் திருத்தேவியுட
னிருக்கின்ற மணக்கோலத்தை வேடராசன் கண்டுகளித்து யிந்தவிழிக
ளைப்பெற்றதற்குக் கிடைக்கவேண்டும் பலப்பிரப்பத்தியை யித்தினம
டைந்தனனென்று கரங்களைக்கொட்டிக்கொண்டு ஆனந்தக் கூத்தாடின
ன், மற்ற சுற்றத்தினரும் பிரேமபரவசத்தராய் முருகன் வெறியாடல்க
ளைக்கொண்டாடி தீர்க்கதெண்டன்சமர்ப்பித்துக் களித்தனர், சவுனகாதிரி
ஷிகளே அக்காலத்தில்வேடர்பெருமானுக்கடுத்த சந்தோஷப் பெருக்
கையாவரால்சொல்லிமுடியும்பின்பு சுகந்தமலர்களையும் மெல்லியதளிர்
களையும் கொண்டைநிறையச்சூடி உடுக்கையையொத்த சிறுத்தயிடையை
ப்பெற்று புஷ்பக்கொம்பைப்போல உலவிக் கலியாணவாசலில்வந்திரு
க்கும் வேடமாதர்களித்து குலதெய்வமாகிய மருகனும் பெண்ணரசியு
ம்மித்தினத்தைப்போல நாடோறும் மணக்கோலமாகவே யிணைபிரியா
மல்வங்கணமாய் வாழ்ந்திருக்கக்கடவதென்று மனப்பூர்வமாக வற்றி
வாசமிகுந்தவேங்கைமலர் கதம்பப்பொடியையிறைத்துக் களியாடலைக்
கொண்டாடினர், மேற்குறித்தபடிக்குச் சிசுபாலாதிகள்முதலிய வேடர்
மனமகிழ்ச்சியுடனிருக்கின்ற தறுவாயில் பாலசுப்பிரமணிய தேவர் ஆச
னத்தைவிட்டெழுந்து வேடராசனைக் கிறையாகப் பார்த்து யிந்தபெண்
ணரசியுடன் திருத்தணிகைவரையிற் சேர்ந்திருப்போமென்று திருவுள
ம்பற்றியபோது கற்றனேதேவரீர்மனதுக்கினியபடிக்குச் செய்யலாமெ
னச்சம்மதித்தனன், தாயானவள் பாங்கிசெவிலியுடன் வள்ளி நாயகியா
ரைப்பார்த்து எமதன்னையே பலநாள்கள்பழகியிருந்த நீ யிக்காலத்தில்நீ
ங்கிக்கணவனுடன்போகத் துணிந்தனையோவென்று அதிசஆவலுடன்த
னித்தனித்தழுவி சுகசீவியாய்வாழிவாழியென்று ஆசீர்வதித்தகாலத்தில்வ
ள்ளியம்மனும்அவர்களைப் பரிவாகஉபசரித்து வெற்றிவேலாயுதக் கடவு
ளுடன்போக ஆயத்தம்பட்டபோது பிதாவானவன் தன்னிடத்திலிருக்
கின்றசிறந்தபொருள்களை பெண்ணுக்குச் சீதனங்கொடுத்துத்துடர பா
லசுப்பிரமணியதேவர் கலியாணவாயலை நீங்கிவெளிவந்து வேடராசனைய
ழைத்து தேவர்க்களுங்கொண்டாடத்தக்கதாக யிந்தசேரிக் கதிபனாகவி
ருந்து சகலசம்பத்தையும் அனுபவித்து புத்திரமித்திர களத்திரபரன்ப
ரையாய்வாழ்ந்திருக்கக்கடவையென் றனுக்கிரகஞ்செய்து அவனையும்ம
ற்றவேடரையும் நிறுத்தி வளமையிற்சிறந்தவள்ளிவரையைக்கடந்து மக

த்துக்களுக்குவாசயோக்கியமாகிய திருத்தணிகைவரையைச்சேர்ந்து தெ
ய்வதச்சனாற்சோடித்திருக்கின்ற நகரிற்போய் சபாமண்டபத்தில் விளங்
கும் சிங்காதனத்தில் பொன்னையொப்பவிளங்கும் தேமல்பரந்ததனபா
ரங்களையுடைய தேவியுடன் உலகங்களனைத்தும் பிழைத்தற் பொருட்டு
கிருபாநோக்கத்தைப்பரப்பி வீற்றிருந்தனர், அக்காலத்தில்வள்ளிநாயகி
யார் கர்த்தனைச்சேவித்துப்பிராணவல்லபா யிந்தமலையைப்பார்க்குமிடத்
தில்அதிகமேம்பாட்டைக்கொண்டிருக்கின்றது ஆதலால் யிதன்மகத்து
வங்களை அடியாளீடேறும்பொருட்டு வெளிப்படையாகத்திருவுளம்பற்
றவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தவளிடத்திற் பரிவாய் ஓ பெண்
ணேயிந்தவரையையென்னெனமதித்திருக்கின்றனை பரமசிவ கடாட்சத்
தினால்உலகங்களுண்டாகியபோது நிர்மிக்கப்பட்டது யிஃதன்றியும்யி
ப்பர்வதத்தின்மகத்துவங்களைக்கேழ்ப்பையாக ஆயிரத்தெட் டண்டங்
களுக்குமதிபனாய் நூற்றெட்டுகெங்களதேவர் முதலாகிய சகலரையும் அ
லைத்துக்கொடுங்கோல்செலுத்தி பிராணிகளுக்கெமனைப்போல வீறியிரு
ந்தசூரபதுமனாகிய அவுணப்பாதகருடன் அகோரமாகிய உயித்தியங்க
ளைச்செய்துகொன்றசோபதாபங்களை யிதன்பெருமைகளை நிதானித்து
யிவடத்தெழுந்தருளித்தணித்து மனவெழுச்சியுட னிருந்தனம் மேலு
ம்யிக்காலத்தினும் கொடியதொழிலைச்செய்துழலும் வேடருடன் போ
ராடிவருந்தியகளையையும் யிந்ததெய்வீசம்பொருந்தியவரையை நெரு
ங்கியவுடனொழிந்து சவுக்கியமாகவிருக்கின்றனம், அக்காரணங் களினா
ல்செருத்தணியென்னுமொருசிறப்பும் பெயரையுங் கிடைத்திருக்கின்ற
துயி துவுமல்லாமல்யின்னமும் சிலமகத்துவங்களுண்டு அவற்றின்சம்ப
வங்களையுந்தெரிவிப்போம் முல்லையரும்புகளைப்பழித்துவிளங்கும் தந்
தபந்திகளையுடைய உமையவள்வளைத்தழும்பும் முலைத்தழும்பையும்பெ
ற்றுக்களித்திருக்கும் மூலகாரணக்கடவுளாகிய சிவபிரான் மனவெழுச்சி
யுடன் சதாகாலமும்வீற்றிருக்கத்தக்க நதிவளங்களையும் க்ஷேத்திரவிசேட
ங்களாதிய சிறப்புகளைக்கொண்டிருக்கும் திருக்காஞ்சிமா நகரவெல்லை
யில்விளங்கும்பெருமையினால் யிப்பர்வதத்தின்பவுத்திரத்தையும் மகத்
துவங்களையும் சிருஷ்டிகர்த்தனாய் சதுர்வேதபண்டிதனாக விருக்கின்றபி
ர்மதேவனாலுங் கணித்துச்சொல்லப்படுவதோ சுகந்தபரிமளங்களை வீசி
தேனைச்சொரிந்திருக்கும் புஷ்பவகைகளிற் றாமரைக்கமலத்தைச் சிறப்
பாகப்புகழுமாறுபோலவும் தன்னிடத்தில்மூழ்கினரைப் பாபரகிதராக்
கிமுத்தியிற்சேர்க்கவல்ல பலசிறந்தநதிகளினும் காசியிற்பெருகும் கெ
ங்கையைவிசேஷமாகக் கொண்டாடுவதையொப்பவும் சமுத்திரஞ் சூழ்
ந்திருக்கின்ற பூமண்டலத்திற்சிறந்திருக்கும் தலங்களில்முதன்மைபெ

த்துவிளங்கும் திருக்காஞ்சிப்பதிக்கு நிகராகவும் ரிஷிகள் மகத் துக்கள்
வாச யோக்கியமாகவிருக்கின்ற தெய்விகம்பொருந்திய பர்வதங் களில்
யிந்த திருத்தணிகைவரையானது அதிகமேம்பாட்டைக் கிடைத்திருப்ப
தாயிவ்விதசகுணங்களைமிகுதியாகப் படைத்திருக்கின்றபர்வதத்தினிடத்
தில்நமக்கிருக்கின்ற பிரியினுல் பிரியாவிடையாய் யிவடத்தில்வீற்றிரு
ந்துகோடிகளாமுமக்கியும் பிள்ளாங்குழலூதியும் தந்திரியை வாசித்து
ம்வழிசையையுடையமகரயாழைமீட்டியும் மனவெழுச்சியுடன் யாடியு
ம்சிறுபல்லியங்களைக்கொட்டியும் பற்பலதிருவிளையாடல்களைச் செய்து
ம்நம்மிடத்தில்மெய்ப்பத்தியுடைய அன்பர்கள் தெரிசித்துக் களிக்கும்
படியாகஆனந்தநடனங்களைச்செய்தும் வருகின்றனம், பெண்ணரசியே
யிதற்குச்சிலதிஷ்டாந்திரத்தைச்சோல்லுவோம் காளகண்டமூர்த்தியாகிய
பரமேஸ்பாருக்கு மந்தரகிரியும்மேருபர்வதமும் வாசஞ்செய்ய யோக்
கியமாகவிருந்தபோதினும் அன்பருள்ளத்தைப்போலப் பவுத்திரமாக
விருக்கின்ற திருக்கயிலாயத்தில்மனவிருப்பமாய் பர்வதராச புத்திரியு
டன் எத்தேசகாலமும்வீற்றிருப்பதையொப்ப யிந்தபூவட்டத்திற்பர்வ
வமலைகளிருந்தபோதினும் யிந்தபர்வதத்தினிடத்தில்நமக்கு அதிகயிஷ்
டமுண்டு அதற்குச்சாட்சி உனக்குவேறென்றைச் சொல்லுவதில்லைநம
க்கிருப்பிடமாகிய குன்றுகளனந்தமுண்டு அவற்றைவிட யித்தலத்தில்ம
னவிருப்பத்துடன் நமதுபூர்ணகளையைக்கொண்டு வாசஞ்செய்வோம்
யிம்மூலமாய் யிதன்மகத்துவங்களைத்தெரிந்துகொள்ளக் கடவையிதுவு
மல்லாமல் திரிலோக சக்கிரேஸ்பரனுகிய தேவேந்திரன் யிதன்மகத்து
வத்தைத்தெரிந்து மனேபிஷ்டத்தைப்பெற்றுப்போகவிருப்புற்றுபொ
ன்னுலகத்திலிருக்கின்ற குவளைச்செடிகளில் மூன்றினை யிந்தபவுத்திர
மாகிய சரவணப்பொய்கையில் ஸ்தாபிதஞ்செய்து அதனிடத்திற் புஷ்பி
க்கும்மலர்களைக்கொண்டு பலதினம் நம்மை அருச்சித்து யிஷ்டசித்தி
யைப்பெற்றுப்போயினன்- மூழ்கினர் பிணிகள்பாதகங்களனைத்தையும்
தீயிற்பட்டபஞ்சைப்போலப்போக்கிப்பரிசுத்தவான்களாகச்செய்யவல்
லசிறப்பினைவாய்ந்தயிந்தசரவணப்பொய்கையினிடத்தில் இந்திரனுல்தா
பித்திருக்கின்றகுவளைச்செடிகள் இக்காலத்திலும் அருணேதயப்போதி
னும்மத்தியானகாலத்திலும் செக்கரவானமும்யிருளுங்கலந்துவிளங்கு
ம்அந்திப்போதினும்நமதுதிருவடிகளிற்சாற்றும்படிக்குமூன்றுமலர்க
ளைக்கொடுத்துக்கொண்டு வருகின்றதுபிரளயகாலத்திற் சத்தசாகரங்களு
ம்பெருகி உலகங்களைமூடியபோதினும்சிருஷ்டிதிதிகர்த்தர்கள் மாளுமு
ன்னிலையிற் பிறசண்டவாயுவின்மோதலினுலுடை ஆழிவெள்ளப் பெருக்
கிலும் குலகிரிகள்அண்டாண்டபுவன சராசரங்களனைத்தும்அதப்பட்ட

ழியும்சற்வசங்காரகாலத்தினும்தெய்வீகம்பொருந்திய யிந்தபற்வதத்து
க்குயாதொரு துன்பமுமில்லாமல் விளங்கும்அவ்வாறேயிந்தசரவணப்
பொய்கையும்செலசமற்தியாய் பரிமளமிகுத்தகுவளைமலர்களை முக்கால
ங்களினும் உதவிக்கொண்டிருக்கும்மாவடுவைப்போலவிசாலமாய்செவ்
வரிபரந்துகாதளவுமோடி யிருக்கின்ற விழிகளையுடைய வள்ளிநாயகியே
யிவ்வரையின்மகத்துவங்களை நாமல்லது சிருஷ்டிகற்தனாலுங் கண்டறிய
ஒண்ணாது இஃதன்றியும் பூமண்டலத்தி லிருக்கின்றவர்களில் எத்தகைய
ராயினும் யிந்ததெய்வீகம்பொருந்திய பற்வதத்தைத் தூரத்திலிருந்து
தெரிசித்து வணங்கப்பெறுவராயில் அறிந்தும்அறியாமலும் எழுபிறவி
களினும் செய்திருக்கின்ற பாதகங்களனைத்தும் நெருப்பிற்பட்ட பஞ்
சைப்போலநசிக்கப்பட்டு சகலதுன்பங்களையும்போக்கிப் பரிசுத்தராய்
சவுக்கியத்திலிருப்பர் யிவ்வரையினிடத்தில் ஒருதினமாவது வந்திருந்து
சரவணப்பொய்கையிற்படிந்துடவுத்திரராய்த் துதித்திக்கொண்டுநமதால
யத்தைச்சேர்ந்து விதிப்படிக்குமும்முறைவலம்வந்து சன்னிதானத்திற்
போய் அருச்சனைவழிபாடுகளைச்செய்வித்து நமதுதிருவடிகளில் வணங்
கிப்போற்றிநெய்விளக்குகளிட்டுக் கூடியவரையில் யாசகருக்குக்கொடு
த்துத்தன்விடுதியைச்சேர்ந்து அதிதிகளுடனுண்டு களிக்கின்றபுண்ணிய
சீலர்தங்கள்கோரிக்கையின்படிக்குச்சகலவளங்களையும்பெற்றுக்கற்புக்
கரசியாகியபெண்சாதியுடன் யில்லறத்தையோம்பி சுபுத்திரரைக்கிடைத்
துசாதுசங்கமாதியநன்னெறிகளைக்கடைப்பிடியாகவெண்ணிநடாத்தியி
வ்விதங்களில்யிம்மைப்போகங்களையநுபவித்தபின்புமறுமையினும்தே
வபோகங்களிற்றிருத்திபெற்றவர்களாய்க்கடையில் மோட்சசாம்பிராச்சி
யத்தைக்காணியாகப்பெற்றுவாழ்வர், ஐந்துதினவரையில் யிதன்கண்வாச
மாய்ப்பொய்கையில்முழுகிப்புதியவஸ்திரங்களையுடுத்து நமதுதிருவடிக
ளையேதஞ்சமாகவெண்ணி தியானித்து ஆலயத்தைச்சேர்ந்து அவடத்தில்
நடத்தவேண்டிய முறைகளைக்கிறமப்படிக்குமுடித்து நம்மைத்தெரிசி
த்துவழிபட்டுவரும் சிறந்ததவத்தினர் யிஷ்டசித்திகளைக்கிடைத்து அஷ்
டஅய்ஸ்வரியங்கள்பெண்டுபிள்ளைகள் பந்துக்கள் சினேகிதருடன் மன
வெழுச்சிபெறஅநுபவித்துச்சகலராலும்புகழவாழ்ந்தபின்புசாசுவிதமா
கியநற்கதியிலிருப்பர் ஓபெண்ணே தவங்களிற்சிறந்த தேவர்க்களாயினு
ம்முனிபுங்கவராயினும் மற்றும்நன்னெறிகளை யநுசரித்துவரும் யாவ
ராயினும்யிந்தமகிமையுள்ள மலையைத்தெரிசிக்கப்பெறாமற்போவராயி
ன்கல்விருட்சமுதலியதாபரங்களினும் கடைப்பட்ட தெசையை யநுப
விப்பதற்குச்சந்தேகமில்லை தாங்கள்முடித்திருக்கின்ற பிருந்தவினைப்
போகங்களை நீக்கிக்கொள்ளத்தக்க சூக்குமத்தைத் தெரியாமல் திரோகம்

வருந்தியலைந்து அன்னபானாதிகளுக்குச் சிறுமைப்பட்டுவாடி பூவலம் வந்தபோதினும் அப்பாயத்துடக்கைப்போக்கவல்லதோ பிர்மத்தியாம காபாதகங்களைச்செய்தவராயினும் கொலைகளவாதிய குற்றங்களையேமுக் கியமாகவெண்ணி தினந்தோறும்முடித்தவராயினும்பவித்திரமாகிய திரு த்தணிகைவெற்பைச்சேர்ந்துமெய்ப்பத்தியுடன் நம்மைப்பூசனைவழிபா டுகளைச்செய்வாராயின் காட்டழலிற்பட்ட சாகையொப்ப வல்வினைகளைப் போக்கிச் சிரேஷ்டராய் மகாவிஷ்ணுபிரமதேவனிலும் மேலானவராகவி ருப்பர் தவங்களிற்சிறந்தவராகவும்புகழவேண்டும் யிப்படிக் கிருக்கச்ச தாகாலமும் ஒப்பற்றதிருத்தணிகைப்பதியில் வாசமாயிருந்து பத்திவயி ராக்கியங்களுடன் நம்மைவழிபட்டுச் சோடச மகா தானங்களி லொன் றேனும் மனப்பூர்வகமாகப்பாத்திரமறிந்து அகமுகமலர்ச்சியுடன் களி த்துக்கொடுப்பாராயின் ஒன்றனந்தமாகப் பலித்துப் பிற்காலங்களிற் கு பேரசம்பத்தையனுபவித்துவாழ்வர், பற்பலமகாபாதகங்களைச்செய்த வராயினும் அதுகளின் கொடுமைக ளனைத்தும் தினேதினே குறைபட்டு அமரபட்சத்துச்சந்திரன்கலைகளைப்போலத்தேய்ந்து பரிசுத்தவான்களா ய்உலகர்புகழவாழ்வர், வள்ளிநாயகியேமேற்குறித்ததன்றியில் யிந்ததிரு த்தணிகைவரையின் மகத்துவங்களளவற்றதுண்டு அதுகளைப் பாந்தமா கவிபரித்துச்சொல்லவேண்டுமாயின் பலகாலஞ்செல்லுமென்று குமார தேவர்போதித்தமகிமைகளை பத்தியுடன்கேட்டதேவியானவள் திருவடி களிற்பணிந்து கந்தனே பூமண்டலத்தில் தாமெழுந்தருளி யிருக்கின்ற அனந்தபர்வதங்களில்முக்கியமாக விருக்கின்ற திருத்தணிகை வரையின் வரலாற்றையும் மகத்துவங்களையும் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போ லப்போதையாகும்படிக்கு அடியாளிடத்திற் கிருபையுற்று அனுக்கிர கஞ்செய்தமையால் அவற்றினைக்கேட்டமகத்துவத்தினால் நாயினேன் கி ருதார்த்தளாயினேனென்று போற்றினள், வெற்றிவேலாயுதக் கடவுளும் மைதிமிர்ந்த காதளவுமோடியவிழிகளையுடைய தேவியும் பின்பு அந்த பர்வதத்தினொருபாரிசத்திற் பிரமன்விஷ்ணுதேடிக்காணரிய சிவனுதன் ஐவகைஉருவகங்களினொன்றாகிய லிங்கத்தை ஸ்தாபித்து ஆகமவிதிப் படிக்குச் சோடசஉபசாரங்களுடன் பூசனைவழிபாடுகளை நிரப்பிக்களித் துயிஷ்டசித்திகளைப் பெற்றவர்களாய் அன்றுமுதல் மன வாக்குக் காய மொருமித்துக்கண்ணுதற்பிரானைத் திரிகாலங்களினும் மெய்ப்பத்தியு டன்வழிபட்டிருக்கின்றதறுவாயில் ஒருதினம் தெய்வவிமானத்தைத்தரு வித்து வள்ளிநாயகியுடன் சிவசுப்பிரமணியக்கடவுள் அதனிடத்திலெழு ந்தருளி திருத்தணிகை வரையைக் கடந்துபோய்த் திருக்கயிலாயத்துக் கொருபுறத்திலிருக்கின்ற கந்தவெற்பைச்சேர்ந்து நவரத்தினக் காந்திக

ளைவீசிக்கொண்டிருக்கும் விமானத்தைவிட்டிறங்கிச் கணக்கிறந்த பூத
வீரர்காவல்கொண்டிருக்கும் திருமாளிகையிற்பிரவேசித்து தேவராசபு
த்திரியாகிய தெய்வயானையம்மனெழுந்தருளிய சொர்ணமயமாகியஅந்
தப்புரத்தில் வள்ளியம்மையுடன்கந்தன்வரும்போது வேதங்கள்தேடிக்
காண்பரியமகத்துவங்களையுடையகணவன்வரவைக்கேள்விப்பட்டமாத்தி
ரத்தில் தேவராசபுத்திரிக்கு அதிகசந்தோஷமுண்டாய் ஆவலுடனெதிர்
கொண்டோடி கணவன் திருவடிகளிற்பணிந்தகாலத்திற் கந்தன் பரிபூர
ணகடாட்சத்துடன் திருக்கரங்களை நீட்டி யெடுத்து பூரண கலசங்களை
யொத்த கொங்கைகள் மார்பிலிறுகத்தழுவித் தாம்சிலபகல்பிரிந்து பூமி
யிற்றிருநடனங்களைச்செய்து திரும்பியவனாயிருந்த தளர்ச்சிகளனைத்
தையும்போக்கினர், அத்தறுவாயில் வள்ளியம்மனும் தன்முன்னவள்பா
தகமலங்களிற்பணிந்ததறுவாயில்பிரிந்தகன்றைக்கண்டஆவைப்போலப்
பரிவாயெடுத்து ஆசையுடனணைத்துயிவடத்திற்றனிமையிலிருப்பவளுக்
கு ஒருபாங்கி கிடைத்தது மிகவும் அழகாயிருக்கின்றதென வாழ்த்தினள்,
பின்பு சூரன்வம்சமென்னும் கருங்கடலைக்குடித்து தேவர்களைக்காத்த
வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் உபயநாச்சியார்களையும் அணைத்து அ
ந்தப்புரத்துக்குக்கொண்டுபோய் பொன்மயமாகவிளங்கும் பாத்தகூ
டத்தில் நவரத்தினங்களினாற்சோடித்திருக்கின்ற சிங்காதனத்தில் திருப்
பாற்கடலில்ஸ்ரீதேவிபூதேவியிருமருங்கினும் வீற்றிருக்குமத்தியில்சேஷ
சயனத்திலமர்ந்தருளும்மகாவிஷ்ணுவைப்போலக்களித்திருந்து அவர்க
ளுடன்வார்த்தையாடிக்கொண்டிருக்கின்றதறுவாயில் யிடப்புறத்திலமர்
ந்திருக்குந்தெய்வநாயகியானவள் வெற்றிவேலாயுதக்கடவுள் திருமுகம
ண்டலத்தைப்பார்த்து எமதிறைவனே தேவரீர்வலப்புறத்திலிருக்குங்கன்
னிகையின்வரலாற்றைத்திருவுளம்பற்றவேண்டுமெனப்போற்றமுன்னி
லையில்சுப்பிரமணியர்கிருபையுற்றுக்கிள்ளையையொப்பவசனிக்குஞ்சிவ
ந்தவாயையுடையகுறப்பாவையினதுசரித்திரத்தை அபிராயதம்போற்றி
வளர்த்ததெய்வயானைக்குச்சொல்லுவதாயினர், பெண்கள்சிகாமணியேஉ
ங்களிருவர்காரணங்களைக்கேட்பையாக வாமனப்படிவங்கொண்டுஉல
கையளந்தமகாவிஷ்ணுவினிடத்தில் நீங்களவதரித்து நமது திருப்புயங்க
ளைத்தழுவிக்களிக்க யிச்சித்துப்பன்னிரண்டுவயதளவும் சரவணப்பொய்
கைக்கருகிலிருந்து அரியதவங்களைச்செய்து வருமுன்னிலையில்உங்கள்ப
த்திவயிராக்கியங்களுக்கிரங்கிக் காட்சிதந்துஉங்கள்கருத்தின்வண்ணமா
குதுஅதுபரியந்தம்பொன்னுலகத்திலும்பூமண்டலத்திலும் அவதரித்தி
ருப்பீர்களெனப்பணித்தவாறே மூத்தவளாகிய நீ தேவேந்திரனுக்குப்
த்திரியாகவளர்ந்திருந்தனை நாம் சூரசங்காரஞ்செய்து திரும்பிய தறு

வாயில்உன்பிதாவானவன் அதிகப்பிரியத்துடன்பாணிக்கிரகணஞ் செய்து
கொடுக்கப்பெற்று மனவெழுச்சியுடனிருந்தனம், அந்தச்சந்திரனையொ
த்தநுதலையுடைய உன் தங்கையாகிய யிப்பெண்கொடியானவள் நமதுக
ட்டளையின்படிக்கு அக்கினிப்பிறவேசமாய்ச் சுந்தரமிகுத்த பழையஉட
லைப்போக்கி யாதனுதிரோசத்தைக்கொண்டு கருங்கடல் வளைந்திருக்கும்
பூமண்டலவனாயிற் சிரேஷ்டமாகவிளங்கும் தொண்டமண்டலத்தினெ
ல்லையிலிருக்கும் வள்ளிபர்வதத்துக் கருகிற் றழைத்தோங்கிக் குளிர்ந்த
நிழலைப்பரப்பிநின்ற வனத்திற்சேர்ந்து காலங்கருதி தவ விரதங்களைச்
செய்திருக்கின்றதருவாயில் அப்பர்வதச்சாரலிலமர்ந்து பஞ்சேந்திரிய
சீசேட்டைகளைவென்று சித்தத்தைச்சிவத்திற்சேர்த்து யோகசாதனையை
முடித்துவரும் மகத்துவாகிய சிவமுனிவனுக்கெதிரில் தெய்வகடாட்சத்
தினால் பொன்னையொப்பவிளங்கும் அழகிய திரோசத்தைவாய்ந்த மான்
பிணையொன்று சடுதியிற் றேற்றப்பட்டு சந்துபோட் டுலவி வருவதை
த்தவத்தர்கண்டவுடன் காமவிகாரமேலிட்டு அதிகஆவலுடன்பார்த்தகா
ரணத்தினால் பெண்மான்கருக்கொண்டது அந்தசம்பவத்தைப் பக்கத்தி
ற்றவஞ்செய்திருந்த யிவள்தெரிந்துமனமகிழ்ச்சியுடன் அதன் கருப்பை
யிற்பிறவேசித்து வளர்ந்துவருகின்றதருவாயில் பிரசவகாலம்சம்பவித்த
போது வேடர்கல்லிய வள்ளிக்குழியில் ஈன்றதாய் உற்றுப்பார்த்துத்தன்
னினமாகத்தோற்றாமையால் பயந்தோடிப்போயது,பின்குழந்தையா
னது பசியினால்வருந்திக் காவுகாவுமென்றழுதிருக்கும்போது அதனரு
கில்விளங்கும் குறிச்சியில்வாசஞ்செய்யும் வேடர்களுக்கரசனும் அவன்
பத்தினியும் அக்கொல்லைக்கு வந்தபோது கேட்டவர்களாய் அற்புதம
டைந்தோடிவந்து பெண்குழந்தையைக்கண்டவுடன் வேடத்தி,அதிகஆ
வலுடன் வாரியெடுத்து முத்தமிட்டு மாருடன்சேர்த்த காலத்திற் சிவபி
ரான்கடாட்சத்தினாற் கொங்கைகளிற்சுரந்தொழுகும் அமுதத்தைக்கொ
டுத்துத் தன்சிறுகுடிசையிற்சேர்ந்து பெற்றதினும்பதின்மணங்குபிரி
யத்துடன்வளர்த்து அக்குலத்தில்முதியவராக விருப்பவர்கள் குறித்தப
டிக்குவள்ளியென்னும்பெயரையிட்டு சகலசிறப்புடன்மகண்மைகொண்
டுபோற்றிவருங்காலத்தில் யிவளுக்குப்பன்னிரண்டுவயதுநிறைந்தபருவ
மானபோதுகுலமுறைப்படிக்குத் தினைப்புனத்தைக் காக்கவைத்தனர்-
அத்தருவாயில் நாம்அத்தலத்தைச்சேர்ந்து காமவேட்கையைச் சொல்லி
யும்அகன்றும் யிவள்மையலிற்பட்டுவருந்தியும் அக்குறை முற்றுப்பெ
றவாழ்த்தியும் யித்தகையபற்பலமாயவித்தைகளைக்காட்டிக் களவுப் புண
ர்ச்சியையநுபவித்துக் கடையில்யிவளிடத்தில் நல்லருளைச்செய்து பிதா
வின்சம்மதத்தின்பேரில் திருக்கலியாணமுடித்துக் கொண்டு சிலபகலி

ருத்தணிகைவரையில் வாசமாயிருந்து யிக்காலத்தில் யிவடத்துக்கழைத்
துவந்தனமென்று வள்ளிநாயகியார்முற்சென்னமுதல் டாந்தமாகத்தெ
ரிவித்தகாரணங்களைத் தெய்வநாயகிகேட்டவுடன் மனமகிட்சிகொண்டு
கற்தனைபூற்வத்தில் விஷ்ணுவி னிடத்தில் அவதரித்த யிவளும் நானும்
நெடுநாளாய்ப்பிரிந்ததையிக்காலத்திற் றொன்றையுற்றுப் பழையபடிக்கு
க்கூட்டிவைத்த தேவரீர்கடாட்சத்துக்கு அடியோங்களாற் செய்யுங் கை
மாறுண்டோ தமது திருவிளையாடல்களை யாவரால்கண்டு புகழப்படுமெ
ன்றுபுகழ்ந்தனள், இவ்விதமாகச் சிவகுமாரன் அருளிய வாக்கியங்களை
யும்தேவராசபுத்திரி வசனத்தையுங்கேட்ட வள்ளியம்மன் மனமகிழ்ந்த
ளாய் தாயேமுன்னம் தேவரீருக்குத் தங்கையாகும் அவ்வாறே இக்கா
லத்திலும் யிளையவளானேன் யிம்முயற்சியினால் சகலசிறப்புகளையும் பெ
றவிருக்கின்றனன் யினிதமதடியாற்கூட்டி ரட்சிக்கவேண்டுமெனப்போ
ற்றி தமக்கை திருவடிகளில் வணங்கினள், தெய்வநாயகியாரும் அதிகபி
ரியத்துடன் வாரியெடுத்தணைத்து முதுகைத்தடவிக்கொடுத்து நமது க
ம்தன்கடாட்சவீட்சணியத்தினால் யித்தினம் உன்னைத் தங்கையாகப்பெ
ற்றதுமன்றியில் எமதிறைவன் அருளையுங்கிடைத்தனன், யினியரிதில்வே
ண்டும்பொருளொன்றுமில்லை மனோபீஷ்டங்க ளனைத்தையும் ஒருங்கே
ய்தப்பெற்றுக் கிருதார்த்தியாயினேனென்று யிவ்விதங்களிற் றன்பேற்
றைக்குறித்து பலவிதங்களிற்கொண்டாடினள், சவுனகாதிரிஷிகளேமே
ற்குறித்தபடிக்குப் பலநாட்களாகப்பிரிந்திருந்த தங்கைதமக்கைகளிரு
வரும் சரவணபவன் திருவுளப்படிக்குச் சேர்ந்த முன்னிலையில் அன்று
தொட்டுதெய்வநாயகியும் வள்ளியம்மனும் அபேதமாய் யிணைபிரியாம
ல்கர்த்தனைவழிபட்டுக்கொண்டு மனவெழுச்சியுடன் சிந்தையும்செய்கை
யும்போலவும் உயிரும் உடலுமொப்பவும் மலருஞ்சுகந்தத்தை நிகர்த்து
ம்நீரும்பாலும்போன்றும் மணியும்ஒளியையொத்தும் ஒருமைப்பட்ட
மனத்தினராய்க் கங்கையும் யமுனையும்கடலிற்சேர்ந்து குலவுமாறுபோ
லவும் சோடசகலைகளையுடைய சந்திரன் ஆயிரங்கிரண சமோகங்களையு
டைய சூரியனைக்கூடியதுக் கொப்பாகவும் பரமன் நுதல்விழிகளி னுதி
த்தச் சரவணப்பொய்கையிற் றிருவிளையாடல்களைச்செய்திருந்த பாலசு
ப்பிரமணியதேவனாய் பிரிவின்றிப் போகபோக்கியங்களை யனுபவித்
துக்களித்திருக்கவும் வெற்றிவேலாயுதமூர்த்தியும் உபையநாச்சியாரிடத்
னும் ஏகபட்சமாய் அவர்க ளிடத்தில் யின்ப நலங்களை யனுபவித்துக்
கொண்டு சிரேஷ்டமாகச்சொல்லுங் கந்தவரையினிடத்திற் சொர்ணமய
மாய்ச் சிரோரத்தினக்காந்திகளைவீசி வானவரையிலுயர்ந்து பூவட்டப்ப
ரப்பைப்போல விசாலமாயிருக்கும் திருமாளிகையி லமர்ந்து மன்னு

யிர்களினிடத்தில் பரிபூரணகடாட்சவீட்சணியத்தைப் பாப்பித் தம்மை
வழிபடும் அடியர் யிஷ்டசித்திகளைக் கொடுத்துக்கொண்டு வருகின்றனர்
இவ்விதமாகச் சரவணபவனும் திருத்தேவிமாரு மிருக்குங்காட்சியெப்
படிக்கிருந்ததெனில், கிரவுஞ்சபர்வதத்தைச் சத்தியினும் பிளந்துவாட்
டிய குமாரதேவர் ஒப்பற்ற கற்பகத்தருவாகவும் அதனிடத்தோன்றியி
ருக்கும் வல்லிசாதக் கொடியினும்சிறந்த தெய்வநாயகியாரும்வள்ளிய
ம்மனும் ஞானம் யோகமென்னும் மிருகொடிகளும் தாவுமாறு மிரும
ருங்கினும் விளங்கவும் இவையன்றியில் உமையவளை யிடப்பாகத்திற்
கொண்டிருக்கும் சிவபிரான் திருநுதலிலிருக்கின்ற திரிநேத்திரங்களை
ப்போலத் தேவராசபுத்திரியும் வேடப்பாவையும் உபைய பாரிசங்களி
லும் பொருந்தியிருக்கும் சன்னிதிமகிமையினால் உலகவாசிகளனைவரும்
பாபரகிதராய் நன்னெறிகளை யனுசரித்து யிம்மைப் போகங்களைப்பெற்
றுவாழ்ந்து கடையிற் கிடைத்தற்கரிய மோட்ச வீட்டையும் பெற்றுப்
பேரானந்தசுகத்தை யனுபவித்திருக்கவும் யித்தகைய காட்சிகளைக்காட்
டி ஒப்பற்ற பாலசுப்பிரமணிய தேவரானவர் தேவியருக் கருள்புரிந்திரு
ந்தனர், அத்தருவாயில் சேவற்கொடியசையும் திருத்தேரும் நவரத்தின
ங்களின் காந்திகளை ஏககாலத்தில் வீசுவதைப்போலப் புள்ளிபட்ட
பசியதோகையைவாய்ந்த மஞ்ஞைவாகனமும் பூர்வத்தில் நாரதரிஷிசெ
ய்தயாகத்திற்றோற்றி தமக்குவூர்தியாக விருக்கின்ற தகரும் வெற்றிவே
லாதியாகிய படைகளும் திருவாயல்முதலிய தலங்களிலமர்ந்து சண்மு
கப்பெருமான் கட்டளையின்படிக்கு டணிவிடைகளைச் செய்திருந்ததுக
ளெனமுடித்த சூதபுராணிகர் நைமிசாரணிய வாசிகளைப்பார்த்து ஓ ரிஷி
சிரேஷ்டர்களே சிவபிரான் நெற்றிவிழிகளிற்றோற்றிய பாலசுப்பிரமணி
யக்கடவுளினது திருவிளையாடல்களிற் சிலவற்றை நம்மாற் கூடியவரை
யிற்சொற்றனம், காந்தபுராண வரலாற்றைப் போதிக்க வேண்டுமென்
றமனதொருமித்துக்கேட்ட உங்களால் மேற்குறித்திருக்கின்ற ஆறுகா
ண்டங்களின் சரித்திரங்களையும் வரன்முறையாகவோதும் புண்ணியபலப்
பிரப்பத்தியைப்பெற்று கிருதார்த்தனுமாயினேன் மெய்ப்பத்தியுடன்
ஏகமனதாய்ச் சிவசுப்பிரமணியக் கடவுளினது உபைய சரணாரவிந்தங்க
ளையும் சிந்தித்துக்கொண்டு அவன்பெருமைகளை விளக்கும் கதாப்பிரசங்
கத்தைச் சம்பூரணமாகக் கேழ்விப்பட்ட உங்கள் பெருமைகளையும் பே
றுகளையும் நல்லொழுக்கங்களையும் தவமுயற்சிகளையும் நீதிகளையும் ஒரு
வாயினாற் சொல்லிமுடிவதோ யித்தபூவண்டத்தை ஒரு தலைச்சுமையாக
த்தாங்கியிருக்கும் ஆதிசேஷனாலும் அறிதற்கரிதென்று மனப்பூரிப்புட
ன்பேசுகின்ற சூதபுராணிகரைச் சவுனகாதிரிஷிகள் வணங்கிவாழ்த்தினவ

ரீகளாய் சுவாமிதேவரீர் அடியோங்கள்செய்த தவமுயற்சியினால் யிவடத்
திலெழுந்தருளி அஞ்ஞான வான்களாகிய அடியோங்க ளிடத்திற் கிரு
பையுற்றுச் சைவபுராணங்கள் பத்தினும் முதன்மையாகவிளங்கும் காந்
தமென்னுங்கடலை எளிதிற்போதையாகும்படிக்குத் தெருட்டினீர், சர
வணபவன் திருவிளையாடலின் சரித்திரமுதலாகியசிவகதைகளைக்கேட்டுக்
களித்ததுமன்றியில் மோட்சவீட்டுக்குப்பாத்திரரானேம்மேலும்யிந்த
அரியமானிட தேகமெடுத்தற்குப் பெறவேண்டும் பலபிறப்பத்திக
ளனைத்தையும் ஒருங்கெய்தக்கிடைத்து வாழ்ந்தோம் - ரிஷிகளினும்சி
ரேஷ்டராய்ச் சிவனுதன் பாதநீழலில்வீற்றிருந்துமனக்கவலைகளைப்போ
க்கிச் சுகாதீதச்செல்வத்தை யனுபவிப்பதற் கையமில்லை யித்தகையமேம்
பாட்டைக்கிடைக்கச்செய்த தேவரீருக்கு நாயினேங்களால் முடிக்குங்
கைமாறேதேனுமுண்டோவென்று பலபலவிதங்களிற் போற்றினர், இ
வைநிற்க இனிகுமரகோட்டத்தடிகள் கட்டளையின்படிக்கு யிந்தகந்தபு
ராணத்தைப்பாடி முற்றுப்பெற்றகாலத்திற் கச்சியப்பகுருக்கள் வாழ்த்
தெடுத்ததையும்சொல்லுவோம்சிவசுப்பிறமணியதேவர் அழகியபுயாசல
ங்கள்வாழ்க, சோடசகலைகளையுடையபூரணச்சந்திரோதையத்தையொப்
பத்திலங்குகின்ற சண்முகார விந்தங்கள்வாழ்க, பொற்சிலம்புதண்டை
சதங்கைகொஞ்சுந் திருவடிகள்வாழ்க, மாய்கைவல்ல கிறவுஞ்சபர்வதத்
தையும் வீராதிவீரனான் தாருகாசூரனையும் ஏககாலத்திற் பிளந்துகொன்
றவெற்றிவேலாயுதம்வாழ்க,மற்றபடைகளும்வாழ்க, சிவந்தகொண்டை
யையுடைய சேவற்கொடிவாழ்க, சரவணபவ னேறிநடாத்தும் பசியகலா
பத்தையுடைய மஞ்ஞைவாகனம்வாழ்க, தேவராசபுத்திரியாகிய தெய்வ
நாயகியார்வாழ்க, ஒப்புவமையற்ற வள்ளியம்மன்வாழ்க, சிவகுமாரனி
டத்திற்பரிவாய்த் தொண்டுசெய்துவரும் அடியாரனைவரும் வாழ்கவென்
றேத்தினவராய் அடியேனிடத்திற் கிருபையுற்று பிறந்தும் யிறந்தும்
அலைகின்ற செனன துக்கசாகரத்திற்பட் டலையாமலும் தீயநடைகளினின்
றும்விலக்கி ஞானமார்க்கத்திற்குப் பாத்திரமாக்கவல்ல தேசோமயமாகி
யதெரிசனையைக் கடாட்சித்துக் கடைப்பட்ட நாயினேனையும் தமதடி
யர்கூட்டத்திற்சேர்த்து பிறார்த்த கர்மவினைகளையொழித்து தடுத்தாட்
கொண்ட பன்னிரு புயாசலங்களையுடைய சிவசுப்பிறமணியதேவர் திரு
வடிகளிற் பத்தியுடன்வணங்கி வாழ்த்திய முயற்சிகொண்டு வெற்றிவே
லாயுதபாணியாகிய சரவணபவன் சரித்திரங்களை அடியே னாசைப்பெரு
க்கினாற் கூடியவரையிற் சொன்னதாகும் யிதிலடங்கிய தமிழ்ப்பாவின
ங்களில் வழுவிருக்குமாயினும் கலைகளனைத்தினையும் பூரணமாகக்கற்
றுணர்ந்தபுலவோர்களாக விருப்பவர்கள் அவைகளில் விளக்கும் கடவு

ளினதுமேம்பாட்டைக்கருதி பாலிற்கலந்த செலமும்பயன்பெறுவதை
ப்போல அங்கீகரித்துக்கொள்வர் சராசரப்பிரபஞ்சங்களையின்று மூப்
பத்திரண்டறங்களைவளர்த்துப் பாதுகாத்துவரும் லோகமாதாவாகிய உ
மையவள் மனமுருகி அன்பாகச்செய்த பூசனையை மகிழ்ந் தாட்கொண்
டதேவதேவோத்தமனாகிய பரமசிவன் பூலோகத்திலிரா நின்ற பிராணிக
ள்இல்லறவாழ்க்கையை முக்கியமாகக்கொண்டபோதினும்யானெனதெ
ன்னும்செருக்கிற்பட்டுயிருமாந்திருப்பவர்தங்களாற்கூடியமட்டும்செ
ய்துவரும் வழிபாடுகளைச் சிறந்ததாகத் திருவுளத்திலேற்று ரட்சிக்குங்
காரணத்தினால் இயலிசைநாடகமென்னும் முத்தமிழைவளர்த்துமெய்ய
றிவையும் பெற்றிருந்த நக்கீரதேவர்முதலிய சிறந்தபுலவோர்களாற் புக
ழ்ந்துசாற்றிய பாமாலைகளைத் திருச்செவிகளுக்கமுதமாகக்கேட்டுக்களி
க்கும் குமாரதேவருக்கு அடியேன் புன்சொற் றொடையவினிடத்தினு
ம்அன்பாய் ஒப்புக்கொள்வர், அடியேனைத் தடுத்தாட்கொள்ளும்நாயக
மாய்சூரபதுமன்முதலாகிய அவுணப்பாதகர் கொடுமைகளை நீக்கித் தே
வர்களைப்பாதுகாத்து விண்குடியேற்றிய நாயகமாய் உலகையளந்தநெ
டுமால்புத்திரி தெய்வநாயகிக்கு நாயகமாய் பற்பல திருவிளையாடல்களை
க்காட்டி வேடகன்னிகை வள்ளியம்மனை யாண்ட நாயகமாய் வெற்றிவே
லாயுதத்துக்குநாயகமாயிரா நின்ற சிவசுப்பிரமணியதேவர் கதைகளைவிரி
க்கும் யிப்புராணத்தைப் பூமண்டலவாசிகளனைவரும் சாவியங்களனைத்தி
னும்நாயகமாகக்கொள்ளக்கடவர், குறைவற்ற கிருபாநிதியாகிய குமார
சுவாமியார் மகத்துவங்களைத் தெருட்டும் சரித்திரங்களைச் சகலருங்கே
ட்டுமனமகிழ்ந்து யிம்மைமறுமைப்போகங்களை எளிதிற்பெற்றுவாழு
ம்படிக்குப் பிரசங்கித்த புண்ணியசீலரும் யிப்புராணவரலாற்றையாரா
ந்து ஆனந்தபரவசத்தராய்க்களித்த குணசம்பன்னரும் வழுவின்றிவாசி
த்துஅதன்பயன்களைத்தெரிந்து மனப்பூரிப்புடனிருக்கின்ற மகத்துக்க
ளும் யிக்காதையை வரன்முறையாகக்கற்று முற்றிபெறநினைந்த ஞான
வான்களும் பத்திபரவசத்தராய் மனமுருகிக் கேழ்க்கப்பெற்றமேன்ம
க்களும் பூமியின்கண் யிருக்கின்றபரியந்தம் இலக்குமியையொத்தவன
ப்பும்அருந்ததியை நிகர்த்த கற்பும் மணமகளைப்போன்ற பொறுமை
யும்மற்றமேம்பாடுகளனைத்தையும் பெற்றிருக்கின்ற நற்குணநற்செய்
கைகளையுடையகன்னிகையைமணந்தின்புற்று நன்னெறிகளையனுசரித்து
வரும் குணசம்பன்னராகிய புத்திரரைப்பெற்று தனதான்னியமுதலிய
அஷ்ட அயிஸ்பரியங்களையும் மனவெழுச்சிபெற அனுபவித்திருந்தபி
ன்புஅந்தியகாலத்தில் மோட்சசாம்பிராச்சியத்தைக்கிடைத்துஎன்னாளும்
சற்றன்பாதநீழலிற்குடியாய் வாழ்ந்திருப்பர், அண்டரண்ட புவனங்க

ளாய்மற்றப்பொருள்களனைத்துமாய்உயிருக்குயிராய்க்காரணபூதமாய்பி
றவுள்ளனவுமாகி அவற்றிற்குக் காட்சியாய் அளவுபடாமல் விளங்கும்
தேவதேவோத்தமன் பாதகமலங்களில் யிடைவிடாது பத்தியுடன்போ
ற்றி அடைக்கலம்புகக்கடவன், சராசரப் பிரபஞ்சங்களும் நாசப்பட்டு
மங்கும் பிரளயகாலத்திலும் சலனமற்றுச் சகலவளங்களையுங்கொண்டுவி
ளங்கும் சிறப்பையுடைய திருக்காஞ்சிப்பதியில் நடுநாயகமாய் பருத்
தோங்கிய பிருகாரத்தையும் பலநிலைகளைப்பெற்றிருக்கின்றகோபுரவாய
ல்களையும் மண்டபங்களாதிய சிறப்புகளைக்கொண்டு முத்தழல்சொலித்தி
ருக்கும் யாகசாலைகள் கெற்பகரம் மற்றும்வேண்டுவன வனைத்தும் பெ
ருத்துத் தெய்வீகமாய் உண்டாயிருக்கின்ற திருக்குமரகோட்டத்தில்தெ
ய்வநாயகி வள்ளியம்மன் யிருமருங்கிலும் வீற்றிருக்கத்தக்கதாகப் புவ
னங்கள்செழித்து விர்த்தியடையும்பொருட்டு எழுந்தருளிய சுப்பிரமணி
யதேவர் திருவடிகளில் வணங்கிப்போற்றினம், ஆயிரத்தெட் டண்டங்க
ளை நூற்றெட்டுகவளையிற் கொடுங்கோல் செலுத்தியாண்டு தேவர்முதலி
யசகலரையும்வென்று பிராணிகளை யலைத்திருந்த சூரபதுமனாதிய அவுண
க்கடலை வற்றச்செய்து வெற்றிகொண் டிருக்கும் வேலாயுதத்தைத்தாங்
கியிருக்கும் சரவணபவன்புராணத்தைப் பத்தியுடன் தினந்தோறும்வா
சித்துவரும் புண்ணியவான்கள் யிம்மையில் கெசேந்திர போகங்களைய
னுபவித்து மறுமையில் சிவசாரூபப் பதவிற்சேர்ந்து மனமகிழ்ச்சியுட
ன் வாழ்வர், இந்தபுராணத்தைத் துவக்குமுன்னிலையிற் போற்றியபடிக்
குக்குறைவற முற்றுப்பெற்ற காலத்திலும் ஐங்கரங்களையும் யானைமுக
த்தையும் பருத்தவயற்றையும் தண்டை சதங்கைகொஞ்சும் பாதாரவிந்
தங்களையுமுடைய விகடசக்கிர விநாயகமூர்த்தியை மீட்டும் வழிபட்டுப்
போற்றினம்.

---

## தேவகாண்டம்

## முற்றிற்று.

மூன்றாவதுபொஸ்தகமுடிவு.

---

## சி-அண்ணாமலைமுதலியாரால்

அற்சிற்பதிக்கப்பட்டு

பிரசுரஞ்செய்யலாயிற்று.

# படலவகராதி.





முற்றும்.

# படலவகராதி.



முற்றும்.